ஸ்ரீ

# பகவத் விஷயம்

## ஏழாம் பத்து

## திருவாய்மொழி மூலமும்

ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி,
இருபத்திநாலாயிரப்படி, ஈடு முப்பத்தாறாயிரப்படி வ்யாக்யானங்களும்,
சீயர் அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு, த்ரவிடோபநிஷத்ஸங்கதி,
த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி, திருவாய்மொழி
நூற்றந்தாதி இவைகளுடன்.



சே. கிருஷ்ணமாசாரியர் பதிப்பு



வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியராலும்,
சே. பார்த்தஸாரதி ஐயங்காராலும்,
*பரிசோதிக்கப்பெற்றது.*



திருவல்லிக்கேணி,
நோபில் அச்சுக்கூடம்.

விபவஹு] [1928.

ஸ்ரீ:

# முதல் திருவாய்மொழி—உண்ணிலாவிய - ப்ரவேசங்கள்.

## ஆறாயிரப்படி.

(உண்ணிலாவிய) - இப்படி எம்பெருமானை ஶரணம்புக்கு, "என்னுடைய ப்ரக்ருதி ஸம்பந்தத்தைப் போக்கி என்னை அடிமைகொண்டருளவேணும்" என்று அபேக்ஷிக்கச்செய்தேயும் அவனுக்குத் தம்முடைய திருவுடம்பிலுள்ள வ்யாமோஹத்தாலும், இவரைக்கொண்டே திருவாய்மொழியை முடிக்கத் திருவுள்ளமாகையாலும் இப்ப்ரக்ருதி ஸம்பந்தத்தைத் தவிர்த்தருளாமையாலே, பண்டுபோலே இந்த்ரியங்கள் நடுவே தாமிருக்கிறபடியைக் கண்டு, இவர் தம்முடைய கரணங்கள் ப்ராக்ருதவிஷயவிமுகமாய் பகவத்ப்ரவணமாயிருக்கச்செய்தேயும்; விஷயப்ரவணகரணஸஜாதீயமாகையாலும், இன்றளவும் வர அநாதிகாலமெல்லாம் விஷயப்ரவணமாய் பகவதநுபவவிரோதியாகையாலும், இப்போதும் அபிமதஸம்ஶ்லேஷப்ரதிபந்தகமாகையாலும், ஹேயமாகையாலே பகவத்ஸம்ஶ்லேஷாநர்ஹமாகையாலும் இவற்றினுடைய தர்ஶநமாத்ரத்தாலே விஷயங்களிலே ஆக்ருஷ்யமாணரைப்போலே அதிமாத்ரபீதராய், எம்பெருமானைக் காணப்பெறாத வ்யஸநத்தாலே பீட்யமாநருமாய்க்கொண்டு எம்பெருமானை நோக்கி, இக்கரணஸந்நிதாநத்தைத் தவிர்ப்பித்தருளவல்லையாயிருந்துவைத்துத்தவிர்த்தருளாமையாலே, "நீ இவற்றையிட்டு என்னை ஹிம்ஸிப்பித்து உன்திருவடிகளிற் சேராதபடி பண்ணுகிற இத்தால் உனக்கு என்ன ப்ரயோஜநமுண்டு? பரமகாருணிகனே! இவற்றினின்றும் உன் திருவடிகளிலே என்னை வாங்கியருளாய்" என்று திருவடிகளைப் பூண்டுகொண்டு கிடந்து, எம்பெருமானைக் காணப்பெறாத வ்யஸநத்தாலும் தத்ஸம்ஶ்லேஷப்ரதிபந்தகப்ரக்ருதி தர்ஶந ஜநிதவ்யஸநத்தாலுமாக, அஶோகவநிகையில் பிராட்டி கூப்பிட்டாற்போலே கூப்பிடுகிறார்.

## ஒன்பதினாயிரப்படி.

ஏழாம்பத்தில், முதல் திருவாய்மொழியில், இப்படி பெரியவார்த்தியோடேகூட எம்பெருமானை ஶரணம்புக்கவிடத்திலும் தம்முடைய அபிலஷிதம்பெறாதே மிகவும் அவஸந்நரான ஆழ்வார்-தாம் ஜிதேந்த்ரியராய் இருந்தாரேயாகிலும், ப்ரக்ருதிஸம்பந்தரானவர்கள் ஹேயதையாலே பகவதநர்ஹமாய் விஷயாந்தரப்ரவணமாய் பகவதநுபவ விரோதியாயுள்ள இந்த்ரியங்களாலே நலிவுபடுகிறபடியைக்கண்டு, தாமும் ப்ரக்ருதி ஸம்பந்தராகையாலே தாத்ருஶமான இந்த்ரியங்களாலே நலிவுபடுகிறாராகவும், ஸத்வாதி குணங்களும் இந்த்ரியங்களும் விஷயங்களும் தானிட்ட வழக்காய் எல்லார்க்கும்ரக்ஷகனுமாய் ரக்ஷிக்கைக்கீடான ஸாமர்த்த்யத்தையுமுடையனாய் ரக்ஷிக்கைக்கும் உறவுடையனாயிருந்துவைத்துத் தம்முடைய துக்கத்தைப் போக்காதொழிந்தவாறே, "குணத்ரயத்தாலே பேர்க்கவொண்ணாதபடி கட்டி இந்த்ரியங்களாகிற படரையிட்டுக் குத்துவித்து * அயர்வறுமமரர்களும் தானும் இதுவே போதுபோக்காகப் பார்த்திராநின்றான்"

என்றும்வ்யாஜிபண்ணி,"பரமதயாளுவாய் ரக்ஷிக்கைக்குஶக்தனுமாயிருக்கிற நீ இங்ங
நோவுபடக் கண்டிருக்கலாமோ?" என்று கேட்டார்க்கும் தரிக்கவொண்ணாதபடி பெரு
கூப்பீடாகக் கூப்பிடுகிறார்.

## பன்னீராயிரப்படி.

(ஏழாம்பத்தில்),கீழிரண்டுபத்தாலே - உபாய ஸ்வரூபஶோதநத்தையும், த
ஸ்வீகாரத்தையும் அருளிச்செய்து, மேலேழாம்பத்தாலும் எட்டாம்பத்தாலும் - உபா
நிவர்த்யமான விரோதிஸ்வரூபத்தையும், தந்நிவ்ருத்திப்ரகாரத்தையும் அருளிச்செ
கிறார். அதில் விரோதிஸ்வரூபபரமான இப்பத்தாலே - நிவர்த்யமான விரோதியாயுள்
ஶரீரேந்த்ரியாதிகள் நிவர்த்தகனான ஈஶ்வரனிட்டவழக் கென்னுமத்தையும், விரோத
நிவ்ருத்தி பிறவாதபோது ப்ராப்யமதப்ராவண்யம் ஆர்த்திஜநக மென்னுமித்தையும்
ஆர்த்திஶமிப்பதுஅபிநிவிஷ்டனான ஈஶ்வரனுடைய தேசப்ராப்தியாலே யென்னுமத்தை
யும், ஆர்த்திஹேதுவான விரோதியானது ஜகத்ரக்ஷணஹேதுவான விஜயாபதாநங்களை
யுடைய ஸர்வஶக்திக்கே நிவர்த்தநீயமென்னுமத்தையும், ரக்ஷகனான அவனையொழி
வேறுநிவர்த்தகரில்லையென்னுமிடம் ஸர்வஸம்மத மென்னும்படியையும், ஸர்வஸ்ரஷ்ட
வான அவனுடைய காலைக்கட்டிக் கூப்பிட்டு விரோதியைக் கழித்துக்கொள்ளவேணு
மென்னுமத்தையும், உருவெளிப்பாடான அநுபவம் நடக்கச்செய்தேயும் அலாபஜநிதை
யான ஆர்த்தி விரோதிகார்ய மென்னுமத்தையும், விசித்ரவிரோதிநிவர்த்தநத்தி
விசித்ரவிபூதிவிசிஷ்டனான விசித்ரஶக்தியுக்தனே வேணுமென்னுமத்தையும், விரோத
விசிஷ்டதேஶத்திலே வாசிக கைங்கர்யங்கொண்ட ப்ரீத்யதிஶயத்தாலே விரோதியை
விஹஸ்தமாக்கின ஹர்ஷத்தையும், ப்ராப்யவிஷயத்தில் ப்ராவண்யம் அதிசயித்தா
ப்ரதிபந்தகம் உபாயபூதன் போக்கு மென்னுமத்தையும் அருளிச்செய்து, விரோதிய
னுடைய ஸ்வரூபத்தை ஶோதித்தருளுகிறார்.

இதில் முதல் திருவாய்மொழியில் - கீழே ப்ராப்த்யர்த்தமாக ஶரணாகதியை
யநுஷ்டித்த இவர்க்கு ப்ராப்திவிரோதி நிவ்ருத்த்யர்த்தமாக ப்ரதிபந்தகப்ராபல்யத்தை
ப்ரகாசிப்பிக்க, "காட்டிப்படுப்பாயோ" "இன்னங்கெடுப்பாயோ" என்று பண்டே
அஞ்சியிருக்கிற இவர்,ப்ரதிபந்தகமான தேஹேந்த்ரியாதிகளுடைய அதிப்ரவ்ருத்தியை
அபரோக்ஷித்து "ஸம்ஸாரஸ்ய ஶேஷிதாவதத்வவேதா:" என்கிறபடியே, அதிசய
தார்த்தியையுடையராய்,விரோதிநிவர்த்தகனானஈஶ்வரனுடைய ஸம்பந்தாதிகுண பௌஷ்
கல்யத்தையும், ஶோக்யதாதிஶயத்தையும், ரக்ஷணார்த்தவ்யாபாரத்தையும், அவ
தகடநாஸாமர்த்யத்தையும், விரோதிநிரஸநஸ்வபாவத்தையும், ஸர்வப்ரகாரஸந்நி
யையும், அருந்தொழில்செய்தும் ஆஶ்ரிதகார்யஞ் செய்யும்படியையும், அஸாதாரணசிஹ்
நாதியோகத்தையும், ஸகலஜகத்ஸ்ரஷ்ட்ருத்வாதிகளையும், ஸாரஸங்க்ரஹணஸாமர்த்
யத்தையும் அநுஸந்தித்து, "ஏவம்விதஸ்வபாவனானநீ, உனக்கு விதேயமான ஶ
ரேந்த்ரியாதிகள் என்னை நலியக் கண்டு நிவர்த்திப்பியாதிருந்தாய்" என்று பந்தவிஶேஷ
மடியாகப் பெரிய ஆர்த்தியோடே கூப்பிடுகிறார்.

## இருபத்திநாலாயிரப்படி.

ஏழாம்பத்தில், முதல் திருவாய்மொழியில்—கீழ் பெரிய வார்த்தியோடே
பிராட்டிமுன்னாக ஶரணம்புக்கவிடத்திலும் தம் அபேக்ஷிதம் கிட்டிற்றில்லை: அதுக்கு
அடி, இவரை இங்கேவைத்துத் தான் கொள்ள நினைத்த காரியம் தலைக்கட்டினால் பின்ட

செய்வானாக நினைத்திருக்கை: அந்த க்ரமத்தை ஸஹித்ததில்லை, இவர்க்குக் கீழ் தமக்குப் பிறந்தவாற்றாமை. அத்தாலே மிகவும் அவஸந்நராய், அத்தாலே தாம் ஜிதேந்த்ரியராய் * முடியானேயிற் சொன்ன காரணங்களையுடையராயிருக்கச் செய்தேயும், ஸம்ஸாரிகள் இந்த்ரியவஶ்யராகக் காண்கையாலும், அவை நடையாடுகிற தேசத்திலே தேஹஸம்பந்தத்தோடே யிருக்கையாலும் "நமக்கு இது வரிற் செய்வதென் ?" என்று அஞ்சி, ஸர்வரக்ஷகனாய், பிறர்நோவறியுமிடத்தில் ஸர்வஜ்ஞனாய், பரிஹரிக்கைக்கு ஶக்தனுமாய், ப்ராப்தனுமாய், இந்த இந்த்ரியாதிகளும் தானிட்ட வழக்காயிருக்கத் தம்முடைய து:க நிவ்ருத்தி பண்ணாமையாலே, குணத்ரயத்தாலே பந்தித்து இந்த்ரியங்களாகிற துஷ்டராலே நலிவித்து நித்யவிபூதியிலே நித்யஸூரிகளும் தானுமாகத் தம் எளிவரவு கண்டு சிரித்திருக்கிறானாக நினைத்து "பரமதயாவானைப் ரக்ஷகனை நீ என்னை இங்கே நோவுபடக் கண்டிருக்கலாமோ?" என்று கேட்டார்க்குத் தரிப்புஅரிதாம்படி கூப்பிடுகிறார். ஸ்வகர்மத்தாலே வந்த நோவை "அவன் நலிகிறான்" என்று சொல்லலாம்படியிறே ஸம்பந்த மிருப்பது. பேறு அவனாலேயானால் இழவும்அவனாலேயென்னத் தட்டில்லையிறே.

## ஈடு முப்பத்தாறாயிரப்படி.

"அமர்ந்துபுகுந்தேன்" என்று தம்மால்ஆனவளவும் புகுரநின்றார். அநந்தரத்தில் அவனைப் புகுரநிற்கக்கண்டிலர். "இனிக் கைவிடப்பார்த்தானாகாதே" என்று விழுந்து கிடந்து கூப்பிடுகிறார். விளம்பஹேதுவில்லாத ஸாதநத்தைப் பரிக்ரஹித்தவன், அது ஃபலப்ரதமாந்தனையுங் கிடந்து கூப்பிடுமேத்தனையிறே. இவர்தாம் கீழ்ச்செய்ததாயிற்று - திருவேங்கடமுடையான் திருவடிகளிலே பெரியபிராட்டியார் முன்னிலையாகத் தம்முடைய ஆகிஞ்சந்யத்தை விண்ணப்பஞ்செய்துகொண்டு ஶரணம்புக்காராயிறே யிருக்கிறது. அது "𑌮𑌾𑌮𑍇𑌵 𑌯𑍇 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌮𑌾𑌯𑌾𑌮𑍇𑌤𑌾𑌂 𑌤𑌰𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇"(மாமேவயேப்ரபத்யந்தேமாயாமேதாம் தரந்திதே)என்கிறபடியே கடுகேப்பலித்துக்கொடு நிற்கக்கண்டிலர். இனி, "நம்மைக்கைவிடப் பார்த்தானாகாதே" என்று இன்னாதாகிறார். ஸம்ஸாரஸ்வபாவத்தை அநுஸந்தித்துப்போக்கடியற்று அவ்வடியைப்பற்றி ஶரணம்புக்கவிடத்திலும் தம்மபேக்ஷிதம் செய்யாமையாலே,

---

உண்ணிலாவிய ப்ரவேஶே:—கீழிற்றிருவாய்மொழியோடு இத்திருவாய்மொழிக்கு ஸங்க்ரஹேண ஸங்கதி அருளிச்செய்கிறார் - அமர்ந்து இத்யாதிவாக்யத்ரயத்தாலே. தம்மாலானவளவும் புகுரநிற்கையாவது - புருஷகாராகிஞ்சந்ய புரஸ்கார பூர்வகமாக அடைந்து, ஸ்வீகாரத்திலுபாயபுத்தியையும் தவிருகை. அவனைப் புகுரநிற்கக் கண்டிலரென்றது - விரோதியைப்போக்கி ப்ராப்தியைப்பண்ணித்தரக் கண்டிலரென்றபடி. ஸாதநாநுஷ்டாநம் பண்ணினவன் ஃபலப்ராப்தி யளவும் ஆறியிருக்குமாபோலே பண்ணின ப்ரபத்தி ஃபலிக்குமளவும் ஆறியிராதே! கூப்பிடுகிறதென் ? என்ன - விளம்பஹேது இத்யாதி.

விஸ்தரஸங்கதி - இவர்தாம் இத்யாதி. "ஆனவளவும்" என்றதின்விவரணம் - திருவேங்கடமுடையான் இத்யாதி. "அநந்தரத்திலவனை" இத்யாதியின் விவரணம் - அது 𑌮𑌾𑌮𑍇𑌵 இத்யாதி. "𑌦𑍈𑌵𑍀 𑌹𑍍𑌯𑍇𑌷𑌾" இத்யாதி, கீதாஸப்தமே. "இனிக்கைவிட" இத்யாதியின் விவரணம் - இனிநம்மை இத்யாதி. "𑌮𑌾𑌮𑍇𑌵𑌯𑍇 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇" என்கிறது - "பக்திவிரோதிபாபக்ஷயத்துக்கும் பக்த்யுத்பத்திக்கும் உறுப்பான ப்ரபத்தியைச் சொல்லுகிறது" என்று அங்கப்ரபத்தி பரமாக ஶ்ரீகீதாபாஷ்யத்திலே வ்யாக்யாதமாகிலும், 'மோக்ஷஸாதநமான ஸ்வதந்த்ரப்ரபத்திபரம்' என்று இவர்க்குவிவக்ஷிதம். இன்னாதாகிற ப்ரகாரத்தைக் காட்டுகிறார் - ஸம்ஸார இத்யாதி கூப்பிடுகிறா ரென்னுமளவும்.

ஶரணம்புக்கார்மேலேவேற்காரரை ஏவிஹிம்ஸிக்கும்க்ருஶம்ஸரோபாதியாக அவனைநினைத்த ஹீதராய், ஈஶ்வரன் க்ருபைபண்ணுகைக்கு வேண்டுவது - ஸம்ஸாரத்தினுடையஹேயதை நெஞ்சிலே படுகையும், அத்தலையில் வைலக்ஷண்யத்தை யநுஸந்திக்கையும்: ப்ரபத்திபண்ணுகைக்கு மேற்படவில்லையிறே; இவ்வளவிலும்ஃபலிக்கக்காணாமையாலே, "வைப்பணு வைத்தப்ரஹ்மாஸ்த்ரம்வாய்மடிந்ததுகிடீர்!" என்றுகூப்பிடுகிறார். "இனித்தான் 'க்ஷிபாமி' [க்ஷிபாமி] யாதல், ஊஷாமியாதல், இரண்டேயிறே; அதில் "க்ஷிபாமி" [க்ஷிபாமி] என்னுமவிலேயாகாதேநாம்" என்றிருந்தார். அதுவேன்? இவர்க்கு 'ஊஷாமி' [ஊஷாமி] என்றபுத்தியோடே பண்ணிக்கொடுத்தானேயென்னில்; "அதுவும் நோவுபடுகைக்கு உடலாகத் தந்தான்" என்றிருக்கிறார். தம்முடைய ஶக்திகொண்டு பெறவிருந்தாரல்லர்; அவனுக்கு அஶக்தியுண்டாயிழக்கிறாரல்லர்; பேற்றுக்குவேண்டுவது முன்பேசெய்துநின்றார்; ஆனபின்பு, இவர்க்கு இப்போது இழக்கவேண்டுவதில்லையிறே. ஆனால் ஃபலியாதொழிவானேன்? என்னில்; "இவர்துறையாலே வைக்கிலிறே ஃபலித்ததில்லையாவது: நமக்காகவிருக்கிற பின்பு இவர்இங்கேயிருந்தால் நல்லது" என்றிருந்தான். அவனும் இவரைக்கொண்டு ஒருகார்யங் கொள்ளவிறேயெண்ணியிருக்கிறது. அதுவுமொழிய, இவருடைய சரமதேஹமாகையாலே, இவர் ப்ரபத்தி பண்ணினவிடத்திலும், இவர்திருமேனியில் தனக்குண்டான ப்ராவண்யத்தாலே கார்யஞ் செய்திலன். இவர்திருமேனியில் ப்ராவண்யமிறே "மங்கவோட்டு" என்று அவனைக் காற்கட்டிற்றும். மெய்யான ப்ரேமமுண்டானால் இங்ஙனல்லதிராதே. இது ப்ரக்ருதியாயிற்றே

---

'ஈஶ்வரன் க்ருபைபண்ணுகைக்கு' இத்யாதிவாக்யத்தை முன்னே அநுஸந்தித்து, பின்பு 'ஸம்ஸார ஸ்வபாவத்தை' இத்யாதிவாக்யத்தைஅநுஸந்தித்து, பின்பு 'இவ்வளவிலும்ஃபலிக்க' இத்யாதிவாக்யம் அநுஸந்தேயம். சடக்கெனப்பலியாவிட்டால் "க்ரமேணபலிக்கிறது" என்றிராதே, "ஃபலியாது" என்று பட்டுக்கூப்பிடுகைக்கு ஹேதுஏது? என்ன-இனித்தான்க்ஷிபாமி இத்யாதி. "தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் । க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு" இதி கீதாஸு ஷோடஶே. "தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் । ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்தி தே" இதி தஶமே *'க்ஷிபாமிக்குஇலக்கானோம்" என்று அதிஶங்கைபண்ணுவானென்? "ஊஷாமி" என்ற புத்தியோகப் பண்ணிக்கொடுத்தானே யென்கிற சங்கையை அநுவதித்து, இப்போது கார்யகரமாகாமையாலே அதுவும் அந்யதாஸித்தமென்று, வெறுக்கிறாரென்று பரிஹரிக்கிறார் - அதுவேன் இத்யாதி வாக்ய த்வயத்தாலே. கீழே "விளம்பஹேதுவில்லாத" இத்யாதி வாக்யவிவரணமாதல், மேலில் ஶங்கைக்கு உபோத்காதமாதல் - தம்முடைய ஶக்தி இத்யாதி நாலுவாக்யம். முன்பே செய்துநின்றாரென்றது - ப்ரபத்தி பண்ணினாரென்றபடி. இப்படியானால் இவர்அபேக்ஷிதம் செய்யாதொழிவா னென் னென்கிற சங்கையை அநுவதிக்கிறார் - ஆனால் இத்யாதி. பரிஹாரம் - இவர்துறையாலே இத்யாதி வாக்ய த்வயம். கீழ் வாக்யவிவரணம் - அவனும் இத்யாதி. ஒருகார்யம் - ஜகத்தைத் திருத்துவதொருகார்ய மென்றபடி. பரிஹாராந்தரம் - அதுவுமொழிய இத்யாதி. அதுவுமின்றியிலே யென்றபடி. "ஈஶ்வரன் சரமதேஹத்தை விரும்பும்" என்றதுக்கு ப்ரமாணமாக- †"ஸர்வாஶ்ரயாம் ஸம்ஜ்யோதிஷ மேஷ: । ப்ரதிதிஷ்டதிஶரண்யஸ்ய । நிந்தம்ஸநாத்வஹஸ்வவஸ்வி வேஷ:" என்கிற ஶ்ருதியை அருளிச்செய்வர். இவர் திருமேனியில் ப்ராவண்யத்துக்கு நியாமக மேது? என்ன - இவர்திருமேனியில் இத்யாதி. அல்லாதாரிடத்தில் இங்ஙன் காணோமே யென்ன - மெய்யான இத்யாதி. மெய்யான ப்ரேமமுடையார்திருமேனியில் ப்ராவண்யம்அவனுக்கு ஸஹஜ மென்னுமத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார் - இது ப்ராக்ருதியாயிற்றே அவனுக்கு என்று,

† யஜுர். ஆரண. ப்ர-3. அநு-14.

அவனுக்கு: அவன் தம்மைக்கொண்டு கொள்ள விருக்கிற கார்யந்தன்னை இதில் பொருந்து வாரையிட்டுக் கொண்டாலாகாதோ என்றுயிற்று இவர்நினைத்திருக்கிறது. ''பண்ணிக் கொடுத்த ஜ்ஞாநலாபம் இவர்க்கு தரிக்கைக்கு உடல்'' என்றிருந்தான்அவன்: அதுதானே த்வரைக்கு உடலாயிற்று இவர்க்கு. ''க்ரமத்திலே காரியஞ்செய்கிறோம்'' என்றிருந்தான் அவன்: அது தன்னையேகொண்டு ''நம்மைக் கைவிட நினைத்தான்'' என்றிருக்கிறுர் இவர். நித்யவிபூதியையும் திவ்யமங்களவிக்ரஹத்தையும் ஸாக்ஷாத்கரித்து ''அங்கேபோய்அப் படியே அநுபவிக்கவேணும்'' என்னும் பதற்றத்தையுடைய இவர்க்கு, ''ஸம்ஸாரம் ததீய மாயிருப்பதும்ஓராகாரமுண்டு'' என்னும் ஜ்ஞாநமாத்ரத்தாலே தரித்திருக்கப்போகாதே. ''யானுநீதானுய்த்தேளிதோறும் நன்று மஞ்சுவன் நரகம்நானடைதல்'' என்றிறே இவர் இருப்பது. இப்படியிருக்கிற தம்மையும், அவனுக்கு ரக்ஷ்யவர்க்கம் குறைவற்றிருக்கிற படியையும், ரக்ஷகத்வம் ஸ்வரூபமாயிருக்கிறபடியையும், ரக்ஷிக்கைக்கு உடலான ப்ராப்தி யிருக்கிறபடியையும், தமக்கு இவற்றில் அந்வயமற்றிருக்கிறபடியையும், ஸத்த்வாதிகுணங் கள் அதுக்கடியான தர்மதேஹேந்த்ரியாதிகள் இவற்றுக்கடியானமூலப்ரக்ருதி மஹான் அஹங்காரம் அதின்கார்யமான விஷயங்கள் அவித்யாகர்மவாஸநாருசிகள் இவையெல் லாம் தததீநமாயிருக்கிறபடியையும் அநுஸந்தித்து, ''விஷயங்களும் இந்த்ரியங்களும் நடை யாடுகிற ஸம்ஸாரத்தேவைத்தபோதே இவற்றுக்கு நம்மை இரையாக்கிப்போகட நினைத்தா னித்தனை:''க்ஷிபாமி''[க்ஷிபாமி]என்கிறகோடியிலேபுக்கோம். இனித்தான்இவன்பரிகரங் கள்கண்டதும் நம்மை மயகற்றுகைக்கு உறுப்பாக. அதில், நித்யவிபூதியில் ஓலக்கமிருக்கிறது- நாம்படுகிற நலிவுகண்டு அங்குள்ளாருடனே கூடச் சிரித்திருக்கைக்கு; லீலாவிபூதிகண்டது- நமக்குச் சிறைக்கூடமாக. * மயர்வறமதிநலமருளிற்றும் - அல்லாதாரைப்போலே ஸுகமே

ப்ரக்ருதி - ஸ்வபாவமும், ப்ரயாஸமும். இது-ப்ராவண்யம். * மயர்வறமதிநலம்பெறுகையாலே அவன் தம்மை வைத்தகாரியம் அறிந்திருக்கச்செய்தே த்வரிக்கிறதென் ? என்ன - அவன்தம்மை இத்யாதி. இதில் பொருந்துவாரை என்றது - திருமழிசைப்பிரான் போல்வாரை யென்றபடி. ஹேதுத்வயத் தாலே வைத்தானுகிலும், ஆர்த்தரானஇவரை தரிப்பிக்கவேண்டாவோ ? என்ன-பண்ணிக்கொடுத்த இத்யாதி. ஜ்ஞாநலாபமென்றது - ஏதேனுமொன்றைப் பற்றினும் அதுதன்னையே பற்றிற்றென்று சொல்லலாம்படியான ததீயத்வப்ரதிபத்தி. ''நமக்காகவிருக்கிற பின்பு'' இத்யாதி வாக்யவிவரணம் - க்ரமத்திலேஇத்யாதி. கீழ் காட்டிக்கொடுத்த ததீயத்வ ப்ரதிபத்தியாலே தரித்திருக்கவொண்ணு தோ? என்ன அருளிச்செய்கிறுர் - நித்யவிபூதியையும்இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - யானுநீதானுய் இத்யாதி. யானுநீதானுய்த்தேளிதோறும்- நான்உனக்கு அத்யந்தசேஷபூதனென்கிற தெளிவு பிறக்கப்பிறக்க. நன்றுமஞ்சுவன் நரகம் நானடைதல் - ஸம்ஸாரத்திலிருப்பை நான் மிகவும் அஞ்சாநின்றேன். சேஷத்வ ப்ரதிபத்திக்கு விரோதியாகையாலே யென்றபடி. இதுக்கு - ''வானுய ரின்பம்மன்னிவீற்றிருந்தாய்'' என்றதிலே நோக்கு. இப்படி ப்ராஸங்கிகஸங்காபரிஹாரம்பண்ணி, அநந்தரம் பாட்டுக்களுக்குபாவம் - இப்படியிருக்கிற இத்யாதி. இப்படியிருக்கிற தம்மையும் - ''அவ னைப்பெறவேணும்'' என்னும் ஆர்த்தியோடே ப்ரபத்திபண்ணின தம்மையு மென்றபடி. அவனுக்கு ரக்ஷ்யவர்க்கமென்று தொடங்கி ஸத்த்வாதிகுணங்களென்னுமளவும் ''உலகமூன்றுடையாய்'' ''கடல் ஞாலங்காக்கின்ற'' ''அண்ணலே'' ''வலமுதல் கெடுக்கும்வரமேதந்தருள்கண்டாய்'' ''குணங்கள் - கொண்டமூர்த்தி'' என்றத்தைப்பற்ற. ''குணங்கள் - கொண்டமூர்த்தி'' என்று - ஸத்த்வாதிகுணங் களைச் சொல்லுகையாலே, ''தர்மதேஹேந்த்ரியாதிகள்''என்றவையெல்லாம்அர்த்தாத்ஸித்தம், இவற்றி லென்றது - ரக்ஷ்யாதிகளிலென்றபடி. தர்மமென்றது - கர்மத்தை. ''குறைதீர்ந்தி நலிவானின்ன மெண்ணுகின்றாய்'' என்றத்தைப்பற்ற - விஷயங்களும்இத்யாதி. பரிகரங்களென்றது-நித்யவிபூதி தொடக்கமான பரிகரங்களென்றபடி. இத்தை விவரிக்கிறுர்-அதில் நித்யவிபூதியில்இத்யாதி,

யிராதே துடித்து நோவுபடுகைக்காக'' என்று அறுதியிட்டு, அவன்திருவடிகளிலே தலையை மடுத்து, கேட்டாரடங்கலும் நீராம்படி கிடந்து கூப்பிடுகிறார்.

* மின்னிடைமடவாரில் - ஒருபிராட்டிதசையை ப்ராப்தராய் ப்ரணயரோஷந் தலையெடுத்துச் சொல்லிற்றெல்லாம் பிறர்வாயாலே சொன்னாற்போலே யிருக்கையாலே, ஆழ்வாரான தன்மையிலே நின்று இன்னதாம்படியான உபை விளைந்தது இவர்க்கு. இவரெல்லாவளவிலும் ஸ்ரீஜநகராஜன் திருமகளோடொப்பாரொருவராயிற்று. அதாகிறது - அத்தலையில் குறையிடுவாரொருத்தரன்றிக்கே ''இவற்றுக்கெல்லாம்அடி நம்முடையபாபம்'' என்றிருப்பாரொருத்தரிறே. இங்ஙனே யிருக்கக்கடவ இவர் அவன்தலையிலே குறையையேறிட்டுக் கூப்பிடுகிறாரிறே. இவர்தாம் தம்மாலேவந்தத்தை அவன்தலையிலே யேறிடுவானேன்? என்னில்; ப்ராப்தியை யுணர்ந்தால், இத்தலையாலே வந்தத்தையும் அவன்பக்கலிலே ஏறிடலாயிருக்குமிறே. ப்ரஜை கிணற்றிலே விழுந்தால், ''மாதாவானவள் தள்ளினாள்'' என்னக்கடவதாயிருக்கும். அதுக்கடி ''தாயானவள்கண்ணிலே வெண்ணெயிட்டுப் பார்த்திருந்தாளாகில் இப்ப்ரஜை விழுமோ? இவள் நோக்காமையிறே அந்தரப்பட்டது'' என்று கொண்டு அவள்தலையிலே குறைசொல்லக்கடவதாயிருக்கும். உதங்கன் க்ருஷ்ணன்பக்கலிலே வந்து, ''உனக்கு இரண்டுதிறத்தாரோடும் ஸம்பந்தமொத்திருக்கச்செய்தே, பாண்டவர்களை அழியச்செய்யாதே துர்யோதநாதிகளை அழியச்செய்தாய்; இப்படி சார்வுசெய்யப்போமோ?'' என்றாற்போலேயிருக்க அவன் சொல்ல, க்ருஷ்ணனும் அவர்கள் குறைகளையெல்லாஞ் சொல்லி, ''அவர்களுக்கு தர்மருசியில்லைகாண்'' என்ன, ''நீ பின்னை அவர்களுக்கு தர்மருசியுண்டாக்கிக் கொடாதொழிவானேன்?'' என்றானிறே. ''பலநீகாட்டிப் படுப்பாயோ,'' ''கிறிசெய்தென்னைப்புறத்திட்டின்னங் கெடுப்பாயோ'' என்று சொல்லுகிறபடியே அவற்றின் ஸந்நிதியும் அஸஹ்யமாம்படியாய், இனித்தாம் அறியாதிருக்கச்செய்தேயும் பகவத்விஷயத்தில் ப்ரவணமான * முடியானேயிற் கரணங்களையுடைய இவர்க்கு இந்த்ரிய வஸ்யதை யுண்டென்னுமிடம் கீழோடு விருத்தமன்றோ? என்னில்; அசல்அகம் நெருப்புப்பட்டு வேவாநின்றால் தந்தாம்அகம் பரிஹரியாதிருப்பாரில்லையிறே;புற்றினருகே பழுதைகிடந்தாலும் 'ஸர்ப்பம்' என்று புத்திபண்ணி ப்ரமிக்கக்கடவதாயிருக்குமிறே. அங்குத்தைக்கும் இங்குத்தைக்கும் பொதுவான உடம்போடே யிருக்கிறபடியைக் கண்டார்: நாட்டாருடைய இந்த்ரியவஸ்யராய்க்கிடந்து நோவுபடுகிறபடியையுங் கண்டார்: 'இது நம்மளவும்வரிற்

---

*கிழைப்பற்றஇதில்ஆர்த்திஅதிசயித்திருக்கு மென்கிறார்-மின்னிடைஇத்யாதி.''உசைவிளைந்தது'' என்கைக்கு,இவர்க்கு ஸ்வாபாவிகாகாரமேதென்கிற சங்கையிலே,இவருடைய வாஸ்தவாகாரத்தையும், இப்படியிருக்கிற இவர் அவனைவெறுக்கிறது உபாவிசேஷமென்னுமத்தையும் விஸதமாக அருளிச்செய்கிறார் - இவர்எல்லாவளவிலும்இத்யாதி. கூப்பிடுகிறரிறே-அந்ததசைய விளைகையாலேயென்று கூட்டுவது. அவனைவெறுக்கிறதுக்கு ஹேது உபாவிசேஷமேயன்றிக்கே, ஸம்பந்தமடியாகவும் வெறுக்கலாமென்னுமத்தை ஸங்காபரிஹாரமுகேந அருளிச்செய்கிறார் - இவர்தாமித்யாதி வாக்யத்வயத்தாலே. இவ்வர்த்தத்துக்குஉபபத்தி-ப்ரஜைஇத்யாதி. விவரணம்-அதுக்கடிஇத்யாதி. அந்தரப்பட்டது - அநர்த்தப்பட்டது. அநுஷ்டாநமுங்காட்டுகிறார் - உதங்கன்இத்யாதி. இவர் இந்த்ரியங்களுக்கு பயப்பட்டுக் கூப்பிடுகிற இது அஸம்பாவிதமென்று சங்கிக்கிறார் - பலநீகாட்டிஇத்யாதி. இதுக்குப் பரிஹாரம் - அசல்அகம்இத்யாதி. அதாவது - யோக்யதையாலே பயப்படுகிறாரென்றபடி. ''இனித்தாமறியாதிருக்க'' இத்யாதிக்கும் பரிஹாரம் - புற்றினருகேஇத்யாதி. அதாவது - ப்ராந்தியாலே யென்றபடி. தார்ஷ்டாந்திகத்தில் ப்ரயஹேதுவேதென்ன - அங்குத்தைக்குமித்யாதி. வ்யஸநத்தாலே கூப்பிடுகிறதுக்கு த்ருஷ்டாந்தத்ரயம்-ஸாகாம்ருகா இத்யாதி, ராக்ஷஸைஸ் இத்யாதி, ப்ரியஜநம்

செய்வதேன்?'' என்றஞ்சிக் கூப்பிடுகிறார். ''ஶாகாம்ருகா꞉'' (ஶாகாம்ருகா꞉) - பூசலிலே புக்கு அங்குண்டானவாஸனையின்றிக்கே யிருக்கை. பணையோடுபணை தத்தித்திரியுமவை யிறே. ''ராவணஸாயகார்த்தா꞉'' (ராவணஸாயகார்த்தா꞉) - திக்பாலர்களையுங்கூட அச்சமுறுத்தி வளர்ந்தவன்கையிலம்புகள். ''ஜக்முஶ்ஶரண்யம்ஶரணம்ஸ்மராமம்'' (ஜக்முஶ்ஶரண்யம்ஶரணம்ஸ்மராமம்) -தங்களுடைய ஆபத்தையறிந்து பரிஹரிக்கவல்லவனை யும்பார்த்துப் பற்றினார்கள். ''ராக்ஷஸைர்வத்யமாநாநாம் வாநராணாம் மஹாசமூ꞉ | ஶரண்யம்ஶரணம் யாதா ராமம் தஶரதாத்மஜம்'' (ராக்ஷஸைர் வத்யமாநாநாம் வாநராணும்மஹாசமூ꞉ | ஶரண்யம்ஶரணம்யாதா ராமம் தஶரதாத்மஜம்) என்று முதலிகளடங்கலும் ராக்ஷஸர்வாயிலேகிடந்து பெருமாளை ஶரணம்புக்காற்போலே, இவரும் * மனமாளுமோரைவர் வன்குறும்பரான விந்த்ரியங்களுக்கு பயப்பட்டுக் கூப்பிடு கிறார். ''ப்ரியம்ஜநமபஶ்யந்தீம் பஶ்யந்தீம் ராக்ஷஸீகணம் | ஸ்வகணேநம்ருகீம்ஹீநாம்ஶ்வகணைராவ்ருதாமிவ'' (ப்ரியம்ஜநமபஶ்யந்தீம் பஶ்யந்தீம்ராக்ஷஸீ கணம் ஸ்வகணேநம்ருகீம்ஹீநாம்ஶ்வகணைராவ்ருதாமிவ) என்று ஸ்ரீஜநகராஜன் திருமகள் பட்டது படுகிறார். பிள்ளைதிருநறையூரரையர் ''இப்பாட்டுக்களில் பூர்வார்த்தமடைய - புலியின்வா யிலே அகப்பட்ட ப்ரஜை தாய்முகத்திலே விழித்துக்கொண்டு புலியின்வாயிலேகிடந்து நோவுபடுமாபோலேயாயிருக்கிறது'' என்று பணிப்பர். ''தாவதார்த்தி꞉'' (தாவதார்த்தி꞉) இத்யாதி ஶ்லோகத்திற்படியே, ஶரணம்புக்கால் தம்மைஇன்னாதாக ப்ராப்தியில்லையே; அவனைஇன்னாதாமித்தனையிறே. திருமலையிலே புகுந்துகிட்டிநின்றதுவும் இவர்க்குப்பேற் றுக்கு உடலாகைதவிர்ந்து கூப்பிடுகைக்கு உடலாயிற்றித்தனையிறே.

---

*இத்யாதி. 'வாநரா꞉.' என்னாதே ''ஶாகாம்ருகா꞉'' என்று விசேஷித்ததுக்கு ஹாவம் - பூசலிலே இத்யாதி. ''ஶாகாம்ருகா꞉'' என்றால்-இப்படிதோற்றுமோவென்ன-பணையோடு இத்யாதி. *ராவண ஶப்தத்துக்குஅர்த்தம்-திக்பாலர்களையும் இத்யாதி. ''ஸர்வலோகாஞ்ஶரண்யா꞉'' என்றத்தை விவக்ஷித்து ''ஶரண்யம்'' என்றதுக்கு ஹாவம்-தங்களுடைய இத்யாதி. 'தேவயந்த்ரா நா꞉வசிதா꞉ப்ரவீரா꞉நாநந்த்ரா நாஹயஶல்யவிதா꞉ | ஶாகாம்ருகாராவணஸாய கார்த்தா꞉ஜக்முஶ்ஶரண்யம்ஶரணம்ஸ்மராமம்'' இதி யுத்தகாண்டே ஏகோநஷஷ்டிதமே [சரு] ''ராக்ஷஸைர்வத்யமாநாநாம் வாநராணாம்மஹாசமூ꞉ | ஶரண்யம்ஶரணம்யாதா ராமம்தஶரதாத்மஜம்'' இதி சதுர்நவதிதமே. [கள] ''ப்ரியம்ஜநமபஶ்யந்தீம்'' இத்யாதி ஸுந்தரகாண்டே பஞ்சதஶே [உச]. பிள்ளைதிருநறையூரரையர் நிர்வாஹத்துக்கு, பாட்டுக்களி லுத்தரார்த்தங்களெல்லாம் குணாநுஸந்தாநபரமென்று கருத்து. மற்றை நிர்வாஹத்துக்கு, உத்த ரார்த்தங்களெல்லாம்-வெறுப்பிலே. அவனை இன்னாதாகைக்கு த்ருஷ்டாந்தம்-தாவதார்த்தி꞉இத்யாதி. ப்ரதமேம்ஶோநவமே.[எகூ]இஶ்ஶ்லோகம்*உலகமுண்டப்ரவேஶேலிகிதம். அதாவது-ப்ரபத்திபலியாமை யாலுமின்னாதாகிறாரென்றபடி. முந்தினஹேது த்வயமாவது - ''மின்னிடைமடவாரில்'' இத்யாத் யுக்தார்த்யதிசயமும், ''ப்ராப்தியையுணர்ந்தால்'' இத்யாதப்புக்தமான ப்ராப்தியும். ஆஶ்ரிதகார்யம் செய் கைக்காகத் திருமலையிலே ஸந்நிஹிதனாயிருக்க, அவனைவெறுக்கிறதென்? என்ன - திருமலையிலே இத்யாதி. ''மனமாளுமோரைவர்வன்குறும்பர்'' என்றதுக்குஅர்த்தம் - தங்களுக்குமுதலியான மநஸ் ஸைத்தங்கள்அதீநமாக்கியாளுமவையாய்,நலியுமிடத்தில் அத்விதீயங்களான,ஒன்றிரண்டன்றிக்கேஅஞ் சாய்,அதி ப்ரபலங்களாய், காணுதிபன்கீழடங்காமல் குறும்புசெய்யும் ஶ்ரோத்ராதிகளான இந்த்ரி யங்களையென்றபடி. பெரியதிருவந்தாதி, ஐம்பத்தோராம்பாட்டு.*

# முதற் பாட்டு.

உண்ணிலாவியஐவரால்குமைதீற்றி என்னையுன்பாதபங்கயம்
நண்ணிலாவகையே நலிவான்இன்னமெண்ணுகின்றாய்
எண்ணிலாப்பெருமாயனே! இமையோர்களேத்தும்உலகமூன்றுடை
அண்ணலே!அமுதே! அப்பனே!என்னையாள்வானே!

ஆ.—மத் வ்யஸந நிரஸநாநுகுண அஸங்க்யேய விசித்ரஶக்தியுக்தனாய் ஸர்வ ஸ்வாமியாய்நிரவதிகபோக்ய ஹேதுகல்யாண குணபராஜித மத்ஸ்வரூபனாயிருந்துவைத்து, இன்றளவும் வர அநாதிகாலமெல்லாம் உன் திருவடிகளையிழப்பித்து வைத்து, இன்னமும் என்னுடைய ஶரீரேவர்த்தமாநமுமாய் அதஏவ அவர்ஜநீயமுமாய் ம்ருத்யு ஸத்ருஶமுமாய் பயங்கரமுமாயிருந்த பஞ்சேந்த்ரியங்களாலும் விஷயங்களிலேஎன்னை ஆகர்ஷிப்பித்து; உன்திருவடிகளை ஒருக்ஷணம் விஶ்லேஷிக்கிலும் தரிக்கமாட்டாதிருக்கிற என்னை, உன் திருவடிகளை இழப்பிக்கவோ பார்த்தருளுகிறது? பிரானே ! என்று கூப்பிடுகிறார்.

ஒ.—முதற்பாட்டில், " தன்னையல்லது செல்லாதபடியாய் உன்திருவடி களிலே ஶரணம்புகுந்த பின்பும் என்னை இந்த்ரியங்களாலே நலியப்பாராநின்றாய்'' என்று இன்னாதாகிறார்.

[உண்ணிலாவிய] என்று தொடங்கி - விஷயங்களில் விமுகனான என்னை உள்ளே வர்த்திக்கிற ஐந்து இந்த்ரியங்களாலும் மிகவும் நலிவுபடுத்தி. [எண்ணிலா] என்று தொடங்கி - நீ வேண்டாதாரை நலிகைக்கீடாய் அபரிச்சேத்யமாய் ஆஶ்சர்ய மான ப்ரக்ருதியை உபகரணமாகவுடையையாய்க் குணத்ரயாதீதரான நித்யஸூரிகளாலே ஏத்தப்படுவதுஞ்செய்து ஸர்வத்தையுமுடைய ஸ்வாமியாய், நிரதிஶயபோக்யனுமாய், உப காரகனுமாய், என்னிடையாட்டம்உனக்கேபாரமாகஏறிட்டுக்கொண்டு நிர்வஹிக்கிறவனே!

ப.—முதற்பாட்டில், விரோதிநிரஸநத்துக்கு ஏகாந்தமான ஸம்பந்தாதிகளை யுடைய நீ, இந்த்ரியங்களையிட்டு என்னை நலிவித்துஉன்திருவடிகளைக் கிட்டாதபடி பண்ணா நின்றா யென்கிறார்.

உள் - உள்ளே, நிலாவிய - நிரந்தரவாஸம் பண்ணுகையாலே ஆந்தரஶத்ருக் களாயிருக்கிற, ஐவரால் - இந்த்ரியங்கள் ஐந்தாலும், குமைதீற்றி - நலிவு உண்ணும்படி பண்ணி, என்னை-(இவற்றுக்குஅஞ்சி உன்னை ஶரணம்புகுந்த)என்னை, உன் - ப்ராப்தனாய் போக்யனான உன், பாதபங்கயம் - திருவடிகளை, நண்ணிலாவகையே - நண்ணாதபடி யாகவே, இன்னம் - (''காட்டிப்படுப்பாயோ'' என்னும்படி) ஆர்த்திபிறந்தபின்பும், நலி வான்-(ஸம்ஸாரத்திலே வைத்து) நலிய, எண்ணுகின்றாய் - எண்ணாநின்றாய்; எண்ணிலா - (''அநந்தஸ்ய ந தஸ்யாந்த: ஸங்க்யாநம் வாபி வித்யதே'' என்று)அஸங்க்யேயமாய், பெரு - அபரிச்சின்னமாய், மாயனே - ஆஶ்சர்யாவஹமான ப்ரக்ருதிதத்த்வத்தை ப்ரகாரமாக வுடையனாய், இமையோர்கள் - (அஸ்ப்ருஷ்டஸம்ஸார ஶங்கராய் அஸ்கலித ஜ்ஞாநரான) நித்யஸூரிகளாலே, ஏத்தும் - ஸ்துத்யனாய்க்கொண்டு, மூன்றுஉலகம்-த்ரிவிதசேதநாசேத நங்களையும், உடை - ஶேஷமாகவுடைய, அண்ணலே - ஸ்வாமியாய், அமுதே - ஸ்வதஸ் ஸித்தமான நித்யபோக்யதையையுடையையாய், அப்பனே - உத்பத்தியே பிடித்து உப

காரகனாய், என்னை - என்னை, ஆள்வானே - இவ்வளவும் நிர்வஹித்துக்கொண்டு போருகிறவனே! "உண்ணிலாவிய" என்று தொடங்கி, "நலிவானின்னமெண்ணுகின்றாய்" என்று அந்வயம். உபகாரகனான ஈஶ்வரனை அபகாரகனாகச்சொல்லுகிறது - வ்யங்க்யோக்தி ஆற்றத்தாலே. இந்த்ரியங்களுக்குப் புருஷஸமாதி-ப்ரவர்த்தகத்வபுத்தியாலே. "எண்ணிலாப் பெருமாயனே" என்று - அஸங்க்யேய அபரிச்சிந்நாஶ்சர்யகுணன் என்றுமாம்.

இ.—முதற்பாட்டில், "உன்னாலல்லது செல்லாதபடிபண்ணி உன் திருவடிகளிலே ஶரணம் புகுந்தபின்னையும் என்னை இந்த்ரியங்களாலே நலியப்பாராநின்றாய்" என்கிறார்.

[உண்ணிலாவிய] - உள்ளே வர்த்திக்கிற. புறம்பிட்டுவந்து நலிந்தனவாகில் இறாய்க்கலாமிறே; ஸஹஜஶத்ருக்களென்கை. [ஐவரால்] - ஒருவர் இருவரன்று, ஐவராலே. மேல் விழுந்து நலிகிறபடியாலே - சேதநஸமாதியாலே சொல்லுகிறார். [குமைதீற்றி] - நலிவுபடுத்தி. [தீற்றி] - "இந்த்ரியங்கள் தண்ணளிபண்ணாமே யொக்க விருந்து நலிவிக்கிறான்" என்றிருக்கிறார். [என்னை] - "பலசீகாட்டிப் படுப்பாயோ" "இன்னங்கெடுப்பாயோ" என்றிருக்கிற வென்னை. [உன்பாதபங்கயம்] - "தாவி வையங்கொண்ட தடந்தாமரைகள்" என்று நிரதிஶயபோக்யமாய் ஸுலபமான திருவடிகளை. [நண்ணிலாவகையே] - நான் கிட்டாதபடியே. [வகையே] - சிலர் நித்யஸித்தரானாற்போலே நான் நித்யஸம்ஸாரியாம்படி. [நலிவான்] - "அவனைக் கிட்டாமைக்கு மேற்படத் தமக்கு நலிவில்லை" என்றிருக்கிறார். [இன்னம்] - இந்த்ரியங்களுக்கு அலைந்து உன்னை ஶரணம்புக்க பின்பும். [எண்ணுகின்றாய்] - "என்னை நித்யஸம்ஸாரியாக்கி அகற்றும் விரகு எண்ணுகிறான்" என்றிருக்கிறார். [எண்ணிலாப் பெருமாயனே] - எண்ணிறந்த காரியங்களை விளைக்கவற்றாய் ஆஶ்சர்யமான ப்ரக்ருதியையுடையவனே! "நீவேண்டாதாரை நலிகைக்கு ப்ரக்ருதியை உபகரணமாகவுடையவன்" என்கை. "மமமாயா துரத்யயா." "ஸமஸ்தகல்யாணகுணாத்மகன்" என்று பிள்ளான்பணிக்கும். என்னுடைய நோய்க்கும் உன்னுடைய குணங்களுக்கும் என்ன சேர்த்தியுண்டு. [இமையோர்களேத்தும்] - ப்ராதாக்களிலே ஒருவன் ஜீவிக்க ஒருவன் சிறை கிடந்தாற்போலேயிருக்கிறதாயிற்று இவர்க்கு. [உலகமூன்றுடை யண்ணலே] - ஸர்வலோகங்களையுமுடைய ஸர்வேஶ்வரனே! ஸர்வரக்ஷகத்வத்தைக் காட்டிற்றும் "நம்மைக் கைவிடான்" என்றிருக்கைக்காகவன்றோ? [அமுதே] - போக்யதையை அறிவித்ததும் மேல் காகவல்லவோ? [அப்பனே] - உபகாரகனே! உபகாரகத்வத்தைக் காட்டிற்றும் "இவ்வளவு உபகரித்தவன் இனிக் கைவிடுமோ?" என்றிருக்கைக்காக. [என்னையாள்வானே] - என்னிசைவின்றிக்கேயிருக்க, என்காரியம் உனக்கே பரமாக ஏறிட்டுக்கொண்டதுவும் நான் "கைவிடான்" என்றிருக்கைக்காகவன்றோ.

ஈடு. —முதற்பாட்டு. "உன்னாலல்லது செல்லாதபடியாய் உன் திருவடிகளிலே ஶரணம்புகுந்த என்னை இந்த்ரியங்களாலே நலியப் பாராநின்றாய்" என்கிறார்.

---

முதற்பாட்டு.—உண்ணிலாவிய இத்யாதி. "என்னை-ஐவரால்குமைதீற்றி - நலிவானின்னமெண்ணுகின்றாய்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - உன்னாலல்லது இத்யாதி.

[உண்ணிலாவிய] இத்யாதி- ரக்ஷகன் ஸந்நிதியாகை தவிர்ந்து பாதகர் ஸந்நிதியாயிற்றுக்கிடீர். தேவர், எனக்குப் பகைப்புறம்பிட்டுவருகிறதென்றே இருக்கிறது? [நிலாவிய] - உள்ளானாலும், போக்குவரத்துண்டாமாகில் படைப்போதறிந்து இருக்கலாமிறே. [நிலாவிய] - வர்த்திக்கிற. பாதகவர்கம் அந்தரங்கமாய் நின்று நலிகிறபடி. "தேஹாத் வ்யதிரிக்தமாயிருப்பதோர் ஆத்மவஸ்து உண்டு" என்று அறிகிறிலர்; இவையே வர்த்திக்குமத்தனை என்றிருக்கிறார். [ஐவரால்] - இப்படி நலியாநின்றாலும், ஒருவரிருவராகில் அறிந்து பரிகரிக்கலாமிறே. இவர்களிலே நால்வர் ஒருமுகமாய் நின்று நலிய, ஒருவருடலாந்தமாயிருக்கும். ரக்ஷகனொருவனாயிருக்க, பாதகர் ஐவராயிருக்கிறபடி. அஞ்சாலென்னாதே, "ஐவரால்" என்றது - அசேதநங்களாயிருக்கச்செய்தேயும் சேதநஸமாதியாலே சொல்லுகிறாராயிற்று, பாதகத்வத்தில் ஊற்றங்கொண்டு. ஆத்மாவென்றுஒன்று உண்டாய், அதினுடைய ஜ்ஞாந ப்ரஸரத்வாரமாத்ரம் மநஸ்ஸாய், அதுக்கு இவை ஶேஷமென்று அறிகிறிலர். [குமைதீற்றி] - நலிவுபடுத்தி. விடுநகங்கட்டுவாரை "நெகிழக்கட்டினாய்" என்று உறுக்கிக் கட்டுவிப்பாரைப் போலே, "இந்த்ரியங்கள் தண்ணளிபண்ணாமே ஒக்கவிருந்து நலிவிக்கிறான்" என்றிருக்கிறார். நலிகிற நலிவைக்கொண்டு, சேதநஸமாதியாலே சொன்னோமாகில், இவற்றின்பக்கல் குறையுண்டோ? இவை நலிகிறபோதும் இவனில்லாமையில்லையிறே. இவனுக்கு இவைதான் அவிதேயமுமன்றே? ஹ்ருஷீகேசனே! [என்னை] - "பலநீகாட்டிப்படுப்பாயோ," "இன்னங்கெடுப்பாயோ" என்று அவற்றின் ஸந்நிதியிலே முடியும்படியான என்னை. [உன்பாதபங்கயம்] - "தாவிவையங்கொண்ட தடந்தாமரைகள்" என்றும், "பூவார்கழல்கள்" என்றுஞ் சொல்லுகிற திருவடிகளை. [உன்பாதபங்கயம்] - என்னையன்றோ சொல்லவேண்டுவது? உன்னை நீ அறிதியிறே! உன்னடி அறியாமல்தான் அகற்றுகிறாயன்றே. * பேதைக்குழவி

---

*பூர்வார்த்தத்துக்கு ஸமுதாயதாத்பர்யம் - ரக்ஷகன் இத்யாதி. "உள்" என்றதுக்கு பாவம் - தேவர்எனக்கு இத்யாதி. "நிலாவிய" என்கிற வர்த்தமானார்த்தம் - உள்ளானாலும் இத்யாதி. படைப்போது - யுத்தகாலம். இவ்வாக்யத்துக்கு ஶேஷம் - நிலாவிய இத்யாதி. "தேவர் எனக்கு" இத்யாதி வாக்யவிவரணம்- பாதகவர்கம் இத்யாதி. "நிலாவியஐவர்" என்றதுக்கு பார்த்தபாவம்-தேஹாத் இத்யாதி. "உண்ணிலாவிய" என்றஅநந்தரம் "ஐவர்" என்றதுக்கு பாவம் - இப்படி இத்யாதி. நலியும்க்ரமமேது? என்ன - இவர்களிலே இத்யாதி. சக்ஷுஶ்ஶ்ரோத்ரஜிஹ்வாக்ராணங்கள் முகத்திலவையாகையாலே, சாடேக்தியாலே-ஒருமுகமாய்என்கிறார். த்வகிந்த்ரியம் ஸர்வஶரீரவ்யாபியாகையாலே உடலாந்தமாயிருக்குமென்று சாடு. உடலாந்தம் - ஸர்வசரீரவ்யாபி. த்வகிந்த்ரியமென்றபடி. பிள்ளை திருநறையூரரையர் நிர்வாஹத்திலே பாவம் - ரக்ஷகன் இத்யாதி. இவற்றை சேதநராகச்சொல்லி விஷண்ணராகிறவருடைய பார்த்தபாவமாதல், ஶலிதமாதல் - ஆத்மாவென்று இத்யாதி. குமை - பாதை. தீற்றி-புஜிப்பித்து: நலிவுபடுத்தியென்றபடி. சேதநஸமாதியாலே இந்த்ரியங்கள் நலிகிறனவாகச் சொல்லிவைத்து, ஈஶ்வரன் பாதிக்கிறானென்பானென்? என்ன-விடுநகம் இத்யாதி, ஹ்ருஷீகேசனேயென்னுமளவும். விடுநகம் - கிட்டிக்கோல். உறுக்கி - உறுத்தி. இவைநலிகிறபோது இவன் ஸந்நிஹிதனாகையாலும், ஹ்ருஷீகேசனாகையாலே நிவர்த்திப்பிக்க ஶக்தனாகையாலும், பாதியாதபடி பண்ண ப்ராப்தமாயிருக்க, அதுசெய்யாமையாலே "இவனே பாதிக்கிறான்" என்னலாமென்று இவ்வாக்யங்களுக்கு பாவம். திருவடியைத் தாமரையாகச் சொல்லுகிறதுக்கு ப்ரமாணம் - தாவிவையம் இத்யாதி. "பாதபங்கயம்" என்கிற பதப்ரயோகத்துக்கும், "உன்" என்றதுக்கும் பாவம் - என்னையன்றோ இத்யாதிவாக்யத்வயம். என்னையன்றே - என்னுடைய தன்மையையன்றோ உனக்குச் சொல்லவேண்டுவது? என்றபடி. உன்னைநீ அறிதியென்றது - போக்யமான திருவடிகளையுடைய உன்னை யென்றபடி. பதத்விவரணம் - உன்னடியறியாமல் இத்யாதி. அடியென்று - ஶ்லேஷம்; மூலமும், திருவடி*

பிடித்துச் சுவைத்துண்ணும் பாதக்கமலம்இறே. ஸம்ஸாரத்தில் அருசிபிறவாதார்க்கும் விட வொண்ணாதபடி போக்யமான திருவடிகளை. *தேனேமலரும் திருப்பாதமிறே. [நண்ணிலா வகையே] - காதாசித்கமாகக் கிட்டாதொழிகையன்றிக்கே, கிட்டாதொழிகையே ஸ்வ பாவமாக. "இனி நண்ணப்புகாநின்றுமோ?" என்றிருக்கிறார். [நலிவான்] - நண்ணுமை யென்றும் நலிவென்றும், இரண்டில்லை இவர்க்கு; திருவடிகளைக் கிட்டாதொழிகையே இவ்வாத்மாவுக்கு நலிவு. இக்க்ரூரமானவகையே நலிவான். [இன்னம்] - "அகல கில்லேனிறையு மென்றலர்மேல்மங்கை யுறைமார்பா, உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேன்" என்ற பின்பும். [எண்ணுகின்றாய்] - "ஈஸ்வரனுக்கு வேறு க்ருத்யமில்லை"என்றிருக்கிறார். "[Grantha]" (யஸ்யமந்த்ரீச கோப் தாச ஸஹ்ருச்சைவ ஜநார்த்தநஃ) என்று பாண்டவர்கள் கார்யம் மநோரதித்தாற்போலே, இங்குக் கார்யம் செல்லாநிற்கச்செய்தே, மந்த்ரமும் செல்லுகிறபடி. "இவரை நம் பக்கலி னின்றும் பிரித்தோமாம் விரகேதோ!" என்று சிந்திக்கிறானென்றிருக்கிறார். [எண்ணி லாப்பெருமாயனே] - "[Grantha]" (அஸ்மாந்மாயீ ஸ்ருஜதே விஸ்வமேதத்) என்றும், "[Grantha]" (மமமாயாதுரத்யயா) என்றும் சொல் லுகிறபடியே, எண்ணிறந்தசெயல்களைச் செய்யவற்றாய், நீ வேண்டாதாரைச் சிறையிட்டு நலியக்கடவதான ப்ரக்ருதியைப் பரிகரமாகவுடையவனே! அன்றிக்கே, "எண்ணிறந்த மஹாஸ்சர்யமான குணங்களையுடையவனே!" என்று பிள்ளான் பணிக்கும்படி. இப்படி குணவானாயிருக்கிற உனக்கு என்னை நலிகைக்கு என்ன சேர்த்தி யுண்டு? விடுநகங்கட்டி நலியாநிற்கச்செய்தே " தண்ணீர் " என்பாரைப்போலே, அவன் குணங்களைச் சொல்லுகிற

---

களும். தன்னடியில் போக்யதைதான் அறியுமோ? என்ன - பேதை இத்யாதி. "[Grantha]" என்னுமாபோலே பருவத்துக்குத்தக்க அறிவில்லாத குழவி, திருக்கையாலே பிடித்துத் திருப்பவளத் திலேவைத்து ஆஸ்வாதித்து புஜிக்கும் திருவடித்தாமரை யென்றபடி. பெரியாழ்வார்திருமொழி, "சீதக்கடலுள்" இத்யாதி. திருவடிகள் போக்யமானதின் எல்லையை அருளிச்செய்கிறார் - ஸம்ஸாரத் தில் இத்யாதி. இதுக்கு ப்ரமாணம் - தேனேமலரும் இத்யாதி. "வகையே" என்கிற அவதார ணார்த்தம் - காதாசித்கம் இத்யாதி. பலிதம் - இனிநண்ண இத்யாதி. "நண்ணிலாவகையே" என்ற வநந்தரம் "நலிவான்" என்கையாலே - கிட்டாமையே இவர்க்கு நலிவென்கிறார் - நண்ணுமையென் றும் இத்யாதி. இவர்க்கே யன்றிக்கே, ஸ்வரூபஸ்திதியை விசாரித்தாலும் இதுவே நலிவென்கிறார் - திருவடிகளை இத்யாதி. இக் க்ரூரமான வென்றது - "நண்ணிலா" என்றத்தை. "எண்ணுகின்றாய்" என்கிற வர்த்தமாநார்த்தம் - ஈஸ்வரனுக்கு இத்யாதி. "துமைத்ற்றி" என்றத்தைக்கடாக்ஷித்து, "இன்னமெண்ணுகின்றாய்" என்ற வர்த்தமாநத்துக்கு ஸத்ருஷ்டாந்தமாக பாவார்த்தம் - யஸ்யமந்த் ரீச இத்யாதி. இதம் மஹாபாரதே. "எண்ணுகின்றாய்" என்றதுக்கு பப்தார்த்தமாதல், இவர்விஷ யத்தில் கார்யம்பண்ணும் ப்ரகாரமாதல் - இவரைநம்பக்கலில் இத்யாதி. "மாயன்" என்றதுக்கும்; ப்ரக்ருதி எண்ணிறந்த செயல்களைச் செய்யுமென்னுமதுக்கும் ப்ரமாணம் - அஸ்மாந்மாயீ இத்யாதி. அஸ்மாத் - ப்ரதாநாத்இத்யர்த்தஃ. ப்ரக்ருதி எண்ணிறந்த செயல்களைச் செய்கையாவது- அநேககார்யங் களை ஸ்ருஷ்டிக்கவற்றா யிருக்கை. மாயீ என்று - ப்ரக்ருதியைப் ப்ரகாரமாகவுடைய ஈஸ்வரனைச் சொல்லுகிறது. "பெருமாயன்" என்றதுக்கு ப்ரமாணம் - மமமாயா இத்யாதி. பிள்ளைதிருநறையூ ரரையர் நிர்வாஹத்திலே அருளிச்செய்கிறார் - இப்படிகுணவானாய் இத்யாதி. மற்றை நிர்வாஹத் திலே, நலிகிறவனை குணவானென்கிறதென்? என்ன - விடுநகம் இத்யாதி. "உலகமூன்றுடை", இத்யாதியாற்சொன்ன குணங்களுக்கும் இந்த ந்யாயம் ஒக்கும். இமையோர்கள்வத்தும் என்றதுக்கும்

படி. [இமையோர்களேத்தும்] - ''தன்னாலல்லது செல்லாதாரை ஒருவன் போகடவல்ல படியே'' என்று கொண்டாட ஒருவிபூதியுண்டாவதே ? ''அவர்கள் முகங்கொடுக்கையிறே அவன் இங்கு வராதிருக்கிறது'' என்றிருக்கிறார். த்ரிசங்குவினுடைய ஓலக்கம் கிளர்ந்தாற் போலே கிளர்ந்ததாகில் அவனுக்கு என்னை விட்டிருக்கப்போமோ? [உலகமூன்றுடையண்ணலே] -''தான்நினைத்தபோது கார்யஞ்செய்கிறான்'' என்றுஇவரிருக்கைக்காகத்தன்னுடைய சேஷித்வத்தைக் காட்டினான்அவன்; '''இப்படி ரக்ஷகனானவன் நம்மை நலியுமோ?'' என்றிருக்கும்படி பண்ணிப்பின்னைநலிகைக்காகக்காட்டினான்'' என்றிருக்கிறார்இவர். [அமுதே] - அவன் தன்னுடைய போக்யதையைக்காட்டிற்றும் தம்மை புஜிப்பிக்கைக்கல்ல; புறம்பு ஒன்று பொருந்தாதே நோவுபட'' என்றிருக்கிறார். [அப்பனே] -'''இப்படி உபகாரகனானவன் நலியாநின்றானோ?'' என்று விஸ்வஸிக்கப்பண்ணிப் பின்னை அபகரிக்கைக்காகக் காட்டினான்'' என்றிருக்கிறார். [என்னையாள்வானே] - ''ப்ராங்ந்யாயம் ஃபலிக்கும்'' என்றிருக்கைக்காகக் காட்டினானென்றிருக்கிறார். ''இதுக்கு முன்பெல்லாம் நம்மை நிர்வஹித்துக் கொண்டு போந்தது நாமும் சிலசெய்தோ? அப்படியே மேலும் நம்கார்யம் அவன் செய்யும்'' என்றுஇருக்கைக்காகச் செய்தானத்தனை; நினைவு வேறே யென்றிருக்கிறார். [என்னையாள்வானே] - ''நலிவானின்னமெண்ணுகின்றாய்'' என்கிறார்.

## ரண்டாம் பாட்டு

**என்னையாளும்வன்கோ ஓரைந்திவைபெய்துஇராப்பகல்மோதுவித்திட்டு**
**உன்னைநான்அணுகாவகை செய்துபோதிகண்டாய்**
**கன்னலே! அமுதே! கார்முகில்வண்ணனே! கடல்ஞாலங்காக்கின்ற**
**மின்னுநேமியினாய்! வினையேனுடைவேதியனே!**

...னும்.)- ''ஸௌந்தர்யத்தாலேயும் போக்யதையாலேயும் நிரவதிகனான என்னை உமக்குத்தந்து உம்முடைய மத்விஸ்லேஷாஸஹிஷ்ணுத்வத்தையும் அறிந்து ஸர்வலோக பரிபாலகனுமாயிருந்துவைத்து, நான் உபமை இந்த்ரியவஸ்யனாக்கி என்னையிழப்பிப்பனோ?'' என்னில்; ''எனக்குநிரவதிகபோக்யபூதாத்மப்ரதனாய், தத்வஜ்ஞனுமாய், ஸர்வலோக பரிபாலகனுமாயிருந்தாயேயாகிலும், உன்னை ஸரணம் புக்க பின்பும் இந்த ப்ரக்ருதியிலே என்னைவைத்தருளுகையாலே, உனக்கு அநந்யார்ஹ

''நலிவானின்னமெண்ணுகின்றாய்'' என்றதுக்கும அநுகுணமாக ஊரவம் - தன்னாலல்லது இத்யாதி, நித்யஸூரிகளை வெறுப்பானென்? என்ன - அவர்கள் இத்யாதி. அவர்கள் முகங்கொடாவிட்டால் இங்கு வருவனோவென்ன த்ரிசங்கு ஆத்யாதி. அவன் இவரயிரிக்கைக்காகக் காட்டின ஸேஷித்வத்தை ''நலிவானினனமெண்ணுகின்றாய்'' என்றதக்குஅநுகுணமாக யோஜிக்கிறாரெனகிறார்-தான்நினைத்த போது இத்யாதி வாக்யத்வயத்தாலே. இந்த ந்யாயம் - ''அமுதே'' என்று தொடங்கி மேலே சொல்லுகிற பதங்களுக்கும் ஒக்கும். ப்ராங்ந்யாயமாவது - கீழே * மயர்வறமதிநலமருளித் தன்னாலல்லது செல்லாமையை யுண்டாக்கினபடி. ஃபலிக்குமென்றது - இதுக்குமேலும் அநிஷ்டநிவ்ருத்திபூர்வகமாக இஷ்டப்ராப்தியும்பண்ணித் தருமென்றபடி. கீழ்வாக்யவ்வரணம் - இதுக்குமுன்பு இத்யாதி. அறையர் நிர்வாஹத்திலே அந்வயங்காட்டுகிறார் - என்னையாள்வானே இத்யாதி. மற்றைப்பக்ஷத்துக்கு அடைவே அந்வயம்.

சேஷமான என்னை அதிப்ரபலங்களான இந்த்ரியங்களுக்கு சேஷமாக்கி இவற்றையிட்டு வாயிப்பித்து உன்திருவடிகளைச்சேராதபடி பண்ணிப்போகிறாயென்று பயப்படா நின்றேன்'' என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், ''ஸர்வலனான என்னை இந்த்ரியங்களாலே இரவும் பகலும் நலிவித்து உன்னை நான் கிட்டாதபடிபண்ணி இந்நோவை அறிவிக்கவொண்ணாத படி நீயும் போதி'' என்று இன்னாதாகிறார்.

[என்னையென்று] தொடங்கி - எனக்குவிதேயமாகை தவிர்ந்து, என்னை தன் கருத்திலே நடத்தாநின்றுள்ள ப்ரபலமான ஐந்து இந்த்ரியங்களையும் என்பக்கலிலே விட்டு. [கன்னலே]யென்று தொடங்கி - நிரதிசயபோக்யனுமாய் அத்யுதாரனுமாய் ஜகத்தையெல்லாம் ரக்ஷியாநிற்பதும் செய்து அதுக்கு உறுப்பாக விளங்காநின்றுள்ள திருவாழியையுடையையுமாய் வைத்து என் பாபத்தாலே எனக்குக் காணவொண்ணாதே வேதைகஸமதிகம்யனாயிருக்கிறவனே!

ப.—அநந்தரம், ஸர்வப்ரகாரபோக்யனான நீ, ப்ரபலமான இந்த்ரியங்களாலே அநவரதம் நலிவித்தகலநில்லாநின்றாய்'' என்கிறார்.

கன்னலே - ஸர்வதோமுகமான போக்யதையையுடையையாய், அமுதே - அவ்வளவேயன்றியே ஸத்தாதாரகஸாரஸ்யவானாய், (இப்படி போக்யமாமளவில்), கார் முகில் வண்ணனே - ஸர்வோபகாரகமான காளமேகம்போலே வரையாமலுபகரிக்கும் ஸ்வபாவத்தையுடையையாய், (உபகரிக்குமிடத்தில்), கடல் - கடல்சூழ்ந்த, ஞாலம் - பூமியையடங்க, மின்னு — உஜ்ஜ்வலமான, நேமியினாய் - திருவாழியையுடையையாய், காக்கின்ற - காத்தூட்டுமவனாய், வினையேனுடை - உன்னைக்கிட்டுகைக்கு விரோதியான பாபத்தையுடையேனான எனக்குக்கேட்டுவிடும்படி, வேதியனே - வேதைக வேத்யனான வனே! என்னை - (உனக்குக்கிங்கரனான) என்னை, ஆளும் - தங்களுக்கு நிதேசகாரியாம் படி ஆண்டுகொள்ளக்கடவனவாய், (எனக்குக் கரணதயாபாரதந்த்ரமாய் வைத்து என் னளவில்), வன் - ப்ரபலமான, கோ - ஸ்வாதந்த்ர்யத்தையுடைத்தாய், ஓர் - ஒன்றுக் கொன்று ஒவ்வாதபடி அத்விதீயமான, இவை - இந்த, ஐந்து - ஐந்திந்த்ரியங்களையும், பெய்து-எனக்குவாயுகத்வேந நியோகித்துவைத்து, இராப்பகல்-அஹோராத்ரவிபாக மற, மோதுவித்திட்டு - பிடிப்பித்து, உன்னை - ப்ராப்தனாய் போக்யபூதனானஉன்னை, நான் - (உன்வாசியறிந்த) நான், அணுகாவகை - கிட்டாதபடி, செய்து-பண்ணி, போதி கண்டாய் - முகந்தோற்றாதபடி போகாநின்றாய்.

இ.—இரண்டாம்பாட்டில், ''ஸர்வலனான என்னை இந்த்ரியங்களாலே ஸர்வ காலமும் நலிவித்து, இந்நோவை அறிவிக்கவொண்ணாதபடி போதி'' என்கிறார்.

[என்னையாளும்] - எனக்கு விதேயமாகை முறையாயிருக்க, அது தவிர்ந்து தன்கருத்திலே என்னைப் பண்ணிக்கொள்ளும். நீ அடிமைகொள்ளுகையொழிய, இவை பணிகொள்ளும்படியாவதே. [வன்கோ] - நீ நிர்வாஹகனாகை தவிர்ந்து, மிடுக்காலே இவை நிர்வாஹகமாவதே. [ஓரைந்து] - அத்விதீயமான ஐந்து. [இவைபெய்து] - இவற்றை உண்டாக்கி என்பக்கலிலே விட்டு. [இராப்பகல் மோதுவித்திட்டு] - காலத் துக்கு விநியோகம் இதுவேயாவதே. அழகிதாக ''ஒழிவில் காலம்'' என்று ப்ரார்த்தித் தேன். [உன்னை] - ப்ராப்தனாய் போக்யபூதனான உன்னை. [நான்] - ஜ்ஞாநம்

பிறந்த நான். [அணுகாவகைசெய்து]-கிட்டாதபடிபண்ணி. [போதிகிடாய்] - என்நோயை அறிவிக்கவொண்ணாதபடியிறே கடக்கப்போகிறது. [கன்னலே] இத்யாதி - அகலப்போனால் ஆற்றவொண்ணாதஹோஸ்ருதை இருக்கிறபடி ஸர்வதோமுகமான ஸாரஸ்யம்; அவ்வளவன்றிக்கே, சாவாமல்காக்கும்மருந்து; அந்தஹோஸ்ருதைதன்பேறாகத் தருமவன். வரையாதே எல்லாவற்றையும் நோக்குகை; நோக்கும்போது ஸங்கல்பத்தாலே அன்றியே, விளங்கா நின்றுள்ள திருவாழியாலே ரக்ஷிக்கை. [வினையேனுடை வேதியனே] - என் பாபத்தாலே கண்ணுக்கு அவிஷயமாய், வேதைகஸமதிகம்யனானவனே! இந்த ஹோக்யதையும் ரக்ஷகத்வமும் ஓலைப்புறத்திலே கேட்கும்படியாவதே!!

ஈடு.—இரண்டாம்பாட்டு. "துர்ப்பலனானஎன்னை இந்திரியங்களாலே ஸர்வகாலமும் நலிவித்து, இந்நோவை யறிவிக்கவொண்ணாதபடி போதி" என்கிறார்.

[என்னையாளும்வன்கோ] - ஸத்தைநோக்குவாய் நீயாய், பணிகோள்வார் வேறேசிலராவதே. அத்தலையித்தலையாயிற்றுக்கிடாய். ஈஶ்வரனேன்பான்ஒருவனுண்டாய், அவனுக்குஆத்மாஶேஷமாய், அவனுக்கு மநஸ்ஸு அந்தரங்கபரிகரமாய், அதுக்குஇந்த்ரியங்களும் ஶேஷமாகைதவிர்ந்து பள்ளிகள் கலகம்போலே என்னை இந்த்ரியங்களாளும்படியாவதே!! [வன்கோ] - ப்ரபலருமாய் வந்தேறிகளானவர்களுக்குப் பணிசெய்து வெறுத்தேன். (வன்மை - பலாத்காரம்.) "கோவா யைவரேன் மெய்குடியேறிக் கூறைசோறிவைதாவென்று குமைத்துப்போகார்." ஒரு நீர்மையுடையவன் ஶேஷியாகைதவிருவதே! (வன்மை- காடிந்யம்.) ஸமஸ்த கல்யாணகுணாத்மகன் ஶேஷியாகைதவிர்ந்து, நிர்க்குணர் ஶேஷிகளாயிற்றுகிடீர். [ஓரைந்து] - குணப்ரதாநபாவத்தாலன்றிக்கே, ஸமப்ரதாநமாய் நலிகிறபடி. கடவானொருவனாய், பணிசெய்வதும்அவனுக்கான நிலைகுலைந்தது. "பதிம் விஶ்வஸ்ய" (பதிம்விஶ்வஸ்ய) என்றும் "அனைத்துலகுமுடையஅரவிந்தலோசநன்" என்றும் ஒருவன் ஶேஷியாகைதவிர்ந்ததிறே. [ஐந்து] - ஏகஶேஷமாகை தவிர்ந்ததுகிடீர். [இவை

---

இரண்டாம்பாட்டு.—என்னையாளும் இத்யாதி. "போதிகண்டாய்" என்னுமளவுங்கடாக்ஷித்தவதாரிகை - துர்ப்பலனான இத்யாதி. துர்ப்பலனான என்னை என்றது - "போதுவித்து" என்றத்தாலே விவக்ஷிதமென்று விவக்ஷிதம்.

"ஆளும்" என்றதுக்கு பாவம் - ஸத்தை இத்யாதி. அத்தலை இத்தலையாகையாவது - ஈஶ்வரனுடைய தவிர்ந்து இந்த்ரியங்களாளுகை. ஏதத்விவரணம் - ஈஶ்வரன் இத்யாதி. 'கலஹத்தில் - பள்ளிகள்போலே' என்றந்வயிப்பது. அதாவது - ஒருவனுக்கு ஊஸனான பள்ளியே, அராஜகமானால் ஸ்வதந்த்ரனாய் ஸ்வாமியை நலியுமாபோலே என்றபடி. "வன்கோ" என்றது - வலியாலே கோவென்றாய், ஆமந்த்ரகமென்கிறார் - ப்ரபலருமாய் இத்யாதி. "வந்தேறி" என்றதுக்குப்ரமாணம்-கோவாய் இத்யாதி. நீஶேஷியாமது தவிர்ந்துஇவை யெனக்கு நியாமகமாய்க்கொண்டுவந்து என்சரீரத்திலே குடிபுகுந்து, நான் கூறையும் சோறுமாக நினைத்திருக்குமவையொழிய வேறே சிலவற்றைத்தா என்று என்னை நெருக்கி, க்ஷணமும் கால்வாங்குகிறி லரித்யர்த்தஃ. திருமொழி ஏழாம்பத்து ஏழாந்திருமொழி ஒன்பதாம்பாட்டு. * வன்மைக்கு - பலாத்காரமாகக் கீழருளிச்செய்து, மநஃகாடிந்யமாக அர்த்தாந்தரம்-ஒருநீர்மை இத்யாதி. ஏதத்விவரணம் - ஸமஸ்த இத்யாதி. குணப்ரதாநபாவமாவது - அப்ரதாநப்ரதாநபாவம். "[illegible]" என்றிறே நிகண்டு. 'ஆளும் - ஐவர்" என்றதுக்குஹலிதம் - கடவான் இத்யாதி. ஏதத்விவரணம் - பதிம்விஶ்வஸ்ய இத்யாதி. ஏகசேஷமாகை தவிர்ந்தது கிடீரென்றது - அப்ராப்தமாகிலும் ஏகஶேஷமாகலாமிறே, அதுவும் தவிர்ந்ததென்றபடி. பெய்தல் - இடுதலாய். இவற்றையிட்டென்றபடி. அவற்றை அசேதநமாகச் சொல்லி, நலிகிற

பெய்து]-அவற்றின்பக்கல் குறையுண்டோ, அவற்றையிட்டு நலிவிக்கிறாய் நீயல்லையோ? ஸ்ரீப்ரஹ்லாதனைப் பாம்புகளைக்கூடவிட்டுக்கட்டி நலிந்தாற்போலேயிருக்கிறதுகாணும், இவற்றையுண்டாக்கி என்பக்கலிலே நீ விட்டது. [இராப்பகல் மோதுவித்திட்டு] - காலத்துக்கு விநியோகம் இதுவேயாவதே! "ஒழிவில்காலமெல்லாம்" என்று அழகிதாக அடிமைசெய்யவாசைப்பட்டேன். "அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவதென்று கொலோ"என்று ப்ரார்த்தித்த எனக்கு, இவற்றினுடனே கூடும்படியாவதே. [உன்னை நான்]-பெற்றல்லது தரிக்கவொண்ணாதபடியாயிருக்கிற உன்னை, கிட்டியல்லது ஜீவிக்க மாட்டாதபடியான நான்: நிரதிசயபோக்யனான உன்னை, புஜித்தல்லது தரிக்கமாட்டாத நான். [அணுகாவகைசெய்து] - கிட்டாதபடிபண்ணி. [போதிகண்டாய்] - உன்னை யநுபவிக்கவேணுமென்று போந்த பிராட்டியை மாயமானைக்காட்டிப்பிரித்து, ஏகாக்ஷி ஏககர்ணிகைகள் கையிலே காட்டிக்கொடுத்து உன்னைக்கொண்டகன்றாற்போலே கிடாய் இதுவும்! [கன்னலேயமுதே] - ஒருவகையால்வந்த போக்யதையாகில் நான் ஆறியி ரேனோ? "ஸர்வகந்தஸ்ஸர்வரஸः" (ஸர்வகந்தஸ்ஸர்வரஸஃ) என்கிறபடியே ஸர்வ விதபோக்யமுமாய், *அளவிறந்து,*கொள்ளமாளாஇன்பவெள்ளமாயிராநின்றதே.கன்ன லென்று - கருப்புக்கட்டி. அமுதென்று - போக்யமுமாய், சாவாமல் காக்குமதுவுமா யிருக்கை. [கார்முகில்வண்ணனே] - அந்தபோக்யதையைத் தன்பேறாகத்தருமவன். பரமோதாரனென்றபடி. அன்றிக்கே, கார்காலத்தில் மேகம்போலே ஊர்ஜிதமான வடிவை யுடையவனே! என்னுதல். [கடல்ஞாலம்] இத்யாதி - "போதிகண்டாய்" என்று ஆர் காற்கட்ட நீ அன்றுநோக்கிற்று. "இந்த்ரியங்களாலே நோவுபட்டோம்"என்று இவர்கள் அபேக்ஷித்தபோதோ நீ நோக்கிற்று! நீ போக்யன் என்றறியாதாரையுங்கூட நோக்குமவனல்லையோ ? கடலோடுகூடின பூமியைக் கண்ணிலேவெண்ணெயிட்டுக் கொண்டு நோக்கும் ஸ்வபாவ னல்லையோ? [காக்கின்ற]-ரக்ஷணந்தான் காதாசித்கமோ உனக்கு? [மின்னுநேமியனாய்]-இயற்றியுண்டேனென்ற ஸங்கல்பத்தாலே நோக்குமவனோ? ஆசிலேவைத்தகையும் நீயுமாயன்றோ நோக்குவது. "அருளார் திருச்சக்கரத்தாலகல்விசும்

---

வன் ஈஸ்வரனுக்குச்சொல்லுகிறதுக்கு பாவம் - அவற்றின்பக்கல் இத்யாதிவாக்யத்வயம். இதுக்கு த்ருஷ்டாந்தம் - ஸ்ரீப்ரஹ்லாத இத்யாதி. "இராப்பகல்" என்றதுக்கு பாவம் - காலத்துக்கு இத் யாதி. பலிதம் - ஒழிவில் இத்யாதி. "இவைபெய்து" என்றத்தைக் கடாக்ஷித்து பாவம் - அடியார் கள் இத்யாதி. விவரணம் - நிரதிசய இத்யாதி. "போதி" - போனாயென்றபடி. "நானுன்னைக்கிட் டாதபடி பண்ணிக்கடக்கப்போனாய்" என்னுமத்தை த்ருஷ்டாந்தபூர்வகமாக அருளிச்செய்கிறார் - உன்னையநுபவிக்க இத்யாதி. "கன்னலே" என்றது - ஸர்வரஸத்துக்கும் உபலக்ஷணமாக விவ க்ஷித்து பாவம் - ஒருவகையால் இத்யாதிவாக்யத்வயம். 'அளவிறந்து' என்றதும், கொள்ளமாளா என்றதும்-அர்த்தாத் ஸித்தம். "கன்னலே, அமுதே" என்கிற அடைவுக்கு பாவம் - கன்னலேன்று இத்யாதி. முந்தினதுக்கு; "வண்ணம்" என்று - ஸ்வபாவமாய், ஔதார்யத்தைச்சொல்லுகிறது. இத்தால்பலித்தபாவம்-அந்தபோக்யதையை இத்யாதி."கடல்ஞாலம்" என்றஅசேதநஸமாதிக்குபாவம்; போதிகண்டாய் இத்யாதி. காற்கட்ட - ப்ரார்த்திக்க. விவரணம் - இந்த்ரியங்களாலே இத்யாதி. "கன்னலேயமுதே" என்றவநந்தரம் "கடல்ஞாலம்" என்றதுக்குபாவம் - நீபோக்யன் இத்யாதி. ஸப்தார்த்தம் - கடலோடு இத்யாதி. வர்த்தமாநார்த்தம் - ரக்ஷணந்தான் இத்யாதி. "காக்கின்ற" என்றவநந்தரம் "நேமியினாய்"என்றதுக்கு பாவம் - இயற்றி இத்யாதி. இயற்றியென்று - யத்நமாய், ஸாமர்த்யமென்றபடி. ஆசிலே- ஆயுதப்பிடியிலே. ஆயுதங்கொண்டு ஜகத்தைரக்ஷிக்குமதுக்குப்ர மாணம் - திருச்சக்கரத்தால் இத்யாதி. க்ருபையால் பூர்ணனான திருவாழியாழ்வானாலே, பரந்தவிசும்

பும்நிலனுமிருளார்வினைகெடச்செங்கோல் நடாவுதிர்'' என்னக்கடவதிறே. உருவினவாள் உறையிலிடாதேயன்றேநோக்குவது?விளங்காநின்றுள்ளதிருவாழி. [வினையேனுடைவேதியனே] - ''தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்'' (தேவாநாம் தாநவாநாஞ்சஸாமாந்யமதிதைவதம்) என்றும், ''போதுநின்றபொன்னங்கழல்'' என்றுஞ் சொல்லுகிறபடியே ஊர்ப்பொதுவாயிருக்கிற நீ,என்னளவிலேவந்தவாறே வேறைகஸமயிகம்யனுனாய். இன்றிருந்து ஓலைப்புறத்திலே கேட்கும்படியான பாபத்தைப்பண்ணுவதே நான்! (உ)

## மூன்றும் பாட்டு

வேதியாநிற்கும்ஐவரால் வினையேனைமோதுவித்து உன்திருவடிச்
சாதியாவகைநீ தடுத்துஎன்பெறுதி! அந்தோ!
ஆதியாகிஅகலிடம்படைத்து உண்டுமிழ்ந்துகடந்திடந்திட்ட
சோதிநீள்முடியாய்! தொண்டனேன்மதுசூதனனே!

ஆ.—(வேதியாநிற்கும்.) - உம்மை நான் இந்தப்ரக்ருதியிலே வைத்ததுஒரு ப்ரயோஜநார்த்தமாகவாதலால் இந்தப்ரக்ருதிஸம்பந்தத்தை நிவர்த்திப்பிக்கக்கடவதென்? என்னில்; ''நிகிலஜகந்நிர்மாணநிரஸநோத்கிரணக்ரமணோத்தாரணாதிலீலனாய் ஸர்வேஶ்வரனாய் அவாப்தஸமஸ்தகாமனாய் * குணார்த்தாஸ்பதமபாகத மதுநிஷ்டநிவாரணைகப்ரயோஜநனுமாயிருந்தஉனக்கு, ப்ரக்ருதியிலே என்னை வைத்து, அநவரத பாதகத்வைக ஸ்வபாவமான இந்த்ரியங்களாலும் பாதிப்பித்து உன்திருவடிகளைச் சேராதபடி தடுத்தால் என்னப்ரயோஜநமுண்டு?'' என்கிறார்.

ஒ.—மூன்றும்பாட்டில், ''ஜகத்துக்கு நீயே ஸர்வவிதரக்ஷகனாய்வைத்து, என்னை உன்திருவடிகளிலேவந்து அணுகவொண்ணாதபடி இந்த்ரியங்களையிட்டு நிரந்தரமாக நலிவித்து உனக்கு என்னப்ரயோஜநம் உண்டு?''என்கிறார்.

[வேதியாநிற்கும்] என்று தொடங்கி - இடைவிடாதே நலியாநின்றுள்ள ஐந்து இந்த்ரியங்களாலும் திருவடிகளைப்பெறாதபடி தடுத்து. [ஆதி] என்று தொடங்கி - ஸர்வைஶ்வர்யஸூசகமாய் நிரவதிகதேஜஸ்ஸான திருவபிஷேகம் முதலான திவ்யாபரணங்களையும்உடையையாய்இருந்துவைத்து ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரங்களைப் பண்ணினவனே! [தொண்டனேன் மதுசூதனனே] - பேறாகிற

---

பையும் பூமியையும் மோஹாந்தகாரஸஹசரிதமான விபரீதவ்ருத்தங்கள் போம்படி ஸங்கல்பரூபமான ஆஜ்ஞையைநடத்தாநிற்புதிர் இத்யர்த்தஃ. ''மின்னு'' என்றதுக்குபாவம் - உருவின இத்யாதி. ''கடல் ஞாலங் காக்கின்ற'' என்றத்தைக்கடாக்ஷித்து, ''வினையேனுடை வேதியனே'' என்றதுக்குபாவம் - தேவாநாம் இத்யாதி. ''வினையேன்''என்றதுக்கு பாவம் - இன்றிருந்து இத்யாதி. மூன்றுந்திருவந்தாதி,''அதுநன்றிதுதீது'' இத்யாதி. ''பொதுநின்றபொன்னங்கழல்'' என்றதுக்கர்த்தம் - ஸர்வாஶ்ரித ஸாதாரணமாய் ஸ்ப்ருஹணீயமாய் அழகிதாயிருந்துள்ள திருவடிகளை யென்றபடி. ''கன்னலே'' என்று தொடங்கி, ''வேதியனே-போதிகண்டாய்'' என்றந்வயம், (உ)

அஸுரனைப் போக்கினாற்போலே திருவடிகளில் ருசிபிறக்கைக்கு விரோயிகளான ஹேயனான என்னுடைய பாபங்களையெல்லாம் போக்கினவனே!

ப.—அநந்தரம், "ஸர்வப்ரகாரரக்ஷணவ்யாபாரத்தையுடைய நீ, இந்த்ரியங்களாலே நலிந்து உன் திருவடிகளைக் கிட்டாதபடிபண்ணினால் உனக்கு என்னலாபமுண்டு?" என்கிறார்.

ஆதி - காரணபூதன், ஆகி - ஆய்க்கொண்டு, அகல் - அதிவிஸ்தீர்ணமான, இடம் - ஜகத்தை, படைத்து - ஸ்ருஷ்டித்து, உண்டு - (ப்ரளயாபத்திலே) வயிற்றிலே வைத்துநோக்கி, உமிழ்ந்து-(அநந்தரம்)உமிழ்ந்து, கடந்து-(அந்யாஸிமாநமறும்படி) அளந்து இடந்திட்ட-(நைமித்திகப்ரளயத்திலே வராஹரூபியாய்) இடந்து, (அத்தாலே), சோதி - (ஸர்வஸ்வாமித்வஸூசகமான) ஔஜ்ஜ்வல்யத்தையும், நீள் - உத்துங்கதையையுமுடைத்தான, முடியாய் - திருவபிஷேகத்தை யுடையையாய், தொண்டனேன் - உன்னை யநுபவிக்கையிலே சபலனான எனக்கு, மதுசூதனனே - (ப்ரதிபந்தகத்தை யழிக்குமிடத்தில்) மதுவையழித்தாற்போலே அழிக்கவல்லனானவனே! வேதியாநிற்கும் - ஊடுருவ நலியாநிற்கக்கடவராயிருக்கிற, ஐவரால் - ஐந்துஇந்த்ரியங்களாலே, வினையேனை- (உன்னுடைய ரக்ஷணத்துக்கு விஷயமாகாதபடி பண்ணும்) பாபத்தையுடையேனான என்னை, மோதுவித்து-பீடிப்பித்து, உன்-(ஸர்வரக்ஷகனான) உன், திருவடி - திருவடியை, சாதியாவகை - ப்ராபியாதபடி, நீ—, தடுத்து - நிரோதித்து, என்-என்ன ப்ரயோஜநம், பெறுதி - பெறுவுதி? அந்தோ - ஐயோ! "ரக்ஷகனானவன் பாதகனாவதே" என்று கருத்து.

இ.—மூன்றும்பாட்டில், "ஜகத்துக்கு ஸர்வவிதரக்ஷகனாய்வைத்து, என்னை உன் திருவடிகளிற்கிட்டாதபடி இந்த்ரியங்களாலே நலிவித்தால் உனக்கு என்ன ப்ரயோஜநம் உண்டு" என்கிறார்.

[வேதியாநிற்குமைவரால்] - இடைவிடாதே நலியாநிற்கும் ஐந்து இந்த்ரியங்களாலே. "இராப்பகல் என்று-நித்யாக்நிஹோத்ரம்போலன்றிக்கே நிரந்தரமாக நலிகை." அழகிதாக "உடலைப் மன்னி" என்று ப்ரார்த்தித்தேன். [வினையேனை மோதுவித்து]- பாபத்தைப்பண்ணின என்னை மிகவும் நலிவித்து. "க்ரியதாமிதி மாம் வத" என்று நீஏவப் பணிசெய்கைதவிர்ந்து, இந்த்ரியங்கள் ஏவல்செய்யும்படி பாபத்தைப்பண்ணினேன். [உன் திருவடிச் சாதியாவகை நீதடுத்து] - வருத்த திருவடிகளைக் கிட்டாதபடி நீ தடுத்து; அவஸரப்ரதீக்ஷனாயிருக்கிறவனை ஸாதுகரைச் சொல்லுமாபோலே சொல்லுகிறாரிறே. தாம் ஸாதநாநுஷ்டானம் பண்ணநிற்க அவன் விலக்கினாற்போலே சொல்லுகிறார். [என்பெறுதி] - பெருமாள் ஸத்யஸங்கல்பராகைக்குத் தம் முடியை இசைந்த இளையபெருமாளைப்போலே, உனக்கு ப்ரயோஜநமுண்டாகில் என்னிழவையும் பொறுப்பனிறே. [அந்தோ] - ரக்ஷணமே ப்ரயோஜநமாயிருக்கிறவன் நிருபம்ஸரைப்போலே யாவதே! [ஆதிபாகி இத்யாதி]-ஆயிராஜ்யஸூசகமான திருவபிஷேகத்தையுடையையாய் நித்யவிபூதியிலே பேரோலக்கமாக இருந்துவைத்து, ஜகத்காரணபூதனாய், அழிந்துகிடக்கிற ஜகத்தை ஸ்ருஷ்டித்து, ப்ரளயாபத்திலே வயிற்றிலேவைத்து நோக்கி, உள்ளே இருந்து தளராமே உமிழ்ந்து, மஹாபலி அபஹரிக்க எல்லைநடந்து மீட்டு, நைமித்திகப்ர[illegible]லே மஹாவராஹமாய் எடுத்து, இப்படி ஸர்வவிதரக்ஷணமும் பண்ணினவனே! [தொண்டனேன் மதுசூதனனே] - கண்டதெல்லாவற்றிலும் சபலனான

*என்னுடைய இந்த்ரியவஶ்யதையைத் தவிர்த்தவனே! மய॒॒வாகிற அஸுரனைபம்பாக் கினாற்போலே, உன்திருவடிகளில் ருசிக்கு விரோயியான இந்த்ரியவஶ்யதையைத் [illegible] னே! " [illegible] பொல்லாது" என்று அஞ்சிக் கூப்பிடும்படி பண்ணினவன் என்கை.*

ஈடு.—மூன்றாம்பாட்டு. "ஜகத்துக்கு ஸர்வவிதரக்ஷகனாய்வைத்து, என்னை உன்திருவடிகளிலே கிட்டாதபடி இந்த்ரியங்களாலே நலிவித்தால் உனக்கு என்னப்ர யோஜநம்உண்டு?" என்கிறார்.

[வேதியாநிற்கும்] - அழகிதாக எல்லாஅவஸ்த்தைகளிலும் அடிமைசெய்ய ஆசைப்பட்டேன். "உடனாய்மன்னி" என்று பாரித்ததெல்லாம் இவற்றுக்குப் பணி செய்கைக் காவதே! [வேதியாநிற்கும்] - வேதனையே பண்ணாநிற்கும். "**யாவஜ்ஜீவ மக்நிஹோத்ரம் ஜுஹுயாத்**" (யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம் ஜுஹுயாத்) என்றால் - "**ஸாயம்ப்ராத:**" (ஸாயம்ப்ராத:) என்றுஒருகாலங்களிலே ஓதுக்காநின்றதிறே; அங்ஙனன்றிக்கே, ஸர்வாவஸ்த்தைகளிலும் அடிமைசெய்ய ஆசைப்பட்டுச் சொன்னதெல்லாம் இவற்றின்பக்கலிலே யானபடி. [வினையேனை] - ஹோமத்துக்குப் பாரித்ததெல்லாம் க்லேஶப்படுகைக்கு உடலாவதே. [உன்திருவடிச்சாதியாவகை நீதடுத்து] - என்னஉறவின் கனந்தான்! தம்முடைய குற்றத்துக்கும் அவனைவெறுக்கும்படிகாணும் ஸம்பந்த மிருக்கிறபடி. ஸாதநாநுஷ்ட்டாநம்பண்ணி ஃபலத்துக்கு விரோதம் பண்ணுவாரைச் சொல்லுமாபோலே சொன்னபடி பாரீர். உன் திருவடிகளை ஸாதியாதபடி தகைந்து. [என் பேறுதி] - என் ஸ்வரூபமழியு மித்தனையோ வேண்டுவேது ? நான் படுகிற வ்யஸநத் தால் உனக்குஒருப்ரயோஜநமுண்டாகில் எனக்கு அதுவே யமையும்;உனக்காக இருக்கு மதிறே எனக்குவேண்டுவேது. "**ஜலாந்மத்ஸ்யாவிவோத்ருதௌ**" (ஜலாந்மத்ஸ்யாவி வோத்த்ருதௌ) என்கிற இளையபெருமாள், துர்வாஸா வர, "பெருமாளுக்குஓர்அவத்யம் வரவொண்ணாது" என்று தம்நோவுபாராதே விடைகொண்டாரிறே. [என்பேறுதி] -

---

*மூன்றாம்பாட்டு - வேதியா இத்யாதி. "படைத்துண்டுமிழ்ந்து" இத்யாதியைக்கடாக்ஷித்து- ஜகத்துக்கு இத்யாதி. "உன்திருவடிச்சாதியாவகை" இத்யாதியைக்கடாக்ஷித்து - என்னையுன்திருவடி களிலே இத்யாதி.*

*'இடைவிடாதே நலியாநிற்கும் ஐந்திந்த்ரியங்களாலே' என்று ஶப்தார்த்தம். "வேதியா நிற்கும்" என்கிற வர்த்தமாநத்தைக் கடாக்ஷித்து ஹார்த்தஹாவம் - அழகிதாக இத்யாதி.விவரணம் - உடனாய் இத்யாதி.'கீழிற்பாட்டிலே "இராப்பகல்" என்றுவைத்து, "வேதியாநிற்கும்" என்று - இங்கேவர்த்தமாநமாகச்சொன்னால் புநருக்தியன்றோ? என்ன - யாவஜ்ஜீவம் இத்யாதி. அதாவது - ஸர்வாவஸ்த்தைகளிலுமென்றபடி. வ்யாக்யாதாவின்ஈடுபாடு - என்னஉறவின் இத்யாதி. விவரணம்- தம்முடைய இத்யாதி. ஸம்பந்தத்தையநுஸந்தித்து இவர் வெறுக்கும்படிஎன்னென்ன - ஸாதநாநுஷ்ட் டாநம் இத்யாதி. 'சொன்னபடிபாரீர்'-ஸம்பந்தத்தாலேயென்றபடி. "சாதியாவகை"என்றது-ஸாயியா வகையென்றாய், கிட்டாவகை யென்றபடி. "என்பெறுதி" என்கிற ஸ்வரத்தாலே ஸித்தித்தவர்த் தம் - என்ஸ்வரூபம் இத்யாதி. அதாவது - என்னை நீ தகைந்துஎன்னப்ரயோஜநம் பெறுகிறாய்?என் ஸ்வரூபமழியுமதொழிய வேறொரு ப்ரயோஜநங் காணேனென்றபடி. இத்தால் - ஒருப்ரயோஜநம் உண்டாகில் ஆறியிருப்பரோ?என்ன - நான்படுகிற இத்யாதி. ப்ரயோஜநமுண்டானால் தந்தாமை யழி யமாறக்கூடுமோவென்ன - உனக்காக இத்யாதி. சேஷியினதிசயார்த்தமாகத் தந்தாமை யழியமாறினு [illegible]வென்ன - ஜலாந் இத்யாதி. !ஸ்வப்ரயோஜநார்த்தமாக புாது:கப்பாராதே அவன் பொருட்டு*

ஸ்ரீபரதாழ்வானை நீ ஸத்யப்ரதிஜ்ஞனுகைக்காகப் பிரித்துவைத்தாய்; என்னிருப்புக்கு உனக்கென்ன ப்ரயோஜநமுண்டு? [அந்தோ] - ஸ்வப்ரயோஜநமின்றியிலே பரார்த்தமே ப்ரயோஜநமாக நலியும்படி பிறந்தேனே. ரக்ஷணமே ப்ரயோஜநமாக இருக்கிறவன், நிருபாதிகஸம்பந்தரைப்போலேயாவதே! [ஆதியித்யாதி] - உனக்கோரு ப்ரயோஜநமின்றிக்கே யிருக்கச்செய்தேயும் ரக்ஷிக்குமவனல்லையோ நீ! ஆனபின்பு உனக்குஇதுபோருமோ? †(ஆதிராஜ்யஸூசகமான) திருவபிஷேகந் தோடக்கமான திவ்யாபரணங்களை யரித்துக்கோண்டு நித்யஸூரிகள் நடுவேயிருக்கக்கடவ நீ, ஜகத்காரணபூதனுய்ப் பரப்பையுடைத்தான பூமியை ஸ்ருஷ்டித்து, பின்னை ப்ரளயாபத்து வர வயிற்றிலே யெடுத்துவைத்து, அநந்தரம் வெளிநாடுகாணப் புறப்படவிட்டு, பின்னை மஹாபலி அபஹரிக்க எல்லை நடந்து மீட்டுக்கோண்டு, பின்னை நைமித்திகப்ரளயத்திலே மஹாவராஹமா யெடுத்துக்கோண்டேறி, இப்படிகளாலே ஸர்வரக்ஷணங்களையும் பண்ணுமவனல்லையோ? [தோண்டனேன் இத்யாதி] - இவன் ரக்ஷகன் என்னுமிடத்துக்கு முன்னே யோன்று தேடிச்சோல்லவேணுமோ? மதுவைப்போக்கினாற்போலே என் இந்த்ரிய வஶ்யதையை இன்றிருந்து போக்கினவனன்றோ? (தோண்டன் - இதரவிஷயசபலன்.) தன்படிகளைக் காட்டி யெனக்குப் புறம்புண்டான வாஸனையைப்போக்கி, இன்று கைக்கேட்டாதிருக்கிற இதுவேயிறே குறை. (௩)

## நாலாம் பாட்டு.

சூதுநான் அறியாவகைச்சுழற்றிஓரைவரைக்காட்டிஉன்னடிப்
போதுநான்அணுகாவகைசெய்துபோதிகண்டாய்
யாதும்யாவருமின்றிநின்னகம்பாலோடுக்கிஓராலினிளிலை
மீதுசேர்குழவி!வினையேன்வினைதீர்மருந்தே.

*ஆ.—(சூது)-"இந்த்ரியக்ருதமான என்னுடைய வாஸனையைப் போக்கவல்லையுமாய் என்னுடைய வாஸனையைப்போக்குகைக்காகக்ல்ப்தஸ்வரூபனுமா யிருந்துவைத்து "உன் திருவடிகளைப் பெறுகைக்கு உபாயம் உன் திருவடிகளே" என்றிருக்கிற இந்த என்னுடைய அறிவுக்கூட அழியும்படி இந்த்ரியங்களைக்காட்டி என்னைக்கலக்கி உன் திருவடிகளைச் சேராதபடி பண்ணிப்போகவாகாதே புகுகிறது" என்கிறார்.*

ஸ்ரீபரதாழ்வானை இத்யாதி. "என்பெறாதி" என்றதைக் கடாக்ஷித்து, "அந்தோ" என்றதுக்கு பாவம் - ஸ்வப்ரயோஜநம் இத்யாதி. "ஆதியாகி" இத்யாதி மேலைக்கடாக்ஷித்து, "அந்தோ" என்றதுக்கு பாவாந்தரம் - ரக்ஷணமே இத்யாதி. அரையர் நிர்வாஹத்திலே பாவம்-உனக்கோரு இத்யாதி வாக்யத்வயம். போருமோ-சேருமோ. "சோதிநீண்முடியாய் இருந்துவைத்து - "ஆதியாகி" இத்யாதிக்கு ஸப்தார்த்தம் - திருவபிஷேகம்இத்யாதி. "தொண்டனேன்" - விஷயசபலனென்றபடி. இந்த்ரியவஶ்யதையைப் போக்கினுனகில் "மோதுவித்திட்டு" என்பானென்? என்ன - தன்படிகளை இத்யாதி. 'மதுசூதனனே! தடுத்தென்பெறாதி: அந்தோ!' என்றந்வயம். (௩)

† குண்டலிதம் க்வாசித்கம்.

ஒ.—நாலாம்பாட்டில், "நீயே இவ்வாத்மாவுக்கு நிரதிஶய புருஷார்த்தம் என்னுமிடத்தை நான் அறியாதபடி ஶப்தாதிவிஷயங்களைக்காட்டி என்னை ப்ரமிப்பித்துப் போகாநின்றாய்" என்கிறார். [சூது] - உறுவது. [யாதும்என்று தொடங்கி] - சிறுவயிற்றிலே சேதநாசேதநங்களையடைய வைத்து ஓர் ஆலின் தளிரின்மேலே சிறு பிள்ளையாய்க் கண்வளர்ந்தருளின ஆஶ்சர்யம்போலே எனக்குஉண்டான ஶப்தாதிவிஷய ப்ராவண்யத்தைத் தீர்க்கவல்லவனே!

ப.—அநந்தரம், "அகடிதகடநாஸமர்த்தனாயிருக்கிற நீ, இந்த்ரியங்களாலே என்னெஞ்சைக் கலக்கி, போக்யமான உன்திருவடிகளைக் கிட்டாதபடி பண்ணாநின்றாய்" என்கிறார்.

யாதும் - ஸகலாசேதநங்களையும், யாவரும் - ஸகலசேதநரையும், (அபேக்ஷா நிரபேக்ஷமாக), இன்றி - ஒன்றொழியாமல், நின் - உன், அகம்பால் - திருவயிற்றில், ஒடுக்கி - ஏகதேசத்திலே பொதுங்கும்படிபண்ணி, ஓர் - (இன்னவிடத்திலே முளைத்தெழுந்ததென்று தெரியாத) ஓர், ஆலின் - ஆலினுடைய, நீள்-(முகிழ்விரிந்து) நீளும்படியான, இலை - இலையின், மீது - மேலே, சேர் - ("ப்ரளயாபத்தில் விழுவதோம்" என்றறியாமல்) கண்வளர்ந்தருளுகிற, குழவி - ஶைஶவத்தை யுடையனாய், வினையேன் - பாபமே நிரூபகமான என்னுடைய, வினை - பாபம், தீர் - போக்கும், மருந்தே - மருந்தாகவல்லவனே! ஓர் - அத்விதீயப்ரபலரான, ஐவரை - ஐந்திந்த்ரியங்களை, காட்டி-காட்டி, நான் - (பரமபுருஷார்த்த யோக்யமான ஸ்வரூபத்தையுடைய) நான், சூது - உறுவது, அறியாவகை - அறியாதபடி, சுழற்றி - விஷயங்களிலே ப்ரமிக்கும்படி பண்ணி, உன் - (ஆபத்ஸகனான) உன்னுடைய, அடிப்போது - அதிஶயிதபோக்யமான திருவடித்தாமரையை, நான் - (அநந்யஶரணனான) நான், அணுகாவகை - அணுகாதபடி, செய்து - பண்ணி, போதிகண்டாய் - கண்காணாதபடி கடக்க நில்லாநின்றாய்காண்.

இ.—நாலாம்பாட்டில், "நீயே நிரதிஶயபுருஷார்த்தம் என்னுமிடத்தை அறியாதபடி ஶப்தாதிகளைக்காட்டி ப்ரமிப்பித்துப் போகாநின்றாய்" என்கிறார்.

[சூது நானறியாவகை சுழற்றி] - சூது - உறுவது. "உறுவது இன்னது" என்று நான் அறியாதபடி ப்ரமிப்பித்து; "பகவத்ப்ரவணனாகுமதுவே உறுவது: விஷய ப்ராவண்யம் அநர்த்தஹேது" என்று விவேகிக்கவொண்ணாதபடி மநஸ்ஸைக் கலக்கி. [ஓர் ஐவரைக்காட்டி] - 'ஐவர்' என்று—ஶப்தாதிகள். தனித்தனியே வ்யாபகமான ஶப்தாதிகளைக்காட்டி, உன் திருவடிகளாகிற செவ்விப்பூக்களை நான் கிட்டாதபடிபண்ணி. [போதிகண்டாய்] - "கண்ணோட்டம் பிறக்கும்" என்று கண்ணாற்காண வொண்ணாதபடி உன்னைக் கொண்டுபோகாநிற்றிகிடாய். [யாதும் யாவருமின்றி] - சேதநம் அசேதநம் என்கிற வாசியின்றிக்கே. [நின்னகம்பாலொடுக்கி] - உன் திருவயிற்றிலே சேர்த்து. [ஓராலினீளிலைமீதுசேர் குழவி] - ஓர் ஆலந்தளிரின்மேலே ஸ்தநந்தயமான வடிவைக்கொண்டு கண்வளர்ந்தவனே! [வினையேன் வினைதீர்மருந்தே] - அந்த அகடிதகடநாஸாமர்த்யம்போலேயாயிற்று என்னுடைய இந்த்ரிய வஶ்யதையைத் தவிர்த்தபடி.

ஈடு.—நாலாம்பாட்டு. "நீயே இவ்வாத்மாவுக்கு நிரதிஶயபுருஷார்த்தமென்னுமிடத்தை நான் அறியாதபடி ஶப்தாதிவிஷயங்களைக் காட்டி என்னை ப்ரமிப்பித்துப் போகாநின்றாய்" என்கிறார்.

[சூது இத்யாதி] - சூது - உறுவது. "இவ்வாத்மாவுக்கு விஷயப்ராவண்யம் நாஶஹேது, ஹகவதநுஹவ:உஜ்ஜீவநம்" என்று. நான் அறியாவகை - இது நான்அறியாத படி. [ஓரைவரைக்காட்டி - சுழற்றி] - நான்உறுவதறியாதபடி ஶப்தாதிவிஷயங்களைக் காட்டி, ப்ரமிப்பித்து: உன்மத்தங்காய் தின்னப்பண்ணி. [உன்னடிப்போது நான் அணு காவகைசெய்து] -உன் திருவடிகளாகிற செவ்விப்பூக்களை நான் கிட்டாதபடிபண்ணி. மயிர் கழுவியிருக்கிறவனைச் செவ்விப்பூச்சூடாமல் தடுப்பாரைப்போலே. [போதிகண்டாய்] - கூடநிற்கில் இதெல்லாம் படவல்லேன் கிடீர் ! "கூடநிற்கில் கண்ணோட்டம் பிறக்கும்" என்று கடக்கப் போவாரைப்போலே. 'நீர் சொல்லுகிறவையெல்லாம் நமக்குச் செய்ய வரிது காணும்' என்ன, 'ஓம், நீ அரியவைசெய்யமாட்டாயிறே' என்கிறார்—[யாதும்யாவ ரும்] என்றுதொடங்கி. சேதநாசேதநங்களொன்றும் பிரிகதிர்ப்படாதபடி உன் வயிற்றிலே வைத்து, ஒருபவனாய் முகிழ்விரியாததோர் ஆலந்தளிரின்மேலே, உனக்கு ரக்ஷகர் வேண்டு வதோர் அவஸ்த்தையை ப்ராபித்துக் கண்வளர்ந்தருளுவானொருத்தனல்லையோ: அரியவை செய்யவல்லை என்னுமிடத்துக்கு ஒருபழங்கதை சொல்லவேணுமோ? [வினையேன்வினை தீர்மருந்தே] - பாபமே நிருபகமான என்னுடைய பாபம்போக்கும் மருந்தாகவல்லவனே! என்னுடைய ஶப்தாதிவிஷயப்ராவண்யத்தைப் போக்கி என்னை இப்படித் துடிப்பித்தவ னல்லையோ! (ச)

## ஐந்தாம் பாட்டு.

தீர்மருந்தின்றிஐந்துநோயடுஞ் செக்கிலிட்டுத் திரிக்குமைவரை
நேர்மருங்குடைத்தாவடைத்துநெகிழ்ப்பானொக்கின்றாய்
ஆர்மருந்தினியாகுவார்! அடலாழியேந்தியசுரர்வன்குலம்
வேர்மருங்கறுத்தாய்!விண்ணுளார்பெருமானேயோ!

*ஆ.—(தீர்மருந்தின்றி.) - "ஆஶ்ரிதவிரோதிநிரஸநைகஸ்வஹாவனாய் ததநுகுணசக்ராதிதிவ்யோபகரணபுஷ்கலனுமாய் ஸமர்த்தனுமாயிருந்துவைத்து,*

*நாலாம்பாட்டு.—சூதுநான் இத்யாதி. "சூது நானறியாவகை" என்றுதொடங்கி, "ஐவரைக்காட்டி - சுழற்றி - போதி கண்டாய்" என்றத்தைப்பற்றஅவதாரிகை - நீரே இத்யாதி.*

*"சூது" என்று - உறுவதாய், ப்ராப்தமாவதென்றபடி. இவ்விடத்தில், "ஐவர்" என்கிறது- ஶப்தாதிவிஷயங்களை. உன்மத்தங்காய்தின்னப்பண்ணுகையாவது - அவற்றிலே ஹோக்யதாபுத்தியைப் பிறப்பித்து நெஞ்சு கலங்கும்படி பண்ணுகை. "ஓர்" என்று - இவற்றுக்கு அத்விதீயத்வமாவது - தனித்தனியே ஶாதகமாகை. திருவடிகளைப் பூவாக ரூபிக்கிறதுக்கு ஹாவம்-மயிர் இத்யாதி. தாம் திருவடிகளை ப்ராபிக்கப் பெறவனுளப்போதோ? என்று ப்ரபத்தி பண்ணியிருக்கிற ஆகாரத்தை நினைத்து - மயிர்கழுவியிருக்கிறவனை என்கிறது. இப்படியிருக்கிற தம்மைத் தன்திருவடிகளில் அநுஹவகைங்கர்யங்களைக் கொடாமையைப்பற்ற - செவ்விப்பூச் சூடாமல் தடுப்பாரைப்போலே என்றது. "போதிகண்டாய்" என்றதுக்கு தாத்பர்யவிவக்ஷிதார்த்தம் - கூடநிற்கில்இதெல்லாம் இத்யாதி. அவன்தான் கூட.நில்லாமற்போவானென் ? என்ன - கூடநிற்கில் கண்ணோட்டம் இத்யாதி. கண்ணோட்டம் - க்ருபை. மேலுக்கவதாரிகை - நீர் இத்யாதி. "குழவி" என்றதுக்குஅர்த்தம்-உனக்கு ரக்ஷகர் இத்யாதி. "வினையேன்வினை தீர்மருந்தே" என்றதுக்கவதாரிகை - அரியவை இத்யாதி. 'தீர்மருந்தே - சூதுநானறியாவகை - ஓரைவரைக்காட்டி - சுழற்றி - உன்னடிப்போது' என்றுதொடங்கி. 'போதிகண்டாய்' என்றந்வயம்.* (ச)

ஸ்பவிஷபாக்யமஹாவ்யாதிபஞ்சகங்களாலே அதிமாத்ரபீடிதனாய்க்கொண்டு ப்ரக்ருதியிலே இவ்வாத்மாவை பரிப்ரமிப்பிக்கிற இந்த்ரியங்களாலே சுற்றும் நிரோதிப்பித்து என்னைக் கைவிடுவாரைப்போலே யிராநின்றாய்; நீ யென்னைக் கைவிட்டால் வேறுஎனக்கு ரக்ஷகருளரோ? ஆதலால், அஶுபேந்த்ரியங்களுக்கு அபூமியாயிருந்த திருநாட்டிலே * அயர்வறுமமரர்கள்சூழ எழுந்தருளியிருந்த உன்திருவடிகளிலே அடியேனை வாங்கியருளாய்'' என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், ''அப்ரதிக்ரியமாம்படி விஷயங்களாலும் இந்த்ரியங்களாலும் நலிவித்து என்னை நீ கைவிட்டால் வேறு எனக்கு ரக்ஷகர் உண்டோ?'' என்கிறார்.

[ஐந்து நோய் என்று தொடங்கி] - ஐந்து விஷயங்களுமாகிற நோயாலே இவ்வாத்மாவை முடிக்கவல்லவாய் உடம்பாகிற செக்கிலேயிட்டுத் திரிக்கும் ஐந்து இந்த்ரியங்களையும் எதிரும் பார்ஶ்வங்களிலும் நிறுத்தி என்னைக் கைவிடுவாரைப்போலே இருந்தாய். [ஆர்மருந்து என்று தொடங்கி] - ப்ரதிபக்ஷத்தை அடர்க்குந்திருவாழியை ஏந்தி ஆஶ்ரிதர்க்கு ப்ரதிகூலரான அஸுரரை நிஶ்ஶேஷமாக்கின நீ உபேக்ஷித்தால், இனி பரிஹரிக்கவல்லார் ஆர்? [விண்ணுளார் பெருமானேயோ] - ''ஹா! ராம, ஹா! லக்ஷ்மண'' என்னுமாபோலே, தமக்கு உறவுமுறையாரான * அயர்வறுமமரர்களையும் எம்பெருமானையும் நினைத்துத் தம்முடைய ஆர்த்தியாலே கூப்பிடுகிறார்.

ப.—அநந்தரம், ''ப்ரதிகூலநிரஸநஸ்வபாவனான நீ, விஷயேந்த்ரியாதிகளோடேஸம்பந்திப்பித்துவைத்து அகற்றுவான்போலே யிராநின்றாய்; வேறுஇனி ரக்ஷகர்ஆர்? என்கிறார்.

அடல்-(ஆஶ்ரிதவிரோதிகளையழியச்செய்கைக்குஅடியான)யுத்தோத்யோகத்தையுடைய, ஆழி-திருவாழியை, ஏந்தி-ஏந்தி, அசுரர் - ப்ரதிகூலரான அஸுரர்களுடைய, வன் - ப்ரபலமான, குலம் - ஸங்கங்களை, மருங்குவேர் - பக்கவேரோடே, அறுத்தாய்-அறுத்தவனாய், விண்ணுளார் - பரமபதவாசிகளுக்கு, பெருமானே - நிரவதிகஸௌக்ய ஸாதனனை நிர்வாஹகனானவனே! (வேறு), தீர் - ஶாந்திஹேதுவான, மருந்து-ப்ரத்யௌஷதம், இன்றி - இல்லாதபடி, ஐந்து-ஐந்துவகைப்பட்ட (ஶப்தாதிகளாகிற), நோய் - நோயாலே, அடும் - முடிக்கக்கடவதான, செக்கில் - ப்ராந்திஹேதுவாயுள்ள ஶரீரமாகிற செக்கிலே, இட்டு - இட்டு, திரிக்கும் - ப்ரமிப்பியாநிற்கிற, ஐவரை - ஐந்திந்த்ரியங்களையும், நேர் - என்முகப்பும், மருங்கு-பக்கமும், உடைத்தா-உடைத்தாம்படி, அடைத்து - நிறுத்தி, நெகிழ்ப்பானொக்கின்றாய் - நெகிழவிடுவான்போலே யிராநின்றாய்; இனி - (விரோதிக்கு நிவர்த்தகனை நீயே ப்ரவர்த்தகனை) பின்பு, (இந்நோய்க்கு), மருந்து - மருந்து, ஆகுவார் - ஆவார், ஆர்-ஆர்? ''நோயானவிஷயங்கள் மருந்தாகவோ? நோவுபடுகிறநான் மருந்தாகவோ, நோவிக்கிற இந்த்ரியங்கள் மருந்தாகவோ?'' என்று கருத்து. 'ஓ' என்று - ''ஸுரிகளோடு ஸமாநபோகனாய்வைத்து, வ்யாதிக்ரஸ்தனாய் மிடறுடைய உண்பதே'' என்று விஷண்ணராகிறார்.

இ.—அஞ்சாம்பாட்டில், ''விஷயங்களாலும் இந்த்ரியங்களாலும் அப்ரதிக்ரியமாம்படி நலிந்து, என்னை நீ கைவிட்டால் வேறு ரக்ஷகர் உண்டோ?'' என்கிறார்.

[தீர்மருந்தின்றி] - ப்ரதிக்ரியை இல்லாதபடி. ப்ரதிக்ரியை உண்டாகில் ஆறியிருக்கலாம்போலே. [ஐந்து நோய்] - ஶப்தாதிகள். [அடும் செக்கு] - இவ்வாத்

மாவை முடிக்கும் ஶரீரம். அதிலே ப்ரவேசித்து நெருக்கும் ஶ்ரோத்ராதிகளை: ஶரீரத்திலே ப்ரவேசிப்பித்து ஶப்தாதிகளைக்காட்டி நெருக்குகிற ஶ்ரோத்ராதிகளை, நேருடைத்தாகவும், மருங்குடைத்தாகவும், அடைத்து - முன்பும் பார்ஶ்வத்திலும் நிறுத்தி. [நெகிழ்ப்பாேனைக்கின்றாய்] - "நீயே ரக்ஷகன்" என்கிற விஶ்வாஸத்தையும் நெகிழ்ப்பாரைப்போலே இருந்தாய் என்னுதல்; கைவிடுமாபோலே இருந்தாய் என்னுதல். [இனி-ஆர்மருந்து - ஆகுவார்] - ரக்ஷகனை நீ உபேக்ஷித்தால், ஆர் மருந்தாகுவார்? பிறர் இல்லாத அற்றைக்கு "நீதுணை" என்றிருக்கலாம்; நீ கைவிட்டால், நோக்கக்கடவாருண்டோ?. மருந்தாவது எது? என்னாதே, "ஆர்" என்கிறது-"ஒரு பரமசேதநனே மருந்தாவான்" என்றிருக்கிறார். "நிவாரணம் ஔஷதம் பிஷக்." [அடலாழி இத்யாதி]-புஜோங்ஙவமானதிருவாழியைவந்தி, வலிதான அஸுரர்குலத்தைப்பக்கவேரோடேவாங்கினவனே! நீ உபேக்ஷித்தால் நான் ரக்ஷித்துக்கொள்ளவோ? பிறர் ரக்ஷிக்கவோ?. [விண்ணுளார்பெருமானேயோ]-நித்யஸூரிகளுக்கு ஓலக்கங்கொடுத்திருக்கிறபடியை அநுஸந்தித்து "நான் அதுக்கு அசலாவதே" என்று கூப்பிடுகிறார். "ஹா! ராம, ஹா! லக்ஷ்மண" என்னுமாபோலே; உறவுமுறையாரான நித்யஸூரிகளையும் அவனையும் நினைத்துத் தம் ஆற்றாமையாலே, அங்கே சென்று கேட்கும்படி கூப்பிடுகிறார்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. "விஷயங்களாலும் இந்த்ரியங்களாலும் அப்ரதிக்ரியமாம்படி நலிந்துஎன்னை நீ கைவிட்டால் வேறுரக்ஷகர் உண்டோ?" என்கிறார்.

[தீர்மருந்தின்றி] - வேறொரு ப்ரதிக்ரியையுண்டாகிலும் ஆற்றலாமிறே: ஸர்வஶக்தியாலும் போக்கப்போகாதாகாதே. [ஐந்துநோயடும்செக்கிலிட்டு] - ஶப்தாதிவிஷயங்களாகிற நோயாலே இவ்வாத்மாவை முடிக்கும் ஶரீரமாகிறசெக்கிலே யிட்டு. [திரிக்குமைவரை] - பாதிக்கிற ஶ்ரோத்ராதிகளை. ஶரீரத்திலே ப்ரவேசிப்பித்து ஶப்தாதிவிஷயங்களைக் காட்டி நெருக்குகிற ஶ்ரோத்ராதிகளை. [நேர்மருங்குடைத்தாவடைத்து] - எதிரும் பக்கங்களுமாக அடைத்து. 'அபிமந்யு'என்றுஒருபாலனை நலிகைக்கு அதிரத மஹாரதர்களடங்கலும் சூழப்போந்தாற்போலே, இந்த்ரியங்களைக் கையடைப்பாக்கி. [நெகிழ்ப்பானொக்கின்றாய்] - இதுவோதான் எனக்கு நிலைநிற்கப்புகுகிறது? "இங்ஙனேதான் செல்லுகிறதோ?" என்றுஇருக்கவோண்ணாதபடி உன்பக்கல் பண்ணினவிஶ்வாஸத்தையும் குலையாநின்றாய்.

அஞ்சாம்பாட்டு.—தீர்மருந்தின்றி இத்யாதி. "ஆர்மருந்தினியாகுவார்" என்னுமளவுங்கடாக்ஷித்தவதாரிகை - விஷயங்களாலும் இத்யாதி.

"தீர்மருந்து" - தீர்க்கும் மருந்து. இத்தால் - 'ப்ரதிக்ரியை' என்றபடி. "தீர்மருந்தின்றிக்கே பாதிக்கிறது" என்கிறவருடைய ஹார்த்தபாவம் - வேறொரு இத்யாதி. இன்னாராலேயென்று விசேஷியாமையாலேபாவம் - ஸர்வஶக்தி இத்யாதி. அடும் - முடிக்கிற. முடிக்குமென்றது - முடிக்கைக்காகவென்றபடி. இட்டு - ப்ரவேசிப்பித்தென்றபடி. "ஐந்து நோவைக்கொண்டு இவ்வாத்மாவை முடிக்கைக்காகச்செக்கிலேஇட்டுத்திரிக்கும்ஐவரையும் நேர்மருங்குடைத்தாவடைத்துநெகிழ்ப்பானொக்கின்றாய்" என்று வாக்யயோஜனை. நேர்மருங்குடைத்தாம்படி யடைத்தென்று ஶப்தார்த்தம். எதிரும் பக்கங்களுமாக அடைக்கையாவது - முன்னும் பார்ஶ்வங்களுமாக நிறுத்துகை. த்ருஷ்டாந்தபூர்வகோக்தார்த்தோபபாதநம் - அபிமந்யு இத்யாதி. இந்த்ரியங்களைக் கையடைப்பாக்கி - இந்த்ரியங்களுக்குக் கையடைப்பாக்கி என்றபடி. கையடைப்பாக்கி - வசமாக்கி. "நெகிழ்ப்பானொக்கின்றாய்" என்கிறதென்? "இந்த்ரியங்கள்பாதகங்கள்" என்னும்புத்தியைத் தந்தோமே என்ன - இதுவோதான் இத்யாதி. இதுவோதானென்றது - இந்த்ரியங்கள் பாதகங்களென்கிற புத்தியோதான் என்றபடி. நிலை

ஆனுல் நம்படி இதுவாகில், உமக்கோரு பரிஹாரந் தேடிக் கோண்டாலோ என்ருன் : [ஆர்மருந்தினியாகுவார்] - என்னிடையாட்டம் பிறர்க்குக்கோடு காரியமில்லை: நான்நோவுபடாநின்றேன்,நீ கைவாங்கினுய்; ஆனபின்பு, எனக்குஒரு ரக்ஷகருண்டோ? நானும் பிறருமில்லாதவன்று நீயுண்டு: நீவிட்டவன்று ஆருண்டு ? "ஆனல் நீரோ?" என்ருன்; நானும் கையுந்திருவாழியுமாயிருந்தேனுகில் நான் என்னைநோக்கிக்கோள்ளேனோ? மருந்தாம்போதும் ஒருசேதநன் வேணுமாகாதே. * மருந்தும்பொருளும் அமுதமுந் தானேயிறேயிவர்க்கு. [அடலாழியேந்தி யசுரர்வன்குலம் வேர்மருங்கறுத்தாய்] - யுத்தோத்முகமான திருவாழியை ஏந்தி அஸுரருடைய வலிதானகுலத்தைப் பக்கவேரோடே வாங்கினவனே! அவ்வாஸனையோ உம்மைநலிகிறது ? [விண்ணுளார்பெருமானேயோ] - ஒருத்தன் சிறையிருக்க, பிதாவும் மாதாவும் ப்ராதாக்களுமாய்க்கல்யாணஞ்செய்யக்கண்டு தான்கூடப்பெறுதே நோவுபடுமாபோலே, நித்யஸூரிகளும் பிராட்டியும் அவனுமாகப் பரமபதத்திலேயிருக்கிறபடியை அநுஸந்தித்து அங்கேகேட்கும்படி கிடந்துகூப்பிடுகிருர். "ஹா ராம ஹா லக்ஷ்மண ஹா ஸுமித்ரே" (ஹாராம ஹாலக்ஷ்மண ஹாஸுமித்ரே) என்று பிராட்டி தனியேகிடந்து கூப்பிட்டாற்போலே, பரமபதத்திலிருப்பும் அணிகலங்கும்படி கூப்பிடுகிருர். (ரு)

---

நில்லாமைக்கு அடியெது? என்ன - இங்ஙனேதான் இத்யாதி. அதாவது - இந்தபாதகத்வபுத்தியோடே செல்லவுமொண்ணுதபடி தேவர்திருவடிகளில் விஶ்வாஸத்தை நெகிழ்க்கைக்காக விருந்தாற்போலே இராநின்ருயென்றபடி. "ஒக்கின்ருய்" - இருந்தாற்போலே இராநின்ருய். இங்ஙனேதான் - இந்த பாதகத்வபுத்தியோடேதான் என்றபடி. ஆனுலென்றது - 'நாம்கைவிட்டோம்' என்று உமக்குத் தோற்றுகிறதாகில் என்றபடி. ஏதத்விவரணம் - நம்படி இதுவாகில் என்றது. "இனி" என்றதுக் கர்த்தம் - என்னிடையாட்டம் இத்யாதிவாக்யத்ரயம். விவரணம் - நானும் பிறரும் இத்யாதி. "ஆர் மருந்து - ஆகுவார்" என்றதுக்கு - உபாயாந்தரங்கள் ரக்ஷகமாகமாட்டாதென்றர்த்தாந்தரம்விவக்ஷித்து, "அடலாழியேந்தி" என்றதுக்குஅவதாரிகை-ஆனல்நீரோ என்றனென்று. இப்பக்ஷத்தில், ஏதுமருந்தினியாகுமென்னுதே, "ஆர்மருந்தினி" என்றதுக்குபாவம் - மருந்தாம்போதும் இத்யாதி. அப்படி சேதநரே மருந்தோவென்ன - மருந்தும் இத்யாதி. அநிஷ்டமான ஸம்ஸாரவ்யாதியைப்போக்கும் ஹேதுஜமும், இஷ்டமானமோக்ஷத்தைத் தரும்பொருளும், ஸ்வதஃ இஷ்டமாய்போக்யமான அம்ருதமும் திருவடிகள்தானே யித்யர்த்தஃ. மூன்ருந்திருவந்தாதி நாலாம்பாட்டு. "வேர்மருங்கு" என்றது - மருங்குவேர் என்றபடி. அவ்வாஸனையோ என்றது - அந்தவிரோதிநிரஸநமாத்ரமேயோ நலிகிறதென்ன; அன்று, ப்ராப்தியுமென்கிருரென்றபடி. 'உம்மைநலிகிறது' என்றவநந்தரம், பின்னையும் நலிகிறதுண்டோவென்ன ? என்றத்யாஹரிப்பது. "விண்ணுளார்பெருமானே" என்றஸம்போதித்து "ஓ" என்றதுக்குபாவம் - ஒருத்தன் இத்யாதி. த்ருஷ்டாந்தபூர்வகமாக உபபாதநம் - ஹாராம இத்யாதி. இது - கூப்பிடுகிறமாத்ரத்துக்கு த்ருஷ்டாந்தம். "ஹா ராம ஹா லக்ஷ்மண ஹா ஸுமித்ரே ஹா ராமமாத: ஸஹ மே ஜநந்யா । ஏஷா விபத்யாம்யஹமல்பபாக்யா மஹார்ணவே நௌரிவ மூடவாதா" இதி சுந்தரகாண்டே வேண்யுத்க்ரதநோத்யோகஸமயே.

[28-8] 'அடலாழி' என்றுதொடங்கி, 'விண்ணுளார்பெருமானே-நெகிழ்ப்பானொக்கின்ருய், ஆர்மருந்தினியாகுவார் : ஓ' என்றந்வயம். (ரு)

---

# ஆறாம் பாட்டு.

**விண்ணுளார்பெருமாற்கடிமைசெய்வாரையுஞ்செறும்ஐம்புலனிவை**
**மண்ணுளென்னைப்பெற்றால்என்செய்யாமற்றுநீயும்விட்டால்?**
**பண்ணுளாய்!கவிதன்னுளாய்! பத்தியினுள்ளாய்!பரமீசனே !வந்தென்**
**கண்ணுளாய்!நெஞ்சுளாய்!சொல்லுளாய்! ஒன்றுசொல்லாயே.**

ஆ.—(விண்ணுளார்) - திருநாட்டிலே அயர்வறுமமரர்களதிபதியாயிருந்த உன்திருவடிகளிலே அடிமைசெய்கிற அயர்வறுமமரர்களையுங்கூட ஸ்வபரவணமாக்கி உன்திருவடிகளை இழப்பிக்கவல்ல இந்த ஶப்தாதி விஷயங்கள் தங்கிலமாவது, பின்னை நீயும் கைவிடுவதானால் என்னை என்செய்யா? இவைசெய்யும் ஶாரை சொல்லகிலமல்ல. இந்த ஶாரையாலே கூப்பிடுகிற என்னுடைய சொற்களிலும் த்வத்விஶ்லேஷாஸஹிஷ்ணுத்வரூபமான என்னுடைய ஸ்நேஹத்திலும், உன்னைக்காணப்பெறாமையாலே அவஸந்நமான என்னுடைய சக்ஷுராதிகரணங்களிலும் அவஸ்த்திதனாய் ஸர்வஜ்ஞனுமாய் ஸர்வேஶ்வரனுமாயிருந்த நீ, என்னுடைய இந்த வ்யஸநமெல்லாந் தீரும்படி என்னை உன்திருவடிகளிலே வாங்குகிறேனென்று சொல்லுதல்; நான் ஆசைபறும்படி வாங்கக்கடவதன்றென்று சொல்லுதல்; இரண்டத்தொன்று சொல்லாய்! என்று கூப்பிடுகிறார்.

ஒ.—ஆறாம்பாட்டில், எத்தனையேனும் அளவுடையாரையும் நலியவல்லவான இந்த்ரியங்கள், நீ கைவிட்டால், அதிதுர்பலனான என்னை எல்லா அகார்யமும் படுத்தாவோ! என்கிறார். [விண்ணுளார் என்று தொடங்கி] - *அயர்வறுமமரர்கள் ஸம்ஸாரத்திலே எம்பெருமானுக்கு "அடிமை செய்யவேணும்" என்று வந்துபுகுரிலும் அவர்களையும் நலியவல்லவான ஐந்து இந்த்ரியங்கள் இவை. எம்பெருமானுக்கு அடிமை செய்யும் இங்குண்டான வைஷ்ணவர்களை என்றுமாம். [மண்ணுள் இத்யாதி] - தனக்கு நிலமான ஸம்ஸாரத்திலே, அதிதுர்பலனான என்னை விஷயமாகப் பெறுவதுக்குமேலே ரக்ஷகனான நீயும் விட்டால் எப்பாடு படுத்தா? [பண்ணுளாய் என்று தொடங்கி] - என்னுடைய சக்ஷுராதிகளிலே ஸந்நிஹிதனாய் என்னுடைய ஆர்த்தஸ்வரத்தையும் ஆர்த்திமூலமான என்னுடைய உக்தியையும் உன்னாலல்லது செல்லாததான என்தஶையையும் அனுஸந்திப்பதும்செய்து நினைத்தது முடிக்கவல்லையுமாயிருக்கிற நீ வந்து, இந்த்ரியங்களாலுள்ள நலிவுதீர்த்து நான் உன்னைப் பெறும் விரகு சொல்லவேணும்.

ப.—அநந்தரம், என்பக்கலிலே ஸர்வப்ரகாரத்தாலும் ஸந்நிஹிதனான நீ, முகந்தோன்றநின்று ரக்ஷியாவிட்டால், அளவுடையாரையும் நலியும்இந்த்ரியங்கள் என்னை என்செய்யாது? சொல்லாய்! என்கிறார்.

விண்ணுளார் - பரமபதவாஸிகளாய்வைத்தே, பெருமாற்கு - ஸர்வாயிகனான உனக்கு, அடிமைசெய்வாரையும் - அடிமைசெய்வாரான வைநதேயாதிகளையும், மண்ணுள் - தன்னிலமான இந்த லோகத்திலே, செறும்-மேலிட்டுநலியக்கடவதான, இவை- இந்த, ஐம்புலன் - ஐந்துஇந்த்ரியங்களானவை, என்னை - இவற்றை வெல்லுகைக்கீடான

வலமில்லாதஎன்னை, பெற்றால்-பெற்றால், மற்றும் - அதுக்குமேலே, நீயும் - (நியந்தாவான) நீயும், விட்டால் - கைவிட்டால், (அவை), என்-என், செய்யா - செய்யாதன? என் - (ஈடுபட்டுக்கூப்பிடுகிற) என்னுடைய, பண் - ஆர்த்தஸ்வரத்துக்கு, உள்ஆய்-உட்பாடனாய், கவி தன் - ஸ்வாஸ்ரயமான ஸப்தஸந்தர்ப்பத்துக்கு, உள்ஆய் - ப்ரதிபாத்யனாய், பத்தியின் - (அதுக்கடியான) ப்ராவண்யத்துக்கு, உள்ளாய் - விஷயபூதனாய், (அவ்வளவன்றியே), பரம் - (ஸர்வமும்உனக்கு விதேயமாம்படி) ஸர்வாதிகனாய், ஈசனே - நியந்தாவாய், (நியாம்யங்களில் தனித்தனியே "வக்ஷுஷி திஷ்டந், மநஸி திஷ்டந்" என்கிறபடியே),கண் - கண்ணோடு, உளாய்-, நெஞ்சு - நெஞ்சோடு, உளாய்-, சொல் - வாகிந்த்ரியத்தோடுவாசியற, உளாய் - உள்ளே ஸந்நிஹிதனாயிருக்கிறநீ, வந்து-, (என்தளர்த்தி தீரும்படி), ஒன்று - ஒருவார்த்தை, சொல்லாய் - அருளிச்செய்யவேணும். சொல்லாயேயென்று - வந்து சொல்லுகிறிலையென்றுபொருளாய், விட்டபடியை யுபபாதித்ததாகவுமாம். என்செய்யாவென்று - அநாயகவிஷயத்தில் குறும்பரைப்போலே அழித்தேவிடுமென்று கருத்து.

இ.—ஆறும்பாட்டில், அளவுடையாரையும் நலியவல்ல இந்த்ரியங்கள், நீ கைவிட்டால் தூர்வலனை என்னை என்படுத்தா? என்கிறார். [விண்ணுளார் இத்யாதி] - * அயர்வறுமமரர்களதிபதிக்கு அவர்களோடேகூட அடிமைசெய்ய ருசியுடையாரையும் விஷயங்களிலேமூட்டி நலியும்இந்த்ரியங்கள் இவை. விரக்தனை விஸ்வாமித்ரனையும், கைங்கர்யருசியுடைய மஹாராஜரையுங்கூட நலிந்ததிறே. விண்ணுளாராய், "ஸர்வஸ்வாமியாயிருக்கிறவனுக்கு அடிமை செய்யவேணும்" என்று இங்கேவரினும், எனக்கு என்னப்பண்ணும் இந்த்ரியங்கள்: பெரிய திருவடி, "பிராட்டிமாரையும் தேவரையும் நான் வஹித்தேன்" என்றானிறே. [மண்ணுள்] - தம் நிலமான ஸம்ஸாரத்திலே. [என்னைப்பெற்றால்] - ஸம்ஸாரிகளுக்கும் அவ்வருகாயிருக்கிற என்னைப்பெற்றால். [என் செய்யா] - இந்த்ரியங்கள் அளவுடையாரையும் அகப்படுத்த வல்லவை: அவை, அகப்படுத்த வேண்டாதே மேல்விழுமவன் நான்: ஆனால், எல்லாம் படுத்தாவோ? [நீயும்விட்டால்] - இந்த்ரியவஸ்யதையைப் போக்கக்கடவ நீயும் உபேக்ஷித்தால் எல்லாவநர்த்தமும் படுத்தாவோ? [பண்ணுளாய்] - என்னுடைய ஆர்த்தஸ்வரம் அறியாதிருக்கிறாயல்லையே! [கவிதன்னுளாய்] - அவ்வார்த்திக்கு ஆஸ்ரயமான உக்திகேளாதிருக்கிறாயல்லையே! [பத்தியினுள்ளாய்] - இத்தைச் சொல்லுவிக்கிற ஆற்றாமையை அறியாதிருக்கிறாயல்லையே! [பரமீசனே] - இந்த்ரியங்களுக்கும் ஈசனே! என்னைப்போலே அஸாக்தனாய்த்தான் இருக்கிறாயோ? [கண்ணுளாய்] - அஸந்நிஹிதனல்லை. [நெஞ்சுளாய்] - ஹ்ருதிஸ்யிதன். [சொல்லுளாய்] - கவிதன்னுளாய் என்று பாசுரஞ்சொல்லிற்று; இது வாகிந்த்ரியத்தைச் சொல்லுகிறது. [வந்து - ஒன்று சொல்லாய்] - அர்ஜுநனுக்குப்போலே வந்து "மாஸுச:" என்று சொல்லவேணும்.

ஈடு - ஆறும்பாட்டு. அளவுடையாரையும் நலியக்கடவ இந்த்ரியங்கள், நீயும் கைவிட்டால், துர்ப்பலனை என்னை என்படுத்தா? என்கிறார்.

ளார் இத்யாதி. "மற் ம்விட்டால்" என்னுமளவும் கடாக்ஷித் தவதாரிகை - அளவுடையாரையும் இத்யாதி.

[விண்ணுளார்பெருமாற்குஇத்யாதி] - அயர்வறுமமரர்களதிபதிக்கடிமை செய்வாரையும் சேறும். [பெருமாற்கடிமைசெய்வாரையுஞ்சேறும்] - ஒக்கப்பிறந்துஇளையபெருமாளைப் போலே யடிமைசெய்து திரிவாருண்டிறே. விண்ணுளாராய்ப் பெருமாற்கடிமைசெய்வாரையும் சேறும். திருவடியையுமகப்பட "எனக்கு" என்னப்பண்ணிற்றிறே. ஸுமுகனென்கிற ஸர்ப்ப விசேஷம் திருவடிகளிலேசென்றுகிட்ட, பெரியதிருவடி ஓடிச்சென்று,"எனக்கு ஆமிஷமாயிருக்கிற இத்தைக் கைக்கொண்டு நோக்குவதே!" என்று வெறுத்து, "தேவரீரையும் நாய்ச்சிமாரையும் நெடுங்காலம் வஹித்துக்கொண்டு திரிந்தேன்: நான் என்பெற்றேன்?" என்றானிறே. இதிறே ஸம்ஸாரஸ்வஹாவ மிருக்கும்படி. அவன்தான் அவதரித்து சோகிப்பது மோஹிப்பதானாற்போலேயாயிற்று இவர்களும். அன்றிக்கே *அயர்வறுமமரர்களதிபதியாயிருக்கிற ஸர்வேஶ்வரனுக்கு, ஸம்ஸாரத்திலே முமுக்ஷுக்களாய்க்கைங்கர்யத்திலே யவகாஹித்திருக்கக்கடவரானவர்களையும் நெருக்கக்கடவ இந்த்ரியங்களிவை. ஒரு விஶ்வாமித்ர ஸுக்ரீவாதிகளைக் கண்டோமிறே. ஜ்ஞாநாதிகனானவிஶ்வாமித்ரன்அகப்பட ஒருவிஷயத்தின் காற்கடையிலே நெடுங்காலங்கிடந்தானிறே; பெருமாளுக்குப்பரிவரான மஹாராஜர்,பெருமாளை மின்னுக்கும்இடிக்கும்இரையாகவிட்டுவைத்து நாலுமாஸம் இந்த்ரியபரவசராய் அவ்வழியென்று நினைத்திலரிறே. [மண்ணுள்இத்யாதி] - இவர்தாம் விண்ணுளாரில் ஒருவராகாதே தானிறே இவற்றுக்குத்தந்நிலமாவது; நான் இவையிருந்தஇடந்தேடிச்சென்று கழுத்திலே கயிறிட்டுக்கோடு நிற்கவல்லேனொருவனுவது; இங்ஙனேயிருக்கிற என்னைப் பெற்றால் இவை என்பண்ணா? [மற்றுநீயும்விட்டால்] - எல்லாரும்விட்டு, விழுந்துபரிக்கும் பூமியான நீயும் விட்டால். ரக்ஷகனான நீ விட்டிலையாகில், மஹாராஜர் வாலியை வென்றாற்போலே நானும் இந்த்ரியங்களை வெல்லேனோ? "தவாஹம் நிக்ஹம்

"அடிமைசெய்வார்" என்று - முமுக்ஷுக்களாக அர்த்தம் - அயர்வறும் இத்யாதி. நித்யஸூரிகளாக அர்த்தாந்தரம் - பெருமாற்குஇத்யாதி. இவ்விடத்திலே நித்யஸூரிகள்அடிமைசெய்வர்களோ? என்ன - ஒக்க இத்யாதி. த்விதீயார்த்தத்துக்கு ஸப்ரமாணம் - விண்ணுளாராய் இத்யாதி: அவதாரதசையில்இந்த்ரியங்கள் பாதித்தஇடமுண்டோ? என்ன-திருவடியையும் இத்யாதி. விவரணம்-ஸுமுகன் இத்யாதி. "அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரை இந்த்ரியங்கள் பாதிக்கும்" என்னலாமோ? என்ன - இதிறே இத்யாதி. அகர்மவஶ்யர்க்கும் இது கூடுமோ? என்ன - அவன்தான் இத்யாதி. அதாவது பாவனையென்றபடி. முந்தினஅர்த்தவிவரணம் - அன்றிக்கே அயர்வறும் இத்யாதி. முமுக்ஷுக்கள் இந்த்ரியவஶ்யரான இடமுண்டோ? என்ன - ஒருவிஶ்வாமித்ர இத்யாதி. இத்தை விவரிக்கிறார் - ஜ்ஞாநாதிகன் இத்யாதிவாக்யத்வயத்தாலே. 'ஜ்ஞாநாதிகனான' என்றவிடத்திலே - "பஹூநிவர்ஷபூகாநி விஶ்வாமித்ரம் மஹாமுநிம்" இத்யாத்யநுஸந்தேயம். 'நெடுங்காலம்' என்றவிடத்திலே - "ஸுஹோராத்ரமிவ மேநே மதாவஸந்தம்" என்றது, அநுஸந்தேயம். "மண்ணுள்" என்றதுக்கு பாவம் - இவர்தாம் இத்யாதி. "மண்ணுள்" என்கையாலே - முன்பு விண்ணுளாரென்று தோற்றுகிறது. "மண்ணுளென்னை" என்று விசேஷித்ததுக்கு பாவமாதல், ஸப்தார்த்தமாதல் - இவற்றுக்கு இத்யாதிவாக்யத்வயம். "மற்றும்" - அதுக்குமேலே யென்றபடி. எல்லாரும் விட்டென்றது - "ஸவிஷ்ணுரவ" இத்யாதிப்படியே: எல்லாரும் விட்டாலு மென்றபடி. விழுந்து பரிக்கும் பூமியானவென்றது-விட்டதடியாக மேல்விழுந்து பரிக்கும் பூமியானஎன்றபடி. நான் விடாவிடில் நீர் செய்கிறதென்? என்ன - ரக்ஷகனான இத்யாதி. அவன் கைவிட்டால் இந்த்ரியங்களை வெல்ல அரிதோ? என்ன - தஸ்யாஹம் இத்யாதி. தோஸுக்ஷ்ட்டே 'உக்ஷம்

மந்யேவாயோரிவஸுதுஷ்கரம்'' (தஸ்யாஹம்நிக்ரஹம்மந்யேவாயோரிவஸுதுஷ்கரம்) என்ருனிறே. காற்றை ஓரிடத்திலேகட்டிவைக்கிலிறே மநஸ்ஸை நியமிக்கலாவது? '' 'இந்த்ரியஜயம்அரிது' என்று சொல்லுகிருயாகில் நம்பக்கலிலே மநஸ்ஸை வை'' என்றரு ளிச்செய்த நீயும் விட்டால். ''நான்விட்டிலேனீ! உம்மை விடுகையாவதேன்?'' என்றன்; ஆகில், நீ அஸந்நிஹிதனுயோ அஶக்தனுயோ நான்இழக்கிறது? [பண்ணுளாய்] - என் னூர்த்தஸ்வரம்கேளாதிருக்கிருயல்லேயே. [கவிதன்னுளாய்] - என்னுடையஆர்த்திகர்ப்ப மானஉக்தி கேளாதிருக்கிருயல்லேயே. [பத்தியினுள்ளாய்] - இப்படி சொல்லுவிக்கிற ஆற் ருமை யறியாதிருக்கிருயல்லேயே. [பரமீசனே] - உனக்கு முடியாததோன்று உண்டாயிருக் கிருயல்லேயே. உன்ஶேஷித்வம் ஏறிப்பாயாதஇடமுண்டோ? (இந்த்ரியங்களுக்குமீசனே) - இது கிடக்கிடு; நீதான் முன்பே செய்யாததோன்று உண்டோ? என்கிருர். ''ஆனுல்இனிச் செய்யவேண்டுவதில்லேயே'' என்ருன்; நானும் நீசெய்த அம்ஶத்தில் குறையுண்டென்கிறே னல்லேன்; நீ செய்யாத அம்ஶத்தையிறே சொல்லுகிறதென்கிருர்: [என்கண்ணுளாய் நெஞ் சுளாய் சொல்லுளாய்] - பாஹ்யகரணங்களுக்கும் ஆந்தரகரணத்துக்கும் உன்னையொழிய விஷயமுண்டோ? * நெடியானேயென்றுகிடப்பது, * உன்னைமெய்கொள்ளக்காணவிரும்பு வது, * வஞ்சனே என்பதாயிறே அவையிருப்பது. கவிதன்னுளாயென்று பாசுரஞ்சொல் லிற்று; சொல்லுளாயென்று - வாக்இந்த்ரியத்தைச்சொல்லுகிறது. ஆனுல், நம்மைச் செய்யச்

ப்ர.— கீதாஸு ஷஷ்டே, ''சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம் । தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் ॥௩௪॥''

ஹிமந:க்ருஷ்ண ப்ரமாதிபலவத்த்ருடம்'' இதி பூர்வார்த்தம். இதுக்கர்த்தம் - காற்றை இத்யாதி. ''நீயும்'' என்றதுக்கு - 'எல்லாரும்விட்டு' இத்யாதி வாக்யத்திலே ஒருதாத்பர்யம் அருளிச்செய்து, பாவாந்தரம் - இந்த்ரியஜயம் இத்யாதி. ''உதிதஸ்ததம்ஸவ'' என்றத்தைப்பற்ற-நம்பக்கலிலே மநஸ்ஸை வை என்றது. மேலுக்கவதாரிகை - நான்விட்டிலேனீ இத்யாதி. ''பண்ணுளாய்'' இத் யாதி பதத்ரயத்தையுங் கடாக்ஷித்து - அஸந்நிஹிதனுயோ என்றது. ''பரமீசனே'' என்றத்தைப் பற்ற - அஶக்தனுயோ என்றது. ஸந்நிஹிதத்வ ஶக்திமத்த்வங்களைப் பதங்களிலே ஏறிட்டுக்காட்டு கிருர் - பண்ணுளாய் இத்யாதி. ''பண்ணுளாய்'' இத்யாதி பதத்ரயத்துக்கும் பேதம்அருளிச்செய் கிருர் - என்னூர்த்தஸ்வரம் இத்யாதி வாக்யத்ரயத்தாலே. 'கேளாதிருக்கிருயல்லேயே, அறியாதிருக் கிரு யல்லேயே' என்கையாலே - ஸந்நிஹிதத்வத்தை இப்பதத்திலே ஊர்ஶிப்பித்தாராயிற்று. ''பர மீசன்'' என்றபதத்தாலே - ஶக்திமத்தையையும் ஊர்ஶிப்பிக்கிருர் - உனக்குமுடியாதது இத்யாதி. ''பரம்'' என்றதுக்குபாவம் - உன்சேஷித்வம் இத்யாதி. ''கண்ணுளாய்'' இத்யாதிக்கவதாரிகை - இது கிடக்கிடு இத்யாதி. முன்பேயென்றது - * முடிப்பானேயிலென்றபடி. ''கண்ணுளாய்'' இத்யா தியைக்கடாக்ஷித்துபாவம் - நானும் இத்யாதி. அன்றிக்கே, 'இதுகிடக்கிடு, நீதான்முன்பே' இத் யாதிவாக்யம் - ''கண்ணுளாய்நெஞ்சுளாய்சொல்லுளாய்'' என்றத்தைக் கடாக்ஷித்துபாவமாய், 'நானும் நீசெய்த' இத்யாதிவாக்யம் - ''ஒன்றுசொல்லாய்'' என்றதுக்கு பாவமாதல். ''கண்ணுளாய்'' இத் யாதி-'செய்த அம்ஶம்'. ''வந்து - ஒன்றுசொல்லாய்'' என்றது-'செய்யாதஅம்ஶம்'. ''கண்'' என்றது - செவிமுதலானவற்றுக்கும் உபலக்ஷணம் என்றுவிவக்ஷித்து - பாஹ்யகரணங்களுக்கும் என்கிருர். ஸர்வகரணங்களுக்கும் விஷயம்அவனுயிருக்குமோ? என்ன - நெடியானே இத்யாதி. ''ஆனுல்இனி'' என்கிறவாக்யம் - ''ஒன்றுசொல்லாய்'' என்கிறபதத்துக்கவதாரிகையென்று தோற்றுகைக்காக, பதம் வந்தவிடத்திலே அருளிச்செய்கிருர் - ஆனுல்நம்மை இத்யாதி. கீழே ''பண்ணுளாய்'' இத்யாதித்ரயத்

சொல்லுகிறதேன்? என்ன, [வந்து - ஒன்றுசொல்லாயே] - எனக்காக நாலடி நடந்துவந்து, நீ யஞ்சாதே கோள் என்று - என்னை, "மாஶுச:" (மாஶுச:) என்னவேணும். "உன் ஸத்பாவத்தில் எனக்குஅதிஶங்கை உண்டோ? என்கண் காணவந்து ஒன்றுசொல்லுகை யன்றோ எனக்குத்தேட்டம்"? என்கிறார். (௬)

## ஏழாம் பாட்டு.

ஒன்றுசொல்லியொருத்தினில்நிற்கிலாதவோரைவர்வன்கயவரை
என்றுயான்வெல்கிற்பன் உன்திருவருளில்லையேல்
அன்றுதேவரசுரர்வாங்க அலைகடலரவமளாவி ஓர்
குன்றம்வைத்தஎந்தாய்! கொடியேன்பருகுஇன்னமுதே!

ஆ.— (ஒன்றுசொல்லி.) - இப்படி இந்த விஷயங்கள் உமக்கு பாதகமாகில், இவற்றில் ப்ரவணமாகாதபடி உம்முடைய இந்த்ரியங்களை ஜயிக்கமாட்டீரோ? என்னில்; அம்ருதமதநே ப்ரக்ராந்தரான தேவர்களுங்கூட உன்னையொழிய தந்நிவர்த்தந க்ஷமராயிற்றிலர்; அவ்யவஸ்த்தித ஸ்வபாவமுமாய் அதிபலமுமாய் பாஹிம்ஸைகருசிகளுமாயிருக்கிற இந்த்ரியங்களை, உன்னுடைய க்ருபையையொழிய நான் எங்ஙனே ஜயிக்கும்படி? ஆதலால், உன்னுடைய க்ருபையாலே நீ என்னுடைய ப்ரதிபந்தகமான பாபத்தைப்போக்கி, நிரவதிகபோக்யபூதனான உன்னை எனக்குபுஜிக்கத் தந்தருளினாற்போலே, இன்னமும் உன்க்ருபையாலே நீயே இந்தக்கரணஸம்பந்தத்தைப்போக்கி உன்திருவடிகளிலே வாங்கியருளவேணும் என்கிறார்.

ஒ.— ஏழாம்பாட்டில், நீ உபேக்ஷித்தால், அதிபலமான இந்த்ரியங்களை என்னால் வெல்ல உபாயம் உண்டோ? என்கிறார்.

[ஒன்று என்று தொடங்கி] - ஒன்றைச்சொல்லி ஒருவழிநில்லாத அதிபலமாய்த்தனித்தனியே ப்ரதாநமான ஐந்து இந்த்ரியங்களையும்நீ உன்க்ருபையாலேவென்று தாராயாகில் வெல்ல உபாயமில்லை. [அன்று தேவரசுரர்வாங்க] - தேவர்களும் அசுரர்களும் வலிக்க. அவர்கள் மாட்டாதே கைவாங்க என்றுபாம். [அலைஎன்று தொடங்கி]- அலைகையாலே கடைய அரிதான கடலிலே வாஸுகியைச்சுற்றி மந்தரபர்வதத்தை வைத்த என் நாயனுமாய், தேவர்களைப்போலே நீ தந்தத்தைக்கொள்ளாதே உன்னையே ஆசைப்படுகிற எனக்கு நிரதிஶய போக்யனுமானவனே.

ப.— அநந்தரம், ஆஶ்ரிதர்க்கு அருந்தொழில்செய்தும் அபேக்ஷிதந் தலைக்கட்டும்படியான உன்னுடைய க்ருபையில்லையாகில், ப்ரபலமான இந்த்ரியங்களை என்று வெல்லக் கடவேன்? என்கிறார்.

அன்று - (நித்யத்வஸ்ரத்தையாலே உன்னை ஶரணம்புகுந்த) அன்று, தேவர் - தேவர்களும், அசுரர் - (அவர்களோடே அம்ருதார்த்தமாக ஸங்கதரான) அசுரர்களும்,

---

துக்கும் - ஸந்நிஹிதத்வத்தைப் பற்ற விவக்ஷித்தருளிச்செய்து, நீயும் உளையாயிருக்க நானிழப்பதே என்று ஸத்பாவ விவக்ஷயா பாவாந்தரம் - உன்ஸத்பாவத்தில் இத்யாதி. 'விண்ணுளார்' இத்யாரப்ய, 'என்னைப்பெற்றால் - மற்று நீயும்விட்டால் - என்செய்யா? 'பண்ணுளாய்' என்றுதொடங்கி, 'வந்து - ஒன்றுசொல்லாயே' இத்யந்வய:. (௬)

வாங்க - வலிக்கும்படியாக, அலை - அலையெறிகிற, கடல் - கடலிலே, அரவம் - வாசுகியென்கிற பாம்பை, அளாவி - சுற்றி, ஓர்-அத்விதீயமான, குன்றம் - மந்தரபர்வதத்தை, வைத்த - அலையாமல் நாட்டின உபகாரகத்வத்தைக் காட்டி, எந்தாய் - எனக்கு ஸ்வாமியானவனாய், கொடியேன் - அவர்களைப்போலே அந்தஅம்ருதத்தில்பர்யவஸியாதே, ("உன்னையே புஜிக்கவேணும்" என்னும்) கொடுமையையுடைய நான், பருகு - பருகுகைக்கு, இன்னமுதே - நித்யபோக்யமா யிருக்கிறவனே! உன்-உன்னுடைய, திருவருள்-நிரவதிகக்ருபையை, இல்லையேல் - இல்லையாகில், ஒன்று - ஒரு விஷயத்தைத் தேடித்தாவென்று, சொல்லி-, (அதுபெற்றுஅநுபவிக்குந் தனையும்), ஒருத்தினில் - ஒருபடிப்பட, நிற்கிலாத - நில்லாதே, ஓர் - ஒன்றுக்கொன்று சேராச்சேர்த்தியாய்த் தனித்தனியே ஸ்வதந்த்ரமான, ஐவர் - ஐந்திந்த்ரியங்களாகிற, வன் - ப்ரபலராய், கயவரை - பழகியும் முகமறியாத கயவரை, யான் - ஸ்வயம்அஸக்தனான நான், (முன்புமாட்டாதவோபாதி), (மேலும்), என்று - என்று, வெல்கிற்பன் - வெல்லவல்லேனாவேன்?

இ.—ஏழாம்பாட்டில், நீ உபேக்ஷித்தால் அதிவேலமான இந்த்ரியங்களை என்னால்வெல்ல உபாயமுண்டோ? என்கிறார்.

[ஒன்றுசொல்லியொருத்தினில் நிற்கிலாத] - ஒருவிஷயத்திலே சாபலத்தைப் பண்ணி அது கைப்புகுருந்தனையும் அதிலே நிலைநில்லாத. ஒருத்து-ஒருமைப்பாடு. [ஓர்ஐவர்] - ஒருவர்நினைத்தத்தை ஒருவர்நினையாதே தனித்தனியே ப்ரதானராயிருக்கை. [வன்கயவரை] - வன்மையாலேகாரியம் கொள்ளக்கடவராய், கயவராய்-வலராய், முகம் பழகப்பழக வாயகராகை. [என்றுயான் வெல்கிற்பன்] - என்று நான் இவற்றை வென்று தலைக்கட்டக்கடவேன். [உன்திருவருள் இல்லையேல்] - உன்னருள் பெற்றேனாகில், நானும் இவற்றைவென்று தலைக்கட்டேனோ? உன்னருள் பெறுகையாலே அர்ஜுநன் ஜயத்ரதனை ப்ரதிஜ்ஞைபண்ணிவென்றிலனோ? மஹாராஜர் உன்னை அண்டைகொண்டு வாலியை நிரஸித்திலரோ? [அன்றுதேவர்இத்யாதி] - ப்ரயோஜநாந்தரபரரும் உன்னருளாலே ஸ்வாபிமதம் பெற்றிலர்களோ? [அன்று]. துர்வாஸஸ்ஸாபோபஹதரான அன்று. [தேவர் அசுரர்வாங்க] - தேவர்களும் அஸுரர்களும் ஸங்கதராய்க் கடல்கடையப்புக்கு இளைத்துக் கைவாங்க என்னுதல்; வாங்கல் என்று - வலித்தலாய், அவர்கள்கடைந்தாராய்த் தலைக்கட்டும்படி என்னுதல். [அலைகடல்] - க்ஷுபிதமான கடலிலே. [அரவமளாவி] - வாஸுகியைச்சுற்றி. [ஓர்குன்றம்வைத்த] அத்விதீயமானமலையை வைத்தநொய்ப்பம் அம்ருதம் கிளருந்தனையும் தானே திரியும்படியாகவாயிற்று. [எந்தாய்] - அச்செயலைக்காட்டி என்னை எழுதிக்கொண்டவனே! [கொடியேன் பருகுஇன்னமுதே] - தேவர்களைப்போலே நித்யத்வத்தைக்கொள்ளாதே உன்னையே ஆசைப்படுகிற எனக்கு நிரதிஸயபோக்யனானவனே! தேவர்களைப்போலே உப்புச்சாற்றிலே த்ருப்தனாகப்பெற்றிலேன். தோளும் தோள்மாலையுமாய்க் கடலைக்கடைகிற போதை அழகாயிற்று, இவர்க்கு அம்ருதம். இவருடைய அம்ருதம் விஸஜாதீயமாயிருக்கிறபடி.

ஈடு.— ஏழாம்பாட்டு.நீஉபேக்ஷித்தால்,அதிவேலமான இந்த்ரியங்களை என்னாலே வெல்ல உபாயமுண்டோ? என்கிறார்.

---

ஏழாம்பாட்டு.—ஒன்றுசொல்லி இத்யாதி. "உன்திருவருளில்லையேல் - வன்கயவரான - ஓர்ஐவரை - என்றுயான் வெல்கிற்பன்" என்ற பதங்களைப்பற்ற அவதாரிகை - நீஉபேக்ஷித்தால் இத்யாதி.

[ஒன்றுசொல்லி] - "ராமோத்விர்நாபிபாஷதே" (ராமோத்விர்நாபிபாஷதே) என்பாரைப்பற்றிப் பயங்கெட்டிருக்கிறேனே? அங்ஙனேயாகில், "ஏதத்வ்ரதம் மம" (ஏதத்வ்ரதம் மம) என்றதுவும் தப்பாதிறே. [ஒன்றுசொல்லியொருத்தினில்நிற்கிலாத] - ஒரு வார்த்தையைச் சொல்லி அதுக்கீடான ஓரர்த்தத்திலே நிற்கக்கடவதல்லாத. ஒரு விஷயத்தைச் சொல்லி, அது அநுபவிக்குந்தனையும் ஓரிடத்திலேநில்லாத. ஒருத்து - ஒருமைப்பாடு. [ஓரைவர்] - இப்படியிருப்பார் அநேகர். [வன்கயவரை] - பழகப்பழக நிர்வ்ருணரானவர்களை. [என்றுயான்வெல்கிற்பன்] - "இன்றல்லவாகில் நாளைவெல்லுகிறான், தானே வென்று வருகிறான்" என்றிருக்கிறாயோ? [உன்திருவருளில்லையேல்] - அவன் ப்ரஸாதமுண்டாகில் ஜயிக்கவுமாமாகாதே. "அருளென்னும் ஒள்வாளுருவி எறிந்தேனைம் புலன்கள்" என்னக்கடவதிறே. உன்னை யண்டைகொள்ளாதே பாண்டவர்கள் துர்யோதநனை வெல்லுமன்றன்றே, நான் இந்த்ரியங்களை வெல்லுவது. க்ருஷ்ணனையாஶ்ரயித்து அர்ஜுநன் ஶத்ருக்களைஜயித்தானிறே: "க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாஶ்ச பாண்டவா:." (க்ருஷ்ணாஶ்ரயா:க்ருஷ்ணபலா:க்ருஷ்ணநாதாஶ்சபாண்டவா:.) [அன்றுதேவரசுரர்வாங்க] - நம்மருள்பெற்று வென்றாருண்டோ? என்ன; துர்வாஸஶ்ஶாபத்தினன்று உன்ப்ரஸாதம்பெற்றன்றே தேவர்கள் கடலைக்கடைந்தது? தேவர்களும் அசுரர்களும் கைவாங்கக் கடைந்தானென்னுதல். அன்றிக்கே, வாங்குதல் - வலித்தலாய், அவர்கள் தங்களுக்கே கடையலாம்படி பண்ணிக்கொடுத்தானென்னுதல். [அலைகடல் இத்யாதி] - பெரிய அலையையுடைத்தானகடலிலே, ஒரு † சித்வஸ்துவான வாசுகியைக் கயிறாகக்கொண்டு, சலிப்பிக்கவொண்ணாததொரு பர்வதத்தை மத்தாகக்கொண்டு, அத்தை வாசுகியையிட்டுச்சுற்றிவைத்த நோய்ப்பம் எல்லார்க்கும் கடையலாம்படியிருக்கை: நமக்கும் கடையப்போம்படியாயிருக்கை. [எந்தாய்] - தாமும் ஒரு ப்ரயோஜநம்பெறப் பார்க்

---

"ஒன்றுசொல்லி யொருத்தினில் நிற்கிலாத" என்றதுக்கு ஸார்த்தஸாவம் - ராமோத்விர் இத்யாதி. "தத்ப்ரூஹி வசநம் தேவி ராஜ்ஞோயதபிகாங்க்ஷிதம் । கரிஷ்யே ப்ரதிஜாநே ச ராமோத்விர்நாபிபாஷதே" இதி அயோத்யாகாண்டே. [கஅ-ங0] அவர்களைப் பற்றினால் பயம் கெட்டிருக்கலாம் ப்ரகாரமேதென்ன - அங்ஙனேயாகில் இத்யாதி. அங்ஙனேயாகில் என்றது - இரண்டாம்வார்த்தை இல்லையென்றாகில் என்றபடி. ஶப்தார்த்தம் - ஒருவார்த்தையை இத்யாதி. விவரணம் - ஒருவிஷயத்தை இத்யாதி. "ஓர்" என்று - அத்விதீயத்வம். ஆவது - ஒருவர்நினைத்தத்தை யொருவர் நினையாதே தனித்தனியே ப்ரதாநரா யிருக்கை * வன்மைக்கர்த்தம் - பழகப்பழக இத்யாதி. கயவர் - நிர்வ்ருணர்: வலரென்றுமாம். "என்றுயான்வெல்கிற்பன்" என்றதுக்கு ஸாவம்-இன்றல்லவாகில் இத்யாதி. ஒருநாளும் வெல்லமுடியாதென்று கருத்து. வ்யதிரேக ஸித்தார்த்தத்தை அருளிச்செய்கிறார் - அவன் ப்ரஸாதம் இத்யாதி. அவன் ப்ரஸாதமுண்டானால் ஜயிக்கலாமோ? என்ன - அருளென்னும் இத்யாதி. அருளாகிற அழகிய புகரையுடைய வாளை உருவிவீசினேன் ஐம்புலன்களை யென்றபடி. திருமொழி, ஆறாம்பத்து இரண்டாந் திருமொழி, நாலாம்பாட்டு: "பிறிந்தேன்" இத்யாதி. "உன் திருவருளில்லையேல் - என்று யான்வெல்கிற்பன்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் - உன்னை யண்டை இத்யாதி. அவனை யண்டைகொண்டே ஜயித்தார்களோ? என்ன- க்ருஷ்ணனை இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - க்ருஷ்ணாஶ்ரயா இத்யாதி. "அன்றுதேவர்" இத்யாதிக்கு அவதாரிகை - நம்மருள் இத்யாதி. "அன்று" - 'துர்வாஸஶ்ஶாபத்தின் அன்று. நொய்ப்பம் - நேர்ப்பு. 'எல்லார்க்கும்' என்றதுக்குஸாவம் - நமக்கும் பார்க்காகக் கடைந்ததுக்குத் தோற்று, "எந்தாய்" என்பானென்? என்ன - தாமுமொரு இத்யாதி. அதாவது -

---

† சிந்மாத்ரமான என்று பாடாந்தரம்.

கிறு ராகையாலே அது தம்பேறுயிருக்கிறபடி. [கோடியேன்பருகு இன்னமுதே] - கடைந்தத்தையே ஆசைப்படப் பெற்றிலேன். நீ செய்தது கொண்டு த்ருப்தனாகவேண்டியிருக்க, "அட்டதோழியச்சுட்டதுகொடுவோ"என்று உன்னை நிர்ப்பந்திக்கும்படியான பாபத்தைப் பண்ணினேன். (எ)

---

## எட்டாம் பாட்டு.

இன்னமுதெனத்தோன்றி ஓரைவர்யாவரையும்மயக்கநீவைத்த
† முன்னமாயமெல்லாம் முழுவேரரிந்து என்னையுன்
சின்னமுந்திருமூர்த்தியுஞ் சிந்தித்தேத்திக்கைதொழவேயருளெனக்கு
என்னம்மா! என்கண்ணா! இமையோர்தம்குலமுதலே!

*ஆ.—(இன்னமுதென) - அநுபவவேளையாம் அம்ருதோபமமாய், விபாகே நிரயஹேதுத்வேந விஷோபமமாய், த்வத்ஸ்வரூப ரூபகுண விபவைஸ்வரிய யாதாத்ம்ய விஷயமோஹுஷீகரான தேவாதிகளையுங்கூட மோஹிப்பிக்கும்படி ஸப்தாதிவிஷயரூபேண உன்னாலே நிர்மிதமான ப்ரக்ருதி ஸம்பந்தத்தை ஸஹேதுகமாகப்போக்கி, அயர்வறுமமரர்கள் பரிஷத்திலே என்னைவாங்கி, ப்ராக்ருதவிஷய விஸ்மரணபூர்வகமாக, உன்னுடைய சங்கசக்ரகதா சார்ங்காதி அஸங்க்யேய திவ்யசிஹ்நங்களையும்,அவற்றாலே யலங்க்ருதமான திருமேனியையுமே சிந்தித்தேத்திக் கைதொழவேயருள் எனக்குஎம்பிரானே! ஆஸ்ரிதவத்ஸலனே! என்றுஎம்பெருமானை ப்ரார்த்திக்கிறார்.*

*ஒ.—எட்டாம்பாட்டில், என்னுடைய ப்ரக்ருதி ஸம்பந்தத்தை அறுத்து, நான் மநோவாக்காயங்களினால் உன்னை நிரந்தரமாக அனுபவிக்கும்படிபண்ணி அருளவேணுமென்கிறார் [இன்னமுது என்றுதொடங்கி.]- நிரதிஸயபோக்யம்போலே தோற்றி ப்ரபலமான ஸப்தாதி விஷயங்களானவை எத்தனையேனும்அளவுடையாரையும் மதிகெடுக்கைக்கடியாக நீ பண்ணிவைத்த பழையதான இஸ்ஸம்ஸாரஸம்பந்தத்தை என்னை நிஸ்ஸேஷமாகவிடுவித்து. [உன்சின்னமும் என்றுதொடங்கி]-எனக்குப்பரிவனானக்ருஷ்ணனே! அயர்வறுமமரர்களை அடிமைகொண்டு உஜ்ஜீவிப்பிக்குமாபோலே நான் உன்திரு*

---

*ஆஸ்ரிதரிலேயொருவர் அர்த்தித்தகார்யம் செய்தால் அல்லாதார் அர்த்தித்தகாரியமும் செய்ய வேண்டுகையாலே, தாம் அர்த்தித்தகாரியமும் செய்யும் என்ற அறுதியிட்டு-'அவர்களுக்குச்செய்தது தம்பேறுயிருக்கும்' என்றபடி. "இன்னமுதே" என்றத்தைக் கடாக்ஷித்து, "கொடியேன்" என்றதுக்கர்த்தம் - கடைந்தத்தை இத்யாதி. அர்த்தாந்தரம் - நீசெய்தது இத்யாதி. அதாவது-மாநஸாநுபவத்தில் த்ருப்தனாகாதே "காணவேணும்" என்னும்படியான பாபத்தைப்பண்ணினேன் என்றபடி. அட்டதொழியச் சுட்டது கொடுவா என்றது - தன் பிள்ளையையறுத்து உடலைச்சமைத்துத் தலையையடுப்புக்கிடையிலே பொகட்டு உடல்மாம்சத்தை விருந்திட்ட சிறுத்தொண்டனைப்பார்த்து, அவன் யஸஸ்ஸோதநார்த்தமாக, "அட்டமாம்சமிருக்கச் சுட்டமுதத்தைக்கொடுவா" என்று ருத்ரன் சொன்னது. அன்று 'தேவர்' என்றுதொடங்கி, 'இன்னமுதே - ஒன்றுசொல்லி' என்றுதொடங்கி, 'வன்கயவரை - உன்திருவருளில்லையேல் - என்று யான் வெல்கிற்பன்' இத்யந்வயః.* (எ)

---

† *'முன்னை' என்பதும் பாடம்.*

வடிவையும் திருவாழிமுதலான திவ்யசிஹ்நங்களையும் நிரந்தரமாகச் சிந்தித்துவத்திக் கைதொழும்படி பண்ணியருளவேணும்.

ப.—அநந்தரம், எனக்கு விஷயேந்த்ரியங்களை வென்று உன்னுடைய அஸாதாரணசிஹ்நங்களை அநுபவிக்கும்படி க்ருபைபண்ணியருளவேணும் என்கிறார்.

என் - எனக்கு, அம்மா - நிருபாதிகஸ்வாமியாய், (அந்தஸம்பந்தமடியாக), என் கண்ணா - உன் ஸௌலப்யத்தை எனக்கு ப்ரகாசிப்பித்தவனாய், இமையோர்தங்குலம் - நித்யசூரிகள் திரளுக்கு, முதலே - ஸத்தாதிஹேதுபூதனானவனே! ஓர் - அத்விதீயமான, ஐவர் - ஐந்திந்த்ரியங்களாலே, இன் - இனிய, அமுது - அம்ருதம், என - என்னும்படி போக்யமாய், தோன்றி - ப்ரகாசித்து, யாவரையும் - எத்தனையேனும் அளவுடையரான ப்ரஹ்மாதிகளையும், மயக்க - மோஹிப்பிக்கைக்காக, நீ - (ஸர்வசக்தியான) நீ, வைத்த-(உண்டாக்கி)வைத்த, முன்னம்-அநாதிஸித்தமாய், மாயம் - அஜ்ஞாநவர்த்தகமாகையாலே மாயாசப்தவாச்யமான விஷயங்கள், எல்லாம் - எல்லாவற்றையும், முழு - முழுக்க, வேர் - வேர், அரிந்து - அறுத்து, என்னை-ஸம்ஸாரஸூதனான என்னை, உன் - உன்னுடைய, சின்னமும் - அஸாதாரணசிஹ்நமான சங்கசக்ராதிகளையும், திரு - அவற்றால் அலங்க்ருதமான, மூர்த்தியும் - விக்ரஹத்தையும், சிந்தித்து - நெஞ்சாலே நினைத்து, ஏத்தி - வாக்காலே ஸ்துதித்து, கை - கையாலே, தொழ-தொழும்படியாக, எனக்கே - எனக்கென்ன விசேஷித்து, அருள் - க்ருபைபண்ணியருளவேணும். "ஐவரையும், மாயமெல்லாவற்றையும்" என்று - எண்ணுகவுமாம்; மாயமென்று - சப்தாதிஸஹிதையான ப்ரக்ருதியாகவுமாம்.

இ—எட்டாம்பாட்டில், என் ப்ரக்ருதிஸம்பந்தத்தை அறுத்து, நான் மநோவாக்காயங்களாலே உன்னை நிரந்தரமாக அநுபவிக்கும்படிபண்ணி அருளவேணும் என்கிறார்.

[இன்னமுதெனத் தோன்றி] - முகப்பிலே நிரதிசய போக்யம்போலே தோன்றி. "அக்ரே ऽம்ருதோபம்" என்னும்படியே, விபாகத்தில் இருக்குமிருப்பு உபக்ரமத்திலே தோன்றிற்றாகில் மேல்விழாதொழியலாயிற்று. வாயிலிட்டால் ரஸித்து, அநந்தரம் முடிப்பன சிலவிஷங்களுண்டு; அதுபோலே ஆயிற்று. [ஓரைவர்]-தனித்தனியே ப்ரபலமாய் அத்விதீயமான சப்தாதிகள் ஐந்தும். [யாவரையும் மயக்க] - எத்தனையேனும் அதிசயிதஜ்ஞாநரையும் கலங்கப்பண்ணும்படியாக. [நீவைத்த] - ஸர்வசக்தியான நீவைத்த. [முன்னமாயமெல்லாம்] - அநாதியான ப்ரக்ருதி ஸம்பந்தத்தைக் கார்யத்தோடேகூட. [முழுவேர் அரிந்து] - ஸவாஸநமாகப்போக்கி. [என்னை] - ஸம்ஸாரஹயபீதனான என்னை. [உன்சின்னமும்]-சங்கசக்ராதி திவ்யாயுதங்களையும். [திருமூர்த்தியும்] - அவற்றுக்கு ஆச்ரயமான திவ்யமங்கள விக்ரஹத்தையும். [சிந்தித்து] - நெஞ்சாலே அநுஸந்தித்து, அந்த ப்ரீதி உள்ளடங்காதே வாயாலே பேசித்தொழுகிறதுவே யாத்ரையாம்படி பண்ணியருளவேணும். [என்னம்மா] - எனக்குத் தாய்போலே பரிவனானவனே! [என்கண்ணா] - எனக்குஸுலபனானவனே! [இமையோர்தம் குலமுதலே]-நித்யஸூரிகள் ஸமூஹத்தை அடிமைகொண்டு உஜ்ஜீவிப்பிக்குமவனே! நித்யஸூரிகளை அடிமை கொள்ளுமாபோலே, நானும் அடிமை செய்யும்படிபண்ணியருளவேணும்என்கை. ஒரு விசேஷத்திக்காகத் தாயும் தந்தையுமாய் அவர்கள் சிந்தித்து ஏத்தித்தொழும்படி அருளிக்கொண்டிருக்கிறவனே!

ஈடு.—எட்டாம்பாட்டு. என் ப்ரக்ருதிஸம்பந்தத்தை யறுத்து, நான் மநோ வாக்காயங்களாலே உன்னை நிரந்தரமாக அநுபவிக்கும்படி பண்ணியருளவேணும் என்கிறார்.

[இன்னமுதெனத்தோன்றி]-விபாகத்தில்ஃலிக்குமது முகப்பிலே யாகப்பெற்றேனாகில் கைவிடலாங்கிடீர். 'அமெ ஊரூமெதாவசு' (அக்ரேம்ருதோபமம்) இறே; பரிணமத்தில் விஷமிறே. விபாகத்தில் ஃலிக்குமது உபக்ரமத்தே தோன்றிற்றாகில் மேல்விழாதொழியலாயிற்று. பழியும் தர்மஹாநியுமாய், மேல் நரகமானாலும் விடப்போகாதிருக்கை. ப்ரக்ருதி ப்ராக்ருதங்களுக்கு இங்ஙனே யொருதன்மையுண்டு; த்ருதராஷ்ட்ரனோடொக்கும். அகவாயில் தர்மருசியின்றிக்கே இருக்கச்செய்தே, வாயாலே அநுகூலம்போலே இருக்குமவற்றைச் சொல்லாநிற்கும்அவனும். [ஓரைவர்] - தனித்தனியே ப்ரபலமாய் அத்விதீயமான ஶப்தாதிவிஷயங்கள் ஐந்தும். [யாவரையும் மயக்க] - க்ஷுத்ரரான மநுஷ்யரோடு, அளவுடையரான ப்ரஹ்மாதிகளோடு வாசியற அறிவுகெடுக்கும்படிக்கீடாக. [நீவைத்த] - ஸர்வஶக்தியான நீ வைத்த. தன்னாலே ஸ்ருஷ்டமாயிற்றது என்றறியாதே, "அதிலே ஒருபோக்யதையுண்டு" என்று ஸ்ப்ருஹை பண்ணுகிறானிறே ப்ரஹ்மா. [முன்னமாயமெல்லாம்] - அநாதியான ஸம்ஸாரத்தையெல்லாம். [முழுவேரரிந்து] - ஸவாஸநமாகப்போக்கி. [என்னை] - ஸம்ஸாரஸயஹீதனான என்னை. செய்தஅம்ஶத்தே த்ருப்தனாயிருக்குமிறே அவன். "ஜ்ஞாநலாபம் பண்ணிக்கொடுத்தோம்" என்றிறே அவனிருக்கிறது. அதுபோராதிறே; ஸம்ஸாரத்தை ஸவாஸநமாகப் போக்கவேண்டியிருக்குமிறே இவர்க்கு. [உன்சின்னமுந்திருமூர்த்தியும்] - "தவளவொண்சங்குசக்கரம்" என்றும், "வலக்கையாழியிடக்கைச்சங்கம்" என்றும், "அரவிந்தலோசனன்" என்றுஞ்சொல்லுகிறபடியே, திவ்யாயுதங்களையும் அவற்றுக்கு ஸத்ருஶமான திருமேனியையும். [சிந்தித்து இத்யாதி] - இவற்றை நெஞ்சாலே யநுஸந்தித்து, உள்ளடங்காமல் வாய்விட்டு ஸ்தோத்ரம்பண்ணி, பின்னைத்திருவடிகளிலே விழும்படிக்கு ஈடாக எனக்குஅருளவேணும். வாயாலே யொன்றுசொல்லாநிற்க, நெஞ்சு வேறேயொன்று

---

*எட்டாம்பாட்டு.—இன்னமுது இத்யாதி. "மாயமெல்லாம் முழுவேரரிந்து, சிந்தித்தேத்திக்கைதொழவே யருள்" என்ற பதங்களைக்கடாக்ஷித்து அவதாரிகை - என்ப்ரக்ருதி இத்யாதி.*

*இனிய அம்ருதமாயென்னாதே, "இனிய அம்ருதமென்னலாம்படி தோன்றி" என்கையாலே ஆபாத ப்ரதீதியிலே யம்ருதமாய் விபாகத்தில் அநர்த்தமென்னுமிடம் விவக்ஷிதத்திறே; இத்தைச் சொல்லி, விஷண்ணராகிறவருடைய ஹார்த்தபாவத்தை அருளிச்செய்கிறார் - விபாகத்தில் இத்யாதி. முன்னே இன்னமுதெனத்தோன்றுமோ? என்ன - அக்ரேம்ருதோபமம்இத்யாதி. "விஷயெந்த்ரியஸம்யொகாஜ்ஜத்தஊமெ ஊரூமெதாவசு । வரிணாமெவிஷமிவ தத்ஸுவம்ராஜஸம் ஸூரூதங்" இதிகீதாஸு அஷ்டாதஶே(ந அ). விவரணம்-விபாகத்தில் இத்யாதி. இனிமைக்கர்த்தம்-பழியும் இத்யாதி. விபாகத்தில் விஷமாய் உபக்ரமத்தில் அம்ருதமாயிருக்குமது, ப்ரக்ருதி ப்ராக்ருதங்களுக்குள்ள ஸ்வபாவமென்னுமத்தை ஸநிதர்சநமாக அருளிச்செய்கிறார் - ப்ரக்ருதி இத்யாதி வாக்யத்வயத்தாலே. எப்படி யொக்குமென்ன, த்ருதராஷ்ட்ரன்படியை யருளிச்செய்கிறார் - அகவாயில் இத்யாதி. அப்படியே இவையும் முகப்பிலின்னமுதாய் அநந்தரம் விநாசமாக்குமென்றபடி. ப்ரபலமாய் அதஏவஅத்விதீயமான என்றபடி. "யாவரையும்" என்ற ஶப்தார்த்தம் - க்ஷுத்ரரான இத்யாதி. ப்ரஹ்மா இந்த்ரியவஶ்யனானானோ? என்ன - தன்னாலே இத்யாதி. "முழுவேர்" - வேர்முழுக்கவென்றபடி. "முழுவேரரிந்து கைதொழவேயருள்" என்று அர்த்திக்கிறதென்? ஸர்வஜ்ஞனறி*

நினைத்தல் ; ''உனக்குசேஷம்''என்று வேறேயோரிடத்தே தொழில்செய்தல் செய்கையன்றிக்கே, மனோவாக்காயங்கள் மூன்றும் உன்பக்கலிலே ப்ரவணமாம்படி பண்ணியருளவேணும். [என்னம்மா] - எனக்குத்தாய்போல் பரிவனானவனே! இஸ்ஸப்தம் வசிக்கிறபடி:—அம்மே என்கிறதிலே ஸம்போதநவசநமாகையாலும் சேதநனைச்சொல்லுகையாலும் ஆகாரமேற்று விளியாய் 'அம்மா' என்றுகிடக்கிறது. [என்கண்ணா] - அந்தப்பரிவை அர்த்தக்ரியாகாரியாக்கினவனே! [இமையோர்தங்குலமுதலே] - ஒருநாட்டுக்காக உன்னைக் கொடுத்துக்கொண்டு இருக்கிறவனல்லையோ? அநேகர் ஆசைப்பாடு ஒருவனுக்கு உண்டானால் கொடுக்கலாகாதோ? 'என்னம்மா' இத்யாதிக்கு - எனக்கு ஸ்வாமியாய், ''ஸ்வத்தை நசிக்கக் கொடுக்கவொண்ணாது''என்று க்ருஷ்ணனாய்வந்து அவதரித்து என்னைநோக்கினவனே! அவதாரம் ஸர்வஸாதாரணமாயிருக்கச்செய்தே, இவர் தமக்காகச்செய்ததென்றிருப்பரே. மனோவாக்காயங்கள் மூன்றும் ஒருங்கி உன்பக்கலிலே ப்ரவணமாம்படி ஒருநாட்டுக்குப் பண்ணிக்கொடுத்த நீ, அத்தை எனக்கொருவனுக்கும் செய்யத்தட்டென்? (அ)

## ஒன்பதாம் பாட்டு.

குலமுதலடுந்தீவினைக் கொடுவன்குழியினில்வீழ்க்குமைவரை
வலமுதல்கெடுக்கும் வரமேதந்தருள்கண்டாய்
நிலமுதலினியெவ்வுலகுக்கும் நிற்பனசெல்வனவெனப் பொருள்
பலமுதல்படைத்தாய்! என்கண்ணா! என்பரஞ்சுடரே!

ஆ.—(குலமுதல்.) - ஸங்கல்பமாத்ர பரிநிர்மித நிகிலபுவந ததந்தர்வர்த்தி ஸகலசராசர ஜந்துஜாதனாய், ஸ்வஶக்தியாய், ராமக்ருஷ்ணாதிரூபேண அவதீர்ய ப்ரணதஜந பரித்ராண தத்விரோதி நிரஸநைக தீக்ஷனாயிருந்த நீ, ஸாந்வயமத்விநாஶகர துஷ்க்ருதாதிகோர துராரோஹ அகாத மூர்த்தநிபதந ஹேதுபூதமான பஞ்சேந்த்ரியங்களினுடைய

---

டானே? என்ன - செய்தஅம்சத்தே இத்யாதி. விவரணம் - ஜ்ஞாநலாபம் இத்யாதி. ''கைதொழுவே'' என்கிறஏவகாரார்த்தம் - வாயாலே இத்யாதி. அதாவது - கரணத்ரயமும் உன்பக்கலிலேயாகவேணும் என்றபடி. 'இஸ்ஸப்தம்வசிக்கிறபடி' என்றதுக்குக்கருத்து:—தாயாரை ஸம்போதிக்குமிடத்தில, ''அம்மே'' என்று ஸம்போதிக்க வேண்டியிருக்க, ''அம்மா'' என்று ஸம்போதிக்கிறது புருஷனைத் தாயாராக ஸம்போதிக்கையாலே, ''அம்மா'' என்ற ஆகாரமேற்று விளியாயிருக்கிறதென்றபடி. ஆகாரமேற்றுவிளியாவது-ஏகாரஸ்தாநத்திலே ஆகாரம்ஆதேஶமாயேறி, ''அம்மா''என்று ஸம்போதித்துஅழைக்கையாயிருக்கை என்றபடி. ஏற்றென்றது-ஆதேஶம். விளி-அழைக்கை. அந்தப்பரிவை - தாய்போலேபரிவனான ஆகாரத்தை என்றபடி. அர்த்தக்ரியாகாரி - அநுஷ்டாநபர்யந்தம். அவர்கள் அநேகராகையாலே செய்தோமென்ன - அநேகர் இத்யாதி. ''அம்மா'' என்றதுக்குக் கீழ் பரிவனாக அருளிச்செய்து, அர்த்தாந்தரம் - எனக்குஸ்வாமியாய் என்று. அவதாரம் ஸர்வஸாதாரணமாயிருக்க, ''என்கண்ணா'' என்கிறதென்? என்ன - அவதாரம் இத்யாதி. ''இமையோர்தங்குலமுதலே - சிந்தித்தேத்திக் கைதொழவேயருள் எனக்கு'' என்று அந்வயமுகேநஸ்வம்- மனோவாக்காயங்கள் இத்யாதி. 'என்னம்மா' என்று தொடங்கி, 'குலமுதலே - இன்னமுதென' இத்யாரப்ய, 'என்னுடைய - முன்னமாயமெல்லாம் முழுவேரரிந்து - உன்சின்னமுந்திருமூர்த்தியும் சிந்தித்தேத்திக்கைதொழவே - எனக்கு அருள்' இத்யந்வயம். 'என்னை' என்றவிடத்தில், ஐகாரம் - அவ்யயமாய், என்னுடைய என்றபடி. (அ)

பலத்தை ஸஹேதுகமாகக்கெடுக்கையாகிற என்னுடைய அஹித
ஷம்

ஒ.—ஒன்பதாம் பாட்டில், ஸாநுபந்த்யமாக முடிக்கவற்றான பாபங்களை விளைக்கும் விஷயங்களிலே ஆத்மாவைத் தள்ளும் இந்த்ரியங்கள் என்னை நலியாதபடி பண்ணியருளவேணும் என்கிறார்.

[குலமென்று தொடங்கி]-குலத்தை அடியோடே முடிக்கவற்றான மஹாபாபங்களை விளைப்பனவுமாய் துஷ்பரிஹாரமாய்ப் புக்காரைத் தன்பக்கலில்நின்றும் போகாதபடி பிடிக்கவற்றான ஶப்தாதி விஷயங்களிலே புகத்தள்ளும் ஐந்து இந்த்ரியங்களையும். [வலம் என்று தொடங்கி] - பலத்தை முதலிலே கெடுக்கும் ப்ரஸாதங்களையே பண்ணியருளவேணும். [நிலமுதல் என்றுதொடங்கி] - பூமிதொடக்கமாக மற்றும் எல்லா லோகங்களுக்கும் ஸ்தாவரஜங்கமாத்மகமான அநேக பதார்த்தங்களையும் முதலிலே உண்டாக்குவதுஞ்செய்து எனக்கநுபாவ்யனாய் நிரதிஶயபோக்யனுமானவனே! நினைத்தது செய்யவல்லையாய் எனக்கு உபகாரகனுமான நீ என்னுடைய இந்த்ரியபாதையைப் போக்கி அருளவேணுமென்று கருத்து.

ப.—அநந்தரம், ஸகலஜகதுத்பாதகனாய் எனக்கநுபாவ்யனாய் போக்யனான நீ, விஷயங்களிலே தள்ளும் இந்த்ரியபலத்தை உந்மூலநம்பண்ணும்படி ப்ரஸாதத்தைப்

நிலம் - பூமி, முதல் - முதலாக, இனி - மற்றும், எவ்வுலகுக்கும் - எல்லா லோகங்களுக்கும், நிற்பனசெல்வனவென - ஸ்தாவரஜங்கமரூபமான, பொருள்-பதார்த்தங்கள், பல - பலவற்றையும், முதல் - ப்ரதமத்திலே, படைத்தாய் - படைத்தவனாய், என்கண்ணா - (ஜகத்ரக்ஷணார்த்தமாக) க்ருஷ்ணனாயவதரித்த ஸௌலப்யத்தை எனக்கு ப்ரகாஶிப்பித்தவனாய், என் - எனக்கநுபாவ்யனுமாய், பாஞ்சுடரே - நிரதிஶயௌஜ்ஜ்வல்யயுக்தமான வடிவையுடையவனே! குலம் - வம்ஶத்தை, முதல் - மூலபூதபுருஷனோடே, அடும் - அதஃபதிக்கும்படி முடிக்கவல்ல, தீ-தாபகரமான, வினை - பாபத்துக்கு ப்ரவர்த்தகமாம், கொடு - கொடுமையை யுடைத்தான, வன் - வலியவிஷயங்களாகிற, [கரையேறவொண்ணாத], குழியினில் - படுகுழியிலே, வீழ்க்கும் - தள்ளக்கடவவான, ஐவரை - ஐந்து இந்த்ரியங்களை, வலமுதல் - ஸ்வபலமூலமான துர்வாஸனையோடே, கெடுக்கும்-, வலமே - ப்ரஸாதபலத்தையே, தந்தருள்கண்டாய் - தந்தருளவேணும். வலமென்று - ப்ரபலமான ப்ரஸாதத்தை லக்ஷித்தல்; வலமென்று - ஆநுகூல்யமாய், ப்ரஸாதந்தானுதல.

இ.—ஒன்பதாம்பாட்டில், ஸாநுபந்த்யமாகமுடிக்கும் விஷயங்களிலே ஆத்மாவைத்தள்ளும் இந்த்ரியங்கள் என்னை நலியாதொழியவேணும் என்கிறார்.

[குலமுதல் அடும்] - குலத்தை அடியோடே முடிக்கவற்றாகை. ஒருவன் செய்தபாபம் அவனளவிற்போகாது, குலமாக முடிக்கும். [தீவினை] - இப்படிப்பட்ட மஹாபாபங்களை விளைக்கவற்றாய், கொடிதாய் - துஷ்பரிஹாரமாய். [வன்குழி]-வலிய குழி. புக்கால் கால்வாங்கவொண்ணாத ஶப்தாதிகளிலே. [வீழ்க்கும்ஐவரை] - புகத்தள்ளும் ஶ்ரோத்ராதிகளை. "நஹி தர்மவிருத்தேஷு பஹ்வபாயேஷு கர்மஸு। மூலகாதிஷு ஸஜ்ஜந்தே புத்திமந்தோ பவத்விதா:" என்று மால்யவான் ராவண

*னுக்குச் சொன்னானிறே. [வலமுதல் இத்யாதி] - இந்த்ரியங்களுடைய வலத்தை வாஸனையோடே போக்கவல்லேனாம்படி ப்ரஸாதங்களைப்பண்ணி அருளவேணும். [நில முதல் இத்யாதி] - பூமிதொடக்கமாக மற்றுமெல்லாலோகங்களுக்கும் ஸ்தாவரஜங்கமாத்மகமாயுள்ள அநேக பதார்த்தங்களையும் முதலிலே படைத்தாய். ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் மோக்ஷமான பின்பு அதுதான் பெறவேண்டாவோ? என்கை. [என் கண்ணா என்பரஞ்சுடரே] - எனக்கு ஸ்வ்யனாய் நிரதிஶயபோக்யனுமாய் உள்ளவனே! ஸர்வஶக்தியாய் எனக்கு ஸ்வ்யனாய் போக்யனுமான நீயே என் இந்த்ரியவஶ்யதையைப் போக்கியருளவேணும்.*

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. (ஸாநுபந்தமாக முடிக்குமதான பாபங்களை விளைக்கும்) விஷயங்களிலே ஆத்மாவைத் தள்ளும் இந்த்ரியங்கள் என்னை நலியாதபடி பண்ணவேணு மென்கிறார்.

[குலமுதல்இத்யாதி] - ஒருவன் பண்ணின பாபம் அவன்தன்னளவிலே போகையன்றிக்கே குலமாக முதலற முடிக்கவற்றான பாபங்களை விளைக்கக்கடவதாய், கொடியதாய் அநுபவித்து முடியவொண்ணாதபடியாய், வன்குழியாய் - வலியதாய், கால் வாங்கவொண்ணாதபடியான ஶப்தாதிவிஷயங்களாகிற குழிகளிலே தள்ளக்கடவதான இந்த்ரியங்களை. "𑌨𑌹𑌿 𑌧𑌰𑍍𑌮𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑍇𑌷𑍁 𑌬𑌹𑍍𑌵𑌪𑌾𑌯𑍇𑌷𑍁 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 । 𑌮𑍂𑌲𑌘𑌾𑌤𑌿𑌷𑍁 𑌸𑌜𑍍𑌜𑌨𑍍𑌤𑍇 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌨𑍍𑌤𑍋 𑌭𑌵𑌦𑍍𑌵𑌿𑌧𑌾𑌃" (நஹிதர்மவிருத்தேஷு பஹ்வபாயேஷுகர்மஸு! மூலகாதிஷு ஸஜ்ஜந்தேபுத்திமந்தோபவத்விதாஃ) 'செய்யக்கடவதல்லாததாய், சொல்லுகிற பலத்தினளவல்லாத அபாயங்களையுடைத்தாய், வம்ஶங்களை முதலற முடிக்கக்கடவதான செயல்களிலே, உன்போல்வராய்ப் புத்திமாங்களா யிருப்பார் ப்ரவர்த்தியார்கள் காண்! என்றானிறே' மால்யவான், ராவணனுக்கு. [வலமுதல் கெடுக்கும் வரமே தந்தருள்கண்டாய்] - இவற்றினுடைய பலத்தை முதலிலே முடிக்கக்கடவதான உன்னுடைய ப்ரஸாதத்தைப் பண்ணியருளவேணும். நம்மாலே தனியே இங்ஙனே செய்யலாயிருக்குமோ? என்ன; [நிலமுதலித்யாதி.] - நீ, ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகள் பண்ணுகிறபோது உனக்குஆர் துணைப்படச்செய்தாய்? என்கிறார். ஸ்ருஷ்டி ப்ரயோஜநம் மோக்ஷமன்றே? அது பெறவேண்டாவோ? பூமி முதலாக மற்றும்இப்படியுண்டான எல்லா லோகங்களிலும் ஸ்த்தாவரஜங்கமங்களான பலபதார்த்தங்களையும் முன்பேயுண்டாக்கினாய். (இனி மற்றும்) [என்கண்ணா, என்பரஞ்சுடரே!] - அப்படிப்போதுவான ரக்ஷ

---

*ஒன்பதாம்பாட்டு.—குலமுதல் இத்யாதி. "வரமேதந்தருள்கண்டாய்" என்னுமளவுங் கடாக்ஷித்தவதாரிகை - விஷயங்களிலே இத்யாதி.*

*"கொடு" என்றதுக்கர்த்தம் - அநுபவித்துமுடியவொண்ணாதபடியாய் என்று. "விஷயப்ராவண்யம் குலமாக நசிப்பிக்கும்"என்றதுக்கு ப்ரமாணம் - நஹிதர்ம இத்யாதி. '𑌨𑌹𑌿 𑌧𑌰𑍍𑌮𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑍇𑌷𑍁 𑌬𑌹𑍍𑌵𑌪𑌾𑌯𑍇𑌷𑍁 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 । 𑌮𑍂𑌲𑌘𑌾𑌤𑌿𑌷𑍁 𑌸𑌜𑍍𑌜𑌨𑍍𑌤𑍇 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌨𑍍𑌤𑍋 𑌭𑌵𑌦𑍍𑌵𑌿𑌧𑌾𑌃" இதி ராவணம்ப்ரதி மால்யவான். இதுக்கர்த்தம் - செய்யக்கடவது இத்யாதி. இதுக்கு - மூலகாதிஷு என்கிறதிலே நோக்கு. வலம் - பலம். முதலிலேயென்றது - முதலிலே வாராதபடி யென்றபடி. "வரம்" - ப்ரஸாதத்தை. மேலுக்கவதாரிகை - நம்மாலே இத்யாதி ஜகத்ஸ்ருஷ்டியைச் சொல்லுகிறதுக்கு பாவம் - நீ ஜகத்ஸ்ருட்யாதிகள் இத்யாதி. பாவாந்தரம்- ஸ்ருஷ்டி ப்ரயோஜநம் இத்யாதி. "இனி" என்றதுக்கர்த்தம் - மற்றுமிப்படி என்றது. "பல - பொருள்"*

ணமொழிய, க்ருஷ்ணனுய் வந்தவதரித்து எனக்கு ஸுலபனுய், வடிவழகை எனக்கு உப கரித்தவனே! ஒருநாடாக அநுபவிக்கும் வடிவழகை என்னையொருவனையும் அநுபவிப் பித்தவனே! அழிந்தஜகத்தை உண்டாக்கின உனக்கு, உள்ளதுக்குஒருகுணுயாநம்பண் ணுகை யரிதோ? (௯)

## பத்தாம் பாட்டு.

என்பரஞ்சுடரே! என்றுன்னையலற்றி உன்னைத்தாமரைகட்கு
அன்புருகிநிற்குமதுநிற்கச்சுமடுதந்தாய்
வன்பரங்களெடுத்து ஐவர்திசைதிசைவலித்தெற்றுகின்றனர்
முன்டரவைகடைந்து அமுதங்கொண்டமூர்த்தியோ!

*ஆ.—(என்பரஞ்சுடரே.) - ஆஸ்ரிதருடைய அபேக்ஷிதத்தை முடிப்பானொரு வனுமாய் முடிக்கவல்லானொருவனுமா யிருக்கச்செய்தே, உன்னுடைய கல்யாணகுணாநு பவஜநித நிரதிஶய ப்ரீதியாலே அப்ரக்ருதிங்கதனுய்க்கொண்டு, 'என்பரஞ்சுடரே!' என்று உன்னையலற்றி உன்திருவடிகளிலுள்ள ப்ரேமாதிஶயத்தாலே நீராயுருகி நிற்கை யாகிற என்னுடைய ஸ்வரூபத்தையொழிய, விஷயாநுபவோபகரணமான ப்ரக்ருதியை எனக்குத்தந்தாய்; 'இந்த ப்ரக்ருத்யாஸ்ரமான இந்த்ரியங்கள் துர்பரமான விஷய பரங்களையெடுத்து ப்ரதிதிஶம்ஆகர்ஷித்து என்னை பாதியாநின்றனகிடாய்' என்று எம் பெருமானைக் கூப்பிடுகிறார்.*

*ஒ.— பத்தாம்பாட்டில், அடிமைக்கு விரோதியாய் விஷயாநுபவங்களுக்குப் பாங்கான உடம்பை எனக்குத்தந்தாய்; அதுவேஹேதுவாக ஐந்து இந்த்ரியங்களும் பொறுக்கவொண்ணுதபடி என்னை நலியாநின்றன. அவற்றைப்பரிஹரித்தருளவேணும் என்று ஆர்த்தராய் மஹார்த்வநியோடு கூப்பிடுகிறார்.*

*[என்பரஞ்சுடரே என்றுதொடங்கி] - எனக்கு நிரதிஶயபோக்யமானவனே என்று உன்னைக்குறித்துக் கூப்பிட்டு ஸ்ப்ருஹணீயமான உன்திருவடிகளிலுண்டான ஸ்நேஹத்தாலே ஶிதிலனுய்நிற்கையாகிற இப்புருஷார்த்தத்தை ஒழிய இந்த்ரியங்கள் சுமத்தின சுமையை யெல்லாம் சுமக்கைக்கு ஈடான ஶரீரமாகிற சும்மாட்டைத் தந்தாய். [வன்பரங்கள் என்றுதொடங்கி] - துர்பரங்களான விஷயபரங்களைச் சுமத்தி ஐந்து இந்த் ரியங்களும் திக்குத்தோறும் வலித்து எற்றுநின்றன. ஆஸ்ரிதாபேக்ஷித பூரணக்ஷமனுன நாயனேயோ! இந்த்ரியங்களை சேதநரைப்போலே பேசுவானென்? என்னில்; சிலசேத நர்வேணும் என்றுகோலி பாதிக்குமாபோலே பாதகமாகையால்.*

*பபதது. "என்பரஞ்சுடரே" என்றதுக்கர்த்தம் - வடிவழகை இத்யாதி. "பரஞ்சுடர்" என்று விசேஷித்து, "என்" என்றதுக்கு அர்த்தம் - ஒருநாடாக இத்யாதி. "பரம்" என்கையாலே - பரம பதவிக்ரஹமென்று லித்தம். "நிலமுதல்" இத்யாதியின் முந்தினதாத்பர்யவிவரணம் - அழிந்த இத் யாதி. யத்வா, உம்முடைய இந்த்ரியவஶ்யதையைப் போக்குகை அரிதுகாணும் என்ன - அழிந்த இத் யாதி என்று த்ருதீயதாத்பர்யமாதல். உத்தரார்த்தாநுஸந்தாநாநந்தரம், பூர்வார்த்தாநுஸந்தாநம் அந் வயப்ரகாரம்.* (க)

ப.—அநந்தரம், கடலைக்கடைந்து ஸாரமானஅம்ருதத்தைக்கொண்ட ஸ்வாமியான நீ, நிரதிஶயஸாரமான உன்னுடைய அநுபவம் நிற்க, விஷயபாரங்களையெடுத்து இந்த்ரியங்கள் நலியும்படியான சுமைபொறுக்கும் ஶரீரத்தைத்தந்தாய் என்கிறார்.

முன்-முற்காலத்திலே, பரவை - பரந்தஸமுத்ரத்தை, கடைந்து - கடைந்து, அமுதம் - (அதின்ஸாரபூதமான) அம்ருதத்தை, கொண்ட - கொண்டு (தேவாதிகளுக்கு) உபகரித்த, மூர்த்தி - ஸ்வாமித்வத்தையுடையவனே! என் - எனக்கு, பரஞ்சுடரே - நிரதிஶயமான உஜ்ஜ்வலபோக்யமே! என்று-என்று, உன்னை-உன்னை நோக்கி, அலற்றி- ப்ராவண்யத்தாலே அக்ரமமாகக்கூப்பிட்டு, உன் - உன்னுடைய, இணை - பரஸ்பர ஸத்ருஶமான, தாமரைகட்கு - திருவடிகளிரண்டுக்குமாக, அன்பு - ப்ரேமத்தாலே, உருகி - த்ரவீபூதனாய், நிற்கும் - நிற்கிற, அது - அந்தநிரதிஶயஸாரபூதமான ஆகாரம், நிற்க-, சுமடு-பாரஸஹமான சரீரமாகிற சும்மாட்டை, தந்தாய் - தந்தாய்; (அதடியாக), வன்- ப்ரபலமான, பரங்கள் - விஷயபாரங்களை, எடுத்து-, ஐவர் - ஐந்திந்த்ரியங்களானவை, திசைதிசை - ஸ்வாபிமதமானதிக்குக்களிலே, வலித்து - இழுத்து, எற்றுகின்றனர் - பீடியாநின்றன. ஓ - ஓ! இதென்ன அநர்த்தமென்று கருத்து.

இ.—பத்தாம்பாட்டில், அடிமைக்கு விரோதியாய் விஷயாநுபவத்துக்குப் பாங்கான உடம்பைத் தந்தாய்; அதுஹேதுவாக ஐந்து இந்த்ரியங்களும் நலியாநின்றன. அவற்றைப் பரிஹரித்தருளவேணும் என்று ஆர்த்தியோடே கூப்பிடுகிறார்.

[என்பரஞ்சுடரே இத்யாதி] - எனக்கு நிரதிஶயபோக்யனானவனே என்று என்னைக்குறித்து அடைவுகெடக்கூப்பிட்டு, அந்யோந்யம் ஒப்பாய் ஸ்ப்ருஹணீயமான உன்திருவடிகளிலுண்டான ப்ரேமத்தாலே ஶிதிலனாய்நிற்கும் அந்தபுருஷார்த்தத்தை ஒழிய. [சுமடுதந்தாய்] - இந்த்ரியங்கள் சுமத்தின சுமையெல்லாம் சுமக்கைக்கு ஈடான ஶரீரமாகிற சும்மாட்டைத்தந்தாய். ராஜபுத்ரன்தலையில் முடியைவாங்கி சும்மாட்டைக் கொடுத்து வழிக்கரையிலேநிறுத்தினால் கண்டார் எல்லாரும் சுமை ஏற்றுமாபோலேயிறே இந்த்ரியங்கள். இந்த்ரியவஶ்யைக்கு ஈடான ப்ராக்ருதஸம்பந்தம். [வன்பரங்கள் இத்யாதி]- நீ தந்த ப்ராக்ருதியோட்டை கர்மபந்தமேஹேதுவாக துர்வஹமான விஷயங்களைச்சுமத்தி ஐந்துஇந்த்ரியங்களும் திக்குத்தோறும் வலித்துநலியாநின்றன. முன் கடலைக்கடைந்து, ஆஶ்ரிதர் அபேக்ஷைமுடிக்க க்ஷமனான நாயனேயோ! கடலைக்கடைந்து அம்ருதத்தை வாங்கித் தேவர்களுக்குக்கொடுத்து அஸுரவர்கங்களைப் பறக்க அடித்தாற்போலே, இந்த்ரியவஶ்யதையையும் பாறவடித்துத்தரவல்லையே.

ஈடு.—பத்தாம்பாட்டு. அடிமைக்கு விரோதியாய் விஷயாநுபவத்துக்குப் பாங்கான உடம்பைத்தந்தாய்; அதுவேஹேதுவாக ஐந்துஇந்த்ரியங்களும் நலியாநின்றன; அவற்றைப் பரிஹரித்தருளவேணுமென்று ஆர்த்தியோடே கூப்பிடுகிறார்.

ப்த்தாம்பாட்டு—என்பரஞ்சுடர் இத்யாதி. "சுமடுதந்தாய், எற்றுகின்றனர், அமுதங் கொண்டமூர்த்தியோ" என்ற பதங்களைக்கடாக்ஷித்துஅவதாரிகை-அடிமைக்குவிரோதியாய்இத்யாதி. "அலற்றி" என்றதுக்குஅர்த்தம் - அடைவுகெடக்கூப்பிட்டு என்று.

[என்பரஞ்சுடரித்யாதி] - எனக்கு உன்வடிவழகைக்காட்டி உபகரிக்குமவனே ன்னைக்குறித்து அடைவுகெடக் கூப்பிட்டு. [உன்னிணைத் தாமரையித்யாதி] - ஒன்றுக்கொன்றுஒப்பாயிருப்பன இரண்டுசெவ்விப்பூப்போலே யிருக்கிற உன்திருவடிகளில் ஹோக்யதையை அநுஸந்தித்து ப்ரேமபரவசனாய் நெகிழ்ந்து நீராய்நிற்கை, இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபமாகக்கடவது. [அதுநிற்கச்சுமடுதந்தாய்] - ஸ்வரூபமிதுவாயிருக்க, உன்பக்கலி னின்றும் அகற்றி விஷயங்களிலேகொடுபோய் மூட்டக்கடவதான ஶரீரத்தைத்தந்தாய்; உன்னையநுஹபவிக்கைக்கு உறுப்பாக தேஹத்தைத் தந்தாயானாய் நீ; அதுதானே எனக்கு இழவுக்கு உடலாயிற்று. ராஜபுத்ரன்தலையில் முடியைவாங்கிச் சும்மாட்டைக்கொண்டு வழியிலேநின்றால், அடியறியாதார்சுமை யெடுத்திக்கொண்டு போமாபோலேயாயிற்று பக வதநுபவத்துக்கு ஈடாகக்கொடுத்த ஶரீரம் இந்த்ரியங்களுக்குப் பணிசெய்யும்படியாய்விட் டது. சுமடு - சும்மாடு. ஶரீரமாகிற சும்மாட்டைத்தந்தாய். [வன்பரங்களித்யாதி] - "அப்ராப்தவிஷயத்திலே போனேன்" என்றோ நான் இப்போது அஞ்சுகிறது? பொறுக் கலாமளவு சுமையெடுத்ததாகில் நான் சுமவேனோ? வலியபாரத்தையெடுத்தி. கனத்த சுமையை யெடுத்தி. [ஐவர்] - அவர்கள்தான் ஒருவரிருவராகில் நான்ஆற்றேனோ? [திசை திசை வலித்து] - இத்தனைவரும் ஒருதிக்கிலே போகவிழுத்தார்களாகில்தான் மெள்ளப் போகேனோ? [எற்றுகின்றனர்] - உடையவனாகிலிறே போக்குவிட்டு நலிவது? (எற்றுகை- ப்ரஹரிக்கை.) ஒருதுர்பலன் தலையிலே அதிபாரத்தையெடுத்திச் சுற்றும்நின்று தாந்தாம் வழியேயிழுத்துக்கொண்டு போகத்தேடுமோபோலேகாணும் இவையும். [முன்பரவையித் யாதி] - கடலைநெருக்கி அதில் அம்ருதத்தைவாங்கி, ப்ரயோஜநாந்தரபரரானவர்களுக்குங் கூடக் கொடுக்கக்கடவ மஹாஸாஹஸவையுடையவனே! என்னுடைய இந்த்ரியங்களைப் பாறவடித்துப்போகட்டு, கடல்கடைந்தபோதை ஒப்பனையோடேகூடினவடிவைக் காட்ட வல்லையே! (கo)

"விவிக்தாஹ்லாதஸம்வ்ருத்திः" இத்யாதிப்படியே நம்மையநுஹவிக்கைக் கன்றோ தந்ததென்ன - உன்னையநுபவிக்கைக்கு இத்யாதி. "அதுநிற்கச்சுமடுதந்தாய்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம்-ராஜபுத்ரன் இத்யாதி. 'அடியறியாதார்' - ராஜபுத்ரனென்றறியாதார் என்றபடி. "வன்பரங்கள்" என்றதுக்குவாஸனை-அப்ராப்த இத்யாதி. விவரணம்-பொறுக்கலாம் இத்யாதி. ஶப்தார்த்தம்-வலிய இத்யாதி. பாரத்துக்கு வன்மையாவதேதென்ன - கனத்த இத்யாதி. பாரத்தையென்றது-ஶப்தாதிகளை. "எற்றுகின்றனர்" என்ற வர்த்தமானார்த்தம் - உடையவனாகில் இத்யாதி. "திசைதிசை வலித்தெற்றுகின்றனர்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் -ஒருதுர்பலன் இத்யாதி."பரவைகடைந்தமுதங் கொண்டமூர்த்தியோ" என்றதுக்குஹாவம் - கடலை இத்யாதி. "மூர்த்தி" - வடிவு. மூர்த்தி ஶப்தம், திருக்கைகளுக்கு உபலக்ஷணமென்று கருத்து. "எற்றுகின்றனர்" என்றதின் ஹாவத்தைக்கூட்டி, "மூர்த்தி" என்றதக்குஹாவாந்தரம் - என்னுடைய இத்யாதி. 'சுமடுதந்தாய்' என்னுமளவும் க்ரமத் திலேசொல்லி, 'முன்பரவைகடைந்து அமுதங்கொண்டமூர்த்தி, ஐவர்திசைதிசை வலித்தெற்று கின்றனர்; ஓ' என்றந்வயம். அத்தைப்பரிஹரித்தருளவேணுமென்று கூட்டிக்கொள்வது. (கo)

# பதினோராம் பா

கொண்டமூர்த்திஓர்மூவராய்க் குணங்கள்படைத்தளித்துக்கெடுக்கும்அப்
புண்டரீகக்கொப்பூழ்ப் புனற்பள்ளியப்பனுக்கே
தொண்டர்தொண்டர்தொண்டர்தொண்டன்சடகோபன் சொல்லாயிரத்துள் இப்பத்தும்
கண்டுபாடவல்லார் வினைபோங்கங்குலும்பகலே.

ஆ.—(கொண்டமூர்த்தி.) குணத்ரயாஶ்ரய த்ரிமூர்த்திரூபேண நிகிலஜகத் ஸர்க்கஸ்திதி ஸம்ஹாரஹேதுபூதனாய், ஸ்ருஷ்டமான ஜகத்தினுடைய ரக்ஷணார்த்தமாக க்ஷீரார்ணவே ஶயானனாய், புண்டரீகஸத்ருஶமான திருநாபியையுடையனாயிருந்த எம்பெருமானுடைய ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வ ஸத்யஸங்கல்பத்வ காருண்ய வாத்ஸல்ய ஸௌந்தர்யாதிகுணங்களுக்குத் தோற்று அநந்யார்ஹஶேஷபூதரானவர்களுடைய தொண்டர்தொண்டர் தொண்டன் சடகோபன் சொல்லாயிரத்துள் அந்தகுணங்களையே தமக்குப்பற்றுசாகக்கொண்டு கூப்பிட்ட இத்திருவாய்மொழியில் ஊவகையுள்ளபடி அறியக்கண்டு பாடுவாருடைய ப்ரக்ருதி ஸம்பந்த ஹேதுஊதமான பாபம் நிஶ்ஶேஷமாகப் போமென்கிறார்.

ஒ—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸித்தார்க்கு நிரந்தரமாக இந்த்ரியங்களால் ஆத்மாவுக்குவரும் நலிவு போம் என்கிறார்.

[கொண்ட என்றுதொடங்கி] - குணநுரூபமான வடிவையுடைய மூவருமாய் ஸ்ருஷ்ட்யாதிகளையும் பண்ணும் ஸ்வபாவனுமாய். [அப்புண்டரீகம் என்று தொடங்கி] - ஜகத்ஸ்ருட்யாதிகாரணதயா ப்ரஸித்தமான புண்டரீகத்தோடுகூடின திருநாபியையுடைய ஏகார்ணவஶாயியான எம்பெருமானுக்கே. [கண்டுபாட] - அநுஸந்தித்துப்பாட.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை அர்த்தத்தோடே ப்ரீதியுக்தராய்ப் பாடுவார்க்கு ஸர்வபாபங்களும் போமென்று பலத்தையருளிச்செய்கிறார்.

குணங்கள் - (ஸத்த்வரஜஸ்தமோரூபமான) குணங்களை, கொண்ட-, மூர்த்தி-(ப்ரஹ்மவிஷ்ணுருத்ர) மூர்த்திகளையுடைத்தாய், ஓர் - அத்விதீயரான, மூவர் - (காரணபுருஷர்கள்) மூவரும், ஆய்-, படைத்து-(ப்ரஹ்மாந்தர்யாமியாய்ப்) படைத்து, அளித்து - (ஸ்வாவதாரமான விஷ்ணுரூபியாய்) ரக்ஷித்து, கெடுக்கும் - (ருத்ராந்தர்யாமியாய்) ஸம்ஹரிக்குமவனாய், அ-இதுக்கெல்லாம் மூலமாகப்ரமாணஸித்தமான, புண்டரீகம் - புண்டரீகத்தையுடைய, கொப்பூழ் - திருநாபியையுடையனாய்க்கொண்டு, புனல் - காரணஜலத்திலே, பள்ளி - கண்வளர்ந்தருளின, அப்பனுக்கு - மஹோபகாரகனுக்கு, தொண்டர் - ஸம்பந்திகளானாரை, தொண்டர் - ஸம்பந்தித்தாரை, தொண்டர் - ஸம்பந்தித்தார்க்கு, தொண்டன் - ஶேஷபூதரான, சடகோபன் - ஆழ்வார், சொல் - அருளிச்செய்த, ஆயிரத்துள் - ஆயிரத்து, இப்பத்தும் - இப்பத்தையும், கண்டு - அர்த்தாவலோகநம்பண்ணி, பாடவல்லார் - ப்ரீதிப்ரேரிதராய்ப் பாடவல்லார்க்கு, கங்குலும் பகல் - அஹோராத்ராதிவிபாகமற ஸர்வகாலத்திலும், வினை - ஊகவதநுபவப்ரதிபந்தக பாபம், போம்-. இது-

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லார்க்கு, இந்த்ரிய வஶ்யதைக்கு அடியான பாபம் போம் என்கிறார்.

[குணங்கள் - கொண்டமூர்த்தி யோர்மூவராய்] - ஸத்வாதிகுணாநுரூபமான வடிவையுடைய மூவராய். [படைத்தளித்துக்கெடுக்கும்]-சதுர்முகாந்தர்யாமியாய்நின்று ஸ்ருஷ்டித்து, ஸ்வேநரூபேண நின்று பரிபாலநம்பண்ணி, ருத்ராந்தர்யாமியாய் ஸம்ஹரித்துச் செய்தருளுகிற. [அப்புண்டரீகக்கொப்பூழ்இத்யாதி] - ஜகத்காரணதயா ப்ரஸித்தமான புண்டரீகத்தோடேகூடின திருநாபியையுடைய ஏகார்ணவஶாயியான ஸர்வகாரணனுக்கே. [தொண்டர் இத்யாதி] - "நான், எனக்கு" என்னப்பண்ணும் இந்த்ரியவஶ்யதைக்கு அஞ்சி, ஶேஷத்வத்தின் எல்லையிலே தாழநிற்கிறார். [கண்டுபாடவல்லார்] - இதில்ஓடுகிற பாவத்தை அநுஸந்தித்துப் பாடவல்லார் என்கிறது. தம்முடைய உபாயை அநுஸந்தித்தால் பாடவொண்ணாது என்றிருக்கிறார். [வினைபோம் கங்குலும்பகலே] - திவாராத்ரம் இந்த்ரியவஶ்யதைக்கு ஹேதுவான பாபம் போம் என்னுதல், திவாராத்ரம் அடிமைசெய்கைக்கு விரோதியான பாபம்போம் என்னுதல்.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழி அப்யஸித்தார்க்கு இந்த்ரியங்களால் ஆத்மாவுக்குவரும் நலிவுபோம் என்கிறார்.

[கொண்டமூர்த்தியோர் மூவராய்க்குணங்கள்] - குணங்கள் கொண்டமூர்த்தியோர் மூவராய் - ஸத்த்வாதிகுணாநுரூபமானவடிவையுடைய மூவராய். குணாநுகுணமான ஸ்ருஷ்ட்யாதிகள் அந்தந்தவ்யக்திதோறும் பர்யவஸிக்குமிறே. இரண்டில் ஜீவவ்யவதாநேநநின்று, ஒன்றில் ஸ்வரூபேண நின்றபடி. [படைத்துஇத்யாதி] - ரஜோகுணத்தையுடையனைக்கொண்டு ஸ்ருஷ்டித்து, தமோகுணத்தையுடையனைக்கொண்டு ஸம்ஹரித்து, ஸத்த்வகுணத்தையுடையனைக்கொண்டு இவற்றையடைய ரக்ஷித்துக் கொடு நிற்கிறபடி. [அப்புண்டரீகம்இத்யாதி] - இவற்றையெல்லாவற்றையும் உண்டாக்குகைக்

---

நிருமம்.— கொண்ட இத்யாதி. "கண்டுபாடவல்லார், கங்குலும்பகல், வினைபோம்" என்ற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி.

ஸத்வாதி குணாநுரூபமான வடிவையுடைய அத்விதீயரான மூவரா யென்று ஶப்தார்த்தம். "படைத்தளித்துக்கெடுக்கும்" என்று - ஸாமாந்யேநசொன்னால், இன்னதுக்கு இன்னார் கர்த்தாவென்றறியும்படி யென்? என்ன-குணாநுகுணமான் இத்யாதி. இங்கே. "ஸத்த்வம்ரஜஸ்தம இதி ப்ரக்ருதேர்குணாஸ்தை:" (ஸ்ரீபாக.1,2, 24) இத்யாத்யநுஸந்தேயம். தானேமூவரானானேஎன்ன-இரண்டில்இத்யாதி.ஜீவவ்யவதாநேந நின்ற-ஜீவனையதிஷ்டித்தென்றபடி."குணாநுகுணம்"இத்யாதிவாக்ய விவரணம் - ரஜோகுணத்தை இத்யாதி. "அ" என்றப்ரஸித்திக்கர்த்தம் - ஜகதுத்பத்தி இத்யாதி. இவ்விடத்திலே -"அஜஸ்ய நாபாவத்யேகமர்பிதம் யஸ்மிந்நிதம் விஶ்வம் புவநமதிஶ்ரிதம். விஶ்வகர்மா ஹ்யஜநிஷ்ட தேவ:"(யஜுர்வே-காண்.4,ப்ர.6. பர்.8.)என்றது அநுஸந்தேயம். அஸ்யாஶ்ஶ்ருதேரயமர்த்த:; அஜஸ்ய-ஜந்மாதிரஹிதஸ்யஸர்வேஶ்வரஸ்ய.நாபாவதி-நாபௌ.ஏகமர்ப்பிதம்-ஏகம் கமலமாவிர்ப்பூதமித்யர்த்த:; யஸ்மிந் - கமலே, இதம்விஶ்வம்புவநம் - இதம் ஸகலம்ஜகத்,அதிஶ்ரிதம்-ஸமாஶ்ரிதம்;விஶ்வகர்மாதேவ:-ப்ரஹ்மா, அஜநிஷ்ட- ஜாதோபூதித்யர்த்த:. நாபிபத்மஸ்ய புவநாதாரத்வம்-புவநகாரணபூதப்ரஹ்மாதாரத்வாதுபபத்யதே.மஹாபாரதே"அஜஸ்ய நாபாவத்யேகம் யஸ்மிந் விஶ்வம் ப்ரதிஷ்டிதம் । புஷ்கரம் புஷ்கராக்ஷஸ்ய தஸ்மை பத்மாத்மநே நம:". "ரக்ஷது த்வாமஶேஷாணாம் பூதாநாம் ப்ரபவோ ஹரி: । யஸ்ய நாபிஸமுத்பூத பங்கஜாதபவஜ்ஜகத்"(விஷ்-பு,5,5,14)இத்யாதி ஸ்ம்ருதியும் அநுஸந்தேயம் கீழ்ச்சொன்ன ஸாமாநாதிகரண்யம் - கார்யகாரணபாவ நிபந்தநமென்கிறார்-அப்புண்டரீகம் இத்யாதி. "அப்புண்டரீகக்கொப்

காக ஏகார்ணவத்திலேவந்து கண்வளர்ந்தருளினபடியைச் சொல்லுகிறது. ஜகதுத்பத்தி காரணதயா ப்ரஸித்தமான திருநாபிகமலத்தையுடையனுய்க்கொண்டு ஸ்ருஷ்ட்யுந்முகனுய் ஏகார்ணவத்திலே கண்வளர்ந்தருளின உபகாரகனனவனுக்கே. அப்புண்டரீகக் கொப்பூழென்கையாலே - ப்ரஹ்மாதிகள் கார்யமென்னுமிடமும், அவன் காரணபூதனென்னுமிடமுஞ் சொல்லிற்று. ஒருவனுக்கு உத்பத்தியிறே சொல்லவேண்டுவது: "ப்ரஹ்மண: புத்ராய ஜ்யேஷ்டாய ஶ்ரேஷ்டாய"(ப்ரஹ்மணஃபுத்ராயஜ்யேஷ்ட்டாயஶ்ரேஷ்ட்டாய) என்று மற்றையவனுடைய உத்பத்தி தன்னடையேவருமிறே. "நான்முகனைநாராயணன் படைத்தான்"என்றால், மற்றையவன்பிறப்பும் அநந்தரஞ்சொல்லுமிறே. இப்படி வேதவைதிகங்கள் சொல்லாநின்றதிறே.[தொண்டரித்யாதி]-விஷயங்களையும் இந்த்ரியங்களையும் அநுஸந்தித்த நெஞ்சாரல்தீர, ஶேஷத்வத்தினுடைய எல்லைநிலத்திலேபோய் நிற்கிறார்; தாபார்த்தன் மலேவிலே தாழவிழியுமாபோலே. [கண்டுபாடவல்லார்] - இவருடைய உக்தியை யநுஸந்தித்தால் பாடப்போகாதாகாதேதான். [கண்டு] - நமக்குத்தஞ்சமென்றுஅநுஸந்தித்து. [வினைபோம் கங்குலும்பகலே] - இரவுபகலில் வினை போம். (திவாராத்ரமிந்த்ரிய வஶ்யதைக்கு ஹேதுவானபாபம்போம்.) "இராப்பகல் மோதுவித்திட்டு" என்கிறதுரிதம் போம்.

பூழ்" என்கிறஇத்தால் ப்ரஹ்மோத்பத்திசொன்னல், ருத்ரோத்பத்தியும் சொல்லவேண்டாவோ?என்ன. ஒருவனுக்கு இத்யாதி. இவ்வர்த்தத்தை அபியுக்தோக்தியாலும் உபபாதிக்கிறார் - நான்முகனை இத்யாதி. நாலாந்திருவந்தாதி. படைத்தான் - ஸ்ருஷ்டித்தான். நான்முகமாய் - தானேப்ரதாநனும். உக்தார்த்தநிகமநம் - இப்படிவேத இத்யாதி. வைதிகங்களென்றது - "நான்முகனை" இத்யாதியான வைதிகவசநங்களென்றபடி. இப்போது ஶேஷத்வகாஷ்டையை அநுஸந்திப்பானென்? என்ன - விஷயங்களையும் இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - தாபார்த்தன் இத்யாதி. "வல்லார்" என்றதுக்குபாவம் - இவருடைய இத்யாதி. இரவுபகலில் வினையாவதேதென்ன - இராப்பகல் இத்யாதி. "கண்டு" - இவருடைய உக்தியையநுஸந்தித்து. "வினை" - விஷயப்ராவண்யம். 'குணங்கள் - கொண்டமூர்த்தியோர்மூவராய் - படைத்தளித்துக்கெடுக்குமவனுய், அப்புண்டரீகக்கொப்பூழையுடையனை புனர்பள்ளியப்பனுக்கே இத்யாரப்ய, பாடவல்லார்க்கு - கங்குலும்பகல் - வினைபோம்' இத்யந்வய:. (கக)

---

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி.**— ஸ்ருஷ்ட்யாதிஸ்ஸகலஸ்ய தாவதஸ்ய தஸ்ய விஷ்ணோ: । ஶேஷத்வ தாதீதவ ஸத்வேகஸ்ய மதேத்தஸ்ஸ்வஸ்திவதஸ்திஷயேதிஸ்யேஷ்ய:॥

**த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.**— [illegible] ॥

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

உண்ணிலாவைவருடனிருத்தியிவ்வுலகில்
எண்ணிலாமாயனெனைநலிய - எண்ணுகின்றான்
என்றநினைந்தோலமிட்ட வின்புகழ்சேர்மாறனெனக்
குன்றிவிடுமேபவக்கங்குல்.

ஸ்ரீ:

# இரண்டாந்திருவாய்மொழி — கங்குலும் - ப்ரவேசங்கள்.

ஆ.—(கங்குலும்பகலும்.) - இப்படி திருவேங்கடமுடையானோடே ஸம்ச்லேஷிக்கப்பெறாத வ்யஸநத்தாலும் தத்ஸம்ச்லேஷ ப்ரதிபந்தகப்ரக்ருதி ஸம்பந்தஜநித வ்யஸநத்தாலும் அத்யந்தம் அவஸந்நராய் அவன் திருவடிகளைப்பூண்டுகொண்டுகிடந்து கூப்பிட்டு, பின்னையும் தம்முடைய அபேக்ஷிதம்பெறாமையாலே, "இனிக்கோயிலிலே பெரியபெருமாள் திருவடிகளிலேசென்று விழுந்தாலல்லது என்னுடைய க்லேசம் போகாது" என்று பார்த்துப் பெரியபெருமாள் திருவடிகளிலேசென்று விழுந்து அங்கும் ஒரு கடாக்ஷம்பெறாமையாலே * மதியெல்லாம் உள்கலங்கி "எனக்குச்செல்லுகிற வ்யஸநமொன்றும் தெரிகிறதில்லை; சொல்ல க்ஷமனாகிறிலேன்; பிரானே! என்னை என் செய்ய நினைத்தருளினாய்?" என்று, தாம் பெரியபெருமாளைநோக்கிக் கூப்பிடுகிற பாசுரத்தை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். பெரிய பெருமாளோடே கலந்து பிரிந்தாளொருபிராட்டி, வ்யஸநாதிசயத்தாலே மோஹதசாபந்நையாயிருக்கிறபடியைக் கண்டு இவளிலும் அவஸந்நையாயிருந்த இவளுடைய திருத்தாயார், இவளுக்குச்செல்லுகிற தசை சொல்ல நிலமல்லாமையாலே, இவளுடைய தசையைப் பெரியபெருமாளுக்குக் காட்டி இவளுடைய வ்யஸநகாரிதமான சேஷ்டிதங்களையுஞ்சொல்லி இவள் திறத்து என்செய்யநினைந்தருளினாயென்று பெரியபெருமாளைநோக்கிக் கூப்பிடுகிற பாசுரங்களாகச் சொல்லுகிறாள்.

ஒ.—இரண்டாந் திருவாய்மொழியில், திருவேங்கடமுடையான்திருவடிகளிலேபுக்கு அடிமைசெய்தல்லது யரிக்கமாட்டாமை தசையமாக அவன் திருவடிகளிலே சரணம்புக்கவிடத்திலும் ஸ்வாபேக்ஷிதம்பெறாதே மிகவும் நோவுபட்டிருக்கிறதுக்கு மேலே, தமக்கு ஸைவத்ப்ராப்தி ப்ரதிபந்தகங்களான விஷயேந்த்ரியாதிகளுடைய ஸ்வபாவத்தை நிரூபித்துக்கலங்கின ஆழ்வார் "இவ்வார்த்தி தீரலாம்" என்று பெரிய பெருமாள் திருவடிகளிலேசென்றுவிழ "இவரை எங்ஙனே பரிஹரிப்போம்" என்று அவனும் சிந்தியாநிற்க,அத்தை அநுஸந்திக்கக்ஷமரன்றிக்கே தம்மை ஒரு விசேஷகடாக்ஷம்பண்ணி அருளிற்றிலராகக்கொண்டு அத்யந்தம்அவஸந்நராய், தம்முடையதசையை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். பெரிய பெருமாளோடே ஸம்ச்லேஷித்து விச்லேஷித்தாள் ஒருபிராட்டி, விச்லேஷவ்யஸநத்தினுடைய முறுகடியாலே அத்யந்தம் அவஸந்நையாய், க்ஷணந்தோறும் இருந்து கண்ணநீர்கள் வெள்ளமிட அழுதும், சக்ருதாஞ்சலியாய்க்கொண்டுதொழுதும், பரவசையாய்மோஹித்தும், உணர்ந்தும், அவருடைய அசரண்யசரண்யத்வாதிகுணங்களையும் அழகுகளையும் நினைத்தும், அவற்றைப்பேசியும், சாஸ்த்ரங்களிற்சொல்லுகிற அடைவு அன்றிக்கே அக்ரமமாக எல்லாதசைகளும்வந்து தலைகாட்டி நோவுபடுகிற இவளுடையதசையை அநுஸந்தித்து மிகவும் அவஸந்நையான திருத்தாயார், பெரியபெருமாளுக்கு இவளுடைய அவஸ்தைகளை விண்ணப்பஞ்செய்து, இவள் திறத்துச்செய்தருள நினைத்தது என்? என்று அதிகாருண த்வநியாக மிகவும் கூப்பிடுகிறாள்

ப.—இரண்டாந்திருவாய்மொழியில், கீழே - விஷயேந்த்ரியாதிகளுடைய அதிப்ரவ்ருத்தியை யநுஸந்தித்து ஆர்த்தராய்க் கூப்பிட்டவர், "கன்னலேயமுதே" என்று கீழநுஸந்தித்தபோக்யதையாலே இந்த ஆர்த்தியோடேகூட அதிப்ராவண்யமும் நடந்து, ப்ராவண்யாநுரூபமான அநுபவம் லபியாமையாலே "அது ப்ரதிபந்தககார்யமிறே" என்றுஅநுஸந்தித்து, ப்ரதிபந்தகங்களைப்போக்கி யநுபவிப்பிக்கவேண்டும் யோக்யதைக்கீடான ப்ராப்யபூதனுடைய அநுபாவ்ய சிஹ்நயோகத்தையும், ரக்ஷணார்த்த ப்ரவ்ருத்திவிசேஷத்தையும், ரக்ஷணப்ரதிபந்தக நிவர்த்தகத்வத்தையும், அபரிச்சிந்ந மாஹாத்ம்யத்தையும், ஆஸ்ரிதாபேக்ஷிதகரத்வத்தையும், ஆஸ்ரித ஸம்ரக்ஷணார்த்தமான ஆயுதபூர்த்தியையும், ஸம்ரக்ஷணோபயுக்தமான ஸமுத்ரஶாயித்வத்தையும், அவதார தசையில் அதிமாநுஷசேஷ்டிதத்தையும், ப்ரணயித்வாதிஶயத்தையும், ஈஶ்வராபிமாநிகளுக்கும் அந்தராத்மாவான ஈஶ்வரத்வாதிஶயத்தையும் அநுஸந்தித்து, "இப்படி ரக்ஷகனுமாய் போக்யனுமான அவன் ப்ரதிபந்தகத்தைப்போக்கி யநுபவிப்பிக்கிறிலன்" என்கிற ஆர்த்யதிஶயத்தாலே அரதிக்ருதமான அநேகவ்யாபாரங்களைப்பண்ணி அவஸந்நராய், அர்ச்சாவதாரஸுலபமானபெரியபெருமாளை நோக்கிப் பிறந்தஅபிநிவேஶாதிஶயத்தாலே அப்ராக்ருதிங்கதரான ப்ரகாரத்தையநுஸந்தித்துப் பரிவரானவர்கள் இவருடைய தஶையைஅவர்க்கு விண்ணப்பஞ்செய்த ப்ரகாரத்தை நாயகரான பெரியபெருமாளோடு விஶ்லிஷ்டையான நாயகியினுடைய ஆர்த்யதிஶயத்தை யநுஸந்தித்துஆற்றுளாய் நற்றாயானவள் தன்னாற்றாமையின் மிகுதியாலே அவரை புத்தியாலே அபரோக்ஷித்து இரங்கியுரைத்த பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

இ.—இரண்டாந்திருவாய்மொழியில், திருவேங்கடமுடையான் திருவடிகளிலே பிராட்டி புருஷகாரமாக ஶரணம்புக்கவிடத்திலும் ஸ்வாபேக்ஷிதம்பெறாமையாலே மிகவும் அவஸந்நரானதுக்குமேலே, தமக்கு பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தகங்களான விஷயேந்த்ரியாதிகளுடைய ஸ்வபாவத்தை நிரூபித்துக்கலங்கினவர், "வானவர்கள் சந்திசெய்யநின்றான் அரங்கத்தரவினணையான்" என்று திருவேங்கடமுடையான்வந்து சாய்ந்தருளின இடமாகையாலே "இவ்வார்த்தி தீரலாம்" என்று பெரியபெருமாள் திருவடிகளிலேவிழ, அவரும் "முதலிலே தம்முடைய கார்யம் நமக்கே பரமென்று ஸமர்ப்பித்தாராகில் நாமும் அதுசெய்யக்கடவோமாய், இவரைஇங்கேவைத்துக் கொள்ளக்கடவ கார்யமும்கொண்டு க்ரமத்தாலே இவர் அபேக்ஷிதம் செய்கிறோமென்று ஆறியிருந்தோம்: இந்த்ரியம்வாயகங்களாகாதபடி- பல்வாங்கின பாம்புபோலே தங்கார்யம் செய்யாதபடி- பண்ணி இங்கே தம்மை நிரந்தராநுபவம் பண்ணும்படி பண்ணினோம்:அந்தக்ரமத்தைப் பொறுக்கமாட்டாதே த்வரியாநின்றார்: இவரை எங்ஙனே பரிஹரிப்போம்?" என்று சிந்தித்தருளாநிற்க, அத்தை அநுஸந்திக்கக்ஷமரன்றிக்கே, தம்மை விஶேஷகடாக்ஷம் பண்ணிற்றிலர் என்று அத்யந்தம் அவஸந்நராய், தம்முடைய தஶையை அந்யாபதேஶத்தாலே பேசுகிறார். பெரிய பெருமாளோடே ஸம்ஶ்லேஷித்து விஶ்லேஷித்தாள் ஒரு பிராட்டி பிரிவாற்றாமையாலே மிகவும் நோவுபட்டு, விழுவது எழுவதாய்க் கண்ணநீர் வெள்ளமிட- அழுதும், க்ருதாஞ்சலியாயும், பரவஶையாய் மோஹித்தும், உணர்ந்தும், அவருடைய அஶரண்யஶரண்யத்வாதிகளை நினைத்தும், அவற்றைப்பேசியும், அக்ரமமாக எல்லா தஶைகளும்வந்து தலைகாட்டி நோவுபடுகிற இவள்தஶையை அநுஸந்தித்து மிகவும் நோவுபட்ட திருத்தாயார், ஏதேனும் தஶையிலும் அத்தலையிலே அறிவித்துப்

பரிஹரிக்கும் குடியாகையாலே, பெரியபெருமாள் திருவடிகளிலே இவளைப்பொகட்டு இப்படியே உம்மை ஆசைப்பட்ட இவள்திறத்துச் செய்தருள நினைத்ததென் என்று அதிகாருணத்வநியாகக் கூப்பிடுகிறாள்.

ஈடு.—*உண்ணிலாவியில்-*நமஶ்ஶப்தார்த்தம் பலவகையாலும், "தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்" என்றுததீயஶேஷத்வ பர்யந்தமாகவுள்ளபடி அநுஸந்தித்தாராயற்றது. * உலகமுண்டபெருவாயனில் - பெரிய பிராட்டியார் முன்னிலையாகத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலேவிழுந்து ஶரணம்புக்கார்; விஷயங்களும் இந்த்ரியங்களும் நடையாடுகிற ஸம்ஸாரத்திலே வைத்தபோதே தன்பக்கலினின்றும் நம்மை யகற்றப்பார்த்தானாகாதே யென்றுகூப்பிட்டார் - *உண்ணிலாவியில். வ்யபிசாரமுமின்றிக்கே வ்யவதாநமுமின்றிக்கே யிருக்கிற ஸாதநத்தைப்பற்றின பின்பும் அதுஃபலியாவிட்டால் அவன்தன்னையே இன்னாதாய்க்கொண்டு கூப்பிடுமேத்தனையிறே. இப்படி கண்ணழிவற்றது பின்னையும் ஃபலியாதொழிவானேன்? என்னில்; அது ஃபலியாநிற்க, க்ரமப்ராப்திபொறுக்கமாட்டாமல் படுகிறார்: ஈஶ்வரனுடைய ஸர்வஜ்ஞத்வத்துக்கும்அவ்வருகான இவருடைய மார்த்தவவேஷ மிருக்கிறபடி. பிராட்டியைப் போலே†"தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" (தத்தஸ்யஸத்ருஶம்பவேத்) என்றிருக்கமாட்டார், ருசிஅளவில்லாமையாலே. ஸம்ஸாரத்தினுடையதோஷத்தையும் அநுஸந்தித்து

கங்குலும்பகலும் ப்ரவேஶ; 'உண்ணிலாவியில் நமஶ்ஶப்தார்த்தம்' என்கிறதுக்குஇரண்டுஸங்கதி: முந்தினது, உலகமுண்ட பெருவாயனிலே - த்வயத்தில் பூர்வகண்டார்த்தத்தை அருளிச்செய்தார்; உண்ணிலாவியில் உத்தரகண்டத்தில் நமஶ்ஶப்தார்த்தத்தை யருளிச்செய்தார்; இதில் - ஸ்ரீமத்பதநாராயண பதார்த்தத்தை யருளிச்செய்கிறார். "என்திருமகள்சேர் மார்பன்" என்றதிலே - * ஸ்ரீமத்பதார்த்தம் ஸூசிதம். "ஸுஹ்ருதோ ஹ்ருத்ஜாதோ ஹாதி - ப்ரவாஹ ஸம்பவதி', என்று - பாடக்ரமாத்அர்த்தக்ரமஸ்யபலீயஸ்த்வாத், விரோதிநிவ்ருத்த்யநந்தரம்கைங்கர்யம்ஸித்திக்கவேண்டுகையாலே, முந்தற, உண்ணிலாவியிலே - நமஶ்ஶப்தார்த்தம் சொல்லிற்றென்று. இப்பக்ஷத்தில், உத்தரவாக்யஸ்த்தநமஸ்ஸில் ததீயஶேஷத்வம் சொல்லப்படாமையாலே, அத்தை - இங்கே, "தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன்" என்றுசொல்லும் கிஞ்சித்அஸ்வாரஸ்ய முண்டு, ஆகையாலே, உலகமுண்டபெருவாயனிலே, "புகலொன்றில்லாவடியேன்" என்று - ப்ரணவார்த்தம் சொல்லிற்று; உண்ணிலாவியில் - திருமந்த்ரத்தில் நமஶ்ஶப்தார்த்தம் சொல்லிற்று; கங்குலும்பகலிலே - திருமந்த்ரத்தில் நாராயணபதார்த்தம் சொல்லுகிறதென்று கொள்ளவேணுமென்று இரண்டாம் ஸங்கதி. * கங்குலும்பகலில் - திருமந்த்ரத்தில் நாராயணசப்தார்த்தம்சொல்லுகிறபடி யெங்ஙனே? என்னில்; நாராயணபதத்தில் சதுர்த்யர்த்தம் - கைங்கர்யமுமாய், அதுதான்அநுபவஜநித ப்ரீதிகாரிதமாய், அவ்வநுபவந்தான் ப்ராவண்யகார்யமாய், அந்தப்ராவண்யத்தை இதிலே சொல்லுகையாலே. இத்திருவாய்மொழிக்கு ஸங்கதியருளிச்செய்வதாக, கீழிரண்டுதிருவாய்மொழிகளில் ப்ரமேயங்களை யநுவதிக்கிறார் - உலகமுண்டஇத்யாதிவாக்யத்வயத்தாலே. ஸாதநத்தை யநுஷ்டித்தவர்கள் ஃபலஸித்திபர்யந்தம்ஆறியிருக்குமாபோலே யாறியிராமல் கூப்பிடுவானென்? என்ன - வ்யபிசாரமும்இத்யாதி. வ்யபிசாரம் - ஃபலாவ்யாப்தி. வ்யவதாநம் - காலவிளம்பம். ஸித்தஸாதநமாகையாலே இரண்டுமில்லையென்றபடி. இப்படியிருக்கிற ப்ரபத்தி விஃபலமாவானென்? என்கிற ஶங்கையை யநுவதித்துப்பரிஹரிக்கிறார் - இப்படி இத்யாதிவாக்யத்வயத்தாலே. பொறுக்கமாட்டாமைக்கு ஹேது வேதென்ன - ஈஶ்வரனுடையஇத்யாதி. ஆனாலும், பிராட்டியைப்போலே தரித்திருக்கவொண்ணாதோ என்ன - பிராட்டியைஇத்யாதி. ருசியினளவில்லாமையை ஹேதுபூர்வகமாக விவரிக்கிறார் - ஸம்ஸாரத்தினுடையஇத்யாதி. இப்படி அலாபத்தில் நோவுபட்டதுக்கு இவர்க்குஒப்புண்டோ?

† ராமா - ஸு - 39, 30.

எம்பெருமானுடைய குணோத்கர்ஷத்தையும்அநுஸந்தித்தால் ஆறியிருக்கப்போகாதிறே. ஶகவத்விஷயம்அறியாத ஸம்ஸாரிகள்இவர்க்குக்கூட்டல்ல;ஶகவத்லாஶம்அறியவேண்டாத நித்யஸூரிகளும் இவர்க்குக்கூட்டன்று; அலாஶத்தில் நோவுபடுக்கைக்கு இவரொருவருமேயுள்ளார். பட்டர், இத்திருவாய்மொழி யருளிச்செய்யும் போதெல்லாம் "ஆழ்வார்க்கு ஓடுகிற உளையறியாதே அவருடைய ஶாவவ்ருத்தியுமின்றிக்கே யிருக்கிற நாம்என்சொல்லுகிறோம்?" என்று திருமுடியிலே கையை வைத்துக்கொண்டிருப்பர். அவனும், "இவர் நமக்கேஶரமென்னுமிடம்அறிவித்தாராகில், நாமும்இவர்கார்யம்செய்யக்கடவதாக அற்றபின்பு செய்து தலைக்கட்டிற்றன்றோ? இவர் அங்குப்போய்அநுஶவிக்கும் அநுஶவம் இங்கேயிருந்தே குறைவற அநுஶவியாநின்றாராகில், 'விரோதிபோயிற்றில்லையே' என்று இவர்பண்ணுகிற அதிஶங்கையும் போக்குகிறோம்; நாலுநாள் முற்பாடுபிற்பாடன்றோ? இதில் கார்யமென்?" என்றிருந்தான். பிற்பாடு பொறுக்கமாட்டாத இவரை வைக்கப்போருமோ?என்னில்; ப்ரஜைகளைப் பட்டினியிட்டு வைத்தும் வந்த விருந்தினரைப் பேணுவாரைப்போலே, "இவர்தாம் நாலுநாள் நோவுபட்டாராகில் படுகிறார்; இவருடைய ப்ரபந்தத்தைக் கொண்டு நாட்டை வாழ்விப்போம்" என்றிருந்தான். இவர் ஒருமுஹூர்த்தமிருக்கையாவது, தன்னாலும் திருத்தவொண்ணாத ஸம்ஸாரம் திருந்தி வாழும்படியாயிருந்தது என்றதுக்காக வைத்தான் அவன்; இவர், "நம்படியறிந்தானாகில், தனக்கு ஶக்தியில் குறையில்லையாகில், இதுபொருந்தாத நம்மையிட்டுக் காரியங்கொள்ள வேணுமோ? இவ்விருப்பில் பொருந்துவார் ஒருவரைத் திருத்திக் காரியங்கொள்ளத் தட்டேன்?" என்றிருந்தார். அவனும் "அது பொருந்தாதாரையேகொண்டு காரியங் கொள்ளவேணும்" என்றிறே இருக்கிறது. தேசிகரையிட்டுக் காரியங்கொள்ளவேணுமே. பண்ணின ப்ரபத்தி சடக்கெனப்பலியாதொழிந்தது, ப்ரஹ்மாஸ்த்ரம்வாய்மடிந்த மாத்ரமிறே. இனித்தான்அவனும் ஸ்ரீபரதாழ்வான் மாதுலகுலத்தில்நின்றும் வந்து தாயாரை நமஸ்கரிக்க, அவள் †"**ஶாஜந**" (ராஜந்) என்ற வெம்மை பொறுக்கமாட்டாமைப் பெருமாள் திருவடிகளிலே தன்ஆற்றாமையோடே விழுந்து ஶரணம்புக்கு, "தேவர் மீண்டருள

*என்ன - ஶகவத்விஷயம்இத்யாதிவாக்யத்ரயம். இப்படியிருக்கிற இவருடைய ஆர்த்தியைப்ரகாஶிப்பிக்கிற இத்திருவாய்மொழிக்கர்த்தம், கரைமேலேநிற்கிறஅஸ்மதாதிகள் சொன்னால் விரஸமாயிருக்குமென்னுமத்தை ஆப்தஸம்வாதத்தாலே ஊர்ஜிப்பிக்கிறார் - பட்டர் இத்யாதி. ஈஶ்வரன்தான் இவரை வைத்ததுக்குக் கருத்தென்? என்ன - அவனும்இத்யாதி. இவரிருந்தால் ஜகத்துத்திருந்துமோ? என்ன - இவரொருமுஹூர்த்தம்இத்யாதி. அத்தையறிந்த இவர் த்வரிக்கிறதென்? என்ன - இவர் நம்படிஇத்யாதி. இவ்விருப்பில் பொருந்துவார் - திருமழிசைப்பிரான்போல்வார். அவனுக்கும் இதில் பொருந்துவாரையிட்டுக் காரியங்கொள்ள வொண்ணாதோ? என்ன - அவனும்இத்யாதி. அதுக்கு ஹேதுவேதென்ன - தேசிகரைஇத்யாதி. தேசிகரென்கிறது - ஸம்ஸாரதோஷமும் ஶகவத்வைலக்ஷண்யமும் நன்றாக அறிந்தவர்களென்றபடி. அதாவது - ஸம்ஸாரத்தில் பொருந்தியிருக்கும் அவர்களைத் திருத்தும்போது ஸம்ஸாரம் துஸ்ஸஹமாம்படியான ப்ரேமமுடையாரைக்கொண்டு கார்யங்கொள்ளவேணும்; இப்படியன்றிக்கே, இதில் பொருந்துவாரைக்கொண்டு கார்யங்கொண்டால் "தனக்கொன்றும் பிறர்க்கொன்றுமாய்இவன்சொல்லுகிறபடி பாரீர்!" என்று அவர்கள் இருந்தார்கள் என்று அவற்குக்கருத்தென்றபடி. 'தேசிகரைக்கொண்டுகார்யங்கொள்ளவேணும்' என்றிருக்கிறது அறிந்திருக்க இவர்கூப்பிடுவானென்?என்ன- பண்ணின இத்யாதி. "பிற்பாடுபொறுக்கமாட்டாத" இத்யாதிவாக்யோக்தஶங்கைக்குப் பரிஹாராந்தரம்-இனித்தானவனும் இத்யாதி. அதாவது - ஸ்ரீஶரதாழ்வானைப்போலே ஸ்வாதந்த்ர்யத்தாலே வைத்தானென்றபடி. கீழே "ஈஶ்வரனுடைய ஸர்வஜ்ஞத்வத்துக்கும்" இத்யாதி*

† *ராமா* - அயோ. 72, 24.

வேணும்'' என்ன ; பெருமாளும், மீளாமைக்கு ஹேதுவாயிருப்பன அநேகத்தைஇவ ஞுக்குச் சொல்லி, ''பிள்ளாய்! நீ நிர்ப்பந்திக்கக்கடவையல்ல; உன்னை ஸ்வதந்த்ர ஞக்கி வார்த்தைசொன்ஞரேதிரே, உன் ஸ்வரூபாநுரூபமான பாரதந்த்ர்யத்தைப்பெற்று நீ போ'' என்று சொன்ஞற்போலே ; இவர் அபேக்ஷித்ததொழிய ஏதேனுமொன்றைக் கொடுத்துப் போகட்டுப் போகவல்லானொரு ஸ்வதந்த்ரனிறே; ஆகையாலேதான் நினைத்த போது கார்யம் செய்யக்கடவனுமா யிருக்குமிறே. ஸர்வஜ்ஞனானவன் இவர்க்குஓடு கிற தசையறிந்து, தன்னுடைய ஸர்வசக்தித்வங்கொண்டு இவர்க்குஒரு பரிஹாரம் பண்ணவொண்ணுதபடி இவருடைய ஸாவிசேஷமிருக்கிறபடி. இவர்தாமும் ''விண் ணுளார்பெருமானேயோ!'' என்றும் ''முன்பரவைகடைந்தமுதங்கொண்டமூர்த்தியோ?'' என்றும், ''பலமுதல்படைத்தாய்!'' என்றுஞ் சொல்லுகிறபடியே - பரத்வம், அவதாரம், ஜகத்காரணத்வம் இவற்றைச் சொல்லியிறே கூப்பிட்டது; அதில், பரத்வம் லோகாந்தர மாகையாலே, ''கிட்டப்பெற்றிலோம்'' என்ருறியிருக்கலாம்; அவதாரம் காலாந்தரமாகை யாலே, ''அக்காலத்தில்உதவப்பெற்றிலோம்'' என்ருறியிருக்கலாம். ''ஜகத்காரணத்வம் தான் அறிந்துசெய்யுமதாகையாலே, ''நம்மால்செய்யலாவதில்லை'' என்றுகொண்டு ஆறி யிருக்கலாம்;அவ்விழவுகளெல்லாம்தீரும்படி ஸந்நிதிபண்ணிக்கொண்டு கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாள் திருவடிகளிலேவிழுந்து தம்அபேக்ஷிதம்பெருவிட் டால் தரிக்கவொண்ணுதிறே. விஷயம்அஸந்நிஹிதமாதல், ஜ்ஞாநத்தில்கொத்தையுண் டாதல் செய்யிலிறே தரித்திருக்கலாவது. நீர்மையில் கண்ணழிவுண்டாயாதல், மேன் மையில் கண்ணழிவுண்டாயாதல் இழக்கின்ருரன்றே. இப்படியிருக்கச்செய்தேயும் அவன்திருவடிகளிலே தமக்குநினைத்த பரிமாற்றம்பெருமையாலே தாமான்தன்மைபோய் ஒருபிராட்டிதசையை ப்ராப்தராய் அவ்வளவிலும் தமக்கு ஓடுகிற தசையைத் தாம் அறிந்து கூப்பிடப்பெருதே, திருத்தாயார் கூப்பிடும்படியாய் விழுந்தது. ஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்களில் பிறக்கும் லாபாலாபங்களாலே தாம் பிராட்டிமார் தசையையுடையராகிருர்; திருத்தாயாரான ஸ்வபாவம் விளைந்தபடி எங்ஙனே ? என்னில் ; கிண்ணகம்பெருகியோடாநின்ருல் இருகரையும்ஆறுகளாகப் பெருகிப்போகா நிற்கச்செய்தேயும் கடலிற்புகும்அம்சம்குறையாமல் போய்ப்புகுமாபோலேயாயிற்று, இவ

---

*வாக்யவிவரணம்-ஸர்வஜ்ஞனானவன் இத்யாதி. இவ்வளவும்-உண்ணிலாவியில்ப்ரமேயத்தையநுவதித்து. இதுக்கு-''கங்குலும்பகலோடே'' ஸங்கதி-இவர்தாமும்இத்யாதி. ஜகத்காரணமென்ற-துவ்யூஹத்தை. இவர் அசித் அவிசேஷிதராய்க்கிடக்க ஒருகாலவிசேஷத்திலே தானறிந்து செய்யுமதாகையாலே என்ற படி. இங்குஅபேக்ஷிதங்கிடையாவிட்டால் தரிக்கவொண்ணுமைக்கு ஹேதுவையருளிச்செய்கிருர் - விஷயம்இத்யாதி. ஜ்ஞாநத்திலென்றது - ஈஶ்வரஜ்ஞாந ஶக்த்யாதிகளிலென்றபடி. ஏதத்விவரணம் - நீர்மையில்இத்யாதி.மேன்மையாவது - ஜ்ஞாநஶக்த்யாதிபூர்த்தி. இப்படி மேன்மை நீர்மைகளிரண் டும் குறைவற்றிருக்கிறவிடத்திலும் அபேக்ஷிதங்கிடையாமையாலே வந்தஆற்ருமையின்கனத்தை யரு ளிச்செய்கிருர் - இப்படியிருக்கச்செய்தேயும் இத்யாதி. பிராட்டிதசையும் திருத்தாயார்தசையும் ஏககாலத்திலேயுண்டாகில் இவருடைய ப்ராவண்யம் ஸங்குசிதமாகாதோ ? என்கிறஶங்கையை யநுவ தித்துப் பரிஹரிக்கிருர் - ஸம்ஶ்லேஷஇத்யாதிவாக்யத்வயத்தாலே. திருத்தாயாரான ஸ்வபாவம் விளைந்தபடியெங்ஙனே? என்றவநந்தரம், 'விளைந்ததாகில் இவருடைய அபிநிவேஶத்துக்குக் குறைவு வாராதோ? என்னில்' என்றுஅத்யாஹார்யம். மேல்பரிஹாராநுகுணமாக,அபிநிவேசம்குறையாதுஇருக் கிறபடி என்று கூட்டுவது. ஆக, பரிஹாரம் - தாயாராயும் சொல்லலாம்; அபிநிவேஶத்துக்குங்*

ருடைய "அதனிற்பெரிய வென்னவா" என்கிற அவிநிவேஶமிருக்கிறபடி ; ஆகையாலே இவர்க்கு எல்லார்பேச்சும் பேசக்குறையில்லை. இப்பெண்பிள்ளை மோஹித்துக்கிடக்க, இவளைக்கண்டு உறவுமுறையாரடங்கலும் மோஹித்துக்கிடக்க; பெருமாளிலும் இளையபெருமாளுக்குத் தளர்த்தியுண்டாயிருக்கச்செய்தே பெருமாளுடைய ரக்ஷணத்துக்காக இளையபெருமாள் உணர்ந்திருக்குமாபோலே, திருத்தாயாரும் இவளுடையரக்ஷணத்துக்காக வுணர்ந்திருந்து, ஏதேனுமொரு தஶையிலும் தங்கள் காரியம் தாங்கள் செய்யக்கடவதன்றிக்கே இவன்காலிலேவிழுந்து தங்கள்காரியம் தலைக்கட்டுங்குடி யாகையாலே, பெரியபெருமாள்திருவடிகளிலே இவளை யிட்டுவைத்துக்கொண்டிருந்து, "இவளழுவது, தொழுவது, மோஹிப்பது, ப்ரலாபிப்பது, அடைவு கெடப் பேசுவது, நெடுமூச்செறிவது, அதுதானும் மாட்டாதொழிவது, ஸ்தப்தையாயிருப்பது, இப்படி †அரதிவிஞ்சிச் செல்லாநின்றது; இவள் திறத்திலே நீர் என்செய்யக்கடவீர்?" என்று கூப்பீடாய்ச் செல்லுகிறது. எல்லாவளவிலும் அவனையே பரிஹாரங்கேட்கும் குடியாகாதே. ஆண்டாள்ஒருநாள் ஆழ்வானுக்கு, "பிள்ளைகள் விவாஹப்ராப்தரானார்கள்: இவ்விடையாட்டமொன்றும் ஆராயாதிருக்கிறதேன்?" என்ன, "பகவத்குடும்பத்துக்கு என்னை இன்றிருந்து கரையச்சொல்லுகிறாயோ? நாளை நான் வாசித்துச்சமையக்கொள்ள, அங்கேவரக்காட்டு" என்ன, பட்டரையும் சீராமப்பிள்ளையையும் கொடுத்துப் போகவிட, வாசித்துச்சமைந்து பெருமாள்திருவடிகளிலே நிற்க, "ஒன்றுசொல்லுவாய் போலே யிருந்தாயீ!" என்று திருவுள்ளமாக, "'இவர்கள் விவாஹப்ராப்தரானார்க'ளென்னுநின்றார்கள்" என்று விண்ணப்பஞ்செய்ய, "எல்லாம்செய்கிறோம்" என்று திருவுள்ளமானார்; பிற்றைநாளே மன்னியைக்கொண்டுவந்து கொடுத்தார்கள். அகளங்க ப்ரஹ்மராயர் அடையவளைந்தான் செய்யாநிற்கச்செய்தே மதிள் போக்குகைக்காக இளையாழ்வானகத்தை வாங்கப்புக, பட்டர் அத்தைக்கேட்டருளி, "வாரீர் பிள்ளாய்! நீர் செய்கிற மதிள் பெருமாளுக்கு ரக்ஷகமென்றிராதேகொள்ளீர் ; இங்குக்கிடக்கிற நாலுகுடியுங் காணும் பெருமாளுக்கு ரக்ஷை; ஆனபின்பு நீர் செய்கிறவையெல்லாம் அழகிது; இவையெல்லாம் நாம் செய்கிறோமென்றிராதே, பெருமாள் செய்விக்கிறாரென்றிரீர் ; உமக்கு நல்வழிபோக வுடலாங்காணும்" என்றருளிச்செய்தார். இத்திருத்தாயாரும் ஸர்வபரங்களையும் அவர்தலையிலேபோகட்டுப் பெண்பிள்ளையைத் ‡ திருமணத்தூணுக்குள்ளே போகட்டு, அவருடைய அஶரண்யஶரண்யத்வாதி குணங்களை விண்ணப்பஞ்செய்யாநின்று கொண்டு, ஒருகாலநியதியாதல், ஒருதேஶநியதியாதல், அதிகாரிநியதியாதலின்றிக்கே ஸர்வஸமாஶ்ரயணீயரா யிருக்கிறபடியை யநுஸந்தித்து, தன் பெண்பிள்ளையினுடைய தஶையைத் திருவுள்ளத்திலே படுத்துகிறாள் இத்திருவாய்மொழியாலே

---

*குறைத்தலில்லையென்றபடி. இத்திருவாய்மொழியில் நாயகியினுடைய ஆர்த்திப்ரகாரங்களை விஸ்தரேண அருளிச்செய்கிறார்-இப்பெண்பிள்ளை இத்யாதி. "மயங்கும்" என்றத்தைப்பற்ற-மோஹித்து என்றது. பந்துக்களடங்கலும் மோஹித்தார்களாகில் திருத்தாயார் உணர்ந்திருக்கும்படி யெங்ஙனே? என்ன - பெருமாளிலும் இத்யாதி. "அழுந்தொழும்" என்றத்தைப்பற்ற-அழுவது இத்யாதி. "வெவ்வுயிர்க்கும்" என்றத்தைப்பற்ற - நெடுமூச்செறிவது என்றது. அவனைக்கேட்கிறதென்? தாங்களே பரிஹரித்துக்கொள்ள வொண்ணாதோ? என்ன - எல்லாவளவிலும் இத்யாதி. இதுக்கு ஸம்வாதத்வயம் - ஆண்டாள் இத்யாதி. 'பெருமாள் செய்விக்கிறார்' என்றவிடம் அபேக்ஷிதம். "பற்றிலார்பற்ற நின்றானே" என்றத்தைப்பற்ற - அஶரண்யஶரண்யத்வாதி என்றது.*

---

† *'ஆர்த்தி' என்று பாடாந்தரம்.* ‡ *திருமணத்தூண் - ஆமோதஸ்தம்பம்: "மாயோனை மணத்தூணேபற்றி நின்று" என்ற பெருமாள் திருமொழியையுங் காண்க.*

# முதற்பா

**கங்குலும்பகலும்கண்துயிலறியாள்கண்ணநீர்கைகளாலிறைக்குஞ்**
**சங்குசக்கரங்களென்றுகைகூப்புந்தாமரைக்கண்ணென்றேதளரும்**
**எங்ஙனேதரிக்கேனுன்னைவிட்டென்னுமிருநிலங்கைதுழாவிருக்குஞ்**
**செங்கயல்பாய்நீர்த்திருவரங்கத்தாய் இவள்திறத்தென்செய்கின்றாயே?**

**ஆ.**—உன்னைக் காணப்பெறாத நிரவதிக வ்யஸநத்தாலே திவாராத்ர விபாகமின்றியே ஒருகாலும் நித்ரையானது எங்ஙனேயிருக்கும் என்றறியாள். உன்னைக் காண்கைக்காகப் பெருத்தாகவூறுகிற கண்ணநீராகிறகடலைத் தன்னுடைய அஹி! ஸத்தாலும் மௌக்த்யத்தாலும் தன்சிறுக்கைகளாலே இறையாநிற்கும். “கூராராழிவெண்சங்கேந்திக் கொடியேன்பால் வாராய்” என்று சொல்லத்தொடங்கி முடியச்சொல்ல க்ஷமையல்லாமே, அவ்விரப்புத் தோன்றும்படி கைகளாலே தொழாநிற்கும். தாமரைக்கண்களால் நோக்காய்என்றுசொல்ல உத்யோகித்தமாத்ரத்திலே தளரும். என்னையுங்கூடத் தோற்பித்து அடிமையாக்கின கண்களையுடைய உன்னைப்பிரிந்து, தீக்ஷ்ணமான விஷத்தைப் பாநம்பண்ணினாற்போலே ஒருபடியாலும் தரிக்கமாட்டேனென்று சொல்லாநிற்கும். தன்னுடைய ஸந்தாபத்தைப் பொறுக்கமாட்டாமே, மஹீதலத்திலே விவேஷ்டநம் பண்ணாநிற்கும். “நிகில ஜந்துஜாதசரண்யனே! கோயிலிலே கண்வளர்ந்தருளுகிறது இவளுக்காகவன்றோ? இவளுடைய தசையிருக்கிறபடி பார்த்தருளாய், பிரானே! இவள்திறத்து என்செய்ய நினைத்தருளினாய்?” என்கிறாள்.

ஒ.—முதற்பாட்டில், இப்பிராட்டியுடைய, பேசநிலமன்றிக்கே இருக்கிற தசையைப் பெரிய பெருமாளுக்கு அறிவித்து, இவள்திறத்துச்செய்தருளக்கடவது என்? என்கிறாள்.

[கங்குலும்பகலும் என்று தொடங்கி] - உறங்குகைக்கு அடைத்த இரவோடு உறங்காமைக்கு அடைத்தபகலோடு வாசியின்றிக்கே நித்ரைஎன்று ஒருதத்த்வம் உண்டு என்று அறியாள். “இப்படி நோவுபடாநிற்க வாராதொழியான்” என்று அத்யவஸித்து அவன்வந்தால் காண்கைக்கு ப்ரதிபந்தகமான கண்ணநீரை “கடலைக்கையாலே இறைக்க” என்று உபக்ரமிப்பாரைப்போலே கைகளாலே இறையாநிற்கும். “கூராராழி வெண்சங்கேந்திக்கொடியேன்பால் வாராய்” என்று சொல்லத்தொடங்கிச் சங்கு சக்கரங்கள் என்ற மாத்ரத்திலே இளைத்து, விடாய்த்தார் ஹஸ்தசேஷ்டையாலே தண்ணீர் வேண்டுமாபோலே, தன் கருத்தைக்குறையும் அஞ்ஜலியாலே தெரிவியாநின்றாள். “திருக்கண்களாலே நோக்கியருளவேணும்” என்றுசொல்ல உபக்ரமித்து அத்தைச் சேஷ்டையாலும் தலைக்கட்டமாட்டாதே மிகவும் தளராநின்றாள். இவ்வழகையுடைய உன்னைப் பிரிந்தால் தரிக்கமுடியுமோ என்னாநின்றாள். தன் ஆற்றாமையாலே இம்மஹாப்ருதிவியை எல்லாம் தன் கைகளாலே துழாவாநின்றாள். [செங்கயல்பாய் நீர்த்திருவரங்கத்தாய்] - ஜலசரஸத்வங்களுங்கூட ஹர்ஷப்ரகர்ஷத்தாலே களிக்கும்படியான கோயிலிலே உள்ளவனே! ஜலசரஸத்வங்களுக்கு ஜலத்தை ஒழியச்செல்லாதாப்போலே உம்மையொழிய இவளுக்குச்செல்லாது என்றதாகவுமாம்.

ப.—முதற்பாட்டில், அநுஸந்தேயமான அஸாதாரண சிஹ்நங்களைச் சொல்லி 'இவளார்த்தையாகாநின்றாள்: இவளளவில்என்செய்ய நினைத்திருக்கிறீர்? என்கிறாள்.

கங்குலும் - (நாட்டார்உறங்கும்) கங்குலும், பகலும் - (ப்ரணயிநிகள்உறங்கும்) பகலும், கண் - கண்கள், துயில் - துயிலவேணுமென்று, அறியாள் - அறிவும் நடையாடுகிறிலள்; (இவள் கண்வட்டத்திலுறக்கம்வாராதபடி ஸோகாஸ்ருவெள்ளங்கொள்ளுகையாலே, கடலைக் கையிட்டிறைப்பாரைப் போலே), கண்ணநீர் - கண்ணநீரை, (மாற்றுவதாக), கைகளால் - கைகளாலே, இறைக்கும் - இறையாநிற்கும்; (இக்கண்ணநீர்க்கு இரங்கிவருமென்று நினைத்து அபேக்ஷிக்கிடாகக் * கூராராழிவெண்சங்கேந்திவரக்கூடுமாகையாலே), சங்குசக்கரங்கள் - சங்குசக்கரங்கள், என்று - என்று, (அவற்றைச் சொல்லி), கைகூப்பும் - வந்தால்பண்ணும் அஞ்சலியைப்பண்ணாநிற்கும்; (வந்தால் குளிர நோக்கும் கண்களை நினைத்து), தாமரை - தாமரைபோன்ற, கண் - கண், என்றே - என்று சொல்லி, (அது பெறாமையாலே), தளரும் - தளராநிற்கும்; உன்னை - (இந்த ஆயுத ஸோபையையும் அவயவஸோபையையுமுடைய) உன்னை, விட்டு - விட்டு, எங்ஙனே - எங்ஙனே, தரிக்கேன் - தரிக்கக்கடவேன்? என்னும் - என்னும்; (தன்னார்த்த்யதிஸயத்தாலே), இருநிலம் - பூமிப்பரப்படங்க, (அவன் காலாலே துழாவினவோபாதி, தான்), கை - கையாலே, துழா - துழாவி, இருக்கும் - (அதுக்கும் ஸக்தையன்றியே நிர்வ்யாபாரையாய்)இருக்கும்; செம் - இளமையாலே சிவந்தபுகரையுடைத்தான, கயல் - கயலானது, பாய் - உகளித்துப்பாய்கிற, நீர் - நீரையுடைத்தான, திருவரங்கத்தாய் - கோயிலிலே ஸந்நிஹிதனானவனே! இவள்திறத்து - இப்படி அதிஸயிதமான விகாரத்தையுடையளாய், (அந்த நீரைப்பிரிந்த கயல்போலே உன்னைப்பிரிந்து தரியாத இவளளவிலே) என் - எது, செய்கின்றாய் - செய்கிறாய்? இவ்வார்த்தியைத் தீர்க்க நினைக்கிறாயோ? அதிஸயிப்பிக்கநினைக்கிறாயோ? என்று கருத்து.

இ.—முதற்பாட்டில், பேச்சுக்கு நிலமன்றிக்கேஇருக்கிற இவள் தஸையை அவர்க்கு அறிவித்து, இவள்திறத்துச் செய்யக்கடவது என்? என்கிறாள்.

[கங்குலும் பகலும் கண்துயிலறியாள்] - உறங்கக்கடவ இரவோடு, உறங்காமைக்குக்கண்ட பகலோடு வாசியற நித்ரை என்பதொன்று அறிகிறிலள். கண்துயிலாள் என்னாதே, அறியாள் என்கிறது - நித்ரையை அறிந்து "விநோயி" என்று கைவிட்ட இளையபெருமாளில் வாசி சொல்லுகிறது. இளையபெருமாளுக்கு முன்பு இல்லையாகிலும், ஜந்மத்தில் மெய்ப்பாட்டாலேபற்றி விடவேண்டிற்று; இவளுக்கு அதுவுமில்லை. நாட்டார் இரவு உறங்குவர்கள்: ப்ரணயிநிகள் பகல் உறங்குவர்கள்: இப்படி உபயவ்யாவ்ருத்தமாய், இரவும் பகலும் உறங்காதபடி ஆனாள். "ஸதா ஸுப்ததமாஸ:" என்கிற உம்முடையபடியை இவள் உடையளானாள். [கண்ணநீர் கைகளால் இறைக்கும்] - கண்ணுறங்காமையாலேபோதுபோக்கரிதாய், அதனாலேகண்ணநீர்வெள்ளமிடத்தொடங்கிற்று. "இவ்வாற்றாமையில் அவன் வாராதொழியான்" என்று அத்யவஸித்து, "வரும்போது காண்கைக்குக் கண்ணநீர் பகையாகவொண்ணாது" என்று அத்தைமாற்றப் பாராநின்றாள். கடலைக் கையாலே இறைக்கத்தொடங்குவாரைப்போலே; இது என்ன ஸாஹஸம் என்கிறாள். * கடல்கொண்ட கண்ணீர் அருவிசெய்யாநிற்குமிறே. இவள கண்ணும் கண்ணநீரும் தாயார்க்கு ஸோகாஸ்ரயமாயாயிற்று "கிமேதுமஸம

நெஞ்ஞாஹ்ராய்''. இவள் ''ஊர்ஸநவிரோயி'' என்று மாற்றப்பார்க்கிறாள் இத்தனை. [சங்குசக்கரங்கள் என்று கைகூப்பும்] - வந்துதோற்றும்படி ''கூராராழிவெண்சங்கேந் திக்கொடியேன்பால் வாராய்'' என்று சொல்லக்கருதி, முடியச்சொல்லமாட்டாமையாலே, விடாய்த்தார் ஹஸ்தமுத்ரையாலே தண்ணீர்வேண்டுமோபோலே அஞ்ஜலியாலேகுறையும் தலைக்கட்டாநின்றாள். ''இன்னார்என்று அறியேன்'' என்று அறிவழிப்பனவும் இவை: ''செருவொண்சக்கரம் சங்கு'' என்றுஅறியப்பண்ணுமவையும் இவை; ''சங்குசக்கர மென்று இயலாதோ?'' என்று பிள்ளை திருநறையூர் அறைபர். ''வைஹூவசநத்துக்குப் பொருள்கண்டிலோமீ'' என்ன; ''இசையிலே தூக்கினவிடத்து இரண்டும் இசைந்து கிடக்கையாலே, சொல்லிப்போருகிறபடியே 'சங்கு சக்கரங்கள்' என்ன அமையும்'' என்று ஆப்பான் நிர்ணயித்தார். [தாமரைக்கண் என்றேதளரும்] - இரண்டாழ்வார்க ளளவும் வந்துஅலையெறிகிற கண்களின் அழகை இடைவிடாதே சொல்லநினைத்துத் தளரா நின்றாள். ''தாமரைக்கண்களால் நோக்காய்'' என்கிறபடியே ''திருக்கண்களாலே நோக்கியருளவேணும்'' என்ன உபக்ரமித்து, ஹஸ்தசேஷ்டையாலும் தலைக்கட்டமாட் டாதே தளராநின்றாள். ''ராஜேந்த்ராநயநவெஷ்நீஸாஊஃ விதா''. தளரலாமோ, ''தஸ்'' என்று இருக்கவேண்டாவோ? என்ன, [எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்டென்னும்,] - பரவ்யூஹவிபவங்களிலே ஆசைப்பட்டேனோ ''ஊரஸ்யன் என்று க்க? அவதாரங்களிலே ஆசைபபட்டேனோ ''ஸமகாலமன்று'' என்று ஆறியிருக்க? அந்தர்யாமித்வத்திலே ஆசைப்பட் டேனோ ''கண்ணுக்கு விஷயமன்று'' என்று ஆறியிருக்க? 'உன்னை'என்கிறது - வடிவழகையும் ஸீலாதிகளையும். இவளை அறியாதொழிந்தால் உம்மையும் அறியா தொழியவேணுமோ? உம்மைக் கண்ணாடிப்புறத்திலும் கண்டு அறியீரோ? அநந் தரம் வரக்காணாமையாலே, [இருநிலங் கைதுழாவிருக்கும்] - இம்மஹாப்ருயிவி எல்லாம் கைகளாலே துழாவாநின்றாளிறே. ஊமிப்பரப்படங்க ஒருஸாஜநத் துக்கு உட்பட்ட சந்தநம்போலேஆயிற்று இவள் கைக்கே படுகிறது. ஸர்வஶக்தியே வேண்டாவாகாதே ஊமியை அளக்க: ஆற்றாமையாலும் அளக்கலாமாகாதே. [செங் கயல் இத்யாதி] - ஜலசரஸத்வங்களுங்கூட ஹர்ஷத்தாலே களிக்கும்படியான கோயி லிலே உள்ளவனே! செங்கயல் - இளமையாலே சிவந்த புகரை யுடைய கயல். [இவள் திறத்து] - அந்த ஸத்வங்களுக்கு ஜலத்தை ஒழியச்செல்லாதாப்போலே உம்மை ஒழி யச்செல்லாத இவள்திறத்து. நிறமும் இழந்து ஸஞ்சாரமுமற்றிறே இவள் கிடக் கிறது. 'ஸாஹிவஶ்ரீராணி'' என்று வடிவைக் காட்டுகிறாள். [திருவ தாய் என்செய்கின்றாயே] - பரமபதத்தில் இருப்பிலேயோ கேட்கிறது? விஷயமான இடத்தேயன்றோ சாய்ந்தருளிற்று. இவள் நிறமும்பெற்றுச் செருக்கிநடக் கும்படிபண்ணப் பார்த்ததோ, தவிரப்பார்த்ததோ? இவளை அவ்வூர்படியாகப்பார்த்தாயோ, இவ்வூர்ப்படியாகப் பார்த்தாயோ?

ஈடு.—முதற்பாட்டு. இப்பிராட்டியுடைய பேச்சுக்கு நிலமன்றிக்கே யிருக்கிற உஸையைப் பெரியபெருமாளுக்கு அறிவித்து, இவள்திறத்துச் செய்தருளநினைத்திருக்கிற தென்? என்கிறாள்.

---

முதற்பாட்டு—கங்குல் இத்யாதி. இப்பிராட்டியுடைய அநேக அவஸ்தைகளைச்சொல்லு கிற ''கங்குலும்'' இத்யாதிபதங்களையும், ''என்செய்கின்றாய்'' என்றபதத்தையுங்கடாக்ஷித்தவதாரிகை- இப்பிராட்டியுடைய இத்யாதி.

[கங்குலும்பகலும்கண்துயிலறியாள்] - இவளை எப்போது கண்துயிலப்பண்ண விருக்கிறீர்? விரஹிணிகளுக்கு ஓடுகிற வ்யஸநம் மாற்றுகைக்காக "இரா, பகல்" என்று ஒரு வரம்பு கட்டினவித்தனையிறே; அது இவளுக்குக்காரியமாகிறதில்லை ராத்ரியில் விஷய லாபத்தாலேபோதுபோக்கவும்,பகல்இந்த்ரியங்களானவைவிஷயாந்தரங்களிலே கொடுபுக்கு மூட்டி "அப்போதாயிற்று, இப்போதாயிற்று" என்று காலக்ஷேபத்துக்கு உடலாயிருக்கு மிறே; "எங்ஙனேதரிக்கேனுன்னைவிட்டு" என்று சொல்லுகையாலே, இவளுக்கு அங்ஙனேன்றுசொல்லித் தரிக்கவோண்ணாதே. தனக்கு ஆஶ்வாஸஹேதுவாகப் பண்ணின திவாராத்ரவிபாகமும்அறிகிறிலள்.பகலும் இரவோடொக்கஉறங்கக்கண்டதிறே. [பகலும்]- (நாட்டாரிரவுஉறங்குவர்கள், ப்ரணயிநி) யௌவநங் குடிபுகுந்தால் இராமாறு நாயகனுக்கு அலைகொடுக்கையாலே உறக்கமில்லை; அவ்விழவுக்கும் எற்றிஉறங்குவது பகலிறே! அதுவும் பெறுகிறதில்லை. "𑌅𑌨𑌿𑌦𑍍𑌰𑌸𑍍𑌸𑌤𑌤𑌂 𑌰𑌾𑌮𑌃" (அநித்ரஸ்ஸததம்ராமঃ) என்றுகொண்டு தன் படியாக்கினான் "𑌪𑌰𑌮𑌂 𑌸𑌾𑌮𑍍𑌯𑌮𑍁𑌪𑍈𑌤𑌿" (பரமம்ஸாம்யமுபைதி) என்கிறபடியே தம்மோடு ஸாம்யாபத்தி கொடுத்தபடி. கண்துயில் கொள்ளாளென்னாதே, அறியா ளென்கிறது - ஸம்ஶ்லேஷத்தில் அவன்உறங்கவொட்டான், விஶ்லேஷத்தில் விரஹ வ்யஸநம் உறங்கவொட்டாது; ஆகையாலே, இவளுக்கு இரண்டுபடியாலும் உறக்க மில்லாமையாலே. இவள் கலந்தவன்று உறங்கினாலும், இவர் இப்போதுபடுகிற வ்யஸ நத்தை யநுபவித்த திருத்தாயார்க்கு அது ஒன்றாய்த்தோற்றாதே! இவ்வ்யஸநத்துக்குப் பூர்வ ரங்கமாய் வந்ததொன்றாகையாலே அத்தையொன்றாக நினைத்திருக்கிறிலள். என்றும் சிறைக் கூடத்திலே பிறந்து வளர்ந்தாரைப்போலே, பிரிந்தநாளையிழவேகாணும் இவள்நெஞ்சிலே பட்டுக்கிடக்கிறது. [அறியாள்] - ஒக்கவிருக்கச்செய்தே "கைங்கர்யவிரோதி" என்று

---

"நித்ரைக்குக் கல்பிதமான ராத்ரியும்பகலுங் கண்துயிலறியாள்" என்கிறவளுடைய ஹார்த்த பாவம் - இவளையெப்போது இத்யாதி. கண்துயிலறியாளென்னாதே, "கங்குலும்பகலும்" என்ற விசேஷித்ததுக்கு பாவம் - விரஹிணிகளுக்கு இத்யாதிவாக்யத்வயம். விரஹிணிகளுக்கென்றது - விரஹாஸஹிஷ்ணுக்களுக்கென்றபடி. வ்யஸநம் ஆரம்ப்ரகாரமேதென்ன - ராத்ரியில் இத்யாதி. இவளுக்கும் அப்படி போதுபோக்கவொண்ணாதோ? என்ன - எங்ஙனேதரிக்கேன் இத்யாதி ஆகை யாலே, 'தனக்குஆஶ்வாஸஹேதுவாக' என்றகூட்டுவது. 'பகலுங்கண்துயிலறியாள்'என்கைக்கு,பகலி லுறங்கப்ப்ரஸக்தியுண்டோ? என்ன - பகலுமிரவோடு இத்யாதி. உறங்கக்கண்டதேப்படி? என்ன - யௌவநம் இத்யாதி. அலைகொடுக்கையாலே - கலவிக்குஇடங்கொடுக்கையாலே. அலையென்று - வ்யாபாரமாய், ஸம்ஶ்லேஷத்தைச்சொல்லி; அலைகொடுக்கையாவது - ஸம்ஶ்லேஷிக்கையென்றபடி. பலிதம் - அநித்ர இத்யாதி. "𑌅𑌨𑌿𑌦𑍍𑌰𑌸𑍍𑌸𑌤𑌤𑌂 𑌰𑌾𑌮𑌸𑍍𑌸𑍁𑌪𑍍𑌤𑍋𑌽𑌪𑌿 𑌚 𑌨𑌰𑍋𑌤𑍍𑌤𑌮𑌃 । 𑌸𑍀𑌤𑍇𑌤𑌿 𑌮𑌧𑍁𑌰𑌾𑌂 𑌵𑌾𑌣𑍀𑌂 𑌵𑍍𑌯𑌾𑌹𑌰𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑍁𑌧𑍍𑌯𑌤𑍇" இதி ஸுந்தரகாண்டே ஸீதாம் ப்ரதி ஹநூமாந். [௩௬ - ௪௪] "𑌤𑌦𑌾 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌪𑍁𑌣𑍍𑌯𑌪𑌾𑌪𑍇 𑌵𑌿𑌧𑍂𑌯 𑌨𑌿𑌰𑌞𑍍𑌜𑌨𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌸𑌾𑌮𑍍𑌯𑌮𑍁𑌪𑍈𑌤𑌿" இதிமுண்டோபநிஷதி-(௩ - ௧)நாயகனுறங்குகிறபோதாகிலும் உறங்கவில்லையோ? என்ன - இவள்கலந்த இத்யாதி. ஹேதுபூர்வகவிவரணம் - இவ்வ்யஸநத்துக்கு இத்யாதி. பூர்வரங்கமாவது - ஸாவிநர்த்தநஸூசகபூர்வஸாவிவ்யாபாரம்-ஆனால் இவள்நெஞ்சிலே பட்டுக்கிடக்கிறதுதானேது?என்ன - என்றும் இத்யாதி. சிறைக்கூடத்திலேபிறந்துவளர்ந்தவர்களுக்குக்கலவிதோன்றாதாற்போலேயென்ற படி. "அறியாள்" என்றதால் வ்யாவ்ருத்தி - ஒக்க இத்யாதி. நித்ரையோடொக்கவிருக்கச்செய்தே யென்றபடி. "𑌜𑌹𑍌 𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌂 𑌚 𑌤𑌨𑍍𑌦𑍍𑌰𑍀𑌂 𑌚" என்று - கைங்கர்யவிரோதியென்று கைவிட்ட இளைய பெருமாளைச்சொல்லுகிறது. "நாயகன்வரும்" என்கிறதெளிவையும், நித்ரையில் வ்யுத்பத்தியில்லாமை

கைவிட்டவர்களிற்காட்டில் இவளுக்கு உண்டான வாசியிருக்கிறபடி முன்பில்லையாகிலும் இஜ்ஜந்மத்தில் மெய்ப்பாடுபேற்றி விடவேண்டிற்று. [கண்ணநீர்கைகளாலிறைக்கும்] - இவளுக்கு இவ்வறியாமை எங்குமொக்க அநுவர்த்திக்கப் பெற்றதில்லை! "இவ்வாற்றாமையில் ஸர்வஜ்ஞ நாயகன் வாராதிரான்" என்று பார்த்து, அப்போதாகப் பகைகொண்டாடவொண்ணாது; ப்ரதம பரிஸ்பந்தந் தொடங்கிக் காணவேணும்" என்று கண்ணநீரை மாற்றப் பாராநின்றாள். இதென்ன ஸாஹஸந்தான்! இது தன்னால்இயலு மென்றுதொடங்கினாளே. * கடல்கொண்ட கண்ணீரிறே. கோகுள்இலையைக்கொண்டு கடலைவற்ற இறைப்பதாக நினைப்பாளே! தன்கையாலே கண்ணநீரை இறைக்கப் பாராநின்றாள். "க்ஷிப்ரம் தவநேத்ராப்யாம்" (க்ஷிப்ரம் தவநேத்ராப்யாம்) என்னும்படிகாணும் இருக்கிறது. [சங்கு] - கண்ணநீரை மாற்றினால், கண்ணுலேகாண வந்துதோற்றும்படியை நினையாநின்றாள். "தவளவொண்சங்குசக்கரம்" என்று திவ்யாயுதங்களோடே காணவிறே இவள் தான் ஆசைப்பட்டிருப்பது! உகவாத கம்ஸாதிகளுக்கிறே த்விபுஜனாகவேண்டுவது. "தேநைவ ரூபேண சதுர்ப்புஜேந" (தேநைவரூபேண சதுர்ப்புஜேந) என்றானிறே காணவாசைப்பட்ட அர்ஜுநன். "கூராராழிவெண்சங்கேந்தி வாராய்" என்னக் கணிசித்து, வலஹஸ்தியாலே தலைக்கட்டமாட்டாதே, விடாயன் கையைமடுத்துத் தண்ணீரை வேண்டுமோபோலே, குறையும்அஞ்சலியாலே தலைக்கட்டாநின்றாள். [தாமரைக் கண்ணேன்றேதளரும்] - அவ்வாழ்வார்களளவுவந்து அலையேறிகிற கண்ணழகைச் சொல்

---

லையும் அநுஸந்தித்து வ்யாக்யாதாவின் ஈடுபாடு - இவளுக்கு இத்யாதி. எங்குமொக்கவென்றது - நித்ரையிற்போலே அவன் வரவிலும் அறியாமை யநுவர்த்திக்கப்பெற்றதில்லை யென்றபடி. கண்ணநீரைமாற்றுகைக்கு ஹேதுசொல்லுகிறாள் - இவ்வாற்றமையில் இத்யாதி. பகைகொண்டாட-ப்ரதிபந்தகமாக. 'இவ்வாற்றாமையில்' என்கிறவாக்யாநந்தரம், 'இவளுக்கு' இத்யாதிவாக்யம் அநுஸந்தேயம். "கைகளாலிறைக்கும்" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் - இதென்ன இத்யாதி. ஏதத்விவரணம் - இது தன்னால் இத்யாதி. இயலும் - நிறைவேறும். கடல்கொண்டவென்றது - கடலோடொத்த என்றபடி. 'கடல்கொண்டகண்ணீர்' என்கிறபாசுரம் திருவிருத்தத்தில், "கடல்கொண்டெழுந்தது" இத்யாதி. கையாலேயிறைக்கிறது ஸாஹஸமோ? என்ன - கோதுள்இலையை இத்யாதி. கோதுள் - வ்ருக்ஷவிசேஷம். ஸப்தார்த்தம் - தன்கையாலே இத்யாதி. கீழே - அபரிச்சேத்யமாகையாலே இறைத்துமுடியாதென்றருளிச்செய்து, போக்யமாயிருக்க எதுக்கிறைக்கிறாளென்று பாவாந்தரம் - க்ஷிப்ரம் இத்யாதி. "க்ஷிப்ரம் தவநேத்ராப்யாம் வாரிஸ்ரவதிஸோகஜம் | வாரண்யரீக வாராஸ்யாம் விப்ரகீர்ணமிவோதகம்" இதி ஸுந்தரகாண்டே ஸீதாம்ப்ரதி ஹநுமான்.

[ருரு - ச] "கண்ணநீர்கைகளாலிறைக்கும்" என்றவநந்தரம் "சங்குசக்கரங்கள்" இத்யாதி. கதநத்துக்கு பாவம் - கண்ணநீரை இத்யாதி. "தாமரைத்தடங்கண்" என்றாற்போலே அவயவங்களைச்சொல்லாதே திவ்யாயுதங்களைச்சொன்னதுக்குபாவம் - 'தவளவொண்சங்கு' இத்யாதி. அதாவது - அவயவங்களோபாதி இவையுமுத்தேஸ்யமென்றபடி. பெரியபெருமாள் த்விபுஜராயன்றோ இருப்பது: அவர்க்குச் சங்கு சக்கரங்களுண்டோ? என்ன - உகவாத இத்யாதிவாக்யத்வயம். சங்குசக்கரங்களோடே வரவேணுமென்றதே, "கைகூப்பும்" என்றதுக்குபாவம்-கூராராழிஇத்யாதி. "கிரீடிநம் கதிநம் சக்ரஹஸ்தம் இச்சாமி த்வாம் த்ரஷ்டுமஹம் ததைவ | தேநைவ ரூபேண சதுர்ப்புஜேந ஸஹஸ்ரபாஹோ பவ விஸ்வமூர்த்தே" இதிவிஸ்வரூபதர்ஸநாநந்தரே அர்ஜுநः (பகவத்கீதாயாம், கக-சகூ) "சங்குசக்கரங்கள்" என்றஅநந்தரம் "தாமரைக்கண்" என்றதுக்குபாவம் - அவ்வாழ்வார்கள் இத்யாதி.

லப்புக்கு, நடுவே தளராநின்றாள். "உன்தாமரைக்கண்களால் நோக்காய்' என்று சொல்லப்புக்கு, நடுவே தளராநின்றாள். "ராமம்ரக்தாந்தநயந மபஶ்யந்தீ ஸுது:கிதா" (ராமம்ரக்தாந்தநயந மபஶ்யந்தீஸுது:கிதா) என்னுமாபோலே. தளருகிறதேன்? வேறேன்றாலே போதுபோக்கினாலோ என்பர்களே; [எங்ஙனேதரிக்கேனுன்னைவிட்டேன்னும்]-பரவ்யூஹவிபவங்களிலே யாசைப்பட்டேனாய்ஆறியிருக்கிறேனோ? [உன்னைவிட்டு எங்ஙனே தரிக்கேன் - என்னும்] - உறக்கத்தாலே, சூது சதுரங்கத்தாலே போதுபோக்கலாம் விஷயத்திலேயோ அகப்பட்டதேன்னும். "உம்முடையவைலக்ஷண்யம் நீர் அறிந்தால், நம்மைப்பிரிந்தார் தரிக்கமாட்டார்கள்" என்னுமிடம் நீரே யறியவேண்டாவோ? [உன்னைவிட்டு எங்ஙனேதரிக்கேன் என்னும்] - உன்னைக் கண்ணாடிப்புறத்திலும் கண்டறியாயோ? கண்டாயாகில் பிரியாய்: பிரிந்தாயாகில் இவள்பட்டது படுவதி. "எங்ஙனே தரிக்கேன்?" என்ற அநந்தரம் வரக்காணாமையாலே, [இருநிலம்கைதுழாவிருக்கும்] - (கண்ணநீர்ப்ரவஹிக்கச் சேறுகையால்) மஹாப்ருதிவி ஒருபீங்கானுக்குஉட்பட்ட சந்தபங்கம் பட்டது படாநின்றது. [சேங்கயல்] - அவ்வூரில் வர்த்திக்கிற திர்யக்குக்களின்ஸ்வஹாவம் இவளுக்குஅரிதாவதே! அவை தந்நிறம்பேற்று வர்த்தியாநின்றன; இவள் நிறமிழந்தாள். நாரத்தைப்பற்றினது களித்து வர்த்தியாநின்றது, நாராயணனைப்பற்றின இவள் து:கிப்பதே? [சேங்கயல்] - அழகிய கயல். அக்கயல் ஜலத்தைப்பிரிந்து தரிக்கிலன்றோ இவள் உன்னைவிட்டு தரிக்கவல்லது? "ஜலாந்மத்ஸ்யாவிவோத்ருதௌ" (ஜலாந்மத்ஸ்யாவிவோத்ருதௌ) என்னக்கடவதிறே இவளையும். [இவள்திறத்து] - "ஸந்நிவேஶ

*விவரணம் - உ மரை இத்யாதி தாமரைக்கண்ணென்று தளர்ந்ததுக்கு த்ருஷ்டாந்தம் - ராமம் இத்யாதி. "ஸாஹம்கயும்கணிஷ்யா தம்விநாவிபடிமரபூநீ । ராமம்ரக்தாந்தநயந மபஶ்யந்தீஸுது:கிதா" (ஸுந்தரகாண்டே ஸப்தவிம்ஶே (உஎ). மேலுக்கு அவதாரிகை தளருகிறதேன் இத்யாதி. 'போதுபோக்கினாலோ' என்கிறவர்கள் தாய்மாராகில், "உன்னைவிட்டு" என்றது சேராதாகையாலே; தாய்மாருக்தியாகிலும் ஈஶ்வரோக்தியாகவே ப்ரமித்து உத்தரம் சொல்லுகிறாளென்னுதல். 'என்பர்கள்' என்றத்தை பூஜாயாம் பஹுவசநமாக்கி, என்கிறவன் - அவன்றானேயாய், அதுக்கு உத்தரம் - "உன்னைவிட்டு" என்றதென்னுதல். "திருவரங்கத்தாய்" என்றத்தோடே கூட்டி "உன்னை" என்றதுக்குஹாவம் - பரவ்யூஹ இத்யாதி. "தாமரைக்கண்" என்றத்தைக் கடாக்ஷித்து ஹாவார்த்தம் - உறக்கத்தாலே இத்யாதி. அகப்பட்டது விலக்ஷணவிஷயத்திலேயன்றோ என்னுமென்றபடி. விலக்ஷணவிஷயத்திலே யகப்பட்டாயாகில் நம்மை யென்செய்யச் சொல்லுகிறாயென்ன - உம்முடைய இத்யாதி. வைலக்ஷண்யமாவது - கண்ணழகென்றாய், அது நமக்குத்தெரியுமோ? என்ன - உன்னைக் கண்ணாடி இத்யாதி. கண்டாலென்செய்வோமென்ன - கண்டாயாகில் இத்யாதி. கண்டாயாகில் - கண்ணாடிப்புறத்தி லுன்னைக் கண்டாயாகிலென்றபடி. பிரியாயென்றது - கண்ணாடியைப் பிரியா யென்றபடி "கைதுழாவிருக்கும்" என்றதுக்குஹாவம் - மஹாப்ருதிவி இத்யாதி. "கைதுழாவிருக்கும் - " கையாலேதுழாவாநிற்குமித்யர்த்த:. "கை - கையாலே; துழா - துழாவி, இருக்கும் - அதுக்கும் ஶக்தையன்றியே நிர்வ்யாபாரையாயிருக்கும்" என்றஉரையில் ஶப்தார்த்தம்: கயலினுடைய சிவப்பைச்சொல்லுகிறவளுடைய ஹார்த்தஹாவம் - அவ்வூரில் இத்யாதி. விவரணம் - அவைதந்நிறம் இத்யாதி. "பூய்நீர்" என்றதுக்குஹாவம் - நாரத்தை இத்யாதிவாக்யத்வயம். நாரம் - ஜலம். "சேங்கயல்" என்றதுக்குஹாவார்த்தம் - அக்கயல் இத்யாதி. உக்தார்த்தத்துக்குப்ரமாணம் - ஜலாத் இத்யாதி. "நவஸீதாகயா ஹீநா" இத்யாதி ஶ்லோகத்தடி. இவளாற்றாமை இன்னபடிப்பட்டிருக்கு மென்னாதே, "இவளிடையாட்டம்" என்றதுக்குஹாவம் - ஸந்நிவேஶ இத்யாதி. "ஸந்நிவேஶ*

ராணி'' (ஏஹிபஶ்யஶரீராணி) என்னுமாபோலே, இவள்படி பேச்சுக்கு நிலமல்லாமை யாலே காட்டுகிறாள். ராக்ஷஸர்தின்ற உடம்பைக் காட்டினாற்போலே, விரஹம்தின்ற உடம்பைக்காட்டுகிறாள். [என்செய்கின்றாயே] - இவள் திறம் செய்யப் பார்த்ததேன்? உம்முடையவூரில் பதார்த்தங்கள் பெற்றதும் பெறவேண்டாவோ, உம்மையாசைப்பட்ட (க)

## ரண்டாம் பாட்(

என்செய்கின்றாயென்றாமரைக்கண்ணாவென்னுங்கண்ணீர்மல்கவிருக்கும்
என்செய்கேனெறிநீர்த்திருவரங்கத்தாயென்னும்வெவ்வுயிர்த்துயிர்த்துருகும்
முன்செய்தவினையேமுகப்படாயென்னும்முகில்வண்ணாதகுவதோவென்னும்
முன்செய்திவ்வுலகமுண்டுமிழ்ந்தளந்தாயென்கொலோமுடிகின்றதிவட்கே.

ஆ.—(என்செய்கின்றாய்.) - என்னைத்தோற்பித்து அடிமையாக்கின தாமரைக்கண்களையுடையவனே! அக்கண்களாலே என்னைக் குளிரப்பார்த்தருள நினைத்தாயோ இல்லையோ என்னும். உன்னுடைய அவலோகநாஹாவஜநித ஸந்தாபத்தாலே அக்கண்ணநீர்வெள்ளமெல்லாம் ப்ரோக்ஷிக்கையாலே கரைக்குட்பட்ட கண்ணநீரையுடையளாய், ஒருசேஷ்டிதக்ஷமையன்றியே யிருக்கும். ''என்னுடைய ஸந்தாபத்தையெல்லாம் போக்குகைக்காகவன்றோ கோயிலிலே கண்வளர்ந்தருளிற்று? இஸ்ஸந்தாபமொன்றும் பொறுக்கமாட்டுகிறிலேன்; என்செய்கேன்''என்னும். தன்னுடைய ஸந்தாபஜநித தீர்க்கோஷ்ண நிஶ்வாஸ பரம்பரைகளாலே உருகாநிற்கும். ஈத்ருஶமான வ்யஸநத்தை அநுபவிக்கைக்கு ஜந்மாந்தரத்திலே என்ன பாபத்தைப்பண்ணினேனோ? என்னும். பரமோதாரனே! என்னுடைய அபேக்ஷிதம் செய்யாதொழிகை உன்னுடைய ஔதார்யத்துக்குப் போருமோ? என்னும். நிர்ஹேதுகமாக லோகத்தைப்படைத்து ரக்ஷித்தருளுகிற பரமகாருணிகனே! இவளுக்கு என்னுப்பினையுபேபா? என்கிறாள்.

ஒ.—இரண்டாம்பாட்டில், இப்பெண்பிள்ளையுடைய ஊமை என்னுய்விடக் கடவது? என்கிறாள்.

[என்செய்கின்றாய் என்று தொடங்கி] - உன் கண்ணழகைக்காட்டி என்னை அடிமைகொண்ட நீ என் ஆர்த்திதீரக்கண்களாலே நோக்கியருளப்பார்த்தாயோ இல்லையோ என்னும். தான் அபேக்ஷித்தபோதே நோக்கி அருளாமையாலே, இன்னாப்பாலே கண்ணநீர் வெள்ளமிட சேஷ்டிக்கக்ஷமையன்றிக்கே யிருக்கும். ப்ரமஹரமான கோயிலையும் பெரியபெருமாள் திருவழகையும் நினைத்துப்பெருவிடாயாலேகாணப்பெறாமையாலே, செயலற்று ''என்செய்கேன்?'' என்னும். இதுக்குமேலே ஸந்தாபத்தாலே எவ்விதமாக

---

ஶரீராணிஉ—நீநாஶாவிதாநாம்'' இத்யாதி. படி - ப்ரகாரம். ''இவள்திறத்து'' என்றது - இவளளவிலென்றபடி. ''ஏஹி'' இத்யாதிக்கு அர்த்தகதநபூர்வகமாக, இவள்காட்டினது இன்னதென்னுமத்தையும் அருளிச்செய்கிறார் - ராக்ஷஸர் இத்யாதி. ''செங்கயல்'' இத்யாதியையுங்கூட்டி ''என்செய்கின்றாய்'' என்கிறவளுடைய ஹார்த்தபாவத்தை யருளிச்செய்கிறார் - உம்முடைய இத்யாதி. ''நீர்'' என்றது-நாரத்துக்கு வாசகமாகையாலே, நாரமென்றது - ததீயாபிப்ராயத்துக்கும் ஸூசகம். (க)

பலகால் நெடுமூச்செறிந்து அவ்வுஷ்ணத்தாலே உருகாநிற்கும். இத்து:க்கத்துக்கு அடியாக நான் பண்டுபண்ணின பாபமே உன்னுடையவடிவைக் காட்டவல்லதே என்று அதின் கொடுமையைச் சொல்லாநிற்கும். கர்மாநுகுணமாக நான் நோவுபடக்கண்டு உபேக்ஷித்திருக்கை ஜலஸ்தலவிபாகமில்லாத உன்னுடைய ஔதார்யத்துக்கு ஸத்ருசமோ? என்னும். [முன்செய்து இவ்வுலகமுண்டுமிழ்ந்தளந்தாய்]-நான் உதாரனாய் இருந்தேனோ? என்னில்; நிர்ஹேதுகமாக பண்டு ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணியருளினவனல்லையோ?

ப.—அநந்தரம் நீ ஸர்வப்ரகாரரக்ஷகனாயிருக்க, இவளுடைய ப்ரகாரம் என்னாய்முடிகிறது? என்கிறாள்.

என் - (ப்ரதமத்திலே) என்னை அநந்யார்ஹையாக்கி, தாமரை - (ஆசையை விளைக்கும்படி) அதிசயிதபோக்யமான, கண்ணா - கண்ணையுடையவனே! (அநுபவபர்யந்தமாகப் பார்க்கநினைக்கிறாயோ? அவ்வளவிலே ஒடியெறிந்திட்டுவைக்க நினைக்கிறாயோ?) என் செய்கின்றாய் - என்செய்யநினைக்கிறாய்? என்னும் - என்னும்; (அதுக்கு ஒருமறுமாற்றங்காணாமையாலே அந்தஸ்தாபத்தாலே, ஆகவாயில்), கண் - கண், நீர் - நீர், மல்க - சுவறித்தளும்புமளவாம்படி, இருக்கும் - ஸஞ்சாரக்ஷமையன்றியே யிருக்கும்; எறி - அலையெறிகிற, நீர் - நீரையுடைத்தான, திருவரங்கத்தாய் - கோயிலிலே ஸந்நிஹிதனானவனே! (உன்னைக்கிட்டுகைக்கு ப்ராப்தனாய் ஸுலபனான நீ ஒன்றுஞ்செய்யாதிருக்க, அஶக்தையாய் ஆர்த்தையான நான்), என் - எத்தை, செய்கேன் - செய்வேன்? என்னும் - என்னும்; (இந்த ஆகிஞ்சந்யத்துக்கும் முகங்காட்டாமையாலே), வெவ் - (அந்த ஸ்தாபத்தாலே) வெவ்விதாம்படி, உயிர்த்துயிர்த்து - பலகாலும்மூச்சுவிட்டு, உருகும் - அப்பரிதாபத்தாலேயுருகாநிற்கும்; (இப்படி க்லேசிக்கைக்கடியாக), முன் - முன்பு, செய்த - (நான்) பண்ணிவைத்த, வினையே - கர்மமே, முகப்படாய் - முகந்தோற்றநில்லாய், என்னும் - என்று க்லேசாகரமாகையாலே சேதநஸமாதியாலே சொல்லாநிற்கும்; ("அதுவும் அவனிட்டவழக்கு" என்கிற தெளிவுபிறந்தவாறே), முகில்வண்ணா - ஜலஸ்தலவிபாகமற உபகரிக்கும் மேகஸ்வபாவனானவனே! (நீ முகங்காட்டாதிருக்குமது), தகுவதோ - (அந்தவுபகாரத்துக்குத்) தகுவதோ? என்னும் - என்னும்; (அந்தவுபகாரகத்வ மலடாம்படி), இ - இந்த, உலகம் - லோகத்தை, முன் - ப்ரதமத்திலே, செய்து - ஸ்ருஷ்டித்து, உண்டு - (ப்ரளயத்திலே) உண்டு, உமிழ்ந்து - உமிழ்ந்து, அளந்தாய் - (அந்யாபிமாநம் போம்படி) அளந்துகொண்டவனே! இவட்கு - (உன்னையொழியச்செல்லாதபடியான) இவளுக்கு, என் - என்னாய், முடிகின்றதுகொலோ - முடியப்புகுகிறதோ? இந்த ஆர்த்திக்குஎல்லையுண்டாம்படி உன்னுடைய ரக்ஷ்யவர்க்கத்திலே இவளுக்கும் அந்தர்பாவமுண்டாகிறதோ? யாப்யமாய்விடும்படி இவற்றின் புறத்தாளாம்படியாகிறதோ? என்று கருத்து.

இ.—இரண்டாம்பாட்டில், இவள்தசை என்னாய் விடக்கடவது? என்கிறாள். [என்செய்கின்றாய் என் தாமரைக்கண்ணா என்னும்] - "தாமரைக்கண் என்றே தளரும்" என்று தளர்த்திக்கு உடலானது இப்போது பாதகமாய்ச்செல்லுகிறது. நீர் வறண்டார்க்கு அந்நீரைத்தெளித்து ஆஶ்வஸிப்பிக்குமாபோலே, எனக்கு ஆற்றாமையை விளைத்த கண்களாலே என் ஆர்த்திதீர்க்கப்பார்த்தாயோ, இல்லையோ? கண்களாலே பிறர்க்கு ஆகாதபடி பண்ண அமையுமோ? ஸம்ஹாரத்தையும் பண்ணவேண்டாவோ? முகத்திலே "நானும் என் உடைமையும் நீ இட்டவழக்கன்றோ?" என்று கண்ணாலே சொன்ன

வார்த்தை ப்ரதிஜ்ஞாமாத்ரமாக அமையுமோ? அது அர்த்தக்ரியாகாரியாக வேண்டாவோ? [கண்ணீர் மல்கவிருக்கும்]- அப்போதே நோக்குக்காணுமையாலே கண்ணீர் மல்காநின்றது. "கைகளால் இறைக்கும்" என்கிற அளவுபோய், செறிந்து இற்றுப்பாயும் அளவாயிற்று. ஸஞ்சாரக்ஷமையுமன்றிக்கே, ஒன்றை அநுஸந்திக்கவும் மாட்டாதே ஸ்தப்தையாய் இருக்கும். [என்செய்கேன் எறிநீர்திருவரங்கத்தாய் என்னும்] - 'ப்ரமஹரமான கோயில்வாஸத்தை நான் பெறுகைக்கு நான் என்செய்வேன்?' என்னாநின்றாள். அவ்வலை ஏற்றுவாயிலே கொண்டுபோய் என்னைப் பொகடுகைக்கு நான் என்செய்வேன்? திருப் பொருநல் பிரிந்தார்க்கு நிலாப்போலே அஸஹ்யமாய் இருக்கிறதாயிற்று. என்செய்கின்றாய் என்றாள், குளிர்ந்தநோக்கை நினைத்து; என்செய்கேன் என்கிறாள், செயலறுதியாலே. [வெவ்வுயிர்த்துயிர்த்துருகும்] - இவள் தனக்கு அங்கேபோய்ப் புகுகைக்கு அபேக்ஷையும் உண்டாய், ஸகலதாபமும் ஆறும்படி ப்ரமஹரமான தேசமாயிருக்க, அதுபெறாமையாலே நெடுமூச்செறியாநின்றாள். வெவ்விதாகப் பலகால் நெடுமூச்செறிந்து, அவ்வுஷ்ணத்தாலே உருகாநிற்கும். "உஹ்ணஜீவ நிஶ்வாஸ ... ஶாரிண:"- ... க்கு அநர்ஹமான ஆத்மவஸ்து த்ரவத்ரவ்யமாகாநின்றது. [முன்செய்த இத்யாதி]-இத்துக்கத்துக்கு அடியாக நான்முன்புபண்ணின பாபமே என்னுடைய வடிவைக் காட்டவல்லையே; என்ஸ்வரூபத்துக்கு விரோதமாக அவனை இன்னாதாகாமே, "உன்னாலேவந்தது" என்று நான் ஆறியிருக்கும்படி. அதின் கொடுமையை நினைத்துச் சொல்லாநிற்கும் என்றுமாம். [முகில்வண்ணாதகுவதோ என்னும்] - கர்மாநுகுணமாக நான் நோவுபடக்கண்டு உபேக்ஷித்திருக்கை, ஜலஸ்தலவிபாகமில்லாத உன்னுடைய ஔதார்யத்துக்கு ஸத்ருஶமோ என்னும். து:கஹேதுவான பாபம் முன்னேநின்றாலும், அதுக்கு உயிர் இல்லாமையாலே இன்னாதாகைக்கு ப்ராப்தி இல்லை; ப்ராப்தி யுள்ள உனக்கு இவ்வளவில் முகங்காட்டாதொழியப் போருமோ? முன்செய்த வினையே முகப்படாய் என்ற இடம்—ஸ்வரூபஜ்ஞாநம் அவிஶதமானார்வார்த்தை; முகில் வண்ணாதகுவதோ என்கிற இது—ஸ்வரூபத்தை உள்ள அளவுகண்டார் வார்த்தை. "அசேதநமாய் அநீஶ்வரமாய் இருந்துள்ள க்ரியாகலாபம் ஃபலப்ரதமாகமாட்டாது: ஸர்வநியந்தாவா யிருப்பானொருவனுடைய ஹ்ருதயத்தில் நிக்ரஹத்தாலே ஃபலம்" என்றிருக்கையிறே அதாகிறது. "க்ஷிபாமி ... " "ஜோஷ்டாய ... " என்றிறே இத்தலையில் வார்த்தை. முன்செய்த என்கிறவிடம் பதினெட்டுஓத்தாலும் சொன்ன அர்த்தம்போலே இருக்கிறது; முகில்வண்ணா என்கிறஇடம் சரமஶ்லோகம்போலே இருக்கிறது. இப்படி நான் உதாரனாய் இருந்தேனோ என்ன, [முன்செய்து இவ்வுலகம் இத்யாதி] - நிர்ஹேதுகமாக முன்பு ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணினவன் அல்லையோ? ஸ்ருஷ்ட்யாதிகளில் யௌகபத்யத்தை "கர்மாநுகுணம்" என்னவொண்ணுமோ? அபுநராவ்ருத்திலக்ஷண மோக்ஷத்தைப் பெறுகைக்கு அடியாய் இருப்பதொரு கனவியதொன்று சேதநன்தலையில் கிடக்கவற்றோ? [என்கொலோ முடிகின்றது இவட்கே] - இவள் இடையாட்டத்தில் நீ செய்யப் பார்த்தபடி என் என்னுதல் இவளுடைய தசை என்னாய்விடக்கடவது என்னுதல். இவள் என்கிறது, நீர் ரக்ஷித்த ஜகத்துக்கும் இவளுக்கும் உண்டான நெடுவாசி அறியீரோ? அநந்யபரையாய் அநந்ய கதியாய் அபலையாய் இருக்கிற இவள் இடையாட்டத்தில் என்செய்தருள நினைத்தருளினீர்? என்கிறாள்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. இப்பெண்பிள்ளையுடைய த்சை என்னய் விளைய க்கடவது ? என்கிருள்.

[என்செய்கின்ருய்]-ஆற்ருமை மிகமிக அவனைக்கேட்கும் இத்தனையிறே. [என் தாமரைக்கண்ணுவென்னும்] - ஒருநீர்ச்சாவியான பயிருக்கு ஒருபாட்டம் வர்ஷிக்கக்கடவ தன்ருே? என்கிருள். "அவலோகநதாநேந பூயோமாம்பாலய" (அவலோகந தாநேநபூயோமாம்பாலய) என்னக்கடவதிறே. "தாமரைக்கண்ணனென்றேதளரும்" என் றது; உணருகிறபோது கண்களை வாய்வெருவிக்கொண்டாயிற்று உணர்ந்ததும். கிட்டின ஸமயத்தில் "நானும் என்னுடைமையும் நீயிட்ட வழக்கன்ருே" என்றது கண்ணுலேயிறே; அதிலேயிறே இவளெழுதிக்கொடுத்தது. கண்ணுலேநோக்கி அணைக்கும்படியைநினைத்து, அந்த ஹாவநாப்ரகர்ஷத்தாலே கலந்துபிரிந்தாற்போலே கண்ணீர்மல்கவிருக்கும். [என் செய்கேனித்யாதி] - என்தாபம்ஆறும்படி அவ்வலையேற்றிலே கொண்டுபோய்ப் போகட வல்லிகோளே என்னும். திருப்பொருநலில் நீர், பிரிந்தார்க்கு நிலாப்போலே * உபதப்தமா யிராநின்றதுபோலே. [என்செய்கேன்] - உன்னைக்கிட்டுகைக்கு நான்செய்வதென் ? அப் போதே கிட்டப்பெருமையாலே, 'ஆசைப்பட்ட நாம் அழகிதாகப்பெற்ருேம்" என்று நெடு மூச்செறியாநிற்கும். "தஹந்தீவ நிஶ்வாஸை: வ்ருக்ஷாந் ஸபல்லவதாரிண:"

---

ப்ர.—[வெவ்வுயிர்த்துயிர்த்து]—ஸாஹஸ்ரகாணே [கள] "தாம் த்ருஷ்ட்வா ஸ நாரீந் வீ தாம் ஶோகஸமாவ நிரீக்ஷணாம் ! உஅ॥ ஶோகஸந்தப்தஸ்ஸாம் வீக்ஷ மாணாம் ஸஸ்ஜ்ஜே த: । தஹந்தீவ நிஶ்வாஸை வ்ருக்ஷாந்ஸபல்லவதாரிண: ! உக ॥ ஸஜ்ஞாத ஶிவஶோகாநாம் தூ:கவஹ்நிஶிகாஶிகா தாஷ ! உகூ॥"

---

இரண்டாம்பாட்டு.—என்செய்கின்றய் இத்யாதி. 'என்கொலோமுடிகின்றதிவட்கு" என் றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை - இப்பெண்பிள்ளை இத்யாதி.

தலைமகள் "என்செய்கின்ருய்" என்று அவனைக்கேட்கிறதென் ? என்ன - ஆற்றமை இத் யாதி. "தாமரைக்கண்ணு" என்கிற மகளுடைய ஹார்த்தஹாவம் - ஒருநீர்ச்சாவி இத்யாதி. ஒருநீர்ச் சாவி - ஒருநீருக்காகப்பட்டுப்போகிறசாவி. ஒருபாட்டம் - ஒருபாறல். அவன்கடாக்ஷம் ப்ரார்த்யமோ? என்ன-அவலோகந இத்யாதி. "தேவ ஸ்வயமாகாதி க்ருஹம் த்வஸ்யாதோகாரோகேஶவ! அவலோ கநதாநேந பூயோமாம்பாலயாஸ்வத"இதி ப்ரதமேப்யே. (உ0 கக) பரிதாபஹேதுவும் ஆஶ்வாஸஹேதுவும்இதுவேயென் றவிவக்ஷித்தருளிச்செய்கிருர்-தாமரைக்கண்ணனென்றே இத்யாதி. இதுக்குக்கருத்து - அங்கு "தளரும்" என்று மோஹத்தைச்சொல்லி, இங்கே "என் தாமரைக்கண்ணு" என்கையாலே - இது உணர்த்தியில் வார்த்தையென்கிறதென்று. "இது - ஸந்திக்யம்" என்றும் சொல்லுவர்கள். "என்" என்றதுக்குஹாவம்-கிட்டின இத்யாதி வாக்யத்வயம். "என் தாமரைக்கண்ணு" என்றவநந்தரம், "கண்ணீர்மல்கவிருக்கும்" என்றதுக்குஹாவம் - கண்ணுலேநோக்கி இத்யாதி. 'எறிநீர்" என்றதுக்குஹாவம் - என்தாபம் இத்யாதி. "எறிநீர்" - அலையெறிகிற நீரென்றபடி. அலையேற்றிலே - அலையெறிதலிலே. இங்கே திருப்பொருநலுண்டே என்ன - திருப்பொருநல் இத்யாதி. திருப்பொருநல்-திருத்தாம்ரபர்ணி. "உபதப்தோதகா நத்ய: பல்லவாநி ஸராம்ஸி ச" இத்யாதி. (ரா. அ. ருக-5) "என்செய்கேன்"என்றஅநந்தரம், "வெவ்வுயிர்த்துயிர்த்துருகும்" என்றதுக்கு ஹாவம் - அப்போதே இத்யாதி. வெவ்விதாம்படி பலகாலும் நெடுமூச்செறிந்துருகாநிற்குமென்று ஸப் தார்த்தம். ஸோஷ்ணமாக நெடுமூச்செறிகிறதுக்கு ப்ரமாணம் - தஹந்தீம் இத்யாதி. 'தஹந்தீவ நிஶ்வாஸை வ்ருக்ஷாந் ஸபல்லவதாரிண: ஸம்ஜாதஶிவஶோகாநாம் தூ:கவஹ்நிஶி

(தஹந்தீமிவநிஶ்வாஸைர்வ்ருக்ஷாந்பல்லவதாரிண:)-நெடுமூச்சாலே தன்பகையறுக்கப் பாரா நின்றாள். பல்லவதாரிகளாயிருக்கை இப்போது இவளுக்குப்பகையிறே! ஒருபடிப்பட நின்று நலிகிறபடியிறேஅவை. ராக்ஷஸிகளுறங்கும்போதுமுண்டிறே, உருவ இப்படியே நிற்கிறஇத்தனையவை. [உருகும்]-உருகுகிறபடியே நிற்குமத்தனை. இனிநெடுமூச்செறிகைக்கு யர்மியுமில்லையோ என்னும்படியுருகும். வெவ்விதாகப் பலகால் நெடுமூச்செறிந்து, அவ்வுஷ்ணத்தாலே யுருகாநிற்கும். [முன்செய்தவினையே] - வலிக்கைக்கு விரகுபார்க்கிறபடி. நான்முன்புபண்ணினபாபமே, என்முன்னேவந்து நிற்கவல்லையேஎன்னும். நீ முகங்காட்டினையாகில், ‘‘தாமரைக்கண்ணா - என்செய்கின்றாய்’’ என்று அவனைக் கேளாதொழியவாயிற்றே. ‘‘நான்செய்தவினையின்பயன் இதுவானபின்பு நாம்ஆரைவெறுப்பது?’’ என்றிருக்கலாயிற்றே. ஸ்ரீஜநகராஜன்திருமகளுக்கும் இவர்க்குமுள்ளது ஒன்றாயிற்று; ‘‘நன்மைஅவனாலே’’ என்றும், ‘‘தீமை தந்தாமாலே’’ என்றுமாயிற்றுஇருப்பது. ‘‘மமைவ துஷ்க்ருதம் கிஞ்சிந் மஹதஸ்தி ந ஸம்ஶய:’’ (மமைவதுஷ்க்ருதம்கிஞ்சிந்மஹதஸ்திநஸம்ஶய:) என்றாளிறே. [முகில்வண்ணாதகுவதோஎன்னும்] - நான் பண்ணின பாபம் கிடக்கிடும், கர்மாநுகுணமாகவோ நீர் காரியஞ்செய்யுமது? (தகுவதோ - சேருமோவென்றபடி.) ஜலஸ்தலவிபாகம்பாராதே நீர்வர்ஷிக்கும்உம்முடைய ஔதார்யகுணத்துக்குப்போருமோ?என்னும். ‘‘ஒருக்ரியாமாத்ரத்துக்கு இத்தனையுயிருண்டோ? நான்காண் இது விளைத்தேன்’’என்றுஅவ்வடிவைக்கொண்டுவந்து காட்டவல்லையே என்னும். இது பக்திகார்யமேயாகிலும், பகவதநுபவவிரோதியாகையாலே - பாபமேன்கிறது. அநிஷ்டாவஹம் - பாபமாமித்தனையிறே. தகவிதோ என்றபாடத்தில் நான்பண்ணினபாபம் எனக்கநுபவிக்கவேணுமாகில் உம்முடைய தகவுக்கு விஷயம்இன்னது என்னும். முன்செய்தவினையே முகப்படாயென்கிற

---

வொர்த்திதா’’ இதி ஸுந்தரகாண்டே. ‘‘தஹந்தீ’’ என்றதுக்கு பாவம் - நெடுமூச்சாலே இத்யாதி. பகையாவது-வ்ருக்ஷங்கள். ‘‘தாரிண:’’ என்கிறவர்த்தமாநத்துக்கு பாவமாதல், ‘‘தாரிண:’’ என்றதுக்கு தாச்சில்யே ணிநி ப்ரத்யயமாக்கி பாவமாதல்-ராக்ஷஸிகள் இத்யாதி. உருகுகிற சமயத்திலே ‘‘முன்செய்தவினையே முகப்படாய்’’ என்கிறதென்? என்ன - வலிக்கைக்கு இத்யாதி. பரப்தார்த்தம் - நான் முன்பு இத்யாதி. நான் முன்னேநின்றால் பெறுகிறதென்? என்ன - நீ முகங்காட்டினையாகில் இத்யாதி. விவரணம் - நான்செய்த இத்யாதி. தன்பாபமாகச் சொன்னாருண்டோ? என்ன - ஸ்ரீஜநகராஜன் இத்யாதி வாக்யத்வயம்.பிராட்டி அப்படிச்சொன்னாளோ? என்ன-மமைவ இத்யாதி. ‘‘மமைவ துஷ்க்ருதம் கிஞ்சிந் மஹதஸ்தி ந ஸம்ஶய:। ஸமர்த்தாவபி தௌ யந்மாம் நாவேக்ஷேதே பரந்தபௌ’’ இதி ஸுந்தரகாண்டே. (௩அ-௪அ)‘‘தகுவதோ’’ என்றது-போருமோ என்றபடி. நீ செய்த கர்மபலமாகில் அது நீயே அநுபவிக்கவேண்டாவோ? என்செய்கின்றாய் என்று என்னைக்கேட்கிறதென்? என்ன - நான் பண்ணின இத்யாதி. ‘‘வினை’’என்றத்தைக் கடாக்ஷித்து, ‘‘வண்ணம்’’ என்றதுக்கு வடிவாக அர்த்தாந்தரம் - ஒரு க்ரியாமாத்ரத்துக்கு இத்யாதி. இவ்வாற்றாமைக்கடி பக்தியன்றோ? அத்தை பாபமென்பானென்? என்ன - இது பக்திகார்யமே இத்யாதி. எத்தனையென்றாலும், ப்ரேமபலமாய்வந்தத்தை பாபபலமென்னலாமோ? என்ன - அநிஷ்டாவஹம் இத்யாதி. ‘‘தகுவதோ’’ என்றன்றிக்கே, ‘‘தகவிதோ’’ என்றபாடாந்தரமாக்கி, அதுக்கர்த்தம் - நான்பண்ணின இத்யாதி. தகவுக்குவிஷயமென்னதென்னுமென்றது - தயைக்கு விஷயமின்னதென்று அருளிச்செய்யவேணுமென்று சொல்லுமென்றபடி. இந்தப்பாடத்தில், ஓகாரம் - பாதபூரணார்த்தம். தகவு - தகவுக்கு. இது - விஷயமிதுஎன்றபடி. என்னவேணுமென்று அத்யாஹார்யம். ‘‘முன்செய்தவினையேமுகப்படாய்’’ என்று - கர்மபலப்ரகாமாகச் சொன்னவிடம் பூர்வ

விடம் - "க்ரியை அத்ருஷ்டரூபத்தாலே நின்று ஃபலந்தரும்" என்பார்வார்த்தை; முகில் வண்ணா என்கிறவிடம் - ஒரு பரமசேதநனுடைய அநுக்ரஹமே ஃபலப்ரதமாவது" என்றிருக்கும் வேதாந்திகள் வார்த்தை. "ஸதோஷராயிருப்பார் ராமகோஷ்ட்டிக்காளல்லர்" என்கிற மஹாராஜர்தோடக்கமானார் வார்த்தைபோலே கீழ்ச்சொன்னது: "தோஷோயத்யபி தஸ்யஸ்யாத்" (தோஷோயத்யபிதஸ்யஸ்யாத்) என்ற ராமஸித்தாந்தம்போலே மேல். "ஸர்வதர்மாந்" (மாம்நமஸ்குரு) என்றாற்போலே கீழ்ச்சொன்னது: "மாமேவ" (மாமேகம்) என்றாற்போலே 'தகவிதோ' என்கிறது. "முகில்வண்ணா" என்கைக்கு நம்ஆசார்யம் எங்கே ஃபலிக்கக்கண்டு சொல்லுகிறது? என்ன, [முன்செய்துஇத்யாதி]-நிர்ஹேதுகமாக முன்பு ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணி "தகவிதோ" என்கைக்கு உபகரணமில்லாதவன்று இத்தையுண்டாக்கி நோக்கினாய் நீயன்றோ? கரணகளேபர விதுரமான இத்தை வெறும்உன்க்ருபையாலே உண்டாக்கினாய் இத்தனையன்றோ? உண்டாக்கிவிட்டவளவேயோ? ப்ரளயாபத்திலே வயிற்றிலே வைத்துரக்ஷித்து, உள்ளேகிடந்து நோவுபடாதபடி புறப்படவிட்டு, எல்லைநடந்துமீட்டுக்கொண்டு, ஸர்வவிதரக்ஷணமும் பண்ணிற்றில்லையோ! [என்கொலோமுடிகின்றதிவட்கே] - இவளளவில் யர்மிலோபமேயோ ஃபலிக்கப்புகுகிறது. நீர் ரக்ஷிக்கிறபூமிக்கும் இவளுக்கும் ஒருவாசியுண்டாக நினைத்திருக்கிறீரோ? (அநந்யபரையாய்அநந்யகதியாய்அபலையாயிருக்கிறவள்;) இவளுடையகர்மமோ, உம்முடைய அநுக்ரஹமோ ஃபலிக்கப்புகுகிறது? (இவளிடையாட்டத்தில் நீர் செய்யப்பார்த்தபடி எங்ஙனேயென்னுதல், இவளுடைய தசை என்னாய்விளையக்கடவதென்னுதல்.) (உ)

---

பக்ஷமாய், "முகில்வண்ணாதகவிதோ" என்று ஈஸ்வரன் ஃபலப்ரதனாகச்சொன்ன இடம் ஸித்தாந்தமாயிருக்கிறதென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் - முன்செய்த இத்யாதிவாக்யத்வயத்தாலே, அத்ருஷ்டரூபத்தாலே ஃபலந்தருமென்பார் - பூர்வமீமாம்ஸகர். வேதாந்திகளாவார் - வ்யாஸாதிகள். இந்தபூர்வபக்ஷ ஸித்தாந்தங்களுக்கு த்ருஷ்டாந்தத்வயம்-ஸதோஷராய் இத்யாதிநாலுவாக்யத்தாலே. அதாவது - மாஹாராஜர்வார்த்தையை பூர்வபக்ஷமாக்கிப் பெருமாள் "தோஷோயத்யபி"என்றத்தை ஸித்தாந்தமாக்கினாற் போலேயும், "ஸர்வதர்மாந்"என்ற ஸக்தியைபூர்வபக்ஷமாக்கி "மாமேவ" என்ற ப்ரபத்தியை ஸித்தாந்தமாக்கினாற்போலேயும், "முன்செய்தவினையேமுகப்படாய்" என்ற அசேதந க்ரியை ஃபலப்ரதமென்றத்தை பூர்வபக்ஷமாக்கி "முகில்வண்ணாதகவிதோ"என்ற பரமசேதநன் ஃபலப்ரதனென்றத்தை ஸித்தாந்தமாக்கினார் என்றபடி. மேலுக்கவதாரிகை - முகில்வண்ணா இத்யாதி. கீழ்வாக்யத்தாலே ஃபலிதம் - கரணகளேபர இத்யாதி. "உருகும்" என்றத்தைக்கடாக்ஷித்து, 'கொலோ" என்கிற ஸ்வரத்துக்குபாவம் - இவளளவில் இத்யாதி. "இவட்கு" என்றதுக்குபாவம் - நீர் ரக்ஷிக்கிற இத்யாதி. "முன்செய்தவினை" என்றத்தையும் "முகில்வண்ணா" என்றத்தையுங்கடாக்ஷித்து,"கொலோ" என்றதுக்கு தாத்பர்யாந்தரம்-இவளுடைய இத்யாதி. "என்செய்கின்றாய்" என்றது - தலைமகள் வார்த்தையாதல், திருத்தாயார் வார்த்தையாதல். திருத்தாயார்வார்த்தையானபோது, கீழேயும் "என்செய்கின்றாய்" என்றுவைத்து, இங்கேயும் "என்செய்கின்றாய்" என்றால் புநருக்தியன்றோ? என்ன - ஆற்றுமை இத்யாதி அடியில்வாக்யம் என்று ஸங்கதி. தலைமகள்வார்த்தையென்றதுக்கு நியாமகம் - 'நீமுகங்காட்டிலையாகில் தாமரைக்கண்ணா என்செய்கின்றாயென்று அவனைக் கேளாதொழியலாயிற்றே' என்றவாக்யம். 'என்தாமரைக்கண்ணா! என்செய்கின்றாய்?' என்றுதொடங்கி, 'அளந்தாய் - இவட்கு - என்கொலோமுடிகின்றது' இத்யந்வயம். (உ)

## மூன்றாம் பாட்டு.

வட்கிலளிறையுமணிவண்ணா!என்னும் வானமேநோக்கும்மையாக்கும்
உட்குடையசுரருயிரெல்லாமுண்ட ஒருவனே! என்னும்உள்ளுருகும்
கட்கிலீ!உன்னைக்காணுமாறருளாய் காகுத்தா! கண்ணனே! என்னும்
திட்கொடிமதிள்சூழ்திருவரங்கத்தாய்! இவள்திறத்தென்செய்திட்டாயே?

ஆ.—(வட்கிலளிறையும்.) - உன்னைக் காணப்பெறாத வ்யஸநத்தாலே, தன்னுடைய ஸ்வரூபநிரூபகமான ஸ்த்ரீத்வகுணங்களையும் இழந்தாள். பின்னை நெடும்போது கூட லப்தஸம்ஜ்ஞையாய், நிரதிசயஔஜ்ஜ்வல்யஸௌலப்யாதி கல்யாணகுணங்களையுடையவனே என்னும்: "ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வந்து தோற்றினாற்போலே பெரிய திருவடி திருத்தோளிலே ஏறியருளிவந்து தோன்றுவதுகாண்" என்று ஆகாசத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும். அங்குங்காணுதொழிந்தவாறே மயங்கும். சிறேணஸம்ஜ்ஞாம ப்ரதிலப்ய, ஆஸ்ரிதப்ரதிகூலராய் அதிபலபராக்ரமரான அஸுரரையெல்லாம் நிரஸித்து நிருபமமான ஸாமர்த்யத்தையுடையவனே! உன்னைக்காண்கைக்கு என்பக்கலுள்ளப்ரதிபந்தகத்தையெல்லாம் போக்கியருளாய் என்னும். பின்னையும் அவன் வாராதொழிகையாலே நெஞ்சுருகும். "ப்ராக்ருதமான சக்ஷுஸ்ஸுக்களுக்கு நான்ஒருநாளும் விஷயமாகேன்" என்று உனக்குஒரு நிர்ப்பந்தமுண்டாகில், நாமொருத்தியும் உன்னைக்காணும்படி க்ருபைபண்ணாய் என்னும். அங்ஙனேசெய்யக்கடவதோ? என்னில், "உன்னைக் காணவேணும்" என்று ஆசைப்பட்டார் காண்கைக்காகவன்றோ சக்ரவர்த்தித்திருமகனையும் ஸ்ரீவஸுதேவர்திருமகனையும் பிறந்தருளிற்று என்றுசொல்லும். இவளோடே ஸம்ச்லேஷிக்கைக்காக த்வஜபதாகாலங்க்ருதமான ப்ராகாரங்களாலே பரிவ்ருதமான கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறவனே! இவள்திறத்து என்செய்யநினைத்தருளினாய்? என்கிறாள்.

ஒ. -மூன்றாம்பாட்டில், இவள் இவ்வவஸ்தையை ப்ராப்தையாகைக்கு இவளிடையாட்டத்தில் நீர்செய்தது என்? என்கிறாள். [வட்கிலள் என்று தொடங்கி.] - ஒன்றும் லஜ்ஜிக்கத்தவிர்ந்தாள். லஜ்ஜைபோகையாலே ஸம்ச்லேஷாபேக்ஷை தோற்றும்படி, மணிவண்ணா! என்று திருநாமத்தை வாய்விட்டுச் சொல்லாநிற்கும். 'இவ்வார்த்தத்வநிவழியே ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வந்துதோற்றினாற்போலே தோற்றியருளவேணும்" என்று ஆகாசத்தைப் பாராநிற்கும். அங்குவந்தருளக்காணாமையாலே அறிவுகெடும். பின்னையும் அக்ஷணமேதெளிந்து 'மிடுக்குடையரான அஸுரரை முடித்த ஏகவீரனே!' என்று ப்ரதிபந்தகநிரஸநஸாமர்த்யத்தைச் சொல்லி அது தனக்குஉதவாவிட்டவாறே உள் உடையும். [கட்கிலீஎன்று தொடங்கி] - பாஹ்யசக்ஷுஸ்ஸுக்கு ஒருநாளும் விஷயமன்றிக்கேயிருக்கிற நீ, நான் உன்னைக்காணும்படி க்ருபை பண்ணியருளவேணும்- [காகுத்தா] - இங்ஙனே அரிதானபொருளைச் செய்வரோ என்னில், காகுத்ஸ்தனல்லையோ? [கண்ணனே என்னும்] - அங்குப்பெறாதனவும் பெறுவிக்கும் க்ருஷ்ணன் அல்லையோ என்னும். [திட்கொடிமதிள்சூழ் திருவரங்கத்தாய்] - ராமக்ருஷ்ணாதி அவதாரங்களில் பெறாதார்க்கும் உன்னைக்கொடுத்தருளக் கடவதானமை தெரியும்படி கொடிகட்டிக்கொண்டன்றோ கோயிலில் கண்வளர்ந்தருளுகிறது?

ப.—அநந்தரம், ஆச்ரிதவிரோதி நிவர்த்தகமான அவதாரங்களையுடையையாய் வைத்து, இவள் இப்படி ஆர்த்தையாகைக்கு என்செய்தாயென்கிறாள்.

இறையும் - ஏகதேசமும், வட்கு - தனக்கு நிரூபகமான லஜ்ஜையை, இலள் - உடையவளாயிருக்கிறிலள்; (அத்தாலே என்மகளென்று பாராதே), மணிவண்ணா - முடிந்தாளலாம்படியான நீலரத்ந ஸ்வபாவனாய்க்கொண்டு எனக்கு ஸுலபனானவனே! என்னும் - என்னும்; (இவ்வார்த்த த்வநிக்கு வருவதியென்று), வானமே - ஆகாசத்தை, நோக்கும் - பார்க்கும்; (காணாமையாலே), மையாக்கும் - மயங்கும்; (ப்ரதிபந்தகத்தாலே விளம்பித்ததென்னுமைக்கு), உட்கு - மிடுக்கை, உடை - உடையரான, அசுரர் - ஆசுர ப்ரக்ருதியினுடைய, உயிர் - ப்ராணங்களை, எல்லாம் - நிரவசேஷமாக, உண்ட - க்ரஸித்த, ஒருவனே - ஏகவீரனே! என்னும் - என்னும்; (அந்த விரோதிநிரஸன ஸாமர்த்யத்தை நினைத்து), உள் - உள், உருகும் - உடையாநிற்கும்; ("நவநீதவிக்ஷோபஹ்ருதி" என்கிறபடியே), கட்கு - கண்ணுக்கு, இலீ - காணவரிய நீ! உன்னை - (கண்டல்லது தரிக்கவொண்ணாத) உன்னை, காணுமாறு - காணும்படி, அருளாய் - க்ருபைபண்ணியருளவேணும்; (நீ காட்ட நினைத்தபோது), காகுத்தா - "ஸம்ஸாரஸ்ரீதிதாவஹாரிணம்" என்றும், "தந்த்ரஸம்ப்ரிஹ்ருதாகாராः" என்றும் நாட்டோடு காட்டோடு வாசியற ஆச்ரயிப்பித்த சக்கரவர்த்தித்திருமகனையும், கண்ணனே - "தாஸாபிர்ஸஹஸ்ர" என்று இடைச்சிகளுக்கும் வடிவைக்காட்டின க்ருஷ்ணனையும் அவதரித்தவனல்லையோ? என்னும் - என்னும்; (அதுக்குப் பிற்பட்டாரு மிழவாதபடி), திண் - திண்ணியதாய், கொடி - கொடியையுடைத்தான, மதிள் - மதிள், சூழ் - சூழ்ந்த, திருவரங்கத்தாய் - கோயிலிலே ஸந்நிஹிதனானவனே! இவள்திறத்து - இவளிப்படி ஆர்த்தையாகைக்கு, என்செய்திட்டாய் - நீ செய்ததேது? வடிவழகுஇப்படி மதிமயக்குமோ? என்றுகருத்து. வட்குதல் - வெட்குதலாய், லஜ்ஜை. உட்கு - மிடுக்கு.

இ.—மூன்றாம்பாட்டில், இவள் இவ்வவஸ்தையை ப்ராப்தையாகைக்கு இவளிடையாட்டத்தில் நீர்செய்தது என்? என்கிறாள். [இறையும் வட்கிலள்] - 'வட்கு' என்று லஜ்ஜை. இறையும் இலள் என்றது - தாய் என்று பாராதே, சொல்லக்கடவதல்லாத வார்த்தையைச் சொல்லி அநுகபிக்கவும் அறியாதிருக்கை. இவளுக்கு நிரூபகமான நாண் மடம் அச்சம் என்கிற இவை இல்லாமையாலே நிரூப்யமான த்ர்மிலோபம் பிறந்தது என்கை. இவளுக்குலஜ்ஜை குடிபோனபடி நீ அறிந்தபடிஎங்ஙனே? என்னில், [மணிவண்ணாஎன்னும்] - தாயாரான என்முன்னே ஸம்ச்லேஷாபேக்ஷை தோற்றும்படி ஸகத்ருநாமக்ரஹணம் பண்ணாநின்றாள். காமிநியானவள் வடிவழகிலேயிறே ஈடுபடுவது? அதுதோற்ற வாய்விடாநின்றாள். "ஸஹ்யக்ஷம் ப்ரியவ்யஸநாத்ஸஹஸ்ரா ஸ்நேஹி । தேநஸஸ்வேநஸாக்ஷீவேநஸாகிஞ்சிஸ்வ வீக" என்று எல்லாதசையிலும் வாய்விடக்கடவதன்றிக்கேயிறே இருப்பது. [வானமேநோக்கும்] - "மணிவண்ணா! என்கிற ஆர்த்தத்வநிகேட்டு இருக்கக்ஷமனல்லன்: த்வநிவழியே ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வந்துதோற்றினாற்போலே தோற்றியருளும்" என்று ஆகாசத்தையே பார்க்கும். "ஸாஸேவஸஸேவஸः" என்கிற வசநத்துக்கு மேலேயிறே இவளுடைய தசை. அங்குவந்து தோற்றக்காணாமையாலே [மையாக்கும்] - மயங்காநின்றாள். அறிவுகெடாநின்றாள். ப்ரபலப்ரதிபந்தகங்கள் உண்டானால்வரப்போமோ? நீ இங்

நன்அழிகிறதென் ? என்ன, [உட்குடையசுரர்இத்யாதி] - நான் வரப்பார்த்தால் ப்ரதிபக்ஷமுண்டித்தனைபோக்கி, நீ வரப்பார்த்தால் நிவாரகர் உண்டோ ? உட்கென்று மிடுக்கு. ப்ரபலமான அஸுரவர்கத்தை நிஶ்ஶேஷமாகமுடித்த ஏகவீரன் என்னுகின்றாள். "ஶேஷிக்கில் பின்பும் ஆஶ்ரிதர்க்கு நலிவுவரும்" என்று நிஶ்ஶேஷமாக முடிக்கை. ப்ரபலப்ரதிபக்ஷங்களை அழிக்கைக்கு ஸஹகாரிவேணுமோ ? உன்னால் அழிக்கவொண்ணாத விரோதி என்னால் அழிக்கப்போமோ? [உள்ளுருகும்] - அப்போது செய்யக்காணாமையாலே உள்ளுடையும். நீர்ப்பண்டம்போலே ஶிதிலையாகா நின்றாள். உருகாநிற்குமத்தனையோ, அதீந்த்ரியவஸ்துவை "காண" என்றால் காண முடியுமோ? என்ன ; தன் தலையாலேகாண இழிவார்க்கன்றோ அவ்வருமை. நீகாட்டக் காண்பார்க்கு அவ்வருமையுண்டோ ? [கட்கிலீ] - பாஹ்ய சக்ஷுஸ்ஸுக்கு அவிஷயமான நீ, நான் உன்னைக்காணும்படி க்ருபை பண்ணியருளவேணும். "நசக்ஷுஷா பஶ்யதி" என்கிறது—தாம் தாமே காண இழிவார்க்கு; "தமேஷவ்ருணுதேதநுஸ்ஸ்வாம்" என்று அவன்தானே காட்டுமென்று அவ்வருமையில்லை. சிலர்க்கு ஸாக்ஷாத்காரம்பண்ணக் கொடுத்திலையோ ? கட்கிலீ - கண்ணுக்குஇலீ என்றபடி. இப்படி அரிதானபொருளை நாம் சிலர்க்கு அருளிற்றுண்டோ? என்ன [காகுத்தா] - "ராமோவிக்ரஹவாந்தர்மஸ்ஸாதுஸ்ஸத்யபராக்ரம:" என்றும், "ராமம்மேநுகதாத்ருஷ்டி:" என்றும் நாகரிகர்க்கும் வநவாஸிகளுக்கும் காட்டிக்கொடு திரிந்திலையோ ? ஒருகாற்செய்ததுகொண்டோ ? என்ன, [கண்ணனே என்னும்] - "க்ருஷ்ணம் கமலபத்ராக்ஷம் வீக்ஷமாணா:" என்றும், "தாஸாமாவிரபூச்சௌரி:" என்றும் இடைச்சிகளுக்கும் அகப்படக் காட்டிக்கொடுதிரிந்திலையோ ? இரண்டு அவதாரமும் தீர்த்தம் ப்ரஸாதித்ததே என்ன, [திட்கொடி இத்யாதி] - அவதாரங்களில் பிற்பட்டாரும் இழவாமைக்கன்றோ இங்கேவந்து சாய்ந்தருளிற்று. திண்ணியமதிள் என்னுதல்: திண்ணிய - கொடிஎன்னுதல்; அவிழ்த்துக்கட்டாத கொடிஎன்கை. "வருவார்எல்லோரும் வாருங்கோள்" என்று உறுதியாகக் கொடிகட்டிக்கொண்டன்றோ கிடக்கிறது? [இவள்திறத்து என்செய்திட்டாயே] - இவளுக்கு இவ்வளவான உமையை விளைக்கைக்கு நீஇட்டமருந்துஎன்? என்கிறாள். அதாகிறது - உன்முகம் மாயமந்திரந்தான் கொலோ என்றுவடிவழகைக் காட்டுகையிறே. இவள் கேட்கிறதென் என்னில்; அதுவாகில், அதுக்கு ப்ரதிக்ரியையாக "நேத்ராக்யராஜ்யம் ஸகலம் ஸீதாயா நாஶயிஷ்யதி" என்கிற இவளை அவன்முன்னே நிறுத்தி, இவள்பட்டதெல்லாம் அவனைப் படுத்துவளாக நினைக்கிறாள். (௩)

ஈடு.—மூன்றாம்பாட்டு. இவள்இவ்வவஸ்தையை ப்ராப்தையாகைக்கு இவளிடையாட்டத்தில் நீர் செய்ததேன்? என்கிறாள்.

மூன்றாம்பாட்டு.—வட்கு இத்யாதி. "வட்கிலள்" என்று தொடங்கி, "கண்ணனேயென்னும்" என்னுமளவாக ந்த அவஸ்தைகளையெல்லாம் விவக்ஷித்து 'இவள் இவ்வவஸ்தையை' என்கிறார். "இவள் ன்செய்திட்டாய்" என்றத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் - ப்ராப்தையாகைக்கு இத்யாதி.

[வட்கிலள்இறையும்]-இதுக்கு சீயர்அருளிச்செய்வது,"இவள்முடிந்தாள்" என்று. (வட்கென்று - லஜ்ஜை) லஜ்ஜையையிட்டுஇறே ஸ்த்ரீத்வத்தைஅறிவது. ஸ்வரூபத்தைப் பற்றிவரும் குணம்போனால் ஸ்வரூபமும்போயிற்றுமத்தனையிறே. நிரூபகத்தையொழிய நிரூப்யஸித்தியில்லையே. இவள்லஜ்ஜை குடிபோனமைக்கு ஸூசகமேன்? என்னில், [மணிவண்ணாவென்னும்] - பர்த்ருநாமக்ரஹணம் பண்ணாநின்றாள். பெற்றதாய்முன்னே வடிவழகைச் சொல்லாநின்றாள். நான் கேட்டாலும் மறைக்குமத்தைத் தான் வெளியிடா நின்றாள். காமிநி ஆசைப்படுவது வடிவழகையிறே; தான்அகப்பட்ட துறையைச் சொல்லா நின்றாள். மெய்யேநினைத்து, மெய்யே சொல்லி, மெய்யே யநுபவிக்கை இவர்க்கு ப்ரக்ருதி யாய்விட்டதே! "உன்சின்னமுந்திருமூர்த்தியும் சிந்தித்தேத்திக் கைதொழவே யருளெனக்கு" என்று அவன்பாடு இவள்வேண்டிக்கொள்வதும் இதுவேயிறே. [மணிவண்ணாவென்னும்]- வடிவழகைச்சொல்லுவது, ஸௌலப்யத்தைச் சொல்லுவதாகாநின்றாள். "அத்ருஷ்டபூர்வவ்யஸநாத்ருஷ்டிபரீத்ஸவிநீ । தேநத்ஸ்கேநுததீநைவமாகிஞ்சிதப்ரவீத்" (அத்ருஷ்டபூர்வவ்யஸநாம்ருதுரிலாமஸ்விநீ | தேநதுஃகேநுததீநைவமாகிஞ்சி தப்ரவீத்) என்று, எல்லா தசையிலும் வாய்விடக்கடவதன்றிக்கே யிருப்பதொன்றிறே இது. [வானமேநோக்கும்] - "மணிவண்ணா!" என்கிற ஆர்த்தத்வநி கேட்டிருக்க க்ஷமனல்லன், த்வநிவழியே ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குவந்து தோன்றினாற்போலே தோன்றி யருளு மென்று ஆகாசத்தையே பாராநிற்கும். "பரமாபதமாபந்ந:" (பரமாபதமாபந்ந:) என்கிற அதுக்கும் அவ்வருகேயிறே இவளுடைய தசை. அங்குவந்து தோற்றக்காணா மையாலே, [மையாக்கும்] - மயங்காநின்றாள்: அறிவுகேடாநின்றாள். மயங்கத் தீருமோ விரோதி கனத்திருக்கில்? என்ன, [உட்குடை இத்யாதி.] - நான் வரப்பார்த்தால் ப்ரதி பந்தகமுண்டத்தனையல்லது, நீயே வரப்பார்த்தால் நிவாரகருண்டோ? உட்கென்று - மிடுக்கு. எதிரிகள் மிடுக்கருமாய் பலருமாமத்தனையன்றோ வேண்டுவது அழியச்செய்கைக்கு.

---

"வட்கிலளிறையும்" - அல்பமும் லஜ்ஜையில்லாதவள் இதிஸப்தார்த்த:. வட்கு - லஜ்ஜை. "முடிந்தாள்" என்கிறதுஎன்கொண்டு? என்ன - லஜ்ஜையைஇத்யாதி. விவரணம் - ஸ்வரூபத்தை இத்யாதி. அதெங்ஙனே? என்ன - நிரூபகத்தைஇத்யாதி. "மணிவண்ணா" என்றதுக்கு ரூடியைப்பற்ற பாவம் - பர்த்ருநாமஇத்யாதி. பர்த்ருநாமக்ரஹணம்பண்ணுகையாவது-ஸம்ஶ்லேஷத்தில் அபேக்ஷை தோற்றும்படி அவன்நாமத்தைச்சொல்லுகை. யோகத்தைப்பற்றபாவம் - பெற்றதாய்இத்யாதி. பெற்ற தாய்முன்னே சொல்லவொண்ணாதோ? என்ன - நான்கேட்டாலும்இத்யாதி. ஸ்வரூபகுணாதிக ளிருக்க வடிவழகைச்சொல்லுவானென்? என்ன - காமிநிஇத்யாதி. விவரணம் - தான்அகப்பட்டஇத் யாதி. அகப்பட்டதுறை இதுவென்கைக்கு நியாமகமேதென்ன, ப்ரமாணங்காட்டுவாராக பீடிகை - மெய்யேஇத்யாதி. மெய்யென்று வடிவும், ஸத்யமும், ப்ரக்ருதியாய் விட்டபடியெங்ஙனே? என்ன, ப்ரமாணம் - உன்சின்னமும்இத்யாதி. மணியினுடைய ஸ்வபாவத்தையுடையவனேஎன்று ஸப்தார்த் தம். "வண்ணம்" என்று - அழகாதல், ஸௌலப்யமாதல்; உபயத்தையும் அருளிச்செய்கிறார் - வடி வழகைஇத்யாதி. தான்கேட்டாலும் மறைக்கும்படி வடிவழகு வாய்விடக்கூடுவதன்றோ? என்ன - அத்ருஷ்டபூர்வஇத்யாதி. அயோத்யாகாண்டே தஸரதம்ப்ரதி ஸுமந்த்ர:. இதுவென்றது - வடி வழகாதல், லஜ்ஜையாதல். "மணிவண்ணா" என்றால் வாராதிருக்க, "வானம்" என்பானென்? என்ன - மணிவண்ணாஇத்யாதி. ஸ்ரீகஜேந்திராழ்வானைப்போலே இவளுக்குஆபத்துண்டோ? என்ன- பரமாபதம்இத்யாதி "பரமாபதமாபந்நோமநஸாசிந்தயத்தரிம்" இத்யாதி. மேலுக்கவ தாரிகை - மயங்கஇத்யாதி. "அசுரருயிரெல்லாமுண்ட" என்றதுக்குபாவம் - நான்வரப்பார்த்தால் இத்யாதி. "உட்குடை" என்றும், "அசுரர்" என்றும் சொல்லுகிறதுக்குபாவம் - எதிரிகள்இத்யாதி.

[உண்ட] - "பபௌஜநார்த்தநக்ருத்த꞉" (பபௌஜநார்த்தநஃக்ருத்த꞉) என்கிறபடியே. [ஒருவனே யென்னும்] - வடிவழகுக்குப் போலியுண்டாகிலும் வீரத்துக்குப் போலிசொல்லலாவதில்லை. [உட்குடை இத்யாதி] - தான் வீரபத்நியென்னுமிடந் தோற்றச்சொல்லாநின்றாள். "த்வம்நீசஶஶவத்ஸ்ம்ருத꞉" (த்வம்நீசஶஶவத்ஸ்ம்ருத꞉) என்னுமவளிறே. [உள்ளுருகும்] - "என்னகுறையுண்டாயிழக்கிறேன்?" என்று ஶமியில்லையாம். விளம்பஹேது வின்றிக்கே யிருக்க, ஶமியாதொழிந்தவாறே நீர்ப்பண்டம்போலே யுருகும். 'உருகுங்காட்டில் அதீந்த்ரியவஸ்து கண்ணுக்கிலக்காமோ?' என்பர்களே; அருளாலே பெறுவார்க்கு அங்ஙனொரு நியதி யுண்டோ? என்னுமாயிற்று இவள். "நசக்ஷுஷா பஶ்யதி" (நசக்ஷுஷா பஶ்யதி) என்கிறது - தாந்தாமே காண இழிவார்க்கு; "தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம்ஸ்வாம்" (தஸ்யைஷ ஆத்மாவிவ்ருணுதேதநூம்ஸ்வாம்) என்று - அவன்தானே காட்டுமென்று அருமையில்லை. அர்ஜுநாதிகளுக்கு திவ்யசக்ஷுஸ்ஸைக்கொடுத்துக் காட்டிற்றிலனோ? அருளாலே நாம ஆர்க்குக்காட்டினோம்? என்ன, [காகுத்தா] - "ரூபௌதார்யகுணை꞉" (ரூபௌதார்யகுணை꞉) என்றும் "ரூபம்ஸம்ஹநநம் லக்ஷ்மீம்" (ரூபம்ஸம்ஹநநம் லக்ஷ்மீம்) என்றும், நாகரிகர்க்கும் வநவாஸிகளுக்கும் காட்டிக்கொடுத்திலையோ? ஒருகால் செய்ததுகொண்டோவென்ன, [கண்ணனே] - ஸஜாதீயைகளான

---

போக்கினானென்னுதே, "உண்ட" என்றதுக்குப்ரமாணம் - பபௌ இத்யாதி. ப்ரதமேம்ஶே ஷஷ்டாத்யாயே ப்ரஹ்லாதசரிதே, "ஹ்ருஷ்யத்வத்ஸஹஸ்ரம் வாயு꞉ ஸம்ஶோஷணம் । பபௌ ஜநார்த்தந꞉ க்ருத்த꞉ ஸ்வயம் பூத꞉ க்ஷயம்" (க - கஎ. உச) "மணிவண்ணா" என்றத்தைக்கடாக்ஷித்துஹாவம் - வடிவழகுக்கு இத்யாதி. "உட்குடையசுரர்" என்று போரப்பொலியச்சொல்லி, "உண்டவொருவன்" என்றதுக்குஹாவம் - தான்வீரபத்நி இத்யாதி. அப்படி தன்நாயகன் வீரந்தோற்றச் சொல்லுமோ? என்ன - த்வம்நீச இத்யாதி. "யதாந்தரம் ஸிம்ஹஸ்ருகாலயோர்வநே ... ததாந்தரம் தாஶரதேஸ் தவைவ ச ... த்வம்நீசஶஶவத்ஸ்ம்ருத꞉" இதி ஸுந்தரகாண்டே ராவணம்ப்ரதிஸீதா. (22-16) இப்படிப்ரதிபந்தகங்களைப்போக்குமவன் வரக்காணாமையாலே என்றிவ்வளவும் அத்யாஹரித்து, அநந்தரம் 'என்னகுறையுண்டாய்' இத்யாதிசொல்லிக்கொள்வது. விவரணம் - விளம்ப இத்யாதி. "கட்கிலீ" என்றதுக்கவதாரிகை - உருகுங்காட்டில் இத்யாதி. "கட்கிலீ" என்றத்தால் ஸித்தமான அதீந்த்ரியத்வத்தைப்பிடித்துத் தாய்மார் சங்கித்தத்தைப்பரிஹரித்துக்கொண்டு, "உன்னைக்காணுமாறருளாய்" என்றதுக்கவதாரிகை - அருளாலேபெறுவார்க்கு இத்யாதி. ஆனால், "நசக்ஷுஷா பஶ்யதி" என்றிருக்கிறதேயென்ன - நசக்ஷுஷா இத்யாதிவாக்யத்வயம். அப்படிநாம் ஆருக்குக்காட்டினோமென்ன - அர்ஜுநாதி இத்யாதி. "கட்கிலீ" - கண்ணுக்குவிஷயமாகாதவனே இத்யர்த்த꞉. கீழுக்தமான அர்த்தத்வயத்தையும் நாயகியினுடைய ஹாவத்தாலேயருளிச்செய்கிறார் - உன்னைக்காண இத்யாதிவாக்யத்வயத்தாலே. ரூபௌதார்யேத்யாதிஶ்லோகங்களிரண்டும் - அடைவே, நாகரிகர்க்கும் வநவாஸிகளுக்கும் காட்டினதுக்குப்ரமாணம். "ஸம்ஹ்ருஷ்டா நநந்து꞉ ராமே தீவ்ரம் ப்ரதிபந்நம் । ரூபௌதார்யகுணை꞉ பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" இத்யயோத்யாகாண்டே (௩-உக) "ரூபம்ஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம் । தத்ருஶுர்விஸ்மிதாகாரா ராமஸ்ய வநவாஸிந꞉" இத்யாரண்யகாண்டே, (க-கரு) பெண்களுக்குக்காட்டினதுக்குப்ரமாணம்-

பெண்களுக்கு உன்னைக்காட்டிற்றிலையோ? "தாஸாமாவிரபூத்" (தாஸாமாவிர பூத்) - ஒருநீர்ச்சாவியிலே ஒருபாட்டம் மழைவிழுந்தாற்போலேயிருக்கை. "ஸ்மயமாநமுகாம்புஜ:" (ஸ்மயமாநமுகாம்புஜ:) - அவர்கள் முன்னேதோற்றினபின்பு வடிவில்பிறந்த சேவ்வி. "பீதாம்பரதரஸ்ஸ்ரக்வீ" (பீதாம்பரதரஸ்ஸ்ரக்வீ) - பெண்கள்நேஞ்சில் மறத்தை மாற்றுவது, பரிவட்டவாய்ப்பையும் தோளில்மாலையையுங் காட்டியாயிற்று. "ஸாக்ஷாந்மந்மதமந்மத:" (ஸாக்ஷாந்மந்மதமந்மத:)-காமன்கையிலேநாடுபமேத்தைக்காமன்தான்படும்படி யிருக்கை. [திட்கோடியித்யாதி] -அவதாரகாலத்தில் உதவிற்றிலீரே! என்ன; அவதாரகாலத்தில் உதவப்பெறுதார் இழவுதீர்க்கவன்றே இங்குவந்துசாய்ந்தருளிற்று. உகந்தார்க்கு காட்சி கோடுக்கக் கோடிகட்டிக்கோண்டன்றே கிடக்கிறது. திண்ணியமதிள் என்னுதல், திண்ணியகோடியேன்னுதல்: அவிழ்த்துக்கட்டாத கோடியேன்கை. "வருவாரேல்லாரும்வாருங் கோள்" என்று கட்டினகோடி. [இவள்திறத்தேன்சேய்திட்டாயே] - இவள்இப்படிபிச்சேற என்னமருந்திட்டாய்? அவன் இவளறியாதபடி ஒருமுகத்தாலே மருந்திடுமே. "மையலேற்றி மயக்க உன்முகம் மாயமந்திரந்தான்கோலோ!" என்று தன்முகத்தைக் காட்டுகையிறே அவன் மருந்திடுகையாவது. இவள்கேட்கிறதேன்? என்னில்; அதுவாகில் அதுக்குப்ரதிக்ரியையாக, "த்ரைலோக்யராஜ்யம்ஸகலம் ஸீதாயாநாப்நுயாத்கலாம்" (த்ரைலோக்யராஜ்யம்ஸகலம் ஸீதாயாநாப்நுயாத்கலாம்) என்கிறஇவளை அவன்முன்னே நிறுத்தி, இவள்பட்டதேல்லாம் அவனைப் படுத்துவாளாக நினைக்கிறாள். (௩)

---

## நான்காம் பாட்டு.

---

**இட்டகாலிட்டகை ‡யளாயிருக்குமேழுந்துலாய் மயங்குங்கைகூப்பும்**
**கட்டமேகாதலேன்றுமூர்ச்சிக்குங்கடல்வண்ணா!கடியைகாணேன்னும்**
**வட்டவாய்நேமிவலங்கையாஎன்னும்வந்திடாயேன்றேன்றேமயங்கும்**
**சிட்டனே!சேழுநீர்த்திருவரங்கத்தாய்!இவள்திறத்தேன்சிந்தித்தாயே?**

ஆ.—(இட்டகால்.) - இவள் பராதீநசேஷ்டிதமான கரசரணாத்யவயவங்களை யுடையளாயிருக்கும். இப்படி சேஷ்டிதக்ஷமையன்றியேயிருக்கச்செய்தே, அவஸாந ஸமயத்திலே ப்ரதீபம்போலே ஸஹஸா எழுந்துலாவி மயங்கிக்கிடக்கும். பின்னையும்

---

தாஸாம்இத்யாதி. "தாஸாமாவிரபூச்சௌரி:ஸ்மயமாநமுகாம்புஜ:। பீதாம்பரதரஸ்ஸ்ரக்வீஸாக்ஷாந்மந்மதமந்மத:" இதி ஸ்ரீபாகவதே கோபிகாகீதாநந்தரே. (௩௨ - ௨) இதுக்கர்த்தம் - ஒருநீர்இத்யாதி. ஒருபாட்டம் - ஒருபாறல். 'சௌரிராவிரபூத்' என்றவநந்தரம் "ஸ்மயமாநமுகாம்புஜ:"என்றதுக்குபாவம் - அவர்கள்முன்னேஇத்யாதி. மறத்தை-கோபத்தை. "திருவரங்கத்தாய்" என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார் - அவதாரகாலத்தில்இத்யாதி. கொடியைச்சொன்னதுக்கு பாவம் - உகந்தார்க்குஇத்யாதி. திண்மை மதிளுக்குவிசேஷணம். "இட்டாய்" என்றதுக்கு ஸ்வாரஸ்யம் - இவள்இப்படிஇத்யாதி. அவன்செய்தபடியேதென்ன - அவன்இவளறியாதபடி இத்யாதி. ஒருமுகத்தாலே என்றது - சாடு. அவன்முகம்பருந்தோ? என்ன - மையலேற்றிஇத்யாதி. பிச்சேற்றி அறிவுகெடுக்க உன்முகம் அம்மான்பொடியோ? என்றபடி. நாய்ச்சியார்திருமொழி, இரண்டாந்திருமொழி, நாலாம்பாட்டு: "பெய்யுமாமுகில்" இத்யாதி.அம்மான்பொடியாவது - †சொக்குப்பொடி.| (௩)

---

† சுக்குப்பொடி என்று வழங்குவர். ‡ 'கைகளாய்' என்பது சிலர்பாடம்.

பரபுரையாயத் தன்னுடைய வ்யஸநாதிஶயத்தாலே உன்னைத்தொழாநிற்கும். ஸ்நேஹமானதித்தனை பொல்லாதாகாதே, ஸ்நேஹப்ரக்ருதிகளல்லாதார் என்னபாக்கியம்பண்ணினரோ? என்றுசொல்லி மோஹிக்கும். அநவதிகாதிஶயாஸங்க்யேய கல்யாணகுணகணன் என்று உன்னைச் சொல்லுகிற இதெல்லாம் பொய்; நீ சாலநிர்க்ருணன்காண் என்றுசொல்லும். வலத்திருக்கையிலே திருவாழியையேந்திக்கொண்டிருக்கிற அவ்வழகை நான்காணும்படி வந்திடாய் என்று சொல்ல வுபக்ரமிக்கும்; முடியச்சொல்ல க்ஷமையல்லாமை வட்டவாய்நேமி வலங்கையா என்னும்; பின்னையும் நெடும்போது கூடவந்திடாய்என்னும். வரக்காணாமையாலே பின்னையும் வந்திடாய் என்னும். வரக்காணாமையாலே மயங்கும். இங்ஙனே செல்லாநிற்கும். செழுநீர்த்திருவரங்கத்தாய்! இதுவோ உன்னுடைய ஶீலவத்த்வம்? இவள்திறத்து என்செய்ய நினைத்தருளினாய் என்கிறாள்.

ஒ.—நாலாம்பாட்டில், இப்பெண்பிள்ளை திறத்துச் செய்தருள நினைத்தது என்? என்று பெரியபெருமாளுக்கு விண்ணப்பம் செய்கிறாள். [இட்டகாலென்று தொடங்கி.] - ஸ்வாதீனமல்லாமையாலே தோழிமார் இட்டுவைத்த காலும் கையுமாய் தான் வேஷ்டிக்கமாட்டாதே இருக்கும்படி அவஸந்நையாயிருக்கச்செய்தே விளக்கு முடியுமளவில் கிளம்பாஅவியுமாபோலே ஸ்வஸ்தைரைப்போலே எழுந்திருந்து உலாவி மோஹிக்கும். உணர்த்தி இன்றிக்கே இருக்கச்செய்தே பூர்வவாஸநையாலே கைகூப்பும். அத்தாலேஉணர்ந்து "பெரியபெருமாள் பக்கலுள்ள ஸ்நேஹமே புருஷார்த்தம்" என்று இருக்கக்கடவ இவள் ஸ்நேஹம்போலே பொல்லாதது இல்லைஎன்றுசொல்லிப் பின்னையும் காணப்பெறாத வ்யஸநாதிஶயத்தாலே மோஹிக்கும். ஸகலபதார்த்தத்தையும் தன்னுள்ளே அடக்கி ஒன்றையொன்று நலியாதபடி பரிஹரிக்கும் கடலின்தன்மையானநீ என்திறத்தில் கண்ணறையனாயிராநின்றாய் என்னும். [வட்டவாய் என்றுதொடங்கி] - "கையும் திருவாழியுமான அழகைக்காணவேணும்" என்று ஆசைப்பட்டு 'வட்டவாய் நேமிவலங்கையாவந்திடாய்'என்று சொல்ல உபக்ரமித்து, நடுவே இளைத்து திரியக் குறையும்சொல்லாநின்றுகொண்டு மோஹியாநின்றாள். கோயிலின் நிலமிதியாலே நிறையநீர்மையுடையீரான நீர் இவள்திறத்துச் செய்தருளப் பார்த்தருளிற்றுஎன்?

ப.—அநந்தரம், அபரிச்சிந்நமஹிமனாய்வைத்து இவளை ஆர்த்தையாக்கின நீ, இவளளவில் என் நினைத்திருக்கிறாய்? என்கிறாள்.

(ஆர்த்தியினதிஶயத்தாலே பரவசையாய்), இட்டஇட்ட - இட்டுவைத்தவிடத்தே கிடக்கும்படியான, கால் - காலையும், கையள் - கையையும், ஆய் - உடையளாய், இருக்கும்—;(ஆர்த்தி முதிர்ந்தபடியாலே, ஸந்நிபதிதரைப்போலே), எழுந்து - பாரவஶ்யங் குலைந்தெழுந்திருந்து, உலாய் - உலாவாநிற்கும்; மயங்கும் - அநந்தரத்திலே மோஹிக்கும்; (காலமுணர்த்த மோஹந் தெளிந்தவளவிலே "வரக்கூடும்" என்று), கைகூப்பும் - அஞ்சலிபண்ணும்; (வரக்காணாமையாலே), காதல் - காதல், கட்டமே - கட்டமாயிருந்ததி, என்று - என்றுவெறுத்து, மூர்ச்சிக்கும் - மூர்ச்சிக்கும்; கடல்வண்ணா - தனக்குள்ளே எல்லாவற்றையுமொதுக்கி ரக்ஷிக்கும் அபரிச்சிந்நாகாரமான கடலின்படியையுடையவனே! கடியைகாண் - எனக்குக்கடியையிராநின்றாய்காண்! என்னும் - என்னும்; (ஆஶ்ரிதரக்ஷணத்தில்), வட்டவாய் - ஸர்வதோமுகமான, நேமி - திருவாழியை, வலங்கையா - வலக்கையிலேயுடையவனே! என்னும் - என்னும்; (நடுவேயிளைப்பாறி), வந்திடாய் - கையுந்திருவாழியுமாய்க்கொண்டு வந்திடாய், என்றென்றே - என்று பல

காலும் ஆவர்த்தித்தபேக்ஷித்து, மயங்கும் - "அபேக்ஷையில் ஆவ்ருத்தியாலே ஸ்வரூப மிழந்தோம், அவன் வாராமையாலே யபிமதமுமிழந்தோம்" என்றுஅறிவு அழியாநிற்கும்; (இப்படி இவளைக்லேஶிப்பித்து), சிட்டனே - சிஷ்டஸ்வாவனைபண்ணி, செழுநீர்த்திருவரங்கத்தாய் - அழகிய நீர்க்கரையிலே கிடக்கிறவனே! இவள்திறத்து - (வ்யதிரேகத்தில் மோஹிக்கும்படியான) இவள்திறத்து, என் - என், சிந்தித்தாய் - நினைத்திருக்கிறாய்? மோஹிப்பிக்கவே நினைத்திருக்கிறாயோ? தேற்றங் கொடுக்க நினைத்திருக்கிறாயோ? என்றுகருத்து.

இ.—நாலாம்பாட்டில், உம்மையொழிய ஜீவிக்கமாட்டாதிருக்கிற இவள்திறத்துச் செய்தருள நினைத்திருக்கிறது என்? என்கிறாள். [இட்டகாலிட்ட கைகளாயிருக்கும்] - ஸ்வாதீநமல்லாமையாலே, தோழிமார் இட்டுவைத்தகாலுங் கையுமாய் இருக்கும். விரஹம் ஸந்திபந்தங்களையும் குலைத்துச்சிதறிக் கிடக்கிறவித்தனை. [எழுந்துலாய்] - இவ்வளவான தசையாய் இருக்கச்செய்தே, அவியும் விளக்குக் கிளப்பிஅவியுமா போலே, ஸ்வஸ்தரைப்போலே எழுந்திருந்து உலாவாநின்றாள். [மயங்கும்] - கிளம்பின ஸமநந்தரத்திலே அவியுமாபோலே மயங்காநின்றாள். [கைகூப்பும்] - உணர்த்தியின்றியே இருக்க, பூர்வவாஸநையாலே கைகூப்பும். மோஹித்த தசையிலும் தவிருகிறிலள். மயங்காநிற்கச்செய்தே உணர்த்தி யுடையாரைப்போலே ஆயிற்று அஞ்ஜலிபண்ணுகிறது. [கட்டமேகாதல் என்று மூர்ச்சிக்கும்] - "அமுதவெள்ளத்தானுஞ் சிறப்புவிட்டு" என்று ப்ரேமமே புருஷார்த்தம் என்றிருக்கிற இவள், ப்ரேமம்போலே தண்ணிதாய் இருப்பதில்லை என்னாநின்றாள். இது ரஸிப்பது இவ்விஷயத்தினுடைய லாபஹேதுவானபோதிறே. விஶ்லேஷத்தில் நலிவுக்கு உடலாகையாலே தண்ணிதுஎன்றாள். இது கட்டமென்னுங் காட்டில் இதுக்குபரிஹாரம் பிறந்ததாகாமையாலே மூர்ச்சிக்கும். [கடல்வண்ணா கடியைகாண் என்னும்] - சேர்ந்து குளிர்ந்த தண்ணீரை விடாயர்க்கு எட்டாதபடி வைப்பாரைப்போலே, ஸ்ரமஹரமான வடிவைக்கொண்டு எனக்கு எட்டாதபடி இருக்கிறவன் என்னுதல். கடல்போலே ஸகலபதார்த்தங்களையும் தன்னுள்ளே அடக்கி, ஒன்றையொன்று நலியாதபடி பரிஹரிக்கும் ஸ்வபாவத்தையுடைய நீ என்திறத்துக் கண்ணறையனாய் இராநின்றாய் என்னுதல். உனக்கு ஶீலாதிகளைச் சொல்லுகிற ப்ரமாணங்களும் அந்ருதபாஷணம்பண்ணுகிறன; நீநிக்ருணன்காண் என்னாநின்றாள். நான் நிக்ருணனன்றிக்கே ஒழிவதுஎன்செய்தால்? என்னில்; "வட்டவாய்நேமி வலங்கையா என்றுதொடங்கி" - நடுவேஇளைத்து [வந்திடாயென்றென்றே மயங்கும்] - கையுந்திருவாழியுமான ஸந்நிவேஶமே ஆயிற்று இவள்நெஞ்சில் பட்டுக்கிடக்கிறது; "வந்திடாய்" என்கிற இத்தையேஆவர்த்தியாநின்றாள். இவ்வாவர்த்தியில் பிறப்பட்ட த்வநிகள் வெண்கலத்வநிபோலே ஒய்ஞ்சு செல்லாநின்றது. ப்ரதிகூலநிரஸநத்தில் ஸர்வதோமுகமான வாயையுடைய திருவாழியை பரிகரமாகவுடைய உனக்கு வரத்தட்டென்? என்னாநின்றாள். [மயங்கும்] - "வந்திடாய்" என்கிற இதுதானும் ஒவிற்று. [சிட்டனே] - இப்படி ஸ்த்ரீவதம்பண்ணி நீர் விஶிஷ்டராய் இருக்க, பெண்பிறந்தார்க்கு அழகிதாக ஜீவிக்கலாய் இருந்தது. க்ராமணிகள் குடிகளைப் பரியும்படி அந்யாயங்களை ப்ரவர்த்தியாநிற்கச்செய்தே அத்தியயநாதிகளைப் பண்ணுமாபோலே. ஶ்ரமஹரமான கோயிலில் நிலமிதியாலே தண்ணளி மிக்கிருக்கிற நீர். [இவள்திறத்து] - பேச்சுக்கு நிலையல்லாதபடி நோவுபட்டுக்கிடக்கிற இவள்திறத்து. [என் சிந்தித்தாயே] - நினைத்திருந்தது

*என் ? ஜீவிப்பிக்க நினைத்தீரோ, முடிக்கநினைத்தீரோ ? இப்படிப்பட்ட ஆற்றாமையை யும் பேற்றுக்குடலாக நினைத்திருக்கிறிலள், அவன்நினைவாலே பேறு என்றிருக்கிறாள். "உன்மனத்தாலென் நினைந்திருந்தாய்" என்னக்கடவதிறே.* (ச)

**ஈடு.**—நாலாம்பாட்டு. உம்மையொழிய ஜீவிக்கமாட்டாத இவள்திறத்துச் செய்தருள நினைத்திருக்கிறதேன் ? என்கிறாள்.

[இட்டகா லிட்டகைகளா யிருக்கும்] - இவளுக்கு நீர்உடம்புகொடுக்க வேண்டா, இவளவயவங்கள் இவளதீநமாகப்பண்ண வமையும். "**𑌸𑌖𑍀𑌭𑌿𑌰𑍍𑌨𑍍𑌯𑌸𑍍𑌤 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌣𑌪𑌰𑌤𑌨𑍍𑌤𑍍𑌰 𑌵𑌿𑌪𑌾𑌣𑍍𑌡𑍁𑌰𑌾𑌙𑍍𑌗𑍀**" (ஸகீபிர்ந்யஸ்தப்ரகீர்ண பரதந்த்ரவிபாண்டு ராங்கீ) என்று, தோழிமார் போகட்டவிடத்தே கிடக்குமித்தனை. ஸ்வாயீநமல்லாமை யாலே தோழிமாரிட்டுவைத்த காலும்கையுமாயிருக்கும். [எழுந்துலாய்மயங்கும்] - அவி யும் விளக்குக் கிளர்ந்தெரியுமாபோலே அடியற்றவெழுச்சியும் அடியற்றவுலாவுகையுமா யிராநின்றது; அதுகிளம்பின ஸமநந்தரத்திலே அவியுமாபோலே மயங்காநின்றாள். [கை கூப்பும்] - உணர்த்தியில் தொழுமவளல்லள், மயங்கினால் தொழாதிருக்க வல்லளல் லள், ஸாதநபுத்த்யா தொழுமதில்லை; ஆற்றாமையாலே வருமது தவிரமாட்டாள். [கட் டமேகாதலென்று] - ஸாதநபுத்த்யாதொழுதாளாகில் "கட்டமேகாதல்" என்னக்கூடா திறே. விஶ்லேஷத்தில் நலிவுக்குடலாகையாலே ப்ரேமம் தண்ணிதென்கிறாள். [கடல் வண்ணாகடியைகாணேன்னும்] - கடல் ஸகல பதார்த்தங்களையும் தன்னுள்ளே யடக்கி, ஒன்றையொன்று நலியாதபடி நோக்குமாயிற்று; அப்படியே ஸர்வரக்ஷகனான நீ நிர்க் க்ருணனாய் என்னும். அன்றிக்கே, பிரிந்தார்க்குத் தரிக்கவொண்ணாத வடிவுபடைத்த நீ பாதகனாகாநின்றாய் என்னும். [வட்டவாய்நேமி] - "சங்குசக்கரங்கள்"என்று சொல் லும் நிலையும் போச்சு. இப்போது கண்ணுக்கு விஷயமன்றிக்கே யிருக்கச்செய்தேயும், அதினுடைய ஸந்நிவேசம் ஸித்தமாயிருக்கிறபடி; பிடித்தவிடமெங்கும் வாயாய்க்கிட

*நாலாம்பாட்டு - இட்டகால்இத்யாதி "இவள்திறத் தென்சிந்தித்தாய்?" என்றத்தைக் கடாக்ஷித் தவதாரிகை - உம்மையொழிய இத்யாதி.*

*"இட்டகாலிட்டகையளாயிருக்கும்" என்கிற தாயாருடைய ஹார்த்தபாவம் - **இவளுக்கு நீர்** இத்யாதி வாக்யத்வயம். என் ? இவளவயவங்கள் இவளதீநமல்லவோ ? என்கிற சங்கையிலேயாதல்; **ஆ**ராலே இட்டகாலிட்டகை என்கிறசங்கையிலேயாதல் அருளிச்செய்கிறார் - ஸகீபி: இத்யாதி. இஶ் ஶ்லோகத்துக்கு ஆகரங் கண்டுகொள்வது. இட்டகா லிட்டகையளானால்எழுந் துலாவக் கூடுமோ வென்ன-அவியும்விளக்கு இத்யாதி. கீழே மயங்குகிறதுக்கு முன்னே யெழுந் துலாவுகிறதுக்கு த்ருஷ் டாந்தம் அருளிச்செய்து, எழுந்துலாவினவநந்தரம் "மயங்கும்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் அருளிச் செய்கிறார்-அதுகிளம்பின இத்யாதி. எழுந்திருந்துலாவாநிற்கச்செய்தே மோஹிக்கும்இதிசப்தார்த்த:. "மயங்கும் - கைகூப்பும்" என்று கூட்டி, வ்யதிரேகத்தாலும் அந்வயத்தாலும் பாவம்-உணர்த்தியில் இத்யாதி. ஸ்வாபதேசம் - ஸாதநஇத்யாதி. ஸாதநத்வேந தொழுகிறாளென்றாலோ ? என்ன-ஸாதந புத்த்யா இத்யாதி"இது கட்டம்" என்னுங்காட்டில் பரிஹாரம்பிறந்ததாகாமையாலே மோஹியாநின்றா ளென்றபடி. "வண்ணம்" என்று - ரக்ஷகத்வஸ்வபாவமாதல், வடிவழகாதல். இரண்டர்த்தத்திலும் பாவமருளிச்செய்கிறார் - கடல்இத்யாதி வாக்யத்வயத்தாலும்; அன்றிக்கே இத்யாதியாலும். பாதக னாகையாவது - வடிவை அநுபவிப்பியாதிருக்கை. "நேமி" என்றொன்றைச் சொன்னதுக்கு பாவம்- **சங்குசக்கரங்கள்என்று இத்யாதி.** காணாதிருக்க, "வட்டவாய்" என்றறியும்படியென் ? என்ன-**இப் போதுஇத்யாதி.** "வட்டவாய்" என்றதுக்கு பாவம் - **பிடித்தவிடம்இத்யாதி. இப்பதப்ரயோகத்***

ரிருப்பது. விரோதிபோக்கப் பரிகரமின்றிக்கேயிருக்கிறாயன்றே. [வந்திடாயென்றென்றே மயங்கும்] - ஒருகால் "வந்திடாய்" என்றாலாறியிருக்க வல்லளல்லளே. விடாய்த்தவன் தாஹம் சமிக்குந்தனையும் "தண்ணீர், தண்ணீர்" என்னுமித்தனையிறே; அப்படியே, "வந்திடாய், வந்திடாய்" என்றுருவ அத்தையே சொல்லும்; மற்றொன்றறியாள். [மயங்கும்] - வாஸனையே உபாத்யாயராகச் சொல்லு மத்தனை. [என்றென்றே] - வெண்கல த்வநிபோலே சொல்லுக்குச்சொல் ஓய்கிறபடி. [சிட்டனே] - சிட்டன் திருமாலென்ற படி. பிராட்டிவிஷயத்திலே வ்யாமோஹத்தை யுடையவனென்னுதல்; பிராட்டியைத் தன் பக்கலிலே பித்தாக்கித் துடிக்கப்பண்ணுமவனென்னுதல் ; உம்முடைய படி சால அழகிதாயிருந்தது. உம்மைப்போலே சில சிஷ்டர்களமைந்திருந்ததிறே அபலைகள் குடி கெடுக்கைக்கு. அழகிதாக ஆந்ருஶம்ஸ்யப்ரதாநராயிருந்தீர். ப்ரஹ்மஹத்யைகளைப் பண்ணிப் பூணூலை வெளுக்கவிட்டுக் கையிலே பவித்ரத்தையுமிட்டு ஓத்துச்சொல்லித் திரிவாரைப்போலேயிருந்ததீ உம்முடையபடி. [செழுநீர்த்திருவரங்கத்தாய்] - ஶ்ரமஹர மான நீரையுடைய கோயில். தண்ணீர்ப்பந்தலிலே வ்யாதுகரோதுங்கினவோபாதியாகாதே நீர் இவ்வூரில் சாய்ந்ததும். [இவள்திறத் தென்சிந்தித்தாயே] - ஸர்வஜ்ஞனுக்கும், இவ ளுக்கு ஓடுகிறதுஶைக்குப் பரிஹாரம் சிந்திக்கவேணுமேன் றிருக்கிறாள்: திருத்தாயார் தெளிவிருக்கிறபடி. "அவன் நினைவே கார்யமாய்த் தலைக்கட்டுவது" என்று அவனைக் காலைக்கட்டிக் கேட்கிறாள். "ஶ்ரேயோத்யாயதி கேஶவ:" (ஶ்ரேயோத்யாயதி கேஶவ:) என்று, அநுகூலவிஷயத்தில் சிந்திப்பானும் அவனிறே. இங்ஙனே மநோரத மாயே போமித்தனையோ, நிர்ணயாந்தமாகக் கடவதன்றோ. (ச)

---

துக்கு ஹாவம் - விரோதிஇத்யாதி. "என்றென்றே" என்கிறவீப்ஸைக்குஹாவம் - ஒருகால் இத்யாதி வாக்யத்ரயம். "என்றென்றே" என்கிற வர்த்தமாநத்துக்குச்சேர - "மயங்கும்" என்ற தும், 'வந்திடாய்' என்றதும் ஏககாலீநமாய்த் தோற்றுகையாலே. 'மயங்கினால் வந்தி டாய் என்னக்கூடுமோ? என்ன - வாஸனையேஇத்யாதி. "என்றென்றே" என்கிற ஸ்வரத்துக் குத் தாளகதியிலே ஹாவம் - வெண்கலஇத்யாதி. "சிட்டன்" என்று - ஶ்ரீக்கு இஷ்டனென்று விவக்ஷித்து - திருமாலென்றபடிஎன்றது. சிஷ்டனென்று விவக்ஷித்து, வெறுப்பிலேயாக்கி அர்த் தாந்தரம் - உம்முடையஇத்யாதி. "அழகிதாயிருந்தது" என்றதுக்குவிவரணம் - உம்மைப்போலே இத்யாதிவாக்யத்வயம். நம்மை "ஆந்ருஶம்ஸ்ய ப்ரதாநரல்ல" என்றுஉபேக்ஷிக்கிறதென்? நம்வடிவிலே தெரியாதோ நம்முடைய ஆந்ருஶம்ஸ்யம்? என்ன - ப்ரஹ்மஹத்யைகளைஇத்யாதி. ஓத்து - வேதம். ஆந்ருஶம்ஸ்யப்ரதாநனல்லாவிட்டால் பரமபதத்திலே இரேனோ? அப்படியன்றிக்கே கோயிலிலே வந்து சாய்ந்தபோதே நான் ஆந்ருஶம்ஸ்யப்ரதாந னென்னுமிடம்எல்லாருமறியாரோ? என்ன-தண்ணீர்ப் பந்தலிலே இத்யாதி. கீழைப்போல் "என்செய்கின்றாய்" என்னாதே, "சிந்தித்தாய்" என்றதுக்கு ஹாவம்-ஸர்வஜ்ஞனுக்கும்இத்யாதி. "என்சிந்தித்தாய்" என்று அவனை ஸம்போதித்துக் கேட்கிற துக்கு ஹாவம் -திருத்தாயார் இத்யாதிவாக்யத்வயம். அவன் தானப்படி சிந்திக்குமோ? என்ன - ஶ்ரே யோத்யாயதிஇத்யாதி. "சிந்தித்தாயே" என்கிறஅவதாரணார்த்தம் - இங்ஙனேஇத்யாதிவாக்யத் வயம். 'சிட்டனேசெழுநீர்த் திருவரங்கத்தாய்! இட்டகாலிட்டகையளாயிருக்கும்?' என்றதொடங்கி, 'இவள்திறத்தென் சிந்தித்தாயே?' இத்யந்வய:. (ச)

## ஐந்தாம் பாட்டு.

**சிந்திக்குந்திசைக்குந்தேறும்கைகூப்புந்திருவரங்கத்துள்ளாயென்னும்
வந்திக்குமாங்கேமழைக்கண்ணீர்மல்கவந்திடாயென்றென்றேமயங்கும்
அந்திப்போதவுணனுடலிடந்தானே! அலைகடல்கடைந்தவாரமுதே!
சந்தித்துன்சரணஞ்சார்வதேவலித்ததையலைமையல்செய்தானே.**

*ஆ.—(சிந்திக்கும்.)-உன்னழகையும் உன்னழகோடு பண்டுஸம்ஶ்லேஷித்த படியையும் நினைக்கும், நினையா மோஹிக்கும். நெடும்போது கூட லப்த ஸம்ஜ்ஞையாம். தன்னுடைய அபேக்ஷிதம் பெறுகைக்காக உன்னைத்தொழாநிற்கும். தன்னுடைய வ்யஸநம் பொறுக்கமாட்டாமையாலே, திருவரங்கத்துள்ளாய் என்னும். த்வந்நாதையாயிருந்துவைத்தே நாதஹீநையைப்போலே திருவடிகளிலே விழுந்துகிடக்கும். அங்ஙனேவிழுந்து கிடந்து, தன்னுடைய அழகிய கண்கள் நீர்மல்க, வந்திடாய் என்றென்றே மயங்காநிற்கும். உன்திருவடிகளை ஒருகால்கண்டு ஸம்ஶ்லேஷிக்கவேணுமென்னும் ஆசையாலே தன்னை தரித்துக்கொண்டிருக்கிற இப்பெண்பிள்ளையை இப்பாடுபடுத்தவேணுமோ? உன்னுடைய நிரவதிகமான ஆஶ்ரித வாத்ஸல்யமெல்லாம் எங்கே போயிற்று? என்கிறாள்.*

*ஒ.—அஞ்சாம்பாட்டில், இவளுக்கு ப்ரதிக்ஷணம் ஜநித்துவருகிற அவஸ்தாவிஶேஷங்களை விஜ்ஞாபித்து இவளை இப்பாடுபடுத்துகை தேவருடைய ஆஶ்ரித வத்ஸலத்வாதிகளுக்குப் போருமோ? என்கிறாள்.*

*[சிந்திக்கும் என்று தொடங்கி] - உன்னுடைய ஸௌந்தர்யாதிகளையும் உன்னோட்டை ஸம்ஶ்லேஷத்தையும் நினைக்கும். அப்போதே ஸம்ஶ்லேஷிக்கப் பெறாமையாலே மோஹிக்கும்; ஒரு ஹேதுவின்றியே இருக்கச்செய்தே அபேக்ஷிதம்பெற்றுத் தரித்தாரைப்போலேஸபாவஹமாம்படி தேறும். தேவர்படிகளை நினைத்து ஈடுபட்டுக்கைகூப்பும்; மீளவும் வ்யஸநாஸஹிஷ்ணுதையாலே திருவரங்கத்து உள்ளாய்என்னும். [வந்திக்கும்] - செயலறுதியாலே திருவடிகளைநினைத்துத் தண்டனிட்டுக்கிடக்கும்; ஸ்தோத்திரம் பண்ணும் என்றுமாம். அத்தஶையிலே கண்மிகவும் நீர்மல்குவதும் செய்ய 'பிரானே வாராய்!' என்றுநின்றுகொண்டே அறிவுகெடும். [அந்திப்போது என்று தொடங்கி] - அஸுரர்க்கு வலம்வர்த்திக்கும் ஸந்த்யாகாலத்திலே ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்காக ஹிரண்யனுடைய ஶரீரத்தைப்பிளந்தருளி ப்ரயோஜநாந்தரபரருமாய் அபிமாநிகளுமாய்ப் பெருமிடுக்கருமான தேவர்களுக்காக நிரதிஶயபோக்யமான வடிவோடே கடல்கடைந்தருளினாய்; இப்படிச்செய்வான் ஒருவனாயிருந்துவைத்து உன்திருவடிகளை சிந்தித்தோமாய் முடியவேணுமென்று துணிந்துஇருந்துள்ள இப்பெண்பிள்ளைக்கு உன்னைக்காட்டாதே இவளை மதிகெடுத்தவனே! "உன்னைக்கண்டு உன்எதிரே முடியவேணும்" என்று ப்ராணன்களை தரித்திருக்கிறாள் என்றுமாம்.*

*ப.—அநந்தரம், ஆஶ்ரிதர் அபேக்ஷிதஞ்செய்யும்படியான ஹவ்யதையையுடையையாயிருக்க, இவள் ப்ரதிக்ஷணம் அவஸ்தாபேதம் பிறக்கும்படியான ஆர்த்தியையுடையளாகாநின்றாளென்கிறாள்.*

அந்தி - ஸந்த்யை யென்ற, போது - ஒருகாலவிசேஷத்திலே, அவுணன் - அஸுரனான ஹிரண்யனுடைய, உடல் - சரீரத்தை, இடந்தானே - பிளந்தவனுப், அலை - அலையையுடைத்தான, கடல் - கடலை, கடைந்த-கடைந்து, ஆரமுதே - நிரதிசயபோக்யனுப் வைத்து, (அப்படி காலநியதியுமின்றியே ப்ரபலவிரோதியு மின்றியே, அருந்தொழில் செய்வித்துக்கொள்ளவும் வேண்டாதபடி, ஆர்த்தநாதமாத்ரமன்றியே), சந்தித்து-வாஹ்யமான ஸம்ச்லேஷத்தைப்பண்ணி,உன் சரணமே-உன் திருவடிகளையே, சார்வது - சேர்ந்தநுபவிக்கவேணுமென்கிற, வலித்த - திண்ணெனவையுடையவளாயிருக்கிற, தையலை - இப்பெண்பிள்ளையை, மையல்செய்தானே - மதிகெடுத்தவனே! (இவள்), சிந்திக்கும் - பூர்வஸம்ச்லேஷ ப்ரகாரத்தைச் சிந்தியாநிற்கும்; திசைக்கும் - (அதுஅப்போதே ஸித்தியாமையாலே) அறிவழியா நிற்கும்; தேறும் - அசங்கிதமாகத் தேறுநிற்கும்; (அவ்வளவிலே வந்தாயாகக் கருதி), கைகூப்பும்-கைகூப்பாநிற்கும்;(ஆஸக்தமாக), திருவரங்கத்து - கோயிலிலே, உள்ளாய் - கண்வளர்ந்தருளுகிறவனே! என்னும் - என்று கூப்பிடாநிற்கும்; வந்திக்கும் - (அவ்வடிவழகை நினைத்துத்) தலையாலே வணங்கும்; (அவ்வளவிலும் வரக்காணாமையாலே), அங்கே - அவ்விடந்தன்னிலேயிருந்து, மழை - குளிர்ந்த, கண்ணீர் மல்க - கண்ணீர்மல்கும்படி, வந்திடாய் - வந்துகொள்ளாய், என்றென்றே - என்று பலகாலுஞ்சொல்லி, மயங்கும் - (உக்தி வைலக்ஷண்யத்தையாகக் காணாமையாலே) மோஹிக்கும். காமாதுரைகள் விகாரத்தில் இவளுக்கில்லாதனவில்லை என்று கருத்து.

இ.—அஞ்சாம்பாட்டில், இவளுக்கு ப்ரதிக்ஷணம் ஜநித்து ஒன்றோடு ஒன்று சேராதே வருகிற அவஸ்தாபேதங்களை அறிவித்து இவளை இப்படிப்படுத்துகை உம்முடைய நீர்மைக்குப் போருமோ? என்கிறாள்.

[சிந்திக்கும்] - உம்முடைய ஸௌந்தர்யாதிகுணங்களையும் உம்மோட்டை ஸம்ச்லேஷத்தையும் நினைக்கும். முன்பு இவ்வநுஸந்தாநமின்றியே யாயிற்று இருப்பது. மோஹித்தவோபாதி இதுவும் ஒருபடிவிக்ருதி இருக்கிறபடி. அப்போதே காணப்பெறாமையாலே [திசைக்கும்] - மோஹிக்கும். [தேறும்] - ஒருஹேதுவின்றிக்கே யிருக்கத் தேறுநின்றாள். இதுதானும் ஸம்பாவஹமாயிருக்கிறதாயிற்று. மோஹம் செல்லாநிற்க, அபேக்ஷிதம் பெற்றாரைப்போலே தேறுகை ஸம்பாவஹமிறே; ஸ்ரமஹரையில் பிறக்கும் தெளிவுக்கு அஞ்சவேணுமே! [கைகூப்பும்]-தேவர்படிகளை நினைத்து ஈடுபட்டுக் கும்பிடும். கீழே, "மயங்கும் கைகூப்பும்" என்றது, "இங்கு தேறும் கைகூப்பும்" என்றது: அல்லாதனஸஞ்சாரியாய்ச் செல்லாநிற்க, இதுஒன்றும் ஸ்தூரமாய்ச் செல்லாநின்றது; ஸ்வரூபாநுபந்தியான தர்மமாகையாலே. "நித்யாஞ்ஜலிபுடாஃ" என்னக்கடவதிறே. ஆற்றாமையாலே, [திருவரங்கத்துள்ளாய் என்னும்] - நீர் உம்முடைய செல்லாமைதோற்றக்கிட்டிவைத்து, இவளுடைய அஞ்ஜலியை மறுக்கிறதென்? ஸோஷ்ஸாதனுக்கு அஞ்சலியோபாதியிறே ஸோஷி கிட்டவந்திருக்கையாகிறது. பெருமாளே! என்னாநின்றாள். [வந்திக்கும்] - செயலறுதியாலே பெருமாள் எழுந்தருளி இருக்கிறபடியை நினைத்துத் தண்டனிடும். வந்திகளுடைய கார்யமாகையாலே, ஸ்தோத்ரம்பண்ணும் என்றுமாம். "இதொருதோளே! தோள்மாலையே! முறுவலே!" என்று அங்யரைப்போலே புகழாநின்றாள். [ஆங்கே மழைக்கண்ணீர்மல்க] - அத்தசையிலே கண்ணநீர்வெள்ளமிட, தண்டனிட்டுக்கிடக்கும் என்னுதல்; ஸ்தோத்ரம்பண்ணாநிற்கும் என்னுதல். [வந்தி

டாய்] - தன் ஆற்றாமை தோற்ற பிரானே! வாராய் என்னும். [என்றென்றே] - ஒருகால் அழைத்தால் வாராதொழிந்தால் பின்னையும் அத்தையே சொல்லுமித்தனையல்லது, வேறு சிலதான் சொல்லுமவ ளன்றே. அச்சொலவுதானே வெண்கலத்வநிபோலே ஓய்ஞ்சு செல்லாநின்றது. [மயங்கும்] - அதுதானும்போய் அறிவுகெடாநின்றாள். "வந்திடாய்" என்றதுவும் இழுக்கக்கிடாய் புகுகிறது: நினைத்தபோதாக வரப்போமோ? என்ன, [அந்திப்போது இத்யாதி]-ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே தூணிலேவந்து தோற்றிற்றிலையோஎன்கிறாள்: அஸுரர்களுக்கு பலம்வர்த்திக்கும் காலத்திலே. அவனுடைய வரத்திற்புகாத காலத்திலே, [அவுணனுடல்]-வரபலத்தாலே திருவுகிருக்கு ஊட்டியாகவளர்த்த ஹிரண்யனுடைய ஶரீரத்தைப் பிளந்தானே! "நரஸ்யார்த்ததநும் க்ருத்வா ஸிம்ஹஸ்யார்த்ததநும் ததா" என்று இரண்டுயோநியை ஒன்றாக்கி, அவன் வரத்திற்புகாதவடிவாலே பிளந்தவனே! "ஸ்தவ்யஸ்ஸ்தவப்ரிய:" என்னுந் தெளிவுடையார்க்கோ உதவலாவது? மயங்கின இவளுக்கு உதவலாகாதோ? ஆணுமாய் மிடுக்கனுமானவனுக்கோ உதவலாவது? அப்பருவத்தில் அபலைக்கு உதவலாகாதோ? பிறரால்வரும் நலிவோ பரிஹரிக்கலாவது? உன்னால்வந்தது பரிஹரிக்கலாகாதோ? இவளுக்கு உதவுமிடத்தில் காலநியதி வேண்டா, உன்னையழிய மாறவேண்டா. அவ்வளவேயோ? [அலைகடல் கடைந்த ஆரமுதே] - ப்ரயோஜநாந்தரபரருமாய் ஈஶ்வராபிமாநிகளுமானார்க்கு, நிரதிஶயபோக்யமானவடிவைக்கொண்டு, க்ஷுபிதமான கடலைக் கடைந்தவனே! இவளுக்குக் கடல்கடையவேணுமோ, கடல்கடைந்த வடிவைக்காட்ட அமையாதோ? ஒருப்ரணயிநியை லபிக்கைக்குப் பண்டு கடல்கடைந்தவனல்லையோ? [சந்தித்துன் சரணம்சார்வதே வலித்த தையலை மையல்செய்தானே] - தெளிவுடைய இருக்கனுக்கு உன்னை அழியமாறி உதவினாய்: ப்ரயோஜநாந்தரபரர்க்கு உடம்புநோவக் கடல்கடைந்தாய்: உன்னையல்லது அறியாத இவளை அறிவுகெடுத்து வைத்தாய். உன்திருவடிகளைக்கிட்டி முடியவேணும் என்று துணிந்திருக்கிற இப்பெண்ணை என்னுதல், உன்னைக்கண்டு உன்எதிரே முடியவேணும் என்று ப்ராணனையரித்திருக்கிற இவளை என்னுதல். "நவாஸூரோ தாநவீ தாநவா ந்ரு:". மாநஸாநுபவமேயன்றி, உன்னைக்கிட்டி பாஹ்ய ஸம்ஶ்லேஷம் பண்ணினேனாகவேணும் என்று துணிந்திருக்கிற இவளை என்னுதல். [மையல் செய்தானே]- உன்னைக்காட்டாதே இவளை மதிகெடுத்தவனே!

ஈடு.—அஞ்சாம்பாட்டு. இவளுக்கு ப்ரதிக்ஷணம் பேதித்து ஒன்றோடொன்று சேராதே வருகிற அவஸ்தாபேதங்களை அறிவித்து, இவளை இப்படி படுத்துகை உம்முடைய நீர்மைக்குப் போருமோ? என்கிறாள்.

[சிந்திக்கும்] - உம்முடைய ஸௌந்தர்யாதிகளையும் உம்மோட்டைக்கலவியையும் நினைக்கும். முன்பு இவ்வநுஸந்தாநமும் இன்றிக்கேயாயிற்றிருந்தது; மோஹத்தோபாதி இதுவும் ஒரு விக்ருதியாயிருக்கிறபடி. [திசைக்கும்] - அப்போதே காணப்பெறாமை

அஞ்சாம்பாட்டு - சிந்திக்கும்இத்யாதி. "சிந்திக்கும்" என்றுதொடங்கி, "மயங்கும்" என்னுமளவுங்கடாக்ஷித் தருளிச்செய்கிறார் - இவளுக்குப்ரதிக்ஷணம்இத்யாதி. "அந்திப்போது" இத்யாதிகளைக் கடாக்ஷித்து - இவளைஇப்படிஇத்யாதி.

சிந்தாவிஷயத்தையும் சொல்லாநின்றுகொண்டு, "சிந்திக்கும்" என்றதுக்கர்த்தம்அருளிச்செய்கிறார் உம்முடைய இத்யாதி. இவ்வநுஸந்தாநம் ப்ரதிக்ஷணம் பேதித்த அவஸ்தையோ? என்ன - முன்பு இத்யாதிவாக்யத்வயம். இப்போது "சிந்திக்கும்" என்கையாலே - முன்புமோஹம் ஸித்தம் "திசைக்கும்" என்றது - திகைக்குமென்றாய், அதாவது - அறிவுகலங்குகையாய், மோஹிக்கும் என்ற

யாலே மோஹிக்கும். [தேறும்] - ஒரு ஹேதுவின்றிக்கே யிருக்கத் தேறுகின்றாள். இது தானும் ஸயாவஹமாயிருக்கிறதாயிற்று; மோஹம் செல்லாநிற்க, அபேக்ஷிதம்பெற்றாரைப் போலே தேறுகை ஸயாவஹமிறே. சரமதசையில் பிறக்கும் தெளிவுக்கும் அஞ்ச வேணுமே. உய்ந்தபிள்ளைபாடும்போது, "கேட்டேன், இவள் 'தேறும்' என்பதே" என்று சீயரருளிச்செய்வராம். [கைகூப்பும்] - இதுஇவளுக்கு ப்ரக்ருதி. கீழே "மயங்கும் கைகூப்பும்" என்றது: இங்கே 'தேறும்கைகூப்பும்' என்றது; அல்லாதன ஸஞ்சாரியாய்ச் செல்லாநிற்க, இது ஒன்றும் ஸ்த்திரமாய்ச்செல்லாநிற்கும்; ஸ்வரூபாநுபந்தியாகையாலே. "நித்யாஞ்ஜலிபுடா:" (நித்யாஞ்ஜலிபுடா:) என்னக்கடவதிறே. மோஹத்திலும் உணர்த்தியிலும் ஸத்தையுண்டே; "வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்" என்றதிறே நிலைநின்ற ஸ்வரூபம். அநுவர்த்தமாநமானதிறே பரமார்த்தமாவது. [திருவரங்கத்துள்ளா யென்னும்] - "பெருமாளேயென்னும்" என்று சீயர். அவ்வூரில் ஸம்பந்தங்கொண்டு போலேகாணும் அவரையும் விரும்பிற்று. [வந்திக்கும்] - "திருவரங்கத்துள்ளாய்" என்றது நெஞ்சிலேவடிம்பிட்டு, "ஒருமுகமே, முறுவலே, ஒருவளையமே" என்று ஸ்தோத்ரம் பண்ணாநின்றாளென்னுதல்; ஹக்நாபிமாநையாய்த் திருவடிகளிலே விழுந்துகிடக்குமென்னுதல். [ஆங்கே] - அவ்வவஸ்தையிலே. [மழைக்கண்ணீரித்யாதி] - குளிர்ந்தகண்ணீர் மல்க, வந்திடாயென்றென்று சொல்லி, அச்சொலவோடே யறிவுகெடும். நினைத்தபோதாக வரப்போமோ? என்ன, [அந்திப்போது] - "மத்தஸ்ஸர்வமஹம் ஸர்வம்" (மத்தஸ்ஸர்வமஹம் ஸர்வம்) என்று தெளிந்திருப்பார்க்கோ உதவலாவது? அறிவுகெடுவோர்க்குஉதவலாகாதோ? அவன் வரத்துக்கு விருத்தமாயிருப்பதொரு காலத்திலே, ஆஸுரப்ரக்ருதியாயிருக்கிற அவுணனுடைய ஶரீரத்தைப் பிளந்து போகட்டிலையோ? தமப்பன் பகையானாலோ

---

படி. தேறுகை நல்லதன்றோ? என்ன - இதுதானும் இத்யாதி, ஸயாவஹமெப்படியென்ன-மோஹம் இத்யாதி. இதுக்குநியாமகமேதென்ன - சரமதசையில்இத்யாதி. தேறுமது ஸயாவஹ மென்கைக்கு ஸம்வாதம் - உய்ந்தபிள்ளைஇத்யாதி. இது ஸ்வபாவமானபடி எப்படி? என்ன; ஸஹேதுமாகஅரு ளிச்செய்கிறார் - கீழேமயங்கும்இத்யாதி வாக்யத்ரயத்தாலே. நித்யமென்று மென்றது, அஞ்சலியை. ஸ்வரூபாநுபந்தியாகையாலே அஞ்சலிநித்யமென்னுமதுக்கு ப்ரமாணம் - நித்யாஞ்சலி இத்யாதி. "ஸ்ரீமந்நாராயணம் தேவம் நித்யாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா: நமஇத்யேவவாதிந:" (ஸாத - மோக்ஷ - ௯). இதுக்குஉபபத்தி-மோஹத்திலும்இத்யாதி. அத் தாலேதென்ன - வழுவிலாஇத்யாதி. அதாவது -ஸத்தையுண்டானபோதே தத்கார்யமான அஞ்சலியும் நித்யமாய்ச்செல்லுமென்றபடி- மோஹமுமுணர்த்தியும் ஸஞ்சாரி, அஞ்சலி ஸ்த்திரமென்னுமத்தை; உபபாதிக்கிறார் அநுவர்த்தமாநமானது இத்யாதி. பெருமாளே என்றர்த்தமானால், திருவரங்கத்துள்ளாய் "என்ன" வேணுமோ? என்ன -அவ்வூரில்இத்யாதி. "வஹி ஸூவிவாஹநமஸ்தே" என்கிறதாது வைப்பற்ற. "வந்திக்கும்" என்றதுக்கு-ஸ்துதிக்கும், ஸேவிக்கும்என்று அர்த்தத்வயமருளிச்செய்கிறார்- திருவரங்கத்துள்ளாய் இத்யாதி வாக்யத்வயத்தாலே. வடிம்பிட்டு - ப்ரேரித்து, வடிம்பிடுகை - தணிபேட்டுக் கிளப்புகை. கீழே 'கைகூப்பும்' என்கையாலே இங்கே - ஸாஷ்டாங்கப்ரணாமம் விவக்ஷிதம். ப்ரஹ்லாதனுக்காக ஹிரண்யன்உடலைப் பிளந்தானென்று விவக்ஷித்து, அத்தைச் சொல்லுகிற தாயாருடைய ஹார்த்தபாவம் - மத்தஸ்ஸர்வம் இத்யாதி வாக்யத்ரயம். ஶப்தார்த்தம் - அவன்வரத்துக்கு இத்யாதி. "மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்மயிஸர்வம்ஸநாதநே" இத்யாதி- ப்ரதமேஶ்லோகவிம்ஶே ப்ரஹ்லாதசரிதே. "அவுணனுடலிடந்தானே" என்கிறவளுடைய ஹார்த்தபாவத்தை ப்ரகாராந்தரேண அருளிச்செய்கிறார் - தமப்பன்இத்யாதிவாக்யத்வயத்தாலே,

வுதவலாவது ? நீர் பகையாளு லுதவலாகாதோ ? இவ்வளவில்உதவாமைக்கு மேற்படப் பகையில்லையிறே. அது ஒருகால் சிறுக்கனுக்கு உதவினமையுண்டு. அது தப்பிற்றிறே யென்ன, பின்போ நீயுதவாதது ? [அலைகடல்கடைந்த]-ப்ரயோஜநாந்தரபரர்க்கும் அகப் படக் கடலைக்கடைந்துகொடுத்திலையோ ? உன்னைக்கொண்டு ஒருப்ரயோஜநங் கொள் வார்க்கோ உதவலாவது ? உன்னையே "ப்ரயோஜநம்" என்றிருப்பார்க்கு உதவலாகாதோ? [ஆரமுதே] - இவருடைய அம்ருதத்தைக்கொண்டாயிற்று அவர்கள் கடல் கடைந்தது. [சந்தித்துஇத்யாதி]-உன்னைக்கிட்டித் திருவடிகளைச் சாரவேணுமென்று வ்யவஸிதையா யிருக்கிற இவளை இப்படி யறிவுகெடுப்பதே! (வலித்த ப்ராணனை பலாத்காரத்தாலே யரித்த.)அன்றிக்கே, உன்னைக்கிட்டி ஸந்நிதியிலே முடியுமித்தனையென்று ப்ராணனையரித் திருக்கிறவளை என்னுதல். (வலித்த - அத்யவஸித்த.) "தாவத்த்யஹம்தூதஜிஜீவி ஷேயம்" (தாவத்த்யஹம்தூதஜிஜீவிஷேயம்) என்றுகாணும் இருக்கிறது. [மையல்செய் தானே] - உம்மை யாசைப்பட்டவளுக்கும் மயக்கமேயோ பலித்துவிட்டது. (ரு)

## ஆறாம் பாட்டு.

மையல்செய்தென்னைமனங்கவர்ந்தானே!என்னும்மாமாயனே!என்னும்
செய்யவாய்மணியே!என்னும்தண்புனல்சூழ்திருவரங்கத்துள்ளாய்என்னும்
வெய்யவாடண்டுசங்குசக்கரம்வில்லேந்தும்விண்ணோர்முதல்!என்னும்
பைகொள்பாம்பணையாய்! இவள்திறத்தருளாய்பாவியேன்செயற்பாலதுவே.

*ஆ.— (மையல்செய்து.) - அதிக்ஷூத்ரமான சாகத்தின்பக்கலிலே ப்ரஹ்மாஸ்த்ரத்தைவிட்டருளின உன்னுடைய ஸர்வவசீகரணமான ப்ரணயித்வ குணத்தாலே என்னுடைய மநஸ்ஸை அபஹரித்தவனேயென்னும். வசீகரணமான அவனுடைய*

---

*அவன் பகையோ? என்ன - இவ்வளவில்இத்யாதி. மேலுக்கவதாரிகை - அதொருகால்இத்யாதி வாக்யத்வயம். 'அதொருகால்' இத்யாதிக்குக் கருத்து - அவதாரம் முன்பின்னானாலும் இப்படியநேக வ்யாபாரங்களைச் செய்தான்என்று. இத்தைச் சொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் - உன்னைக் கொண்டுஇத்யாதி வாக்யத்வயம். "ஆரமுதே" என்றத்தைப்பற்ற - உன்னையேப்ரயோஜநமென் றிருப்பார்க்கு என்றது. "ஆரமுதே" என்றதுக்கு பாவம் - இவருடைய இத்யாதி. கிட்டி - ஆந்தரமாகவன்றிக்கே பாஹ்யமாகக்கிட்டி. சரணம் சார்வதே - சரணம் சாரவேணுமென்றே. முந்தினவர்த்தத்துக்கு, சரணம் சாருகை - ஸம்ஶ்லேஷிக்கை; வலிக்கை - வ்யவஸ்த்திதையாகை. த்விதீயார்த்தத்துக்கு, சரணம் சாருகை - முடிகை; சந்திக்கை - ப்ராபிக்கை. வலிக்கை - யரிக்கை. அப்படி யரித் திருந்தபேருண்டோ? என்ன - தாவத்த்யஹம் இத்யாதி. "நஹாஸ்யோஹதா நஷிதா நஹாந்ய: ஸஹாபிஶிஷ்டாஸ்தியோஸவோ வா । தாவத்த்யஹம்தூதஜிஜீவிஷேயம். யாவத்ப்ரவ்ருத்திம் ஶ்ருணுயாம் ப்ரியஸ்ய" இதி ஸுந்தரகாண்டே ஹநூமந்தம்ப்ரதி ஸீதா. (௩௬-௩௦) அவதாரணார்த்தம் - உம்மை இத்யாதி. 'சிந்திக்கும்' என்று தொடங்கி, 'மையல்செய்தானே - இவள் திறத்தருளாய்' என்று மேல்பாட்டில் க்ரியையோடே அந்வயம். (ரு)*

மஹாஸ்சர்யபூதமான ஸௌந்தர்யத்தை அநுஸந்தித்து, மஹாஸ்சர்யபூதனேயென்று சொல்லும். நிரதிஸய தீப்தியுக்தமாயிருப்பதொரு நீலரத்நம், செந்தாமரை பூத்தாற் போலேயிருந்த திருவுடம்பையும் திருப்பவளத்தையுமுடையவனே என்று அவ்வழகைச் சொல்லும். அடியேனுக்கு ஆத்மதாநம் பண்ணுகைக்காகவன்றோ கோயிலிலேவந்து கண் வளர்ந்தருளுகிறது? என்னும். ஸர்வஜ்ஞனுமாய் ஸர்வஸக்தியுமாய் அத்யுக்ரமாயிருந்த ரதாங்கசங்கசார்ங்காதி திவ்யாயுதங்களை ஏந்தியருளுகிறதெனக்காகவன்றோ? என்னும். இவளுக்காக நீ கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளாநிற்கச்செய்தே, இவள்பக்கல் க்ருபை பண்ணியருளுகிறதில்லை; இதுக்குஹேது என்னுடைய பாபமேயிறே என்கிறாள்.

ஓ.— ஆறும்பாட்டில், இவள் இவ்வவஸ்தாபந்நையாயிருக்க இவள் ஆர்த்தி தீர்த்தருளாதொழிகைக்குக் காரணம் என்னுடைய கர்மவிபாகம் என்கிறாள்.

[மையல் என்று தொடங்கி] - என்பக்கலிலே அதிவ்யாமோஹத்தைப்பண்ணி என்னை அறிவழித்து என்மநஸ்ஸை நிஸ்ஸேஷமாகப் பறித்துக்கொண்டவனே! என்னும். ஸம்ஸ்லேஷதஸையில் ஆஸ்சர்யமான சேஷ்டிதங்களை உடையவனே! என்னும். ஸம்ஸ்லேஷதஸையில் வார்த்தை அருளிச்செய்யும்போது திருப்பவளத்திலும் திருவுடம்பிலும் பிறக்கும் அழகை நினைத்துச் செய்யவாய்மணியே! என்னாநிற்கும். ப்ரமஹரமான கோயிலில் கண்வளர்ந்தருளுகிறபடியை நினைத்து இவள் தனக்கு உதவுகிறிலை என்று சொல்லாநிற்கும். [வெய்யவாள் தண்டு சங்கு சக்கரம் வில்லேந்தும் விண்ணோர் முதல்! என்னும்] - அயர்வறுமமரர்களுக்கு அதிபதியாய் இருந்துவைத்து ஆஸ்ரிதருடைய ஆபந்நிவாரணார்த்தமாகக்காணவே எதிரிகள் அஞ்சும்படி கொடியவான திவ்யாயுதங்களை தரித்திருக்கிற நீ, என்னுடைய ப்ரதிபந்தகங்களை நீக்கி என்னோடே ஸம்ஸ்லேஷித்தருளாதொழிவதே என்று கருத்து. [பைசொல்பாம்பணையாய் இவள் திறத்தருளாய்] - ஆஸ்ரிதஸம்ஸ்லேஷைக ஸ்வபாவனாயிருக்கிற நீ, இவளிடையாட்டத்தில் க்ருபை பண்ணுகிறிலை. இவள் து:கிதையாய் இருக்கச்செய்தே இவளை விஷயீகரியாதே "படுக்கை நேர்பாடாயிருந்ததீ" என்று உறங்கி அருளுவதே! என்றுமாம்.

ப.—அநந்தரம், ஆஸ்ரிதஸம்ரக்ஷணார்த்தமான ஆயுதபூர்த்தியையுடையையாயிருக்கச்செய்தே இவளை இப்படி யலற்றும்படி பண்ணின நீ, இவளளவில் நான் செய்யக்கடவபடி அருளிச்செய்யவேணுமென்கிறாள்.

(உன்னுடைய ஹ்ருத்யதையாலே,) என்னை-என்னை, மையல்செய்து-மயல்கொள்ளப்பண்ணி, மனம் - நெஞ்சை, கவர்ந்தானே - அபஹரித்தவனே! என்னும்-என்னும்; மாமாயனே - மையல்கொள்ளுகைக்குப்பண்ணின நிரவதிகாஸ்சர்ய சேஷ்டிதங்களையுடையவனே! என்னும் - என்னும்; (ஹ்ருத்யதாப்ரகாஸகமான உக்தியாலே ஸ்புரிக்கிற,) செய்ய-சிவந்த, வாய் - அதரஸோபையையுடையையாய்க்கொண்டு, மணியே - மணிபோலே முடிந்தாளலாம்படி ஸுலபனானவனே! என்னும் - என்னும்; தண் - (உன்னைக்கிட்டி என் பரிதாபந்தீருகைக்கீடாகக்)குளிர்ந்த, புனல் - நீர், சூழ்-சூழ்ந்த, திருவரங்கத்து - கோயிலிலே, உள்ளாய் - ஸந் னே! என்னும் - என்னும்; வெய்ய -

யத்தில் வெம்மையேவடிவான, வாள் தண்டு சங்கு சக்கரம் வில் - ஸ்ரீபஞ்சாயுதங்களையும், ஏந்தும் - ப்ரணதரக்ஷா விளம்பம் பெறாதாரைப்போலே எப்போதும் ஏந்தியிருந்து, (அவ்வழகை), விண்ணோர் - ஸூரிகளுக்கநுபவிப்பித்து, முதல் - அவர்கள் ஸத்தாதி

ஹேதுபூதனானவனே! என்னும் - என்னும்; பை - உன்னுடைய ஸ்பர்ஶத்தாலே விரிகிறபணத்தை, கொள் - உடையனாய், பாம்பு - (ஜாதிப்ரயுக்தமான மென்மைகுளிர்த்தி நாற்றத்தாலே நிரதிஶயபோக்யமான) திருவநந்தாழ்வானை, அணையாய் - படுக்கையாக வுடையவனே! இவள்திறத்து-(நீ படுக்கைபொருந்திக்கிடக்கத் தரைப்பட்டுக்கிடந்தலற்று கிற) இவள்திறத்து, பாவியேன் - இவளையிப்படி காணவைத்த பாபத்தையுடையநான், செயற்பாலது - செய்யும்ப்ரகாரம், அருளாய் - அருளிச்செய்யவேணும். நீ அநாதரித்த வளவில் என்னாற்செய்யலாவதொரு பரிஹாரமுண்டாக உன்னாலும் சொல்லமுடியாதென்று கருத்து. மையல்செய்தென்று - பிச்சரைப்போலே ஆவித்துக்காட்டியென்று மாம்

ஈடு.—ஆறும்பாட்டில், இவ்வவஸ்தாபந்நையாயிருக்கிற இவள் ஆர்த்திதீர்த் தருளாதொழிகைக்குக் காரணம் என்கர்மவிபாகமேயிறே என்கிறாள்.

[மையல் இத்யாதி] - என்பக்கலிலே அதிவ்யாமோஹத்தைப்பண்ணி என் மநஸ்ஸை அபஹரித்தவனே! தன்மேன்மைபாராதே தாழநின்று பணிமொழிகளைச் சொல்லி இழிதொழில்களைச்செய்து தன் ஆற்றாமையை ஆவிஷ்கரித்து, ஸர்வேந்த்ரிய கந்தமான மநஸ்ஸை அபஹரித்தவனே! என்னும். தங்கள் இழவு தெரியாதபடியிருந்து பிறர்நெஞ்சை அபஹரிக்கையிறே ஸ்த்ரீத்வமர்யாதை; என் நினைவு அவன் நினைவாய் அத்தலை இத்தலையாயிற்று என்கிறாள். [மாமாயனே என்னும்] - ஸம்ஶ்லேஷதஶையில் ஆஶ்சர்யமான சேஷ்டிதங்களை உடையவனே! என்னும். [செய்யவாய்மணியே என்னும்]- இதுவும் அந்தமாயங்களிலே ஒன்று. தாழ்வுதோற்ற வார்த்தை சொல்லத்தொடங்கி, அது தலைக்கட்டமாட்டாதே ஸ்மிதம் பண்ணாநிற்கும்போதைத் திருவதரத்திற்பழுப்பு, "செவ்வாய்முறுவலோடு எனது உள்ளத்திருந்த அவ்வாயன்றியானறியேன்" என்னும் படியிறே முறுவல் துவக்கவல்லபடி. [மணியே] - ஸ்மிதம்பண்ணும்போது திருமேனி யெங்குமொக்கப் பிறக்கும் எழிலும் குளிர்த்தியுமிருந்தபடி. [தண்புனல்சூழ் திருவரங் கத்துள்ளாய் என்னும்] - குளிர்த்திக்கு இவ்வடிவழகு தேடிப்போகவேண்டாதபடி தேசமே ப்ரமஹரமாய் இருக்கிறபடி. ஸந்நிஹிதனாய்வைத்து எனக்கு உதவாதொழி வதே; [வெய்யவாள் இத்யாதி] - அயர்வறுமமரர்கள் அதிபதியாய்வைத்து ஆர்தரக்ஷ ணார்த்தமாக அன்றோ திவ்யாயுதங்களை தரித்தது? காணவே, எதிரி மண் உண்ணும்படி யான திவ்யாயுதங்களை தரித்திருக்கிற நீ, என்விரோதிகளைப்போக்கி முகங்காட்டா தொழிவதே என்கை. [பைகொள்பாம்பணையாய் இவள்திறத்து அருளாய்] - ஆஶ்ரித ஸம்ஶ்லேஷ ஸ்வபாவனான நீ இவள்திறத்து க்ருபைபண்ணுகிறிலே. ஸ்வஸ்பர்ஶத் தாலே விகஸிதமான ஃபணத்தைஉடையனாய், ஜாதிப்ரயுக்தமான மென்மை குளிர்த்தி நாற்றங்களையுடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாகஉடையனாகை. நீரும் இவளு மாக இருக்கக்கடவபடுக்கை, இவள் தரைக்கிடை கிடக்க உமக்குப் பொருந்துவதே! [இவள் திறத்து] - பாடோடிக்கிடக்கிற இவள்திறத்து. [அருளாய்] - அருள்கொள்வார் தேட்டமானநீ, அருள்பெறில் ஜீவிக்குமவளை இப்படி தரைக்கிடைகிடக்க விட்டு வைப் பதே; [பாவியேன்செயற்பாலதுவே] - பாவியேன் செயலிடத்தது இவள் பக்க... குறையிலலை, உம்முடைய பக்கலிலும் குறையில்லை. இருவருமானசேர்த்திபெற கிற என்பாபமிறே இதுக்கு ஹேது. "ஜ்ஞாவலோபே மநிஷிஹாஸீஜ."

ஈடு.—ஆறும்பாட்டு. இவள் இவ்வளவு ஆபந்நையாயிருக்க,இவளார்த்திதீர்த்து அருளாதொழிகைக்குக் காரணம் என்னுடைய கர்மவிபாக மென்கிறாள்.

[மையல்செய்து] - உணர்த்தியுண்டாகில் நெஞ்சிழவாள்காணும். எதிரிகளுடைய அநவதாநம்பார்த்திருந்து அவர்கள் கோட்டைகொள்ளுவாரைப்போலே. [என்னை] - கடலைத் தறைகண்டா னென்னுமாபோலே. [மனங்கவர்ந்தானே] - புழுகூற்றிச்சட்டம் போகடுவோரைப்போலே. [மையலித்யாதி] - கொன்று கிழிச்சிரையறுப்பாரைப்போலே. [மாமாயனே யென்னும்] - மையல்செய்த ப்ரகாரங்கள். கலக்கிற ஸமயத்தில் தாழநின்று கையைக்காலைப்பிடித்த பரிமாற்றங்காணும் இவள்நெஞ்சில் பட்டுக்கிடக்கிறது. ஸ்வதஸ்ஸித்தமானமேன்மை போலல்லவாயிற்று, ப்ரணயித்வத்தாலே தாழநின்றநிலை. ஸம்ஶ்லேஷதசையில் ஆஶ்சர்யமான சேஷ்டிதங்களை யுடையவனே! என்னும். [செய்யவாய்மணியே யென்னும்] - இதுவும் அந்தமாயங்களிலேயொன்று. தைர்யபங்கம்பிறந்து "நான்உன்சரக்கன்றோ?" என்று சொல்லுகிறபோதை அதரத்தில் பழுப்பு. "ஸவிலாஸஸ்மிதாதாரம்" (ஸவிலாஸஸ்மிதாதாரம்) என்னக்கடவதிறே [மணியே] - புஷ்பம் விகஸிதமாம்போது எங்குமொக்க ஒருசெவ்வி பிறக்குமாபோலே, ஸ்மிதம்பண்ணுகிறபோதுவடிவிலேஎங்குமொக்க ஒருசெவ்வி பிறந்தபடி. [தண்புனல்]-ஸ்மிதத்தில்குளிர்த்திபோலாயிற்று ஊரில்குளிர்த்தியும். அவ்வாயில் குளிர்த்திபோலேகாணும் இவ்வாயில்குளிர்த்தியும். (வாய் - இடம்.) [வெய்யவாளித்யாதி] - திவ்யாயுயங்கள் எதிரிகளையழிக்கைக்கு உடலாயிருக்குமாபோலே காமினிகளை யழிக்கைக்கும் உடலாயிருக்குமிறே. உகப்பாரையும் உகவாதாரையும் ஒக்கத்தோற்

ஆறும்பாட்டு.—மையல் இத்யாதி. "பாவியேன் செயற்பாலதுவே" என்றத்தைப் பற்றிகை- இவள் இவ்வளவு இத்யாதி.

மையல்செய்தபின்பு "மனங்கவர்ந்தான்" என்றதுக்கு ஸ்வாரஸ்யம் - உணர்த்தி இத்யாதி. உணர்த்தியறப்பண்ணி நெஞ்சை அபஹரித்ததுக்கு த்ருஷ்டாந்தம் - எதிரிகளுடைய இத்யாதி. மனங்கவர்ந்தானென்னுதே, "என்னை" என்று விசேஷித்ததுக்குஸ்வாரஸ்யம் - கடலை இத்யாதி. ஶரீரத்தைப் பொகட்டு ஸாராம்ஶமானமநஸ்ஸை யபஹரித்ததுக்கு த்ருஷ்டாந்தம் - புழுகூற்றி இத்யாதி- ப்ராந்தியைவிளைத்து ஸாராம்ஶத்தை யபஹரித்ததுக்கு த்ருஷ்டாந்தம் - கொன்று இத்யாதி. கிழிச்சிரை - சாளிகைப் பை. மேலுக்கெல்லாம் அவதாரிகை - மையல்செய்தப்ரகாரங்கள் என்று. "மாமாயன்" என்றுதொடங்கி "விண்ணோர்முதலென்னும்" என்னுமளவுங் கடாக்ஷித்து 'மையல்செய்தப்ரகாரங்கள்' என்றது. "மாயன்" - வ்யாமோஹயுக்தனென்றபடி. மாயமாவதேதென்ன - கலக்கிற இத்யாதி. "மா" என்றதுக்கு ஸ்வாரஸ்யம் - ஸ்வதஸ்ஸித்தமான இத்யாதி. "மா" - மஹத்தான என்றபடி. இத்தால் - பரத்வத்திற்காட்டில் ப்ரணயித்வத்துக்கு ஆதிக்யமுண்டென்றபடி. சிவப்புத்தோற்றுவது வார்த்தையிலேயாகையாலே,வார்த்தை சொல்லும்போதைச்சிவப்பாக விவக்ஷித்த அர்த்தம் - தைர்யபங்கம் இத்யாதி. ஸ்மிதத்தாலேவந்த சிவப்பாக அர்த்தாந்தரம் - ஸவிலாஸ இத்யாதி. "ஸவிலாஸஸ்மிதாதாரம் பிப்ராணம் ஸர்வலக்ஷணம் । தாம்ரோஷ்டம் நவம்வஸ்த்ரம் ஸ்ராயாணம் ஸ்ராம ஸ்ரீவத்ஸலக்ஷிதம்" இதி பஞ்சமேம்ஶே ஸப்தமே அக்ரூரத்ருஷ்ட பகவத்ரூபவர்ணநே. (கஎ-உச). "மணி" என்றதுக்கர்த்தம் புஷ்பம் இத்யாதி. கீழுக்தத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார் - அவ்வாயில் இத்யாதி. இவ்வாயிலென்றது - இவ்விடத்திலென்றபடி. காமினி, அவயவங்களைவிட்டு ஆயுதங்களைச் சொல்லுவானென் ? என்ன - திவ்யாயுதங்கள் இத்யாதி. விவரணம் - உகப்பாரையும் இத்யாதி. அதாவது - மேன்மையாலும் அழகாலும் இருவரையும் அழிக்குமென்றபடி. இவற்றில் ஈடுபடுகைக்கு, இவள் இவற்

'இவள்திறத்தருளாத' என்று பாடாந்தரம்.

பிக்குமவை. முன்னே கைகண்டுவைக்கிறவையிறே. காணவே எதிரிகள்மண்ணுண்ணும்படியான திவ்யாயுதங்களை தரித்திருக்கிற நீ என்விரோதிகளைப்போக்கி முகங்காட்டாதொழிவதே. [விண்ணோர்முதலென்னும்] - திவ்யாயுதங்களோட்டைச் சேர்த்தியால் வந்தஅழகைக்காட்டிநடத்த, அதுவே ஜீவநமாகவாயிற்று அந்நாடு கிடப்பது. இல்லையாகில், அங்கே வினையுண்டாய் தரித்துக்கொண்டிருக்கிறானன்றே. [பைகொளித்யாதி] - ஸ்மிதத்தோடு, திவ்யாயுதங்களோடு, நித்யவிபூதியுக்தனாயிருக்கிறஇருப்போடு, திருவநந்தாழ்வான் மேலே சாய்ந்தருளினத்தோடு வாசியற எல்லாம்உத்தேஶ்யமாயிருக்கிறதாயிற்று. ஹகவத்விக்ரஹஸ்பர்ஶத்தாலுண்டான ஹர்ஷத்தாலே விகஸிதமான ஃபணங்களையுடையனான திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவனே! தனிப்படுக்கையிலேசாய்வதே நீர், இவள் தறைக்கிடைகிடக்க. [இவள்திறத்தருளாய்] - படுக்கையில் சேர்த்திபெறுவிட்டால், நாட்டுக்குப்பண்ணும் அருளுமின்றிக்கே யொழியவேணுமோ? [இவள்திறத்து] - பாடோடிக்கிடக்கிற இவள்திறத்து. [அருளாய்] - அருள்கொள்வார் தேட்டமான நீ, அருள்பெறில் ஜீவிக்குமிவளை இப்படி தறைக்கிடைகிடக்க விட்டுவைப்பதே! (அருளாய் - அருளுகிறீரில்லையென்றபடி.) [பாவியேன்] - நீரருளாதவராயல்ல; இவள்அதுபெறுவிடில் ஜீவிப்பாளாயல்ல; இதுக்கடி நான் பண்ணின பாபமிறே. ‘‘மத்பாபமேவாத்ரநிமித்தமாஸீத்’’ (மத்பாபமேவாத்ரநிமித்தமாஸீத்) என்னுமாபோலே. [செயற்பாலது] - என்னுடைய செயலிடத்தது அருளாமைக்குஅடி; (பாவியேன்செயலிடத்தது - இவள்பக்கலிலும் குறையில்லை, உம்முடைய பக்கலிலும் குறையில்லை, இருவருமானசேர்த்திபெறவிருக்கிற என்பாபமிறே இதுக்கு ஹேது.) (௫)

---

றையறிந்தபடி எங்ஙனே? என்ன - முன்னே இத்யாதி. இது - சாடு; கைகண்டுவைக்கிறவை - அநுஹவித்தவையென்றும், கையிலேகண்டு வைக்கிறவையென்றும்; முன்னே - பூர்வம், ப்ரத்யக்ஷத்திலேயென்றும். திவ்யாயுதங்களுக்கு அநந்தரம் ‘‘விண்ணோர்முதல்’’ என்றதுக்கு ஹாவம் - திவ்யாயுதங்கள் ஒட்டை இத்யாதி. அவர்கள் ஜீவநார்த்தமாகவோ தரிக்கிறதென்ன - இல்லையாகில் இத்யாதி. ப்ரணயிநி ‘‘மாயன்’’ என்றாற்போலே சொல்லாதே, ‘‘விண்ணோர்முதல்’’ என்று நித்யவிபூதியுக்தனான ஆகாரத்தைச் சொன்னதுக்கு ஹாவம் - ஸ்மிதத்தோடு இத்யாதி. ‘‘பைகொள்’’ இத்யாதிக்கு ஶப்தார்த்தம் - ஹகவத் இத்யாதி. இப்பதப்ரயோகத்து ஹாவம் - தனிப்படுக்கையிலே இத்யாதி. ‘‘அருளாய்’’ என்றதுக்குஹாவம் - படுக்கையில் இத்யாதி. ‘‘அருளாய்’’ - அருளுகிறிலை. பாடோடி - து:கத்தோடு. ‘‘பாவியேன்’’ என்றதுக்கு ஹாவம் - நீரருளாதவராய் இத்யாதி. ‘‘மாமாயன்’’ என்று - நிரதிஶய வ்யாமுக்தராகையைப்பற்ற - நீரருளாதவரா யல்ல என்றது. இத்தால் - அருளாதது உம்முடைய பக்கல் குறையல்ல என்றபடி. உம்முடையபக்கலிலே அறிவழிந்தமையைப்பற்ற-இவள்அது பெறவிடில் ஜீவிப்பாளாயல்லஎன்றது. இத்தால்-உம்முடையபக்கல் இவள்அதிமாத்ரப்ரவணையாகையாலே, நீரருளாதது இவள்குறையல்ல என்றபடி. இதுக்குப்ரமாணம் - மத்பாபம் இத்யாதி. ‘‘[illegible] । மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத் [illegible]’’ இத்யயோத்யாகாண்டே ஹரத:. செயலிடத்ததென்றது - கர்மத்திடத்ததென்றபடி: செயலடியான என்னுடைய தோஷமென்றபடி. (௫)

## ஏழாம் பாட்டு.

பாலதுன்பங்களின்பங்கள்படைத்தாய்! பற்றிலார்பற்றநின்றானே!
காலசக்கரத்தாய்!கடலிடங்கொண்டகடல்வண்ணா! கண்ணனே!என்னும்
சேல்கொள் தண்புனல்சூழ்திருவரங்கத்தாய்!என்னும்என்தீர்த்தனே! என்னும்
கோலமாமழைக்கண்பனிமல்கஇருக்கும் என்னுடைக்கோமளக்கொழுந்தே.

ஆ.—(பாலதுன்பங்கள்.) - ஸுகது:க்கங்களை அநுகூலப்ரதிகூலாநுபவ்யமாக நீபண்ணினவ்யவஸ்தையையென்னளவிலே விபர்யஸ்தமாக்கவோ பார்த்தருளிற்றென்றும், உன்னுடையஅஶரண்யஶரண்யத்வம் எங்ஙனே போயிற்றென்றும், ஆஶ்ரிதவிரோதிகளுடைய ஆயுரவஸாநகணநைக ஸ்வபாவமான திருவாழியை ஏந்திக்கொண்டிருக்கிறது அடியேனுக்காகவன்றோ? என்றும், திருப்பாற்கடலிலே வந்துகண்வளர்ந்தருளுகிறதும் ஸ்ரீநந்தகோபர் திருவவதாரம்பண்ணியருளினதும் கோயிலிலே வந்துகண்வளர்ந்தருளுகிறதும் ஆஶ்ரிதார்த்தமாகவன்றோ? என்றும், த்வத்தூநக,ராகபோஷக போக்யத்வ விரோதியாய் மத்கதமான அஶேஷதோஷங்களையும் போக்கிறபோலே, த்வத்ஸமஶ்லே ... ரோதுயான என்னுடைய பாபங்களையும்போக்கியருளாயென்றும் விக்கொண்டு, பிரிவென்னும் சொல்லுக்கூடப் பொறுக்கமாட்டாதபடி ம்ருதுஸ்வபாவையான என்னுடைய பெண்பிள்ளை தன்னுடைய அழகியகண்கள் நீர்மல்கவிருக்கும் என்கிறாள்.

ஒ.— ஏழாம்பாட்டில், அவ்வவபதார்த்தங்களை அநுஸந்தித்து அவைபொறுக்குமளவுகளிலேயன்றோ ஸுகது:க்கங்களைச் சுமத்துவது; இப்படி என்னைப்படுத்தலாமோ? என்றுநின்றாள் என்கிறாள். ஆஶ்ரிதரைவாழ்விக்கையும் அநாஶ்ரிதரை து:க்கப்படுத்துகையுமன்றிக்கே மற்றைப்படியே ஆயிற்றே உம்முடையபடி? என்றுநின்றாள் என்றுமாம். [பாலவென்றுதொடங்கி] - இடம்அறிந்து ஸுகது:க்கங்களைப் படைத்தவனே! [பற்றிலார்பற்றநின்றானே] - தந்தாமுக்கே சிலநன்மை இல்லாதாரை விஷயீகரிக்கக்கடவதோ? என்னில், அபராதமேயாய்த் தங்களுக்கு ஒருபற்றும்இன்றிக்கே இருக்கிற ஜயந்தன்போல்வார்க்கும் ஆஶ்ரயிக்கலாம்படியான நீர்மையையுடையவன் அல்லையோ? [காலசக்கரத்தாய்] - காலத்தைநடத்தும் திருவாழியை உடையவனே! விஷயீகரிக்கக்காலமாக வேணுமோ? என்னில்; காலதத்வமும் நீ இட்டவழக்கன்றோ? என்றுமாம். [கடலென்று தொடங்கி] - ஒருகடல்ஒருகடலிலே சாய்ந்தாற்போலே ஆஶ்ரிதாநுக்ரஹார்த்தமாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளி அங்குவரமாட்டாதார்க்கும் ஆஶ்ரயணீயனைக் கொண்டு ஸ்ரீநந்தகோபர் திருமகனாய்வந்து திருஅவதாரம் பண்ணியருளி அங்குஉதவாதார்க்கும் இழக்கவேண்டாதபடி மத்ஸ்யாதிகளும் அகப்படத் தந்தாமுடைய யாரகங்களை இழவாதே பூஜிக்கலாம்படியான கோயிலிலேவந்து நித்யஸந்நிஹிதனாய் இருக்கிறாய் அல்லையோ? என்னும். [என்தீர்த்தனேஎன்னும்]-உன்னுடைய போக்யதாதிஶயத்தினாலே உன்னையல்லதுசெல்லாதபடி என்னைப்பண்ணினவனே! என்னும். நான்இழிந்தாடும்துறையேஎன்றுமாம். [கோலமா மழைக்கண்பனிமல்கஇருக்கும்] - அழகியதாய்ப் பெருத்து ஶ்ரமஹரமான கண் நீர்மல்க இராநின்றாள். இவ்வழகு போக்தாவானவன் பூஜிக்கப்பெறுமையாலே காட்டில்எறித்த நிலாவாகாநின்றது என்று திருத்தாயார்க்குக்

கருத்து. [என்னுடைக்கோமளக் கொழுந்தே] - விஶ்லேஷது:கம் அநுபவிக்கைக்குப் பாத்தமில்லாதபடி மிகவும்பாலையான என்மகள்.

ப.—அநந்தரம், ஆஶ்ரித ஸம்ரக்ஷணார்த்தமான அர்ணவஶாயித்வாதி குணங்களை யுடையவன் ஸ்வபாவங்களைச்சொல்லி க்லேசியாநின்றாளென்கிறாள்.

என்னுடை - என்னுடைய, கோமளம் - ம்ருதுஸ்வபாவமான, கொழுந்து - லதாக்ரம்போலே மெல்லியளாயிருக்கிறஇவள், பால - இடந்தோறுமிடந்தோறும், துன்பங்கள் - அநாஶ்ரிதவிஷயத்திலே துன்பங்களையும், இன்பங்கள் - ஆஶ்ரிதரிடத்திலே இன்பங்களையும், படைத்தாய் - உண்டாக்கினவனாய்; (எத்தனையேனும் அபராதிகளாயும்), பற்று - புறம்புபற்று, இலார் - அற்றாரான ஜயந்தன்போல்வாரும், பற்ற - பற்றும்படி, நின்றானே - அஶரண்யஶரண்யனாயிருப்பானாய், காலசக்கரத்தாய் - (ஆஶ்ரிதருடைய ப்ராப்திகாலம் நீ யிட்டவழக்காம்படி மாஸருதுவத்ஸராதி பரிவ்ருத்தியையுடைத்தான) காலசக்கரத்துக்கு நிர்வாஹகனாய்க்கொண்டு, (ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக), கடல் - திருப்பாற்கடலிலே, கடல்வண்ணா - கடலிலேயொருகடல் சாய்ந்தாற்போலே, இடங்கொண்ட-கண்வளர்ந்தருளுமவனாய், (க்ஷீரார்ணவநிகேதனனான அந்தவாகாரத்தை விட்டு), கண்ணனே - ரக்ஷணார்த்தமாகக்ருஷ்ணனாய்வந்தவனே! என்னும் - என்னும்; (அதுக்கும்பிற்பட்டார்க்காக), சேல் - சேல்களை, கொள் - உடைத்தான, தண்-குளிர்ந்த, புனல் - புனல், சூழ் - சூழ்ந்த, திருவரங்கத்தாய் - கோயிலிலேஸந்நிஹிதனானவனே! என்னும் - என்னும்; (அந்த சௌலப்யத்தாலே), என்-நான் அவகாஹிக்கைக்கு, தீர்த்தனே - துறையானவனே, என்னும் - என்னும்; (இவ்வார்த்தசத்வஙியில்வரக்காணாமையாலே), கோலம் - தர்ஶநீயமாய், மா - பெருத்து, மழை - குளிர்ந்த, கண் - கண்ணானது, பனி - நீர், மல்க - விஞ்சும்படி, இருக்கும் - நிர்வ்யாபாரையாய் நிற்கும். இப்பாட்டு - திருத்தாயார்வார்த்தையான முன்னிலையில்லாமையாலே, அவள் தன்னுடைய உட்கொண்டிரங்குதல். அன்றியே, 'கடல்வண்ணா' என்னுமளவும் - தாய்வார்த்தையான நாயகன் முன்னிலையாய், 'கண்ணனே' என்று தொடங்கி நாயகிடாசுரத்தைச்சொன்னாளாகவுமாம்.

இ.—ஏழாம்பாட்டில், ஆஶ்ரயங்களை அநுஸந்தித்து, பொறுக்குமளவிலேயன்றோ து:கங்களைச்சுமத்துவது? இப்படி என்னைப்படுத்தலாமோ? என்னாநின்றாள் என்கிறாள். ஆஶ்ரிதரை வாழ்விக்கையும் அநாஶ்ரிதரை நலிகையுமன்றிக்கே, இப்போது விபரீதமாயிற்றே உம்முடையபடி? என்னாநின்றாள் என்றுமாம். இக்கோமளக்கொழுந்துக்கு, கைம்முதல் ஒன்றும் இல்லாதார்பற்றினால் ரக்ஷிக்கும் நீர்மையையுடையவன் ஸந்நிதியிலே இதெல்லாம்படவேண்டுகிறது என்னோட்டை ஸம்பந்தம் என்று மநோரதிக்கிறாள். [பாலதுன்பம்இத்யாதி] - இடமறிந்து ஸுகது:கங்களைப் படைத்தவனே! பாலவாக - ஸ்தாநே ஸ்தாநே ஆக. பிரிந்தார்எல்லாரும் அநுபவிக்கும்இத்தை இவள்ஒருத்தியையும் அநுபவிப்பிக்கப்பார்த்தால் இவளால் பொறுக்கப்போமோ? அங்ஙனன்றிக்கே, ஆஶ்ரிதர்வாழ்வும் அநாஶ்ரிதர் கெடும்படியாகவும் அன்றோ பண்ணினவத்தது. தீமையுன்னடியார்க்குத் தீர்த்து அசுரர்க்குத் தீமைகள் செய்யுமவனன்றோ? பண்டுகட்டின மர்யாதையும் இல்லையோஇவளுக்கு? அபாயங்கள் கனத்துத் தந்தாமுக்கென்ன ஒரு கைம்முதல் இல்லாதாரை விஷயீகரிக்கக்கடவதோ என்னில்; [பற்றிலார்பற்றநின்றானே]-

அபாரப்ரமேயராய் ஸுக்ருதலேசமும் இல்லாத ஜயந்தன்போல்வார்க்கும் லாம் படியன்றோ உம்முடைய நீர்மை? "ஸவிதூரவேசித் க்ருதஃ". [காலசக்கரத்தாய்]-விஷயிகரிக்கக் காலமாகவேணுமே என்ன, காலதத்வம் நீ இட்டவழக்கன்றோ? ஆஸ்ரிதர்க்காகப் பகலை இரவாக்கினவன் அன்றோ? அங்ஙனன்றிக்கே, ப்ரதிபந்தகமுண்டு காணும் என்ன; ப்ரதி-கூலத்துக்கும் ருத்புவானதிருவாழியையிலேயிருக்க ப்ரதிபந்தகமுண்டோ? நாம்அஸந்நிஹிதர் அன்றோ? என்ன, [கடலிடங்கொண்ட கடல்வண்ணா]-நீ எங்களைக்காலம் பார்த்தன்றோ கிடக்கிறது? ஒருகடல் ஒருகடலிலே சாய்ந்தாற்போலே, அணித்தாகத் திருப்பாற்கடலிலே சாய்ந்திலையோ? அவ்வளவு வரவல்லார்க்கேயென்ன, [கண்ணனே என்னும்]-அஸக்தரான இடையர்க்கும் இடைச்சிகளுக்கும் கூடிஷ ணுவ்வந்து உதவிற்றிலையோ? "நாமவாங்க ஈஜுஹ்வாமடிதா ப்ரதிபாலக:" அதுதப்பிற்றிறே என்ன, [சேல்கொள்இத்யாதி]-மத்ஸ்யாதிகளுக்கும் தந்தாமுடைய யாபகாதிகள் இழவாதபடியான கோயிலிலே நித்யஸந்நிஹிதன் அல்லையோ? என்னும். உம்மாலல்லது தரிக்கமாட்டாதஇவள் இப்படிபடக்கடவளோ? "ஜீவாநுத்ரவிவொநுவதீள" என்றிருக்குமவளிறேஇவள். [என்தீர்த்தனேஎன்னும்]-புறம்புள்ளாரோடு பொருந்தாதபடியாக்கின ஸௌத்தியோகத்தைச் சொல்லுதல், உன்னைச்சொல்லிக் கூப்பிடும்படி பண்ணினவன் என்னுதல். தண்புனல் என்று-புனல் ப்ரஸ்துதமாகையாலே, நான் இழிந்தாடும்துறை என்னுதல். [கோலமாமழைக் கண்பனிமல்கவிருக்கும்]-ஸ்ரீமதீயமாய்ப்பரந்து ஸ்ரமஹரமான கண்ணீர்மல்கவிராநின்றாள். கண்ணும் கண்ணநீருமாயிருக்கிற இவ்வழக்குக்கு ஜோக்தாவாயிருக்கிறவன் க்ருஷிபண்ணி, ஸலவேளையிலே எனக்கு இரையாக்குவதே. [என்னுடைக்கோமளக் கொழுந்தே]-ஸம்ஸ்லேஷமும் பெறாத இவளுக்கு விஸ்லேஷத்தை விளைப்பதே. [கொழுந்தே]-உபக்ரமதேட்டமானவளவிலே தறையிலேபடாவிடுவதே! "வதிஸம்யொமவஸாஜ்ஜம்வய:". இப்பாட்டில், ஒருதலைக்கட்டின்றிக்கேயிருக்குமதுக்குக் கருத்து - "'பரிஹரிக்கும் எல்லைகழிந்தாள். நாம் இவர்க்குச் சொல்லுவதென்?' என்று தன்னிலே நோவுபடுகிறாள்" என்று வங்கிப்புரத்துநம்பி பணிக்கும்.

ஈடு.—ஏழாம்பாட்டு. ஆஸ்ரயங்களை யநுஸந்தித்து, பொறுக்குமளவுகளிலேயன்றோ ஸுகதுஃகங்களைச் சுமத்துவது? இப்படி என்னைப்படுத்தலாமோ என்று நின்றாளென்கிறாள். "ஆஸ்ரிதரைவாழ்விக்கையும் அநாஸ்ரிதரை நலிகையுமன்றிக்கே, இப்போது விபரீதமாயிற்றே உம்முடையபடி என்கிறாள்" என்றுபிள்ளான். இக்கோமளக்கொழுந்துக்கு, கைம்முதலொன்றுமில்லாதார் பற்றினால் ரக்ஷிக்கக்கடவ நீர்மையுடைய

---

ஏழாம்பாட்டு-பாலஇத்யாதி. 'இக்கோமளக்கொழுந்துக்கு' இத்யாதிவாக்யத்தை "என்னுடைக்கோமளக்கொழுந்து" என்றதையும், "பற்றிலார்பற்றநின்றானே" என்றதையும் கடாக்ஷித்துப் பாட்டுக்கவதாரிகையாக மூந்தறஅநுஸந்தித்து, அநந்தரம், 'ஆஸ்ரயங்களை' இத்யாதி வாக்யத்வயத்தையும் - "பாலதுன்பங்களின்பங்கள் படைத்தாய்" என்றதின் அர்த்தத்வயாநுகுணமாக, பதாவதாரிகையாகவாதல் தாத்பர்யமாகவாதல் அநுஸந்திப்பது. யத்வா. "பாலதுன்பங்களின்பங்கள் படைத்தாய்" என்கிறபதத்திலே நோக்காக - அதின் அர்த்தத்வயாநுகுணமாக இரண்டவதாரிகையும், "என்னுடைக்கோமளக்கொழுந்து - கோலமாமழைக்கண்பனிமல்கவிருக்கும், பற்றிலார்பற்றநின்றானே" என்கிற பதங்களிலே நோக்காக ஓர்அவதாரிகையும் ஆக, மூன்றவதாரிகையும் க்ரமேண அருளிச்செய்கிறார் - ஆஸ்ரயங்களை இத்யாதி வாக்யத்ரயத்தாலே என்னுதல். ஆஸ்ரயங்களையநுஸந்தித்தென்றது - அவர்களவர்களளவுகளை யநுசந்தித்தென்றபடி. பொறுக்கத்தக்கவர்களை விசாரித்தென்றபடி. இப்போது

வன் ஸந்நிதியிலே இதெல்லாம் படவேண்டுகிறது, என்னோட்டை ஸம்பந்தமென்று மநோ ரதிக்கிறாள்.

[பாலஇத்யாதி] - இடமறிந்து ஸுகதுக்கங்களைப்படைத்தவனே! பாலென்றது - இடமென்றபடி; அப்பாலிப்பாலென்றால் - அவ்விடமிவ்விடமென்றபடி. பாலவாக- ஸ்த்தாநேஸ்த்தாநேயாக. உம்மைப்பிரிந்தார் எல்லாரும் அநுபவிக்கும் துக்கத்தை இவளொருத்தியை அநுபவிக்கப்பார்த்தால் இவளால் பொறுக்கப்போமோ? அங்ஙனன்றிக்கே, ஆச்ரிதர்வாழவும் அநாச்ரிதர் கெடும்படியாகவுமன்றோ நீபண்ணிவைத்தது? பாலென்பது - முறை. செய்குந்தா வருந்தீமை யுன்னடியார்க்குத்தீர்த்து அசுரர்க்குத் தீமைகள் செய்குந்த னன்றோ. பண்டுகட்டின மர்யாதையும்இவளுக்கில்லையோ? பாலென்று-பாகமும், இயல்வும், இடமும், ந்யாயமும், இவைநாலுக்கும் பேர். தந்தாமால் பொறுக்கவொண்ணாதவை தாந்தாமே ஏறிட்டுக்கொள்ளும்போது நம்மால் செய்யலாவதுண்டோ? நம்பக்கல் குறையில்லை, பேறு தந்தாமதானால் தாங்களும் சிலசெய்யவேணுமென்று அவனுக்குக்கருத்தாக, [பற்றிலார்பற்றநின்றானே] - ஒருகைம்முதலில்லாதார்க்காகவன்றோ இங்குவந்து சாய்ந்தருளிற்று? இக்கிடை நித்யசூரிகளுக்காகவோ? உம்முடைய பக்கல்பற்றறுத்துக்கொண்ட ஐயந் தன்போல்வார்க்கும் பற்றாயிருக்கும்அவரன்றோநீர்! 'தமேவ சரணம் கத:'(தமேவசரணங் கத:)அன்றோ? அதுஉண்டானாலும்அதுக்கோருகாலமுண்டேஎன்ன, [காலசக்கரத்தாய்]-அக் காலசக்கரம் நீயிட்ட வழக்கன்றோ? ஆச்ரிதர்க்காகப் பகலையிரவாக்கினவனன்றோ? அன்

---

விபரீதமாகையாவது - ஆஸ்ரிதையான இவளை துக்கம்அநுபவிப்பிக்கை. மநோரதிக்கிறாளென் - ஸ்வகதமாக எண்ணுகிறாளென்றபடி.

ஸப்தார்த்தம் - இடமறிந்துஇத்யாதி. "பால்" என்றால் - இடத்தைச் சொல்லுமோ? என்ன, லௌகிகப்ரயோகம் - அப்பால் இத்யாதி. பாலதுன்பங்களின்பங்கள்படைத்தாய்" என்கிற தலைமகள் வார்த்தையை அநுவதிக்கிற திருத்தாயாருடைய ஹார்த்தபாவம் - உம்மைப்பிரிந்தார் இத்யாதி. "பாலதுன்பங்கள்" இத்யாதி - திருத்தாயார் வார்த்தையாகில், 'மூகம்பாராதே வார்த்தை சொல்லுகிறாள்' என்கிற மேலில் வாக்யத்தோடே விரோதிக்கும். 'இப்படி யென்னைப்படுத்தலாமோ என்னாநின்றாள்' என்கையாலே - தலைமகள்வார்த்தை யென்னுமிடம் ஸ்புடமிறே. அர்த்தாந்தரம் - அங்ஙனன்றிக்கே ஆஸ்ரிதர் இத்யாதி. "பால்" என்றால் - இவ்வாகாரத்வயத்தையுங் காட்டுமோ? என்ன - பாலென்பது முறை என்று. கீழ்ச்சொன்ன ஆகாரத்வயத்துக்கும் ப்ரமாணம் - செய்குந்தா இத்யாதி. ஆக "பால" இத்யாதிக்கு - பொறுக்கத்தக்க இடமறிந்து தத்தத் ஸ்த்தாநங்களிலே ஸுக துக்கங்களைப் படைத்தவனே யென்று முந்தினவர்த்தம்; பால - பொறுக்கத்தக்க இடங்களிலே யென்று ஸப்தார்த்தம்; 'அறிந்து' என்றது - அர்த்தாத்ஸித்தம். ஆஸ்ரிதரான முறையிலே ஸுகத்தையும் அநாஸ்ரிதரானமுறையிலே துக்கத்தையும் படைத்தவனே என்றிரண்டாமர்த்தம். இரண்டாம் அர்த்தத்துக்குச் சேர ஹார்த்தபாவம்-பண்டுகட்டின இத்யாதி. "பால் என்றால் - இடத்தையும் முறையையுங்காட்டுமோ? என்ன - பாலென்று இத்யாதி. ந்யாயம் - முறை. கீழ்ப்பதத்தில் அர்த்தத்வயாநுகுணமாக மேலுக்கவதாரிகாத்வயம் - தந்தாமால் இத்யாதிவாக்யத்வயம். த்விதீயசங்கதிக்குஉத்தரம் - ஒருகைம்முதல்இத்யாதிவாக்யத்வயம். ப்ரதமஸங்கதிக்குஉத்தரம் - உம்முடையபக்கல் இத்யாதி. ஐயந் தன் பற்றினானே? என்ன, ப்ரமாணம் - தமேவஇத்யாதி. "ஸவித்ராவவரிதஸ்த:" இத்யாதி. 'ஐயந்தன்போல்வார்க்கும்' இத்யாதிக்குஅநுகுணமாகஸங்கதி-அதுஉண்டானாலும்இத்யாதி. அதுண்டானாலும் - ஸாபராதர்க்கும் ப[illegible]உண்டானாலும் என்றபடி அப்படி காலம் நானிட்டவழக்காக விநியோகங்கொள்ளக் கண்ட[illegible]டோ? என்ன - ஆஸ்[illegible]காகஇத்யா[illegible] 'ஒருகைம்முதலில்லாதார்" இத்யாதிக்கநுகுணமாக ஸங்கதி - அன்றிக்கேஇத்யாதி. "காலம்" என்று - காலத்தையும், ம்ருத்யுவையும் சொல்லுகிறது. காலசக்ரநிர்வாஹகன் என்று முந்தினஅர்த்தம், ம்ருத்யுவான

றிக்கே, ப்ரதிவந்யகமுண்டே யென்னில்; ப்ரதிவந்யகத்துக்கு ம்ருத்யுவானதிருவாழி யன்றே யரித்திருக்கிறது. பரிகரமுண்டானாலும் நான் தூரஸ்த்தனன்றோ என்னவொண்ணுதே! [கடலிடங்கொண்ட கடல்வண்ணு] - நீ எங்களைக் காலம்பார்த்தன்றோ கிட்டக் கிடக்கிறது. ஒருகடல் ஒருகடலிலே சாய்ந்தாற்போலே அணைந்தாகத் திருப்பாற்கடலிலே சாய்ந்திலையோ? ஆனால் அங்கேவரலாகாதோ? என்ன; அவ்வலையலைக் கேட்கமாட்டாத இடையர்க்கும்இடைச்சிகளுக்குமாகக்ருஷ்ணனாய்வந்துஉதவிற்றிலையோ? என்கிறாள். [கண்ணனேயென்னும்] - "நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்யஹ்யாகதோ மதுராம்புரீம்" (நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்யஹ்யாகதோ மதுராம்டரீம்) என்று அக்கிடையைவிட்டு இடையிலே வந்து உதவிற்றிலையோ?அது தப்பிற்றிறே என்ன, அவ்வவதாரம் பரத்வமென்னும்படியன்றே கோயிலிலேவந்து சாய்ந்தருளிற்று? [சேல்கொளித்யாதி] - 'ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ' (ஜலாந்மத்ஸ்யாவிவ)† அன்றே;ஜலசரஸத்த்வங்கள்ஜலத்தைப்பிரிந்து யரிக்கிலன்றோ இவள் உம்மைப்பிரிந்து யரிக்கவல்லளாவது? அவ்வூரிலே வர்த்திக்கிற உமக்குப்போருமோ இவளுக்குமுகங்காட்டாதொழிகிறவிடம். [என்தீர்த்தனேயென்னும்] - நீ உபேக்ஷித்தாலும் உன்னையொழிய எனக்குச்செல்லாதபடிபண்ணினவனே! என்னுதல்; (புறம்புள்ளாரோடுபோருந்தாதபடியான சுத்தியோகத்தைச்சொல்லுதல்;) நான்இழிந்தாடும் துறையென்னுதல். [கோலமித்யாதி] - தர்சநீயமாய்ப்பரந்து ஸ்ரமஹரமான கண் நீர்மல்க இராநின்றாள். கண்ணும் கண்ணநீருமான அழகு காட்டிலேறித்த நிலாவாவதே! இக்கண்ணநீருக்கு ஸாதநாநுஷ்டாநத்தைப்பண்ணி பலவேளையிலே யிழப்பதே! [என்னுடைக்கோமளக்கொழுந்தே] - கலக்கப்பொறாத மார்த்தவத்தையுடையவள் பிரியப்பொறுக்குமோ? "உகை முறகினால் வைத்யர் கண் முகம்பாராதாப்போலே, மகளவஸ்தையைக்கண்டு தளர்ந்து பெரியபெரு

சக்ராத்தையுடையவன் என்று இரண்டாமர்த்தம். "காலசக்கரத்தாய்" என்றதின் முந்தின அர்த்தத்தால் பலிதம்-ஆஸ்ரிதர்அபேக்ஷாகாலமே ரக்ஷிக்கைக்குக் காலமென்றும், 'அப்படி ஆஸ்ரிதர் அபேக்ஷா காலம் பார்த்திருந்த இடமுண்டோ? என்ன என்று ஸங்கதியை விகஸித்த ஸாவாந்தரம் - நீஎங்களைஇத்யாதி. "கடல்வண்ணு" என்னுதே, "கடலிடங்கொண்ட" என்று விசேஷித்ததுக்கு ஸாவம் - ஒருகடல்இத்யாதி. 'அவ்வலையலைக்கேட்கமாட்டாத' என்றவிடத்திலே - ஏக தத்வதத்ரிதர்கள் கதையை நினைப்பது. 'அலையலை' அலையென்று - ஸப்தமாய், அலையலையென்று, பஹுசப்தமென்றபடி. கடலிடங்கொண்டவனே கண்ணனுகவந்தான்? என்ன, ப்ரமாணம் - நாகபர்யங்கம் இத்யாதி. "ஸஷ நாராயணஸ்ரீமாநுக்ஷீரார்ணவநிகேதந:" இத்யாதி. (ஹரி-113-62)

இடையிலே - மத்யே, இடையரிலே என்றும். "சேல்கொள்" இத்யாதி பதப்ரயோகத்துக்கு ஸாவம் - ஜலாந்இத்யாதி வாக்யத்வயம். "திருவரங்கத்தாய்" என்றதுக்கு ஸாவம் - அவ்வூரிலேஇத்யாதி. "தீர்த்தன்" என்றதுக்கு முந்தினவர்த்தம் - பாவநத்வத்தைப் பற்ற; இரண்டாவது - ஸௌலப்யத்தைப் பற்ற. முந்தினவர்த்தத்துக்கு ஸப்தநிர்வாஹம், தீர்த்தன் - உனக்கே அற்றுத்தீரப்பண்ணினவனே என்று; இரண்டாமர்த்தத்துக்கு, இழிந்தாடும் துறைபோலே ஸுலபனாயிருக்கிறவனே என்று. மழை - குளிர்த்தி. "கோலமாமழைக்கண்" இத்யாதி பதப்ரயோகத்துக்கு ஸாவம் - கண்ணும் கண்ணநீரும்இத்யாதி வாக்யத்வயம். "தண்புனல்சூழ்திருவரங்கத்தாய்" என்றத்தைப்பற்ற - ஸாதநாநுஷ்டாநத்தைப்பண்ணி என்றது. "கோமளம்" என்றதுக்கு ஸாவம் - கலக்கஇத்யாதி. கலக்கப்பொறாத - ஸ்லாலிங்கநார்த்தமாக இட்டணைக்கவும் பொறாத என்றபடி. கீழ்ப்பாட்டுக்களிற்போலே "திருவரங்கத்தாய்" என்று அவனை ஸம்போதியாதே, ஸ்வகதமாகச் சொல்லுகிறதுக்கு ஸாவம் - த்யாதி. 'அருளிச்செய்வர்'—சீயர் என்றத்யாஹார்யம். "கொழுந்து" என்றதுக்கு

† இதன் விவரம் இத்திருவாய்மொழியின் இறுதியில் காண்க.

மாள்முகம் பாராதேவார்த்தை சொல்லுகிறாள்'' என்றருளிச்செய்வர். [கொழுந்து] - உபக்ரம் தேட்டமானவளவிலே தறையிலேபடர விடுவதே. “ வ திஸம்யோகஸாலபம்வயஃ'' (பதிஸம்யோகஸுலபம்வயஃ). இப்பாட்டிலொருதலைக்கட்டின்றிக்கே யிருக்குமிதுக்குக் கருத்து “பரிஹரிக்கும் எல்லைகழிந்தாள், நாம்இவர்க்குச் சொல்லுவதென்? என்று தன்னிலேநோவுபடுகிறாள்'' என்று, வங்கிப்புரத்து நம்பிபணிக்கும். (எ)

---

## எட்டாம் பா

---

**கொழுந்துவானவர்கட்கு!என்னும்குன்றேந்திக்கோநிரைகாத்தவன்! என்னும்**
**அழுந்தொழும்ஆவியனலவெவ்வுயிர்க்கும்அஞ்சனவண்ணனே!என்னும்**
**எழுந்துமேல்நோக்கியிமைப்பிலளிருக்கும்எங்ஙனேநோக்குகேன்?என்னும்**
**செழுந்தடம்புனல்சூழ்திருவரங்கத்தாய்!என்செய்கேன்என்திருமகட்கே.**

ஆ.—(கொழுந்து.) - ஸ்ரீவைகுண்டநிலயனாய் அயர்வறும் அமரர்களதிபதியாய் அவாப்தஸமஸ்தகாமனா யிருந்துவைத்து, கோபவேஷபூஷிதனாய்க்கொண்டு பிறந்தருளி, வர்ஷத்தினாலே அதிபீட்யமானமான கோப கோபீஜனங்களையும் பசுக்களையும் ஸ்ரீகோவர்த்தநத்தையெடுத்து ரக்ஷித்தருளின உன்னுடைய நிரவதிகமான காருண்ய குணத்துக்குங்கூட விஷயமல்லேனோ? என்னும். பின்னையும், நீபார்த்தருளாதொழிந்தவாறே அழாநிற்கும். தன்னுடைய அபேக்ஷிதம்பெறுகைக்காக உன்னைத்தொழாநிற்கும். தன்னுடைய ஆத்மஸ்வரூபம் அங்காரமயமாம்படி தீர்க்கோஷ்ணநிஶ்வாஸத்தைப்பண்ணும். என்னுடையஸந்தாபமெல்லாம் போம்படி, உன்னுடைய அதிசீதளமான அஞ்சனமேனியைக் காட்டியருளாய்என்னும். நீ வரும்படி காணவேணுமென்று எழுந்திருந்து அநிமிஷலோசனையாய் ஆகாசத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும். அங்குக்காணாதொழிந்தவாறே உன்னைக் காண்கைக்கு உபாயம் ஏதோ? என்னும். செழுந்தடம்புனல்சூழ் திருவரங்கத்தாய்! என்திருமகட்கு இனி நான்செய்வதென்? என்று கூப்பிடுகிறாள்.

ஒ.—எட்டாம்பாட்டில், இவளுக்கு மேன்மேலென வருகிற நோவுகள் தீர்க்கைக்கு நான் செய்வதென்? என்கிறாள்.

[கொழுந்தென்று தொடங்கி] - அயர்வறுமமரர்களுக்கு அதிபதியாயிருந்துவைத்து க்ருஷ்ணனாய் வந்து திருவவதாரம்பண்ணியருளி கோவர்த்தநோத்தரணம் பண்ணி பசுநிரை மேய்த்தவன்கிடீர் என்னுடைய ஆர்த்தி போக்காதொழிகிறான் என்று சொல்ல உபக்ரமித்து நடுவேஇளைத்துப் பின்னையும் வார்த்தை ஒருபடி தலைக்கட்டும், இப்படி எல்லார்க்கும் ரக்ஷகனாயிருக்கிற இவன் தன்னாலல்லது செல்லாத என்னுடைய

---

ஹாவம் - உபக்ரம்இத்யாதி. “கொழுந்து'' என்றதுக்கு ப்ரமாணம் - 'வதி' இத்யாதி. “வதிஸம்யோகஸுலபம் வயோத்ருஷ்ட்வாசஜாநகீ। விஜ்ஞாணபூர்வமதஃபோரம் நாஸலாதாவ்வோபயா'' இதி அநஸூயாம்ப்ரதி ஸீதா (ரா - அ - 118—34). “உசைமுரறகிறல்'' இத்யாதி வாக்யவிவரணமாதல், க்ரியாபதமில்லாமைக்குஹாவமாதல் - இப்பாட்டில்இத்யாதி. தலைக்கட்டு - க்ரியாபதம். “கோலமாமழைக்கண்'' இத்யாதிக்கு - ஊர்ஸமீயமாய்ப் பெருத்துக்குளிர்ந்த கண்ணீர் விஞ்சும்படி நிர்வ்யாபாரையாயிராநிற்கும்'' என்று உரையில் ஸப்தார்த்தம். (எ)

ஆர்த்தியைத்தீர்த்திலன் என்று தன்இன்னாப்பாலே அழும். ப்ருகோபநிஷத்கரைப் போலே தன்னுடைய அபேக்ஷிதஸித்யர்த்தமாகத் தொழுவதும் செய்யும். தொழுதவிடத்திலும் நீர்வரக்காணாமையாலே ஆத்மதத்த்வமெல்லாம் நெருப்பாம்படி நெடுமூச்செறியும். என்னுடைய விரஹாக்நி அவியலாம்படி உன்னுடைய ஸ்ரமஹரமான நிறத்தோடே வந்து தோற்றவல்லையே என்னும். தன்னுடைய ஆர்த்தத்வநிவ்ருத்தியே வருகிறாய் என்று அத்யவஸித்து உன்னுடைய ஸர்வபரிஸ்பந்தமும் காணலாம்படி எழுந்து மேலே பார்த்து இமைகொட்டாதே இருக்கும்; பின்னையும் தோற்றாதொழிந்தவாறே உன்னை நான் காணும் விரகென்? என்னும். [செழுந்தடமென்று தொடங்கி] - அழகிய மிக்க நீர்சூழ்ந்து இருந்துள்ள கோயிலே இடமாக உடையவனே! லக்ஷ்மீ ஸமையான என்னுடைய மகள், அந்த ஸ்ரமஹரமான தேஹாத்திலேவந்து புரிக்கைக்கு நான் என்செய்வேன்?

ப.—அநந்தரம்,உன்னுடைய அதிமாநுஷசேஷ்டிதத்திலே யகப்பட்டு மேன்மேலன க்லிஷ்டையாகிற இவளுக்கு என்செய்வேன்? என்கிறாள்.

வானவர்கட்கு - நித்யஸூரிகளுக்கு, கொழுந்து - சிரோபூதனானவன், என்னும் - என்னும்; (அந்தமேன்மையோடேகூட ஆஸ்ரிதரக்ஷணார்த்தமாக அவதரித்து), குன்று - மலையை, ஏந்தி - அநாயாஸேநஏந்தி, கோநிரை - பசுக்களை, காத்தவன் - ரக்ஷித்தஅதிமாநுஷசேஷ்டிதத்தையுடையவனே! என்னும் - என்னும்; (அந்தரக்ஷணம் தன்னளவிலேஷமியாமையாலே), அழும் - பக்திபரவசரைப்போலே கண்ணும் கண்ணநீருமாயிருக்கும்; தொழும் - ப்ரபந்நரைப்போலே அஞ்சலிபந்தம்பண்ணாநிற்கும்; (இரண்டும்பலியாமையாலே), ஆவி-அநாஹ்பமான ஆத்மவஸ்து, அனல் - தக்தமாம்படி, வெவ் - வெவ்விதாக, உயிர்க்கும் - மூச்சுவிடும்; அஞ்சனவண்ணனே - இப்படியார்த்தையாக்கின ஸ்யாமளவிக்ரஹத்தையுடையவனே! என்னும் - என்னும்; ("இக்குரலைக்கேட்டுவரக்கூடும்" என்று,) மேல் - மேலே, எழுந்து - தலையெடுத்து, நோக்கி - பார்த்து, இமைப்பிலள் - இமையாதே, இருக்கும் - இருக்கும்; எங்ஙனே - எந்தப்ரகாரத்தாலே, நோக்குகேன் - உன்னைக்காண்பேன்? என்னும் - என்னும்; செழு - ஸ்ரீமத்பமாய், தடம் - பெருத்த, புனல் - புனல், சூழ் - சூழ்ந்த, திருவரங்கத்தாய் - கோயிலிலேஸந்நிஹிதனானவனே! என் - என்னுடைய, திருமகட்கு - லக்ஷ்மீஸமானையான இவளுக்கு, என் - எத்தை, செய்கேன் - செய்வேன்? ஆர்த்திக்குஅடியான ப்ரேமத்தை அளவுபடுத்துவேனோ? வாராதஉன்னை வரப்பண்ணுவேனோ? இரண்டும் முடியாதிறே என்று கருத்து.

இ.—எட்டாம்பாட்டில், இவளுக்கு மேன்மேலும் வருகிறநோவுகள் தீர்க்கைக்கு நான் செய்வதென்? என்கிறாள்.

[கொழுந்துவானவர்கட்கென்னும்] - அயர்வறுமமரர்களுக்குத் தலைஎன்னும். [குன்றேந்திக்கோநிரைகாத்தவன் என்னும்] - அம்மேன்மைபாராதே க்ருஷ்ணனாய் வந்து அவதரித்து, இடையர்க்கும் பசுக்களுக்கும் நலிவு வாராமல் மலையைஎடுத்து நோக்கினவன் என்னும். நித்யஸூரிகள் பரிய இருக்கிறவன்கிடீர் பசுக்களுக்கும் இடையர்க்கும்தான் பரிவான் ஆகிறான். நித்யஸூரிகள்வேராய்த் தான் கொழுந்தாய் ஆயிற்று இருப்பது. நித்யஸூரிகள் ப்ரேமம் இவளுக்கு உண்டாகையாலும் இழக்கவேண்டா; பசுக்களுடைய வெறுமை உண்டாகையாலும் இழக்கவேண்டா. குன்

றெடுத்து என்னாதே, ஏந்திஎன்றது - ஆஶ்ரிதார்த்தமான ப்ரவ்ருத்தி யாகையாலே அநாயாஸமாய் இருக்கையாலே. [அழும்] - வரையாதே ரக்ஷிக்குமவனுடைய ரக்ஷணத்துக்குப் புறம்பாவதே! என்று அழும். பாலர்செய்வதும் செய்யும் என்னுதல், ஸ்நேஹிகள் செய்யுமதுஞ்செய்யும் என்னுதல். [தொழும்] - புகலற்றார் செய்வதுஞ்செய்யும் என்னுதல். வேதாந்த ஜ்ஞாநமுடையார் செய்வதும் செய்யும் என்னுதல். [ஆவியனலவெவ்வுயிர்க்கும்] - தொழுதவிடத்திலும் முகங்காட்டக் காணாமையாலே, அசாஹ்யமான ஆத்மவஸ்து அக்நிமயமாம்படி நெடுமூச்செறியாநின்றாள். [அஞ்சனவண்ணனே என்னும்] - விரஹாக்நியை அவிக்கலாம்படி ப்ரமஹாரமானநிறத்தோடே வந்து தோற்றவல்லையே என்னும். [எழுந்து மேனோக்கி] - வடிவை நினைத்தவாறே த்ரித்து எழுந்திருந்து, "ஆனைக்கு உதவினாற்போலே வரக்கூடும்" என்று மேல் நோக்கிப்பார்த்து, "ப்ரத்யபரிஷ்வங்கமே தொடங்கிக்காணவேணும்" என்று இமைகொட்டாதே இருக்கும். [இங்ஙனே நோக்குகேன் என்னும்] - பின்னையும் தோற்றாதொழிந்தவாறே, நான் உன்னைக்காணும் விரகென்? என்னும். [செழுந்தடம்புனல் சூழ் திருவரங்கத்தாய்] - அழகியதாய்ப்பெருத்த நீர்சூழ்ந்த கோயிலை இடமாக உடையவனே! ப்ரமஹாரமான தேஶத்தை உடையீரான நீர் இத்தலைக்குப் போக்கடிசொல்லீர். [என் செய்கேன்] - இப்படி அலமாக்கிறஇவள் உம்மைப்பெற்று ஆளாகைக்கு நான் செய்வது என்? ப்ரமஹாரமான அந்த தேஶத்திலேவந்து இவள் த்ரிக்கைக்கு நான் செய்வதுஎன்? உம்மால் அல்லது செல்லாமைக்குப் பிராட்டி அளவல்லள். [என்திருமகட்கே] - அவள் உம்மை ஆசைப்பட்டிருக்கும்; இவள் உம்மையும் அவளையுஞ்சேர ஆசைப்பட்டிருக்கும்.

ஈடு —எட்டாம்பாட்டு. இவளுக்குமேன்மேலனவருகிறநோவுகள் தீர்க்கைக்கு நான்செய்வதென்? என்கிறாள்.

[கொழுந்துவானவர்கட்கேன்னும்] - நித்யசூரிகளுக்குத் தலையானவனே! என்னும். அன்றியே, அவர்கள்வேராகத் தான் கொழுந்தானவன் என்னுதல். (அவர்களாலே லப்தஸத்தாகனானகை.) [குன்றேந்தி] - லோகாந்தரத்தில் பரிமாற்றந்தேடவேணுமோ? பசுக்களுக்கும் தத்ப்ராயரான இடையர்க்கும் உதவினவனன்றோ? மேன்மை யில்லாமை யிழக்கிறேனோ, நீர்மையில்லாமை யிழக்கிறேனோ என்னும். [அழும்] - மலையையெடுத்து ஒருவர்ஷத்தைப்பரிஹரித்த நீர் இவ்வர்ஷத்தைப் பரிஹரித்தாலாகாதோ? "வஹாயாஸ்ர தகாஃவஷிணி" (பஹுதாஸ்ருதததுஃகவர்ஷிணி) என்கிற இது பரிஹரித்தாலாகாதோ? [அழும்] - பாலர்செய்வதையுஞ் செய்யும்என்னுதல்; ஸ்நேஹிகள்

---

எட்டாம்பாட்டு.—கொழுந்துஇத்யாதி. 'கொழுந்துவானவர்கேன்னும்" என்றுதொடங்கி "என்திருமகட்கு - என்செய்கேன்" என்னுமளவுங்கடாக்ஷித்தவதாரிகை - இவளுக்குஇத்யாதி.

கொழுந்து வ்ருக்ஷத்துக்கு ப்ரதாநமாகையாலே-தலையானவனேஎன்றது. இரண்டாமர்த்தத்துக்கு, அவர்கள் வ்யஸநத்துக்குத் தான் அபிமாநிஎன்று ஹாவிதம். கீழிற்பதத்தோடே இப்பதத்துக்கு ஸங்கதி-லோகாந்தரத்தில்இத்யாதி. "கோன், நிரை" என்றுபதச்சேதமாய் 'தத்ப்ராயரானஇடையர்' என்னுதல், கோநிரையென்று - பசுநிரைஎன்னுதல். "கொழுந்துவானவர்கட்கு" என்றத்தையுங் கூட்டிஹாவம் - மேன்மையில்லாமைஇத்யாதி. "குன்றேந்தி" என்றத்தோடேகூட்டி "அழும்" என்றதுக்குஹாவம் - மலையைஇத்யாதி. விவரணம் - வஹயாஇத்யாதி. "ஊவிவெகவடநாஙஷி ஜவெவஹயாஸ்ர தகாஃவஷிணி"இதி ஸ்தோத்ரே. "அழும்" என்றதுக்கு அர்த்தத்வயம் - பாலர்இத்யாதி வாக்யத்வயம். "தொழும்" என்றதுக்கர்த்தத்வயம் - புகலற்றார்இத்யாதி.

செய்வதையும் செய்யுமென்னுதல். [தொழும்] - புகலற்றார்செய்வதைச் செய்யுமென்னுதல்; வேதாந்தஜ்ஞாநமுடையார்செய்வதைச் செய்யுமென்னுதல். [ஆவியனலவெவ்வுயிர்க்கும்] - தொழுதவநந்தரம் வரக்காணாமையாலே, 'ப்ரஹ்மாஸ்த்ரம்வாய்மடிந்தது' என்று, அசாஹ்யமானஆத்மவஸ்து அக்நிமயமாம்படிநெடுமூச்செறியும்; 'தீர்க்கமுஷ்ணஞ்ச நிஶ்வஸ்ய' (தீர்க்கமுஷ்ணஞ்சநிஶ்வஸ்ய) என்கிறபடியே. [அஞ்சனவண்ணனேயென்னும்] - நெருப்பிலே நீரைச்சொரிந்தாற்போலே அக்குளிர்ந்தவடிவைக் கொண்டுவந்து தோற்றவல்லையேயென்னும். "மேகஶ்யாமம்" (மேகஶ்யாமம்) என்னும்வடிவிறே: கைகேயி வார்த்தையால் பிறந்ததாபமடைய ஆறுங்கிடீர் அவ்வடிவழகிலே விழிக்கப்பெற்றோமாகில் என்றார்களிறே. [எழுந்துஇத்யாதி] - வடிவைநினைத்தவாறேதரித்தெழுந்திருந்து, வரஸம்பாவனையுள்ள திக்கைப்பார்த்து, "ப்ரதமபரிஸ்பந்தமேதொடங்கிக்காணவேணும்" என்று இமைகொட்டாதே பார்த்துக்கொண்டிருக்கும். [எங்ஙனேநோக்குகேனென்னும்] - தான்பார்த்த திக்கில் வரக்காணாமையாலே, "பின்னேக்கிவந்துகட்டிக்கொள்ளும்" என்று புரிந்துபாரா நிற்கும். [எழுந்து மேல்நோக்கி] - வடிவைநினைத்தவாறே தளர்த்தியிலே எழுந்திருந்து, "ஆனைக்கு உதவினாற்போலே வரக்கூடும்" என்று மேல்நோக்கிப் பார்த்து, "ப்ரதமபரிஸ்பந்தமேதொடங்கிக் காணவேணும்" என்று இமைகொட்டாதேயிருக்கும்; [எங்ஙனே நோக்குகேனென்னும்] - பின்னையும் தோற்றக்காணாமையாலே, நான் உன்னைக்காணும் விரகு ஏது? என்னும். [செழுந்தடம்புனல்சூழ் திருவரங்கத்தாய்] - அழகிதாய்ப்பெருத்த

---

வாக்யத்வயம். புகலற்றாரென்றது - "க்ருதாபராதஸ்ய" இத்யாதிப்படியே ஸாபராதரென்றபடி. வேதாந்தஜ்ஞாநமுடையாரென்றது - "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" இத்யாதிப்படியேப்ரபத்திவைபவம் அறிந்தவர்களென்றபடி. யத்வா, புகலற்றாரென்றது - ப்ரபத்திநிஷ்டரை; வேதாந்தஜ்ஞாநமுடையாரென்றது - உபாஸகரை. உபாஸகர்க்கு "நமஉக்திம் விதேம" என்று தொழுகையுண்டிறே. புகலற்றார் - அநந்யகதிகள். "ஆவி -" ஆத்மா. "அனல -" அக்நிமயமாம்படி: தக்தமாம்படி. "வெவ்வுயிர்க்கும்"-வெவ்விதாக மூச்சுவிடுமிதி ஶப்தார்த்த:. அக்நிமயமாம்படி நெடுமூச்செறியும், என்றதுக்குப்ரமாணம் - தீர்க்கம் இத்யாதி. "தீர்க்கமுஷ்ணஞ்ச நிஶ்வஸ்ய தேவீ நிர்வேதமாகதா । உவாச வசனம் ஸம்விஜ்ஞாய வசனம் ஸ்ப்ருஹம்" இதி ராவணவ்ருத்தாந்தே ராம:. "அஞ்சனம்" என்று சுறுப்பாய், அத்தால் - குளிர்த்திவிசித்தம். "வடிவுதாபஹரம்" என்றதுக்குப்ரமாணம் -மேகஶ்யாமம் இத்யாதி. "மேகஶ்யாமம் மஹாபாஹும் ஸ்திரஸத்வம் த்ருடவ்ரதம் । கதா த்ரக்ஷ்யாமஹே ராமம் ஜகத: ஶோகநாஶநம்" இத்யயோத்யாகாண்டே ராமதித்ருக்ஷயா சித்ரகூடம்ப்ரதி கச்சந்த: பௌரா: (83-8). இஶ்ஶ்லோகத்துக்கர்த்தம் - கைகேயி இத்யாதி. "த்ரக்ஷ்யாமஹே" என்றதுக்குபாவம்-அவ்வடிவழகிலே இத்யாதி. 'என்றார்களிறே என்றது, பஹுவசநத்தைப்பற்ற. மோஹித்தவளெழுந்திருக்கக் கூடுமோ? என்ன - வடிவைஇத்யாதி. "இமைப்பு" - இமைகொட்டுகை. இமைப்பிலளிருக்கும் - இமைகொட்டாதேயிருக்கும். "எங்ஙனே நோக்குகேனென்னும்" என்றதுக்கர்த்தம் - தான்பார்த்தஇத்யாதி. அதாவது - பின்னே கட்டிக்கொள்ளுமென்று புரிந்துபார்த்து- பின்னேயிருந்தால் நான்நோக்கும்படியெங்ஙனே? என்னுமென்றபடி. புரிந்து - திரும்பி- "எழுந்து, மேல்நோக்கி யிமைப்பிலளிருக்கும்" என்றதினர்த்தத்தை அநுவதித்துக் கொண்டு, "எங்ஙனேநோக்குகேன்" என்றதுக்கர்த்தாந்தரம்அருளிச்செய்கிறார் - வடிவைஇத்யாதி. "எங்ஙனேநோக்குகேன்" என்றதுக்கர்த்தாந்தரம் - பின்னையும்இத்யாதி. அதாவது பின்னையும் தோற்றக்காணாமையாலே - "ஸாதநாநுஷ்டாநம் பண்ணவேணும்" என்று வாராதிருக்கிறானென்று பார்த்து,நான் உன்னைக்காணும் விரகுஏது? என்னுமென்றபடி. விரகு - ஸாதநம். தட - பெருமை. "செழுந்தட" இத்யாதி பதப்ர

நீர்சூழ்ந்தகோயிலை இடமாகவுடையவனே! இப்படி ஸ்ரமஹரமானதேசத்திலே நீர்வந்து சாய்ந்தது இவள்வரவுபார்த்தன்றோ? அத்தலை இத்தலையாயிற்றோ? [என்செய்கேன்] - கர்த்தவ்யமடங்கலும் தானேயநுஷ்டித்தாள், நான்இனிச்செய்வதேன்? உபாயாந்தரஸாத்யமோ உம்முடைய தர்மம்? [என்திருமகட்கே] - இவளை இழக்கலாமோ உமக்கு? உம்மை ஒருவரையும் ஆசைப்பட்ட ஏற்றமன்றோஅவளது? உம்மையும் அவளையும்சேர ஆசைப்பட்ட ஏற்றமுடையவளல்லளோஇவள்? ஸாக்ஷால்லக்ஷ்மியோடொக்கச் சொல்லலா மாகாதே இவளை! (அ)

## ஒன்பதாம் பா

என்திருமகள்சேர்மார்பனே! என்னும்என்னுடைஆவியேஎன்னும்
நின்திருவெயிற்றலிடந்துநீகோண்டநிலமகள்கேள்வனே! என்னும்
அன்றுருவேழுந்தழுவிநீகோண்டஆய்மகளன்பனே! என்னும் [க்கே.
தென்திருவரங்கங்கோயில்கோண்டானே! தெளிகிலேன்முடிவுஇவள்தன

*ஆ.—(என்திருமகள்.) - ஸர்வலோகமஹேஸ்வரியாய் ஸமஸ்த கல்யாண குணாம்ருதோததியாயிருந்த பெரிய பிராட்டியார்க்கும் போஷியாய், உன்னுடைய குணங்களாலே தாஸ்யமுபாமதையான ஸ்ரீபூமிப்பிராட்டியாருக்கும் போஷியாய், தன்னுடைய நிரவதிக ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யஸங்க்யேய கல்யாண குணங்களாலே பரமபோக்யபூதையான நப்பின்னைப்பிராட்டிக்கும் ப்ராண ப்ரியாயிருந்த நீ, தத்பரிக்ரஹமாகையாலே என்னை த்வதேகதாரகை யாக்கினாற்போலே, இன்னமும் "தத்பரிக்ரஹம்" என்று என்னை உன்திருக்கண்களாலே பார்த்தருளாய் என்று சொல்லும். இவளுக்காகக் கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற நீ இவளைப் பார்த்தருளுகிறிலை; இனி இவளுக்குஎன்னாய்விளையுமென்று ஒன்றும் அறிகிலேன் என்கிறாள்.*

*ஓ.—ஒன்பதாம் பாட்டில், இப்பிராட்டிக்கு ஓடுகிற தசையைக்கண்டு, இவளுடைய தசைவத்துக்கு ஒருமுடிவுகாண்கிறிலேன் என்கிறாள்.*

*[என்திருமகள்சேர் மார்பனே என்னும்] - என்திருமகள் என்றது தான் எம்பெருமானை ஸ்நேஹிக்கைக்கு நிபந்தநம். [என்னுடை என்று தொடங்கி] - திருமகள்சேர் மார்பனைக்கொண்டு எனக்கு தாரகனானவனே என்னும்; ஆதராதிசயத்தாலே உன்னுடைய திருவெயிற்றாலே நீ இடந்துகொண்ட நிலமகளுக்கு வல்லபனானவனே என்னும்; நப்பின்னைப்பிராட்டி உன்னோடே ஸம்ஸ்லேஷிக்கவல்லளேனே என்று*

*யோகத்துக்குபாவம் - இப்படிஇத்யாதி. "என்செய்கேன்" என்றதுக்குஇரண்டுபாவம். முந்தினது - கர்த்தவ்யம்இத்யாதி. கர்த்தவ்யமடங்கலுமென்றது - "அழுந்தொழும்" இத்யாதியை. அன்றிக்கே, ஸாதநாநுஷ்டானம் பண்ணவேண்டாவோ? என்கிற ஶங்கையிலே "என்செய்கேன்"என்றதுக்குஅர்த்தாந்தரம் - உபாயாந்தரஇத்யாதி. "என்திருமகள்" என்றதுக்கு - லக்ஷ்மீயில் வ்யாவ்ருத்தியாகபாவம் - இவளைஇத்யாதி. அவளில் வ்யாவ்ருத்திதன்னை யருளிச்செய்கிறார் - உம்மையோருவரையும் இத்யாதி வாக்யத்வயத்தாலே. திருமகள் என்றதுக்குபாவம் - ஸாக்ஷாத்இத்யாதி. (அ)*

துளும்புகிற ஊமையிலே ம்ருத்யுவைப்போலேஇருக்கிற ருஷபங்கள் ஏழையுந்தழுவி நீ கைக்கொண்ட நப்பின்னைப்பிராட்டிக்கு ஸ்நேஹியானவனே! என்னும். இப்படி இவர்களை ஸ்நேஹித்துவைத்து, இவர்கள் அடிபேணுபிருக்கிற என்திறத்தில் அங்கீ காரம் பண்ணுமைக்கு நிபந்தநமென்? என்று கருத்து. ப்ரணயிநீவிஷயத்தில் இப் படி அபிநிவிஷ்டனாயிருந்துவைத்து என்னை அங்கீகாரம் பண்ணுதிருப்பானேன்? என்றுமாம். [தென்னன்று தொடங்கி] - எல்லாருடைய ஆர்த்திகளையும் தீர்த்து அரு ளுகைக்காகத் தெற்குத்திக்குக்கு ஶ்லாக்யமான கோயிலை ஸ்தாநமாகக்கொண்டவனே!

ப.—அநந்தரம், லக்ஷ்மீபூமிநீளாநாயகனுன உன் ப்ரணயித்வாதிஶயத்திலே அகப்பட்ட இவளுக்குக் காரியந் தலைக்கட்டவிருக்கிறபடி பறிகிறிலேனென்கிருள்.

என் - எனக்குஸ்வாமிநியான, திருமகள் - லக்ஷ்மியானவள், சேர் - தனக்கபி மதஸ்தாநமாகச் சேர்ந்த, மார்பனே - திருமார்பை யுடையவனே! என்னும் - என்னும்; (அச்சேர்த்தியழகோடே), என்னுடை - எனக்கு, ஆவியே - தாரகமான ப்ராணனுய்க் கொண்டு என்னெஞ்சிலே யிருந்தவனே! என்னும் - என்னும்; ("நீலவரையிரண்டுபிறை கவ்வி" என்கிற கணக்கிலே வடிவுக்குப் பரபாகமான), நின் - உன்னுடைய, திருவெயிற் ருல் - திருவெயிற்ருலே, இடந்து - (ப்ரளயத்திலே முழுகி அண்டகபாலத்தினின்றும்) இடந்தெடுத்து, நீ-, கொண்ட - உனக்கபிமதையாகக் கொண்ட, நிலமகள் - ஸ்ரீபூமிப் பிராட்டிக்கு, கேள்வனே - ஸத்ருஶநாயகனே! என்னும் - என்னும்; அன்று - ருஷபங் களை சுல்கமாகநியமித்தவன்று, உரு - இடிபோலே பயாவஹத்வநியான ருஷபங்கள், ஏழும் - ஏழையும், தழுவி - (அபிமதவிஷய கண்டாஶ்லேஷம்போலே அநாயாஸேந) தழுவி, நீ-, கொண்ட - நிதியெடுத்துக்கொண்டாற்போலே ஸ்வீகரித்த, ஆய்மகள் - ஸத்ருஶகோபகுலத்திலேபிறந்த நப்பின்னைப்பிராட்டிக்கு, அன்பனே - வ்யாமோஹவனுன வனே! என்னும் - என்னும்; (இப்படி யவர்கள்பக்கலிலே யுன் ப்ரணயித்வத்தை ப்ர காசிப்பித்தாற்போலே இவளுக்கும் உதவுகைக்காக),தென் - கட்டளைப்பட்ட, திருவரங் கம் - ஸ்ரீரங்கக்ஷேத்ரத்தை, கோயில் - வாஸஸ்தாநமாக, கொண்டானே - அங்கீகரித் தவனே! இவள்தனக்கு - இவளுக்கு, முடிவு - ஆர்த்திபர்யவஸாந ப்ரகாரம், தெளிகி லேன் - அறிகிறிலேன். உருமென்றும் பாடமாம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், இவளுடைய ஆர்த்தத்வத்துக்கு ஒருமுடிவுகாண்கிறி லேன் என்கிருள்.

[என்திருமகள் சேர்மார்பனே என்னும்] - என் என்கிறஇடம் திருமகளிலே அந்வயிக்கிறது; மார்பனே என்கிற இடத்தில் அந்வயிக்கிறதன்று. எனக்கு ஸ்வாமிநி யான பிராட்டியைத் திருமார்விலே யுடையவனே! என்ருநின்ருள். இவ்வதிப்ரா வண்யம் பிராட்டியடியாகவந்தது என்கை. [என்னுடையாவியே என்னும்]- இவளுடைய ப்ராணன் பஞ்சவ்ருத்தியாயன்று இருப்பது; ஒருமிதுநமாயிற்று இவளுக்கு ப்ராணன்! திருமகள் சேர்மார்பனைக்கொண்டு எனக்கு தாரகனானவனே என்னும். [நின்திரு வெயிற்ருல்] - அழகுக்கு நின்திருவெயிறு என்னுமித்தனை. [இடந்து நீகொண்ட] - நீ இடந்துகொண்ட: அந்தப்புரகார்யத்துக்கு ஆளிடவொண்ணுதே. ஸ்ரீபூமிப்பிராட் டிக்கு வல்லபனானவனே! என்னும். [அன்று] - "உன்னோடே ஸம்ஶ்லேஷிக்கவல் லேனே" என்று துளும்புகிறவன்று. [உருவேழுந்தழுவி] - ம்ருத்யுஸத்ருஶமான

ருஷஹங்கள் ஏழையும் தழுவி. உருவென்று - உருமு. இடிபோலே ஹுபங்கரமான ஏறு. "அந்தரமேழுமதிருமிடிகுரல்" என்னக்கடவதிறே. அவளை லஷிக்கைக்கு நிமித்த மாகையாலே, அவள் முலேயிலே அணைந்தாற்போலே இருக்கை. நப்பின்னைப்பிராட் டிக்கு ஸங்கிய்முனவனே! என்னும். [நீகொண்ட] - நீகைக்கொண்ட: இத்தால் - என் ஸ்வாமிநிகளுக்கு உதவின நீ, அவர்கள் அடியேனை எனக்கு உதவாதொழிவதே என்னு தல்; ப்ரணயியான நீ, என்னை அங்கிகரியாதொழிவானேனென்? என்னுதல். [தென்திரு வரங்கம் இத்யாதி] - இவளை விரஹப்ரளயங்கொள்ளாமைக்கும் இடைச்சுவர்போகைக்கு மன்றே கோயிலிலே சாய்ந்தது? [தென்திருவரங்கம்] - தெற்குத்திக்குக்கன்றோ கோயி லிலே வந்து சாய்ந்தருளிற்று? [தென்திருவரங்கம்] - தெற்குத்திக்குக்கு ஶ்லாக்யமான கோயில்.[இவள் தனக்கு - முடிவு - தெளிகிலேன்] - அவர்கள் எல்லார்படியையுமுடைய இவள் உம்மைப்பெற்றுளாம் விரகு அறிகிறிலேன்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. இவளுடைய துக்கத்துக்கு ஒருமுடிவு காண்கிறிலே னென்கிறாள்.

[என்திருமகள்சேர்மார்பனே யென்னும்] - என் பேற்றுக்குப் புருஷகாரமில்லா மல் இழக்கிறேனே? என்னும். விசிஷ்டத்திலன்று என் என்கிறஇது; விசேஷணத் திலே; (அதாவது - என் என்கிறவிடம் திருமகளிலே யந்வயிக்கிறது: மார்பனே என்கிற விடத்தில் அந்வயிக்கிறதன்று.) அநந்தாழ்வான் தன் பெண்பிள்ளையை "என்திருமகள்" என்று திருநாமஞ் சாத்தினான். பட்டர் பெருமாளுக்கு, "அடியேனை 'ஸ்த்ரீயநமாகப் பிராட்டிக்குவந்தவன்' என்று திருவுள்ளம்பற்றவும்; நானும் 'இவர் எங்கள்நாய்ச்சியார்க்கு நல்லர்' என்று, அவ்வழியே 'அழகியமணவாளப்பெருமாள்' என்று நினைத்திருக்கவுமாக வேணும்"என்று வேண்டிக்கொண்டார். [சேர்மார்பனே]-ரஹஸ்யத்தில் நித்யயோகத்தைச் சொல்லுகிறது: அவள்ஒருக்ஷணம் பிரியவிருக்கிலன்றே எனக்குப் பேறுதாழ்க்கவேண்டுவது? "பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்யுமவை கேட்கைக்காக நஞ்சீயரை யழைத்தருளித்தாம் அமுதுசெய்யாநிற்கச்செய்தே இத்திருவாய்மொழி இயலைக் கேட்டருளாநிற்க, இப்பாட்டளவிலே வந்தவாறே 'என்திருமகள்சேர்மார்பனேயென்னும் என்னுடையாவியே என்னும்' என்றுஇயலைச் சேர்த்தருளிச்செய்ய, அத்தைக் கேட்டுக் கையையுதறி, 'ஸ்ரீரங்கநாய' என்று அணையிலே சாய்ந்தருளினார் பட்டர்" என்று அருளிச்செய்வர். "அப்போது திருமேனியிலே பிறந்த விக்ருதியைக்கண்டு 'இவர்க்கு ஸகலத்ப்ராப்தி யணித்தாகிறதோ? என்று அஞ்சியிருந்

---

ஒன்பதாம்பாட்டு.—என்திருமகள் இத்யாதி. "தெளிகிலேன் என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - இவளுடைய இத்யாதி.

பிராட்டியோட்டைச் சேர்த்தி சொன்னதுக்குஹாவம் - என்பேற்றுக்கு இத்யாதி. "என்" என்கிறது - திருவுக்கு விசேஷணமென்கிறார் - விசிஷ்டத்தில் இத்யாதி. திருவுக்கு விசேஷணமாக் கினதுக்கு ஸம்வாதம் - அநந்தாழ்வான் இத்யாதி. ஸம்வாதாந்தரம் - பட்டர் இத்யாதி. 'வேண்டிக் கொண்டார்'-"ஶாதநு ஜூக்ஷி" இத்யாதியாலே வேண்டிக்கொண்டார் என்றபடி. "சேர்" என்கிற வர்த்தமாநத்தாலே - மதுப்பிலர்த்தம் சொல்லுகிறதென்கிறார் - ரஹஸ்யத்தில் இத்யாதி. ரஹஸ்ய மாவது - மந்த்ரார்த்தம். நித்யயோகத்துக்கு ஹாவம் - அவளொருக்ஷணம் இத்யாதி. இவளுக்கு மிது நம் ப்ராணனென்று வக்ஷ்யமாணத்துக்குஸம்வாதம் - பெருமாளுக்கு இத்யாதி. விண்ணப்பஞ் செய்யு மவை கேட்கைக்காக என்றது-ஸந்நிதியிலே புராணஶ்லோகார்த்தோபந்யாஸோப யுக்தமாகச் சந்தைத் திரட்டுக்களைடுக்கைக்கு மூலம் கேட்கைக்காக என்றபடி. இயலை - ஶப்தத்தை. இயல் - ஶப்தமும்,

காண்கிறிலீர். வர்த்தமாநமும் கார்யகரமன்றிக்கே யோழிகிறது நிரோதிக்கிற நிர்ப்பந்தத்தாலேயிறே. உங்களுக்குக் குரகோஷம்கேட்கிறதில்லையோ? ப்ரஸித்தமான அர்த்தம் உபதேசிக்கவேண்டுவதே. [காணீர்] - உங்களுக்குக் கண்ணும்செவியுமின்றிக்கே யிருந்தோ நிஷேதிக்கிறது? என்னைப்போலே உட்கண்ணாலே காணிகோள்! நாங்கள் கண்டிலோம்; கண்ட நீ சொல்லிக்காணாய்! என்றார்கள். [என் சொல்லிச்சொல்லுகேன்] - எனக்குச் சொல்லலாவதில்லை; என்னபாசுரமிட்டு எத்தைச்சொல்லுவது ? உங்கள் கண்ணுக்கு விஷயமாகாதாப்போலே என்வாக்குக்கும் விஷயமாகிறதில்லை. இவர்க்கு நெஞ்சுநிறைந்தது வாய் கொள்ளுகிறதில்லைகாணும்! [என்சொல்லிச்சொல்லுகேன்] - நான் பலஹாநியாலேசொல்லமாட்டேன்;விஷயம்இயத்தாராஹித்யத்தாலேசொல்லிமுடிக்கப்போகாது; உங்களுக்குப்ரதிபத்திபண்ணுகைக்குப்பரிகரமில்லாமையாலேசொல்லத்தான்வேண்டா. [அன்னைமீர்காள்] - ஜ்ஞாதாம்ஸங்கொண்டு வைராக்யத்தைபரஸ்பரம்பண்ணலாயிற்றிறே ஸஜாதீயைகளானிகோளாகில். [என்சொல்லிச்சொல்லுகேன் அன்னைமீர்காள்] - எனக்கோடுகிற வ்யஸநத்துக்குப் பாசுரமில்லை; அவஸ்த்தாஜ்ஞாநமின்றிக்கே பழமைகொண்டாடுகிறிகோளித்தனையிறே; நிஷேதிக்கைக்கு அநுவர்த்தநீயைகளாமத்தனையோ வேண்டுவது? எங்களுக்குக் காணவும் கேட்கவும் கண்ணும் செவியுமில்லையாகில், நீதான் செய்யப்பார்த்ததேன்? என்ன; ஹிதஞ்சொல்லி மீட்கநினைப்பார் இல்லாத ஊரிலே போய்ப்புகுமித்தனை என்கிறாள். பிரிந்துபோனாரை நினைக்கவொட்டாத தேசமிறே: "**கோபஜநஸ்மரநம்**" (நோபஜநம்ஸ்மரந்) என்கிறபடியே. [வெள்ளச்சுகமவன்] - ஸுகவெள்ளத்தையுடையவன். விஶ்லேஷதசையிலும் ஸம்ஶ்லேஷஜநிதமான நிரதிஶயஸுகம் மாறாதவன். பிரிவிலும் அரையாறுபடாதபடிகாணும் கலவியில் அவன்தேக்கினஸுகாதி

*கூட்டிஸாவம்* - பூதமாய் *இத்யாதிவாக்யத்ரயத்தாலே. இப்படியானால் உபதேசிக்க வேண்டுவானென்? என்ன; "காணீர்" என்கிறபதத்துக்கர்த்தத்தைபும் அருளிச்செய்யாநின்றுகொண்டு அதுக்கு ஹேதுவையருளிச்செய்கிறார்* - காண்கிறிலீர் *இத்யாதி வாக்யத்வயத்தாலே. "காணீர்" என்றதுக்கு இரண்டர்த்தம்; காண்கிறிலீரென்னுதல்; காணுங்கோளென்னுதல். இந்த இரண்டாமர்த்தத்தை, ஶ்ரவணேந்த்ரியத்தாலும், சக்ஷுரிந்த்ரியத்தாலும் உட்கண்ணாலுங்காணுங்கோளென்று த்ரிவிதமாக அருளிச்செய்கிறார்* - உங்களுக்கு குரகோஷம் *என்றுதொடங்கி* உட்கண்ணாலே காணிகோள் *என்னுமளவாலே. இத்தால்ஃபலிதம்* - ப்ரஸித்தமான *இத்யாதி. கீழ்ச்சொன்ன அர்த்தத்வயத்தையுங் கூட்டி அருளிச்செய்து, உட்கண்ணாலே காணுங்கோள் என்ற மூன்றும் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்* - உங்களுக்குக்கண்ணும் *இத்யாதி. "என்சொல்லி" என்றதுக்கவதாரிகை* - நாங்கள் *இத்யாதி. எத்தைச்சொல்லுவதென்றது - எந்தஅர்த்தத்தைச் சொல்லுவதென்றபடி. பாசுரமிட்டுச் சொல்லவொண்ணாதோ? என்ன* - உங்கள் *இத்யாதி. ஹார்த்தஸாவமாதல், ஏதத்விவரணமாதல், "என்னெஞ்சினூடே" இத்யாதியையும் "என்சொல்லிச்சொல்லுகேன்?" என்றத்தையுங்கூட்டி ரஸோக்தியாதல்* - இவர்க்குநெஞ்சு *இத்யாதி. சொல்லப்போகாமைக்கு ஹேதுத்ரயம் அருளிச்செய்கிறார்* - நான்பலஹாநி *இத்யாதிவாக்யத்ரயத்தாலே. எல்லாம்சொல்லப் போகாவிட்டாலும், அறிந்தவம்ஶம் சொல்லவொண்ணாதோ? என்ன* - ஜ்ஞாதாம்ஸம் *இத்யாதி. ஸஜாதீயைகளானிகோளாகில்- தோழிமாரானிகோளாகில் என்றபடி. "அன்னைமீர்காள்" என்றதுக்கு - கீழ், வ்ருத்தைகளென்றருளிச்செய்து, நியாமகத்வவிவக்ஷயாஸாவாந்தரம்* - எனக்கோடுகிற *இத்யாதிவாக்யத்வயம். பழமைகொண்டாடுகிறிகோள் என்றதின் விவரணம்* - நிஷேதிக்கைக்கு *இத்யாதி. உத்தரார்த்தத்துக்கவதாரிகை* - எங்களுக்கு இத்யாதிவாக்யத்வயம். *அவனேவாராஞே? என்ன* - பிரிந்துபோனாரை *இத்யாதி. நினைக்கவொட்டாததேஶமுண்டோ? என்ன* - நோபஜநம் *இத்யாதி.* *'வெள்ளச்சுகமவன்"-*

ஸயமிருந்தபடி. [வெள்ளை] - என்று பாடமானபோது மறுவற்ற ஸுகமேன்கை. (து:கா மிஸ்ரசுகமேன்றபடி.) அவன்வீற்றிருந்த - தேன்திருப்பேரேயில் என்று அந்வயம். இட்டகாலிட்டகையளாயிருக்கிற இருப்புக்குஎதிர்த்தட்டாயிருக்கிற இருப்பிறே அது. இத்தலையைத் துடிக்கவிட்டுத் தன்ஐஶ்வர்யந்தோற்ற ஸுகோத்தரமாக இருக்கிறபடி. [அவன் வீற்றிருந்த] - இத்தலையைத் தோற்பித்த தன்வெற்றியெல்லாம் அவ்விருப்பிலே தோற்றும்படியிருந்த. அவன் மெய்ம்மறந்து அப்படியிருந்தால் நாமும் மெய்ம்மறந்திருக்கவோ? பரிபூர்ணனாய் அவன் செருக்காலேயிருந்தால், குறைவாளராய் நோவுபடுகிறநாமும்இருக்கவோ? அவன் முறைதப்பநின்றால் நாமும் முறைதப்புமித்தனையன்றோ? பிரிந்தால் முறைபார்த்திருக்கலாம் விஷயத்துடனே கலந்தோமாகிலன்றோ நாம் ஆறியிருக்கலாவது? முறையை யழித்தாகிலும் மடலை யெடுத்துக்கொண்டுபோமித்தனையன்றோ? "நமக்கே நலமாதலின்" என்னக்கடவதிறே. [வேதவொலியும்] - அவன் நெஞ்சொழிந்து பழம் புணர்ப்புக் கேளாநின்றான்காணும். அதாவது - பண்டு தான்வென்ற வெற்றிமாலைகள் கேட்கையிறே. அதாவது "ஜிதந்தே புண்டரீகாக்ஷ" (ஜிதந்தேபுண்டரீகாக்ஷ) என்கிற வெற்றிமாலைகளிறே. [விழாவொலியும்] - இவளைத் தோற்பித்ததுக்கு நெய்யாடல் போற்றுகிறபடி. [அரு] - தீர்த்தம் ப்ரஸாதித்த பிற்றைநாளே திருமுளைச்சாத்தாநிற்குமத்தனை. ஸ்யமந்தக மணி கைப்பட்டபின்பு அக்ரூரன்அடுத்தடுத்து அஶ்வமேதம்பண்ணினாற்போலே, அவர்க்கும் அடுத்தடுத்து உத்ஸவமாய்ச் செல்லுகிறஇத்தனை; ஸ்த்ரீரத்நமிறே இவள். இவளிருக்கிறவிடமிறே மங்களகோஷங்கள் மாறிக்கிடக்கிறது. [பிள்ளைக்குழா விளையாட்டொலியும் அறா] - பருவம்நிரம்பியிருக்கச்செய்தே நிஷேதிப்பார் இருக்கிற ஊரைவிட்டு பருவம்நிரம்புவதற்குமுன்னே பகவதநுபவமே யாத்ரையாய்ச்

---

ஸுகார்ணவத்தையுடையவனித்யர்த்த:. ஸுகாதிசயம்வருகைக்குஹேதுவருளிச்செய்கிறார் - பிரிவிலும் இத்யாதி. மறுவற்ற - ஸ்வச்சமானஇத்யர்த்த:. மறுவற்றஸுகத்தையுடையவனித்யர்த்த:. "வெள்ளம்" என்றபோது, வெள்ளமென்று - ஸமுத்ரம். வீற்றிருந்த - வேறுபாடு தோற்றவிருந்த. "வீற்றிருந்த" என்றதுக்கு வ்யாவர்த்யம் - இட்டகால் இத்யாதி. வேறுபாடு ஏதென்ன - இத்தலையை இத்யாதி. "வீற்றிருந்த" என்றதுக்கு - ராஜாவாயிருந்த என்று அர்த்தாந்தரம் - இத்தலையைத்தோற்பித்த இத்யாதி. வெற்றி-ஜயம். அவன் அப்படிவீற்றிருந்தால் நீ உபேக்ஷியாதே "சேர்வன்" என்கிறதென்? என்ன-அவன் மெய்ம்மறந்து இத்யாதி. அவன் மெய்ம்மறந்து-அவன் நம்முடைய வைலக்ஷண்யத்தைமறந்து. அப்படியிருந்தால்-உபேக்ஷித்திருந்தால். நாமும் மெய்ம்மறந்திருக்கவோ-நாமும்அவன் வைலக்ஷண்யத்தைமறந்து உபேக்ஷித்திருக்கவோ? என்றபடி. அதுக்கடியேதென்ன-பரிபூர்ணனாய் அவன் இத்யாதி. அவன் வாராதிருந்தால், "தத்தஸ்ய ஸத்ருஶம் பவேத்" என்றிருக்கக்கடவ நாம் த்வரிக்கலாமோ? என்ன - அவன்முறை இத்யாதி. அவன் முறைதப்பினானென்று, நமக்குத்தப்பலாமோ? என்ன - பிரிந்தால் இத்யாதி. முறைதப்பும் ப்ரகாரத்தைச் சொல்லுகிறார்- முறையையழித்தாகிலும் இத்யாதி. அப்படி ஸ்வயத்நத்திலே அந்வயித்தாருண்டோ? என்ன - நமக்கே இத்யாதி. நமக்கே நன்மை பார்க்கக் கடவோமென்றபடி. திருமொழி ஒன்பதாம்பத்து மூன்றாந்திருமொழி ஒன்பதாம்பாட்டு "ஓதிநாமம்" இத்யாதி. "வேதவொலி" என்றதுக்கு பாவம் - அவன்நெஞ்சு இத்யாதி. பழம்புணர்ப்பு - பழையவெற்றிமாலைகள். புணர்ப்பு -வெற்றிமாலை. நெய்யாடல்போற்றுகை - நெய்யிறைத்து விளையாடுகை. "அறா" என்றதுக்கு பாவம் - தீர்த்தம் ப்ரஸாதித்த இத்யாதி. த்ருஷ்டாந்த பூர்வகோபபாதநம் - ஸ்யமந்தக இத்யாதி. வ்யதிரேக விஸ்தாரத்தம் - இவள் இருக்கிற இத்யாதி. "பிள்ளைக்குழா விளையாட்டொலியும்", என்றதுக்கு பாவம் -பருவம் நிரம்பி இத்யாதி. அப்படி பால்யத்திலும் பகவதநுபவபரரா யிருப்பார்களோ? என்ன-அவ்வூரில் இத்யாதி. இதுக்கு ப்ரமாணம்

செல்லுவார்இருந்த ஊரில் போய்ப்புகுமித்தனை என்கிறாள். அவ்வூரில் பருவம் நிரம்பாத பிள்ளைகளும் அகப்பட மகரநெடுங்குழைக்காதனுடைய வடிவழகிலே தோற்று, வாய்வெருவா நிற்பர்கள்; “𑌬𑌾𑌲𑌾 𑌅𑌪𑌿 𑌕𑍍𑌰𑍀𑌡𑌮𑌾𑌨𑌾 𑌗𑍃𑌹𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌷𑍁 𑌸𑌙𑍍𑌘𑌶𑌃 | 𑌰𑌾𑌮𑌾𑌭𑌿𑌷𑍍𑌟𑌵𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌶𑍍𑌚𑌕𑍍𑌰𑍁𑌰𑍇𑌵𑌂 𑌮𑌿𑌥𑌃𑌕𑌥𑌾𑌃” (பாலா அபிக்ரீடமாநாக்ருஹத்வாரேஷுஸங்கஶஃ | ராமாபிஷ்டவஸம்யுக்தாஶ்சக்ருரேவம்மிதஃகதா:) என்னும்படியே. ‘𑌰𑌾𑌮𑍋𑌰𑌾𑌮𑍋𑌰𑌾𑌮𑌇𑌤𑌿” (ராமோராமோராமஇதி) - “சோறுசோறுசோறு” என்பாரைப்போலே. “𑌪𑍍𑌰𑌜𑌾𑌨𑌾𑌮𑌭𑌵𑌨𑍍𑌕𑌥𑌾𑌃” (ப்ரஜாநாமபவந்கதா:)-ஜநிதர்மாக்களுக்கெல்லாம் பாசுரம்இதுவே.‘𑌰𑌾𑌮𑌭𑍂𑌤𑌂𑌜𑌗𑌦𑌭𑍂𑌤𑍍’(ராமபூதம்ஜகதபூத்)-நாடுஅடங்க ராமாத்வைதமானபடி. நித்யவிபூதியிலே பரிமாறக்கடவதுஇங்கேபரிமாறுகைக்கு ஹேது வென்?என்னில், “𑌰𑌾𑌮𑍇𑌰𑌾𑌜𑍍𑌯𑌂𑌪𑍍𑌰𑌶𑌾𑌸𑌤𑌿” (ராமேராஜ்யம்ப்ரஶாஸதி) - நாடு அடங்கலும் தந்தாமுடைய கர்மபலம் புஜிக்கப்பெற்றார்களில்லை; ராமஸாக்யமே யநுபவித்துவிட்டது. “𑌨𑌚𑌾𑌗𑍍𑌨𑌿𑌜𑌂𑌭𑌯𑌂𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍” (நசாக்நிஜம்பயம்கிஞ்சித்)-அக்நியும்சோறுவேவிக்கவேண்டும் ஔஷ்ண்யத்துக்கு மேற்பட உடைத்தாவதில்லை. “𑌨𑌾𑌪𑍍𑌸𑍁𑌮𑌜𑍍𑌜𑌨𑍍𑌤𑌿 𑌜𑌨𑍍𑌤𑌵𑌃” (நாப்ஸுமஜ்ஜந்திஜந்தவ:) - கோண்டுஆழக்கடவ ஜலந்தானே கோண்டுமிதக்கப்புக்கது ராமஶரத்துக்கு அஞ்சி. பண்டே கைகண்டிருப்பதொன்றே ஜலந்தான். வேலைவேவ வில்வளைத்தவனிறே. [திருப்பேரெயில்சேர்வன்நானே] - ஜயித்தார் இருந்தவிடத்தே தோற்றார் சென்றுவிழும் அத்தனையிறே. தாமரைக்கண்ணன் என்னேஞ்சினூடே யிறே: ஆகையாலே “𑌜𑌿𑌤𑌂𑌤𑍇” (ஜிதந்தே) என்று சென்றுவிழுமத்தனையிறே.

---

பாலாஅபி இத்யாதி. “𑌬𑌾𑌲𑌾 𑌅𑌪𑌿 𑌕𑍍𑌰𑍀𑌡𑌮𑌾𑌨𑌾 𑌗𑍃𑌹𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌷𑍁 𑌸𑌙𑍍𑌘𑌶𑌃 | 𑌰𑌾𑌮𑌾𑌭𑌿𑌷𑍍𑌟𑌵𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌶𑍍𑌚𑌕𑍍𑌰𑍁𑌰𑍇𑌵𑌂 𑌮𑌿𑌥𑌃𑌕𑌥𑌾𑌃” இத்யயோத்யாகாண்டே(க-கக). பாலர்களேயன்றிக்கே, ஜநிதர்மாக்கள் எல்லாரும்இப்படியேயென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் - ராமஇத்யாதி. “𑌰𑌾𑌮𑍋𑌰𑌾𑌮𑍋𑌰𑌾𑌮𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌜𑌾𑌨𑌾𑌮𑌭𑌵𑌨𑍍𑌕𑌥𑌾𑌃 | 𑌰𑌾𑌮𑌭𑍂𑌤𑌂𑌜𑌗𑌦𑌭𑍂𑌦𑍍𑌰𑌾𑌮𑍇 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂𑌪𑍍𑌰𑌶𑌾𑌸𑌤𑌿” இத்யுத்தரஸ்ரீராமாயணே. வீப்ஸைக்குஅர்த்தம் - சோறுஇத்யாதி. ஜநிதர்மாக்கள் - பிறந்தவர்களென்றபடி. அப்படி ஸ்வகர்மபலம் புஜித்திலர்களோ? என்ன, ப்ரமாணம் - “நசாக்நிஜம்” இத்யாதி. ஸ்ரீஸங்க்ஷேபே, “𑌨𑌚𑌾𑌗𑍍𑌨𑌿𑌜𑌂𑌭𑌯𑌂𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌨𑍍𑌨𑌾𑌪𑍍𑌸𑍁𑌮𑌜𑍍𑌜𑌨𑍍𑌤𑌿𑌜𑌨𑍍𑌤𑌵𑌃 | 𑌨𑌵𑌾𑌤𑌜𑌂𑌭𑌯𑌂𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌨𑍍𑌨𑌾𑌪𑌿𑌜𑍍𑌵𑌰𑌕𑍃𑌤𑌂𑌤𑌥𑌾”(க-கஉ)ராமஶரத்துக்குஅஞ்சியிருக்குமோ?என்ன- பண்டேஇத்யாதி. சரத்தாலே ஸமுத்ரத்தைத் தஹித்ததுக்கு ப்ரமாணம் - வேலைஇத்யாதி. திருச்சந்தவிருத்தம் முப்பத்தோராம்பாட்டு, “காலநேமி” இத்யாதி. ஸமுத்ரம் தக்தமாம்படி வில்வளைத்தவனித்யர்த்தஃ. தான் சேருகிறதென், அவன்வரப்பார்த்திருந்தாலோ என்கிற ஶங்கைக்கு, பூர்வார்த்தத்திலே நோக்காகப் பரிஹாராந்தரம் - ஜயித்தார்இத்யாதி. †முந்தின பரிஹாரம்-பிரிந்துபோனாரை இத்யாதி வாக்யம். அப்படி தான் தோற்றாளோ? என்ன - தாமரைஇத்யாதி வாக்யத்வயம். (க)

† இந்த அவதாரிகைக்கும் ப்ரீதிகத்துக்கும் ஏற்ப மூலத்தில் நக்கவேண்டிய வாக்யம் ப்ரமுஷிதமானதுபோற் காண்கிறது.

## ரண்டாம் பாட்டு.

**நானக்கருங்குழல்தோழிமீர்காள்! அன்னையர்காள்! அயற்சேரியீர்காள்! நான்இத்தனிநெஞ்சங்காக்கமாட்டேன்என் வசமன்றிது இராப்பகல்போய் தேன்மோய்த்தபூம்பொழில்தண்பணைசூழ்தென் திருப்பேரெயில்வீற்றிரு வானப்பிரான்மணிவண்ணன்கண்ணன்செங்கனிவாயின்திறத்ததுவே.** [ந்த

*ஆ.*—(நானக்கருங்குழல்.) - அதிபரிமள நீலாலகாலங்க்ருத வதநாரவிந்தங் களை யுடைய தோழிமாரும் அன்னையரும் மற்றுமுள்ள பந்துஜநங்களும் "நீ தனியேபோகை கடலல்ல" என்றுசொல்ல, அவர்களைக்குறித்து, "நான் என்னுடைய ஸ்வதந்த்ரமான நெஞ்சைக் காக்கமாட்டேன்; எனக்கு விதேயமன்று; ஆஶ்ரயஸுலப னுகைக்காகத் திருநாட்டில் நின்றும் ஸ்ரீவஸுதேவர் திருமகனுய்வந்து பிறந்தருளி, அக் காலத்தில் பெருதாருடைய இழவுதீரும்படி, தேன்மொய்த்த பூம்பொழில் தண்பணைசூழ் தென்திருப்பேரையில் பரிபூர்ணனுய் எழுந்தருளியிருந்த அவனுடைய, மத்ஸம்ஶ்லேஷத் தாலே புதுக்கணித்த திருப்பவளத்திலே என்னெஞ்சு இராப்பகல் போய்ப்படிந்து கிடக் கும்; இனி நான் எங்ஙனே போகாதிருக்கும்படி?" என்கிருள்.

*ஓ.*—இரண்டாம்பாட்டில், "இங்ஙன் பதறலாமோ? நெஞ்சைச் சிக்கெனப் பிடித்துக்கொண்டு யரித்துக்கொண்டிருக்க வேண்டாவோ?" என்று தோழிமார் தொடக்கமானர் சொல்ல, "தென்திருப்பேரையிலே எழுந்தருளியிருந்தருளுகிற எம் பெருமானுடைய திருப்பவளத்தில் மிகவும் ப்ரவணமான என்னுடைய ஹ்ருதயம் என் அதீநமன்று" என்கிருள். [நானம்] - மந்யம். இவள் திண்மைக்காகத் தோழிமார் தரித் துக்காட்டினபடி. [அயற்சேரியீர்காள்] - இவளுடைய விரஹவ்யஸநம் ப்ரஸித்தமான படியைச் சொல்லுகிறது. [தனிநெஞ்சம்] - ஸ்வதந்த்ரமானநெஞ்சு. [தேனென்று மேலுக்கு] - வண்டுகள்மொய்த்த பூம்பொழிலையுடைய அழகிய நீர்நிலஞ்சூழ்ந்த தென் திருப்பேரையில் வீற்றிருந்தருளுவதும் செய்து வேண்டற்பாட்டையும் அழகையும் குணத்தையும் உடையவனுயுள்ளவனுடைய திருப்பவளத்தில் அழகிலேபடிந்தது.

*ப.*—அநந்தரம், நிரவதிகமான பரத்வ ஸௌலப்யங்களையுடையவன்பக்க லிலே ஸக்தமாய்ப்போன என்னெஞ்சைத் தகைகமாட்டுகிறிலே னென்று தோழிமாரை யும் தாய்மாரையும் அயலாரையுங்குறித்துச் சொல்லுகிருள்.

நானம் - பரிமளோத்தரமான ஶுந்தத்ரவ்யத்தாலே வாஸிதமாய்,கரு - கறுத்த, குழல்-குழலையுடையவரான, தோழிமீர்காள் - தோழிமீர்காள்! அன்னையர்காள் - (அவர் களோடு என்னேடுவாசியற நியந்த்ரிகளான) அன்னைமீர்காள்! அயற்சேரியீர்காள்-(செய்தி வினவவந்த) அயற்சேரியீர்காள்! நான் -(அதிப்ரவணையான) நான், தனி - (என்னிலும் அதிஶயித ப்ராவண்யத்தையுடைத்தாய்) ஸ்வதந்த்ரமான, இ - இந்த, நெஞ்சம் - நெஞ்சை, காக்கமாட்டேன் - (என்னைவிட்டுப்போகாமல்) தகையமாட்டேன்; என் - எனக்கு, வசம் - விதேயம், அன்று - அல்ல;இது இராப்பகல் - இதுஇரவோடு பகலோடு வாசியற, போய் - என்னைவிட்டுப்போய், தேன் - வண்டுகள், மொய்த்த, பூம்பொழில் - பூம்பொழிலையுடைத்தாய், தண் - குளிர்ந்த, பணை-நீர்நிலங்கள், சூழ்

தென்-சட்டளைப்பட்ட, திருப்பேரெயில் - திருப்பேரெயிலே, வீற்று - தன்பெருமை தோன்றும்படி, இருந்த - இருக்கிற, வானம் - பரமபதநிலயனை, பிரான் - மேன்மையுடையனாய், மணி - உஜ்ஜ்வலமான மாணிக்கம்போலேயிருக்கிற, வண்ணன் - வடிவையுடையனாய், கண்ணன் - (ஆஶ்ரிதஸுலபனை) க்ருஷ்ணனுடைய, செம் - சிவந்த, கனி - கனிபோலேயிருக்கிற, வாயின் - அதராதரத்திலே, திறத்தது - ஸக்தமாயிற்று. நானம் - மயிர்க்கு இடும் கந்தத்ரவ்யம்: புழுகாகவுமாம்.

இ.—இரண்டாம்பாட்டில், 'இங்ஙனே பதறுகிறதென்? நெஞ்சைச் சிக்கெனப்பிடித்துக்கொண்டு தரித்திருக்க வேண்டாவோ?' என்ன, 'மகரநெடுங்குழைக்காதன் பக்கலிலே என்மநஸ்ஸு அபஹ்ருதமாயிற்று' என்கிறாள்.

[நானக்கருங்குழல்] - நானம் என்று கந்தம். இவள் தளராமைக்காகத் தோழிமார் தரித்துக்காட்டினபடி. தோழிமாரோடு தாய்மாரோடு அயலாரோடு வாசியற ஹிதம் சொல்லத்தொடங்கினார்கள். ஏககண்டைகளான தோழிமாரோடு அயலாரோடு வாசியற இவள் ஆற்றாமை ப்ரஸித்தமானபடி. ஸர்வத்ர வ்யாப்யத்தாலே உங்களில் வ்யாவ்ருத்தையான என்னைக்காட்டில் ப்ரவணமாகையாலே ஸ்வதந்த்ரமான நெஞ்சை நோக்கமாட்டேன்: உனக்கு மோக்ஷமன்றோ நெஞ்சம்? என்ன [என்வசமன்று] - நான் உங்களுக்குமோக்ஷம் அன்றோ, மோக்ஷஸாதனமென்று வ்யபதேசிப்பரோ? [இராப்பகல் இத்யாதி] - ஹிதம்சொல்லுகிற உங்களுக்கு ஸந்நிஹிதை நான்: அதுவுமில்லை என்நெஞ்சுக்கு. [இராப்பகல்போய்] - ஒருபோதுபோய் மற்றைப்போது முகங்காட்டிலன்றோ ஹிதம் சொல்லவாவது? [தேன்மொய்த்த இத்யாதி] - தேன் என்று வண்டு. அத்தாலே நெருங்கப் பூம்பொழிலையுடைத்தாய்க் குளிர்ந்த நீர்நிலங்களாலே சூழப்பட்ட தேசத்திலே, புக்கார்க்கு மீளலாம்தேசமன்றே என்கை. [வீற்றிருந்து] - பரமபதத்திற்போலே தன் வேறுபாடெல்லாம் தோற்றவிருந்த. [வானப்பிரான்] - மேன்மை இருக்கிறபடி. [மணிவண்ணன்] - அம்மதிப்பில்லையாகிலும் விடவொண்ணாத அழகு. [கண்ணன்] - இரண்டுமில்லையாகிலும் விடவொண்ணாத ஸுலபதை. [செங்கனிவாயின் திறத்ததுவே] - இவைமூன்றிலும் போகவொட்டாத ஸ்மிதத்திலே படிந்தது. பிரிவை ப்ரஸங்கித்துத் தாழ்வுதோற்ற வார்த்தை சொல்லப்புக்குத் தலைக்கட்டமாட்டாதே ஸ்மிதம்பண்ணி நின்றபடி.

ஈடு.—இரண்டாம்பாட்டு. தாய்மார் முகம்பார்த்துச் சொன்னாளாயிற்றே கீழ்ப்பாட்டில் நின்றது; "இவள் இவ்வளவில் மீளுமவளன்றிக்கே யிருந்தாள்" என்று தாய்மாரோடு தோழிமாரோடு அயற்சேரியுள்ளாரோடு வாசியற வந்துதிரண்டு ஹிதஞ்சொல்லப் புக்கார்கள். "உங்கள் ஹிதவசநங்கேளாதபடி நிரவதிகமான பரத்வஸௌலப்யங்களையுடையவன் பக்கலிலே ஸக்தமாய்ப் போன என்னெஞ்சைத் தகையமாட்டுகிறிலேன்; என்னெஞ்சைக் கடல்கொண்டது காணுங்கோள்!" என்கிறாள்.

இரண்டாம்பாட்டு - நானம் இத்யாதி. "தோழிமீர்காள்! அன்னையார்காள்! அயற்சேரியீர்காள்!" என்றத்தையும், "வானப்பிரான்மணிவண்ணன்" இத்யாதி மேலெல்லாவற்றையுங் கடாக்ஷித்து வ்ருத்தாநுவாதபூர்வகமாக அவதாரிகை - தாய்மார் இத்யாதிவாக்யத்ரயத்தாலே. அயற்சேரியுள்ளாராவது - அந்தர்யாமித்வத்திலே மறைந்திருக்குமவர்கள்.

[நானக்கருங்குழல் தோழிமீர்காள்] - நானம் - நறுநாற்றம். அவர்களுக்கு ஒரு பழி சொல்லுமாபோலே சொல்லுகிறாள். அவர்கள் தலையான நறுநாற்றத்துடனே வந்து நிற்கையாலே. மயிர்படமாந்தும்படியிறே இவள் படி. உங்கள் ஸந்நிதியிலேயாகில் நான் இங்கேஇரேனோ? * மைவண்ண நறுங்குஞ்சிக்கு ஸ்மாரகமாயிராநின்றதே இவர்கள் குழல். "ஏகதுஃகம்ஸுகஞ்சநௌ" (ஏகம்துஃகம்ஸுகஞ்சநௌ) என்று இவளுடைய ஸுகதுஃகங்களே தங்களுக்கும் ஸுகதுஃகமாம்படி இருக்கையிறே தோழிமாராகையாவது? இவள் மயிர்முடி பேணுதே, பரிமளங்காணில் முடியும்படியாயிருக்க, இவர்கள் குழல் பேணிப் பரிமளங்கொண்டு காரியங்கொள்ளப் போருமோ? என்னில், - கலவியில் இவளோடு அவன் நெருங்க நெருங்கச் சாத்திக் கழித்தபடியே ஸர்வஸ்வதாநம் பண்ணுவதுஇவர்களுக்கே; அப்போது அவன்பண்ணின ப்ரஸாதாதிசயத்தாலே, அது சருகானாலும் அவர்கள் மாறுதேவைத்துக்கொண்டிருப்பார்களே! அது இவளுக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடி. அன்றிக்கே, இவர்கள் தாம் பரிமளங்கொண்டு கார்யங்கொள்ளவும் வல்லவர்கள். அதாவது: தாங்கள் தளர்ந்துகாட்டில் இவள் மிகவும் தளரும் என்றுஒப்பித்துக்கொண்டிருப்பர்கள். தந்தாமுடைய பொறுமையும் பாரார்களாயிற்று, இவளையுஜ்ஜீவிப்பிக்கைக்காக. அகாரவாச்யனானஅவனும் ஜீவித்து மகாரவாச்யனானஇவனும் ஜீவித்து அநாதிகாலம் போரச்செய்தேயும், உஜ்ஜீவிக்கப் பெறுதே நடுவே கிடந்து போயிற்றே. இனி, ஘டகக்ருத்யமிறே உஜ்ஜீவிப்பிக்கை; அப்படியேஇவளை இசைவித்து உஜ்ஜீவிப்பிக்கவேணுமே. தந்தாம்க்லேசங்கள்பாரார்களிறே, "மோக்ஷிக்கதிசயம்வேணும்" என்றிருப்பார்; பெருமாளிலும் க்லேசம் விஞ்சியிருக்கச்செய்தே பெருமாளுடைய ரக்ஷணத்துக்காக இளையபெருமாள் தம்மைப் பேணிக்கொண்டு தரித்திருக்குமாபோலே. பரமயோகிகளிறே இளையபெருமாள்தாம்.

---

நறுநாற்றத்தையுடைய கறுத்த குழலையுடைய தோழிமீர்காள் என்றுசப்தார்த்தம். "நானக்குழல் தோழிமீர்காள்" என்று ஸம்போதிக்கிறவளுடைய ஹார்த்தபாவம் - அவர்களுக்கு இத்யாதி. தலையான - தலையிலேயுண்டான, ச்ரேஷ்டமான என்றும். "கருங்குழல்" என்றத்தைக் கடாக்ஷித்து ரஸோக்தி - மயிர்பட இத்யாதி. மயிர்படமாந்துகையாவது-இவர்கள்மயிர் அவன் மயிருக்கு ஸ்மாரகமாய் பாதகமாகை; கவரிமான் மயிரிலேபட்டால் அங்ஙனேமாந்துமென்று த்வநி. மாந்துகை-நசிக்கை. நறுநாற்றம்-ஸுகந்தம். "நானக்கருங்குழல்" என்கிறவளுடைய ஹார்த்தபாவம்-உங்கள்ஸந்நிதி இத்யாதி. அவர்கள்ஸந்நிதிஇவளுக்கு பாதகமோ? என்ன-மைவண்ணம்இத்யாதி. இது-"கருங்குழல்" என்றதுக்குபாவம். கீழே-ஸத்ருசமாய் ஸ்மாரகமாகிறதென்று அருளிச்செய்து, ஸம்பந்திதர்சநத்தாலேயும் ஸ்மாரகமென்கிறார் - கலவியில்இத்யாதி. தாத்பர்யாந்தரம் - அன்றிக்கேஇத்யாதிவாக்யத்வயம். தங்களுக்குத் தளர்த்தியுண்டாயிருக்க, ஒப்பனைபொறுக்குமோ? என்ன - தந்தாமுடையஇத்யாதி. இவர்களாலே யுஜ்ஜீவிக்கவேணுமோ? தாந்தாமே யுஜ்ஜீவிக்கவொண்ணாதோ? என்ன; ஸ்வாபதேசத்திலே, ஆசார்யனில்லாவிட்டாலும் உஜ்ஜீவநமுண்டோ? என்கிறார் - அகாரவாச்யனான இத்யாதிவாக்யத்ரயத்தாலே. "தந்தாமுடைய" இத்யாதி வாக்யவிவரணம் - தந்தாம்க்லேசங்கள்இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - பெருமாளிலும்இத்யாதி. "பெருமாளுடைய ரக்ஷணத்துக்காக" என்கைக்கு இவர்தாம்அப்படி விஸ்லேஷம்பொறுக்கமாட்டாரோ? என்ன - பரமயோகிகள்இத்யாதி. போகி -போகவானும், ஸர்ப்பமும். அப்படி தரித்திருந்ததுக்கு ப்ரமாணம்-"ஸௌமித்ரஇத்யாதி. "ஸௌமித்ரே த்வம்வ்யாபஸ்ய த்ராஸுவநராஜிஷு। கிஞ்சராந்நபஸாமுமுவிவருக்ஷிதகஷ்டக: ஜிந்தாகாண்டே. தத்ரைவ, "க்ஷணம்வயஸ்யாஸிஸஹ்யாஸௌஷ்யம்ஏகம்துஃகம்ஸுகம்ச நௌ।ஸுக்ரீவோராகவம்வாக்யமித்யுவாசப்ரஹ்ருஷ்டவத்" (ரு-நஅ) இதுக்குபாவம்

"ஸௌமித்ரேபஶ்யபம்பாயா:" (ஸௌமித்ரேபஶ்யபம்பாயா:)-அங்ரத்தைஹோக்யதை நெஞ்சிலே படச்செய்தேயும், பெருமாளுக்கு அங்யபுரதை விளைக்கைக்காக முகத்தை மாறவைத்துக்கொண்டு நின்றார்; பிள்ளாய், பாராய் இதுஇருந்தபடி!என்கிறார். [நானக்கருங் குழல்] - ஒரு தமிழன் "நானமென்று-குழலுக்கு விசேஷணமாகையாலே, நாவிபோன்ற குழல்" என்றான். அத்தால் நினைக்கிறதும் பரிமளத்தை. [தோழிமீர்காள்]-ப்ரியஞ்சொல்லுவாரும் ஹிதஞ்சொல்லுவார் கோடியிலே புகுவதே! [தோழிமீர்காள்! அன்னையர்காள்! அயற் சேரியீர்காள்!]-தான் அறிந்து தோழிமாரக்குச் சொல்லாதே யிருப்பதோர் அவஸ்த்தையும், தோழிமாரும் தானும்அறிந்து தாய்அறியாதேயிருப்பதோர்அவஸ்த்தையும், தானும் தோழியும் தாயுமறிந்துபிறரறியாதிருப்பதோர்அவஸ்த்தையுமாயாயிற்று இருப்பது; அங்நிலைகுலைந்து எல்லாரையும்ஒக்க ஸம்போதிக்கும்படியாயிற்று ஜகத்ப்ரஸித்தமானபடி. பிறர்க்குச் சொல்ல வேண்டுவேதில்லையிறே; ஆயிருக்க, ப்ரதிகூலர்க்குங்கூட ஈயைபண்ணவேண்டும்படி காணும் இவளுடையஆர்த்தி. "மாம் ஸமாநயது:கிதாம்" (மாம்ஸமாநயது:கிதாம்) என்று என்னை நீ பெருமாளுடனே கூட்டவல்லையே என்றாளிறே ராவணனை. "ததாகுருதயாம்மயி" (ததாகுருதயாம்மயி) என்றும், "வாசாதர்மமவாப்நுஹி" (வாசாதர்மமவாப்நுஹி) என்றும் ஒரு திருவடிபோல்வார்க்குச் சொல்லக்கடவவார்த்தையையிறே, பிரித்தவனைப் பார்த்துச் சொல்லிற்று. [தோழிமீர்காள்இத்யாதி] - 'எங்ஙனே நான்உகந்ததுஉகந்திகோள் ! எங்ஙனே எனக்கு ப்ரியஹிதம்பார்த்திகோள் ! எங்ஙனே யுதாஸீநைகளாயிருந்திகோள்! 'எங்கள்பக்கல் குறையுண்டோ? நீ மர்யாதைதப்பினவாறே நாங்களும் முறைதப்பினோமித்தனையன்றோ?'என்ன, [நான் இத்தனிநெஞ்சங் காக்கமாட்டேன்]-உங்களுக்கும் இங்ஙனே ஏதேனும் இருப்பது ஒருஹேதுவுண்டோ முறைதப்புகைக்கு? [நான்]-நீங்களும் ஏதேனும்நெஞ்சுஇழந்திகோளோ? உங்களளவல்லவென்றபடி. [இத்தனிநெஞ்சம்]-உங்களில் நான் வ்யாவ்ருத்தையானாற்போலேயாயிற்று,என்னிலும் என்னெஞ்சு வ்யாவ்ருத்தமான

---

*அங்குத்தைஇத்யாதி. "நானம்" என்றதுக்கு-நாவியென்றர்த்தாந்தரம்-ஒருதமிழன் இத்யாதி. "தோழிமீர்காள்" என்கிற ஸம்போதநத்துக்குபாவம் - ப்ரியம்இத்யாதி. "தோழிமீர்காள்" இத்யாதியாலே - எல்லாரையும்ஸம்போதித்ததுக்குஅவதாரிகையில்உக்தமானபாவமொழிய பாவாந்தரம்-தானறிந்துஇத்யாதி. ப்ரதிகூலரான அயற்சேரியார்க்குஸ்வதுஃகத்தைச்சொல்லுவானேன்? என்ன-பிறர்க்குஇத்யாதி. இப்படி சொன்னபேருண்டோ? என்ன-மாம் ஸமாநயஇத்யாதி. "ஸாது ராவணராமேண மாம் ஸமாநயது:கிதாம் வநேவாஸீ யதாஸாநுகம்பரோ வ்ருஜாயிவ" இதி ஸுந்தரகாண்டே.*

*(உக-கஅ)"ஸமா நய.ஸமா வநே வாஸி சியாமத்யாஸ்வாஸம் ஸ்ராவிதயேதது:" இதிராமாநுஜீயம். இத்தாலே-ப்ரதிகூலர்க்கும் தயைபண்ணவேண்டியிருக்குமென்று தோற்றிற்றோ? என்ன-ததாகுருஇத்யாதி. "யதா தம் புருஷவ்யாக்ரம் காத்ரை: ஶோகாபிகர்ஶிதை: ஸம்ஸ்ப்ருஶேயம் ஸகாமாஹம் ததா குருதயாம்மயி," "ஜீவந்தீம் மாம் யதா ராம: ஸம்பாவயதி கீர்த்திமாந் ! தத்ததா ஹநுமந்வீர வாசா தர்மமவாப்நுஹி" இதி ஸுந்தரகாண்டே ஸீதா. மூன்றுபேரையும் ஸம்போதிக்கிறதுக்குபாவம் - எங்ஙனேநான் இத்யாதிவாக்யத்ரயம். பாவம் - உங்களுக்குஇத்யாதி: இதுக்கு - 'கண்ணன் செங்கனிவாயின் திறத்தது' என்றதிலே நோக்கு. "உங்களுக்கும்" "இத்யாதி வாக்ய விவரணம் — நீங்களும்இத்யாதி: இத்தால் பலிதம் - உங்களளவல்லவென்றபடி என்று. "தனி" என்றதுக்கு பாவம் - உங்களில்இத்யாதி. 'வ்யாவ்ருத்தமானபடி' என்றத்தால் பலிதமாதல், பப்தார்த்தமாதல்.*

படி. [தனிநெஞ்சம்]-சொல்லிற்றுக்கேளாத ஸ்வதந்த்ரமான நெஞ்சம். ''தத்தஸ்ய ஸத்ரு ஸம்பவேத்'' (தத்தஸ்ய ஸத்ருஸம்பவேத்) என்றிருப்பார் நெஞ்சமும் இதுக்குஒப்பல்ல. [காக்கமாட்டேன்]-(பாரணஸாமர்த்த்யம் வேணுமே காக்க.) ''முந்துற்றநெஞ்சேயியற்றுவா யெம்மொடுநீகூடி'' என்றிருக்கும் இத்தனையொழிய, இவளால் தடுத்துவைக்கப்போகாதே. ''குரவ꞉கிம் கரிஷ்யந்தி'' (குரவ꞉கி . கரிஷ்யந்தி) என்று ஒருவரையும்பாராதே போகாநின்றது; ஒன்று கேட்டு மீளுமளவல்ல: மீட்கலாமளவும் காற்கட்டிப்பார்த்து, போகாமையாலே கைவாங்கினமை தோற்றுகிறதுகாணும் - மாட்டேன்என்கிற வுறைப்பாலே. ஸம்ஸாரிகள் ஸப்தாதிவிஷயங்களினின்றும் மீளமாட்டாதாப்போலேயிறே இவர் பகவத்விஷயத்தினின்றும்மீளமாட்டாதபடி. ''மாட்டேன்'' என்று சொல்லும்இதுவார்த்தையோ? எல்லாவளவிலும் தந்தாம் நெஞ்சு தந்தாமுக்கு விதேயமாக வேண்டாவோ? என்னில், [என்வசமன்றிது]-என்செய்வோம், தாய்வேறு கன்றுவேறுக்கும் விஷயமானால்? கைகேயிசொற்கேட்டு ஸ்ரீபரதாழ்வான் ராஜ்யம்பண்ணுமன்றுயிற்றுஇவளும் இத்தாயார்வார்த்தைகேட்டு மீளுவது. இப்போது நான் உங்கள் மகளன்றே? (மகளோன்றுஸவ்யராவரோ?) என்னைப்போலுமன்றே, என்னெஞ்சு. எனக்குத்தானென்றிருக்கும் நிலைதலைந்தது, தன் வழியே நானொழுகும்படி யாயிற்று தந்தாமுடைய நெஞ்சு அஸவ்யமானாலும், ஸவ்யமாயிருப்பதொருபோது பார்த்து ஹிதஞ்சொல்லவேண்டாவோ? என்ன, [இராப்பகல்போய்]-ஸ்ருஷ்டமானகாலத்திலே இதுக்கு ஹிதம் சொல்லலாவது ஒருபோதுகாண்கிறிலேன்; ஒருபோது பகவத்விஷயத்திலும் கைவைத்து, ஒருபோது ஸம்ஸாரயாத்ரையிலும் கைவைக்கும் அளவல்லவிறே, இவளுடைய ப்ராவண்யம். இங்கேயிருப்பது ஒருபோதுஉண்டாகிலிறே ஒன்று சொல்லிமீட்கலாவது? [தேன்மொய்த்த இத்யாதி] - இது மீட்கலாம் விஷயத்திலேயோ அகப்பட்டது. அவ்வூரில் போக்யதையிலே படிந்தாரையும் மீட்கப்போமோ? தேன் என்று வண்டு. [பூம்பொழிலித்யாதி]-பூத்த பொழிலையும் குளிர்ந்த நீர்நிலங்களையுமுடைத்தான தென்திருப்பேரையில். [வீற்றிருந்த]-பரமபதத்தில் இருப்படங்கலும் தோற்றும்படியிருக்கை

---

சொல்லிற்றுஇத்யாதி. ''இ'' என்றதுக்கு பாவம் - தத்தஸ்யஇத்யாதி. ''காக்கமாட்டேன்'' என்றதில் வ்யதிரேகவிவக்ஷிதார்த்த கதநபூர்வகமாக ஸப்தார்த்தம்-முந்துற்றஇத்யாதி. முற்பட்டநெஞ்சே, பிற்பட்ட என்னோடேகூடி கார்யத்தை நடத்தப்பார்இத்யர்த்த꞉. இயற்றுகை - எத்தனைகையென்றுமாம். ''போகாது'' என்கிறதென்; தடுக்கிறதுக்கென்? என்ன - குரவஇத்யாதி. ''குரூணாம் ஶ்ரு தொவஸ்து கிம் ப வீக்ஷிதநக்ஷஸே। குரவ꞉கிம்கரிஷ்யந்தி தக்தாநாம்விரஹாக்நிநா'' இதி பஞ்சமேம்ஸே அஷ்டாதஸே,(22). பலிதமாதல், விவரணமாதல்-ஒன்றுகேட்டுஇத்யாதி. காவேனென்னுதே, ''காக்கமாட்டேன்'' என்றதுக்குபாவம் - மீட்கலாமளவும்இத்யாதி. இதுக்கு ஸ்வாபதேஸம்-ஸம்ஸாரிகள்இத்யாதி. மேலுக்கவதாரிகை - மாட்டேன்என்று இத்யாதி. தாயின் ஸ்தாநத்தில் மகள், கன்றின் ஸ்தாநத்திலே மகஸ்ஸு. த்ருஷ்டாந்தமுகேநவிவரணம் - கைகேயிஇத்யாதி. ''இது என்றதுக்குபாவம் - இப்போதுஇத்யாதிவாக்யத்வயம். 'என்னைப்போலுமன்று' என்றத்தை இரண்டு வாக்யத்தாலே விவரிக்கிறார் - எனக்குத்தான்இத்யாதி. ஒழுகும்படி - போம்படி. ''இராப்பகல்'' என்றதுக்கவதாரிகை - தந்தாமுடையஇத்யாதி. ''இராப்பகல்அங்கே ப்ரவணமாச்சுது'' என்கிறவருடைய ஹார்த்தபாவம் - ஸ்ருஷ்டமானஇத்யாதி. ஒருபோது காணாமைக்கு ஹேதுவேதென்ன - ஒருபோதுஇத்யாதி. 'போய்'' என்றதுக்குபாவம் - இங்கேயிருப்பதொருஇத்யாதி. 'தேன்மொய்த்த' என்றுதொடங்கி ''செங்கனிவாயின் திறத்ததுவே'' என்னுமளவுக்கும் பாவம் - இதுமீட்கலாம்இத்யாதி. விவரணமாதல், ''தேன்மொய்த்த'' என்றதுக்கு பாவமாதல் - அவ்வூரில்இத்யாதி. ''வீற்றிருந்த'' என்றதுக்குபாவம் - பரமபதத்தில்இத்யாதி. ஸாம்யம்அருளிச்செய்து, ஆதிக்யம்அருளிச்

அவ்விடம்போலுமன்றிறே இவ்விடம் ? ஒருவர்கூறைஎழுவர்உடுக்கிறவிடமிறே; அவ்விடத்தோடொக்க இவ்விடத்தையும் திருத்திக்கொண்டிருக்கிறவிடமிறே. [வானப்பிரான்]-இத்தால் கண்ணழிவற்றமேன்மையைச் சொல்லுகிறது. [தென்திருப்பேரெயில் வீற்றிருந்த வானப்பிரான்] - ஸ்ரீவைகுண்டத்திலிருப்பை நமக்காக இங்கேயிருக்கிற உபகாரகன். [மணிவண்ணன்]-மேன்மையில்லையாகிலும் விடவொண்ணாதவடிவிற் பசையிருக்கிறபடி. [கண்ணன்]-அங்குள்ளார்க்குப்படிவிடும்உடம்பை இங்குள்ளார்க்கு வரையாதேகொடுத்துக்கொண்டிருக்கிறவன். [வானப்பிரானித்யாதி] - மேன்மையளவிடவோ? வடிவழகளவிடவோ? நீர்மையளவிடவோ? [செங்கனிவாயின் திறத்ததுவே]-கிண்ணகத்தில் ஒரு சுழியிலேயகப்படுவாரைப்போலே, வாய்க்கரையிலேயகப்பட்டது; ஆசைப்பட்ட விஷயத்தைக் கரைகண்டதாகிலன்றோ மீளுவது? சிவந்து கனிந்த திருப்பவளத்தினிடையாட்டத்தது: இதுமீள நினைக்கிலன்றோ உங்கள்வார்த்தை கேட்கைக்கு அவகாசமுள்ளது. (௨)

## மூன்றாம் பாட்டு.

செங்கனிவாயின்திறத்ததாயும்செஞ்சுடர்நீள்முடிதாழ்ந்ததாயும்
சங்கொடுசக்கரங்கண்டுகந்தும்தாமரைக்கண்களுக்குஅற்றுத்தீர்ந்தும்
திங்களும்நாளும்விழாவறாததென்திருப்பேரெயில்வீற்றிருந்த
நங்கள்பிரானுக்குஎன்னெஞ்சந்தோழீ!நாணும்நிறையும்இழந்ததுவே.

*ஆ.—(செங்கனிவாயின்.) - உன்னுடைய லஜ்ஜைக்கும் நிறைவுக்கும் போருமோ தனியேபோகை? என்று தோழிசொல்ல, திருப்பவளத்தழகிலே போய்ப் படிந்தும், திருப்பவளத்தில் ஒளி கொழுந்துவிட்டு மேல்நோக்கிவளர்ந்ததோவென்னும்படி நீண்டிருந்த திருவபிஷேகத்தில் அழகிலேதாழ்ந்தும், திருவாழிதிருச்சங்குமேந்தினவழகைக் கண்டுகந்தும், மற்றோர் அழகுக்கு உரித்தல்லாதபடி தாமரைக்கண்களுக்கு அற்றுத்தீர்ந்தும், என்னுடைய நெஞ்சானது, திங்களும் நாளும் விழாவறாத தென்திருப்பேரையிலே வீற்றிருந்த நங்கள்பிரானுக்கு நாணும் நிறையும் இழந்தது; இனி எனக்கு நாணும் நிறைவுமுண்டோ? என்று தோழியை நோக்கிச் சொல்லுகிறாள்.*

செய்கிறார்- அவ்விடம்போலும் இத்யாதி. அதெங்ஙனேயென்ன அருளிச்செய்கிறார் - ஒருவர்கூறை இத்யாதிவாக்யத்வயத்தாலே. "வானப்பிரான்" என்றதுக்கர்த்தம் - இத்தால்இத்யாதி. "பிரான்" என்றதுக்குஅர்த்தாந்தரம் - ஸ்ரீவைகுண்டத்திலித்யாதி. "வானப்பிரான், மணிவண்ணன்" என்ற இரண்டையுங் கூட்டி பாவம் - அங்குள்ளார்க்குஇத்யாதி. "திறம்" என்றதுக்கு - ஸமூஹமாகவர்த்தம் - மேன்மைஇத்யாதி வாக்யத்ரயத்தாலே. அவயவாந்தரங்களிருக்க, "செங்கனிவாய்" என்றுவிசேஷித்ததுக்கு பாவம் - கிண்ணகத்திலித்யாதி. கிண்ணகம் - ப்ரவாஹம். வாய்க்கரை - அதரம், மேலென்று த்வநி. "திறத்ததுவே" என்றதுக்குஹார்த்தபாவம் - ஆசைப்பட்ட இத்யாதி. 'ஆசைப்பட்ட' இத்யாதியாலே, "திறம்" என்று - ஸமூஹமாகவருளிச்செய்து, இடையாட்டமாக அர்த்தாந்தரம் - சிவந்துஇத்யாதி. அவதாரணார்த்தம் - இதுமீளஇத்யாதி. நாணக்கருங்குழல்என்றுதொடங்கி, 'அயற்சேரியீர்காள்! இது - என்வசமன்று, இராப்பகல் போய்'இத்யாரப்ய, 'செங்கனிவாயின்திறத்ததுவே; நான்இத்தனிநெஞ்சங் காக்கமாட்டேன்'இத்யந்வயம். (௨)

ஒ.—மூன்றாம்பாட்டில், "இங்ஙனேசெய்கை நம்முடைய லஜ்ஜைக்கும் மேன்மைக்கும்போருமோ" என்று தோழிமார்சொல்ல, "அவனுடைய அழகிலே அகப்பட்டு என்னுடைய ஹ்ருதயம் அவற்றையெல்லாம் ஒழிந்தது என்கிறாள். [தாமரைக்கண்களுக்குஅற்றுத்தீர்ந்தும்]-திருக்கண்களுக்கு அநந்யார்ஹ சேஷமாயும். [திங்களுமென்று தொடங்கி] - என்றுமொக்க திவ்யோத்ஸவமாய்ச் செல்லுகிறதென்திருப்பேரையிலே நமக்கு அணித்தாகவந்து வீற்றிருந்தருளின மஹோபகாரகனுக்கு.

ப.— அநந்தரம், அவனுடைய அவயவாதி சோபையிலேயகப்பட்ட நெஞ்சு, நாணும் நிறையும் இழந்ததென்று அந்தரங்கையான தோழிக்குச் சொல்லுகிறாள்.

செம் - சிவந்த, கனி - கனிபோலே போக்யமாய், இன் - ஸாந்த்வவாதிகளாலே ஆகர்ஷகமான, வாய் - திருப்பவளத்திலே, திறத்ததாயும்-அபிநிவிஷ்டமாயும், (ஆதிராஜ்யஸூசகமாய்), செம் - சிவந்த, சுடர் - ஒளியையுடைத்தாய், நீள் - உத்துங்கமான, முடி - திருவபிஷேகத்திலே, தாழ்ந்ததாயும் - அம்மேன்மைக்கீடாகத்தாழ்ந்து வர்த்திப்பதாயும், சங்கொடுசக்கரம் - அந்தப்பரத்வத்தை நிர்வஹித்துக்கொடுக்கும் திவ்யாயுதங்களை, கண்டு உகந்தும் - ஹர்ஷயுக்தமாயும், தாமரை - அதிசயிதபோக்யமான தாமரைபோன்ற, கண்களுக்கு - திருக்கண்களுக்கு, அற்று - புறம்புதோற்றற்று, தீர்ந்தும் - அநந்யார்ஹமாயுமிருக்கிற, என் நெஞ்சம் - என்நெஞ்சானது, தோழீ - முன்பு ஸம்ஶ்லேஷிக்கைக்கு ஸஹகாரியானதோழீ! திங்களும் - மாஸங்கள்தோறும், நாளும் - திவஸங்கள்தோறும், விழா - உத்ஸவங்கள், அறாத - இடைவிடாமல்செல்லுகிற, தென்திருப்பேரெயில் - திருப்பேரையிலே, வீற்று - தன்வாசி தோன்ற, இருந்த - எழுந்தருளியிருந்தவனாய், நங்கள் - நம்போல்வார்க்கு முகந்தருகிற, பிரானுக்கு - அர்ச்சாவதாரசுலபனான உபகாரகனுக்கு, நாணும் - ஸ்வாபாவிகமான லஜ்ஜையையும், நிறையும் - அடக்கத்தையும், இழந்தது - இழந்தது.

இ.—மூன்றாம்பாட்டில், "ஏதேனும் செய்தாலும் ஸ்த்ரீத்வப்ரயுக்தமான லஜ்ஜையையும் மடப்பத்தையும் நோக்கவேண்டாவோ?" என்று தோழிசொல்ல, அவனுடைய அழகிலே அகப்பட்ட என்நெஞ்சம் அவற்றை இழந்தது என்கிறாள்.

[செங்கனிவாயின்திறத்ததாயும்] - பிரிகிறபோது தன் ஆற்றாமையும் வரவு தாழாமையும் தொடக்கமான தாழ்வுசொல்லுகிற திருவதரத்தில் பழுப்பிலேபாயிற்று நெஞ்சுதோற்றது. அப்போதைத்தாழ்வுகள் ஒரு மஹாபாரதத்துக்குப் போருமென்கை. தர்சநீயமாய் உபயவிபூதிக்கும் கவித்தமுடியைக்காட்டியாயிற்று, என்னை எழுதிக்கொண்டது. தன்சேஷித்வத்தின் எல்லையைக்காட்டி யாயிற்று சேஷத்வத்திலே நிறுத்திற்று. [சங்கொடுசக்கரம் இத்யாதி] - ஆயுதமும் ஆபரணமுமாயிருக்கிற ஆழ்வார்களுடைய சேர்த்தியைக்கண்டு உகந்தும், தன்னோட்டை ஸம்பந்தமெல்லாம் தோற்றும்படி நோக்கின கண்ணழகிலே அநந்யார்ஹசேஷமாயும். [திங்களும் இத்யாதி] - "விழாவொலி" என்று பொதுவாகக் கீழேசொல்லிற்றே; அத்தைவிசேஷிக்கிறது மாஸத்திருநாளும் விசேஷதிவஸங்களுமான திருநாள்உச்சிவீடுவிடாதே செல்லும்ஊர்- [நங்கள்பிரான்] - பரவ்யூஹவிபவங்கள்போலன்றிக்கே உகந்தருளினதேசம்; அவற்றுக்குப் பிற்பாடராகையாலே நமக்கு உபகரிக்கைக்காகஎன்கை. [என்நெஞ்சம்] - அவ்விருப்பில் ப்ராப்தியையும் சுவட்டையும் அறிந்த என்நெஞ்சம். [தோழீ] - முதல்

*உறவு பண்ணுகிறபோது நாணையும் மடப்பத்தையும் தவிர்த்துப் பொருந்தவிட்டவள் அல்லையோ? அப்போது அவை தவிர்க்கைக்குப் படும் பாடு அறிவுதியே: இப்போது நெஞ்சுக்கு நீயும் வேண்டிற்றில்லை.*

**ஈடு.**—மூன்றாம்பாட்டு. சேர்க்குமவளொருத்தியுமேயாக அல்லாத பங்களமடங்கலும் "நடக்குநிலமன்று" என்று கைவாங்கிற்று; தோழியானவள் "இது நமக்குப்போராது காண்: நெஞ்சை ஒருங்கப்பிடித்து தரித்திருக்கவேண்டாவோ?" என்ன, "அந்நெஞ்சுதான் இனிச்செய்வதென்? அவயவாதிஶோபைகளிலே அகப்பட்டு அதுவும் தனக்குள்ள தடங்கலும் இழந்ததுகாண்" என்கிறாள்.

செங்கனிவாயின் திறத்ததாயும், செஞ்சுடர் நீண்முடித் தாழ்ந்ததாயும், சங்கொடு சக்கரங்கண்டுகந்தும், தாமரைக்கண்களுக்கு அற்றுத்தீர்ந்தும் - நெஞ்சு நாணும்நிறையும் இழந்ததுகாண்! என்கிறாள். சௌபரிஎன்பான் ஒருத்தன் ஒருஸாக்ருதமடியாக ஐம்பது வடிவுகொண்டானிறே. அவ்வளவல்லவிறே, இவள் கலந்தவிஷயம் பண்ணவல்லது. அவன் வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாபோலேயாயிற்று, இதுவும் அவயவங்கள் தோறும் தனித்தனியகப்படவல்லபடி. "*ஸஏகதாபவதி த்ரிதாபவதி*" (ஸஏகதா பவதித்ரிதாபவதி) என்கிறபடியே அநுபவியாநின்றால்பிறக்கும் நாநாபாவம், பிரிவிலேநெஞ்சுக்கு உண்டாகாநின்றது. [செங்கனிவாயின் திறத்ததாயும்] - "பிரிந்துகடக்கவிருக்கிலேன்? உன்கண்வட்டத்திலே கிடக்கிலேன்? இது உன்சரக்கன்றோ?" என்றுசொல்ல உபக்ரமித்து, தழுதழுத்துவருகிற திருவதரத்திலே யகப்பட்டபடி. அதிலும் அதரத்தில் பழுப்புக்குள் இழியமாட்டுகிறதில்லை. [வாயின்திறத்ததாயும்] - அதுதான் ஒருமஹாஹாரதத்துக்குப்

*ப்ர.—[செங்கனிவாய் இத்யாதி] - சாந்தோக்யே [எ-உசு] பூமவித்யாயாம் ப்ரஹ்மவித்ஃபலகதநே. "தஶைஷ ஶ்லோக: । ந பஶ்யோ ம்ருத்யும் பஶ்யதி ந ரோகம் நோத து:கதாம் । ஸர்வம் ஹ பஶ்ய: பஶ்யதி ஸர்வமாப்நோதி ஸர்வஶ இதி । ஸஏகதாபவதி த்ரிதாபவதி பஞ்சதா । ஸப்ததா நவதா சைவ புநஶ்சைகாதஶ ஸ்ம்ருத: । ஶதஞ்ச தஶ சைகஶ்ச ஸஹஸ்ராணி ச விம்ஶதி: ।"*

*மூன்றாம்பாட்டு.—செங்கனிவாயின் இத்யாதி. கீழே எல்லாரையும் ஸம்போதித்து வைத்து, இதிலே ஒருத்தியை ஸம்போதித்ததுக்கு பாவம் அருளிச்செய்யாநின்றுகொண்டு, "தோழீ - என்னெஞ்சம் - நாணும்நிறையும் இழந்தது" என்றதைப்பற்ற அவதாரிகை - சேர்க்குமவள் இத்யாதி வாக்யத்வயத்தாலே. பங்களம் - கூட்டுப்படை. ஒருங்கப்பிடித்து - ஒருபடிப்படப் பிடித்து.*

*நெஞ்சு நாணும்நிறையும் இழந்ததுக்கு ஹேது - செங்கனிவாயின் இத்யாதி. ஒருநெஞ்சே அநேகஅவயவங்களை யநுபவிக்கக் கூடுமோ? என்ன- அநேகம் வடிவுகொள்ளுகையாலே கூடுமென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் - சௌபரி இத்யாதி. பலவடிவுகொள்ளாவிடிலும் அநேகாவயவங்களிலே யகப்படக்கூடுமென்று பரிஹாராந்தரத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் - அவன் வ்யக்திதோறும் இத்யாதி. அநேகம் வடிவுகொண்டதுக்கு த்ருஷ்டாந்தாந்தரம் - ஸஏகதா இத்யாதி. நாநாபாவம் - அநேக ஶரீரபரிக்ரஹம். இதுக்கு மூன்றாம் த்ருஷ்டாந்தம்-மேலே 'அம்ருதமதநத்தில்' இத்யாதி வாக்யத்திலே கண்டுகொள்வது. சிவப்புத்தோற்றுவது வார்த்தையாலேயாகையாலே, அவனுடைய உக்தியை யருளிச்செய்கிறார் - பிரிந்து இத்யாதி. கண்வட்டத்திலே - கண்முன்னே. "வாயின் திறத்ததாயும்" என்றதுக்குபாவம் - அதிலும் இத்யாதி. 'பிரிந்துகிடக்க' இத்யாதிவாக்யத்திலே, "திறம்" என்று - இடையாட்டமாக அருளிச்செய்து, ஸமூஹமாகவர்த்தாக்*

போருமாகாதே? [செஞ்சுடர்இத்யாதி] - பிரிவை ப்ரஸங்கித்துப் போநின்றபோது, ஆதிராஜ்ய ஸூசகமாய் "உபயவிபூதிநாயகன்" என்று தோற்றும்படியிருக்கிற திருவபிஷேகத்தைக் கண்டு தறைப்பட்டுக் காலைப்பிடித்தது. [சங்கொடுஇத்யாதி] - பிரிந்தால் விரோதியைப் போக்குகைக்குப்பரிகரமாய், வைத்தகண் மாறவொண்ணாத அழகையுடையஆழ்வார்களைக் கண்டுகேந்தது. [தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்தும்] - "தவாஸ்மி"(தவாஸ்மி)என்றுசொல் லப்புக்கு மாட்டாதொழிந்தால், குறையும் தலைக்கட்டின திருக்கண்களுக்காயிற்று அநந் யார்ஹமாக எழுதிக்கொடுத்தது. பிரிகிறபோது நோக்கினநோக்கிலே, பிறர்க்காகாதபடி உஜ்ஜீ விக்கப்பண்ணினான். அம்ருதமதநத்தில் தான் எட்டுவடிவுகொண்டாற்போலேகாணும், இதுவும் விஷயாதீநமாகப் பலவடிவு கொள்ளுகிறபடி. அவனுடைய ஐஶ்வர்யமடைய இதுக்குஉண்டாகக்கடவதிறே. [திங்களும்நாளும்இத்யாதி]- உத்தேஶ்யபூமியிலே நித்யோத் ஸவம் செல்லாநிற்க, அது இங்கே நம்கண்வட்டத்தே துஃகத்துக்கு இலக்காயிருக்குமோ! மாஸத்திருநாளும் நித்யத்திருநாளுமோவாத. [வீற்றிருந்த நங்கள்பிரானுக்கு] - இவ்விருப்பு நமக்குஆக்கிக்கொண்டிருக்கிற உபகாரகனுக்கு. பரத்வம் நித்யமுக்தர்க்கு; வ்யூஹம் முமுக்ஷு ப்ராயர்க்கு; விபவம் புண்ணியம் பண்ணினார்க்கு; இவ்விருப்பு, பாபம் பண்ணின ஸம் ஸாரிகளுக்காகஇறே. [என்னெஞ்சம்] - அவனுடைய உபகாரமும் ஸௌந்தர்யாதிகளும் வயிரவுருக்காகை. நெஞ்சினுடைய வன்மையறிதியிறே. நெஞ்சும் அவனும் ஒரு கோவை யிலே அடைப்புண்டபடி. [நங்கள்பிரானுக்கு என்னெஞ்சம்] - "ராகவோர்ஹதி வைதேஹீம்" (ராகவோர்ஹதிவைதேஹீம்) என்னுமாபோலே [தோழீ] - நெஞ்சைத்

தரம் - அதுதான் இத்யாதி. திருவபிஷேகத்தில் வருகைக்கு ப்ரஸங்கம் அருளிச்செய்கிறார் - பிரிவை இத்யாதி. "தாழ்ந்து" - தறைப்பட்டு. சங்கொடு சக்கரங் கண்டுகேக்கைக்கு ஹேது அருளிச்செய்கிறார் - பிரிந்தால் இத்யாதி. "தாமரைக்கண்கள்" இத்யாதிக்கு பாவம் - தவாஸ்மி இத்யாதி. பாவாந்தர மாதல், விவரணமாதல் - பிரிகிறபோது இத்யாதி. அநேக ஶரீரபரிக்ரஹம் பண்ணினதுக்கு மூன்றும் த்ருஷ்டாந்தம்-அம்ருதமதநத்தில் இத்யாதி. 'எட்டுவடிவென்று' தேவர்கள், ராக்ஷஸர்கள், வாஸுகி, மந்தரம், இவற்றுக்கெல்லாம் அந்தர்யாமியாய்; கூர்மம், அந்தரிக்ஷாவதாரம், உபேந்த்ரன், மலையைச் சாயாமல் பற்றினவனுமா யிருக்கிறபடி சொல்லுகிறது. அவன் சக்தி இதுக்குண்டாகக் கூடுமோ? என்ன - அவனுடைய ஐஶ்வர்யம் இத்யாதி. "திங்களும்" இத்யாதிக்குபாவம் - உத்தேஶ்யபூமி யிலே இத்யாதி. அது-மாஸஸூ. அறாத - ஓவாத, விச்சேதமில்லாத என்றபடி. இவ்விருப்பு நமக்கா யிருக்குமோ? என்ன - பரத்வம் இத்யாதி. "செங்கனிவாயின்திறத்ததாயும், நங்கள்பிரான்" என் கிற பதங்களைக்கடாக்ஷித்து, "என்னெஞ்சம்" என்றதுக்கு பாவம் - அவனுடைய இத்யாதி. வயிர வுருக்கு - வஜ்ரத்தை த்ரவீபவிப்பிக்கை. ஸ்த்ரீத்வாபிமாநத்தாலே "ஒருவர்க்கும் ஈடுபடோம்" என்றிருந்த நெஞ்சையும் உருக்குகை என்றபடி. என்னெஞ்சம் - கடிநமானநெஞ்சமென்றபடி. "என்னெஞ்சம்" என்றத்தோடே "தோழீ" என்றதுக்குபாவம் - நெஞ்சினுடைய இத்யாதி. "நங் கள்பிரான், என்னெஞ்சம்" என்று - அவனையும் நெஞ்சையும் தனக்கு சேஷமாகச் சொல்லுகையாலே பாவம்-நெஞ்சும்அவனும் இத்யாதி.என்னோட்டை ஸம்பந்தம் ஒத்திருக்கையாலே-ஒருகோவையிலே என்கிறது. இத்தால் - அவனைப்போலே எனக்கு பாரதந்த்ரமான நெஞ்சென்றபடி; "என்னெஞ்சம்" என்றதுக்கு - பகவத் ப்ரவணமான நெஞ்சென்று அர்த்தாந்தரம் - ராகவோர்ஹதி இத்யாதி. "துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம் । ராகவோர்ஹதி வைதேஹீம் தம் சேயம் அஸிதேக்ஷணா" ஹநூமாந். (கசு ரு) அதாவது - அவன் ஆஶ்ரிதவிஷயத்தில் அத்யந்தம் ஸ்நிக்தனாயிருக்கும். இது,முந்துற்றநெஞ்சாய்பகவத்விஷய ப்ர வணமாயிருக்கும்; ஆகையாலே பரஸ்பர ஸத்ருஶமாயிருக்குமென்றபடி,'நெஞ்சினுடையவன்மையறிதி

திருத்திக்கலப்பிக்கப்பட்ட வருத்தம் அறிதியிறே. இப்போது நீயுங்கூட எதிர்த்தலையாம்படியிறே வாய்த்தது. [நாணும்நிறையும் இழந்ததுவே] - இதுஇழவாதது உண்டோ? அரைக்ஷணம் அவன்பேரநின்று படுத்தினபாடெல்லாம் என்தான்!! நான்தன்னையிழந்தேன்: தாய்மார் தோழிமார்கள் என்னையிழந்தார்கள்: நெஞ்சு நாணும் நிறையும் இழந்தது. (௩)

---

## நான்காம் பாட்டு.

---

இழந்தஎம்மாமைத்திறத்துப்போனஎன்னெஞ்சினாரும்அங்கேயொழிந்தார்
உழந்தினியாரைக்கொண்டென்உசாகோ! ஓதக்கடலொலிபோல‡ எங்கும்
எழுந்தநல்வேதத்தொலிநின்றோங்கு தென்திருப்பேரெயில்வீற்றிருந்த
முழங்குசங்கக்கையன்மாயத்தாழ்ந்தேன்அன்னையர்காள் என்னையென் முனிந்தே.

**ஆ.**—(இழந்த) - "யுக்தமோ, அயுக்தமோ?" என்று நிரூபியாதே போகப் பெறலாமோ என்று அன்னைமார் தன்னைமுனிய, இழந்த எம் மாமைத்திறத்துப்போன என்னெஞ்சினாரும் அவனுடைய அழகைக் கண்டு என்னைமறந்து, வாராதே அங்கே யொழிந்தார்; இனி இங்கிருந்து என்னபுருஷார்த்தம் ஸாதிப்பது? ஆரோடே எத்தை நிரூபிப்பது? ஓதங்கிளருகிற கடலினுடைய கோஷம்போலேயிருந்த மங்களமான வேத கோஷத்தாலே ஸம்ருத்தமான தென்திருப்பேரையிலே விற்றிருந்தருளினவனுடைய, * நண்ணவசுரர்நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்தும்படி முழங்குகிற ஸ்ரீபாஞ்சஜந்யத்தை ஏந்தின அழகுவெள்ளத்திலே புக்கழுந்தினேன்; இனி, என்னைமுனிந்து ப்ரயோஜநமென்? என்று தன்னுடைய அன்னைமாரைநோக்கிச் சொல்லுகிறாள்.

ஒ.—நாலாம்பாட்டில், ஏதேனுமொன்றைக்கொண்டுவருந்திபோகிலும் போது போக்காதே இங்ஙனே செய்யலாமோ?" என்று பொடிகிற தாய்மாரைக்குறித்து, 'என் நெஞ்சும் அவனாலே அபஹ்ருதமாயிற்று, நான் எத்தைக்கொண்டு போதுபோக்குவது?' என்கிறாள். [இழந்த என்று தொடங்கி] - இழந்த என்னுடைய நிறத்தை மீட்கவேணுமென்றுபோன என்னெஞ்சும் பெரியபராஜகுலமும்தானுமாய் என்னைமறந்து அங்கேநின்றுவிட்டது. இனி வருந்தி ஆரைக்கொண்டு, எத்தைச்சொல்லிப் போதுபோக்குவேன்? [முழங்கென்று தொடங்கி] - வேதத்வநியாலே எப்போதும் முழங்காநின்ற ஸ்ரீபாஞ்சஜந்யத்தாலே அலங்க்ருதமான திருக்கையையுடைய அவ்வழகிலே நிமக்னையானேன்.

யிறே' என்றதுக்குச்சேர ஸாவம் - நெஞ்சைத்திருத்தி இத்யாதி. இதினுடைய வன்மையைத் தோழிக்குஅறிவிக்கிறவளுடைய ஹார்த்தஸாவம் - இப்போதுநீயும் இத்யாதி. வாய்த்தது - பலித்தது. நாணும்நிறையுமிரண்டும் - மாமைமுதலானவற்றுக்கும் உபலக்ஷணமாக்கி ஸாவம் - இதுஇழவாததுண்டோ என்ற. அவனுடைய க்ஷணகால விஸ்லேஷத்தால் தான் பட்ட படிகளைச்சொல்லி ஈடுபடுகிறாள் - அரைக்ஷணம் இத்யாதி நாலுவாக்யத்தாலே. விவரணம் - நான் தன்னை இத்யாதி. 'தோழீ! என்னெஞ்சம் - திங்களும்'என்று தொடங்கி, 'நங்கள்பிரானுக்கு - செங்கனிவாயின்' இத்யாரப்ய, 'அற்றுத்தீர்ந்தும் - நாணும்நிறையுமிழந்தது' இத்யந்வயஃ. (௩)

ப.—அநந்தரம், 'அவனுடைய குணசேஷ்டிதங்களிலே யகப்பட்ட என்னெஞ்சும் அங்கேபோயிற்று ; இனி யாரைக்கொண்டு போதுபோக்குவது?' என்று, நியமிக்கிற தாயாரைக் குறித்துச் சொல்லுகிறாள்.

இழந்த - முன்பேயிழந்த, எம் - என், மாமைத்திறத்து - நிறத்துக்காக, போன-, என்-, நெஞ்சினாரும்-, அங்கே - அங்கே யாஸந்நராய், ஒழிந்தார் - ராஜகுலத்தாலே என்னையொழிந்து நின்றார் ; இனி-, (அந்தரங்கமான நெஞ்சுபோனபின்பு), உழந்து - அலமந்து, ஆரை - இவ்வநுபவ†ஸிரையில் அநஸிஜ்ஞராணாரை, கொண்டு-, என்-(அவர்களுக்கு நிலமல்லாத) எந்தஅர்த்தத்தை, உசாகோ - உசாவுவேன் ? (உசாவவிருக்கிற நான்காணும்), ஓதம் - திரைக்கிளப்பத்தை யுடைத்தான, கடலொலிபோல-, எங்கும் - ஸர்வப்ரதேசத்திலும், எழுந்த - கிளர்ந்த, நல்வேதத்தொலி - ஸாமவேதகோஷமானது, நின்று - (எக்காலத்திலும்) நின்று, ஓங்கு - கிளர்ந்துவருகிற, தென்திருப்பேரெயில் - தென்திருப்பேரையிலே, வீற்றிருந்த - எழுந்தருளியிருப்பானாய், முழங்கு-(அந்த வேதகோஷ ப்ரதித்வநியாலே) முழங்குகிற, சங்கம் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, கையன்-திருக்கையிலே யுடையவனுடைய, மாயத்து - ஆஸ்சர்யமான ஸீலஸௌலப்யாதி ப்ரகாசக சேஷ்டிதங்களிலே, ஆழ்ந்தேன் - அவகாஹித்தேன் ; அன்னையர்காள் - ("மூப்பும் முறையுமுடையோம்" என்றிருக்கிற) அன்னைமீர் ! என்னை - (துணையற்று ஈடுபட்டிருக்கிற) என்னை, முனிந்து-, என் - என்ன ப்ரயோஜநமுண்டு ?

இ.—நாலாம்பாட்டில், " ஏதேனுமொன்றைக்கொண்டு வருந்தியாகிலும் போதுபோக்க வேண்டாவோ? " என்று நியமிக்கிற தாய்மாரைக்குறித்து, 'என்நெஞ்சம் அவனாலே அபஹ்ருதமாயிற்று; எத்தைக்கொண்டு போதுபோக்குவது?' என்கிறாள்.

[இழந்த இத்யாதி] - நிறந்தானேபோயிற்று "அவனை நிறங்கொள்ளவேணும்" என்று கோலியிருந்த என்னுடைய நிறத்தையிறே இழந்தது. "அந்நிறத்தை மீட்டுக்கொண்டு வருகிறேன்" என்று போன என்மநஸ்ஸாகிறதும் என்னை மறந்து அங்கே அடியுற்றது. "அவன் இழவாளனாய் நாம் இழவு பரிஹரிக்கையின்றிக்கே, நாம் இழவாளர் ஆவதே!" என்று அபிமாநித்துப்போன நெஞ்சை, வினைத்தலையிலே படையறுத்துக் கொள்வாரைப்போலே படையறுத்துக்கொண்டான். லங்கையை அரணழிக்கைக்கு ஸ்ரீவிபீஷணாழ்வானைப் பெற்றாற்போலே, என்னுடைய ஸ்த்ரீத்வமாகிற அரண் அழிக்கைக்கு உள்ளாள் பெற்றோம் என்று நெஞ்சைப் படையறுத்துக்கொண்டான். லங்கையின் அளவன்றிக்கே ஸ்த்ரீத்வாபிமாநத்துக்கு அவன் அஞ்சியிருப்பது. [நெஞ்சினார்] - அங்குத்தை ராஜகுலத்தாலே என்னைமறந்தார். பெற்றாரைக்கொண்டு வ்ருத்தகீர்த்தநம் பண்ணியாகிலும்தரிக்கவேண்டாவோ? என்ன, [உழந்து இனி இத்யாதி] - [உழந்து] - வருந்தி. [இனி] - என்நெஞ்சை இழந்தபின்பு. வருந்ினால்தான் வார்த்தை கேட்பாருண்டோ? கேட்பாருண்டானால்தான் என்னவார்த்தைசொல்லுவது? [ஓதக்கடலொலிபோல] - திரைக்கிளர்த்தியையுடைய கடல்போலே வேதத்வநிவந்து செவிப்படாநிற்க, வேறுபோதுபோக்கப்போமோ? [எங்குமெழுந்த] - ஸார்வத்ரிகமாகப்பரவாநிற்கை. இதுநடையாடாததோர் இடம்பெற்றாலிறே போதுபோக்கி யரிக்கலாவது. [நல்வேதத்தொலி] - ஸாமவேதத்வநி. "வேதாநாம் ஸாமவேதோஸ்மி" [நின்றோங்கு] - இடைவிடாதே மிக்குநிற்கை. [முழங்குசங்கக்கையன்] - வேதத்வநி ஸ்ரீபாஞ்சஜந்யத்திலே ப்ரதித்வநிக்க, அதில்

† ஸிரை - யாரை.

ப்ரதிபத்தியும் வேஷவோஷமுமாய் இரட்டித்துச்செல்லாநிற்கை. [மாயத்தாழ்ந்தேன்]- அவனுடைய ஸ்மிதவீக்ஷணாதிகளிலே மீளவொண்ணாதபடி அகப்பட்டேன். தாய்மார் என்கிற முறையைக்கொண்டு முனிந்தால் என்னப்ரயோஜநமுண்டு? ப்ராப்தியையும் மூப்பையுங்கொண்டுமுனியஅமையுமோ? ப்ரயோஜநம் வேண்டாவோ? அழகிலேயீடுபட்டாரை ஹிதம் சொல்லி மீட்கவோ?

ஈடு.—நாலாம்பாட்டு. ''ஏதேனுமொன்றைக்கொண்டு வருந்தியாகிலும் போதுபோக்காதே இங்ஙனே செய்யலாமோ?'' என்று பொடிகிற தாய்மாரைக்குறித்து, 'என்னெஞ்சம் அவனாலே யபஹ்ருதமாயிற்று: நான் எத்தைக்கொண்டு போதுபோக்குவது?' என்கிறாள்.

[இழந்த எம்மாமைத்திறத்துப்போன]-நாணும்நிறையும் இழந்ததென்றவிடம்- உபலக்ஷணமாகாதே; அநுபாஷணத்திலே நிறமிழந்தமையும் தோற்றச்சொல்லாநின்றாள். (இழந்தவெம்மாமை யென்று அநுபாஷணத்திலே - மாமையென்கிற நிறம் பூர்வமேயிழந்தமை தோற்றுகிறது; ஆகையாலே, நாணும்நிறையுமென்று உபலக்ஷணம்.) ''அத்தலையிலுள்ளது நாம் ஸர்வஸ்வஹரணம்பண்ணுகை போய், நமக்கு உள்ளதிலேயொன்றைச் சிலர் கொடுபோகையாவதேன்?'' என்று அபிமாநித்து, ''இப்போதே மீட்டுக்கொடுவருகிறேன்'' என்று த்வரித்துப்போன நெஞ்சும் அங்கே படையற்றது. [என்னெஞ்சினாரும் அங்கேயொழிந்தார்] - அங்கேபுக்காரையும் தம்படியாக்கிக்கொண்டார். ''பிரியேன்'' என்று சொன்னவரிறே இத்தலையைப்பிரிந்து நினையாதிருக்கிறார். [நெஞ்சினார்] - அலைந்த பரிவட்டமுந் தாமுமாய் அணுக்கடித்துத் திரியாநின்றாராயிற்று. [நெஞ்சினார்] ''ப்ரவேக்ஷ்யாமிசவாஹிநீம்'' (ப்ரவேக்ஷ்யாமிசவாஹிநீம்) என்று வாசித்தலையில் வ்யாபரிப்பேன் நான் என்றானிறே ஸ்ரீவிபீஷணாழ்வான். [இழந்த இத்யாதி] - நிறந்தொடக்கமான இழந்தவையடைய மீட்பதாகச் சொல்லிப்போன ...

---

நாலாம்பாட்டு.—இழந்த இத்யாதி. ''என்னெஞ்சினாரும் அங்கேயொழிந்தார், உழந்தினி யாரைக்கொண்டென்னுசாகோ'' என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - ஏதேனும் இத்யாதி. பொடிகிற - வைகிற.

மாமை - நிறம். கீழிற்பாட்டிலே நிறமிழந்தமை சொல்லிற்றே இப்போதநுபாஷிக்கைக்கென்ன - நாணும் இத்யாதி. இதுக்கு நியாமகமேதென்ன - அநுபாஷணத்திலே இத்யாதி. ''ஒழிந்தார்'' என்னுமளவுக்கும் ஸப்தார்த்தமருளிச்செய்யாநிற்கச்செய்தே, ''மாமைத்திறம்'' என்றதுக்கு, மாமைநிமித்தமாக என்று அர்த்தம்அருளிச்செய்கிறார் - அத்தலையில் இத்யாதி.ஸப்தார்த்தம் - அங்கேபுக்காரையும்இத்யாதி. படையற்றதென்றது - கிட்டிற்றென்றபடி. தம்படியேதென்ன - பிரியேன் இத்யாதி. ''நெஞ்சினார்'' என்ற பூஜ்யோக்திக்குபாவம் - அலைந்த இத்யாதி. அணுக்கடித்து-அந்தரங்கராய் அணுக்கடிக்கை - அந்தரங்கயாகை. இதுஅணுக்கடித்துத் திரிகிறதுக்கு த்ருஷ்டாந்தம் - ப்ரவேக்ஷ்யாமி இத்யாதி. ''ராக்ஷஸாநாம் வதேஸாஹம் ஸ்ந்யாஸ்யாமி லங்காயாம் வ்யஷ்டு | ஹநிஷ்யாமியதாப்ராணம் ப்ரவேக்ஷ்யாமிசவாஹிநீம்'' இதி ராமம் ப்ரதிவிபீஷணஃ (யுத் - ககூ - உங) தூசித்தலை - ஸேநாமுகம். ''திறம்'' என்றதுக்கு - ஸமூஹமாக அர்த்தாந்தரம்விவக்ஷித்து, ஸப்தார்த்தம் -நிறந்தொடக்கமான இத்யாதி.கீழே, ''அங்கேபுக்காரையும் தம்படியாக்கிக்கொண்டார்'' என்கைக்கு, உன்கார்யத்துக்காகப் போனநெஞ்சு அவன்வார்த்தைகேட்கைக்கு ஹேதுவேதென்ன - வினைத்தலையிலேஇத்யாதி. வினைத்தலை-யுத்தமுகம்.படையறுக்குமாபோலே-எதிர்த்தலையில்ஸேனை

யாபத்தியுங் கோடுத்தார். (வினைத்தலையில் படையறுக்கையாவது - யுத்தஸமயத்திலே எதிர்த்தலையில் சேனையைத் தன்பக்கலிலே யாக்கிக்கொள்ளுகை.) “**ராஜாஹ்யேஷ விபீஷண:**”(ராஜாஹ்யேஷவிபீஷண:) என்னுமாபோலே வரிசைபெற்றுத் திரியாநின்றார். ராவணன் முன்னே, அவன்சோற்றையுண்ட ஶுகஸாரணர்கள் விபீஷணாழ்வானை, “ராஜா” என்பானேன் ? என்னில்,—எழுத்துஉருவழியாதேகிடந்தாலும், புள்ளிகுத்தினால் அத்தைக்கழித்து மேலேபோமாபோலே, முடிகோடுக்குமவர்கையாலே வைக்கையாலே. என்றாலும், ராவணன்க்ரௌர்யத்தை யறிந்துவைத்துக் கூசாதே இங்ஙன் சொல்லுவானேன் ? என்னில்,—“சித்ரம்குத்துமோ” என்றிருந்தார்கள். “நிலவரைக் கோண்டு வினைசெய்யலாம்”என்று தரங்கோடுப்பரிறே. [என்னெஞ்சினாருமங்கேயொழிந் தார்] - நிறம்மீட்கப்போனாரும் நிறங்கோடுபோனாரோடொத்தார். இத்தலையில் வெறுமை கண்டு போனதுவும் பௌஷ்கல்யங்கண்டுபோனவனோடு ஒத்தது. போவார்போவாரெல்லாம் இத்தலைக்குக் காரியமாகக்காணும் போம்போது சொல்லிப்போவது ! அவன்தானே “ இத்தலையூற்றிருக்கவேணும்”என்று போனானன்; இதுஇத்தலையில் வெறுமைகண்டு, நோக்குகைக்காகப் போயிற்று. நாம்தாம் அவர்களை வெறுக்கிறதேன்? “**நோபஜநம்ஸ்மரந்**”(நோபஜநம்ஸ்மரந்) என்று புக்கார் மீளாத தேசமானபின்பு.[அங்கேயொழிந்தார்] - “கடலுக்குக் குறைநிரப்பவேணும்” என்று திரியாநின்றார். [உழந்துஇத்யாதி] - பண்டு

*ப்ர.—ததைவ [உஅ] ராஜ்யோபாதிஷ்டோத்யா ஶுகஸாரணாப்யாம் க்ருஷ்ணம் ராவணம் ப்ரதிஸாரண:, “யஸ்த ஸப்தஸாவக்ஷம் ராஜஸ்யாஸ்ரித்யதிஷ்டதி। ரக்ஷோகணவரிஷ்டோ ராஜாஹ்யேஷ விபீஷண: ॥ உஎ ॥ ஸ்ரீராமராஜராஜேந்த்ராய ஶேஷீஷ்டி தம் । தாதேவப்ரதிஸாரணோயஸ்ஸாமேயேஷாத்விவத்தம் ॥*

*யைத்தன்வசமாக்கிக்கொள்ளுமாபோலே என்றபடி. லங்கையை யழிக்கைக்கு ஸ்ரீவிபீஷணாழ்வானை அபிஷேகித்ததை இதுக்கு த்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் - ராஜா இத்யாதி. “யஸ்தஸப்தஸௌவக்ஷம்ராஜஸ்யாஸ்ரித்யதிஷ்டதி। ரக்ஷோகணவரிஷ்டோராஜாஹ்யேஷவிபீஷண:” இதி ராவணம்ப்ரதி ஸாரண:. ராவணன்முன்னே இவனை “ராஜா” என்னக்கூடுமோ? என்று சங்கித்து பரிஹரிக்கிறார் - ராவணன்இத்யாதி வாக்யத்வயத்தாலே. புள்ளிகுத்துகை - அக்ஷரத்தின் மேலே குத்துகை. முடிகொடுக்குமவர்கையாலேயென்றது - ப்ராப்தராய் ஶக்தரானவர்கையாலே என்றபடி. ‘வைக்கையாலே’என்ற அநந்தரம் என்றார்களென்றுசேஷம். இப்படிச்சொல்லில் அவன் நலியானோவென்று சங்கித்துப் பரிஹரிக்கிறார் - என்றாலும் இத்யாதி. உஹயர்க்கும் வரிசைகொடுக்கைக்கு ஹேதுவேதென்ன - நிலவரை இத்யாதி. லங்கையை யழிக்கைக்கு “நிலவர்” என்று பெருமாள் விபீஷணாழ்வானுக்கு வரிசை கொடுத்தார்; இவள் ஸ்த்ரீத்வாபிமாநத்தை யழிக்கைக்கு “நிலவர்” என்று நெஞ்சுக்குஇவன் வரிசைகொடுத்தானென்றபடி. “அங்கேபுக்காரையும்” இத்யாதிவாக்ய விவரணம் - நிறம்மீட்க இத்யாதி. ஏதத்விவரணமாதல், பாவாந்தரமாதல் - இத்தலையில் வெறுமை இத்யாதி. இப்போது வாராதேயிருந்தவர்களை இவளுக்காகப்போனார்களென்னக் கூடுமோ ? என்ன - போவார்போவார் இத்யாதி. ஆனால் அவன் எதுக்காகப்போனான் ? நெஞ்சு எதுக்காகப்போயிற்று ? என்ன - அவன்தானே இத்யாதிவாக்யத்வயம். ஊற்றிருக்கவென்றது - அபிநிவேசம் அதிசயிக்கவென்னுதல் ; உன்மஸ்தகப்ரீதிவிஸ்லேஷத்தாலே ஸாத்மித்து ஸ்வஸ்தமாயிருக்கவென்னுதல். வெறுமை - ஒன்றுமில்லாமை. “அங்கே” என்றதுக்கு - தேசமென்று விவக்ஷித்து பாவம் - நாம்தாம் பாதி. “அங்கே” என்றது - ஈஶ்வரவிஷயமாக விவக்ஷித்து பாவாந்தரம் - கடலுக்கு இத்யாதி.*

நெஞ்சிழந்தவர்களும் வருந்தி யரித்துச் சிலரோடே வ்ருத்தகீர்த்தநம்பண்ணி யிருந்திலர் களோ? நீயும் அப்படியே வருந்தியாகிலும் சிலரோடே காலக்ஷேபம் பண்ணவேண் டாவோ? என்ன, [இனி-உழந்து-ஆரைக்கொண்டு-என்-உசாகோ] - உழந்து—வருந்தி. [இனி] - என்னெஞ்சை இழந்தபின்பு. இனி து:கப்பட்டு ஆரோடேகூட எத்தைச் சொல்லி நான் காலம்போக்குவது? லங்கையிலே இருந்தவளுக்கு ஒருவனாதல் ஒரு வன்குடியாதல் உண்டு; அதுவுமில்லையே எனக்கு! "ஜ்யேஷ்டாகந்யாநலாநாம விபீஷணஸுதா" (ஜ்யேஷ்ட்டாகந்யாநலாநாமவிபீஷணஸுதா) - இங்கேயிருந்தே அங்குத்தைக்கு ஆவாளொருத்தி காண்! "கபே" (கபே) - ஓரோஅவஸ்த்தைகளிலே நீ உதவுமாபோலேகாண் இவளும் ஓரோதசைகளிலே யுதவவல்லபடி. பலசொல்லியேன் உன்னோடொப்பாளொருத்தி? [ஆரைக்கொண்டென்னுசாகோ] - தேஹாத்மாபிமாநிகளான ஸம்ஸாரிகளைக்கொண்டு போதுபோக்கவோ? "ஈஶ்வரோஹம்" (ஈஶ்வரோஹம்) என்றிருக்கிற ப்ரஹ்மேஶாநாதிகளைக்கொண்டு போதுபோக்கவோ? பகவதநுபவத்திலே அநந்யபரராயிருக்கிற நித்யஸூரிகளைக்கொண்டு போதுபோக்கவோ? இத்தலையை உரிகூறைகொண்டுபோனவனைக் கொண்டு போதுபோக்கவோ? ஆரைக்கொண்டு எத்தை யுசாவுவது? [என்னுசாகோ] - "ஸமாத்வாதஶதத்ராஹம்" (ஸமாத்வாதஶதத்ராஹம்) என்றுசொல்லலாமிறேயவளுக்கு. அப்படியே நமக்கும் ஏதேனுமுண்டோ? கலவியில் அபர்யாப்தியிருக்கிறபடி. [ஆரைக்கொண்டு] - நெஞ்சுபோலே நமக்குப் பாங்காயிருப்பாருண்டோ? ஆனால், செய்யவடுப்பதேன்? என்னில், [ஓதக்கடல்இத்யாதி]-அங்குத்தையது இங்கே நடையாடாநின்றபின்பு, நாமும்அங்கேபோய்ப்புகுமத்தனை.

[இனியாரைக்கொண்டென்னுசாகோ] - ஸுந்தரகாண்டே [௩௭], "விபீஷணஸ்ய து ஸுதா கலா நாம மநஸ்விநீ । ஸா மாம் கதயதி ஸ்மைதத் கபே காக்குத்ஸ்த நீதிஷு ॥௧௧॥ அவிந்த்யோ நாம மேதாவீ ராவணஸ்யாநுமோதிதே । ராவணம் ஸமநுப்ரேத்ய ஹிதம் வாக்யம் உவாச ஹ ॥௧௨॥ ஜ்யேஷ்டாகந்யாநலாநாம விபீஷணஸுதா கபே । தயா மம இதம் ஆக்யாதம் மாத்ரா ப்ரஹிதயா ஸ்வயம் ॥௧௧॥

மேலுக்கவதாரிகை - பண்டுநெஞ்சு இத்யாதி. பண்டுநெஞ்சிழந்தவர்கள் - ஸ்ரீஜநகராஜன் திருமகள் முதலானார். சிலரோடே - த்ரிஜடாதிகளோடே "ஆரைக்கொண்டு" என்றதுக்கு - பிராட்டியில் வ்யாவ்ருத்தி - லங்கையிலே இத்யாதி. ஒருவனாதல் என்றது - ஸ்ரீவிபீஷணாழ்வானை; திருவடியை யாதல். ஒருவன் குடியாதல் என்றது - த்ரிஜடையை. அப்படி யுண்டாயிருந்ததோ? என்ன - ஜ்யேஷ்ட்டா இத்யாதி. "ஜ்யேஷ்டாகந்யாநலாநாமவிபீஷணஸுதாகபே । தயா மம இதம் ஆக்யாதம் மாத்ரா ப்ரஹிதயா ஸ்வயம்" இதி ஹநுமத்ப்ரதி ஸீதா. "நாம" என்கிற ப்ரஸித்திக்கர்த்தம் - இங்கேயிருந்தே இத்யாதி. அங்குத்தைக்கு - பெருமாளுக்கு. ஸ்வாபதேஶம் - தேஹாத்மா இத்யாதி. உரிகூறைகொண்டு - வஸ்த்ரத்தை யுரிஞ்சிகொண்டு. † கூறை - வஸ்த்ரம். வஸ்த்ரம்முதல்கொள்ளையிட்டுக்கொண்டென்றபடி. பிராட்டியில் வ்யாவ்ருத்தி - ஸமாத்வாதஶ இத்யாதி. அப்படி இவளுக்குக் கீழ்ஒருகாலும் ஸம்ஶ்லேஷமில்லையோ? என்ன - கலவியில் இத்யாதி. அந்யாபதேசத்திலே அர்த்தம் - நெஞ்சுபோலே இத்யாதி. "இனி" என்றதுக்கர்த்தமாதல், "ஒங்கு" என்றதுக்குபாவம் - அங்குத்தையது இத்யாதி; அதாவது - பரமபதத்திலே யுண்டான ஸாமக்ராம் இங்கே நடையாடாநின்றபின்பு என்றபடி. ஓதக்கடல் - திரைக்கிளப்பத்தையுடைய கடல். ஓதங்கிளர்ந்த - அலையெழுந்த என்னுதல், ஸம்ருத்தமான என்னுதல். தென்திருப்பேரெயிலுள்ளார்

† உரி-வஸ்திரம் என்ற இருப்பின் நலம்: அன்றி, உரி கூறைகொண்டு என்ற மூலபாடத்தைக்கொண்டு, கூறை - வஸ்திர மெனினுமாம்.

ஓதங்கிளர்ந்தகடல்போலேயிருந்துள்ள வேதகோஷமானது எங்கும் பரம்பாநின்ற தென் திருப்பேரையில்வீற்றிருந்த. [நல்வேதம்] - "வேதாநாம்ஸாமவேதோஸ்மி" (வேதாநாம்ஸாமவேதோஸ்மி) என்கிற ஸாமத்வநியாய்க்கிடக்குமத்தனை, பார்த்தபார்த்தவிடமெங்கும்; அவ்விருப்பைக்கண்டு முக்தர் ஸாமகாநம்பண்ணி ப்ரீதிக்குப் போக்குவிடுமா போலே. [முழங்குசங்கக்கையன்] - வேதத்வநியானது ஸ்ரீபாஞ்சஜந்யத்தைக்கிட்டி ப்ரதித்வநியேழாநிற்கும். [மாயத்தாழ்ந்தேன்] - அவனுடைய ஸ்மிதவீக்ஷணாதிகளிலே மீளவொண்ணாதபடி யகப்பட்டேன். [அன்னையர்காளென்னை யென்முனிந்தே] - ப்ராப்தியுண்டேன்றுச் சீறுமத்தனையோ? சீற்றத்துக்கேதிர்த்தலையும் வேண்டாவோ? யர்மியுண்டாய் முனியவேணுமே! [மாயத்தாழ்ந்தேன் - என்னையேன்முனிந்தே] - ஸ்வாதீநரையன்றே முனிந்தால் ப்ரயோஜநமுள்ளது! (௪)

## ஐந்தாம் பாட்டு.

முனிந்துசகடமுதைத்துமாயப்பேய்முலையுண்டுமருதிடைபோய்க் [ன்
கனிந்தவிளவுக்குக்கன்றெறிந்தகண்ணபிரானுக்குஎன்பெண்மைதோற்றே
முனிந்தினியேன்செய்தீர் அன்னைமீர்காள்?முன்னியவன்வந்துவீற்றிருந்த
கனிந்தபொழில்திருப்பேரெயிற்கே காலம்பெறஎன்னைக்காட்டுமினே.

ஆ.—(முனிந்து) - உன்னுடைய ஸ்த்ரீத்வத்துக்குப் போருமோ என்று அவர்கள் பின்னையும் தன்னைமுனிய, ஸ்தந்யார்த்தியாய் ரோஷத்தாலே சகடத்தைப் பாய்ந்த திவ்யசேஷ்டிதத்துக்கும், வஞ்சனையால் வந்த பேய்ச்சிமாயும்படி முலையுண்ட திவ்யசேஷ்டிதத்துக்கும், கனிந்தவிளவுக்குக்கன்றெறிகைக்காக விளங்கனியைக் குறித்துப் பார்த்தருளின பார்வைக்கும் என்பெண்மை தோற்றேன்; நீங்கள் இனி என்னை முனிந்துசெய்வதென்? என்னுடைய வரவுபார்த்து முன்னமேபோய் அவன்வீற்றிருந்த நிரவதிகபோக்யமான சோலையையுடைத்தான தென்திருப்பேரையிலே கொண்டுபோய் அவன்பக்கலிலே என்னை ஈண்டக் காட்டிக் கொடுங்கோள் என்கிறாள்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், "இங்ஙனேவிரைகை ஸ்த்ரீத்வத்துக்குப்போராது காண்" என்றுதாய்மார் அலைக்க,'அது பண்டேபோயிற்று;ப்ரயோஜநமில்லாத உமையிலே கொண்டுபோகநில்லாதே, ஒக்கவேகொண்டுபோய்த் தென்திருப்பேரையிலே என்னை விடுங்கோள்' என்கிறாள். [முனிந்து] - யசோதைப்பிராட்டி முலைதாழ்த்தவாறே சீறி; கண்வளர்ந்தநளுகைக்கு விரோயமாம்படி யூரப்புக்கவாறே சீறி என்றுமாம். [மாயப்

ஸாமகாநம்பண்ணுகிறதுக்கு த்ருஷ்டாந்தம் - அவ்விருப்பை இத்யாதி. அவ்விருப்பை - பரமபதத்திருப்பை. முழங்குகைக்கு ஹேது - வேதத்வநி இத்யாதி. இவ்வாக்யாநந்தரம் அவ்விருப்பை இத்யாதிவாக்யமிருந்ததாகில், முழங்குகிறதுக்கு த்ருஷ்டாந்தம் - அவ்விருப்பை இத்யாதி என்று கண்டு கொள்வது. ஸப்தார்த்தம் - அவனுடைய இத்யாதி. "அன்னையர்காள்! முனிந்து - என்?" என்றதுக்குபாவம் - ப்ராப்தி இத்யாதி. "என்னை" என்றதுக்கு பாவம் - சீற்றத்துக்கு இத்யாதிவாக்யத்வயம். "ஆழ்ந்தேன்" என்றதிலே நோக்காக பாவம் - ஸ்வாதீநரை இத்யாதி. "வேதாநாம்ஸாமவேதோஸ்மி தேவாநாமஸ்மிவாஸவ:" இத்யாதி கீதையாம் உபமே. 'அன்னையர்காள்! இழந்த எம்மாமை' என்று தொடங்கி, 'மாயத்தாழ்ந்தேன், என்னை - முனிந்து - என்' இத்யந்வய:. (௫)

பேய்] - வஞ்சகையான பேய். [கண்ணபிரானுக்குஎன்பெண்மைதோற்றேன்] - மஹோபகாரகனான க்ருஷ்ணனுக்கு என்ஸ்த்ரீத்வத்தைத் தோற்றேன். [முன்னி] - முற்கோலி.

ப.—அநந்தரம், அநிஷ்டநிரஸந ஶீலனான க்ருஷ்ணனுக்கு என்னுடைய ஸ்த்ரீத்வத்தை இழந்தேன்; நிரர்த்தகமாக நியமிக்கத்தேடாதே, விளம்பியாதே அவனிருக்கிற தேசத்திலே கொடுபோய்க் காட்டுங்கோளென்கிறாள்.

முனிந்து - மூலவாவுதாழ்த்துச்சீறி, (வத்தாலே திருவடிகளைநிமிர்த்து), சகடம் - சகடத்தை, உதைத்து-, மாயம் - தாய்வடிவுகொண்டுவந்த, பேய்-பேயை (முடியும்படி), முலைஉண்டு-, மருதிடை - (த்வந்த்வமான) மருதிடையே, போய் - (வழிகண்டு) போய், கனிந்த - பழுத்த, விளவுக்கு - விளவாய்நின்றவசுரனைக்குறித்து, கன்று - கன்றாய் வந்தஅசுரனை, எறிந்த-, கண்ணன் - க்ருஷ்ணனாகிற, பிரானுக்கு - மஹோபகாரகனுக்கு, என்—என்னுடைய, பெண்மை - ஸ்த்ரீத்வத்தை, தோற்றேன் - இழந்தேன்; இனி - இவ்வளவிலும், (இவ்வவஸ்த்தையறிந்தே), அன்னைமீர்காள் - தாய்மாரே! முனிந்து - என்னை நியமித்து, (என்னிஷ்டஞ்செய்திகோளல்லீர், உங்களிஷ்டம் தலைக்கட்டிற்றில்லை); என் - என்னகாரியம், செய்தீர் - செய்தீராய்நின்றீர்; (என்னபிமதம் கேட்கில்), அவன்-, முன்னி - முற்கோலி, வந்து-, வீற்றிருந்த - எழுந்தருளியிருக்கிற, கனிந்த - ஃபலபுஷ்பபூர்ணமான, பொழில் - பொழிலையுடைய, திருப்பேரெயிற்கே-, என்னை - (க்ரமப்ராப்திபற்றாத) என்னை, காலம்பெற - விளம்பியாதபடி, காட்டுமின் - கொடுபோய்க் காட்டுங்கோள்.

இ.—அஞ்சாம்பாட்டில், "இங்ஙன்விரைகை ஸ்த்ரீத்வத்துக்குப்போராது" என்று தாய்மார்அலைக்க, 'அதுவும் பண்டேபோயிற்று; ப்ரயோஜநமில்லாத ஊரையிலே கொடுபோகவில்லாதே, ஏற்கவே அங்கே கொடுபோய்விடுங்கோள்' என்கிறாள். [முனிந்துசகடமுதைத்து] - ஸ்தந்யார்த்தியாய்ச்சீற, அதுக்குஇலக்காய் சகடாஸுரன் முடிந்துபோனான். ஸ்தந்யார்த்தியாய்ச்சீற, அதிலே ஈலித்தான். சகடம்மேலிடப்புக்க வாறே சீறிஎன்றுமாம். தாய்வடிவுகொண்டுவந்த பூதனையை "ப்ராணைஸ்ஸஹ ஸ்தந்யம் பபௌ" என்கிறபடியேமுடித்து. செறிந்துநின்ற மருதின்நடுவே வழிகண்டு போய். பழுத்த விளவாய்நின்ற அஸுரனைக் கன்றாய்வந்த அஸுரனாலேஎறிந்து ஊட்டியாகமாய்த்த உபகாரகனான க்ருஷ்ணனுடைய பும்ஸ்த்வத்துக்கு என்ஸ்த்ரீத்வத்தைத் தோற்றேன். விரோதிவர்கத்தை அழியச்செய்த ஆண்பிள்ளைத்தனத்தைக்காட்டி, ஒருகாலும் அழியாதஸ்த்ரீத்வத்தை அழித்தான். [முனிந்தினி]-அவன் அவ்வபதாநம்செய்வதற்குமுன்பே மீட்கப்பார்க்கவேண்டாவோ? [என்செய்தீர்] - எனக்கு அநுகூலைகளானீரல்லீர்; மீட்கத்தொடங்கினது தலைக்கட்டிற்றன்று. [அன்னைமீர்காள்]-பொடிகைக்கு முறையமையுமோ? ஃபலம்வேண்டாவோ? [முன்னியவன்வந்து] - அவன் முறைகூறிக் கொண்டுவந்து. [வீற்றிருந்த] - இத்தலையை அழிக்கைக்குவேண்டும் பரிகரத்தால் குறைவற்றிருந்த. [கனிந்தபொழில்]-ஸர்வதா ஃபலபுஷ்பமாயிருக்கும்பொழில். [காலம்பெற]-மதேஜலே ஸேதுபந்தநமாகாதபடி ஏற்கவேஅவ்வூரிலே கொடுபுகுங்கோள். [என்னை]-என்னைக்கண்டிகோள்! உங்களுக்கு "க்ரமத்திலேசெய்கிறோம்" என்னலாயிருந்ததோ?

ஈடு.—அஞ்சாம்பாட்டு. "இங்ஙனேவிரைகை ஸ்த்ரீத்வத்துக்குப் போராது காண்"என்று தாய்மார் அலைக்க,'அதுவும்பண்டேபோயிற்று; ப்ரயோஜநமில்லாதஜ்ஜையிலே கொடுபோகநில்லாதே, என்னைஏற்கவே கொடுபோய்த் தென்திருப்பேரையிலே விடுங்கோள்' என்கிறாள். முனிகிறதுதான் எனக்கு ஹிதம்பார்த்தேயாகில் என்ஹிதத்திலே ப்ரவர்த்திக்கப் பாருங்கோள்.

[முனிந்துஇத்யாதி] - என்னினைவுதன்னை புத்திபண்ணுங்கோள் ; அவன் முனிவிலே யகப்பட்டநான் இனியுங்கள் முனிவுக்கு மீளுவனோ ? ஹிதமுமாய் ப்ரியமுமானமுனிவிலே யகப்பட்டநான் அஹிதமுமாய்அப்ரியமுமான உங்கள்முனிவுக்கு மீளுவனோ ? [முனிந்துசகடமுதைத்து] - முலைவரவுதாழ்த்தேன்று சீறிநீட்டின திருவடிகளுக்கு இலக்காய்ப் பொடிபட்டதாயிற்று சகடம். "ஸ்தந்யார்த்தீ ப்ரருரோதஹ" (ஸ்தந்யார்த்தீ ப்ரருரோதஹ) இறே. [மாயப்பேய்முலையுண்டு] - "முலையை நினைத்துச் சீறினன்" என்று முலைகொடுக்கத் தாய்வடிவுகொண்டுவந்த வஞ்சகையான பேய்ச்சியை முடித்து. [மருதிடைபோய்] - முலையுண்டால் தவழுமத்தனையிறே. புறம்புநின்றும்வந்து நலிகை யன்றிக்கே, நின்றவிடத்தே நின்று தப்பாமே கொல்லநினைத்த யமளார்ஜுநங்களைப் பொடிபடுத்தி. [கனிந்தஇத்யாதி]-அசுராவேசத்தாலே ஒன்று கனிந்தவிளவாய், ஒன்று கன்றாய்நின்றது; அதிலேயொன்றையிட்டொன்றையெறிந்து இரண்டையும் முடித்த. [கண்ணபிரானுக்கென்பெண்மைதோற்றேன்] - அழியுமவற்றையும்அழித்தான்: அழியாததையும் அழித்தான். வன்மையாலேயழித்தான்அவற்றை (கண்ணபிரானிறே) ;மென்மையாலே யழித்தான்† இவளை.[பிரானுக்கு] - அவற்றின் கையில் தான்அகப்படாதே தப்பித் தன்னைத்

*அஞ்சாம்பாட்டு.—முனிந்து இத்யாதி. "கண்ணபிரானுக் கென்பெண்மை தோற்றேன் காலம்பெறவென்னைக் காட்டுமின்"என்கிற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - இங்ஙனே இத்யாதி. விரைகை - த்வரிக்கை. "தோற்றேன்" என்று - பூதமாயிருக்கையாலே பண்டேபோயிற்றென்றது. "முனிகிறவெங்களைக் காட்டுமின்" என்கிறதென்? என்ன-முனிகிறதுதான் இத்யாதி வாக்யத்வயம்.*

*"தோற்றேன்" என்னுமளவுக்கும்ஹாவம் - என்னினைவுதன்னை இத்யாதி. விவரணமாதல், "முனிந்தினியென்செய்தீர்" என்றதுக்கு ஹாவமாதல் - அவன் முனிவிலே இத்யாதி. அதுக்கு ஹேதுவேதென்கிற சங்கையிலேயாதல், ஏதேனுமாகமுனிவிலே யகப்படுகிறாயாகில் எங்கள் முனிவிலே யகப்பட்டாலோவென்கிற சங்கையிலேயாதல் அருளிச்செய்கிறார்-ஹிதமுமாய் இத்யாதி. அதாவது- அவன்முனிவு ஆஸ்ரிதவிரோதிநிவ்ருத்திக்குஉடலாகையாலும்,அதுதான் ஆஸ்ரிதவாத்ஸல்யமாகையாலும், ஹிதமாயும் ப்ரியமாயுமிருக்கும்; உங்கள் முனிவு சேஷியிருந்த விடத்தில் செல்லுகை ஸ்வரூபமாயிருக்க இத்தை ஸ்வரூபவிருத்தமென்று விலக்குகையாலும், அதுதான் எனக்கு அநிஷ்டமாயிருக்கையாலும், அஹிதமாயும் அப்ரியமாயும் இருக்குமென்றபடி. சீறியுதைக்கும் ப்ரகாரத்தைக்காட்டுகிறார் - முலைவரவு இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம்-ஸ்தந்யார்த்தீ இத்யாதி. "கதாசித் சகடஸ்யாதஸ் சயாநோ மதுஸூதந: சிக்ஷேப சரணாவூர்த்வம் ஸ்தந்யார்த்தீ ப்ரருரோதஹ" இதிபஞ்சமேம்ஸே ஷஷ்ட்டே. முனிந்து - சீறி. மாய - முடியும்படி. பௌர்வாபர்யத்துக்குஹாவம்-முலையுண்டால் இத்யாதி. கனிந்த - பழுத்த. விரோதிநிரஸநகதநாநந்தரம், "பெண்மைதோற்றேன்" என்றதுக்குஹாவம் - அழியுமவற்றை இத்யாதி. அழியுமவையாவன - விரோதிகளாகையாலே யழிக்கைக்கு யோக்யங்களான சகடாதிகள். அழியாதது - பெண்மை. எத்தாலேயழித்தான்?என்ன-வன்மையாலே இத்யாதி. மென்மையென்று - மார்த்தவமாய், அத்தாலே - ஸௌலப்யமென்றபடி. இவளுக்குச்செய்தவுபகாரமேதென்ன - அவற்றின் இத்யாதி. "பிரான்" என்றதுக்கர்த்தாந்தரமாதல், இவ்*

*† இவற்றை என்று பாடாந்தரம்.*

தந்த வுபகாரத்துக்குளழுதிக்கோடுக்கிருள் காணும். சேஷியானதன்னையுண்டாக்கி, என்னை சேஷத்வத்தினுடைய எல்லையிலே நிறுத்தினன். ‘பஹூநிமேவ்யதீதாநிஜந்மாநி’ (பஹூநிமேவ்யதீதாநிஜந்மாநி) என்கிற அவதாரங்களோபாதி பாரப்பப்போருங்காணும் இவ் வவதாரத்தில்இவளைப்பெறுகைக்குப் பண்ணின ப்ரவ்ருத்திகளும் அவனுக்கு. ஆஸ்ரிதவாத்ஸல்ய கார்யமான முனிவிறே. [கண்ணபிரானுக்கு என்பெண்மைதோற்றேன்] “அதோஸ்மிலோகேவேதேசப்ரதிதஃபுருஷோத்தமஃ” (அதோஸ்மிலோகேவேதேசப்ரதிதஃபுருஷோத்தமஃ) என்றும் “ஜாநாதிபுருஷோத்தமம்”(ஜாநாதிபுருஷோத்தமம்)என்றுஞ்சோல்லுகிற தன்னுடையபும்ஸ்த்வத்தைக்காட்டிக்காணும் இவளுடைய ஸ்த்ரீத்வத்தையபஹரித்தது! [பெண்மைதோற்றேன்]-தோலாததுதோற்றேன். [மூனிந்தினியித்யாதி]-இனி மீட்கலாமென்றே நினைக்கிறது? மீட்கநினைக்கிறநீங்கள் அவனுடைய அபதாநங்களுக்கு முன்னேயன்றோமீட்கப்பார்ப்பது?[என்செய்தீர்]-எனக்குஅநுகூலைகளானீரல்லீர்;மீட்கத்தொடங்கினது தலைக்கட்டிற்றன்று. [அன்னைமீர்காள்] — ஜந்மப்ரப்ருதிஎன்ப்ரக்ருதியறிந்துபோருகிற நீங்கள் மீட்கப்பார்ப்பதே! அவன்பண்ணினஉபகாரங்களை யறியாமையிறே நீங்கள் பொடிகிறது. ‘அவன் பண்ணினவுபகாரம் மறக்கவொண்ணாதாகில் நினைக்கிறும். பெற்றுவளர்த்த எங்களுடைய உபகாரமும் நினைக்கவேணுங்காண்!’ என்ன, [முன்னியவன்வந்து விற்றிருந்த]-உபகாரத்தில் முற்பாடன்அவன் காணுங்கோள். [முன்னி] - முற்பாடனாய்நின்று: “பூர்வஜ” (பூர்வஜ) என்னும்படியே; என்னைப்பெறுகைக்குஅவஸரப்ரதீக்ஷனாய்க் கொண்டு தன்வேறுபாடு தோற்றவிருக்கிற. [கனிந்தபொழிலித்யாதி]-கொண்டேக்குக்காட்டு வார்தாழ்வே; அங்குள்ளதேல்லாம் பக்வபலமாயிருக்கும். கனிந்தமரம் கண்டால் “அஸாரவேசமுண்டு” என்றுஅஞ்சவேண்டாத சோலை. [காலம்பெறவென்னைக்காட்டுமினே]-இக்

வுபகாரகதநாநந்தரம் “பெண்மைதோற்றேன்” என்கிறதுக்குபாவமாதல் - சேஷியான இத்யாதி. அநேகவிரோதிநிரஸநம் அருளிச்செய்கிறதுக்குபாவம்-பஹூநி இத்யாதி. ப்ரவ்ருத்திகளாவன:சகடாசுரநிரஸநாதிகள். முனிவுக்கிடேடைக்கூடுமோ? என்ன - ஆஸ்ரித இத்யாதி. நீரேழலாங்கூட்டி “பெண்மைதோற்றேன்” என்றதுக்குபாவம் - அதோஸ்மி இத்யாதி. “யஸ்மாத்க்ஷரமதீதோஹமக்ஷராதபிசோத்தமஃ। அதோஸ்மி” இத்யாதி. “யோமாமேவமஸம்மூடோஜாநாதி புருஷோத்தமம்। ஸஸர்வவித்பஜதிமாம்ஸர்வபாவேநபாரத” இதிச்சதாநை (சுதி) புருஷோத்தம வித்யாயாம். லோகமென்றது-ஸ்ம்ருதி.ந்ருந்தொடக்கமானவை இருந்ததண்டாயிருக்க “பெண்மைதோற்றேன்” என்றதுக்குபாவம் - தோலாதது இத்யாதி. “இனி” என்றதுக்குபாவம் - இனிமீட்கலாம் இத்யாதி. மீட்கலாமென்றே என்கிறவிடத்திலே - காகுஸ்வரம். பின்னைப்போது மீட்கலாமென்ன - மீட்கநினைக்கிற இத்யாதி. “அன்னைமீர்காள்” என்கிறதுக்குபாவம்-ஜந்மப்ரப்ருத இத்யாதி. மீட்கப்பார்ப்பதே என்கிறவநந்தரம், ஆகையாலே ‘அவன்பண்ணின’ என்று கூட்டுவது. மேலுக்கவதாரிகை - அவன்பண்ணினவுபகாரம் மறக்க இத்யாதி. முன்னி - முற்பாடனாய். அப்படி முற்பாடனாயிருக்குமோவென்ன, ப்ரமாணகதந பூர்வகமாக ஸப்தார்த்தம் - பூர்வஜ இத்யாதி. “ஜிதந்தேபுண்டரீகாக்ஷ” இத்யாதி பதப்ரயோகத்துக்குபாவம் - கொண்டுபுக்கு இத்யாதி. அங்குள்ளதெல்லாம் பக்வபலமாயிருக்கும் என்றதுக்குபாவம் - அங்கீகரிக்கைக்கு அவஸரப்ரதீக்ஷனாயிருக்குமென்றபடி. “கனிந்தபொழில்” என்கையாலே *கனிந்தவிளவில் வ்யாவ்ருத்தியருளிச் செய்கிறார் - கனிந்தமரங்கண்டால் இத்யாதி. அதாவது - உகந்தருளினநிலமாகையாலே விரோதிகளில்லையென்றபடி. காட்டுகை நிஸ்சிதமானவன்றோ “காலம்பெற - காட்டுமின்” என்பது? என்ன-

குடிக்குமெனக்கும் பரிஹாரமொன்றேயிறே. பின்னையும் என்னையங்கேகொண்டுபோய்ப் பரிஹரிக்கை தவிரிகோள்; நானுளேனானபோதே அத்தைச்செய்யப்பாருங்கோள். பின்னை மதேஜலே ஸேதுபந்த மாகாமே, நான்ஜீவிக்குமெல்லையிலேகாட்டுங்கோள். (௫)

---

## ஆறாம் பாட்டு.

---

காலம்பெறவென்னைக்காட்டுமின்கள் காதல்கடலின்மிகப்பெரிதால் [ன்
நீலமுகில்வண்ணத்தெம்பெருமானிற்குமுன்னேவந்தென்கைக்குமெய்தா
ஞாலத்தவன்வந்துவீற்றிருந்தநான்மறையாளரும்வேள்வியோவா
கோலச்செந்நெற்கள்கவரிவீசுங்கூடுபுனல்திருப்பேரெயிற்கே.

ஆ.—(காலம்பெற.) - "வேட்டைக்கெழுந்தருளினவத்தனையன்றோ, இப்போதே யெழுந்தருளுகிறானிறே! இங்ஙனே பதறவேணுமோ?" என்று அவர்கள் சொல்ல, எனக்குஅவன் திறத்திலுள்ள அபிநிவேஶவெள்ளத்துக்கு ஒருமுடிவில்லை; நீலமேகஶ்யாமமான திவ்யரூபத்தினுடையஅழகாலே என்னைத்தோற்பித்து அடிமையாக்கினவன் என்கண்களிலே வந்துதோற்றாநிற்கும்: என் கைக்குமெய்தான். பரமபுருஷ ஸமாராதனைகவேஷ நித்யநைமித்திகாதி ஸர்வகர்மாநுஷ்டாந நிரதராய் வேதவிதக்ரேஸரரான திவ்யஜநங்களாலே ஸததபரிபூர்ணமாய், அதிரமணீயபரிணதசாலி சாமரங்களாலே வீஜ்யமாநமாய், ஸுப்ரஸந்ந ஸலிலதாம்ரபர்ணீஸரித் பரிவ்ருதமாயிருந்த திருப்பேரையிலே எனக்காகவெழுந்தருளியிருந்த பெரியபெருமாள் பக்கலிலே காலம்பெற என்னைக்காட்டுமின்களென்று தன்னுடைய அன்னைமாரை நோக்கிச்சொல்லுகிறாள்.

ஒ.—ஆறாம்பாட்டில், நீங்கள் "'கொண்டுபோவோமோ, அல்லோமோ" என்று விசாரிக்கும் அமையன்றிக்கே, எனக்கு அபிநிவேஶமானது அறமிக்கது; எனக்கு இங்குத்தரிப்புஅரிது; ஈண்டென என்னைத்தென்திருப்பேரையிலே கொண்டுபோய்க் காட்டுங்கோள்' என்கிறாள்.

[நீலமுகில்வண்ணத்தெம்பெருமான் நிற்கும்முன்னே வந்தென் கைக்குமெய்தான்] - உருவெளிப்பாட்டாலே நலிகிறபடியைச் சொல்லுகிறது. [ஞாலத்தவனென்று தொடங்கி] - ஸம்ஸாரத்திலே அவன்வந்து தன்னுடைய ஐஶ்வர்யமெல்லாம் தோற்றும்படி யிருந்தருளுவதுஞ்செய்து அவனுக்கு வைதிகர்பண்ணும் ஸமாராதநங்கள் நிரந்தரமாகச் செல்லாநிற்பதுஞ்செய்து கவரி வீசினாற்போலே மநோஹரமாம்படி செந்நெற்கள் அலைவதுஞ்செய்து சுற்றும் சேர்ந்திருந்துள்ள புனலையுடைத்தான தென்திருப்பேரையிலே. கூடுபுனல் - ஊற்று நீரும், மழைநீரும், ஆற்றுநீரும்கூடின புனல் என்றுமாம்.

---

இக்குடிக்கும் இத்யாதி. இவள் ஜீவநத்வாரா இக்குடிக்கும் ஜீவநமென்றகருத்து. "காலம்பெற" இத்யாதிக்கர்த்தம் - பின்னையும் இத்யாதிவாச்யத்வயம். விவரணம் - பின்னை மதேஜலே இத்யாதி 'அன்னைமீர்காள், முனிந்துசகடம்' என்றுதொடங்கி, 'தோற்றேன், இனி - முனிந்து - என்செய்தீர்? முன்னியவன்' இத்யாரப்ய, 'காட்டுமினே' இத்யந்வயஃ. (௬)

ப.—அநந்தரம், உதாரஸ்வபாவனான அவன் ஸந்நிஹிதனாய்வைத்து ஸம்ச்லேஷ ப்ரதனல்லாமையாலே அபிநிவேசம் கரைபுரண்டு செல்லாநின்றது; அவனிருக்கிற தேசத்திலே சடக்கெனக் கொடுபோங்கோளென்கிறாள்.

நீலமுகில் - காளமேகம்போலே, வண்ணம் - உதாரஸ்வபாவமான வடிவழகைக்காட்டி, எம் - என்னை யடிமைகொண்ட, பெருமான் - ஸ்வாமியானவன், முன்னை - என்முன்னே, வந்து - வந்து, நிற்கும் - உருவெளிப்பாடாம்படி நில்லாநிற்கும்; (வந்தவன் தானே மேல்விழுந்தணையாதொழிகையன்றியே), என் - என், கைக்கும் - கைக்கும், எய்தான் - (எட்டாதபடி அம்மேகம்போலே) தூரஸ்த்தனாநிற்கும்; (ஆகையாலே), காதல் - காதலானது, கடலில் - கடல்புரையுமளவன்றியே, மிக - மிக, பெரிது - பெரிதாயிராநின்றது; (ஆனபின்பு), ஞாலத்து - பூமியிலே, வந்து - (அவ்வடிவழகோடே) வந்து, அவன் - அவன், விற்று - தன் ஔதார்யந்தோற்றும்படி, இருந்த - இருக்குமிடமாய், (அங்குவர்த்திக்கிற), நான்மறையாளரும் - சதுர்வேதிகளான விலக்ஷணபுருஷர்களும், வேள்வி - ததாராதநரூபமான வைதிகாநுஷ்டாநத்தில், ஓவா - ஓவாதே நடக்கும்படியாய், கோலம் - தர்சநீயமான, செந்நெற்கள் - செந்நெற்கதிர்கள், கவரி - கவரிபோலே, வீசும் - அசையும்படியுமாய், கூடு - ததநுரூபமாகச்சேர்ந்த, புனல் - ஜலஸம்ருத்தியையுமுடைய, திருப்பேரெயிற்கே - திருப்பேரெயிற்கே, என்னை - (விளம்பாக்ஷமையான) என்னை, காலம்பெற - கடுக, காட்டுமின்கள் - கொடுபோய்க் காட்டுங்கோள்.

இ.—ஆறும்பாட்டில், 'நீங்கள் ஆறியிருக்கும் அளவல்லாதபடி எனக்கு அபிநிவேசம் மிகாநின்றது, சடக்கென அங்கேகொண்டுபோய்விடுங்கோள்' என்கிறாள்.

[காலம்பெற] - ஒரு க்ஷணமாகிலும் முற்படச்செய்யப் பாருங்கோள். [என்னை] - எனக்கு ஸ்வபாவமென்று செய்யப்பார்த்திலீகோளாகிலும், என்னை விசேஷித்துக்கொண்டு போகப்பாருங்கோள். 'உனக்கு வாசிஎன்'? என்ன, [காதல் கடலில் மிகப்பெரிதால்] - "காதல் கடல்புரையவிளைவித்த" என்ற அளவன்று; மடலூரப்புக்கபோது விலக்கினவர்கள் தாங்களே கொண்டுபோய்க் காட்டவேண்டும் உரையாயிற்றிது. அதுக்குஹேது என்? என்ன, [நீலமுகில்வண்ணத்தெம்பெருமான் நிற்கும்முன்னேவந்து] - ப்ரமஹரமானவடிவைக் காட்டியாயிற்று ஆசையை வளர்த்தது. அவன் காதலுக்கு க்ருஷிபண்ணுகிற்க, என்றால் ஸ்த்ரீத்வத்தைநோக்கி இருக்கப்போமோ? முன்னே நிற்கை பொல்லாதோ? என்ன, [என் கைக்குமெய்தான்] - உருவெளிப்பாடன்றிக்கே, கையாலே ...க்க எட்டிறுலன்றே அழுகிறது. வார்த்தை சொல்லாமையன்றிக்கே, ...ம் எட்டுகிறிலன். தான் மேல்விழுந்து அணையாமையன்றிக்கே, நான் மேல்விழுந்து அணைக்கைக்கும் எட்டுகிறிலன். ஆனால் செய்யவடுப்பது என்? என்ன, அவன் வந்திருக்கிற ஊரிலே கொண்டுபோய்விடப் பாருங்கோள். [ஞாலத்தவன்வந்து வீற்றிருந்த] - நீலமுகில் வண்ணத்தை யுடையவன் பரமபதத்தில் நின்றும்வந்து "ஸம்ஸாரம்" என்று உபேக்ஷியாதே, * கலங்காப்பெருநகரிலே இருக்குமாபோலே குறைவற்றிருக்கிற தேசம். [நான்மறை இத்யாதி] - வேதார்யவித்துக்களும் ஸமாராதநத்திலே நிரந்தரமாக ப்ரவ்ருத்தரானார்கள்; செந்நெற்களும் மநோஹரமாம்படி கவரி வீசினாற்போலே அசைந்துவாராநின்றது; * சூட்டுநன்மாலைப்படியே இங்குள்ள வேதநரோடு அங்குள்ள வேதநரோடுவாசியற அநுகூலமாயிருக்கிறபடி. [கூடுபுனல்] - ஆற்றுநீரும்

*ஊற்றுநீரும், வர்ஷஜலமும் அவனும் நானும் ஜலக்ரீடைபண்ணலாம் தேசத்தே கொடு போய்விடப்பாருங்கோள். சுற்றும் சேர்ந்த புனல் என்றுமாம்.*

ஈடு. —ஆறும்பாட்டு. நீங்கள் "கொடுபோவோமோ அல்லோமோ?" என்று விசாரிக்கும் தசையன்றிக்கே, எனக்குஅபிநிவேசமானது அறமிக்கது; எனக்குஇங்குத்தரிப்புஅரிது ; ஈண்டென என்னைத்தென்திருப்பேரையிலே கொடுபுக்கு மகரநெடுங்குழைக்காதனைக்காட்டுங்கோ ளேன்கிறாள்.

[காலம்பெறவென்னைக்காட்டுமின்கள்] - குடிக்குப் பரிஹாரமன்றாகிலும் எனக்குப் பரிஹாரம்இதல்லதில்லை. இனி என்மேல் குற்றமில்லை. என் ? இப்படிக் கடுகவேண்டுவானேன்? என்னில், [காதல்கடலின் மிகப்பெரிதால்] - இக்காதல்அளவுபட்டோ இருக்கிறது? முதற்சொன்னவார்த்தையைக்காணுங்கோள். நீங்கள் நினைக்கிறது * கடல்புரைய என்றாளே. ஒருகாரியப்பாட்டாலே விளைந்ததுபோலன்றிறே உகப்பாலேவிளைந்திருப்பது. ஆனாலும் காதலையளவுபடுத்தி, நாங்கள் சொல்லுகிறவார்த்தையைக்கேட்டு எங்களோடே ஒழுகவேண்டாவோ? என்ன, [நீலமுகில்வண்ணத்தெம்பெருமான்]-நான்உங்கள் வழியே போகவோ? இவன்வழியேபோகவோ? என்னை அப்படிசேர்த்துவிடவந்து முன்னேநிற்க, நான்மீளும்படியேன்? அப்படியாலே அவன் துவக்காநிற்க, உங்கள்வார்த்தையைக்கேட்கவோ? ஸ்ரமஹரமான வடிவைக்கொண்டு முன்னேநின்று காதலுக்கு வர்த்தகனாகாநின்றான். இக்காதலை ஒருபடியேவளர்க்கிறதிறே. * கடல்புரையவிளைவித்ததும் காரமர்மேனியிறே. [நிற்கும்முன்னேவந்து] - இவன் கிட்டநின்றிலனாகில் நான்உங்கள்வார்த்தை கேட்டு மீளேனோ ? ஆனால்உனக்குப்போல்லாதோ ? என்ன, [என் கைக்கு மெய்தான்] - அழகிதிறே,எனக்கு இப்படி தரப்பெறில், வார்த்தைசொல்லுதல், அணைத்தல் செய்யாமையே

*ஆறும்பாட்டு.—காலம்பெற இத்யாதி. "காதல்கடலின்மிகப்பெரிதால், திருப்பேரையிற்கே - காலம்பெறஎன்னைக்காட்டுமின்கள்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - நீங்கள் இத்யாதி. ஈண்டென - இப்போதே.*

*கீழேயும் "காலம்பெற" என்று இங்கேயும் "காலம்பெற" என்றதுக்கு பாவத்வயம்-குடிக்கு இத்யாதிவாக்யத்வயம். முதற்சொன்னவார்த்தையேதென்ன-கடல் இத்யாதி. ஸாயநஸக்திபோலன்றிக்கே இவர் பக்தி கரைபுரண்டிருக்கைக்கு ஹேதுவேதென்ன - ஒருகார்யம் இத்யாதி. காரியப்பாட்டாலே விளைந்ததுபோலென்றது - கார்யார்த்தமாக விளைந்த ஸாயநஸக்திபோலென்றபடி. அன்றிக்கே, கடல்புரையவிளைவித்த காதலைப்பற்ற இதுக்குஆதிக்யஹேதுவேதென்ன - ஒருகாரியம் இத்யாதி. அதாவது - ஜகத்தைத் திருத்துகையாகிற கார்யார்த்தமாக விளைவித்த காதல்போலன்றே, ஸ்வயமேவ வைலக்ஷண்யமடியாக ராகப்ராப்தமான காதலென்றபடி. மேலில்பதத்துக்குஅவதாரிகை - ஆனாலும் இத்யாதி. அதுக்குபாவம் - நான்உங்கள் இத்யாதி. விவரணம்-என்னையப்படி இத்யாதி. அப்படிசேர்த்துவிடவென்றது - சாடு. அந்தப்ரகாரம் சேர்த்துவிடவென்று சாடுவுக்கு; அந்தத்திருமேனியாலே சேர்த்துவிடுகைக்காகவென்று ஸ்வபாவார்த்தம். கீழ்வாக்யத்தில் விவக்ஷிதமான அர்த்தத்தை முக்தகண்டமாக அருளிச்செய்கிறார் - அப்படியாலே இத்யாதி. அந்தவிக்ரஹத்தாலேயென்று ஸ்வபாவார்த்தம். துவக்காநிற்க - ஈடுபடுத்தாநிற்க. "நீலமுகில்வண்ணத்து" இத்யாதிக்கு பதார்த்தம்- ஸ்ரமஹரமான இத்யாதி. "காதல்" இத்யாதிக்கநந்தரம் "நீலமுகில்வண்ணம்" என்று வடிவைச் சொன்னதுக்கு சாடுவாகபாவம் - இக்காதலை இத்யாதி. ஒருபடியே - ஒருப்ரகாரமாயே என்றும், ஒருவிக்ரஹமே என்றும். விக்ரஹம் காதலைவிளைக்கிறதோ ? என்ன - கடல்புரைய இத்யாதி. "முன்னேவந்து - நிற்கும்" என்றதின் வ்யதிரேக வித்தார்த்தத்தை அருளிச்செய்கிறார் - இவன் கிட்ட இத்யாதி. "என் கைக்குமெய்தான்" என்றதுக்குஅவதாரிகை-ஆனால் இத்யாதி. "கைக்கும்"*

யன்று; என் கைக்கும் எட்டுகிறிலன். இனி நீ செய்யப்பார்த்ததென்? என்ன; உருவெளிப்பாடன்றியிலே கண்ணாலேகண்டநுபவிக்கலாந் தேசத்திலே போகப்பார்த்தேன். [ஞாலத்தவன் வந்துவீற்றிருந்த]-தூரப்போய்க்காணவேண்டாதபடி பரமபதத்தில் ஐச்வர்யமெல்லாம் இங்கே தோற்றும்படியிருந்த. [நான்மறையாளரும்வேள்வியோவா]-வேதார்த்தவித்துக்களும் ஸமாராதநத்திலே நிரந்தரமாக ப்ரவ்ருத்தரானார்கள். என்னோடு ஸஜாதீயரும், தந்தாமுக்கு வகுத்த கைங்கர்யம்பெற்று வர்த்தியாநிற்பர்கள். [கோலச்செந்நெல் இத்யாதி]-வ்ருஷ்ட்யந்நாதி விஷயமாக அங்குள்ளார்க்கு யத்நிக்கவேண்டாதே யிருக்கை. அவை ஆநுஷங்கிகபலமாய்வருமத்தனை; "நீள்செல்வம் வேண்டாதான்தன்னையேதான் வேண்டும்" என்றும், "அங்கங்கேயவைபோதரும்" என்றும் சொல்லக்கடவதிறே. சர்மாநீயமான செந்நெற்களானவை அங்குத்தைக்குக் கவரிவீசினாற்போலே அசையாநிற்கும். [கூடுபுனல் திருப்பேரெயிற்கே] - ஆற்றுநீர், ஊற்றுநீர், வர்ஷஜலம் இவைமூன்றும் கூடியிருக்கையாலே ஜலஸம்ருத்தியையுடைத்தாயிருக்கை. [திருப்பேரெயிற்கே - காலம்பெறவென்னைக்காட்டுமின்கள்] - என் விடாய்தீர ச்ரமஹரமான தேசத்திலே கொடுபோய்ப் போகடப் பாருங்கோள். அங்குள்ள செந்நெலுக்கு நீர் தாரகமா யிருக்குமாபோலே, இவளுக்கும் அவ்வூரில் காட்சியே தாரகமாயிருக்கிறபடி. (௬)

## ஏழாம் பா

பேரெயில்சூழ்கடல்தென்னிலங்கைசெற்றபிரான்வந்துவீற்றிருந்த
பேரெயிற்கேபுக்கென்னெஞ்சம்நாடிப்பேர்த்துவரவெங்குங்காணமாட்டேன்
ஆரையினியிங்குடையந்தோழீ! என்னெஞ்சங்கூவவல்லாருமில்லை [னே.
ஆரையினிக்கொண்டென்சாதிக்கின்றதென்னெஞ்சங்கண்டதுவேகண்டே

ஆ.—(பேரெயில்சூழ்.) - உனக்கு அவன்பக்கலுள்ள ஆஸக்திவேகம் நிரவதிகமாயிருந்ததாகிலும் அவனை எழுந்தருளுமளவும் இங்கேயிருக்குமத்தனை; அங்

---

என்ற சம்பந்தார்த்தம் - வார்த்தை இத்யாதி. உத்தரார்த்தத்துக்கு அவதாரிகை - உருவெளி இத்யாதி. உருவெளிப்பாடு - ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமான ஸ்வாநுபவம். "ஞாலத்து வீற்றிருந்த" என்றதுக்கு பாவம் - தூரப்போய் இத்யாதி. "அவன் - ஞாலத்து - வந்து வீற்றிருந்த" என்ற அந்வயம். "வேள்வியோவா" என்றதுக்கு பாவம் - என்னோடு இத்யாதி. ஸஜாதீயரென்றது - ஏகப்ரயோஜநராகை யாலே. "ஓவா"என்ற வர்த்தமாநத்துக்கு பாவம் - வ்ருஷ்ட்யந்நாதி இத்யாதி. பலார்த்தமாகவன்றிக்கே கைங்கர்யதயா அநுஷ்டித்தார்களாகில் பலமுண்டாகிறபடியென்? என்ன - அவை இத்யாதி. ஆநுஷங்கிகமாக வருமோ? என்ன, ப்ரமாணம் - நீள்செல்வம் இத்யாதி. உன்னையே அபேக்ஷித்து நிரவதிகஸம்பத்தைக் காற்கடைக்கொண்டவன் தன்னையே யபேக்ஷித்திருக்கும் ஐச்வர்யம் போலே என்றபடி. பெருமாள்திருமொழி அஞ்சாந்திருமொழி ஒன்பதாம்பாட்டு, "நின்னையேதான்" இத்யாதி. பெரியாழ்வார் திருமொழி, "நெடுமையால் உலகேழுமளந்தாய்" இத்யாதி. 'அங்கங்கேயவை போதரும்': அவை - கூறைசோறுமுதலானவை தன்னடையேவரும் என்னுதல்: அவையடிமைபுகுரும் என்னுதல். அங்கங்கே - தேவமநுஷ்யாதி ஜந்மந்தோறும். "கூடுபுனல்" என்றதுக்கர்த்தம் - ஆற்றுநீர் இத்யாதி. "கூடுபுனல்" இத்யாதிக்கு பாவத்வயம் - என்விடாய் இத்யாதிவாக்யத்வயம். 'நீலமுகில்வண்ணத்தெம்பெருமான் நிற்கும் முன்னேவந்து, என் கைக்குமெய்தான்: அவன் - ஞாலத்து' என்றுதொடங்கி, 'திருப்பேரெயிற்கே - காலம்பெற வென்னைக்காட்டுமின்கள்: காதல்கடலின் மிகப் பெரிதால்' இத்யந்வயः. (௬)

குப்போகை யுக்தமன்று என்றுதோழிசொல்ல, அத்யுச்ச்ரித ப்ராகார ஜலபரிகா பரிவ்ருதமான லங்கையிலே ராவணனை, ஸபுத்ரஜநபாந்தவமாகக் கொன்றருளி விஜய லக்ஷ்மீபரிவ்ருதனாய்க்கொண்டு தென்திருப்பேரையிலே எழுந்தருளியிருந்த இருப்பைக் கண்ட நெஞ்சு இன்னம் மீண்டுவாராது; எனக்குஇங்கொரு துணையுமில்லை; துணையான என்நெஞ்சையழைக்க வல்லாருமில்லை. இங்கு ஆரைக்கொண்டு என்னபுருஷார்த்தம் ஸாதிப்பது? இனி, என்னெஞ்சுபுக்க தேசத்திலேபோய்ப் புகுமித்தனை என்று தன் தோழியைக்குறித்துச் சொல்லுகிறாள்.

ஒ.—ஏழாம்பாட்டில், பெருமாள் இளையபெருமாளுக்கு விடைகொடுத்தரு ளினபின்பு, "லக்ஷ்மணஸ்ய கதிம் கத:" என்னும்படியாலே அவன் போனவிடத்தில் போவேன் என்று துணிந்தாற்போலே, இப்பிராட்டியும் என் நெஞ்சுப்ரவேசிக்கைக்கு விரகுபார்த்துத் தென்திருப்பேரையிலே புக்காற்போலே நானும் அங்கேபோய்ப் புகு மத்தனை என்று தோழியைக்குறித்துச் சொல்லுகிறாள்.

[பேரையிலே என்று தொடங்கி] - பெரிய மதிளையும் அதுக்கு அகழாய்ச் சூழ்ந்திருக்கிற கடலையுமுடைத்தான லங்கையை அழிக்கையாகிற மஹோபகாரத்தைப் பண்ணின ஸர்வேச்வரன் வந்து தன்னுடைய ஐச்வர்யந்தோற்ற எழுந்தருளியிருக்கிற திருப்பேரையிலேசென்று புக்கு என்நெஞ்சம் தேடி மீண்டுவரக்காண்கிறிலேன். [ஆரை யினிஎன்று மேலுக்கு] - நெஞ்சுபோனபின்பு இனி இவ்விடத்தில் துணையாகவல்லார் ஆருமில்லை; இனி ஆரைக்கொண்டு என்னபுருஷார்த்தத்தை ஸாதிப்பது?

ப.—அநந்தரம், ப்ராப்திக்கு ப்ரபலப்ரதிபந்தகமான லங்காநிரஸநத்தைப் பண்ணினவன் வர்த்திக்கிற தேசத்திலே சென்று புக்க நெஞ்சு மீளவரக்காண்கிறிலேன்; நானும் இனி அங்கேபோமித்தனை என்கிறாள்.

பேர் - பெரிய, எயில் - மதிளாலே, சூழ் - சூழப்பட்டு, கடல் - (அதுக்ககழான) கடலையுடைத்தாய், தென் - கட்டளைப்பட்ட, இலங்கை - இலங்கையே, செற்ற- செறுத்தழியச்செய்த, பிரான் - உபகாரகனானவன், வந்து - (ப்ரமந்நீருகைக்காக)வந்து, [illegible] இருந்த - அந்தவீர ஸ்ரீ தோன்றும்படி எழுந்தருளியிருக்கிற, பேரெயிற்கே - [illegible]ப்பேரெயிற்கே, புக்கு - சென்றுபுக்கு, என்-, நெஞ்சம் - நெஞ்சமானது, நாடி - அவனைத்தேடி, பேர்த்து - மீண்டு, எங்கும் - ஓரிடத்திலும், வர-, காணமாட்டேன் - காண்கிறிலேன்; இனி - ஆனபின்பு, தோழீ - (என்னோடு ஸமதுக்கையாயிருக்கிற) தோழி! இங்கு - இவ்வவஸ்த்தையில், (நியமிக்கிற தாய்மாரையும் பழிசொல்லுமூரா ரையுமொழிய துணையாக), ஆரை-, உடையம் - உடையோம்? (போன), என்-, நெஞ் சம்-நெஞ்சை, கூவ - அழைத்துத்தர, வல்லாரும்-வல்லாரும், இல்லை-; இனி-(நெஞ்சுஉத வாதே நீயும்தளர்ந்த) பின்பு, ஆரை-, கொண்டு-, என்- என்ன ப்ரயோஜனத்தை, சாதிக் கின்றது - ஸாதிப்பது? (ஆகையாலே), என்-, நெஞ்சம் - நெஞ்சு, கண்டதுவே - கண்ட விஷயத்தையே, கண்டேன் - நானும்கண்டுவிட்டேன். நாடியென்று - நாட்டம்பெற் றென்றுமாம்.

ஈ.—ஏழாம்பாட்டில், "லக்ஷ்மணஸ்ய கதிம் கத:" என்று இளையபெரு மாள் போனவிடத்திலே நானும்போவேன் என்று பெருமாள் துணிந்தாற்போலே என்

நெஞ்சு தரிக்கைக்கு அங்கேபோய்ப்புக்கது: நானும் அவ்வூரிலேபோய்ப்புகுமித்தனை என்று தோழியைக்குறித்துச் சொல்லுகிறாள்.

[பேரெயில் இத்யாதி] - பெரிய மதிளாலே சூழப்பட்டு, அதுக்கு அகழாகப் போரும்படி அத்தைச்சூழ்ந்த கடலையுடைத்தான லங்கையை அழியச்செய்த மஹோப காரகன், அங்குத்தைஸ்ரமந்திரவந்து தன்பூர்த்திதோற்ற விருக்கிற தேசம். அவ்வூரிலே என்நெஞ்சுபுக்குத் தேடிமீண்டுவரக்காண்கிறிலேன். லங்கையிலே புக்காரும் மீண்டார் கள்; என்நெஞ்சு மீளக்காண்கிறிலேன். பிடித்தாரைக்கொண்டு வ்ருத்தகீர்த்தநம்பண்ணி யிரிக்கவேண்டாவோ? என்ன, [ஆரையினியிங்குடையந்தோழீ] - நீ என்னுடையவைக் கண்டு ஸ்யிலே ஆகாநின்றாய்; தாய்மார் ஹிதஞ்சொல்லிமீட்கத் தேடாநின்றார்கள்; இனிப் பழிசொல்லுவாரைக்கொண்டு போதுபோக்குமித்தனையிறே. போதுபோக்குகைக்கு என் நெஞ்சை அழைத்துத்தருவாருமில்லை. அத்தை அழைத்துத்தரும்போது நெஞ்சிலும் அண்ணியராக வேணுமிறே. இனி யாரைக்கொண்டு என்ன புருஷார்த்தத்தை ஸாதிப் பது? நெஞ்சுமீளாதே வ்ருத்தகீர்த்தநத்துக்கும் ஆளின்றிக்கே ஒழிந்ததாகில் நீசெய் யப்பார்க்கிறதென்? என்ன, [என்நெஞ்சம் கண்டதுவே கண்டேனே] - என்நெஞ்சு யாதோரிடத்தேபோய்த் தரித்தது, நானும் அங்கேபோய்ப்புகுமித்தனை. என்நெஞ்சு மீளாதபின்பு, எனக்கும் அதல்லது புகலுண்டோ? “ஸௌம்யாஹமபி யாஸ்யாமி லக்ஷ்மணேந கதாம் கதிம்”

ஏ௫.—ஏழாம்பாட்டு. “அஹஞ்சாநுகமிஷ்யாமி லக்ஷ்மணேந கதாம் கதிம்” (அஹஞ்சாநுகமிஷ்யாமி லக்ஷ்மணேநகதாம்கதிம்) என்ற பெருமாளைப்போலே இப் பிராட்டியும் ‘என்னெஞ்சு தரிக்கைக்கு விரகுபார்த்துத் திருப்பேரையிலே புக்காற்போலே நானும் அங்கேபுகுமத்தனை’ என்கிறாள். [பேரெயில்இத்யாதி] - கீழில் அளவுகள் குலைந்த பின்பு இனிநான் செய்யப்பார்த்ததிது என்கிறாள்.

பேரெயில்-பெரியமதிள். [சூழ்கடல்] - மதிளுக்கு அகழாம்படி அம்மதிளைச் சூழ்ந்த கடலையுடைத்தாய், கேட்கவஞ்சும்படியான ஊரை மூலையடியே நடக்கப்பண்ணின உபகாரகன். [வந்துவீற்றிருந்த] - அப்போது முகம்மாறவைத்த இழவுதீர அணைக்கலாம்படி கிட்டவந்திருக்கிற. “விமலஶஶாங்கநிபாநநா” (விமலஶஶாங்கநிபாநா) என்கிற படியே - எப்போது பெருமாள் முகம்வைக்கவோண்ணுதபடி கோடியரா யிருந்தார், அவ்

ஏழாம்பாட்டு - பேரெயில்இத்யாதி. “என்னெஞ்சங்கண்டதுவேகண்டேன்” என்றத்தைப் பற்ற ஸங்கதமாக அவதாரிகை - அஹஞ்சாநுகமிஷ்யாமி இத்யாதி. கீழிற்பாட்டோடேஸங்கதி - கீழிலளவுகள்இத்யாதி: “இனி” என்றதுக்கு பாவமாதல். கீழிலளவுகள் குலைந்தபின்புஎன்றது - நிறந்தொடக்கமானவற்றையும் உசாத்துணையான நெஞ்சையும்இழந்து, தாய்மார் காட்டவொருப்படுகை யன்றிக்கே நிஷேதிக்குமளவானபின்பு என்றபடி.

“தென்னிலங்கைசெற்றபிரான்” என்றத்தையுங்கூட்டி “வந்துவீற்றிருந்த” என்றதுக்கு பாவம் - அப்போதுஇத்யாதி. அப்போது - ராவணவதாநந்தரம். முகம்மாறவைத்த - இவளுக்குஅபி முகராகாதிருந்தஎன்றபடி. அவர் முகம்மாறவைத்தபோது இவளிருந்த ப்ரகாரமேதென்ன; அதுக்கு ப்ரமாணம் - விமலஇத்யாதி. ஸுமஹதேநாபி காலேந ஸா பர்த்ருமுகமீக்ஷ்ய வை வியபோஹ்ய மநஸ்தாபம் பபௌ விமலஶஶாங்கநிபாநநா ததா ஸீதா” இதியுத்தகாண்டே ஸப்தநவதமே (௯௭). “ததா-விமலஶஶாங்கநிபாநநா” என்றதுக்குப் பொருள்-எப்போதுஇத்யாதி. எப்போது - யாதொருபோதென்றபடி. முகத்தில்குளிர்த்தியொருமைச்

7—18

வளவிலும் இவள் மறுவற்ற சந்த்ரமண்டலம்போலே முகத்தில் குளிர்த்திமாறுதே யிருந்தாள். "தீபோநேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸிமேத்ருடம்" (தீபோநேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸிமேத்ருடம்): இதுக்கு ஆளவந்தார் அருளிச்செய்யும்படி - "நேத்ர தோஷத்தால் வந்ததுபோக்கி, தீபதோஷத்தால் வந்ததன்று" என்று. [செற்றபிரான் வந்து வீற்றிருந்த] - ப்ரதிகூலநிரஸநம் பண்ணி விடாய்த்துவந்திருக்கும்; "பர்த்தாரம் பரிஷஸ்வஜே" (பர்த்தாரம் பரிஷஸ்வஜே) என்னும்படியே ஶிஶிரோபசாரம் பண்ணப்போக வேணும். [பேரேயிற்கே இத்யாதி] - அவனிருந்த திருப்பேரையிலேபுக்குத்தேடி என்னெஞ்சானதுஓரிடத்திலும் மீண்டுவரக்காண்கிறிலேன். மீளவோண்ணுத லங்கையிலே புக்க திருவடியும் மீண்டுவேந்தான்; அணித்தான இவ்வூரிலே புக்க நெஞ்சு மீண்டுவரக் காண்கிறிலேன்! நெஞ்சுங்கூடவாராதபின்பு அவன் வாராமை சொல்லவேண்டாவிறே. நெஞ்சின் வரவுபார்த்துக் கண்மறைந்துகாணும் இவள் நிற்கிறது. [மாட்டேன்] - கண்டு ஜீவியாதே நான் இங்ஙனே முடிந்து போமித்தனையாகாதே. அபிமதன்வருந்தனையும், அவனுக்காக வ்ருத்தகீர்த்தநம்பண்ணி தரித்திருக்கவேண்டாவோ? என்னில், [ஆரையினி யிங்குடையந் தோழீ] - நெஞ்சுமில்லாதவன்றுஇனியாருண்டு? [தோழீ]-"நெஞ்சிலண்ணியன்றாளே" என்றுயாகில், நீ நீயாளுயே. இப்போது நான் இங்கில்லையோ? [என்னெஞ்சங் கூவவல்லாருமில்லை]-நெஞ்சைமீட்கைக்கு நீவேணுமே, நெஞ்சை யவனுக்காக்கின நீ,வேணுமே எனக்கு ஆக்கும்போதும்; உன்னுடைமையிது, உனக்குக்கால்கள் நடைதாராது: அல்லாதார்க்கு"கூட்ட வேணும்" என்னும் த்வரையில்லை: ஆர் நெஞ்சை யழைப்பார்? [ஆரையினிக்கொண்டேன் சாதிக்கின்றது]-ஆரைக்கொண்டுதான் சாதிப்பது? இனி ஸாத்யந்தான் எது? நெஞ்சும்அவனும் வந்தால் இனி நான்தான் உண்டாகவேணுமே? இங்கு வெறுந்தரையாயிறே கிடக்கிறது.

---

*கடி -சிரகாலம் பிரிந்து சேவிக்கப்பெற்றப்ரீதியும், அங்யஸ்பர்ஶதோஷமில்லாமையும், "சேஷியின் விநியோகப்ரகாரங்கொண்டு கார்யமென்?" என்கிற நினைவும்என்றபடி."தந்த்ர"என்றதுக்குச்சேர,யதாஎன்றத்யாஹார்யமென்று திருவுள்ளம்பற்றி - எப்போதுஎன்றது. அவர்முகம் மாறவைத்ததுக்குப்ரமாணம் - தீபஇத்யாதி. "வ்யவஸாயஜ்ஞஸநேஹாஶேஷ்யதிசேவேஷிதா ! தீபோநேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸிமேத்ருடம்" இதிராவணவதாநந்தரே (யுத் - ககஅ - கஎ.) த்ருஷ்டாந்தபலத்தாலே-பிராட்டிக்கு நைர்தோஷ்யந்தோற்றுகிறதென்கைக்குபரமாசார்யஸம்வாதம்- இதுக்குஇத்யாதி."இலங்கைசெற்றபிரான் வந்துவீற்றிருந்த திருப்பேரையிலேபோகவேணும்"என்கிறவளுடைய பாவம்- ப்ரதிகூலஇத்யாதி.பர்த்தாரம்த்தம் - அவனிருந்தஇத்யாதி. "பேரெயிற்கே" என்கிற அவதாரணத்துக்கர்த்தம் - மீளவோண்ணுதஇத்யாதி வாக்யத்வயம். தூதானநெஞ்சு வாராமையாலே, அவன் வாராமை சொல்லவேண்டாஎன்கிறுள் - நெஞ்சங்கூடஇத்யாதி. "மாட்டேன்" என்றதுக்கு முந்தினபாவம் - நெஞ்[illegible]வுஇத்யாதி. கண்மறைந்து - கண்பூத்து. பாவாந்தரம் - கண்டுஜீவியாதேஇத்யாதி. "ஆ[illegible]யினி" என்றதுக்குஅவதாரிகை - அபிமதன்இத்யாதி. "இனி" என்றதுக்கு பாவம் -'நெஞ்சும்இத்யாதி. நீ நீயாளுயேயென்றது - நீ தோழியாம்படியாயே யிருந்தாயென்றபடி. அதாவது - என் வ்யஸநத்தைக்கண்டு எனக்குமுன்னே தளர்ந்துகிடந்தாயென்றபடி. இப்போது நான்இங்கில்லையோ? என்றது-தோழிவார்த்தை. 'நான்இங்கில்லையோ' என்றவநந்தரம், உன்னெஞ்சை யழைத்துக் கொள்ளுகிறதுக்கென்ன என்று கூட்டுவது. நெஞ்சைமீட்கைக்கு நான்வேணுமோ? என்ன - நெஞ்சை யவனுக்குஇத்யாதி. நான்மாட்டேனோ?என்ன - உன்னுடைமைஇத்யாதி. வேறே சிலரையிட்டழைத்துக்கொண்டாலோ? என்ன - அல்லாதார்க்குஇத்யாதி. 'உன்னுடைமை' இத்யாதி வாக்யத்வயமும் - "கூவவல்லார்" என்ற பஹுவசநார்த்தம். பர்த்தாரம் - ஆரைக்கொண்டுதான் இத்யாதி. "ஆரையினியிங்குடையம்" என்றதுக்கும் "ஆரையினிக்கொண்டு" என்றதுக்கும் வாசியே*

ஆனால்,செய்யப்பார்த்த தென்? என்னில், [என்னெஞ்சங்கண்டதுவேகண்டேனே]-மீளாதே நெஞ்சுபோனவழியே போகப்பார்த்தேன். "அத்யைவாஹம் கமிஷ்யாமி லக்ஷ்மணேந கதாம் கதிம்" (அத்யைவாஹம் கமிஷ்யாமி லக்ஷ்மணேநகதாம்கதிம்) என்கிறபடியே நெஞ்சுபோனவழியே போகப்பார்த்தேன். (௭)

## எட்டாம் பாட்டு.

கண்டதுவேகொண்டெல்லாருங்கூடிக்கார்க்கடல்வண்ணனோடு என்
திறத்துக், கொண்டுஅலர்தூற்றிற்றதுமுதலாக்கொண்டஎன்காதலுரைக்கிற்
றோழீ, மண்திணிஞாலமுமேழ்கடலும்நீள்விசும்புங்கழியப்பெரிதால்,தெ
ண்திரை சூழ்ந்துஅவன்வீற்றிருந்ததென்திருப்பேரெயில்சேர்வன்சென்றே.

*ஆ.—(கண்டதுவேகொண்டு.) - ஆந்தரமான அபிநிவேசம் ஸமக்ரமாயிருக்கச்செய்தே புறம்புதோற்றுகிற மாத்ரத்தையேகொண்டு, தத்ஸௌந்தர்ய குணஜநிதமான என் அபிநிவேசத்தைக் குற்றமாகவுங்கொண்டு லோகமெல்லாங்கூடி "ஒருத்திக்குஎம்பெருமான்பக்கலுள்ள அபிநிவேசமே! இப்படி அபிநிவேசிக்கை குடிப்பழியன்றோ?" என்று என்னையலர்தூற்ற,அது அடியாகக்கொண்டுகிளர்ந்தெழுந்த என் அபிநிவேசத்தின் பெருமை சொல்லநிலமன்று. சொல்லில், தோழீ! இவ்வஸங்க்யேயமான அண்டங்களும் அளவிறந்ததிருநாடும் நிறையப்பெருகி, அதுவும் இடம்போராமல் பொங்கிப்பெருகாநின்றது. ஆதலால், அவன்எழுந்தருளியிருந்த தென்திருப்பேரையிலே நானேயாகிலும்சென்று ஸம்ச்லேஷிக்கைதவிரேனென்கிறாள்.*

*ஒ.—எட்டாம்பாட்டில், எனக்கு "அவனைக்காணவேணும்" என்னும் அபிநிவேசம் "கடலில் - பெரிது" என்னுமளவன்றிக்கே அறமிக்கது; ஆனபின்பு, நீங்களாக இசையிலீர்களாகில், ஜலஸம்ருத்தியை யுடைத்தாய், தன்வேண்டற்பாடுதோற்ற எழுந்தருளியிருக்கிற தென்திருப்பேரையிலே நான் போய்ப்புகுவேன் என்கிறாள். [கண்டதுவே என்று தொடங்கி] - தோழீ! நான் அவன்குணகீர்த்தநாதிகளைப் பண்ணக்கண்டதே பற்றாசாகக்கொண்டு, 'அவன் அழகிலே இவள் அகப்பட்டாள்' என்று எல்லாரும் பழிதூற்றினஅத்தை முதலாகக்கொண்டு ப்ரவ்ருத்தமான என்னுடைய ஸ்நேஹத்தின்படி சொல்லப்புகில்.*

---

ப்ர.—[என்னெஞ்சங்கண்டதுவே கண்டேனே] - உத்தரஸ்ரீராமாயணே, "விஸ்ருஜ்ய லக்ஷ்மணம் ராமோ து:க்கஶோகஸமந்வித: । புரோஹிதம் மந்த்ரிணஶ்சைவ நைகமாம்ஶ்சேதமப்ரவீத் ॥ அத்ய ராஜ்யேऽபிஷேக்ஷ்யாமி பரதம் தர்மவத்ஸலம் । அயோத்யாயா: பதிம் வீரம் ததோ யாஸ்யாம்யஹம் வநம் ॥ ப்ரவேஶயத ஸம்பாராந் மாபூத்காலாத்யயோ யதா । அத்யைவாஹம் கமிஷ்யாமி லக்ஷ்மணேந கதாம் கதிம் ॥."

---

தென்ன - நெஞ்சும்அவனும்இத்யாதி. அதாவது கீழே, தோழியுமில்லைஎன்றது, இங்கே தானுமில்லை என்கிறாள் என்றபடி. க்ரமேணாந்வய: "ப்ரவேஶயத ஸம்பாராந் மாபூத்காலாத்யயோ யதா । அத்யைவாஹம் கமிஷ்யாமி லக்ஷ்மணேந கதாம் கதிம்" இதி உத்தர ஸ்ரீராமாயணே ஸப்த ஶததமே. (௭)

ப.—அநந்தரம், அவனோட்டை ஸம்பந்தமடியாக ஊர்ப்பழிவிளையும்படி வந்த காதலானது ஸர்வலோகத்தையும் விளாக்குலைகொண்டு போகாநின்றது; ஆன பின்பு, அவனிருக்கிறதிருப்பேரையிலே சென்று புகுவேனென்கிறாள்.

கண்டதுவே - புறவாயில்கண்ட வைவர்ண்யாதிகளையே, கொண்டு-, எல்லாரும் - (தாய்மாரோடு ஊராரோடு வாசியற) எல்லாரும், கூடி - (ஒருமிடறாய்க்)கூடி, கார் - கறுத்த, கடல் - கடல்போலே ப்ரமஹாரமான, வண்ணனோடு - வடிவையுடையவனோடேகூடி, என்திறத்து - என்னிடையாட்டமான மைதில்யத்தை, கொண்டு - அவலம்பித்துக்கொண்டு, அலர் - பழியை, தூற்றிற்று - தூற்றினவதுவே, முதலா-ஹேதுவாக, கொண்ட - இடங்கொண்ட, என்-, காதல்-, தோழீ - (அடியிலே இதுக்கு ப்ரவர்த்தகையான) தோழீ! உரைக்கில் - (பாசுரமிட்டுஉரைக்கப்) பார்க்கில், ("கடலின்மிகப் பெரிது" என்றவளையல்ல), மண்-, திணி - செறிந்த, ஞாலமும் - பூமியும், (அத்தைச் சூழ்ந்த), கடல் ஏழும்-, நீள்-(இதெல்லாவற்றுக்கும் இடங்கொடுக்கும்) மஹாவகாசமான, விசும்பும் - ஆகாசமும், கழிய - தனக்குள்ளேயாம்படிஅவ்வருகே, பெரிது - பெருத்திரா நின்றது; (ஆனபின்பு), தெள் - தெளிந்த, திரை - நீர்த்திரையையுடைத்தாகையாலே ப்ரமஹாரமாய், சூழ்ந்தவன் - காதலைப்பெருக்க வளைத்தவன், வீற்றிருந்த - இருக்கிற, தென்திருப்பேரெயில் - தென்திருப்பேரெயிலே, சென்று - (என்தாபம்ஆறும்படி) சென்று, சேர்வன் - சேரக்கடவேன்.

இ.—எட்டாம்பாட்டில், எனக்கு "அவனைக்காணவேணும்"என்னும் அபிநிவேசம் "கடலினும் பெரிது" என்னுமளவன்றிக்கே இருக்கையாலும் நான் தென்திருப்பேரெயிலைப் போய்ப்புகக்கடவேன் என்கிறாள்.

[கண்டதுவேகொண்டு] - "தலையில் வணங்கவுமாங்கொலோ" என்று அவன் குணங்களைச் சொல்லியும் புறம்புகண்டமாத்ரம் கொண்டிறே பழிசொல்லஇழிந்தது. என் அகவாயிருந்தபடி கண்டார்களாகில் என்படக்கடவர்கள்? [எல்லாருங்கூடி] - அந்யோந்யம் விரோதித்துவர்த்திக்குமவர்களும், பழிசொல்லுமதிலே வந்தவாறே ஏககண்டரானார்கள். [கார்க்கடல்வண்ணனோடு என்திறத்துக்கொண்டு] - என்வைவர்ண்யத்தைக் கண்டு "இவள் நிறத்தை இழக்கும்போது அந்நிறத்தையுடையவனுக்கு ஆகவேணும்" என்று கொண்டார்கள்: அவன் அழகிலே இவள் அகப்பட்டாள் என்கை. [அலர் தூற்றிற்று] - பழிதூற்றினார்கள். [அதுமுதலாக்கொண்ட என்காதல்] - அது அடியாக - அதுவேஎருவாக, இடங்கொண்ட; "ஊரவர்கவ்வையெருவிட்டு" என்னக்கடவதிறே. [என்காதலுரைக்கில்] - "யதோவாசோ நிவர்த்தந்தே" என்கிறஆநந்தத்துக்குஅவதியுண்டாகிலும் இக்காதலுக்குப் பாசுரமிட்டுச்சொல்லப்போகாது.[தோழீ] - அவன் காதலின் பெருமை சொல்லி அதடியாக என்காதலுக்கு க்ருஷிபண்ணின நீ, படும்பாடு அறிவுதியே. [மண்திணி இத்யாதி] - "உரைக்கில்" என்கிறதென்? "காதல்கடலில் மிகப்பெரிதால்" என்று இலையோ? என்ன, அது முகப்பில் வார்த்தை; பெரியதில் எல்லாவற்றிலும் பெரியது என்னுமித்தனை. மண்ணாலே நெருங்கினபூமி, கடினையானபூமி என்றபடி. அத்தையும் சூழ்ந்தகடலேழும், அவற்றுக்கெல்லாம் அவகாசமான ஆகாசமும், இவை இத்தனைக்கும் அவ்வருகுபட்டிருக்கை. இப்படி காதல் கரைபுரண்டதாகில் செய்யப்பார்த்ததென்? என்ன, [தெண்திரைஇத்யாதி] - இக்காதலுக்கு விஷயம் ஸந்நிஹிதமல்லாமையாலேவந்த வெக்காயந்தீர, ப்ரமஹாரமாய் அவன் குறைவற்றிருக்கிற

*தேசத்திலேபோய்ப் புகக்கடவேன். [சென்றே - சேர்வன்] - இனி, எதிரே அவன் வரிலும் மீளேன். அவனைச்சேருகையன்றுஉத்தேஶ்யம், அங்கேசென்றுகிட்டுகை.*

ஈடு.—எட்டாம்பாட்டு. எனக்கு "அவனைக்காணவேணும்" என்னும் அபிநிவேஶம் "கடலில் மிகப்பெரிது" என்னுமளவன்றிக்கே, அறமிக்கது. ஆனபின்பு, நீங்களாக இசையிலேகோளாகில், தன்வேண்டற்பாடுதோற்ற எழுந்தருளியிருக்கிற தென்திருப்பேரெயிலே நான்போய்ப் புகுவேனென்கிறாள்.

[கண்டதுவேகொண்டு] - அவன்பேர் சொல்லுதல், "தலையில்வணங்கவுமாங்கொலோ?" என்று ஒருப்ரணாமஞ்செய்தல் செய்யுமிறே: அம்மாத்ரத்தையேகொண்டு; புறவிதழ்கண்டு படுகிறபடி இதுவானால், அகவாயிலோடுகிறது அறியில் என்படுவார்கள்? [எல்லாருங்கூடி] - பரிவரோடு, ஹிதகாமரோடு, "இவையிரண்டுந்தானென்?" என்றுஇருப்பாரோடு வாசியறக்கூடி. பிறரைப்பழிசொல்லவென்னில், தம்மில் தாம் சேராதவர்களும் சேர்வர்களிறே. [கார்க்கடல்வண்ணனோடு என்திறத்துக்கொண்டு] - இவள்நிறம் விவர்ணமாம்போது, அவன்திறத்தே இழந்ததாகவேண்டாவோ? கடல்ஏறிவடிந்தவிடமென்று தோற்றுகிறதில்லையோ? என்னிடையாட்டத்தை ஶ்ரமஹரமான நிறத்தையுடையவனோடே கூட்டி. [அலர்தூற்றிற்றது முதலாக்கொண்ட என்காதலுரைக்கில்] - இவர்கள் பேசாதேயிருந்தார்களாகில் நானும் ஸூகமேயிரேனே? ஒருநான்பழிக்குஅஞ்சி மீளுவேனென்று காணும்இவர்கள் பழிசொல்லப்புக்கது. [அலர்தூற்றிற்று]-அலர்தூற்றினார்கள். [அதுமுதலித்யாதி]-அதுதானேயடியாகக்கொண்ட என் காதலானது ஶதஶாகமாகப்பணைக்கப்புக்கது. [காதலுரைக்கில்] - தன் காதல் தன்னாலும் சொல்லிமுடியவொண்ணாது காணும், "யதோ வாசோ நிவர்த்தந்தே"(யதோவாசோநிவர்த்தந்தே) என்கிற †விஷயத்தைச்சொல்லிலும்இவள்காதல் பேச்சுக்கு நிலமன்று. இக்காதலுக்கு விஷயபூதனானவனையும் விளாக்குலைகொள்ளவற்றான காதலிறே. "சுடர்ஞான வின்பம்" என்று - ஸகவதாநந்தத்தைச்சொல்லிவைத்து, "அதனிற்பெரியவென்னவா" என்றதிறே. [தோழீ] - இக்காதலைவிளைக்கைக்கு நீ பண்

---

*எட்டாம்பாட்டு - கண்டதுவேஇத்யாதி. "மண்திணிஞாலமும்" என்றுதொடங்கி "சேர்வன்சென்றே" என்னுமளவுங்கடாக்ஷித்தவதாரிகை - எனக்குஅவனைஇத்யாதி. வேண்டற்பாடு - பெருமையும், வைலக்ஷண்யமும்.*

*கண்டதாகிறதேதென்ன - அவன்பேர்சொல்லுதல்இத்யாதி. [illegible]மாதல். [illegible]ஞார்த்தமாதல் - புறவிதழ்இத்யாதி. புறவிதழ் - பாஹ்யவ்யாபாரம். அகவாயில் - நெஞ்சில். "எல்லாரும்" என்றதுக்குஅர்த்தம் - பரிவரோடுஇத்யாதி. தாய்மார் தோழிமாரொழிய, அயற்சேரியார் கூடுவர்களோ? என்ன - பிறரைஇத்யாதி. கார்க்கடல்வண்ணனிடத்தில் இவள் ப்ரவணையானாளென்கிறது அறிந்தபடி என்? என்ன - இவள்நிறம்இத்யாதி. இதுக்குநியாமகமேதென்ன - கடல்ஏறிஇத்யாதி. ஶப்தார்த்தம் - என்னிடையாட்டத்தைஇத்யாதி. இடையாட்டம் - பாரிப்பு: வ்யாபாரமாதல். "அலர்தூற்றிற்றதுமுதலா" இத்யாதியில் வ்யதிரேகவிவக்ஷித்தார்த்தம் - இவர்கள்பேசாதே இத்யாதி. அவர்கள் பழிசொல்லுகைக்கு ப்ரயோஜநமேதென்ன - நான்பழிக்குஅஞ்சி இத்யாதி. அவர்கள்சொன்னது விபரீதமாகவே பலித்ததென்கிறாள் - அதுதானே இத்யாதி. பதிஶப்தார்த்தம்-தன்காதல்இத்யாதி. சொல்லிமுடிக்கவொண்ணாமையின் எல்லையை அருளிச்செய்கிறார் - யதோவாசஇத்யாதி. பேச்சுக்கு நிலமல்லாமைக்கு ஹேதுவேதென்ன - இக்காதலுக்குஇத்யாதி. விளாக்குலைகொள்ளுகை - கபளீகரிக்கை. அவனையும் விளாக்குலைகொள்ளவற்றோ? என்ன - சுடர்ஞானம்இத்யாதி. "தோழீ" என்று ஸம்*

---

† *'விஷயத்தைச்சொல்லிலும்' என்றவிடத்து 'ஸகவதாநந்தத்துக்கு எல்லையுண்டாகிலும்' என்றுபாடாந்தரம்.*

ணும் க்ருஷியுறித்தியிறே: இதுஇருந்தபடி பாராய். [மண்திணிஞாலமித்யாதி]- "காதல்கடலில மிகப்பெரிதால்" என்றவிடம் - ஓராதே சொன்னோம்; ஆனால் எங்ஙனே சொல்லும்படி என்னில்? பெரியவற்றில் பெரியதென்னுமித்தனையல்லது, ஒருபாசுரமிட்டுச் சொல்லலாவதில்லை. மண்ணாலே நெருங்கின பூமியென்றபடி. அத்தையும் சூழ்ந்தகடலேழும், அவற்றுக்கெல்லாம் அவகாசமான ஆகாசமும், இவை யித்தனைக்கும் அவ்வருகுபட்டிருக்கை. இப்படி காதல் கரைபுரண்டால் செய்யப்பார்த்ததென்? என்ன, [தெண்திரை இத்யாதி] - இக்காதல் மறுநனையும்படியான விஷயம்இருந்தவிடத்தே போய்ப் புகுமத்தனை. தெளிந்த திரைகளாலே சூழப்பட்டு அவன் வீற்றிருந்த தென்திருப்பேரையிலே போய்ப்புகுமத்தனை. "தவெஸ்ாவவநஷெணஷு நாநாவுஷ்வஸுமந்திஷு | விஹ்ருதுஸலிலக்லிநா தவாங்கெ ஸமுவாவிஶம்" (தஸ்யோபவநஷண்டேஷு நாநாபுஷ்பஸுகந்திஷு | விஹ்ருத்யஸலிலக்லிந்நா தவாங்கேஸமுபாவிஶம்) என்கிறபடியே அநுபவயோக்யமான தேசத்திலே போய்ப்புகக் கடவோம். [சேர்வன்சென்றே] - இனிப் பகட்டால் தீராது, புக்கல்லது விடேன். ஆள் விடுதல், அவன் வரவுபார்த்திருத்தல் செய்யேன். [சென்றே-சேர்வன்] - இனி எதிரே அவன்வரிலும் மீளேன். அவனைச்சேருகை யன்று உத்தேஶ்யம், அங்கே சென்று கிட்டுகை. (அ)

ப்ர.—எட்டாம்பாட்டு. [கண்டதுவேகொண்டுஇத்யாதி] - [தெண்திரைசூழ்ந்தவன்வீற்றிருந்ததென்திருப்பேரெயில்] ஸுந்தரகாண்டெ ஸீதாவ்ருத்தாந்தகதநாவஸரெ "ஶைலஸ்ய சித்ரகூடஸ்ய பாதெ பூர்வோத்தரெ புரா ॥கஉ॥ தாபஸாஶ்ரமவாஸிந்யா: ப்ராஜ்யமூலபலோதகெ । தஸ்மிந் ஸித்தாஶ்ரமெ தெஶெ மந்தாகிந்யா ஹ்யதூரத: ॥ கந ॥ தஸ்யோபவநஷண்டெஷு நாநாபுஷ்பஸுகந்திஷு । விஹ்ருத்ய ஸலிலக்லிந்நா தவாங்கெ ஸமுபாவிஶம் ॥கச.

---

போதிக்கிறவனுடைய ஸ்வாரஸ்யம் - இக்காதலைஇத்யாதி. "மண் ... ருதுககவத 'கை- இதிருந்தபடிபாராய் என்ற. இப்போதிப்படி சொல்லுகிற நீ "காதல்கடலில் மிகப்பெரிதால்" ... முன்பு சொல்லுவானென்? என்ன- காதல்கடலில்இத்யாதி. "அவன்வீற்றிருந்ததென்திருப்பேரெயில் என்றதுக்கு ஸ்வாரஸ்யம் - இக்காதல்மறுஇத்யாதி. "தெண்டிரைசூழ்ந்தவன்" என்றதுக்கு ஸ்வாரஸ்யம் - தஸ்யோபவநஇத்யாதி. "தஸ்யோபவநஷண்டேஷு நாநாபுஷ்பஸுகந்திஷு । விஹ்ருத்ய ஸலிலக்லிந்நா தவாங்கெ ஸமுபாவிஶம்" இதி ஸுந்தரகாண்டேஸ்தா. "சென்றே" என்கிற ஏவகாரத்துக்கர்த்தம் - இனிப்பகட்டால்இத்யாதி. பகட்டுகை- "போவேன்" என்று அச்சமுறுத்துகை. "சென்று - சேர்வன்" என்றதுக்கு ஸ்வாரஸ்யம் - ஆள்விடுதல்இத்யாதி. 'தோழீ! கண்டதுவே கொண்டு' என்றுதொடங்கி, 'சென்றே . சேர்வன்'இத்யந்வய:. மண்திணிஞாலம் - மண்செறிந்தபூமி. நீள்விசும்பு - மஹாவகாசமான ஆகாசம். கழியப்பெரிது - இவைதனக்குள்ளே அடங்கும்படி அவ்வருகே பெருத்திருக்கை. (அ)

## ஒன்பதாம் பாட்டு.

சேர்வன்சென்றுஎன்னுடைத்தோழிமீர்காள்! அன்னையர்காள்என்னைத்தேற்றவேண்டா, நீர்களுரைக்கின்றதுஎன்இதற்கு? நெஞ்சும்நிறைவுமெனக்குஇங்கில்லை, கார்வண்ணன்கார்க்கடல்ஞாலமுண்டகண்ணபிரான் வந்துவீற்றிருந்த, ஏர்வளவொண்கழனிப்பழனத் தென்திருப்பேரெயின் மாநகரே.

ஆ.—(சேர்வன்சென்று.) - "இப்போதே தானே எழுந்தருளுகிறானிறே! இப்படிபதறவேணுமோ?" என்றும், "போகைதானும்கூடல்ல" என்றும் தோழிமாரும் அன்னையருஞ்சொல்ல, 'நீங்கள் என்னையொன்றும் தேற்றவேண்டா; போகைக்குநீங்கள் சொல்லுகிற விரோதமென்? போனால் வரக்கடவ விரோதமுண்டோ?" என்று இவள் சொல்ல, "உன்னுடைய தைர்யசாதுர்யாதிகளுக்குப்போராது" என்று அவர்கள் சொல்ல,' அவனுடைய ஸௌந்தர்யஸௌசீல்யகாருண்யாதி குணங்களாலே என்னுடைய தைர்யசாதுர்யாதிகள்அபஹ்ருதங்களாயற்றன; ஆதலால்,அதிஸம்ருத்தமாய் அதிரமணீயமாய் என்னோடு ஸம்ஶ்லேஷிக்கைக்காக அவன் வந்தெழுந்தருளியிருந்த தென்திருப்பேரெயிலேச் சேர்வன் சென்று' என்கிறாள்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், 'நீங்கள் என்னைத்தேற்றி ப்ரயோஜநமில்லை; தென்திருப்பேரெயிலைப்போய்ப் புகக்கடவேன்' என்கிறாள்.

[நீர்களுரைக்கின்றதென்இதற்கு] - எனக்கு ஓடுகிற தசைக்கு நீங்கள் சொல்லுகிற வார்த்தையோடு என்னஸங்கதி உண்டு? [நெஞ்சும்நிறைவுமெனக்கிங்கில்லை] — நிறைவுடையார் இங்ஙன்படக்கடவதோ, நெஞ்சை வருந்திப்பிடித்து தரிக்கவேண்டாவோ? என்ன, அவையும் எனக்கிங்கில்லை. அவன் பக்கலின. [கார்வண்ணனென்று மேலுக்கு] - பரமோதாரனாய் ஆபத்ஸகனான க்ருஷ்ணன்வந்து இருந்தருளின ஸ்ரீன் மிகுதியையுடைய அழகிய கழனிகளோடுகூடினபழனங்களையுடைய தென்திருப்பேரெயிலாகிற மஹா நகரம்.

ப.—அநந்தரம், ப்ரளயாபத்ஸகனானவன் வர்த்திக்கிற தேசத்திலேசென்று புகத்தவிரேன். நீங்க ளென்னைத் தேற்றி யுரைக்கிறதுக்கு ப்ரயோஜநமில்லையென்று தோழிமாரையும் தாய்மாரையும்பார்த்துச் சொல்லுகிறாள்.

என்னுடை - எனக்கு ஸமாநதுஃகைகளாயிருக்கச்செய்தே ஹிதஞ்சொல்லவொருப்பட்ட, தோழிமீர்காள்-! அன்னையர்காள்-(ஹிதபரைகளாயேபோரும்) அன்னைமீர்காள்! என்னை-, தேற்றவேண்டா - தேற்றவேண்டுவதில்லை; இதற்கு - இந்த அவஸ்த்தைக்கு, (தேறுகைக்குறுப்பாக), நீர்கள்-, என்-என்னவார்த்தை, உரைக்கின்றது - சொல்லுவது? நெஞ்சும் - (தேறியிருக்கைக்கு அடியான) நெஞ்சும், நிறைவும் - பூர்த்தியும்,• எனக்கு - எனக்குஉறுப்பாம்படி, இங்கு இல்லை -; (அவையங்கேயான பின்பு தேற்றமுமங்கேபோயிற்று; ஆதலால், நெஞ்சையும் நிறைவையும்அபஹரிக்கைக்கடியான), கார் - ஶ்யாமளமான, வண்ணம் - வடிவையும், கார்க்கடல் - ப்ரளயாபந்நமான, ஞாலம் - ஜகத்தை, உண்ட - அமுதுசெய்தவாபத்ஸகத்வத்தையும், பிரான் - ஆஶ்ரி

தோபகாரகமான ஸௌலப்யத்தையுமுடைய, கண்ணன் - க்ருஷ்ணன், வந்து-, வீற்றிருந்த- இருக்குமிடமாய், ஏர்-ஏரினுடைய, வளம் - மிகுதியையுடைத்தாய், ஒண்-ஊர்மணீயமான, கழனி - கழனியையும், பழனம் - நீர்நிலங்களையுமுடைத்தான, தென்திருப்பேரெயில் - திருப்பேரெயிலாகிற, மாநகர் - மஹாநகரத்தை, சென்றுசேர்வன் - சென்றுகிட்டிவிடக் கடவேன்.

இ.—ஒன்பதாம்பாட்டில், 'இப்படி அதிஸாஹஸத்திலே துணியுமது ஸ்த்ரீத்வத்துக்குப்போராது; செய்து தலைக்கட்டவும் போகாது' என்ன, நீங்கள்தேற்றினால் ப்ரயோஜநமில்லை, அங்கேபோய்ப் புகக்கடவேன் என்கிறாள்.

[சேர்வன் இத்யாதி] - அங்கேபோய்ப் புகுகை தவிரேன். என்வழியே ஒழுகுவாரோடு, தந்தாம்வழியே என்னைப்போக்கத் தேடுவாரோடு வாசியற ஒருவரும் எனக்கு வார்த்தை சொல்லவேண்டா. [என்னைத் தேற்றவேண்டா] - கலங்கினாரோ தெளிந்தார்க்கு உபதேசிப்பார்? அஜ்ஞரோ வ்யவஸிதரை உபதேசத்தாலே மீட்கப்பார்ப் பார்? விஷயாயீநமாய் வருகிறத்தை ஸாயநத்திலே செலவு எழுதுகிறவர்களோ எனக்கு வார்த்தை சொல்லுவார்? இவள் தன்னைமறந்து அவனையே பார்த்துச்சொல்லுகிறாள்; அவர்கள் அவனைமறந்து தந்தாமையேபார்த்து மீட்கத்தேடுகிறார்கள். [நீர்களுரைக்கின்ற தென்இதற்கு] - எனக்கு ஓடுகிறதசைக்கு உங்கள் வார்த்தையோடு என்னஸங்கதியுண்டு? நீங்கள் சொல்லுகிறவார்த்தை எது, நான் நிற்கிறநிலைஎது? 'நிறைவுடையார் இங்ஙன்படக்கடவரோ? நெஞ்சை வருந்திப்பிடித்து தரிக்கவேண்டாவோ?' என்ன, [நெஞ்சும்நிறைவும் எனக்கிங்கில்லை] - மநஸ்ஸும் அடக்கமும் எனக்குஇங்கில்லை; அவன் பக்கலின; அங்கேபோய்ச் சொல்லப்பாருங்கோள். [கார்வண்ணன் இத்யாதி] - ஸ்த்ரீத்வத்தையும் மனஸ்ஸையும் அபஹரித்தபரிகாரம் இருக்கிறபடி. ஒன்றை யாராயாதபடி பண்ணிற்றும்ஸத்ரீத்வத்தை அழித்ததும் வடிவழகைக்காட்டியாயிற்று. வடிவழகு இல்லையாகிலும் விடவொண்ணாத ஆபத்ஸகத்வம்.உபகாரசீலனான க்ருஷ்ணன். [வந்துவீற்றிருந்த]- தன்ஐஶ்வர்யத்தோடே காணலாம்படி இருந்த. அவன் கிட்டஇருந்தால் எனக்குப் புகாதொழியப்போமோ? [ஏர்வளம் இத்யாதி] - ஏரினுடைய மிகுதியையுடைத்தாய் அழகிதான வயலையும் அத்தோடேசேர்ந்த நீர்நிலங்களையுமுடைய தென்திருப்பேரெயிலாகிற மஹாநகரத்திலே சென்று சேருகை தவிரேன்? என்னைத் தேற்றவேண்டா. வளம் என்று மிகுதிக்குப்பேர்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. நீங்கள் இனி என்னைத்தேற்றி ப்ரயோஜநமில்லை: தென்திருப்பேரெயிலைப் போய்ப்புகக்கடவேன் என்கிறாள்.

[சேர்வன்சென்று] - உன்னுற்றமையாலே சிலசொல்லுகிறாயாகில்இது கடைப் படவற்றோ? என்ன,'அவஶ்யம்அங்கே புக்கல்லது விடேன்'என்கிறாள்.[என்னுடைத்தோழி

---

ஒன்பதாம்பாட்டு.—சேர்வன் இத்யாதி. "அன்னையர்காள், என்னைத்தேற்றவேண்டா, தென் திருப்பேரெயில் மாநகர் - சேர்வன் சென்று" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை – நீங்கள் இனி இத்யாதி. தேற்றுகையாவது - இப்படி ஸாஹஸத்திலேதுணியுமது ஸ்த்ரீத்வத்துக்குப்போராது, செய்து தலைக்கட்டவும்போராது; ஆகையால்இத்தை விடு என்கை.

கீழேயும் "சேர்வன் சென்று" என்றுவைத்து, திரியவும் சொன்னதுக்குஹாவம் - உன்னுற்றமை இத்யாதி. கடைப்படவற்றோ-நிறைவேறவற்றோ.கடைப்படுகை – நிறைவேறுகை. தோழிமீர்க

மீர்காளித்யாதி] - எனக்காயிருப்பாரும், என்னைத் தங்களுக்காக நினைத்திருப்பாரும் ஒன்றுஞ் சொல்லவேண்டா. தோழிமாரோடு தாய்மாரோடு வாசியில்லை காணும் இவளைத் தேற்றப்போகாமைக்கு. அஜ்ஞரோ வ்யவஸிதரை உபதேசத்தாலே மீட்கப்பார்ப்பார்? விஷயாயீநமாக வருகிறத்தை ஸாயநத்திலே செலவெழுதுகிறவர்களோ எனக்கு வார்த்தைசொல்லுவார்? இவள் தன்னைமறந்து, அவனையே பார்த்துப் பேசுகிறாள்; அவர்கள் அவனைமறந்து, தந்தாமையேபார்த்து மீட்கத் தேடுகிறார்கள். [நீர்களுரைக்கின்றதென் இதற்கு] - கலங்கினரோ தெளிந்தாரைத்தேற்றுவார்? நீங்கள் நிற்கிற நிலையேது? என் நிலையேது? போகையிலே துணிந்திருக்கிற என்னை, "புறப்படுகைபழி" என்றிருக்கிற நீங்கள் சொல்லுவதென்? [இதற்கு]-எனக்கோடுகிற ஈசைக்கு. ஆனாலும்,நெஞ்சும்அடக்கமுமுடையார்க்கு இது வார்த்தையோ? நாங்கள் சொன்னபடிசெய்து எங்கள் வழியே ஒழுகவேண்டாவோ? என்ன, [நெஞ்சும்நிறைவுமெனக்கிங்கில்லை] - அதுவேணுமாகில் அங்கேபோய்ச் சொல்லுங்கோள். மநஸ்ஸும் அடக்கமும் அவன்பக்கலின. நிறைவாவது - அடக்கம். நெஞ்சாவது - அதுஇட்டுவைக்கும் கலம். [கார்வண்ணனித்யாதி] - நெஞ்சும் நிறைவும் எனக்காம்படியாயோ அவன்படி இருக்கிறது? [கார்வண்ணன்] - தாய்மார் தோழிமாரானவர்கள் வார்த்தைகேளாதபடியாக வடிவுபடைத்தவன்.வெறும்வடிவழகேயோ உள்ளது?என்னில், [கார்க்கடல் ஞாலமுண்ட] - தளர்ந்தார் தாவளம். ஆபத்துவந்தால் ரக்ஷித்துவிடுமத்தனையோ?என்னில்:[கண்ணபிரான்]-தன்னைப் பிறர்க்காக்கிவைக்கும் உபகாரகன். [வந்து வீற்றிருந்த] - தன்னைஸ்வர்யமெல்லாந் தோற்றும்படியிருந்த. [ஏரிஇத்யாதி] - ஏரினுடைய ஸம்ருத்தியையுடைத்தாய், அழகிதான கழனியையும் நீர் நிலங்களையுமுடைய திருப்பேரெயிலாகிற மாநகரிலே சென்று சேர்வன். உங்கள் தடைக்குமீளுதல், அவ்வழியில் நிற்றல் செய்யேன். என்னைத் தேற்றவேண்டா. வளமென்று - மிகுதிக்குப்பேர். (௯)

---

## பத்தாம் பாட்டு.

நகரமும்நாடும்பிறவும்தேர்வேன்நாண்எனக்கில்லையென்தோழிமீர்காள் !
சிகரமணிநெடுமாடநீடுதென்திருப்பேரெயில்வீற்றிருந்த
மகரநெடுங்குழைக்காதன்மாயன் நூற்றுவரையன்றுமங்கநூற்ற
நிகரில்முகில்வண்ணன்நேமியான்என்நெஞ்சங்கவர்ந்தெனையூழியானே.

---

*ளென்றதே, "என்னுடைத்தோழிமீர்காள்" என்ற விசேஷிக்கையைப்பற்ற - எனக்காயிருப்பாரும் என்கிறது."அன்னையர்காள்" என்ற கௌரவிக்கையாலே - என்னைத்தங்களுக்காக நினைத்திருப்பாரும்என்றது.தாய்மார்க்கொழியத்தோழிமார்க்கும்தேற்றப்போகாதோவென்ன-தோழிமாரோடு இத்யாதி. "நீர்கள்" என்றதுக்குபாவம் - கலங்கினரோ இத்யாதி. விவரணம் - நீங்கள் இத்யாதிவாக்யத்வயமும் "இங்கில்லை" என்றதுக்குபாவம்-அதுவேணுமாகில் இத்யாதி. "கார்வண்ணன்" என்றத்தை "நெஞ்சும்நிறைவும் எனக்கிங்கில்லை" என்றத்தோடே கூட்டிபாவம் - நெஞ்சும் நிறைவும் இத்யாதி. "தோழிமீர்கா ளன்னையர்காள்" இத்யாதியோடேகூட்டி பாவாந்தரம் - தாய்மார் தோழிமாரான இத்யாதி. தளர்ந்தார்தாவளம் - தளர்ந்தார்க்குஆதாரம்."சென்று - சேர்வன்' என்றதுக்குபாவம் - உங்கள்தடைக்கு இத்யாதி. 'என்னுடைத்தோழிமீர்காள்' இத்யாரப்ய, 'மாநகரே - சென்று - சேர்வன்' இத்யந்வயஃ. இதற்கு - இந்தவவஸ்த்தைக்கு. நீர்களுரைக்கின்றதென் - தேறுகைக்குறுப்பாக நீங்கள் சொல்லுகிறவார்த்தையேது?* (௯)

ஆ.—(நகரமும்.) - அவன் எழுந்தருளியிருந்த தென்திருப்பேரையிலே நீயே போகில் ஊரும் நாடும் மற்றும் எல்லாரும் உன்னைப் பழிசொல்லாரோவென்று தோழிமார் சொல்ல, 'அவர்களையிறே நான் தேடுகிறது' என்றுஇவள் சொல்ல, "பழி சொன்னால் உனக்கு லஜ்ஜையாகாதோ?" என்றுபின்னையும் தோழிமார்சொல்ல, அவனுடைய நிரதிசயாஸ்சர்ய ஸௌந்தர்யாதி கல்யாணகுணங்களாலும், அவனுடைய ஆஸ்சர்ய திவ்யசேஷ்டிதங்களாலும் என்னுடைய நெஞ்சும் லஜ்ஜையும் அபஹ்ருதமாய் எத்தனைகாலமுண்டு? ஆதலால் இனித் தென்திருப்பேரையிலே நானேயாகிலும் போமத் தேனா.

ஒ.—பத்தாம்பாட்டில், "இருந்ததேகுடியாக உன்னைப் பழிசொல்லாரோ?" என்று தோழிமார்சொல்ல, அவர்களையன்றோ நான் தேடித்திரிகிறது? என்கிறாள்.

[பிறவும்] - மற்றுமுள்ளனவும். [நாண் எனக்கில்லை யென்தோழிமீர்காள்] - தோழிமார் "ஸ்த்ரீத்வத்துக்கு ஏகாந்தமான லஜ்ஜாதிகளுக்குப்போருமோ" என்று சொல்ல, 'எனக்கு லஜ்ஜாதத்த்வம்பண்டே அறப்போயிற்றுக் காணுங்கோள்!' என்கிறாள். [சிகரமென்று மேலுக்கு] - பர்வதசிகரம்போலே நெடிதாய் மணிமாடங்களையுடைத்தாய்ப் பெரிதான தென்திருப்பேரையிலே வீற்றிருப்பதுஞ்செய்து ஆஸ்சர்யமான குணசேஷ்டிதாதிகளையுடையவனுமாய், துர்யோதநாதிகளை நிஸ்ஸேஷமாகமங்கும்படி மந்த்ரித்த ஒப்பில்லாத மேகம்போலேயிருக்கிற திருநிறத்தையும் திருவாழியையுமுடையனான மகரநெடுங்குழைக்காதன் என்நெஞ்சம்கவர்ந்து எத்தனைகாலத்தான்?

ப.—அநந்தரம், ஆஸ்ரிதவிரோதி நிரஸநஸீலனாய்த் திருப்பேரையிலேயிருந்த மகரநெடுங்குழைக்காதன் என்னெஞ்சை யபஹரித்து அநேககாலமுண்டு: அவனிருந்த நகரத்தோடுநாட்டோடு மற்றுமுள்ள தேசங்களோடு வாசியற நானே புறப்பட்டு ஆராயக்கடவேன்; எனக்கு லஜ்ஜையில்லை என்கிறாள்.

என் – எனக்கு, தோழிமீர்காள் - தோழிமாரென்று பெயராய் ஹிதஞ்சொல்லி நியமிக்கத்தேடுகிறவர்களே, சிகரம் - சிகரங்களையுடைத்தாய், மணி - மணிமயமாய், நெடு - ஓங்கின, மாடம் - மாடங்களையுடைத்தாய், நீடு - சிரகாலஸ்த்தாயியான, தென்திருப்பேரெயில் - தென்திருப்பேரையில், வீற்றிருந்த - எழுந்தருளியிருக்கிற, மகரம் - மகராகாரமான, நெடு - பெரிய, குழை - ஆபரணத்தையுடைய, காதன் - கர்ணபாசங்களையுடையனாய், மாயன் - அவ்வாபரணஸோபையோபாதி ஆஸ்சர்யங்களான குணசேஷ்டிதங்களை யுடையனாய், நூற்றுவரை - ஆஸ்ரிதவிரோதிகளான துர்யோதநாதிகளை, அன்று - (ஹாஸ்யமாம் ப்ரவ்ருத்தமான) அன்று, மங்க - நசிக்கும்படி, நூற்ற - மந்த்ரித்து, (அத்தாலே), நிகர்இல் - ஒப்பு இல்லாத, முகில் - காளமேகநிபமான, வண்ணன் - வடிவிற்புகரையுடையனாய், நேமியான் - (ஆஸ்ரிதஸம்ரக்ஷணார்த்தமான) திருவாழியையுடையனானவன், (இவ்வபதாநத்தைக்காட்டி), என்நெஞ்சம் - என்நெஞ்சை, கவர்ந்து - அபஹரித்துக்கொண்டு, எனையூழியான் - எத்தனைகாலத்தான்; (ஆனபின்பு), நகரமும் - (அவனிருந்த) நகரமும், நாடும் - (அத்தோடு சேர்ந்த) நாடும், பிறவும் - மற்றுமுண்டான பத்தநாதிகளும், (நானே), தேர்வேன் - போய்ஆராயக்கடவேன்; நாண் - ("இவர்கள் பழிக்கும்படி யிவர்கள் ஸந்நிதியிலே போகும்படியென்?" என்கிற ஸ்த்ரீத்வப்ரயுக்தமான) லஜ்ஜை, எனக்கு

இ.—பத்தாம்பாட்டில், ததே குடியாகப் பழிசொல்லாரோ?'' என்று தோழிமார்சொல்ல, அவர்களையன்றோ நான் தேடித்திரிகிறது என்கிறாள்.

[நகரம் இத்யாதி] - படைவீட்டிலும் நாட்டிலும் பத்தநாதிகளிலும் பழி சொல்லுவாரைத் தேடுவேன். [பிறவும்] - மற்றுள்ளனவும். [தேர்வேன்] - நிரூபிப்பேன் என்கிறத்தைவிட்டு, தேடுவேன் என்கிறது. அவனே வாராஞகில், நீங்கள் போகவொட்டீகோளாகில், அவனையும் என்னையும் சேர்த்துப் பழிசொல்லுவார் தேட்டம் என்கை. நகரங்களோடு நாடுகளோடு பத்தநங்களோடுவாசியறத் திரண்டார் திரண்ட விடமெல்லாம் உன்னைப்பழிசொல்லுகை பணிபோரும்படி இருக்கிற இருப்பு உனக்குத் தேட்டமாகை ஸ்த்ரீத்வப்ரயுக்தமான லஜ்ஜைக்குப் போருமோ? என்ன, [நாண் எனக்கில்லை] - லஜ்ஜை முதலிலேயில்லை. இங்கில்லை என்றதுவும் வார்த்தையன்று; அங்கும் இல்லை. [என் தோழிமீர்காள்] - [illegible] ஒக்கஅநுபவிக்க முறையாயிருக்க, லஜ்ஜைபோனமை என்வாயிலே கேட்கவிருப்பதே நீங்கள்! மாம்பழவுண்ணிபோலே பேரைப்பெற்றிருந்தீகோளித்தனை. [சிகரம் இத்யாதி] - பர்வதசிகரம்போலேநெடிதாய் மணிமயமான மாடங்களையுடைத்தாய்ப் பெரிதானதேசம். [மகரநெடுங்குழைக் காதன்] - தான் அகப்பட்ட துறை சொல்லுகிறாள். [மாயன்] - மற்றும் அகப்படுத்திக் கொள்ளவல்ல ஆஶ்சர்யமான ஸ்மிதவீக்ஷணாதிகள். ஊர்வோபுராதிகளை முதலறஅழியச்செய்தவன். சிலரையழிக்க நினைத்தால் முதலறஅழிக்குமவன். ஆயுதம் எடுக்க வொட்டோம் என்ன, மந்த்ரத்தாலே அழியச்செய்கை. [நிகரில்முகில்வண்ணன்] - என்னை அழிக்கைக்கு மந்த்ரமும் வேண்டிற்றில்லை, வடிவே அமைந்தது. [நேமியான்] - பகலைஇரவாக்கும் பரிகரமுடையவன். [என்நெஞ்சங்கவர்ந்த எம்மையூழியானே] - வடிவழகையும் ஆயுதசேர்த்தியையும்காட்டி என்நெஞ்சை அபஹரித்துப்போய் எத்தனை காலத்தான்? * மாசறுசோதி அக்காலமேபோயிற்றே! ஆனபின்பு, நாண் எனக்கில்லை; பழிசொல்லுவார் தேட்டம் எனக்கு.

ஈடு.—பத்தாம்பாட்டு. ''இருந்ததே குடியாக நாட்டார் உன்னைப்பழி சொல்லார்களோ?'' என்று தோழிமார்கள்சொல்ல, 'அவர்களன்றோ எனக்குத் தேட்டம்?' என்கிறாள்.

[நகரமும்நாடும்இத்யாதி]-உன் துணிவதுணிவாக, நாட்டார்நகரத்தார் மற்றுமுள்ளாரும் எல்லாம் அறிந்து பழிசொல்லுகிறார்களிறே என்ன, எனக்குத்தான் அவனையோதேட்டம்? நகரம், நாடு, பத்தநாதிகள், இவற்றிலுள்ளாருடைய பழியேயன்றோ எனக்குத்தேட்டம்? [தேர்வேன்] - தேடுகிறேனென்றபடி. நீங்கள் சேரீகோளாகில், அவன் தானாக வாராஞகில், அவனுடனே கூட்டிப் பழிசொல்லுகிற இவர்களன்றோ ஸத்தையைநோக்குகிறார்கள்; †''அலரேழவாருயிர்நிற்கும்'' என்றானிறே. பிறவும் - மற்றுமுள்ளனவும். [நாண்

பத்தாம்பாட்டு - நகரமும்இத்யாதி. ''நகரமும்நாடும் பிறவும்தேர்வேன்'' என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை - இருந்ததேஇத்யாதி. இருந்ததேகுடியாக - குடியிருக்கிறபேரெல்லாருமென்றபடி. நகரமும்நாடும், பிறவும்-மற்றமுண்டான பத்தநாதிகள், இவற்றிலுள்ளாருடைய பழியைத் தேடுவேனென்ற மப்தார்த்தம். தேருகை - தேடுகை. விவரணம் - நகரம்நாடுஇத்யாதி. தேட்டமாகைக்குஹேதுவேதென்ன - நீங்கள்இத்யாதி. சேரீகோளாகில் - சேரவிடாதவர்களாகில். ''பழிஸத்தையைநோக்கும்'' என்னுமதுக்குப்ரமாணம் - அலர்இத்யாதி. அலரெழல் - பழிகிளம்பில். அலர் - பழி.

† குறள்-1141.

# ஐந்தாம் பாட்டு.

ஊணுடைமல்லர்ததர்ந்தவொலிமன்னர்
ஆணுடைச்சேனைநடுங்குமொலிவிண்ணுள்
ஏணுடைத்தேவர்வெளிப்பட்டவொலியப்பன்
காணுடைப்பாரதங்†கையறைபோழ்தே.

ஆ.—(ஊணுடைமல்லர்.) - அதி பலபராக்ரமரான மல்லருடைய வித்வம்ஸநத்வநியும், ஸௌர்ய வீர்யாதி பரிபூர்ணைஸ்வ்ய ஸஹிதரான ராஜாக்களுடைய ஹயஜநிதமான மஹாகோஷமும், ப்ரஸித்தரான ப்ரஹ்மேஸாநாதிகளுடைய ஸ்வவிஷய ஸ்துதிகோஷமு மெழும்படியாக, தர்ஸநீயமான மஹாபாரத யுத்தத்திலே அணிவகுத்து என்னப்பன் ஸாரத்யம்பண்ணினபடி என் ? என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், ஸம்ஹாரநிர்ஹரணார்ஹமான ஹாரதஸமரவ்ருத்தாந்

'ணன் [illegible] ரடங்[illegible] - யுத்தார்ஹமாக ஹஸ்த்யஹோஜ்யாதிகளை மிகவும் ஹேஜித்து மலைபோலே இருக்கிறமல்லர் நெரிந்த ஒலி. [ஆணுடைச்சேனை] - ஆண்பிள்ளைத்தனத்தை உடையஸேனை. [ஏணுடைத்தேவர்] - எண்ணப்படும் தேவர்கள். [அப்பன் காணுடைப்பாரதம் கையறைபோழ்தே] - அப்பன்கண்டு நிற்கவேணும்படி ஹாரதஸமரம் தொடங்கினபோது.

ப.—அநந்தரம், ஸாரதஸமரப்ரவர்த்தகத்வத்தை யநுஸந்திக்கிறார்.

அப்பன் - ஆஸ்ரிதபக்ஷபாதியானக்ருஷ்ணன், காணுடை - தர்ஸநீயமான, பாரதம் - பாரதத்தை, கை - கைகுவித்து, அறை - பொருத, போழ்து - போது, ஊண் - பலகரமானவூணை, உடை - உடைய, மல்லர் - பெருமிடுக்கரான மல்லரானவர்கள், (த்வந்த்வயுத்தம்பண்ணி), ததர்ந்த - நெரிந்துவிழுகிற, ஒலி - ஓசையும், மன்னர் - ராஜாக்களுடைய, ஆண் - வீரபுருஷரை, உடை - உடைத்தான, சேனை - ஸேனைகளானவை, (க்ருஷ்ணபலாநுஸந்தாநத்தாலே யஞ்சி), நடுங்கும் - நடுங்குகிற, ஒலி - சப்தமும், விண்ணுள் - ஆகாசத்திலே, ஏண் - தந்தாம் பதமர்யாதைகளை, உடை - உடைய, தேவர் - ப்ரதாநதேவர்கள், (யுத்ததர்ஸநார்த்தமாக), வெளிப்பட்ட - வெளிப்பட்டுக்கொண்டாடுகிற, ஒலி - ஓசையும், (ஆயிற்று). ததர்தல்-நெரிதல்.

இ.—அஞ்சாம்பாட்டில், ஸாரதஸமரவ்ருத்தாந்தத்தை அநுபவிக்கிறார்.

[ஊணுடைமல்லர்] - பலகரமான த்ரவ்யங்களை மிகவும் ஹேஜித்து மிடுக்கரானமல்லர். [ததர்ந்தஒலி] - நெரிந்துவிழுகிற ஓசை. [மன்னராணுடைச்சேனை] - ராஜாக்களுடைய ஆண்பிள்ளைத்தனத்தை உடைத்தான ஸேனையென்னுதல்; பீஷ்மாதிகளை ரக்ஷகமாக உடைத்தானஸேனை என்னுதல். [நடுங்குமொலி] - க்ருஷ்ணன் ப்ரதிபக்ஷத்திலானென்று நடுங்கிஅலமாக்கிறத்வநி. [விண்ணுளேணுடைத்தேவர்] - ஸ்வர்கத்திலே மதிப்பாராக எண்ணப்பட்டதேவர்கள். [வெளிப்பட்டஒலி] - "தெரிவரிய சிவன் பிரமன் அமரர்கோன்" என்கிறபடியே பரோக்ஷஸ்திதரானவர்கள், கண்ணுக்கு விஷய

† 'கையெறி' என்று பாடாந்தரம்.

ப்ரயோஜநம் அற்றைநிலையைக்காண்கையிறே. ஸேநாதூளியும், கையும் உழவுகோலும் சிறுவாய்க்கயிறும், நாற்றின திருவடிகளுமாய் நிற்கிறநிலை யிறே. ''மாம்'' என்கிறநிலையிறே யது. சர்மநியமான பாரதம். [கையறைபோழ்து] - கையுமணியும் வகுத்து அங்கோடு இங்கோடு உலாவிப் படைபோருத்தி, ''நீங்களின்னபடி செய்யக்கடவிகோள்! நாங்களின்னபடி செய்யக்கடவோம்'' என்று கைதட்டிவிட்டபோது இத்த்வநியெல்லாம் உண்டாயிற்று. (ரு)

---

## ஆறும்பாட்டு.

போழ்துமெலிந்தபுன்செக்கரில்வான்திசை
சூழுமெழுந்து உதிரப்புனலாமலை
கீழ்துபிளந்தசிங்கமொத்ததால்அப்பன்
ஆழ்துயர்செய்தசுரரைக்கொல்லுமாறே.

**ஆ**—(போழ்து) - பஸ்சிம ஸந்த்யாஸமயத்திலே ஸகலபுவன விவரமும் ருயிரபூரபூரிதமாம்படி, மேருசிகரத்திலேயேறி ஒரு ஸிம்ஹமானது மேருசிகரத்தைப் பிளந்தாற்போலே, ஹிரண்யனைவ்யபூதனுப்படிபண்ணி என்னப்பன் பிளந்தருளினபடி என் ! என்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், ஆஸ்ரிதர்க்கு உஜ்ஜீவந ஹேதுவான ஹிரண்யவத வ்ருத்தாந்தத்தை அருளிச்செய்கிறார். [போழ்தென்று தொடங்கி] - போதுபோய்ச் செவ்வானமிட்ட ஊரையிலே ஆகாசமும் திக்குக்களும்போய் ருயிரஜலமாக, ஸந்த்யா ராகத்திற்காட்டில், அவனுடைய ஹ்ருதயத்தினின்றும்புறப்பட்ட ரக்தமானது ஆகாஸத்தையும் திக்குக்களையும் மிகவும் சிவப்பிக்க என்றுமாம். [மலையென்று தொடங்கி] - ஒருமலையைக் கீழேயிட்டு அதின்மேலே யிருந்து அம்மலையைக்கீண்ட ஸிம்ஹம்போலே யிருந்தது. தன் சீற்றத்தைக்காட்டி மிகவும் ஊர்த்வப்படுத்தி அஸுரனைக்கொன்றபடி.

ப.—அநந்தரம், ஹிரண்யவத வ்ருத்தாந்தத்தை யநுஸந்திக்கிறார்.

போழ்து - திவஸம், மெலிந்த - க்ஷயித்தவளவிலே, புன் - இளம், செக்கரில் - செக்கர்போலே, வான் - ஆகாசமும், திசை - திக்குக்களும், சூழும் - சூழ, எழுந்து - கிளம்பி, உதிரப்புனல் - ரக்தஜலமாக, ஆ - ஆம்படியாக, அப்பன் - ஆஸ்ரிதோபகாரகனான நரஸிம்ஹரூபியானவன், ஆழ்துயர் - அதிசயிததுக்கத்தை, செய்து - விளைத்து, அசுரரை - அஸுரனான ஹிரண்யனை, கொல்லும் - கொல்லும், ஆறு - ப்ரகாரம், மலை - மலை, கீழ்து - கீழ்தாம்படி, பிளந்த - பிளந்த, சிங்கம் - சிங்கத்தை, ஒத்தது - ஒத்திருந்தது. புன்செக்கரில் - புன்செக்கரான ஸந்த்யாகாலத்திலென்றுமாம்.

இ—ஆறும்பாட்டில், ஆஸ்ரிதர்க்கு உஜ்ஜீவநஹேதுவான ஹிரண்யவத வ்ருத்தாந்தத்தை அநுபவிக்கிறார்.

---

நிலை'' என்றதின்விவரணம் - ஸேநாதூளியும் இத்யாதி. அந்நிலைக்கு ப்ராப்யத்வமாத்ரமேயன்றிக்கே, ப்ராபகத்வமு முண்டென்கிறார் - மாமென்கிற இத்யாதி. ''கையறைபோழ்து'' என்றதுக்கு பாவம் - கையுமணியும் இத்யாதி. கையறைபோழ்து - கைதட்டிவிட்டபோது. கையறைகை - கைதட்டுகை, கையுமணியும் வகுத்து - படையில் வ்யூஹவிபாகம்பண்ணி. அப்பன்காணுடைப் பாரதம் கையறைபோழ்து - இத்த்வநிகளெல்லா முண்டாயிற்றின என்றந்வயம். (ரு)

[போழ்து மெலிந்தபுன் செக்கரில்]-ஸந்த்யா வேளையிலே. ராத்ரி முற்று மந்த்வை யாய்ச் செவ்வானம் மறைவதற்கு முன்பே. அவன் கொண்டவரத்தில் புகாதகாலத்திலே. [வான் திசை சூழ மெழுந்துதிரப்புனலா] - ஆகாசமும் திக்குக்களெங்கும் ரக்தஜல மாக. ஸந்த்யாராகத்திற்காட்டில், ரக்தமானது எல்லாவிடத்தையும் சிவப்பிக்க என்று மாம். [மலைகீழ்ந்து பிளந்த சிங்கமொத்ததால்] - மலையைக்கீழேயிட்டு மேலேயிருந்து அத்தைப் பிளக்கிற ஸிம்ஹம்போலே இருந்ததென்னுதல். மலையை இரண்டுகூறாகக் கிழித்துப்பிளந்த ஸிம்ஹம்போலேயென்னுதல். கிழ்ந்து பிளந்தஸிம்ஹம். [அப்பன்] - பிதா வெதிராக வந்துஉதவின உபகாரகன். கீழ்ப்பாட்டில் - பந்துக்கள் பகையாக வந்து உதவினபடி சொல்லிற்று; இதில் - ரக்ஷகனை பிதா பகையாக, வந்துஉதவினபடி சொல்லுகிறது. பந்துக்கள் பகையாகவந்து உதவினவன், ஜநகன் பகையாகவந்து உத வினவன், "ஆபதி ஸர்வ லோகாநாம்" என்று - தனக்குத்தானே வையகனை அவ் வளவிலும்வந்து உதவுமவன்; ஆனபின்பு, ஸர்வரையும்விட்டு அவனையேவன்றோ பற்ற அடுப்பது. [ஆழ்துயர்செய்து அசுரரைக்கொல்லுமாறு] - தன் சிற்றத்தைக்காட்டி மிக வும் ஊஹவத்தை விளைத்து அஸுரனைக்கொன்றபடி. நரஸிம்ஹத்தின் தோற்றத்திலே மாவகல்பனுனன், பின்னையுடலைக்கிழித்துப் பொகட்டான். "அவன்வியத்தோன்றிய சிங்கப்பிரான்" என்னக்கடவதிறே.

௫௫.—ஆறும்பாட்டு. ஹிரண்யவத வ்ருத்தாந்தத்தை அருளிச்செய்கிறார்.

[போழ்துமெலிந்த.]-"பலிதப்ராயோவாஸர:" (பலிதப்ராயோவாஸர:) என்னுமாபோலே, பொழுதுபோகாநிற்கச் செய்தே. [புன்செக்கரில்] - செக்கர்வானமிடுகிற வளவிலே. அவன்வரத்தி லகப்படாத ஸந்த்யாகாலத்திலே. †"இராப்படகில்லேன், பகல் படகில்லேன்" என்று வரங்கொண்டானே. [வான்திசை சூழுமெழுந்துதிரப்புனலா] - பரப் பையுடைத்தானவாகாசம் திக்குக்களடங்கலும், பள்ளங்கண்ட இடமெங்கும் வெள்ளம் பரக்குமாபோலே ருதிரமானது கொழித்துப் பரக்கும்படி. [மலைகீழ்ந்து பிளந்தசிங்கமொத்த தால்] - ஒரு மலையைக் கீழேயிட்டுக்கொண்டு மேலேயிருந்து அத்தைப்பிளந்த ஸிம்ஹமென்

ஆறும்பாட்டு - போழ்து இத்யாதி. "ஆழ்துயர்செய்தசுரரைக்கொல்லுமாறு" என்றத் தைக் கடாக்ஷித்தவதாரிகை - ஹிரண்ய இத்யாதி.

"போழ்துமெலிந்த" என்றதுக்கு ஸம்ப்ரமாணார்த்தம் - பலிதப்ராய இத்யாதி. "திவ ஸம் க்ஷயித்தவளவிலே" என்றுரையில் ஸப்தார்த்தம். மெலிந்த - க்ஷயிக்கிறவளவிலே யென்றபடி. புன்செக்கரில் - இளஞ் செவ்வானமிடுகிற அளவிலே யென்றபடி. விவரணம் - அவன்வரத்தில் இத் யாதி. அப்படி வரமுண்டோ? என்ன-இரா இத்யாதி. படகில்லேன - படக்கடவேனல்லேனென்ற படி. "சூழும்-வான்திசை எழுந்து"என்று அந்வயித்து அர்த்தம்-பரப்பை இத்யாதி. "சூழும் - வான்" -பரப்பையுடைத்தான ஆகாசம், திக்குக்கள், கொழித்து ரக்தஜலமாம்படி யென்று சப்தார்த்தம். உதி ரம் -ரக்தம். புனல் - ஜலம். "புனலா" என்றது - புனலாம்படி என்றபடி. எழுந்து - கொழித்தென் னுதல், கிளர்ந்தென்னுதல். முந்தினவர்த்தத்துக்கு, "மலைகீழ்ந்து" என்றது - மலையைக் கீழே யிட்டுக் கொண்டென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, மலையையநாயாஸேந கிழித்தாற்போலே இரண்டுகூறாகப் பிளந்த ஸிம்ஹம்போலே என்று ஸப்தார்த்தம். மூன்றுமர்த்தத்துக்கு, "மரையிதழ் புரையும்சேவடி" என்று தாமரையை மரையென்றாற்போலே தலைக்குறைத்தலாய் மகரம் லோபித்து; "கட்டுவழி

† இராப்படற்பேன், பகற்படற்பேனென்று பாடங்காண்பது சரியன்று என்று தோன்றுகிறது.

னுதல். அன்றிக்கே, கிழித்துப்பிளந்த ஸிம்ஹம். மகிழ்ந்துபிளந்த ஸிம்ஹமென்றமாம். (மகிழ் - அநாயாசத்தால்ஸித்தம். அதாவது - இரண்டு கூறுக்கிப்பிளந்த ஸிம்ஹ என்கை) ''இரண்டுகூறுசெய்துகந்தசிங்கம்'' என்னக்கடவதிறே. ஒக்கப்பிளந்த சங்கமோத்ததால். (கீழ்ந்து-உகந்து.) [அப்பனூழ்துயர்செய்து] - நரஸிம்ஹத்தினுடைய மோருந்தமுகத்தைக் கண்டபோதே, மேல்போயனுபவிக்கக்கடவ அநுஸவமடைய அப்போதே யநுஸவித்துஅற்றான். அநாதிகாலம் ஸகவத்பாகவத விஷயங்களிலே பண்ணிப்போந்த ப்ராதிகூல்ய மடைய அரைக்ஷணத்திலே யநுபவித்தறபடி. மிகவும்துக்கத்தைவிளைத்து. [அசுரரைக் கோல்லுமாறே] - அசுரனைக்கோன்றபடி. இத்தால் சோல்லிற்றுயிற்று - ஸர்வஸாதாரணனாய் நிற்கும்நிலையொழிய, பித்ராதிகள் முகமாக ப்ரஜைகள் பக்கலிலே வத்ஸலனுய நிறப தோரு நிலையுமுண்டிறே: அது குலைந்தால், அவன் சத்ருவாயும்நிற்குமிறே: அப்போதும் இவன்தான் முன்னின்று ரக்ஷிக்குமென்கை. இத்தாலும் சோல்லிற்றுயிற்று - ஆடத்துக் கனத்ததனையும் கடுகவந்து ரக்ஷிக்கு மென்கை. தமப்பன்பகையாக உதவினவன், அவனிலண்ணியனுன தான் தனக்குப் பகையானு லுதவச்சோல்லவேணுமோ? ''ஆத்மைவ ரிபுராத்மந:'' (ஆத்மைவரிபுராத்மந:) என்கிறபடியே தனக்குத்தானேயிறே ஶத்ரு. (சு)

## ஏழாம் பாட்டு

> மாறுநிரைத்திரைக்குஞ்சரங்களின
> நூறுபிணம்மலைபோற்புரளக்கடல்
> ஆறுமடுத்துதிரப்புனலாவப்பன்
> நீறுபடவிலங்கைசெற்றநேரே.

ஆ.—(மாறுநிரைத்து) - சாரினகவருகிற சைவ ப்ராதிசயத்தாலே ஸர்வதிக்குக்களிலும் நின்று விட்ட திருச்சரங்கள் யுகபதேவ தன்னிலே சந்தித்திரைக்கும்படியாகவும், ராக்ஷஸசரீரங்கள் * சிந்நமாம்படியும் பிந்நமாம்படியும் சஞ்ர்தக்தமாம்படியும் ப்ர

---

நீட்டல்'' என்னும் ந்யாயத்தாலே ஈகாரம்வந்து, கீழ்து என்று கிடக்கையாலே, மகிழ்ச்சியைச்சொல்லுகிறது. ஆக, மலையைப்பிளந்தாற்போலே மகிழ்ந்துபிளந்த ஸிம்ஹமென்று மூன்றுமர்த்த . ''கிழித்துப்பிளந்த'' என்ற இரண்டாமர்த்தத்துக்கு ப்ரமாணம் - இரண்டு கூறு இத்யாதி. இரண்டுகூறுகப் பிளந்துகந்த சிங்கமென்றபடி. திருச்சந்தவிருத்தம் அறுபத்திரண்டாம்பாட்டு ''சரண்டமாடு'' இத்யாதி. ''இரண்டுகூறுசெய்து'' என்றத்தால் ஃலிதம்-ஒக்கப்பிளந்த இத்யாதி. ஸமபாகமாகப் பிளந்தவென்றபடி. ஆக, ''கீழ்து'' என்றதுக்கு - கீழேயிட்டுக்கொண்டேனென்றும், கிழித்தென்றும், மகிழ்ந்தென்றும் அர்த்தத்ரயம். ''ஆழ்துயர்செய்து'' என்றதுக்கு ஸாவம் - நரஸிம்ஹத்தினுடைய இத்யாதி. மோருந்த -தூறமண்டின. ஆழ்துயர்செய்து - அதிஶயிததுக்கத்தைவிளைத்தென்று ஶப்தார்த்தம். விவரணம் - அநாதிகாலம் இத்யாதி. ப்ராதிகூல்யமடைய வென்றபடி. இத்தால் ஃலிதவர்த்தம் இன்னதென்கிறார் - இத்தால் இத்யாதி. இதிலும் ஃலிதவர்த்தம் - இத்தாலும் இத்யாதி. ஹிரண்ய நிரஸநம் சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் - தமப்பன் இத்யாதி. தான் தனக்குப் பகையோ? என்ன, அதுக்குப்ரமாணம் - ஆத்மைவ இத்யாதி. உத்தரேதாத்மநாத்மாநம் நாத்மாநமவஸாதயேத் । ஆத்மைவ ஹ்யாத்மநோ பந்துராத்மைவ ரிபுராத்மந:'' இதி பகவத்கீதா ஷஷ்ட்டே(ரு). அடைவே யந்வயம்.

ஊக்கமாம்படியும் சஸ்த்ரபிடிதமாம்படியும், உதிரவெள்ளத்தாலே கடலெல்லாம் நிறைந்து ஆறுகளிலே யெதிர்க்கும்படியும் சரவர்ஷத்தைவர்ஷித்து என்னப்பன் பொடிபட இலங்கையைச்செற்றான் என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், ராவணவதவ்ருத்தாந்தத்தை அநுஸந்திக்கிறார்.

[மாறென்று தொடங்கி] - சாரிகைவருகிறகடிப்பாலே எதிராக நிரைத்து இரையாநின்றுள்ள சரஸமூகத்தாலே அநேகப்பிணங்கள் மலைபோலே புரண்டுகிடக்க. [கடலென்றுதொடங்கி] - கடல்ரக்தத்தாலே நிரம்பி ஆற்றிலேவரவெதிர்க்கபஸ்மமாம்படி லங்கையை அப்பன்செற்றதொரு நேர்பாடே! நேரேயென்றது - ஐஶ்வர்யமான ப்ரபாவத்தாலன்றிக்கே மெய்யான ஆண்பிள்ளைத்தனத்தாலே என்றுமாம்.

ப.—அநந்தரம், லங்காபங்க ப்ரகாரத்தை யநுஸந்திக்கிறார்.

(சாரிகைதிரிந்தகடுமையாலே), மாறு - எதிரெதிராக, நிரைத்து - , இரைக்கும் - சப்திக்கிற, சரங்கள் - சரங்களாலே, இனம் - இனமினமாக, நூறு - நூறுநூறாம்படி, பிணம் - ராக்ஷஸசவங்களானவை, மலைபோல் - மலைபோலே, புரள - புரண்டுவிழவும், ஆறு - ஆறுகளாலேசென்று, மடுத்து - மடுத்து, கடல்-, உதிரப்புனல்-, ஆ - ஆம்படியாகவும், அப்பன்-ஆஸ்ரிதோபகாரகனான சக்ரவர்த்தித் திருமகனானவன், இலங்கை - லங்கையை, நீறுபட - பஸ்மஸாத்தாம்படி, செற்ற - பொருத, நேர்-செவ்வையிருந்தபடி. நூறுதல் - நசித்தலாகவுமாம்.

இ.—ஏழாம்பாட்டில், ராவணவதவ்ருத்தாந்தத்தை அநுஸந்திக்கிறார்.

[மாறுநிரைத்திரைக்கும் சரங்கள்] - சாரிகைவருகிற கடுப்பாலே, எதிராக நிரைத்து இரையாநிற்கிற சரஸமூஹத்தாலே. இரப்பைவிட்டால்; அதுக்கு எதிராக மற்றையம்பைவிடுகையாலே திருச்சரங்கள் தன்னிலே முட்டி த்வநிக்கிறபடி. [இனநூறு பிணமலைபோல்புரள] - இனமான நூறு நூறாகப்பிணங்கள் மலைபோலே புரண்டுகிடக்க, அநேகம்பிணங்கள் என்றுமாம். [கடலாறுமடுத்துதிரப்புனலா] - "குருதிரௌகாண ஸமவ்ருத்திஷு" என்கிறபடியே அவிக்ருதமானகடல், ரக்தத்தாலே நிரம்பி ஆறுகளிலே எதிரேமடுத்து ரக்தஜலமாக. ரக்ஷகனானவன் லங்கைபஸ்மமாம்படி அழித்தநேர்பாடென்னுதல். நேரேயென்று - ஐஶ்வர்யமான ப்ரபாவத்தாலே யன்றிக்கே. செவ்வையான ஆண்பிள்ளைத்தனத்தாலே என்னுதல். க்ருத்ரிமரான ராக்ஷஸரைப்போலன்றிக்கே நேர்போராக என்னுதல்.

ஈடு.—ஏழாம்பாட்டு. ராமவ்ருத்தாந்தத்தை யருளிச்செய்கிறார்.

[மாறுநிரைத்திரைக்குஞ்சரங்கள்] - சாரிகைவந்தசடக்கு, காலுதிக்கும் விட்ட அம்புகளெதிரம்பாய் ஒன்றோடொன்று பொருது கலார் கலார் என்று த்வநிக்கிற த்வநி, கடலிரைத்தாற்போலே இராநின்றது. சாரிகைவந்த சடக்குத் தன்னில்தானெதிரம்பு கோத்

---

ஏழாம்பாட்டு - மாறுஇத்யாதி. "இலங்கைசெற்றநேரே" என்றத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் - ராமஇத்யாதி.

"சரங்கள் - மாறுநிரைத்திரைக்கும்" என்றந்வயிப்பது. சரங்களெதிரேகலந்து சப்திக்குமென்றபடி ஸப்தார்த்தம். மாறு - எதிர். நிரைத்து - கலந்து. மாறுநிரைத்திரைக்கும் ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் - சாரிகைவந்தஇத்யாதி. சாரிகைவந்தசடக்கு - மண்டலாகாரகதியில்வேகம்,

தது காணும். [இனநூறு பிணமலைபோல்புரள] - நூறுநூறாக இனமினமான பிணங்களானவை, அம்புபட்டுருவின சடக்காலே யுயிரோரிடத்தோதுங்கப்பெறுதே இரண்டுதுண்டத்திலும் கலந்து மலைபோலேகிடந்து துடிக்கிறபடி. [கடலாறுமடுத்துதிரப்புனலா] - "ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம்" (ஆபூர்யமாணமசலப்ரதிஷ்ட்டம்) என்று புக்கதெல்லாங் கொண்டிருக்கக்கடவ கடல், ருதிரவெள்ளத்தாலே நிரம்பி ஆறுகளிலே மடுக்கும்படி. "வையமுடு பெருநீரில் மும்மைபெரிதே" என்றாரிறே. [நீறுபட] - "ஸ்மஸாநஸத்ருஸீ"(ஸ்மஸாநஸத்ருஸீ) என்று சொன்னபடியே ஸஸ்மமாம்படியாக. [இலங்கைசெற்றநேரே] - நேர்- பொழுதென்றும், நேரமென்றும் காலபரம். இலங்கைசெற்றபொழுது-மாறுநிரைத்திரைக்கும் சரங்கள் என்றுஅங்வயம். அன்றிக்கே, இலங்கையைச்செற்ற வாய்ப்பென்னுதல். மாயாப்ரயோகத்தாலல்ல, செவ்வைப்பூசலிலே நின்றுகிடீர் இலங்கையை அழித்ததென்னுதல். நேர் - நேராகவென்னுதல். அப்போது, ஏகாரம் - தேற்றேகாரம். ஆர்ஜவத்தாலே இலங்கைசெற்றது. (எ)

---

ரஸோக்தி - சாரிகைஇத்யாதி. பிணங்கள் புரளுகைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் - நூறுநூறாகஇத்யாதி. சடக்காலே - வேகத்தாலே. கடலானது ரக்தஜலத்தாலேநிரம்பி ஆறுகளிலே யெதிர்த்தோடும்படி யென்று சப்தார்த்தம். †"புனலா" என்றது - புனலாலேயென்றபடி. நிரம்பி இத்யத்யாஹார்யம். ஆறுமடுத்து - ஆறுகளிலேயெதிர்த்தோடும்படி, மடுத்தல் - ப்ரவர்த்தித்தலாய், ப்ரவஹிக்கையென்றபடி."கடலாறுமடுத்து"என்றதுக்குஹாவம்-ஆபூர்யமாணம்இத்யாதி.'ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம் ஸமுத்ரமாப: ப்ரவிஸந்தி யத்வத். தத்வத்காமா யம் ப்ரவிஸந்தி ஸர்வே ஸ ஸாந்திமாப்நோதி ந காமகாமீ' இதிகீதாஸப்தவிதீயே.(எ0)அசலப்ரதிஷ்ட்டமென்றது-கரையையதிக்ரமியாதென்றபடி. ஆபூர்யமாணம்" என்றத்தையுங்கூட்டியர்த்தம்-புக்கதெல்லாம்இத்யாதி. ருதிரவெள்ளம் நிரம்பினதுக்கு ப்ரமாணம்-வையமூடிஇத்யாதி. வையத்தைமூடுகிறப்ரளயஜலத்திலும் மும்மடங்குபெரிதென்றபடி. திருமொழிபதினோராம்பத்து நாலாந்திருமொழி நாலாம்பாட்டு, "தளையவிழ்கோதை" இத்யாதி. "நேரே" என்றதுக்கு மூன்றர்த்தம்-காலமும், சாதுர்யமும், ஆர்ஜவமும். முந்தின அர்த்தத்வயத்திலும், ஏகாரம் - அவ்யயம். மூன்றாமர்த்தத்தில், அவதாரணம். மூன்றாமர்த்தவிவரணம் - நேராகவென்னுதல்என்று. தேற்றேகாரம் - நிஸ்சயார்த்தகஏகாரமென்றபடி. "நேர்" என்றதுக்கு காலமர்த்தமானபோது, அப்பன் நீறுபடஇலங்கைசெற்றநேர் - போது, சரங்கள் - மாறுநிரைத்திரைக்கும்; இனமினமாக நூறுநூறாகப் பிணங்கள் மலைபோலேபுரண்டுவிழும்; கடல் - உதிரப்புனலாலே நிரம்பி ஆறுகளிலே மடுக்குமென்றந்வயம். "நேர்" என்றது - சாதுர்யமானபோது, சரங்கள் - மாறுநிரைத்திரைக்கும்படியாகவும், இனநூறு பிணம்மலைபோல் புரளும்படியாகவும், கடல் - உதிரப்புனலாலேநிரம்பி - ஆறுகளிலே மடுக்கும்படியாகவும், அப்பன் நீறுபடவிலங்கைசெற்ற சாதுர்யமிருந்தபடி என்? என்றந்வயம். ஆர்ஜவமர்த்தமானபோது, மாறுநிரைத்திரைக்கும்படியாகவும், மலைபோலே புரளும்படியாகவும், ஆறுகளிலே மடுக்கும்படியாகவும், அப்பன் நீறுபடவிலங்கைசெற்றது, நேரே - செவ்வையாகவே; ஆர்ஜவத்தாலேயென்றந்வயம். "விதாய ஸ்ரோகஸம்யுக்தா யதா ஸுரஸுதா ஹதா । கமிஷ்யதி புரீம் லங்காம் ஸ்மஸாநஸத்ருஸீம் ஸுபாம்" இதி ஸுந்தரகாண்டே (உசு - உசு)

---

† புனலா - புனலாக; புனலாலே நிரம்பிஎன்றபடி என்றுஇருக்கலாம்.

## எட்டாம் பாட்டு.

---

நேர்சரிந்தான்கொடிக்கோழிகொண்டான்பின்னும்
நேர்சரிந்தானெரியுமனலோன்பின்னும்
நேர்சரிந்தான்முக்கண்மூர்த்திகண்டீர் அப்பன்

ஆ.—(நேர்சரிந்தான்.) - வாணனுடைய தோள்களைத் துணித்தவன்று; தோற்கைக்குக் கொடிகட்டிக்கொண்டு வந்தாற்போலே ஸுப்ரஹ்மண்யன் முகம் மாறித் தோற்றான்; ஜ்வலித்தெரிகிற அக்நியும் அப்படியே தோற்றான்; த்ரிநேத்ரனும் பராஜய வ்ரீளையாலே அவருண்டிதனைக் கொண்டுபோனான்; என்னப்பன் ஜயித்தருளினபடி என்! என்கிறார்.

ஒ—எட்டாம்பாட்டில், வாணவிஜயத்தை அநுஸந்திக்கிறார். நேர்சரிந்தான் என்கிற பாட்டுக்கெல்லாம் - நேர்சரிந்தான் என்று சொல்லுகிறவற்றுக்கெல்லாம் பொருள் - தோற்றத்திலே சரிந்தானென்று. முதுகிட்டுப் பிழைத்துப்போனான் என்றுமாம். [கொடிக்கோழிகொண்டான்] - ஸுப்ரஹ்மண்யன். [திண்டோள்] - ருத்ர வரபலத்தாலே திண்ணியதோள்.

ப.—அநந்தரம், வாணயுத்தப்ரகாரத்தை யநுஸந்தித்தருளுகிறார்.

அப்பன் - அநிருத்தனுக்குஉபகாரகனான க்ருஷ்ணன், (ருத்ராதிகளைமுன்னிட்டு), நேர்சரி - ஒதுங்கின, வாணன் - பாணனுடைய, திண் - வரபலாதிகளாலே த்ருடமான, தோள் - தோள்களை, கொண்ட - (துணித்து வென்றி) கொண்ட, அன்று - , கோழி - மயிலை, கொடி - கொடியாக, கொண்டான் - கொண்ட ஸுப்ரஹ்மண்யன், நேர்சரிந்தான் - எதிர்நில்லாமல் சாய்ந்துபோனான்; பின்னும் - அதுக்குமேலே, எரியும் - ("ருத்ரோ வா ஏஷ யதக்நி:" என்று ருத்ரன் தானான படியான க்ரௌர்யத்தையுடையனாய்) உத்கதஜ்வாலாதிகனான, அனலோன் - அக்நியானவன், நேர்சரிந்தான் - எதிர்நில்லாமல்சரிந்தான்; பின்னும் - அதுக்குமேலே, முக்கண் - த்ரிநேத்ரனாகையாலே சக்த்யதிசயத்தையுடைய, மூர்த்தி - ப்ரதாநனானருத்ரன், (தான் முன்னிற்கமாட்டாமையாலே), நேர்சரிந்தான் - முதுகிட்டுப்போனான்; கண்டீர் - கண்டிகோளே! கோழி - மயில். கண்டீரென்று - ப்ரஸித்தியைச் சொல்லுகிறது.

இ—எட்டாம்பாட்டில், வாணவிஜயத்தை அநுஸந்திக்கிறார். [நேர்சரிந்தான்] - தோற்றத்திலே கெட்டுப்போனான் என்னுதல், முதுகுகாட்டிப் பிழைத்துப் போனான் என்னுதல். [கொடிக்கோழிகொண்டான்] - மயிலைத்வஜமாக உடையவன்; இளமறியான தேவஸேநாபதியாகையாலே ஸுப்ரஹ்மண்யன் தூசியிலே கெட்டுப் போனான் என்கை. இவன் கெட்டுப்போனபின்பு, ஜ்வலியாநின்றிருந்துள்ள அக்நிவந்து தோற்றி, கெட்டோடினான். நாற்பத்தொன்பது அக்நியும் கெட்டோடினபின்பு, த்ரிநேத்ரனானருத்ரன் முதுகிட்டான். "மகன் கொடியாலே அகப்பட்டான்" என்று கொடியை மறைத்தவிடத்திலும், கண்ணைமறைக்க வொண்ணாமையாலே அகப்பட்டுக் கெட்டோடிப்போனான். தேவதாந்தரங்களை ரக்ஷகமாகப் பற்றினாரை, அவர்களைதிரி

கையிலே காட்டிக்கொடுத்துத் தந்தாமைக்கொண்டு தப்பிப்போவர்களென்கை. [அப்பன்] - நிருபாதிகரக்ஷகன். [நேர்சரிவாணன்] - ரக்ஷகரானார் அளவு இதுவானல், ரக்ஷ்யபூதனானவனுக்கு முதுகுகாட்டிப்பிழைக்குப் போமதொழிய வேறுபோக்கடி இல்லையிறே. [திண்டோள்] - "ஆநந்தஹஸ்தோ ஹநோவிகாரநவிமோஹி" என்றிருக்குமாபோலே, தேவ தாந்தரங்களைப்பற்றித் தோள்வலிகொண்டாடி இருந்தபடி. ருத்ரன் வரபலத்தாலே திண்ணிதானதோள். [திண்டோள்கொண்டவன்றே] - உஷை பித்ருஹீனயாகாமைக்குத் தலையறுதே, தோளைத்துணித்துவிட்டான். கீழ் - அஸுரர்களைத் தேவர்களுக்காக மார்விலே அம்பேற்று ஜயித்தபடிசொல்லிற்று; அவர்களுக்கு அபாஸ்ரயமாய்வந்த தேவஜாதியையும் ஜயித்தபடி சொல்லிற்று - இப்பாட்டில்.

எஅ.—எட்டாம்பாட்டு. வாணவிஜய வ்ருத்தாந்தத்தை அருளிச்செய்கிறார்.

[நேர்சரிந்தான் கொடிக்கோழிகொண்டான்] - மயிலை த்வஜமாகவுடையனாய் தேவஸேநாபதியாய் இளமறியாய்ப் பூசித்தலையிலே நிற்கிற சுப்ரஹ்மண்யன், தோற்றரவிலே கெட்டான். [பின்னுமித்யாதி]-அவ்வளவிலே நாற்பத்தொன்பது அக்நிகளும் பெரிய கிளர்த்தியோடே எரிந்து தோற்றிற்று; அவையுமெல்லாம் பின்னிட்டன. [பின்னுமித்யாதி]- "மகன் கொடிகட்டிக்கொண்டுசென்றுஇளிம்புபட்டான்" என்று தன்கொடியைப் போகட்டு வந்து தோற்றினஅநந்தரத்திலே, கண்ணைப்புதைத்துக் கெட்டோடத்தொடங்கினான். அவன் மறைத்துக்கொண்டுபோக, இவர், முக்கண்மூர்த்தி கண்டீர் என்று - கண்ணைக்காட்டிக் கோடேக்கிறார். எல்லாம் செய்தாலும் உடம்பில் அடையாளத்தை மறைக்கப்போகாதிறே. "வாணனீரைஞ்ஞூறு தோள்களைத் துணித்தநாளந்தவந்தவாகுலம்" என்றுபாசுரமிட்டுச் சொல்லவொண்ணாத வ்யாகுலமிறேயது. அப்பன் - நிருபாதிகரக்ஷகன் [நேர்சரிவாணன்]- ப்ரதாநனான வாணன் தான்வாராத்தோற்றினான்; அவனும் பின்னிட்டோடத்தொடங்கினானென்னுதல்; நின்றவிடத்திலேநின்று முதுகுகாட்டினானென்னுதல். கையிலாயுதம் போகட்

---

எட்டாம்பாட்டு - நேர் இத்யாதி. "வாணன் திண்டோள்கொண்டவன்றே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - வாணவிஜய இத்யாதி.

"கொடிக்கோழிகொண்டான்" என்றதுக்கர்த்தம் - மயிலை இத்யாதி. கோழி - மயில். இளமறியாய்-இளங்குட்டியாய். மறி-குட்டி. இளமறியென்று - குதிரைக்குட்டிக்கும்பேர். "நேர்சரிந்தான்" என்றதுக்கர்த்தம் - தோற்றரவிலேகெட்டான் என்று. "நேர்சரிந்தான்" என்றதுக்கு - "எதிர்நில்லாமைசாய்ந்துபோனான்" என்று உரையில்ஸப்தார்த்தம். "பின்னும்" என்றது - அதுக்கு மேலேயென்றபடி. இப்படி மேலுமர்த்தங்கண்டுகொள்வது. "அனலோன்" என்றது - ஜாத்யேகவசநமென்று விவக்ஷித்தர்த்தம் - அவ்வளவிலேஇத்யாதி. சுப்ரஹ்மண்யனுக்குக் கொடியைச் சொல்லி, இவனுக்குக் கண்ணைச்சொன்னதுக்குபாவம்-மகன்இத்யாதி. இளிம்புபட்டான்- எளிமைப்பட்டான். இளிம்பு - எளிமையும், அசாதுர்யமும். "கண்டீர்" என்றதுக்குபாவம் - அவன் மறைத்துஇத்யாதி. அவன் மறைத்துக்கொண்டுபோனல் இவர்க்குத்தெரியுமோ ? என்ன - எல்லாம் செய்தாலும்இத்யாதி. எல்லாம்செய்தாலும் - கொடிமுதலானவற்றை மறைத்தாலுமென்றபடி. அப்படி கண்ணைப் புதைத்துக்கொண்டு ஓடும்படியான ஆபத்துண்டோ ? என்ன - வாணன் இத்யாதி. பாணனுடைய ஆயிரந்தோள்களையுங்கழித்தவன்று, ருத்ரன்கெட்டுப்போன பாரவஶ்யம், க்ருஷ்ணனுடைய முகம்பெறுகைக்காக ஸ்தோத்ரம்பண்ணினபாரவஶ்யம்முதலான அந்த அந்த வ்யாகுலமென்றபடி. திருச்சந்தவிருத்தம் எழுபதாம்பாட்டு, "குந்தமோடு" இத்யாதி. "நேர்" என்று - ப்ரதாநமாய், 'ப்ரதாநனானவாணன்' என்றபடி. வாரா - வந்தென்றபடி. சரிகை - தாழ்ந்துபோகையென்று விவக்ஷித்தர்த்தம் - அவனும்பின்னிட்டுஇத்யாதி. சரிகை - சைதில்யமாகவிவக்ஷித்து, தத்கார்யமான கமந ராஹித்யமாக அர்த்தாந்தரம் - நின்றவிடத்திலேநின்று முதுகுகாட்டினான் என்னுதல்என்று.

டாரையும், மயிர் விரித்தாரையும் சொல்லக்கடவதல்லவிறே. [திண்டோள்கொண்டவன்றே] - தன்னோடொக்க ஆறல்பீறலாயிருப்பதொரு தேவதையைப்பற்றி, அரணுக்குள்ளே யிருப்பாரைப்போலே திண்ணியனு யிருந்தானுயிற்று. புருஷோத்தமஸமாச்ரயணம்பண்ணி யிருப்பாரைப்போலே, காபாலிகந்தரைப்பற்றி நிர்ப்பரனுயிருந்தான். ஸர்வேச்வரனைப்பற்றி "நபிபேதிகுதச்சந" (நபிபேதிகுதச்சந)என்றிருப்பாரை ஹாவித்தான். [திண்டோள்கொண்ட] - "உஷைபித்ருஹீநையாகவொண்ணுது" என்று கரத்தைக் கழித்துவிட்டான். "கரபாதையிறேயிவனைக்கண்டார் காலிலெல்லாம் விழப்பண்ணிற்று" என்று அவனுக்குள்ள கரத்தைக்கழித்து, இறையிலியாக்கிவிட்டான். "யௌதத்பூஜாகரேௗகரேௗ"(யௌதத்பூஜாகரேௗகரேௗ)என்றும், "விசித்ராதேஹஸம்பத்திரீச்வராயநிவேதிதும்" (விசித்ராதேஹஸம்பத்திரீச்வராயநிவேதிதும்) என்றும் விதித்துக்கிடக்கச் செய்தேயும், ஆயிரங்கையையுங் கொண்டு அப்ராப்தவிஷயத்திலே கார்யங் கொள்ளுகையாலே அவற்றையே கழித்துவிட்டான். அத்தேவதை தானேவந்து, "வரந்தந்தநீயே அத்தைக்கழிக்கவோ? நீயிவனைக்கொல்லில்என்காலில்குனிவுநில்லை இனி" என்று பற்காட்டுகையாலே விட்டான். "க்ருஷ்ணக்ருஷ்ணமஹாபாஹோஜாநேத்வாம்புருஷோத்தமம்"(க்ருஷ்ணக்ருஷ்ணமஹாபாஹோஜாநேத்வாம்புருஷோத்தமம்)-தேவரைஉள்ளபடி யறியாதே அம்பை விட்டுக்கொண்டுநின்ற நிலையைக் கண்டு "அவ்வளவோ!" என்றிருந்தேன்; "கழுத்திலேகயிறிட்டபின்புகாண் நான்இன்னதென்று அறிந்தேன்" என்பாரைப்போலே. இத்தால் சொல்லிற்றுயிற்று - ஈச்வரனையொழிந்தாரடங்கலும், தாங்களுள

---

*அன்றிக்கே, சரிகை - முறிந்துபோகைக்கும், முதுகுகாட்டுகைக்கும் வாசகமாக அர்த்தத்வயம் அருளிச்செய்கிறூர் - அவனும் இத்யாதிவாக்யத்வயத்தாலே. தலையையறுமைக்கு மூன்றுஹேது. மூந்தினஹேது - கையிலாயுதம்இத்யாதி. முதுகுகாட்டினபோதே ஆயுதம் பொகட்டமை வித்தமென்றபடி. திண்மையேதென்ன, மநோதார்ட்யமாகஅர்த்தம் - தன்னோடொக்கஇத்யாதி. ஆறல்பீறலாய் - அநுபயுக்தமாய், கார்யாக்ஷமமாயென்றபடி. பிக்ஷுகனுமாய் கந்யாரிதியுமாயிருக்கையாலே 'ஆறல் பீறல்' என்கிறூர். விவரணம் - புருஷோத்தமஇத்யாதி- காபாலிகந்தரென்றது - சாடு. பிக்ஷுகராய் கந்யாரிகளாயிருப்பாரையென்று சாடுவுக்கர்த்தம்; கபாலத்தையுடைய ருத்ரன்; கந்தன். கந்தத்திலேபிறந்த ப்ரஹ்மாவென்று ஸ்வஹாவார்த்தம். கீழ்வாக்கிய விவரணம் - ஸர்வேச்வரனைஇத்யாதி. தலையையறுததுக்கு த்விதீயஹேது - உஷைஇத்யாதி. சாடு - கரபாதைஇத்யாதி. கரம் - கையும், கப்பமும். இறையிலியாக்கி - இறையிறுப்பில்லாதவனுக்கியென்றும், வேறுஸ்வாமியில்லாதவனுக்கியென்றும் அர்த்தத்வயம். அவயவாந்தரங்களிருக்க கையைக்கழிப்பானென்? என்ன - யௌதத்பூஜா இத்யாதி. "ஸாஜிஹ்வாயாஹரிம்ஸ்தௌதிதச்சித்தம்யத்தவத்பதம்। தாவேவ ஹி கரௌ ச்லாக்யௌ யௌதத்பூஜாகரேௗகரேௗ" "விசித்ராதேஹஸம்பத்திரீச்வராயநிவேதிதும்। பூர்வமேவக்ருதா ப்ரஹ்மந்ஹஸ்தபாதாதிஸம்யுதா" இத்யாதி ஸ்ரீவிஷ்ணுதர்மே. தலையையறுததுக்கு த்ருதீயஹேது - அத்தேவதைஇத்யாதி. அப்படி பல்காட்டினுனே? என்ன, ப்ரமாணம் - க்ருஷ்ணஇத்யாதி. பஞ்சமேம்சே, பூர்வமேவ லிகித மஸக்ருத். "மஹாபாஹோ ஜாநேத்வாம் புருஷோத்தமம்" என்று- பாஹுக்களைக்கண்டபின்புஉன்னை "ஈச்வரன்" என்றறிந்தேனென்கிறவனுடைய வ்யதிரேகவித்தமான பாவத்தையருளிச்செய்கிறூர் - தேவரைஇத்யாதி. அவ்வளவோவென்றது - இதரஸஜாதீயனேவென்றபடி. இன்னதென்றறிந்தேன் என்றது - பூர்ணனென்றறிந்தேனென்றபடி. இவ்விடத்தில் ஹவித்தவர்த்தமேதென்ன- இத்தால்இத்யாதி. 'அப்பன்நேர்சரிவாணன் திண்டோள்கொண்டவன்று-நேர்சரிந்தான்' என்று தொடங்கி, 'மூர்த்திகண்டீர்' இத்யர்த்வயம்.*

ரானபோது ரக்ஷகராகவபிமானித்து, ஆபத்துவந்தவாறே இவர்களைக்காட்டிக்கொடுத்துத் தந் தாமைக்கொண்டு தப்புவர்கள்; ஸர்வாவஸ்தைகளிலும் தன்னையழியமாறியாயினும் ஆஶ்ரித ரக்ஷணம் பண்ணுவான் ஸர்வேஶ்வரனாகையாலே ஆஶ்ரயணீயன் இவனே; அல்லாதார் ஆஶ்ரயணீயரல்ல ரென்னுமிடம் சொல்லிற்று. (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

அன்றுமண்ணீரெரிகால்விண்மலைமுதல்
அன்றுசுடர்இரண்டுபிறவும்பின்னும்
அன்றுமழையுயிர்தேவும்மற்றும்அப்பன்
அன்றுமுதல்உலகஞ்செய்ததுமே.

ஆ—(அன்று) - ஸங்கல்ப லேஶத்தாலே நிகில ஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைப்பண்ணியருளுகிற ஸர்வேஶ்வரனுக்கு அத்யல்பபலப்ரதிகூலநிரஸநம் ஒரு பொருளோ? என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், வாணனை பூசித்தவன்று தொடங்கி ஜகத் உண்டாயிற்று என்கிறார். ஆதிஸ்ருஷ்டியாகவுமாம்.

[அன்றுமண்ணீர் எரிகால் விண்மலைமுதல்] - பூதபஞ்சகங்களையும் அன்று உண்டாக்கினான். [அன்று சுடரிரண்டு பிறவும்பின்னும்] - சந்த்ரஸூர்யர்களும் மற்றுமுள்ளனவும் உண்டாயிற்று. [அன்று மழையுயிர்தேவும்மற்றும்] - வர்ஷத்தையும் அத்தாலே ஜீவிக்கக்கடவதான ப்ராணிகளையும் மற்றுமுண்டான தேவதைகளையும் மற்றும உண்டாக்கினான். [அப்பனன்றுமுதலுலகஞ்செய்ததுமே] - அப்பன் அன்று தொடங்கி இந்தலோகத்தையும் உண்டாக்கிற்று.

ப.—அநந்தரம், ஜகத்ஸ்ருஷ்டிப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்.

அப்பன் - ஜகதுத்பாதகனான மஹோபகாரகன், முதல் - ப்ரதமத்திலே, உலகம் - லோகத்தை, செய்ததும் - உண்டாக்கிற்றும், அன்று - ஆத்யமான ஸ்ருஷ்டிகாலத்திலே, மண்ணீரெரிகால்விண் - அதுக்கு ஹேதுபூதமான ப்ருதிவ்யாதி பூதபஞ்சகங்களையும், மலைமுதல் - பௌதிகங்களில் பர்வதாதி பதார்த்தங்களையும், செய்ததும் - செய்ததும், அன்று - அக்காலத்திலே, சுடர் - சந்த்ராதித்யர்கள், இரண்டு - இருவரையும், பிறவும் - அல்லாத தேஜஃ பதார்த்தங்களையும், செய்ததும் - செய்ததும், அன்று - அக்காலத்திலே, பின்னும் - அதுக்குமேலே, மழை - வர்ஷத்தையும், உயிர் - வர்ஷோபஜீவிகளான ப்ராணிகளையும், தேவும் - வர்ஷப்ரதரான தேவர்களையும், மற்றும் - மற்றும் ப்ராணிபதார்த்தங்களையும், செய்ததும் - உண்டாக்கிற்றும், அன்று - அக்காலத்திலே. க்ரமஸ்ருஷ்டியன்று, யுகபத்ஸ்ருஷ்டி யென்று கருத்து.

---

'நேர்சரிவாணன்' நேர் - ப்ரதானனாய், சரி - பின்னிட்டோடின, வாணனுடைய என்னுதல்; முதுகு காட்டின வாணனுடையவென்னுதல்என்றபடி பதார்த்தம். "ருத்ராதிகளை முன்னிட்டொதுங்கின பாணனுடைய" என்ற உரையில் பதார்த்தம். கொண்டவன்று - ஸ்வாதீநமாக்கிக்கொண்டஅன்று. துணித்தவன்றுஎன்றது ஃபலிதார்த்தம். "தோள்களைத்துணித்துவென்றிகொண்டவன்று" என்றஉரையில் பதார்த்தம். (அ)

இ.—ஒன்பதாம்பாட்டில், பாணனை ஜயித்த அன்றுதொடங்கி, ஜகத்துண்டாயிற்று என்கிறார். ஆதிஸ்ருஷ்டியைச் சொல்லிற்றாகவுமாம். [அன்று மண்நீரெரிகால் விண்மலைமுதல்]-பூதபஞ்சகங்களென்ன, பூமிக்கு ஆதாரமான மலையென்ன, இவை தொடக்கமாக. [அன்றுசுடர்இரண்டு]-சந்த்ரஸூர்யர்களுமுண்டாயிற்றுஅன்று. [பிறவும்]-மற்றுமுண்டான நக்ஷத்ரக்ரஹாதி தேஜ:பதார்த்தங்களும். [அன்று மழையுயிர்தேவும் மற்றும்] - மேகத்தையும், வர்ஷஜலத்தாலே ஜீவிக்கக்கடவப்ராணிகளையும், வர்ஷத்துக்கு உத்பாதகரான தேவர்களையும், மற்றும் அநுக்தமான பதார்த்தங்களையும் அன்று உண்டாக்கினான். [அப்பன்] - ஸர்வோத்பாதகனானவன், அன்றுமுதல் ஜகத்தை உண்டாக்கிற்று. பாணனைத்தோற்பித்த அன்றுமுதல் என்னுதல், ரூபநாமங்களை இழந்து "ஸதேவ" என்கிறதசையிலே, "பஹுஸ்யாம்" என்று ஸங்கல்பித்த அன்றுமுதல் என்றுமாம்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. ஸ்ருஷ்டியும் விஸஜாதீயமாகையாலே, அத்தையும் விஜயமாக அநுஸந்திக்கிறாராகவுமாம். [அப்பன் - முதலுலகம் செய்ததும் - அன்று] - மஹோபகாரகன் ப்ரதமத்திலே லோகத்தை யுண்டாக்கிற்றும் ஆத்யமான ஸ்ருஷ்டிகாலத்திலே. அதுக்கு ஹேதுவாக "மண்நீரித்யாதி"; அன்றிக்கே, கீழும் மேலும் க்ருஷ்ண வ்ருத்தாந்தமாகையாலே, பாணனை ஜயித்த அன்றுகிடீர் ஜகத்தை யுண்டாக்கிற்றென்று அத்தையே பேசுகிறாராகவுமாம்; பயிர்செய்கையேயன்றே வேண்டுவது: பயிரழியாமல் நோக்கினவன்றிறே பயிர்செய்ததாவது.

[அன்றுஇத்யாதி]- காரணங்களோடுகார்யங்களோடு வாசியற வுண்டாக்கினபடி. [சுடரிரண்டு] - சந்த்ராதித்யர்களை யுண்டாக்கினபடி. [பிறவும்] - மற்றுமுண்டான நக்ஷத்ராதி தேஜ:பதார்த்தங்களும், அதுக்குமேலே வர்ஷிக்கக்கடவதான மேகம்; (மழை - மேகம்.) வர்ஷத்தாலே ஜீவிக்கக்கடவ மற்றை ஆத்மாக்கள், வர்ஷத்துக்குஉத்பாதகரான தேவர்கள், மற்றுமுண்டான திர்யக்ஸ்தாவராதிகள். [அப்பன்] - ஸர்வோத்பாதகனானவன். [அன்றுமுதலுலகம்செய்ததுமே] - தனித்தனியே சொல்லவேணுமோ? பாணனை ஜயித்துவைராஜ்யம் பண்ணினவன்றுகிடீர்இத்தையெல்லாம் ஸ்ருஷ்டித்தது என்கிறார் என்னுதல். (நாமரூபங்களையிழந்து "ஸதேவ" (ஸதேவ) என்கிற தசையிலே "பஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்று ஸங்கல்பித்த அன்றுமுதலென்றுமாம்.) (கூ)

---

ஒன்பதாம்பாட்டு - அன்றுஇத்யாதி. இப்பாட்டிலே - ஸ்ருஷ்டியை யருளிச்செய்ததுக்கு இரண்டுபாவம் - ஸ்ருஷ்டியும்இத்யாதிவாக்யத்வயத்தாலே. விஸஜாதீயமாகையாலே என்றது - காட்டாராற் செய்யப்படுமதல்லாமையாலேஎன்றபடி. முந்தின அவதாரிகை - 'பத்தும்பத்தாக' என்ற ப்ரவேஸவாக்யத்துக்குச்சேரும். பாணனை ஜயித்தவன்றோ ஜகத்உண்டாயிற்று? என்ன-பயிர் செய்கைஇத்யாதி. பூதபஞ்சகங்கள் காரணமாய், மலைமுதலானவை கார்யமாகையாலே யருளிச்செய்கிறார் - காரணங்களோடுஇத்யாதி. ப்ருதிவ்யாதி ஸ்ருஷ்டியைச் சொன்னவநந்தரம் லோகஸ்ருஷ்டியைச் சொன்னதுக்குபாவம் - தனித்தனியேஇத்யாதி. வைராஜ்யம் - த்வைராஜ்யம். மண்நீரெரிகால் விண்மலைமுதல் - அன்றுண்டாயிற்று; இரண்டுசுடரும் பிறவும் - அன்றுண்டாயிற்று; பின்னும் - அதுக்குமேலே, மழையுயிர்தேவும்மற்றும் - அன்றுண்டாயிற்று; அப்பன் - உலகம் செய்ததும் அன்றுமுதல்,என்றந்வயம், ஸ்ருஷ்டிபரமானபோது, அப்பன், முதல் - ப்ரதமத்திலே, உலகம்செய்ததும், அன்று - ஆத்யமான ஸ்ருஷ்டிகாலத்திலே; மண்நீரெரிகால் விண்மலைமுதல் - செய்ததும், அன்று - அக்காலத்திலே; சுடரிரண்டும் பிறவும் செய்ததும் அன்று; பின்னும் - மழையுயிர்தேவும் மற்றும் செய்ததும் அன்று என்றந்வயம். "செய்ததும்" என்றத்தை - மூன்றுபாதத்திலுங் கூட்டுவது. பிறவும் - மற்றுமுண்டானவையுமென்றபடி. (கூ)

## பத்தாம் பாட்டு.

மேய்நிரைகீழ்புகமாபுரளச்சுனை
வாய்நிறைநீர்பிளிறிச்சோரியஇன
ஆநிரைபாடியங்கேயொடுங்க அப்பன்
தீமழைகாத்துக் குன்றமெடுத்தானே.

ஆ.—(மேய்நிரை.) - பசுக்களுக்கும் இடையர்க்கும், கீழேபுக்கு நிர்ப்பயமாக வர்த்திக்கும்படியாகவும்; மஹீயரோ பரிவர்த்தமான வநசரிபூதங்கள் கீழே புரளும்படியாகவும், பூர்ணரஸஸரஸ்ஸுக்கள் அயோமுகமாய் ஸகோஷமாய் ப்ரவஹிக்கும்படியாகவும் ஸ்ரீகோவர்த்தநத்தை எடுத்தருளி, பாதகமான வர்ஷத்தைத்தடுத்தருளி, இந்த்ரனை ஜயித்தருளினன் என்னப்பனென்கிருர்.

ஒ.—பத்தாம்பாட்டில், கோவர்த்நோத்தரணம் பண்ணிச் செய்தருளின அநுஸந்திக்கிறார்.

[மேய்நிரையென்று தொடங்கி] - மேய்கிற நிரை வாயிற்புல்லோடு கீழேபுகவும், அங்குண்டான ஆனைதொடக்கமான திர்யக்குக்கள் கீழேபுரண்டுவிழவும் சுனைகள் வாயளவும் நிறைந்த நீர் ஓசைப்படச் சொரியவும் அதிஸம்ருத்தமான திருவாய்ப்பாடி அங்கே ஒடுங்கவும். மேய்நிரை கீழேபுகவென்று - மலையை எடுத்த கடுப்பைச்சொல்லிற்று. [அப்பனென்று தொடங்கி] - அப்பன் மலையைஎடுத்து நாசகரமான மழையைக் காத்தான். எல்லாப்பாட்டிலும், அப்பனென்று - எம்பெருமானை உகந்து கொண்டாடினர்.

ப.—அநந்தரம், கோவர்த்தநோத்தரணத்தை அநுபவிக்கிறார்.

மேய் - மேய்கிற, நிரை - பசுக்களானவைகள், கீழ் - கீழே, புக - ஒதுங்கும்படியாகவும், (கீழ்மேலாகவெடுத்தபடியாலே), மா - பர்வதவர்த்திகளானமஜர்திம்ருகங்கள், புரள - புரண்டுவிழும்படியாகவும், சுனை - சுனைகளினுடைய, வாய் - வாயளவும், நிறை - நிறைந்த, நீர் - நீரானது, பிளிறி - பெரியகோஷத்தோடு, சொரிய - சொரியும்படியாகவும், இனம் - இனமான, † ஆய்நிரை - ஆயரையும் பசுத்திரளையு முடைய, பாடி - திருவாய்ப்பாடியும், அங்கே - , ஒடுங்க - ஒடுங்கும்படியாகவும், அப்பன் - ஆபந்நிவாரகனை க்ருஷ்ணனவன், தீ - விநாசஹேதுவான, மழை - மழையை, காத்து -, குன்றம் - கோவர்த்தநமாகிற பர்வதத்தை, எடுத்தான்—.

இ.—பத்தாம்பாட்டில், கோவர்த்நோத்தரண விஜயத்தை அநுஸந்திக்கிறார். [மேய்நிரை கீழ்புக] - நினைவின்றியே வர்ஷிக்கப்புக்கவாறே மலையை எடுத்தபோது, மேய்கிறபசுக்கள் வாயிற்புல்லோடே கீழேபுக்கு ஒதுங்கவும். [மாபுரள] - கீழதுமேலதாக மலையைப் பிடிக்கையாலே, மலையில் ஆனைதொடக்கமான ம்ருகங்கள் கீழேபுரண்டு விழவும். [சுனைவாய் நிறைநீர்பிளிறிச்சொரிய] - சுனைவாயளவும் நிறைந்த நீர் ஓசைப்பட்டுச் சொரியவும். [இனவாநிரைபாடி] - அதிஸம்ருத்தமான திருவாய்ப்பாடி. "கற்றுக் கறவைக்கணங்கள்" என்கிறபடியே ஒருநிறத்திற் பசுவொழுங்கையுமுடைய ஊர். [அங்கே ஒடுங்க] - பஞ்சலக்ஷம் குடியிலுள்ளாரும் மலையின்கீழே ஒதுங்கவும். [அப்

† 'ஆய்நிரை' என்று உரையின் பாடம்.

*பன்] - ஆபத்ஸவனான உபகாரகன். [தீமழைகாத்துக் குன்றமெடுத்தானே] - மலையை எடுத்து, நாசகரமான மழையைக்காத்தான். பசுக்கள்பக்கலிலும் பெண்கள் பக்கலிலும் க்ருஷ்ணன் க்ருபை பண்ணுகைக்குஹேது - அஜ்ஞதையும் பாரதந்த்ரியமும்.*

ி.—பத்தாம்பாட்டு. கோவர்த்தநோத்தரணம்பண்ணி ரக்ஷித்த செயலை

[மேய்நிரைகீழ்புக] - மேய்கிறபசுக்கள் புல்லும்உமிழாதே அசையிட்டுக்கொண்டு கீழேபுக்குர. [மாபுரள] மலையையெடுத்து மறிக்கையாலே அங்குவர்த்திக்கிற ம்ருகங்களெல்லாம் புரண்டுவிழ. மா-ம்ருகம். [சுனைவாய்நிறைநீர்பிளிறிச்சோரிய] - சுனையிடத்து நிறைந்துநிற்கிற நீரானது, நிறைகுடத்தைக் கவிழப்பிடித்தாற்போலே சப்தித்துக்கொண்டு சோரிய; ஒருமழைகாக்கப்புக்கு, அங்கேயநேகம் மழையையுண்டாக்கினபடி. [இனவாநிரைபாடியங்கே யொடுங்க]-பசுத்திரளும் திருவாய்ப்பாடியும்அங்கேயொடுங்க. (ஒருதரத்தில் பசுவேழுங்கையுடையவூர்.) [அப்பன்] - ஆபத்ஸகனானவுபகாரகன். [தீமழைகாத்து] - விநாசத்தைவிளைக்கவந்தமழையாகையாலே தீமழையென்கிறார். இடையரும் பசுக்களுமன்றிக்கே அன்று தாமாகாதே நோவுபட்டார். [குன்றமெடுத்தானே] - மலையை எடுத்துக்காத்த மஹோபகாரக னென்கிறார். "பசிக்ராஹம் ஆறுந்தனையும் வர்ஷித்துப்போவானுக்கு" என்று ஏழுநாளிறே மலையைதரித்துக் கொடுநின்று நோக்கிற்று. ராவணாதிகளாகிலிறே யழியச்செய்யலாவது? அநுகூலனுக்குவந்த ப்ராதிகூல்யமாகையாலே செய்யலாவது இத்தனையிறே. இத்தால்சொல்லிற்றாயிற்று - ஆஶ்ரிதன் தப்பினாலும் தான் பொறுத்து க்ஷிக்கு மென்றபடி. (கo)

---

## பதினோராம் பாட்டு.

---

குன்றமெடுத்தபிரானடியாரோடும்
ஒன்றிநின்றசடகோபனுரைசெயல்
நன்றிபுனைந்தவோராயிரத்துள் இவை
வென்றிதரும்பத்தும்மேவிக்கற்பார்க்கே.

*பத்தாம்பாட்டு —மேய்நிரை இத்யாதி. "தீமழைகாத்து" இதயாதியைக்கடாக்ஷித்தவதாரிகை - கோவர்த்தந இத்யாதி.*

*வர்த்தமாநார்த்தம் - மேய்கிற இத்யாதி. "மா" என்று - நாற்காலுடைய ஜந்து. மறிக்கை - கவிழ்த்துப்பிடிக்கை. பிளிறி - சப்தித்து. ரஸோக்தி - ஒருமழை இத்யாதி. "மேய்நிரை" என்று - காட்டில் வர்த்திக்கும் பசுக்களையும், "இனவாநிரை" என்று - ஊரில்வர்த்திக்கும் பசுக்களையும் சொல்லுகையாலே, புநருக்தியில்லை. மழை நல்லதன்றோ? "தீமழை" என்பானென்? என்ன - விநாசத்தை இத்யாதி. "காத்து" என்று - ஸாமாந்யமாகச் சொன்னதுக்குஶாவம் - இடையரும் இத்யாதி. "அப்பன்" என்றதுக்சர்த்தம் - மலையை இத்யாதி. மலையையெடுக்கிறதென்? அவனை நிரஸிக்கவொண்ணாதோ? என்ன - பசிக்ராஹம் இத்யாதி வாக்யத்ரயம். பசிக்ராஹம் - பசியாலுண்டான கோபம். வர்ஷித்துப்போவானுக்கு - வர்ஷித்துப்போகட்டு. இத்தால் பலிதவர்த்தம் - இத்தால் இத்யாதி. மேய்நிரை கீழ்புகும்படியாகவும் மாபுரளும்படியாகவும் இத்யாரப்ய, ஒடுங்கும்படியாகவும், அப்பன் தீமழைகாத்துக் குன்றமெடுத்தானே இத்யந்வயஃ. (கo)*

ஆ.—(குன்றமெடுத்த.) - ஆழ்வார் தாமும் கோவர்த்தநத்தின்கீழே திருவாயரோடே கூடிநின்று கோவர்த்தநோத்தரண பூர்வக விஜயரூப ஸகல திவ்யசேஷ்டிதங்களையும் ஏத்தின இத்திருவாய்மொழியை ஸாதரமாகக்கற்பார்க்கு, இத்திருவாய்மொழியில் ஓரோர்பாட்டே விஜயத்தைக் கொடுக்குமென்கிறார்.

ஒ.—நிகமத்தில், எம்பெருமானுடைய விஜயங்களைத்தொடுத்த இத்திருவாய்மொழியை ஸஹ்ருதயமாகக் கற்பார்க்கு இதுதானே விஜயங்களைக் கொடுக்குமென்

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழி கற்றார்க்கு ஸர்வப்ரகார விஜயத்தைக் கொடுக்குமென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

குன்றமெடுத்த - கோவர்த்தநோத்தரணம்பண்ணின, பிரான் - மஹோபகாரகனான க்ருஷ்ணனுக்கு, அடியாரொடும் - அஸாதாரண சேஷபூதரான பாகவதர்களோடே, ஒன்றி - ஏகீபவித்து, நின்ற - நின்ற ஸ்வரூபத்தை யுடையராய்க்கொண்டு, சடகோபன் - ஆழ்வாருடைய, உரைசெயல் - வாசிகவ்ருத்திரூபமாய், ஓர் - அத்விதீயமான, ஆயிரத்துள் - ஆயிரத்துள்ளே, நன்றி - ஸர்வேஸ்வரனுடைய விஜயாபதாநங்களை ப்ரதிபாதிக்கையாகிற நன்மையை, புனைந்த - உடைய, இவைபத்தும் - இப்பத்தும், மேவி - அர்த்தஸஹிதமாக, கற்பார்க்கு - அப்யஸிப்பார்க்கு, வென்றி - ஸர்வப்ரகாரவிஜயத்தை, தரும் - கொடுக்கும். இது, கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், ஸர்வேஸ்வர விஜயங்களைத்தொடுத்த இத்திருவாய்மொழியை ஸஹ்ருதயமாகக்கற்பார்க்கு, இதுதானே விஜயங்களைக்கொடுக்கும் என்கிறார்.

[குன்றமெடுத்தபிரான் இத்யாதி]-கோவர்த்தநோத்தரணம்பண்ணின உபகாரகனான க்ருஷ்ணன் திருவடிகளையே தஞ்சமாக நினைத்திருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களிலே தம்மையும் அந்யதமராக நினைத்திருந்த ஆழ்வார் அருளிச்செய்த இது. மலையை எடுத்த அன்று மலைக்கீழே ஒதுங்கினவர்களைப்போலே, ஸம்ஸாரத்துக்கு அஞ்சி க்ருஷ்ணன் திருவடிகளிலே ஒதுங்குமவர்கள் வைஷ்ணவர்கள்; அச்செயலுக்குத் தோற்று அடிமைபுக்கவராயிற்று இவர். [நன்றி இத்யாதி] - ஸர்வேஸ்வரன்விஜயங்களைச் செறியத்தொடுத்த இவைபத்தும், ஆதரித்துக் கற்பார்க்கு இதிற்சொல்லுகிற விஜயத்தைக்கொடுக்கும். இச்சேதநனுக்கு விஜயமாவது - ஸர்வேஸ்வரவிஜயமிறே. அதுவேயிறே இவர்க்கு புருஷார்த்தமும். ஸம்ஸாரவிஜயத்தைக் கொடுக்கும் என்றுமாம். [நன்றிபுனைந்த] - ஸர்வேஸ்வர விஜயரூபமாய் ஆத்மாவுக்கு புருஷார்த்தருமாயிருந்த இத்தைத்தொடுத்த.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழியை அப்யஸித்தவர்களுக்கு இது தானே விஜயத்தைக் கொடுக்குமென்கிறார்.

[குன்றமெடுத்தஇத்யாதி] - கோவர்த்தநோத்தரணம்பண்ணின நீர்மையிலும் அப்போதை யழகிலும் ஈடுபட்டிருக்குமவர்களோடே கூடிநின்று தாமும் ப்ரீதராய், ப்ரீதிக்

நிகமம்.—குன்றம் இத்யாதி. 'வென்றிதரும்பத்தும் மேவிக்கற்பார்க்கே". என்றத்தைக் கடாக்ஷித்து - அவதாரிகை.

"குன்றமெடுத்தபிரானடியார்" என்றதுக்குபாவம் - கோவர்த்தந இத்யாதி. "பிரான்" என்கையாலே - நீர்மையிலும் என்றது. அப்போதை யழகாவது - மலையை யெடுத்துக்கொண்டு த்ரிபங்கியாய் நின்றபோதை யழகு. "அடியார்" என்கையாலே - ஈடுபட்டிருக்குமவர்கள் என்கிறது.

துப் போக்குவீடாகச் சோன்ன பாசுரமாயிற்று. [நன்றிபுனைந்தவோராயிரம்] - ஸர்வேச்வரனுடைய பரத்வ ஸௌலப்யங்களை வகையிட்டுத் தொடுத்த ஆயிரம். நன்மையாவது - ஸம்ஸாரி சேதநனுக்கு, இவனே ஸர்வஸ்மாத்பரனென்றும், ஸர்வஸுலபனென்றும், ஸர்வஸமாச்ரயணீயனென்றும் சொல்லுகையிறே; அவையிறே - முதல்திருவாய்மொழிதொடங்கி அருளிச்செய்தது. எம்பெருமானுடைய விஜயங்களைத் தொடுத்துச்சொன்ன இப்பத்தும். [மேவிக்கற்பார்க்கு - வென்றிதரும்] - ஸாதரமாகக் கற்பார்யாவர் சிலர், அவர்களுக்கு விஜயத்தைப் பண்ணிக்கொடுக்கும். ஐச்வர்யார்த்திக்கு ஐச்வர்யவிரோதியைவென்று கொடுக்கும்; கேவலனுக்கு விரோதிநிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுக்கும்; பகவச்சரணார்த்திகளில், உபாஸகனுக்குஇந்த்ரியஜயாதிகளைப் பண்ணிக்கொடுக்கும்; ப்ரபந்நனுக்குக் கைங்கர்யவிரோதிகளை வென்றுகொடுக்கும். (கக)

*கூடி. நன்றி - நன்மை. உரைசெயல் - வாசகவ்ருத்திரூபமான. "நன்றிபுனைந்த" என்றதுக்கர்த்தம் - ஸர்வேச்வரனுடைய இத்யாதி. புனைந்த - தொடுத்த. "நன்றி" என்றால் - பரத்வாதிகளைக்காட்டுமோ? என்ன - நன்மையாவது இத்யாதி. அப்படிசொல்லிற்றோ? என்ன - அவையிறே இத்யாதி. "நன்றி" என்றத்தை - * ஆயிரத்துக்கு விசேஷணமாக்கிக் கீழருளிச்செய்து, "நன்றி" என்றவிஜயங்களை - இப்பத்துக்குவிசேஷணமாக்கி அர்த்தாந்தரம் - எம்பெருமானுடைய இத்யாதி. "வென்றிதரும்" என்று-ஸாமாந்யசப்தமாகையாலே, ஸகலபலப்ரதமென்கிறார் - ஐச்வர்யார்த்திக்கு இத்யாதி நாலுவாக்யத்தாலே. அடைவேயந்வயம். மேவி - ஸாதரமாக. வென்றி - ஜயம். (கக)*

*திரவிடோபநிஷத் ஸங்கதி.—* [illegible]

*த்ராவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி —(ஆழியெழ)* [illegible]

*திருவாய்மொழி* ( *ஆழிவண்ணன்தன்விசயமானவை முற்றுங்காட்டி*
*வாழிதனுரைலென்றுபகிழ்ந்துநிற்க - ஆழிலவை*
*என்றுபோற்கண்டுதானுரைத்தமாறன்சொல்*
*பன்னுவரோநல்லதுகற்பார்.*

*ஆழ்வார் வடிகளே சரணம், எம்பெருமானார் திருவடிகளே சரணம், ஜீயர்திருவடிகளே சரணம்.*

ஆ.—(கற்பாரிராமபிரானை) - ப்ரஸ்துத த்ரைலோக்யவிக்ரமண அம்ருதமதநாதி விஜயரூப திவ்யசேஷ்டிதங்களுடைய பரோபகாரத்வ லக்ஷண குணத்வாகாரத்தை யநுபவிக்கிறார். அதவா, ப்ரஸ்துத தசரதாத்மஜதிவ்யசேஷ்டிதங்களிலே திருவுள்ளந்தாழ்ந்து, மற்றும் ப்ரஸ்துத திவ்யசேஷ்டிதங்களையும் 'ததீயம்' என்னும் இவ்வாகாரத்தா லநுபவிக்கிறார்.

ஒ.—அஞ்சாந்திருவாய்மொழியில், எம்பெருமான் தமக்கு பலாயநார்த்தமாகக் காட்டியருளின, பேசவும்நினைக்கவும்முடியாதே பெரும்பரப்பான விஜயப்ரகாரங்களை அநுஸந்தித்துத் தம்முடைய பலஹாநிபோய்தரித்த ஆழ்வார், ஆஶ்ரிதார்த்தமான இந்த விஜயங்களுக்குஅடியான அவனுடைய க்ருபாதிகுணங்களையும் ராமாதிதிவ்யாவதாரங்களையும் அநுஸந்தியாநின்றுகொண்டு அதிப்ரீதராய், கையிலேநிதியிருக்க அத்தை யறியாதே து:கப்படுவாரைப்போலே, இக்குணசேஷ்டிதாதிகளையொழிய வேறே சிலவற்றிலேப்ரீத்து அந்யபரராய்ச்செல்லுகிற ஜகத்தைக்கண்டு விஸ்மிதராகிறார். கீழில்திருவாய்மொழியிலே "மாறுநிரைத்திரைக்கும் சரங்கள்" என்று ப்ரஸ்துதமான ராமவ்ருத்தாந்தத்திலே மிகவும் ப்ரவணராய் அவனுடைய குணசேஷ்டிதாதிகளைமிகவும் அநுஸந்தித்த ஆழ்வார், இவனுடைய ஓரொருநீர்மையையுடைய மற்றைத்திருவவதாரங்களையும் இவனுடைய குணப்ரஸங்கத்தாலே அநுஸந்தித்து, இப்படியாலே இத்திருவாய்மொழியடைய ராமகுணவிஷயமென்றுமாம்.

ப.—அஞ்சாந்திருவாய்மொழியில்; கீழ் - அநேகவித விஜயாபதாநங்களையுடையனான ஸர்வேஶ்வரனுடைய அதிஶயிதஶக்தியோகத்தை யநுஸந்தித்து, விரோதிநிரஸந ஸமர்த்தன்அவனேயென்றறுதியிட்டவர், "அவனையொழிய வேறுரக்ஷகரில்லை" என்னும்இவ்வர்த்தத்தை வெளியிடுகைக்காக; ஸ்வாபிமாநாந்தர்பாவ மாத்ரத்தாலே அவனுடைய அதிஶயிதபுருஷார்த்த ப்ரதத்வத்தையும், அநிஷ்டநிவ்ருத்தி யுக்தமான ரக்ஷண ப்ரகாரத்தையும், சிசுபாலமோக்ஷத்தையும், ஜகத்ஸ்ரஷ்ட்ருத்வத்தையும் ஸ்ரீவராஹவ்ருத்தாந்தத்தையும், ஆஶ்ரிதார்த்தமான அர்த்தித்வஸாமர்த்யத்தையும், மார்க்கண்டேய ரக்ஷணப்ரகாரத்தையும், ஆஶ்ரிதோபகாரகமான ஹிரண்யநிரஸநத்தையும், பாண்டவவிரோதிபஞ்சநத்தையும், ஸம்ஸாரநிவர்த்தகத்வத்தையுமநுஸந்தித்து, ஏவம்வித ஸ்வபாவனாய் அதிசயிதஶீலப்ரகாசகமான அவதாரவைலக்ஷண்யத்தையுடைய ஸர்வேஶ்வரனையொழிய, அநிஷ்டநிவ்ருத்த்யர்த்தமாகவும் இஷ்டப்ராப்த்யர்த்தமாகவும் ஆஶ்ரயணீயர்வேறொருவரில்லை யென்னுமிடம் ஸர்வஸம்ப்ரதிபந்நமென்றருளிச்செய்கிறார்.

இ.—அஞ்சாந்திருவாய்மொழியில், கீழ் - இவர்க்கு ஓடின பலஹாநியெல்லாம் போம்படி தான்பண்ணின விஜயங்களைக்காட்டி அநுபவிப்பிக்க, அநுபவித்துதரித்தார்; ஆஶ்ரிதார்த்தமான விஜயங்களுக்கடியான ஶீலாதிகுணங்களையும், அதடியாகவந்த ராமாதிதிவ்யாவதாரங்களையும் அநுஸந்தியாநின்றுகொண்டு ப்ரீதராய், "ஸம்ஸாரிகளில் இவன் வாசியறிந்து இவனுடைய குணாநுபவம் பண்ணுகிறாருண்டோ?" என்று பார்த்தவிடத்து, கையிலே நிதியிருக்க அத்தையறியாதே புறம்பே அந்யபரராய் து:கப்பட்

*டுத்திரிவாரைப்போலே, இக்குணசேஷ்டிதாதிகளையொழிய வேறுசிலவற்றாலே புரிப்படுதே! என்று விஸ்மிதராய், அவதாரங்களையும், அவதரித்துப்பண்ணின விஜயங்களையும், அதுக்கடியான ஶீலாதிகுணங்களையும் அநுஸந்தித்துப்பேசுகிறார். ஆழ்வான் பத்துப்பாட்டையும் ராமவிஷயமாக நிர்வஹித்துப்போரும்; ராமாவதாரத்தில் பக்ஷபாதத்தாலே, "'பேரெயில் சூழ்கடற்றென்னிலங்கை செற்றபிரான்' என்றும், 'மாறுநிரைத்திரைக்கும் சரங்கள்' என்றும் ப்ரஸ்துதமான ராமவ்ருத்தாந்தத்தை அநுஸந்தித்து, அவ்வவதாரத்தில் உண்டான குணசேஷ்டிதாதிகளிலே ஓரோநீர்மைகளையுடைய மற்றையவதாரங்களையும் இக்குணப்ரஸங்கத்தாலே அநுஸந்தித்தும், இப்படியாலே ராமவ்ருத்தாந்தத்தைப் பேசுகிறார்" என்று ஆழ்வான் நிர்வாஹம்.*

ஈடு.—கீழில்திருவாய்மொழியில் - எம்பெருமானுடைய விஜயங்களை யநுபவித்தார்; அவைதான்ஆஶ்ரிதார்த்தமாயிறேயிருப்பது. "அவன்தன்னை இவர்களுக்காக்கி வைக்க, இவர்கள் பாஹ்யவிஷயங்களிலே யந்யபரராவதே" என்றுஆஶ்சர்யப்படுகிறார். "யஸ்யாஸ்மி" (யஸ்யாஸ்மி) என்று - யாவனொருவனுடைய ஸத்தையே பிடித்து அவனுக்காயிருக்கும், அப்படியிருக்கிறவன்தான் உத்பத்தியே பிடித்து இவனுக்காக்கிவைக்கிறானிறே. ரக்ஷணத்துக்கு ஏகாந்தமான ஜந்மங்களிலே வந்துபிறந்தபடியையும், தன் ஸ்வரூபரூபகுணாதிகளையடையப் பிறர்க்குஆக்கிவைக்கிறபடியையும், அதுக்கடியான க்ருபையைத் தனக்கு வடிவாக்வுடையனாயிருக்கிறபடியையும், க்ருபாகார்யமான செயல்களையும் அநுஸந்

"அபவரகே ஹிரண்யநிதிம் நிதாய உபரி ஸஞ்சரந்தோ யதா ந த்ரக்ஷ்யந்தி"

(அபவரகேஹிரண்யநிதிம்நிதாய உபரிஸஞ்சரந்தோயதாநத்ரக்ஷயந்தி) என்கிறபடியே முற்றத்திலே ஹிரண்யநிதி புதைத்துக்கிடக்க, அத்தையறியாதே மேலே ஸஞ்சரித்துப் புறங்கால் வீங்குவாரைப்போலே இஸ்ஸம்பத்துத் தங்களுக்காயிருக்க ஸம்ஸாரிகள் புறம்பே போதுபோக்குவதே! என்றுஆஶ்சர்யப்படுகிறார்.

ஆழ்வான் ஒருகால், இத்திருவாய்மொழியடங்கலும் ராமாவதாரவிஷயமாக்கி நிர்வஹித்தாரும். அதுக்கடி: ஆயிரத்திலொன்றும் கடலில் குளப்படியும்போலே, பெருமாளுடைய குணத்தில் ஏகதேசங்களிறே அல்லாத அவதாரங்கள்எல்லாவற்றிலுமுள்ளதென்று. "பேரெயில்சூழ்கடல் தென்னிலங்கைசெற்றபிரான்" என்றும், "மாறுநிரைத்

---

*கற்பார்ப்ரவேஶ: வ்ருத்தாநுவாத பூர்வகமாக ஸங்க்ரஹஸங்கதி - கீழில்திருவாய்மொழியில் இத்யாதி. "கற்பாரிராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ," "நாரணற்காளன்றியாவரோ," "கேசவன் கீர்த்தியல்லால் மற்றுங்கேட்பரோ" இத்யாதியைப்பற்ற - பாஹ்யவிஷயங்களிலே இத்யாதி. 'தன்னையிவர்களுக்காக்கி' என்கைக்கு, வாஸ்தவாகாரம் ஏதென்கிற சங்கையிலே விஸ்தர ஸங்கதி - யஸ்யாஸ்மி இத்யாதி. "நாட்டிற்பிறந்து" இத்யாதியைப்பற்ற - ரக்ஷணத்துக்கு இத்யாதி. "பிரான்" என்றத்தைப்பற்ற - தன்ஸ்வரூப இத்யாதி. "தன்மையறிபவர்" என்றத்தைப்பற்ற - அதுக்கடியான இத்யாதி. "புற்பாமுதலா" இத்யாதியைப்பற்ற - க்ருபாகார்யமான இத்யாதி. 'யஸ்யாஸ்மி' இத்யாதிவாக்யங்கள் சிலஶ்ரீகோசங்களில்இல்லை. அபவரகே - முற்றத்திலே.*

*கீழ்-ஸர்வாவதாரவிஷயமாக அருளிச்செய்து, ராமாவதார விஷயமாக ஸம்வாதம்-ஆழ்வான் இத்யாதி. அநேகாவதாரங்களைச் சொல்லாநிற்க, ராமாவதாரவிஷயமென்கிறபடி எங்ஙனே? என்ன-அதுக்கடிஇத்யாதி. அது அல்லாத அவதாரங்கள்பெருமாளுடையகுணத்தில் ஏகதேசங்களென்கையாலே-அவை அப்ரதாநங்களாய் இது ப்ரதாநமாயிருக்கையாலே தத்விஷயமென்றபடி. அவ்வளவேயன்று, கீழ் ப்ரஸ்துதமாகையாலும் உபக்ரமப்ராதாந்யத்தாலும் ராமாவதாரவிஷயமென்கிறார்-பேரெயில்இத்யாதி.*

திரைக்கும் சரங்கள் '' என்றும், கீழ் ப்ரஸ்துதமான ராமவ்ருத்தாந்தத்தை யநுஸந்தித்து, அவ்வழியாலேயிறே அவதாரங்கள்தன்னை யநுஸந்திக்கிறது. அல்லாதஅவதாரங்களிலே ப்ரவணரானவர்களும் அவ்வவதாரம் ப்ராஸங்கிகமாக ப்ரஸ்துதமானால் "மனத்துக் கினியானை'' என்றிறே சொல்லுவது. "பட்டர் ராமாவதாரத்திலே போர பக்ஷபதித் திருப்பர்'' என்று, அவர் அருளிச்செய்யுமது கேட்கைக்காகச் சிறியாத்தான் ஒருநாள் "பெருமாளுக்குஎல்லாநன்மைகளுண்டாகிலும், கழுத்திலே ஓலைகட்டி 'தூதுபோ' என்னப் போன க்ருஷ்ணன்நீர்மையில்லையே'' என்ன, "அது அங்ஙனல்லகாண்; கழுத்திலே யோலைகட்டி 'தூதுபோ' என்பாரில்லாமைதவிர்ந்தார் அத்தனைகாண்'' என்றருளிச்செய்தார். * நாடுடைமன்னர் வேறேசிலரில்லையே. அபிஷிக்த க்ஷத்ரியகுலத்திலே பிறக்கையாலே போகவிடுவோரைப்பெற்றதில்லை. முடியைத்தவிர்ந்து சடையைப்புனைந்துநாட்டைவிட்டுக்காடேறப்போனவர், தூதுபோகாமையில்லையிறே. "காடேறப்போகவுமாம், துர்யோதநகோஷ்ட்டியிலே போகையிறே யரிது;"யத்ர ஸௌக்தம் துருக்தம் வா ஸமம் ஸ்யாந் மதுஸூதந" (யத்ரஸூக்தம்துருக்தம்வாஸமம்ஸ்யாந்மதுஸூதந) இறே. "பாண்டவர்கள் கிடக்கைக்கு அஞ்சூர் தரவேணும்'' என்று இவன்சொன்னவார்த்தைக்கும், "பந்துக்களுக்குஒருகோற்குத்துங்கொடேன்'' என்றுஅவன்சொன்னவார்த்தைக்கும் வாசியறியாத கோஷ்ட்டியிலேயிறே போய்ப்புக்கது. "ராமாவதாரத்தில் தூதுபோன திருவடியுடைய ஏற்றம் தன்திருவுள்ளத்திலேபட்டுக்கிடந்திறே;அவனே* பின்னோர்தூதாதி மன்னர்க்காகிப் பெருநிலத்தா ரின்னார் தூதனென நின்றது.

---

*இப்படி நிர்வஹித்தால் பக்ஷபாதம்வாராதோ? என்ன - அல்லாத இத்யாதி. 'சொல்லுவது' ஆகையாலே பரமார்த்தமென்றபடி. "பெருமாளுடைய குணத்தில் ஏகதேசம் அல்லாதவவதாரங்கள்'' என்கைக்கு, கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோன க்ருஷ்ணன் நீர்மை பெருமாளுக்கில்லையே என்கிற சங்கையை ஆப்தப்ரஸ்நமுகேநவநுவதித்து, ஆப்தஸம்வாதத்தாலே பரிஹரிக்கிறார் - பட்டர் இத்யாதி அருளிச்செய்தாரென்னுமளவாலே. அப்படி ஏவுவாரில்லையோ? என்ன - நாடுடை இத்யாதி. விவரணம் - அபிஷிக்த இத்யாதி. போகச்சொன்னால்தான்போவரோ? என்ன - முடியை இத்யாதி. 'காடேறப்போகவுமாம்' இத்யாதி - சிறியாத்தான் ஶங்காவாக்யம். இதுக்கு பட்டர் பரிஹாரவாக்யம் - ராமாவதாரத்தில் இத்யாதி. அப்படி துர்யோதநகோஷ்ட்டி க்ரூரமோ? என்ன, அதின் பொல்லாங்கை அருளிச்செய்கிறார் - யத்ர இத்யாதி. "யத்ர ஸூக்தம் துருக்தம் வா ஸமம் ஸ்யாந் மதுஸூதந । ந தத்ர க்ஷணமப்யாஜ்ஞா வஸ்தவ்யம் இதி மே மதி:'' இத்யுத்யோகபர்வணி பஞ்சநவதிதமே க்ருஷ்ணம் ப்ரதிவிதுர:.* இதுக்கர்த்தம் - பாண்டவர்கள் இத்யாதி. 'அவனேபின்னோர்' இத்யாதிக்கு - லங்கையிலுள்ளாரைநசிப்பித்தவனே பின்பு த்வாபராந்தத்திலே ராஜ்யத்துக்கு ப்ரதாநரான பாண்டவர்களுக்காக, மஹாப்ருதிவியிலுள்ளார் பாண்டவதூதன் என்று தன்பேரிட்டழைக்கும்படி நின்றபடி. திருமொழி இரண்டாம்பத்து, இரண்டாந்திருமொழி மூன்றாம்பாட்டு, "முன்னோர் தூது'' இத்யாதி.*

# முதற் பாட்டு.

---

கற்பாரிராமபிரானையல்லால்மற்றுங்கற்பரோ?
புற்பாமுதலாப் புல்லெறும்பாதியொன்றின்றியே
நற்பாலயோத்தியில்வாழும் சராசரம்முற்றவும்
நற்பாலுக்குஉய்த்தனன் நான்முகனார்பெற்றநாட்டுளே.

**ஆ.**—ப்ராக்ருதவஸ்துக்களை தாரகபோஷக போக்யமாயிருக்கக்கடவ இப்ப்ரக்ருதி மண்டலத்திலே வைத்துக்கொண்டு திருவயோத்யா திருநகரியிலே வர்த்திக்கிற தூர்வாதி நிகிலஜந்துக்களையும், கர்மயோகாத்யுபாயம் பண்ணாதிருக்கச்செய்தேயும், திருநாட்டிலுள்ளாரைப்போலே தன்திருவடிகளை தாரகபோஷக போக்யமாக்கியருளின இம்மஹாகுணத்தையுடையனாயிருந்த இராமபிரானையல்லால் மற்றுங்கற்பரோ? என்று, அவனுடைய குணங்களை யநுபவிக்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், ப்ரியஹிதங்களை அநுஸந்திப்பார் திருவயோத்யையிலுண்டான ஸகல பதார்த்தங்களையும் நிர்ஹேதுகமாக ஸ்வஸம்ஶ்லேஷவிஶ்லேஷைக ஸுகது:கராம்படிப்பண்ணியருளின உபகாரசீலனானராமனையல்லது கற்பரோ?என்கிறார்.

[பற்பாமுதலாப்புல்லெறும்பாதி] - ஸ்தாவரங்களிற் கடையான த்ருணமும் ஜங்கமங்களிற்கடையான சிற்றெறும்பும் ப்ரதாநமாக அவைதொடக்கமாக என்றுமாம். புற்பா- தறையில் பரம்பி இருந்தபுல். [ஒன்றின்றியே] - நிர்ஹேதுகமாக. [நற்பாலென்று தொடங்கி] - ஒருநன்மையின்றியேயிருக்கச்செய்தே, நிலமிதிதானே ராமபக்தராக்கவற்றும் ஸ்வபாவத்தையுடைத்தான திருவயோத்யையிலே ராமகுணங்களை அநுபவித்து இனியராய்வர்த்திக்கிற சராசரபதார்த்தங்கள் எல்லாவற்றையும் ப்ரஹ்மாவை நியந்தாவாக்கி யவனுக்கடைத்த,கர்மவஶ்யமான நாட்டிலே கர்மங்களையும் அவனுடைய நியந்த்ருத்வத்தையும் தவிர்த்துத் தன்னோட்டை ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்களே ஸுகது:கங்களாகிற நல்லஸ்வபாவத்தை உடைத்தாம்படிபண்ணினான்.

ப.—முதற்பாட்டில், சக்ரவர்த்தித்திருமகனுடைய புருஷார்த்த ப்ரதத்வத்தையநுஸந்தித்து, கல்வியில் ஆதரமுடையார்க்கு அவரையொழிய ஜ்ஞாதவ்யரில்லையென்கிறார்.

பா-மூளைத்துப்பரம்பின, புல்-, முதலா - முதலாகவும், புல் - அதிக்ஷுத்ரமான, எறும்பு-, ஆதி - முதலாகவும், நற்பால் - (ராமகுணங்கள் நடையாடுகிற) நல்லதேசமாயுள்ள, அயோத்தியில் - திருவயோத்யையிலே, வாழும - குணாநுபவப்ரீதியுக்தராய்வர்த்திக்கிற, சராசரம் - சராசராத்மகமான, முற்றவும் - ஸகலபதார்த்தங்களையும், நான்முகனார்பெற்ற - சதுர்முகஸ்ருஷ்டமான, நாட்டுளே - ஜகத்துக்குள்ளே, ஒன்று - உஜ்ஜீவநோபாயமொன்றும், இன்றியே - இன்றியேயிருக்கச்செய்தேயும், நற்பாலுக்கு - நல்லவிடமான ப்ராப்யஸ்த்தலத்திலே, உய்த்தனன் - வைத்தான்; (ஆதலால்), கற்பார் - ப்ரியஹிதரூபமாயிருப்பதொன்றைக் கற்கநினைப்பார், இராமன் - (அதீவப்ரியதர்மனாய் * விக்ரஹவானான தர்மமாயிருக்கிற) சக்ரவர்த்தித் திருமகனை, பிரானை - மஹோபகாரகனை, அல்லால் - ஒழிய, மற்றும் - வேறொருவ்யக்தியை, கற்பரோ - வ்யுத்பத்திபண்ணுவரோ?

இ.—முதற்பாட்டில், ப்ரியஹிதங்களைப்பற்ற ஒன்றைக்கற்பார், உபகாரசீலனை சக்ரவர்த்தி திருமகனை யொழிய ... ர.

[கற்பார் இத்யாதி] - ஒருவன் ஒன்றைக்கற்பது, அப்போதை இனிமைக் காதல் விபாகத்தில் புருஷார்த்தத்தைத்தருமென்றுதல்இறே; "...", என்றும், "..." என்றும்; "..." என்றும், "..." என்றும் ப்ரியஹிதங்கள் இரண்டும் ஒரு தலைத்த விஷயமாய்,நிலாத்தென்றல் சந்தனம் தண்ணீர்போலே பார்யமாயிருக்கிற விஷயத்தையொழிய, அயிகரிப்பார் புறம்பேயும் ஒன்றை அப்யஸிப்பரோ? அநர்த்தகரமென்றாலும் விடவொண்ணாத ப்ரியவிஷயமாய், அப்ரியமானாலும் விடவொண்ணாதபடி பத்ய்யமான இவ்விஷயத்தையொழிய, வேறொன்றை அப்யஸிக்கக்கடவதோ? மற்றுமென்று - தேவதாந்தரங்களைச் சொல்லுகிறதன்று: பரத்வத்தையும் அவதாராந்தரங்களையும் சொல்லுகிறது; "...," "தொழிலெனக்கு". [கற்பரோ] - சேதநரன்றோ, எல்லாவற்றையும்விட்டு இவ்விஷயத்தைக் கற்கைக்கு இங்குத்தைக்கு ஏற்றமென்?என்னில்; அதுசொல்லுகிறது - மேலடைய. [புற்பாமுதலா] - புல்லாகிறபதார்த்தம் முதலாக. பா-பதார்த்தம், பரம்பினபுல் என்றுமாம். அதாவது - பசுவின்வாய்க்கெட்டாதே தறையோடு ஒருமிக்கப்படருகை. [முதலா] - ப்ரதாநமாக என்றுமாம். [புல்லெறும்பு] - புல்லிய எறும்பு. [ஆதி] - தொடக்கமாக என்னவுமாம், ப்ரதாநமாக என்னவுமாம். ஸ்தாவரங்களிற்கடையானத்ருணமும், ஜங்கமங்களிற்கடையான சிற்றெறும்பும் ப்ரதாநமாகவென்கை. வெள்ளத்துக்குப பள்ளத்திலே நோக்காயிருக்குமாபோலே; வஸிஷ்டாதிகளன்றியே அறிவிற்குறைந்தவிடத்தேயாயிற்றுப் பெருமாள் நீர்மைக்குநோக்கு. வஸிஷ்டாதிகளுக்குமுன்பே த்ருணபிபீலிகைகளாயிற்றுப் பெருமாள் கண்ணுக்கிலக்காவது. [ஒன்றின்றியே] - தம்மைப்பெறுகைக்கு ஹேதுவாயிருப்பதொரு நன்மையித்தலையிலின்றிக்கே, நிர்ஹேதுகக்ருபையாலே. ஒன்றின்றியேயென்றது - ஒன்றொழியாமேயென்றது ஆனாலோ? என்னில்; மேலே [சராசரம்] - என்கையாலே அது தாண்ணாது. [நற்பாலயோத்தியில்] - நல்லவிடத்தைபுடைய திருவயோத்யையில், நிலமிதிதானே ராமபக்தியை விளைப்பிக்குமென்கை. "..." "..."என்னுமவர்கள். [வாழும்] - வர்த்திக்குமென்னும் ஸ்தாநத்திலேவாழும்என்கிறது - தேசவாஸந்தானே போகரூபமாயிருக்கை; ராமகுணங்களையே அநுபவித்திருக்கும் என்னுதல். [சராசரமுற்றவும்] - ஸ்தாவரஜங்கமாத்மகமான ஸகலபதார்த்தங்களையும். [நற்பாலுக்குய்த்தனன்] - நல்ல ஸ்வபாவத்தையுடைத்தாம்படி பண்ணினான். தன் ஸம்ஸ்லேஷவிஸ்லேஷமே ஸுகதுக்கமாம்படி பண்ணினான். "...", "...", "...," "..." இப்படி ஸ்வஸம்ஸ்லேஷ விஸ்லேஷஸுகதுக்கமாம்படி பண்ணிற்றுஒருதேசவிசேஷத்திலேயோ? என்ன, [நான்முகனார் பெற்ற நாட்டுளே] - ப்ரஹ்மாவுக்கு அடைத்தநாட்டுள்ளே. அவனுடைய நியாமகத்வத்தையும் தவிர்த்து சேதநருடைய கர்மவஸ்யதையையும் தவிர்த்துத் தான்கைக்கொண்டு தன்னையல்லது செல்லாதபடி பண்ணினான்,

ஈடு.—முதற்பாட்டு. ப்ரியஹிதங்களை யநுஸந்திப்பார், திருவயோத்யையிலுண்டான ஸகலபதார்த்தங்களையும் நிர்ஹேதுகமாக ஸ்வஸம்ஶ்லேஷவிஶ்லேஷஸுகது:கராம்படிபண்ணியருளின வுபகாரசீலனை சக்ரவர்த்தித்திருமகனை யல்லது கற்பரோ? என்கிறார்.

[கற்பார் இத்யாதி] - இவ்விஷயத்தையொழியப் புறம்பு கற்குமது கல்விக்கு உடலல்ல என்றிருக்கிறார். "தஜ்ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யதுக்தம்" (தஜ்ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யதுக்தம்) என்றானிறே. ஹமவல்லாஹத்துக்குஉடலான ஜ்ஞாநம் ஜ்ஞாநமாகிறது; அல்லாதது அஜ்ஞாநமென்னக்கடவதிறே. [கற்பார்] - ஒருவன் ஒன்றைக்கற்பது "அப்போதைக்கினிது" என்றுதல், "பின்போரு நன்மையைவிளைக்கும்" என்றுதல் ஆயிற்று; [இராமபிரானைன்கையாலே] - அவையிரண்டும் இவ்விஷயத்தை யொழியவில்லை யென்கை. ராமனென்கிற இத்தால்-புறம்புபோகாமல் காற்கட்டும்படியான அழகைச் சொல்லுகிறது; பிரானென்று கொண்டு - அவ்வழகாலே சேதநரை யநந்யார்ஹமாக்கும்படியும், நிலாத்தென்றல் சந்தநம் தண்ணீர்போலே தன்னுடைய ரமணீயத்வமும் பிறர்க்கேயாயிருக்கும் உபகாரகத்வமும் சொல்லுகிறது. "ப்ரியவாதீச" (ப்ரியவாதீச) - பெருமாளொன்றையருளிச்செய்தால் அது செவிப்படாதொழியிற் செய்யலாவதில்லை; செவிப்படில் இனிதாயன்றியிராது. ஆர்க்குத்தான்? என்றால் "பூதாநாம்" (பூதாநாம்) - ஸத்தாயோகி ஸகலபதார்த்தங்களுக்கும்: அஸத் வ்யாவ்ருத்திமாத்ரமே வேண்டுவது. அப்போது ப்ரியமாய் விபாகத்தில் வேறொன்றை ஃபலிப்பிக்குமோ? என்னில்,—"ஸத்யவாதீச" (ஸத்யவாதீச) - அருளிச்செய்யுமதுதான் பூதஹிதமாயன்றி இராதேன்கிறது. ஒருக்திலே

---

முதற்பாட்டு-கற்பார் இத்யாதி "நற்பாலயோத்தி" இத்யாதி. "உய்த்தனன் - இராமபிரானையல்லால் மற்றுங்கற்பரோ" என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை ப்ரியஹிதங்களை இத்யாதி.

"கற்பரோ" என்கிற ஸ்வரத்தால் ஃபலித்த ஹாவம் இவ்விஷயத்தை இத்யாதி. அப்படிக்கல்விக்கு உடலன்றோ? என்ன; அல்லவென்னுமதுக்குப்ரமாணம்-தஜ்ஜ்ஞாநம் இத்யாதி. "ஸம்ஜ்ஞாயதே யேந ததஸ்தவோஷம் ஶுத்தம் பரம் நிர்மலமேகரூபம் । ஸந்த்ருஶ்யதே வாப்யதிகம்யதே வா தஜ்ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யதுக்தம்" இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே (சுரு - அசு). இதுக்கர்த்தம்-ஹமவல்லாஹத்துக்கு இத்யாதி. தத் - ப்ரஹ்ம. யேந - ஜ்ஞாநேன, ஸம்ஜ்ஞாயதே, ஸம்த்ருஶ்யதே, அதிகம்யதே; ததேவ ஜ்ஞாநம்; அதோந்யத் - அஜ்ஞாநம்உக்தம் இத்யந்வய:. சுத்தமித்யாதி - தச்சப்தநிர்த்திஷ்டப்ரஹ்மவிசேஷணம். ஸம்ஜ்ஞாயத இதி - ஶ்ரவணமநந விஷயத்வம், ஸம்த்ருஶ்யத இதி - ஸாக்ஷாத்காரஜ்ஞாநவிஷயத்வம், அதிகம்யத இதி-பரமபக்தித ஶாபந்நஜ்ஞாந ப்ராப்யத்வம். "கற்பார்" என்றால் - ப்ரியஹிதங்களை யநுசந்திப்பாரென்று காட்டுமோ? என்ன, அர்த்தஸாமர்த்த்யத்தாலே காட்டுமென்கிறார் ஒருவன் இத்யாதி. "இராமன்" என்றதுக்கர்த்தம்-ராமன்இத்யாதி "பிரான்" என்றதுக்கு - ஸ்வாமித்வமும், உபகாரகத்வமும் அர்த்தமாக்கி, அவ்வழகாலே சேதநரைத்தோற்பிக்கும்படியும், அவ்வழகை யாஶ்ரிதரை யநுபவிப்பிக்கும் உபகாரகத்வமும் சொல்லுகிறதென்கிறார்-பிரானென்று இத்யாதி. "ப்ரியஹிதங்களிரண்டும் பெருமாளே" என்னுமதுக்கு ப்ரமாணம் - ப்ரியாவாதீசஇத்யாதி. "ப்ரியவாதீச பூதாநாம் ஸத்யவாதீச ராகவ:। பஹுஶ்ருதாநாம் வ்ருத்தாநாம் ப்ராஹ்மணாநாமுபாஸிதா" இத்யயோத்யாகாண்டே (உ-கூஉ). "ஸத்யம் பூதஹிதம் ப்ரோக்தம்" என்றத்தை யுட்கொண்டருளிச்செய்கிறார் — பூதஹிதம் இத்யாதி. இஶ்ஶ்லோகத்தில் - பெருமாளுக்திக்கன்றோ ... பெருமாளுக்குச் சொல்லவில்லையேயென்ன; அது கிம்புநர்ந்யாய

மாகாநின்றால், அல்லாததுக்குச் சொல்லவேண்டாவிறே. "ராமோராமோராம இதி" (ராமோராமோராம இதி) என்னும்படியிறே நாட்டை யகப்படுத்தியிட்டு வைக்கும்படி. அவன் ஸத்தை இவனுடைய ஸத்தைக்குஹேது; பின்புண்டானவை இவனுக்கு போகத்துக்குக் கண்டவை. ப்ரியஹிதங்களிரண்டும் வேண்டியிருப்பார் அவனையொழியக் கற்பரோ? என்றபடி. "ஸாக்ஷாத்ராமாத்விநிர்வ்ருத்தோ தர்மஶ்சாபி ஶ்ரியாஸஹ" (ஸாக்ஷாத்ராமாத்விநிர்வ்ருத்தோ தர்மஶ்சாபி ஶ்ரியாஸஹ)- அவ்யவதாநேந ஸாதநஸாத்யங்களிரண்டும்இவ்வ்யக்தியேஎன்கிறதிறே. [கற்பாரிராமபிரானை]-கற்பார்என்கையன்றுஇவர்க்கு உத்தேஶ்யம்; இதரவ்யவச்சேதம். ராமப்ராப்தமாகில் ஸ்வயமேவ ப்ரவர்த்ததேயிறே: ஆகையால், வேறொன்றிற்போகாமையே வேண்டுவது. மற்றுமென்று - தேவதாந்தரபஜநாதிகளை வ்யாவர்த்திக்கிறாரல்லர், பஜநீயவஸ்துவிலே கூறிடுகிறார். தேவதாந்தரமாகிற பதர் கூட்டிக் கழிக்குமவரல்லரிறே,பரத்வத்தையும்அவதாராந்தரங்களையும்கழிக்கிறார். [மற்றுங்கற்பரோ]-"பாவோநாந்யத்ரகச்சதி"(பாவோநாந்யத்ரகச்சதி) என்னுமாபோலே. "ஸ்நேஹோமேபரம:" (ஸ்நேஹோமேபரம:) - எழுந்தருளுகிறபோது "என்வழியே

---

ஸித்தமென்கிறார்-ஒருக்தியேஇத்யாதி. அல்லாததுக்கென்றது-ஸ்வரூபகுணாதிகளுக்கென்றபடி. "அவ்வழகாலே சேதநரை யநந்யார்ஹமாக்கும்படியும்" என்று கீழேசொன்னதுக்கு ப்ரமாணம்-ராமோராம இத்யாதி. "ராமோராமோராம இதி ப்ரஜாநாமபவந்கதா: । ராமபூதம் ஜகதபூத் ராமேராஜ்யம் ப்ரஶாஸதி" இதியுத்தகாண்டே(கஉக-கஎ)."ராமோராமோராம:" என்று- ப்ரியத்வமொழிய, ஹிதத்வம் சொல்லவில்லையேயென்ன- அவன்ஸத்தைஇத்யாதி. அதாவது - ஹிதத்வத்துக்கு அவன் ஸத்தையேபோரும், ப்ரியத்வமே சொல்லவேண்டுவதென்றபடி. பின்புண்டானவையென்றது- குணவிக்ரஹஸௌந்தர்யாதிகளென்றபடி. நிமமிக்கிறார்-ப்ரியஹிதங்களிரண்டும்இத்யாதி. ப்ரியஹிதங்களிரண்டுமவரேயென்றத்தால் பலித்தது - உபாயோபேயங்களிரண்டும்அவரேயென்னுமதென்று ஸித்தவத்கரித்து, அதுக்குப்ரமாணம்-ஸாக்ஷாத்இத்யாதி. "ராமஸந்தர்ஶநோத்ஸுகா(:) ஸகலஸத்யவ்வராயணா: । ஸாக்ஷாத்ராமாத்விநிர்வ்ருத்தோ தர்மஶ்சாபி ஶ்ரியாஸஹ", இத்யயோத்யாகாண்டே(உஉக)."ஸாக்ஷாச்ஶ்ரியாஸஹ, ஸாக்ஷாத்தர்ம:, ராமாத்விநிர்வ்ருத்த:"இத்யந்வய:. ஶ்ரீயென்று-ஸாத்யம், தர்மமென்று ஸாதநம்.இவ்விரண்டும் இவரிடத்தில்நின்றும் உண்டாகிறதென்றது - இவர் தாமேயாயிருப்பரென்றபடி. ஸாக்ஷாச்ச்ரீயோடேகூட ஸாக்ஷாத்தர்மமானது ராமனாலே யுண்டாச்சுதென்றர்த்தமாகையாலே அத்தையருளிச்செய்கிறார்-அவ்யவதாநேநஇத்யாதி.ஸாதகம் ஸாதநபரம்பரயாஸாத்யமாய், அஸ்ஸாதநத்துக்கு அங்கம்பரம்பரயாஸாதநமாயிருக்கையாலே, அத்தை வ்யாவர்த்திக்கிறது - அவ்யவதாநேந என்று. கற்பாரிராமபிரானைக் கற்கவேண்டாவோ? என்னுதே, "மற்றுங்கற்பரோ" என்கிறதென்? என்ன - கற்பார்இத்யாதி. இதரநிஷேதமே ப்ரயோஜநமென்றபடி. இதரவ்யவச்சேதமாத்ரமேபோருமோ, ஆஶ்ரயியுங்கோளென்னவேண்டாவோ? என்ன- ராமப்ராப்தம்இத்யாதி வாக்யத்வயத்தாலே.கீழே "மற்றும்" என்றதுக்கு - இதரவிஷயங்களாக அருளிச்செய்து, பரத்வாவதாராந்தரங்களாக அர்த்தாந்தரம்- மற்றுமென்று-தேவத இத்யாதி.தேவதாந்தரங்களைச்சொன்னாலோ?என்ன-பதர்இத்யாதி.ஆனாலெத்தைக்கழிக்கிறார்?என்ன,பரத்வத்தையும்இத்யாதி. பரத்வத்தைக்கழிக்கிறதுக்கு த்ருஷ்டாந்தம் - பாவோநாந்யத்ரஇத்யாதி. "ஸ்நேஹோமேபரமோராஜந்த்வயிநித்யம்ப்ரதிஷ்டித: । பக்திஶ்ச நியதாவீரபாவோநாந்யத்ரகச்சதி" இதி உத்தர ஸ்ரீராமாயணே ராமம்ப்ரதி ஹநூமாந். ஶ்லோகத்துக்கவதாரிகை - எழுந்தருளுகிறஇத்யாதி. பரமபதத்துக் கெழுந்தருளுகிற என்றபடி. பரமஶப்தார்த்தம் - அவ்வளவன்றுகாணும்என்று. அவ்வளவன்றுகாணும் என்றதுக்கு - இங்கேயிருந்தே உம்முடைய சாரித்ராநுபவம் பண்ணுமதொழிய, கூடவரும்படியன்றுகாணும் என்றபடி. "பரம:" என்றதுக்கு - என்னிற்காட்டில்

போந்தாலோ?'' என்ன; அவ்வளவன்றுகாணும் எனக்கு ஸ்நேஹமென்கிறான். ''என்றனளவன்றால் யானுடையஅன்பு'' என்றும், ''உயிரின் பரமன்றிப்பெருகுமால் வேட்கையும்'' என்னுமாபோலே. ''ராஜம்ஸ்த்வயி'' (ராஜம்ஸ்த்வயி)-இதுதானும் என்றால் வந்ததன்று. (ரஞ்சயதீதிராஜா.) - ''நித்யம்ப்ரதிஷ்டிதஃ'' (நித்யம்ப்ரதிஷ்ட்டிதஃ) - ''இப்போதோண்ணுதாகில், மற்றொருபோதுகோள்ளுகிறோம்''என்றால், அதுசெய்யவோண்ணாது, பூர்மியைப்பற்றிக்கிடக்கிற தோன்றுகையாலே. ''பக்திஶ்சநியதா'' (பக்திஶ்சநியதா)(ஸ்நேஹமாவதேன், பக்தியாவதேன்?என்னில்;)பெருமாளையொழியச் செல்லாமைபிறந்துவ்யதிரேகத்தில் முடிந்தசக்ரவர்த்திநிலை-ஸ்நேஹம்;பக்தியாவது-''நில்''என்ன,''குருஷ்வ''(குருஷ்வ) என்னும்படியாய்,முறையறிந்துபற்றின இளையபெருமாள்நிலை.'வீர'(வீர)-உம்முடையவீரங்கோண்டு புறம்பே வென்றீர்என்று, இங்கும் வெல்லமுடியாது. தானும் அவனுகையாலே, தோற்பித்த துறையைப் பிடித்துச்சோல்லுகிறான். ''பாவோ நாந்யத்ர கச்சதி''(பாவோ நாங்யத்ரகச்சதி) - என்னை மீட்டராகிலும் என்னுடைய நெஞ்சைமீட்கப்போகாது. என்னுடை நன்னெஞ்சந்தன்னை அகல்விக்கத் தானுங்கில்லானினி''என்னுமாபோலே- ஸர்வசக்தியான அவனாலும் மீட்கப்போகாதேன்கை. ''அந்யத்ர - நகச்சதி'' (அங்யத்ர - நகச்சதி) - ''கண்டகண்கள்மற்றொன்றினைக்காணா'' என்னுமாபோலே. அங்யத்ர வேன்கிறது - போகிறவிடத்தின் பேரும் சோல்லுகை அஸஹ்யமானபடி. ''மற்றாராணுமுண்டேன்பார்'' என்னுமாபோலே; இவரும் [மற்றுங்கற்பரோ] - என்கிறார். [கற்பரோ] -

பரமமென்று விவக்ஷித்து, அதுக்குப்ரமாணம் - என்றன்இத்யாதி. உன்பக்கல் நானுடையேனுன ப்ரேமம் ஆஶ்ரயஸ்தனை என்னளவிலேயடங்கி நிற்பதன்றுஎன்றபடி. இரண்டாந்திருவந்தாதி சாற்றுப்பாட்டு, '' மாலே '' இத்யாதி. 'உயிரின்' இத்யாதி - ஆத்மாவினளவன்றிக்கே, அபிநிவேசமானது பெருகாநிற்கும்என்றபடி. இந்தஸ்நேஹம் வருகைக்கடி உம்முடைய ரஞ்சநீயத்வமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் - இதுதானும்இத்யாதி. ''நித்யம்'' என்றதுக்கு பாவம் - இப்போதுஇத்யாதி. மற்றொருபோது கொள்ளுகிறோமென்றது - ஸ்நேஹமில்லாத ஊமையிலே கூட்டிக்கொண்டுபோகிறோ மென்றபடி. பூர்மியைப்பற்றிஎன்றது - திருவடியுடைய ஸ்வரூபத்தைப் பற்றி யென்னுதல், '' ராஜம்ஸ்த்வயி '' என்ற - விலக்ஷணகுணவிசிஷ்டரான பெருமாளுடைய ஸ்வரூபத்தைப்பற்றி யென்னுதல். ''பக்திஶ்சநியதா'' - பக்தியும் எப்போதுமுள்ளது. ஸ்நேஹத்துக்கும் பக்திக்கும் பேதமேதென்ன, அத்தலையில் குணமடியாக வருவதொரு ப்ரீதி - ஸ்நேஹமாவது; பக்தியாவது - தாஸனுக்கு ஸ்வாமியிடத்திலே பிறப்பதோர் அநுராகவிசேஷம். சக்ரவர்த்திக்குப் பெருமாளிடத்தி லுண்டான ப்ரீதி - ஸ்நேஹமாவது; இளையபெருமாளுக்குப் பெருமாளிடத்திலுண்டான ப்ரீதி - பக்தியாவது. ''வீர'' என்றதுக்கு பாவம் - தம்முடைய இத்யாதி. ''வீர'' என்றதுக்கு பாவார்த்தம் - தானும்இத்யாதி. அவனுகையாலே - வீரனுகையாலே. ''பாவஃ - அந்யத்ர - நகச்சதி'' என்றதுக்குபாவம் - என்னைமீட்டராகிலும் இத்யாதி. இதுக்கு ப்ரமாணம் - என்னுடையஇத்யாதி. 'தானுங்கில்லான்'' என்றதுக்கு பாவம்-ஸர்வஶக்தியானஇத்யாதி. ''அந்யத்ர'' என்றதுக்கு த்ருஷ்டாந்தம் - கண்டகண்கள்இத்யாதி. பரமபதத்திலே யென்னுதே, ''அந்யத்ர'' என்றதுக்கு பாவம் - அங்யத்ரவேன்கிறது இத்யாதி. அஸஹ்யமானமைக்குப் ப்ரமாணம் - மற்றாராணும்இத்யாதி. ''கஶ்சித், கஶ்சித்'' என்று புருஷார்த்தங்களை தூஷித்து, மற்று - ஆநந்தாவஹமாய் * அந்தமில்பேரின்பமாய் நிலைநின்றபுருஷார்த்தம் உண்டேன்பாரென்றபடி: சிறியதிருமடல், '' கற்பரோ! '' என்கிற ஸ்வரத்துக்கு ஸந்தர்ப்பமாக

சேதநரன்றே? நாடடங்கலும் தம்முடையபடி என்றிருக்கிறர்; "இவ்வூரிற் பிள்ளைகள் கண்டசர்க்கரை யொழிய உண்ணும்படி யெங்ஙனே?" என்பாரைப்போலே. மற்றவற்றை விட்டுக் கற்கைக்கு ஹேது சொல்லுகிறது மேலடைய. [புற்பாமுதலா] – பா வென்று - பதார்த்தவாசகமாய், புல்லாகிறபதார்த்தமென்னுதல்; பாவென்று - படர்த்தியாய், படரு கிறபுல்லென்னுதல். பசுவின்வாய்க்கேட்டாதபடியாயிருக்கை. தூர்வாதிஸ்த்தாவராந்தமாக என்றபடி - இத்தால். [புல்லெறும்பாதி] - ஜங்கமங்களிற்கடையான எறும்பு தோடக்க மாக. ப்ரஹ்மாவையெண்ணிஞல் அநந்தரம் நிற்கக்கடவதிறே பிபீலிகை. புற்பாமுதலாப் புல்லெறும்பாதி யென்று - இவற்றுக்கோரு ப்ராதாந்யஞ் சொல்லுகிறரல்லர்; ராமவிஷயீ காரத்துக்கு முற்பட்டன இவையென்கிறர்; வேள்ளமானது தாழ்ந்தவிடத்திலே ஓடுமோ போலே. ஸ்த்தாவரங்களில் தண்ணியதுபுல்லு. ஜங்கமங்களில் தண்ணியதுஎறும்பு; இவை யிரண்டையு மோக்ஷவேக்ஷைகையாலே- ஜ்ஞாநஃபலம் மோக்ஷமென்கிறத்தைத் தவிர்க்கிறது. சைதந்யம்உண்டாகையும்இல்லையாகையும் அப்ரயோஜகம்,பெருமாள் க்ருபைக்கேன்கிறது. இவற்றின்கர்மத்தால்வரும் தாரதம்யங்கள்அப்ரயோஜகமேன்கிறது; நிருபாதிகஸாபேக்ஷகல் அப்ரதிஷேதமேபேற்றுக்குவேண்டுவது. ஸ்ரீபரதாழ்வானைக்கண்டு சேதநரேல்லாரும் கண்ண நீர்விழவிட்டுநிற்கக்கழுத்துமட்டுநீரிலேநிற்கிறமரங்களிறே வாடிநின்றது; "அபிவ்ருக்ஷாஃ பரிம்லாநாஃ"(அபிவ்ருக்ஷாஃபரிம்லாநாஃ), "உபதப்தோதகா நத்யஃ"(உபதப்தோதகா நத்யஃ)-நீரோடு, அந்நீரில்விழுகிறரோடுவாசியற்றபடிஉபதப்தமாகையாவது-கரையருகும்கிட்ட வோண்ணுதபடியாயிருக்கை. "பல்வலாநிஸராம்ஸிச"(பல்வலாநிஸராம்ஸிச)-இதில், சிறுமைபெருமை என்றேருவாசியில்லை. "வநாந்யுபவநாநிச" (வநாந்யுபவநா நிச) போலே. [ஒன்றின்றியே] - எல்லாவற்றையும் என்கிறதல்ல; மேலே முற்றவுமென்று

ஹாவம் - நாடடங்கலும் இத்யாதிவாக்யத்வயம். 'இவ்விஷயத்தையொழிய' இத்யாதி அடியில்வாக்யம் - ஸ்வரத்தால் ஹலிதமானஹாவம். 'இவ்வூரிற்பிள்ளைகள் கண்டசர்க்கரையொழிய வுண்ணும்படி யெங்ஙனே' என்கிறவிடத்திலே - ஓரம்மையார்அகத்திலே ராஜகுமாரன் இளைத்துச்சென்று "ப்ரஸா தம் வேணும்" என்ன, அவளும் "உண்" என்று ப்ரஸாதமிட, "அதுக்கு உபதம்ஶம்வேணும்" என்ன, உப்பைச் கொடுவந்திட, அவன் "கண்டசர்க்கரையில்லையோ" என்ன, அவளும் "இல்லை" என்ன, "இவ்வூரிற் பிள்ளைகள் கண்டசர்க்கரை யில்லாமலெப்படி யுண்பர்கள்?" என்று தன் னைப்போலே விசாரித்துச் சொன்ஞன் என்று கதை. "முதலா" என்றதுக்கர்த்தம் - தூர்வாதி இத்யாதி. ஜங்கமங்களிலெறும்பு புல்லியதோ? என்ன - ப்ரஹ்மாவை இத்யாதி. க்ஷுத்ரமான புல்லையுமெறும்பையும் ப்ராதாந்யமாகச் சொல்லுவானென்? என்ன - புற்பாமுதலா இத்யாதி. 'இவை முற்படும்படி யென்? என்ன, த்ருஷ்டாந்தம் - வெள்ளம்இத்யாதி. சேதநரைப் பொகட்டுப் புல் லையுமெறும்பையும் சொல்லுகையாலே ஹலித்ததோர்அர்த்தவிசேஷத்தை யருளிச்செய்கிறர் - ஸ்த்தா வரங்களில்இத்யாதிவாக்யத்ரயத்தாலே. ஆனுல்,ஜ்ஞாநம் வேண்டாவோ? என்ன - சைதந்யம்இத்யாதி. "ஜ்ஞாநாந்மோக்ஷஃ" என்ஞுநிற்க, "ஜ்ஞாநம்வேண்டா" என்பானென்? என்ன; மோக்ஷஹேது வான ஜ்ஞாநத்தை"வேண்டா" என்கிறதல்ல; கர்மதாரதம்யப்ரயுக்தமான ஜ்ஞாநத்தைவேண்டா என்கிற தென்கிறுரரதல், கீழ்வாக்யவிவரணமாதல் - இவற்றின் இத்யாதி. ஆனுல் ப்ரயோஜகமே தென்ன - நிருபாதிகஇத்யாதி. கர்மநிபந்தநமான தாரதம்யங்கள் அப்ரயோஜகமாய், அப்ரதிஷேத மாத்ரமேகொண்டு அவன் க்ருபை பலித்தவிடமுண்டோ?என்ன - ஸ்ரீபரதாழ்வானைஇத்யாதி. கழுத்து மட்டு நீரிலேயென்றது - வ்ருக்ஷாஸேசநே என்கிற ந்யாயத்தைப்பற்ற. அப்படி மரங்கள் வாடிற்றே என்ன - அபிவ்ருக்ஷாஇத்யாதி. "உபதப்தோதகாஃ"என்றதுக்குஅர்த்தம்-நீரோடுஇத்யாதி."ஒன் றின்றியே" - நிர்ஹேதுகமாக என்றபடி. ஒன்றொழியாமலெல்லாவற்றையும் என்றர்த்தமாஞலோ? என்ன,புநருக்தமாம்என்கிறர் - எல்லாவற்றையும்இத்யாதி, ஆனுல்அதுக்கர்த்தமேது?என்ன-இனிஇத்

ஸாகல்யவசநமுண்டாகையாலே. இனி, ஒன்றின்றியேயென்கிறது - பேற்றுக்கூடாயிருப்ப தொரு ஸாதநமின்றிக்கேயிருக்கச்செய்தே யென்றபடி. பெறுகிற தன்சிறுமையையும் பேற்றின் கனத்தையும்பார்த்தால், தன்பக்கல் ஒருஸாதநமின்றிக்கே யிருக்குமிறே. பரமபக்தியோடு, அவன்தானே உபாயமானத்தோடு வாசியில்லை, பேற்றைப்பார்த்தால் இத்தலையில் ஒன்றும் சொல்லவொண்ணாமைக்கு. இனி, அங்கீகாரஹேதுவாயிருப்பதொருஸாதநமின்றிக்கேயிருக்க, யாதொன்றாலே பலமுண்டாயிற்று, அதிறே ஸாதநம்! அதாவது- ‘திருவயோத்யையினின்றும் குடிவாங்க நினைவில்லை’ என்கிற இதிறே. [நற்பாலயோத்தியில்] -நல்லஇடத்தையுடைத்தான திருவயோத்யையிலே.பால்- இடம். இத்தால்-நிலமிதியே ராமபக்தியைவிளைக்குமென்கை. “தேஶோऽயம் ஸர்வகாமதுக்”(தேஶோயம்ஸர்வகாமதுக்) இறே.“ஜ்ஞாதிதாஸீ யதோஜாதா”(ஜ்ஞாதிதாஸீயதோஜாதா)என்கிறதிறே.இதுக்குக்கருத்தேன்?என்னில்,— இத்தேசத்திலே பிறந்தாளாகில் பெருமாளுக்கு விரோதஞ்செய்யாளாகையாலே, எங்கேனும் ஓரிடத்தே பிறந்தாள் ஒருவிழுந்தான்கிடக்கையென்கிறது “யதஃ குதஶ்சிஜ்ஜாதா” (யதஃ குதஶ்சிஜ்ஜாதா) என்று வ்யாக்யாநம்பண்ணினான் உடாலி. இந்நிலத்திற்பிறவாமை இவளுக்குக் கொடுமைவிளைந்ததென்கிறானிறே. தேசந்தானே யெல்லாநன்மைகளையும் பிறப்பிக்கவற்றாயிருக்குங் காணும். இவ்வூரிலவர்கள் அல்லாதாரோபாதியும்உண்டுடுத்துத் தடித்து வார்த்தைசொல்லித் திரிந்து, பெருமாளுக்கு வருவதொரு ப்ரயோஜநத்தோடு விரோதித்த

---

யாதி. “தேஶோऽயம்ஸர்வகாமதுக்” என்கிறபடியே அயோத்தியில் வாழுகையுண்டாயிருக்க, “ஒன்றின்றியே” என்கிறதென் ? என்ன - பெறுகிறதன் இத்யாதி. இத்தை கிம்புநர்ந்யாயத்தாலே ஸாதிக்கிறார்-பரமபக்தியோடு இத்யாதி. ஆனால், “தேஶோऽயம்ஸர்வகாமதுக்” என்றதுக்குக் கருத்தென் ? என்ன - இனி,அங்கீகார இத்யாதி. அதாவது - தேஶவாசம் வ்யாஜமாத்ரமாகையாலே; “தேஶோऽயம்ஸர்வகாமதுக்” என்றது - தேசவைபவபரமென்றபடி. ஸாதநமென்றது - வ்யாஜமென்றபடி. தனித்வயத்திலே “வ்யாஜோ ஹி வாடம் ஸ்ரீநம்யாவஹம் ஶரணாகதஃ” என்கிற ஶ்லோகவ்யாக்யாநம்பண்ணுமிடத்தில், “ஶரணாகதஃ” என்றபதத்துக்கு - “தேவயம் ஸ்வதாரக்ஷ்யாஸ்வவிஷயவாஸிநஃ” என்று உகந்தருளின தேஶங்களிலே அபிமாநித்தும் அவ்வெல்லைக்குள்ளே கிடந்துவிடுகையும் ப்ரபத்தி” என்றாரிறே. அன்றிக்கே, ‘இவ வாய்’ இத்யாதி வாக்யத்வயமும் - “நற்பாலயோத்தியில்வாழும்” என்றதுக்கு அவதாரிகையென்னவுமாம். ஸப்தார்த்தம்-நல்லஇடத்தையுடைத்தான இத்யாதி. “நல்லஇடத்தையுடைத்தான” என்றத்தால்ஃபலித்தஸாவம்-நிலமிதி இத்யாதி. நிலமிதி - நிலஸ்வபாவம். நிலமிதி ராமபக்தியைவிளைக்குமோ? என்ன-தேஶோயம்இத்யாதி. “வித்தம் வரம் வரேண்யம் தேஶோऽயம் ஸர்வகாமதுக் । யஸ்மிந்வஸந்தி க்ருணவாஸம் விதயதாம் ந்ருணாம்” இதி காருடபுராணே. நிலமிதியே ராமபக்திஜநகமானால், மந்தரைக்கு ராமபக்தியில்லாமைக்குஹேதுவேது? என்ன-ஜ்ஞாதிதாஸீஇத்யாதி. “ஜ்ஞாதிதாஸீ யதோஜாதா கைகேய்யாஸ்து ஸஹோஷிதா । ப்ராஸாதம் சந்த்ரஸங்காஶமாரோஹத யத்ருச்சயா” இத்யயோத்யாகாண்டே. “யதோஜாதா” என்றதுக்கு சங்காபூர்வகமாகஸாவம்-இதுக்குஇத்யாதி. ஒருவிழுந்தான்கிடக்கை - அப்ரஸித்தையாய்க்கிடப்பாளொருத்தி. உக்தத்துக்கு ஸம்வாதம்-யதஃகுதஶ்சித்இத்யாதி. அப்படி வ்யாக்யாநம்பண்ணினவனுக்கு ஸாவம்தாம்கீழ்ச்சொன்னதேயென்கிறார்-இந்நிலத்தில்இத்யாதி. ‘தேஶோऽயம்ஸர்வகாமதுக்’, என்றதுக்குஅர்த்தம்-தேசந்தானேஇத்யாதி. இதுகண்டதுண்டோ?என்ன-இவ்வூரில்இத்யாதி. இவ்வூரென்றது - கோயிலை. இவ்வூரிலவர்களென்றது - கோயிலிலேயிருக்கிறவர்கள்என்றபடி. பெருமாளுக்கு - பெரியபெருமாளுக்கு. தடித்து - பூரித்து. “சத்ருசரீரம்போலே” என்றதுக்கர்த்தம்-

வாறே, சத்ருசரீரம்போலேயிருக்க, சரீரங்களைப் போகட்டுக்கோடுநிற்பர்கள். சத்ருசரீரம் போகடவேண்டுவதொன்றிறே. “ராகவார்த்தே பராக்ராந்தா ந ப்ராணே குருதே† தயாம்”(ராகவார்த்தேபராக்ராந்தாநப்ராணேகுருதேதயாம்)- ப்ராணன்கள் பழைமையாலே பல்காட்ட, உடையவரும் நீங்களும் ஒருதலையானல் உங்களைக் கைக்கொள்ளப் போமோவென்னும்படியே. பழைமைபார்ப்பரோ, அவன் தானும்இவனைப்பற்ற“ப்ராணாநுபரித்யஜ்ய” (ப்ராணாந்பரித்யஜ்ய) என்னுநிற்க? [அயோத்தியில் வாழும்]- வர்த்திக்குமென்னுதே, வாழுமென்கிறது - அத்தேசவாஸமும், வாழ்வுமென்று இரண்டில்லாமையாலே; “வேங்கடத்தைப்பதியாகவாழ்வீர்காள்” என்றும், “நல்லார்கள்வாழும் நளிரரங்கம்” என்றும் சொல்லுகிறபடியே. அயோத்தியில் வாழுமென்கிறுர் - ப்ராப்யதேசத்தில் வர்த்தநந்தான் வாழ்ச்சியாயிருக்குமிறே. நித்யப்ராப்யமான வஸ்துவிறே இங்கு ஸந்நிதி பண்ணுகிறது. நமக்கு அநுபவம் காதாசித்கமாகிறது அசித்ஸம்ஸர்க்கத்தாலேயிறே; பூமியில் ஐக்யத்தாலே அங்குத்தைக்கு ஒருகுறையில்லையிறே. [நற்பாலுக்குய்த்தனன்] - நல்ல ஸ்வபாவத்தையுடைத்தாம்படி செலுத்தினன். அதாவது - ஸ்வஸம்ஶ்லேஷ விஶ்லேஷைக ஸுகதுக்கராம்படிபண்ணுகை.இவற்றின் கர்மதாரதம்யத்தாலேவரிலிறே அவ்வோவவ்வோவளவுகளாயிருப்பது? அவனலேவந்ததாகையாலே எல்லார்க்குமோக்ஷ நன்மை விளைந்தபடி. “மயாத்வம்ஸமநுஜ்ஞாதோ கச்சலோகாநநுத்தமாந்” (மயாத்வம்

சத்ருசரீரம்இத்யாதி. சத்ருசரீரம்போலேயிருக்க என்றது - முழுச்சொல்லு. சத்ருசரீரம்போலே என்றபடி. அவன்ப்ரயோஜநத்துக்காகத் தங்கள்ப்ராணன்களை உபேக்ஷித்தபேருண்டோ? என்ன- ராகவார்த்தே இத்யாதி; யுத்தகாண்டே. இதுக்கர்த்தம்-ப்ராணன்கள்இத்யாதி. உபேக்ஷை பண்ணுகைக்கு ப்ரஸக்தி - பல்காட்டஎன்றது. உடையவருமென்றது - “ராகவார்த்தே” என்றத்தைப்பற்ற உடையவரும் நீங்களுமொருதலையானல்- இருவரும் நமக்கேஹேயமானல். ஒருதலைக்கே ஹேயமாகை. உடையவர் - ஶேஷிகள். ஶேஷியைவிட்டுஉங்களைக்கைக்கொள்ளப் போமோ? என்றபடி. பழமை பார்க்கவேண்டாவோ? என்ன - பழைமைபார்ப்பரோ இத்யாதி. “ஆர்த்தோவாயதிவாத்ருப்த: பரேஷாம்ஶரணாகத: । அரி:ப்ராணாநுபரித்யஜ்யரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா” இதியுத்தகாண்டே.(கஅ-கஅ௨)கீழ்வாக்யத்துக்கு த்ருஷ்டாந்தம்-வேங்கடத்தை இத்யாதி. நாய்ச்சியார் திருமொழி, “மதயானை” இத்யாதி. “பொல்லாக்குறளுருவாய்” இத்யாதி. பதி-ஸ்த்தாநம். நளிரரங்கம் - ஶ்ரமஹரமான அரங்கம். நளிர் - குளிர்த்தி. வர்த்தநம் வாழ்ச்சியென்கைக்கு ஹேதுவருளிச் செய்கிறுர்-ப்ராப்யதேசத்தில்இத்யாதி. ப்ராப்யதேசம் பரமபதமன்றோ? இது ப்ராப்யமாகைக்கு ஹேதுவேதென்ன-நித்யப்ராப்யமான இத்யாதி. நித்யப்ராப்யவஸ்து ஸந்நிஹிதமானல், நமக்கநுபவம் காதாசித்கமாவானென்? என்ன-நமக்கு இத்யாதி. அசித்ஸம்ஸர்க்கத்தாலே யாகவேணுமோ, விஷயஸங்கோசத்தாலேயானலோ? என்ன-பூமி இத்யாதி. நற்பாலுக்கு - நல்லஸ்வபாவத்தை யுடைத்தாம்படி. உய்த்தனன் - நடத்தினன். புல்லெறும்பாதிகளுக்கு இந்தவவஸ்த்தையுண்டாகக்கூடுமோ? என்ன, அருளிச்செய்கிறுர் - இவற்றின் இத்யாதிவாக்யத்வயத்தாலே. மநுஷ்யபாவனையாயிருக்கிறஇவர் நற்பாலுக்குய்க்கக்கூடுமோ? என்ன-மயாத்வம்இத்யாதி. “யாகதிர்யஜ்ஞஶீலாநாமாஹிதாக்நேஶ்ச யாகதி:। அபராவர்திநாம்யாவயாவபூமிப்ரதாயிநாம் । மயாத்வம்ஸமநுஜ்ஞாதோ

† ‘குருதே’ என்று பாடமிருப்பின் பொருள் சொல்வதற்குப் பொருந்தும். ‘ராகவார்த்தே பராக்ராந்தா:’ என்பதும், ‘ந ப்ராணே குருதே தயாம்’ என்பதும் ஓரிடத்திலுள்ளனவல்ல: வெவ்வேறிடத்திலுள்ளவை: அவை அர்த்தாநுசந்தானத்தின் பொருட்டு ஒருங்கே சேர்க்கப்பட்டுள்ளன என்பர்.

ஸமநுஜ்ஞாதோ கச்சலோகாநநுத்தமாந்) என்று இங்குண்டான பற்றறுத்து ஒருதேசவிசேஷத்தேறச்சென்று அநுபவிக்கும் அநுபவத்தைக்கொடுக்கவல்லவனுக்கு இங்குத்தன்னையொழியச்செல்லாமை விளைக்கை பணியுடைத்தன்றிறே. [நான்முகனார்பெற்றநாட்டுளே - நற்பாலுக்குய்த்தனன்] - ராஜா தன்னுடையானொருத்தனுக்கு ஒருநாட்டைக்கொடுத்தால் அவனுடையஆணையும் ஆஜ்ஞையுமாக அவனுடைய ஸ்வாதந்த்ர்யமே நடக்கும்படி பண்ணிக்கொடுக்குமாபோலே, ஸம்ஸாரி சேதநர்க்குத் தலையான சதுர்முகனுக்குக் கையடைப்பான நாட்டுக்குள்ளே, அவன் ஸ்வாதந்த்ர்யத்தையுந்தவிர்த்து, இவற்றின் கர்மபாரதந்த்ர்யத்தையும் தன்குணத்தாலே பதஞ்செய்து, தன்னைப்பெற்றபோது ஜீவிக்கும்படியாய்ப் பெறாதபோதுஉறாவும்படியான தன்மையையுண்டாக்கினான். ஆனபின்பு, அவனையொழிய வேறேயும் சிலவற்றைக் கற்பரோ? (க)

---

## இரண்டாம் பாட்டு.

நாட்டிற்பிறந்தவர்நாரணற்காளன்றியாவரோ?
நாட்டிற்பிறந்துபடாதனபட்டுமனிசர்க்கா
நாட்டைநலியுமரக்கரைநாடித்தடிந்திட்டு
நாட்டையளித்துய்யச்செய்துநடந்தமைகேட்டுமே.

*ஆ.—(நாட்டிற்பிறந்தவர்.) - தான் திருவவதாரம்பண்ணியருளின திருநகரியிலே வர்த்திக்கிற ஜந்துக்களைத் தன்திருவடியே தாரகபோஷகபோக்யமாகப் பண்ணினானென்னும் இதோரேற்றமோ? மநுஷ்யமாத்ரத்தினுடையதுக்கம் பொறுக்கமாட்டாமைதத்விரோதி நிரஸநம்பண்ணி யருளின மஹாகுணத்தைப் பார்த்தாலென்கிறார்.*

*ராவணவ்யார்த்திகளான தேவர்களாலே யர்த்திதனாய், தனக்கு விஸத்ருஶமான மநுஷ்யலோகத்திலே தத்ஸஜாதீயனாய்வந்து திருவவதாரம்பண்ணியருளி, ஒரு மநுஷ்யமாத்ரம் துக்கப்படிலும் தான்அதிமாத்ரதுக்கிதனாய், தத்துக்கஹேதுபூதரான விராதப்ரப்ருதி ராவணபர்யந்தரான ராக்ஷஸரையெல்லாரையும், பித்ருவசனபரிபாலநவ்யாஜேநவநத்திலே யெழுந்தருளித்தேடி வதித்தருளி, இப்படிலோகத்திலே ரக்ஷித்தருளி, "தஸ்மிந் ஸ்நாத்வாதஞ் - ஸுஹ்ருத்ஷ்வாபேகஷி" என்று ப்ரஹ்மா விண்ணப்பஞ்செய்தபோதே யெழுந்தருளாதே, ஸ்வவிஶ்லேஷத்தாலே விநஷ்டப்ராயமான திருநகரியில் சராசரஜந்துஜாதத்தையெல்லாம், மீண்டெழுந்தருளி யுய்யச்செய்து, பின்னைத் திருநாட்டிலே யெழுந்தருளின இம்மஹாகுணத்தைக்கேட்டும், சேதநராயிருப்பார்,*

---

*லோகாநநுத்தமாந்" இத்யாரண்யகாண்டே ஜடாயுஷம்ப்ரதிராமஃ. (சுஅ-ஙo) பணியுடைத்தன்றிறே-வருத்தத்தையுடைத்தானதன்றிறே. நான்முகனார் நாடென்னாதே, "பெற்றநாடு" என்று விசேஷித்ததுக்கு பாவம்-ராஜா இத்யாதி. கையடைப்பான - கைவசமான. பதம்செய்து - பக்வமாக்கி. நற்பாலயோத்தியில்வாழும் - புற்பாமுதலாப் புல்லெறும்பாதியான - சராசரம் முற்றவும் - நான்முகனார்பெற்றநாட்டுளே - ஒன்றின்றியே - நற்பாலுக்குய்த்தனன், ஆகையாலே கற்பாரிராமபிரானையல்லால் மற்றுங்கற்பரோ இத்யந்வயஃ. "'மற்றுங்கற்பரோ' என்றவிடத்திலே - கோயில்கந்தாடை நாயன், 'திருவடியும் திருப்பாணாழ்வாரும் தொண்டரடிப்பொடியாழ்வாருங் கூடியிருக்கிறதுக்குக் கருத்துத்தெரியுமோ' என்று ஸ்ரீபாதத்தில் முதலிகளைக்கேட்க, 'அடியோங்களுக்குத்தெரிந்ததில்லை' என்ன, ஆனால் 'நாந்யத் ஜாநாதி' என்றும், 'மற்றொன்றினைக்காணா' என்றும், அச்சுவைபெறினும்வேண்டேன்' என்றும் மூவரும் ஏகப்ரக்ருதிகளாகையாலே கூடவெழுந்தருளியிருக்கிறார்கள்' என்றருளிச்செய்தார்" என்று ப்ரஸாதித்தருளுவர். (க)*

"ஸுவாஷாராயணொாஜெவஃ" என்று சொல்லப்படுகிற தசரதாத்மஜனன நாராயண னுக்கு அடிமையாகாதிருக்கும்படி எங்ஙனே? என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், அங்குண்டான ஸகலசேதநரையும் லலது அறியாதபடி தன்குணத்தாலே பந்தித்து அசப்படுத்திவைத்து, அவர்களையிட்டு வைத்துத் தானேஎழுந்தருளாதே அவர்களையும் கூடக்கொண்டு திருநாட்டிலே எழுந்தருளினானென்று, கீழ்ச்சொன்னதிற்காட்டில், அதிகருணத்தை அருளிச்செய்கிறார்:—[நாட்டிற்பிறந்தவர் நாரணற்காளன்றியாவரோ] - ராமனாலே ரக்ஷிதராய் அவன்குணம் பரிமாறும் நாட்டிலேபிறந்தார் ஆஶ்ரிதவத்ஸலனான அவனுக்கல்லது வேறு சிலவர்க்கு அடிமைபுகுவரோ? [நாட்டிற் பிறந்தென்றுதொடங்கி] - மநுஷ்யர்பக்கல் பரிவாலே கர்மவஶ்யரோடொக்க நாட்டிலேபிறந்து அவர்கள் படுமளவன்றிக்கே ஜநகராஜபுத்ரீ விஶ்லேஷாதி து:கங்களையும்பட்டு நிரபராதரான நாட்டைநலிகிற ராவணாதிராக்ஷஸரை இருந்தவிடங்களிலேசென்று கொன்று, மீண்டுவந்து, தன்னுடைய ஸௌந்தர்ய ஶீலாதிகளைக் காட்டி இருந்ததேகுடியாக தரிப்பித்து.

ப.—அநந்தரம், அவதாரகார்யம் சமைந்தவளவிலே எழுந்தருளுகையன்றியே பதினோராயிரமாண்டு எழுந்தருளியிருந்து ரக்ஷித்த ஶீலாதிக்யத்தை யருளிச்செய்கிறார்.

நாட்டில் - தன்வாசியறியாத நாட்டிலே. பிறந்து - (ஆஶ்ரிதர்அர்த்தித்ததுக்காக கர்மவஶ்யர் பிறக்குமாபோலேவந்து) பிறந்து, ("ராஜ்யாஜ் ஜ் ஶ:" இத்யாதியாலே), படாதனபட்டு-அவர்கள் தாங்களும் படாத க்லேஶத்தைப்பட்டு,மனிசர்க்கா-பின்பு பழிசொல்லும்படி க்ருதக்நரான மநுஷ்யர்க்காக, நாட்டை - அவர்கள் வர்த்திக்கிற நாட்டை, நலியும் - நலியக்கடவரான, அரக்கரை - ராக்ஷஸரை, நாடி - இருந்தவிடங்களிலே ஆராய்ந்து சென்று, தடிந்திட்டு - கொன்றிட்டு, (அநந்தரத்தில், "தஶவர்ஷஸஹஸ்ராணி தஶவர்ஷஶதாநிச" என்று பதினோராயிரமாண்டு தன்சீலரூபசரிதங்களை உபகரித்து), நாட்டை, அளித்து - ரக்ஷித்து, உய்யச்செய்து - அபம்ருத்யு புகுராதபடிஉஜ்ஜீவிப்பித்து, நடந்தமை - (பின்பு "ஸஶரீரஸஹாநுக:" என்கிற கணக்கிலே, அவ்வடிவோடே ஸபரிகரனாய்க்கொண்டு) எழுந்தருளின ப்ரகாரத்தை, கேட்டும் - ஸ்ரீராமாயண முகத்தாலே கேட்டிருக்கச்செய்தேயும், நாட்டில் - (அவன் சீலாதிகுணங்கள் நடையாடுகிற) நாட்டிலே,பிறந்தவர்- பிறக்கப்பெற்றவர்கள், நாரணற்கு- ("ஸுவாஷாராயணொாஜெவஃ" என்று)நிருபாதிக ஸம்பந்தத்தையுடைய சக்கரவர்த்தித் திருமகனுக்கு, ("வராவாந லிக்ஷாகஸ்து" என்கிற இளையபெருமாளைப்போலே), ஆள் - அடிமையாவது, அன்றி - ஒழிய, ஆவரோ - வேறொருவர்க்கடிமையாவரோ? ஸத்தா நிபந்தநமன்றியேகுண நிபந்தநமாகவும் தாஸ்யம்பண்ணவேணுமென்று கருத்து. இப்பாட்டுக்களிரண்டிலும், முதற்பாட்டில் - ரக்ஷணத்தையும், இப்பாட்டில் - புருஷார்த்தப்ரதத்வத்தையுஞ் சொல்லுவாருமுளர்.

இ.—இரண்டாம்பாட்டில், தன்னை ஒழியச்செல்லாமையைப் பிறப்பித்து இங்கே அவர்களை இட்டுவைத்துத் தானேஎழுந்தருளுகை யன்றிக்கே, கூடக்கொண்டு போனானென்று, கீழ்ச்சொன்னதிற்காட்டில் அதிகருணத்தை அருளிச்செய்கிறார்,

[நாட்டிற்பிறந்தவர்] - ஒருநாட்டிற் பிறவாதார்இல்லையிறே; பெருமாள் ரக்ஷிக்கிறவெல்லையாய் அவர் குணங்கள் நடையாடுகிற தேசத்திலே பிறந்தவர்கள். ஸ்ரீராமாயணம் அவிழ்த்துக்கட்டாதவிடம் நாடல்ல, கொடுவிளைத்தூறு. "தேவஸம்பந்தா ரக்ஷஸ்ஸு விஷயவாஸிநஃ" என்று வழக்குச்சொல்லிப் பற்றலாம் விஷயம். [நாரணற்காளன்றியாவரோ]-நாராயணனென்கிறது-சக்ரவர்த்தி திருமகனை; "ஸவாந் நாராயணோ தேவஃ" என்றானிறே ப்ரஹ்மா தம்மைவேண்டாதாரையும்விடமாட்டாத வத்ஸலர்க்கு. "ப்ரியவாதிநீ" ; தம்மையுகவாதகைகேயியையும் குறைசொல்லப்பொறாதவர், "ந்ருதகாலேஸஹாவஜ்ஞெ ஸ்நேஹநாப்யாஜ்ஞாபிதீ" என்று இளையபெருமாள் ஸ்ரீஹிக்க, "நதேம்பாமத்யமாதாத மஹித்ரவ்யாகயஸுந । தாமேவேக்ஷ்வாகநாதஸ்ய ஸ்ரதஸ்யகதாம்கூரு" என்றவரிறே. [ஆளன்றியாவரோ] - "மற்றுங்கற்பரோ" - என்றார்; கல்விக்கு ஃபலம் ஆளாகையிறே. இவரையொழியப்புறம்பே சிலர்க்குஆளாகக்கடவரோ? [நாரணற்கு] - தன்னை இல்லைசெய்கிறார்க்கும் அந்தர்யாமியாய் ஸத்தையே நோக்கிக்கொடுக்குமவனென்றுமாம். [நாட்டிற்பிறந்து] - ப்ரஹ்மாதிகள் தேசத்தையும் அருவருத்துவர்த்திக்கிறநித்யஸூரிகளோடேவர்த்திக்கிறவன் அந்தப்ரஹ்மாதிகளும்குத்ஸிக்கும் பூமியிலேபிறந்து, ஸம்ஸாரிகள்தன்னில் அறிவுபிறந்தாரும் காற்கடைக்கொள்ளுகிற தேசத்திலேயிறே பிறந்தது; அகர்மவஶ்யனானதான் கர்மவஶ்யரோடொக்க கர்ப்பவாஸம் பண்ணிப் பிறந்து. [படாதனபட்டு] - ஸம்ஸாரிகள் கர்மத்தாலே படுமளவன்றிறே அவன் அநுக்ரஹத்தாலே பட்டது. ஒருசேதநன் பிறந்தால், இருக்குநாள் தானும் ஸ்த்ரீயும் சேரவிருந்து ஜீவித்துப்போகாநின்றான்; அவ்வளவுமன்றிக்கே, பிராட்டி ஓரிடத்திலும் தான்ஓரிடத்திலும் வர்த்திக்கவேண்டிற்றிறே. "ராஜ்யாஸத்ரம்ஶஃ". இப்படிபடுகிறதுதான் ஆருக்காக? என்னில்,—[மனிசர்க்கா] - தங்களுக்காக அநுக்ரஹத்தாலேபடுகிற இம்மஹாகுணத்தை குணஹாநியாகச் சொல்லும் க்ருதக்நர்க்காக. "ராவணபவநத்திலே இருந்தவளோடேசேரவர்த்தியாநின்றான்" என்றுசொன்னதிறே, இரண்டாம்பிரிவுக்கு முதல். கர்மவஶ்யரைச் சொல்லும் வார்த்தையைச் சொன்னார்களிறே. [நாட்டைநலியுமரக்கரை]- ஒருவன் விரோதித்தால், அத்தைப் பொறுக்குந்தனையளவில்லாதவன் அவனை அழியச்செய்ய ப்ராப்தம்; அங்ஙனன்றிக்கே, இருந்ததே குடியாக உண்டு உடுத்துத் திரிகிறது ஹேதுவாக நலிகிற ராக்ஷஸரை. [நாடித்தடிந்திட்டு] - அவர்கள் வந்து மேலிட்டாலன்றிக்கே, அவர்கள் இருந்தவிடங்களிலேசென்று அவர்களை அழியச்செய்து. ஸர்வஸாதாரணன் நலிகிறது, நிர்நிபந்தநமாக ப்ரஜைகளை நலிகையாலேயிறே. [நாட்டையளித்து] - போந்தகாரியம் தலைக்கட்டிற்றாகில், "இனிப்போவோம்" என்னாதே, மீண்டும் தம்முடைய ஸௌந்தர்யாதிகளாலே இருந்ததே குடியாக வாழ்வித்து. தம்வரவு பார்த்திருக்கிற ஸ்ரீபரதாழ்வானையும், அபிஷேகமஹோத்ஸவங்கள் காண ஆசைப்பட்ட தாய்மாரையும், பின்தொடர வழிமாற்றிப்போந்நாட்டையும், "கடல் ஞாலத்தளிமிக்கான்" என்கிறபடியே நெடுநாள் ஆஶ்வஸிப்பித்து. [உய்யச்செய்து] - தம்மைப்பெறுகைக்கு அவர்கள் பக்கல் ஒருகைம்முதலின்றிக்கே அஸத்ஸமமாயிருக்கிறவர்களை, "ஸந்தமேநம்" என்னும்படிபண்ணி. [நடந்தமைகேட்டும்] - "ஸ்ரீமத்ராமாவிஸ்வேந்ராணநந்தாஃ" என்றும், "விபேஷதேஜஸாஸ்ரீஸஹாநமஃ" என்றும், "அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றி" என்றும் சொல்

*னுகிற ப்ரயாணவ்ருத்தாந்தத்தைக் கேட்டும், நாட்டிற்பிறந்தவர் நாரணற்காளன்றி யாவரோ ?*

**ஈடு.**—இரண்டாம்பாட்டு. " 'மேல் சொல்லப்புகுகிற குணங்களை ப்ரக்ருத்ய கீழிற்பாட்டிற்சொன்ன குணம் குணஹாநி' என்னும்படி மேலிற்பாட்டுக்கள் குணுதிக்யஞ்சொல்லுகிறது" என்று அருளிச்செய்வர்.

[நாட்டிற்பிறந்தவர்] - இப்பாட்டில், திருவயோத்யையிலுள்ளார் ராமகுணைக பாரகராகப் பண்ணினவளவேயோ, நாட்டிலுள்ளாருடையவிரோதிகளைப்போக்கி ரக்ஷிக்கும்படிக்கு ? என்கிறார். [நாட்டிற்பிறந்தவர்] - நாட்டிற்பிறவாதாரில்லையிறே. ராம குணங்கள் நடையாடுமிடத்திலேபிறந்தவர்களென்கிறது. பெருமாளுடைய எல்லையில்லாத இடமில்லையிறே. " ***ஐக்ஷ்வாகூணாமியம்பூமிஸ்ஸஶைலவநகாநநா*** " (இக்ஷ்வாகூணாமியம்பூமிஸ்ஸஶைலவநகாநநா) " ***விதிதஸ்ஸஹிதர்மஜ்ஞஃ*** " (விதிதஸ் ஸஹிதர்மஜ்ஞஃ)-ராவணு! பெருமாளுடைய குணங்கள் கேட்டறியாயோ ? என்றாளிறே. அக்குணங்கள் நடையாடாததோரிடம் உண்டாகிலிறே, அவ்விடம் இவரேல்லையன்றிக்கேயிருப்பது ? நாட்டில் பிறக்கையாவது - அவருடைய எல்லைக்குள்ளே பிறந்து, அவர்தோள் நிழலிலே ஜீவிக்கை. [நாரணற்காளன்றியாவரோ] - பெருமாளுக்கு ஆளன்றியாவரோ என்றபடி. ப்ரஹ்மாதிகளும் "***பவாந்நாராயணோதேவஃ***" (பவாந்நாராயணோ தேவஃ) என்றார்களிறே. "ஒருவன்சோற்றையுண்டவர்கள் அவனையொழிய வேறொருவற்

*இரண்டாம்பாட்டு.—நாட்டில் இத்யாதி. இனி மேலுள்ளபாட்டுக்களிற் சொல்லுகிற குணங்களெல்லாம் கீழ்ச்சொன்ன குணங்களைப் பற்ற அதிகமென்னுமிடம் தோன்றவருளிச்செய்கிறார் -* மேற்சோல்லப்புகுகிற *இத்யாதி. ப்ரக்ருத்ய - அபேக்ஷித்தென்னுதல்.*

*முதற்பாட்டைப்பற்ற இரண்டாம்பாட்டில் அதிகமானகுணம் இன்னதென்கிறார் -* இப்பாட்டில் *இத்யாதி. 'ரக்ஷிக்கும்படிக்கு' என்றவநந்தரம், 'அதிசயமில்லையோ ? என்கிறார்' என்று ட்டிக்கொள்வது.* நாட்டிற்பிறவாதாரில்லையிறே *யென்றது-சேதநராகில் ஒருகுறிச்சியில் பிறவாதா என்றபடி. இவ்வாக்யத்துக்கு அநந்தரம், ஆனுலிதுக்கர்த்தமேதென்னில் என்றத்யாஹரித் காள்வது. ராம - ரா நபா; 'ராமகுணங்கள் நடைய டம்' என்னவேணுமோ ? பெருமாளுடைய ஸீமையிலேபிறந்தவர்க ளென்னவொண்ணுதோ? என்ன; அதுக் கந்யதாஸித்தி யருளிச்செய்கிறார்-பெருமாளுடைய இத்யாதிவாக்யத்வயத்தாலே. "ஐக்ஷ்வாகூணாமியம் ஸஶைலவநகாநநா । ம்ருகபக்ஷிமநுஷ்யாணாம் நிக்ரஹ ப்ரக்ரஹ ஸாவபி" இதி கிஷ்கிந்தாகாண்டே வாலிநம் ப்ரதி ராமஃ. "ராமகுணங்கள் நடையாடுமிடத்திலே பிறந்தவர்கள்" என்றதுக்கும் அந்யதாஸித்தியுண்டென்கிறார்-விதித இத்யாதி. அதாவது - ஶத்ருகோஷ்டியிலும் குணங்கள்நடையாடுகையாலே இவ்வர்த்தமுங்கூடாதென்றபடி. கீழ்ச்சொன்ன அந்யதாஸித்தியிரண்டையும் சேரப்பிடித்தருளிச்செய்கிறார் - அக்குணங்கள் இத்யாதி. ஆனுல் ஸித்தாந்தார்த்தமேதென்ன - நாட்டிற்பிறக்கையாவது இத்யாதி. "விதிதஸ்ஸஹி தர்மஜ்ஞஶ்ஶரணாகதவத்ஸலஃ । தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி" இதி ஸுந்தரகாண்டே ராவணம்ப்ரதிஸீதா. "நாரணன்" என்றால் பெருமாளைக்காட்டுமோ ? என்ன-ப்ரஹ்மாதிகளும் இத்யாதி. "பவாந்நாராயணோ தேவஶ்ஶ்ரீமாம்ஶ்சக்ராயுதோ விபுஃ । ஏகஶ்ருங்கோ வராஹஸ்த்வம் பூதபவ்யஸபத்நஜித்" இதி ராவணவதாநந்தரே ராமம்ப்ரதி ப்ரஹ்மா(கஉ0-கரு).* நாட்டிற்பிறந்தால் நாரணற்

குக் காரியஞ்செய்வர்களோ?'' என்னுமாபோலே. [நாரணற்கு] - வரையாதே எல்லா ரோடும் பொருந்துகையும், ஆஶ்ரிதர்க்காகத் தன்னை ஓக்கி வைக்கையும், அவர்களுக் காகத் தன்மார்பிலே அம்பேற்கையும், அவர்கள் விரோதிகளைப்போக்குகையும், ஆஶ்ரித வத்ஸலனு யிருக்கையும், அவர்கள்தோஷநிர்ஶநம்பண்ணிவிட்டுப்போகமாட்டாமையும், இவையெல்லாவற்ருலும் பெருமானை-''நாராயணன்''என்னத் தட்டில்லையிறே. [ஆளன்றி யாவரோ] - கீழ்ப்பாட்டிலே—''கற்பரோ''என்றது; இங்கே, [ஆளன்றியாவரோ] - என்றது; கல்வியினுடையஃபலம் ஆளாகை என்கிறது. [பிறந்தவர்-ஆளன்றியாவரோ] - ''ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய'' (ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய) என்னுமாபோலே; ஜநித்தவர்கள் ஜந்மஃபலத்தை இழப்பரோ?என்றபடி. வகுத்ததுறையில் பாரதந்த்ர்ய மாகையாலேவாசி யறிந்தஇவர்களுக்குஉத்தேஶ்யமாய்த்தோற்றுமிறே; வகாததுறைகளில்பண்ணினவாஸநை யாலே''இதுபுருஷார்த்தமோ?''என்றுதோற்றுகிறது[நாட்டிற்பிறந்து] - அஸ்ப்ருஷ்டஸம்ஸார ஶந்தனுயிருக்கிறவன், கர்மவஶ்யருங்கூட அருவருக்கும் தேசத்திலே பிறந்து. 'ஸஹி தேவை:''(ஸஹிதேவை:)இத்யாதி''ஸ: - ஜஜ்ஞே-ஹி''(ஸ: - ஜஜ்ஞே-ஹி) -''கர்மநிபந் தநமாக ஜந்மமில்லை'' என்று ப்ரமாணப்ரஸித்தனுனவன்கிடீர்கர்மவஶ்யர்க்கும் இவ்வரு காய்வந்து பிறந்தான் என்றபடி. இப்படி பிறக்கைக்கடியேன்? என்னில்,—''அர்த்தித:'' (அர்த்தித:) என்கிறது ; அவர்களிரப்புக்காக என்றபடி. இரப்புத்தான் இச்சையை யும்பிறப்பிக்குமாகாதே ! ''இச்சாக்ருஹீத'' (இச்சாக்ருஹீத) இறே. ''தேவை:'' (தேவை:) - தங்கள் கார்யத்துக்காக இரந்து பிறக்கப்பண்ணிக் காரியந்தலைக்கட்டின வாறே எதிரிட்டு ''ஈஶ்வரோஹம்'' (ஈஶ்வரோஹம்) என்றிருப்பார்க்காகக் கிடீர் !

---

காளாகவேணுமோ? என்ன - ஒருவன்சோற்றை இத்யாதி. இவர் ''நாரணன்'' என்கைக்கு-கீழேப்ரமா ணங்காட்டி, உபபத்திகாட்டுகிருர் - வரையாதே இத்யாதி. வரையாதே - தாரதம்யம் பாராதே. ஓக்கி வைக்கை - ஆக்கிவைக்கை. கீழே - ''கற்பரோ'' என்றுசொல்லி, இங்கே - ''ஆளன்றியாவரோ'' என்றத்தால் ஃபலித்ததோரர்த்தவிசேஷம் - கீழ்ப்பாட்டிலே இத்யாதி. ''பிறந்தவர் - ஆளன்றியா வரோ'' என்றத்தால் 'ஃபலித்தவர்த்தம் - ஸ்ருஷ்டஸ்த்வம் இத்யாதி. ''ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே'' இத்யாதி லக்ஷ்மணம்ப்ரதி ஸுமித்ரா. ''ஸர்வம்பரவஶம்து:கம்'' என்று - பாரதந்த்ர்யம் து:கரூபமாயிருக்க, இத்தைக் கல்விக்குஃபலமாகச் சொல்லலாமோ? என்ன - வகுத்ததுறை இத்யாதி. இவர்களுக்கு - ஆழ்வார்களுக்கு. நமக்கப்படி தோற்றவில்லையே என்ன - வகாத இத்யாதி. வகாததுறை - அப்ராப்தவிஷயம். இங்கேவந்து பிறந்தது குணமாகைக்கு உறுப்பாக, அவனுடையமேன்மையையும் ஸம்ஸாரத்தினுடைய தண்மையையும் அருளிச்செய்கிருர் - அஸ்ப்ருஷ்ட இத்யாதி. அப்படிபிறந்தானே? என்ன, ப்ரமாணம் - ஸஹ இத்யாதி. 'ஸஹிதேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி: । அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ்ஸநாதந:'' இத்யயோத்யாகாண்டே வால்மீகி:.(க-எ) ஸ: - ப்ரஸித்திபரமான தச் சப்தத் துக்குஉத்தரார்த்தத்திலேநோக்கென்கைக்காக,''ஸஹி-ஜஜ்ஞே'' என்றந்வயித்து, இரண்டுக்கும் அர்த் தம்-கர்மநிபந்தநமான இத்யாதி.''க்ருதஶோபயா-ஸம்ஸவார்தி'' என்னுநிற்க,''இரப்பாலேபிறந்தான்'' என்கிறதென்? என்ன - இரப்புத்தான் இத்யாதி. ''இச்சையாலேயவதரிக்கும்'' என்னுமதுக்கு ப்ர மாணம் - இச்சாக்ருஹீதவிறே என்று. ''இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:'' இத்யாதி. இரக் கிறவர்கள் தான் திருவடி திருவநந்தாழ்வானல்ல, தர்மாநிகளாய் ஸ்வகார்யபரரானவர்கள்கிடீர்என் கிருர் - தங்கள் கார்யத்துக்கு இத்யாதி. ''ஸ்வகார்யபரர்'' என்னுமதுக்குப்ரமாணம்- நீணகர் இத்யாதி.

''நீணகர்நீளெரிவைத்தருளாய்'' என்பர்கள் - லங்கையைச் சுட்டுத்தரவேணுமென்பார்கள். ''உதீர்ணஸ்யராவணஸ்ய'' (உதீர்ணஸ்யராவணஸ்ய)-பயாவஹனுன பையல்; தானே வரபலத்தாலே யழியச் செய்யவேண்டும்படி விஞ்சினபடி. ''வதார்த்திபி:'' (வதார்த்திபி:) - தாங்கள் பட்ட நலிவாலே திருவுள்ளத்துக்குப் பொருந்தாதவற்றையும் விண்ணப்பஞ் செய்தார்கள். '' ஒருவனை யழியச்செய்ய ஒருநாடாகப்பிழைக்குமாகி லாகாதோ ?'' என்றுஅழியச்செய்தானத்தனை. ''அர்த்தித:'' (அர்த்தித:) - * தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளுந்தனையும் திருவுள்ளத்திற்பட்டுக்கிடந்ததிதுவே. ''அர்த்தித:'' (அர்த்தித:)-உபாஸித்தவர்களல்ல. ''மாநுஷேலோகே''(மாநுஷேலோகே) - ஆக்கனுனதேவர்கள், மநுஷ்யகந்தத்துக்கு ஊர்ஹபண்ணி பூமியிலிழிய அருவருத்து, ஒன்றரை யோஜனைக்கவ்வருகே நின்று ஹவிஸ்ஸுக்கோள்வர்கள்; அவர்கள் மநுஷ்யஸ்த்தாநத் திலேயாம்படியான தத்த்வங்கிட ரிங்கேவந்து பிறந்ததென்றபடி. * மனிசர்க்குத் தேவர் போலத் தேவர்க்குந் தேவனிறே. ''ஜஜ்ஞே'' (ஜஜ்ஞே) - ஆவிர்ப்பூதமானமாத்ரமன்று; நாட்டார் பத்துமாஸம் கர்ப்பவாஸமநுபவிக்கில் பன்னிரண்டுமோஸமிறே இவன்அநுபவித்தது; ''ததஸ்சத்வாதசேமாஸே'' (ததஸ்சத்வாதசேமாஸே) என்றும், ''ஜாதோஹம்யத்தவோதராத்'' (ஜாதோஹம்யத்தவோதராத்) என்றும்; ''விஷ்ணுஸ்ஸநாதந:'' (விஷ்ணுஸ்ஸநாதந:); நாட்டிற்பிறந்துஇத்யாதி–,அகர்மவஶ்யனுனதான்கர்மவஶ்யரோடே ஸஜாதீயனாய் நாட்டிலே வந்துபிறந்து, அவர்கள்படும் து:கத்தளவன்றிக்கே, கடலுக்கு அக்கரையிலே உயிரும் இக்கரையிலே உடலுமாம்படியான ஜநகராஜபுத்ரீ விஶ்லேஷமென்ன, பெரியவுடையார் நிதநமென்ன, ஏவமாதி து:கங்களையும்பட்டு, அதுக்குமேலே, செய்தநன்றியறியாத மனிசர்க்காக. நிரபராதமான நாட்டை நலிகிற ராவணுதிகண்டகரை, ''பொருந்தார்கைவேல்நுதிபோல் பரற்பாயமெல்லடிகள் குருதிசோர - விரும்பாத கான்விரும்பி,'' ''எவ்வாறுநடந்தனை எம்மிராமாவோ'' என்கிறபடியே, அவர்களிருந்த விடங்களிலே தேடிச்சென்று கொன்று. லங்காத்வாரத்திலே விஜயஸ்ரீபரிவ்ருதராய்க் கொண்டு எழுந்தருளிநிற்க, அவ்வளவிலே ப்ரஹ்மாதிதேவர்கள் வந்து, ''தஜிஷம்நஃக்ரூ

---

பாசுரத்துக்கர்த்தம்-லங்கையை இத்யாதி.ராவணசப்தார்த்தம் - ஐயாவஹனுன என்று. ''ஸஹஸ்ரஶீர்ஷாபுருஷ: ஸஹஸ்ராக்ஷ:'' என்றிருக்கிறவனை இதுக்காக அர்த்திக்கலாமோ ? என்ன - தாங்கள் பட்ட இத்யாதி. தன்திருவுள்ளத்துக்குப் பொருந்தாததைச் செய்வானென் ? என்ன - ஒருவனை இத்யாதி. ''அர்த்தித:'' என்ற பூதார்த்ததாத்பர்யம் - தன்னுடைச்சோதி இத்யாதி. அதாவது - ''யதீக்ஷ்யமேஹ:'' இத்யாதிப்படியே பிற்பட்டோமென்று புண்படுகிறுனென்றபடி. ஊவாந்தரம் உபாசித்தவர்களல்ல என்று. ''விஷ்ணு:'' என்று - அவன் பெருமையையும், பிறந்த ஸ்த்தலத்தின் கொடுமையையும் அருளிச்செய்கிறுர் - ஆக்கனுன் இத்யாதிவாக்யத்வயத்தாலே.ஆக்கனுன - ஸ்ருஜ்யரான. ''அவர்கள் மநுஷ்யஸ்த்தாநத்திலே யாம்படியான தத்த்வம்'' என்றதுக்கு ப்ரமாணம்-மனிசர்க்கு இத்யாதி. ''ஜஜ்ஞே'' என்றதுக்குஹாவம் - ஆவிர்ப்பூதம் இத்யாதி. பிறந்ததுக்கு ப்ரமாணுந்தரம் - ஜாதோஹம் இத்யாதி. ஸ்ஜாதோஹம்யஸ்யாவர்ஷேபி ... ஸவாஸம்ஜ்ஞிதம் ஜாதோஹம்யத்தவோதராத்'' இதி பஞ்சமேம்ஶே த்ருதீயே (கச).

''நாட்டிற்பிறந்து'' என்று தொடங்கி, ''நாட்டையளித்து'' என்னுமளவும் ஸப்தார்த்தமருளிச்செய்வதாக - நாட்டிற்பிறந்து இத்யாதி என்கிறுர். ''பிறந்து'' என்றதுக்குஹாவம் - அகர்மவஶ்யனுன இத்யாதி. ''மனிசர்க்கா - தடிந்திட்டு'' என்றந்வயிப்பது. தடிந்திட்டு - கொன்று. 'அளிமிக்காணென்னும்

𑌤𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 - 𑌪𑍍𑌰𑌹𑍃𑌷𑍍𑌟𑍋 𑌦𑌿𑌵𑌮𑌾𑌕𑍍𑌰𑌮'' (ததிதம்நஃக்ருதம்கார்யம்-ப்ரஹ்ருஷ்டோ திவமாக்ரம) என்று''நாங்கள்அர்த்தித்தவையடைய எங்கள்அளவுபாராதேதேவர்செய்தருளிற்று; இனி, * தன்னுடைச்சோதியேற எழுந்தருளவமையும்'' என்ன, அவ்வளவிலே ருத்ரன், ''நாடடைய தேவரீருடைய விஶ்லேஷத்தாலே விநஷ்டப்ராயமாய்க் கிடக்கிறது; திருத்தாய்மாரையும் திருத்தம்பிமாரையும் திருப்படைவீட்டிலுள்ள ஜநங்களையும், மீண்டுபுக்கு சிலநாளெழுந்தருளியிருந்து ஈரக்கையாலே தடவி ரக்ஷித்தெழுந்தருள வேணும்'' என்ன; ''கடல்ஞாலத்தளிமிக்கான்'' என்னும்படியே பதினோராயிரமாண்டு எழுந்தருளியிருந்து ரக்ஷித்தபடியைச் சொல்லுகிறது ''நாட்டையளித்து''என்று. இதுக்காகவிறே, முக்கண்ணனை - ''𑌷𑌡𑌰𑍍𑌧𑌨𑌯𑌨𑌶𑍍𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍'' (ஷடர்த்தநயநஶ்ஶ்ரீமாந்) என்றது; இல்லையாகில், பிக்ஷுகனை ''ஶ்ரீமாந்'' என்ன விரகில்லையிறே. [உய்யச்செய்து] - நெடுநாளிருந்து தன்னுலல்லது செல்லாதபடி பண்ணி, இட்டுவைத்துப்போகாதே கூடக் கொடுபோய் உஜ்ஜீவிப்பித்தபடியைச் சொல்லுகிறது. [நடந்தமை கேட்டுமே] - ''𑌤𑌿𑌰𑍍𑌯𑌗𑍍𑌯𑍋𑌨𑌿𑌗𑌤𑌾𑌶𑍍𑌚𑌾𑌪𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌰𑌾𑌮𑌮𑌨𑍁𑌵𑍍𑌰𑌤𑌾𑌃,'' (திர்யக்யோநிகதாஶ்சாபிஸர்வே ராமமநுவ்ரதா:) ''𑌵𑌿𑌵𑍇𑌶 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌂 𑌤𑍇𑌜𑌸𑍍 𑌸𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌸𑌹𑌾𑌨𑍁𑌗𑌃'' (விவேஶ வைஷ்ணவம்தேஜஸ் ஸஶரீரஸ்ஸஹாநுக:) என்கிறபடியே தன்னுடனேகூடக் கொடுபோனபடியைச் சொல்லுகிறது. ''இன்னவிடத்திலே கொடுபோய்வைத்தான்'' என்று ஸம்ஶயிக்க வேண்டாதபடி யருளிச்செய்து வைத்தாரிறே ஆழ்வார்; ''அன்றுசராசரங்

---

படியே' தயாளுவாகையாலே என்று கூட்டுவது. இதுக்காகவிறே என்றது - ''எழுந்தருளியிரும்'' என்று சொன்னதுக்காகவிறே என்றபடி. ''ஶ்ரீமாந்'' என்றதுக்கு - இது ஹாவமாகவேணுமோ? என்ன - இல்லையாகில் இத்யாதி. ''[illegible]'' இத்யாதி, ''[illegible]'' இத்யந்தம் பாலகாண்டே அஷ்டாதஶே. பெருமாள் திருமொழி,''பொருந்தாரித்யாதி''- சத்ருக்கள் கையில் வேல்முனையிட்டடர்ந்தாற்போலே சுக்கான்பரல்களானவை பாய. பரல்களிலே மிதிக்கையாலே, மெல்லடிக்கள் குருதிசோர - ம்ருதுவானதிருவடிகள் ரக்தங்களைப் புறப்படவிட. 'விரும்பாதகான்விரும்பி' - சுகுமாரரல்லாதவரும் விரும்பாதகாட்டை, ''நான் போகச்சொன்னேன்'' என்னுமத்தாலே விரும்பி. எவ்வாறுநடந்தனே?- எப்படி நடந்துபோனீர்? என்றபடி. இந்தப்பாசுரம் ''வெவ்வாயேன்'' என்கிறபாட்டிலே. (ததிதம்இதி):- ''𑌤𑌦𑌿𑌦𑌂 𑌨𑌃 𑌕𑍃𑌤𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌤𑍍𑌵𑌯𑌾 𑌧𑌰𑍍𑌮𑌭𑍃𑌤𑌾𑌂 𑌵𑌰 । 𑌨𑌿𑌹𑌤𑍋 𑌰𑌾𑌵𑌣𑍋 𑌰𑌾𑌜𑌨𑍍 𑌪𑍍𑌰𑌹𑍃𑌷𑍍𑌟𑍋 𑌦𑌿𑌵𑌮𑌾𑌕𑍍𑌰𑌮'' இதி ப்ராஹ்மா. ''[illegible] 𑌵𑍍𑌯𑌾𑌜𑌹𑌾𑌰 [illegible] । [illegible]'' இத்யாரப்ய, ''[illegible]'' என்னுமளவும் கடாக்ஷித்து - அவ்வளவிலே ருத்ரன் இத்யாதி, 'எழுந்தருளவேணுமென்ன. என்னுமளவும். ''𑌷𑌡𑌰𑍍𑌧𑌨𑌯𑌨𑌶𑍍𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 𑌮𑌹𑌾𑌵𑍈𑌶𑍍𑌰𑌵𑌣𑌾𑌨𑍁𑌜𑌃'' இதி ராவண வதாநந்தரே ''நடந்தமை'' என்றதுக்கு ஹாவம் - திர்யக் இத்யாதி. ''[illegible] । 𑌤𑌿𑌰𑍍𑌯𑌗𑍍𑌯𑍋𑌨𑌿𑌗𑌤𑌾𑌶𑍍𑌚𑌾𑌪𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌰𑌾𑌮𑌮𑌨𑍁𑌵𑍍𑌰𑌤𑌾𑌃, ''𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌵𑌚𑌶𑍍𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾 𑌵𑌿𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌯 𑌮𑌹𑌾𑌮𑌤𑌿𑌃 । 𑌵𑌿𑌵𑍇𑌶 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌂 𑌤𑍇𑌜𑌸𑍍 𑌸𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌸𑌹𑌾𑌨𑍁𑌗𑌃'' இத்யுத்தர ஶ்ரீராமாயணே. ராமாயணுதிகளிலே ''ப்ரஹ்மலோகத்தில் ஒருப்ரதேசத்திலே வைத்தான்'' என்றிருக்கிறதே? என்ன - இன்னவிடத்திலே இத்யாதி. 'அன்று சராசரங்களையித்

களை வைகுந்தத்தேற்றி'' என்று பரமபதத்தே கொடுபோனமையை. [நடந்தமைகேட்டும்] - இந்த ப்ரயாணவ்ருத்தாந்தத்தைக் கேட்டும். அதாவது - பசித்தார் இளைத்தாரைப் பார்த்துக் கொடுபோகையிறே. * புண்டரீகாக்ஷநாமஸங்கீர்த்தநாம்ருதமிறே பாதேயம். ''ஜிதந்தே புண்டரீகாக்ஷ'' (ஜிதந்தேபுண்டரீகாக்ஷ) என்று கொடுபோலேகாணும் போவது. *''ராம: கமலபத்ராக்ஷ:'' (ராம:கமலபத்ராட்ச:) இறே. (இப்படி யுஜ்ஜீவிப்பித்து நடந்தமைகேட்டும்- நாரணற்காளன்றியாவரோ ?கீழ்ப்பாட்டில்-ஶப்தாதிவிஷய ப்ரவணராய், '''ஸர்வேஶ்வரன்' என்றுஒரு தத்த்வமுண்டு'' என்று கேட்டார்வாய்க்கேட்டிருக்கிறவர்களை, தான்வந்துஅவதரித்துத் தன் வடிவழகாலும் குணங்களாலும் வசீகரித்துத் தன்னையல்லதறியாதபடி பண்ணினனென்று சொல்லிற்று; இப்பாட்டில் - இது ஒரேற்றமோ? தன்னலல்லது செல்லாமையைப் பண்ணிப் போகட்டுப்போகையாகிறது படுகோலைக்காரரோபாதியிறே ; அங்ஙன்செய்யாதே தன்னோடேகூடக் கொடுபோய் ரக்ஷித்த குணத்துக்கு என்கிறார். (உ)

## மூன்றாம் பாட்டு.

கேட்பார்கள்கேசவன்கீர்த்தியல்லால்மற்றுங்கேட்பரோ
கேட்பார்செவிசுடுகீழ்மைவசவுகளேவையும்
சேட்பாற்பழம்பகைவன்சிசுபாலன்திருவடி
தாட்பாலடைந்ததன்மையறிவாரையறிந்துமே.

*ஆ.—(கேட்பார்கள்.) - மநுஷ்யமாத்ர து:கநிரஸநம் பண்ணியருளும் இது தான் ஒருகுணமோ, ப்ரதிகூலனை சிசுபாலனுக்குங்கூடத் தன்திருவடிகளைக்கொடுத்த இம்மஹாகுணத்தைப்பார்த்தால்? என்கிறார்.*

*ஸ்வபரிவாத ஶ்ரவணகஹோரமான ப்ரதிகூலருடைய செவிகளும் வேவ்படி பருஷபாஷணபரனாய் ப்ரதிஹூவம் இம்மஹாபராதயுக்தனாயிருந்த சிசுபாலனுக்குங்கூடத்*

---

*யாதி' - பெருமாள்திருமொழி ; ஸ்பஷ்டோர்த்த:. ஸஹஸ்ரநாமபாஷ்யத்திலே ''ஜிதந்தே புண்டரீகாக்ஷ நமஸ்தே விஶ்வபாவந'' என்றவிடத்திலே, ''வஶிஷ்ட ஹூ:'' என்றதுக்கு - ''சத்ருவத்யாதிவஶிஷ்ட ஹூ: சஶுபதிவஶிஷ்ட ஹூ:; ஹஸதேவ்ஸ்வர்யநந்தஶக்திரவாப்தஸமஸ்தகாமோ வர்த்ததே ஸர்வதா வஶிப்ரவஶேத்யர்த:'' என்றாரிறே பட்டர். ''நடந்தமை'' - நடந்த ப்ரகாரமென்றபடி. நடந்தப்ரகாரமேதென்ன - அதாவது இத்யாதி. 'பசித்தாரிளைத்தாரை' என்று முழுச்சொல்லு; அத்யந்தம் ஆர்த்தரையென்றபடி. அவன்பார்வை யாரகமோ ? என்ன, ப்ரமாணம் - புண்டரீகாக்ஷ இத்யாதி. ''ஶ்ருதாஶ்ருதிஸுதநோ ஸூதம் கலாநுவிர்த வாயுஸம்பூர்ணம் புண்டரீகாக்ஷநாமஸங்கீர்த்தநாம்ருதம்'', ஸலிதம் - ஜிதந்த இத்யாதி. பெருமாள் புண்டரீகாக்ஷரோ ? என்ன - ராம இத்யாதி. ''ராம: கமலபத்ராக்ஷ: ஸர்வஸத்த்வமநோஹர: । ரூபதாக்ஷிண்யஸம்பந்ந: ப்ரஸூதோ ஜநகாத்மஜே'' இதி ஸுந்தரகாண்டே ஸீதாம் ப்ரதி ஹநுமான் (ரூரு அ). இப்பட்டுக்கு அவதாரிகையிற் சொன்ன தாத்பர்யமொழிய தாத்பர்யாந்தரம் - கீழ்ப்பாட்டில் இத்யாதி. 'நாட்டிற்பிறந்தவர் - நாட்டிற்பிறந்து' என்று தொடங்கி, 'கேட்டும்-நாரணற்காளன்றியாவரோ? இத்யந்வய:. (உ)*

தன்திருவடிகளைக் கொடுத்தருளின இஸ்ஸ்வபாவத்தை யறிவாரையறிந்துவைத்தும், ஸம்ஸாரமே மதுரமாயிருப்பதொன்றைக் கேட்கவேண்டி யிருப்பார், அவர்கள்பக்கலிலே சென்று இக்குணத்தையன்றி மற்றுமொன்றைக் கேட்பரோ ? என்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், தன்னையல்லது அறியாதிருக்கிறவர்களைக் கூடக் கொண்டுபோனான் என்னுமிதிற்காட்டில் அதிககுணமான ஶிஶுபால விஷயீகாரத்தை அநுஸந்திக்கிறார். [கேசவன்] - கேஶிஹந்தா. [கேட்பாரென்று மேலுக்கு] - 'இவனை வையக்கேட்கவல்லோமே'' என்றிருக்கும் அவர்களுக்கும் பொறுக்கவொண்ணாதபடியான தண்ணிய வசவுகளைவையும் வழிப்பகைவனான ஶிஶுபாலன் ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளிலே சேர்ந்தபடி அறிவாரை அறிந்துவைத்தும்.

ப.—அநந்தரம், அநிஷ்டத்தை நிரஸித்து ரக்ஷித்தவளவன்றியே, அநிஷ்டகாரியான சிசுபாலனுக்கு மோக்ஷத்தைக் கொடுத்த குணாதிக்யத்தை யருளிச்செய்கிறார்.

கேட்பார்செவி-''ஐகவத்குண ஹாநி கேட்கவேணும்'' என்று அபிஸந்திபண்ணியிருக்குமவர்கள் செவிக்கு, சுடு - அக்நிகல்பமாம்படி சுடக்கடவதாய், கீழ்மை - நிகர்ஷாபாதகமான, வசவுகளே - பருஷோக்திகளையே சொல்லி, வையும் - வையுமவனாய், (ஹிரண்யராவணஜந்மங்களையே தொடங்கி), சேட்பால் - தூரகாலஸ்த்தனாய்க்கொண்டு, பழம்பகைவன் - பழைபதாகப் பகைவனாய்ப்போருகிற, சிசுபாலன் - சிசுபாலனானவன், திருவடி - நிருபாதிக ஸ்வாமியான க்ருஷ்ணனுடைய, தாட்பால் - திருவடிகளிடத்திலே, அடைந்த - ஸாயுஜ்யத்தை ப்ராபித்த, தன்மை - அஸாதாரணஸ்வபாவத்தை, அறிவாரை - அறிவாரான ஜ்ஞாநாதிகரை, அறிந்தும் - அறிந்துவைத்திருக்கச்செய்தேயும், கேட்பார்கள் - (தங்களுக்குஜ்ஜீவநப்ரகாரத்தைக்) கேட்கவேண்டியிருக்குமவர்கள், (அவ்வறிவுடையார் பக்கலிலே), கேசவன் - கேசிஹந்தாவான க்ருஷ்ணனுடைய, கீர்த்தி - *(ப்ரதிகூலவேஶ்யாநுகூலாவுக்கு மோக்ஷப்ரதையான மௌக்த்ய)கீர்த்தியை, அல்லால் - ஒழிய, மற்றும் - விலக்காதார்க்கு மோக்ஷங்கொடுத்த வ்யக்த்யந்தரத்தை, கேட்பரோ-?

இ.—மூன்றாம்பாட்டில், கீழ்ச்சொன்னதிற்காட்டில் அதிககுணமான ஶிஶுபால விஷயீகாரத்தை அநுஸந்திக்கிறார். [கேட்பார்கள் இத்யாதி] - செவி உடையார், கேஶிஹந்தாவினுடைய கீர்த்தியை ஒழிய வேறொன்றைக் கேட்பரோ ப்ரியஹிதங்களுக்கு ப்ரகாஶகமாயிருப்பதொரு ஶப்தத்தைக் கேட்கவேணும் என்றிருப்பார்? கற்கையாகிறது - ஶாஸ்த்ரத்திலே அர்த்தத்தை வ்யுத்பத்திபண்ணுகை; கேட்கையாகிறது - அறிவுடையார் பக்கலிலே ப்ரியஹிதங்களைக் கேட்டறுதியிடுகை. [மற்றும் கேட்பரோ] - ராமாவதாரத்தில் இழிவார்க்கு அவர்பக்கல் உத்தேஶ்யபுத்தியைக்கொண்டு இழியவேணும்; ப்ராதிகூல்யமே பரிகரமாகத் தன்னைக் கொடுத்த அவதாரமிறே இது. வெளிச்சிறந்த காலத்திலேயிறே ராமாவதாரம்; கலிகாலம் ப்ரத்யாஸந்நமாயிருக்கிறகாலத்திலேயிறே கிருஷ்ணாவதாரம். ப்ராதிகூல்யத்தளவேதென்ன, [கேட்பார்செவி இத்யாதி]- கேட்பாராகிறார் - ஐகவந்நிந்தை பண்ணுவார்க்கு ஜீவநம்வைத்துக் கேட்குமவர்கள். அவர்கள் செவிக்குங்கூடக் கேட்கவொண்ணாதபடியான தண்ணிய வசவுகளைவையும். அவயாரணத்தாலே - ப்ராமாதிகமாகவும் ஓர் ஆநுகூல்யம் கலவாதொழிகை.

இப்படி வைகைக்கு அடியென்? என்னில், [பழம்பகைவன்] - வழிப்பகைவனானவன். சேணென்று-மிகுதி. பாலென்று - ஸ்வபாவம். ப்ராதிகூல்யமேஸ்வபாவ

மாக உடையவன். அவன் ஆர் என்னில்? - [சிசுபாலன்] - [திருவடிதாட்பாலடைந்த] - ஸர்வ ஸ்வாமியுடைய பாதபார்ச்வத்தை ப்ராபித்த. இத்தையிறே - "ஸாயுஜ்யமாபந்நாः" என்கிறது. திருவடிகளில்விச்சேதமில்லாத கைங்கர்யத்தையிறே - "ஸாயுஜ்ய" என்கிறது; "ஸாயுஜ்யம்ப்ரதிபந்நாயே". [சிசுபாலன்] - சாஸ்த்ரங்களிற்சொன்ன அதிகாரிகளிலே ஒருத்தனல்லன்; விஷயவைலக்ஷண்யத்தாலே பெற்றவன். "வைது நின்னைவல்லவா பழித்தவர்க்கும்", "பேரருளான் பெருமைபேசி யேசினார்". [தன்மையறிவாரை யறிந்துமே - கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லால் மற்றுங் கேட்பரோ] - ஈச்வரனுடைய ஸ்வபாவத்தை யறிந்தவர்கள்பக்கலிலே செவிதாழ்த்துவைத்தும், இஸ்ஸ்வபாவத்தை யறிந்து வைத்தும், இத்தால் சொல்லிற்றாயிற்று - ப்ராதிகூல்யமே யாத்ரையாயிருந்தவனுக்குத் தன்னாலல்லது செல்லாமையுடையார்பெறும் பேற்றைக் கொடுத்தான் என்றதாயிற்று.

ஈடு.—மூன்றாம்பாட்டு. சிசுபாலனையும் உட்படத் தன்திருவடிகளிலே சேர்த்துக்கொண்ட பரமக்ருபையையறிந்தவர்கள், கேசிஹந்தாவினுடைய கீர்த்தியையொழிய வேறொன்றைக் கேட்பரோ? என்கிறார்.

[கேட்பார்கள்] - கீழே - "கற்பரோ" என்றது. அதாவது - முதல் நடுவுஇறுதி தன்னெஞ்சிலே யூற்றிருக்கும்படி வாஸனைபண்ணுகையாயிற்று; இனி, கேட்கையாவது - வாஸனைபண்ணினானொருவன் ஓரர்த்தத்தை யுபபாதித்தால், அத்தைப்புத்திபண்ணி விச்வஸித்திருக்கை. நடுவிருந்தநாலுநாளும் தன்னெஞ்சு தெளிவுபிறந்ததில்லையே யாகிலும், விழுக்காட்டில்இருவர்க்கும் பலமொத்திருக்கக்கடவது. †கற்றிலனாகிலும் கேட்கவேண்டுவதுண்டிறே. கற்றுத்தெளியக்கண்டஅர்த்தத்தைக்கேட்டு விச்வஸித்திருக்கை. கல்வியும் அதின்பலரூபமான கைங்கர்யத்திலும் அந்வயிக்கப்பெற்றிலனாகிலும், ஆசார்யன்பக்கலிலே ஓரர்த்தத்தைக் கேட்டமாத்ரமாயிருந்தாலும் தனக்கோராபத்திலே யுதவுகைக்கொருகுறையில்லை. இனி, தன்னிழவு - பரப்ரதிபாதநசக்தியில்

மூன்றாம்பாட்டு.—கேட்பார்கள் இத்யாதி. "சிசுபாலன் திருவடி" என்று தொடங்கி, "அறிந்தும் - கேட்பார்கள் கேசவன்கீர்த்தியல்லால் மற்றுங்கேட்பரோ" என்ற பதங்களைக் கடாவதாரிகை - சிசுபாலனையும் இத்யாதி.

கீழே - "கற்பார்" என்றார், இங்கே - "கேட்பார்" என்கிறார்; இரண்டுக்கும் பதமேதென்ன - கீழே இத்யாதி. அதாவது - கற்கையாவதென்றபடி. ஊற்றிருக்கும்படி - மாறாதே அநுவர்த்திக்கும்படி. ஆனால் ஆசார்யஸந்நிதியிலே ஸம்சயவிபர்யயம்அறக் கற்றவனுக்கொழியக் கேட்டவனுக்கும் உஜ்ஜீவநமுண்டோ? என்ன - நடுவிருந்த இத்யாதி. விழுக்காட்டில் - பர்யவஸாநதியிலே என்றபடி. இருவர்க்கும் - கற்றவர்க்கும் கேட்டவர்க்கும். பலம் - பகவத்ப்ராப்தி. கல்லாதவனுக்கு ச்ரவணாதிகாரந்தான் உண்டோ? என்ன - கற்றிலனாகிலும் இத்யாதி. ஏதத்விவரணம் - கற்றுத்தெளிய இத்யாதி. "நடுவிருந்த" இத்யாதிவாக்யவிவரணம் - கல்வியும் இத்யாதி. அதின் பலரூபமான கைங்கர்யமாவது - பிறரையும் தங்களோபாதி அப்யாஸத்துக்கு அதிகாரிகளாக்கி ஈச்வரன் திருவடிகளிலே சேர்த்து, அவனுக்கு முகவிகாஸத்தைப் பண்ணுகை என்றபடி. 'தனக்கோராபத்திலே உதவுகைக்குஒருகுறையில்லை' என்கிறவிடத்திலே - "சுரோத்ரியவஜாநந்ஸ்ரோதா ந்யாஸாதிகாரிவாஸனா। தேவிவாதிதர்நைஜ்யவப்ரதீயம்ப்ரதிபத்யராயணாः" என்கிற ச்லோகம் அநுஸந்தேயம். ச்ரோதாவுக்கு இப்படி பலமுண்டானவோபாதி, இங்கிருக்கிற நாலுநாளும் இரண்டிழவும் உண்டென்கிறார் - இனித்தன்இழவு இத்யாதி. "கேசவன்கீர்த்தியல்லால்

† கற்றிலனாயினுங்கேட்க அஃதொருவன், கொகத்திலூற்றுத்துணை - என்பது குறள்.

லாமையும், தன்னெஞ்சு தெளியாமையால் வருவதுமேயிறேயுள்ளது. [கேட்பார்கள்]- செவியில் தோளையுடையவர்கள். ஭கவத்குணங்கள் கேட்கையிறே செவிக்கு ப்ரயோஜநம்; ''கேளாச்செவிகள்செவியல்லகேட்டாமே'' என்னாநின்றதிறே; எறும்புவளையோபாதியிறே.[கேசவன்கீர்த்தியல்லால்] - விரோதிநிரஸநசீலனானக்ருஷ்ணன்கீர்த்தியல்லது வேறேசிலவற்றைக்கேட்பரோ? பருவம் நிரம்பிக் கற்றபின்பல்ல விரோதிகளைப் போக்கிற்று; பூதனைதொடக்கமானவிரோதிகளைத் தொட்டிற்பருவத்தேயிறே போக்கிற்று. விரோதிநிரஸநந்தான்ஜ்ஞாததயாவன்று, ஸத்தயாபாவகமா யிருக்கிறபடி. நஞ்சுகோல்லுகிறது அறிவுண்டாயல்லவிறே. ''வ்யாதிதாஸ்யோமஹாரௌத்ர ஸ்ஸோஸுர꞉க்ருஷ்ணபாஹுநா'' (வ்யாதிதாஸ்யோமஹாரௌத்ர ஸ்ஸோஸுர꞉க்ருஷ்ணபாஹுநா) - கேசியானவன் வாயை யங்காந்துகொண்டு கண்டாரெல்லாரும் நடுங்கும்படி வந்து தோற்ற, - முக்யராயிருப்பார் த்வாரங்கண்டவிடத்தே கைநீட்டக்கடவதாயிருக்குமிறே,-அந்தவாஸநையாலே இவன் வாய்க்குள்ளேகையைநீட்ட, அபூர்வாநுபவத்தாலே கைவிம்ம வளர்ந்துகொடுத்தது; அப்போது இடியேறுண்டமரம்போலே இருபிளவாய் விழுந்தான். [மற்றுங்கேட்பரோ] - கீழ்ச்சொன்ன ராமவ்ருத்தாந்தந்தான் கேட்பரோ? இவர் ஸ்வபாவமிருந்தபடியென்! ''இராமபிரானையல்லால் மற்றுங்கற்பரோ'' என்றார் - கீழ்; இங்கே – ''கேசவன்கீர்த்தியல்லால் மற்றுங்கேட்பரோ'' என்னாநின்றார்; இது தனக்குஅடியேன் என்னில்?- அவ்வவதாரத்தை யநுஸந்தித்தபோது ''தயரதற்குமகன் றன்னையன்றி மற்றிலேன்தஞ்சமாக'' என்பர்; இவ்வவதாரத்தை யநுஸந்தித்தபோது ''நங்கண்ணன்கண்ணல்லதில்லையோர்கண்ணே'' என்பர்; இப்படி இழிந்த துறைகள் தோறும் அழுந்தவல்லாரோருவரிறே.ஓரோகுணங்களை யநுபவிக்கப்புக்கால்

மற்றுங்கேட்பரோ'' என்கையாலே - செவிக்கு ப்ரயோஜநம் இதென்கிறார் - செவியில்தோளை இத்யாதி. ''செவிக்கு ப்ரயோஜநம்'' என்றதின் வ்யதிரேகவிஷயமான அர்த்தத்தை அருளிச்செய்கிறார் - கேளாச்செவிகள் இத்யாதி. திருமொழி பதினோராம்பத்து எழாந்திருமொழி இரண்டாம்பாட்டு, ''நீள்வான்'' இத்யாதி. அவன்கீர்த்தியைக்கேளாத செவிகள் செவியல்ல என்றபடி. ''செவியல்ல'' என்பானென்? ரந்த்ரமிருக்கிறதே! என்ன - எறும்புவளை இத்யாதி. க்ருஷ்ணனென்னாதே, ''கேசவன்'' என்றதுக்குபாவம் - விரோதி இத்யாதி. விரோதி நிரஸநசீலமானபடியை விவரிக்கிறார் - பருவம்நிரம்பி இத்யாதி வாக்யத்வயத்தாலே. கற்றபின்பல்ல - ஜ்ஞாநம்பிறந்தபின்பல்ல என்றபடி. இத்தால் ஸஹஜத்வமாதல், விவரணமாதல் - விரோதிநிரஸநந்தான் இத்யாதி. ஸத்தயாபாவகமென்றது - ஸத்தாப்ரயுக்தமென்றபடி. இது கூடுமோ? என்ன - நஞ்சு இத்யாதி. கேசியை ஸம்ஹரித்ததுக்கு ப்ரமாணம் - வ்யாதிதாஸ்ய꞉ இத்யாதி. ''வ்யாதிதாஸ்யோமஹாரௌத்ர ஸ்ஸோஸுர꞉ க்ருஷ்ணபாஹுநா। நிபாதிதோ த்விதா பூமௌ வைத்யுதேந யதா த்ரும꞉'' பஞ்சமேம்ஶே ஷோடஶே. (கசா) அங்காந்துகொண்டு - திறந்துகொண்டு. பாஹுப்யாம் என்னாதே, ''பாஹுநா தியாஹதி꞉'' என்றதுக்குபாவம் - முக்யராயிருப்பார் இத்யாதி. விம்ம - அதிகமாக; பெருக்க என்றபடி ''மற்றும்'' என்றதுக்கு - இதரவிஷயங்களாக - ''செவியில்தோளை'' இத்யாதிவாக்யத்திலே யருளிச்செய்து, அவதாராந்தரமாக அர்த்தாந்தரம் - கீழ்ச்சொன்ன இத்யாதி. வ்யாக்யாதாவின்ஈடுபாடு - இவர்ஸ்வபாவம் இத்யாதி. ஒவ்வொன்றில் இவர்க்கு உண்டான ப்ராவண்யாதிஶயஞ் சொல்லுகிறதாகையாலே விரோதமில்லையென்று விவக்ஷித்து உத்தரமருளிச்செய்கிறார் - அவ்வவதாரத்தை இத்யாதி வாக்யத்ரயத்தாலே. ஓரோவவதாரங்களிலிவர்க்குண்டான ப்ராவண்யாதிஶயத்தை ஸத்ருஷ்டாந்தமாக த்ருடீகரிக்கிறார் - ஓரோகுணங்களை இத்யாதி. ''பகவத்குணங்களைக்கேட்பார் செவிசுடு'' என்றால் இவன்பருஷோக்தியின் க்ரௌர்யம் ஸித்தியா

களில் கால்வாங்கமாட்டாதாற்போலே யாயிற்று, ஓரோவவதாரத்திலே யிழிந்தால் அவதாராந்தரங்களில் போகமாட்டாமையும். [கேட்பார்செவிசுடு கீழ்மைவசவுகளேவையும்] - இதுக்குக்கீழ் - ''கேட்பார்'' என்றதுபோலல்ல; கீழ்மைவசவுகளே கேட்பாரிறே-இங்கு. ஸகவந்நிந்தைக்கு ஜீவநம்வைத்துக் கேட்கும் தண்ணியவர்களுங்கூடப்பொறுக்கமாட்டாமை செவிபுதைத்து, ''இத்தனை யதிரச்சொன்னாய், இப்படிச்சொல்லப்பெறுய்காண்'' என்று சொல்லும்படியான வசவுகளே வைகை. [வசவுகளேவையும்] - அநுகூலரா யிருப்பார்க்கும் அசித்ஸம்ஸர்க்கத்தாலே ப்ராமாதிகமாகவும் ஒருப்ராதிகூல்யம் விளையுமிறே; அப்படியே இவனுக்கும் யாத்ருச்சிகமாக ஒருநல்வார்த்தையும் கலசுமோ ? என்னில்; அதுவு மில்லை என்கிறது - ஏவகாரத்தாலே. அதுக்கடி சொல்லுகிறது மேல்: [சேட்பால் பழம்பகைவன்] - மிகவும் ஜந்மஶத்ரு என்றபடி; இந்தஜந்மமே யன்றிக்கே பூர்வஜந்மமே தொடங்கி சத்ருவாய்ப் போருகிறுனிறே; இவன்ஓரோஜந்மங்களிலே பண்ணின ப்ராதிகூல்யத்துக்கு ஓரளவில்லையிறே; இப்படிப்பட்ட ஜந்மந்தான் அநேகம். அவ்வவஜந்மங்களிலுண்டான காலத்தின்மிகுதியும், பண்ணின ப்ராதிகூல்யத்தினுடைய மிகுதியும், இவையெல்லாவற்றையும் நினைக்கிறது - பகையினுடைய பழமையாலே. அபுத்திபூர்வகமாகச் சொல்லிலும் வாஸநையாலே தப்பாதேன்கை. அன்றீன்றகன்று அப்போதேதாய்முலையிலேவாய்வைக்கும்.அது அஜ்ஜந்மத்திலேவாஸநை கொண்டன்றிறே; இவனுக்கும் இஜ்ஜந்மத்திலே பகவந்நிந்தைக்கடி - ஜந்மாந்தரவாஸநையிறே. [திருவடிதாட்பாலடைந்த] - ஸர்வஸ்வாமியுடைய பாதபார்ஶ்வத்தைக்கிட்டின. ஸாயுஜ்யலக்ஷண மோக்ஷமாகிறதுதான் இன்னதேன்கிறது. அதாவது - விச்சேதமின்றிக்கே கிட்டிநின்று நித்யகைங்கர்யம்பண்ணப்பெறுகை. ''ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவபவதி'' (ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவபவதி) என்றும், ''பரமம் ஸாம்யமுபைதி'' (பரமம்ஸாம்யமுபைதி) என்றும், ''தம்மையேயொக்கவருள்செய்வர்'' என்றும், ''மம ஸாதர்ம்யமாகதா:'' (மமஸாதர்ம்யமாகதா:) என்றும், ''ஸஹாநேநஜ்யோதிஷா''

---

தென்ற திருவுள்ளம்பற்றி ''கேட்பார்'' என்றதுக்கு வேறேயர்த்தம் அருளிச்செய்கிறார் - இதுக்குக் கீழ் இத்யாதி. இதுக்குக் கருத்து - கீழ் ''கேட்பார்கள்'' என்றதுக்கு 'செவியில்தொளையுடையவர்கள்' என்றாற்போலே இங்கும் சொல்லப்போகாது; அர்த்தௌசித்யத்துக்காகவென்றபடி. ''கீழ்மைவசவுகளே . கேட்பார் செவிசுடு கீழ்மைவசவுகளேவையும்'' என்ற, ''கீழ்மைவசவுகள்''என்றத்தை இரண்டிடத்திலுங் கூட்டுவது. இப்படிச் சொல்லுகிறதுக்குஹாவம் - இவன்வசவின் க்ரௌர்யம் ஸித்திக்கைக்காக என்கிறார் - ஸகவந்நிந்தைக்கு இத்யாதி. தண்ணியவர்களும் - நிக்ருஷ்டரும். அதிரா - நடுங்க. அவதாரணார்த்தம் - அநுகூலராய் இத்யாதி. ''சேட்பால்பழம்பகைவன்'' என்றதுக்குஹாவம்- மிகவும் இத்யாதி. சேட்பழம்பகையைப் பாலாகவுடையவன்; ''சேண்'' என்ற - மிகுதியாய், மிகவும் பழையதான பகையை ஸ்வஹாவமாக வுடையவனென்ற ஶப்தார்த்தம். மிகவும் ஜந்மஶத்ருவான படி யென்? என்ன - இந்தஜந்மம் இத்யாதி. விவரணம் - இவன்ஓரோ இத்யாதி. பகையினுடைய பழமைசொன்னதுக்கு ப்ரயோஜநமேதென்ன - அவ்வவஜந்மங்களில் இத்யாதி. ஃபலிதம் - அபுத்திபூர்வகமாக இத்யாதி. இஜ்ஜந்மத்தில் வாஸநையாலே யானாலோ? என்ன - அன்றீன்ற இத்யாதி. ''தாட்பாலடைந்த'' என்கையாலே - ஸாயுஜ்யமாவது ஐக்யமன்றென்ற பரிஹரிக்கிறார் - ஸாயுஜ்யலக்ஷண இத்யாதி வாக்யத்வயத்தாலே. 'ப்ரஹ்மைவ' என்றவிடத்தில் ஏவகாரம் - ''விஷ்ணோரேவ [illegible]''என்ற விடத்திற்போலே, ''ஸாம்யமுபைதி'' இத்யாதிவசநாநுகுணமாக, இவ ஶப்தார்த்தத்தைக் காட்டுகிறது. ஜ்யோதிஷா - பரமாத்மநேத்யர்த்த: மோக்ஷமாவது ஐக்யமன்றென்கைக்கு

(ஸமாநோஜ்யோதிஷா) என்றும் சொல்லுகிறவற்றால் - வஸ்த்வைக்யம்சொல்லுகிறதன்று; பேற்றில்வந்தால் அவனோடேஇவனுக்கு ஸர்வதா ஸாம்யமுண்டென்கிறது: “ஜகத்வ்யா பாரவர்ஜம்” (ஜகத்வ்யாபாரவர்ஜம்) “போகமாத்ரஸாம்யலிங்காச்ச” (போக மாத்ரஸாம்யலிங்காச்ச) என்றும் சொல்லுகையாலே. ஸாயுஜ்யமாகிறது - “அவனோடொன்றும்” என்கிறதன்று: அவன்திருவடிகளிலே பரிசர்யைபண்ணுமென்கிறது; “ஸாயுஜ்யம்ப்ரதிபந்நாயே தீவ்ரபக்தாஸ்தபஸ்விந: | கிங்கரா மமதேநித்யம் பவந்திநிருபத்ரவா:” (ஸாயுஜ்யம்ப்ரதிபந்நாயே தீவ்ரபக்தாஸ்தபஸ்விந: | கிங்கரா மமதேநித்யம் பவந்திநிருபத்ரவா:) என்றுஞ்சொல்லுகையாலே. [தன்மையறிவாரை யறிந்துமே]-கேட்பார்க்குவிஷயமுண்டாக்குகிறார், இந்த குணஜ்ஞாநமுடையாரையறிந்து (அவர்கள்பக்கலிலேசேவிதாழ்த்து) வைத்தும் கேட்பார்கள் கேசவன்கீர்த்தியல்லால் மற்றுங்கேட்பரோ? இவன் திருவடிகளைக் கிட்டிற்றுஎன்கொண்டு என்னில்? - திருநாமங்களைச்சொல்லி த்வங்கரிக்கையும், கையுந்திருவாழியுமான அழகை அந்திமதசையிலே ஸ்மரிக்கவுங் கூடுமிறே. மேலெழ ஆராய்ந்துபார்த்தால் சிலஹேது சொல்லலாம்: இதுக்கு இனி ஒருபபத்திதேடிச்சொல்லுகையாவது. அவன் க்ருபைக்கு ஒருகோத்தை சொல்லுகையிறே. “ஸர்வேஶ்வரன் க்ருபையாலே சிசுபாலன் திருவடிகளைப்பெற்றான்” என்று ஆழ்வார்களும் ருஷிகளும்எல்லாரும் சொல்லிக்கொண்டு போருவர்களிறே. இவன்பக்கலிலே பரமபக்திபர்யந்தமாக உண்டானாலும், “அதுக்கும் கரணஸம்ப

ப்ரமாணாந்தரம் - ஜகத்வ்யாபார இத்யாதி. “நித்யகைங்கர்யம்பண்ணப்பெறுகை” என்றத்தை விவரிக்கிறார் - ஸாயுஜ்யமாகிறது இத்யாதி. ‘யுஜ்ஸம்யமநே - யுஜ: ஸமாநோ யோக: யஸ்ய ஸ: ஸயுக், ஸயுஜோ பாவ: - ஸாயுஜ்யம்’ என்று ஶாஸ்த்ரயோக்தலக்ஷணம். ஸாயுஜ்யமென்று கைங்கர்யத்தைச்சொல்லுமோ? என்ன, ப்ரமாணம் - ஸாயுஜ்யம்ப்ரதிபந்நா இத்யாதி. “ப்ரஹ்மணஸ்ஸாயுஜ்யம் ஸலோகதாமாப்நோதி” இதி முண்டோபநிஷதி. “ஜக்ஷத்க்ரீடந்ரமமாண:” இத்யாதி கீதாயாம். “ஜகத்வ்யாபாரவர்ஜம் ஸமாநோஜ்யோதிஷா” இதி வ்ருத்தி:. “ஜகத்வ்யாபாரவர்ஜம் ப்ரகரணாதஸந்நிஹிதத்வாத், போகமாத்ரஸாம்யலிங்காச்ச” இதி ப்ரஹ்மமீமாம்ஸாயாம். ‘தம்மையேயொக்க அருள்செய்வர்’- தம்மோடு ஸாம்யாபத்தியைத்தந்தருளுவர் இத்யர்த்த:. திருமொழி: “ஸாயுஜ்யம்ப்ரதிபந்நாயே” இத்யாதிக்கு ஆகரங்கண்டுகொள்வது. தன்மையறிந்துமென்னாதே, “தன்மையறிவாரையறிந்தும்” என்றதுக்குஸாவமேதென்ன - கேட்பார்க்கு இத்யாதி. அதாவது - ஓர் ஆசார்யன்பக்கலிலே கேட்கவேண்டுகையாலே, அடியிலே “கேட்பார்கள்” என்றவர்களுக்கு, “தன்மையறிவாரை” என்று கேட்கைக்கு விஷயமுண்டாக்குகிறாரென்றபடி. கீழ்வாக்யத்தை விவரியாநிற்கச்செய்தேயும் அந்வயமுங்காட்டுகிறார் - இந்தகுணஜ்ஞாநம்இத்யாதி. தன்மை - ஸ்வபாவம்; குணமென்றபடி. த்வேஷபாஜந சிசுபாலன், திருவடிகளைக் கிட்டுகைக்கு ஹேதுஏதது? என்கிற சங்கையை யநுவதிக்கிறார் - இவன்இத்யாதி. ஹேதுவையருளிச்செய்கிறார் - திருநாமங்களை இத்யாதி. த்வங்கரிக்கையும், வடிவழகை ஸ்மரிக்கையுமாகிற இத்தையொரு ஹேதுவாகச் சொல்லவேணுமோ? “ஶத்ருபாவாநுமுண்டு” என்று கார்யத்தைக்கொண்டு அநுமித்தாலோ? என்கிற சங்கையை யுட்கொண்டு பரிஹரிக்கிறார் - மேலெழ இத்யாதிவாக்யத்வயத்தாலே. நிர்ஹேதுகமென்கிறது என்கொண்டு? என்ன - ஸர்வேஶ்வரன்இத்யாதி. த்வங்கரிக்கைமுதலானவை தான் ஶத்ருபாவாநுமா என்ன வன் பக்கலிலேஇத்யாதி. சிசுபாலனைப்போலே நாமும்

கோடுத்தான்ஈஸ்வரனன்றோ?" என்று அதுவும் கழியாநிற்க, வருந்தி இல்லாததொன்று உண்டாக்குகை பணியன்றிறே. ஆளவந்தார் "சிசுபாலன் பேற்றிலன்காண்" என்றுஅருளிச்செய்வர்; அதுவேன் ? என்னில், "இதுக்குஅடியாகச் சொல்லலாவதொரு ஸாஹ்நம் இவன்கையி லில்லாமையாலே; நாட்டை நலியாமைக்குக் கோற்றவன்வாசலுக்குள்ளே சுழற்றியெறிந்தான் அத்தனைகாண்" என்று அருளிச்செய்வர். "காகம், திருமுன்பே எய்த்துவிழுகையாலும், இவன் திருநாமங்களைச்சொல்லி த்வங்கரிக்கையாலும், அவன் குணங்களை நினைத்தபடி விஸ்த்ருதமாகப்பெறாதே ஸங்குசிதங்களாயிற்றின" என்றிறே சொல்லுகிறது ; "பலிபுஜிஶிஶுபாலே தாத்ருகாகஸ்கரேவா குணலவஸஹவாஸாத் த்வத்க்ஷமா ஸங்குசந்தீ" (பலிபுஜிஶிஶுபாலே தாத்ருகாகஸ்கரேவா குணலவஸஹவாஸாத் த்வத்க்ஷமா ஸங்குசந்தீ) என்கையாலே. "பலபலநாழஞ் சொல்லிப்பழித்தசிசுபாலன்றன்னை, யலைவலைமைதவிர்த்தவழகன்" என்றாரிறே பெரியாழ்வாரும். "வைதுநின்னைவல்லவாபழித்தவர்க்கும்" இத்யாதி. இப்பாட்டில் ஏற்றமாகிறது - "தன்னலல்லதுசெல்லாமை விளைந்தாரைக்கூடக் கோடுபோனான்" என்றது ஓர்ஏற்றமோ தன்பக்கல் அபராதம்பண்ணின சிசுபாலனுக்கும் அவர்கள்பேற்றைக் கோடுத்ததுக்கு? என்றபடி. (௫)

*வைது மோக்ஷம்பெறலாமோ என்ன, "அது மோக்ஷமன்று" என்கைக்கு ஸம்வாதம் - ஆளவந்தார் இத்யாதிவாக்யத்வயத்தாலே. ஸாஹ்நம் இவன்கையில் இல்லாமையாலே - அபிஸந்தி இல்லாமையாலே என்றபடி. எப்படியாகிலும் பெற்றானேயென்ன - நாட்டைஇத்யாதி. கொற்றவன் - ஸ்வாமி. "இதுக்கு இனி ஓர்உபபத்தி தேடிச் சொல்லுகையாவது அவன் க்ருபைக்குக் கொத்தை சொல்லுகை" என்றதுக்கு ப்ரமாணங்காட்டுவாராக, ததர்த்தத்தை அருளிச்செய்கிறார். காகம்இத்யாதி. ப்ரமாணந்தன்னை யருளிச்செய்கிறார் - பலிபுக்இத்யாதி. ஸ்ரீரங்கராஜஸ்தவே "பலிபுஜி ஶிஶுபாலே தாத்ருகாகஸ்கரேவா குணலவஸஹவாஸாத் த்வத்க்ஷமா ஸங்குசந்தீ" (உ-௬௭) இத்யுத்தரார்த்தம். ஸர்வேஶ்வரன் க்ருபையாலே சிசுபாலன் திருவடிகளைப்பெற்றான் என்று ஆழ்வார்கள் அருளிச்செய்தார்கள் என்றார் - கீழே; அவர்கள் அருளிச்செய்தது எங்கே? என்ன- பலபலஇத்யாதி. "சிசுபாலன் நிர்ஹேதுகமாக மோக்ஷம்பெற்றான்" என்றதுக்கு ப்ரமாணம் வைது நின்னைஇத்யாதி. கீழிற்பாட்டைப்பற்ற இப்பாட்டுக்கு ஆதிக்யமேதென்ன - இப்பாட்டில்ஏற்றமாகிறதுஇத்யாதி. பெரியாழ்வார்திருமொழி, நாலாம்பத்து, மூன்றாந்திருமொழி, அஞ்சாம்பாட்டு "பலபலநாழம்" இத்யாதி. இதுக்கர்த்தம் - பலபல குற்றங்களையும் சொல்லி நிந்தித்த சிசுபாலன்தன்னை, 'அலைவலைமைதவிர்த்தவழகன்' - சரமதசையிலே தன்னழகைக்காட்டித் தன்னளவில் அவனுடைய த்வேஷத்தை மாற்றுகையாலே, "தான்" என்றால் நிந்தித்துக்கொண்டுதிரியும் அலைவலைத்தனத்தைப் போக்கி ரக்ஷித்த அழகையுடையவனென்றபடி. திருச்சந்தவிருத்தம் நூற்றுப்பதினோராம்பாட்டு: 'வைதுநின்னை'-புகழப்படும் உன்னைப் பருஷித்து; 'வல்லவாபழித்தவர்க்கும்' - சக்தியுள்ளவளவும் நிந்தித்தவர்களாய்; 'மாறில்போர்செய்து நின்னசெற்றதீயில்வெந்தவர்க்கும்' எதிரில்லாத யுத்தத்தைப் பண்ணி உன் கோபாக்நியாலே தக்தரான சிசுபாலன்வாலி முதலானார்க்கும்; 'வந்துனை'- வந்துஉன்னை. 'எய்தலாகுமென்பர்'- ஸர்வாதிகனானவுன்னை வந்து ப்ராபிக்கலாமென்று ருஷிகள் சொல்லாநின்றார்கள்; "ஸம்ப்ராப்தவாந் த்வயி லயம்" என்று சிசுபாலமோக்ஷத்தை ஸ்ரீபராஶர பகவான் சொன்னான். "ராமேணாஸந்நிக்ருஷ்டோ கதிம் ப்ராப்தோ" என்று வாலியினுடைய பரகதியைச் சொன்னான். ஸ்ரீவால்மீகிபகவானென்றபடி.கேட்பார்கள் - 'கேட்பார் செவிசுடு' என்று தொடங்கி, 'தன்மையறிவாரை யறிந்தும் - கேசவன்கீர்த்தியல்லால் மற்றுங்கேட்பரோ ?' இத்யந்வயம். (௫)*

# நான்காம் பாட்டு.

தன்மையறிபவர்தாம்அவற்கேளன்றியாவரோ?
பன்மைப்படர்பொருள்ஆதுமில்பாழ்நெடுங்காலத்து
நன்மைப்புனல்பண்ணி நான்முகனைப்பண்ணித்தன்னுள்ளே
தொன்மைமயக்கியதோற்றிய சூழல்கள்சிந்தித்தே.

ஆ.—(தன்மையறிபவர்.)- ப்ரதிகூலனான சிசுபாலனை ரக்ஷித்தருளினனென்னும் இதுதான் ஒருகுணமோ? அஸங்க்யேய ப்ரதிகூலாநுகூல ஸகலஜந்துஜாதத்துக்கும் அசேஷ புருஷார்த்தஸாதநபூத கரணகளேபராத்யுபகரண ப்ரதாநம்பண்ணின மஹா குணத்தைப் பார்த்தால் என்கிறார்.

தேவாதிஸ்தாவராந்த நிகிலஜந்துக்களுக்கும் த்விபரார்த்தகாலம் ஸ்வஸ்மிந் ப்ரலீநமாய் சேதநேதராயமானமாய் ஸகலபுருஷார்த்த சூந்யமாயிருக்க, ஸ்வகீயநிரவதிக காருண்யத்தாலே, ஸலிலசதுர்முகாதி சேதநாசேதந ஸமஸ்தவஸ்துக்களையும் தன்னுடைய ஸங்கல்பமாத்ரத்தாலே ஸ்ருஷ்டித்தருளின இம்மஹாகுணத்தை அநுஸந்தித்தால், ஸமஸ்த வஸ்துயாதாத்ம்யத்தை யறிவார் அந்தப்பரமகாருணிகனுக்கன்றி ஆளாவரோ? என்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், தானுளனாய் ப்ரதிகூலனான சிசுபாலனை அபராதங்களைப் பொறுத்துத் திருவடிகளிலே சேர்த்துக்கொண்டபடியும் ஒரு குணமென்று எண்ணவொண்ணாதபடி மிகவும் ஸர்பாரூமாய் ப்ரளயத்திலே மங்கிக்கிடந்த ஜகத்தை மீளவும் உண்டாக்கின மஹாகுணத்தை அநுஸந்திக்கிறார். [தன்மையறிபவர்] - தத்த்வஸ்திதி அறியுமவர்கள். [பன்மையென்று தொடங்கி] - தேவமநுஷ்யாதி ரூபத்தாலே நாநாவாய்க்கொண்டு விஸ்தீர்ணமாயிருந்துள்ள பதார்த்தங்கள் ஒன்றுமில்லாத காலத்திலே தன்னுடைய ஸங்கல்பத்தாலே தனக்கு இப்பாலுண்டான கார்யத்தை யடையப் பிறப்பிக்கவற்றான ஜலத்தை ஸ்ருஷ்டித்து அவ்வழியே ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்து பண்டு தான் ஸம்ஹரித்த பதார்த்தங்களைப் பழையபடியே யுண்டாக்கின விரகுகளைச் சிந்தித்து.

ப.—அநந்தரம், இல்லாத ஜகத்தையுண்டாக்கின அதிசயத்தை யநுஸந்

பன்மை - பலவகைப்பட்ட தேவாதிபேதங்களை யுடைத்தாய், படர் - புண்ய பாபாநுரூபமாக விஸ்தீர்ணமான, பொருள் - பதார்த்தங்களெல்லாம், ஆதும் - ஒன்றும், இல் - இன்றியே, பாழ் - சூந்யமாய்க் கிடந்த, நெடுங்காலத்து - த்விபரார்த்த காலாவஸாநத்திலே, நன்மை - (பூதாந்தர ஸம்ஸ்ருஷ்டமாய் கார்யோத்பத்திஹேதுவான) நன்மையையுடைத்தான, புனல் - காரணஜலத்தை, பண்ணி - ("அப ஏவ ஸஸர்ஜாதௌ" என்கிற கணக்கிலே) ஸ்ருஷ்டித்து, ("தஸ்மிந்நண்டேऽபவத் ப்ரஹ்மா" என்கிற மர்யாதையிலே அஜ்ஜலத்திலே யுத்பந்நமான அண்டத்திலே), நான்முகனை - ப்ரஹ்மாவை, பண்ணி - ஸ்ருஷ்டித்து, (இந்தசமஷ்டி ஸ்ருஷ்ட்யநந்தரம்), தொன்மை - பூர்வவாசனை யழியும்படி, தன்னுள்ளே - தன்ஸ்வரூபைகதேசத்திலே, மயக்கிய - ("லயம் கச்சதி" என்கிறபடியே)மயங்குவித்துக்கிடந்த ஸமஸ்தபதார்த்தங்களையும், தோற்

றிய -(விஹக்தமாம்படி ஸ்ருஷ்டிமுகத்தாலே)தோற்றுவித்த, சூழல்கள்- (ஈக்ஷணஸ்ருஷ்ட்யநுப்ரவேஶ நாமரூபவ்யாகரணங்கள் தொடக்கமான) விரகுகளை, சிந்தித்து- (வேதாந்த முகத்தாலே)அநுஸந்தித்து, தன்மை- (அவனுடைய அஸாதாரணலக்ஷணமான காரணமான)ஸ்வபாவத்தை, அறிபவர் - அறியுமவர்கள், தாம் - தாங்கள்,(தத்த்வஜ்ஞாநவைஹவாநுரூபமாக) ,அவற்கு - "க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாம் உத்பத்தி:"என்று ஜகத்காரணபூதனான க்ருஷ்ணனுக்கு, அன்றி - ஒழிய, (வேறொருவருக்கு), ஆள் ஆவரோ - ?

இ.—நாலாம்பாட்டில், தானுளனாய் ப்ரதிகூலனான ஶிஶுபாலனைச் சேர்த்துக்கொண்டதிற் காட்டிலன்றோ மிகவும் ஸாபராதமாய் ப்ரளயத்திலே மங்கிக்கிடந்த ஜகத்தை மறித்தும் உண்டாக்கின மஹாகுணமென்று, அத்தை அநுஸந்திக்கிறார். அபராதத்தில் ஶிஶுபாலனிற் குறைந்தார் இல்லையிறே ஜகத்தில். [தன்மையறிபவர்தாம்]- தத்த்வஸ்திதியை உள்ளபடி அறியுமவர்கள். தன்மை - உண்மை. "காரணந்து த்யேய:," "ஜந்மாத்யஸ்ய யத:" என்று உபாஸநவாக்யங்களையும் காரணவாக்யங்களையும் அறியுமவர்கள். "ஜகத்காரணம் இன்னது" என்று அறிந்து, அதுவே உபாஸ்யம்" என்று அறியுமவர்கள். [அவற்காளன்றியாவரோ] - அந்த காரணவஸ்துவுக்காளாமதொழிய வேறு சிலர்க்குஆளாகக்கடவரோ. இவனுக்கே ஆளாக வேண்டுகிறதென் என்னில்?—இதடங்க அழிந்துகிடக்கத் தன்னை ஆஶ்ரயிக்கைக்கு கரணங்களைக் கொடுத்தவனை ஒழிய, புறம்பேசிலரைப்பற்றவோ ? [பன்மை இத்யாதி] - தேவாதிதேஹங்களை உடைத்தாய் கர்மாநுகுணமாக விஸ்த்ருதமான பதார்த்தங்களொன்றும் மின்றிக்கே பாழாய், த்விபரார்த்தகாலஞ்சென்றவளவிலே, தன் ஸங்கல்பத்தாலே, தனக்கிப்பாலுண்டான கார்யத்தைப் பிறப்பிக்கும் நன்மையையுடைய ஜலத்தை ஸ்ருஷ்டித்து, அது அண்டமாய் பரிணமிக்கவாறே அதிலே சதுர்முகனை ஸ்ருஷ்டித்து: "அப ஏவ ஸஸர்ஜாதௌ". நன்மைப்புனல் பண்ணி நான்முகனைப்பண்ணி என்கையாலே-சேதநாசேதநங்களை உண்டாக்குவானும் இவன்: அவற்றால் வந்த ஸ்ருஷ்டியும் இவனதே; அவை உபகரணமாத்ரமே; உபகரணமாமிடத்தில் அசேதநத்தோபாதிசேதநனும். [தன்னுள்ளே]- தன்னுடைய ஸங்கல்பைகதேசத்திலே. [தொன்மை மயக்கிய]-பூர்வவாஸனை அழியும்படி பண்ணப்பட்ட பதார்த்தங்களை. தொன்மையென்று - துர்வாஸனை. அது அழிகைக்காகத் தான் ஸம்ஹரித்திட்டு வைத்த பதார்த்தங்கள்என்கை. [தோற்றிய] - தோற்றுவித்த. தோற்றிய என்றது - "பஹு ஸ்யாம்" என்கிற ஶ்ருதிச்சாயையினாலே."யாதாயதாவதவதாநி கல்பயத்" என்கிறபடியே இவற்றையுண்டாக்கின நல்விரகுகள் அநுஸந்தித்து, அவற்காளன்றி ஆவரோ ? என்று அந்வயம்.

ஈடு.—நாலாம்பாட்டு சிசுபாலனுக்குத் தன்னைக்கொடுத்ததோர் ஏற்றமோ, ப்ரளயத்திலே மங்கிக்கிடந்த ஜகத்தையுண்டாக்கின இம்மஹாகுணத்துக்கு ? என்கிறார். சிசுபாலனிற்குறைந்தாரில்லையிறே ஸம்ஸாரிகளில்.

நாலாம்பாட்டு - தன்மைஇத்யாதி. " ஆதுமில் பாழ்நெடுங்காலத்து " என்றுதொடங்கி "தோற்றிய சூழல்கள்" என்னுமளவுங்கடாக்ஷித்தவதாரிகை - சிசுபாலனுக்குஇத்யாதி. உண்டாக்கினது மஹாகுணமானபடியென் ? அவனைப்போல எல்லாரும் வைதுகொண்டிருந்தார்களோ ? என்ன - சிசுபாலன்இத்யாதி.

[தன்மை யறிபவர்தாம்] - தத்வஸ்த்திதியறியுமவர்தாம். அதாவது இதினுடைய உத்பத்தி அவனுக்காகக் கண்டதென்றிருக்குமவர்கள்; "ஸ்ரஷ்டஸ்த்வம் வநவாஸாய" (ஸ்ரஷ்டஸ்த்வம் வநவாஸாய)போலே. ஜகத்காரணவஸ்துவே யுபாஸ்யமென்று அறியுமவர்கள்; * "காரணந்து த்யேய:" (காரணந்துத்யேய:) இறே, "அதாதோப்ரஹ்மஜிஜ்ஞாஸா" (அதாதோப்ரஹ்மஜிஜ்ஞாஸா) என்று "ஜந்மாத்யஸ்யயத:" (ஜந்மாத்யஸ்யயத:) என்று நின்றதிறே. [அவற்காளன்றியாவரோ]- கரணகளேபரங்களைக் கொடுத்தது தனக்குஅடிமை செய்கைக்கிறே. [பன்மைப்படர் பொருளாதுமில்பாழ் நெடுங்காலத்து] - தேவாதிபேதத்தாலே பலவகைப்பட்டு, கர்மாநுகுணமாக விஸ்த்ருதமான பதார்த்தங்களொன்றுமில்லாத காலத்து. தேவதிர்யஙாதிரூபேண வுண்டாகக் கடவவஸ்துக்கள் ஒன்றுமில்லாதபடி பாழ்கூவிக்கிடக்கிற நெடுங்காலத்து. ஈஶ்வரன் ஜகத்தை ஸம்ஹரித்து நெடுங்காலம் பாழ் கூவிக்கிடக்கும்படி யிட்டுவைக்கும். கர்ஷகனானவன் விளைநிலம் உவர்கழியும்படி நீரைத்தேக்கி வைக்குமாபோலே, இவற்றினுடைய துர்வாஸநை போகைக்காக ஸ்ருஷ்டியோபாதிகாலம் ஸம்ஹரித்திட்டுவைக்கும். கண்ணுக்கிட ஒரு துரும்பில்லாதபடி ஸதவஸ்த்தமானகாலத்து. [நன்மைப்புனல்பண்ணி] - அழிக்கப்பரப்பின நீர்போலல்ல. "அபஏவஸஸர்ஜாதௌ" (அபஏவஸஸர்ஜாதௌ) என்கிறபடியே முற்படஜலஸ்ருஷ்டியைப் பண்ணி. இவ்வளவும்வர அசித்தைக்கொண்டு கார்யங்கொண்டு, "இவையிரண்டும் நம் புத்த்யதீனமானபின்பு இனிச்சித்தையுங்கொண்டு கார்யங்கொள்ளுவோம்" என்றுபார்த்து சதுர்முகனையும் ஸ்ருஷ்டித்து. "யஸ்யாத்மாஶரீரம்" (யஸ்யாத்மாஶரீரம்) "யஸ்யப்ருதிவீஶரீரம்" (யஸ்யப்ருதிவீசரீரம்) என்று இரண்டும் இவனுக்குஉறுப்பாய் பரதந்த்ரமாயிறேயிருப்பது. "யோப்ரஹ்மாணம்விதயாதிபூர்வம்" (யோப்ரஹ்மாணம்விததாதிபூர்வம்) 'நன்மைப்புனல்பண்ணி நான்முகனைப்பண்ணி' என்று ஒருகுழமணனைப்பண்ணி என்பாரைப்போலே. [தன்னுள்

தத்வஸ்திதியாவதேதென்ன - அதாவதுஇத்யாதி. அவனுக்காகக்கண்டது - அவனுடைய கைங்கர்யத்துக்குஉடலாக ஸ்ருஷ்டமாயிற்றென்றபடி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - ஸ்ரஷ்டஸ்த்வம் இத்யாதி. "தன்மையறிபவர்" என்றதுக்கர்த்தாந்தரம் - ஜகத்காரணஇத்யாதி. "காரணவஸ்துவே யுபாஸ்யம்" என்னுமதுக்கு ஶ்ருதிசூத்ரங்கள் - காரணந்துஇத்யாதி. "இதினுடையஉத்பத்திஅவனுக்காகக்கண்டது" என்கிற வாக்யாநுகுணமாகவர்த்தம் - கரணஇத்யாதி. இப்போது, "அவற்காளன்றியாவரோ" என்றதுக்கு - கரணகளேபரங்களைக்கொடுத்தவற்கொழிய வேறொருவர்க்காளாவரோ என்று சப்தார்த்தம். "தன்மையறிபவர்" என்றதுக்கு - "காரணவஸ்துவே யுபாஸ்யமென்றறியுமவர்கள்" என்றர்த்தமானபோது, "அவற்காளன்றியாவரோ" என்றதுக்கு - காரணபூதனானவனுக்கொழிய வேறொருவர்க்காளாவரோ என்று சப்தார்த்தம். இந்தஅர்த்தம் இருபத்துநாலாயிரத்திலே கண்டுகொள்வது. விவரணம் - தேவதிர்யஙாதிஇத்யாதி. நெடுங்காலம் பாழாகவிட்டுவைக்கிறதேதுக்கென்ன - ஈஶ்வரன் இத்யாதிவாக்யத்வயம். உவர்கழியும்படி - சவர்கழியும்படி. "ஆதுமில்" என்றதுக்கர்த்தம் - கண்ணுக்கிடஇத்யாதி. கண்ணுக்கிட ஒருதுரும்பில்லாதபடி - கண்ணாலேகாண்கைக் கொன்றுமில்லாதபடி இத்யர்த்த:. புனலுக்குநன்மையேதென்ன - அழிக்கஇத்யாதி. முந்துற ஜலஸ்ருஷ்டியைச்சொன்னதுக்கு ப்ரமாணம் - அபஏவஇத்யாதி. 'இவ்வளவும்வர' என்றது - அண்டஸ்ருஷ்டிபர்யந்தமென்றபடி. இவையிரண்டும் - சிதசித்துக்களிரண்டும். இரண்டும் தன்புத்த்யதீநமோ? என்ன, ப்ரமாணம் - யஸ்யாத்மாஇத்யாதி. சேதநஸ்ருஷ்டியில் முந்துற ப்ரஹ்மஸ்ருஷ்டியைச்சொன்னதுக்குப்ரமாணம் - யோப்ரஹ்மாணம்இத்யாதி. ஸ்ருஷ்டித்தானென்னாதே, "பண்ணி" என்றதுக்குஹாவம் - நன்மைப்புனல்இத்யாதி. குழமணன் - மரப்பாச்சி. மயங்கல் - கூடலாய், 'இட்டு

ளே] - தன் ஸங்கல்பஸஹஸ்ரைகதேசத்திலே. [தோன்மையித்யாதி] - பழையதாக, "ஸதேவ" என்கிறபடியே - தானென்கிற சொல்லுக்குள்ளேயாம்படி பண்ணியிட்டு வைத்து, பின்னை "பஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்கிறபடியே இவற்றை ஆவிர்ப்பவிப்பித்த விரகுகளைச் சிந்தித்து - தத்த்வஸ்த்திதி யறியுமவர்கள் அவனையொழிய வேறேசிலர்க்குஆளாவரோ? (தன்மை - உண்மை. புனலென்றது - மற்றவற்றுக்கு முப லக்ஷணம். தோற்றிய - தோற்றுவித்த.) விரோதியான சிசுபாலனுக்குத் தன்திருவடிகளைக் கொடுத்தானென்றது, இதோரேற்றமோ விரோதிகளை யுண்டாக்கி தன்னை வைவித்துக்கொண்ட நீர்மைக்கு? என்கிறார். 'பன்மைப் படர்பொருள் - தன்னுள்ளே தோன்மை மயக்கிய - ஆதுமில்பாழ் நெடுங்காலத்து நன்மைப்புனல்பண்ணி நான்முகனைப் பண்ணி - தோற்றியசூழல்கள் சிந்தித்து - தன்மையறிபவர் தாமவற்காளன்றியாவரோ?" என்றந்வயம். (ச)

## ஐந்தாம் பாட்டு.

சூழல்கள்சிந்திக்கில் மாயன்கழலன்றிச்சூழ்வரோ?
ஆழப்பெரும்புனல்தன்னுள்அழுந்தியஞாலத்தை
தாழப்படாமல்தன்பாலொருகோட்டிடைத்தான்கொண்ட
கேழல்திருவுருவாயிற்றுக கேட்டுமுணர்ந்துமே.

—(சூழல்கள்.)-கிணற்றிலேவிழுந்த தன்னுடைய ப்ரஜையை மாதாவானவள் வாத்ஸல்யாதிசயத்தாலே விழுந்தெடுக்குமாபோலே, ரஸாதலத்திலே நிமக்நையான ப்ருதிவியை வராஹரூபியானாய் க்ஷணத்திலேசென்று முழுகியெடுத்தருளின இம்மஹாகுணத்தைக்கேட்டு, †ஶ்ருதமானதை ஸ்மரித்திருந்துவைத்து, "தங்களுக்கொரு புருஷார்த்தஸாதநத்தைச்செய்யவேண்டும்" என்று நினைக்கில், அந்த ஆஶ்சர்யபூதனானவனுடைய திருவடிகளையல்லது ஆஶ்ரயிப்பரோ? என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், தன்னாலே ஸ்ருஷ்டமான ஜகத்தை ப்ரளயங்கொள்ள, "இன்னமும் இங்ஙனே இருக்கும் ஜகத்தை ஸ்ருஷ்டித்துக்கொள்ளுகிறோம்" என்று உபேக்ஷியாதே, தானே அதுக்கு ஈடாயிருப்பதொரு திர்யக்கின் வடிவைக்கொண்டு பூமியை எடுத்தருளின இம்மஹாகுணத்தை அநுஸந்திக்கிறார். [சூழலென்று தொடங்கி] - தந்தாமுக்கு புருஷார்த்தோபாய சிந்தை பண்ணில் அத்யாஶ்சர்யஸ்வபாவனான எம்பெருமானுடைய திருவடிகளை ஒழிய வேறு சிலரை ஆஶ்ரயிப்பரோ? [ஆழப்பெரும்புனல் என்று தொடங்கி] - தெரியாதபடி கடலிலே அழுந்தின ப்ருதிவியை அந்தரப்படாதபடி தன்னுடைய ஒருகொம்பிலே ஒருவர் அறியாதிருக்கத் தானே வைத்துக்கொண்ட வராஹமான திருவடிவைக் கொண்டபடியைச் சொல்லக்கேட்டும் மநநம்பண்ணியும்.

வைத்து' என்றபடி. தோற்றிய - தோற்றுவித்த. கீழ்ப்பாட்டில் இதுக்காதிக்யமென்ன - விரோதியான இத்யாதிவாக்யத்வயம். "ஆதுமில்பாழ்நெடுங்காலத்து - மயக்கிய" என்று - ஸம்ஹாரத்திலும், "நான்முகனைப்பண்ணி தோற்றிய" என்று - ஸ்ருஷ்டியிலும் தோற்றுகிற புநருக்திகளைப் பரிஹரிக்கைக்காக. அந்வயம் - பன்மைத்யாதி. மயக்கிய - மயக்குகையாலே யென்றபடி. (ச)

† ஶ்ருதமானத்தை-கேட்டமஹாகுணத்தை.

ப.—அநந்தரம், அழிந்தஜகத்தையுண்டாக்கினவளவன்றியே, தன்வடிவை யழியமாறியும் ஆபத்ஸகனான ஸ்ரீவராஹரூபியினுடைய வ்ருத்தாந்தத்தை யருளிச் செய்கிறார்.

பெரு - அபர்யந்தமான, புனல் தன்னுள் - ப்ரளயஜலத்திலே, ஆழ - அண்டகபாலத்தளவுமாழ, அழுந்திய - அழுந்தின, ஞாலத்தை - பூமியை, தாழப்படாமல் - காலவிளம்பத்தாலேயுருமாயாதபடி, தன்பால் - தன்திருமேனியில் ஏகதேசமாயிருப்பது, ஒரு கோட்டிடை - ஒருகோட்டினிடத்திலே, (தான் அபேக்ஷாநிரபேக்ஷமாம்படி), (ஸ்வேச்சாமாத்ரத்தாலே), கொண்ட - (இடந்தெடுத்துக்) கொண்ட, கேழல் - "கோலவராகம்" என்கிறபடியே ஸ்ரீவராஹமான, திரு - அழகிய, உரு - வடிவை, ஆயிற்று - உடையனானஇத்தை, கேட்டும் - வேததிஹாஸபுராணமுகங்களாலேகேட்டும், உணர்ந்தும் - மநநம்பண்ணியும்வைத்து, சூழல்கள் - தங்களுக்கு உஜ்ஜீவநோபாயமான நல்விரகுகள், சிந்திக்கில் - ஆராயநினைக்கில், மாயன் - (ஞானப்பிரானையல்லாலில்லைநான்கண்டநல்லதுவே" என்கிறபடியே ப்ரளயாபத்துக்குஉதவி, ஸம்ஸாரார்ணவோத்தரணோபாய பூதனுமாய்) ஆஸ்சர்யகரனான வராஹரூபியுடைய, கழல் - திருவடிகளை, அன்றி - ஒழிய, சூழ்வரோ - ஆஸ்ரயிப்பரோ ?

இ.—அஞ்சாம்பாட்டில், பூமியை ப்ரளயங்கொள்ள "இங்ஙனே இருப்பதொன்றை ஸ்ருஷ்டித்துக் கொள்ளுகிறோம்" என்று உபேக்ஷியாதே, தன்னை அழியமாறி பூமியை எடுத்தருளின இம்மஹாகுணத்தை அநுஸந்திக்கிறார்.

[சூழல்கள் இத்யாதி] - தந்தாமுக்கு புருஷார்த்தோபாய சிந்தைபண்ணில், ஆஸ்சர்யசக்தியுக்தனை யல்லது பற்றுவரோ? சேதநபேதத்தோபாதி போருமிறே உபாயபேதமும். எல்லா உபாயங்களிலும் அநுவ்ருத்தமாய் ஃபலப்ரதமாய் ப்ரயோஜநமுமாய் ஸ்வரூபாநுரூபமுமாய் ஸாத்யமன்றிக்கே ஸித்தமுமாயிருக்குமத்தை யல்லது பற்றுவரோ? இத்தலையில் பாரதந்த்ர்யத்தையும் அஜ்ஞாநாசக்திகளையும் அநுஸந்தித்து, அவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையும் ஜ்ஞாநசக்திகளையும் ப்ராப்தியையும் அநுஸந்தித்தால், ஸ்வாமிமதஸித்திக்கு அவனையல்லது பற்றுவரோ? [மாயன்கழல்] - ஆஸ்சர்யசக்தியுக்தன் என்னுதல், பேற்சொல்லுகிறவடிவில் ஏற்றத்தை நினைத்துச்சொல்லுதல். அவன் திருவடிகளையே வேண்டுகிறதென் என்னில்?—அடியானுக்குஅடியோடேயந்வயம். ஸம்ஸாரார்ணவத்திலே அஸத்ஸமனாயிருக்கு மவனுக்கு, நஷ்டோத்தரணம் பண்ணினவனைப் பற்றவேண்டாவோ? ப்ரளயத்துக்கு கர்மீபூதவற்றைப் பற்றவோ? நித்ய ஸம்ஸாரியாகைக்கு வேண்டுவனவிறே இவன்பக்கலுள்ளது. ஸ்வவிநாசத்துக்கு இடம் பார்த்துத்திரியும்இவன், உஜ்ஜீவநத்துக்கிடம் பார்த்துத்திரியும்அவன். [ஆழப்பெருப்புனல் தன்னுள் இத்யாதி] - ஆழத்தையுடைத்தான பெரும்புனல் என்னுதல், பெரும்புனலிலே ஆழவழுந்தின ஞாலமென்னுதல். ஸர்வசக்திக்கும் அதுக்கிடாயிருப்பதொரு வடிவு கொண்டெடுக்கவேண்டி யிருக்கை. [தாழப்படாமல்] - ப்ரளயங்கொண்டு அங்ஙனேஉருமாய்ந்து போகாமே. [தன்பாலொரு கோட்டிடை] - தன்னுடைய ஒருகொம்பிலே. கொண்டவடிவிற் பரப்பு: பூமியடங்க தன் திருவெயிற்றுக்குள்ளே அடங்கும்படியாயிற்று; ரக்ஷ்யத்தினுடையவளவன்றே ரக்ஷகனுடைய பாரிப்பு. [தான்கொண்ட] - ஒருவர் அர்த்தியாதிருக்கத் தானேகொண்ட. [கேழற்றிருவுரு] - நீருக்கும் சேற்றுக்கும் இளையாதபடி ரக்ஷணத்துக்குப் பாங்கான வடிவைக்கொண்டான் அவன்; அதுதான்

*ஆலத்தி வழிக்கவேண்டி யிருக்கையாலே - 'திருவுரு' என்கிறார் இவர். "கோலவராக மொன்றாய்." "பன்றியாந்தேசு" - பரமபதநிலையனான தேஜஸ்ஸுக்கும் அவ்வருகே ஒரு தேஜஸ்ஸிறே இது. [கேட்டுமுணர்ந்துமே] - சொல்லக்கேட்டும் மநநம் பண்ணியும் - மாயன்கழலன்றிச் சூழ்வரோ. கீழிற்பாட்டில் - ஸ்ருஷ்டியைச் சொல்லுகையாலே, ஜகத் காரணமாய் உபாஸ்யமான மேன்மைதோற்றிற்று; தன்னுருக்கெடுத்து வேற்றுருக் கொண்ட நீர்மைக்கு, தாம் குலையாமல் ஸ்ருஷ்டித்தது ஓரேற்றமோ?*

ஈடு.— அஞ்சாம்பாட்டு. ஜகத்ஸ்ருஷ்டிபண்ணினதோர் ஏற்றமோ, ஸ்ருஷ்டமானஜகத்தை ப்ரளயங்கொள்ள மஹாவராஹமாயெடுத்து ரக்ஷித்தகுணத்துக்கு என்கிறார்.

[சூழல்கள்சிந்திக்கில்] - தான் தன்னோடேவற ஜீவிக்கைக்கு உறுப்பான விரகு பார்க்கில். தந்தாம் அபிமதங்கள் சித்திக்கைக்கு விரகுகள்பார்க்கில். (உபாயங்கள் பலவுண்டிறே. அடியானுக்கடியோடேயிறே யந்வயம்.) [மாயன்கழலன்றிச் சூழ்வரோ] - ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணம் ஒருதலையானால் தான் தன்னைப்பேணாதேநோக்கும் ஆஶ்சர்யபூதனானவனுடைய திருவடிகளையல்லது பற்றுவரோ? [ஆழப்பெரும்புனல் தன்னுளழுந்திய ஞாலத்தை] - ஆழத்தையுடைத்தான மிக்கஜலத்திலே யழுந்தினஞாலமென்னுதல், பெரும்புனல்தன்னுள் - ஆழ - அழுந்தியஞாலமென்னுதல். [அழுந்தியஞாலத்தை] - அண்டபித்தியிலே சென்றொட்டினபூமியை. [தாழப்படாமல்] - தறைப்படாமல்; மங்காமல். உள்ளதுகரைந்துபோனபின்பு, இனி ஸத்தையுங்கூட அழியவொண்ணாதென்று பார்த்து. [தன்பாலொரு கோட்டிடைத்தான்கொண்ட] - மஹாப்ருதிவியைத் தன் எயிற்றிலே நீலமணிபோலேகொண்ட; தன்திருவெயிற்றில்ஏகதேசத்திலேகொண்ட. உதாரராயிருப்பார் நாற்பதுபேருக்குச் சோறிடநினைத்து நூறுபேருக்குச் சோறுசமைக்குமாபோலே: ரக்ஷ்யத்தினளவு அல்லகாணும் கொண்டஎயிற்றின்பெருமை; முகாந்தரத்தாலே ரக்ஷிக்கையன்றியே, தன்முகேந வெடுத்து ரக்ஷித்தபடியிறே. [தான்கொண்ட] - கரைந்துபோன பூமியர்த்திக்கவன்றிறேசெய்தது. [கேழல்திருவுருவாயிற்று] - அழிவுக்கிட்டவடிவுதனக்கே யாலத்திவழிக்கவேண்டி யிருந்தபடி. ஆஶ்ரிதரக்ஷணத்துக்காகவந்து தன்னைப்பேணாதே ஒழியவொழிய அதுதானே நிறம்பெறும்படியாய்க் காணுமிருப்பது; "மானமிலாப்பன்றியாந்

*அஞ்சாம்பாட்டு.— சூழல்கள் இத்யாதி. "கேழற்றிருவுருவாயிற்று" என்றபதத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - ஜகத்ஸ்ருஷ்டி இத்யாதி.*

*உபாயமென்னாதே, "சூழல்கள்" என்றதுக்குபாவமாதல், அந்வயமுகேநபாவமாதல் - தான் தன்னோடு இத்யாதி. பஹுவசநார்த்தம் - தந்தாம் இத்யாதி. "கேழற்றிருவுருவாயிற்று" என்றத்தைக்கடாக்ஷித்து, "மாயன்" என்றதுக்கர்த்தம் - ரக்ஷ்யவர்க்கத்தின் இத்யாதி. சூழ்வரோ - பற்றுவரோ? சூழ்கை - ஆஶ்ரயிக்கை. "ஆழ" என்றது - *பெரும் புனலுக்கு விசேஷணமாதல், "அழுந்திய" என்றதுக்கு விசேஷணமாதல். அழுந்தியிருக்க, "தாழப்படாமல்" என்னக்கூடுமோ? என்ன - உள்ளது இத்யாதி. ஶ்வேதவராஹமாகையாலே - பூமியை 'நீலமணி' என்கிறார். "இடை" என்றதுக்கர்த்தம் - தன்திருவெயிற்றில் இத்யாதி. ஏகதேசமமைந்தால் மற்றையிடமெதுக்காகக் கொண்டானென்ன - உதாரராய் இத்யாதி. ரஸோக்தி - முகாந்தரத்தாலே இத்யாதி. கொண்ட என்னாதே, "தான்கொண்ட" என்றதுக்குபாவம் - கரைந்துபோன இத்யாதி. "திரு" என்றதுக்கு - விக்ரஹஸௌந்தர்யமாகவர்த்தம் - அழிவுக்கு இட்ட இத்யாதி. ஆத்மகுணத்தால்வந்த அழகாகவர்த்தாந்தரம் - ஆஶ்ரிதரக்ஷணத்துக்கு இத்யாதி. அழிவுக்கிட்ட வடிவுதனக்கு - தன்மேன்மைவிட்டு நீர்மையைக்கொள்ளுகையான வராஹவேஷத்துக்கென்றபடி. வராஹநாயனார்அப்படி யழகியராயிருப்*

தேசு'' என்னும்படியே. "மாசுடம்பில்நீர்வாரா" - எங்கேனுமுண்டான அழுக்கும் வந்து சேரும்படியிருப்பதொரு வடிவைக்கொண்டு. "மானமிலாப்பன்றியாம்" - ஈஶ்வரத்வம் பின்னாட்டாதிருக்கை. ஸஜாதீயங்கள் மோந்துபார்த்து "தன்னினம்" என்று விஶ்வஸிக்கும்படி அகவாயிற்புரையற் றிருக்கை. மாயாம்ருகத்தைமோந்துபார்த்து "ராக்ஷஸகந்த முண்டு"என்று போயிற்றினவிறே ம்ருகங்கள். "பன்றியாந்தேசுடைதேவர்" இவ்வடிவு கொண்டிலனாகில் அருமந்ததேஜஸ்ஸையெல்லாம் இழக்கும்படியாகாதே. நித்யஸூரி களுக்கு ஓலக்கங்கொடுத்து அங்கேயிருப்பதிற்காட்டிலும் தாழவிட்டத்தால்வந்த ஏற்றம். [கேட்டுமுணர்ந்துமே] - ஶ்ரவண மநநங்கள்பண்ணியும் - சூழல்கள் சிந்திக்கில் மாயன் கழலன்றிச்சூழ்வரோ? தான் ஜகத்காரணத்வாதி குணங்களொன்றும் குறையாதபடி ஸங்கல்பத்தாலே ஜகத்தை ஸ்ருஷ்டித்தானென்னுமதுஓரேற்றமோ, ப்ரளயங்கொண்டபூமியை, தன்னுருக்கெடுத்து வேற்றுருக்கொண்டெடுத்த இவ்வுபகாரத்துக்கு ? (ரு)

---

## ஆறாம் பாட்டு.

---

**கேட்டுமுணர்ந்தவர்கேசவற்காளன்றியாவரோ ?**
**வாட்டமிலாவண்மைமாவலிவாதிக்கவாதிப்புண்டு**
**ஈட்டங்கொள்தேவர்கள்சென்றிரந்தார்க்கிடர்நீக்கிய**
**கோட்டங்கைவாமனனாய்ச்செய்தகூத்துக்கள்கண்டுமே.**

*ஆ.—(கேட்டுமுணர்ந்தவர்) - மஹாபலியாகிற மஹாஸுரனாலே பீடிதமாய் தந்நிரஸநார்த்திபான தேவஸமூஹத்தாலே யர்த்திதனான எம்பெருமான், அவனுடைய ஔதார்யத்தாலே ஸ்வரூபேண அவனை, நிரஸிக்கமாட்டாமை ஸ்ரீவாமநனாய் வந்து பிறந்தருளி, ஆஶ்ரிதார்த்தமாக "ஊர்த்வ ந்யூதிமவ்ஹீயாஸ" என்கிற தன்ஸ்வரூபத்தையுங்கூட அந்யதாகரித்துக் கொண்டவனுடைய ஜகத்தை, "கொள்வனான் மாவலிமூவடிதா"என்றுஇரந்துகொண்டுசெய்தருளின ஆஶ்சர்யங்களைக்கண்டுவைத்தும், அறிவுடையராயிருப்பார், ப்ரஹ்மேஶாநாதிகளுக்குக் காரணபூதனான ஸ்ரீவாமநனுக்கல்லது ஆளாவரோ ? என்கிறார்.*

*ஒ.—ஆறும்பாட்டில், தன் ஸாமர்த்தியத்தினாலே பூமியை எடுத்தருளின அதிற்காட்டிலும், தன் மேன்மை பொகட்டிருந்துகொள்ளுகையாலே கீழ்ச்சொன்ன*

---

*பரோ? என்ன* - மானமிலா *இத்யாதி. "மாசுடம்பு" என்றதுக்கர்த்தம்* - எங்கேனும் *இத்யாதி. "மானமிலா" என்றதுக்கர்த்தம்* - ஈஶ்வரத்வம் *இத்யாதி. "ஆம்" என்றதுக்கர்த்தம்* - ஸஜாதீயங்கள் *இத்யாதி. வராஹமானால் தன்னினமென்று விஶ்வஸியாதோ ? என்ன* - மாயாம்ருகத்தை *இத்யாதி: "தேசு" என்றதுக்குபாவம்* - இவ்வடிவு *இத்யாதி. "தேவர்" என்றதுக்குபாவம்* - நித்யஸூரிகளுக்கு *இத்யாதி. 'கேட்டுமுணர்ந்தும் அத்தாலே ஸ்வயத்நத்தைவிட்டவர்கள், 'சூழல்கள்சிந்திக்கில் மாயன் கழலன்றிச்சூழ்வரோ' என்று கூட்டுவது. "ஜமதக்ஷி" இத்யாத்யவதாரிகாவாக்யத்தை ஸோபபத்திகமாக அருளிச்செய்கிறார்* - தான் ஜகத்காரணத்வாதி *இத்யாதி. 'ஆழப்பெரும்புனல்' என்று தொடங்கி, 'கேட்டுமுணர்ந்தும் - சூழல்கள் சிந்திக்கில் மாயன்கழலன்றிச்சூழ்வரோ ?' இத்யந்வயஃ.*

குணங்களிற் காட்டிலும் மஹாகுணமான வாமநவ்ருத்தாந்தத்தை அநுஸந்திக்கிறார். [கேட்டும் என்று தொடங்கி] - ஹிதங்களைப் பிறர் சொல்லவும் கேட்டு தங்கள் ஹ்ருதயத்தால் அத்யவஸித்திருக்குமவர்கள் ப்ரஹ்மாநாதிகளுக்கு நாயகனானவனுக்கன்றி ஆளாவரோ? [வாட்டமென்று தொடங்கி - நிரந்தரமாகக் கொடுக்கவல்ல கையையுடைய மஹாபலி பாதிக்கபாதிதராய்த்திரண்டுசென்று இரந்ததேவர்களுடைய துக்கத்தைக் கெடுத்தருளின ஏற்றகையையுடைய ஸ்ரீவாமநனைச் செய்தருளினமநோஹாரியான சேஷ்டிதங்களை அநுஸந்தித்துவைத்தும்.

ப.—அநந்தரம், ஆகாரத்தை யழியமாறினவளவன்றியே யத்தோடே ஆத்மகுணத்தையுங்கூட அழியமாறின அர்த்தித்வ ஸாமர்த்த்யத்தை யருளிச்செய்கிறார்.

வாட்டமிலா - ஒருகாலுஞ்சுவறாத, வண் - ஔதார்யத்தையுடைத்தான, கை - கையையுடைய, மாவலி - மஹாபலியானவன், வாதிக்க - (தன்செருக்காலே) நலிய, வாதிப்புண்டு — நலிவுபட்டு, ஈட்டங்கொள் - பரஸ்பரவிரோதமற்றுத் தம்மில்தாம் சேர்ந்துதிரண்ட, தேவர்கள் - உதாரஸ்வபாவரானதேவர்கள், சென்று - (எழுந்தருளியிருந்தவிடத்தே தாங்களே) சென்று, இரந்தார்க்கு - ("ஸரணம் த்வாம் ப்ரபந்நாஸ்ஸ்ம:" என்கிறபடியே) ப்ரார்த்தநாரூபையான ஸரணாகதியைப்பண்ணினவர்களுக்கு, இடர்நீக்கிய - (கார்யப்ரதிஜ்ஞாவசநத்தாலே) மநோதுக்கநிவர்த்தகனாய்க்கொண்டு, (மஹாபலியினுடையஔதார்யமே பற்றாசாகவர்த்தியாய்ச் சென்று, தன்னுடைய ஐஸ்வர்யத்தாநத்தையிலுங்காட்டில்), கோடு - அர்த்தித்தேற்கையாலே, அம் - அழகுபெற்ற, கை - கையையுடையனான, வாமநனாய் - வாமநவடிவைக்காட்டி வஸீகரித்தும், (வார்த்தையாலே நெஞ்சைக்கலக்கியும், வளர்ந்தளந்தபோதே அநாயாஸேந வ்யாபரித்தும்), செய்த - பண்ணின, கூத்துக்கள் - நாடகங்களை, கண்டும் - ப்ரத்யக்ஷஸமாநாகாரமாக அநுஸந்தித்தும், கேட்டும் - (அந்தஅபதாநத்தைப் புராணாதிமுகத்தாலே) கேட்டும், உணர்ந்தவர் - அறிவுடையரா யிருந்தவர்கள், கேசவற்கு - அலைந்தகுழலோடேவருகையாலே ப்ரஸஸ்தகேசனான வாமநனுக்கு, அன்றி - அல்லது, (வேறொருவர்க்கு), ஆள் - அடிமை, ஆவரோ - ஆவரோ? கேசவனென்று — ஒருவன் திருவடிவிளக்க, ஒருவன் தீர்த்தம் சுமக்கும்படி ப்ரஹ்மருத்ரர்களுக்கு நிர்வாஹகனென்றுமாம்.

ஈ—ஆறும்பாட்டில், தன் ஸாமர்த்தியத்தாலே பூமியை எடுத்தருளினதிற்காட்டிலும், இரப்பாளனாய்த் தன்னுடைமையை அழியக்கொடாத மஹாகுணமான வாமநவ்ருத்தாந்தத்தை அநுஸந்திக்கிறார். [கேட்டு இத்யாதி] - ப்ரியஹிதங்களைப்பிறர் சொல்லவுங் கேட்டுத் தங்கள் ஹ்ருதயத்தாலே அத்யவஸித்திருக்குமவர்கள், ப்ரஸஸ்தகேஸனுக்கன்றி ஆளாவரோ? ப்ரஹ்மருத்ராதிகளுக்கு உத்பாதகனென்றுமாம். நிரந்தரமாகக்கொடுக்கும் கையையுடையமஹாபலி பாதிக்கபாதிதராய். மஹாபலிபக்கலிலே "ஔதார்யம்" என்று ஒரு குணம் கிடைக்கையாலே, ஹிரண்யராவணாதிகளைப் போலே அழியச் செய்யாதே, அவன் ஔதார்யத்துக்குத்தான்இலக்காய் தன் விபூதியை அவன் நெருக்காதபடி மீட்டானாயிற்று. [ஈட்டங்கொள் தேவர்கள்] - ஈட்டம் - திரள். ஈஸ்வராபிமாநிகளாய் "ஒருவர் பக்கல் செல்லக்கடவோமல்லோம்" என்றும், எல்லார்க்கும் இடுமதொழிய "ஒருவர் பக்கல் ஒன்றுங்கொள்ளக் கடவோமல்லோம்" என்றும் இருக்குமவர்களாய், தன்னில்தான் சேர்த்தியின்றிக்கே யிருக்கிற தேவர்கள், ஆபத்தின் மிகுதி

யாலே தன்னிலே ஒரு மிடறாய் ஸமாநாபிமாநிகளாய்ச்சென்று இரந்தவர்களுக்கு, ''நம்பக் கலிலே வந்திரந்தார்கள்'' என்கிற இத்தையே கொண்டு ''உங்கள் காரியமெல்லாம் செய் கிறோம்'' என்றுசொன்ன வார்த்தையாலே அவர்கள் தைந்யத்தைப்போக்கி, ''மாஸுசஃ'' என்றான். தைந்யம்போக்கினபடி என்? என்னில், [கோட்டங்கை வாமநனாய்] - ஏற் றுக்குவிந்த கையையுடையனாய். அங்கை - கொடுத்து வளர்ந்த கை. [செய்த கூத்துக் கள்] - அன்றேபிறந்து அன்றே வளர்ந்து அன்றே பிக்ஷையிலே அதிகரித்து, சிறு காலைக் காட்டி இரந்து பெரியகாலாலே அளந்துகொண்ட மநோஹாரிசேஷ்டிதங்களை அநுஸந் திக்கும் - கேட்டுமுணர்ந்தவர் கேசவற்காளன்றி ஆவரோ? [கூத்துக்கள்] - மநோஹாரி சேஷ்டிதங்கள். வல்லாராடினாற்போலே இருக்கிறதாயிற்று இவர்க்கு.

ஈடு.—ஆறாம்பாட்டு. கீழ்ச்சொன்ன குணங்கள்தான் ஓரேற்றமோ, * அலம் புரிந்த நெடுந்தடக்கையைக்கொண்டு கோட்டங்கைவாமநனாய் இந்தப்பூமியை ரக்ஷித்த மஹாகுணத்துக்கு ? என்கிறார்.

[கேட்டுமுணர்ந்தவர்] - ஓராசார்யன் ஓரர்த்தத்தை யுபதேசித்தால் அத்தை ச்ர வணம்பண்ணி, ''ஏவம்ஜ்ஞாத்வாபவிதுமர்ஹதி'' (ஏவம்ஜ்ஞாத்வாபவிதுமர்ஹதி) என்கிறபடியே பின்னை யவ்வர்த்தத்தைத் தெளிந்திருக்குமவர்கள். [கேசவற்காளன்றியா வரோ] - புறம்பாச்ரயணீயரில்லாதபடி தானே ஆச்ரயணீயனானவனுக்கொழிய ஆளா வரோ ? ''ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத்கேசவநாமவாந்'' (ஆவாந் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத்கேசவநாமவாந்) - என்கிறபடியே யாதல், ப்ரசஸ்தகேசன் என்னுதல். [வாட்டமிலாவண்கை] - கொடுத்துமாறக்கடவதன்றியே, எப்போதும் கொடுக் கையிலே ஒருப்பட்ட கை. ராவணாதிகளைப்போலே தலையறுத்துப்போகட வோண்ணா மைக்கு நிபந்தநமுண்டாகையாலே யழியச்செய்திலன். [மாவலிவாதிக்கவாதிப்புண்டு] - இது பற்றாசாக அவன்நெருக்க நெருக்குண்டு. [ஈட்டங்கொள்தேவர்கள்] - க்ராமணிகளைப் போலே, ஒருவர் †உச்ச்ராயம்ஒருவர்பொறாதே, தலையறுப்பாரும் தலையறுப்புண்பாருமாய்த் திரியக்கடவ ஜாதியிறே ; இப்படி சேராச்சேர்த்தியா யிருக்கிறவர்கள் ஆபத்து மிக்கவாறே

ஆறாம்பாட்டு.—கேட்டும் இத்யாதி. கீழ்அஞ்சுபாட்டிலும்சொன்ன குணங்களைப்பற்ற இப் பாட்டிற்சொல்லுகிறகுணம் அதிகமென்கிறார் - கீழ்ச்சொன்ன இத்யாதி. திருநெடுந்தாண்டகம், 'அலம்புரிந்தநெடுந்தடக்கை'; அர்த்திகளுக்கு ''போதும்'' என்னும்படி கொடுக்கவல்ல பெரிய கை யென்றபடி. 'கோட்டங்கைவாமநனாய்' - நீரேற்கக் குவித்த அழகியகையையுடைய வாமநனையென்ற படி. கோடு - குவிக்கை.

''ஜ்ஞாத்வா - ஏவம் - பவிதும் - அர்ஹதி'' என்றந்வயம். ''ப்ரஹ்மருத்ரோத்பாதகன்'' என்கிறவர்த்தத்திலேபாவம் - புறம்பாச்ரயணீயர் இத்யாதி. ப்ரதாநரான ப்ரஹ்மருத்ராதிகளுக்கு உத்பாதகனென்றபோதே, இவனையொழிய வேறு ஆச்ரயணீயரில்லையென்றபடி. ப்ரஹ்மருத்ரோத் ல ப்ரமாணம - ஆவாம் யாதி. ஹரிவம்சே கைலாஸயாத்ராயாம், ''பஹவோ நாமஸம்ஸாரம் ஸஹவஜ்ஞாஹி நாம்'' இதி பூர்வார்த்தம். ''வாட்டமிலா'' என்ற துக்கர்த்தம் - கொடுத்துமாற இத்யாதி. இப்போது இவனுடைய ஔதார்யத்தை வர்ணிக்கிறதுக்கு பாவம் - ராவணாதிகளை இத்யாதி. இதுபற்றாசாக - இந்த ஔதார்யம் பற்றாசாக. தேவர்கள் திரளா யிரார்களோ, ''ஈட்டங்கொள்'' என்று விசேஷிக்கிறதென் ? என்ன, பாவம்-க்ராமணிகளை இத்யாதி. ஆனால், இப்படிப்பட்டவர்கள் திரளுகைக்கு ஹேதுவேதென்ன - இப்படி சேரா இத்யாதி. இரங்

† உச்ச்ராயம் - மேன்மை.

தந்தாமபிமாநங்களைப்போகட்டு, எல்லாரும் ஒருமிடறாய்வந்துவிழுந்தார்கள். ஈட்டம்-திரள். [சென்றிரந்தார்க்கிடர்நீக்கிய] - கூறுசெய்வானும் அம்பலத்தேயிருந்தால் ''ஈஶ்வரனும் நம் பக்கல் வரத் தட்டேன்?'' என்றிருக்குமாபோலே, ''' எல்லாரும்நம்பக்கல்வரவேணும் ' என்றிருந்தவர்கள் தங்களாபத்தின்கனமிறே தூர்மானிகளாயிருக்கிறவர்கள் திரளவந்திரந்தது'' என்று திருவுள்ளத்திலேகொண்டு அவர்கள் இடரைப் போக்கினபடி. ''அதிகம்மேநிரேவிஷ்ணும்'' (அதிகம்மேநிரேவிஷ்ணும்) என்று - ஒரு சொத்தைவில்லை முறித்தபோதாக எம்பெருமான் ஸர்வாதிகனென்பது; அல்லாதபோது ''ஸம்ஶயோஜாதஈஶ்வரே'' (ஈஶ்வரோஹம்) என்பதான தேவஜாதி பற்காட்ட, அவர்கள் இடரை நீக்கினபடி. [கோட்டங்கை வாமநனாய்] - நீரேற்கக்குவித்த அழகிய கையையுடையனாய்; ''போல்லாக்குறளுருவாய்ப் பொற்கையில்நீரேற்று'' என்கிறபடியே, தேவர்களை நெருக்குகையாலேயழியச்செய்யவேணும்: குணவிசேஷத்தாலேயழியச்செய்யமாட்டான்; இனி, இரண்டுக்கும் அநுரூபமாக ஒரு வழி ரக்ஷகனானதான் பார்க்குமித்தனையிறே. [பொற்கை] - பொலிவெய்தின கை. அழகியகையென்றபடி. கொடுத்துவளர்ந்த கை; ''கோஸஹஸ்ரப்ரதாதாரம்'' (கோஸஹஸ்ரப்ரதாதாரம்) என்றும், ''தத்யாந்நப்ரதிக்ருஹ்ணீயாத்'' (தத்யாந்நப்ரதிக்ருஹ்ணீயாத்) என்றும் சொல்லுகிறபடியே. (ஏற்றுக்குவிந்த கையையுடையனாய். அங்கை - அழகியகை.)[செய்தகூத்துக்கள் கண்டுமே] - அன்றேபிறந்து அன்றேவளர்ந்து அன்றேபிக்ஷையிலே யதிகரித்து, மஹாபலியஜ்ஞவாடத்தளவும் செல்ல, பூமிநெளியும்படி பதறிநடந்து சென்றுபுக்கு, க்ருஷ்ணாஜிநமும் யஜ்ஞோபவீதமும் முஞ்ஜியுமான 1 விநீதவேஷத்துடனே நின்று, ''கோள்வனன்''என்றாற்போலேசொன்ன 2 முக்தஜல்பிதங்களும், சிறுகாலைக்காட்டிப் பெரியகாலாலே யளந்தது மாகிற இவ்வ்யாபாரங்களடங்கலும் இவர்க்குவல்லாராடினாற்போலே யிருக்கிறபடி. ஐஶ்வரமான மேன்மையுங் கிடக்கச்செய்தே, ஶ்ரிய:பதியான தான் இரந்து ஆஶ்ரிதரை ரக்ஷித்த நீர்மைக்கு,ப்ரளயங்கொண்ட பூமியையெடுத்துரக்ஷித்தது ஒரு குணமாயிற்றதோ ? என்கிறார். (ரு)

தார்க்கு என்னாதே, ''சென்றிரந்தார்க்கு'' என்றதுக்குபாவம் - கூறுசெய்வான் இத்யாதி. கூறுசெய்வான் - மணியம்பண்ணுமவன். அவர்கள் தூர்மானிகளோ ? என்ன - அதிகம்மேநிரே இத்யாதி. கோடுதல் - குவித்தல். ''அம்'' என்று - அழகு. அதாவது - ஔதார்யம். ''நீரேற்க'' என்றதுக்கு ப்ரமாணம் - பொல்லா இத்யாதி. நாய்ச்சியார்திருமொழி. நீரேற்கவேண்டுவானென் ? என்ன - தேவர்களை இத்யாதி. கைக்கு அழகேதென்ன - கொடுத்துவளர்ந்த இத்யாதி. இதுக்கு ப்ரமாணம் - கோஸஹஸ்ர இத்யாதி. ''தக்ஷிணாவத்பிராக்ஷிணம் ராம: ஸ்நானபரிவஹனம் । கோஸஹஸ்ரப்ரதாதாரம் ஸாக்ஷாதுபஜீவ்யம் ராஜ:'' இதி யுத்தகாண்டே, (உக - எ) வருணம்ஶரணம் கச்சதோ ராமஸ்ய க்ருத்யகதநே. ''தத்யாந்நப்ரதிக்ருஹ்ணீயாத் ஸத்யம்ப்ரூயாந்நசாந்ருதம் । அபி ஜீவிதஹேதோர்வா ராம: ஸத்யபராக்ரம:'' இதி ஸுந்தரகாண்டே ஹநுமந்தம்ப்ரதி ஸீதா(ஙரு - உகு½). ''கூத்துக்கள்''என்ற பஹுவசநார்த்தம்-அன்றேபிறந்து இத்யாதி. இத்தை ''கூத்து''என்கிறது. ஆகர்ஷகத்வத்தைப் பற்ற என்கிறார் - வல்லாராடினாற்போலேயிருக்கிறபடி என்று. கீழிற்பாட்டைப்பற்ற இப்பாட்டுக்கு ஆதிக்யமேதென்ன - ஐஶ்வரமான இத்யாதி. கூத்துக்களை - ஆசார்யமுகத்தாலே கேட்டுமுணர்ந்தும் - கண்டும், அதாவது - ஸாக்ஷாத்கரித்தும்இருக்குமவர்கள் - கேசவற்காளன்றி யாவரோ ? இத்யந்வய:. (ரு)

1. விநீதவேஷம்-வணக்கமுள்ளவடிவம். 2 முக்தஜல்பிதம்-மநோஹாரியான பேச்சு.

## ஏழாம் பாட்டு.

**கண்டுந்தெளிந்துங் கற்றார்கண்ணற்காளன்றி யாவரோ?**
**வண்டுண்மலர்த்தொங்கல் மார்க்கண்டேயனுக்கு வாழுநாள்**
**இண்டைச்சடைமுடியீசனுடன் கொண்டுசாச்செல்ல**
**கொண்டங்குத்தன்னொடுங்கொண்டு உடன்சென்றதுணர்ந்துமே.**

ஆ —(கண்டுந்தெளிந்தும்.)—மாதாபிதாக்களாலே மஹாதபஸாலப்தனும் அநவரதம் உபலாலிதனுமிருந்த மார்க்கண்டேயன் தன்னுடைய ஆயுரர்த்தமாக ருத்ரனை யாஶ்ரயிக்க, அவனும் "மத்ஸமீஹித ஸித்த்யர்த்தமாக நானும் பரமபுருஷனைநோக்கி தபஶ்சர்யைபண்ணி வர்த்திக்கிறது" என்றுசொல்லித் தன்னுடைய தபோவிஶேஷத்தையுங்காட்டி, "அவனுடைய திருவடிகளை யாஶ்ரயிக்கப்போரு" என்று அவனைக்கொண்டு ருத்ரன் வந்தாஶ்ரயிக்க, அவனுக்காக மார்க்கண்டேயனுக்கு ஸமக்ரமான ஆயுஸ்ஸைக்கொடுத்தருளி நித்யகிங்கரத்வேந விஷயீகரிப்பதுஞ்செய்தருளின இம்மஹாகுணத்தையறிந்துவைத்தும், ஸாராஸாரவிவேகஜ்ஞராயிருப்பார் அந்த க்ருஷ்ணனுக்கு ஆளன்றி யாவரோ? என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், ஸ்ரிய:பதியான தான் பிறரை இரந்து ஆஶ்ரிதநுடைய அபேக்ஷிதபூரணம் பண்ணின குணத்திற்காட்டிலும், தேவதாந்தரபஜநம் பண்ணுகையாலே உபேக்ஷ்யனான மார்க்கண்டேய விஷயீகாரமாகிற விலக்ஷணமான குணத்தை அநுஸந்திக்கிறார்.

[கண்டுமென்று தொடங்கி]-ப்ரியஹிதங்களை அநுஸந்தித்தும் அத்யவஸித்துமிருக்குமவர்கள் க்ருஷ்ணனுக்கன்றி ஆளாவரோ? [வண்டென்று தொடங்கி] - வண்டு உண்ணாநின்ற பூமாலையை உடையனாய் பாலனான மார்க்கண்டேயனுக்கு ஆயுஸ்ஸுக்காக "நானும் உன்னோடொத்த ஸாதகன்காண்" என்று தன்னுடைய ஜடையைக் காட்டிக்கொண்டு உடனே பேச்சாட்டுத்துணையாகச் செல்ல அவனை விஷயீகரித்துத் தன்னோடொத்த வரிசையைக்கொடுத்தும் பிரியாதே சென்றபடியை உணர்ந்தும். [உசாய்ச் செல்ல] - என்று பாடமாம்போது, வாழுநாள் விசாரித்துச்செல்ல என்றுமாம்.

ப.—அநந்தரம், தான் அர்த்தியாய்வைத்து ஸர்வதேவதைகளும் தன்காற்கீழேவளரும்படியான ஆதிக்யத்தளவன்றியே, தேவதாந்தரபரனான மார்க்கண்டேயனையும் அங்கீகரித்த அதிஶயிதகுணத்தை அநுஸந்தித்தருளுகிறார்.

வண்டு - வண்டுகள், உண் - மதுபாநம்பண்ணுகிற, மலர் - மலரையுடைத்தான, தொங்கல் - மாலையையுடையனாகையாலே, (போகயோக்யமான யௌவநாவஸ்த்தையையுடைய), மார்க்கண்டேயனுக்கு - , வாழுநாள் - உஜ்ஜீவநகாலத்தை, இண்டை - ஸ்ரோத்ருத்வஸூசகமானமாலையையும், சடைமுடி - உபாஸகத்வஸூசகமான ஜடாமகுடத்தையுமுடைய, ஈசன் - ஈஶ்வராபிமாநியான ருத்ரன், (ஆஶ்ரிதனானவவன்றன்னையும்), உடன் - கூட, கொண்டு - , உசா - ஸர்வாதிகனானதன்பக்கலிலே யுசாவவேணுமென்று, செல்ல - , அங்கு - அந்நிலையிலே, கொண்டு - (அவனை ரக்ஷணீயனாகத்திருவுள்ளத்திலே) கொண்டு, (தேவதாந்தராந்வயத்தைக்கழித்து), தன்னொடும் - தன்னோடே,

கூட்டிக்கொண்டு, உடன் - யாவதாத்மபாவி அவன்பிரியாதபடி, சென்றது - நடந்தப்ரகாரத்தை, உணர்ந்துமே - புராணாதிமுகத்தாலேயறிந்துமே, கண்டும் - தேவதாந்தரங்களிற்காட்டில் இவனுக்குண்டான உத்கர்ஷத்தையபரோக்ஷித்தும், தெளிந்தும் - "க்ஷயிஷ்ணவ: ஸர்வ ஏவைதே விஷ்ணு: ..." என்னும் கணக்கிலே தெளிந்தும், கற்றார் - இப்படி விலக்ஷணபுருஷமுகத்தாலே கல்வியையுடையவர்கள், கண்ணற்கு - ஆநந்தஜநகனான ஸர்வேஶ்வரனை, அன்றி - ஒழிய, (வேறொருவர்க்கு), ஆள் - அடிமை, ஆவரோ - ? இண்டை - மாலை. செறிவாகவுமாம்.

இ.—ஏழாம்பாட்டில், ஸ்ரீய:பதியான தான் ஆஶ்ரிதர்க்காக அர்த்தியான குணத்திற்காட்டிலும், தேவதாந்தரபஜநத்தாலே உபேக்ஷ்யனான மார்க்கண்டேயவிஷயீகாரமாகிற விலக்ஷணகுணத்தை அநுஸந்திக்கிறார்.

[கண்டுந்தெளிந்துங்கற்றார்] - கற்றுந்தெளிந்துங்கண்டார் - ப்ரியஹிதங்களை ஶ்ரவணம்பண்ணி, தங்களிலே அப்யஸித்து, அத்தை ஸாக்ஷாத்கரித்தவர்கள், ஸர்வஸுலபனுக்கன்றி ஆளாவரோ? ஐஶ்வர்யார்த்திக்கு ஐஶ்வர்ய விஶிஷ்டனாயும், கேவலனுக்கு ஶுசிகுண யுக்தனாயும், பகவல்லாபார்த்திக்கு ஸமஸ்தகல்யாணகுண விஶிஷ்டனாயும், இப்படியால் ஸாவஸாலபனானவனுக்கு. [வண்டென்று தொடங்கி] - வண்டு உண்ணுகின்றுள்ள பூமாலையையுடையனாய் - பாலனான மார்க்கண்டேயனுக்கு. [வாழு நாள்] - ஆயுஸ்ஸாகக. [இண்டைச்சடைமுடியீசன] - நெடுநாள் பச்சைகொண்டு பலவேளையிலே "நானும் உன்னோடொக்க ஸாயகன் காண்" என்று ஜடையைக் காட்டினான். [உடன்கொண்டுசாச்செலல] - "ஆஶ்ரயித்தவனை விடவொண்ணாது" என்று அவனைக் கூடக்கொண்டு உசாத்துணையாகச் செல்லவென்னுதல், புருஷகாரமாகச் செல்லவென்னுதல். அன்றிக்கே, [உசாய்ச்செல்ல] - வாழுநாள் உசாவிச் செல்ல. "இவன் ஜீவிக்கும் ப்ரகேதோ?" என்று ஆராய்ந்துகொண்டுசெல்ல [கொண்டங்கு] - அங்குக்கொண்டு: ரக்ஷ்யபூதனாகத் திருவுளளத்திலேகொண்டு. [தன்னொடுமகொண்டு] - "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" என்று தன்னோடொத்த வரிசையைக்கொடுத்து, [உடன் சென்றதுணர்ந்தும்] - பின்னை ஒருநாளும் பிரியாதே சென்றபடியை உணர்ந்தும் - கண்டுந்தெளிந்தும் கற்றார் கண்ணற்காளன்றியாவரோ? நெடுநாள் தேவதாந்தரபஜநம் பண்ணினவன், மறந்தும் புறந்தொழாமாந்தரான ஸாத்விகபுருஷகாரமாகவாதல் பிராட்டி புருஷகாரமாகவாதல் அன்றிக்கே, தாமஸதேவதையை புருஷகாரமாகக் கொண்டுவர; புறந்தொழாதவகட்டடிசிற, அவர்களையும் பொருந்தவிட்டு, மேன்மேலே ரக்ஷித்த நீர்மைக்குப்போருமோ கீழ்ச்சொன்ன குணங்கள்? என்கிறது.

ஈடு.—ஏழாம்பாட்டு. ஸ்ரீய:பதியான தன்னைத்தாழவிட்டிரந்து ரக்ஷித்தது பெரிய ஏற்றமோ? தேவதாந்தரபஜநம்பண்ணின மார்க்கண்டேயனை விஷயீகரித்த இம்மஹாகுணத்துக்கு? என்கிறார்.

---

ஏழாம்பாட்டு.—கண்டும் இத்யாதி. "மார்க்கண்டேயனுக்கு வாழுநாள்" இத்யாதிகளைக் கடாக்ஷித்தவதாரிகை - ஸ்ரீய:பதியான இத்யாதி.

[கண்டுந்தெளிந்துங்கற்றார்] - (கற்று - தெளிந்து - கண்டார்) ஒருவன்பக்கலிலே ஓர் அர்த்தத்தைசிக்ஷித்து, அதிலே தெளியவாஸநைபண்ணி, பின்னை ஸாக்ஷாத்கார பர்யந்தமாக்கிவைப்பார். ஶ்ரவணமநநங்கள்தான் ஓர்ஸநஸாமாநாகாரத்தளவும் சென்றுநிற்குமிறே. [கண்ணற்காளன்றியாவரோ] - த்யாநபரராயிருப்பார், த்யேயவஸ்துவைவிட்டுப் புறம்பே போவரோ ? [வண்டேண்மலரித்யாதி] - வண்டுகள் மதுபாநம்பண்ணுகிற பூமாலையையுடைய ஸ்ரீமார்க்கண்டேயனுக்குவாழுநாளுண்டாகைக்காகவென்னுதல்; 'வாழுநாள் உசாச்செல்ல' என்று மேலேகூட்டுதல். மாதாபிதாக்கள் இவனையோப்பித்து விளையாடவிட, அங்கே ஓரசரீரிவாக்யம் "இவனுக்கு ம்ருத்யு குறுகிற்று" என்றுசொல்ல, அத்தைக் கேட்டு பித்ராதிகள் வெறுக்க, "இதுக்கு நீங்கள்அஞ்சவேண்டா, நான்பரிஹரித்துக்கொள்ளுகிறேன்" என்று இவன்சென்று தேவரையாஶ்ரயிக்க,அவரும் பச்சையிடும் நாளெல்லாம்இடுவித்துக்கொண்டு, ஒருநாளிலேவந்தவாறே தலைக்கடையையும் புழைக்கடையையும் அடைத்து ஜடையைவிரித்துக்காட்டி, "உன்னோபாதி யாறல்பீறல்காண்என்காரியமும்: அருகில் மாலையைப்பாராதே என்தலையில் ஜடையைப் புத்திபண்ணாய்" என்றுகாட்டி, "ஆனாலும் நெடுநாள் பச்சையிட்டு ஆஶ்ரயித்த நீ பேசாதேபோகவொண்ணாதிறே; உனக்கோராஶ்ரயம் காட்டப்பாராய்!" என்று, அவன் ஸௌலப்யாதிகுணங்களையும் மோக்ஷப்ரதத்வாதி குணங்களையும் உசாவிக்கொண்டு ஸர்வேஶ்வரன் பக்கலேறச்சென்றான். [கொண்டங்கு] - "ஐயோ! ம்ருத்யுபயபீதனாய்வந்தாயாகாதே!" என்று திருவுள்ளத்திலேகொண்டு: "துர்மாநியான இவன் கொடுவந்தான்" என்றுபாராதே, ஒருபிராட்டி புருஷகாரமாக வருவாரைக் கைக்கொள்ளுமாபோலே கைக்கொண்டு. "நெஞ்சிற்கொண்டு" என்னும்படியே. [தன்னொடுங்கொண்டு] - இவன்வந்தகார்யம் தலைக்கட்டி, பின்பு தன்னுடன் ஸாம்யாபத்தியையுங்கொடுத்து. [உடன்சென்ற துணர்ந்துமே] - ஒரு * கள்வன்கொல்லிற்பிராட்டியைக் கொடுபோமாபோலே கொடுபோனான்போலேகாணும். "பின்னையென்றும் நின்றிருவடிப்

*ஶ்ரவணாதிகள் ஸாக்ஷாத்காரபர்யந்தமாயிருக்குமோ ? என்ன - ஶ்ரவணமநநங்கள் "கண்டார்" என்றத்தைக்கடாக்ஷித்தர்த்தம் - த்யாநபரர் இத்யாதி. த்யேயவஸ்து - வாழுநாளுண்டாகைக்கு - அவன்குணங்களை யுசாவிக்கொண்டு செல்லவென்னுதல்; வாழுநாளை - உசாவிக்கொண்டு செல்லவென்னுதல். மார்க்கண்டேயனுக்கு மாலைக்குப்ரஸக்தியேதென்ன - மாதாபிதாக்கள் இத்யாதி "இண்டைச்சடைமுடி" என்றவிஶேஷித்ததுக்குபாவம் - அவரும் இத்யாதி "தேவரை" என்றும் "அவரும்" என்றும் சொன்னது - ஸோபாலம்பவசநம். ஆறல் பீறல் - கார்யாயோக்யம். அருகில்மாலை - ஜடையருகில் மாலையென்றபடி. இவனைக்கூட்டிக்கொண்டு ஸர்வேஶ்வரன்பக்கலிலே காட்டிக்கொடுக்கைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் - ஆனாலும் இத்யாதி. உசாவிக்கொண்டு - சொல்லிக்கொண்டு. "இண்டைச்சடைமுடியீசன்-" மாலையையும், ஜடையையும், கிரீடத்தையுமுடைய ருத்ரன். வாழுநாள் - ஜீவநகாலம். உடன்கொண்டு-ஆஶ்ரிதனானமார்க்கண்டேயனையும் கூடக்கொண்டு. "கொண்டு" என்றதுக்கு - காயிகஸ்வீகாரமாக அர்த்தாந்தரம் - துர்மாநியான இத்யாதி. "திருவுள்ளத்திலேகொண்டு" என்ற முந்தின அர்த்தத்துக்கு ப்ரமாணம்-நெஞ்சிற்கொண்டு இத்யாதி. "இத்தன்ணியனாயிருக்கிறவனுக்கு நாமல்லது வேறுபுகலில்லை" என்று நெஞ்சிலே கொண்டு என்றபடி. திருமொழி அஞ்சாம்பத்து எட்டாந்திருமொழி நாலாம்பாட்டு, "நஞ்சுசோர்வதோர்" இத்யாதி. "அங்கு" - அந்நிலையிலே. "உடன்சென்றது" என்றதுக்குபாவம் - ஒருகள்வன்கொல் இத்யாதி. ஸாம்யாபத்தியையுங் கொடுத்தானோ? என்ன - பின்னையென்றும் இத்யாதி. ம்ருத்யுவை நிரஸித்ததுக்குமேலே, ஒருநாளும் உன் திருவடிகளைப்பிரியாதபடி திருவுள்ளம்பற்றின என்றபடி. * ஏழையேதலனில் ஆறாம்பாட்டு, "மன்னுநான்மறை" இத்யாதி. இதுக்கர்த்தம் அருளிச்*

பிரியாவண்ணமெண்ணிய'', ''ஒருப்ருதக்தர்மி'' என்று தோற்றுதபடி, தன்னோடேவிளைகிற ரஸத்தை புஜிப்பித்தபடியை புத்திபண்ணி - கண்டுந்தெளிந்துங் கற்றார் கண்ணற்காளன்றி யாவரோ ? தன்னையாஶ்ரயித்த இந்த்ரனுக்காகத் தன்னைத்தாழவிட்டது ஒரேற்றமோ ? '' [illegible] '' (மாமேவயேப்ரபத்யந்தேமாயாமேதாந்தரந்திதே) என்னக்கடவ அவன் தேவதாந்தரபஜநம்பண்ணி, அதுக்குமேலே, அவன் புருஷகாரமாகக்கொண்டுவந்து காட்டிக்கொடுக்க, ''என்செய்வான், தன்னையாஶ்ரயித்தவனை யழியவிடாதே புறம்பேயாகிலும் கொண்டுபோய் ரக்ஷிப்பித்தான்'' என்னும் குணம்அவனுக்குண்டாக,மார்க்கண்டேயனைரக்ஷித்தநீர்மைக்கு. தாமஸபுருஷர்களோட்டை ஸஹவாஸம் ஸர்வேஶ்வரனுக்கு த்யாகஹேது; ஸத்த்வநிஷ்டரோட்டை ஸஹவாஸம் அவனுக்கு ஸ்வீகாரஹேது ; இங்ஙனேயிருக்கச்செய்தேயிறே அவன்முன்னிலையாக வந்த இவனுக்கும் காரியஞ்செய்தது! (எ)

---

## எட்டாம் பாட்டு.

செல்லவுணர்ந்தவர் செல்வன்தன்சீரன்றிக்கற்பரோ?
எல்லையிலாதபெருந்தவத்தால் பலசெய்மிறை
அல்லலமரரைச்செய்யும்இரணியனாகத்தை
மல்லலரியுருவாய்ச் செய்தமாயமறிந்துமே.

ஆ —(செல்வவுணர்ந்தவர்.) - தன்னுடைய தபோபலத்தாலே தேவர்களுக்கு ஸர்வப்ரகார பாதகனான ஹிரண்யனுடைய ஶரீரத்தை அபரிமித பரிமாண ந்ருஸிம்ஹரூபரானுக்கொண்டு பிளந்தருளின ஆஶ்சர்யத்தையறிந்துவைத்தும், அறிவுடையராயிருப்பார், ஆஶ்ரிதஸம்ஶ்லேஷரூப நிரதிஶயஸம்பத்தையுடையனானவனுடைய அந்த ஆஶ்ரிதவாத்ஸல்ய குணத்தையல்லது கற்பரோ ? என்கிறார்.

ஓ.— எட்டாம்பாட்டில், தேவதாந்தரபஜநம்பண்ணினவனை விஷயீகரித்த குணத்திற்காட்டிலும், ஆஶ்ரிதரக்ஷணத்திலுண்டான த்வரையாலே நரத்வஸிம்ஹத்வங்களிரண்டையும் ஏறட்டுக்கொண்டு அப்போதே தோற்றியருளி ஆஶ்ரிதரக்ஷணம்பண்ணின விலக்ஷணமான குணத்தை அநுஸந்திக்கிறார்.

[செல்லவென்று தொடங்கி] - முட்டஉணர்ந்தவர் பேரழகை உடையவனுடைய குணங்களையன்றிக்கே கற்பரோ? [எல்லையென்று தொடங்கி] - எல்லையில்லாத மஹாதபஸ்ஸுக்களாலே பலமிறுக்குக்களைச் செய்யாநின்றுகொண்டு தேவர்களை ஜூவேப்படுத்தாநின்றுள்ள ஹிரண்யனுடைய ஶரீரத்தைப் பெரிய ஸிம்ஹரூபத்தைக்கொண்டு பிளந்த ஆஶ்சர்ய வேஷ்டிதத்தை அறிந்துவைத்தும்.

செய்யாநின்றுகொண்டு. அந்வயங் காட்டுகிறார் - ஒரு ப்ருதக்தர்மி இத்யாதி. கீழ்ப்பாட்டைப்பற்ற இப்பாட்டுக்கு ஆதிக்யமருளிச்செய்கிறார் - தன்னையாஶ்ரயித்த இத்யாதி. இது நீர்மையானபடியை யுபபாதிக்கிறார் - தாமஸ இத்யாதி வாக்யத்ரயத்தாலே. 'வண்டுண்மலர்த்தொங்கல்' என்றுதொடங்கி, 'உடன்சென்றதுணர்ந்தும் - கற்றும் தெளிந்தும்-கண்டார் - கண்ணற்காளன்றியாவரோ?' இத்யந்வயம்.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதோபகாரார்த்தமாக ஸத்வரனாய்க்கொண்டு ஒன்றின் தலையும் ஒன்றினுடலுமாய்க்கூட்டின நரஸிம்ஹ விக்ரஹத்தை யுடையவனுடைய ஆஶ்சர்யாதிக்யத்தை யருளிச்செய்கிறார்.

எல்லையிலாத - அபர்யந்தமான, பெருந்தவத்தால் - மஹாதபஸ்ஸுக்களாலே, பல - பலவகையாக, செய் - செய்யப்பட்ட, மிறை - லோகபீடையையுடையனாய், அமரரை-பலப்ரதான தேவர்களுக்கும், "விஹாணம்ரா நஷ்டம்சநா" என்று குடியிருப்பிழந்து நித்யது:கிகளாம்படி, அல்லல் - க்லேஶத்தை, செய்யும் - பண்ணும். இரணியன்- ஹிரண்யனுடைய, ஆகத்தை - சரீரத்தை, மல்லல் - "மஹாவிஷ்ணு" என்கிறபடியே பெரிய, அரியுருவாய்- நரஸிம்ஹரூபத்தை யுடையனாய்க்கொண்டு, செய்த - அநாயாஸேந கிழித்துப்பண்ணின, மாயம் - ஆஶ்சர்யத்தை, அறிந்தும் - ப்ரமாணமுகத்தாலேயறிந்து வைத்தும், செல்ல - அந்தவவதாரதாத்பர்யமான ஆஶ்ரிதபக்ஷபாதத்தினுடைய எல்லையளவும் செல்ல, உணர்ந்தவர் - , செல்வன்தன் - அந்த *நாரசிம்ஹவபுஸ்ஸான ஶ்ரீமானுடைய, சீர் - வீரசாரித்ரப்ரதையை, அன்றி - ஒழிய, (வேறொன்றை), கற்பரோ - வ்யுத்பத்திபண்ணுவரோ? மிறை - மிறுக்கு. மல்லல் - பெருமை; ஆரவாரமாய், அட்டஹாஸமாகவுமாம்..

இ.—எட்டாம்பாட்டில், தேவதாந்தரஸஜநம் பண்ணினவனை விஷயீகரித்த குணத்திற்காட்டிலும், ரக்ஷணத்வரையாலே நரத்வஸிம்ஹத்வங்களிரண்டையும் எறட்டுக்கொண்டபோதே தோன்றின மஹாகுணத்தை அநுஸந்திக்கிறார்.

[செல்லவுணர்ந்தவர்] - ஐஶ்வர்ய கைவல்யங்களில் பர்யவஸியாதே பகவத்விஷயத்திலே இழிந்து, அதுதன்னிலும் அவதரித்த மேல் எல்லையளவுஞ்சென்று அநுஸந்தித்தவர்கள்; "ப்ரயோஜநாந்தரபரர்க்கு அவர்கள் ப்ராப்யத்தைக் கொடுத்து அதில் களைபிடுங்கினவன், நம்முடைய ப்ராப்யமுந்தந்து அதில் களையும்பிடுங்குவான்" என்று இவ்வளவும் செல்லவுணர்ந்தவர். [செல்வன்] - "நாரஸிம்ஹவபுஶ்ஶ்ரீமாந்" என்கிறபடியே பேரழகை உடையவன். [சீரன்றிக்கற்பரோ] - அவனுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யம் முதலான நீர்மைகளையல்லது அப்பஸிப்பரோ? [எல்லையிலாத பெருந்தவத்தால்] - ப்ரஹ்மாதிகளைநோக்கிப் பண்ணின தொகையில்லாத மஹாதபஸ்ஸுக்களாலே. [பல செய்மிறை] - பலமிறுக்குக்களைச் செய்யாநின்றுகொண்டு. வரங்கொடுத்த தேவதைகளுக்கும் குடியிருப்பு அரிதாம்படி மிகைத்து வர்த்தித்தானாயிற்று. [அல்லமரரைச் செய்யுமிரணியன்] - ஸுவப்ரபுரநராயிருக்கிற தேவதைகளை நித்யது:கிகளாம்படி பண்ணின ஹிரண்யனுடைய. [ஆகத்தை] - திருவுகிருக்கிரைபோரும்படி வரத்தை யூட்டியாக விட்டுவளர்த்த வுடம்பை. [மல்லலரியுருவாய்] - "மஹாவிஷ்ணு" என்கிறபடியே அவனுடம்பு குளப்படியாம்படி பெரியவடிவைக்கொண்டு. மல்லல் - பெருமை. மல்லலரியுருவென்று - ஶ்ரீநரஸிம்ஹமென்றுமாம்- "திருவொடுபுணர்ந்த சிங்கம்" என்று ஒரு தமிழன் சொல்லிவைத்தான். "நரங்கலந்த சிங்கமாய்க் கீண்டதிருவன்". [செய்த மாயமறிந்துமே] - வரபலபுஜபலங்களாலே திண்ணிதான உடம்பை, பெரியசீற்றத்தோடேசென்று அநாயாஸேந கிழித்துப்பொகட்ட ஆஶ்வர்யத்தை அநுஸந்தித்தும் - செல்லவுணர்ந்தவர் செல்வன்சீரன்றிக் கற்பரோ?

ஈடு.—எட்டாம்பாட்டு. தேவதாந்தரபஜநம் பண்ணினவனை விஷயீகரித்த மஹாகுணத்திற்காட்டிலும்,நரத்வ ஸிம்ஹத்வங்கள் இரண்டையும் ஏறிட்டுக்கொண்டு ஆஸ்ரித ரக்ஷணம்பண்ணின மஹாகுணத்தை யருளிச்செய்கிறார்.

[செல்லவுணர்ந்தவர்] - ஆபாஸமான ஐஶ்வர்ய ஆத்மப்ராப்திமாத்ரங்களில் பர்யவஸியாதே, எல்லை நிலமான பகவத் புருஷார்த்தத்தளவும் செல்லவுணர்ந்தவர். † அவனுடன் நித்யஸோகம்வேண்டியிருக்குமவர்கள். வாய்க்கரையான ப்ரக்ருதிப்ராக்ருதங்களன்றிக்கே, ஆத்மயாதாத்ம்யஜ்ஞாநபூர்வகமாக பகவத்ப்ராப்தியளவும் செல்லவுணர்ந்தவர்கள். [செல்வன் தன்சீரன்றிக்கற்பரோ] - ஸ்ரீமானுடைய கல்யாணகுணங்களை யொழியக்கற்பரோ? "இன்னஞ்சொல்லாய் சீமானை" என்னக்கடவதிறே. [எல்லையிலாதபெருந்தவத்தால்] - அளவிறந்த மஹாதபஸ்ஸாலே. வரப்ரதரான தேவஜாதிக்கும் குடியிருப்பு அரிதாம்படியிறே பலித்தது. [பலசெய்மிறையல்லலமரரைச்செய்யும்] - தேவஜாதி கிடந்தவிடத்தில் கிடவாதபடி பலமிறுக்குக்களைச் செய்து, துக்கத்தைப்பண்ணுகிற ஹிரண்யனுடைய, (தேவர்களுடைய வரபல புஜபலங்களாலே பூண்கட்டின) ஶரீரத்தை. மிறுக்கின்கார்யம் - துக்கம். [மல்லலரியுருவாய்] - மல்லல் - பெருமை. "மஹாவிஷ்ணும்" என்னும்படியே, ஹிரண்யன் குளப்படியாம்படியாகப் பெரியவடிவைக்கொண்டு. மல்லலென்று ஸம்பத்தாய், அத்தால் - லக்ஷ்மீநரஸிம்ஹமா யென்னவுமாம்;"**நாராயணோ நருஸிம்ஹஸ்து ஶக்திஸ்த்வமமரேஶ்வரி**"(நாராயணோநருஸிம்ஹஸ்துஶக்திஸ்த்வமமரேஶ்வரி) இறே அவளையொழிந்திருப்ப தொருபோதில்லையிறே. [செய்தமாயமறிந்துமே] - சிறுக்கனுடைய ப்ரதிஜ்ஞா ஸமகாலத்திலேதோற்றி, ஹிரண்யனுடையஉடலை இருபிளவாக்கின இவ்வாஶ்சர்யமான சேஷ்டிதங்களை யறிந்தும். ஒருவன் புருஷகாரமாகக் கோடுவர அவனை ரக்ஷித்ததொருகுணமோ? தமப்பன் பகையாக, உத்தமாங்கம் ஒருவடிவும் திருமேனியொருவடிவுமாகக் கொண்டு ரக்ஷித்த குணத்துக்கு? "பெற்றார் பெற்றொழிந்தார் பின்னுநின்றடியேனுக்குற்றானய்வளர்த்து" என்கிறபடியேவந்து ரக்ஷித்தகுணமிறே. (அ)

*எட்டாம்பாட்டு.—செல்ல இத்யாதி. "மல்லலரியுருவாய்ச்செய்தமாயமறிந்தும்" என்றதைக்கடாக்ஷித்தவதாரிகை - தேவதாந்தர இத்யாதி.*

*ஶேஷிதம் - அவனுடைய இத்யாதி. "ஆபாசமான" இத்யாதிவாக்யவிவரணம் - வாய்க்கரையான் இத்யாதி. வாய்க்கரையான - மேலெழுந்தவாரியான. ஸ்ரீமானுடையகுணம் அப்யசிக்கவேண்டியிருக்குமோ? என்ன - இன்னம் இத்யாதி. மஹாதபஸ்ஸாலன்றோ? என்ன - வரப்ரதரான இத்யாதி. "அமரரை - பல - மிறை - செய்து - அல்லல் - செய்யும்" என்றன்வயிப்பது. மிறுக்குக்கும் துக்கத்துக்கும் பேதமேதென்ன - மிறுக்கின்கார்யம் இத்யாதி. மிறுக்கு - பீடை. "மஹாவிஷ்ணும்" இதிபதம் ந்ருஸிம்ஹ மந்த்ரே. "லக்ஷ்மீநரஸிம்ஹம்" என்னுமதுக்கு ப்ரமாணம் - நாராயண இத்யாதி. சக்தியென்றது - பத்நீயென்றபடி. இங்கும் அவளைச் சொல்லவேணுமோ? என்ன - அவளை இத்யாதி. செய்த மாயமாவதேதென்ன - சிறுக்கனுடைய இத்யாதி. கீழைப்பற்ற இதுக்காதிக்யமேதென்ன - ஒருவன் இத்யாதி. பிதாபகையானாலும் இவன் ரக்ஷகனே என்ன, அதுக்கு ப்ரமாணம் - பெற்றார் இத்யாதி. திருமொழி. ஸ்பஷ்டோர்த்தஃ. பூர்வமேவலிகிதஶ்ச. 'செல்லவுணர்ந்தவர் - எல்லையிலாத பெருந்தவத்தால் - அமரரை - பல - மிறை செய் - அல்லல் - செய்யும்' என்று தொடங்கி, 'மாயமறிந்தும் - செல்வன்றன் சீரன்றிக் கற்பரோ?' இத்யந்வயஃ.* (அ)

† ஜீயரரும்பதத்துக்கு 'அவனுடைய' என்று பாடமெனத் தோன்றுகின்றது.

## ஒன்பதாம் பாட்டு.

மாயமறிபவர் மாயவற்காளன்றியாவரோ?
தாயஞ்செறுமொருநூற்றுவர்மங்க ஓரைவர்க்காய்
தேசமறியவோர்சாரதியாய்ச்சென்று சேனையை
நாசஞ்செய்திட்டு நடந்தநல்வார்த்தையறிந்துமே.

**ஆ.**—(மாயமறிபவர்.)—பாண்டவர்களுக்கு ஸர்வலோகஸாக்ஷிகமாக ஸாரத்யம்பண்ணி, அவர்களுடைய ந்யாயப்ராப்தராஜ்யாநுபவ விரோதிகளான துர்யோதநாதிகளையும் அவர்களுடைய ஸேனையையும் நாசஞ்செய்திட்டுத் திருநாடேறவெழுந்தருளின கல்யாணகுணத்தையறிந்துவைத்து நல்லதறிவார் அந்த ஆஸ்சர்யபூதனுக்குஅன்றி ஆளாவரோ? என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஆஸ்ரிதர்க்காக நரஸிஹ்மமான அதிலுங்காட்டில் அதிகுணமான ஸாரத்யவ்ருத்தாந்தத்தை அநுஸந்திக்கிறார்.

[மாயமென்று தொடங்கி] - அத்யாஸ்சர்யமாயிருக்கிறவனுடைய ஆஸ்ரித ஸௌலப்யதையை அறியில் அப்படியிருக்கிறவனுக்கு அல்லது ஆளாவரோ? [தாயமென்று தொடங்கி] - பாண்டவர்களுக்கு க்ரமப்ராப்தமாய் வருகிற ராஜ்யத்தை ஸ்வீகரிக்கவொட்டாதே செறுக்கிறமிடுக்கரான துர்யோதநாதிகள் நூற்றுவரும் மங்கும்படி வேறுதுணையின்றிக்கே தனியரான ஐந்துபேர்க்காக லோகமெல்லாம் அறியும்படி விலக்ஷணனான ஸாரதியாய் யுத்தபூமியிலேசென்று ஸேனையை நிஸ்ஸேஷமாக்கி நிரபாயமாகத் திருநாட்டிலே எழுந்தருளினபடியைப் பேசின மஹாபாரதத்தை அறிந்துவைத்தும்.

ப.—அநந்தரம், அநவஸவநீயமான நரஸிம்ஹாவதாரத்திலும் ஆஸ்ரிதஸௌலப்யதா ப்ரகாஸகமான ஸாரத்யத்தாலே தாழநின்று அநிஷ்டவர்க்கத்தை நிரஸநம்பண்ணின குணாதிக்யத்தை யநுஸந்திக்கிறார்.

தாயம் - ந்யாயப்ராப்தமான பாண்டவர்களுடைய ராஜ்யாம்சத்தை, செறும் - செறுத்துக்கைக்கொண்ட, (நைர்க்ருண்யத்தாலும் பரிஸவப்ராணுபஹாரபர்யந்தமான அதிப்ரவ்ருத்தியாலுண்டான பௌர்க்யத்தாலும்), ஒரு - அத்விதீயரான, நூற்றுவர் - துர்யோதநாதிகள் நூற்றுவரும், மங்க-, ஓர்-தனியரான, ஐவர்க்கு-பாண்டவர்களைவர்க்கு, ஆய் - தானேஸர்வவிதபந்துவுமாய், தேசமறிய - ஸர்வலோகப்ரஸித்தமாம்படி, (இரண்டு படைக்கும்நடுவே), ஓர் - அத்விதீயனை, ஸாரதியாய் - ஸாரதியாய், சென்று - ஸஞ்சரித்து, சேனையை - ஸகலஸேனையையும், நாசஞ்செய்திட்டு - நசிப்பித்து, (பூபாராவதரண கார்யம் சமைந்தவாறே), நடந்த - *தன்னுடைச்சோதிக்கெழுந்தருளின அபதாநத்துக்கு ப்ரகாஸமான, நல்வார்த்தை - மஹாபாரதமாகிறநல்வார்த்தையை, அறிந்தும்-, மாயம் - அதில்தாத்பர்யமான ஆஸ்ரிதஸௌலப்யதாரூபமான ஆஸ்சர்யத்தை, அறிபவர் - அறியுமவர்கள், மாயவற்கு-(தன்பெருமைபாராதே ஆஸ்ரிதர்க்கு இழிதொழில்செய்யும்) ஆஸ்சர்யபூதனுக்கு, அன்றி - ஒழிய, (வேறொருவர்க்கு), ஆள் - அடிமை, ஆவரோ - செய்வரோ?

**இ.**—ஒன்பதாம்பாட்டில், ஆஸ்ரிதனுக்காக நரஸிஹ்மமான அதிலும் அதிககுணமான ஸாரத்யவ்ருத்தாந்தத்தை அநுஸந்திக்கிறார்.

*[மாயமறிபவர்] - அத்யாஶ்சர்யமான அவனுடைய ஆஶ்ரிதஸௌலப்யத்தை அறியுமவர்கள். [மாயவற்கு] - மேன்மையைக் கரைகாணிலும் கரைகாணவொண்ணாத ஸௌலப்யத்தை உடையவர்க்கு. [ஆளன்றியாவரோ] - அவனுக்கல்லது ஆளாவரோ! ஸர்வஜ்ஞன் தன்னளவிலே வரத் தாழ்ந்தால், புறம்பே போகக்கடவதோ? அவன் தன் ஸ்வரூபத்தை அழியமாறினால், தன்ஸ்வரூபத்திலே குறையநிற்கக்கடவதோ? அவனுக்கே ஆளாகைக்கு அவன் செய்ததென் என்னில்?, [தாயம்செறும்] - ந்யாயப்ராப்தியில் ராஜ்யம் பாண்டவர்களுக்காயிருக்க, அத்தைச்செறுக்கிற; தமக்கு ந்யாயப்ராப்தமாக வந்ததொன்றை யிழந்ததாக நினைத்திருக்கிறாராயிற்று இவர்; "**மம ப்ராணா ஹி பாண்டவா:**" என்று அவன் அபிமானிக்கையாலும், "**த்விஷதந்நம் ந போக்தவ்யம்**" என்று எதிர்த்தலை ஶத்ருக்களாகச் சொல்லுகையாலும். [ஒருநூற்றுவர்மங்க] - ஒருபார்ஶ்வமடங்கப் பெருமிடுக்கான து்ர்யோதநாதிகளாகிற து்ர்வர்க்கம் உருமாயும்படி. [ஓரைவர்க்காய்] - தனியரான ஐவர்க்காய். "**யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச ஸுஹ்ருச்சைவ ஜநார்த்தந:**" என்று இவர்கள் இழந்தவையெல்லாம் தானேயாய். [தேசமறிய] - ஸர்வஜ்ஞன் தாழ்ந்தசெயலைச் செய்யாநின்றால், அப்ரஸித்தமாகச் செய்யிலுமாமிறே; அங்ஙனன்றிக்கே, ஸர்வலோக ஸாக்ஷிகமாக இச்செயலை அநுஸந்தித்தார் எல்லாரும் நிர்ஹராயிருக்கலாம்படியிறே செய்தது. "**வாஹயிஷ்யாமி பீபத்ஸோ: ஸாரத்யம் ஸர்வலோக ஸாக்ஷிகம்**". [ஓர்சாரதியாய்] - அத்விதீயனான ஸாரதியாய். [சென்று] - யுத்தபூமியிலேசென்று. [சேனையை நாசம்செய்திட்டு] - "ஆயுதமெடுக்கவொண்ணாது" என்று நிர்பந்திக்கையாலே இத்தைத் தவிர்ந்து, கையில் முட்கோலாலே சேனையைக் கொன்றுபொகட்டு. [நடந்து நல்வார்த்தையறிந்துமே] - தன்க்ருஹத்திலே புகக்கொண்டு சிறைசெய்யத் தேடும் து்ர்யோதநாதிகள்போல்வாரிருக்கிற தேசத்தைவிட்டு எல்லாருமொக்கப் பரியும்தேசத்திலே நிரபாயமாகவெழுந்தருளினபடியைப் பேசின ப்ரமாணஶ்ரேஷ்டமான மஹாபாரதத்தை அறிந்துவைத்தும் - மாயவற்காளன்றியாவரோ? "**க்ருத்வா பாராவதரணம் ப்ருதிவ்யா:**"* (௯)

**ஈடு.**—ஒன்பதாம்பாட்டு. ஆஶ்ரிதனுக்காக நரஸிம்ஹமான அதிலும் அதிககுணமான ஸாரத்யவ்ருத்தாந்தத்தை யநுஸந்திக்கிறார்.

[மாயமறிபவர்] - அவன்வ்யாபாரமடங்கலும் ஆஶ்ரிதார்த்தமாய், ஆஶ்சர்யமாயிருக்குமென்றறியுமவர்கள். [மாயவற்காளன்றியாவரோ] - ஆஶ்ரிதபரதந்த்ரனானவனுக்கன்றியாளாவரோ ? [தாயம்செறுமொருநூற்றுவர்மங்க] - ந்யாயப்ராப்தியாலே செறுகிற துர்யோதனாதி துர்வர்க்கம் மங்க. ந்யாயங்கொண்டநெருக்கிற்றுத் தம்மையோ? அநுகூலரான பாண்டவர்களை நெருக்கிற்றும் தம்மை நெருக்கிற்றாயிருக்கிறபடி. [ஒருநூற்றுவர், ஓரைவர்] - நெருக்குகிறவர்களும் நெருக்குண்கிறவர்களுமிருக்கிறபடி ; [ஓரைவர்க்

---

*ஒன்பதாம்பாட்டு.—மாயம் இத்யாதி. "தேசமறியவோர்ஸாரதியாய்ச்சென்று" என்றத்தைக் கடாக்ஷித்து, கீழிற்பாட்டைப்பற்ற இதுக்கேற்றம்அருளிச் செய்கிறார் - ஆஶ்ரிதனுக்காக இத்யாதி.*

*"தேசமறிய வோர்ஸாரதியாய்ச்சென்று"என்றதுக்குஅநுகுணமாக, "மாயமறிபவர்" என்றதுக்கர்த்தம் - அவன்வ்யாபாரம் இத்யாதி. "செறும்" என்றுஸாமாந்யமாகச் சொன்னதுக்குபாவம் - ந்யாயங்கொண்டு இத்யாதி. அதெப்படியென்ன - அநுகூலரான் இத்யாதி. "நூற்றுவர், ஐவர்" என்றதுக்குபாவம் - நெருக்குகிற இத்யாதி. அதாவது - இவர்களுடைய ப்ராபல்யதௌர்பல்யங்,*

காய்] - துர்வர்க்கமடைய அங்கேதிரண்டு, ஒருசாரதியையொழிய வேறொருதுணையின் றிக்கே யிருக்கிறவர்கள். தன்வழியேயொழுகாதவர்களை யழியச்செய்து, தன்னையொழிய அறியாதவர்களுக்காகத் தான் தாழநின்று நோக்கினன். ஸம்பந்தம்இரண்டுதலைக்கும் ஒத்திருக்க, தாழ்ந்த தலைகண்டு நோக்கினனித்தனையிறே. '(அர்ஜுநாங்ககதேள)இத்யாதி' ஒருவர்க்கொருவர் கால்மேல் காலேறட்டு ஒருநாளாகவிருந்த ஸமயத்திலே, ''சஞ்சயன்வாசலிலேவந்தான்''என்று சொல்ல,''அவனைப்புகுரவிடுங்கோள்; இவ்விருப்புக்காணஉகப்பானொருவன்; உகவாதார்நேஞ்சுளுக்கச்சொல்லவல்லானொருவன்; ஆனபின்புஅவனையழையுங்கோள்''என்றான்.உகவாதார்கண்படலாகாதாப்போலே,உகந்தார் கண்பட்டால் உள்ளநன்மையும்: இப்படியிறேபாண்டவர்கள்விஷயத்தில்அவனிருக்கும்படி. [தேசமறியவோர்சாரதியாய்] - '' (பார்த்தம்ரதிநமாத்மாநஞ்சஸாரதிம்ஸர்வலோகஸாக்ஷிகம் சகார) என்னும்படியே, ''இன்னார்தூதனெனநின்றான்''என்கிறபடியே.நாட்டில் ஸ்வாதந்த்ர்யபாரதந்த்ர்யங்கள் அவ்யவஸ்த்திதமானவிடத்திலும்ரஹஸ்யத்திலேயிறேஅவைப்ரயோகிப்பது: ஹர்த்தாவும் ஹார்யையைக்காலைப்பிடிப்பது ரஹஸ்யத்திலேயிறே. இப்படியிருக்கச் செய்தேயிறே ஜகத்ப்ரஸித்தமாம்படி தன்னைத் தாழவிட்டது. [சென்றுசேனையைநாசஞ்செய்திட்டு] - இதுதானும் அர்ஜுநாதிகள்அம்பாலேயன்றுஎன்றபடி. ''ஆயுதமெடேக்கவொண்ணாது'' என்று வேண்டிக்கொண்டபடியாலே, ஸாரத்யம்பண்ணித் தேர்க்காலாலேயுழக்கிப் போகட்டான். [நடந்தநல்வார்த்தையறிந்துமே] - தன்மேலே ஶரவர்ஷமாக வர்ஷிக்கிற இத்தண்ணியபூமியினின்றும், தன்வரவுக்கு எதிர்கொள்வார் இருந்தவிடத்தே போய்ப்புக்கானேன்கிறபெரியவார்த்தையையறிந்தும். '' ''(க்ருத்வாபாராவதரணம்)இத்யாதி - துர்யோதநாதிகளில்லாதவிடத்தே

களைச்சொல்லுகிறதென்றபடி. ''ஓரைவர்'' என்கிறசப்தத்துக்கர்த்தம் - துர்வர்க்கம் இத்யாதி. ஸம்பந்தமொத்திருக்க, பாண்டவர்களை ரக்ஷித்து துர்யோதநாதிகளை யழிப்பானென்? என்ன - தன் வழியே இத்யாதி. பரிஹாராந்தரம் - ஸம்பந்தம் இத்யாதி. ''ஆய்'' என்றதுக்கு பாவம் - அர்ஜுநாங்க இத்யாதி. '' '' இத்யுத்யோகபர்வணிஸஞ்சய:. பாவம் - ஒருவர்க்கொருவர் இத்யாதி. இவ்விருப்பில்அவனை யழைக்கவேண்டுவானென்? என்ன-உகவாதார் இத்யாதி. ''தேசமறிய வோர்ஸாரதியாய்'' என்றதுக்கு உதாஹரணத்வயம்-பார்த்தம் இத்யாதி, இன்னார்தூதன் இத்யாதி. 'பார்த்தம்ரதிநமித்யாதி' கீதாபாஷ்யே; 'இன்னாரித்யாதி' திருமொழி. உதாஹரணத்வயத்துக்குபாவம் - ஔசித்யம் ஸர்வலோகப்ரஸித்தமானாற்போலே, ஸாரத்யமும் ஸர்வலோகப்ரஸித்தமாகச் செய்தானென்றபடி.தேசமறியச் சாரதியானது இவனுக்கேற்றமோ? லோகத்திலுள்ளவர்களும் இப்படிச் செய்யார்களோ? என்ன, லோகத்தார்படியை யருளிச்செய்கிறார் - நாட்டில் இத்யாதி. அதுஎங்ஙனே கண்டதென்ன - ஹர்த்தாவும் இத்யாதி. லோகப்ரக்ரியைக்கு ப்ரதிகோடியாய், இவனுடைய ஏற்றத்தையருளிச்செய்கிறார் - இப்படியிருக்கச்செய்தே இத்யாதி. இத்தால் - லோகத்தில் பாரதந்த்ர்ய வ்யாவ்ருத்தயென்றபடி. சேனையைநாசஞ்செய்தது அர்ஜுநாதிகளல்லவோ? என்ன - இதுதானும் இத்யாதி. ஸாரதியாய்ச்சேனையை நாசஞ்செய்கிறதென், ஆயுதமில்லையோ? என்ன - ஆயுதமெடுக்க இத்யாதி. உழக்கி - மர்த்தித்து; துகைத்தென்னுதல். உழக்குகை - மர்த்திக்கையும், துகைக்கையும். பரமபதத்திலேபோனது நல்வார்த்தையானபடி யெப்படி? என்ன - தன்மேலே இத்யாதி. நல்வார்த்தை - பெரியவார்த்தை. நன்மை - பெருமை. ''போனான்'' என்றதுக்குப்ரமாணம் - க்ருத்வா இத்யாதி. '' ।

மறுவலிடாதபடிபண்ணித் தன்திருவடிகளிலே சேர்த்துக்கொண்டதோரு மஹோபகாரத்தை யருளிச்செய்கிறுர்.

[வார்த்தையறிபவர்]- மஹாபாரதமெல்லாவற்ருலும்சொல்லிற்றுயிற்றது ஒருவார்த்தையாகாதே. ப்ரயோஜநவத்தாவதிறே - வார்த்தையாவது; ''சரமச்லோகம்''(மாமேகம்)என்றத்தையிறே - இங்கு 'வார்த்தை' என்கிறது. கீழடங்கலும் கடல்போலே; அதில்அம்ருதம் போலே இது. [மாயவற்காளன்றியாவரோ] - அவன் ''என்னையேபற்று'' என்றுசொல்லாநின்ருல், இவர்கள்அவனையொழியவும் பற்றுவர்களோ ? (மாயவன் - வ்யாமோஹத்தையுடையவன்.) ரஹஸ்யங்களேல்லாம் வெளியிட்டானிறே, அவள்குழல்முடிக்கைக்காக. [போர்த்தபிறப்பித்யாதி] - பரணிக்கூடு வரிந்தாற்போலே, இவ்வாத்மாவையறியவோண்ணுதபடி சூழப்போதிந்துகிடக்கிற ஜந்மங்கள், அவைபுக்கவிடத்தே புகக்கடவவ்யாதி, அங்ஙனேயாகிலும் சிறிதுநாள் சேல்லாதபடி இடிவிழுந்தாற்போலேநிற்கிற ஜரை, அங்ஙனேயாகிலுமிருக்கவோண்ணுதபடி இவனுக்குஅநபிமதமானவிநாசம், இவற்றையெல்லாம். [பேர்த்து]-ஈச்வரனுக்கும் ஒருவிரகுபார்த்துத்தள்ளவேண்டும்படியிறே அவற்றின்கனம்; விரகர் நெடுஞ்சுவர்தள்ளுமாபோலேதள்ளி. [பெருந்துன்பம் வேரறநீக்கி]- ஜந்மம்போனுல் அநந்தரம்வரக்கடவதான கைவல்யமாகிற மஹாதுக்கத்தை ஸவாஸநமாகப்போக்கி. ''கீழ்நின்ற நிலைதான் நன்று'' என்னும்படியிறே இதின்தன்மை; அது பின்னை ஒரு சரீரபரிக்ரஹம்பண்ணியாகிலும் பகவத்ஸமாச்ரயணம்பண்ண யோக்யதையுண்டிறே; இது நித்யவிநாசமிறே. [தன்தாளின்கீழ்ச்சேர்த்து] - பாஷாரேகைபோலேயிருக்கத் திருவடிகளிலேசேர்த்து. [அவன்சேய்யும் சேமத்தையேண்ணி] - பின்னை இவனுடையமீட்சி தன்புத்த்யதீநமாம்படி பண்ணிவிடுகை. இவன் நினைவோடு தன் ஸங்கல்பத்தோடு வாசியறும்படிபண்ணுகை. இவனும் சேதநனுயிருக்கச்சேய்தே, முக்தனுனற்கோள்ளும் நாநாபவநமும் அவன்புத்த்யதீநமாயிறேயிருப்பது. இவன்கையிலே

---

மென்றபடி. இந்த நாலுபாட்டுக்களிற்சொன்னது ஸம்ஸாரத்திலிருக்கச்செய்தே பண்ணினதன்றே, மற்றை ஐந்துபாட்டுக்களிலும் சொன்னது ஸம்ஸாரத்திலேயிருக்கச்செய்தே பண்ணினவையென்றபடி.

''வார்த்தை'' என்ற ஏகவசநத்துக் கர்த்தம் - மஹாபாரதம் இத்யாதி. அதெப்படி ? என்ன- ப்ரயோஜநவத்தாவது இத்யாதி. அந்தவார்த்தைதான்எது?என்ன- மாமேகம் இத்யாதி. ''ப்ரயோஜநவத்தாவதிறே'' இத்யாதிவாக்யத்தை ஸத்ருஷ்டாந்தமாக விவரிக்கிறுர் - கீழடங்கலும் இத்யாதி. அவனருளிச்செய்த வார்த்தையறிந்தால் வேருருவர்க்காளாகவோண்ணுதோ? என்ன - அவன்என்னையே இத்யாதி. அவன் - பரமாப்தனுனவனென்றபடி. ''மாயவன்'' என்றது, த்ரௌபதியிடத்தில் வ்யாமுக்தனென்கிறுர் - ரஹஸ்யங்களேல்லாம் இத்யாதி. அவள் - த்ரௌபதி. போக்கியென்னுதே, ''பேர்த்து'' என்றதுக்குபாவம் - ஈச்வரனுக்கும் இத்யாதி. போக்கும்ப்ரகாரத்தை யருளிச்செய்கிறுர் - விரகர் இத்யாதி. விரகர் - ஸமர்த்தர். பரணி - நூலிடுகிற பூச்சிவிசேஷம். கைவல்யம் பெருந்துன்பமோ ? என்ன - கீழ்நின்ற இத்யாதி. அத்தைவிசதமாக வுபபாதிக்கிறுர் - அது பின்னை இத்யாதிவாக்யத்வயத்தாலே. ''சேமம்'' என்று - புநராவ்ருத்தியறப்பண்ணும் ரக்ஷையென்று விவக்ஷித்து, ''ந ச புநராவர்த்ததே ந ச புநராவர்த்ததே'' இத்யாதிப்படியே மீட்சியுண்டாயிருக்க, புநராவ்ருத்தி யில்லையென்னக்கூடுமோவென்ன - பின்னையிவனுடைய இத்யாதி. தன் புத்த்யதீநம் - ஈச்வரபுத்த்யதீநமென்றபடி. இத்தால்பலிதம் - இவன்நினைவோடு இத்யாதி. வாசியறும்படி பண்ணுகையாவது - இரண்டும் ஏகரூபமாயிருக்கை. சேதநனுகையாலே இவனுக்கும் வேருரு நினைவுண்டாகாதோ ? என்ன - இவனும் இத்யாதி. ''இவன் நினைவோடு'' இத்யாதிவாக்ய விவரணம் - இவன்கையிலே இத்யாதி. அதாவது - இவனுடைய ஸ்வாதந்த்ர்யமும் அவனுடைய

இவனைக்காட்டிக்கொடுத்தாலும் அவனுக்குஅஞ்சவேண்டாதபடியாயிருக்கை.[எண்ணித் தெளிவுற்று] - இத்தை மநோரதித்துத்தெளிந்து. அவன் "என்னையேபற்று" என்று சொன்னதில், தலையாடியிலே "ஸகலவிரோதிகளையும் நானேபோக்கி யென்னைத்தரு வன்" என்று சொன்னதைத்தெளிந்திருக்குமவர்கள்; (தலையாடி - **"ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி"** (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்றது.) அவனுக் கல்லதுஆளாவரோ? கீழ்ச்சொன்ன குணங்களெல்லாம், "மண்தின்னவேணும்" என்று அழுத ப்ரஜைக்கு அத்தையிட்டு அதுக்குப்பரிஹாரம் பண்ணுமாபோலேயாயிற்று; இங்கு- இவற்றினுடைய ஹிதமேபார்த்து ஸம்ஸாரந்தொடக்கமான ஸகலதுரிதங்களும் மறு வலிடாதபடிபோக்கித் தன்திருவடிகளின்கீழேவைத்து ரக்ஷித்த பெரியநீர்மைக்குப் போருமோ கீழ்ச்சொன்னவையடங்கலும். கீழ்ப்பண்ணின பரிஹாரங்கள், க்ரந்திகிடக் கப்பண்ணும் பரிஹாரம்போலே ஸம்ஸாரம் கிடக்கப்பண்ணின பரிஹாரங்களிறே; அது நிர்வ்ரணமாம்படி சிகித்ஸித்துநோக்குவாரைப்போலே இதிற்சொல்லுகிற குணம். கீழி லவை ஸம்ஸாரிகளிச்சையாலே செய்தவை; இது ஈச்வரேச்சையாலே செய்ததிறே.(கo)

---

## பதினோராம் பாட்டு.

---

தெளிவுற்றுவீவின்றிநின்றவர்க்குஇன்பக்கதிசெய்யும்
தெளிவுற்றகண்ணனைத் தென்குருகூர்ச்சடகோபன்சொல்
தெளிவுற்றவாயிரத்துள்ளிவைபத்தும்வல்லாரவர்
தெளிவுற்றசிந்தையர் பாமருமூவுலகத்துள்ளே.

**ஆ.**—*(தெளிவுற்று) - அநந்யப்ரயோஜநமாக ஒருகால் தன்னை நினைத்தவர் களுக்குத் தன்திருவடிகளை ஆத்மாந்த போக்யமாக்கிக் கொடுத்துவைத்து, பின்னையும் அவர்களுக்கு ஒன்றுஞ் செய்யப்பெற்றிலோம்" என்று அவர்கள் செயலை நினைத்துக் கொண்டிருக்கும் இந்தமஹாகுணவிசிஷ்டனை எம்பெருமானை ஸாக்ஷாத்கரித்துச்சொன்ன இத்திருவாய்மொழியைவல்லார், இந்தலோகத்திலேயிருந்துவைத்தே அவனையறிந்து தலைகலோக ராவரென்கிறார்.*

---

*ஸங்கல்பாநுரூபமாயே யிருக்குமென்றபடி. "தெளிவு" என்றத்தைக்காட்டாநின்றுகொண்டு, அந்வய மூங்காட்டுகிறார் - அவன்என்னையே இத்யாதி. அதாவது - "போர்த்தபிறப்பொடு" என்றுதொடங்கி, அநிஷ்டநிவ்ருத்தி பூர்வகமாக இஷ்டப்ராப்தியைப் பண்ணித்தருகிறேனென்று அவன் அருளிச் செய்த உத்தரார்த்தத்தினுடைய அர்த்தத்தையெண்ணித் தெளிவுற்று, "என்னையே யுபாயமாகப் பற்று" என்றருளிச்செய்த பூர்வார்த்தத்தையறிந்தவர்கள் மாயவற்காளன்றி யாவரோவென்றபடி. இத் தால் - "வார்த்தை" என்றது-பூர்வார்த்தம்; "போர்த்தபிறப்பு" என்றுதொடங்கி உத்தரார்த்தம். தலை யாடி - உத்தரார்த்தம். அவதாரிகையிலே இப்பாட்டுக்கு ஆதிக்யம்சொன்னத்தை ஸோபபத்திகமாக அருளிச்செய்கிறார் - கீழ்ச்சொன்ன இத்யாதி. முகபேதேந ஏற்றத்தையருளிச்செய்கிறார் - கீழ்ப் பண்ணினபரிஹாரம் இத்யாதி வாக்யத்வயத்தாலே. "மண்தின்னவேணுமென்றழுத" இத்யாதி வாக்யத்வயத்தாலே பலித்தஅர்த்தவிசேஷத்தை யருளிச்செய்கிறார் - கீழிலவை இத்யாதிவாக்ய த்வயத்தாலே. 'வார்த்தையறிபவர் - போர்த்த' என்றுதொடங்கி 'சேமத்தையெண்ணித்தெளிவுற்று - மாயவற்காளன்றியாவரோ?' இத்யந்வய:.* (கo)

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸித்தார் ஸம்ஸாரத்திலே இருந்துவைத்தே ஶுத்தஸ்வபாவ ரென்கிறார்.

[தெளிவுற்றென்று தொடங்கி] - "எம்பெருமானே ப்ராப்யமும் ப்ராபகமும்" என்றுஅறிந்து அநந்யப்ரயோஜநராய் நின்றவர்களுக்கு நிரதிஶய புருஷார்த்தமான கைங்கர்யத்தைக்கொடுக்கும் ஸ்வபாவனாய் அதுக்காக எப்போதும்உணர்ந்திருக்கும் க்ருஷ்ணனை. [தெளிவுற்றவாயிரத்துள்] - வைவத்குணங்களுக்குஸ்பஷ்டமாக வாசகமான ஆயிரத்தில்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யசிக்க வல்லவர்கள் ஸம்ஸாரத்துக்குள்ளே விசதஜ்ஞானசித்தராவரென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

தெளிவு- ("உபாயோபேயங்களவனே" என்னும்) தெளிவை, உற்று - பெற்று, (அதுக்கு), வீவு - விச்சேதம், இன்றி - இன்றியே, நின்றவர்க்கு - (ஸ்த்திரஸ்வரூபராய்) நின்றவர்களுக்கு, இன்பம்-நிரதிஶயாநந்தரூபமான, கதி - ப்ராப்யத்தை, செய்யும்- பண்ணிக்கொடுக்குமவனாய், தெளிவுற்ற - (இவன் கலங்கினவன்றும் தான்) தெளிந்து நோக்குமவனாய், கண்ணனை - ஆஶ்ரிதசுலபனானக்ருஷ்ணனை, தென் - ஊர்ஶநீயமான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொல் - அருளிச்செய்ததாய், தெளிவுற்ற - ஸ்வஸம்பந்திகளைத் தெளிவுற்றிருக்கக்கடவதான, ஆயிரத்துள் இவை பத்தும்-,வல்லாரவர் - அப்யசிக்கவல்லரானவர்கள், பா- கர்மநிபந்தநமான பரப்பை, மரு - உடைத்தான, மூன்று - குணத்ரயக்ருதபேதத்தையுடைய, உலகத்துள்ளே - லோகத்துக்குள்ளே, தெளிவு - சுத்தஸத்த்வகார்யமான ஜ்ஞாநவைசத்யத்தை, உற்ற - உடைத்தாயுள்ள, சிந்தையர் - நெஞ்சையுடையரா யிருப்பார்கள். இது - கலித்துறை.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி அப்யஸித்தார் ஸம்ஸாரத்துக்குள்ளே இருந்துவைத்தே ஶுத்தஸ்வபாவரென்கிறார்.

[தெளிவுற்றுவீவின்றி இத்யாதி]-"ப்ராப்யப்ராபகங்கள்அவனே" என்று அத்யவஸித்து, பின்னையுக்த்யாபாஸவசநாபாஸங்களால் அதுக்குக் குலைத்தலின்றிக்கே நின்றவர்களென்னுதல்; அநந்யப்ரயோஜநராய் நிலைநின்றவர்களென்னுதல். [இன்பக்கதிசெய்யும்] - ஸுகரூபமான ப்ராப்யத்தைக்கொடுக்கும். "ஸுகஷேமேஹ்யவாப்நோதி." [தெளிவுற்ற கண்ணனை] - "நாமே இவன்கார்யஞ் செய்யக்கடவோம்" என்றிருக்கும் க்ருஷ்ணனை. இவன் கலங்கினவன்றும் தான் தெளிந்திருந்து முடியநடத்துமவனை. [தென்குருகூர்ச் சடகோபன்சொல்] - அவன்படிகிடக்க, சொன்னவர்படியாலும் "ஆப்தர்" என்று விஶ்வஸித்திருக்கலாம் வார்த்தை. [தெளிவுற்றவாயிரத்துள்ளிவைபத்தும் வல்லாரவர்] - இவையிரண்டும் கிடக்க, இப்பாசுரந்தானே விஶ்வஸிக்கலாம்படி தெளிவைப் பிறப்பிக்கும் இத்தை அப்யஸிக்குமவர்கள். [பாமருமூவுலகத்துள்ளே தெளிவுற்ற சிந்தையர்] - பதார்த்தங்கள் சேர்ந்திருந்துள்ள ஸகலலோகங்களுக்குள்ளே-கலக்கமேஸ்வபாவமாயிருந்துள்ள ஸம்ஸாரத்துக்குள்ளே, ஶுத்தமான அந்த:கரணத்தை உடையாராவர். அகர்மவஶ்யனை தான் வரிலும் ஶோகமோஹங்களை விளைவிக்கும் ஸம்ஸாரம்: ஸம்ஸாரிசெல்லிலும் தெளிவைப்பிறப்பிக்கும் பரமபதம்: இப்படி வ்யவஸ்த்திதமாயிருக்க, இதுக்குள்ளே முக்தருடைய பாவஶுத்தியை உடையராவர்.

முதற் பாட்டில், விஷயப்ரவணரைத் தன்வாசியறியும்படி பண்ணினனென்றது; பிறப்பே பிடித்துத் தன்வாசியறிவார் திரளிலே கொடுபோய்வைத்தானென்றது; இதுக்கு எதிர்த் தட்டான த்வேஷம்பண்ணிப் போந்தவனுக்கும் அவர்கள்பேற்றைக் கொடுத்தானென்றது; அவன்படியிற் குறையாத ஜகத்தை அடியே தொடங்கி உண்டாக்கினனென்றது; தன்னுருக் கெடுத்து வேற்றுருக்கொண்டு நஷ்டமான ஜகத்தை உத்தரித்தானென்றது; வடிவை மாறாடினனன்றியே ஸ்வபாவத்தையும் மாறாடினனென்றது; தேவதாந்தரஸ்பரிசத்தையும் பாராதே ரக்ஷித்தபடியைச் சொல்லிற்று; யோக்யதை எறட்டுக் கொண்டு தமப்பன்பகையாகப் பரிவனாய் உதவினபடிசொல்லிற்று. இவையெல்லாம் தன்ஸ்வாதந்த்ர்யம் கிடக்கச் செய்தவை. ஆச்ரிதபாரதந்த்ரனாய் ரக்ஷித்தபடியைச் சொல்லிற்று; ஸர்வது:க்கத்தையும்போக்கி ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தத்தைக்கொடுக்கும் மஹோபகாரத்தைச் சொல்லிற்று; இப்பாசுரமே முக்தஸ்வபாவனுக்கிவிடும் என்றது.

ஈடு.—நிகமத்தில்-இத்திருவாய்மொழி அப்யஸித்தார், ஸம்ஸாரத்துக்குள்ளே யிருந்துவைத்தே முக்தப்ராயரேன்கிறார்.

[தெளிவுற்றித்யாதி] - "ப்ராப்யப்ராபகங்களிரண்டும்அவனே"என்று அத்யவஸித்து, பின்னை நாட்டார் செயல்கள் கண்டாதல், யுக்த்யாபாஸங்கள் கண்டாதல் பிற்காலியாதே நின்றவர்களுக்கு. பாரதஸமரத்திலே நின்று அர்ஜுநனை நோக்கி, "நான் சொன்னஇது உனக்குத்தோங்கிற்றோ? எதிரேபோந்ததோ?" என்ன, "ஸ்த்திதோஸ்மி" (ஸ்த்திதோஸ்மி) என்ன, அவன்" ஆனால், நம்காரியஞ்செய்யப் பார்த்ததேன்?" என்று கேட்க,"**கரிஷ்யே வசநம் தவ**"(கரிஷ்யேவசநம்தவ)-"தேவரீர்ஏவினஅடிமைசெய்யக் கடவேன்"என்றானிறே. "அர்ஜுநன்தான் எம்பெருமானைப்பெற்றானோ? இல்லையோ?" என்று நம்பிள்ளை சீயரைக்கேட்க, "உமக்குஅதுகொண்டு கார்யமேன்? இதுசொன்னவன் ஸர்வஸாதாரணனாகில், பகவத்வாக்கியேன்னுமிடம் நிஸ்சிதமாகில் தந்தாமுடைய கார்யாநுகூலமாகவும் ருச்யநுகூலமாகவும் பெறுகிறார்கள்; பெற்றவர்களை ஆராய்ந்துபார்த்து அத்தாலேயன்றே நாம் பற்றப்பார்க்கிறது"என்றுஅருளிச்செய்தார். சேர்ந்து குளிர்ந்த தண்ணீரிருந்தால், அதுகுடித்து தாஹங்கெட்டவனைக் கண்டன்றிறே, தாஹித்தவன் தண்ணீர் குடிப்பது. [இன்பக்கதிசெய்யும்] - நிரதிசயாநந்தயுக்தமான ப்ராப்யத்தைப் பண்ணிக் கொடுக்கும். [தெளிவுற்றகண்ணனை]- இவன் தெளியமாட்டாத இழவுதீர இவனுக்கு நித்யகைங்கர்யத்தைக் கொடுக்கையிலே தான் தெளிந்தபடியே யிருக்கும் க்ருஷ்ணனை.

நிகமம். தெளிவுற்று இத்யாதி. "பாமருமூவுலகத்துள்ளே - தெளிவுற்ற சிந்தையர்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி.

அத்யவசாயயுக்தனுக்கு வீவுக்கு ப்ரஸக்தி யருளிச்செய்கிறார் - பின்னை நாட்டார் இத்யாதி. நாட்டார் செயல்களாவன - ஸாதநாநுஷ்ட்டாநங்கள். யுக்த்யாபாசங்களாவன - உபாயபல்குத்வம், உத்தேஸ்யதுர்லபத்வம்,ஸ்வக்ருததோஷ பூயஸ்த்வங்களாகிற இவை. "வீவின்றி-" அத்யவசாயவிச்சேதமின்றிக்கே. வீவு - விச்சேதம். அப்படி பிற்காலியாதே யிருந்தாருண்டோவென்ன, உதாஹரணம்- பாரதஇத்யாதி. தொங்கிற்றோ - த்ருடமாயிருந்ததோ? எதிரேபோந்ததோ-எதிர்த்ததோ? ஸந்திக்தமாயிருந்ததோ?என்றபடி. 'உனக்குத்தொங்கிற்றோ' என்றவிடத்திலே. "கச்சிதேதச்ச்ருதம் பார்த்த த்வயைகாக்ரேண சேதஸா। கச்சிதஜ்ஞாநஸம்மோஹ: ப்ரணஷ்டஸ்தே தநஞ்ஜய" இத்யாத்யநுஸந்தேயம். ப்ராஸங்கிகம் - அர்ஜுநன்தான்இத்யாதி. உக்தத்துக்கு த்ருஷ்டாந்தாந்தரம் - சேர்ந்து

"[illegible]"(அஹம்ஸ்மராமி)போலே. [தெளிவுற்றவாயிரம்]- ஸஹ்யத்திலே கலங்கின நீரானது ஓரோப்ரதேசங்களிலேவந்துதெளிந்து உபபோ[illegible]யோக்யமாமாபோலே, அபிக்ருதாபிகாரமாய்க் கூளமும் பலாப்பிசினும்போலே ஒன்றே நிஷ்கர்ஷித்துப் பிரிக்கவொண்ணுதபடியாயிருக்கிற வேதார்த்தமானது ஸர்வாதிகாரமாய் ஸர்வஸம்ஶயங்களுந் தீர்ந்து தெளிந்தது அவர்பக்கலிலே வந்தவாறே. [இவைபத்தும்வல்லாரவர் தெளிவுற்றசிந்தையர்] - இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லவர்கள், இவ்வாழ்வார் தம்மைப்போலே தெளிவுற்ற நெஞ்சை யுடையராவர். தேசவிசேஷத்திலே போனாலோ அப்படி தெளிவது என்னில் ?—[பாமருமூவுலகத்துள்ளே] - பாபத்தை - பாவென்று கடைக்குறைத்தலாய், பாபபூயிஷ்ட்டமான தேசத்திலே யென்றபடி. அவ்வருகே ஒரு தேசவிசேஷத்திலே போனால் பெறக்கடவ தெளிவை, அதுக்குஎதிர்த்தட்டான இங்கேயிருந்தே யுடையராவர்; ஸர்வேஶ்வரன் தானே இங்குவந்தவதரிக்கிலும் மோகமோஹத்தைப்பண்ணவல்ல ஸம்ஸாரத்தே யிருந்தே தெளிவுற்ற சிந்தையர்; ஹேயப்ரத்யநீகமான வஸ்துவையும் தன்வழியாக்கவல்ல இவ்விபூதியிலே யிருந்துவைத்தே சுத்தஸாவரா யிருப்பர். (கக)

---

இத்யாதி. அவன் தெளிந்திருக்கிறதுக்கு த்ருஷ்டாந்தம் - அஹம்ஸ்மராமிபோலே என்று. திருவாய்மொழிக்குத் தெளிவுறுகையாவதேதென்ன - ஸஹ்யத்திலே இத்யாதி. 'ஆழ்வார்தம்மைப்போலே' என்றதுக்கு - ஆயிரமும் தெளிவுற்றபோதே இவர்க்குத் தெளிவு ஸித்தமென்று கருத்து. "மூவுலகத்துள்ளே" என்கிற ஏவகாரத்துக்கர்த்தம் - அவ்வருகேஇத்யாதி. "இங்கேயிருந்தே" என்கைக்கு இவ்விடத்துக்குத் தன்மையேதென்ன - ஸர்வேஶ்வரன்இத்யாதி. விவரணம் - ஹேயப்ரத்யநீகமான்இத்யாதி. 'தெளிவுற்று' என்று தொடங்கி, 'வல்லாரவர் - பாமருமூவுலகத்துள்ளே - தெளிவுற்ற [illegible] யர்' [illegible] (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.— [illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.— (கற்பாரிராமபிரானை.) [illegible]

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

கற்றோர்கருதும்விசயங்களுக்கெல்லாம்
பற்றும்விபவகுணப்பண்புகளை—யுற்றுணர்ந்து
மண்ணிலுள்ளோர்தம்மிழவைவாய்ந்துரைத்தமாறன்சொல்
பண்ணிலினிதானதமிழ்ப்பா.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.

## ஆறாந்திருவாய்மொழி: பாமரு - ப்ரவேசங்கள்.

ஆ.—(பாமருமூவுலகும்.) - இப்படி ஆஶ்ரிதரை ப்ரக்ருதி ஸம்பந்தத்தைப் போக்கித் தன் திருவடிகளிலே சேர்த்தருளும் இம்மஹா குணம் கிடக்கச்செய்தே, "நான் பின்னையும் இப்ப்ரக்ருதியோடே கூட வர்த்திக்கிற அத்தனையாகாதே" என்று தத்ஸம்ஶ்லேஷவிரோதியான தம்முடைய ப்ரக்ருதிஸம்பந்தாநுஸந்தாநத்தாலே அத்யந்தம் அவஸந்நராய், ப்ரக்ருதிஸம்பந்தத்தைப் போக்கியருளி உன் திருவடிகளிலே என்னைச் சேர்த்தருளவேணும் என்று சக்ரவர்த்தித்திருமகனை நோக்கிக் கூப்பிடுகிறார்.

ஒ.—ஆறாந்திருவாய்மொழியில், கீழிரண்டு திருவாய்மொழியிலும் பிறந்த குணசேஷ்டிதங்களை அநுஸந்தித்து, "இப்படிப்பட்ட குணசேஷ்டிதாதிகளை யுடைய எம்பெருமானைக் காணவேணும்" என்று ஆசைப்பட்டுப் பெறாமையாலே, கேட்டாரடைய நீராம்படியாக அவனுடைய குணசேஷ்டிதாதிகளைப்பேசி, பெருங்கூப்பீடாகக் கூப்பிடுகிறார்.

ப.—ஆறாந்திருவாய்மொழியில், இப்படி ஆஶ்ரிதஸஹ்யனாய் விரோதிநிவாரகனான ஸர்வேஶ்வரனுடைய குணாதிக்யத்தைக் கீழே யநுஸந்தித்து, அவனையொழிய வேறு விரோதிநிவர்த்தகர் இல்லாமையாலே, அவனுடைய காரணத்வாதி ப்ரயுக்தமான ஸம்பந்தவிசேஷத்தையும், தத்கார்யமான ஸர்வாத்மபாவத்தையும் ரக்ஷணைகாந்தமான பரத்வஸௌலப்யங்களையும், அவற்றோடேகூடின போக்யதாதிஶயத்தையும் அந்த போக்யதா ப்ரயுக்தமாய் அத்யுஜ்ஜ்வலமாயுள்ள ப்ராப்யதையையும், அந்தப்ராப்யதா ப்ரகாஶகமான ஆஶ்ரிதப்யாதிஶயத்தையும், ஸ்வேதருபேணவும் காரணபுருஷருபேணவும் உண்டான ரக்ஷணப்ரகாரத்தையும், தத்உபயுக்தமான மாலிப்ரப்ருதி நிரஸநத்தையும், விபீஷணபக்ஷபாதத்தையும், ஸ்வஜநரக்ஷணத்தையும் அநுஸந்தித்து, ஏவம்ப்ரகாரவிஶிஷ்டனான ஸர்வேஶ்வரனுடைய ப்ராப்தியாலும் பக்ஷபாதத்தாலும் அவனைக்கொண்டு விரோதியைக் கழித்துக்கொண்டு, அவனை ப்ராபிப்பதாக அத்யார்த்தராய்க் கூப்பிடுகிறார்.

இ.—ஆறாந்திருவாய்மொழியில், ஆழிஎழச்சங்கில்—அவன் விஜயங்களை யெல்லாம் அநுபவிக்கைக்குஉறுப்பாக அபதாநங்களை அநுபவித்தார்; அந்தப்ரஸங்கத்தாலே அவதாரங்களையும் அதுக்கடியான க்ருபாதிகுணங்களையும் அநுஸந்தித்து, "இக்குணங்கள் நடையாடாநிற்க, இதிலே ப்ராப்தியுண்டாயிருக்க, தாங்கள் சேதநராயிருக்க, ஸம்ஸாரிகள் இத்தையிழப்பதே!" என்று விஸ்மிதரானார். "அவர்கள் அபேக்ஷையில்லாமையாலே யிழக்கிறார்கள்: அபேக்ஷையுடைய நான் இழப்பேனல்லேன்" என்று ஸமஸ்தகல்யாண குணவிஶிஷ்டனைக் காணவேணுமென்று ஆசைப்பட்டுப்பெறாமையாலே, கேட்டாரடைய நீர்ப்பண்டமாம்படி அவனுடைய ப்ராப்யத்வத்தையும் ப்ராபகத்வத்தையும், விரோதிநிரஸந ஶீலதையையும் சொல்லிக் கூப்பிடுகிறார். "வைதேஹி வாநர்வ கஹ்யாணமாணா: வாத்ருஹ்யஹநிதே" அம்மங்கியம்மாள், "இத்திருவாய்மொழி பாடக் கேட்குமித்தனையொழிய, இதில் இவர்க்குஓடுகிற ஆர்த்திக்குப் பாசுரமிட்டுச் சொல்லவொண்ணாது" என்னும்.

ஈடு.—இப்படி தேளிந்தால், பின்னைச் செய்வது கூப்பிடுகைபோலேகாணும்; இல்லையாகில், ''ஸம்ஸாரம் நன்று'' என்று கலங்கினாராவரே. ''அம்மங்கியம்மாள், 'இத்திருவாய்மொழி பாடக் கேட்டுஅநுஹவித்துப்போருமிதுக்கு மேற்பட, இதிலோடுகிற ஆர்த்திக்கு நம்மாற் பாசுரமிட்டுச் சொல்லப்போகாது' என்று பணிக்கும்'' என்றருளிச்செய்வர். கீழே - * ஆழியெழச்சங்கிலே-ஸர்வேஶ்வரன் காட்டிக்கொடுத்த விஜயங்களை யநுஹவிக்கைக்கு உறுப்பாக, அவனுடைய அபதாநங்களை யநுஸந்தித்தார்; அந்த ப்ரஸங்கத்தாலே அவனுடைய அவ்தாரங்களையும் அதுக்குஅடியான க்ருபாதிகுணங்களையும் அநுஸந்தித்து, ''இக்குணங்களும் நடையாடாநிற்க, இதிலே ப்ராப்தியுண்டாயிருக்க, தாங்கள் சேதநராயிருக்க, ஸம்ஸாரிகள் இத்தை யிழப்பதே!'' என்று விஸ்மிதரானார். ''அவர்கள் அபேக்ஷையில்லாமையாலேஇழக்கிறார்கள்; அபேக்ஷையுடையநாம்இழப்போமல்லோம்; அவனுடைய அவதாரங்களையும் வடிவழகையும் அநுஹவிப்போம்'' என்று பார்த்தவிடத்து, அவற்றை அப்போதேகிட்டி அநுஹவிக்கப்பெறாமல் மிகவும் அவஸந்நராய் ஸர்வேஶ்வரனுக்குப் பரமபதத்திலும் இருப்புஅரிதாம்படி ஆர்த்தியாலே நிரம்பிற்றுஒருகடல் கையெடுத்துக் கூப்பிடுமாபோலே கூப்பிடுகிற கூப்பீடுகேட்டு அவ்விருப்புக் குலைந்துவந்து முகங்காட்டவேண்டும்படி, அவன் ப்ராப்யனாயிருக்கிறபடியையும், ப்ராபகனாயிருக்கிறபடியையும், விரோதிநிரஸநசீலனாயிருக்கிறபடியையுஞ் சொல்லி, கேட்டாரடைய நீராம்படி பெருமிடறுசெய்து கூப்பிடுகிறார்.

''ப ஹ வொ ந் ரு ப'' (பஹவோந்ருப)-சக்ரவர்த்தி, ''பெருமாளைத் திருவபிஷேகம்பண்ணுவிக்க'' என்றுகோலி, ''அறுபதினாயிரமாண்டு ஒருதலைமிதிக்க ஒருதலை கிளம்பும்படியான ராஜ்யத்தை வருந்தி யொருபடி யடிப்படுத்தினோம: இத்தை ஒரு சிறு பிள்ளை தலையிலே வைத்தாற் பொறுக்குமோ, பொறாதோ ?'' என்று விசாரித்து, ''இது தன்னை நாட்டோடே கூட்டிப் பார்ப்போம்'' என்றுகோலி; ராஜலோகத்தையடையத் திரட்டி, ''நான் இங்ஙனே பெருமாளைத் திருவபிஷேகம் பண்ணுவிக்கப் பாராநின்றேன்:உங்களுக்கு இஷ்டமோ, அன்றோ?'' என்றுகேட்க, அநந்தரம் ''கிழவா! போகாய்'' என்ன ''கதம் நு மயி தர்மேண ப்ருதிவீமநுஶாஸதி | பவந்தோ த்ரஷ்டுமிச்சந்தி யுவராஜம் மஹாபலம்'' (கதந்நுமயிதர்மேண ப்ருதிவீமநுஶாஸதி | பவந்தோத்ரஷ்டுமிச்சந்தியுவராஜம்

பாமருமூவுலகுப்ரவேஶ: ''வார்த்தையறிபவர்'' என்கிற பாட்டோடே இத்திருவாய்மொழிக்கு ஸங்கதியை உட்கொண்டு வ்யாக்யாதாவின் ஈடுபாடு - இப்படிஇத்யாதி. அதாவது - அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் பண்ணித்தருவான்அவனாகையாலே ''அவனே யுபாயம்'' என்று அத்யவஸித்தால், பின்னை கர்த்தவ்யாம்ஶமில்லாமையாலே கூப்பிடுகையிறே யுள்ளதென்றபடி. இப்படி கூப்பிடாதபோது வரும் அநிஷ்ட ப்ரஸஞ்ஜநத்தை யருளிச்செய்கிறார் - இல்லையாகில்இத்யாதி. இல்லையாகில் - இப்படி கூப்பிட்டிலராகில் என்றபடி. இத்திருவாய்மொழியில் ஆர்த்தியாலே கூப்பிடுகிறாரென்றதுக்கு ஆப்தவசநம் - அம்மங்கிஇத்யாதி. ஸங்கதி - கீழேஇத்யாதி. அபதாநம் - சேஷ்டிதம். ''தாமரைக்கண்ணாவோ'' என்றத்தைப்பற்ற - அவன் ப்ராப்யனாய்இத்யாதி. ''வந்தெய்துமாறறியேன்'' என்றத்தைப்பற்ற - ப்ராபகனாய்இத்யாதி. ''விறல் மாலியைக்கொன்று'' என்றத்தைப் பற்ற - விரோதி இத்யாதி. குணங்களை யநுஹவிக்கப் பெறவிட்டால் கூப்பிடவேணுமோ ? என்ன, ''திருவயோத்யையி லுள்ளாரையும் ஈடுபடுத்தாநின்றால் இவர்க்கு ஆறியிருக்கப் போமோ?'' என்று விவக்ஷித்து, அவர்கள்அப்படி குணங்களிலே ஈடுபட்டார்களோ ? என்ன, ஈடுபட்டமைக்கு ப்ரமாணம் - பஹவஇத்யாதி. இதுக்கவதாரிகாகதநமுகேநார்த்தம் - சக்ரவர்த்தி இத்யாதி. 'கிழவா! போகாய்' என்றது - ஶநைகவஷ்டிஸாஹஸ்ர ஜரஸுஸவிவாயிட்வ | ஶரீரம்

மமாத்மஜம்)- ''நாம்ஒருப்பட்ட கார்யம் நன்றாய் விழுந்தது:ராஜலோகம் இப்படித்வரிக்கப் பெறுவதே!''என்று அதிலே போர ஹருஷ்டனாய், அந்தஹர்ஷத்தை நெஞ்சிலேயிட்டுவைத்து, ''அது தன்னை இவர்கள் வாயாலே சொல்லக் கேட்கலாகாதோ'' என்று ''வாரீர்கோள்! அறுபதினாயிரமாண்டு ராஜ்யம் பண்ணுகிறவிடத்து, இற்றைவரை 'எனக்கு' என்றுஒரு ஸுகம் கோலாதே உங்கள் ரக்ஷணத்துக்குஆமவையே தேடிக்கொடுபோந்த நான்ஒரு வார்த்தை சொன்னால், 'இப்போது நீ யிருந்தாயாகில் வீகமேன்?'க்ரமத்திலே செய்துகொள்ளுகிறோம்'என்னுதல்: அன்றாகில், 'உனக்கு ப்ரியமாகில் அப்படிச் செய்யலாகாதோ?'என்று ஒரு வார்த்தை சொல்லி ஆறியிருத்தல் செய்கையொழிய, படுகொலைக்காரர் கையிலே யகப்பட்டார் 'தப்பவேணும்' என்று பார்க்குமாபோலே நீங்கள் இங்ஙனே கூப்பிடுகைக்கு நான் பண்ணின அபராதமென்?'' என்ன, ''பஹவோந்ருபகல்யாண குணா: புத்ரஸ்யஸந்திதே''(பஹவோந்ருபகல்யாண குணா:புத்ரஸ்யஸந்திதே)- ''எதிரிகளும் பால்அழியப் பெற்றதில்லை உன்னுடைய விஷயம்; உன்மகனுடைய குணத்தாலே நாட்டைப் படுகொலைக்குத்திறாய்க்காண் நீ'' என்றார்களாயிற்று. நாங்கள் குணஜிதராய் இவ் வார்த்தை சொன்னோமித்தனையல்லது ஒரு கார்யபுத்த்யா சொன்னோமல்லோங்காண்: ''யாதூநாமிவஸமுத்ரோ குணாநாமாகரோமஹாந்''(யாதூநாமிவஸமுத்ரோ குணாநாமாகரோமஹாந்) - யாதுக்களானவை ''இன்னமலையிற்போன்'' என்று விலைப்போமாபோலே,புறம்பே சில குணங்கள் கண்டால் ''பெருமாள்பக்கல்குணம்'' என்றிட்டாயிற்றுஅங்கு விலைப்போவது-''இவ்வ்யக்தியில் குணம்'' என்றாயிற்றுப் புறம்பு விலைப் போவது; இப்படிப்பட்டவனுடைய குணங்களைச் சொல்லிக் கூப்பிடுகிறார்.

## முதற் பாட்டு.

பாமருமூவுலகும்படைத்தபற்பநாபாவோ!
பாமருமூவுலகுமளந்த பற்பபாதாவோ!
தாமரைக்கண்ணாவோ! தனியேன்தனியாளாவோ!
தாமரைக்கையாவோ! உன்னையென்றுகொல்சேர்வதுவே?

*ஆ.—தேவாதிஸ்த்தாவராந்தமான நிகில ஜந்துஜால பரிபூர்ணமான ஸகல லோகங்களையும் படைத்தபரமகாருணிகனே! பின்னையும் அந்தஸ்ருஷ்டமான லோகத்திலே ஸ்ரீவாமனனாய்வந்துஅவதரித்தருளி அநாலோசிதகுணாகுணமாக ஸர்வாத்மாக்களும் ம்படி ஸகலலோகத்தையும் அளந்தருளின பரமசீலவானே! எனக்கு*

---

*யாவராஜாநஷிஷிக்ஷுவாயிருவழு'' என்றத்தைப்பற்ற. ஒருப்பட்டகார்யம் - உத்யோகித்த கார்யம். விஷயம் - தேசம். கீழ்வாக்கியவிவரணம் - நாங்கள்இத்யாதி. அப்படிப் பெருமாளுக்குக் குணங்களுண்டோவென்ன, ப்ரமாணாந்தரம் - யாதூநாம்இத்யாதி. ''பஹவோந்ருபகல்யாணகுணா:புத்ரஸ்யஸந்திதே'' இத்யயோத்யாகாண்டே பௌரஜநா: 'யாதூநாமித்யாதி' ரகாண்டே, ''ஜ்ஞாநவிஜ்ஞாநஸம்பந்நோ நிதேசே நிரத:பிது:'' இதி பூர் வார்த்தம். இதுக்குஹேதுவம் - யாதுக்கள்இத்யாதி. வீகம் - த்வரை.*

நீயல்லது கதியில்லை; ஆகையின்பு, உன்னுடைய அதிரமணீயவிகஸித ஸரஸீருஹ ஸத்ருஶமான திருநாபியையும், விகஸிதநளிந ஸத்ருஶமான திருவடிகளையும், திருக்கண்களையும், திருக்கைகளையும், * கண்களாரளவும்நின்று காணும்படி உன்னை என்றோ நான் சேர்வது? என்று கூப்பிடுகிறார்.

ஒ.—முதற்பாட்டில், ஸ்ருஷ்ட்யாத்யநேக உபகாரங்களை ஜகத்துக்குப்பண்ணி நிரதிஶயபோக்யனாயிருந்த உன்னை நானென்றோ சேர்வது? என்று கூப்பிடுகிறார்.

[பாமருமூவுலகுமென்று தொடங்கி] - ஸ்தாவர ஜங்கமாத்மகமான பதார்த்தங்கள் சேர்ந்திருந்துள்ள ஸகலலோகங்களையும் உண்டாக்கின திருநாபிகமலத்தை யுடையவனே! பரப்புடைத்தான மூவுலகென்றுஞ் சொல்லுவர். [பாவென்றுதொடங்கி]- அங்ஙனே இருக்கிற த்ரைலோக்யத்தையும் மஹாபலிபறித்துக்கொள்ள, அளந்துகொண்ட நிரதிஶயபோக்யமான திருவடிகளை உடையவனே! [தாமரைக்கண்ணுவோ என்று மேலுக்கு] - என்னை ஒருவனையும் உன்குணங்களைக்காட்டி உன்னாலல்லது செல்லாதபடி பண்ணியருளி எனக்கு உன்னைக்காட்டாதேயிருக்கிற நீ என்னுடைய ஆர்த்திதீர அழகிய திருக்கண்களாலே குளிரநோக்கியருளி திருக்கைகளாலே ஸ்பர்ஶிக்கலாம்படி உன்னை நான் சேர்வது என்று? [தனியேன் தனியாளாவோ] என்றது- உன்னுடைய க்ருபையல்லது வேறொருபற்றின்றிக்கேயிருக்கிற என்னையே உன்க்ருபைக்கு விஷயமாக உடையவனே! என்றுமாம்.

ப.—முதற்பாட்டில், காரணத்வாதிகளாலே அஸாதாரணஸம்பந்தத்தை யுடைய உன்னை என்று கிட்டியநுபவிப்பது? என்கிறார்.

பா - பரப்பை, மரு - உடைத்தாய், † மூவுலகம் - "க்ருதகஃ, அக்ருதகஃ, க்ருதகாக்ருதகஃ" என்கிற த்ரைவித்யத்தையுடைத்தானலோகத்தை, படைத்த - உண்டாக்கின, பற்பம் - தாமரைப்பூவையுடைய, நாபா - திருநாபியையுடையவனே! பாமருமூவுலகம் - ஏவம்விதமானலோகத்தை, அளந்த - அநந்யார்ஹமாம்படியளந்த, பற்பம் - தாமரைப்பூப்போலே நிரதிஶயபோக்யமான, பாதா - திருவடிகளையுடையவனே! (அநந்யார்ஹராணவரையங்கீகரித்துரக்ஷிப்பதாய்), தாமரை- தாமரைபோலேஶ்ரமஹரமான, கண்ணு - திருக்கண்களையுடையவனே! (அவர்களைஸ்வஸ்பர்ஶஸுகத்தாலேயாநந்திகளாக்கும்), தாமரை - தாமரைபோலேவிலக்ஷணமான, கையா - கைகளையுடையவனே! தனியேன் - விரோதிப்ராபல்யத்தையாலே அஸஹாயனான என்னுடைய, தனி - விரோதிநிவர்த்தகத்வத்தில்அத்விதீயனாய், ஆளா - ஆளக்கடவஸ்வாமியானவனே! உன்னை - இப்படிப்ராப்தனுமாய் போக்யனுமாய் ரக்ஷகனுமானவுன்னை, என்றுகொல் - என்றோ, சேர்வது - ப்ராபிப்பது? ஓ -! பதந்தோறும் 'ஓ' என்றது - அதிஶயிதமான ஆர்த்திவிசேஷத்தைக் காட்டுகிறது.

இ.—முதற்பாட்டில், ஸ்ருஷ்ட்யாத்யுபகாரங்களைப்பண்ணி நிரதிஶயபோக்யனான உன்னை, உன்வாசியறிந்து நான் கிட்டுவதென்று? என்கிறார்.

[பாமருமூவுலகு இத்யாதி] - ஸ்தாவரஜங்கமாத்மகமான பதார்த்தங்கள் சேர்ந்திருந்துள்ள ஸகலலோகங்களையும் உண்டாக்கின திருநாபிகமலத்தையுடையவனே! பாவென்று - பதார்த்தம். மருவுகையாவது - சேருகையாய், நெருங்கியிருக்கை. பரப்பையுடைத்தான்மூவுலகு என்றுமாம். இத்தை ஸ்ருஷ்டித்தது இத்தையழிக்கைக்கோ? உரு

† 'மூவுலகம்' என்பது உரையின் பாடமென்பர்.

*மாய்ந்தவற்றை உண்டாக்கினநீ, உண்டானவஸ்துவை அழிக்கிறதென்? "என்தாயே" என்பாரைப்போலே கூப்பிடுகிறார். ஸ்ருஷ்டித்துவிட்டவளவேயோ, மஹாபலிபோல் வார் பறித்துக்கொள்ள எல்லைநடந்து மீட்டுக்கொள்ளுமவனல்லையோ? "நின்பாதபங்கயமே தலைக்கணியாய்" என்று ஆசைப்பட்ட நான்இருக்க, அபேக்ஷையில்லாதார் தலையிலேயோ திருவடிகளைவைப்பது? நிரதிசயபோக்யமான திருவடிகளைக்கொண்டு காடுமேடுடையும்அளப்பதே! [தாமரைக்கண்ணனேவோ] - இத்தையுண்டாக்கி நோக்கினவளவேயோ, போக்யதையில்லையென்றுதான் அறியிருக்கிறேனோ?'உமக்கு வேண்டுவதென்?' என்ன, "ஸ்வைசாப்தாப்ரவையோமோஹஸ்ப்ரயொவ்யோ" என்கிறபடியே அழகிய திருக்கண்களாலே நோக்கியருளவேணும். [தனியேன் தனியாளாவோ] - அக்கண்ணழகே ஜீவனமாயிருக்கிற திரளிலும் கொண்டுபோகக் கண்டிலேன். ஸ்த்ரீகளுடைய நோக்கே ஜீவநமாயிருக்கிற ஊரையிலே, அத்திரளிலும் கூடப்பெற்றிலேன். த்ரிதீயவிபூதி போலே தனியே ஆளுகிறவனே! உன்குணங்களைக்காட்டி ஆற்றாமையை விளைத்தவனே! உன்க்ருபையொழிய வேறொன்றறியாதவன் நான்: உன்க்ருபைக்கு நானல்லது இலக்கில்லாதபடியிருக்கிறவன் நீ என்றுமாம். [தாமரைக்கையாவோ] - "ஸௌவெ்யநம்" என்றும், "ஸவெ்யஷவ்யெஷெஹஷஷ கரிஷ்யதி" என்றும் சொல்லுகிறபடியே திருக்கையிலடையாளங்கள் என்னுடம்பிலே இலச்சினைப்படத் திருக்கைகளாலே ஸ்பர்ஶிக்கவும் பெற்றிலேன். அக்ரூரனோபாதியும் போரேனோ நான்? "கரேணஹஷநா வெவவாவாநிஜெஷுரவயநுஹஸிஃ" [உன்னையென்றுகொல் சேர்வதுவே] - "வாஶ ணெதுவதவது பெவவெஷுவஹஷாழ" என்று நாளிட்டுக் கொடுக்கலாவது தம்பிமார்க்கோ? அடியார்க்குச் செய்யலாகாதோ?*

ஈடு.—முதற்பாட்டு. ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணி யுபகரித்து நிரதிசய போக்யனு யிருக்கிற உன்னை, உன்னாலேயுபகாரங்கொண்டு உன்சுவடறிந்த நான் கிட்டுவது என்றோ? என்கிறார்.

[பாமருமூவுலகும்படைத்த பற்பநாபாவோ] - பாவென்று பதார்த்தவாசகமாய், பா மருவியிருந்துள்ள; அதாவது - பதார்த்தங்களினுடைய நெருக்கத்தை யுடைத்தான மூவுலகென்னுதல். பாமருவென்று ஒரு சொல்லாய், பாபம் மருவியிருந்துள்ள மூவுலகென்னுதல். (அன்றிக்கே, பா வென்று - பரம்புதலாய், பரப்பையுடைத்தாயிருந்துள்ள வென்னுதல்.) மூவுலகென்று - கீழும், மேலும், நடுவுமான லோகங்களைச் சொல்லுதல்: அன்றிக்கே, க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதகம் என்று இவ்வகையிலே யாக்கிச் சொல்லுதல். [படைத்தபற்பநாபாவோ] - "என்தாயே" என்பாரைப்போலே. இத்தை உண்டாக்குகைக்கு அடியான ப்ராப்தியேயாய், போக்யதையின்றிக்கே யொழிந்ததா

---

*முதற்பாட்டு - பாமருஇத்யாதி. "பாமருமூவுலகும்படைத்த பாமருமூவுலகுமளந்த, தாமரைக்கண்ணனேவோ, தாமரைக்கையாவோ" இத்யாதிகளைக்கடாக்ஷித்து - ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைஇத்யாதி. அவ்விரண்டுக்கும் ப்ரதிகோடியை"நான்" என்கிறபதத்துக்குஅர்த்தமாக அருளிச்செய்கிறார் - உன்னாலேஇத்யாதி.*

*பதார்த்தங்களாவன - தேவதிர்யகாதி வஸ்துக்கள். அர்த்தாந்தரம் - பாமருவென்றுஇத்யாதி. ஒருசொல்லாயென்றது-பாவென்று ஓரக்ஷரமாய், நிருக்தியாலே பாபமென்றபடி. "படைத்த பற்பநாபாவோ" என்று-காரணத்வத்தையிட்டு விசேஷிக்கையாலே ஹிதம் ஸம்பந்தமென்னுமிடம் தோற்ற அருளிச்செய்கிறார் - என்தாயேஇத்யாதி, "பற்பநாபாவோ" என்றதுக்குபாவம் - இத்தை*

கிற்ருன் நான் ஆறியிரேனே? நீ இத்தை வருந்தியுண்டாக்கிற்று அழிக்கைக்காகவோ? இல்லாத வஸ்துக்களை யுண்டாக்கக் கடவ நீ, உள்ளவஸ்துவை யழிக்கிறதேன்? [பாமருமூவுலகுமளந்த] - இவற்றையுண்டாக்கி "மேல் பட்டது படுகிறது" என்று இருந் தாயாகிற்ருன் ஆறியிரேனே? இத்தைக் கண்ணிலே வெண்ணெயிட்டுக்கொண்டு நோக்கு மவனன்ரே, பெற்றதாய் வளர்க்குமாபோலே. "படிக்களவாகநிமிர்த்த நின்பாத பங்கயமே தலைக்கணியாய்" என்று- ஆசையுடைய நான் இருக்க, இச்சையில்லாதார் தலை யிலே திருவடிகளை வைப்பதே! மஹாபலிபோல்வார், பருந்து இருஞ்சிறைப்போலே இத்தை யபஹரித்தால், எல்லைநடந்து மீட்டுக்கொள்ளுமவனன்ரே நீ? 'அதுசெய்தமையுண்டு, உமக்கு இப்போது அபேக்ஷிதமேன்?' என்ன, [தாமரைக்கண்ணுவோ] - உத்பத்தியும், வளர்க்கையும், ஜீவநமும்எல்லாம் உன்பக்கலிலேயாயிற்று: "**அவலோகநதாநேந பூயோமாம்பாலய**" (அவலோகநதாநேநபூயோமாம்பாலய) என்னுமாபோலே திருக் கண்களாலே நோக்கவேணுமென்கிருர். ஆக, திருக்கண்களிலழகை யநுஸந்தித்தார்; அக் கண்ணழகே ஜீவநமாக இருக்கும் நித்யசூரிகள் திரளில் தம்மையிருக்கக் கண்டிலர்; அத் தாலே 'தனியேன்' - என்கிருர். [தனியேன் தனியாளாவோ] - ஸ்த்ரீகளுடைய நோக்கே தாரகமாயிருக்குமவர்களுடையதிரளுக்குங்கூட்டன்றிக்கே, உன்நோக்கே தாரகமாயிருக்கும் அவ்விபூதியிலுள்ளாருடனுங் கூட்டாகாதே, என்னைமூன்ரும்விபூதியாக்கியாளுகிறவனே! அன்றிக்கே, உன்க்ருபையே தாரகமாக இருக்கிற என்னை உன் க்ருபைக்கு என்னையொழிய வேறு விஷயமில்லையாம்படி யாளுகிறவனே யென்றுமாம். [தாமரைக்கையாவோ] - அக் ரூரனேபாதி போரேனே? "**ஸோப்யேநம்**" (ஸோப்யே நம்) இத்யாதி - திருக்கையி லடையாளம்இத்தனையும்இலச்சினைப்படியே அவனுடம்பிலே காணலாம்படிஅவனைஸ்பர் ஶித்து அவன் அங்கஸ்பர்ஶத்தாலே ஸ்தப்தனாய் நிற்கையாலே கையைப் பிடித்தேறட்டு,

யுண்டாக்குகைக்கு இத்யாதி. இப்போது ஸ்ருஷ்டியைச்சொன்னதுக்குஹாவமாதல், "ஓ" என்றதுக்குஹாவமாதல் - நீயித்தைஇத்யாதி. ஹாவாந்தரமாதல், விவரணமாதல் - இல்லாதஇத்யாதி. ஸ்ருஷ்டியைச்சொன்னவநந்தரம், "அளந்த" என்றதுக்குஹாவம் - இவற்றைஇத்யாதிவாக்யத்வயம். த்ருஷ்டாந்தம் - பெற்றதாய்இத்யாதி. "உலகும்" என்றஅசேதநசமாதிக்குஹாவமாதல்; இரண்டாம் "ஓ" என்றதுக்கு ஹாவமாதல் - படிக்களவாகஇத்யாதி. "இத்தைக்கண்ணிலே வெண்ணெயிட்டுக் கொண்டு" இத்யாதிவாக்யாநந்தரம் - மஹாபலிபோல்வார் இத்யாதிவாக்யம் அநுஸந்திப்பது. கீழில் பதத்வயத்தையுங்கூட்டிக்கொண்டு, "தாமரைக்கண்ணுவோ" என்றதுக்குஹாவம் - உத்பத்தியும்இத் யாதி. கண்ணழகைச்சொன்னதுக்குஹாவம் - அவலோகந இத்யாதி. 'உமக்குஇப்போதபேக்ஷிதமென் னென்ன' என்ற அநந்தரத்திலே, 'அவலோகந இத்யாதி' வாக்யத்தையநுஸந்தித்து, இவ்வாக்யாநந்தரே 'உத்பத்தியும் இத்யாதி' வாக்யமநுஸந்தேயம். கண்ணழகைச் சொன்னவநந்தரம், "தனியேன்" என்றதுக்குஹாவம் - ஆகஇத்யாதி வாக்யத்ரயமும். "தாமரைக்கண்ணனைவிண்ணோர்பரவும்" என்றத்தைக் கடாக்ஷித்துஹாவம் - அக்கண்ணழகேஇத்யாதி. "தனியாளாவோ" என்றதுக்குஹாவம் - ஸ்த்ரீ களுடையஇத்யாதி. த்விதீயார்த்தத்துக்கு - அத்விதீயனை என்னை யத்விதீயமாக ஆளுகிறவனென்று ஶப்தார்த்தம். கைகளை வர்ணிக்கிறதுக்குஹாவம் - அக்ரூரன்இத்யாதி. "ஸோப்யேநம்த்வஜ வஜ்ராப்ஜக்ருதசிஹ்நேந பாணிநா। ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷ ஸ்வஜே" இதி பஞ்சமேம்ஶே (கஅ-உ); "தேவ ப்ரஸீத ப்ரணதார்த்திஹார ப்ரஸாதம் கர்த்து மர்ஹஸி கேஶவ। அவலோகநதாநேந பூயோமாம் பாலயாச்யுத" இதி ச ஸ்ரீவிஷ்ணுபுராணே. (க-உ0-கக) "ஸம்ஸ்ப்ருஶ்ய" என்றதுக்கர்த்தம்-திருக்கையில்இத்யாதி. "ஆக்ருஷ்ய" என்றதுக்கர்த்தம்-அவன்

பின்னையணைக்கைக்கு இருவரைக்கண்டதில்லை. "கரேணம்ருதுநாதேவ: பாபாந் நிர்மோசயந்ஹரி:" (கரேணம்ருதுநாதேவ:பாபாந்நிர்மோசயந்ஹரி:) என்கிறபடியே. [உன்னை என்றுகோல்சேர்வதுவே]-"பூர்ணே சதுர்த்தசே வர்ஷே பஞ்சம்யாம்" (பூர்ணே சதுர்த்தசே வர்ஷே பஞ்சம்யாம்) என்று நாளிட்டுக்கொடுக்கலாவது தம்பிமார்க்கோ? அஸாதாரணரானஅடியாரானால் "இன்னநாள் பெறக்கடவது" என்றொரு நாளிட்டுக்கொடுக்கலாகாதோ? சேஷபூதனுக்கில் சேஷிகொடுத்தநாள் பெறக்கடவதாயிறே யிருக்கவடுப்பது. அங்ஙன் க்ரமப்ராப்திபார்த்து ஆறியிருக்கமாட்டுகிறிலேன். [தனியேன் - உன்னையென்று கோல்சேர்வதுவே] - நாராயணனை யொழிந்திருப்பதொரு நாரமில்லையே; இனிச்சேருகையாவது - * அடியார்கள்குழாங்களை உடன்கூடுகையிறே. "உன்னை யென்றுகோல் சேர்வது" - என்னுநிற்க, அது சேரும்படியேன்; என்னில்? * ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக் கண்டுவைக்கையாலே, "உன்னைச் சேர" என்றபோதே தன்னடையே வருமிறே. (க)

---

## இரண்டாம் பாட்டு.

என்றுகோல்சேர்வது? அந்தோ! அரன்நான்முகனேத்தும்செய்ய
நின்திருப்பாதத்தையான் நிலநீரெரிகால்விண்ணுயிர்
என்றிவைதாம்முதலாமுற்றுமாய் நின்றஎந்தாயோ!
குன்றெடுத்துஆநிரைமேய்த்துஅவைகாத்தஎம்கூத்தாவோ!

*ஆ.—(என்றுகொல்)-சிதசிதாத்மக ஸமஸ்தவஸ்துக்களுக்கும் ஆத்மபூதனே! நிர்ஹேதுகமாக ஸ்ரீகோவர்த்தநத்தை எடுத்தருளிப் பசுக்களை ரக்ஷித்தருளின பரமகாருணிகனே! ஐஶ்வர்யப்ரவணரான ப்ரஹ்மேஶாநாதிகளுக்குங்கூட ஸ்ப்ருஹணீய நிரதிஶய போக்யமான உன் திருவடிமலர்களை என்றோ நான் சேர்வது? என்று கூப்பிடுகிறார்.*

*ஒ.—இரண்டாம்பாட்டில், அந்யபரரான ப்ரஹ்மாதிகளுக்கும் ஆகர்ஷகமான சரணாரவிந்தத்தை நான்என்றோசேர்வது? என்று அத்யந்தம் அவஸந்நராய்க்கூப்பிடுகிறார்.*

---

*அந்தஇத்யாதி. "ஸமாஶ்ரு" என்றதுக்கர்த்தம் - இருவரைக்கண்டதில்லைஎன்ற. ப்ரமாணாந்தரம் - கரேணஇத்யாதி. இந்த கரஸ்பர்ஶத்தாலே தம்முடைய தாபமெல்லாம் ஆறுமென்று கருத்து. "ஸஸ்ரோஜந்தயாவிஷ்ணோ: ஸ்பர்ஶாவஸ்ராவிஸ்ரூதா: । கரேணம்ருதுநாதேவ: பாபாந்நிர்மோசயந்ஹரி:" இதி ஹரிவம்ஶே கண்டாகர்ணவிஷயீகாரே. (உஎடு-கடு) "என்றுகொல்" என்கைக்கு - நாம் ஆர்க்கு நாளிட்டுக்கொடுத்தோம்? என்ன - பூர்ணஇத்யாதிவாக்யத்வயம். நாம்செய்தத்தைக் கண்டிருக்கவேண்டாவோ? என்ன - சேஷபூதன்இத்யாதி. அவனைச்சேராதிருந்தால் ஸத்தையுண்டோ? "என்றுகொல்சேர்வது" என்கிறதென்? என்ன - நாராயணனைஇத்யாதி வாக்யத்வயம். சங்கிக்கிறார் - உன்னைஇத்யாதி. அது சேரும்படியென்றது - * அடியார்கள் குழாங்களை யுடன்கூடுகையைக் காட்டும்படியென்றபடி. உத்தரம் - ஒண்டொடியாள்இத்யாதி. அதாவது-இருவர் அபிமாநத்திலே இவர்கள் அந்தர்ப்பூதராயிருக்கையாலே, அவனைச்சொன்னால் இவர்களையும் தன்னடையே சொல்லிற்றாமென்றபடி. (க)*

[நிலநீரென்று தொடங்கி] - ப்ருதிவ்யாதிபூதபஞ்சகங்களுக்கும் தத்கார்யங்களுக்கும் தசிந்தர்வர்த்திகளான ஆத்மாக்களுக்கும் அந்தராத்மதயாநின்று நிர்வாஹகனாய் இந்நீர்மைகளைக்காட்டி என்னை அடிமைகொண்டவனே! [குன்றென்று தொடங்கி]- பசுநிரைமேய்த்தருளி இந்த்ரன் வர்ஷிக்கப்புக ஸ்ரீகோவர்த்தநத்தை எடுத்தருளி அவற்றைப்பரிஹரித்தருளின மநோஹாரி சேஷ்டிதங்களை உடையவனே! இவ்விரண்டு பாட்டாலும் - எம்பெருமானுடைய ஸ்ப்ருஹணீயதை சொல்லிற்று. (உ)

ப.—அநந்தரம், ஸர்வாத்மபூதனாய் ஆபத்ஸகனான உன்னுடைய திருவடிகளை என்று கிட்டுவேன்? என்கிறார்.

நிலம் நீர் எரிகால் விண் - ப்ருதிவ்யாதிபூதபஞ்சகமும், உயிர் - ஔதிகசரீரவிசிஷ்டமான ப்ராணிவர்க்கம், என்று - ஆகிற, இவைதாம் - இவை, முதலா-முதலாக, முற்றும் - ஸமஸ்தபதார்த்தங்களும், ஆய் - ப்ரகாரமாம்படி, நின்ற - , எந்தாய் - ஸ்வாமியாய், (அந்த ஸாமாந்யரக்ஷணமன்றியே அவதாரப்ரயுக்தவிசேஷ ரக்ஷணமான), ஆநிரை - பசுத்திரளை, மேய்த்து-, (அதுக்கு வர்ஷத்தால்வந்த பாதை தீரும்படி), குன்று - மலையை, எடுத்து - எடுத்து, அவைகாத்த-, எங்கூத்தா - மநோஹாரி சேஷ்டிதத்தை யெனக்கு ப்ரகாசிப்பித்தவனே! அரன் - ருத்ரனும், நான்முகன் - ப்ரஹ்மாவும், ஏத்தும் - ஸ்துதிக்கும்படியாய், செய்ய - ஸ்ப்ருஹணீயமான, நின் - உன், திருப்பாதத்தை - திருவடிகளை, யான் - (அநந்யப்ரயோஜநனான) நான், சேர்வது-,என்றுகொல் - என்றோ? அந்தோ - ஐயோ! ப்ரயோஜநாந்தரபரர்க்கும் ஸுலபமான திருவடிகளை, அநந்யப்ரயோஜநனான நான் கிட்டுகைக்குப் கூப்பிடவேண்டுவதே! என்று கருத்து.

இ.—இரண்டாம்பாட்டில், அந்யபரரான ப்ரஹ்மாதிகளுக்கும் ஆகர்ஷகமான திருவடிகளை நான்என்றோ சேர்வது?என்று கூப்பிடுகிறார்.

[என்றுகொல் சேர்வது] - கீழ்ச்சொன்னதுக்கு ஒருப்ரதிவசநம் கேளாமையாலே, திரியவும் 'என்றுகொல் சேர்வது?' என்கிறார். [அந்தோ] - கூப்பிடுவாருமின்றிக்கே ஒழியக்கிடாய்ப் புகுகிறது. நான் முடிந்தேனென்கிறார் - ப்லுதத்தாலே. [அரன்இத்யாதி] - அழிக்கையும் உண்டாக்குகையும் தொழிலாயிருப்பாருமகப்பட ஆசைப்படும்படி ஸ்ப்ருஹணீயமான திருவடிகளை, அநந்யப்ரயோஜநனான நான் கிட்டுவது என்றோ? அந்யபரரையும் அநந்யபரராக்கும் திருவடிகளை நான் கிட்டுவது என்றோ? அந்யபரர்க்கும் ஆகர்ஷகமான உன்திருவடிகளை என்றுகிட்டவிருக்கிறேன்? [நிலமித்யாதி] - ப்ருதிவ்யாதிபூத பஞ்சகங்களுக்கும், தந்தர்வர்த்திசேதநவர்கத்துக்கும் அந்தராத்மாவாய்நின்று நிர்வஹிக்கிறவனே! [எந்தாயோ] - அபேக்ஷையின்றிக்கே யிருக்க இவற்றையுண்டாக்கும்படியான ஸம்பந்தஞ் சொல்லுகிறது. இந்நீர்மையைக்காட்டி என்னை எழுதிக்கொண்டவனே! உண்டாக்கி விடுமளவன்றியே அரியனசெய்து நோக்குமவனன்றோ. [குன்றெடுத்து இத்யாதி] - தன்னைத்தாழவிட்டுப் பசுநிரைமேய்த்து இந்த்ரன் வர்ஷிக்கப்புக, மலையையெடுத்து நோக்கி மநோஹாரி சேஷ்டிதங்களையுடையவனே! ரக்ஷணத்துக்காக மலையை எடுத்து நின்றநிலை, இவர்க்கு வல்லாராடினாற்போலேயிருந்தது. (உ)

ஈடு.—இரண்டாம்பாட்டு. அந்யபரராய்ப் புறம்பே யாரகாதிகளாம்படியிருக்கிறவர்களுக்குங்கூட ஸ்ப்ருஹணீயமாம்படியிருக்கிற திருவடிகளை, அநந்யபரனாய் இதுவே ப்ரயோஜநமாகவிருக்கிற நான் என்றுபெறக்கடவேன் ? என்கிறார்.

[என்றுகோல்] - திருக்கையில் ஸ்பர்ஶஸுகத்தை யபேக்ஷித்து, ''என்றுகோல் சேர்வது'' என்றஅளவிறே - கீழ் ; அதுக்குஒரு ப்ரதிவசநம்பெறாதேயிருக்க, ''என்றுகோல் சேர்வது?'' என்கிறது என்ன ஈமைதான்! [அந்தோ] - இனி, ''என்றுகோல்சேர்வது'' என்பாரு மின்றியேயொழியக் கிடாய்ப் புகுகிறது ; நான் முடிந்தேன் என்கிறார். 'அந்தோ' - என்கிற ஸ்வரத்தாலே தம்முடைய ஆற்றாமையை ஆவிஷ்கரிக்கிறார். [அரன் நான்முகனேத்தும் செய்யநின்திருப்பாதத்தை] - அழிப்பாருடன் ஆக்குவாருடன் வாசியற உகக்கும்படியான திருவடிகளை. ப்ரயோஜநாந்தரபரர்க்குங்கூட ஸ்ப்ருஹணீயமாம்படியிருக்கிற திருவடிகளை, அநந்யப்ரயோஜநனான நான் என்று பெறக்கடவேன் ? தந்தாமுடைய தொழில்களிலே அந்யபரராயிருக்கிற ப்ரஹ்மாதிகளும் அநந்யபரராய் ஏத்தும்படி ஸ்ப்ருஹணீயமாய்ச் சிவந்திருந்துள்ள உன் திருவடிகளை, அநந்யபரனான நான் கிட்டப்பெறுவதுஎன்றோ? அரன் நான்முகனேத்தும் செய்யநின்திருப்பாதத்தை யான் என்றுகோல் சேர்வது ? [நிலநீரித்யாதி] - பெற்றபின்பு நோக்குகை யன்றிக்கே, ''ப்ரஜையைப்பெறவேணும்'' என்று ஏற்கவே வருந்தும் தாயைப்போலே, ஸ்ருஷ்டிக்குமுன்பே இவற்றை யுண்டாக்குகைக்காக த்ரிவ்ருத்கரணத்தை நினைத்துப்பஞ்சீகரணத்தைப்பண்ணி, இவற்றையடைய ஸ்ருஷ்டித்து, ஸ்ருஷ்டமான பதார்த்தங்களுடைய வஸ்துத்வ நாமபாக்த்வங்களுக்காக ஜீவத்வாரா அநுப்ரவேஶித்து, பின்னை இவற்றைச்சொன்ன பாசுரம், அசித்தும் அசிதபிமானிஜீவனும்

---

இரண்டாம்பாட்டு - என்றுகோல்இத்யாதி. ''அரன் நான்முகனேத்தும்செய்யநின்திருப்பாதத்தை யான் என்றுகொல்சேர்வது'' என்ற பதங்களைக்கடாக்ஷித்து அவதாரிகை - அந்யபரராய் இத்யாதி: ஸ்ருஷ்ட்யாத்யந்யபரரென்றபடி. அரியதொழில்களைச்செய்து இவ்வதிகாரங்களைப் பெறுகையாலே - புறம்பேயாரகாதிகள் என்றதும் இப்பதத்திலே விவக்ஷிதம். இவ்விரண்டுக்கும் ப்ரதிகோடி - அநந்யபரனாய்இத்யாதி.

''என்றுகொல்'' என்று முன்னேயும் சொல்லிவைத்து, மீளவும் ''என்றுகொல்'' என்கிறது ஆற்றாமையின் அதிஶயத்தாலே என்கிறார் - திருக்கையில்இத்யாதி. ஆற்றாமையாலேசொல்லுகையாலே புநருக்தியில்லையென்றபடி. என்றவளவிறேயென்றது - என்றதிறேயென்றபடி. 'முடிந்தேன்' என்றதுக்கு ஶப்தமேதென்ன - அந்தோவென்கிறஇத்யாதி. ப்ரஹ்மாதிகளுக்கு அந்யபரதையும் ப்ரயோஜநாந்தரபரதையும் உண்டாகையாலே, இரண்டையும் இரண்டுவாக்யத்தாலே அருளிச்செய்கிறார் - அழிப்பாருடன்இத்யாதி. ''அழிப்பாருடன்'' என்றவாக்யமாத்ரவிவரணம் - தந்தாமுடைய இத்யாதி. ''செய்யநின்திருப்பாதத்தை'' என்றதுக்கு ஶப்தார்த்தம் - ஸ்ப்ருஹணீயமாய்இத்யாதி. புத்திஸௌகர்யார்த்தம் அந்வயம் - அரன்இத்யாதி. ஸ்ருஷ்டித்தபின்பு பாலநம்பண்ணிவிடுகையன்றிக்கே, ஸ்ருஷ்டியும் இவனேசெய்தான் என்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் - பெற்றபின்பு இத்யாதி. த்ரிவ்ருத்கரணத்தை நினைத்து - த்ரிவ்ருத்கரணத்தை ஸங்கல்பித்து. த்ரிவ்ருத்கரணம் மற்றையிரண்டுக்கும் உபலக்ஷணமென்று வ்யாக்யாதமேயாகிலும், இவ்விடத்தில், இந்த்ரனுக்கு த்ரைலோக்யத்தை வாங்கிக்கொடுக்கநினைத்து அண்டாவகாசமெல்லாம் அளந்தாற்போலே, த்ரிவ்ருத்கரணத்தை ஸங்கல்பித்தத்தால் கார்யங்கொள்ளாமையாலே பஞ்சீகரித்தானென்றதுவும் ஒருபாவமாகவருளிச்செய்வர். ''முற்றுமாய்நின்ற'' என்கிற இது ஸ்வரூபைக்யமல்ல, 'அநுப்ரவேஶக்ருத ப்ரகாரப்ரகாரிபாவத்தைச் சொல்லுகிறதென்கிறார் - ஸ்ருஷ்டமானஇத்யாதி. ''எந்தாய்'' என்றதுக்கவதாரிகை - இவையுற்றியாதிருக்கஇத்யாதி. ''குன்றெடுத்து'' என்றதுக்கவதாரிகை - இவற்றைஇத்யாதி. அரியனசெய்

ஜீவாந்தர்யாமியான பரமாத்மாவுமான இஸ்ஸங்வாதத்துக்கு வாசகமாய்க்கொண்டு, தன்னளவிலேவரும்படி நிற்கிறநிலையைச்சொல்லுகிறது - 'முற்றுமாய்நின்ற' என்கிற இத்தாலே. இவையறியாதிருக்க, இவற்றின்பேற்றுக்கு அவன்வருந்தவேண்டுகிற ஹேதுவேன் என்னில்?—[எந்தாயோ]-அதுக்குஅடியான ஸம்பந்தத்தைச்சொல்லுகிறது. இவற்றை யுண்டாகும் நாளிலே யுண்டாக்கி, "இனிமேல்வரும் ஆபத்து இவைதானே பரிஹரித்துக்கொள்ளுகிறது'' என்று விட்டுவைக்கையன்றிக்கே, அரியனசெய்தும் நோக்குமவன் என்கிறார். [குன்றேடுத்து] - மலையையெடுத்திறே நோக்கிற்று. [ஆநிரைமேய்த்து] - நோக்குமிடத்து, வரையாதே பசுக்களை நோக்குமவனாயிற்று. [அவைகாத்த எங்கூத்தாவோ] - (ஆநிரை மேய்த்து - குன்றெடுத்து - அவைகாத்த எங்கூத்தாவோ) - வர்ஷத்திலே நோவுபடுகிற பசுக்களை ரக்ஷிக்கைக்காக மலையையெடுத்தான் அவன்; அப்போது, த்ரிபங்கியாய் நின்ற வடிவுதான் வல்லாராடினாற்போலே தமக்கு ஆகர்ஷகமாயிருக்கையாலே, 'எங்கூத்தாவோ' என்கிறார். ஆக, இவ்விரண்டுபாட்டாலும் அவனுடைய ஸ்ப்ருஹணீயதையைச்சொல்லி, ப்ராப்யத்வம் சொல்லிற்று; மேல் அஞ்சுபாட்டாலே - அவனுடைய ப்ராபகத்வம்சொல்லுகிறது. (உ)

## மூன்றாம் பாட்டு.

காத்தவெங்கூத்தாவோ! மலையேந்திக்கன்மாரிதன்னை
பூத்தண்டுழாய்முடியாய் புனைகொன்றையஞ்செஞ்சடையாய்
வாய்த்தது! என்னான்முகனே! வந்துஎன்னாருயிர்நீயானால்
ஏத்தருங்கீர்த்தியினாய்!உன்னையெங்குத்தலைப்பெய்வனே.

ஆ.—(காத்தவெங்கூத்தாவோ) - த்வததீநஸ்வரூப சதுர்முகபசுபதி ப்ரப்ருதிகனாய், த்வததீந மத்ஸ்வரூபனுமாய், இயத்தாஸங்க்யாரஹிதமாகையாலே அஸங்க்யேயமான கல்யாணகுணவிசிஷ்டனுமா யிருந்தவனே! வர்ஷபீடிதமான பசுக்களை ரக்ஷித்தருளுகைக்காக ஸ்ரீகோவர்த்தநத்தையெடுத்துக்கொண்டு நின்றருளின உன்னுடைய துர்த்தர்ஷமான அந்நிலையையும், அப்போது திருவாயர் திருத்துழாயைக்கொண்டு ஒப்பித்தருளப்பண்ணின அவ்வழகையும், கேவலம் உன்னுடையக்ருபையாலேஎன்றோ காண்பது? என்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், ஸஹாதிகளுக்கும் காரணமான நீ நிர்ஹேதுகமாக வந்து த்வதேகதாரகனும்படி என்னைப்பண்ணியருளினாய்; ஆனபின்பு, இப்படியே குறையும் நீயே செய்தருளவேணுமென்கிறார்.

---

தானோ? என்ன - மலையைஇத்யாதி. அவைகாத்தவனேயென்னாதே, ''எங்கூத்தாவோ' என்று விசேஷித்ததுக்குபாவம் - வர்ஷத்திலேஇத்யாதி. ப்ரவேசத்திலே அருளிச்செய்த ப்ராப்யப்ராபகங்களுக்கு வாசகமான பாட்டுக்கள் இத்தனையென்கிறார் - ஆகஇவ்விரண்டுஇத்யாதிவாக்யத்வயத்தாலே. 'நிலம்நீர்' என்றுதொடங்கி, 'எந்தாயோ, ஆநிரைமேய்த்து - குன்றெடுத்து - அவைகாத்தவெங்கூத்தாவோ, அரன் நான்முகனேத்தும் செய்ய நின்திருப்பாதத்தை - யான் சேர்வது - என்றுகொலோ, அந்தோ!' இத்யந்வயம். (உ)

[புனைகொன்றையஞ் செஞ்சடையாய்]-கொன்றைப்பூச்சூடிச்சிவந்த ஜடையை யுடைய ருத்ரனை உண்டாக்கினவனே! [வாய்த்த என்நான்முகனே] - ஸ்ரஷ்ட்ருத்வ யுக்தனான சதுர்முகனை உண்டாக்கினவனே! ஸஹாவையுண்டாக்கின குணத்தை அநுஸந்தித்துப்ரீதராய் 'என்னுடைய நான்முகனானவனே' என்கிறார். [ஏத்தருங் கீர்த்தியினாய் என்றுதொடங்கி]-பேசிமுடிக்கவொண்ணாத கீர்த்தியையுடையநீயே என்னை விஷயீகரிக்கும் இத்தனைபோக்கி நான் வந்து உன்னை ப்ராபிக்கைஎன்று ஒருபொருளுண்டோ? (௫)

ப.—அநந்தரம், ஸர்வஸுலபனாய் ஸர்வாதிகனான நீ எனக்கு தாரகனாம்படி செல்லாமை விளைந்திருக்க, நான் உன்னை எங்கேகிட்டுவது? என்கிறார்.

மலை - மலையை, ஏந்தி - ஏந்தி, கல்மாரிதன்னை - கல்மழை, காத்த - காத்த போது, எங்கூத்தா - வல்லாராடினாற்போலே தர்ஸநீயமான நிலையையுடையையாய், பூ - ஸர்வேஸ்வரத்வஸூசகமாய் விகஸிதமானபூந்தாரையுடைத்தாய், தண் - ப்ரமஹர மான, துழாய் - திருத்துழாய்மாலையை, முடியாய் - திருமுடியிலே யுடையையாய், புனை-(அத்தோபாதிதன்னையும்ஈஸ்வரனாகவபிமாநித்துப்)புனைந்த, கொன்றை-கொன்றை மாலையையும், அம் - அத்தாலேயழகுபெற்று, செம் - (அந்தஈஸ்வரத்வ ஸாதகமாயுள்ள உபாஸகத்வஸூசகமாய்ச்)சிவந்த, சடையாய்-ஜடையையும் உடையனான ருத்ரனைப்ரகார மாகவுடையையாய், வாய்த்த-(அவனுக்கும்உத்பாதகனாய்த் தன்பக்கலிலே) உத்பந்நனான, என் நான்முகனே - சதுர்முகனைப்ரகாரமாகவுடையையாயிருக்கிற ஆகாரத்தையெனக்கு ப்ரகாஸிப்பித்தவனாய்,ஏத்த-(அந்தபரத்வஸௌலப்யங்களுக்கெல்லைகண்டு)ஏத்த, அரும் - அரிய, கீர்த்தியினாய் - கீர்த்தியையுடையவனே! (என்னபேக்ஷையின்றியே நீ வந்து), என் - எனக்கு, ஆருயிர் - பரிபூர்ணதாரகன், ஆனால் - ஆம்படியாலே, உன்னை - (ஸர் வாதிகனாய் ஸர்வஸுலபனாயிருக்கிற)உன்னை, எங்கு - எங்கே, தலைப்பெய்வன் - கிட்டி யநுபவிப்பேன்! ஓ - ஓ! ஈஸ்வராபிமாநிகளுக்கும் அறிவில்லாதார்க்குங்கிடைத்தஇது, த்வதேகதாரகனாய் வாசியறிந்து கூப்பிடும் எனக்குஅரிதாவதே! என்று கருத்து.

இ.—மூன்றாம்பாட்டில், கீழ் இரண்டுபாட்டாலும் - ஜமத்காரணத்வமும் ஸப 'யதையும - ப்ராபயனுசொ ; மேல் ப்ராபகஞ்சொல் )தில்—.ஸஹாதிக நம் காரணமான நீ, நிர்ஹேதுகமாகவந்து த்வதேக தாரகனாம்படி 'பண ஆனபின்பு, குறையும் நீயே செய்தருள வேணு மென்கிறார்.

[காத்தவெங்கூத்தா இத்யாதி] - ''எத்திறம்'' என்னும் க்ருஷ்ணாவதார சரித மிறே ப்ரஸ்துதமாயிற்று. ஒருகால் ''எத்திறம்'' என்றால், பின்னையும் ''எத்திறம்'' என்னுமாபோலே அது பின்னாட்டுகிறபடி. பசுக்கள் ஸ்வரக்ஷணத்துக்கு மலையெடுத்த னவோ என்கை; [பூத்தண்டுழாய் முடியாய்] - பூத்துஸ்ரமஹரமான திருத்துழாயைத் திருமுடியிலே உடையவனே! ஸர்வாதிகவஸ்துவுக்கு ஸர்வைஸ்வர்ய ஸூசகமானலக்ஷ ணம். உன்ஸத்தை உன்அதீநமானவோபாதி என்ஸத்தையும் உன்அதீநமானபின்பு என்பேற்றுக்கு நான் ப்ரவர்த்திக்கவோ? '' வஞ்சவிஷ்ணுஸ்ரூசஹ, '' '' உபாஸ தேஸதாஸ்வித்தியசநாலெஜீஸ்ரீஷவிதளஸசபஞுயஸ'; ஈஸ்வராபிமாநிகள் ஸத்தை யோ அவர்களதீநமாயிருக்கிறது? சூடின கொன்றைமாலையாலே அழகிதாய்ச் சிவந்த

ஜடையையுடைய ருத்ரனுக்கு உத்பாதகனானவனே! [வாய்த்த] - ஸ்ருஷ்டியையுடைய சதுர்முகனை உண்டாக்கினவனே! ருத்ரனுக்குக் கொன்றைமாலையோபாதி, இவனுக்கு சதுர்முகத்வம். ப்ரஹ்மாவை உண்டாக்கின மஹாகுணத்தை அநுஸந்தித்து, 'என்நான்முகனே!' என்கிறார். விசேஷணாம்சத்தில் தாத்பர்யமில்லை; ஸாமாநாதிகரண்யத்தாலே சொல்லிற்று, ப்ருதக்ஸ்தித்யநர்ஹமான ஸம்பந்தத்தாலே. [வந்தென்னாருயிர்நீ] - தம்மளவிற்பண்ணின உபகாரத்தைச் சொல்லுகிறார்: எனக்கு அபேக்ஷையின்றிக்கே, நீயே வந்து என்னை விஷயீகரித்து உன்னாலல்லது செல்லாதபடி பண்ணி எனக்கு தாரகனானவனே! பேசி முடிக்கவொண்ணாத கீர்த்தியை உடையவனன்றோ. [ஆனால்]-உன் பெருமை இதுவானால். [எங்குத்தலைப்பெய்வனே] - என்ஸத்தை த்வததீநமானபின்பு, நான் ஒன்றைச்செய்து அத்தாலே உன்னைக்கிட்டஎன்பதுஒன்றுண்டோ? ப்ராந்ப்பாயத்தாலே மேலும் நீயே செய்தருளவேணுமென்கை. (௩)

ஈடு.—மூன்றாம்பாட்டு. ப்ரஹ்மாதிகளுக்கும் காரணபூதனான நீ, நிர்ஹேதுகமாக வந்து த்வதேகதாரகனும்படிஎன்னைப்பண்ணியருளினாய்; ஆனபின்பு, நீயே குறையும் செய்தருளவேணு மென்கிறார்,

[காத்தவெங்கூத்தாவோ] - கீழே க்ருஷ்ணவ்ருத்தாந்தம் ப்ரஸ்துதமிறே, "ஆநிரைமேய்த்து அவைகாத்த வெங்கூத்தாவோ" என்று; "எத்திறம்" என்றால், பின்னையும் "எத்திறம்" என்று அதிலே போமித்தனையிறே; கீழ்ச்சொன்னது வடிம்பிட்டு, திரியட்டும் "காத்தவெங்கூத்தாவோ" என்கிறார். [மலையேந்திக்கல்மாரிதன்னை] - கல்லாலே வர்ஷிக்கையாலே மலையையெடுத்துப்பரிஹரித்தான்; நீராலே வர்ஷித்தானாகிற் கடலையெடுத்து நோக்குங்காணும். பசுக்கள் ஸ்வரக்ஷணத்துக்கு மலையை யெடுத்ததோ? [பூத்தண்டுழாயித்யாதி] - தத்தத்ஸ்வரூபங்களுக்கு அஸாதரணமான லக்ஷணம் சொல்லுகிறது. [பூத்தண்டுழாய் முடியாய்] - தனக்குஅஸாதாரணமாய் ஐச்வர்ய ஸூசகமான மாலையாயிற்று இது; தன்னுடையஸத்தை தன்அதீநமாம்படியிருக்கும வஸ்துவுக்கு லக்ஷணமாயிற்று இம்மாலை. இத்தால் இவர் பெற்றதாயிற்றேன் இப்போதென்னில்? உன்ஸத்தைஉன்னதீநமானவோபாதி

---

மூன்றாம்பாட்டு - காத்தஇத்யாதி. "புனைகொன்றை" இத்யாரப்ய, "ஆருயிர்நீயானால் எங்குத்தலைப்பெய்வன்" என்கிறவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை - ப்ரஹ்மாதிகளுக்கும்இத்யாதி.

திரியட்டும் "காத்தவெங்கூத்தாவோ" என்றதுக்கு மூன்றுபரிஹாரம். முந்தினது - கீழே க்ருஷ்ணவ்ருத்தாந்தம் இத்யாதிவாக்யசதுஷ்டயம். அதாவது, கீழ்ச்சொன்னநீர்மையில்ஈடுபட்டுத் திரியட்டும் சொல்லுகிறாரென்றபடி. "வடிம்பிட்டு- ப்ரேரித்து. "மலையேந்திக்கன்மாரிதன்னை - காத்த" என்றதுக்கு ரஸோக்தி - கல்லாலேஇத்யாதிவாக்யத்வயம். திரியட்டும் "காத்தவெங்கூத்தாவோ" என்றதுக்கு - இப்பாட்டுக்குசேஷமாக த்விதீயபரிஹாரம் - பசுக்கள்இத்யாதி. எனக்கு ஸாதநாநுஷ்டாநம்பண்ண ப்ராப்தியில்லையென்கைக்காக மீளவும் சொல்லுகிறாரென்றபடி. "பூத்தண்டுழாய்முடியாய்" என்றுதொடங்கி மூவர்க்கும் துழாய்முதலானவற்றைச்சொன்னதுக்குபாவம் - தத்தத்ஸ்வரூபங்களுக்குஇத்யாதி. ஸ்வரூபங்களுக்கு - மூர்த்திகளுக்கென்றபடி. "பூத்தண்டுழாய் முடியாய்" என்றத்தாலே 'ஈச்வராஸாதாரணலக்ஷணம் சொல்லுகிறதென்கிறார் - தனக்குஇத்யாதி. ஐச்வர்யசூசகம் - ஸர்வாதிகத்வ ஸூசகம். வ்யதிதம் - தன்னுடையஇத்யாதி. பதப்ரயோகத்துக்கு ஹார்த்தபாவம் - உன்ஸத்தைஇத்யாதிவாக்யம். பூத்துப்ரமஹரமான திருத்துழாயைத் திருமுடியிலே யுடையவனேயென்று பதார்த்தம். "பூத்தண்டுழாய்முடியாய்" என்றதின்பாவத்தை யவலம்பித்துக்கொண்டு "புனைகொன்றை" இத்யாதிக்குஸங்கதி-பிறர்ஸத்தைஇத்யாதி. 'சடையாய்" என்கிற

என்ஸத்தையும்உன்னதீநமாயிருக்க, நான் எங்ஙனே உன்னைப்பெறுகைக்கு ஸாதநாநுஷ்டானம்பண்ணிக் காணும்படி? என்கை. [புனைகோன்றையஞ் செஞ்சடையாய்] - பிறர்ஸத்தையோதான் உன்னதீநமன்றிக்கேயிருக்கிறது? பசுக்களின்ஸத்தை உன்னதீநமானாற்போலே ஈச்வராபிமாநிகளாயிருப்பாருடையஸத்தையும் உன்னதீநமாயன்றோ இருக்கிறது? [புனையித்யாதி]-புனையப்பட்ட கோன்றையையுடைத்தாய், அழகிதாய்ச் சிவந்திருந்துள்ள ஜடையையுடைய ருத்ரனும் நீயிட்ட வழக்கு. [வாய்த்தஎன்நான்முகனே] - கீழிரண்டுபேதத்திலும் சொன்ன மாலைகள்அவ்வவர்க்கு அஸாதாரணமா யிருக்குமாபோலே யாயிற்று, இவனுக்கும் தனக்குஅடைத்த காரியத்துக்கு நாலுமுகம் அஸாதாரணமாயிருக்கும்படி.(வாய்த்த-ஸ்ருஷ்டியையுடைய, சதுர்முகன்.) இன்னமும், ஈச்வரன்தனக்கும் "இப்படி ஸ்ருஷ்டிப்போம்" என்றாலும் முடியாதபடியாயிற்று ப்ரஹ்மஸ்ருஷ்டியிலுண்டான வாய்ப்பு. [என்] - என்கிற இதுக்கு - விசேஷ்யத்திலே யூற்றமாகக் கடவது. வையதிகரண்யத்தாலே சொன்னால் கழற்றிக்கொள்ளுகைக்கும் உடலாய், கேவல பேதத்தையே சொல்லுகிறதென்று ப்ரமிக்கைக்கும் உடலாயிருக்கும்;ஸாமாநாதிகரண்யத்தாலே சொன்னால் சேஷசேஷி பாவமாகிற பிரிவும் தோற்றியிருக்கும். ஆக, ஸாமாநாதிகரண்யவையதிகரண்யங்களிரண்டேக்கும் பலம் நிவில நியமநமிறே: ஆனாலும், ஸாமாநாதிகரண்யத்தாலே சொல்லுமதுக்கு இத்தனைவாசியுண்டு. "ஸ்வமுத்திஸ்ய" (ஸ்வமுத்திஸ்ய) - ஸ்வார்த்தமாகவிறே இவற்றையுபாதாநம்பண்ணிற்று. "உபாதத்தேஸத்தாஸ்திதிநியமநாத்யைஸ்சிதசிதௌ ஸ்வமுத்திஸ்ய" (உபாதத்தேஸத்

---

ஸாமாநாதிகரண்யம் ஶரீரஶரீரிபாவ நிபந்தநமாகையாலே, ருத்ரனுடையஸத்தையும் அவனதீநமென்றபடி. கோவர்த்தநோத்தரணம் சொன்னதுக்கு மூன்றும் பரிஹாரம் - பசுக்கள்இத்யாதி. அன்றிக்கே, திரியட்டும் "காத்த" என்றதுக்குஇரண்டே பரிஹாரமாய், "மலையேந்தி" இத்யாதியைக் கடாக்ஷித்துக் கீழ்வாக்ய விவரணம் - பசுக்கள்இத்யாதி. அதாவது - பசுக்களின் ஸத்தைபோலே பசுபதிஸத்தையும் த்வததீநமென்றபடி என்றுமாம். ஶப்தார்த்தம்-புனையப்பட்டஇத்யாதி. கீழிருவரையும்போலே இவனையும் மாலையையிட்டு நிரூபியாதொழிவானேன் ? என்ன - கீழிரண்டுஇத்யாதி. தனக்குஅடைத்தகாரியமாவது - ஸ்ருஷ்டியென்றபடி. "ஸஹஸ்ரிவிதிவத்ஸமாஸ । ஸஹஸ்ரிதி வேத்யஜத" இத்யாதிப்படியே வேதோக்தமானபடியே ஸ்ருஷ்டிக்கவேண்டுகையாலே இந்தவேதந்தான் நாலாயிருக்கையாலே நாலும்உச்சரிக்கைக்கு நாலுமுகம்வேண்டுகையாலே 'தனக்கடைத்தகாரியத்துக்கு நாலுமுகம் அஸாதாரணமாயிருக்கும்படி' என்கிறார். "வாய்த்த" என்றதுக்கர்த்தம்-இன்னமும் இத்யாதி. வாய்த்த - ஸமர்த்தனையென்றபடி. வையதிகரண்யமாகவன்றிக்கே, ஸாமாநாதிகரண்யமாகவருளிச்செய்வானேன் ? என்ன - வையதிகரண்யத்தாலே இத்யாதிவாக்யத்வயம். கழற்றிக்கொள்ளுகைக்கும் - ப்ருதக்ஸ்த்திதியில்லாத உறவறுத்துக்கொள்ளுகைக்கும். சரீரசரீரிகளுக்குப் பேதமுண்டாகையாலே 'சேஷசேஷிபாவமாகிற பிரிவும் தோற்றியிருக்கும்' என்றபடி. பிரிவுமென்ற சமப்தத்தாலே-அப்ருதக்ஸித்தவிசேஷணத்வமும் தோற்றுமென்றபடி. உபயத்தாலும் சித்தித்தது நிர்வாஹகத்வமேயாகிலும், ஸாமாநாதிகரண்யத்தாலே சொல்லுமதுக்கு அப்ருதக்ஸ்த்திதியாகிற ஆதிக்யமுண்டென்ற ஸாமாநாதிகரண்யத்துக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார் - ஆகஇத்யாதிவாக்யத்வயத்தாலே. இத்தனைவாசியென்றது - வக்ஷ்யமாணத்தைக்கடாக்ஷித்து. அப்ருதக்ஸித்தவிசேஷணமாய் நியாம்யமா யிருப்பார்களோ ? என்ன - ஸ்வமுத்திஸ்யஇத்யாதி. "ஸ்வமுத்திஸ்ய" என்றதுக்கர்த்தம் - ஸ்வார்த்தமாகஇத்யாதி. ஸ்வார்த்தமாகவென்றது - ஸ்வசேஷமாகவென்றபடி. இத்தால் - ஸத்தாஸ்த்திதிநியமநாதிகள் அவன் அதீநமென்று தோன்றுமையாலே, கீழிற்பதங்களையும்உபாதாநம் பண்ணுகிறார்-உபாதத்தேஇத்யாதி. "உபாதத்தேஸத்தாஸ்திதிநியமநாத்யைஸ்சிதசிதௌ ஸ்வமுத்திஸ்ய ஶ்ரீமாநிதிவததிவாமளவநிஷதீ । உபாயோபேயத்வேதஹிஹதவதத்த்வம்ந

தாஸ்த்திநியமநாத்யைஸ்சிதசிதௌ ஸ்வமூத்திஸ்ய)-ஸத்தையே பிடித்து ஸ்த்திநியமநாதிகளகப்படஅவன்தீநமாயிருக்கையாலே, பிரியநின்று ஸாதநாநுஷ்ட்டாநம் பண்ணுகைக்கு ஒரு ப்ராப்தியில்லையாம்படியாயிற்று அத்யந்தபாரதந்த்ர்யம்இருக்கும்படி. [வந்தேன்னுருயிர்நீ] - பிறர்பக்கல்பண்ணின உபகாரத்தைச் சொல்லவேணுமோ? என்பக்கல் பண்ணின உபகாரந்தானே யமையாதோ? "நீயோருவனுனை" என்று கணுக்கண்டும்அறியாதே புறம்பே அந்யபரனுயிருக்கிற என்னை, அத்தைத்தவிர்த்து உன்படியையறிவித்து உன்னையொழிய தரியாதபடியான ஓமையைப் பிறப்பித்தாய். [ஆனுல்] - இப்படியிருந்தபின்பு. [ஏத்தருங்கீர்த்தியினுய்] - நீ ஸத்தையையுண்டாக்க உன்னுலே லப்தஸத்தாகனுயிருக்கிற நான் "ஏத்துவேன்" என்றால், என்னுலேதான் ஏத்தலாம்படி யிருந்ததோ?[ஆனுல்]-உன்படியது, என்படியிது; இங்ஙனேயிருந்தபின்பு, [உன்னை யெங்குத்தலைப்பெய்வனே] - நான்ஓருபாயாநுஷ்டாநம்பண்ணி உன்னை எங்கேவந்து கிட்டப்புகுகிறேன்? என்னுலேவந்து கிட்டுகை என்று ஒன்றுஉண்டோ? (௩)

## நான்காம் பாட்டு.

எங்குத்தலைப்பெய்வன்நான்! எழின்மூவுலகும்நீயே
அங்குஉயர்முக்கண்பிரான்பிரமபெருமானவன்நீ
வெங்கதிர்வச்சிரக்கை இந்திரன்முதலாத்தெய்வம்நீ
கோங்கலர்தண்ணந்துழாய்முடி என்னுடைக்கோவலனே.

*ரு—.(எங்குத்தலைப்பெய்வன்.) - ப்ரஹ்மேசாநாதி ஸர்வஜந்துக்களுடைய ஸத்தாமாத்ரமேயோ த்வத்ஸங்கல்பாயத்தம்? அவர்களுடையஐஶ்வர்யமும் த்வத்ப்ரஸாதாதீநமன்றோ; ஆதலால், ப்ரதிபந்தகத்தையும் போக்கியருளி அடியேனை உன்திருவடிகளிலே சேர்த்தருளவேணு மென்கிறார்.*

---

*தாமாணாவதஸாம்ஸ்ரீரமெஷசயபாணலேவ்ராஜஹஜ" இதி ஸ்ரீரங்கராஜஸ்தவே. (அஎ) ஶ்லோகார்த்தகதந பூர்வகமாக இப்பாட்டிற்சொல்லுகிற ஸாமாநாதிகரண்யத்துக்கு ப்ரகாரணுநுகுணமாக ப்ரயோஜநம்அருளிச்செய்கிறார் - ஸத்தையேபிடித்துஇத்யாதி. "உவாயொவெயடெத" இத்யாத் யுத்தரார்த்தமும் விவக்ஷிதம். குணௌ - ஔபசாரிகௌ. "வாய்த்தவென்னுன்முகனே"என்ற அநந்தரம், "வந்தென்னுருயிர்" என்றதுக்கு ஹாவம் - பிறர்பக்கல்இத்யாதி. அந்தஉபகாரமேதென்ன - நீயோருவன்இத்யாதி. "வந்தென்னுருயிர்நீ - " என்னபேக்ஷயின்றிக்கே நீயேவந்துஎனக்குப் பரிபூர்ணயாகனுயென்று பாவார்த்தம். "என்னுருயிர்நீயானுல்" என்றவநந்தரம், "ஏத்தருங்கீர்த்தியினுய்" என்கையாலே - என்னுல்ஏத்திமுடிக்கப்போகாத கீர்த்தியையுடையவனென்று விவக்ஷித்து, அதுக்குஹேதுவையருளிச்செய்கிறார் - நீ ஸத்தையையுண்டாக்கஇத்யாதி. "ஏத்தருங்கீர்த்தியினுய் - வந்தென்னுருயிர்நீயானுல்"என்றந்வயத்தைவிவக்ஷித்தருளிச்செய்கிறார்- ஆனுல்உன்படியதுஇத்யாதி. 'மலையேந்திக்கன் மாரிதன்னை - காத்தவெங்கூத்தாவோ, பூத்தண்டுழாய்' என்றுதொடங்கி, 'வந்தென்னுருயிர்நீ - ஏத்தருங்கீர்த்தியினுய் ! ஆனுல் - உன்னையெங்குத்தலைப்பெய்வன்' இத்யந்வயஃ (௩)*

ஒ.—நாலாம்பாட்டில், ப்ரஹ்மேஶாநாதிகளுக்கு உண்டான உச்ச்ராயமும் நீயே கொடுத்தருளினாய். அப்படியே என்னுடைய அபேக்ஷிதமும் நீயே செய்தருளுமித் தனைபோக்கி என்னாற் செய்யலாவதொன்றுமில்லை என்கிறார்.

[கொங்கலரென்று தொடங்கி] - தம்மை அகப்படுத்திக்கொண்ட க்ருஷ்ணனுடைய அழகைக் காண ஆசைப்படுகிறார்.

ப.—அநந்தரம், ஸர்வஸ்மாத்பரனாய் ஆஶ்ரிதஸுலபனாய் அதிசயிதபோக்யனான உன்னை, அகிஞ்சநனான நான் எங்கே கிட்டுவது? என்கிறார்.

கொங்கு - மதுவையுடைத்தாய், அலர் - விகஸிதமான, தண்ணந்துழாய்-செவ்வித்திருத்துழாயாலே யலங்க்ருதமான, முடி - மயிர்முடியையுடையையாய், என்னுடை - (அவ்வழகை) எனக்குப்ரகாஶிப்பித்த, கோவலனே - ஐயனான க்ருஷ்ணனே ! எழில் - தர்ஶநீயவைலக்ஷண்யத்தையுடைய, மூவுலகும் - த்ரிவிதலோகமும், நீயே - நீயிட்ட வழக்காய், அங்கு - அந்தலோகத்திலே, உயர் - ஜ்ஞாநஶக்த்யாதிகளாலே யுச்ச்ரிதனாய்த் தோற்றியிருக்கிற, முக்கட்பிரான் - (ஈஶ்வராபிமாநியான) த்ரிணேத்ரனும், பிரமன் பெருமானவன் - அவனுக்கு ஸ்வாமியான ஆதிக்யத்தையுடைய ப்ரஹ்மாவென்று ப்ரஸித்தனானவனும், நீ - நீயிட்டவழக்காய், வெங்கதிர் - சத்ருக்களுக்கநபிபவநீயனாம்படி ப்ரதாபோஜ்ஜ்வலமான, வச்சிரம் - வஜ்ரத்தை, கை - கையிலேயுடைய, இந்த்ரன் -, முதல்ஆ - முதலான, தெய்வம் - தேவவர்க்கமும், நீ - நீயிட்டவழக்கு; (ஆனபின்பு), நான் - (த்வத்ப்ராப்திஹேதுக்கள் ஒன்றுமில்லாத) நான், எங்கு - எங்ஙனே, தலைப்பெய்வன் - வந்துகிட்டுவேன் ?

இ.—நாலாம்பாட்டில், ப்ரஹ்மாதிகளுடைய உச்ச்ராயமும் நீயே கொடுத்தருளினபின்பு, என் அபேக்ஷிதம் நீயே செய்தருளுமதொழிய என்னாற் செய்யலாவது ஒன்றுமில்லை என்கிறார்.

[எங்குத்தலைப்பெய்வன் நான்] - ஒருதுர்ப்பலனை மலையை எடுக்கச்சொன்னால் செய்து தலைக்கட்டப்போமோ? [எழில் மூவுலகும்நீயே] - சதுர்தஶபுவநத்திலுண்டான உச்ச்ராயமும் நீயிட்டவழக்கு. [அங்குயர் இத்யாதி] - அண்டத்தில் ஸர்வாதிகனாக அபிமாநித்துக்கொண்டிருக்கிற ருத்ரனுடைய உச்ச்ராயமும் நீயிட்டவழக்கு. அவனுக்கு நிர்வாஹகனான ப்ரஹ்மாவினுடைய உச்ச்ராயமும் நீயிட்டவழக்கு. "வஜ்ரஹஸ்த: புரந்தர:" என்கிற ஏற்றத்தையுடைய இந்த்ரன் முதலான தேவதைகளுடைய உச்ச்ராயமும் நீயிட்டவழக்கு. [வெங்கதிர் வச்சிரம்] - அநபிபவநீயமான தேஜஸ்ஸை யுடைய வஜ்ரம். [கொங்கலர் இத்யாதி] - உன்னையொழிந்தார் உச்ச்ராயங்கள் எல்லாம் த்வததீநமாயிருக்கிறநீ, உன்னுடைய உச்ச்ராயம் என்னதீநமாயிருக்கிறவனே! கொங்கு-இத்யா. தம்மை அகப்படுத்திக்கொண்ட க்ருஷ்ணனுடைய போக்யதையையும் ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தையும் அநுஸந்தித்து, அத்தை நீயே அநுபவிப்பிக்கவேணும் என்கிறார். (ச)

ஈடு.—நாலாம்பாட்டு. கீழிற்பாட்டில் - அவர்கள் ஸ்வரூபம் தததீநமென்றது; அவ்வவஸ்வரூபப்ரயுக்தமாயிருப்பன சிலமினுக்கங்கள் உண்டிறே, அவையும் தததீநமென்கிறது - இதில்.

---

நாலாம்பாட்டு - எங்கு இத்யாதி. "எழில்மூவுலகும், அங்குயர் - பிரமபெருமான்" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை - கீழிற்பாட்டில் இத்யாதி. மினுக்கங்கள் - உத்கர்ஷங்கள்.

[எங்குத்தலைப்பெய்வன் நான்] -ஒரு துர்ப்பலனை "மலையைச் சும" என்றால் அவனாலே அதுசெய்து தலைக்கட்டப்போமோ? [எழில்மூவுலகும்நீயே] - த்ரைலோக்யத்தில் உண்டான பதார்த்தங்களினுடைய உத்கர்ஷமும் த்வததீநம். [அங்குயர்முக்கட்பிரான்] - அந்த அண்டத்திலல்லாத தேவதைகளிற்காட்டில் ருத்ரன்பக்கலிலே வந்தவாறே ஒருஉத்கர்ஷமுண்டிறே, அந்த உச்ச்ராயமும் த்வததீநம். [பிரமபெருமானவன்நீ]- அவன்றனக்குங்கூட ஜநகனாய் சதுர்த்தஶபுவநேஶ்வரனாகையால் வருவதோரேற்றமுண்டிறே ப்ரஹ்மாவுக்கு;அதுவும் நீயிட்ட வழக்கு. [வெங்கதிர்இத்யாதி]-"வஜ்ரஹஸ்த: புரந்தர:" (வஜ்ரஹஸ்த:புரந்தர:) என்கிறபடியே - வெவ்விய கதிரையுடைத்தான வஜ்ரத்தைக் கையிலே யுடையனாயிருக்கிற இந்த்ரன்தொடக்கமான தேவதைகளுடைய உச்ச்ராயமும் நீயிட்ட வழக்கு. [கொங்கலரித்யாதி] - உன்னையொழிந்த பதார்த்தங்களினுடைய வுத்கர்ஷமும்உன்னதீநமாம்படி யிருக்கிற நீ, உன்னுடைய உச்ச்ராயம் நானிட்ட வழக்காம்படியானாய். மதுவையுடைத்தாய் விகஸிமான செவ்வித் திருத்துழாயாலே யலங்க்ருதமான மயிர்முடியையுடையையாய், அவ்வழகை யெனக்கு ப்ரகாஶிப்பித்த ஆஶ்ரிதஸுலபனான க்ருஷ்ணனே! 'கொங்கலர்தண்ணந்துழாய்முடி' என்கையாலே - போக்யதாப்ரகர்ஷஞ் சொல்லிற்று;'என்னுடைக்கோவலனே' என்கையாலே - ஆஶ்ரித ஸௌலப்யத்தையைச் சொல்லுகிறது. (௪)

---

## ஐந்தாம் பாட்டு.

---

**என்னுடைக்கோவலனேயென்போல்லாக்கருமாணிக்கமே**
**உன்னுடையுந்திமலருலகமவைமூன்றும்பரந்து**
**உன்னுடைச்சோதிவெள்ளத்தகம்பாலுன்னைக்கண்டு கொண்டிட்டு**
**என்னுடையாருயிரா ரெங்ஙனேகொல் வந்தெய்துவரே.**

***ஆ.***—*(என்னுடைக்கோவலனே)-'ப்ரஹ்மேஶாநாதிகளுடைய ஸத்தாவிபூதிகள் மத்ப்ரஸாதாதீநமேயாகிலும், த்வதபேக்ஷிதமத்தர்ஶந ப்ராப்த்யுபாயத்தை நீயே*

---

*பின்னையும் "எங்குத்தலைப்பெய்வன்" என்றது - ஆர்த்யதிஶயத்தாலே. "நான் எங்குத் தலைப்பெய்வன்" என்று தம்முடைய அஶக்தியைச் சொல்லுகிறவருடைய பாவம் - ஒருதுர்ப்பலனை இத்யாதி. "மூவுலகும்" என்று லோகஸ்த்தரைச் சொல்லுகிறது. "எழில், உயர், பெருமான்" இத்யாதிகள் விசேஷணமாயிருக்க, இதிலேமாத்ரம் தாத்பர்ய மென்னக்கூடுமோ? என்னில், "பூர்வாஹ்ணேம்போஜஸ்ரஜீத" என்கிறவிடத்தில் - அம்போஜஸம்ராகப்ராப்தமாகையாலே, "விஶிஷ்ட விதௌ விஶேஷணே விதிபர்யவஸாநம்" என்கிற ந்யாயத்தாலே அப்ராப்தமான ப்ராங்முகத்வத்திலே விதிக்குத்தாத்பர்யமானாற்போலே, கீழிற்பாட்டில் ஸ்வரூபதாததீந்ய முக்தமாகையாலும், இவற்றில்ஒரோவிசேஷணமிட்டுச் சொல்லுகையாலும், "எழில், உயர், பெருமான், வெங்கதிர்வச்சிரம்" என்கிற மினுக்கங்களிலே யிப் பாட்டுக்குத் தாத்பர்யமென்றுகருத்து. அங்கு - அந்தஅண்டத்தில். கதிருக்குவெம்மையாவது - பராபிபவந ஸாமர்த்யம். "எழில்மூவுலகும்" இத்யாத்யுக்தஉத்கர்ஷதாததீந்யாநுவாதபூர்வகமாக "என்னுடை" என்றதுக்கு பாவம் - உன்னையொழிந்த இத்யாதி. "கொங்கலர்" இத்யாதி பதத்வய பலித பாவம் - கொங்கலர் இத்யாதி வாக்யத்வயம். எழில் மூவுலகும் இத்யாசய, 'தெய்வம்நீ, கொங்கலர் தண்ணந்துழாய்முடி யென்னுடைக் கோவலனே, நான் - எங்குத்தலைப்பெய்வன்' இத்யந்வய: (௪)*

யநுஷ்டிக்கவேண்டும்' என்று ஒருநிர்ப்பந்தமுண்டாகில், த்வந்நாபீகமலோத்பூத ஸகல லோகாந்தர்வர்த்தி ஸர்வவிஷயங்களிலும் ப்ரவணமான என்னுடைய ஆத்மா, ப்ரதி பந்தநிரஸநத்தைப்பண்ணி நிரதிஶய தேஜோமயமான திருநாட்டிலே உன்னைக் கண்டு ப்ராபிக்கும்படி யெங்ஙனே? இம்மஹாத்மாவுக்கு முடியாததுஉண்டோ? என்று தம்மை உபாலம்பித்துக்கொண்டு சொல்லுகிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், அத்யந்தவிலக்ஷணனான உன்னை, த்வத்ஸ்ருஷ்டமான விஷயங்களெல்லாவற்றிலும் நெடுங்காலம்பழகியிருந்த நான், அந்த விஷயவாஸனையை அறுத்து உன்திருவடிகளிலே நானே வந்துபுகுகைக்கு உபாயமுண்டோ? என் ...ர்.

[என்னுடை யென்றுதொடங்கி] - அதிலோகமான ஶீலஸௌந்தர்யாதிகளாலே என ...கரித்து எனக்கு ஹவ்யனானவனே! [பொல்லாக்கருமாணிக்கம்] - விபரீத லக்ஷணை. [உன்னுடை யென்றுதொடங்கி] - உன்னுடைய திருவுந்தியிலே பிறந்துள்ள லோகத்ரயத்தில் விஷயங்களெல்லாவற்றிலும் மிகவும் ப்ரவணமாயிருந்துள்ள என்னுடைய ஆத்மா உன்னுடையதாய்ச் சோதிவெள்ளமான ஸ்ரீவைகுண்டத்திறுள்ளே வர்த்தமானனான உன்னைக் கண்டு கொண்டுவந்து ப்ராபிக்கைக்கு உபாயமுண்டோ? மூன்று லோகம் என்றது - எல்லாலோகத்துக்கும் உபலக்ஷணம். ஆருயிரானென்றது - ஆத்மாவினுடைய ... அநுஸந்தித்து க்ஷேபிக்கி

ப.—அநந்தரம், நிரதிஶய ப்ராப்யபூதனான உன்னை, லௌகிக விஷயங்களிலே கைகழிந்திருக்கிற என்னாத்மா எங்ஙனே கிட்டக்கடவது ? என்கிறார்.

என்னுடைக்கோவலனே - "பசுவைமேய்" என்று நியமிக்கலாம்படியான ஆஸ்ரிதஸௌலப்யத்தையை எனக்கு ப்ரகாசிப்பித்தவனாய், பொல்லா - தொளையாத, என் கருமாணிக்கமே - நீலரத்நம்போலேயெனக்குஅவிகலபோக்யனானவனே! உன்னுடை - உன்னுடைய, உந்தி - திருநாபியிலே, மலர் - விகஸிதமான, உலகம்அவைமூன்றும் - லோகங்களுடைய (ப்ரஸித்தமான) குணத்ரய விபாகயுக்தமான விஷயங்களிலே, பரந்து - பரந்து வைத்து, (தம்மை அவற்றுக்கு போக்தாவாக அபிமாநம்பண்ணியிருக்கிற), என்னுடை ஆருயிரார்-என்னுடையஆத்மாவானவர், உன்னுடை- உன்னுடைய, சோதிவெள்ளம் - விலக்ஷண தேஜோராசிரூபமான தேசத்துக்கு, அகம்பால் - உள்ளே, உன்னை - ...ஶய ப்ராப்யபூதனான உன்னை, கண்டுகொண்டிட்டு - "ஸதாபஶ்யந்தி" என்கி... கிலே, (நிதியெடுத்துக் காண்பாரைப்போலே கண்டுகொண்டு), வந்தெய்துவர் - ப்ராபிப்பது, எங்ஙனேகொல் - எங்ஙனேயாயிருக்கிறது ? ஸாம்ஸாரிகவிஷயத்தில் கைகழிந்த எனக்குக் கிட்ட விரகு எங்ஙனேயென்றுகருத்து. உந்திமலரிலே யென்றுமாம்.

இ—அஞ்சாம்பாட்டில், ஃபலம் உம்மதானால் ஸாதநமும் உம்முடைய தலையிலே ஆகவேண்டாவோ என்ன, நீ ஸ்ருஷ்டித்த ஸகலலோகங்களிலும் பரிஸமாப்ய வ்யாபித்து அழுந்திக்கிடக்கிற நான், ஸாதநாநுஷ்டாநம் பண்ணிவந்து உன்னைக் கிட்ட என்பது ஒன்றுண்டோ? என்கிறார்.

[என்னுடை இத்யாதி] - உன்னுடைய ஸௌஶீல்யாதிகளையும் அழகையும் காட்டி என்னைவஶீகரித்து எனக்கு ஸௌலப்யனானவனே! [என்பொல்லா] - விபரீதலக்ஷணையாதல், அநுபஹதரத்நம்போலே நித்யாபூர்வமான போக்யதையைச் சொல்லுதல்,

[உன்னுடை இத்யாதி] - உன்னுடைய திருநாபியிலே விஸ்த்ருதமாகாநின்றுள்ள ஸகல லோகங்களிலும் உண்டான ஶப்தாதிவிஷயங்கள்தோறும் பற்றிக் கிடக்கிறவனாயிருந்து வைத்து, ஸர்வஶக்தியான நீ வ்யாபித்த பரப்படங்க சாபலத்தாலே வ்யாபித்தவன் நான்: இது என்னுடையதில்லை. உனக்கு அஸாதாரணமாய் நிரவதிகதேஜோரூபமான பரமபதத்துக்குள்ளே. "..." [உன்னைக் கண்டுகொண்டிட்டு] - புறம்புள்ளபற்றடங்கவிட்டு அந்த அவிநிவேஶங்களெல்லாம் உன்பக்கலிலேயாய் அர்ச்சிராதிமார்க்கத்தாலேவந்து விலக்ஷணஶரீரத்தைப்பெற்றுக்காணவேண்டும்படியான உன்னைக் கண்டுகொண்டு. [என்னுடையாருயிரார்] - ஶப்தாதிகளிலே ப்ரவணமான என்னாத்மா. முதலியாரென்று க்ஷேபிக்கிறார். இப்படிப்பட்டநான் ஸாதநாநுஷ்டாநம்பண்ணிவந்து கிட்ட என்பதொன்றுண்டோ?

ஈடு.—அஞ்சாம்பாட்டு. 'எல்லாம் செய்தாலும், "ஶாஸ்த்ரபலம்ப்ரயோக்தரி" (ஶாஸ்த்ரபலம்ப்ரயோக்தரி) அன்றோ? ஃபலம் உம்மதானபின்பு நீரும் சிறிதுயத்நம் பண்ணவேணுங்காணும்' என்ன, 'நீ ஸ்ருஷ்டித்த லோகங்களில் விஷயங்கள்தோறும் அகப்பட்டுக்கிடக்கிற நான் உன்னைப்பெறுகைக்கு ஒருஸாதநத்தை யநுஷ்டித்துவந்து பெறுகையென்று ஒன்றுண்டோ?' என்கிறார்.

[என்னுடைக் கோவலனே] - பாண்டவர்களுடையவன் ஆனாற்போலே யாயிற்று: இதுஶீலமிருந்தபடி. [என்பொல்லாக்கருமாணிக்கமே] - இது வடிவழகிருந்த படி. "அழகிது" என்னில் நாட்டோப்பாமென்று பார்த்து, விஜாதீயமான ஶப்தத்தாலே சொல்லுகிறாராதல்; அன்றியே தொளையாமணி என்றுதல். பொல்லல் - தொளைத்தல். அநுபஹதமான ரத்நம்போலே என்னுதல். [உன்னுடையித்யாதி] - உன்படியிதுவாயிருக்க, உன்னையொழிந்த விஷயங்களினுடைய வடிவழகிலும் குணங்களிலும் கால் தாழ்ந்துபோந்தவனாயிருந்தேன்நான். உன்னுந்தியிலே மலராநின்றுள்ள லோகங்கள் மூன்றிலும்உண்டான விஷயங்கள்தோறும், தனித்தனியே யற்றுக் கால்தாழ்ந்துபோந்தவனு

---

அஞ்சாம்பாட்டு - என்னுடை இத்யாதி. எல்லாம் செய்தாலுமென்றது - ஸ்வரூபோத்கர்ஷங்கள் மததீநமாயிருந்ததேயாகிலு மென்றபடி. ஶாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி - சேதநன் கர்த்தாவாயுள்ளஅளவில் ஶாஸ்த்ரத்துக்கு ஸாபல்யமுண்டென்றபடி. "கீழிரண்டுபாட்டாலே - அநப்யுபகம்ய ஸாதநாநுஷ்டானத்துக்கு ப்ராப்தியில்லை என்றார்; மேல் இரண்டுபாட்டாலே - அப்யுபகம்ய சக்தியும், 'அறியேன்' என்கையாலே - ஜ்ஞாநமும்இல்லையென்கிறார்" என்றருளிச்செய்வர். "உன்னுடையுந்திமலருலகமவைமூன்றும் பரந்து - என்னுடையாருயிராரெங்ஙனேகொல் வந்தெய்துவர்" ... கடாக்ஷித்தருளிச்செய்கிறார் நீ ஸ்ருஷ்டித்த இத்யாதி.

...டவர்களுடையவனானாற்போலே யென்றது - "இன்னுருடைய ம... என்று த்ருஷ்டாந்தம். இப்பதத்தால் ஃபலிதம் - இதுஶீலம் இருந்தபடி என்று. இப்பதத்தால் ஃபலிதம்-இதுவடிவழகிருந்தபடி என்று. வடிவழகைச்சொன்னால் பொல்லாமணியென்பானென்? என்ன - அழகிதுஎன்னில் இத்யாதி. "துளையாமணி" என்றதால் ஃபலிதம்-அநுபபுக்தம் இத்யாதி. ஸௌஶீல்யத்தையும் வடிவழகையும் சொன்ன வநந்தரம், "உன்னுடையுந்தியலருலகமவை மூன்றும் பரந்து" என்கிறவருடைய ஸாவம் - உன்படி இத்யாதி. படியென்றது - சாடு. திருமேனியென்று ஸ்வஸாவார்த்தம். "கருமாணிக்கம்" என்று - வடிவழகுக்கும், "என்னுடைக்கோவலன்" என்றுகுணத்துக்கும் ப்ரதிகோடியாக 'உன்னையொழிந்த விஷயங்களினுடைய வடிவழகிலும் குணங்களிலும்' என்றபடி. சப்தார்த்தம் - உன்னுந்தியிலே இத்யாதி. "பரந்து" என்றதின் அர்த்தம் - தனித்தனியே

யிருந்தேன் நான். நீ ஸர்வஶக்தியோகத்தாலே வ்யாபிக்குமிடமடைய நான் என்னுடைய சாபலத்தாலே கால்தாழ்ந்து திரிந்தேன். இது என்னிலையிருந்தபடி. அதுக்குமேலே நீ யெட்டாநிலத்தை யிருப்பிடமாக வுடையையாயிருந்தாய். [உன்னுடைச்சோதியித்யாதி] -உனக்கே அஸாதாரணமாய் நிரவதிகதேஜோரூபமாய், "அத்யர்க்காநலதீப்தம் தத்ஸ்தாநம்" (அத்யர்க்காநலதீப்தம் தத்ஸ்த்தாநம்) என்று சொல்லப்படுகிற ஸ்ரீவைகுண்டத்தை யிருப்பிடமாகவுடையையாயிருக்கிற உன்னை, ப்ரக்ருதிப்ராக்ருதங்களிலுண்டான ஸம்பந்த மற்று நெடுந்தூரம் வழிவந்து அதுக்கு அநுரூபமா யிருப்பதொருஶரீரத்தைப் பரிக்ரஹித்து, பரமபதப்ராப்திபண்ணிஞல்அனுபவிக்கவேண்டியிருந்தது; ஆக, என்னிலையிருந்தபடியிது; உன்னிலையிருந்தபடியது; என்நெஞ்சில் ப்ராவண்யமிருந்தபடி இது; ஆனபின்பு, இந்த முதலியார் கடுகவந்து உன்னைக்கிட்டாரோ? ('என்னுடை யாருயிரார்' ஶப்தாதிகளிலே ப்ரவணமானவென்னுத்மா. "முதலியார்" என்று க்ஷேபிக்கிறுர்.) ஆக, ஸ்வரூபம் த்வததீநமாயிருந்தது, அவ்வவருடைய உத்கர்ஷங்களும் த்வதயீநமாயிருந்தது; என்னிலையிது, உன்னிலையது; என்னெஞ்சில் ப்ராவண்யமிது; ஆனபின்பு, நான்ஒரு ஸாதநாநுஷ்ட்டாநம் பண்ணிவந்து கிட்டுகையென்றுஒருபொருளுண்டோ? என்கிறுர். (ரு)

---

## ௬ம் பாட்டு.

வந்தெய்துமாறறியேன்மல்குநீலச்சுடர்தழைப்பச்
செஞ்சுடர்ச்சோதிகள்பூத்தோருமாணிக்கஞ்சேர்வதுபோல்
அந்தரமேற்செம்பட்டோடடியுந்திகைமார்புகண்வாய்
செஞ்சுடர்ச்சோதிவிடவுறையென்திருமார்பனையே.

*ஆ.—(வந்தெய்துமாறறியேன்) - அஸமமாய், நீலமாயிருந்த ஜ்யோதிஸ்ஸைத் தழைத்துச் சிவந்தவொளியைப்பூத்து ஒருமாணிக்கம் கிடந்தாற்போலே, திவ்யரூபகதநீலஜ்யோதிஸ்ஸாலும், பீதாம்பர சரண நிமக்நகாபீகமல கரதலகௌஸ்துபலக்ஷ்மீ விராஜித வக்ஷஸ்த்தல விலோசந வதநாருணகிரணங்களாலும் தீப்யமாநனுமாய், ய:*

*இத்யாதி. விவரணம் - நீ ஸர்வஶக்தி இத்யாதி - "பரந்து" என்கிறவிடத்திலே "யத்வா[illegible] ஹியவம் [illegible]" (பாரத-ஶாந்தி) என்றது அநுஸந்தேயம். இதுஎன்னிலை யிருந்தபடியென்றது-ஸாதநாநுஷ்ட்டாநபூர்வ விரக்தியுமில்லையென்றபடி. மேலிற்பதத்துக்கவதாரிகை - அதுக்குமேலே இத்யாதி. ஶப்தார்த்தம்- உனக்கே இத்யாதி. இந்தப் பதப்ரயோகத்துக்கு ஸாவமாதல், ஹவிதமாதல் - ப்ரக்ருதி இத்யாதி. கீழ்ச்சொன்ன அர்த்தங்களை நிகமித்துக்கொண்டு, "என்னுடையாருயிரார்" இத்யாதிக்கர்த்தமருளிச் செய்கிறுர் - ஆகஎன்னிலை இத்யாதி நாலுவாக்யத்தாலே. "ஆகஎன்னிலையிருந்தபடியிது" என்றதின் விவரணம் - என்நெஞ்சில் இத்யாதி. கீழிரண்டுபாட்டி லர்த்தத்தையுங் கூட்டிக்கொண்டு கீழ் வாக்யத்ரயவிவரணம் - ஆக, ஸ்வரூபம் இத்யாதி. 'என்னுடைக்கோவலனே' இத்யாரப்ய, 'பரந்திருக்கிற - என்னுடையாருயிரார் - உன்னுடைச்சோதிவெள்ளத் தகம்பாலுன்னைக் கண்டுகொண்டிட்டு - எங்ஙனேகொல் வந்தெய்துவர்' இத்யந்வய:. "அத்யர்க்காநலதீப்தம் தத்ஸ்தாநம் விஷ்ணோ[illegible] மஹாத்மந: । [illegible]" இத்யாரண்யபர்வணி*

பதியாய்க் கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற உன்னைக் காணுதொழியில் தரிக்கமாட்டு கிறிலேன் ; காண்கைக்கோருபாயமும் காண்கிறிலேன் ! என்கிறார்.

ஓ.—ஆறும்பாட்டில், நிரதிசயபோக்யனை உன்னைப் பெறுகைக்கு எனக்கு ஓருபாயமில்லை: நீயேவந்து விஷயீகரிக்கவேணும் என்கிறார்.

[மல்கென்று தொடங்கி] - முதலிலே மிக்கிருந்துள்ள நீலமான தேஜஸ்ஸு மேன்மேலென ஸம்ருத்தமாகச் சிவந்தவொளியை யுடைத்தான சிலகிரணங்களை பூத்தது ஒருமாணிக்கம் சாய்ந்துகிடக்குமாபோலே. [அந்தரமேற்செம்பட்டொடென்று மேலுக்கு]- திருவரைமேற் சாத்தின திருப்பீதாம்பரத்தோடேகூடத் திருவடிகள் தொடக்கமான திவ்யாவயவங்கள் சிவந்து அழகிய ஒளியைவிடக் கண்வளர்ந்தருளுவதும் செய்து ஸ்வயனுமான ஸ்ரீய:பதியை.

ப.—அநந்தரம், ப்ராப்யதா ப்ரகாசகமான நிரதிசயா: ரூப்யத்தையுடைய உன்னை நான்வந்து கிட்டுமுபாயம் அறிகிறிலேன் என்கிறார்.

மல்கு - செறிந்த, நீலச்சுடர் - நீலச்சுடரானது, தழைப்ப - பரம்பாநிற்க, (இடையிடையே), செம் - சிவந்த, சுடர் - ஒளியையுடைத்தான, சோதிகள் - தேஜோ விசேஷங்களை, பூத்து - பூத்திருப்பது, ஒரு மாணிக்கம் - ஒரு நீலரத்நமானது, சேர் வதுபோல் — பொருந்தியிருந்தாற்போலே, அந்தரமேல் - பரமவ்யோமத்திலே, செம் - சிவந்த, பட்டோடு - திருப்பீதாம்பரத்தோடே, அடி - திருவடிகளும், உந்தி - திரு வுந்தியும், கை - திருக்கை, மார்பு - திருமார்பு, கண் - திருக்கண், வாய் - திருப்பவள மும், செம் - சிவந்த, சுடர் - ப்ரகாசத்தையுடைத்தான, சோதி - தேஜஸ்ஸை, விட - பரப்பாநிற்கும்படி, உறை - எழுந்தருளியிருக்கிறவிருப்பை, என் - எனக்கு ப்ரகாசிப் பித்த, திருமார்பனை - ஸ்ரீமானானவனை, (நான் வந்து), எய்தும் - கிட்டும், ஆறு - உபா யம் அறியேன் - அறிகிறிலேன். அறியும் நீ வந்துகொண்டுபோமித்தனையென்று

இ.—ஆறும்பாட்டில், நிரதிசயபோக்யனை உன்னைக் கிட்டுகைக்கு ஓர் உபாயமில்லை; நீயேவந்து விஷயீகரிக்கவேணும் என்கிறார்.

[வந்தெய்து மாறறியேன்] - நீயேவந்து கிட்டுமதொழிய, நான் ஸாதநாநுஷ் டாநம்பண்ணிக்கிட்டும் விரகு அறிகிறிலேன். கிட்டுகைக்கு இச்சையேயிறே இத்தலையி லுள்ளது. நீ வந்துகிட்டினால் விலக்காமைக்கு வேண்டுவதுஉண்டு. ஆனால், இழந்தாலோ என்ன, [மல்குநீலச்சுடர்] - வடிவழகாலும், பேற்றுக்குப்பற்றாசுண்டாகையாலும், விடலாயோவிருக்கிறது ; ஆஸ்ரிதஜநகமான வடிவழகைச் சொல்லுகிறது. குறைவற்றநீல மான புகர். [தழைப்ப] - ஓரளவில் பர்யவஸியாதே மேன்மேலே வளர்கிறபடி. [செஞ் சுடர்ச்சோதிகள்பூத்து] - இதுக்கு பாஸாமமான சிவந்தசுடரை யுடைத்தான கிரணங் களை, பூவலர்ந்தாற்போலே விகஸிதமாக்கி. [ஒருமாணிக்கம் சேர்வதுபோல்] - அநு பவயோக்யமாம்படி அத்விதீயமான ரத்நம் சேர்ந்தாற்போலே. [அந்தரமேல் இத்யாதி]- திருவரையிலே சாத்தின திருப்பீதாம்பரம், இதுக்குக் கீழாம் திருவடிகள். இதுக்கு மேலான திருநாபியும், திருக்கைகளும் திருமார்பும். தாமரைப்பூவை இருப்பிடமாக வுடையார் இருக்கையாலே - திருமார்வையும் சொல்லுகிறது. திருக்கண்ணும், திருப் பவளமும். [செஞ்சுடர்ச் சோதிவிட] - சிவந்தசுடரை யுடைத்தான ஜ்யோதிஸ்ஸை

ப்ரஸரிக்க. [உறை] - கண்வளர்ந்தருளுகிற: இதுவும் அழகிலே ஒன்றாயிருக்கிறபடி. [என்திருமார்வனையே] - இதுவும் ஓர் ஆபரணம்போலே, எனக்கு ஸ்வாமிநியான பிராட்டியைத் திருமார்பிலே உடையவன் என்னுதல், எனக்கு ஹ்வயனுஸந்நியஃபதி என்னுதல்.

ஈடு.—ஆறாம்பாட்டு. ஆனாலும், 'ஏதேனும் ஒருபடி நீரும் சிறிது செய்துவந்து கிட்டவேண்டாவோ?' என்ன, உன்னைவந்துகிட்டும் உபாயம்அறியேனென்கிறார்.

[வந்தெய்துமாறறியேன்] - வந்துகிட்டும்உபாயம்அறிகிறிலேன். நீதானே மேல் விழுந்து உன்வடிவழகைக் காட்டாநின்றால் அத்தைவிலக்காமைக்கு வேண்டுவதுஉண்டு; என்றால்உன்னை ஒருஸாதநாநுஷ்ட்டாநம் பண்ணிவந்து கிட்டப்போகாது. ஆனால் இழந்தாலோ ? என்ன; 'இழக்கலாயோ உன்படியிருக்கிறது'என்கிறார். [மல்கு நீலச்சுடர் தழைப்ப] -வடிவழகில்லையென்றுவிடவோ? பெறுவிக்கைக்குப் புருஷகாரமில்லையென்று விடவோ? எனக்குஆசையில்லையாய்விடவோ? [மல்குநீலச்சுடர்] - குறைவற்ற நீலப்புகரானது. [தழைப்ப] - கர்மநிபந்தநமாக வந்ததல்லாமையாலே மேன்மேலென மிக்குவருமிறே; இவ்வளவென்ன வோண்ணாதபடி மேன்மேலென வளராநிற்கும். [செஞ்சுடர்ச் சோதிகள்பூத்து]- சிவந்த சுடரையுடைத்தாயிருந்துள்ள தேஜஸ்ஸானது, காலப்பூவலர்ந்தாற்போலே பூத்து. [ஒருமாணிக்கம் சேர்வதுபோல்] – அநுஹுவயோக்யமாம்படி ஒரு மாணிக்கமானது சாய்ந்தாற்போலே. 'மல்குநீலச்சுடர் தழைப்ப' என்கையாலே - நிறமிருந்தபடி சொல்லிற்று; 'செஞ்சுடர்ச்சோதிகள் பூத்து'என்கையாலே - திவ்யாவயவங்களிருந்தபடி சொல்லிற்று; 'ஒருமாணிக்கம் சேர்வதுபோல்'என்கையாலே - இரண்டுக்கும் ஆஶ்ரயமான திருமேனிதன்னைச் சொல்லுகிறது. செஞ்சுடர்ச்சோதிகள் பூத்தென்கிறவிடத்தில் தெரியாதபடி மறைத்துச் சொல்லிற்றேன்றுண்டிறே,அதுதன்னை வ்யக்தமாகச் சொல்லுகிறார் மேல். [அந்தரமேலித்யாதி] - அந்தரம் - நடுவு. உடம்புக்கு நடுவு அரை. திருவரையில் திருப்பீதாம்பரத்தோடே, திருவடிகள்; திருநாபிகமலம், திருக்கைகள், பெரியபிராட்டியாரெழுந்தருளி யிருக்கையாலே கீழ்ச்சொன்னவற்றோடொக்கச் சொல்ல

---

ஆறாம்பாட்டு - வந்தேய்தும் இத்யாதி. ''வந்தெய்து மாறறியேன்'' என்றத்தைக் கடாக்ஷித் தவதாரிகை - ஆனாலும் இத்யாதி. 'ஆனாலும்' என்றது - நீர் அஶக்தரானாலும் என்றபடி.

ஆறு - உபாயம். ஹவிதம் - நீ தானே இத்யாதி. எய்துமாறு அறியேனென்னாதே, ''வந்தெய்துமாறறியேன்'' என்கையாலே - 'விலக்காமைக்கு வேண்டுவதுண்டு' என்று தோற்றுகிறது. மேலுக்கவதாரிகை-ஆனால்இழந்தாலோ இத்யாதி. ''மல்குநீல'' என்றதொடங்கி ''சோதிவிட'' என்றத்தைப்பற்ற - வடிவழகில்லை இத்யாதி. ''என் திருமார்வனை'' என்றத்தைப்பற்ற - பெறுவிக்கைக்கு இத்யாதி. ''வந்தெய்து மாறறியேன்'' என்றத்தைப்பற்ற - எனக்குஆசை இத்யாதி. ''மல்கு நீல'' என்று – ஸம்ருத்திசொல்லியிருக்க, மீளவும் ''தழைப்ப'' என்றதுக்கு ஹாவம் - கர்மநிபந்தநம் இத்யாதி. விவரணம் - இவ்வளவென்ன இத்யாதி. ''சோதி'' என்று - கிரணம். ''செஞ்சுடர்ச் சோதி யென்கிறது - விசதமாகாமையாலே விவரிக்கிறார்'' என்று நினைத்து, மூன்றுந்தான் இன்னதென்கிறார் - மல்குநீல இத்யாதிவாக்யத்ரயத்தாலே. மூன்றையும் விவரியாமல் ஒன்றை விவரிப்பானென்? என்ன - செஞ்சுடர்ச்சோதிகள் இத்யாதி. 'மறைத்துச்சொல்லிற்று' என்றது - ''மல்கு நீலச்சுடர், ஒரு மாணிக்கம்'' என்கிறவற்றுக்கு - உபமேயம் ஸ்புடமானாற்போலே, ''செஞ்சுடர்ச்சோதிகள் பூத்து'' என்கிறதுக்கு - தார்ஷ்டாந்திகம் திவ்யாவயவங்களென்று ஸ்புடமாகாமையாலே என்றபடி. திருமார்வு கறுத்திருக்க, அவயவங்களோடே கூட்டுவானென் ? என்ன - பெரியபிராட்டியார்

லாம்படி சிவந்திருக்கிற திருமார்பு, திருக்கண்கள், திருப்பவளம், இவை. [செஞ்சுடர்ச் சோதிவிட] - சிவந்த சுடரை யுடைத்தான தேஜஸ்ஸை ப்ரஸரிக்க. [உறை யென்திரு மார்பனையே] - இதுவும் ஓராபரணம்போலே: என்ஸ்வாமிநியான பெரிய பிராட்டி யாரைத் திருமார்விலே யுடையவனை. திருப்பாற்கடலிலே நீர்உறுத்தாதபடி திருவநந்தாழ் வானைப் படுக்கையாகக்கொண்டு, அதிலே நாநாவர்ணமாயிருப்பதொரு மேல்விரியை விரித்தாற்போலே அவன் சாய்ந்தருள, மேலெழுந்தருளியிருக்குமாயிற்றுப் பிராட்டி. (மேல்விரி-திருப்படுக்கைமேலே யலங்காரமாகப்படுத்துமது.) "பர்யாயேணப்ரஸுப்த:"(பர்யாயேணப்ரஸுப்த:) என்னக்கடவதிறே.

## ஏழாம் பாட்டு.

என்றிருமார்பன் தன்னை என்மலைமகள்கூறன் தன்னை
என்றும்என்நாமகளை அகம்பாற்கொண்ட நான்முகனை
நின்றசசீபதியை நிலங்கீண்டெயின்மூன்றெரித்த
வென்றுபுலன்துரந்தவிசும்பாளியைக்காணேனே?

ப.—(என்திருமார்பன்தன்னை) - உன்னுடைய லோகப்ரவ்ருத்திகள் த்வத தீநமானாற்போலே, ப்ரஹ்மருத்ராதிகளுடைய லோகப்ரவ்ருத்திகளும் த்வததீநம் ; ஆன பின்பு, என்னுடைய அபேக்ஷிதமும் த்வத்ப்ரஸாதைக லப்யம்; இங்ஙனேயிருக்கச் செய்தே, நீயோ என்அபேக்ஷிதம் செய்தருளுகிறிலை ; நான் இனி உன்னைக்காணப் பெறாதே போமத்தனையாகாதே என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், ப்ரஹ்மாதிகளுடைய மஹிஷீதொடக்கமான லோக்ய ஜாதமும், அவர்களுடைய அதிமாநுஷ ப்ரவ்ருத்திகளும் தன்னாலே ஆம்படியிருக்கிற எம்பெருமானை நான் காணப்பெறேனே என்கிறார்.

[என் திருவென்று தொடங்கி] - தன்னுடைமஹிஷீலாபமும் ஸ்வாயீநமானாற் போலே ருத்ராதிகளுடைய மஹிஷீலாபமும் தன்னாலேயாம்படி இருந்தவனை பலகால் "என்" என்கிறது - எம்பெருமான்படியை அநுஸந்தித்து ப்ரீதியாலே. நின்ற என் கிறது - மற்றையவர்களோடு ஒக்கஎண்ணலாயிருக்கை. [நிலங்கீண்டென்று தொடங்கி]-

---

இத்யாதி. பெரியபிராட்டியோரோட்டைச் சேர்த்தியையும் ஓர் ஆபரணமாக ரூபிக்கிறார் - இதுவும் இத்யாதி. "சேர்வதுபோல்" என்ற ரூபகத்துக்குச்சேர இன்னவிடத்திலே என்னவேண்டுகையாலே அத்தையருளிச்செய்கிறார் - திருப்பாற்கடலிலே இத்யாதி. "மலராள்தனத்துள்ளான்" என்ன வேண்டியிருக்க, அவன் மார்விலே யிருக்கிறாள் என்னக்கூடுமோ ? என்ன - பர்யாயேண இத்யாதி. "பரிஷ்வக்த: ஸ்வாதுகாமவாஜ்ஞஸ்ய ஸஹ்ய ஸ்வீர்ய பர்யாயேணப்ரஸுப்தஸ்ச காஜஹாரமாஸஜ:"இதிஸுந்தரகாண்டேவாயஸவ்ருத்தாந்தகதநப்ரகரணே .(நஅ-உ0) இதுக்கு "பரிஷ்வக்த:"இத்யாதி பூர்வார்த்தத்திலே நோக்கு.'மேலெழுந்தருளியிருக்குமாயிற்று'என்றவிடத் திலே " ஶயஜஸ்ய மிஷு" இத்யாத்யநுஸந்தேயம். 'மல்குநீல' என்றுதொடங்கி, 'திருமார்பனை வந்தெய்து மாறறியேன்' இத்யந்வய: (சு)

ப்ரளயங்கொண்ட பூமியைத் தானேஎடுத்தருளினாற்போலே வார்த்தைப்பாட்டைக் கொடுத்து அவர்கள் தாங்கள் செய்தாராய்நின்ற த்ரிபுரதஹநமென்ன இந்த்ரியங்களை வென்று ஓட்டஎன்ன, த்ரைலோக்யத்தை ஆளவென்ன, இப்படிப்பட்ட அதிமாநுஷ ப்ரவ்ருத்திகளையும் தானே செய்தருளினவனை. இவ்வைந்துபாட்டாலும் - தம்முடைய மிடுக்காலே எம்பெருமானை ப்ராபிக்கமுடியாமையும், அவனுடைய ப்ரஸாதத்தாலே அவனைப் பெறவேணுமென்றும் சொல்லுகிறது.

ப.—அநந்தரம், ஸ்வேநரூபேணவும் கார்யபுருஷரூபேணவும்நின்று ஸர்வ ப்ரகாரரக்ஷணம்பண்ணுகிற அவனைக் காணப்பெறேனோ? என்கிறார்.

என்திருமார்பன்தன்னை - சேஷித்வஸூசகமான ஸ்ரீய:பதித்வத்தை எனக்கு ப்ரகாசிப்பித்தவனாய், என்மலைமகள் கூறன் தன்னை-பார்வதியை சரீரார்த்தத்திலேயுடைய ருத்ரனைப்ரகாரமாகவுடையனாய்நிற்கிற நிலையை எனக்குக்காட்டினவனாய், என்றும்-என்றும்,என்நாமகளையகம்பால்கொண்டநான்முகனை - நாமகளான ஸரஸ்வதியை அந்தரங்க மஹிஷியாய்க்கொண்ட சதுர்முகப்ரகாரத்வத்தை எனக்குப்ரகாசிப்பித்தவனாய், நின்ற-(இவர்களோடு ஸமகணனையிலே)நிற்பானாய், சசீபதியை- சசீபதியான இந்த்ரனைப்ரகாரமாகவுடையனாய், (ஸ்வேநரூபேண), நிலங்கீண்டு - பூம்யுத்தாரணம்பண்ணியும்,(ருத்ராந்தராத்மாவாய்க்கொண்டு), மூன்றெயிலெரித்த - த்ரிபுரதஹநம்பண்ணியும், (ப்ரஹ்மாவுக்குள்ளீடாகநின்று ஸ்ருஷ்ட்யுபயுக்தமாக) புலன் - இந்த்ரியங்களை, வென்று - ஜயித்து, துரந்து - ஓட்டியும், (இந்த்ரசரீரியாய்க்கொண்டு), விசும்பாளியை - ஸ்வர்க்கநிர்வஹணம் பண்ணியும்ரக்ஷித்தவனை. காணேனோ- காணமாட்டேனோ? இப்படி ஸர்வப்ரகாரரக்ஷண வ்யாபாரத்தை யுடையவனைக் காண்கையே ப்ரயோஜநமான எனக்குக்காணக்கிட்டா தொழிவதே என்றுகருத்து. எயில் - மதிளாய், புரத்தைக்காட்டுகிறது.

இ.—ஏழாம்பாட்டில், ப்ரஹ்மாதிகளுடைய போக்யஜாதமும், அவர்களுடைய அதிமாநுஷவ்ருத்திகளும் ஸ்வாதீநமாயிருக்கிறவனை நான் காணப்பெறேனோ? என்கிறார்.

[என்திருமார்பன் தன்னை] - இது மேற்சொல்லுகிறவற்றுக்குத்ருஷ்டாந்தம். பிராட்டி, ஸ்வாதீனையாகிறாப்போலே ருத்ராதிகளுடைய மஹிஷீலாபமும் ஸ்வாதீந மென்கை. "என்திரு" என்று - விசேஷணப்ரயோகமாயிருக்கிறது. இது - விசேஷண ப்ரயோகமுமாய், விசேஷ்யப்ரயோகமுமாய் விசிஷ்டப்ரயோகமுமாய் இருக்கும்; ஆச்ரயணதசை, ப்ராப்திதசை,போகதசை. [என்மலைமகள் இத்யாதி] - ஹிமவத் ஸுதையானவளுக்கு சரீரத்திலே கூறுகொடுத்திருக்கிற ருத்ரனை. இங்கு, "என்" என்கிறவை விசேஷ்யப்ரயோகங்கள்.இல்லையாகில், "தெய்வம் மற்றில்லை" "மறந்தும் புறந்தொழா"என்கிறத்தோடு சேராதிறே. ஸாமாநாதிகரண்யத்தாலே-ஸவிஷாதிகராயிருந்துள்ள ருத்ராதிகளுடைய ஸத்தையும் அவன் அதீநமென்கை. என்றுமொக்க ஸரஸ்வதியைத் தன்னோடொக்கச் சேர்த்து ஸ்வாதீநமாக்கிக்கொண்டிருக்கிறசதுர்முகனை.[நின்றசசீபதியை] - இவர்களோடொக்கச் சொல்லலாம்படி முட்டுப்பொறுக்கும் ஐச்வர்யத்திலே நின்ற இந்த்ரனை.[நிலங்கீண்டுஇத்யாதி]-மஹாவராஹமாய் ப்ரளயங்மதையானபூமியை உத்தரித்த இப்ரவ்ருத்தி ஸ்வாதீனையாயிருக்கிறாப்போலே ப்ரஹ்மாதிகளுடைய வ்யாபாரமும் ஸ்வாதீநமென்கிறது. [எயில்மூன்றெரித்த] - மதிள் மூன்றெரித்த. "விஷ்ணுராத்மா" என்கிறபடியே ஆத்மதயாநின்று செய்து, வார்த்தைப்பாட்டை அவனுக்காக்கி

ஞன். [வென்று புலன்துரந்த] - ஸ்ருஷ்டிக்கு உறுப்பான இந்த்ரியஜயத்தைப்பண்ணின வைஹ்ஸாவை: புலன்களைவென்ருேட்டின. [விசும்பாளியை] - ஸ்வர்கத்தை வன்னியமறுத்தாளுமவனை. இங்கு ப்ரவ்ருத்திவிஶிஷ்டரான இவர்களோடே ஸமாநாதிகரித்தது, ஸகலப்ரவ்ருத்திகளும் அவன் அதீநமாகையாலே "என்னுடைய அபேக்ஷித ஸித்திக்கு அவனையொழிய என்னால் செயலாவது ஒன்றுமில்லை" என்கைக்காக. [காணேனே] - என்னுடைய ஸத்தையே தொடங்கி உன்னதீநமாய் உன்னாலே பேறான பின்பு, நான் இங்ஙனே இழந்துபோமித்தனையோ ?

ஈடு.—ஏழாம்பாட்டு. உத்தேஶ்யலாஶும் அவனாலேயாயிருந்தது. இத்தலையாலே ப்ரவர்த்திக்கைக்கு ப்ராப்தியில்லாதபடியான பாரதந்த்ர்யமுண்டாயிருந்தது; அத்தலையாலே பெறுமிடத்தில் ஒருகண்ணழிவின்றிக்கே யிருந்தது; இப்படி யிருக்கச்செய்தேயும் இழந்திருக்கக் காண்கையாலே, "நான்இவ்விழவோடே கிடந்து முடிந்துபோமித்தனையாகாதே" என்கிறார்.

[என்திருமார்பன்தன்னை] - இவ்விடத்திலே "என்" என்கிற இதுக்கு - விசேஷணாம்ஶத்திலே யந்வயம்; * என்திருமகள்சேர் மார்வனிற்போலே. என் ஸ்வாமிநியான பெரியபிராட்டியாரைத் திருமார்விலே யுடையவனை. (இது விசேஷணத்திலும் விசேஷ்யத்திலும் விசிஷ்டத்திலும்; (ஆஶ்ரயணதசை ப்ராப்திதசை ஹோமதசை.)[என் மலைமகளித்யாதி] - இவ்வோபதங்களில் "என்" என்கிற இதுக்கு - விசேஷ்யாம்ஶத்திலே ஊற்றம். அவனுடைய விபூதியோகத்துக்கு உறுப்பாகச் சொல்லுமித்தனைபோக்கி, "மறந்தும் புறந்தொழாமாந்தர்" என்றிருக்குமவர், இவர்களோடே தமக்கு ஓர்அந்வயம் உண்டேன்கிறாரல்லரே. [என்மலைமகள்கூறன்றன்னை] - ஹிமவானுடைய பெண்பிள்ளையைத் தன்னுடம்பில் ஒருபார்ஶ்வத்திலே யுடையனாயிருக்கிறருத்ரனைத் தானிட்ட வழக்காக வுடையனாயிருக்கிறவனை. [என்றுமித்யாதி] - ஸரஸ்வதியை என்றுமோக்கத் தன்பக்கலிலே யுடையனாயிருக்கிறசதுர்முகனுக்குஅந்தராத்மாவாயுள்ளவனை. [நின்ற சசீபதியை] - இவர்களை எண்ணினால் தன்னை எண்ணலாம்படி ஐஶ்வர்யத்தால் குறைவற்றிருக்கிற இந்த்ரனுக்குஅந்தராத்மாவாயுள்ளவனை. "ஸப்ரஹ்மாஸஶிவ:" (ஸப்ரஹ்மாஸஶிவ:) என்றால் "ஸேந்த்ர:" (ஸேந்த்ர:) என்று ஒக்கச்சொல்லலாம்படி முட்டுப்

---

ஏழாம்பாட்டு.—என்திருமார்பன் இத்யாதி. ப்ரஹ்மாதிகளை ஸ்வஸ்வமஹிஷிகளோடே கூடச் சொல்லுகிறதுக்குக்கருத்து-"அவரவர்களுக்கு அபிமதமானவிஷயங்களைஈஶ்வரன் தலைக்கட்டிக் கொடுக்கும்" என்றிறே; "இப்படியே நமக்கும் அபிமதமான தன்திருவடிகளில் கைங்கர்யத்தையும் தரும்" என்றுவிவக்ஷித்து 'உத்தேஶ்யலாபம்அவனாலேயாயிருந்தது'என்கிறார். "எயில்மூன்றெரித்து" இத்யாதியாலே-இவர்கள்ப்ரவ்ருத்தியும்அவனதீநமென்கையாலே,"தமக்குஸாதநாநுஷ்டாநம்பண்ண ப்ராப்தியில்லாதபடியான பாரதந்த்ர்யம் தோற்றுகிறது"என்றுவிவக்ஷித்தருளிச்செய்கிறார் - இத்தலையாலே இத்யாதி.

"என்திருமார்வன்தன்னை" என்றத்தைப்பற்ற - அத்தலையாலே இத்யாதி. கண்ணழிவு - விளம்பம். "காணேனே"என்றத்தைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார்- இப்படியிருக்கச்செய்தேயும் இத்யாதி. கீழைப்போலே "என்" என்கிறவை விசேஷணாம்சாந்வயிஅன்றனென்கிறார்,- இவ்வோபதங்களில் இத்யாதி. விசேஷ்யாம்ஶத்திலேயென்றது - பரமவிசேஷ்யனான ஈஶ்வரனிடத்தில்என்றபடி. விசேஷணாம்சத்திலூற்றமானால் விரோதமென் ? என்ன - அவனுடைய இத்யாதி. இவர்களோடே தன்னையும்எண்ணலாம்படியிருக்குமோ? என்ன - ஸப்ரஹ்மா இத்யாதி. ருத்ராதிகளை ஸ்வஸ்வமஹிஷி

பொறுத்துநின்றஇந்த்ரனுக்குஅந்தர்யாமியாயுள்ளவனை. இப்போதுஇவை சொல்லுகிறதுக்குக்கருத்தேன்என்றால்?-கீழே,ஸ்வரூபமும்உச்ச்ராயமும் தததீநமென்றது;இங்கே-ப்ராப்தயௌவனரான புத்த்ராதிகளை ஸத்ருமவிஷயங்களிலே விவாஹம்பண்ணுவிக்கும்பித்ராதிகளைப்போலே, இவர்களுடைய மஹிஷீலாபமும் தந்தாமாலல்ல, ஸர்வேஶ்வரனாலே என்கை. [நிலங்கீண்டித்யாதி] – இவர்களுடைய ப்ரவ்ருத்திகளுமெல்லாம் தததீநமேன்கிறது மேல். [நிலங்கீண்டு] - ப்ரளயார்ணவ மக்நையாய் அண்டபித்தியிலேபுக்குழுட்டின பூமியை மஹாவராஹமாய்ப்புக்குஎடுத்துக்கொண்டு ஏறினபோதை வ்யாபாரம் தததீநமானாற்போலே, அவர்களுடைய வ்யாபாரங்களும் தததீந மேன்கிறது. [எயில்மூன்றெரித்த] - மதிள்மூன்றையெரித்த. "விஷ்ணுராத்மா" (விஷ்ணுராத்மா) என்னக்கடவதிறே; அதுவும்அவனிட்ட வழக்கு. [வென்றுபுலன்துரந்த] - ஸ்ருஷ்டிக்கு உறுப்பாக இந்த்ரியஜயத்தைப்பண்ணினவனை. புலன்களை வென்றோட்டின. [விசும்பாளியை]-ஸ்வர்க்கத்தை வன்னியம்அறுத்துஆளுகிறவனை. (இங்குப்ரவ்ருத்திவிசிஷ்டரான இவர்களோடே ஸமாநாயிகரித்தது, ஸகலப்ரவ்ருத்தியும் அவனதீநையாகையாலேஎன்னுடையஅபேக்ஷிதஸித்திக்குஅவனையொழிய என்னாற்செய்யலாவதில்லை யென்கைக்காக.) [காணேனே]- ஆகச் சொல்லிற்றாயிற்று: உத்தேஶ்யலாபமவனாலேயாயிருந்தது, அதுக்கு உறுப்பான ப்ரவ்ருத்தியில் வ்யாபரிக்க ப்ராப்தியில்லாதபடி அதுவும் அவனிட்ட வழக்காயிருந்தது. இனி, இத்தலையாலே பேறுமன்று விளம்பஹேது உண்டாயிருந்தது; அவனாலே பேறுமன்று விளம்பஹேது இன்றிக்கேயிருந்தது. இப்படியிருக்கச்செய்தேயும்தம்மை இழந்திருக்கக் கண்டாராகையாலே, "இனி இவ்விழவோடேஇங்ஙனே முடிந்துபோமித்தனையாகாதே?" என்று க்லேசிக்கிறார். (எ)

## எட்டாம் பாட்டு.

ஆளியைக்காண்பரியாய் அரிகாண்நரியாய்அரக்கர்
ஊளையிட்டுஅன்றுஇலங்கைகடந்து பிலம்புக்கொளிப்ப
மீளியம்புள்ளைக்கடாய் விறன்மாலியைக்கொன்றுபின்னும்
ஆளுயர்குன்றங்கள்செய்துஅடர்த்தானையும்காண்டுங்கொலோ?

*ஆ.—(ஆளியை.)—ஆளியைக்கண்ட குதிரையைப்போலேயும், ஸிம்ஹத்தைக்கண்ட நரியைப்போலேயும், ஹதசேஷரான ராக்ஷஸரெல்லாரும் பீதபீதரா யூளையிட்டு லங்கையினின்றும் ரஸாதலத்திலேபுக்கொளிக்கும்படியாக ப்ரதிகூலர்க்கு ம்ருத்யு*

---

*களோடே சொல்லுகிறதுக்கு ஸாவத்தை ஶங்காபரிஹாரமுகேந அருளிச்செய்கிறார் - இப்போது இவை இத்யாதி. இவைசொல்லுகிறதுக்கு - மஹிஷிகளோடே இவர்களைச்சொல்லுகிறதுக்கென்றபடி. ஆனால், "நிலங்கீண்டு" என்று ஸ்வவ்யாபாரம் சொல்லுவானென்? என்ன; த்ருஷ்டாந்தார்த்தமென்கிறார் - ப்ரளயார்ணவ இத்யாதி. த்ரிபுரத்தைதஹித்தவன் ஸர்வேஶ்வரனோ? என்ன-விஷ்ணுராத்மா இத்யாதி. இந்த்ரியஜயம் - ப்ரஹ்மாவின்கார்யம். "காணேனே" என்றது - காணப்பெறேனேவென்றபடி. ஃபலிதம் - ஆக இத்யாதி. ப்ரவ்ருத்திகளும் தததீநமென்கையாலே - ப்ரகரணத்துக்கு ஃபலித்த ஸாரம்-இனியித்தலையாலே இத்யாதிமூன்றுவாக்யத்தாலே. க்ரமேணாந்வயஃ.* (எ)

பூதரான பெரியதிருவடிதிருத்தோளிலேயேறி லங்கையைச்சென்றடர்த்து, அதிபலபராக்ரமராயிருந்தமாலிசுமாலிகளை ஸஸைந்யமாகக்கொன்றருளினாற்போலே, விரோதியான என்னுடைய பாபங்களையும்போக்கி எனக்கு என்றோ தன்னைக்காட்டி யருளுவது? என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், மாலிதொடக்கமான ப்ரதிகூலவர்கத்தைக் கொன்றருளின ஸர்வேஶ்வரனைக் காணவல்லோமே என்கிறார்.

[ஆளியென்று தொடங்கி] - ஆளியைக்கண்ட குதிரைபோலவும் ஸிம்ஹத்தைக்கண்ட நரிபோலவும் ராக்ஷஸர் ஒருப்ரவ்ருத்தி பண்ணமாட்டாதே கதறிக்கொண்டு அன்று இலங்கையைவிட்டு பிலத்திலேபுக்கு ஒளிக்கும்படியாக. [மீளியம்புள்ளைக் கடாய்] - வலியையுடைய பெரியதிருவடியைநடத்தி. ப்ரதிகூலர்க்கு ம்ருத்யுவாய் அநுகூலர்க்கு இனியனான பெரியதிருவடியை நடத்தினென்றுமாம். [விறல்] - மிடுக்கு. [ஆளுயர் குன்றம்] - ஆளாலே உயர்ந்த குன்றம்.

ப —அநந்தரம், மாலிப்ரப்ருதிகளை நிரஸித்த உபேந்த்ரமூர்த்தியானவனைக் காணக்கூடுமோ ? என்கிறார்.

ஆளியை - யாளியை, காண் - கண்ட, பரியாய் - குதிரைபோலவும், அரி-ஸிம்ஹத்தை, காண்-கண்ட, நரியாய் - நரிபோலவும், அரக்கர்-ராக்ஷஸரானவர்கள், அன்று - யுத்தோத்யோகம்பிறந்தவன்று, ஊளையிட்டு-ஆர்த்திஶயத்தாலே கதறிக்கொண்டு, (குளவி கூட்டைவிட்டுப்பறந்துபோமாபோலே), இலங்கை - இலங்கையை, கடந்து-விட்டு, பிலம் - பிலத்வாரத்திலே, புக்கு - , ஒளிப்ப - (பாதாளத்திலே) ஒளிக்கும்படி, மீளி - பெருமிடுக்கனாய், அம் - தர்ஶநீயனான, புள்ளை - பெரியதிருவடியை, கடாய் - நடத்தி, விறல்-ப்ரபலனான, மாலியை கொன்று - , பின்னும் - அவ்வளவிலேவிடாதே, ஆள் - அதிசூரரானபுருஷர்களை, (கொன்று) உயர் - உயர்ந்த, குன்றங்கள் - மலைகளாக, செய்து - பண்ணி, அடர்த்தானையும் - அவர்களையழிக்கும்உபேந்த்ரனையும், காண்டுங்கொல் - காணக்கூடுமோ ? மாலிசுமாலி ப்ரப்ருதிகளை யழியச்செய்தாற்போலே, நம்முடைய அஹங்கார மமகார ப்ரதாநமான ராகத்வேஷாதிகளையும்அழிக்கக்காண்போமோ? என்று கருத்து. மீளி - மிடுக்கு.

இ.—எட்டாம்பாட்டில், மாலிதொடக்கமான ப்ரதிகூலவர்கத்தை நிரஸித்தவனைக் காணவல்லேனோ? என்கிறார்.

[ஆளியைக்காண்பரியாய்] - ஆளியைக்கண்டபரியாய், குதிரையாய். [அரிகாண்நரியாய்] - ஸிம்ஹத்தைக்கண்டநரியாய். ஸ்ரீராமாயணத்திலே - ராக்ஷஸருடைய பயத்தைப் பலஉதாஹரணங்களாலும் சொல்லிற்று, அவற்றுக்கெல்லாம் ஸ்மாரகமாக இரண்டு உதாஹரணத்தைச் சொல்லுகிறது. [அரக்கர்ஊளையிட்டு] - நரியாய் என்கிற ஸமாப்தியாலே சொல்லுகிறார். ராக்ஷஸர் திரளநின்று ஒருப்ரவ்ருத்திபண்ணமாட்டாதே கதறிக்கொண்டு. [அன்று] - "மாலி - ஸுமாலி-மால்யவான்" என்கிறவர்களை. பெரிய திருவடியை மேற்கொண்டு அழியச்செய்கிறவன்று. [இலங்கைகடந்து] - புற்றைப் பாம்புவிடுமாபோலே தங்களிருப்பிடமான லங்கையைவிட்டு, பாதாளத்திலேபுக்கு ஒளிக்கும்படியாக. [மீளியம்புள்ளைக்கடாய்] - வலியையுடையனாய் தர்ஶநீயனான புள்ளை நடத்தி. "கறையணிமூக்கு": அநுகூலர்க்கு தர்ஶநீயமாயிறேயிருப்பது. எதிரேநின்று

படுவாரும், அதுமாட்டாதே பிலத்திலேபுக்கு ஒளிப்பாருமாயிற்று. [விறல்மாலியைக் கொன்று] - பெருமிடுக்கனான மாலியாகிற அஸுரனைக் கொன்று. [பின்னும், ஆறுயர் குன்றங்கள்செய்து] - பின்னும், அவனைப்போலே முதுகுகாட்டாதே, ஆளாயிருப் பாரைக் கொன்று பிணமலையாகச்செய்து. [அடர்த்தானையும் காண்டுங்கொலோ] - அஸுர வர்கங்களை அறுத்தாற்போலே அவன் நம்ப்ரதிபந்தகங்களைப் போக்க, நமக்குக்காட்சி யிலே அந்வயமாகக் காணவல்லோமோ?

ஈடு.—எட்டாம்பாட்டு. மாலிதொடக்கமான ப்ரதிகூல வர்க்கத்தைக் கொன் றருளின ஸர்வேஶ்வரனைக் காணவல்லோமே? என்கிறார். முதலிரண்டுபாட்டாலே - ப்ரா ப்யன்அவனே என்னுமிடம்சொல்லி, மேல் ஐந்துபாட்டாலே- ப்ராபகன் அவனே தன்னைப் பெறுகைக்கு என்னுமிடத்தைச்சொல்லி, இப்பாட்டாலும் மேலிற்பாட்டாலும் - அவனு டைய விரோதிநிரஸநசீலதையைச் சொல்லி, ப்ரதிபந்தகத்தைப் போக்குவான் அவனே என்னுமிடத்தைச் சொல்லுகிறது.

[ஆளியைக்காண்பரியாய்]-ஆளியைக்கண்டகுதிரையைப்போலவும். [அரிகாண் நரியாய்] - ஸிம்ஹத்தைக்கண்ட நரியைப்போலவும். ஸ்ரீராமாயணத்தே - அந்தராக்ஷஸர் பயப்பட்டபடியாகப் பலஉதாஹரணங்களையிட்டுச் சொல்லிப் போரக்கடவதிறே ; இங்கே இரண்டுவகையாலேஅத்தை ஸூசிப்பிக்கிறார். பரி-குதிரை. [அரக்கர்ஊளையிட்டு]-கீழே "நரி" என்கையாலே-அந்தஸமாதியாலேசொல்லுகிறார்.(ராக்ஷஸர்திரளநின்றுஒருப்ரவ்ருத்திபண்ண மாட்டாதேகதறிக்கொண்டு.) [அன்றியாதி]-(மாலி,மால்யவான்,ஸுமாலி என்கிறவர்களைப் பெரியதிருவடியைமேற்கொண்டுஅழியச்செய்கிறவன்று.)தூசித்தலையில் நேர்நின்று வ்யாபரிக்க க்ஷமரல்லாமையாலே லங்கையை விட்டுப்போய்ப்பாதாளத்திலே புக்கொளிக்க. புற்றுக்கள் எப்போதுமொக்கப் பாம்பு பற்றறுதாப்போலே, என்றுமொக்க ராக்ஷஸர்மாறுதே, "மாலி, ஸுமாலி, மால்யவான்" என்றாற்போலே சொல்லுகிறவர்கள் வர்த்தித்துப் போந்தார்களாய், பெரியதிருவடி முதுகிலே வந்துதோன்றி அவர்களை நிரஸித்தானாகச் சொல்லக்கடவதிறே; அத்தை யிங்கே ப்ரஸங்கிக்கிறார். [பிலம்புக்கொளிப்ப] - கையில் ஆயுதம் போகட்டாரை யும், முதுகுகாட்டினாரையும் கொல்லக்கடவதல்லவிறே; ஆகையால், தப்பியோடிப்போ யொளிப்பாரும் உள்ளே பட்டுப்போனாருமாய்ப் போனார்களாயிற்று. [மீளியம்புள்ளைக்

---

எட்டாம்பாட்டு.— ஆளியைஇத்யாதி. "விறல்மாலியைக்கொன்று பின்னும்ஆறுயர்குன்றங் கள் செய்தடர்த்தானையுங் காண்டுங்கொலோ" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - மாலி தொடக்கமான இத்யாதி. கீழிற்பாட்டுக்களோடே இதுக்கு சங்கதியேதென்ன - முதல் இத்யாதி. ஆளி-சரபம்.இப்படி த்ருஷ்டாந்தம்சொல்லுகிறதுக்கு ப்ரமாணமுண்டோ? என்ன.

ஸ்ரீராமாயணத்தேஇத்யாதி. பலவுதாஹரணங்களையென்றது-பலத்ருஷ்டாந்தங்களையென்றபடி. அவை களாவன- "ஸுபர்ணேநேவ ஸிம்ஹேந த்ராஸிதாந் மேகசயான் | ப்ரஸ்தேநாயயா வ்யாவ்ருத்தா நிவர்த்தனாயா" இத்யாரப்ய, "ததோ ராக்ஷஸாநுசைஸ்விண்ணா வ்ருஷ்டிணா | வ்ருஷ்டோ வ்ருதாவிதா ஸர்வஸாயிதாஸ்தே ஹதா:" இத்யந்தம் சொன்னவை களை; இவை உத்தரஸ்ரீராமாயணத்திலே மாலிஸுமாலியுத்தே. கூப்பிட்டென்னுதே "ஊளையிட்டு" என்றதுக்குபாவம்-கீழே இத்யாதி. "அன்று"-பெரியதிருவடியைமேலேகொண்டு, மாலி ஸுமாலி மால்ய வான்முதலானாரை யழியச்செய்தஅன்றென்றபடி. லங்கையைவிட்டுப்போகவேண்டுவானென்? என்ன- கையில்இத்யாதி. யுத்தத்திலே பட்டுப்போனாருமாயென்றபடி. உள்ளேயென்றது - லங்கைக்குள்ளே

கடாய்] - மீளியமென்று - ஒரு சொல்லாய், வலியையுடைய பெரியதிருவடியை நடத்தி யென்னுதல்; மீளி அம் புள் என்று பிரித்து "கறையணி மூக்குடைப்புள்ளைக்கடாவி" என்கிறபடியே ப்ரதிகூலர்க்கு ம்ருத்யுபோலே யிருப்பானும், "தூவாயபுள்ளூர்ந்து" என்கிறபடியே அநுகூலர்க்கு தர்ஶநீயமான வேஷத்தை யுடைத்தான பெரியதிருவடியை நடத்தி யென்னுதல். பெரியதிருவடி முதுகிலே வந்து தோற்றும்போதை யழகையேயிறே இவர்கள் ஹாவித்துக்கிடப்பது. மீளியென்று - வலிக்கும், ம்ருத்யுவுக்கும், பாலைநிலத்தில் தலைமகனுக்கும் பேராகச் சொல்லுவர்கள். [விறல்மாலியைக்கொன்று] - ஆக, ப்ரஸித்தரிலே ஒருவனைச் சொல்லிற்று. [பின்னுமித்யாதி] - பின்பும், ஆண்பிள்ளைகளாயிருப்பாரநேகரை யழியச்செய்து, அவர்களாலே பிணமலையாம்படி பண்ணி. ஆளாலே உயர்ந்தமலைகளுண்டாம்படிபண்ணி. [அடர்த்தானையும் காண்டுங்கொலோ]-அவன் ஆஸுரவர்க்கத்தை அழியச்செய்தாற்போலே, நம்விரோதிகளைப்போக்கி நமக்குக் காட்சியிலே யந்வயமாய், நாம் கண்டோமாய்த் தலைக்கட்ட வல்லோமோ? (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

காண்டுங்கொலோ? நெஞ்சமே! கடியவினையேமுயலும்
ஆண்திறன் மீளிமொய்ம்பில்அரக்கன்குலத்தைத்தடிந்து
மீண்டுமவன்தம்பிக்கே விரிநீரிலங்கையருளி
ஆண்டுதன்சோதிபுக்க அமரரரியேற்றினையே.

ஆ.—(காண்டுங்கொலோ.)—பின்னையும் க்ரூரகர்மத்திலே நிரதனாய் வீர்ய தேஜோவிஶிஷ்டனாய் ம்ருத்யுஸத்ருஶனுமாயிருந்த ராவணனுடைய குலோத்ஸாதநத்தைப்பண்ணி, "அவனைக்கொன்றோமே" என்று திருவுள்ளத்திலேநொந்து, அவன் தம்பியான ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு லங்கைஶ்வர்யத்தைக்கொடுத்தருளி, மீண்டெழுந்தருளி, ஸ்வவிப்ரலேஷஜநித நிரவதிகவ்யஸநத்தாலே விநஷ்டப்ராயமான திருவயோத்யா நகரியிலுள்ள ஸ்தாவரஜங்கமாத்மகமான ஸர்வஜந்துஜாதத்தையும் ரக்ஷித்தருளி, அவர்களையுங்கூடக்கொண்டு திருநாட்டிலேயெழுந்தருளி, திருமாமணி மண்டபத்திலே * அயர்வறுமமரர்கள்நடுவே ப்ரதிகூலநிரஸநஜமான ஜயத்தோடேகூட எழுந்தருளியிருக்கிற இருப்பை, நெஞ்சே! நாம் ஒருநாள் காணவல்லோமோ? என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ராவணாதிகளைவயித்த உஶ்ரயாத்மஜனை, நெஞ்சே! காணவல்லோமே? என்கிறார்.

---

யென்றபடி திருமொழி'தூவாயபுள்ளூர்ந்து'- அழகியவாயையுடைய புள்ளைநடத்தி என்றபடி. பெரிய திருவடி அநுகூலர்க்கு தர்ஶநீயனேவென்ன - பெரியதிருவடி இத்யாதி. "பண்கொண்டபுள்ளின் சிறகொலிபாவித்து" என்றத்தைக் கடாக்ஷித்து - இவர்கள் பாவித்துக்கிடப்பது என்றது. "மீளி" என்று - வலி. ம்ருத்யுவைச்சொல்லுமோவென்ன - மீளியென்று இத்யாதி. அவதாரிகையிலே "மாலிதொடக்கமான" என்றுவைத்து, இங்குஒருவனைக்கொன்றென்கிறதென்? என்ன - ஆக,ப்ரஸித்தரிலே இத்யாதி. ஶப்தார்த்தம் - ஆளாலே இத்யாதி. பதப்ரயோகத்துக்கு ஹார்தஹாவம் - அவன்ஆஸுர இத்யாதி. க்ரமேணாந்வய:. (அ)

என டீகை - ஸ்ரீஜநகராஜன் திருமகளைப்பிரிக்கை முதலான கொடியப்ரவ்ருத்திகளிலேமுயலாநிற்பதுஞ்செய்து, ஆண்பிள்ளைத்தனத்தில்ம்ருத்யு ஸத்ருஶனுயிருக்கிற ராவணனுடைய குலத்தை நஶிப்பித்து அவன்தம்பிக்கே லங்கா ராஜ்யத்தைக்கொடுத்து, தன்னைப்பிரிந்து நோவுபட்ட ராஜ்யத்தை மீண்டுவந்து பூரிப்பித்து, ஆண்டு திருநாட்டிலே புக்கருளின அயர்வறுமமரர்கள் தலைவனை. இவ்விரண்டு பாட்டிலும் ஆஶ்ரிதருடைய விரோதிநிரஸநப்ரகாரம் சொல்லுகிறது.

ப.—அநந்தரம், விபீஷணபக்ஷபாதத்தாலே ராவணகுலத்தை நிஶ்ஶேஷமாகமுடித்து அவனுக்கு லங்காதிபத்யத்தையுங்கொடுத்துத் தானும் அபிஷிக்தனாய் ராஜ்யம்பண்ணி * தன்னுடைச்சோதி யேற எழுந்தருளின சக்ரவர்த்தித்திருமகனை அந்தமேன்மையோடே யிருக்கச்செய்தே அவனை நாம் காணவல்லோமோ ? என்று நெஞ்சைக்குறித்து அருளிச்செய்கிறார்.

கடிய - அதிக்ரூரமான, வினையே - பரஹிம்ஸாவ்ருத்தியையே, முயலும் - கல்பித்துப்பண்ணும் மஹோத்யோகத்தையுடையனாய், ஆண் - ப்ரதாபோஜ்ஜ்வலமான பும்ஸ்த்வத்தையுடையனாய்க்கொண்டு, திறல் - பராபிபாவுகமான ஶௌர்யத்தையும், மீளி - ஸிம்ஹம்போலேயிருக்கும், மொய்ம்பில் - பெருமிடுக்கையுமுடையனான, அரக்கன் - ராக்ஷஸ ஜந்மாவான ராவணனுடைய, குலத்தை - (ப்ராதாவான கும்பகர்ணனும் இந்த்ரஜித்ப்ரமுகபுத்ரருமான) குலத்தை, தடிந்து - நிஶ்ஶேஷமாக அறுத்துப்பொகட்டு, (அவ்வளவில் விடாதே), மீண்டும் - பின்னையும், (அவன்தம்பியாயிருக்கச்செய்தே, ஆஶ்ரயணோபகாரம் அடியாக), அவன்றம்பிக்கே - விபீஷணனுக்கு, விரி - விஸ்தீர்ணமான, நீர் - ஸமுத்ர ஜலத்தையுடைத்தான, இலங்கை - லங்கையை, அருளி - ராஜ்யமாகக்கொடுத்து, ஆண்டு - திருவயோத்யையிலெழுந்தருளி யபிஷிக்தராய்ப் பதினோராயிரம் ஸம்வத்ஸரம் ராஜ்யம் பண்ணி, தன் - தனக்குஅஸாதாரணமாய், சோதி - ஜ்யோதீரூபமானபரமபதத்திலே, புக்க - சென்றிருப்பானாய், (இந்தமேன்மையாலே), அமரர் - நித்யஸூரிகளுக்கு, அரி - ஸிம்ஹஶ்ரேஷ்டம்போலே, ஏற்றினை - செருக்குத்தோன்ற வெழுந்தருளியிருக்கிறவனை, நெஞ்சமே - (பிரிவுக்குக்கூட்டாய்ஈடுபட்டுப்போந்த) நெஞ்சமே, (நாம்), காண்டுங்கொலோ - காணக்கூடுமோ ? மீண்டென்று ஆண்டென்கிறவிடத்திலே யந்வயிக்கவுமாம். ரஜஸ் தமஃ கார்யமான அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநங்களையும், தஜ்ஜநிதகாமக்ரோதாதிகளையும், ராவணகும்பகர்ணாதிகளை ஸஸந்தாநமாக அழித்தாற்போலேயழித்து, * தர்மாத்மாவான விபீஷணனுக்கு லங்காராஜ்யத்தைக்கொடுத்தாற்போலே, சுத்தஸத்வகார்யமான ஜ்ஞாநவைஶத்யத்தையுடைய நமக்கு கைங்கர்யஸாம்ராஜ்யத்தைத்தரும் ஸௌரி ஸேவ்யனைக்காணக் கூடுமோ ? என்றுகருத்து. மீளியென்று - ம்ருத்யுவென்றுமாம். மொய்ம்பு - மிடுக்கு. திறல் - ஶௌர்யம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், "அப்போது தப்பி பிலத்திலேபுக்கவை ராவணாதிகளாய்ப் பரிணமிக்கவிடாதே நிஶ்ஶேஷமாகத்தடிந்து ராவணஸந்தாநத்தை அறுத்த உபாயாத்மஜனைக் காணவல்லோமே? நெஞ்சமே!" என்று திருவுள்ளத்தைக்குறித்து அருளிச்செய்கிறார்.

[காண்டுங்கோலோ நெஞ்சமே] - நெடுநாள் இழவுக்கேகூட்டாய்ப்போந்த நீ காட்சிக்குங்கூட்டாய், நாம்கூடக் காணவல்லோமோ? [கடியவினையே முயலும்] - ஸ்ரீ

ஜநகராஜன் திருமகளைப்பிரிக்கை முதலான க்ரூரஹிம்ஸைகளையே ப்ரவர்த்திக்கும். தாயும் தமப்பனும் சேரவிருக்கப்பெறுதவனிறே. அவதாரணத்தால் - ஸஹாதாரமங்ய மில்லாதவன். [ஆண்டிறல்மீளி மொய்ம்பில்] - ஆண்பிள்ளைத்தனத்திலே வந்தால், திற லையும் பராபிபவநஸாமர்த்தியத்தையும் ம்ருத்யுஸத்ருஶமான மிடுக்கையுமுடைய. [அரக்கன் குலத்தைத்தடிந்து] - "கரிஷ்யே மைதிலீஹேதோ: அபிஶாசமராக்ஷஸம்" என்கிறபடியே ராவணஸந்தாநத்தை அழியச்செய்து, "அவன்தம்பி" என்றுபாராதே "ஶரணம் என்றான்" என்று கடல்சூழப்பட்ட லங்கையை அவனுக்குக்கொடுத்தருளி. "அத்யுத்கடை: புண்யபாபைரிஹைவ பலமஶ்நுதே" என்கிறபடியே க்ரௌர்யபலத்துக்கும் ஆநுகூல்யபலத்துக்கும் விளம்பமின்றிக்கே ஒழிந்தபடி. [மீண்டும் ஆண்டு] - ராவணவதஸமநந்தரத்தில் "எங்கள்கார்யம் செய்கைக்காகத் தேவரையும் புக்குஇரையாக்கினோம்: தேவர்காரியம் சமைந்ததென்று தன்னுடைச்சோதிக்கு எழுந்தருளவமையும்" என்று ப்ரஹ்மா விண்ணப்பஞ்செய்ய, அவ்வளவிலே ருத்ரன், "அபிஷேக மஹோத்ஸவம் விலக்குப்படுகையாலே நாடாகவிழவுபட்டுக் கிடந்தது; "ஆஶ்வாஸ்ய ஹ்ருதம்ஸ்ததா" என்கிறபடியே, அவர்களையும் ஆஶ்வஸிப்பித்து இழவுதீர்த்து எழுந்தருளவேணும்" என்கையாலே, மீண்டெழுந்தருளித் திருவபிஷேகம்பண்ணி, "ராமோ ராஜ்யமுபாஸித்வா" என்கிறபடியே நாட்டையாண்டு. [தன்சோதிபுக்கு] - இங்குப்போலே எதிரம்புகோப்பாரின்றிக்கே தனக்கு அஸாதாரணமாய் நிரவதிக தேஜோரூபமான பரமபதத்திலே புக்கு. "தன்னுடைச்சோதி" என்னக்கடவதிறே. [அமரரரியேற்றினையே] - மோவத ஸங்வத்திலே ருஷபம் செருக்கிநிற்குமாபோலே நித்யஸூரிகள் கொண்டாட, அவர்கள் நடுவே மேனணித்திருக்கிறவனை. அவ்விருப்பிலே அவனைக் காண்கையிறே ப்ராப்யம்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. ராவணாதிகளை நிரஸித்த தசரதாத்மஜனை, நெஞ்சே! காணவல்லோமே ? என்கிறார்.

[காண்டுங்கொலோநெஞ்சமே] - இழவாலே கட்டிக்கொண்டு கதறுகைக்குக் கூட்டான நீ, இப்பேற்றாலே †நிர்வ்ருதரா யநுபவிக்கும் அநுபவத்துக்கும் நீ கூட்டாய் நாம் அவனைக்காணவல்லோமேயோ? [கடியவினையே முயலும்] - தாயையும் தமப்பனையும்இரண்டிடத்திலே யாக்குவாரைப்போலேயிறே, பெருமாளையும் பிராட்டியையும்இரண்டிடத்திலே யாக்கிற்று. இதில்தாழ்ந்திருப்பது ஒருசெயலில்லையாயிற்று, இவன் செய்யுமவற்றில். ஸர்வேஶ்வரனுக்கு "க்ரமத்தாலே பலம் கொடுக்கிறோம்" என்றுஆறியிருக்கவொண்ணாதபடியாயிற்றுக் கொடிய செயல்கள் செய்யும்படி. "இஹைவ பலமஶ்நுதே" (இஹைவபலமஶ்நுதே)

ஒன்பதாம்பாட்டு.—காண்டுங்கொலோ இத்யாதி

யாதிகளைக் கடாக்ஷித்துஅவதாரிகை - ராவணாதிகளை இத்யாதி.

"நெஞ்சமே" என்று ஸம்போதித்து, "கொலோ" என்கிறவருடையஹார்த்தபாவம் - இழவாலே இத்யாதி. இப்பேற்றாலேயென்றது - பகவத்ஸாக்ஷாத்காரத்தாலேயென்றபடி. இது-"அமரரரியேற்றினை - காண்டுங்கொலோ" என்றத்தைப்பற்ற. ராவணன்செய்த க்ரூரபாபமேதென்ன - தாயையும் இத்யாதி. இது - அவதாரணத்துக்குபாவம். "கடியவினை" என்றதுக்கர்த்தம் - ஸர்வேஶ்வரனுக்கு இத்யாதி. "கொடியசெயல்களைச்செய்தால் சீக்ரமாகபலங்கொடுக்கவேணும்" என்னு மதுக்கு ப்ரமாணம் - இஹைவ யாதி. "அத்யுத்கடை: புண்யபாபைரிஹை

† நிர்வ்ருதர்-இன்பமடைந்தவர்.

என்னும்படியே. அவதாரணத்தால் - ஸதாசாரஸம்பந்தமில்லாதவன். [ஆண்டிறலித்யாதி] - ஆண்பிள்ளைத் தனத்தில் வந்தால், திறலையுடைய ஸிம்ஹம்போன்ற மிடுக்கையுடைய அரக்கன். மீளி - ஸிம்ஹம். அன்றியே, திறலையுடையனாய், பராபிபவநஸாமர்த்யத்தை யுடையனாய், ம்ருத்யுகல்பமான மிடுக்கையுடையனான ராவணனுடைய குலத்தைத் தடிந்து. தடிகை-கடிகை. "கரிஷ்யே மைதிலீஹேதோரபிஶாசமராக்ஷஸம்" (கரிஷ்யேமைதிலீஹேதோரபிஶாசமராக்ஷஸம்) என்கிறபடியே குலமாக நிரஸித்து. [அவன் தம்பிக்கே விரிநீரிலங்கையருளி] - "யதி வா ராவணஸ் ஸ்வயம்" (யதிவாராவணஸ்ஸ்வயம்) என்று ஶரணமென்றபாசுரம் அழகிதாயிருந்தது, "அவனோடே ஸம்பந்தமுடையானொருவன் வந்தானாகையன்றிக்கே, அவன்தானே வரப்பெறுவதுகாண்" என்று செவிசீப்பாய்ந் திருந்தாரிறே. அங்குநின்றும் வந்தானொருவனைக் கைக்கொண்டாராக அமையாதோ? இங் நிர்ப்பந்தமென் என்னில்? - அவனோடே ஸம்பந்தமுடையானொருவனைக் கைக்கொண்டால் அவன்தானும் நாலுபேருமேயாய்ப் போம்; அவன்தானே வரப்பெற்றதாகில் துறப்புக்கூடாக நோக்கிற்றாகலாமிறே; இனித்தான் ப்ராதிகூல்யத்தில்முதிரநின்றானும் அவனேயாகையாலே, ரக்ஷாபேக்ஷையுள்ளதும் அவனுக்கேயிறே. இப்படி அவனை விஷயீகரிக்கக் கோலிப்பெறாத இழவுதீர்ந்தது இவனைக்கைக்கொண்டபின்பாயிற்று. "அநுஜோ ராவணஸ்யாஹம்" (அநுஜோராவணஸ்யாஹம்) என்று அவன்வர, இவரும் "அவன்தம்பியே" என்றாயிற்று அவ னைக்கைக்கொண்டது. [விரிநீரிலங்கையருளி] - கடல்சூழ்ந்த லங்கையைக் கொடுத்தருளி. [மீண்டும் - ஆண்டு] - ராவணவதாநந்தரத்திலே, ப்ரஹ்மாதிதேவர்கள் "தேவரை அம்புக் கிலக்காக்கி, நாங்கள் எங்கள்கார்யம் தலைக்கட்டிக்கோண்டோம்; இனி, தன்னுடைச் சோதியேற வெழுந்தருளவமையும்" என்ன, அவ்வளவிலே ருத்ரன், "தேவர் அங்ஙன் செய் தருளவொண்ணாது, திருவபிஷேகத்துக்குவிக்நம்பிறக்கையாலே திருத்தாய்மாரும் இழவுபட் டிருந்தார்கள்: நாடுமுடைய நோந்திருந்தது: ஸ்ரீபரதாழ்வானும் ஆர்த்தனாயிருந்தான்: ஆன

---

ஸமரேஶூர்தே | த்ரியவத்தேஷு ஸ்த்ரீஷு வ்ருத்தேஷு பாலேஷு ..." இதி தர்மஶாஸ்த்ரே. திறல் - மிடுக்கும், பராபிபவந சாமர்த்யமும். மீளி - சிம்ஹமென்னுதல், ம்ருத்யு வென்னுதல். மொய்ம்பு - மிடுக்கு. "ஸுகண்டவ்ருந்தேந ப்ரவிஷ்டோ ஜீவலோகம் ஸந்த்ராஸ வேந: | கரிஷ்யே மைதிலீஹேதோரபிஶாசமராக்ஷஸம்" இத்யாரண்யகாண்டே. (சச - கூகூ). விபீஷணனுக்கென்றதே, "அவன்றம்பிக்கு" என்கைக்கு, அவன் ஸம்பந்தமங்கீகாரஹேது வோ? என்ன - யதிவா இத்யாதி. "விபீஷணோ வா ஸுக்ரீவ யதி வா ராவணஸ் ஸ்வயம்" இத்யாதி. இதுக்கர்த்தம் - ஶரணம் இத்யாதி. செவிசீப்பாய்ந்து - ஆதரித்து. "ராவணன்தானேவரவேணும்" என்றாசைப்பட்டிருந்த பெருமாளுடையகருத்தை ப்ரஶ்நோத்தரரூபேணவருளிச்செய்கிறார் - அங்கு நின்றும் இத்யாதி. துறப்புக்கூடு - தூற்றுப் † பொலி; எல்லாரையும் நோக்கலாமென்றபடி. ராவண னையே கைக்கொள்ளவேணுமென்னுமதுக்கு ஹேத்வந்தரம் - இனித்தான் இத்யாதி. ஆனால்அவன் வந்தானில்லையேயென்ன - இப்படி இத்யாதி. அப்படி தத்ஸம்பந்தமடியாகக் கைக்கொண்டாரோ? என்ன - அநுஜ இத்யாதி. 'அநுஜோ ராவணஸ்யாஹம் தேந சாஸ்ம்யவமாநித: | பவந்தம் ஸர்வபூதாநாம் ஶரண்யம் ஶரணம் கத:" இதி ராமம்ப்ரதி விபீஷண:. (யுத் - கக - சஉ) அதாவது-அவன்ஸ்வதோஷத்தை முன்னிட்டுக்கொண்டுவர, அதுவே பற்றாசாக

† பொலி - அம்பாரம்.

பின்பு, 'ஆஶ்வாஸ்ய பரதம் தூர்ணம்' (ஆஶ்வாஸ்யபரதம்தீர்ணம்) என்கிறபடியே ஸ்ரீபரதாழ்வான் தொடக்கமானாரிழவுகளெல்லாந் தீரும்படி மீண்டெழுந்தருளி, திருமுடிசூடி, நாட்டை வாழ்விக்கவேணும்'' என்ன, அது திருவுள்ளத்துக்குப்பொருந்துஞ் செயலாகையாலே பதினோராயிரமாண்டு ஒருபடிப்படஇருந்து நாட்டை வாழ்வித்தருளி. [தன்சோதிபுக்க] - அம்புக்கிலக்காக்குவாரிருந்தவிடத்தைவிட்டுத் தனக்குஅஸாதாரணமாய் நிரவதிகதேஜோரூபமாயிருக்கிற பரமபதத்திலே போய்ப்புக்க. [அமரரரியேற்றினையே] - அம்பிட்டெய்வாரின்றிக்கே ஆநுகூல்யமே ஸ்வபாவமாய் கைங்கர்யைகநிஷ்ட்டரான நித்யசூரிகள் நடுவேயவனிருக்கும்இருப்பைக் காணவல்லோமே. கோவயூதஸங்கத்தின் நடுவே ஒருவ்ருஷபம் செருக்கித்திரியுமாபோலே, நித்யசூரிகள் கொண்டாட, அவர்கள்நடுவே அத்தாலே செருக்கி மேனாணித்திருக்கும்இருப்பைச் சொல்லுகிறது. நித்யசூரிகள் திரளிலே அவ்வோலக்கத்தின் நடுவேயிருக்கும் இருப்பைக் காண்கையிறே ப்ராப்யமாகிறது. (௯)

## பத்தாம் பாட்டு.

ஏற்றரும்வைகுந்தத்தை அருளும்நமக்குஆயர்குலத்து
ஈற்றிளம்பிள்ளையொன்றாய்ப்புக்கு மாயங்களேயியற்றி
கூற்றியல்கஞ்சனைக்கொன்றுஐவர்க்காய்க்கொடுஞ்சேனைதடிந்து
ஆற்றல்மிக்கான்பெரியபரஞ்சோதிபுக்கஅரியே.

*ஆ.—(ஏற்றரும்.) - ஸ்ரீநந்தகோபகுமாரனாய்வந்து பிறந்தருளி, * திண்கொளசுரரைத்தேய வளர்ந்தருளி, வந்யூருபேணபோய்ப்புக்கு ப்ரதிகூலனான கம்ஸனை வஞ்சித்துக்கொன்றருளி, பின்னை பாண்டவர்களுக்காக தத்ப்ரதிகூலனான துர்யோதநனையும், க்ரூரமானஅவனுடைய ஸேனையையும் நிஶ்ஶேஷமாக நஶிப்பித்துப் பாண்டவர்களுக்கு ராஜ்யத்தைக்கொடுத்து, பின்னையும் அவர்களுக்குஒன்றும் செய்யாதானாய்த் திருநாட்டிலேபோய்ப்புக்கருளின பரமபுருஷனே அந்ததுஷ்ப்ராபமான திருநாட்டைநமக்கும் தந்தருளுமென்று தம் திருவுள்ளத்தை யாஶ்வஸிப்பிக்கிறார்.*

*ஒ. — பத்தாம்பாட்டில், ஆயர்குலத்தீற்றிளம்பிள்ளையானவன், தன்னுடைய மௌக்த்யத்தாலே நம்முடைய குற்றகுணநிரூபணம்பண்ணாதே, துஷ்ப்ராபமான ஸ்ரீவைகுண்டத்தை நமக்குத்தருமென்று, யருளிக்கிறார்.*

*[ஈற்றிளம்பிள்ளை] - ஈன்று அண்ணியபிள்ளை. [ஒன்றாய்ப்புக்கு] - உறவாய்ப் புக்கென்னுதல். '' வில்விழவுக்கு '' என்று பேரையிட்டுக்கொண்டு புக்கென்னுதல். [மாயங்களே என்றுதொடங்கி]-குவலயாபீட மல்லமர்தநாதிகளான ஆஶ்சர்யப்ரவ்ருத்திகளையேபண்ணி ம்ருத்யுஸத்ருஶனான கம்ஸனைக்கொன்று தர்மபுத்ராதிகளுக்காக அந்த*

---

*படி. (ஆஶ்வாஸ்யஇதி.)'ஆஶ்வாஸ்ய பரதம் தூர்ணம் ஸமாஶ்வாஸ்ய ஸுஹ்ருஜ்ஜனம்'' இத்யாதி, இதிருத்ர:. ''அமரரரியேற்றினை - காண்டுங்கொலோநெஞ்சமே'' என்றவருடையஹார்த்தபாவம் - அம்பிட்டு இத்யாதி.''அரியேறு'' என்றதுக்குபாவம்-கோவயூத இத்யாதி. ''அமரரரியேற்றினை - காண்டுங்கொலோ'' என்றகூட்டிபாவம் - நித்யசூரிகள் இத்யாதி. 'கடியவினை' இத்யாரப்ய, 'அருளி, மீண்டும் - ஆண்டுதன்சோதிபுக்க வமரரரியேற்றினை - காண்டுங்கொலோ நெஞ்சமே' இத்யந்வய:. (௯)*

மஹாஸேனையையெல்லாம் நிஶ்ஶேஷமாக்கி ஆஶ்ரிதர்க்கு எல்லா உபகாரமும் செய்தாலும் "ஒன்றுஞ்செய்யப் பெற்றிலோம்" என்று அஸந்துஷ்டனாய்க்கொண்டு திருநாட்டிலே போய்ப்புக்கு ஹரியாயுள்ளவன். ஸ்ரீவைகுண்டத்திலே புக்கருளினபின்பும், துர்யோதநாதிகள் பக்கலுள்ள கோபவாஸனையாலே ஆசிலே கையைவைக்குமென்று கருத்து.

ப.—அநந்தரம், ஸ்வஜநமான ஸ்ரீவஸுதேவ பாண்டவ ப்ரப்ருதிகளுடைய விரோதிகளை நிரஸித்து ரக்ஷித்த க்ருஷ்ணன், நமக்குப் பரமபதத்தை யருளுமென்கிறார்.

ஈன்று - பிறந்தபோதே, இளம் - அதிஶைஶவத்தையுடைய, பிள்ளை-பிள்ளையாய்க்கொண்டு, ஆயர்குலத்து - கோபகுலத்திலே, ஒன்றாய் - ஏகீபவித்து, புக்கு-, மாயங்களை - பூதநாஶகட யமளார்ஜுநநிரஸந ரூபமான அத்யாஶ்சர்யங்களையே, இயற்றி - ப்ரவர்த்தித்து, கூற்று - உடலையுமுயிரையும் பிரிக்கும் ம்ருத்யுவின், இயல் - ஸ்வபாவத்தை யுடையனாய்க்கொண்டு, கஞ்சனை - (ஸ்ரீவஸுதேவர் தேவகியார்க்கு ப்ராணபூதனான தன்னைப்பிரித்த) கம்சனை, கொன்று - நசிப்பித்து, (பின்பு), ஐவர்க்கு - பாண்டவர்களைவர்க்கு, ஆய்-, கொடும் - க்ரூரமான, சேனை - துர்யோதநஸேனையை, தடிந்து - அழியச்செய்து, (இதெல்லாம் செய்தபின்பு "ருணம் ப்ரவ்ருத்தமிவ மே" என்று ஒன்றும் செய்யாதானாப்போலே சீற்றம் மிஞ்சுகையாலே,) மிக்க-மிக்க, ஆற்றலான் - பொறையையுடையனாய், பெரிய - அபரிச்சிந்நமாஹாத்ம்யத்தையுடைத்தாய், பரஞ்சோதி - பரஞ்ஜ்யோதிஶ்ஶப்தவாச்யமான பரமபதத்திலே, புக்க-(பூபாரநிர்ஹரணாநந்தரமெழுந்தருளிப்) புக்க, அரி - சீரியசிங்கமானக்ருஷ்ணனானவன், ஏற்றரும் - * பரமயோகிவாங்மநஸா பரிச்சேத்யஸ்வரூபஸ்வபாவமான, வைகுந்தத்தை-பரமபதத்தை, நமக்கு-, அருளும்-(தன்க்ருபையாலே) தந்தருளும். "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று ஸமஸ்தவிரோதிநிவர்த்தகனானவன், "மாஶுச:" என்கிறபடியே நம்மார்த்திதீரும்படி ஃபலப்ரதனும் என்றுகருத்து. அரியென்று - ஸம்ஜ்ஞையுமாம். பாபஹரஸ்வபாவனென்றுமாம்.

இ.—பத்தாம்பாட்டில், 'பாபிஷ்டரை நிரஸித்து தர்மாத்மாவான அவன் தம்பியை இங்கே வாழ்வித்தவிதுபோரும் நமக்கு' என்ன; திருவுள்ளம், 'இரண்டு அம்ஶமும் போக்கும் க்ருஷ்ணனுண்டே' என்ன; 'அவன் தெளிவுற்ற கண்ணன், நங்குற்றமறியும்' என்ன; 'நங்குறையறியான், ஈற்றிளம்பிள்ளை' என்கிறார். முதலிரண்டுபாட்டாலே - ப்ராப்யமவனேயென்றார்; அநந்தரம் ஐந்துபாட்டாலே - உபாயமும் அவனேயென்றார்; அநந்தரமிரண்டுபாட்டாலே - ப்ரதிபந்தகங்களைப் போக்குவானும் அவனே யென்றார்; இதில் - குணாகுணநிரூபணம்பண்ணமாட்டாத மௌக்த்யத்தாலே பரமபதத்தைத்தந்தருளுமென்று அறுதியிடுகிறார். [ஏற்றரும் இத்யாதி] - ஸ்வயத்நத்தாலே ப்ராபிக்கவொண்ணாத பரமபதத்தை, "தன்னாலே பெற்றேன்" என்று துணிந்திருக்கிற நமக்கு அருளும். [ஆயர்குலத்தீற்றிளம்பிள்ளை] - அத்தலையில் ப்ரபாவத்தையே பார்க்கவமையுமோ? நம்மையும் பார்க்கவேண்டாவோ? என்ன; நம்படி பார்க்கவறியாத முக்தன் ஈறென்று - எல்லையாய், பிள்ளைத்தனத்தில் எல்லையானவன் என்னுதல். ஈன்றணிமையபிள்ளை யென்னுதல்; "ஸத்யஸ்ஸாமாஜ்யதோஷாபி:": [ஒன்றாய்ப்புக்கு] - உறவாய்ப்புக்குஎன்னுதல், "வில்விழவுக்கு" என்று ஒருபேரையிட்டுக்கொண்டுபுக்கு என்னுதல். மாதுலனைக் கல்யாணத்துக்கு அழைத்தானாயிறே சென்றது. [மாயங்களை இயற்றி] - ரஜகனைக்கொன்று ஆயுதஶாலையிலேபுக்கு வில்லைமுறித்து, குவலயாபீடத்தைக்கொன்று, மல்லரை அழியச்

செய்து, ஆஸ்சர்யசேஷ்டிதங்களையே பண்ணி. [கூற்றியல்கஞ்சனைக்கொன்று] - இச்செயல்களைக்கண்டு கிளர்ந்த ம்ருத்யுஸத்ருஶனான கம்ஸனைக்கொன்று. "ஸ்வஜநஸ்ய ஹதம் த்ருஷ்ட்வா க்ருஷ்ணேந யமஸாதநம்": திருவடிகளாலே அநாயாஸேந கொன்று. [ஐவர்க்காய்] - பால்யத்தில் கம்ஸன் வரவிட்டவர்களோடும் கம்ஸனோடும் பணிபோந்தது. பக்வனானபின்பு, "க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா:" என்கிற பாண்டவர்களுக்குக் கையாளாய்த் திரிந்தவித்தனை. [கொடுஞ்சேனை தடிந்து] - பாண்டவர்கள்மேலேசீறி "ஸாரதி, ஸாரதி" என்று வந்த ஸேனையைத் தேர்க்காலாலே புழக்கிப்போகட்டு. [ஆற்றல்மிக்கான்] - துர்யோதநாதிகளை அழியச்செய்து தர்மபுத்ரனையும் முடிசூட்டி த்ரௌபதி குழல்முடித்தபின்பும், "நாதிஸ்வஸ்தமநா:" என்றும், "ருணம் ப்ரவ்ருத்தமிவமே" என்றும், "ஒன்றும் செய்யப்பெற்றிலோம்" என்று அஸந்துஷ்டனாய் எழுந்தருளினான். ஆற்றல் - அநுஜுதி: "அநந்தக்லேஶநாவிஷாது" : நிரதிஶயதேஜோரூபமான பரமபதத்திலே போன பின்பும், கம்ஸனென்பது துர்யோதநனென்பது, கர்ணனென்பது ஆகிலே கையை வைப்பதாய், கம்ஸாதிகள் பக்கல் சினம்அநுவர்த்திக்கும்படியாயிற்றிருப்பது.

**ஈடு.—பத்தாம்பாட்டு. ப்ராப்யன்அவனே யென்னுமிடத்தைச் சொல்லி, தன்னைப் பெறுகைக்கு ஸாதநம் தானேயென்னுமிடத்தையுஞ்சொல்லி, விரோதிநிரஸநம்பண்ணுவானும்அவனே யென்னுமிடத்தையுஞ் சொல்லி, இப்படி நமக்குப்பேற்றுக்குக் கண்ணழிவின்றிக்கே யிருந்தபின்பு அவன்தன்னை நமக்குத் தரும் என்றுஅறுதியிடுகிறார்.**

**[ஏற்றரும் வைகுந்தத்தையருளும் நமக்கு] - ஒருவராலும் ஸ்வயத்நத்தாலே ப்ராபிக்கவொண்ணாதிருக்கிற ஸ்ரீவைகுண்டத்தை அவன்தானே தரப் பெறவிருக்கிற நமக்குத் தரும். எல்லாவழியாலும் அவன்ஸ்வபாவத்தை யறிந்து "அத்தைத்தரும்" என்றிருந்தீரேயாகிலும், பெறவிருக்கிறநம்படியைப் பாரானோவென்னில்? - [ஆயர்குலத்தீற்றிளம்பிள்ளை] - நம்படிபார்க்கவறியாத முக்தன். "முக்தஸாயுஜ்யதோபூ:" (முக்தஸாயுஜ்யதோபூ:) என்னக்கடவதிறே. இவ்விடம் இரண்டுவகையாலே சப்தம் வசிக்கக்கடவது: ஈறேன்றுகொண்டுமுடிவாய், ஈறானவிளம்பிள்ளை யென்றாய் - அதிமுக்தனென்றபடி அன்றிக்கே, ஈன்றிளம்**

---

ப்ர.—(ஏற்றருமித்யாதி.) [ஆயர்குலத்தீற்றிளம்பிள்ளை] - ஸ்தோத்ரே யாமுநாசார்யா:, "ரகுவர யதபூஸ்த்வம் தாத்ருஶோ வாயஸஸ்ய ப்ரணத இதி தயாளுர்யச்ச சைத்யஸ்ய க்ருஷ்ண: । ப்ரதிபவமபராத்துர்முக்த ஸாயுஜ்யதோபூ: வத கிமபதமாகஸ்தஸ்ய தேऽஸ்தி க்ஷமாயா: ॥௬௩॥

---

பத்தாம்பாட்டு.— ஏற்றரும் இத்யாதி. கீழில் ப்ரமேயங்களை ய... ...துப்பாட்டுக்கு சங்கதி - ப்ராப்யன்அவனே இத்யாதி. "வைகுந்தத்தையருளும்" என்றத்தைப்பற்ற - அவன் தன்னைநமக்குத் இத்யாதி. "வைகுந்தத்தையருளும்" என்னாநிற்க "தன்னைத்தரும்" என்றது - அங்கே போனால் அநுபாவ்யன் தானாகையாலே. உபாயக்ருத்யம்- அநிஷ்டநிவர்த்தகத்வே இஷ்டப்ராப்தகத்வங்களாகையாலே, கீழிரண்டுபாட்டாலே - அநிஷ்டநிவர்த்தகத்வத்தை யருளிச்செய்து, இதிலே - இஷ்டப்ராபகத்வத்தை யருளிச்செய்கிறார் - என்று கீழிரண்டுபாட்டுக்களோடே சங்கதி.

மேலிற்பதத்துக்கவதாரிகை-எல்லாவழியாலும்இத்யாதி. நம்தோஷத்தில் அவிஜ்ஞாதாவாயிருக்குமென்கைக்கு உபப்பாதக, அவன் பால்யத்தைச்சொல்லுகிறதுக்கு ப்ரமாணம்-முக்தஸாயுஜ்ய இத்யாதி. ஸ்தோத்ரே யாமுநாசார்யா:, "ரகுவர யதபூஸ்" இத்யாதி. "ஒன்றாய்ப்புக்கு" என்ற

பிள்ளையென்ருய் - கற்றிளம்பிள்ளையென்றபடி. இரண்டாலும் - அதிமுக்தனென்றபடி. [ஒன்ருய்ப்புக்கு]-கம்ஸனும் போய்யே மாதுலனாய் "வில்விழவுக்கு" என்றுஅழைத்துவிட, இவனும் போய்யே மருமகனாய்அதுக்கேல்லாம் தானேகடவனாக அபிமானித்துப்போய்ப் புக்கானாயிற்று. அன்றிக்கே, "வில்விழவு" என்றுகோண்டொரு வ்யாஜத்தை யிட்டுப் போய்ப் புக்கேன்னுதல். [மாயங்களேயியற்றி] - ஆயுதசாலையிலே புக்கு ஆயுதங்களை முறிப் பது, ஈரங்கோல்லியைக்கோன்று பரிவட்டம் சாத்துவது, குவலயாபீடத்தின் கோம்பை முறிப்பது, மல்லரைக்கோல்லுவதான ஆஶ்சர்யங்களையே செய்து. இயற்றுதல் - ப்ரவர்த் தித்தல். இவன்இப்படி செய்யப்புக்கவாறே அவற்றைக்கேட்டுப் போறுக்கமாட்டாமை ம்ருத்யுபோலே கிளர்ந்தானாயிற்றுக் கம்ஸன். [கூற்றியல்கஞ்சனைக்கோன்று] - மஞ்சத்திலே நிற்கிற கம்ஸனை முகம் கீழ்ப்படவிழவிட்டுக் கோன்றுபோகட்டானாயிற்று. இயல்வு - ஸ்வ ஹாவம். "விமஹ ஐக்கிரீடவநீதலெவாதயாரஸவ" (விகளத்கிரீடமவநீதலேபாத யாமாஸ) என்றதுக்குப்போருள் - "ராஜத்ரோஹிகளைக் கோல்லும்போது ராஜசிஹ்நங்களை வாங்கிக் கோல்லுவாரைப்போலேகாண்" என்று அம்மாள். தான்கோடுத்த தரமாகையாலே மற்றொருவர்க்குத் தேற்றத்துக்குடலாகவேணுமிறே. (அதாவது - ஈஶ்வரன்கோடுத்த சிஹ்நங்களிருக்கில் அவன்தன்னாலும் கோல்லப்போகாதேன்கை.) ஆக, தன்னைத்தானறிவ தற்குமுன்பு, கம்சன்வரவிட்டவர்களையும் அவன்தன்னையும் தப்புகைக்குப் பணிபோந்தது, பருவம்நிரம்பித் தன்னைத்தான்அறிந்தபின்பு பாண்டவர்கள் கார்யஞ்செய்து திரிந்தவித்தனை. [ஐவர்க்காய்க் கோடுஞ்சேனைதடிந்து] - பாண்டவர்களைச் சீறினவர்களுடைய "சாரதி, சாரதி" என்று வாய்பாறிக்கோண்டுவர, அவர்களையடையத் தேர்க்காலாலே யுழக்கிப் போகட்டானாயிற்று. [ஆற்றல்மிக்கான்] - ப்ரதிபக்ஷத்தையும் வேரோடே வாங்கிப்போ கட்டு, தர்மபுத்ரன்தலையிலே முடியையும் வைத்து, இவள்குலைந்த குழலையும் முடிப்பித்த விடத்திலும், "நாதிஸ்வஸ்தமநா:" (நாதிஸ்வஸ்த்தமநா:) என்றிறே யெழுந்தருளிற்றும். ஆற்றலென்று - போறையாய், போறைமிக்கவனேன்னுதல். அன்றிக்கே, வலியாய், வலி மிக்கவனேன்னுதல். இவற்றையடைய அழியச்செய்கைக்கடியான வலியைச்சோன்ன படி. [பேரியபரஞ்சோதிபுக்கஅரியே] - கம்ஸனும் துர்யோதநனுமில்லாதவிடத்தில் பரம பதத்திலே போய்ப் புக்கபின்பும், "நித்யசூரிகள் நடுவேயிருந்தோமிறே" என்று பாராதே, கம்ஸன், துர்யோதநன், கர்ணன் என்று, ஆசிலே வைத்தகையுந் தானுமாய் விரோதிகள் மேலே சீறின சீற்றத்தின் வாஸனையங்கேயும் அநுவர்த்தித்தபடி. (ம)

---

துக்கு க்ரமேணார்த்தத்வயம் - கம்ஸனும் இத்யாதி வாக்யத்வயத்தாலே. 'கொன்று" என்றதுக்குப்ர மாணமுகேநார்த்தம் - விகளத்கிரீடம் இத்யாதி. "கேஶேஷ்வாக்ருஷ்யவிமஹ ஐக்கிரீடவநீத லெ। ஸகஂஸஂவாதயாரோஸதஸ்யோபரிவவாதவ" இதிபஞ்சமேம்ஶே. (உ0 - அசு½) கூற்றியல் - ம்ருத்யுவின்ஸ்வஹாவத்தையுடைய இதி ஶப்தார்த்த:. முடியைவாங்கிக்கொல்லுகிறதென்? என்ன-தான்கோடுத்தஇத்யாதி. தேற்றத்துக்கு-விஶ்வஸிக்கைக்கு. சேனைக்குக்கோடுமையேதென்ன- பாண்டவர்களை இத்யாதி. உழக்கி - நெரித்து. "ஆற்றல்" என்று - பொறையைவிவக்ஷித்துஹாவம் - ப்ரதிபக்ஷத்தைஇத்யாதி. வலிசொன்னதுக்குஹாவம் - இவற்றையடையஇத்யாதி. "அரி" என்று - சத்ருவாயிருக்குமென்கிறுராதல், அரயஸ்யாஸ்தீத்யரீ என்ருய், திருவாழியையுடையவனென்கிறுரா தல் - கம்ஸனும் இத்யாதி. ஆசு - ஆயுதப்பிடி. 'ஒன்ருய்ப்புக்கு' என்று தொடங்கி, 'புக்கவரியான - ஆயர் குலத்தீற்றிளம்பிள்ளை- நமக்கு - ஏற்றரும் வைகுந்தத்தை யருளும்' இத்யந்வய: (கo)

## பதினோராம் பாட்டு

புக்கவரியுருவாய்அவுணனுடல்கீண்டுகந்த
சக்கரச்செல்வன்றன்னைக்குருகூர்ச்சடகோபன்சொன்ன
மிக்கவோராயிரத்துளிவைபத்தும்வல்லாரவரைத்
தொக்குப்பல்லாண்டிசைத்துக்கவரிசெய்வரேழையரே.

ஆ.—(புக்கவரியுருவாய்) - வாசாமகோசரமாம்படி மஹாச்சர்யமானசிம்ஹ ரூபதரனாய்ப்புக்கு அஸுரனைப்பிளந்தருளி ப்ரஹ்ருஷ்டனாய், தத்தத்ப்ரதிகூல நிரஸநோசிதஸர்வதிவ்யாயுத ஸம்பத்பரிபூர்ணனாய், ஆஸ்ரிதார்த்த ஸ்வரூபரூபகுண விபூதிகனான பரமபுருஷனுக்கு ப்ரதிபாதகமாய், ப்ரதிபாத்யத்தினாலும் மஹத்தான திருவாய்மொழிகளில் இத்திருவாய்மொழி வல்லார்க்கு, பகவத்பரிசர்யைக ஹோகராயிருப்பாரெல்லாரும் திறந்திறமாக ஸர்வசேஷவ்ருத்திகளும் பண்ணுவார்களென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றாரை, * மதிமுகமடந்தையர் விரும்பித் திருப்பல்லாண்டு பாடி ஸ்லாகிப்பரென்கிறார். [புக்கவரி என்றுதொடங்கி] - ப்ரதிகூலர் மண்ணுண்ணும் ஸிம்ஹவடிவாய்ப்புக்கு ஹிரண்யனுடைய உடலைக்கீறி ப்ரதிகூல நிரஸநத்தாலே உகப்பதுஞ் செய்து கையுந் திருவாழியுமான அழகை உடையவனை. புக்கவரியுருவென்றது - புறத்தினின்றும் வந்து கிண்டானென்று தோற்றாமே, அவனுடம்பிலே புக்கிருந்து புறப்பட்டாற்போலே கிண்ட சடக்கைச் சொல்லிற்றாகவுமாம். [மிக்க வோராயிரம்] - பகவத் குணங்களிலே கிளர்ந்த ஆயிரம். தொக்கு - திரண்டு.

ப.— அநந்தரம், இத்திருவாய்மொழியை, அப்யசிக்கவல்லவர்களை, பகவத் கைங்கர்யபரரான * மதிமுகமடந்தையர் சாமரவ்யஜநாதிகளைக்கொண்டு ஸத்கரிப்பர்களென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

அ - அத்யத்புதமான, அரியுருவாய் - ஸிம்ஹவிக்ரஹத்தை யுடையனாய், புக்கு - சத்ருவிஷயத்தில் புக்கு, அவுணன் - ஆசுரப்ரக்ருதியான ஹிரண்யனுடைய, உடல் - சரீரத்தை, கீண்டு - பிளந்து, உகந்த - அநாயாஸேந ப்ரஹ்லாதவிரோதி போனபடியாலே ப்ரீதனாயிருப்பானாய், (விரோதிநிரஸநத்தில்அவகாசமில்லாதபடியாலே), சக்கரச் செல்வன்தன்னை-அழகுக்கும் ஐஸ்வர்யத்துக்கும் உறுப்பான திருவாழியை யுடையவனை, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச் செய்ததாய், - மிக்க - பகவத்குணசேஷ்டிதாதிகளை கார்தஸ்ந்யேந ப்ரதிபாதிக்கும் பெருமையையுடைத்தாய், ஓர் - அத்விதீயமான, ஆயிரத்துள் -ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளே, (பகவத்விஷயத்தில்ப்ராப்யத்வ விரோதிநிவர்த்தகத்வங்களடியானஅபிநிவேசாதிக்கு ப்ரகாசகமான), இவை பத்தும்-, வல்லாரவரை - அப்யஸிக்கவல்லாரானவர்களை, ஏழையர் - பகவத்கைங்கர்யபரைகளாய் பாகவதகிஞ்சித்கார சபலைகளாயிருக்கிற * மதிமுகமடந்தையர், தொக்கு - திரண்டு, பல்லாண்டிசைத்து - மங்களாசாஸநம்பண்ணி, கவரி - (தத்விஷயத்தில் பண்ணும்) சாமரவ்யஜநாதிகளை, செய்வர் - பண்ணியுபசரியாநிற்பர்கள். புக்கவரியுருவென்று - காதாசித்கமாக ப்ரவேசித்த நரஸிம்ஹரூபத்தையுடையனென்றுமாம். இது

மொழி கற்றுரை, * மதிமுகமடைந்தையர் மங்களாஸாஸநம்பண்ணி ஸ்லாகிப்பரென்கிறுர். நம்முடைய ப்ரக்ருதி நமக்குஹேதுவென்று அபேக்ஷித்தால் நிரஸிக்குமென்று கருத்து.

[புக்கவரியுருவாய்] - அவ்வரியுருவாய்ப் புக்கு. அவ்வரியுருவென்னுமித்தனை அப்போதிருந்தபடி. நரஸிம்ஹவேஷத்தைக்கொண்டு விரோதிகள் நடுவேசென்று புக்கென்னுதல், ஹிரண்யனை நிரஸித்த சடக்காலே உள்ளேயிருந்து கிழித்துக்கொண்டு புறப்பட்டாற்போலே என்னுதல். [அவுணனுடல் கீண்டுகந்த] - ஹிரண்யனுடலைக்கிழித்து, "சிறுக்கன்விரோதி போகப்பெற்றதே!" என்று உகந்த. [சக்கரச்செல்வன் தன்னை] - ஹிரண்யனுடல் திருவுகிருக்குஇரையாய், திருவாழி அழகுக்குஉடலானபடி. [மிக்கவோராயிரம்] - ஷகவத்விஷயத்திலுள்ளவளவெல்லாம் சொன்ன இப்பத்தைக் கற்றவர்களை. [தொக்கு] - திரண்டு. [பல்லாண்டிசைத்து] - மங்களாஸாஸநம்பண்ணி. ஈஸ்வரன் பக்கல் பண்ணக்கடவ ஸாதாரண பரிசர்யையும் பண்ணுவர்கள் * மதிமுகமடந்தையர். நெடுநாள் ஸம்ஸாரத்திற்பட்ட க்லேஸமெல்லாம் போம்படி ஆதரிப்பர்கள்.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழிகற்றுரை, *மதிமுகமடந்தையர் விரும்பித் திருப்பல்லாண்டுபாடி ஸ்லாகிப்பர்களென்கிறுர். (நம்முடைய ப்ரக்ருதி நமக்கு ஹயஹேதுவென்று அபேக்ஷித்தால் நிரஸிக்குமென்றுகருத்து.)

[புக்கவரியுருவாய்] - அவ்வரியுருவாய்ப் புக்கு. அவ்வரியுருவென்னு மித்தனை யாயிற்றுச் சொல்லலாவது. நரஸிம்ஹமான வேஷத்தைக்கொண்டு விரோதி ஸந்நிதியிலே கிட்டி. அன்றிக்கே, ஹிரண்யனுடலைப்பிளந்துகொடு புறப்பட்டபோதைக்கமேமை. புறம்பிட்டு ஒருவன்வந்து செய்தானுகையன்றிக்கே, உள்ளுநின்றும் ஒருஸிம்ஹம் பிளந்துகொண்டு புறப்பட்டாற்போலே யாயிற்று; அத்தைச்சொல்லுதல். (தாதாத்விகமாகப்ரவேசித்த நரஸிம்ஹரூபத்தையுடையவனென்கை.) [அவுணனித்யாதி] - ஹிரண்யன் உடலைப்பிளந்துபோகட்டு, "சிறுக்கன்விரோதி போகப்பெற்றோம்" என்று உகந்தானுயிற்று. [சக்கரச்செல்வன்தன்னை] - ஹிரண்யனுடைய உடலுங்கூடத் திருவுகிருக்கு அரைவயிறுய்ப் போகையாலே, பின்னை யழகுக்குப் பத்திரங்கட்டினவித்தனையாயிற்று. (அழகுக்கும் ஐஸ்வர்த்துக்கும் உறுப்பான திருவாழியையுடையவனை.) [குருகூர்இத்யாதி] - ஆழ்வார்அருளிச்செய்த, மிக்கவோராயிரத்து - ஹகவத்விஷயத்தையுள்ளவளவும் சொன்னவாயிரத்திலும் வைத்துக்கொண்டு, இப்பத்தையும் கற்றவர்களை. [தொக்குஇத்யாதி] - கிண்ணகத்தில் இழிவாரைப்போலே தனியிழியவொண்ணுமை திரண்டுகொண்டு, "போலிகபோலிக"

---

நிகமம் - புக்கஇத்யாதி. "அவரைத்தொக்குப்பல்லாண்டிசைத்துக்கவரிசெய்வரேழையர்", என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி.

"உக்ரம்வீரம்" இத்யாதி மந்த்ரலிங்கத்தைப்பற்ற - அவ்வரியுருவென்னுமித்தனை இத்யாதி. "அரியுருவாய் - புக்கு" என்றதுக்கு ஸப்தார்த்தம் - நரஸிம்ஹமானஇத்யாதி. அர்த்தாந்தரம் - அன்றிக்கே ஹிரண்யன்இத்யாதி. அதாவது - அவ்வரியுருவாய், அவுணன்முன்னே, புக்கு-கிட்டியென்னுதல்; அவுணனுடலிலே, புக்கிருக்கிற - ப்ரவேஸித்திருக்கிற, அரியுருவாயென்னுதலென்று அர்த்தத்வயம். "உகந்த" என்றதுக்குபாவம் - ஹிரண்யன்இத்யாதி. "சக்கரச்செல்வன்" என்றதுக்குபாவம் - ஹிரண்யனுடையவுடலும் இத்யாதி. "செல்வம்" என்று - திருவாழியால்வந்த அழகு. பத்திரம் - ஆயுதம். "மிக்க" என்றது - பகவத்ப்ரதிபாதகசாமர்த்யத்தால் மிக்கவென்றபடி. தொக்கு - திரண்டு. கிண்ணகம் - ஆற்றுப்பெருக்கு. ஸம்ஸாரத்திலேபட்ட இழவாவது - * வெஞ்

என்று மங்களாசாஸநம்பண்ணி, ஸர்வேச்வரன்பக்கல் பண்ணக்கடவ அஸாதாரண பரிசர்யைகளையுடைய இப்பத்தை யப்யசித்தவர்கள்பக்கலிலே பண்ணுநிற்பர்கள் * மதிமுக மடந்தையர். நெடுநாள் ஸம்ஸாரத்திலேபட்ட இழவெல்லாந்தீரும்படி அவர்களாலே கொண்டாடப்பெறுவர்கள். (தொக்கு - திரண்டு. கவரி - சாமரம். ஏழையர் - பாகவத கிஞ்சித்கார சபலைகளான மதிமுகமடந்தையர்.) (கக)

---

சொலாளர்கள் * கடுஞ்சொல்லைக்கேட்ட இழவு. 'அஸாதாரணபரிசர்யை' என்றவிடத்திலே - "ஸூர்யகோடிஸ்ருசம் தத்ர ஸூர்யஸ்யாம்ஸு ... " என்றது அநுஸந்தேயம். (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.—தாத்ருஷ்ணா ப்ரவிசந்நாஹ ப்ருவந் ஸ்வாபேக்ஷிதார்த்திதாதிஷு ஜாநந் புவந்து । ப்ராப்யம் சரண்யம் தவி வீக்ஷ்ய க்ஷாந்த்யா ஸஹ்யாத்ரே ப்ராப்யவேதி விஷயாபத்திநிஷ்டே ॥

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.—(பாமருமூவுலகும்.) நாதீ வர்த்மஜ்ஞஸாகீமிப்ஸிதமஜநீயாஸ்வாத்வாக்யு த்ராணாப்தேஷ்ட்யஸ்வபூஜாதாக நியந்த்ரஸம்ஸ்ப்ருஷ்டேஸவ்யாஸாராக । ஸ்வாத்யாவஸி போக்யாபலாநிரஸநாத்ரு தாபேக்ஷாநஜக்வாஸ்ரீயாக் த்ராவணாஸ்ரீஸவக்ஷமபாநித்யாஸீமாஸி: ॥

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

பாமருவேதம்பகர்மால்குணங்களுடன்
நாமமுருவேண்டப்பாடாமவற்றை—தூமனத்தால்
நண்ணியவனைக்காணநன்குருகிக்கூப்பிட்ட
வண்ணலைநண்ணுமேழையர்.

---

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.

**ஆ.**—[ஏழையராவி]-இப்படி எம்பெருமானுடைய ஆஶ்ரித வாத்ஸல்யாதி குணாநுஸந்தாநத்தாலே ஸ்வாபேக்ஷிதத்தைச் செய்தருளுமென்று ஆஶ்வஸ்தரான ஆழ்வார், அவன் செய்தருளாமையாலே பின்னையும் அவனோடே ஸம்ஶ்லேஷிக்க ஆசைப்பட்டு, தத்ஸௌந்தர்யாநுஸந்தாந ப்ரகர்ஷஜநித தத்ஸாக்ஷாத்காரராய், தத்ஸம்ஶ்லேஷம் அலப்யமாநராய் ஸாக்ஷாத்க்ருத அதிரமணீய ததீய திவ்யாவயவங்களாலே பீட்யமாநராய்க்கொண்டு அந்யாபதேசத்தாலே கூப்பிடுகிறார்.

ஒ.—ஏழாந்திருவாய்மொழியில், முன்பில் திருவாய்மொழியில் எம்பெருமானைக் காணவேணுமென்று கூப்பிட்டு, "மல்குநீலச் சுடர்தழைப்ப" என்று தொடங்கியுண்டான அவனுடைய அழகை அநுஸந்திக்கையாலே, அவ்வழகுகள் முன்பேநின்றாற்போலே, ப்ரத்யக்ஷமாகத் தோற்றுநின்றுகொண்டு பாஹ்யஸம்ஶ்லேஷத்துக்கு யோக்யமன்றிக்கே நலிய, ஆழ்வார் தாம் நலிவுபடுகிற படியை அந்யாபதேஶத்தாலே பேசுகிறார். எம்பெருமானோடே விஶ்லேஷித்து, அவனுடைய ஸௌந்தர்யாதிகளை நினைத்து தரிக்கமாட்டாதே நோவுபடுகிறாள் ஒருபிராட்டி, சேதநர் சேதநரை அகப்படுத்துவது கண்வழியேயாகையாலே பிராட்டியும் எம்பெருமானுடைய திருமுகத்திலே ஸௌந்தர்யத்தை மிகவும் ஶ்லாகிக்கையாலே, அவ்வழியே ஹ்ருதயம் அகப்பட்டு பாஹ்யவிஷயம் அநுஸந்திக்கைக்கு சக்ஷுராதிகரணங்களுக்குத் தான் துணைப்படமாட்டாதே அவ்வழகையே நிரந்தரமாக அநுஸந்திக்கையாலே சாக்ஷாத்கரித்தாற்போலே அவ்வழகு ப்ரதிபாஸிக்க, துணுக்கென்று எழுந்திருந்து கிட்டச்செல்ல, அவ்வழகு தான் நினைத்தபடி பரிமாறவொட்டாமையாலே நடுக்கடலிலே அகப்பட்டாற்போலே அலமருகிற இப்பிராட்டியை, தோழிமாரும் தாய்மாரும், "நீ இப்படிப் படுகைக்கு ஹேதுவென்?" என்று கேட்க, அவர்களைக்குறித்து, எம்பெருமானுடைய திருக்கண்கள் தொடக்கமான திவ்யாவயவங்களில் அழகுகளைக் கையாலேகாட்டி, 'இவை தனித்தனியும் திரளவும்வந்து என்னை நலிய நான் இவற்றிலே அகப்பட்டேன்; இனி என்னையழைத்து உங்களுக்கு ஒருப்ரயோஜநமில்லை; என்பக்கல் நசையறுங்கோள்' என்கிறாள்.

ப.—ஏழாந்திருவாய்மொழியில், இப்படி ஆர்த்தியோடே கூப்பிட்டவர், "அடியுந்தி கைமார்பு கண்வாய்" என்று ப்ரஸ்துதமான விக்ரஹவைலக்ஷண்யத்தை அநுஸந்தித்து, "[illegible]" என்கிறபடியே விலக்ஷணமான உத்தமாங்காவயவங்கள் தனித்தனியேயும் ஸமுதாயமாகவும் ப்ரத்யக்ஷவத் விஶதமாம்படி ப்ரகாஶிக்க; அபரிச்சிந்நஸ்வபாவனான க்ருஷ்ணனுடைய திருக்கண்களையும், ஆஶ்ரிதவிஷயாபிநிவிஷ்டனான அவனுடைய நாஸாதண்டத்தையும், ஶ்யாமளவிக்ரஹத்துக்கு பரபாகமான அதரஶோபையையும், காமனுக்கும் உத்பாதகனாம்படி கமநீயதையையுடையவனுடைய ப்ரூயுகளத்தையும், கோவர்த்தநோத்தரணம் பண்ணின அநாயாஸத்தையுடையவனுடைய மந்தஸ்மிதத்தையும், அநந்தஶாயியான அவனுடைய கர்ணிகாலங்க்ருதமான கர்ணபாஶத்தையும், மஹாபுஜனான அவனுடைய லலாடஶோபையையும், ஏவம்விதமான அவயவ விஶிஷ்டமான க்ருஷ்ணனுடைய ஸாமாந்யமுகஶோபையையும், ஆஶ்

சர்பபூதனை அவனுடைய மயிர்முடியழகையும், ஸர்வாதிகத்வ ஸூசகமான அபிஷேக ஶோபையையும் அநுஸந்தித்து; அது ஸம்ஶ்லேஷபர்யந்தமல்லாமையாலே அத்யந்தம் ஆர்த்தரான இவருடைய ஆர்த்தி கண்டு நிர்விண்ணரான ஸுஹ்ருத்துக்களுக்கும் பரிவர்க்கும் தமக்குமோடுகிற தசையை யாவிஷ்கரித்த ப்ரகாரத்தை, நாயகனான க்ருஷ்ணனுடைய விஶ்லேஷதசையிலே அவனுடைய திவ்யாவயவங்கள் உருவெளிப்பாடாய்த்தோன்றக் கிட்டியநுபவிக்கப் பெறாமையாலே க்லிஷ்டையான நாயகியானவள், தனக்கு ஹிதஞ் சொல்லி நியமிக்கிற தோழிமார்க்கும் தாய்மார்க்கும் தன்னுடையபாடுபாட்டை யறிவித்த பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

இ.—ஏழாந் திருவாய்மொழியில், கீழில் திருவாய்மொழியிலே—"மல்கு நீலச்சுடர்தழைப்ப" என்று அவன்வடிவழகை அநுஸந்தித்தார்; அவ்வழகு நெஞ்சிலே ஊற்றிருந்து, பாவநாப்ரகர்ஷத்தாலே ப்ரத்யக்ஷஸமாநாகாரமாய்த் தோற்றி, பாஹ்யஸம்ஶ்லேஷத்துக்கு எட்டாமையாலே நோவுபடுகிற தம் தசையை அந்யாபதேஶத்தாலே பேசுகிறார். கலந்துபிரிந்தாள் ஒருபிராட்டி,—சேதநரோடு சேதநர்க்கு முதலுறவுபிறப்பது த்ருஷ்டிஸம்பந்தத்தாலே:—அதடியாகவிறே அல்லாதபரிமாற்றங்கள்: ஆகையாலே, அந்தத் திருக்கண்களிலே உள்ளஅழகை அநுஸந்தித்து, நிரந்தராநுஸந்தானத்தாலே உருவுவெளிப்பாடாய், நினைத்த பரிமாற்றத்துக்கு எட்டாமையாலே அலமாக்கிற இவளைத்தோழிமார் தொடக்கமான பந்துக்கள் திரண்டு, "நீஇப்படிப் படுகைக்கு ஹேதுவென்?" என்ன, தோழிமாரொழிந்தார்க்கு மறைக்கும் தசையல்லாத ஆற்றாமை மேலிடுகையாலே, அவர்களைக்குறித்து "அவனுடைய திருக்கண்கள் முதலான அழகுகள் திரளவும் தனித்தனியுமாக நலிய அவற்றாலே நோவுபடாநின்றேன்" என்ன, "இப்படி படுகையும் உன்னுடைய ஸ்த்ரீத்வத்துக்கும் அவனுடைய தலைமைக்கும் போராது" என்ன, "உங்கள் ஹிதவசநத்தளவன்று, அவ்வழகுகள் என்னை மேல்விழுந்து நலியாநின்றன; இனி உற்றத்தைப் பற்றுமித்தனை; இனி என்னை யலைத்து உங்களுக்கோர் ப்ரயோஜநமில்லை" என்று அவர்களுக்கு அவள்சொல்லுகிற பாசுரத்தாலே தம்முடைய தசையை அருளிச்செய்கிறார். அல்லாத விஶ்லேஷங்களிற்காட்டில் உருவுவெளிப்பாட்டுக்கு வாசியென்? என்னில்; கீழ்நின்ற நிலைகுலைந்து மேல்பிறக்கும் அபேக்ஷை அல்லாத விஶ்லேஷங்களாகிறன: உருவுவெளிப்பாடாகிறது — கீழில் வைஶத்யம் குலையாமே மேல்அபேக்ஷை வர்த்திக்கை. இந்த உருவு வெளிப்பாடு எங்ஙனேயோவிலும் சுருக்கடிக்க வுண்டு. அங்கு ப்ரீத்யப்ரீதி ஸமமாயிருக்கும்; இங்கு அப்ரீதியே யுறைத்திருக்கும்; திருக்கண்கள் "இணைக்கூற்றம்" என்னும்படியிறே இதில்ஆற்றாமை.

ஈடு.—கீழில்திருவாய்மொழியிலே - "மல்குநீலச்சுடர்தழைப்பச் - செஞ்சுடர்ச் சோதிகள்பூத்து ஒருமாணிக்கம்சேர்வதுபோல் - அந்தரமேற்செம்பட்டோடடியுந்திகைமார்பு கண்வாய் - செஞ்சுடர்ச்சோதிவிட வுறை என்திருமார்பனையே" என்று அவன்வடிவழகை அநுஸந்தித்தார்; அவ்வடிவழகுதானே நெஞ்சிலே ஊற்றிருந்து அத்தையேபாவித்து, அந்த பாவநாப்ரகர்ஷத்தாலே ப்ரத்யக்ஷஸமாநாகாரமாய், பின்னை "ப்ரத்யக்ஷம்" என்றே புத்தி

---

ஏழையராவி ப்ரவேஶ, ஸங்க்ரஹஸங்கதி - கீழில்திருவாய்மொழியிலே இத்யாதி. ஊற்றிருந்து - ஊறிக்கொண்டிருந்து: மாறாதே அநுவர்த்தித்தென்றபடி. உருவுவெளிப்பாடு - ப்ரத்யக்ஷஸமநாகார மாநஸஸாக்ஷாத்காரம். கீழுக்தத்தை விஸ்தரேண அருளிச்செய்கிறார் - ஸர்வேஶ்வர

பண்ணி யணைக்கக் கணிசித்துக் கையைநீட்டி, அப்போதே பெறுமையாலே தமக்குப் பிறந்த ஆற்றாமையை, எம்பெருமானோடே கலந்துபிரிந்து உருவுவெளிப்பாட்டாலே நோவு படுகிற ளொருபிராட்டிபாசுரத்தாலே யருளிச்செய்கிறார். ஸர்வேஶ்வரனோடே கலந்து பிரிந்து தளர்ந்து உருவுவெளிப்பாட்டாலே நோவுபடுகிற ளொருபிராட்டி,—சேதநர் சேதந ரோடு கலக்கும்போது த்ருஷ்டிஸம்பந்தம்முன்னாகப் பின்னையிறே அல்லாதபரிமாற்றங்களை யாசைப்படுவேது; ஆகையாலே,— திருக்கண்களிலழகை யநுஸந்தித்து, அவ்வழியாலே திரு முகத்திலழகை யநுஸந்தித்து அநந்தரம் அவ்வருகே சிலபரிமாற்றங்களை யாசைப்பட்டு அப் போதே அது கைவாராமையாலே நோவுபட; இவள்தசையை யநுஸந்தித்த தோழிமாரும் தாய்மாரும் "உனக்குழுகிறது என்?" என்று கேட்க,—சிலர்க்குச் சொல்லிச் சிலர்க்கு மறைக்கும்படியாயன்றே ஆற்றாமை ப்ரஸித்தமானபடி. ஆகையாலே,—அவர்களைக் குறித்து "அவனுடைய திருமுகத்திலழகானது தனித்தனியும் திரளவும் வந்து என்னை நலியாநின் றது" என்ன, "நீ இங்ஙனே சொல்லுமது உன்னுடைய ஸ்த்ரீத்வத்துக்குப் போராது: அவ னுடைய தலைமைக்கும் போராது; நீதான் எங்களை நோக்கக்கடவதாயிருப்பதொரு ஸ்வ பாவமுண்டே, அதுக்கும் போராது; ஆனபின்பு, இத்தைத் தவிர்" என்று ஹிதஞ் சொல்லுவாரும் பொடிவாருமாக; "நீங்கள் பொடிகிற இதுகேட்டு மீளுமளவல்ல அது என்னைநலிகிறபடி: இனித்தான் ஏதேனுமாக உறைத்ததிலே ஊன்றிநிற்கு மத்தனையிறே: ஆனபின்பு, நீங்கள் என்னைவிட்டுப்பிடிக்கவமையும்" என்று அவர்களுக்குத் தன்பக்கல் நசையறவேண்டும்படி தனக்குப்பிறந்த ஆற்றாமையை அறிவிக்கிறாளாயிருக்கிறது. ஸர்வேஶ் வரனுடைய குணங்களை யாசைப்படுகையும், அதுதான் மாநஸாநுபவமாயிருக்கையும், அநுபூதகுணங்களொழிய குணாந்தரங்களிலே அபேக்ஷைபண்ணுகையும், அதுதன்னில் க்ரமப்ராப்திபற்றாமையும், அதுதான் கீழ்நின்றநிலையை மறக்கும்படிபண்ணுகையுமாகிற இவையிறே - இவர்க்குத் திருவாய்மொழியெங்கும் ஓடுகிற ஸ்வபாவந்தான். அவற்றிற்காட் டில், உருவுவெளிப்பாடாகச் சொல்லுகிற இதில் ஏறினஅம்ஶம் என்? என்னில், - கீழ்ப் பிறந்த வைஶத்யமுங் கிடக்கச்செய்தே மேலே அபேக்ஷைபிறக்குமதாயிற்று- உருவுவெளிப் பாடாகிறது. அல்லாதவிடத்தில், கீழ்ப்பிறந்த வைஶத்யத்தையழித்திறே மேலில் அபேக்ஷை பிறப்பது. * எங்ஙனேயோவிலும் - ப்ராயேண இதுவேயன்றோ ஓடுகிறது. அதில் இதுக்கு

---

னோடே இத்யாதி. 'ஒருபிராட்டி' என்றதுக்கு 'திருக்கண்களிலழகை யநுஸந்தித்து' என்றத்தோடே அந்வயம். முன்னே திருக்கண்ணழகைச் சொல்லுவானென் ? என்ன - சேதநர் இத்யாதி. த்ருஷ்டி ஸம்பந்தம்முன்னாக என்றது - "சக்ஷுராகஃ ஸ்ரீ தித்ரு ஸங்கஃ" என்றத்தைப்பற்ற. பரிமாற்றம் - காயிகவ்யாபாரம். தோழிமார்க்கொழிய தாய்மார்க்கு ஸ்வாவஸ்தையைச்சொல்லலாமோ ? என்ன - சிலர்க்கு இத்யாதி. திரளவும்என்றது - "கோளிழைத்தாமரையும்" இத்யாதியைப்பற்ற. "நிற்றி முற்றத்துள்" என்றத்தைப்பற்ற - ஸ்த்ரீத்வத்துக்குப்போராது என்றது. எங்களை நோக்கக்கடவதா யிருப்பதொரு ஸ்வபாவமென்றது - எங்கள்வார்த்தைகேட்டு எங்களுக்குஹவ்யையாயிருப்பதொரு ஸ்வ பாவமென்றபடி. நாங்களும் நலியவில்லையோ? எங்கள்வழியே யொழுகவொண்ணாதோ? என்ன-இனித் தான் இத்யாதி. உறைத்ததிலே - ப்ரபலமானதிலே யென்றபடி. "அன்னைமீர்நசையென்நுங்கட்கே" என்றத்தைப்பற்ற - ஆனபின்பு இத்யாதி. ஸ்வாபதேசத்தில் இது ஆவதேதென்ன - ஸர்வேஶ்வர னுடைய இத்யாதி. அதுதன்னில் - குணாந்தராநுபவத்தில். ஏறின அம்ஶம் - அதிகாம்ஶம். மற்றை யிடங்களில் இப்படியன்றோ ? என்ன - அல்லாத இத்யாதி. அல்லாதவிடத்தில் - உருவுவெளிப்பா டல்லாத இடத்திலென்றபடி. ப்ராயேண என்கையாலே - மற்றைத்திருவாய்மொழிகளிலே ஓரோ

வாசியேன்? என்னில்; அதில் - ப்ரீத்யப்ரீதி ஸமமாயிருக்கும், இங்கு – அப்ரீதி மிக்கிருக்கும். திருக்கண்களிலழகை "இணைக்கூற்றம்" என்னும்படியாயிற்று இங்கு ஸாயகத்வத்தில் உறைப்பிருக்கும்படி.

## முதற் பாட்டு.

ஏழையராவியுண்ணும் இணைக்கூற்றங்கொலோவறியேன்
ஆழியங்கண்ணபிரான் திருக்கண்கள்கொலோவறியேன்
சூழவுந்தாமரைநாண்மலர்போல் வந்துதோன்றுங்கண்டீர்
தோழியர்காளன்னைமீர்! என்செய்கேன்? துயராட்டியேனே.

ஆ.—பரமபுருஷ ஸம்ஶ்லேஷாபேக்ஷவநிதாஜந ப்ராணஹாரி ம்ருத்யுகளமோ? அன்றியே, ஆயதஅதிரமணீய விலோசந விஜித ஸகலலோகனான எம்பெருமானுடைய திருக்கண்கள்கொலோ? அறிகிறிலேன்; அப்போதலர்ந்த தாமரைப்பூப்போலே சூழவந்து தோன்றி என்னை வ்யதியாநின்றன; தோழியர்காள்! அன்னைமீர்! என்றும் து:கமேபடப்பிறந்தேனுகாதேயென்று, "ஹாராமஹாலக்ஷ்மணஹாஸுமித்ரே ஹாராமமாதஸ்ஸஹமே ஜநந்ய" என்று அசோகவநிகையில் பிராட்டி கூப்பிட்டாற்போலே கூப்பிடுகிறாள்.

ஒ.—முதற்பாட்டில், திரு
சொல்லுகிறாள்.

[ஏழையென்று தொடங்கி] - சபலைகளான பெண்களை முடிப்போமென்று க்ருதஸங்கேதராய் வந்தார் இரண்டும்ருத்யுக்களோ? அறியேன். [ஆழியென்றுதொடங்கி]- கடல்போலே அழகிய திருநிறத்தையுடைய க்ருஷ்ணனுடைய அழகாலே ம்ருத்யுக்களிலுங் கொடிதான திருக்கண்கள் கொலோ? அறியேன். திருவாழியையுடையனுய உபகாரசீலனான க்ருஷ்ணனுடைய கண்கள்கொலோ? என்றுமாம். [நாண்மலர்போல்] - ஸம்ஶ்லேஷ உபமையிற் செவ்வி.

ப.—முதற்பாட்டில், க்ருஷ்ணனுடைய திருக்கண்கள் தன்னை நலிகிறபடி சொல்லுகிறாள்.

ஏழையர் - (சபலைகளான) பெண்பிறந்தாருடைய, ஆவி - ப்ராணனை, உண்ணும் - க்ரஸிக்கக்கடவதாய், இணை - (ஒன்றுக்கொன்று சேர்த்தியான) இரட்டை, கூற்றங்கொலோ - ம்ருத்யுவோ? அறியேன் - (பாதகத்வத்தாலே கண்ணென்று) அறுதியிடமாட்டுகிறிலேன்; (அங்ஙனன்றியே), ஆழி - ரத்நாகரம்போலே, அம் - (அபரிச்சிந்ந) விலக்ஷணஸ்வபாவனாய், (என்னோடு ப்ரதமத்திலே), கண்ணன் - விதேயனாய், பிரான் - (ஸம்ஶ்லேஷித்து உபகரித்த) க்ருஷ்ணனுடைய, திரு - விலக்ஷணமான, கண்கள் கொலோ – திருக்கண்கள்தானோ? அறியேன் - (தர்ஶநீயதையாலே ம்ருத்யு

---

யாட்டுக்களிலே உருவுவெளிப்பாடுண்டென்றபடி. "மிக்கிருக்கும்" என்கைக்கு நியாமகமேதென்ன - திருக்கண்கள் இத்யாதி.

வென்று) அறுதியிட மாட்டுகிறிலேன்; சூழவும் - (அகலப்போகவொண்ணாதபடி) சுற்றும், தாமரை - தாமரையினுடைய, நாண்மலர்போல் - செவ்விப்பூப்போலே, வந்து - வந்து, தோன்றும் - தோன்றாநின்றது: கண்டீர் - காணுங்கோள்; தோழியர்காள் அன்னைமீர் - (ஆந்தரக்லேசம்அறியாதே அந்தரங்கரான) தோழிமாரோடு (ப்ரக்ருதியறிந்து பெற்று வளர்த்த) தாய்மாரோடு வாசியற நியமிக்கிறவர்களே! துயராட்டியேன் — (ஸ்வஸம்வேத்யமான) க்லேசத்தையுடைய நான், என் செய்கேன் - (க்லேச நிவ்ருத்திக்கு) என்ன பரிஹாரம் பண்ணுவேன்? தோன்றுகிற திருக்கண்களை மறைக்க மாட்டேன்; கிட்டி அநுபவிக்கமாட்டேனென்று கருத்து.

இ.—முதற்பாட்டில், திருக்கண்களில் அழகுநலிகிறபடியைச் சொல்லுகிறாள்.

[ஏழையராவியுண்ணும்] - "ஆசைப்பட்ட விஷயம் கிடையாது" என்றாலும் மீளமாட்டாத சபலைகளுடைய ப்ராணனை முடிக்கும். ராமசரம்போலே, ஒப்பனை குறியழியாதிருக்க ப்ராணனைத் துணிக்கும். புருஷர்க்கும், பருவம்நிரம்பி ஹிதஞ்சொல்லும் ஸ்த்ரீகளுக்கும் பாதையில்லை. [இணைக்கூற்றங்கொலோ] - "ஒரும்ருத்யுவாலே முடிக்கவொண்ணாது" என்று, இரண்டு ம்ருத்யு க்ருதஸங்கேதிகளாய் வந்தாற்போலேயாயிற்றிருக்கிறது. [அறியேன்] - "சபலைகளையே நலியவேணும்" என்னும் நிர்வந்தமில்லையே; பாலஸாம்ஸாரிகத்வ..................யுமிறே. [ஆழிஇத்யாதி] - அன்றியே, பெண்பிறந்தாரை நலியுமவைதானோயோ? உபகாரசீலனான க்ருஷ்ணனுடைய கடல்போலேயிருந்துள்ள திருக்கண்கள் என்னுதல்; கடல்போலே ச்ரமஹரமான நிறத்தையுடையவனுடைய திருக்கண்கள் என்னுதல்; கையிலே திருவாழியையுடையவனுடைய திருக்கண்கள் என்னுதல். [அறியேன்] - "உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தாமரைக்கண்" என்றிறே, இவள் ப்ரதிபத்தியிருப்பது. முதல்உறவு பண்ணினவைதானேயிறே இப்போது பாதகமாயிருக்கிறது. ஒன்றை நிர்ணயிக்கமாட்டாமையாலே அறியேன் என்கிறாள். ஆனால், தப்பப்பார்த்தாலோ வென்னில்?—[சூழவும் தாமரைநாண் மலர்போல்] - பார்த்த பார்த்தவிடமெல்லாம் அதுவேயாய், இறாய்க்கப் பார்த்தவிடத்தே வந்துநிற்கும். நாண்மலரென்று ஸம்ச்லேஷதசையிற் செவ்வியைச் சொல்லுகிறாள். "நைவதம்சாந்ந மசகாந்" என்று பிரிந்தபின்பு அத்தலையிலுள்ளதறியாளே. [வந்து தோன்றும்] - உருவுவெளிப்பட்டாலே வந்ததென்று இருக்கிறாளல்லள்; அத்தலையாலே வந்தது என்றிருக்கிறாள். [கண்டீர்] - ப்ரத்யக்ஷிக்கிற இவ்வர்த்தத்துக்கு உபதேசம் வேணுமோ? உங்களுக்குத் தோற்றுகிறதில்லையோ? [தோழியர்காள் அன்னைமீர்] - "தோழிமார்க்குச் சொல்லக்கடவது, தாய்மார்க்கு மறைக்கக்கடவது" என்கிற விவேகம் நடையாடாத தசாவிசேஷத்தைச் சொல்லுகிறது. [என்செய்கேன்] - இறாய்க்கப் பார்ப்பேனோ, அநுபவிக்கப் பார்ப்பேனோ? [துயராட்டியேன்] - "ஸ்ந ந்ஸம்ப்ரஹ்ருஷ்ணாவிஷ்ணாந்விஹ்ருதிகோ..." என்றிருக்குமது தவிர்ந்து. "ஸ்வஸம்வேத்ய..."

ஈடு.—முதற்பாட்டு. இம்முகத்துக்கு நேத்ரபூதர் நாம்அன்றோஎன்று முற்பட, திருக்கண்களிலழகுவந்து தம்மை நலிகிறபடியை யருளிச்செய்கிறார்.

முதற்பாட்டு.—ஏழையர் த்யாதி. யன" என்றத்தைப் பற்ற ரஸோக்தியாக அவதாரிகை - ம் த்யா ந்தமுகத்துக்கும், இப்ப்ரதேசத்துக்கும் இதி அர்த்தத்வயம். - க ப் அர்த்தத்வயம்.

[ஏழையராவி இத்யாதி] - ஓரோவிஷயங்களிலே சாபலத்தைப்பண்ணி, அவைபெறுவிடில் ஸஹிக்கமாட்டாத அபலைகளுடைய ப்ராணன்களை முடிக்கிற ம்ருத்யுக்கள் இரண்டோ? பிரிந்து ஆற்றாமையை விளைத்தவனுக்குமன்றிக்கே, "இது ஆகாது" என்று ஹிதஞ்சொல்லி மீட்கப்பார்க்கும் பருவங்கழிந்த தாய்மார்க்கு மன்றிக்கே, அபலைகளையே முடிப்பன இரண்டு கூற்றமோ? தன்கண்ணழகு தான் அறிகிறிலனே! தன்னையும் நலிந்ததாகில் வாரானோ? கண்ணாடிப்புறத்திலுங் கண்டறியானோ? [ஆவியுண்ணும்] - ராமஶரம்போலே, ஒப்பனை குறியழியாதேயிருக்க உயிரை முடியாநின்றது. [இணைக்கூற்றங்கொலோ] - ம்ருத்யுக்களிருவர் தங்களிலே க்ருதஸங்கேதராய் வந்தாற்போலேகாணும் திருக்கண்களிலழகு வ்யஞ்ஜகமாகிறபடி. [அறியேன்] - அறியேனென்பானேன்? என்னில்,- ம்ருத்யுக்களிருவர் க்ருதஸங்கேதராய் வந்தாலும் அபலைகளையே நலியவேண்டும் நிர்ப்பந்தமில்லையே; ('ஶரம் ஶரம் - உரஸி வித்த்வா ஹாரிணம்' இறே.) அத்தாலே சொல்லுகிறது:[ஆழியங்கண்ணபிரான்திருக்கண்கள் கோலோவறியேன்] - அன்றிக்கே, பெண்பிறந்தாரையே நலியக்கடவவானவை தாமேயோ? அல்பம் அண்ணியாரே பாதகராமன்று தப்பவிரகில்லை, இப்படி முதலுறவுபண்ணிப் பொருந்தவிட்ட இத்திருக்கண்கள்தானேயோ? உபகாரஶீலனான க்ருஷ்ணனுடைய கடல்போன்ற கண்களென்னுதல், கடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடைய உபகாரஶீலனான க்ருஷ்ணனுடைய திருக்கண்களென்னுதல். [அறியேன்] - இதுக்குமுன்பு பிரிந்தறியாமையாலே திருக்கண்கள் பாதகமாமென்று வ்யுத்பத்தியில்லை. "உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்தாமரைக்கண்" என்றிறே கேட்டிருப்பது? இக்கடாக்ஷமே தாரகமாகவிறே லோகமடைய ஜீவிப்பது. நாம் கேட்டிருந்தபடியன்றிக்கே இராநின்றது, இப்போது காண்கிறபடி. ஆனால், தப்பினாலோ? என்னில், - [சூழவும் இத்யாதி] - மூலபலத்தினன்று பார்த்த பார்த்த விடமெல்லாம் பெருமாளே யானாற்போலே யாயிற்று; ராமஶரத்துக்கு ராக்ஷஸர்க்குத் தப்பலாமன்றாயிற்று, இக்

ஸ்த்ரீகள் என்னாதே, "ஏழையர்" என்று விஶேஷித்ததுக்குபாவம் - ஓரோவிஷயங்களிலே இத்யாதி. "ஏழையர்" என்றத்தால் வ்யாவ்ருத்தி - பிரிந்து இத்யாதி. அவனுக்கு பாதையில்லையென்று தான் அறிந்தபடி எப்படியென்ன - தன்கண்ணழகு இத்யாதி, கண்ணழகு - கண்ணழகால்வந்த பாதையென்றபடி. அறிந்தாலோவென்ன - தன்னையும் இத்யாதி. தன்கண்ணழகு தனக்குத்தெரிய ப்ரஸக்தியுண்டோ? என்ன - கண்ணாடி இத்யாதி. "ஆவியுண்ணும்" என்றதுக்கு பாவம் - ராமஶரம் இத்யாதி. * உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்தாமரைக்கண்ணனை, "இணைக்கூற்றம்" என்பானென்? என்ன-ம்ருத்யுக்கள் இத்யாதி. 'அறியேனென்பானென்? கூற்றமென்று நிஶ்சயித்தாலோ என்னில்' என்று கூட்டுவது. 'அத்தாலே "அறியேன்" என்று சொல்லுகிறது' என்றபடி. "கண்ணபிரான் திருக்கண்கள்" என்றதுக்குபாவம் - அன்றிக்கே பெண்பிறந்தாரையே இத்யாதி. நலிகிறதசையிலே "பிரான்" என்பானென்? என்ன - அல்பம் அண்ணியாரே இத்யாதி. அதாவது - ப்ரதிகூலன் பாதகனானால் உபாயத்தாலே தப்பலாம்: அநுகூலன் பாதகனானால் தப்பப்போகாது என்றபடி. இத்தால் - உபகாரகனைப்போலேயிருந்து பாதகனாகிறா னென்றபடி. ஸம்ஶ்லேஷாநந்தரம் விஶ்லேஷிக்கையாலே- அல்பம்அண்ணியார் என்கிறது. "திருக்கண்கள்" என்று நிஶ்சயியாதே, "அறியேன்" என்பானென்? என்ன - இதுக்குமுன்பு இத்யாதி. பிரிந்தறியாவிட்டால் கேட்டறியவில்லையோ? என்ன - உயிர்க்கெல்லாம் இத்யாதி. ஸர்வப்ராணிகளையும் தாயாய்க்கொண்டு அளிக்கின்ற, குளிர்ந்த தாமரைபோன்ற கண்களை உடையவனே! என்று ஶப்தார்த்தம். திருமொழி, ஏழாம்பத்து, முதல்திருமொழி, ஒன்பதாம்பாட்டு, "தூயாய்" இத்யாதி. இதுக்கு அர்த்தம் - இக்கடாக்ஷமே இத்யாதி. "சூழவும்" என்றதுக்கு அர்த்தம் - மூலபலத்தின் இத்யாதி. "தாமரைநாண்மலர்" என்றதுக்குபாவம் - ராமஶரத்துக்கு இத்யாதி. திருக்கண்கள் எங்கும் பார்

கண்ணழகின்கீழ் அவலைகளாயிருப்பார்க்குத் தப்பலாவது ? "புண்டரீகநெடுந்தடங்கள் போலப்பொலிந்தேமக் கெல்லாவிடத்தவும்" என்னக்கடவதிறே. ஸர்ப்பஸயம்போலே இருக்கை. இறுய்க்கநினைத்த இடமெங்கும் தானேயாயிராநின்றது. இப்போது "தாமரை நாண்மலர்போல்" என்பானேன் ? என்னில்; (ஸம்ஶ்லேஷதசையிற்செவ்வியைச் சொல்லு கிறுள்.) "உஹ தாஜ்ஜு தா நிதூஉ ஜிெ நவா ஜிவவ ு தஃ"(ஸஹநாஜ்வலதாநித்ய மக்நி நேவாக்நிபர்வதஃ). "ெ நவஉம்ஸா நஉஸ ஸகாநு" (நைவதம்ஸாங்நமஶகாந்) இத்யாதி - பெருமாள் ஊர்ந்ததும் கடித்ததும் துடைக்க அறியார் என்ன; 'அதுக்கு அடியேன்?' என்ன, - "தஉெதநாஙஸாகுநா" (த்வத்கதேநாந்தராத்மநா) - பெருமாள் இங்கே குடிபோர, அங்கு இவை யார்தான் அறிவார் என்முனிறே. பிரிவில் இவ்வளவல்லவிறே அத்தலைக்கு ஆற்றுமை. அது அறிகிறிலளே இவள். தன்னோடே வந்துகலந்து விளைநீரடைத்துக்கொண்டு பிரிகிறபோதைச்செவ்வியிறே இவள் அறிவது; அதுவேயிறே இவள்நெஞ்சில் பட்டுக்கிடப் பது; பின்பு அவன்பட்டது அறியாளே; ஆகையாலே சொல்லுகிறுள். [வந்துதோன்றும்] - ப்ரத்யக்ஷத்தில் அத்தலையாலேவரவுஆறுப்போலே உருவுவெளிப்பாட்டிலும் அத்தலையாலே வந்துதோன்றவாயிற்றுத் தான் அறிகிறது. [கண்டீர்] - உங்களுக்கு இது தோற்றுகிறதில்லை யோ? [தோழியர்காளன்னைமீர்] - சிலர்க்குச் சொல்லிச் சிலர்க்கு மறைக்கும்படியன்றிறே இவள்உமை. "தோழிமார்க்குச்சொன்ன இந்தைக்தாய்மார்க்குச் சொல்லுவோமல்லோம்" என்று மறைக்கு மளவல்லவாயிற்று, இவளுக்குப்பிறந்த உமாவிஶேஷம். [என்செய்கேன்] -

---

*திருக்குமோ? என்ன - புண்டரீகம் இத்யாதி. திருவிருத்தம், முப்பத்தொன்பதாம்பாட்டு, "நீலத் தடவரைமேல் புண்டரீகம்" இத்யாதி. இதுக்கு அர்த்தம் - நீலாத்மகமான பெரிய மலையின்மேலே, தாமரையையுடைத்தான நெடிய தடாகங்கள்போலே அழகுவிஞ்சி, நமக்கு ஸர்வப்ரதேசத்திலும் ப்ர காஶியாநின்றன என்றபடி. 'பொங்கு முந்நீர்' என்று தொடங்கி, 'எம்பிரான் கண்ணின்கோலங்கள் - எமக் கெல்லாவிடத்தவும்' இத்யந்வயஃ. பார்த்தபார்த்தவிடமெல்லாம் திருக்கண்கள் வ்யாபகமென்னுமதுக்கு த்ருஷ்டாந்தாந்தரம் - ஸர்ப்பபயம் இத்யாதி. "சூழவும்" என்றதுக்கு பாவார்த்தம் - இறுய்க்க இத்யாதி. விஶ்லேஷவேளையிலே "நாண்மலர்" என்னக்கூடாதென்று ஶங்கிக்கிறுர் - இப்போது தாமரை இத்யாதி. என், "தாமரைநாண்மலர்போல்" என்னவொண்ணுதோ? என்ன; விஶ்லேஷ தசையில் அவன்உருவியிருக்கையாலே அப்படிசொல்லவொண்ணுதென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமா ணங்கள் - உஹதா இத்யாதி, ெநவஉம்ஸாநு இத்யாதி. இதுக்கு அர்த்தம் - பெருமாள் இத் யாதி. வூகூஜெதகிாயாதஃ ஐதூஹ - பிரிவில் இத்யாதி. ஆற்றுமை என்றவநந்தரம், 'இப்படியிருக்க தாமரைநாண்மலர் என்பானென்? என்னில்' என்று கீழோடே அந்வயிப்பது. இதுக்குப்பரிஹாரம் - அது அறிகிறிலளே இவள் என்று. "ஸதவாஉஸுநாஉாஜெூ ஸாவயஃ வஶிதவூெத। உஹதாஜ்ஜுதா" ஐதூாதி, "ெநவஉம்ஸாஙஉஸகாஙகீடாஙஸஶீ ஸூவாநு। ஸாவெவாவநயெஉாதூாதஉெதநாஙஸாகுநா" ஐதி ஸூாரூ காஜெண ஹநஶிரோநு. (கூ௬-௪௨)பின்னை எவ்வளவு அறிவளென்ன-தன்னோடே இத்யாதி. விளை நீரடைத்துக்கொண்டு - விளையும்படி யொருகாலே நீரைத்தேக்கிக்கொண்டு; பூர்ணமாக அநுபவித் தென்றபடி. "அது அறிகிறிலள்" என்றத்தை விவரிக்கிறுர் - பின்பு அவன் இத்யாதி. தோன்று மென்னுதே, "வந்துதோன்றும்" என்றதுக்குபாவம் - ப்ரத்யக்ஷத்தில் இத்யாதி. இருவரையும் ஸம் போதிக்கிறதுக்குபாவம் - சிலர்க்கு இத்யாதி. கீழ்வாக்யவிவரணம் - தோழிமார்க்கு இத்யாதி. "என் செய்கேன்" என்றது - கோடித்வயாவலம்பியாகையாலே அருளிச்செய்கிறுர் - இத்தை இத்யாதி.*

இத்தைத் தப்பப்பார்ப்பதோ, அநுபவிக்கப் பார்ப்பதோ, எத்தைச்செய்கேன்? [துய ராட்டியேனே] - "ஆநந்தம் ப்ரஹ்மணோவித்வாந் நபிபேதிகுதஶ்சந" (ஆநந்தம் ப்ரஹ்மணோவித்வாந் நபிபேதிகுதஶ்சந) என்று இருக்கவேண்டியிருக்க, அங்ஙனன்றிக்கே, "அவஶ்யமநுபோக்தவ்யம்" (அவஶ்யமநுபோக்தவ்யம்) என்கிறபடியே பழைய க்லே ஶமே ஸித்திக்கும்படி ஆயிற்றே. (க)

---

## இரண்டாம் பாட்டு.

---

ஆட்டியுந்தூற்றியும்நின்று அன்னைமீரென்னைநீர்நலிந்தென்?
மாட்டுயர்கற்பகத்தின் வல்லியோகொழுந்தோ அறியேன்
ஈட்டியவெண்ணெயுண்டான்திருமூக்கு எனதாவியுள்ளே
மாட்டியவல்விளக்கின்சுடராய்நிற்கும்வாலியதே.

*ஆ.—(ஆட்டியும்) - ஸௌரப்யோபாதாநமாய்க்கொண்டு முளைத்தெழுந்த கற்பகத்தினுடைய கோமளமான வல்லியோ? அன்றிக்கே, அதினுடைய கொழுந்தோ? அதுவுமன்று, ஈட்டியவெண்ணெயுண்டான் திருமூக்கு; அந்த வெண்ணெயுடைய திவ்ய வாஸநாவாஸிதமான அத்திருமூக்கழகு, என்னுடைய ஆத்மாவினுள்ளே ஆரோபிதமாய், மஹத்தாயிருப்பதொரு விளக்கினுடைய ஜ்வாலைபோலேநின்று தஹியா நின்றது; அவ்வளவன்று, அதிலும் வ்யாபகமாயிராநின்றது; என்னை அலைத்துக்கொண்டு எங்கும் கோஷித்துநின்று என்னை வாயித்தால், அன்னைமீர் உங்களுக்கு என்ன ப்ர யோஜந முண்டென்கிறாள்.*

*ஒ.—இரண்டாம்பாட்டில், எம்பெருமானுடைய திருமூக்கிலழகு தன்னை நலி கிறபடியைச் சொல்லுகிறாள்.*

*[ஆட்டியென்று தொடங்கி] - அன்னைமாரான நீங்கள் என்னை அலைத்தும் பிறர்க்குக் குற்றங்களைச்சொல்லியும் என்ன ப்ரயோஜநமுண்டு? [மாட்டென்றுதொடங்கி]- கண்ணின்பாடே அதின் நீர்மையாலே வளர்ந்து ஒழுகு நீண்டிருக்கையாலும், ஶ்ராத்தை யாலும், 'கற்பகக்கொடியோ? அதின்கொழுந்தோ?' என்று துணியமாட்டுகிறிலேன். [ஈட்டியவெண்ணெயுண்டான்] - உருவுவெளிப்பாட்டிலே இவர்க்கு வெண்ணெய்நாற்றம் உபலப்யமாகிறபடி. [மாட்டியவென்று தொடங்கி] - ஏற்றிய பெருவிளக்கின் ஒளியை யுடைத்தாய்நின்று அவ்வளவுமன்றிக்கே அற வலிதாய் நலியாநின்றது.*

*ப.—அநந்தரம், ஆஶ்ரிதருடைய த்ரவ்யத்தில் அதிவ்யாமோஹத்தாலே நவ நீதசோரனான க்ருஷ்ணனுடைய நாஸாதண்டமானது என்னெஞ்சுக்குள்ளே ப்ரகாஶியா நின்றதென்கிறாள்.*

*அன்னைமீர் - (ப்ரியபரைகளான) தாய்மாராயிருக்கிற, நீர் - நீங்கள், ஆட்டி யும் - (ஹிதஞ்சொல்லி) இருந்தவிடத்திலிராதபடி பண்ணியும், தூற்றியும் - (புறம்பே)*

---

"சூழவும்" என்கையாலே - தப்பப்போகாதென்றபடி. பழைய க்லேஶமே என்றது - விஶ்லேஷ க்லேஶமே என்றபடி. க்ரமேணார்வய: (அ)

பழிதூற்றியும், நின்று - (ஒருபடிப்பட) நின்று, என்னை - என்னை, நலிந்து - நலிகிறத்தால், என் - என்னப்ரயோஜநமுண்டு ? (உங்கள் நலிவும் வ்யர்த்தமாகைக்கடி), மாட்டு - பரிஸரத்திலே, உயர் - ஓங்கியிருப்பதொரு, கற்பகத்தின் - கற்பகத்தினுடைய, வல்லியோ - கொடியோ, கொழுந்தோ - கொழுந்தோ, அறியேன் - அறிகிறிலேன் ; ஈட்டிய - (கடைந்து) திரட்டிவைத்த, வெண்ணெய் - வெண்ணெயை, உண்டான் - (களவிலே) அமுதுசெய்தவனுடைய, திருமூக்கு - திருமூக்கானது, எனது - என், ஆவியுள்ளே - நெஞ்சுக்குள்ளே, மாட்டிய - தூண்டப்பட்டு, வாலியது - பெருத்து, வல் - ஸ்த்திரமான, விளக்கின்சுடராய்நிற்கும் - தீபஜ்வாலைபோலே ப்ரகாசியாநின்றது. ருஜுவாகையாலே - கொடியென்னவுமாய், அது அசைந்து ஓங்கின தலையையுடைத்தாகையாலே - கொழுந்தென்னவுமா யிருக்கிறது. வாலிமை - பெருமை. மாட்டிய - தூண்டின. வன்மை - ஸ்த்தைர்யம்.

இ.—இரண்டாம்பாட்டில், தோழிமார் இவள்பருவமாகையாலே நோவறிந்து அலைக்கத்தவிர்ந்தார்கள் ; அன்னைமார், தங்கள் அலைக்கிற வதுக்குமேலே திரள்களிலேயும் சொல்லப்புக்கார்கள் ; அவனுடைய திருமூக்கிலழகு திருக்கண்களினருகே நின்று என்னை வ்யாகுலியாநின்றது என்கிறாள்.

[ஆட்டியும் தூற்றியும்] - ஆட்டுகையாவது - தாங்கள் ஹிதம் சொல்லியலைக்கை. தூற்றுகையாவது - பிறர்க்கும் குற்றங்களைச் சொல்லுகை. [நின்று] - ஒருகால் அச்சுமுறுத்தி மீட்க யத்நம்பண்ணினால், அதுஹலியாதொழிந்தால் தவிரவிறே யடுப்பது. [அன்னைமீர்] - பித்ராதிகள் சொல்லக்கடவ ஹிதத்தை, ப்ரியமேசெய்து போரக்கடவ நீங்கள் சொல்லுகிறதென்? [என்னை] - ஒருகால்சொன்னால் மீளாத என்னை. [நீர்நலிந்தென்] - ப்ரியத்தைஒழியக் குற்றங்களைச் சொல்லி என்ன ப்ரயோஜநமுண்டு. நாங்கள் எத்தைச்செய்தால் ப்ரயோஜநமுண்டு? என்ன, [மாட்டுயர் இத்யாதி]- இஸ்ஸம்ஸயத்தை அறுத்துத் தர வல்லீர்களாகில் ப்ரயோஜநமுண்டு. கண்ணின்பாடே, "உந்நஸம்" என்கிறபடியே உயர்ந்த;கடலினருகே, அதுஊற்றுகவளர்வதொரு கொடிபோலே, அதின் நீர்மையாலே வளர்ந்ததொரு கற்பகக்கொடியோ? ஒழுகு நீண்டிருக்கையாலே கொடியென்னவுமாய், ஸ்ரத்தையாலே கொழுந்தென்னவுமாயிராநின்றது. ஸர்வஸாமயத்தாலே "இன்னது" என்று நிஸ்சயிக்கலாயிருக்கிறதில்லை. எங்களிற்காட்டில் இவ்விஷயத்திலே அவகாஹித்த நீ சொல்லிக்காணாய் என்ன, [ஈட்டியவெண்ணெயுண்டான் திருமூக்கு] - உருவுவெளிப்பாட்டாலே வெண்ணெய்நாற்றமும் ப்ரத்யக்ஷிக்கிறதாயிற்று இவளுக்கு. ஆஸ்ரிதஸ்பர்ஸமுள்ளதொரு த்ரவ்யத்தாலல்லது செல்லாததாய், களவிலே இழந்து பிடியுண்டால் அத்தை இல்லை செய்கைக்காக முகத்திலே வெண்ணெயைப் பூசுமே;அவ்வெண்ணெய் நாற்றமும் ப்ரத்யக்ஷிக்கிறபடி. நாங்கள் காண்கிறிலோமீயென்ன: [எனதாவியுள்ளே] - என் ஹ்ருதயத்தினுள்ளே. [மாட்டியவல்விளக்கு இத்யாதி] - சுடர் வெட்டின பெருவிளக்கின் ஒளியையுடைத்தாய், வலிதாய் நலியாநின்றது. "ஏற்றிய பெருவிளக்கு" என்று ஒருதமிழன் சொன்னான். விளக்குக்குப் பெருமையாவது - இவளாற்றாமை கண்டாலும் ப்ரஜ்வலியாநிற்கை: வலிமையாவது - க்ஷணிகமாய் ப்ராதேஸிகமாயிருக்கிறதொழிந்து ஏகரூபமாய் எங்குமாய் நின்றுநலிகை.

ஈடு.—இரண்டாம்பாட்டு. "இரண்டுக்கும் நடுவே நாம்இருக்க இவை முற்படுகையாவதேன்? அத்தனையோ நம்மூக்குவலி?" என்று திருமூக்கிலழகு நலிகிறபடியைச் சொல்லுகிறது.

[ஆட்டியும் தூற்றியும்] - ஆட்டுகையாவது - தாந்தாம் பழிசொல்லி அலைக்கை. தூற்றுகையாவது - பிறருமறியப் பழிசொல்லுகை. "அச்சமுறுத்தி மீட்கலாமோ?" என்று ஒருகால் அலைக்கை ப்ராப்தமிறே; அங்ஙனன்றிக்கே [நின்று] - முன்புசெய்ததுக்கு ஒரு ப்ரயோஜநம் காணுதிருக்கச்செய்தேயும் விடாதேநின்று. [அன்னைமீர் என்னை நீர் நலிந்தேன்] - ஹிதத்திலே நடக்கும் பித்ராதிகளைப்போலே என் ப்ரியத்திலே நடக்கும் நீங்கள் என்னை நலிகிறதேன்? என்னுகப்பே பேருக நினைத்திருக்கக்கடவ நீங்கள் நலிகிறதேன்? [நலிந்தேன்] - அந்த உருவுவெளிப்பாட்டைப் பரிகரிக்கலாமென்றே, என்னை மீட்கலாமென்றே? ஒருப்ரயோஜநமில்லாததிலேயும் ப்ரவர்த்திக்கக்கடவதோ? அவனுடைய மூக்குவலி இருக்கிறபடியையும் அறிந்து நீங்கள் என்செய்யப்படுகிறிகோள்? 'நாங்கள் சொல்லுகிற ஹிதவசநத்துக்கு ஒருப்ரயோஜன மில்லையாகில், என்செய்தால் ப்ரயோஜநமுண்டு?' என்ன- [மாட்டுயர் இத்யாதி] - வல்லிகோளாகில் இஸ்ஸம்ஶயத்தை அறுத்துத் தாருங்கோள். மாடு - அருகு. கண்ணருகென்றபடி. ஒருகடலருகே அக்கடலூற்றே தாரகமாக வளருகிறதொரு கொடிபோலேயாயிற்று, திருக்கண்களருகே திருமூக்கிருக்கிறபடி. [உயர்] - "உந்நஸம்" (உந்நஸம்) என்கிறபடியே. [கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ] - ஒழுகுநீட்சியாலே கொடியென்னவுமாய், ஶ்ரத்தை மாறுமையாலே கொழுந்தென்னவுமாய் இராநின்றது. அறியேன் என்கிறது - "இன்னது" என்று நிஶ்சயிக்க அரிதாகையாலே: ஸர்வதா ஸாம்யத்தாலே. [ஈட்டிய இத்யாதி] - எங்களுக்கு அறியப்போமோ? இதிலே உட்புகநின்று அநுபவிக்கிற நீ பின்னைச் சொல்லாய்என்ன, [ஈட்டிய இத்யாதி] - அநுகூலஸ்பர்ஶமுள்ள

---

*இரண்டாம்பாட்டு—ஆட்டியும் இத்யாதி. "திருமூக்கு" என்றத்தைப்பற்ற ரஸோக்தியாக அவதாரிகை - இரண்டுக்கும் இத்யாதி. மூக்குவலி என்றது - மூச்சென்று ரஸோக்தி; மூக்கென்று பேரையுடைய நம்முடைய வலியென்று ஸ்வஹாவார்த்தம்.*

*"நின்று" என்றதுக்குஹாவம் - அச்சமுறுத்தி இத்யாதி. உத்தார்த்த விவரணம் - முன்பு செய்ததுக்கு இத்யாதி. இத்தனைநாளும் தோழிமாரை ப்ரியபரைகளாகவும், தாய்மாரை ஹிதபரைகளாகவும் சொல்லிக்கொடு போந்தாள்; இப்போது பித்ரபேக்ஷயா தாய்மாரை ப்ரியபரைகளென்கிறுள். ஹிதத்திலே இத்யாதி. "நீர்" என்றதுக்குஹாவம் - என்உகப்பே இத்யாதி. "என்" என்கிறது - கோடித்வயாவலம்பியாகையாலே, உங்களுக்கு நலிகைக்கு ஒருப்ரயோஜந மில்லையென்று ஹாவாந்தரம் - அந்தஉருவு இத்யாதி. விவரணம் - அவனுடைய இத்யாதி. "வல்லியோ கொழுந்தோ அறியேன்" என்று அவர்கள்முன்னே ஸம்ஶயிக்கிறதுக்குக் கருத்து - இத்தை நிஶ்சயித்துத் தரவேணுமென்றுகையாலே, அத்தைப்ரஶ்ந ப்ரதிவசநரூபேண அருளிச்செய்கிறுர் - நாங்கள் இத்யாதி வாச்யத்வயத்தாலே. தாருங்கோள்-ஸம்ஶயத்தை அறுத்துத்தருகை ப்ரயோஜநமென்றபடி. [illegible] "[illegible]" இதி. "வல்லியோகொழுந்தோ" என்கிற ஸம்ஶயத்துக்கு ஆபாதகப்ராப்தமேதென்ன - ஒழுகு இத்யாதி. ஒழுகுநீட்சி - ஶாஸ்த்ரஸித்தமான ஆகாரதைர்க்யம். நிஶ்சயிக்கப்போகாமைக்கு ஹேதுவேதென்ன - ஸர்வதா ஸாம்யத்தாலே என்று. "ஈட்டியவெண்ணெயுண்டான்" என்று விஶேஷித்ததுக்குஹாவம் - அநுகூலஸ்பர்ஶம் இத்யாதி. ஈட்டிய - திரட்டின. கொண்டி - களவு.*

த்ரவ்யத்தாலல்லது யரிக்கமாட்டாதே வெண்ணெய் களவுகாணப்புக்குக் கொண்டியிலே பிடியுண்டு, பின்பு அத்தை இல்லைசெய்கைக்காக முகத்திலே தடவிக்கொள்ளுமே; அவ் வெண்ணெயிலே முடைநாற்றமும் உருவுவெளிப்பாட்டிலே தோற்றுகிறதாயிற்று இவளுக்கு. அப்போதை முடைநாற்றம் உபலப்தமாம்படியாயிற்று உருவுவெளிப்பாட்டில் மெய். நீ சக்ஷுர்விஷயமாகச் சொல்லுகிற இது எங்களுக்குத் தெரிகிறதில்லையீ! என்ன, [எனதாவியுள்ளே] - என் ஹ்ருதயத்துக்குள்ளே. [மாட்டிய] - சுடர்வெட்டிய என்னுதல், ஏற்றிய என்னுதல். [வல்விளக்கின் சுடராய்]- (பெரிய விளக்கினொளியை யுடைத்தாய்) விரஹத்தால் அவியாத விளக்காயிற்று. " 'ஏற்றியபெருவிளக்கு' என்று ஒருதமிழன் இட்டுவைத்தான்" என்று அருளிச்செய்வர். [நிற்கும் வாலியதே] - வலிதாய்நின்று நலியாநிற்கும். தீபமாகிறதுதான் க்ஷணிகமுமாய் ப்ராதேஶிகமுமாயிறே யிருப்பது; இது அங்ஙனன்றிக்கே, எப்போதுமாய் எங்குமுண்டாய் இராநின்றது: பாதகத்வத்திலுறைப்பை அநுஸந்தித்துச் சொல்லுகிற வார்த்தையிறே இது. (மாட்டிய வாலியதான வல்விளக்கின்சுடராய் நிற்கும். வாலிமை - பெருமை. வன்மை - ஸ்த்தைர்யம்.) (௨)

## மூன்றாம் பாட்டு.

---

வாலியதோர்கனிகொல்!வினையாட்டியேன்வல்வினைகொல்!
கோலந்திரள்பவளக் கொழுந்துண்டங்கொலோவறியேன்
நீலநெடுமுகில்போல் திருமேனியம்மான்தொண்டைவாய்
ஏலுந்திசை[1]யுளெல்லாம் வந்துதோன்றுமெனின்னுயிர்க்கே.

ஆ.—(வாலியதோர்) - பக்வமாய் அம்ருதரஸமா யிருப்பதொரு கனியோ? அன்றியே, பாதகமாகையாலே ஸஹஜவிரஹவ்யஸநையாயிருந்த என்னுடைய மஹாபாபமோ? ஸௌந்தர்ய ஸாரஸமுதாயமான பவளத்தினுடைய கொழுவியதாயிருப்பதொரு முறியோ? அவையெல்லாமல்ல; நீல மஹாவலாஹக ரமணீய திவ்யரூபனானவனுடைய சாருதர பிம்ப ஸத்ருஶமான திருப்பவளம், ததீயதிவ்யரூப ஸௌந்தர்ய ஸஹக்ருதமாய்க்கொண்டு என்னை முடிக்கைக்காக எல்லாத்திக்குகளிலும் வந்து தோன்றாநின்றதென்கிறாள்.

முடைநாற்றம் இப்போது தோற்றுமோ? என்ன - அப்போதை இத்யாதி. உபலப்தமாம்படி - தோற்றும்படி. வன்மைக்கு அர்த்தம் - விரஹத்தால் இத்யாதி. இவ்விடத்திலே - "அல்பாக்நி, ப்ரபலாக்நிமேலிட்டால் அவியும்; இங்கு விரஹாக்நி ப்ரபலமாயிருக்கச்செய்தேயும் அவியாதவிளக்காயிற்று" என்று அருளிச்செய்வர். "ஏற்றிய" என்றதுக்கு ஸம்வாதமாக, தமிழன் நிர்வாஹம்-ஏற்றியபெருவிளக்கென்று இத்யாதி. "வல்விளக்கு" என்றும், "வாலியது" என்றும் சொல்லுகிற புநருக்திக்கு பேதம் அருளிச்செய்கிறார் - தீபம் இத்யாதி. எப்போதுமாய் என்றது - வன்மைக்கர்த்தம். எங்கும் என்றது- "வாலியது" என்றதுக்கு அர்த்தம். ஆக, வன்மைக்கு அர்த்தத்வயம். வாலியது - வலியதென்றபடி. எங்கும் உண்டாகக் கூடுமோவென்ன - பாதகத்வத்தில் இத்யாதி. (௨)

---

[1] 'திசைகளெல்லாம்' என்று பாடாந்தரம்.

ஒ.—மூன்றாம்பாட்டில், திருப்பவளத்திலழகு தன்னை நலிகிறபடியைச்சொல்லுகிறாள்: [வாலியதோர் கனிகொல்] - விலக்ஷணமாயிருப்பதொரு பழமோ? [கோலமென்று தொடங்கி]-அழகினுடைய திரளான பவளத்தினுடைய ப்ரதையையுடைய முறியோ? அறிகிறிலேன். [நீலநெடுமுகிலென்று மேனுக்கு]-கறுத்துப் பெருத்திருக்கிற மேகம்போலே இருக்கிற திருமேனியையுடைய ஸர்வேஶ்வரனுடைய அழகுக்குப் பகைத்தொடையாகத் தோற்றுகிற திருப்பவளமானது, பார்த்த பார்த்த திக்கெல்லாம் என்னுடைய நல்ஜீவனை முடிக்கைக்காக வந்து தோற்றாநின்றது.

ப.—அநந்தரம், ஶ்யாமளமான வடிவுக்கு பாஹ்ரமான அதர ஶோபையானது பார்த்தபார்த்தஇடமெங்கும் தோன்றாநின்றதென்கிறாள்.

வாலியது - (போதுசெய்யாத) நன்மையையுடைத்தாய், ஓர் - (மென்மையாலும் நிறத்தாலும் இனிமையாலும்) அத்விதீயமாயிருப்பதொரு, கனிகொல் - பழமென்னலாயிருக்கிறதோ ? வினையாட்டியேன் - (இப்பலத்தை அப்போதே அநுபவிக்கப் பெறாத) பாபத்தையுடைய என்னுடைய, வல் - (அநுபவித்துக்) கழிக்கஅரிய, வினைகொல் - பாபம் ஒருவடிவுகொண்டதாயிருக்கிறதோ? கோலம் - ஸௌந்தர்ய ஸௌலப்ய ஸௌகுமார்ய ஸாரஸ்யாதிகள், திரள் - திரண்டதொரு, பவளம் - பவளத்தினுடைய, கொழும் - கொழுவிதான, துண்டங்கொலோ - துண்டமென்னலாயிருக்கிறதோ ? அறியேன் - (இன்னதென்று நிர்த்தரித்து) அறியலாயிருக்கிறதில்லை; நீலம் - ஶ்யாமளமாய், நெடு — பெருத்த, முகில்போல் - மேகம்போலே, திருமேனி - அழகையுடையனை, அம்மான் - ஸ்வாமியுடைய, தொண்டை — தொண்டைப்பழத்தின் நிறத்தையுடைத்தான, வாய் - திருவதரமானது, ஏலும் - ஏன்றுகொண்டுபார்த்த, திசையுளெல்லாம் - திக்கெல்லாம், என் - என், இன் - இனிய, உயிர்க்கு - உயிரைநோக்கி, வந்து - வந்து, தோன்றும் - தோன்றாநின்றது.

இ.—மூன்றாம்பாட்டில், அந்தவல்லி கொழுந்துவிட்டுப் பூத்துப் பழுத்த பழமிருக்கிறபடி. திருப்பவளத்திலழகு நலிகிறபடியைச் சொல்லுகிறாள். [வாலியதோர் கனிகொல்] - பழங்கள் காலஞ்சென்றவாறே செவ்வி அழியக்கடவதாயிருக்க, ஏகரூபமாய் அத்விதீயமாயிருக்கிற பழமோ? அதினுடையபோக்யத்தை போதுசெய்ததாகிலிறே என் ஆற்றாமை போதுசெய்வது. [வினையாட்டியேன்] - போக்யவஸ்து வாயசமாம்படி பாபத்தைப்பண்ணினேன். அம்ருதம் நஞ்சாம்படி பாபத்தைப்பண்ணினேன். [வல்வினைகொல்]- அநுபவவிநாஶ்யமல்லாத பாபமோ? நான் பண்ணினபாபம் திருவதரமாய்க்கொண்டு குடியேறிற்றோ ? இத்தலையாற்பண்ணின பாபம் நிக்ரஹரூபேண அவன் பக்கலிலே கிடந்திறே பலப்ரதமாவது ? [கோலமித்யாதி] - அழகினுடைய திரளான பவளத்தின் ப்ரதையையுடைய முறியோ? முறி என்கிறது - முறிந்தபோதை அகவாயில் நெய்ப்புத் தோற்றியிருக்கை. [அறியேன்] - நிர்ணயிக்கமாட்டுகிறிலேன். [நீலமித்யாதி] - திருவதரத்துக்குக் கூட்டுப்படை சொல்லுகிறது. கறுத்து அபரிச்சேத்யமான முகில்போலேயிருக்கிற நிறத்தையுடைய ஸர்வேஶ்வரனுடைய, தொண்டைபோலேயிருக்கிற திருவதரம். திருமேனிக்கும் தனக்குமுண்டான பகை என்னை நலிகைக்குஉறுப்பாயிற்று. அப்பப்பார்த்தாலோ? என்னில், [ஏலுமித்யாதி]-பார்த்த திக்கெல்லாம் வந்து தோற்றாநின்றது. எதுக்காகவென்னில்,-என்னுடைய நற்சீவனைக் கொள்ளுகைக்காக.

ஈடு.—மூன்றாம்பாட்டு. அது தன்முகக்குவலிகாட்ட நாம் பேசாதேயிருந்தால், ''அத்தனையோ இதின்வாய்வலி?'' என்று நம்மை ஏசுவர்களென்று திருப்பவளத்திலழகு வந்து நலிகிறபடியை அருளிச்செய்கிறார்.

[வாலியதோர் கனிகொல்] - முன்பு பிஞ்சாய், அநந்தரம் பக்வமாய், பின்பு அநுபவயோக்யமன்றிக்கே போவன சிலபலங்களுண்டிறே; அங்ஙனன்றிக்கே, என்றுமொக்க ஏகரூபமாயிருப்பதொரு கனியோ? அத்தலையில் போக்யதை போதுசெய்யாமையாலே இத்தலையில் ஆற்றாமையும் போதுசெய்யாதே. [வினையாட்டியேன் வல்வினைகொல்] - போக்யவஸ்து பாதகமாயிற்று, போக்தாக்கள்பண்ணின பாபத்தாலேயிறே : அம்ருதமே விஷமாம்படியான பாபத்தைப் பண்ணினேன். பாபத்தைப்பண்ணின என்னுடைய பாபமானது பக்வமாய்க்கொண்டு அங்கே குடியேறிற்றோ? அங்கேகிடந்திறே இங்கு அநுபவிப்பிப்பது. பகவத்விஷயத்தில் நிக்ரஹரூபேண கிடந்திறே இங்கு அநுபவிப்பிப்பது. க்ரியையாகையாலே செய்தபோதே நசித்துப்போமே. இவன்பண்ணின பாபத்துக்கு, தானே ஸ்வதந்த்ரமாய்நின்று பலப்ரதமாகைக்கு ப்ராப்தியில்லையே. [வல்வினைகொல்]-அநுபவ விநாச்யமாகாதபடியான பாபமாயிற்று. [கோலந்திரள் இத்யாதி]-அழகுதிரண்டிருந்துள்ள பவளத்தினுடைய ஸாரத்தையையுடைத்தான முறியோ? அறிகிறிலேன். முறியோ என்கிறது - புழுதி புடைத்திராமைக்கு; முறித்தவாயானது ஒளியுண்டாய் நெய்த்திருக்குமிறே. [நீலம் இத்யாதி] - இதுதான் என்றுமுண்டாயிருக்கச்செய்தே, இதுக்குமுன்பு பாதகமாயிற்றில்லையிறே; கூட்டுப்படைநின்றவாறே நலியாநின்றதாயிற்று. நீலமாய் போக்யதை அளவிறந்திருந்துள்ள முகில்போன்ற வடிவையுடைய ஸர்வேச்வரனுடைய. [தொண்டைவாய்] - தொண்டை - கோவை. கோவைப்பழம்போலே கனிந்து நெய்த்திறே திருப்பவளந்தான்இருப்பது. தன்னில்தான்உண்டானபகை பார்த்திருக்கிறதில்லையாயிற்று, இவளை

---

*மூன்றாம்பாட்டு.—வாலியதோர் இத்யாதி. ''தொண்டைவாய்'' என்றத்தைப்பற்ற ரஸோக்தியாக அவதாரிகை - அதுதன் இத்யாதி.*

''வாலியதோர்கனிகொல்''-ஏகரூபமாயிருப்பதொரு கனியோ என்று பதார்த்தம். வாலியது - வலியது. வன்மையாவது - ஸ்த்தைர்யம். அதாவது - ஏகரூபமென்றபடி. ''வாலியதோர்கனி'' என்றதுக்கு வ்யாவர்த்யம் - முன்புபிஞ்சாய் இத்யாதி. சிலபலங்கள் என்றது - எட்டிப்பழம் முதலானவை. இதுக்கு ஹார்த்தபாவம் - அத்தலை இத்யாதி. போதுசெய்கை - குருளிதமாகை. ''வல்வினை'' என்கைக்கு ஹேதுவேதென்ன - போக்யவஸ்து இத்யாதி. விவரணம் - அம்ருதமே இத்யாதி. பதார்த்தம் - பாபத்தை இத்யாதி. பக்வமாய் - பலோந்முகமாய் என்றபடி. அங்கே குடியேறிற்றோ-அவனிடத்திலே அதரமாகத் திரண்டதோ என்றபடி. தன்னாற்றாமையாலே சொன்னவளவேயன்று, வாஸ்தவமான அர்த்தமும் அதுவேயென்கிறார் - அங்கேகிடந்து இத்யாதி. விவரணம்- பகவத்விஷயத்தில் இத்யாதி. நிக்ரஹரூபேண கிடந்து அநுபவிப்பிக்கவேணுமோ, தானே ஸ்வதந்த்ரமாக அநுபவிப்பித்தாலோ? என்ன - க்ரியையாகையாலே இத்யாதி. அசேதநமாகையாலும் மாட்டாதென்று பரிஹாராந்தரம் - இவன்பண்ணின இத்யாதி. வன்மைக்கு அர்த்தம் - அநுபவ இத்யாதி. துண்டம் - முறி. ஸாரத்தை - ஸ்நிக்தகதை. துண்டம் புழுதிபுடைத்திராதோ? என்ன - முறித்தவாய் இத்யாதி. நெய்த்திருக்கை - ஸ்நிக்தமாய்ப்பளபளத்திருக்கை. இதுதான் என்றது - திருப்பவளத்திலழகை. கூட்டுப்படையாவது - திருமேனியிலழகு. திருமேனியில் கறுப்பும் பரபாகமாய் ஸ்பர்த்தியாதே, கூடி நலியக்கூடுமோ? என்ன - தன்னில்தான் இத்யாதி. நலிவில்இரண்டும் ப்ரதானமோ? என்ன - இரண்டுக்கும் இத்யாதி. ஒன்றேப்ரதானமென்றபடி. அதாவது - திருமுகத்திலழகைச்சொல்லுகிற ப்ரகரணமாகையாலே - திருவதரமே ப்ரதானமாய், திருமேனியழகு கூட்டுப்

நலிகிறவிடத்தில், இரண்டுக்கும் சேர வன்னியமில்லையிறே. (வன்னியம் - ஸ்வாதந்த்ர்யம். ஒருவன்பக்கல் இருவர் பகையானுல், இருவரும் ஸ்வதந்த்ரரானுல் அவனை வெல்ல வொண்ணுது; ஆகையாலே, இருவரும் ஒருமிடருய் நலிவர்கள்; அப்படியே இங்கும்.) அவை நலிந்துகொடு தோற்றுநின்றதாகில் தப்பப்பார்த்தாலோ? என்ன; வாய்வலி தப்ப லாயோ இருக்கிற தென்கிருள் மேல். [ஏலும்திசையுளேல்லாம்] - நானும் இவைநலியாத விடந்தேடித் தப்ப விரகுபாராநின்றேன்: அவ்வோவிடங்களிலேவந்து தோன்றுநின்றது. பார்த்தபார்த்தவிடமெல்லாம் தானேயாய் இராநின்றது. தோன்றுகிறதுக்குக் கருத்தேன்? என்னில்,—[என்னின்னுயிர்க்கே] - என்னுடைய நற்சீவனை முடிக்கைக்காக. (ங)

---

## நான்காம் பாட்டு.

---

இன்னுயிர்க்கேழையர்மேல் வளையுமிணை நீலவிற்கோல்?
மன்னியசீர்மதனன் கருப்புச்சிலைகோல்? மதனன்
தன்னுயிர்த்தாதை கண்ணபெருமான்புருவமவையே
என்னுயிர்மேலனவாய் அடுகின்றனவென்றுநின்றே.

*ஆ.—(இன்னுயிர்க்கு) - பரமபுருஷ ஸந்தர்ஶநத்திலே லாலஸமான காமிநீ ஜநத்தினுடைய ப்ராணனையே லக்ஷ்யமாக உடையவையாய், நம்ரமாய் நீலமாயிருப்பன இரண்டுவிற்களோ? அன்றிக்கே, மதநனுடைய ஸௌந்தர்யநிகேதநமான இக்ஷு கோதண்டமோ? இவையெல்லாமல்ல; ஸௌந்தர்யஸாரனை மதநனுக்கு ஜந்மபூமியான புண்டரீகவிலோசநனுடைய புருவங்களே: இவை என்னுடைய ப்ராணன்களை எப்போதும் பாதிக்கிறன என்கிருள்.*

*ஒ.—நாலாம்பாட்டில், கீழ்ச்சொன்ன அழகுகள் நலிந்த நலிவுகளெல்லாம் ஸாகமென்னலாம்படி விலக்ஷணமான இரண்டு திருப்புருவங்களும் என்னை மிகவும் நலியாநின்றன என்கிருள்.*

*[இன்னுயிர்க்கென்று தொடங்கி] - நல்லஜீவனைக் கொள்கைக்கு அபலைகள் பக்கலிலேவளைகிற இரண்டு நீலமான விற்களோ? அங்ஙனன்றாகாதே வடிவோடேநின்ற அழகையுடைய காமனுடைய கருப்புவில்லோ? [மதனனென்று மேலுக்கு] - லோகத்தையடையப் பிச்சேற்றும் அழகையுடைய காமனுக்குங்கூட உத்பாதகனையுள்ள க்ருஷ்ணனுடைய புருவங்களோ? என்ப்ராணனையே கணிசித்து என்றும் நின்று பாதியாநின்றன.*

*ப.—அநந்தரம், காமோத்பாதகனாய் ஸாக்ஷாந்மன்மதமந்மதனை க்ருஷ்ணனுடைய திருப்புருவங்களானவை என் ஆத்மாவை நலியாநின்றன என்கிருள்.*

---

படை என்றபடி. சேரவன்னியமில்லை - ஸமப்ராதவமில்லை என்றபடி. மேலுக்கு அவதாரிகை - அவை நலிந்து இத்யாதி. "எல்லாம்" என்றதுக்கு ஸாவம் - நானும் இத்யாதி வாக்யத்வயம். விவரணம் - பார்த்தபார்த்த இத்யாதி. ஏலும்திசையுளேல்லாம் - தப்பயோக்யமான இடங்களெல்லாம். ஏலும் - யோக்யமான. திசை - இடம், திக்காதல். முடிக்கைக்காக என்றது - தாத்பர்யார்த்தம். உயிர்க்காகவந்ததென்று ஸப்தார்த்தம். (ங)

ஸ்யிதிமநங்களைச்சொல்லுதல். இப்படி துஃகங்களைப்பண்ணுவியாநின்றாய். [இவையென்ன சுண்டாயங்களே] - உனக்கு லீலையாயிராநின்றது, எங்களுக்கு க்லேஶாவஹமாயிராநின்றது.

## எட்டாம் பா

என்னசுண்டாயங்களால்†நின்றிட்டாய்என்னையாளுங்கண்ணா ?
இன்னதோர்தன்மையையென்றுஉன்னையாவர்க்குந்தேற்றரியை
முன்னியமூவுலகுமவையாய்அவற்றைப்படைத்தும்
பின்னும்உள்ளாய்!புறத்தாய் இவையென்ன இயற்கைகளே.

ஆ.—(என்னசுண்டாயங்கள்.) - என்னலீலாயுக்தனாய் யடிமைகொள்ளுகிற க்ருஷ்ணனே? இன்னதொரு ஸ்வபாவமென்று ஜ்ஞாநாதிகர்க்கும் அறியவொண்ணாத நீ, பழையதான மூவுலகுக்குங்கடவையாய் அவற்றை ஸ்ருஷ்டித்து, பின்னையும்அந்தர்ப்பஹிஶ்ச வ்யாபித்துநின்றாய். இவையென்னஆஶ்சர்யம்! என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், ஸகலஜகத்தையும் ஸ்ருஷ்டித்து அந்தர்வஹிஶ்ச வ்யாபித்து இப்படி நிர்வஹியாநின்றுவைத்து ஞார்ஜ்ஜேயனுபிருக்கிறஇது என்ன ஆஶ்சர்யம்! என்கிறார்.

ப.—அநந்தரம், அதிஶயிதஜ்ஞாநர்க்கும் அவபோதிக்கைக்குஅரியையாய்க் கொண்டு ஸகலஜகத்துக்கும் ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணாநின்றாய்; இவையென்ன செய்திகளா யிருக்கிறதென்கிறார்.

என்னசுண்டாயங்களால் - ஸ்வார்த்தமாயுள்ள என்ன லீலாவ்யாபாரங்களாலே, எங்ஙனே - என்ன ப்ரகாரத்திலே, நின்றிட்டாய் - நின்றாய், என்கண்ணா - எனக்கு ஸுலபனான க்ருஷ்ணனே? இன்னதோர் - இன்னபடிப்பட்ட, தன்மையை-ஸ்வபாவத்தை யுடையை, என்று - , உன்னை - அபரிச்சிந்நஸ்வபாவனான வுன்னை, யாவர்க்கும் - அதிஶயித ஜ்ஞாநராயிருப்பார்க்கும், தேற்ற - நிர்ணயித்துக்காட்ட, அரியை - அரியையா யிருப்புதி; முன்னிய - ப்ரவாஹாநாதியாயிருப்பதாய், மூவுலகும் - க்ருதகாதிபேதத்தை யுடைத்தான மூன்றுலோகத்தையும், அவையாய் - ததாத்மகனாய், அவற்றை - , படைத்து - ஸ்ருஷ்டித்து, பின்னும் - அதுக்கு மேலே, உள் - அநுப்ரவேஶ நிபந்தநமான அந்தர்வ்யாப்தியையும், புறம் - ஆதாரத்வ நிபந்தநமான பஹிர்வ்யாப்தியையும், ஆய் - உடையை யாகாநின்றாய்; இவை - , என்ன - , இயற்கைகள் - ஸ்வாபாவிக வ்ருத்திகளாயிருக்கிறன.

இ—எட்டாம்பாட்டில், ஸகல ஜகத்தையும் ஸ்ருஷ்டித்து வ்யாபித்து நிர்வஹியா நின்றுவைத்து ஞார்ஜ்ஜேயனுயிருக்கிறஇது என்ன ஸ்வபாவம்! என்கிறார்.

---

லீலை இத்யாதிவாக்யத்வயம். சுண்டாயம் - லீலையும், ஸ்வார்த்தப்ரவ்ருத்தியும். 'துயரங்கள்செய்யுங் கண்ணா, சுடர்நீள்முடியாய் - துயரம்செய்மானங்களாய்' என்றுதொடங்கி, 'என்னசுண்டாயங்கள் - அருளாய்' இத்யந்வயஃ (எ)

---

† 'எங்ஙனே நின்றிட்டாய்' என்று உரைக்கும் இருபத்துநாலாயிரத்துக்கும் பாடம்.

[என்னசுண்டாயங்களால் எங்ஙனே நின்றிட்டாய்]-என்னலீலைகளையுடைமையாய்க்கொண்டு என்ன ப்ரகாரத்தாலே நின்றாய்! லோகத்திற்காண்கிற லீலையிற்காட்டில் லீலையும் வ்யாவ்ருத்தமாயிராநின்றதீ? [என்கண்ணா] - எனக்குஸுலபனான க்ருஷ்ணனே! [இன்னதோரித்யாதி] – இன்னபடிப்பட்ட ஸ்வபாவத்தை யுடையையாய்க்கொண்டு இன்னப்ரகாரத்தாலே நின்றாயென்று, ஸர்வகாரணபூதனாயிருந்துள்ள உன்னை எத்தனையேனும் அதிசயித ஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளுக்குங்கூட அறியவொண்ணாதிருந்தி. "யந்நாயம்ஸமவாநு ப்ரஹ்மா ஜாநாதிவாஷெஷாத்தஹ". [முன்னியமூவுலகுமவையாய்] - ப்ரவாஹரூபேண பழையதாய்ப் போருகிற ஸகலலோகங்களையும் உடையையாய். மூவுலகங்கள் - க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதகம்; த்ரிவித சேதநரென்றுமாம். [அவற்றைப்படைத்து] - லோகங்களானபோது, அவற்றை ஸ்ருஷ்டித்தென்னக் கடவது; த்ரிவித சேதநரானபோது, ஜ்ஞாநவிகாஸவிஶேஷங்களாகக்கடவது. [பின்னும் உள்ளாய்புறத்தாய்] - இதுக்குமேலே, "அந்தர்பஹிஶ்ச" என்கிறபடியே வ்யாபித்து நிற்கிறவனே! [இவையென்னஇயற்கைகளே] - இவை யென்ன விலக்ஷணஸ்வபாவம்!

ஈடு.—எட்டாம்பாட்டு. ஸகலஜகத்தையும் ஸ்ருஷ்டித்து அந்தர்பஹிஶ்ச வ்யாபித்து இப்படி நிர்வஹித்துவைத்து துர்ஜ்ஞேயனாயிருக்கிற இது என்னஆஶ்சர்யம்

[என்னவித்யாதி] - என்னலீலைகளையுடையையாய் நிற்கிறாய், என்னை யடிமை கொள்ளுகிற க்ருஷ்ணனே! [இன்னதோரித்யாதி] - இன்னபடிப்பட்ட ஸ்வபாவத்தை யுடையையென்று, ஸர்வகாரணபூதனான வுன்னை, எத்தனையேனும் அதிஶயிதஜ்ஞாநரானவர்களாலும் அறியவொண்ணாதபடி நிற்பதி: "ப்ரஹ்மாபிநவேத்த்யல்பம்ப்ரயத்நதஃ" (ப்ரஹ்மாபிநவேத்த்யல்பம்ப்ரயத்நதஃ) என்கிறபடியே. [முன்னியமூவுலகுமவையாய்] - ப்ரவாஹரூபத்தாலே பழையதாய்ப் போருகிற மூவுலகுக்கும் கடவையாய். த்ரிவிதசேதநரென்னுதல், த்ரைலோக்யமென்னுதல். [அவற்றைப்படைத்து] - விபூதியானபோது, அவற்றையுண்டாக்கி யென்கிறது; சேதநரானபோது, அவர்களுக்கு ஜ்ஞாநவிகாஸத்தை யுண்டாக்கி யென்கிறது. [பின்னும் உள்ளாய்புறத்தாய்] - * அந்தர்பஹிஶ்ச வ்யாபித்திருக்கிறவனே! [இவையென்ன இயற்கைகளே] - உனக்கு இவைதான் லீலையாயிராநின்றது, எங்களுக்கு இவைதான் ஆஶ்சர்யமா யிராநின்றது. (அ)

---

எட்டாம்பாட்டு.—என்னசுண்டாயங்கள் இத்யாதி. "அவற்றைப்படைத்துப் பின்னும் உள்ளாய்- இன்னதோர் தன்மையையென்று உன்னை யாவர்க்கும் தேற்றரியை;என்னஇயற்கைகளே!" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - ஸகலஜகத்தையும் இத்யாதி.

சுண்டாயம் - லீலை. தேற்றரியை - தெளிகைக்கு ஶக்யனல்லாதவனே. அறியவொண்ணாமைக்கு ப்ரமாணம் - ப்ரஹ்மாபி இத்யாதி. "முன்னிய" என்றது - ப்ரவாஹரூபேண நித்யமாயென்றபடி. ஶப்தார்த்தம் - பரவாஹரூபத்தாலே இத்யாதி. இயற்கை - செய்தி. அதாவது வ்யாபாரம். 'முன்னிய' என்றுதொடங்கி, 'புறத்தாய் - என்ன சுண்டாயங்களால் நின்றிட்டாய் என்னையாளும் கண்ணா, இன்னதோர் தன்மையையென்று உன்னை யாவர்க்கும் தேற்றரியை - இவையென்ன இயற்கைகளே' இத்யந்வயஃ. "தேற்றரியை" என்றது - தேற்றரியனாய் நிற்புதி யென்றபடி. (அ)

## ஒன்பதாம் பாட்டு.

என்னவியற்கைகளாலெங்ஙனேநின்றிட்டாயென்கண்ணா !
துன்னுகரசரணமுதலாக எல்லாவுறுப்பும்
உன்னுசுவையொளி ஊறொலிநாற்றம்முற்றும்நீயே
உன்னையுணரவுறில்உலப்பில்லைநுணுக்கங்களே.

ஆ.—(என்னவியற்கைகள்.)- என்ன ஸ்வபாவங்களையுடையனாய் எந்த ஆகாரத்திலே நிற்கிறாய்? எனக்கு ஸுலபனான க்ருஷ்ணனே! நெருங்கின கரசரணம் முதலான எல்லாவுறுப்பும் - அவயவங்களுக்கும், ரஸம், ரூபம், ஸ்பர்சம், சப்தம், கந்தம் இவையெல்லாவற்றுக்கும் கடவையான உன்னை அநுஸந்திக்கப்புக்கால் உன்னுடைய வைலக்ஷண்யத்துக்கு முடிவில்லை யென்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஜ்ஞாநேந்த்ரியங்களும் கர்மேந்த்ரியங்களும் சப்தாதி விஷயங்களும் அவனுக்கு விபூதியாயிருக்கிற இருப்பை அநுஸந்திக்கிறார். [உன்னையுணரவுறிலுலப்பில்லை நுணுக்கங்களே] - உன்னை அநுஸந்திக்கப்புகில் உன்னுடைய வைலக்ஷண்யத்துக்கு முடிவில்லை.

ப.—அநந்தரம், இப்படி அறியவரியையாயிருக்கைக்கு அடியான அதிஸௌக்ஷ்ம்யத்தாலே அக்காரணங்களோடு விஷயங்களோடுவாசியற வ்யாபரித்து நிற்கிற நிலை என்னாயிருக்கிறது? என்கிறார்.

(உன்னுடைய ஆகாரங்களைக்காட்டி), என்னை -, ஆளும் - அடிமைகொள்ளுகிற, கண்ணா - க்ருஷ்ணனே! (ஒருபடியென்று நிஷ்கர்ஷிக்கவொண்ணாதபடி), என்ன இயற்கைகளால் - என்னப்ரகாரங்களாலே, நின்றிட்டாய் - நின்றருளினாய்? துன்னு - (சரீரத்திலே) செறியக்கடவதாய், கரசரணம்முதலாக - கரசரணாதிகளான கர்மேந்த்ரியங்களும் ஜ்ஞாநேந்த்ரியங்களுமான, எல்லாவுறுப்பும் - எல்லாக்கரணங்களும், உன்னு - மநஸ்ஸோடே ப்ரவணமாய்த்யோகிக்கும்படியான, சுவையொளியூறொலிநாற்றம் - ரஸ ரூப ஸ்பர்ச சப்த கந்தங்களாகிற, முற்றும் - ஸகலவிஷயங்களும், நீயே - நீயேயாம்படி, உன்னை - (அவற்றுக்கு அந்தராத்மாவான) உன்னை, உணரவுறில் - நிரூபிக்கநினைக்கில், ("அணீயஸாம் - அணீயாம்ஸம்" என்கிறபடியே), நுணுக்கங்கள் - ஸௌக்ஷ்ம்யங்கள், உலப்பு - முடிவு, இல்லை - இல்லையாயிருக்கும்.

இ.—ஒன்பதாம்பாட்டில், ஜ்ஞாநேந்த்ரிய கர்மேந்த்ரியங்களும் சப்தாதிகளும் அவனுக்கு விபூதியாயிருக்கிற இருப்பை அநுஸந்திக்கிறார்.

[என்னஇயற்கைகளால் நின்றிட்டாய்] - என்ன ஸ்வபாவங்களையுடையையாய்க்கொண்டு நிற்கிறாய்? [என்னையாளுங்கண்ணா] - என்னை அடிமைகொள்ளுகிற க்ருஷ்ணனே! [துன்னுஇத்யாதி] - நெருங்கப்பட்டிருந்துள்ள கரசரணாதிகளும் ச்ரோத்ராதிகளுமான எல்லா இந்த்ரியங்களுமாய். [உன் இத்யாதி] - ஆசைப்படப்படுவதான சப்தாதிகளுக்கு நிர்வாஹகனானவனே! உன்னுகை - அநுஸந்திக்கை, ஆசைப்படுகை. ஒளி - ரூபப்ரகாசம். [உன்னை உணரவுறில்] - உன்னுடைய பெருமையையும் ஸௌக்ஷ்ம

தையையும் அநுஸந்திக்கப்புக்கால், உன்னுடைய வைலக்ஷண்யத்துக்கு முடிவில்லை. "அணீயாம்ஸமணீயஸாம்"

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. ஜ்ஞாநேந்த்ரியங்களும் கர்மேந்த்ரியங்களும் சப்தாதி விஷயங்களும் அவனுக்கு விபூதியாயிருக்கிற இருப்பை அநுஸந்திக்கிறார்.

[என்னவியற்கைகளால் எங்ஙனே நின்றிட்டாய் என்கண்ணா] - என்ன ஸ்வபாவங்களையுடையையாய்க்கொண்டுஎன்னப்ரகாரத்தாலே நிற்கிறாய்?எனக்குஸுலபனான க்ருஷ்ணனே! [துன்னு இத்யாதி] - நெருங்கியிருந்துள்ள கரசரணங்கள் தொடக்கமான எல்லாவவயவங்களுக்கும், அநுஸந்திக்கப்படுவதாய் ஆசைப்படப்படுவதாயிருந்துள்ள சப்தாதிகளுக்கும்கடவையாயிருந்தாய். [உன்னையுணரவுறில்] - உன்னையறியப்புகில். [உலப்பில்லைநுணுக்கங்களே] - உன் வைலக்ஷண்யங்களுக்கு முடிவில்லை. "**அணீயாம்ஸமணீயஸாம்**" (அணீயாம்ஸமணீயஸாம்) என்கிறபடியே, அசித்வஸ்துவை ஸூக்ஷ்ம ரூபதயா எங்கும்புக்கு வ்யாபித்திருக்கும் ஆத்மவஸ்து, இவ்விரண்டிலும் ஸூக்ஷ்மரூபேண வ்யாபித்திருப்புதி. (உன்னை நிரூபிக்கப்புகில் ஸௌக்ஷ்ம்யங்கள் முடிவில்லையாயிருக்கும். நுணுக்கம் - ஸௌக்ஷ்ம்யம்.) (௯)

---

## பத்தாம் பாட்டு.

---

இல்லைநுணுக்கங்களே இதனிற்பிறிதென்னும்வண்ணம்
தொல்லைநன்னூலிற்சொன்னவுருவும்அருவும்நீயே
அல்லித்துழாயலங்கல்அணிமார்ப!என்னச்சுதனே!
வல்லதோர்வண்ணஞ்சொன்னால் அதுவேயுனக்காம்வண்ணமே.

*ஆ.*—(இல்லை) - இதிற்காட்டில், பிறிது - வேறு ஸூக்ஷ்மமில்லையென்னும்படி பழையதான வேதாந்தத்திலேசொன்ன அசித்துக்கும் சித்துக்கும் நிர்வாஹகனானவனே! அல்லியையுடைய திருத்துழாய்மாலையாலே யலங்க்ருதமான அழகியமார்பையுடையையாய், இவ்வழகுக்கு ஒருநாளும்மொழிவில்லாதவனே! வேதங்களும் ஸநகாதி

---

ஒன்பதாம்பாட்டு.—என்ன இயற்கைகளால் இத்யாதி. "துன்னுகரசரணம்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை - ஜ்ஞாநேந்த்ரியங்களும் இத்யாதி.

இயற்கை - ஸ்வபாவம். உறுப்பு - அவயவம். "எல்லாவுறுப்பும்" என்று கரசரணங்களையொழிந்த சர்வஜ்ஞாநேந்த்ரியங்களைச்சொல்லுகிறது. "உன்னு" என்றதுக்கர்த்தம் - அநுஸந்திக்க இத்யாதி. "அநுஸந்திக்கப்படுவதாய்" என்றதின் விவரணம் - ஆசைப்படப்படுவதாயிருந்துள்ள என்று. ஊறு - ஸ்பர்சம். ஒளி - ரூபம். நுணுக்கம் - ஸூக்ஷ்மதையால் வந்த வைலக்ஷண்யம். வைலக்ஷண்யங்களேதென்ன - அணீயாம்ஸம் இத்யாதிவாக்யத்வயம். "நாராயணஸ்ஸர்வேஷாம ணீயாம்ஸமணீயஸாம் । ஸமஸ்தாநாம்மஹிஷ்டஞ்ச ஸர்வாத்மநாம்மஹீயஸாம்" இதி ஸ்ரீ விஷ்ணுபுராணே. (௩0)"ப்ரஶாஸிதாரம்ஸர்வேஷாமணீயாம்ஸமணீயஸாம் । ருக்மாபம் ஸ்வப்நதீகம்யம் வித்யாத்தம்புருஷம்பரம்" இதி மாநவே. (௧,௨௨) (௯)

யோகிகளும் உன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளைப் பேசப்புக்கால் பேசினஅம்ஸம் பேசிற்றுமித்தனைபோக்கி, பேசாததுக்கு அவதியில்லை. அதவா, உனக்கு நல்லாராய் உன் குணங்களிலே ஈடுபட்டிருப்பார், உன்னை ஏதேனும் ஒருபடி பேசினால் அதுவே யுனக்காம் ப்ரகாரமென்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், வேதைகஸமதிகம்யமாய் காரணமாய் அதிஸூக்ஷ்மமாயிருந்துள்ள சேதநாசேதநங்களை விபூதியாக உடையவனுடைய இருப்பை அநுஸந்திக்கிறார்.

[அல்லித்துழாய் அலங்கலணிமார்ப என்னச்சுதனே] - அல்லியையுடைய திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதமான அழகிய மார்பையுடையையாய் இங்ஙனே யிருக்கிற அழகுக்குஒருநாளுமொழிவில்லாதவனே! சேதநாசேதநங்களை விபூதியாகவுடையனாயிருக்கிற இருப்பு, இத்திருத்துழாய்மாலைப்போலே தகுதியா யிருக்குமென்று கருத்து. [வல்லதோர் வண்ணஞ்சொன்னாலதுவே யுனக்காம்வண்ணமே] - வேதங்களும் ஸநகாதிபரமயோகிகளும் உன்னுடைய ஸ்வரூபகுண விபூதிகளைப் பேசப்புக்கால் "யதோ வாசோ நிவர்த்தந்தே" என்னும்படியாலே உனக்குப்பேசின அம்ஸம்பேசிற்று மித்தனைபோக்கிப் பேசாததுக்கு அவதியில்லையென்று கருத்து. உனக்கு நல்லார் உன்குணங்களிலே யீடுபட்டிருப்பார், எத்தனையேனும்அளவில்லாதாரேயாகிலும், அவர்களேதேனும் ஒருபடி பேசினால் "நம்மை உள்ளபடியேகண்டு ஸத்ருஶமான பேச்சுப் பேசுகிறார்" என்றிறே உன்திருவுள்ளக் கருத்து.

ப.—அநந்தரம், நித்யமான வேதைகவேத்யமாயுள்ள ஸூக்ஷ்ம சிதசித்வஸ்துக்களை ப்ரகாரமாக வுடைய நீ, வாசாமகோசரமஹிமா என்கிறார்.

இதனில் - இதிற்காட்டில், பிறிது - வேறு, நுணுக்கங்கள் - ஸௌக்ஷ்ம்யம், இல்லை -, என்னும்வண்ணம் - என்னும்படி, தொல்லை - அநாதியாய், நல் - அபௌருஷேயத்வாதி குணயோகத்தையுடைத்தான, நூலில் - வேதஶாஸ்த்ரத்திலே, (அவ்யக்தாக்ஷராவஸ்த்தையிலும்அதிஸூக்ஷ்மமாக), சொன்ன - தமஶ்ஶப்தத்தாலேசொல்லப்பட்ட, உருவும் - அசித்தும், அருவும் - சித்தும், நீயே - "ஸதேவ" (ஸதேவ) என்கிறமர்யாதையாலே நீயேயானாய்; (இப்படிசிதசிச்சரீரியானவளவன்றியே), அல்லி - பூந்தாதையுடைத்தான, துழாயலங்கல் - திருத்துழாய்மாலையை, அணி - அலங்காரமாகவுடைய, மார்ப - திருமார்பையுடையனாய், என் -, அச்சுதனே - அப்ரச்யுதாகாரனான விலக்ஷணவிக்ரஹயுக்தனே! (இப்படியிருக்கிற வுன்னுடைய ஸர்வப்ரகாரவைலக்ஷண்யத்தை), வல்லதோர் வண்ணம்-வல்லப்ரகாரம், சொன்னால்-(வேதாதிகள்) சொன்னாலும், உனக்கு-, அதுவே-, வண்ணம் - ப்ரகாரம், ஆம் - ஆம்படி: (ஆஶ்ரிதஸுலபனாயிருப்புதி.)

இ.—பத்தாம்பாட்டில், வேதைகஸமதிகம்யமான காரணாவஸ்தையில் அதிஸூக்ஷ்மசேதநாசேதநங்களை விபூதியாகவுடையனாயிருக்கிறபடியை அநுஸந்திக்கிறார்.

[இல்லை நுணுக்கங்களே இதினில் பிறிதென்னும்வண்ணம்] - நுணுக்கங்கள் இனிற்பிறிதில்லை என்னும்படி. நுணுக்கங்கள் - ஸூக்ஷ்மபாவங்கள். விஷவிதீஶமாதத்வத்ரயங்களுடையவும் ஸூக்ஷ்மபாவங்களுக்கெல்லாம் எல்லைநிலமிறே, காரணாவஸ்தை. [தொல்லை நன்னூலிற்சொன்ன] - பழையதாய்ப் ப்ரமாணஶ்ரேஷ்டமான வேதத்திற்சொல்லுகிற அசேதநத்துக்கும், அதிற்காட்டில் ஸூக்ஷ்மமான சேதநபதார்த்

*தத்துக்கும் நிர்வாஹகன் நீயே. "ஸதேவஸோம்யேதமக்ரஆஸீத்" என்கிறபடியே நாமரூபங்களையிழந்து தமஶ்ஶப்தவாச்யமாய், "தத்வமஸி" என்கிறபடியே அவன்தன்னைச் சொல்லுகிற சொல்லாலே சொல்லலாம்படியிருக்கை. [அல்லியித்யாதி]- ஜகதாகாரனை நிலைபோலன்றியே, அஸாதாரண விக்ரஹயுக்தனுய்க்கொண்டு நித்ய விபூதியிலே ஒருபடிப்பட இருக்கும்இருப்பைச் சொல்லுகிறது. அல்லியையுடைத்தான திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதமான திருமார்பையுடையையாய், அவ்விருப்புக்கு ஒருநழுவுதலின்றியே இருக்கிறவனே! சேதநா சேதநயோமமும், திருத்துழாய் மாலைபோலே தகுதியாயிருக்குமென்கை. [வல்லதோரித்யாதி] - வேதங்களும் ஸநகாதிகளும்யதாபலம் பேசப்புக்கால், பேசினஅம்ஶம் உன்னைப்பேசிற்றுமத்தனையல்லது, "யதோவாசோநிவர்த்தந்தே" என்று சொல்லப்படுகிற உன்னை பரிச்சேதிக்க வொண்ணுதென்கை. எத்தனையேனும் தாழ்ந்தானொருவனுகிலும் அநந்யப்ரயோஜநனுகில், அவன் சொன்னவளவு உனக்களவாய், அவ்வருகில்லாதபடி இருக்கிறவனென்றுமாம்.*

ஈடு.—பத்தாம்பாட்டு. வேதைகஸமதிகம்யனுய்க்காரணமாய்அதிஸூக்ஷ்மமாயிருந்துள்ள சேதநாசேதநங்களை விபூதியாகவுடையனு யிருக்கிறபடியை யருளிச்செய்கிறார்.

[இல்லைநுணுக்கமித்யாதி] - இதிற்காட்டில் வேறு ஸூக்ஷ்மமாயிருப்பதில்லையேன்னும்படி. அதாவது - இவற்றுக்கு "தனக்கு" என்ன ஒருநாமரூபங்களின்றிக்கே ப்ரஹ்மத்தினுடைய நாமரூபங்களையிட்டு வ்யவஹரிக்கவேண்டும்படி, காரணுவஸ்த்தமாயிருக்கிறசேதநாசேதநங்கள் நீயிட்ட வழக்கு. [தொல்லை நன்னூலிற்சொன்ன] - "**ஸதேவஸோம்யேதமக்ரஆஸீத்**" (ஸதேவஸோம்யேதமக்ரஆஸீத்) என்றதிறே. (பழையதாய்ப் ப்ரமாணஶ்ரேஷ்ட்டமான வேதத்திலே சொல்லுகிறஅசேதநத்துக்கும், அதிற்காட்டில் ஸூக்ஷ்மமான சேதநபதார்த்தத்துக்கும்நிர்வாஹகன்நீயே.) ஆக, ஜகதாகாரனுயிருக்கும் இருப்பைச்சொல்லிற்று. [அல்லித்துழாயித்யாதி] - நித்யவிபூதியுக்தனுயிருக்கும்படியைச் சொல்லுகிறது. அல்லியையுடைத்தான திருத்துழாய்மாலையாலே யலங்க்ருதமான திருமார்பையுடையையாய், அவ்விருப்புக்கு ஒருநாளும்அழிவில்லாதபடி பரமபதத்திலே யெழுந்தருளியிருக்கிற இருப்பை எனக்கு ப்ரகாசிப்பிக்கிறவனே! [வல்லதோரித்யாதி] - இதுக்குஇரண்டுபடியாக அருளிச்செய்வர்: இவன் தனக்குள்ளஅளவேல்லாங்கொண்டுபேசினுல், உன்பக்கல் சிலசொல்லிற்றும் அத்தனையோக்கியல்லது, உனக்குளர் இயத்தை யில்லையிறேயேன்னுதல்; அப்போதைக்கு, அதுவே யுனக்காம்வண்ணம்?-அது அன்றேன்கிறது. மற்றைப்படிக்கு, உன்பக்கல் ஸ்நேஹிகளாயிருப்பா ரேத்தனையேனும் மளவின்றிக்கே யிருந்தார்களாகிலும், அவர்கள் ஒன்றைச்சொன்னல், ஸ்ரீவைகுண்டத்

---

*பத்தாம்பாட்டு.—இல்லை இத்யாதி. "தொல்லைநன்னூலிற்சொன்ன - இல்லைநுணுக்கங்களே-இதனில் பிறிதென்னும்வண்ணம்-உருவும்அருவும்நீயே" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை- வேதைக இத்யாதி. அதிஸூக்ஷ்மமா யிருந்துள்ளவென்றது - காரணுவஸ்த்தையைப்பற்ற.*

*"இதனிற்பிறிது - நுணுக்கங்கள் - இல்லை - என்னும்வண்ணம்" என்றந்வயித்தர்த்தம் - ற்காட்டில் இத்யாதி. ஏதத்விவரணம்-அதாவது இத்யாதி. வேதத்திலேங்கே சொல்லிற்றென்ன- ஸதேவ இத்யாதி. ஶப்தார்த்தம் - அல்லியை இத்யாதி. முந்தினவர்த்தத்துக்கு, "அதுவே" என்ற ஏகாரம் - எதிர்மறை: வ்யதிரேகார்த்தகமென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, தேற்றேகாரம். நிஶ்சயார்த்*

திலேநித்யஸூரிகள்நடுவே அவர்கள் தங்களுக்குங்கூடப் பேச்சுக்கு நிலமன்றிக்கே யிருக்கிற நம்மை ஸம்ஸாரத்திலே அதிக்ஷுத்ரனாயிருக்கிற இவன்அறிந்தானாகச்சொல்லுவதே? என்று சீறுகையன்றிக்கே, இவன்சொன்னதுவே தனக்களவாக நினைத்திருக்குமென்கிறது. (௰)

## பதினோராம் பாட்டு.

ஆம்வண்ணமின்னதோன்றென்றறிவதரியவரியை
ஆம்வண்ணத்தால்குருகூர்ச்சடகோபனறிந்துரைத்த
ஆம்வண்ணவொண்தமிழ்களிவையாயிரத்துளிப்பத்தும்
ஆம்வண்ணத்தாலுரைப்பார்அமைந்தார்தமக்கென்றைக்குமே.

ஆ.— (ஆம்வண்ணம்) - ஒருவராலும் ஒருவகையும் அறியவொண்ணாத ஸர்வேஶ்வரனை யுள்ளபடியேயறிந்து அங்குத்தைக்கு ஸத்ருஶமாக ஆழ்வாரருளிச்செய்த ஆயிரத்திலும் இத்திருவாய்மொழியை யதாஶக்தி சொல்லுமவர்களே, என்றைக்கும் க்ருதக்ருத்யரென்கிறார்.

ஒ.—நிகமத்தில், ஒருவராலும் ஒருவகையும் அறியவொண்ணாத ஸர்வேஶ்வரனை உள்ளபடியே அறிந்து அங்குத்தைக்கு ஸத்ருஶமாக ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழியை யதாஶக்தி சொல்லுமவர்கள் என்றைக்கும் க்ருதக்ருத்யரென்கிறார். ஆம்வண்ணவொண்தமிழாவது - நல்ல சந்தஸ்ஸுக்களையுடைத்தான அழகிய தமிழென்றுமாம்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யசிக்கவல்லவர்கள், யாவதாத்மபாவி ஸம்பவதநுபவத்துக்கு ஈடாகச் சமைந்தார்களென்று ஃபலத்தை யருளிச்செய்கிறார்.

ஆம் - உண்டான, வண்ணம் - ப்ரகாரம், இன்னதொன்று - இன்னபடிப்பட்டிருப்பது ஒன்று, என்று அறிவது - என்றுஅறிகைக்கு, அரிய - அரியனான, அரியை - ஸர்வேஶ்வரனை, குருகூர்ச்சடகோபன் - * மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார், ஆம்வண்ணத்தால் - உள்ளபடி, அறிந்து-, உரைத்த-(அங்குத்தைக்குஅநுரூபமாக) அருளிச்செய்த, வண்ணம்- சந்தஸ்ஸை, ஆம் - உடைத்தாய், ஒண்-ஸர்வாதிகாரமாகிற நன்மையையுடைத்தான, தமிழ்கள் - தமிழாயுள்ள, இவை ஆயிரத்துள் -, இப்பத்தும் - இந்தப் பத்தையும், ஆம்வண்ணத்தால் - தங்கள் ப்ரகாரத்துக்கீடாக, உரைப்பார் - சொல்லவல்லவர்கள், தமக்கு- தங்களுக்கு, என்றைக்கும்-யாவதாத்மபாவியான அநுபவத்துக்கு ஈடாக, அமைந்தார் - சமைந்தார்கள். இது - கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை யதாஶக்தி சொல்லுகிறவர்கள், என்றைக்கும் க்ருதக்ருத்யரென்கிறார்.

---

தகமென்றபடி. 'அல்லித்துழாயலங்கலணிமார்ப! என்னச்சுதனே! இதனிற்பிறிது நுணுக்கங்கள் - இல்லை என்னும்வண்ணம் தொல்லை நன்னூலிற்சொன்ன உருவும்அருவும்நீயே; வல்லதோர்வண்ணம் இத்யாரப்யார்வயஃ. (௰)

[ஆம்வண்ணமித்யாதி]-ஒருவராலும் ஒருவகையாலும் உள்ளவளவு இதென்று அறியவொண்ணாதபடியிருக்கிற ஸர்வேஶ்வரனையாயிற்றுக் கவிபாடிற்று. "யதோவாசோநிவர்த்தந்தே" என்று ஸ்வரூபரூபகுணவிபூதிகளில் ஒருவகையும் பரிச்சேதிக்கவொண்ணாதிருக்கை. [ஆம்வண்ணத்தாலித்யாதி] - அவனையுள்ளபடியறிந்து அங்குத்தைக்கு ஸத்ருஶமாக அருளிச்செய்தாராயிற்று இவர். விஷயம் அபரிச்சிந்நமாயிருக்கச்செய்தேயும், "மயர்வறமதிநலமருளினன்" என்று அவன்தானேகொடுத்த ஜ்ஞாநமாகையாலே உள்ளபடியை அறிந்தருளிச்செய்தார். ஸ்வயத்நத்தாலே காணப்பார்க்கிலிறே அறிகையில் அருமையுள்ளது. [ஆம்வண்ணவொண்தமிழ்கள்] - அவனுக்குத் தகுதியாயிருந்துள்ள நல்லதமிழென்னுதல்; வண்ணமென்று - ஓசையாய், நல்ல ஓசையையுடைய தமிழென்னுதல்; தகுதியாயிருந்துள்ள நல்லசந்தஸ்ஸுக்களை யுடைத்தான தமிழென்னுதல். [ஆம்வண்ணத்தாலுரைப்பார்] - இவர் தம்மைப்போலே மயர்வற்றுச் சொல்லவேணுமென்னும் நிர்ப்பந்தமில்லை; வல்லபடி சொல்லுமவர்கள். [அமைந்தார் தமக்கென்றைக்குமே] - இவ்வாத்மவஸ்து உள்ளதனைகாலம் ஈஶ்வரன் முழங்கைத்தண்ணீர் வேண்டாதே, ஆழ்வார்பரிக்ரஹத்தாலே என்றுமொக்க நித்யாநுபவம் பண்ணச் சமைந்தாராவர்கள்.

ஈடு.—நிகமத்தில் அங்குத்தைக்குத் தகுதியாக ஆழ்வாரருளிச்செய்த ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழியை யதாஶக்தி சொல்லவல்லார் என்றைக்கும் க்ருதக்ருத்யரென்கிறார்.

[ஆம்வண்ணமித்யாதி] - இன்னபடிப்பட்டிருப்பதோரு ஸ்வபாவத்தையுடையவனென்றுகொண்டு ஒருவராலும் அறியவரியனாயிருக்கிற ஸர்வேஶ்வரனைக் கவிபாடிற்று. "யதோவாசோநிவர்த்தந்தே" (யதோவாசோநிவர்த்தந்தே) என்று வேதங்களும் மீண்டவனையாயிற்றுப் பேசிற்று [ஆம்வண்ணமித்யாதி] - அவனுக்குத் தகுதியாம்படி யாழ்வா ரருளிச்செய்த. அறிவதரிய அரியை என்றதாகில் ஆம்வண்ணத்தாலுரைக்கையாவதேன்? வ்யாஹதமன்றோ? என்னில்—[அறிந்துரைத்த] - அவன் * மயர்வறமதிநலமருளவாயிற்று இவர்பேசிற்று. ஸ்வயத்நத்தாலே யறியப்பார்க்கிலிறே அரிதென்றது; அவன்கொடுத்த அறிவுகொண்டறிவார்க்குக் குறையில்லையிறே. "நெறிவாசல்தானே

நிகமம்.—ஆம்வண்ணம் இத்யாதி. "ஆம்வண்ணத்தால்" என்றதொடங்கி, "அமைந்தார் தமக்கென்றைக்கும்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - அங்குத்தைக்கு இத்யாதி.

"இன்னதொன்று - ஆம்வண்ணம் - என்று அறிவதரியவரியை" என்றந்வயம். இன்னபடிப்பட்டதொன்று அவனுக்காம் ஸ்வபாவம்என்று அறியவொண்ணாத ஸர்வேஶ்வரனை என்று இதுக்கு பாவார்த்தம். இத்தால்பலித்தபாவம் - இன்னபடி இத்யாதி. அப்படி யறியப்போகாதோ? என்ன - யதோவாச இத்யாதி. "ஆம்வண்ணத்தால்" என்றது - ஆனப்ரகாரத்தாலென்றாய், அங்குத்தைக்குத் தகுதியாகவென்றபடி. ஆனால் "அறிவதரிய" என்பானென்? என்ன - ஸ்வயத்நத்தாலே இத்யாதி. ஸ்வயத்நத்தாலே யறியப்போகாதோவென்ன, ப்ரமாணம் - நெறிவாசல் இத்யாதி. முதல் திருவந்தாதி நாலாம்பாட்டு. வாசலானநெறியென்றாய், ஸ்வரூபாநுரூபமான உபாயம் தானேயாய்க்கொண்டு நின்ற ஸர்வேஶ்வரனையென்னுதல்; நெறியென்று - உபாயமாய், வாசலென்று - உபேயமாய், உபாயமும் உபேயமும் தானேயாய்நின்ற ஸர்வேஶ்வரனையென்னுதல். 'ஐந்தித்யாதி'- பஞ்சேந்த்ரியத்வாரங்களில் அடைக்கப்புக்கவர்களை முகத்திலேயறைந்து போருகிற கதவையடைத்து. 'அறிவானும்' - ஸ்வயத்நஸித்தமான ஜ்ஞாநஶக்திகளைக்கொண்டறிவதாக இருக்கிறானென்று ஆக்ஷேபிக்கிறாரென்றபடி. ஸ்வ

யாய்நின்ருனையைந்து, பொறிவாசல்போர்க்கதவஞ்சாத்தி - யறிவானும்'' என்று ஆக்ஷேபிப்பது, ஸ்வயத்நத்தாலே,யறியப்பார்ப்பாரையிறே. [ஆம்வண்ணம் ஒண்தமிழ்களித்யாதி]- அவனுக்குத் தகுதியாம்படியிருக்கிற அழகிய தமிழென்னுதல்; தகுதியாயிருந்துள்ள ஸந்தஸ்ஸுக்களையுடைத்தாய், ஸர்வாதிகாரமாகிற நன்மையையுடைத்தான தமிழென்னுதல். வண்ணம் - சந்தஸ்ஸு. அன்றிக்கே, வண்ணமென்று - ஓசையாய், நல்ல த்வநியையுடைத்தான செந்தமிழென்னுதல். [தமிழ்களிவையாயிரத்துளிப்பத்தும்] - தமிழாயிருந்துள்ள இவையாயிரத்துள் இப்பத்தையும். [ஆம்வண்ணத்தாலுரைப்பார்] - பின்னை, இத்தைச் சொல்லுமவர்களுக்கும் * மயர்வறமதிநலமருளப்பெற்று அவனுக்குத் தகுதியான சொல்லாலே சொல்லவேணுமோவென்னில்?—அத்தேவையெல்லாம் ஆழ்வார்தம்மோடே; இவர்களுக்குத் தாங்கள் வல்லவளவும் சொல்லவமையும். [அமைந்தார்தமக்கென்றைக்குமே] - அவர்களுக்குஇவ்வாத்மா உள்ளதனையும், ஈஶ்வரன் முழங்கைத் தண்ணீர் வேண்டா; ஆழ்வார் பரிக்ரஹமானதுவே போரும். என்றைக்கும் தந்தாமுக்குத் தாமே யமைந்தார்களா யிருப்பர்கள். (கக)

---

*ரூபாநுரூபோபாயோபேயங்கள் தானுய்நின்றவனை, இந்த்ரியங்களை ஜயித்து ருத்ரன் அறியமாட்டானென்று கருத்து. இப்பாசுரத்தில் "நால்வர்க்கு" என்றது - அகஸ்த்ய புலஸ்தய தக்ஷமார்க்கண்டேயர்களை. ஃபலிதம் - அவர்களுக்கு இத்யாதி. ஆழ்வார் பரிக்ரஹமானதுவே - ஆழ்வார் பரிக்ரஹத்துக்கு விஷயமானதுவேயென்றபடி. ஶப்தார்த்தம் - என்றைக்கும் இத்யாதி ஈஶ்வான் முழங்கைத்தண்ணீர் வேண்டாவென்றது - ஈஶ்வரனுகிற முழங்கைத்தண்ணீர் வேண்டாவென்றபடி. முழங்கைத்தண்ணீராவது - ஒருவன் தண்ணீர்குடித்தால் அவன்முழங்கையிலே ஒழுகுகிற தண்ணீரைக்குடிக்கை. 'இன்னதொன்று - ஆம்வண்ணம் - என்றறிவதரியவரியை - குருகூர்ச்சடகோபன் - ஆம்வண்ணத்தால் - அறிந்துரைத்த ஆம்வண்ணவொண்தமிழ்களென்றதொடங்கி, உரைப்பார் - என்றைக்கும் - தமக்கு அமைந்தார்' இத்யந்வயஃ.* (கக)

---

த்ரமிடோபநிஷத்ஸங்கதி.—[illegible] ॥

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.—(மாயாவாமனனே.)—[illegible]

திருவாய்மொழி நூற்றந்தாதி.

*மாயாமல்தன்னைவைத்தவைசித்திரியாலே*
*தீயாவிசித்திரமாச்சேர்பொருளோடு—† ஆயாமல்*
*வாய்ந்துநிற்குமாயன்வளமுரைத்தமாறனைநாம்*
*ஏய்ந்துரைத்துவாழுநாளென்று.*

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானுர் திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.

---

† ஓயாமலென்றும் பாடமுண்டு.

# ஒன்பதாந் திருவாய்மொழி—என்றைக்கும் - ப்ரவேஶங்கள்.

ஆ.—இப்படி மஹாஶ்சர்யமான ஜகத்ரூபத்தையும், அப்ராக்ருதஸ்வாஸாதாரண திவ்யரூபத்தையும், இவை அவன்பக்கலிலே ஸங்கதமாயிருக்கிறபடியையும் அநுஸந்தித்து அத்யந்த விஸ்மிதராய், நிரதிஶயப்ரீதியுக்தராய், நிரஸ்த ஸமஸ்தப்ரஸ்துத வ்யஸநராயிருந்து; நிரவதிகாஶ்சர்யோஹப விப்ரகாரத்தையுள்ளபடியே சொன்னார்; இதுதானும் நிரூபித்தவாறே அவன் செயலாயிருந்தது, இத்தையநுஸந்தித்து, "அத்யந்த நிஹீநனாயிருந்த என்னைக்கொண்டு திருவாய்மொழி சொல்லுவித்தருளுவதே!" என்று, தம்மைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்தருளினவனுடைய ஸர்வஶக்தித்வஸௌஶீல்ய வாத்ஸல்யாதி கல்யாணகுணாநுபவ ஜநிதநிரவதிக ப்ரீதியாலே சொல்லுகிறார்.

ஒ.—ஒன்பதாந் திருவாய்மொழியில், "த்வத்ப்ராப்திவிரோதியாயுள்ள இப்ரக்ருதிஸம்பந்தத்தை அறுத்தருளவேணும் என்று பலகாலும் அபேக்ஷிக்க, செய்தருளாமைக்குக் காரணமென்?" என்று எம்பெருமானை ஆழ்வார் கேட்க, அவனும், "ஶரதல்பத்திலே ஸ்ரீபீஷ்மரைவைத்து லோகத்தார்க்கு தர்மத்தைச் சொல்லுவித்தாற்போலே, என்னை ஆஶ்ரயித்தார்க்கும் எனக்கும் ஹோஜார்த்தமாகக் கவிபாடவைத்தோம்" என்று அருளிச்செய்ய, அவ்வுபகாரத்தாலே மிகவும் ஹ்ருஷ்டராய், ஹர்ஷப்ரகர்ஷத்தாலே ஸம்ப்ராந்தராய், வேதங்களும், ஸ்ரீவால்மீகிபகவான் தொடக்கமாக உண்டான ருஷிகள் சொன்ன கவிகளும், பழைய ஆழ்வார்கள் அருளிச்செய்த கவிகளுங் கிடக்கத் தம்மைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட இம்மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் காணாதே தடுமாறுகிறார்.

ப.—ஒன்பதாந்திருவாய்மொழியில், கீழ்-தம்முடைய விரோதிநிவ்ருத்திக்கு அநுரூபமான ஈஶ்வரனுடைய ஆஶ்சர்யஶக்தியோகத்துக்கு ப்ரகாசகமாயுள்ள விசித்ர விபூதிமத்தையை யநுபவித்து ஸந்துஷ்டரான இவர், இவன் விரோதி நிவர்த்தநத்தில் விளம்பிக்கைக்குஅடியென்? என்று நிரூபித்து, அவன் தம்மை வாசிககைங்கர்யங்கொள்ளுகைக்காக வைத்த ப்ரகாரத்தைக் காட்டக்கண்டு ப்ரீதராய், தம்விரோதி கிடக்கச் செய்தே அத்தை மதியாமல் அசித்கல்பமாக்கி யடிமைகொள்ளுகைக்கடியான நிருபாதிக ஸம்பந்தத்தையும், ப்ரதமப்ரவர்த்தநத்தையும், ஹக்தார்த்தப்ரவ்ருத்தியையும், விரோதியைமதியாமல் விரும்பினபடியையும், விருப்பத்தால்வந்த மேன்மையையும், மேன்மைக்கு எல்லைநிலத்தையும், அப் பரத்வாநுபவத்துக்கு விலக்கான பாபத்தினுடைய நிவர்த்தநத்தையும், அதிஶயிதாநுஸாவ்ய குணயோகத்தையும், அதினுடைய நித்யாநுபாவ்யதையையும், நிஷ்ப்ரத்யுபகாரமான நிரவதிகோபகாரகத்வத்தையும் அநுபவித்து, ஏவம்வித ஸ்வபாவனானவன் என்விரோதியைக்கழித்து என்னை வாசிக கைங்கர்யங் கொண்டபடிக்குஎத்தைச்செய்வேனென்று உபகார ஸ்ம்ருதியாலே அத்யந்தம் ஹ்ருஷ்டராகிறார்.

இ.—ஒன்பதாந் திருவாய்மொழியில், "எனக்கு ஸம்ஸாரத்தோடு பொருந்தாமையுண்டாய் உன்னாலல்லது செல்லாமையுமுண்டாய் நீயே யுபாயமாயிருந்தபின்பு, த்வத்ப்ராப்திவிரோதியான ப்ரக்ருதிஸம்பந்தத்தை அறுத்தருளவேணும்" என்று

கீழே பலகாலும் அபேக்ஷிக்க,அவனும்இவர்க்கு நேர்கொடு:நேரே தன்கருத்தை அருளிச்செய்யாதே, தன்னதொரு குணத்தை யாவிஷ்கரித்து அதிலே இவர்க்கு அந்யபரதையைப் பிறப்பித்துப்போந்தான். இவரும் அந்தக்கருத்தை யறியாதே, "நீ உன்னைச் சிலர்க்குக்கொடுக்குமிடத்துத் தடுக்கவற்றாயிருப்பதொரு ப்ரதிபந்தகமின்றிக்கேயிருக்க உன்னைத் தருவதும் செய்யாதே முடிய்வுமாட்டாதே ஜீவிப்பித்துக்கொண்டு போருகிற இதுக்குக் காரணமென்?" என்ன, "ஸ்ரீபீஷ்மரை ஶரதல்பத்திலே யிட்டுவைத்து நாட்டுக்கொரு வெளிச்சிறப்புப் பண்ணிக் கொடுத்தாற்போலே, நமக்கும் நம்முடையார்க்கும் போதுபோகைக்கு உறுப்பாக இப்ரபந்தத்தைத் தலைக்கட்டுகைக்குக் காணும்" என்று தன்கருத்தை நேரேயருளிச்செய்ய, ஸ்ரிய:பதியாய் அவாப்த ஸமஸ்தகாமனாய் புருஷோத்தமனாயிருக்கிற தனக்கு ஒருகுறையுண்டாய், அத்தைத் தம்மாலே தீர்ப்பதாக அவனருளிச்செய்த வார்த்தையைக் கேட்டு, அத்தாலே மிகவும் ஹ்ருஷ்டராய், வேதங்களும், ஸ்ரீவால்மீகிபகவான், ஸ்ரீபராஶரபகவான் தொடக்கமான ருஷிகள் சொன்ன கவிகளும், "செந்தமிழ் பாடுவார்" என்கிற முதலாழ்வார்களருளிச்செய்த கவிகளுங்கிடக்க, தம்மைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட இம்மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் காணாமே தடுமாறுகிறார்.

ஈடு.—கீழேபலகாலும்,"ஸர்வேஶ்வரன்தன்னைப்பெறுவார்க்குப்ரதிபந்தகங்கள்உண்டாயிருந்தாலும்தானேதன்னைத்தரப்பார்க்குமன்றுதகையவல்லதொருப்ரதிபந்தகமின்றிக்கே யிருக்க, 'தன்னாலேபேறு' என்றிருக்கிறஎன்னை இங்கேவைத்ததேன்?" என்று கேட்டுப்போருவாரொருவர் அவனும், இதுக்கு நேரான பரிஹாரத்தைப்பண்ணாதே ஏதேனுமொரு குணாவிஷ்காரத்தைப்பண்ணி அந்யபரதையைப் பிறப்பிக்குமாயிற்று, இவர்க்கு இதிலே நெஞ்சு செல்லாதபடி. இனி, கீழ்த்திருவாய்மொழியிலேயும் - "ஸம்ஸாரத்தில் பொருந்தாமையுண்டாய் உன்னையொழியச் செல்லாமையுண்டாய் நீயே யுபாயமாயிருக்க, பின்னையும் என்னை இங்கேவைத்து ஜீவிப்பித்துக்கொடுபோருகிறஆஶ்சர்யம்இருந்தபடியேன்? இத்தைஎனக்கருளிச்செய்யவேணும்" என்ன, "கண்டீரேதான் இதொராஶ்சர்யமிருந்தபடி!" என்று அவ்வழியாலே தன்னுடைய ஆஶ்சர்யஜநகதாகாரதையைக் காட்டிக்கொடுத்து, அத்தோடே பணிபோரும்படி பண்ணினான். இவரும், அப்போதுஅத்தையும் அத்தையநுஸந்தித்து, அது தலைக்கட்டினவாறே அநந்தரம் பழையபடியே கேட்கத்தொடங்குமவரிறே. "இஸ்ஸம்ஸாரத்திலே பொருந்தாதிருக்கிறஎன்னை இங்குவைத்ததுக்கு ஹேது வென்? என்ன, "நம்மைஇதுக்கொருஹேது நிர்ப்பந்தித்துக்கேட்கவேணுமோ? கண்டதெல்லாவற்றிலும் நாக்குநீட்டி அவற்றிலே ருசிபண்ணிப்போந்தீராகில், அதுக்கடியான கர்மங்கிடந்ததாகில், வாஸநாருசி கிடந்ததாகில், அவற்றாலே யிருந்தாலாகாதோ?"என்ன, "அவையுங்கிடக்கச்செய்தே, அவற்றையும்பாராதே என்க்கு மயர்வற மதிநலமருளி பாசங்கள் நீக்கியென்னை யுனக்கேயறக்கொண்ட பின்பு என்னை இங்குவைக்கிறதேன்?" என்று வடிம்

---

என்றைக்கும் ப்ரவேஶம்: ஈஶ்வரஸ்வபாவத்தையும் அருளிச்செய்துகொண்டு கீழ்த்திருவாய்மொழியோடு இதுக்கு ஸங்கதியருளிச்செய்கிறார் - கீழே இத்யாதி. பலகாலுமென்றது - * உண்ணிலாவிய தொடங்கிப் பலகாலுமென்றபடி. கேட்கும்படியைக் காட்டுகிறார் - இஸ்ஸம்ஸாரத்திலே இத்யாதி. "பாசங்கள்" என்றத்தைப்பற்ற - கண்டதெல்லாவற்றிலும் இத்யாதி. 'உனக்கேயறக்கொண்டபின்பு' என்றவநந்தரம், நீசொல்லுகிறவிது பரிஹாரமன்று; ஆகையாலே, என்று கூட்டிக்கொண்டு, அநந்தரம் - என்னையிங்குவைக்கிற தேன்னென்று வடிம்பிட்டுக்கேட்க என்றநுஸந்தி

பிட்டுக்கேட்க, ''நீர்தாம் உம்மை நமக்காகவொக்கிவைத்தீராகச்சொன்னீரே - 'தனக்கேயாக வேனைக்கொள்ளுமீதே' என்று; ஆனபின்பு நாம்வேண்டினபடி விநியோகங்கொள்ளக் கடவோ மன்றோ? ஆனபின்பு, நமக்கு அதிசயத்தைப்பிறப்பிக்கை உமக்குஸ்வரூபமாயிருக்குமிறே; ஆனபின்பு, உம்மைக்கொண்டு, ஸ்ரீபீஷ்மரை சரதல்பத்திலேயிட்டு வைத்து நாட்டுக்கு வெளிச்சிறப்பைப் பண்ணிக்கொடுத்தாற்போலே, நமக்கும் நம்முடையார்க்கும் போதுபோக்காகச் சிலப்ரபந்தங்களைப்பண்ணுவிக்கப்பார்த்தோம்: அது தலைக்கட்டுந்தனையுங்காணும் உம்மைவைப்பது'' என்று நேரானபரிஹாரந்தன்னை யருளிச்செய்ய, இவரும் அத்தையநுஸந்தித்து, ஸர்வேச்வரனாய் அவாப்தஸமஸ்தகாமனாய் ஸர்வப்ரகார பரிபூர்ணனாயிருக்கிறஅவன் தனக்கு ஒருகுறையுண்டாய் அக்குறை பின்னைத் தம்மைக்கொண்டு தீர்ப்பதாகச்சொன்னவார்த்தையைப் பொறுக்கமாட்டிற்றிலர். ''தனக்குச் சில ப்ரபந்தங்கள் வேண்டினால், அதுக்கீடான ஜ்ஞாநசக்த்யாதிகளால் குறைவற்ற ஸ்ரீவேதவ்யாஸபகவான், ஸ்ரீவால்மீகிபகவான், ஸ்ரீபராசரபகவான் தொடக்கமானார், 'செந்தமிழ் பாடுவார்' என்று சொல்லப்படுகிற முதலாழ்வார்கள், இவர்களெல்லோரும் உண்டாயிருக்க, அநாதிகாலம் ஸம்ஸாரத்திலே பழகி சப்தாதிவிஷயங்களிலே மக்னனாய், 'அஸந்நேவ ஸபவதி' (அஸந்நேவஸபவதி) என்கிறபடியே அஸத்கல்பனாய் உருமாய்ந்து போன என்னைக்கொண்டு தனக்கூடாகக் கவிபாடுவித்துக்கொள்ளுவதாகச் சொன்ன வார்த்தை என்னவார்த்தை! இதொரு நீர்மையிருக்கும்படியே! இதென்னநீர்மை!!'' என்று, ஸர்வேச்வரன் தந்திறத்தில் பண்ணினஉபகாரத்தை யநுஸந்தித்து, அதுக்கு ஒருப்ரத்யுபகாரங் காணாமையாலே தடுமாறிச்செல்லுகிறது.

## முதற் பாட்டு.

என்றைக்கும்என்னை உய்யக்கொண்டுபோகிய
அன்றைக்கன்றுஎன்னைத் தன்னாக்கி என்னால்தன்னை
இன்தமிழ்பாடியஈசனை ஆதியாய்
நின்றவென்சோதியை என்சொல்லிநிற்பனோ ?

ஆ.—(என்றைக்கும் என்னை) - ஆத்மாந்தகிங்கரத்வேந ஸ்வீகரித்து, ப்ரதிதிநமும் என்னைத் தன்னைப்போலே பரிசுத்தனாக்கி, என்னை யுபகரணமாகக்கொண்டு திருவாய்மொழிபாடுந் தன்னுடைய ஸர்வசக்தித்வத்தையும், வேதப்ரபந்த நிர்மாண

பது. வடிப்பிட்டு - நிர்ப்பந்தித்து. ''ப்ரபந்தங்களைப் பண்ணுவிக்கப்பார்த்தோம்'' என்று உத்தரம் சொல்லப்பார்த்து, ''ஆனால், என்னாற்றாமையெல்லாங்கிடக்க வெறும் ஸ்வகார்யமே பார்க்குமத்தனையோ'' என்கிறசங்கையையும் பரிஹரிக்கிறார் - நீர்தாம் இத்யாதி. ஒக்கிவைக்கை - ஆக்கிவைக்கை. வெளிச்சிறப்பு - ஜ்ஞாநப்ரகாசம். பொறுக்கமாட்டிற்றிலரென்றது - ''என்சொல்லிநிற்பன்'' இத்யாதியைப் பற்ற. ''இன்கவிபாடும் பரமகவிகள்,'' ''ஒப்பிலாத்தீவினையேனை'' ''எதுவுமொன்றுமில்லைசெய்வது'' [illegible] 'க்கடா [illegible] 'ல ப்ரபந்தங்கள் [illegible]. 'என் [illegible]' என்றத்தைப்பற்ற - அஸந்நேவ இத்யாதி. செந்தமிழ்பாடுவார் - அழகிய தமிழ்பாடும் முதலாழ்வார்கள் இத்யர்த்தம். திருமொழி, ''வெந்திறல்''(உ-அ:உ) இத்யாதி

ஹேதுத்வக்ருத நிரவதிகதேஜஸ்ஸையும் எத்தைச்சொல்லி பர்யவஸிப்பன்? காலதத்வ முள்ளதெல்லாம் சொன்னாற்றான் ஆர்வனோ? என்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், அதிக்ஷுத்ரனாயிருக்கிற என்னை ஜ்ஞாநஶக்த்யாதிகளுடையேனாம்படி பண்ணி, என்னையிட்டுத் திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட உபகாரத்தை அநுஸந்தித்து தரிக்கமாட்டுகிறிலேன் என்கிறார்.

[என்றைக்குமென்று தொடங்கி] - ஒருநாளை விஷயீகாரமே ஆத்மாவுள்ளக மாக வாழுகைக்குப் போருமென்னும்படி போனகாலமெல்லாம் நாள்தோறும் விஷயீகரித்துக் கவிபாடுகைக்கு அநுரூபமான ஸாமக்ரி யொன்றுமில்லாத என்னை ஜ்ஞாநஶக்த்யாதிகளால் தன்னோடொக்கப்பண்ணி; என்னைத் தனக்காக்கி என்றுமாம். [என்னால் தன்னை இன்தமிழ்பாடியவீசனை] - தன்னாலேஉத்தஶக்திகனானவென்னாலே ஶ்ருதிஸ்ம்ருத்யாதிகளுக்கும் பேச நிலமன்றிக்கேயிருக்கிற தன்னைத் தான் ஸர்வஶக்தியாகையாலே இனிதாய் எல்லார்க்கும் அநுபவிக்கலாம்படியாகத் தமிழான திருவாய்மொழியைப் பாடுவித்துக்கொண்டவனை. [ஆதியென்று தொடங்கி] - எனக்குத் தன்னழகைக்காட்டிக் கவிபாடுகைக்கு அடியானவனை.

ப.—முதற்பாட்டில், நிருபாதிகஶேஷியானவன் என்னைக்கொண்டு தான் தன்னைக் கவிபாடிக்கொண்ட ஔஜ்ஜ்வல்யத்துக்கு என்சொல்லி தரிப்பேனென்கிறார்.

என்றைக்கும் - ப்ரதமாங்கீகாரம் யாவதாத்ம பாவியாம்படி அங்கீகரித்து, போகிய - போகிற, அன்றைக்கன்று - காலந்தோறும், என்னை உய்யக்கொண்டு - விஶேஷகடாக்ஷம்பண்ணி, என்னை-, தன்னாக்கி - தனக்கேயாம்படி செல்லாமையைப் பிறப்பித்து, என்னால் - கவிபாடுகைக்கீடான ஜ்ஞாநாதிகளில்லாதவென்னைக் காரணமாகக் கொண்டு, தன்னை - (வேதங்களும் பிற்காலிக்கும்படியான பெருமையையுடைய) தன்னை, இன் - ஶப்தந்தானே நிரதிஶயஸரஸமாய், தமிழ் - (ஸர்வாதிகாரமான) தமிழை, பாடிய-பாடின, ஈசனை - நிருபாதிகஶேஷியாய், ஆதியாய் - எனக்கு உள்ளீடாகநின்று பாடுகையாலே இதுக்கு மூலபூதனாய், நின்ற - அத்தாலேநிலைபெற்று, என்சோதியை - உஜ்ஜ்வல விக்ரஹனாயிருக்கிறபடியை எனக்கு ப்ரகாஶிப்பித்தவனை, என் - எத்தை, சொல்லி-, நிற்பன் - தரிப்பேன். ப்ரதமம் ஆபிமுக்யம்பண்ணும்படி அங்கீகரித்திலனென்னவோ? அத்தை முழுகக நடத்திற்றிலனென்னவோ? என்னைத் தனக்கே யாக்கிற்றிலனென்னவோ? நான் பாடினேனாம்படி தான் பாடிற்றிலனென்னவோ? அத்தாலுஜ்ஜ்வலனாயிற்றிலனென்னவோ? எத்தைச்சொல்லி தரிக்கலாவது? என்று கருத்து.

இ.—முதற்பாட்டில், அதிக்ஷுத்ரனான என்னை ஜ்ஞாநஶக்த்யாதிகளால் பூர்ணனாம்படிபண்ணிக் கவிபாடுவித்துக்கொண்ட உபகாரத்தை நினைத்து தரிக்கமாட்டுகிறிலேன் என்கிறார்.

[என்றைக்குமென்னை யுய்யக்கொண்டு] - என்னை, ஒருநாள் பண்ணின விஷயீகாரமே காலதத்வமுள்ளதனையும் உஜ்ஜீவிக்கப்போருமென்னும்படி விஷயீகரித்து. ஸர்வேஶ்வரனொருவனை விஷயீகரித்தால், பின்னையாத்மாவுள்ளயா "இதொரு விஷயீகாரமே!" என்று நெஞ்சுஉளுக்கும்படியாயிற்றிருப்பது; "ஸக்ருதேவ ப்ரபந்நாய" என்கிற படியே என்றுமொக்க ஸ்மரித்து தரிக்கலாம்படியாயிறே யிருப்பது. "ஶராநுராவல வாணாநாம் விவ்யதே" என்று, ஶத்ருக்கள், வீரத்துக்கு நெஞ்சுளுக்கும்படியாயிற்று,

குணவிஸ்ரும் ஆற்றமாட்டாதேயிருக்கும்படி. அம்புபட்டாரை ஔஷதத்தாலே பரிஹரிக்கலாம், குணவிஸ்ரை பரிஹரிக்கப்போகாது. [உய்யக்கொண்டு] - "ஸந்நேவ பவதி" என்கிறபடியே என்னை உஜ்ஜீவிக்கும்படிபண்ணி. [போகியவன்றைக் கன்று]- கழிகிறகாலமெல்லாம் நாள்தோறும் நாள்தோறும் விஷயீகரித்து. [என்னைத் தன்னாக்கி]- கவிபாடுகைக்கு அநுரூபமான ஜ்ஞாநஶக்த்யாதிகளில்லாத என்னை, தன்னோபாதிஜ்ஞாந ஶக்திகளையுடையேனும்படிபண்ணி என்னுதல்; [என்னைத்தன்னாக்கி] -தனக்காளாம்படி பண்ணி என்னுதல். [என்னால்தன்னை] - தன்னாலே உத்தஶக்திகனனவென்னாலே, ப்ருத்யாதிகளுக்கும் பேச நிலமன்றிக்கேயிருக்கிற தன்னை: "யதோவாசோ நிவர்த்தந்தே" "யஸ்யாமதம் தஸ்ய மதம்", "அவிஜ்ஞாதம் விஜாநதாம்". [இன்தமிழ்பாடிய] - அர்த்தங்கிடக்க ஶப்தம்தானே ரஸித்து ஸர்வாதிகாரமான தமிழை இசையிலேவைத்துத் தானே பாடினவனை. [ஈசனை] - இப்படி வாய்க்கைக்குஅடி ஸர்வஶக்தியாகையாலே. அவன் பாடினானாகில் நீர் இங்குச் செய்ததென்? என்ன, [ஆதியாய்நின்ற] - எனக்கடியாய்நின்று பாடுவித்தான். [என்சோதியை] - இவர்க்குக் கவிபாடுகைக்குஉள்ளுறை கொடுத்தது வடிவழகாயிற்று. எனக்கு வடிவழகை ஆவிஷ்கரிக்க, அத்தைக்கண்டு கூப்பிட்டது கவியாயிற்று. பிடாத்தை விழ்விட்டு வடிவழகைக் காட்டினான்; திருத்திரை எடுத்தாற்போலே கூப்பிட்டேன்; அது கவியாயிற்று. [என்சொல்லி நிற்பனோ] - என் சொல்லிதரிப்பன்? ஸம்ஸாரியாயிருக்கிற நான் தனக்காஸிமுக்யம் பண்ணுகைக்கு என் பக்கலிலே ஒருஹேதுவுண்டென்று தரிக்கவோ? பின்புதன்னையொழியச் செல்லாமை பிறக்கைக்கு என்பக்கலிலே ஸாதநலேஶமுண்டென்று தரிக்கவோ? என்னைக்கொண்டு கவிபாடுவித்துத் தனக்கோரேற்றமுண்டாக இருக்கிற நீர்மையைக்கண்டால் என்னால் தரிக்கலாமோ? ஸாரதியாய்நின்று வென்று வெற்றியை அர்ஜுநன்தலையில் ஏறிட்டாற்போலே, தானேபாடி என்தலையிலே ஏறிட்டானித்தனை.

ஈடு.—முதற்பாட்டு. அதிக்ஷுத்ரனாயிருக்கிற என்னை ஜ்ஞாநஶக்த்யாதிகளையுடையேனும்படிபண்ணி, என்னையிட்டுத் திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட உபகாரத்தை யநுஸந்தித்துத் தரிக்கமாட்டுகிறிலேனென்கிறார்.

இப்படி நீர்படுகைக்கு அவன்செய்த நன்மைதான் ஏதென்ன, இதுஎன்கிறார்:— [என்றைக்குமென்னையுய்யக்கொண்டு] - ஸர்வேஶ்வரன் ஒருவனை ஒருநாள்விஷயீகரித்தால், பின்னை அவ்விஷயீகாரந்தன்னையே காலதத்த்வமுள்ளதனையும்அநுஸந்தித்து உஜ்ஜீவிக்கலாயாயிற்றிருப்பது. "தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய" (தச்சஸம்ஸ்ம்ருத்யஸம்ஸ்

முதற்பாட்டு.—என்றைக்கும் இத்யாதி. "என்னைத்தன்னாக்கி என்னால்தன்னை இன்தமிழ் பாடியவீசனை - என்சொல்லிநிற்பன்" என்றத்தைக் கடாக்ஷித்துஅவதாரிகை - அதிக்ஷுத்ரனாய் இத்யாதி.

பதாவதாரிகை - இப்படிநீர் இத்யாதி. "போகியவன்றைக்கன்று • என்றைக்கும் என்னையுய்யக்கொண்டு" என்றுஅந்வயித்தர்த்தம் - ஸர்வேஶ்வரன் இத்யாதி. "ஒருநாள் விஷயீகரித்தால் என்றுமொக்க அத்தை அநுஸந்தித்து தரிக்கலாயிருக்கும்" என்னுமதுக்கு ப்ரமாணம் – தச்சஸம்ஸ்ம்ருத்ய இத்யாதி. "தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ரூபமத்யத்புதம் ஹரே: I விஸ்மயோ மே மஹாந் ராஜந் ஹ்ருஷ்யாமி ச புந: புந:" இதிகீதாஸு அஷ்டாதஶே. (எஎ)அவன்குணம்

ம்ருத்ய) என்கிறபடியே - பின்னை யென்றுமொக்க அத்தை ஸ்மரித்து யரிக்கலாம்படியாயிற் றிருப்பது. "ஸ்மரந்ராகவபாணாநாம்" (ஸ்மரந்ராகவபாணாநாம்) என்று அம்புக்கு இலக்கானர் அலற்றுமாபோலே யாயிற்று, குணத்துக்குஇலக்கானரும் அலற்றும்படி. அம்புபட்டபுண் மருந்திட்டாற்றலாம், குணத்தால்வந்தபுண்ணுக்குப் பரிஹாரமில்லையிறே. ஆக, ஸர்வேஸ்வரன் ஒருநாள் ஒருவனைவிஷயீகரித்தால் அதுதன்னையே என்றுமொக்க ஸ்மரிக்கலாம்படியிருக்குமாயிற்று. இப்படிப்பட்ட விஷயீகாரந்தன்னை ஒருகால் பண்ணி விட்டவித்தனையோஎன்னில்?—[போகியவன்றைக்கன்று] - கழிகிற நாள்தோறும் நாள் தோறும் இப்படியேயாயிற்று விஷயீகரித்தது. இதுதான்இருவர்படியாலும் ஆற்றப்போகாது. அவனுடையவிஷயீகாரத்துக்கு இலக்கான இவர்படியைப்பார்த்தால், அத்தை இவர் தாம் பொறுக்கவல்ல ரல்லர் ; அவனைப்பார்த்தால், தன்னை விஸ்வஸித்து உடனே கிடந்தவனை மடிதடவினவன் "என்செய்தோமானோம்?" என்றுஅநுதபிக்குமாபோலே, எல்லாம் செய்தும் ஒன்றும் செய்யாதானாய் "இவனுக்கு என்செய்வோம்?" என்றிருக்குமவன். [என்னைத் தன்னாக்கி] - "அறிவிலேன்" என்கிறபடியே அஜ்ஞாநாஶக்திகளுக்கு இலக்காயிருக்கிற என்னை, தன்னோடொக்க ஜ்ஞாநஶக்த்யாதிகளை உடையேனும்படிபண்ணி என்னுதல்; [என்னைத் தன்னாக்கி] - தன்னுடையேனும்படிபண்ணி என்னுதல். [என்னால்தன்னை] - தன்னாலே சித்தஶக்திகனான என்னாலே,ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸாதிகளுக்கு அவிஷயமாம்படி யிருக்கிற தன்னை. "யதோவாசோநிவர்த்தந்தே" (யதோவாநிவர்த்தந்தே,) "யஸ்யாமதம் தஸ்யமதம் அவிஜ்ஞாதம் விஜாநதாம்" (யஸ்யாமதம்தஸ்யமதம்-அவிஜ்ஞாதம் விஜாநதாம்) என்கிறபடியே ப்ரமாணங்களுக்கு அவிஷயமாம்படியிருக்கிற தன்னை. [இன் தமிழ்பாடிய] - இதுதன்னிலோடுகிற அர்த்தமும் பரிமாற்றமும் கிடக்கச்செய்தே, சொல்லில் இனிமைதானே ஆகர்ஷகமாயிருக்கும்படி. [பாடிய] - என்னைக் கொண்டு பாடுவித் தான் என்னுதல், பாடினன்என்னுதல். "ஏதத்ஸாமகாயந்" (ஏதத்ஸாமகாயந்

---

இப்படி ஈடுபடுத்துமென்னுமதுக்கு வ்யதிரேகத்ருஷ்டாந்தம் - ஸ்மரந் இத்யாதி. "ந ஹி சக்ரு காமாநாம் விஷ்ருதக்ஷுப்யவசாஸா । ஸ்மரந் ராகவபாணாநாம் விவ்யதே ராக்ஷஸேஶ்வர:" இதி யுத்தகாண்டே. (கூ௦- ந) அம்புபோலே குணங்கள் வேதகமோ? என்ன - அம்புபட்டஇத்யாதி. உக்தார்த்தநிகமநம்-ஆக இத்யாது. இப்படிப்பட்டவிஷயீகாரந்தன்னை-என்றுமொக்க அநுஸந்தித்து யரிக்கலாம்படியான ஒருநாளை விஷயீகாரத்தையென்றபடி. இவ்வுபய பதங்களாலும் ஃபலித்தவர்த்தம் - இவருடைய ஆதாமும் அவனுடைய வ்யாமோஹமும் என்றருளிச்செய்கிறார் - இதுதான் என்று. உய்யகொண்ட இந்த விஷயீகாரந்தானென்றபடி. விவரணம் - அவனுடைய இத்யாதிவாக்யத்வயம். அதாவது - இவர் க்ருதஜ்ஞாகையாலும், அவன் "உன்னடியார்க்கென்செய்வன்" என்னும் ஸ்வபாவனாகையாலும், இருவராலும் ஆற்றப்போகாதென்றபடி. அன்றிக்கே இவன் தான் ஒருகால்விஷயீகரித்தால் போராதோ? இவர்தாமும் அத்தை யொருகால்அநுஸந்தித்தால் போராதோ? என்ன - இதுதான் இத்யாதி என்னுதல். மடிதடவுகை - மடியில் தநத்தைக்களவு காண்கை. பொறுக்கவல்லவரல்லர்என்றது- ப்ரத்யுபகாரம் தேடித்தடுமாறுவரென்றபடி. தன்னுடையேனும்படி- தனக்கு ஶேஷமாம்படி. 'ஶ்ருதிஸ்ம்ருத்யாதிகளுக்கு அவிஷயம்'' என்றதுக்கு ப்ரமாணம் - யதோவாச இத்யாதி. "இன்" என்றதுக்கர்த்தம் - இதுதன்னில் இத்யாதி. இது தன்னில் - இத் திருவாய்மொழிதன்னில் என்றபடி. ஓடுகிறஅர்த்தமாவது- திருவாய்மொழி பாடுவித்துக்கொள்ளுகை, பரிமாற்றமாவது - ஈஶ்வரனுடைய வ்யாமோஹம். "பாடிய" என்றதுக்கு - ப்ரயோஜககர்த்ருத்வமாதல், ஸ்வயம் கர்த்ருத்வமாதல்என்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் - என்னைக்கொண்டு இத்யாதி வாக்யத்வயத்தாலே. பாடினனென்றது - "என்முன்சொல்லும்" என்கிறபடியே முற்சந்தைசொன்ன

நாஸ்தே)என்று முக்தன் ஸாமகாநம்பண்ணுமாபோலே, அவனும் இவரோட்டையநுஷவத்தால் வந்த ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டு "தென்னு" என்றுபாடுமோயிற்று. இப்படியினிய இதுஉண்டானபடி யெங்ஙனே என்னில்?- [ஈசனை] - சொல்லவேணுமோ? ஸர்வேச்வரன் செய்யமாட்டாததுண்டோ! அரிதோ அவனுக்கு? கவிபாடினீர் நீராயிராநின்றீர்! அவனைப் பாடினனாகச் சொல்லாநின்றீர்; இதுதான்செய்தபடி யேன்? என்ன, [ஆதியாய்நின்ற] - நான் கவிபாடுகைக்கு ஹேதுவாய் நின்றான் - அவனடியாக நான் கவிபாடிற்று. ஹேதுவானபடி தான்என்னென்னில்?—[என்சோதியை] - பிடாத்தை விழவிட்டுத் தன்வடிவழகைக்காட்டினான். திருத்திரையெடுத்தாற் கூப்பிடுமோபோலே கூப்பிட்டேன்; அது கவியாய்த் தலைக் கட்டிற்று. வடிவழகைக்காட்டியாயிற்றுக் கவிக்குஉள்ளுறைகொடுத்தது; நீரும் கவிபாடினீராகில் பின்னை இப்படிக்கிடந்து படுகிறதென்? என்ன - [என்சொல்லிநிற்பனோ] - நானும் பாதிவழிவந்து அவனாலே விஷயீக்ருதனாயிருக்கிறேனோ? அன்றிக்கே, பெற்றபேறுதான் அளவுபட்டுஆறியிருக்கிறேனோ? ஸாதநாநுஷ்டாநம்பண்ணினார்க்குப் பலம் தப்பாமையாலே நானும் இப்பேற்றுக்குச் சிலசெய்தேனாய், இது ப்ராப்தமென்றிருக்கிறேனோ? பெற்ற பேறுதான் ஸாத்மிக்குமதாய் ஆறியிருக்கிறேனோ? எத்தைச்சொல்லித் தரிப்பது? "க்ருஷ்ணத்வைபாயநம்வ்யாஸம் வித்தி நாராயணம்ப்ரபும் | கோஹ்யந்ய: புண்டரீகாக்ஷாந் மஹாபாரதக்ருத்பவேத்" (க்ருஷ்ணத்வைபாயநம்வ்யாஸம் வித்திநாராயணம்ப்ரபும்-கோஹ்யந்ய:புண்டரீகாக்ஷாந் மஹாபாரதக்ருத்பவேத்) என்றாற்போலே யிருக்கிறதாயிற்று. இதுக்கு ஆளவந்தாருளிச்செய்யும்படி: "ஸர்வேச்வரன் செய்யப்புக்கால் அரியதும் ஒன்றுண்டோ?" என்னும். அங்ஙனன்றிக்கே, எம்பெருமானார், இவர் தாம்சொன்னாராகிலும் ஒருபடிபோகச்சொல்லித் தலைக்கட்டுவர்; அவனும் தானே சொன்னானாகில் நிர

*னென்றபடி. சொன்னனென்றதை, "பாடினேன்" என்றதுக்கு பாவம் - ஏதத்ஸாமகாயந் இத்யாதி. இப்படிஸ்லாக்யதைபுண்டாயிற்று அவன்ஸர்வசக்தியாகையாலே என்னுமத்தைஸங்காபூர்வகமாக அருளிச்செய்கிறார் - இப்படியினிய இத்யாதி. மேலுக்கவதாரிகை - கவிபாடினீர் இத்யாதி. பாட்டுக்குக் காரணபூதன்இவன் என்கிறார் - நான் கவிபாடுகைக்கு இத்யாதி. விவரணம் - அவனடியாக இத்யாதி. ஹேதுவானபடியேன்? என்னிலென்றது - ஸ்வரூபத்தாலேயோ, குணத்தாலேயோ, விக்ரஹத்தாலேயோ என்றபடி. வடிவழகைக்காட்டி யென்று - ஹேதுவான ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் - பிடாத்தை இத்யாதி: பிடாத்தை - போர்வையை. கவிக்கு ஹேதுவாக வடிவழகைக் கீழே சொல்லி, "என்சோதியை" என்றதுக்கு கவிக்கு விஷயமாக பாவாந்தரம் - வடிவழகை இத்யாதி. உள்ளுறைகொடுத்து - விஷயமாக்கிற்றென்றபடி. என்சோதியை - உஜ்ஜ்வலமான வடிவையுடையனாயிருக்கிறபடியை எனக்கு ப்ரகாசிப்பித்தவனை யென்று பாவார்த்தம். "என்சொல்லிநிற்பன்" என்கிறதென்? ஆறியிருக்கப் போகாதோவென்ன அருளிச்செய்கிறார் - நானும் பாதிவழி இத்யாதி வாக்யத்வயத்தாலே. ஏதத்விவரணம் - ஸாதநாநுஷ்டாநம் இத்யாதிவாக்யத்வயமும். "என்னைப் பன்னையின்தமிழ்பாடியவீசனை" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் - க்ருஷ்ண இத்யாதி. "க்ருஷ்ணத்வைபாயநம்வ்யாஸம் வித்திநாராயணம் ப்ரபும் | கோஹ்யந்ய: புண்டரீகாக்ஷாந் மஹாபாரதக்ருத்பவேத்" இதி த்ருதீயேம்ஶே சதுர்த்தே(ச). அதாவது - வேதவ்யாஸனை உபகரணமாகக் கொண்டு மஹாபாரதம் செய்தாற்போலே யென்றபடி. இதுக்கென்றது - இப்பாட்டுக்கென்றபடி. ஆளவந்தார் நிர்வாஹத்துக்கு, "இன்தமிழ்பாடியவீசன்" என்றதிலேநோக்கு. ஈசன்-ஸமர்த்தனென்றபடி. எம்பெருமானார் நிர்வாஹத்துக்கு, "என்னால்தன்னை இன்தமிழ்பாடியவீசனை" என்றதிலே*

வத்யமாகத் தலைக்கட்டும்; சிறு ப்ரஜை யெழுத்திடப்புக்கால் தானே ஏதேனும் ஒருபடி யிட்டுத் தலைக்கட்டும்; பிதாவாதல் உபாத்யாயனாதல் இடப்புக்கால் தானே எழுத்தா யிருக்கும்: அங்ஙனன்றிக்கே, இவன்கையைப்பிடித்து இடுவிக்கப்புக்கவாறே, இவன் ஓரிடத்தே இழுக்க அவன் ஓரிடத்தேயிழுக்கக் குதறிக்கோட்டியாய் ரூபமழிந்து சிதறிப் போம்; அப்படியே, என்னை உபகரணமாகக்கொண்டு கவிபாடாநிற்கச்செய்தேயும், என்னால் வரும் தோஷம் தன்பக்கல் ஸ்பர்ஶியாதபடி பாடுவித்தான் என்கிறார்'' என்று. (க)

## ரண்டாம் பாட்டு.

என்சொல்லிநிற்பன்?என்னின்னுயிரின்றொன்றாய்
என்சொல்லால்யான்சொன்ன இன்கவியென்பித்துத்
தன்சொல்லால்தான்தன்னைக் கீர்த்தித்தமாயன்என்
முன்சொல்லும்மூவுருவாம்முதல்வனே.

ஆ.—(என்சொல்லி) - ம் ஒருவஸ்துவாகக்கொண்டு, என்சொல்லால் யான்சொன்ன இன்கவியென்பித்து ப்ரஹ்மருத்ராதிகளுக்கு ஆத்மாவாய்நின்று ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணினாற்போலே, என்னை உபகரணமாகக்கொண்டு திருவாய்மொழிபாடியருளின தன்னுடைய இந்த ணத்தை எத்தைச்சொல்லி பர்யவஸிப்பது? ா.

ஒ.—இரண்டாம்பாட்டில், "தானே தன்னைக்கவிபாடிவைத்து நான் தன்னைக் கவிபாடினேனென்று லோகத்திலே ப்ரஸித்தமாக்குவதே!" என்று "அவனுடைய படி யிருந்தபடியென்?" என்று, அவனுடைய ஆஶ்சர்யத்தைக்கண்டு விஸ்மிதராகிறார்.

[என்சொல்லிநிற்பன்] - எத்தைச்சொல்லி யரிப்பது? [என்னின்னுயிரின்றொன்றாய்] - என்னுடைய ஹேயமான ஆத்மா அவனுடைய விஷயீகாரத்தாலே இன்று ஒருசரக்காய். இன்னுயிரென்கிறது, விபரீதலக்ஷணை. [என்னென்று தொடங்கி]-சொல்லும்என்னதன்றிக்கே கவிபாடினேனும் நானன்றிக்கே யிருக்கச் சொல்லும் என்னதாக்கிக் கவிபாடினேனும் நானென்று லோகத்திலேப்ரஸித்தமாக்கித் தன்னுடைய சொல்லாலே தான் தன்னைக் கவிபாடின ஆஶ்சர்யபூதன். [என்னென்று தொடங்கி] - ப்ரஹ்மாதிகளை யுண்டாக்கி அவர்களுக்கு வேதங்களை ஓதுவிக்குமாபோலே தானே கவியைப்பாடி என்னைச்சந்தையிட்டுக் கற்பித்தானென்கிறது.

ப.—அநந்தரம், நான் தன்னைக் கவிபாடுகைக்கு, ப்ரதம ப்ரவர்த்தகனை தான் நான் பாடினேனென்று லோகத்தில் ப்ரஸித்தமாக்கித் தான் தன்னைப்பாடிக் கொண்ட ஆஶ்சர்யபூதனை எதுசொல்லி யரிப்பேன்? என்கிறார்.

---

நோக்கு- ஈசன் - ஹேயப்ரதிபடனென்றபடி. "க்ருஷ்ணமெளவாயநமஃ" இத்யாதி - ஆளவந்தார் நிர்வாஹத்திலே. 'போயெயவன்றைக்கன்று - என்றைக்கு மென்னை யுய்யக்கொண்டு - என்னைத் தன்னாக்கி, என்னால்தன்னை இன்தமிழ்பாடிய' என்றுதொடங்கி, 'என்சொல்லிநிற்பனோ' இத்யந்வயஃ.

என் - என்னுடைய, இன் - விஷயாந்தர ஸக்தமான, உயிர்—ஆத்மாவானது, இன்று - இன்று, ஒன்றாய் - தனக்கொரு வஸ்துவாய், 'என்- என்னுடைய, சொல்லால்- வசநவ்யக்தியாலே, யான் - நான் கர்த்தாவாக, சொன்ன -, இன்கவி - இனிய கவி,' என்பித்து - என்று நாட்டிலேப்ரஸித்தமாக்கி, தன் - தன்னுடைய, சொல்லால் - வாக்காலே, தான் - தான்கர்த்தாவாய்க்கொண்டு, தன்னை - தன்னைவிஷயமாக்கி, கீர்த்தித்த - ஸ்துதித்தவனாய், (நான் சொன்னேனென்கைக்கு) என் - எனக்குள்ளேயிருந்து, முன் சொல்லும் - முன்னுருச்சொல்லக்கடவ, மாயன் - ஆஶ்சர்யபூதனாய், (இதுக்கு உதாஹரணமென்னலாம்படி), மூவுருவாய் - மூர்த்தித்ரயத்தையுடையனாய், முதல்வன் - ஏகிபவித்திருக்கிற காரணபூதனை, என்சொல்லி நிற்பன்- எத்தைச் சொல்லி ப்ரிப்பேன்?அவனுபகாரம் பாசுரத்துக்கு நிலமல்லவென்று கருத்து.

ஈடு.—இரண்டாம்பாட்டில், தானே தன்னைக்கவிபாடி நான் கவிபாடினேனென்று லோகத்திலே ப்ரஸித்தமாக்குவதே! என்று, அவனுடைய ஆஶ்சர்யத்தைக் கண்டு விஸ்மிதராகிறார்.

[என்சொல்லி நிற்பன்] - அநாதிகாலம் அஹங்காரக்ரஸ்தனாய் விமுகனாய்ப்போந்த என்னை நிர்ஹேதுகமாக விஷயீகரித்தபடியை அநுஸந்தித்தால், நான் எத்தைச்சொல்லித் தறையில் கால்பாவுவது ? [என்னின்னுயிர்]-"அஸந்நேவ" என்கிற படியே உருமாய்ந்து கிடந்துபோன என்ஆத்மவஸ்து. இன்னுயிரென்றது - ஸமவஹஸி ப்ராயத்தாலே; ஸமவஹங்கீகாரத்துக்கு இலக்கானபடி சொல்லுகிறாராதல்; விபரீத லக்ஷணையாலே ஹேயமென்கிறாராதல். [இன்றொன்றாய்] - அவனுடைய விஷயீகாரத்தொருசரக்காய். இற்றைக்குமுன்பு இத்தை ஒன்றாக நினைத்திராராயிற்று; இன்றொரு வஸ்துவாயிற்று. இப்படி விஷயீகரித்து, கொண்டகாரியமென்? என்னில்:-[என்சொல்லால் இத்யாதி]— சொல்லும் என்னதாய், சொன்னேனும் நானாய் அதுதான் இனியகவியாம்படி நாட்டிலே ப்ரஸித்தமாக்கினேன். [என்பித்து] - "பாலேய் தமிழ ரிசைகாரர்பத்தர்பரவும்" என்கிறபடியே லோகப்ரஸித்தமாக்கி. தான்வென்று அர்ஜுநனைநாட்டாரோடொக்கப் புகழுமாபோலே.அதுதான் அப்படியன்றோவென்னில்:- [தன்சொல்லாலித்யாதி] - சொல்லும்தன்னது, சொன்னானும்தானே, சொல்லிற்றும் தன்னை. கவிபாட்டுண்டேனாகில்கிடீர் கவிபாடினேனாவது! தான் தன்னைக் கவிபாடினானாகில், உம்முடைய கவியென்று நாட்டிலே ப்ரஸித்தமாக்கினபடி யெங்ஙனேயென்னில்?- [மாயன்] — இதிறே அவனுடைய ஆஶ்சர்யஶக்தி யிருக்கும்படி. நீர்இதில் அந்வயித்தபடி என்?என்ன; என்னை உபகரணமாகக்கொண்டு தானே கவிபாடினான்.உபகரணமானபடிதான் என்?என்ன - [என்முன்சொல்லும்] - அவன்முன்னே சந்தையிடப் பின்னே சொன்னேன். தானே சொன்னானாகில் ஸ்ரீகீதைபோலே வறநுறுகலாமிறே. [மூவுருவா முதல்வனே]- அதுதான் எதுபோலவென்னில்?-த்ரிமூர்த்திகளென்று தன்னையும் கூட எண்ணும்படி ப்ரஹ்மாதிகளுக்குஅடியானாற்போலேயும்,ப்ரஹ்மாவை யோதுவித்து தேவர்களுக்கு வெளிச்சிறப்புப் பண்ணி அத்தை அவன்தலையிலே ஏறிட்டாற்போலேயும்,ருத்ரனுக்கு அந்தராத்மாவாய் நின்று த்ரிபுரஸம்ஹாரம்பண்ணி அவன்தலையிலே ஏறிட்டாற் போலேயும், தானே காரியஞ்செய்து பிறர்கையிலே ப்ரஸித்தியை ஏறிடுகை அவனுக்குப் பண்டே ஸ்வபாவ மென்கை.

ஈடு.—இரண்டாம்பாட்டு. தான் தன்னைக்கவிபாடி, நான்பாடினேனென்று லோகத்தில் ப்ரஸித்தமாக்குவதே! ஒருவனுடையபடி யிருந்தபடியென்! என்று அவனுடைய ஆஶ்சர்யத்தைக் கண்டு விஸ்மிதராகிறார். அநாதிகாலம் அஹங்காரமமகாரங்களாலே நஷ்டப்ராயமாய்த் தன்பக்கல் வைமுக்யத்தைப்பண்ணிப்போந்த என்னை, நிர்ஹேதுகமாக நான் ஆபிமுக்யம்பண்ணும்படி அவன் விஷயீகரித்தபடியை யநுஸந்தித்தால் எத்தைச்சொல்லி நான் தரையில் கால்பாவுவது? என்கிறார்.

[என்சொல்லிநிற்பன்] - அவன்என்னை விஷயீகரித்த விஷயீகாரம் நிர்ஹேதுகமென்னவோ? ஸஹேதுகமென்னவோ? இத்தலையை யாராய்ந்துபார்த்தவிடத்து ஒருஹேது காண்கிறிலர்; அத்தலையை யநுஸந்தித்துப் பார்த்தவிடத்துஒருஹேதுகாண்கிறிலர்; அநாதிகாலம் கைவிட்டதுக்கும் ஒருஹேதுகாண்கிறிலர்; இன்று கைக்கொண்டதுக்கும் ஒருஹேது காண்கிறிலர். என்றிய, அதுவென்? உடையவனுகையாலே தன்னுடைமையை வேண்டினபோது விஷயீகரித்தானுனலோ என்னில்?- அங்ஙனே செய்யப்போகிறதில்லை; தன்னுடைமையைத் தான் விஷயீகரித்தானுயிருக்கை யன்றிக்கே, இவர்வாக்காலே தன்னைக் கவிபாட, தானுமுளனுய்த் தன்விபூதியுமுண்டாயிற்றாக நினைத்திராநின்றான்அவன்; ஆகையாலேதான் தரிக்கைக்கு ஓர் ஊற்றங்கோல் காண்கிறிலர். [என்னின்னுயிரின்றேன்றாய்]-[இன்னுயிர்] - ஸாமவதஸிப்ராயத்தாலே; அவனுடைய அங்கீகாரத்துக்கு இலக்கானபடியாலே சொல்லுகிறாராதல்; அன்றிக்கே, விபரீதலக்ஷணையாலே பொல்லாதென்கிறாராதல். [இன்றேன்றாய்] - இன்றைக்குமுன்பு இதுதன்னை ஒன்றாக நினைத்திராராயிற்று; இன்றாயிற்றுஒருவஸ்துவாயிற்றது. இப்படி யும்மை விஷயீகரித்து அவன் தான்கொண்ட காரியந் தான்ஏது? என்ன-[என்சொல்லாலித்யாதி] - சொல்லும்என்னதாய், சொன்னேனும்நானாய், அதுதான் இனியகவியாம்படி நாட்டிலே ப்ரஸித்தமாக்கினான். ஶப்தமாகில் ஸர்வஸ்வாமி

---

இரண்டாம்பாட்டு.—என்சொல்லி இத்யாதி. "என் சொல்லால் யான்சொன்ன இன்கவியென்பித்துத் தன்சொல்லால் தான்தன்னைக் கீர்த்தித்தமாயன்" என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - தான்தன்னை இத்யாதி. "என்னின்னுயிரின்றேன்றாய் - என்சொல்லிநிற்பன்" என்றவற்றைக் கடாக்ஷித்துஅவதாரிகாந்தரம் - அநாதிகாலம் இத்யாதி.

"என்சொல்லிநிற்பன்"-எந்தஹேதுவைச்சொல்லித் தரிப்பனென்று ஶப்தார்த்தம்; ஒருவழியாலும்தரிக்கைக்குஆலம்பநமில்லையென்று கருத்து. தமக்கு ஆலம்பநமில்லாமையைப்பரக்க வுபபாதிக்கிறார்-அவன்என்னை என்றுதொடங்கி, ஊற்றங்கோல் காண்கிறிலர்என்னுமளவாலே. கீழ்வாக்யத்திலர்த்தத்தை வ்யுத்க்ரமமாக விவரிக்கிறார் - இத்தலையை இத்யாதிவாக்யத்வயத்தாலே. "இத்தலையை" இத்யாதிவாக்ய விவரணம் - அநாதிகாலம் இத்யாதிவாக்யத்வயம். அதாவது - அநாதிகாலம் உபேக்ஷித்து உத்கடயாத்ருச்சிகமடியான த்ருப்தவிஷயீகாரம்போலே நிர்ஹேதுகமென்னவும்போகாது; இத்தலையில் ஒருஹேதுகாணுமையாலே உபாஸகவிஷயீகாரம்போலே ஸஹேதுகமென்னவும் போகாது என்றபடி. ஸ்வாமியானவன், ஸ்வத்தையபேக்ஷிதமானபோது அங்கீகரிப்பன்; அநபேக்ஷிதமானபோது விட்டுவைப்பன்; ஆகையாலே, நிர்ஹேதுகமென்னவொண்ணுதோ என்கிற ப்ரதிவாத்யுக்தியை யநுவதித்துப் பரிஹரிக்கிறார் - என்றிய இத்யாதி வாக்யத்வயத்தாலே. என்றிய - எதுக்காக. அதுவென் - அதேது. ஊற்றங்கோல் - ஊன்றுகோல். இன்றென்றது - * மயர்வறமதிநலமருளின இன்று என்றபடி. மேலே "ஒன்றாய்" என்னுநிற்க, "இன்னுயிர்" என்று ஶ்லாகிக்கலாமோ? என்ன - ஸகவத் இத்யாதி. பரிஹாராந்தரம் - அவனுடைய இத்யாதி. மூன்றாமர்த்தம் - அன்றிக்கே விபரீத இத்யாதி. "இன்றேன்றாய்" என்றதுக்குஹாவம் - இன்றைக்குமுன்பு இத்யாதி. மேலுக்கவதாரிகை - இப்படியும்மை இத்யாதி. | அவன் ப்ரஸித்தமாக்கினானென்கிறதென்? வஸ்துதஃ ஶப்தம் உம்மதன்றோ

யான ஸர்வேஶ்வரனதாயிருக்கு மத்தனைபோக்கி, க்ஷேத்ரஜ்ஞ ஸம்ஸாரிக்கு இல்லையிறே. இனி, சேதநனுக்குத் தனித்து ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளுக்கு யோக்யதையில்லையிறே; ஸ்வரூபஸ்திதியாதிகள் தததீநமா யிருக்கையாலே. இதுதன்னை இனியகவியென்று நாட்டிலே ப்ரஸித்தமாக்கினான்: "பாலேய்தமிழரிசைகாரர்பத்தர்பரவுமாயிரம்" என்கிறபடியே; தான் வென்று அல்லாதாரோடு ஒக்கநின்று அர்ஜுநனைப்புகழுமாபோலே. "மலைபுரைதோள்" இத்யாதி. [செங்கணலைவலை] - "அவாக்யநாதர:" (அவாக்யநாதர:) என்றிருக்கக் கடவஅவன், அதுஅடைய அழிந்து எத்தத்தொடங்கினானாயிற்று. "இன்கவி யென்பித்து" என்னாநின்றீர், இங்ஙனன்றோ என்னில் ?—அன்று; பின்னைச்செய்தபடி யேன் ? என்னில்,-[தன்சொல்லாலித்யாதி] . சொல்லும் தன்னது, சொன்னானும் தான், சொல்லிற்றும் தன்னை. கவிபாட்டுண்டேன் நானாகில்கிடீர் கவிபாடினேன் நானாவது. தான் தன்னைக் கவிபாடினானாகில், நீர் கவிபாடினீரென்று நாட்டிலே ப்ரஸித்தமாக்கினபடி யெங்ஙனே என்னில், —[மாயன்] - சொல்லவேணுமோ? ஆஶ்சர்யஶக்தியுக்தனன்றோ? என்னை யுபகரணமாகக்கொண்டு தானே கவிபாடினான். 'உம்மை யுபகரணமாகக்கொண்டு கவி பாடினபடி எங்ஙனே?' என்ன,—[என்முன்சொல்லும்] - அவன் முற்சந்தையிடப் பின்னே நான் சொன்னேன். தான் சொன்னானாகில் ஸ்ரீகீதையோபாதி வறமுறுகலாய்ப்போமிறே. நம்பிதிருவழுதிநாடுதாஸர், ஸ்ரீகீதைபோவானொருவன் ஸந்த்யாஸதஸ்ஸிலேவந்துகண்டால், பின்னையிவனுக்கு உழக்கரிசியைக்கொடுப்பித்துவிடுமித்தனைபோக்கி அங்கு அவர்கள் உள்ளிடங்கொடார்கள்; திருவாய்மொழி யப்யஸித்தான் ஒருவிண்ணப்பஞ்செய்வான் சென்றால், ஸர்வேஶ்வரனும் க்ராமத்திலுள்ளாரும் புறப்பட்டு எதிர்கொண்டு தங்களிருப்பிடத்தை யொழித்து அவனுக்குக்கொடுத்து ஆதரியாநிற்பர்கள்" என்று ப்ரஸாதிப்பர். அதுதான் என்போல? என்றால்,—[மூவுருவாமுதல்வனே]-ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்து அவனை அத்யயநம் பண்ணுவித்துத் தேவர்களுக்கு வெளிச்சிறப்பைப்பண்ணுவித்து அதுதன்னை "ப்ரஹ்மா செய்தான்" என்று அவன்தலையிலே ஏறிட்டும், ருத்ரனுக்கு அந்தராத்மாவாய்ப் புக்குநின்று த்ரிபுரதஹநத்தைப் பண்ணுவித்து "ருத்ரன்செய்தான்" என்று அவன்தலையிலே ஏறிட்டும் விருதுபிடிக்கப்பண்ணினாற்போலே, தானே ப்ரபந்தத்தைப் பண்ணி, நான் பண்ணினே

---

என்ன - ஶப்தமாகில் இத்யாதி. சொன்னவர் நீரல்லீரோவென்ன - இனி, சேதநனுக்கு இத்யாதி. அதுக்குஹேது - ஸ்வரூபஸ்தித்யாதிகள் இத்யாதி. ஶப்தார்த்தம் - இதுதன்னை இத்யாதி. நாட்டிலே ப்ரஸித்தமாக்கினானென்கைக்கு, இவர்கவியை நாட்டார்தனியே தன்பர்களோ? என்ன - பாலேய்தமிழர் இத்யாதி. தானேசெய்து வேறொருவர்பக்கலிலே ப்ரஸித்தமாக்கினதுக்கு த்ருஷ்டாந்தம் - தான்வென்று இத்யாதி. தானேவென்று அவனைப்புகழ்ந்தானே என்ன, ப்ரமாணம் - மலை இத்யாதி, பெரியாழ்வார்திருமொழி. "அலைவலை"என்றது இங்குவேண்டுவது. அலைவலை - பஹுஜல்பம். அதுக்கர்த்தம் - அவாக் இத்யாதி, தடஸ்தசங்கை - இன்கவி இத்யாதி. 'தன்சொல்லால்" இத்யாதிக்கர்த்தம் - சொல்லும்தன்னது இத்யாதி. "என்சொல்லால் யான்சொன்ன" என்றதுக்கு ப்ரதிகோடிதயா, தன்சொல்லால் தான் கீர்த்தித்த என்னாதே, "தன்னை" என்று விசேஷிக்கிறதென்? என்ன; த்ருஷ்டாந்தார்த்தமென்கிறார் - கவிபாட்டுண்டேன் இத்யாதி கவிபாட்டுண்கை - கவிக்கு விஷயமாகை. மேலில்பதத்துக்கு சங்கதியிடுவாராக அதிஷ்டிகை - என்னையுபகரணமாக இத்யாதி. தான்சொல்லவொண்ணாதோ? இவரைக்கொண்டு சொல்லவேணுமோ? என்ன - தான்சொன்னாகில் இத்யாதி. வறமுறுகல் - கருகிப்போனது. ஸ்ரீகீதைக்கும் திருவாய்மொழிக்குமுண்டான வாசியை ஆப்தஸம்வாதத்தாலே தர்ஶிப்பிக்கிறார் - நம்பி இத்யாதி. ஸந்த்யாஸதஸ்ஸு - ஊர்ப்பொதுச் சாவடி. அதுதான் என்போல? என்றது - தான் கவிபாடி ஆழ்வார்மேலே ஏறிடுகிறதுதான் என்

னென்று என்தலையிலே ஏறிட்டு எனக்கு ஒருப்ரஸித்தியைத் தந்தான். தானே கார்யஞ் செய்து பிறர்தலையிலே ஏறிடுகை அவனுக்குப் பண்டே ஸ்வபாவங்கிடீர்! "[illegible]" (யோப்ரஹ்மாணம்விததாதிபூர்வம்யோவைவேதாம்ஶ்சப்ரஹிணோதி) என்று ப்ரஹ்மாவை ஓதுவித்ததும், "[illegible]" (விஷ்ணுராத்மாபகவதோபவஸ்யாமிததேஜஸ:! தஸ்மாத்தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஶம்ஸவிஷேஹேமஹேஶ்வர:.) 'இப்போதுதானே நடத்திக் கொண்டதேன்?' என்றால், -ஸ்வேநரூபேணநின்று கார்யஞ்செய்யுமாபோலே ப்ரஹ்மருத்ராதிகளைத் தனக்கு ஶரீரமாகக்கொண்டுநின்று ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைப்பண்ணி அவர்கள் மேலே ஏறிட்டாற்போலேகிடீர் என்மேலே ஏறிட்டுக் கவிபாடினேன் நானாகச்சோல்லித் தலைக்கட்டினபடியும் என்கைக்காகச் சோல்லிற்று. (உ)

## மூன்றாம் பாட்டு

ஆமுதல்வன்இவனென்று தன்தேற்றிஎன்
நாமுதல்வந்துபுகுந்து நல்லின்கவி
தூமுதல்பத்தர்க்குத் தான்தன்னைச்சோன்னஎன்
வாய்முதலப்பனை என்றுமறப்பனோ?

**ஆ.**—(ஆமுதல்வன்.) - ஆம்இவனே ஸர்வேஶ்வரன் என்று தன்னை உள்ளபடியே அறிவித்து, என் நாவைநியமித்துக் கொண்டுவந்து புகுந்து, * ஆயர்வறுமமரர்களுக்கு போக்யமாக நல்லனவாய் இனியவான கவிகளைத் தான் தன்னைச் சொல்லுயாகிற இம்மஹோபகாரத்தை என்று மறப்பன் ? என்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், என்னை உபகரணமாகக்கொண்டு தன்னைத்தானே கவிபாடின மஹோபகாரகனை மறக்க வுபாயமில்லை என்கிறார்.

[ஆமென்று தொடங்கி] -கவிபாடுகைக்கு உற்ப்புஆவான்இவனொருவனென்று தானே தெளிந்து. முதலாவானிவனென்று தன்னை நான்தேறப்பண்ணி யென்றுமாம். [என்நாமுதலென்று தொடங்கி] - தானே என்னுடைய வாக்ப்ரவ்ருத்திக்கு முதலாய் வந்துபுகுந்து ஸர்வலக்ஷணோபேதமாய் இனிதான திருவாய்மொழியை அநந்யப்ரயோஜநரான ப்ரயாநஸக்தர்களுக்கு போக்யமாக. [என்னென்று தொடங்கி]-என்னுடைய வாய்

---

போலே என்றபடி. "கீழ்ச்சொன்ன வேதப்ரதாநமும் த்ரிபுரதஹநமும்அவனேசெய்தான்" என்னுமதுக்குமேலே ப்ரமாணங்காட்டுவாராக பீடிகை-தானேகார்யம் இத்யாதி. ப்ரமாணந்தன்னை யருளிச்செய்கிறார் - யோப்ரஹ்மாணம் இத்யாதி. 'ஸவிஷேஹேமஹேஶ்வர:' என்றதும் என்றுகூட்டுவது. இதுக்கு, 'ஸ்வபாவங்கிடீர்' என்றுகீழோடே அந்வயம். "மூவுருவாமுதல்வன்" என்று - ஸ்வவ்யாபாரத்துக்குக் காரணமென்பானென்? என்ன; தான்செய்தகார்யம் தன்னதீநமானாற்போலே இவர்கள் செய்தகார்யமும் தன்னதீநமென்கைக்காகச் சொல்லுகிறதென்கிறார் - இப்போதுதானே இத்யாதி. அவர்கள்மேலே,ஏறிட்டதும் அதுபோலேகிடீர் என்றுஅத்யாஹார்யம். 'என்னின்னுயிரின்றொன்றாய்' என்றுதொடங்கி, 'மூவுருவர்முதல்வன் - என்முன்சொல்லும் - என்சொல்லிநிற்பன்' இத்யந்வய:.(உ)

த்தப்ரயோஜநபந்துவை என்று மறப்பனோ? என்னுடைய வாய்க்குமுதலான உபகாரகனை மறக்க உபாயமுண்டோ? என்றுமாம்.

ப.—அநந்தரம், பக்தர்களுக்காக என்னைக்கொண்டு தான் தன்னைக் கவி பாடின உபகாரகனை ஒருகால் மறக்க விரகுண்டோ ? என்கிறார்.

முதல்வன் - காரணபூதனான தான், இவன் ஆம் - இவன் கவிபாடுகைக்காம், என்று-,தன்-தன்னை, தேற்றி-(என்பக்கலிலே) தேறும்படிபண்ணி,(அதுக்கீடாக), முதல்-முந்துற,என் நா - என்நாவிலே,வந்துபுகுந்து-, நல் - அர்த்தசப்தலக்ஷணங்களில் குறைவற்றிருப்பதாய், இன்-ஸந்தர்ப்பஸாரஸ்யத்தையுடைய, கவி-கவியை, தூ-ஸத்வஶுத்தி, முதல்- முதலான, பத்தர்க்கு-பக்திகுண யோகத்தையுடையவர்க்குஅநுபாவ்யமாம்படி, தான்-தானே,தன்னை-,சொன்ன-சொல்லாநின்றுகொண்டு,என்வாய்- என்வாக்வ்ருத்திக்கு, முதல் - முதலான, அப்பனை - உபகாரகனை, என்றுமறப்பன்-? அவ்வுபகாரகத்வம் ப்ரகாசியாதது ஒருகாலமுண்டாகிலிறே மறக்கலாவதென்றுகருத்து. கவிபாடுகைக்கு ப்ரயோஜநவா னிவனென்று என்னைத் தன்பக்கலிலே தேறும்படிபண்ணி என்றுமாம். வாய்முதலென்று - வாய்த்த ஹேதுபூதனென்றுமாம். தூமுதல் பத்தரென்று-அநந்ய ப்ரயோஜநராய் ப்ரதாநரான பக்தரென்றுமாம்.

இ—மூன்றும்பாட்டில், பார்ஶ்வஸ்தர் "உமக்கினி மறந்துபிழைக்கலாமத்தனை" என்ன, என்னையுபகரணமாகக் கொண்டு தன்னைத்தான் கவிபாடின மஹோபகாரகனை மறக்க உபாயமில்லை என்கிறார்.

[ஆமுதல்வனிவனென்று] - முதலாமவன் இவன்என்று ; கவிபாடுகைக்கு முதலாமவன்-அடியாவான்-இவனென்று. ஆமுதல்வன் - முதலாமவன். [தன்தேற்றி]- என்பக்கலிலே தன் திருவுள்ளத்தைத் தெளியும்படி பண்ணியென்னுதல்; "ஜகத்காரண பூதன், கவிபாடுகைக்குஇவனும்" என்று தன்னை நான் தேறப்பண்ணி, ஸம்ஸாரத்தை என்னைக்கொண்டு திருத்தப்பார்த்தேன்னுதல் ; எனக்குத் தன்வாசியை அறிவித்தானென்னுதல். [என்நாமுதல் வந்துபுகுந்து] - ஸ்ரீவால்மீகிபகவான்கவிபாடிற்று, ஈஶ்வரன் திருவுள்ளமடியாக ப்ரஹ்மா ஸரஸ்வதியை அவன்நாவிலே ஏவியிறே ; அங்ஙன் இடையீடின்றிக்கே தானே என்னுடைய வாக்ப்ரவ்ருத்திக்கு முதலாய்வந்து புகுந்தேன்னுதல் ; முந்தறநாவிலே வந்து புகுந்தேன்னுதல். [நல்லின்கவி] - ஸர்வலக்ஷணோபேதமாய், அதொழிய, சொல்லுத்தானே செவ்விப்பாடுடைத்தாம்படி இனிதான கவி. [தூமுதற்பத்தர்க்கு] - அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளும், "கேட்டாரார் வானவர்கள்" என்கிறபடியே விஶ்ராம்படி என்னுதல் ; ஸம்ஸாரத்தில் தலையான முமுக்ஷுக்களென்னுதல். [தான் தன்னைச்சொன்ன] - என்னையுபகரணமாகக்கொண்டு, கர்த்தாவும் தானேயாய் கர்மீபவிப்பானும் தானேயானான். [என்வாய் முதலப்பனை] - எனக்குவாய்த்த காரணபூதனான உபகாரகனை. [என்றுமறப்பனோ] - இனியொரு நாளும் மறக்கவுபாயமில்லை. இதுக்கு முன்புள்ள காலமடங்கநினைக்கவரிதானாற்போலே, இனிமேலுள்ள காலமடங்க மறப்பனென்றால்தான் மறக்கப்போமோ ?

ஈடு.—மூன்றும்பாட்டு. ப்ரத்யுபகாரம் பண்ணுதொழியவு மாங்கிடீர், நான் மறந்துபிழைக்கப் பெற்றேனாகில் ! என்கிறார்.

---

மூன்றும்பாட்டு.—ஆமுதல்வன் இத்யாதி. "வாய்முதல் அப்பனை யென்று மறப்பன்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - ப்ரத்யுபகாரம் இத்யாதி.

[ஆமுதல்வனிவனென்றுதன்தேற்றி] - முதல்வனும்இவனென்று தன்பக்கலிலே எனக்குத் தெளிவுண்டாம்படியாகப்பண்ணி: காரணவாக்யங்களில் உபாஸ்யனுகச் சொல்லப்படுகிறுன் தானேயென்று தன்பக்கலிலே நான் தெளியப்பண்ணியென்னுதல்; அன்றிக்கே, பரமபதத்தோபாதி ஸம்ஸாரத்தையும் திருத்தநினைத்தோம், அதுக்கு இவன்முதலாம்-அடியாம்இவன்-என்று, தன்தேற்றி - என்பக்கலிலே தன் ஸ்வரூபாதிகளைத் தெளியப்பண்ணி யென்னுதல். இங்கேஅருளிச்செய்யும்வார்த்தை - "திருப்புற்றுக்குக் கிழக்கே கரியமாணிக்காழ்வார்திருமுன்பின் ஸோபாநத்திலே ஆளவந்தார் எழுந்தருளியிருக்க, உடையவர் திருப்புற்றுக்குக் கிழக்காக எழுந்தருளிநிற்கிறவரைக் கண்டு, 'ஆமுதல்வனிவன்' என்றுஅருளிச்செய்தாராம்" என்று. [என்நாமுதல்வந்துபுகுந்து] - ஸர்வேஶ்வரன் ப்ரஹ்மாவைக்கடாக்ஷித்து, அவன்பின்னை "மச்சந்தாதேவதே ப்ரஹ்மந் ப்ரவ்ருத்தேயம்ஸரஸ்வதீ" (மச்சந்தாதேவதேப்ரஹ்மந் ப்ரவ்ருத்தேயம்ஸரஸ்வதீ) என்கிறபடியே அவன் ஸரஸ்வதியை யேவி, இப்படி நாலிரண்டுநிலைநின்றிறே ஸ்ரீவால்மீகி ப்ரவானைப் பேசுவித்தது; அங்ஙனேர்இடையீடின்றிக்கே, என்னுடைய நாக்கிலே முற்பாடனுய்வந்து புகுந்தேன்னுதல். அன்றிக்கே, என் நாவுக்குஅடியாய் வந்துபுகுந்தேன்னுதல். [நல்லின்கவி] - லக்ஷணேபேதமாய், அந்தலக்ஷணங்கிடக்கச்செய்தே சொல்லிலினிமைதானே ஆகர்ஷகமாம்படி இனிதான கவிகளை. [தூமுதல்பத்தர்க்கு] - அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளுக்கு, "கேட்டாரார் வானவர்கள்" என்கிறபடியே, அவர்கள்கொண்டாடும்படிசொன்ன என்னுதல். ஸம்ஸாரத்தில் தலையான முமுக்ஷுக்களுக்கு. [தான்தன்னைச்சொன்ன] - தானேசொல்லுதல் நானேயொருபடிசொல்லுதல் செய்கையன்றிக்கே, * என்நாமுதல்வந்துபுகுந்து தான் தன்னைச் சொன்னுனுயிற்று. [என்வாய்முதலப்பனை] - எனக்குவாய்த்த காரணபூதனுன மஹோபகாரகனை யென்னுதல்; "என் நாமுதல்" என்கிறதுதன்னையே யநுபாஷித்து, என் வாக்குக்கு முதலானஅப்பனை யென்னுதல். [என்றுமறப்பனே] - முன்புஅநாதிகாலம் மறந்துபோந்ததாகில் இனிமேல் நினைக்கைக்குஉடலான காலத்தையெல்லாம் மறக்கைக்குஉடலாக்கினுல்தான் மறப்பனே? முன்புநினைக்கையிலுள்ள அருமையோபாதியும் போரும்இனி மறக்கையிலுள்ள அருமையும்: இனி ஏதேனுமொருநாள்தான் என்னுலே மறக்கப்போமோ? (௬)

† "தன்தேற்றி" என்று- தச்சப்தத்தாலே ஈஶ்வரனைச்சொல்லி, தன்பக்கலிலே தெளிவைப் பண்ணியென்றபடி. விவரணம் - காரணவாக்யங்களில் இத்யாதி. அர்த்தாந்தரம் - அன்றிக்கே இத்யாதி. "தன்தேற்றி" என்றதுக்கு - தன் ஸ்வரூபாதிகளை என்பக்கலிலே தெளியப்பண்ணி என்றிரண்டாமர்த்தம். அதாவது - ஜகத்தைத்திருத்தத்தக்க ஜ்ஞாநமுண்டாம்படி மயர்வறமதிநல மருளுகை. ப்ராஸங்கிகமாக ஐதிஹ்யம் - இங்கே இத்யாதி. இங்கேயென்றது-ஜகத்தைத் திருத்துகைக்கு இவனடியாம் என்று சொன்ன இவ்விடத்திலே யென்றபடி. என்னுவிலே முற்பாடனுய்வந்து புகுந்தென்னுமதுக்கு வ்யாவர்த்யம் - ஸர்வேஶ்வரன் இத்யாதி. இடையீடு - வ்யவதாநம். என்னுவிலே, முதல்-முற்பாடனுய், அத்வாரகமாக ப்ரவேசித்தென்னுதல்; என்னுவுக்குமுதலான காரணமாய்வந்து புகுந்தென்னுதல். "ராகவஸ்ய சரிதம் க்ருத்ஸ்நம் குரு த்வம் ருஷிஸத்தம । மச்சந்தாதேவதே ப்ரஹ்மந்" இத்யாதி பாலகாண்டே. என்னுவுக்கடியாயென்றது - என்வாக்ப்ரவ்ருத்திக்கடியாய் என்றபடி. தூயராய் - பரிசுத்தராய். ப்ரதாநரான நித்யஸூரிகளுக்கு என்று முந்தின அர்த்தம். "முதல் பத்தர்" என்றதுக்கு அர்த்தாந்தரம் - ஸம்ஸாரத்தில். இத்யாதி எம்பெருமானுர் நிர்வாஹத்திலே வ்யாவ்ருத்தி - தானேசொல்லுதல் இதயாதி. "என்றுமறப்பனே" என்றதுக்கு பாவம்-முன்புஅநாதி இதயாதி. கீழ்வாக்ய விவரணம் - முன்புநினைக்கை இத்யாதி வாக்யத்வயமும். (௬)

† இந்த இடத்திலே வாக்யம் அநந்விதம்; சரியானபாடம் கோசாந்தரத்திற் பார்க்கவேணும்

# நான்காம் பாட்டு.

அப்பனையென்றுமறப்பனேனென்னாகியே
தப்புதலின்றித்தனைக்கவிதான்சொல்லி
ஒப்பிலாத்தீவினையேனையுய்யக்கொண்டு
செப்பமேசெய்துதிரிகின்றசீர்கண்டே.

ஆ.—(அப்பனையென்று) - என்னை யுபகரணமாகக்கொண்டு கவிசொல்லா நிற்கச்செய்தே, தப்பாதபடி சொல்லி ஒப்பிலாத்தீவினையேனாயிருக்கச்செய்தே என்னை ஆத்மார்த்தமாக அடிமைகொண்டு, மேன்மேலன நன்மைசெய்து திரிகின்ற சீர்கண்டு, அப்பனையென்று மறப்பனோனென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், தானே தன்னைக் கவிபாடிக்கொண்டானாகில் ஆஸ்சர்ய மில்லை; அதுக்குப் பங்கன்றிக்கேயிருக்கிற என்னைக்கொண்டே தப்பாமே கவிபாடின இவ்வுபகாரத்தை மறக்க வுபாயமில்லை யென்கிறார். [ஒப்பிலாத் தீவினையேனை யென்று தொடங்கி] - ஹேயப்ரத்யநீகத்வ ஸர்வஜ்ஞத்வாதிகளால் தன்னோடொத்தாரில்லாதாப் போலே ஹேயத்வாஜ்ஞத்வாதிகளால் ஒப்பில்லாதஎன்னைவிஷயீகரித்து செவ்விதாகப் பரிமாறின நீர்மையை அநுஸந்தித்து.

ப.—அநந்தரம், என்விரோதியைப்பாராதே விரும்பி என்னைக்கொண்டு தப்பாமல் கவிபாடுவித்துக்கொண்ட மஹோபகாரத்தைக் கண்டுவைத்து அவனைமறக்கும் படி யென்? என்கிறார்.

என்னாகியே - என்பக்கலிலேதானாய், தப்புதல் இன்றி - தப்புதல் இல்லாதபடி, தனை - தன்னை, தான் - தானே, கவி சொலி - கவிசொல்லி, ஒப்பு இலா - ஒப்பற்றிருப்பதாய், தீ - க்ரூரமான, வினையேனை - பாபத்தையுடையேனான என்னை, உய்ய - உஜ்ஜீவிக்கும்படி, கொண்டு - கைக்கொண்டு, (அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரோடு பரிமாறுமாபோலே), செப்பமே - செவ்வையே, செய்துதிரிகின்ற - செய்துவர்த்திக்கிற, சீர் - சீலத்தை, கண்டு - கண்டுவைத்து, அப்பனை - இப்படி யுபகாரகனானவனை, என்று - அபகாரியானபோது தான், மறப்பன் - மறப்பனோ ?

இ.—நாலாம்பாட்டில், தானே கவிபாடிக்கொண்டால் நிரவத்யமாய் என்னைக் கொண்டு தப்பாமே கவிபாடின இவ்வுபகாரத்தை மறக்க வுபாயமில்லையென்கிறார்.

[அப்பனை என்றுமறப்பன்] - இவ்வுபகாரம் பண்ணினவனை இனி அபகாரம் பண்ணினால்தான் மறப்பனோ? [என்னாகியே] - என்னை உபகரணமாகக்கொண்டே. [தப்புதலின்றி] - என்னோட்டை ஸம்ஸர்கத்தால் வந்த தோஷம் தட்டாமே. தானே கவிபாடினானாகில் நிரவத்யமாம்; இதிறேயரிது. [தன்னைக்கவிதான் சொல்லி] - தனக்கு ஸத்ருஸமாகத் தான் சொல்லி. [ஒப்பிலாத் தீவினையேனை] - ஹேயப்ரத்யநீகத்வத்தில் தன்னோடொத்தா ரில்லாதாப்போலே, ஹேயமான பாபத்துக்கு எனக்கொப்பில்லாத என்னை. ஸர்வஜ்ஞத்வ ஸர்வஸக்தித்வத்தால் குறைவற்றிருக்குமாபோலே, அஜ்ஞாநாஸக்திகளால் குறைவற்ற என்னை. [உய்யக்கொண்டு] - “ஸதூணஸேத பதெதாவிஷ-ாஃ”

*என்னும்படி விஷயீகரித்து. [செப்பமேசெய்து திரிகின்ற] - குடிலஹ்ருதயனான என்னோடே, நித்யஸூரிகளோடு பரிமாறுமாபோலே செவ்வியனாய் வர்த்திக்கிற. [சீர் கண்டே] - ஶீலாதிகுணங்களை அநுஸந்தித்து, அப்பனை என்றுமறப்பன்?*

ஈடு.—நாலாம்பாட்டு. தானே தன்னைக் கவிபாடிக்கொண்டானாகில் ஓராஶ்சர்ய மில்லை; அதுக்குப் பாங்கன்றிக்கேயிருக்கிற என்னைக்கொண்டு தப்பாமே கவிபாடின இவ்வுபகாரத்தை இனி மறக்கவுபாயமில்லையென்கிறார்.

[அப்பனையென்றுமறப்பன்] - உபகாரகனானவனை நான் என்று மறப்பன்? இனி, அவன்உபகாரம்பண்ணினால்தான் மறக்கப்போமோ? உமக்கு மறக்கவொண்ணாமைக்கு அவன்பண்ணினவுபகாரமேதென்றால்? - [என்னாகியேதப்புதலின்றித்தனைக் கவிதான்சொல்லி] - என்னை யுபகரணமாகக்கொண்டு கவிபாடுகிறவிடத்து, என்னுடைய ஸ்பர்ஶத்தாலேவந்த தோஷம் தட்டாதபடி கவிபாடினான். [என்னாகியே] - என்பக்கலிலேதானாய், இவ்விடத்துக்குஎம்பாரருளிச்செய்யும்படி:-"தான்பாடினானாகில் நிரவத்யமாய்த்தலைக்கட்டும்: நான் பாடினேனாகிலும் வருந்தியொருபடி தலைக்கட்டும். என்னையுபகரணமாகக்கொண்டு கவிபாடாநிற்கச்செய்தேயும் என்னோட்டை ஸ்பர்ஶத்தால் வந்ததோஷம் தட்டாதபடி கவிபாடித்தலைக்கட்டினான்" என்று. [தனைக்கவிதான் சொல்லி] - விஷயாநுரூபமாகக் கவிபாடினான். [ஒப்பிலாத்தீவினையேனையுய்யக் கொண்டு] - என்னையுபகாரணமாகக்கொண்டு இப்படி கவிபாடுவித்தது, முன்பு நின்ற நிலையிற்காட்டில் நான்எவ்வளவுபுகுரநின்றேனாக; நான் முன்புற்றையிற்காட்டில்ஓரடி வர நின்றதுண்டோ? [ஒப்பிலாத்தீவினையேனையுய்யக்கொண்டு] - நானும்அவனுக்கொப்பன் என்கிறார். ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வங்களுக்கு அவனுக்கு ஒப்பிலாதாப்போலேயாயிற்று,அஜ்ஞாநாஶக்திகளுக்கு எனக்கொப்பில்லாதபடியும். [உய்யக்கொண்டு] "ஸங்தமேநம்தோவிது:" (ஸந்தமேநம்தோவிது:) என்கிறபடியே என்னை உஜ்ஜீவிக்கும்படி கைக்கொண்டு. [செப்பமேசெய்துதிரிகின்ற] - குடிலஹ்ருதயனாயிருக்கிற என்னோடே,அஸ்ப்ருஷ்ட்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளோடு பரிமாறுமாபோலே என்னுடனே சேவ்வையே பரிமாறினானென்னுதல்; எனக்கு ரக்ஷைபண்ணிப் போருகிற என்னுதல். [சீர்கண்டே] - இப்படியிருக்கிற ஶீலாதிகுணங்களை யநுஸந்தித்து - அப்பனைஎன்று மறப்பன்?

---

*நாலாம்பாட்டு.—அப்பனை இத்யாதி. "என்னாகியேதப்புதலின்றி, ஒப்பிலாத்தீவினையேனை யுய்யக்கொண்டு, அப்பனை என்றுமறப்பன்" என்கிறவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - தானேதன்னை இத்யாதி.*

*மறக்கப்போகாமையின் உறைப்பை அருளிச்செய்கிறார் - இனி,அவன் இத்யாதி. "என்னாகியேதப்புதலின்றி" என்றவநந்தரம், "ஒப்பிலாத்தீவினையேனை" என்றதுக்குபாவம் - என்னை யுபகரணமாக இத்யாதி. உக்தத்துக்கு ஸம்வாதம் --இவ்விடத்துக்கு இத்யாதி. அவனுக்கொத்தபடி எப்படியென்ன - ஸர்வஜ்ஞத்வ இத்யாதி. செப்பம் - ஆர்ஜவமும், ரக்ஷையும். 'என்னாகியே தப்புதலின்றி' என்று தொடங்கி, 'திரிகின்றசீர்கண்டு - அப்பனைஎன்று மறப்பன்' இத்யந்வய:.* (ச)

சோர்வாலே வந்ததோன்றன்றே?'' என்று, ரக்ஷகராகையாலே நாள்தோறும்புதியராயிருப்பர். ''ஹ்ரீரேஷாஹிமமாதுலா'' (ஹ்ரீரேஷாஹிமமாதுலா) என்னக்கடவதிறே. இவனளவல்லவாயிற்று, பிற்பாட்டுக்கு அவன் லஜ்ஜிக்கும்படி. [எந்நாள்சிந்தித்தார்வனோ]-பண்ணினவுபகாரம் கனத்திராநின்றது; உபகாரஸ்ம்ருதிக்குக் காலம்போருகிறதில்லை ; நான் என்செய்வேன் ? ஶரீரவிஶ்லேஷாநந்தரத்தில்தானே வாய்புகுநீராகையால் அநுஸந்திக்கைக்கு அவகாசமில்லை; இங்கிருக்கும்நாள் காலம்போருகிறதில்லை; பண்ணினஉபகாரமோ கனத்திராநின்றது; நான் என்செய்கேன்? (எ)

## எட்டாம் பாட்டு.

ஆர்வனோஆழியங்கை எம்பிரான்புகழ்
பார்விண்நீர்முற்றுங்கலந்துபருகிலும்
ஏர்விலாஎன்னைத் தன்னாக்கிஎன்னால்தன்னைச்
சீர்பெறஇன்கவிசொன்னதிறத்துக்கே.

*ஆ.—(ஆர்வனோ.) - என்னைக்கொண்டு தானும் உளனாம்படி கவிபாடின அந்தக்குணத்தை, இவ்வண்டாந்தர்வர்த்திகளான அஸங்க்யேயஆத்மாக்களுடையவாகாத்யுபகரணங்களையும் அயர்வறுமமரர்களுடைய வாகாத்யுபகரணங்களையுங்கொண்டு அநுபவித்தால்தான் ஆர்வனோ ? என்கிறார்.*

*ஒ.—எட்டாம்பாட்டில், என்னைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட இம்மஹாகுணத்தை, உபயவிபூதியிலுள்ளாருடையபோக்த்ருத்வ ஶக்தியையும் அதுக்கீடான வாஹ்யபகரணங்களையும்பெற்று அநுபவித்தாலும்ஆரேனென்கிறார்.*

*[ஆர்வனோவென்று தொடங்கி] - நான் கவிபாடுகைக்குப் பாங்காம்படியாகத் தன் திருவழகைக் காட்டின மஹோபகாரகனுடைய குணங்களை ஸகலசேதநரையும் துணையாகக்கொண்டு பருகிலும்ஆர்வனோ ? [ஏர்விலாவென்னைத்தன்னாக்கி] - தன்னைக் கவிபாடுகைக்கு யோக்யதை இன்றிக்கேயிருக்கிற என்னைத் தன்னோடொக்கப்பண்ணி: தனக்காக்கி யென்றுமாம். [என்னாலென்று தொடங்கி] - என்னாலே தன்னை நிறம் பெறும்படி கவிசொன்ன படிக்கு.*

*ப.—அநந்தரம், ஸமஸ்தவிபூதியிலுமுள்ள ஆகாரங்களை யுடையனாய்க் கொண்டு மஹோபகாரகனை உன்புகழை யநுஸந்தித்தாலும் ஆர்வனோ? என்கிறார்.*

---

நோவுபட்டிருக்குமோ? என்ன - ஹ்ரீரேஷாஹி இத்யாதி. ''பூர்வஜஸ்யாநுவ்ருத்த்யர்தம் ஹ்ரீரேஷாஹிமமாதுலா । யதீத்ருஶமேவம்விதோரணாவஸ்மதீயோவர்தத:'' இத்யாரண்யகாண்டே ராமஃ(௪௦-க).''அதுலா'' என்றதுக்கர்த்தம்-இவனளவல்லஇத்யாதி. ''எந்நாள்சிந்தித்தார்வன்'' என்றதுக்குஹாவம் - பண்ணினவுபகாரம் இத்யாதிவாக்யத்வயம். ''எந்நாள்'' என்கிறதென்? காலமில்லையோ? என்ன - ஶரீர இத்யாதிவாக்யத்ரயம். ''வண், தீம், கவி'' என்று பதச்சேதம். தீம்-இனிமை. (எ)

ஏர்வு - கவிபாடுகைக்குத் தகுதியான ஜ்ஞாநஶக்த்யாதிகள், இலா - இல்லாத, என்னை - என்னை, தன்னாக்கி - தன்விஷயத்திலே ஜ்ஞாநாதிகளை யுண்டாக்கி, என்னால் - என்னையிட்டு, தன்னை - பூர்ணனான தன்னை, சீர் - சீலாதிகுணலாபம், பெற - பிறக்கும்படி, இன் - இனிய, கவி - கவியை, சொன்ன - சொன்ன, திறத்துக்கு - ப்ரகாரத்துக்கு, ஆழியங்கை - கையுந்திருவாழியுமான அழகைக்காட்டி, எம்பிரான் - அறிவைப் பிறப்பித்து உறவையுண்டாக்கின என்ஸ்வாமியுடைய, புகழ் - குணப்ரதையை, பார் - பூம்யுபலக்ஷிதமான அவதாரஸ்த்தலத்திலும், விண் - பரமாகாசரூபமான பரஸ்த்தலத்திலும், நீர் - க்ஷீரார்ணவமான வ்யூஹஸ்த்தலத்திலுமுள்ள, முற்றும் — சேதநரெல்லாருமாய், கலந்து - கலந்து, பருகிலும் - அநுபவிக்கிலும், ஆர்வனோ - த்ருப்தனாவனோ?

இ.—எட்டாம்பாட்டில், என்னைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட இம்மஹாகுணத்தை, உபயவிபூதியிலுள்ளாருடைய போக்த்ருத்வஶக்தியையும் அதுக்கு ஈடான வாஹ்யோபகரணங்களையும் பெற்று இவ்வுபகாரத்தையநுபவித்தாலும் ஆரேனென்கிறார்.

யங்கை யெம்பிரான்புகழ் பார்விண்நீர்முற்றுங் கலந்து பருகிலும் - ஆர்வனோ]- [ஆழியங்கை யெம்பிரான்புகழ்] - எனக்கு விஷயமாகக் கையுந்திருவாழியுமான அழகைக்காட்டின உபகாரகனுடைய குணங்களை, "ஆய்க்கொண்டசீர்வள்ளலாழிப் பிரானெனக்கேயுளன்" என்று கையுந்திருவாழியுமாய் நின்ற அழகுக்குத்தோற்றுக் கவிபாடுமவன் நானென்கிறாரிறே. தன்ஸ்வரூப குணங்களையும் ஆத்ம குணங்களையும் எனக்கு விஷயமாக்கின வுபகாரகனென்கை. [பார்இத்யாதி] - பூமியிலும் ஊர்த்வலோகத்திலும் ஜலங்களிலுமுள்ள ஸகல சேதநருடைய போக்த்ருத்வத்தையும் வகாத்யுபகரணங்களையும் துணையாகக்கொண்டு அநுபவித்தாலும் ஆர்வனோ? ஆராதபடிபண்ணின வுபகாரந் தானேதென்ன? - [ஏர்விலாவித்யாதி] - கவிபாடுகைக்கு யோக்யதைகளொன்றின்றிக்கே யிருக்கிறஎன்னை. கீழ், "ஏர்" என்று இச்சையை அழகாகச் சொல்லிற்று; இங்கு இச்சைக்கும் ஹேதுவான ஜ்ஞாநாதிகளைச் சொல்லுகிறது. [தன்னை] - ஸமஸ்த கல்யாணகுணாத்மகனை. [சீர்பெற] - என்கவிபாட்டாலே அந்தகுணங்களைப் பெற்றானும்படி. [இன்கவிசொன்ன திறத்து] - சீர்பெறாவிடிலும் பாசுரம்அமைந்திருக்கிற கவியைச் சொன்னபடிக்கு. திறம் - படி. 'ஆழியங்கையெம்பிரான்' என்று தொடங்கி, 'கலந்து பருகிலும் - ஆர்வனோ' - உயர்வறவுயர்நல முண்டாயிற்று இக்கூப்பீட்டாலே.

ஈடு:—எட்டாம்பாட்டு. நான்ஒருவனுமிருந்து ஜீவிக்கும்நாள் உபகாரஸ்ம்ருதிக்குக் காலம் போராதேன்று நோவுபடுகிறேனோ? - என்னுடைய உபகாரஸ்ம்ருதியையும் அபேக்ஷையையு முடையராய்க்கொண்டு புறம்பே அந்யபரராயிருக்கிற பகவத்வ்யதிரிக்த ஸமஸ்தசேதநரும் என்னுடனேகூடி நெடுங்காலமெல்லாம் நானும்அவர்களுங்கூடி நின்றுஅநுபவித்தால்தான் ஆர்வனோ?என்கிறார்.

---

எட்டாம்பாட்டு.—ஆர்வனோ இத்யாதி. "'பார்விண்நீர்முற்றும்கலந்துபருகிலும்' என்றதுக்கு அவதாரிகையிலே ஒருபொருளும், பாட்டிலே இரண்டுபொருளும்" என்றருளிச்செய்வர். பாரிலுள்ளார், விண்ணிலுள்ளார், நீரிலுள்ளார், இவர்களெல்லாருங்கூடிநின்று அவன்குணங்களையநுபவித்தாலும் த்ருப்திபிறவாதென்று ஒருபொருள்; இத்தை அருளிச்செய்கிறார் - நானொருவனும் இத்யாதி.

[...த்யாதி] - ஆழியங்கையெம்பிரான்புகழைப் பார்விண்ணீர்முற்றுங்கலந்துபருகிலும் - நான்ஆர்வனோ? தன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளை என்னுடையகவிக்கு விஷயமாக்கின மஹோபகாரகனுடைய புகழை. "வாய்கொண்டு மானிடம்பாடவந்தகவியேனல்லேனாய்கொண்ட சீர்வள்ளலாழிப்பிரானெனக்கேயுளன்" என்கிறாரிறே. பாரிலுள்ளார், விண்ணிலுள்ளார், நீரிலுள்ளாரான இவர்களெல்லாருடைய வாகாத்யுபகரணங்களையும் ஹோக்த்ருத்வத்தையும் ஶக்திவிசேஷங்களையும் உடையேனாய்க்கொண்டு காலமெல்லாம்நின்று அநுஹவித்தாலுந்தான் நான்ஆர்வனோ? கலக்கை - அவற்றோடேசேர்க்கை. அன்றிக்கே, பார்விண்ணென்று - உபயவிபூதியையுஞ்சொல்லி, நீரென்று - நீர்மையாய், ஸ்வஹாவமாய், உபயவிபூதியிலுள்ளோர் ஹோக்த்ருத்வஶக்தி ஸ்வஹாவத்தையுமுடையேனாய்அநுஹவித்தாலும் என்றாகவுமாம். நீர் இப்படி எல்லாருடைய உபகரணங்களையும்உடையீராய்க்கொண்டு காலமெல்லாம்அநுஹவியாநின்றாலும் ஆராமைக்கு அவன்பண்ணின உபகாரந்தான்ஏது? என்றால்,—[ஏர்வுஇத்யாதி] - இங்கு, நன்மையில்லையாகச் சொல்லுகிறது. கீழே - கவிபாடுகைக்குஇடமான இச்சையுமில்லையென்றார்; இங்கு, அவ்விச்சைக்குஅடியான யோக்யதையுமில்லையென்கிறார், "ப்ராஹ்மணா

ப்ர.—[...இத்யாதி] - [ஏர்விலாவென்னைத்தன்னாக்கி] - ப்ருஹதா ரண்யகே [௪ - ௪] "தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸாऽநாஶகேந."

அந்வயிக்கிறார் - ஆழியங்கை இத்யாதி. ஶப்தார்த்தம் - தன்னுடைய இத்யாதி. கையுந்திருவாழியுமான தன்னை இவர்கவிக்கு விஷயமாக்கினானோவென்ன - வாய்கொண்டு இத்யாதி. "ஆழியங்கை" என்று - ரூபமும், "எம்பிரான்" என்று - குணமும் சொல்லுகையாலே, ஸ்வரூப விபூதிகளும் அர்த்தாத்ஸித்தங்கள். அவதாரிகையிலே - பாரிலுள்ளாரும், விண்ணிலுள்ளாரும், "நீர்" என்று - கீழில் லோகங்களுக்கும் உபலக்ஷணமாய், பாதாளாதி லோகஸ்தரும், முற்றும் - எல்லாரும் நானுமாகக்கலந்து உபகாரஸம்ருதிபண்ணினாலும் ஆர்வனோவென்று அர்த்தமருளிச்செய்து, "முற்றுங்கலந்து" என்றதுக்கு - அவர்களுடைய வாகாத்யுபகரணங்களையும் ஹோக்த்ருத்வ ஶக்தி விசேஷங்களையும் உடையேனாய்க்கொண்டென்று அர்த்தாந்தரம் - பாரிலுள்ளார் இத்யாதி. "கலந்து" என்றால் இவ்வர்த்தத்தைக் காட்டுமோ? என்ன - கலக்கை இத்யாதி. மூன்றாமர்த்தத்துக்கு, "விண்" என்று - பரமபதம்; "நீர்" என்று - நீர்மை: ஸ்வஹாவமாய், ஹோக்த்ருத்வஶக்தியைச் சொல்லுகிறது. "முற்றும்" என்று - ஹோக்த்ருத்வஶக்திஸ்வஹாவ மெல்லாவற்றையும் என்றபடி. கீழேயும் "ஏர்விலா" என்றுவைத்து, இங்கேயும் "ஏர்விலா" என்றால் புநருக்தமன்றோ? என்ன, அருளிச்செய்கிறார் - இங்குநன்மை இத்யாதி. நன்மையாவது - யோக்யதை என்றபடி. விவரணம் - கீழே இத்யாதி. கீழேயென்றது - அஞ்சாம்பாட்டிலே. யோக்யதையாவது - ஸுக்ருதம். இச்சைக்கு யோக்யதை வேணுமோ? என்ன - ப்ராஹ்மணா இத்யாதி. விவிதிஷந்தி - வேதிதுமிச்சந்தி. இந்த ஶ்ருதிக்கு ஶ்ருதப்ரகாசிகையிலே, "இச்சையை ஃபலமாகச்சொல்லி யஜ்ஞாதிகளை ஸாதநமாகச்சொன்னால் அந்யோந்யாஶ்ரயதோஷம் வரும்: ஆகையாலே அதுசேராது" என்றார். அந்யோந்யாஶ்ரயதோஷம் வரும் க்ரமமென்? என்ன,— இச்சையுண்டாயே யஜ்ஞதாநாதிகள் பண்ணவேணும்: யஜ்ஞாதிகளைப் பண்ணினாலொழிய இச்சையில்லை: ஆகையாலே, "விவிதிஷந்தி" என்று - வேதநத்தை ஃபலமாக்கி, அதுக்கு ஸாதநம் யஜ்ஞாதிகளென்று நிர்வஹித்தருளினார். ஜ்ஞாநத்தை ஃபலமாக்கி, அதுக்குஸாதநம் யஜ்ஞாதிகளென்று ஶப்தம் வசிக்கும்படியென்? என்னில்,—"ஸவிநாஜிவாம்ஸதி".

விவிஷிஷந்தி'' (ப்ராஹ்மணாவிவிதிஷந்தி) என்றுநிற்கச்செய்தேயும், ''யஜ்ஞேந தாநேந தபஸாநாஶகேந'' (யஜ்ஞேநதாநேநதபஸாநாஶகேந) என்று யோக்யதையைச் சொல்லிற்றிறே; அதுவுமின்றிக்கேயிருக்கிற என்னையென்கை. [என்னால்தன்னைச்சீர்பெற இன்கவிசொன்ன] - ஸமஸ்தகல்யாணகுணாத்மகனானவன் இக்கவியாலே தனக்கு நிறமாம்படியாகச்சொன்ன. நான் கவிசொல்ல ஸர்வேஶ்வரனானதனக்கு இத்தாலே நிறமாக நினைத்திராநின்றான். இச்சீர் இழக்கவரிலும் விடவொண்ணாதபடியாயிற்றுக் கவியின் இனிமை. [இன்கவிசொன்னதிறத்துக்கு] - இப்படி இனியகவிகளைச்சொன்ன ப்ரகாரமொன்றுக்கும். அல்லாதகுணங்கள் குமிருந்துபோமித்தனை. இப்ப்ரகாரமொன்றுக்கும் - ஆழியங்கையெம்பிரான்புகழைப் பார்விண்நீர் முற்றுங்கலந்து பருகிலும் - ஆர்வனோ? (அ)

## ஒன்பதாம் பாட்டு.

திறத்துக்கேதுப்பரவாந்திருமாலின்சீர்
இறப்பெதிர்காலம்பருகிலும்ஆர்வனோ?
மறப்பிலாஎன்னைத்தன்னாக்கிஎன்னால்தன்னை
உறப்பலஇன்கவிசொன்னவுதவிக்கே.

*ஆ.—(திறத்துக்கு.) - அஜ்ஞாநத்துக்குங்கூட ஆஶ்ரயமல்லாமையாலே அசித்கல்பனாயிருந்த என்னைத் தன்னைப்போலேயாக்கி, என்னைக்கொண்டு பிராட்டியும் தானுமாகத் திருவாய்மொழி பாடின இம்மஹோபகாரத்தை, முன்புசொன்ன ஸர்வோபகாரணயுக்தனாய்க்கொண்டு பூதபவிஷ்யத்வர்த்தமான காலமெல்லாம் அநுபவித்தால் தான் ஆர்வனோ? என்கிறார்.*

---

*அவியானது இச்சாஸாதநமன்றிக்கே ஹநநத்துக்கு ஸாதநமானாற்போலே, இங்கும் யஜ்ஞாதிகள் ஜ்ஞாநத்துக்கே ஸாதநமாகிறதென்றபடி. ''ஏர்விலா'' என்று - இங்கு, இச்சைக்கு ஸாதநமில்லையென்னும்போது, ஸ்ரீபாஷ்யத்தோடு விரோதியாதோ? என்ன; அங்ஙன் விரோதமில்லை. லகுஸித்தாந்தத்திலே ''யஜ்ஞேந விவிதிஷந்தி யஜ்ஞாதயோ விவிதிஷோத்பத்தௌ விநியுஜ்யந்தே'' இத்யாதி வாக்யத்திலே பாஷ்யகாரர் அப்யுபகம்யவாதம்பண்ணி, உத்தரோத்தரேச்சா ஸாதநத்வம் அருளிச்செய்தாரிறே. அப்யுபகம்யவாதமாவது - பரபக்ஷத்தையங்கீகரித்துச் சொல்லுகை. இந்தவர்த்தத்துக்கு அந்யோந்யாஶ்ரயதோஷம் பரிஹரிக்கும்க்ரமமேதென்ன; அஜ்ஞாத ஸுக்ருத [illegible] அவ்வோ இச்சையுண்டாய், அந்த இச்சையினுடைய அவிச்சித்தியை ஸாத்யமாக்கி யஜ்ஞதாநாதிகளை ஸாதநமாகச்சொல்லும்போது தோஷம் வாராதென்று பரிஹரித்து, இதுவும் ஒருநிர்வாஹமாக்கி [illegible]த்தார்; அந்த 'யஜ்ஞேந'' இத்யாதி வாக்யத்தை யநுஸரித்து இவர்இப்படி அருளிச்செய்கிறாரென்று கருத்து. அநாஶகேந - அநஶநேநேத்யர்த்தः. ''சீர்பெற'' என்றதுக்குபாவம் - ஸமஸ்தகல்யாண இத்யாதி. சீர்பெற - நிறமாம்படியாக. நீர் கவிசொல்ல அவனுக்கு நிறமுண்டாம்படியென்? என்ன - நான் கவிசொல்ல இத்யாதி. ''இன்கவி'' என்றதுக்கர்த்தம் - இச்சீர் இத்யாதி. ''திறத்துக்கே'' என்கிற அவதாரணார்த்தம் - அல்லாத இத்யாதி. குமிருந்துபோகை - அநுபவயோக்யமன்றிக்கேயிருக்கை. 'ஏர்விலா' என்று தொடங்கி, 'திறத்துக்கே - ஆழியங்கையெம்பிரான்புகழ் பார்விண்நீர்முற்றும்கலந்து பருகிலும் ஆர்வனோ?' இத்யந்வயः. (அ)*

ஒ.—ஒன்பதாம்பாட்டில், என்னைக்கொண்டு கவி பாடுவித்துக்கொண்ட மஹோபகாரகனை, ஸகலசேதநருடைய போக்த்ருத்வஶக்தியை யுடையேனாய்க்கொண்டு காலமுள்ளதனையும் அநுபவித்தாலும் ஆறே னென்கிறார்.

[திறத்துக்கேயென்று தொடங்கி] - ஏதேனுமொன்றிலேபுக்கால் அத்தை முடிக்கவல்ல ஸாமர்த்யத்தையுடைய ஸ்ரீய:பதியினுடைய கல்யாணகுணங்களை. [மறப்பிலாவென்னைத் தன்னாக்கி] - ஸ்வவிஷயஜ்ஞாநத்துக்கு ஸம்பாவனையில்லாமையாலே ஸ்மரணமின்றிக்கே அசித்கல்பனாயிருந்துள்ள என்னைத் தன்னோடொக்கப்பண்ணி. [என்னாலென்று தொடங்கி] - என்னாலே தனக்கு உறும்படி இனிதாகப் பல கவியைச் சொன்ன உபகாரத்துக்கு. தனக்கு நேரே வாசகமாம்படியென்றுமாம்.

ப.—அநந்தரம், கீழ்ச்சொன்ன ப்ரகார[illegible]லே ஸர்வசேதந ஶக்[illegible]னாய்க்கொண்டு ஸர்வகாலாநுபவம்பண்ணினாலும் ஆர்வனோ? என்கிறார்

(ஒருகால்நினைவில்லாமையாலே),மறப்பு இலா-மறப்புஇல்லாதபடியான,என்னை-, தன்னாக்கி - தன்பக்கலிலே மறப்புஅறும்படியான அறிவையுடையனாக்கி, என்னால் - என்னையிட்டு, தன்னை-,உற - அவ்யவதாநேந வாசகமாய், பல- ஸஹஸ்ரஸங்க்யாதமாய், இன்-மதுரமான, கவி—கவியை, சொன்ன —, உதவிக்கு-உபகாரத்துக்கு,— திறத்துக்கு- இழிந்தகார்யப்ரகாரங்களுக்கு, ஏய் - அநுரூபமான, துப்பரவுஆம் - ஶக்தியையுடையனான, திருமாலின் - ஸ்ரீய:பதியினுடைய, சீர் - ஔதார்யசீலஸௌலப்யாதிகுணங்களை, இறப்புஎதிர்காலம் - அதீதாநாகதங்களான காலத்தையும் கூட்டிக்கொண்டு பூர்வோத்தர காலவர்த்தி ஸகலசேதநஶக்தியுக்தனாய்க்கொண்டு, பருகிலும் - அநுபவிக்கிலும், ஆர்வனோ - ஆர்வனோ? துப்பரவு - மிடுக்கு.

இ.—ஒன்பதாம்பாட்டில், என்னைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட உபகாரத்துக்கு, கீழ்ச்சொன்ன பரிகரங்களையும் துணையாக்கொண்டு காலதத்வமுள்ளதனையும் இத்தையநுபவித்தாலும் ஆறேனென்கிறார்.

[திறத்துக்கேதுப்பரவாந்திருமால்] - ஏதேனுமொன்றிலே புக்கால் அத்தைத் தலைகட்டவல்ல ஸாமர்த்யத்தையுடையவன். த்ருணத்தைக்கொண்டு ஒருகாரியங்கொள்ளப்புக்கால், அத்தைக்கொண்டே நினைத்த காரியங் கொள்ளும் ஸாமர்த்யத்தையுடையவன். திறம் - கூறுபாடு. துப்பரவு - ஸாமர்த்யம். [திருமாலின்சீர்]-இந்த ஸாமர்த்யத்துக்குஅடியாயிருக்கிறது ஸ்ரீய:பதித்வமாயிற்று. ஸ்ரீய:பதியினுடைய கல்யாணகுணங்களை. [இறப்புஇத்யாதி] - போனகாலமும் வருங்காலமும் நான் அநுபவித்தால்தான் ஆர்வனோ? போனகாலம்அநுபவிப்பாராய்ச் சொல்லுகிறாரல்லர், எல்லாக்காலமும் அநுபவித்தாலும் ஆராதென்கைக்காக. கீழ்ச்சொன்ன ஸமஸ்தசேதநருடைய போக்த்ருத்வ ஶக்தியையுங் கூட்டிக்கொண்டுஅநுபவித்தாலும்ஆராது. "எந்நாள் சிந்தித்தார்வனோ" என்கிறதிற்காட்டில் ஏற்றமில்லையாமிறே, சேதநரைக் கூட்டிக்கொள்ளாதபோது. உபகாரந்தான் எது?என்ன,—[மறப்பிலாவென்னை] - ஸ்வவிஷயஜ்ஞாநத்துக்கு ஸம்பாவனையில்லாமையாலே விஸ்ம்ருதியுமின்றிக்கே அசித்ஸமனான என்னை: "மறந்தேனுன்னை முன்னம்" என்கிறபடியே அநுதாபமுமின்றிக்கேயிருக்கிற என்னை. [என்னால்தன்னையுற] - "யதோ வாசோ நிவர்த்தந்தே" என்கிற விஷயத்தை, எல்லையுற - தனக்குநேரே வாசகமாம்படி. ஈஶ்வரனுக்கு உறும்படி என்றுமாம்; இது பிள்ளான் நிர்வாஹம். [பல

இன்கவி சொன்னவுதவிக்கே]- "வதாவிஹ்ஸஹஸ்ராணி" என்றும், "வாசொ மெயெவலோாழ" என்றும் சொல்லுமாபோலே, ஆயிரமுமாய் இனிதானகவிசொன்ன உபகாரத்துக்கு. திறத்துக்கென்று தொடங்கி, பருகிலுமார்வனே'?

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. என்னைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட மஹோபகாரகனை, ஸகலசேதநருடைய போக்த்ருத்வசக்தியை யுடையேனாய்க்கொண்டு காலமெல்லாம் புஜித்தாலும் ஆரேனென்றார் - கீழ்; அந்தபோக்த்ருத்வ சக்தியுடனே காலத்வயமும் புஜித்தாலும் ஆரே னென்கிறார்-இதில்.

[திறத்துக்கேஇத்யாதி] - ஏதேனும்ஓரிடையாட்டத்தில் வந்தால், ஒரு த்ருணத்தைக்கொண்டு காரியங்கொள்ளப்பார்த்தால் அத்தைக்கொண்டே காரியத்தை அப்படித் தலைக்கட்டிக்கொள்ளும்படிக்கூடான துப்பரவுண்டு- ஸாமர்த்த்யம், அத்தையுடையனை. அதுக்கு அடியேன்? என்றால்,—ஸ்ரியஃபதியாகையாலே:நினைத்தகாரியஞ்செய்து தலைக்கட்டு கைக்கீடான ஸாமர்த்த்யத்தையுடையனை ஸ்ரியஃபதியுடையகல்யாணகுணங்களை. ஒருவன்செய்தது வாய்த்து வரப்புக்கவாறு "அவன்குப்பைக்காலன்காண்,ஸ்ரீமான்செய்ததெல்லாம்நன்றாய்வருங்காண்"என்னக்கடவதிறே. [இறப்பெதிர்இத்யாதி]- ஸமஸ்தசேதநருடையவும் வாகாத்யுபகரணங்களையும் போக்த்ருத்வாதிசக்திகளையும் நான் உடையேனாய் அநுபவிக்கப்புக்காலும்,ஜீவிக்கைக்குஅடியானஆயுஸ்ஸு அல்பமாகையாலே உபகார ஸ்ம்ருதிக்குக் காலம்போருகிறதில்லை. "எந்நாள்சிந்தித்தார்வனோ?" என்னவேண்டாதே அவ்வவருடைய உபகரணங்களையும் உடையேனாய், போனகாலமும் மேல்வரக்கடவகாலமும்எல்லாம் அநுபவியாநின்றாலுந்தான் ஆர்வனோ? (வர்த்தமாநகாலம் தன்னடையேவருமிறே. போனகாலம் அநுபவிப்பாராய்ச்சொல்லுகிறார் அன்று; எல்லாக்காலமும்அநுபவித்தாலும் போராதென்கைக்காக, 'எந்நாள் சிந்தித்தார்வனோ' என்கிறதிற்காட்டில்ஏற்றமில்லையாமிறே, கீழிற்பாட்டிற்சொன்ன சேதநரைக்கூட்டிக்கொள்ளாதபோது.) எல்லாருடைய உபகரணங்களையுங்கொண்டு காலமெல்லாம் அநுபவித்தாலும் நீர்ஆராதேயொழிகிறது அவன்பண்ணினஎவ்வுபகாரத்தைஸ்மரித்து? என்ன,—[மறப்பிலாவித்யாதி]-மறப்பில்லையானஎன்னை. மறப்புக்குப் பூர்வக்ஷணவர்த்தியான நினைவும்எனக்கில்லை என்கைக்காக, மறப்பிலாவென்கிறபாசுரத்தாலே அருளிச்செய்கிறார். மறப்பிலாஎன்னவேண்டுவானேன்? என்னில்,—நினைவுள்ளவிடத்திலேயிறே மறப்புள்ளது. ஆக, காதாசித்கமானஸ்ம்ருதியுங்கூட எனக்

ஒன்பதாம்பாட்டு.—திறத்துக்கே இத்யாதி. உக்தார்த்தத்தை யநுவதித்துக்கொண்டு "இறப்பெதிர்காலம் பருகிலுமார்வனே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - என்னைக்கொண்டு இத்யாதிவாக்யத்வயத்தாலே. காலத்வயமென்றது - பூதபவிஷ்யத்காலமென்றபடி.

இடையாட்டம் - வ்யாபாரம். ஸப்தார்த்தம் - நினைத்த இத்யாதி. "திறத்துக்கேதுப்பரவாம் -" நினைத்தகாரியத்துக்கீடான ஸாமர்த்யத்தையுடைய ஸ்ரியஃபதியுடைய சீரையென்று நிஷ்க்ருஷ்டஸப்தார்த்தம். துப்பரவு - ஸாமர்த்யம். ஸ்ரியஃபதியானால் துப்பரவுண்டாமோ? என்ன - ஒருவன் இத்யாதி. குப்பைக்காலன் - நல்வழிக்காலன். கீழிரண்டுபாட்டில் அர்த்தத்தையுங் கூட்டி அருளிச்செய்கிறார் - ஸமஸ்த இத்யாதி. "மறப்பிலா" என்று - ஸர்வஜ்ஞத்வம் சொல்லுகிறாரோ? என்ன - மறப்புக்கு இத்யாதி. மறப்பிலாவென்னவேண்டுவானேன்? என்னிலென்றது - ஸ்ம்ருதியில்லாத என்னவேண்டியிருக்க, "மறப்பிலா" என்னவேண்டுவானென்? என்னிலென்றபடி. இத்தால் பலிதம் - ஆக இத்யாதி. விவரணமாதல் "மறப்பிலா" என்றத்தோடே "தன்னுக்கி" என்

கில்லைஎன்கிறார். [மறப்பிலாவேன்னைத்தன்னாக்கி] - காதாசித்கமாகஸ்மரித்துப் பின்னை யொருகால் மறப்புண்டாய், அத்தைக் காணுக்கண்ணிட்டுத்தான் இப்படி விஷயீகரித் தானோ? முதலிலே தன்பக்கல் ஸ்ம்ருதியின்றிக்கே யிருக்கிற என்னைத் தன்னாக்கி. [என் னால்] - "மறந்தேனுன்னைமுன்னம்" என்கிறஅநுதாபமுங்கூட இன்றிக்கேயிருக்கிறஎன்னை யிடுவித்து. [தன்னையுறப் பலஇன்கவிசோன்ன] - என்றதுக்குச்சீயருளிச்செய்யும்படி - 'யதோவாசோ நிவர்த்தந்தே' (யதோவாசோநிவர்த்தந்தே)' என்று வேதங்கள் மீண்ட விஷயத்தை மாறுபாடுருவச்சொன்ன" என்று. அன்றிக்கே, பிள்ளான் பணிக்கும்படி:-"ஸர் வேஶ்வரனுக்குச் சாலவுற்றதென்கிறார்" என்று. [பலஇன்கவிசொன்ன] - "சதுர்விம்ஶத் ஸஹஸ்ராணி ஶ்லோகாநாமுக்தவாந்ருஷி:" (சதுர்விம்ஶத் ஸஹஸ்ராணிஶ்லோகா நாமுக்தவாந்ருஷி:) என்னுமாபோலே, ஸம்ஸாரத்திலே இப்படிவிலக்ஷணமாயிருப்பது ஆயிரம் பாட்டைப்பாடுவதே! என்கிறார். இனிய கவிகளைச்சொன்ன, உதவிக்கு - இவ்வுப காரத்துக்கு திருமாலின்சீர் இறப்பெதிர் காலம்பருகிலும் ஆர்வனோ? (கூ)

---

## பத்தாம் பாட்டு.

---

உதவிக்கைம்மாறேன்னுயிரேன்னவுற்றேண்ணில்
அதுவுமற்றாங்கவன்தன்னதுஎன்னால்தன்னை
பதவியஇன்கவிபாடியவப்பனுக்கு
எதுவுமோன்றுமில்லைசெய்வதிங்குமங்கே.

ஆ.—(உதவி) - இப்படி என்னைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்தரு ளின ம்மஹோபகாரத்துக்குக் கைம்மாறாக என்னாத்மாவை அவனுக்குஅடிமையாகக் கொடுக் எண்ணில், அதுவும் பண்டே அவனுக்கு அடிமையாதலால் இங்கும் அங்கும் இதுக்கு ஒருகைம்மாறு செய்யலாவதுஇல்லையென்று அவனுடைய மஹோபகாரத்தை யநுஸந்திக்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், தம்மைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட மஹோ பகாரத்துக்கு ப்ரத்யுபகாரங் காணாதே யலமாக்கிறார்.

[உதவியென்று தொடங்கி] - அவனுக்கு ப்ரத்யுபகாரமாக என்னுடைய ஆத்மாவைக் கொடுக்கைக்கு என்று ஆராய்ந்தபோது அதுவும் பின்னை அவனதாயிரா நின்றது. [என்னாலென்று தொடங்கி] - என்னாலே தன்னை ம்ருதுவாய் இனிதான கவியைப் பாடின மஹோபகாரத்துக்கு இங்கிருந்தாலும் திருநாட்டிலே போனாலும் பண்ணலாம் ப்ரத்யுபகாரமில்லை. [எதுவுமொன்றுமில்லை செய்வதிங்குமங்கே] - அஹங் காரமமகாரஸம்பாவனையுள்ள இஹலோகத்தில் ப்ரத்யுபகாரம் பண்ணப்பெறாத

---

றத்தையுங்கூட்டி பாவமாதல் - காதாசித்கமாக இத்யாதி. உற - மறுபாடுருவவென்னுதல், ஸத்ருஶ மாகவென்னுதல். "உற" என்றதுக்குபாவம் - யதோவாச இத்யாதி. "பலவின்கவி" என்றதுக்கு பாவம் - சதுர்விம்ஶத் இத்யாதி பாலகாண்டே, "தயா ஸமஸ்தாநுவணந்ஷட்காணாநி ததொத்தரம்" இத்யுத்தரார்த்தம் (ச-உ). "மறப்பிலா" என்றதொடங்கி, 'சொன்னவுதவிக்கு' - திறத்துக்கே 'என்று தொடங்கி' பருகிலுமார்வனோ' இத்யந்வய:. (க)

இவர்க்கு, அவற்றைக் கணுக்காணவும் முடியாத பரலோகத்தில் ப்ரத்யுபகாரம்பண்ண விரகில்லை என்று கருத்து.

ப.—அநந்தரம், அவனுடைய உபகாரத்துக்குப்ரத்யுபகாரம் ஒருப்ரகாரத்தாலும் இல்லையென்கிறார்.

உதவி - கவிபாடுவித்துக்கொண்ட உபகாரத்துக்கு, கைம்மாறு - ப்ரத்யுபகாரம், என் உயிர் - என் ஆத்மா, என்ன - என்று, (அத்தை), உற்று - சிக்கென, எண்ணில் - நிரூபித்துப்பார்க்கில், ஆங்கு - அந்தப்ரத்யுபகாராவஸ்தையில், அதுவும் - அந்த ஆத்மாவும், மற்று-பின்னை, அவன்தன்னது - அவனுக்குஅஸாதாரண சேஷமாகையாலே, என்னால் - என்னையிட்டு, தன்னை -, பதவிய - ம்ருதுவாய், இன் - இனிதான, கவி - கவியை, பாடிய - பாடின, அப்பனுக்கு - உபகாரகனுக்கு, இங்கும் - இந்தவிபூதியிலும், அங்கும் - அந்தவிபூதியிலும், செய்வது - செய்யவடுப்பது, எதுவும் - ஏதேனும் அல்பமாயிருப்பது,(ப்ரத்யுபகாரம்),ஒன்றும் இல்லை-,ஜ்ஞாநம்பிறந்தத்தால் நித்யபரசேஷமான ஆத்மாவுக்கு முமுக்ஷுதசையோடு முக்ததசையோடு வாசியற ஸமர்ப்பணீயத்வமில்லையென்றுகருத்து. ஸ்வகீயத்வாபிமாநமுள்ளது அஜ்ஞாநதசையிலிறே.

இ.—பத்தாம்பாட்டில், தம்மைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரங் காணாதே யலமாக்கிறார்.

[உதவிக்கைம்மாறு] - பண்ணின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமாக. [என்னுயிர்] — நித்யமாய் ஸ்வயம்ப்ரகாசமாய்ஜ்ஞாநகுணகமான ஆத்மாவைக்கொடுத்தாலோ? என்னில்,—அதுசெய்யலாமிறேமுன்பே * மயர்வற மதிநலமருளிக் கெடுத்து வைத்திலனாகில். [உற்றெண்ணிலதுவும் மற்றுங்கவன்றன்னது] - ஆராயாதே கொடுக்கில் கொடுக்குமத்தொழிய, ஆராய்ந்துபார்க்கில் அதுவும் அவனதாயிருக்கும். [அங்கு] - ப்ரத்யுபகாரம்பண்ணியல்லது நிற்கமாட்டாத தசையில். உபகாரத்தையநுஸந்தித்து, ஆத்மஸமர்ப்பணத்திலே இழிவர்; ஸ்வரூபத்தையுணர்ந்து, அத்தையநுசயிப்பர். "எனதாவி தந்தொழிந்தேன்" என்று, "எனதாவியார்?யான்ஆர்" என்றாரிறே."யோஸ்மி ஸோஸி ஹத:" என்று, "க்ஷமவாகிந்ஸவேஹ்யாமிதே" என்னக்கடவதிறே. ப்ராந்திஸமயத்தில் ஆத்மஸமர்ப்பணம்போலே இருப்பதொன்றிறே, பண்ணினவுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் பண்ணினஇதுவும்; ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வாராமைக்காக ப்ரதமத்திலே ஆத்மஸமர்ப்பணம் பண்ணக்கடவன்; ஸ்வரூபத்தையுணர்ந்தால் அவன் அத்தை அவனதாக இசையுமித்தனை. இவையிரண்டும் ஜ்ஞாநம்பிறந்தார்க்குப் பேற்றளவும்அநுவர்த்திக்கக்கடவதாயிருக்கும். [என்னால்தன்னை] - உபகாரஸ்ம்ருதியாலே ப்ரத்யுபகாரந்தேடித் தெகுடாடாநிற்கிற என்னாலே, மஹோபகாரகனான தன்னை. [பதவியஇன்கவி] - ம்ருதுவாய்இனிதானகவி. கவிபாட்டுண்டவனுக்கு இக்கவியாலே முன்பில்லாத நீர்மையுமுண்டாம்படியிருக்கை. இக்கவிபாட்டாலே முன்பில்லாத நீர்மை தனக்குஉண்டாயிற்றதாக நினைத்திருக்கிறானாயிற்று அவன். [பாடியவப்பனுக்கு] - இப்படி கவிபாடின மஹோபகாரகனுக்கு. [எதுவுமொன்றுமில்லை செய்வது] - செய்யலாவதுஏதேனுமொன்றுமில்லை. இங்கிருந்த நாள் ஸங்கோசத்தாலே செய்யலாவது ஒன்றுமில்லையேயாகிலும், ஸங்கோசமற்று முக்தனானால் ப்ரத்யுபகாரம்பண்ணத் தட்டில்லையேயென்னில்?—[இங்குமங்கே] - இங்கானால், தேஹாத்மாபிமாந வாஸனையாலே, "செய்யலாவதுண்டோ?" என்று

*ப்ரமிக்கலாயிருக்கும்; ஸங்கோசம் கழிந்தவளவில், செய்யலாவதொன்றுமில்லை யென்னுமிடம் சொல்லவேண்டாவிறே. "ஸ்வநராஇவேணாஷிதிஷூ்வதெ" என்று - ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவிடத்திலே ஸ்வாதந்த்ர்யமர்மமான ப்ரவ்ருத்திக்கிடமில்லை.*

ஈடு.—பத்தாம்பாட்டு. உபகாரஸ்ம்ருதிக்குக் காலம்போருகிறதில்லை என்று நீர் புண்படாகில்லாதே, உம்மதாயிருப்பதொரு வஸ்துவை அவனுக்கு ப்ரத்யுபகாரமாகக் கொடுத்துப் பிழைத்துப்போக மாட்டீரோ? என்ன; அப்படிச்செய்யலாயிற்றிறே ஈஶ்வரனைப் போலே நானும் எனக்குஉடைமையாயிருப்பதொரு வஸ்துவும்பெற்றேனாகில் என்கிறார்.

[உதவி] - உதவியுண்டு - உபகாரம்: அதுக்குக் கைம்மாறாக-ப்ரத்யுபகாரமாக [என்னுயிரென்ன] - நித்யமாய் ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய் ஶ்லாக்யமாயிருப்பதொன்றன்றிறே - ஆத்மவஸ்து: அத்தைக்கொடுத்தாலோவென்னில்?—அது செய்யலாயிற்றிறே, அடியிலே * மயர்வறமதிநலம் அருளிற்றிலனாகில்; முன்னே அத்தைக்கொடுத்துவைத்தானே; ப்ராந்தி ஸமயத்தில்ஆத்மஸமர்ப்பணம்போலேயிருப்பதொன்றாயிற்று, உபகாரஸ்ம்ருதியாலே ப்ரத்யுபகாரந்தேடிக் கலங்குகிற இது. ப்ராந்திஸமயத்தில்ஆத்மஸமர்ப்பணந்தான்வேணும்: தெளிந்தவநந்தரம் "என்னுடையவஸ்துவை யவனுக்குக்கொடுத்தேன்" என்றிருக்கக்கடவனல்லன்; அநாதிகாலம்ஆத்மாபஹாரம்பண்ணிப்போந்த அதிலுங்கடையாயிற்று, தெளிந்தவநந்தரம் "நான்என்னுடைய வஸ்துவைத் தந்தேன்" என்றிருக்குமாகில். பின்னையும் பழைய அபஹாரமே யநுவர்த்தித்ததாமே; ஜ்ஞாநம் பிறந்தமை பொய்யாமிறே. ஸர்வமுக்தி ப்ரஸங்கபரிஹாரார்த்தமாக ஆத்மஸமர்ப்பணந்தான் வேண்டிவரும்; நெஞ்சிலே வெளிச்சிறப்புண்டானால்அவன்வஸ்துவை அவனதாக இசைந்திருக்கக்கடவன். "மயாஸமர்ப்பிதः" (மயாஸமர்ப்பித:) "அதவாகிநுஸமர்ப்பயாமிதே" (அதவாகிந்நுஸமர்ப்பயாமிதே)

---

*பத்தாம்பாட்டு.—உதவி இத்யாதி. "என்னுயிரென்னவுற்று எண்ணில் அதுவுமற்றாங்கவன்றன்னது - அப்பனுக்கெதுவுமொன்றுமில்லை செய்வதிங்குமங்கே" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - உபகாரஸ்ம்ருதிக்கு இத்யாதி.*

*ஆத்மவஸ்துவை ப்ரத்யுபகாரமாக ஸமர்ப்பிக்கலாமென்கைக்கு உறுப்பாக இதினுடைய ஶ்லாக்யதையை யருளிச்செய்கிறார் - நித்யமாய் இத்யாதி. "உற்றெண்ணில்" என்றதக்குபாவமருளிச்செய்கிறார் - அதுசெய்யலாயிற்று இத்யாதிவாக்யத்வயத்தாலே. அத்தை - மயர்வறமதிநலத்தையென்றபடி. அஜ்ஞானால் ஆத்மஸமர்ப்பணம் பண்ணுமதொழிய, ஜ்ஞாநமுண்டானால் உபகாரஸ்ம்ருதியாலே ஆத்மாவை ஸமர்ப்பிக்கப்போகாதோ? என்ன - ப்ராந்திஸமயத்தில் இத்யாதி. ப்ராந்திஸமயமாவது - ப்ரபத்திபண்ணுகிறஸமயம். ஆத்மஸமர்ப்பணமாவது - ஆத்மீயஸ்ஸங்ந்யாஸம். ப்ரபத்தி பண்ணுகிற ஸமயத்தை ப்ராந்திஸமயமென்கிறது - ஸமர்ப்பித்த அநந்தரம். "ஸமர்ப்பிக்கத்தான் நானார்" என்று அநுதபிக்கும்படி யிருக்கையாலே. ப்ரத்யுபகாரந்தேடிக் கலங்குகிற இதுஎன்றது - ஆத்மஸமர்ப்பணம் பண்ணுகிறோமென்று கலங்குகிறஇதென்றபடி. ஆனால் ப்ரபத்திஸமயத்தில் ஆத்மஸமர்ப்பணம் வேண்டாவோ? என்ன; ஆத்மஸமர்ப்பணம்பண்ணும் ப்ரகாரத்தையும், ததநந்தரம் இவனிருக்கக்கடவ படியையும் அருளிச்செய்கிறார் - ப்ராந்திஸமயத்தில் இத்யாதிவாக்யத்வயத்தாலே இருந்தாலோ? என்ன - அநாதி இத்யாதி. இது கடையானபடிக்கு ஹேதுகதநபூர்வகமாகவிவரணம். பின்னையும் இத்யாதிவாக்யத்வயம். ஆனால் செய்தநுதபிக்கவேணுமோ? முதலிலே செய்யாதிருக்கவொண்ணாதோ? என்ன; இன்னதுக்காகச் செய்யவேணுமென்னுமத்தையும், செய்தவநந்தரம் இன்னபடியிருக்கவேணுமென்னுமத்தையும் அருளிச்செய்கிறார் - ஸர்வமுக்தி இத்யாதி வாக்யத்வயத்தாலே. அப்படி ஸமர்ப்பித்தநுதபித்தபேருண்டோ? என்ன - மயாஸமர்ப்பித இத்யாதி. ஸ்தோத்ரே யாமுநாசார்யாः, "வபுராதிஷுயோபிகோபிவா" இத்யாதி, "தவவாஸ்மி..."*

என்னாநின்றதிறே. ''எனதாவி தந்தொழிந்தேன்'' என்று,- ''எனதாவி யார் யான்ஆர்?'' என்றாரிறே. ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தால் பேற்றளவுஞ்செல்ல இவ்விரண்டாகாரமும் அநுவர்த்திக்கக் கடவதாயிருக்கும். ஆக, ஆத்மஸமர்ப்பணத்துக்கும் உபகாரஸ்ம்ருதிக்கும் தனித்துஇவனுக்கு ப்ராப்தியில்லாதபடியான இவனுடைய அத்யந்த பாரதந்த்ர்யத்தைச் சொல்லுகிறது. [உற்றேண்ணில்] - ஆராயாதே மேலெழநின்றுகொடுக்கில் கொடுக்கலாம்; நெஞ்சிலே சிறிதுவெளிச்சிறப்புப்பிறந்து இதினுடைய ஸ்வரூபத்தையும் ஆராய்ந்துபார்த்துக் கொடுக்குமன்று கொடுக்க ப்ராப்தியில்லை. [அதுவும்] - ஆத்மாவும். [மற்று] - அப்படிப் பட்ட ஆத்மீயங்களும். [ஆங்கவன்றன்னது] - ப்ரத்யுபகாரம்பண்ணி யரிக்கவேண்டும் தசையில்அவனதாயிராநின்றது. [என்னலித்யாதி] - உபகாரஸ்ம்ருதிக்குங்கூட ப்ராப்தியில்லாத என்னாலே, மஹோபகாரகனாயிருக்கிற தன்னை. [பதவிய இன்கவிபாடியவப்பனுக்கு] - கவிபாட்டுண்கிறவனுக்கு இக்கவிபாட்டாலே பண்டில்லாத நீர்மையுண்டாம் படியாகக் கவிபாடின உபகாரகனுக்கு. [எதுவுமொன்று மில்லைசெய்வது] - ஏதேனுமொன்றுஞ்செய்யலாவதில்லை. இங்கிருக்கும் நாள் ஸங்கோசத்தாலே செய்யலாவதொன்றில்லையேயாகிலும், ஸங்கோசமற்ற முக்தனானால் ப்ரத்யுபகாரம்பண்ணத்தட்டேன்என்னில்? [இங்குமங்கே]-இங்கானால், தேஹாத்மாபிமாநத்தாலே ''நான், என்னது'' என்றுபோய்க் கால்கட்டித்திரிகையாலே, ''செய்யலாவதுண்டோ'' என்று ப்ரமிக்கவுமாயிருக்கும்; அதுவுமின்றிக்கே, ஸங்கோசங் கழிந்தவளவில், தானேசெய்யலாவதொன்றில்லை என்னுமிடம் சொல்லவேண்டாவிறே; ''ஸ்வேந ரூபேணாபி நிஷ்பத்யதே'' (ஸ்வேநரூபேணாபி நிஷ்பத்யதே) என்று - ஸ்வரூபஜ்ஞாநம்பிறந்தவிடத்தில் ஸ்வரூபவிரோதியாக ப்ரவர்த்திக்கப்போகாதிறே. (க0)

---

[illegible]'' ''[illegible]'' இத்யாதி, ''[illegible]''. ஆக, ''ப்ராந்திஸமயத்தில் ஆத்மஸமர்ப்பணம்போலே'' என்றத்தையுபாதித்து. அநந்தரம், ''உபகாரஸ்ம்ருதியாலே'' இத்யாதியையுபபாதிக்கக்கோலி, அப்படியுபகாரஸ்ம்ருதியாலேகலங்கி ஆத்மாவை ஸமர்ப்பித்து, தெளிந்தவநந்தரம் அநுதபித்தவிடமுண்டோ? என்ன- எனதாவி இத்யாதி. இத்தால்ஸூசிதம் - ஸ்வரூபஜ்ஞாநம் இத்யாதி. இவ்விரண்டாகாரமென்றது- உபகாரஸ்ம்ருதியாலே ஸமர்ப்பிக்கையும், அநந்தரம் அநுதபிக்கையுமாகிற இவ்விரண்டாகாரமுமென்றபடி. இப்பாட்டில் ''ஆத்மஸமர்ப்பணம்பண்ணப்போகாது'' என்றத்தால் ஸூசிதம்-அத்யந்தபாரதந்த்ர்யமென்கிறார் - ஆக ஆத்மஸமர்ப்பணத்துக்கும் இத்யாதி. ''உற்றெண்ணிலதுவுமற்றாங்கவன்றன்னது'' என்கிற இத்தால் ஸூசிதமான அர்த்தவிசேஷத்தை அருளிச்செய்கிறார் - ஆராயாதே இத்யாதி வாக்யத்வயத்தாலே. மற்று - ஆத்மீயங்களென்றபடி. அங்கு - ப்ரத்யுபகாரதசையிலென்றபடி. ப்ராப்தியில்லாதவென்னாலே - அத்யந்த பாரதந்த்ரனாகையாலே, 'ப்ராப்தியில்லாதவென்னாலே' என்று கூட்டுவது. பதவிய - பதமுண்டாம்படியாக; நீர்மையுண்டாம்படியாகவென்றபடி. ''பதவிய இன்கவி'' என்றதுக்கு - ம்ருதுவாய் இனிதானகவியென்று பொருளாகையாலே, இதுக்கு மார்த்தவமேதென்ன - கவிபாட்டுண்கிற இத்யாதி. ''இங்குமங்கும்'' என்றதுக்கவதாரிகை - இங்கிருக்கும்நாள் இத்யாதி. கீழ்சங்கைக்கு பரிஹாரம் - இங்கானால் இத்யாதிவாக்யத்வயம். ''ஸங்கோசங்கழிந்த'' இத்யாதி விவரணம் - ஸ்வேநரூபேண இத்யாதி. 'உதவிக்கைம்மாறு' என்றுதொடங்கி, 'அப்பனுக்கு - இங்குமங்கும் - எதுவுமொன்றுமில்லை செய்வது' இத்யந்வய:. (க0)

## )ராம் பாட்டு.

இங்குமங்குந்திருமாலன்றியின்மைகண்டு
அங்ஙனேவண்குருகூர்ச்சடகோபன்
இங்ஙனேசொன்னவோராயிரத்திப்பத்து
எங்ஙனேசொல்லிலுமின்பம்பயக்குமே.

ஆ.—(இங்குமங்கும்.)-ஸ்ரீயஃபதியானவனல்லது உபகாரகர் இல்லையென்னுமிடத்தை அநுஸந்தித்து அந்த ஸாவயுக்தரான ஆழ்வார், தம்மைத் திருவாய்மொழி பாடுவித்தருளின இம்மஹோபகாரத்தைச் சொன்ன இத்திருவாய்மொழி, எங்ஙனே சொல்லிலும் இன்பம் பயக்குமென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி எங்ஙனேசொல்லிலும் ப்ரீதியை விளைக்கும் என்கிறார்.

[இங்குமென்றுதொடங்கி] - இஹலோகபரலோகங்களில் ஸ்ரீயஃப்தியல்லது தஞ்சமில்லையென்னுமிடத்தை அநுஸந்த்த்து அந்தஸாவயுக்தராயிருக்கிற ஆழ்வார். [இங்ஙனேயென்று தொடங்கி] - இஸ்ஸாவத்திலே அருளிச்செய்த ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழி, தன்னோடு அந்வயித்தார்க்கு நிரதிஶயாநந்தத்தை யுண்டாக்காநிற்குமென்று ஃபலத்தையருளிச்செய்கிறார்.

இங்கும் - இந்த விபூதியிலுண்டான ஆஶ்ரயணதசையிலும், அங்கும்-அந்த விபூதியிலுண்டான கைங்கர்யதசையிலும், திருமால் - பூர்வோத்தரவாக்ய ப்ரமுகஸித்தமான ஸ்ரீயஃபதித்வத்தையுடையவனை, அன்றி - ஒழிய, இன்மை - வேறில்லாமையை, கண்டு - அநுஸந்தித்து, அங்ஙனே - அந்தப்ரகாரத்தையுடையராய், வண் - உதாரரான, குருகூர்ச்சடகோபன் - ஆழ்வார், சொல் - தம்மை வாசிக கைங்கர்யங்கொண்ட, இங்ஙனே - இந்தப்ரகாரத்திலே, சொன்ன - அருளிச்செய்த, ஓர் ஆயிரத்து - ஓர் ஆயிரத்திலே, இப்பத்தும்—, எங்ஙனே - இவருடைய உபகாரஸ்ம்ருதிரூபமான அர்த்தவ்யதிரேகேண, சொல்லிலும் - ஶப்தமாத்ரமேசொல்லிலும், (ஆழ்வார்வைஶவத்தாலும் இத்திருவாய்மொழியின் மாஹாத்ம்யத்தாலும்), இன்பம் - ஸகவதநுஸவஜநிதநிரதிஶயாநந்தத்தை, பயக்கும் - உண்டாக்கும். இது - கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸிப்பார்க்கு, எங்ஙனே சொல்லிலும் ப்ரீதியை விளைக்குமென்கிறார். [இங்குமங்குமித்யாதி] - இஹலோகபரலோகங்களிரண்டிலும் ஸ்ரீயஃபதியல்லது தஞ்சமில்லையென்னுமிடத்தை யநுஸந்தித்து. ஸாதநாநுஷ்டானவேளையோடு ப்ராப்திவேளையோடு வாசியற இவ்வாத்மாவுக்கொரு மிதுநமே தஞ்சமென்கை. "பண்டைநாளாலே" என்கிறபடியே, கைங்கர்யம் பண்ணுமிடத்திலும் அவள் முன்னாகப் பண்ணவேணுமிறே; ஆஶ்ரயணவேளையிலும் அவள் முன்னாகவேணுமிறே. "ஹதேஷ்வபி நுகோ....." என்று, 'ராவணன் சொல்லுகையாலே நலிந்தார்களாகில், அவன்பட்டபின்புஇன்று நலியாநின்றார்களோ?' என்று ராக்ஷஸிகள்பக்கலிலும் குணத்தையாரோபிக்கும் நீர்மையையுடையவளிறே. நமக்கு ஸ்வாசார்ய

ஸந்நிதியில் அவனுபகோஷாத்தாலே இவ்வர்யப்ரதிபத்தியுண்டு; இவர்க்கு ப்ரதிபத்யநுரூபமான பரிமாற்றமே எப்போது முண்டு. [அங்ஙனே வண்குருகூர்ச்சடகோபன்] - அந்தப்ரதிபத்தியோடே, உதாரரான ஆழ்வார். [இங்ஙனேயித்யாதி] - இஸ்ஹாவவ்ருத்தியோடே சொன்ன இப்பத்தும். "சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும்" என்று மனோவாக்காயங்கள் மூன்றும் ஊாஹ்யவிஷயங்களில் தொற்றற்று உத்தேஶ்யவிஷயத்திலே மூண்டிறே இவர்க்கிருப்பது. இப்பாசுரமேயமையும் இது அப்யஸித்தவர்களுக்கு. அவர்களைப் பார்த்தன்றிறே ஈஶ்வரனங்கீகரிப்பது, இவர்பாசுர மென்று இவரைப்பார்த்திறே. [எங்ஙனே சொல்லிலும்] - அஹ்ருதயமாகவுமாம், ஸஹ்ருதயமாகவுமாம்; ஃலத்தில் வ்யபிசரியாதென்கை. [இன்பம்பயக்கும்] - ஆநந்தத்தையுண்டாக்கும். "ஸஷ ஹ்யேவாநந்தயாதி" என்கிறபடியே, நிரவதிகமான ஆனந்தத்தை விளைக்கும்.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழி, ஏதேனும் ஒருபடி சொல்லிலும் ஆநந்தத்தை யுண்டாக்கு மென்கிறார்.

[இங்குமங்குந்திருமாலின்றி யின்மைகண்டு] - ஸாத்யாநுஷ்டான ஸமயத்தோடு ப்ராப்யவஸ்துவை ப்ராபித்த ஸமயத்தோடு வாசியற, இஹலோகபரலோகங்கள் இரண்டிலும் ஸ்ரிய:பதியல்லதுபோக்கி இவ்வாத்மவஸ்துவுக்குத் தஞ்சமாயிருப்பார் வேறில்லையென்னுமத்தை யநுஸந்தித்து ; "பண்டைநாளாலே நின்திருவருளும் பங்கயத்தாள்திருவருளுங் கோண்டு நின்கோயில்சீய்த்து" என்கிறபடியே, கைங்கர்யம்பண்ணுமிடத்திலும் அவள்முன்னாகப்பண்ணவேணுமிறே; ஆஶ்ரயணவேளையிலும் அவள்முன்னாகவேணுமிறே. "ஹதேதஸ்மிந்குர்யு:" (ஹதேதஸ்மிந்குர்யு:) என்று—'ராவணன் சொல்லுகையாலே அன்றிருந்துநலிந்தார்களாகில், இப்போதும் நலிவர்களோ ?' என்று--அவர்கள்பக்கலிலும் குணத்தை யாரோபித்துச்சொல்லும் நீர்மையை யுடையவளாயிற்று. [அங்ஙனேயித்யாதி] - நமக்கும் ஸதாசார்யன் அருகேயிருந்து, ஸ்ரிய:பதியொழிய இவ்வாத்மவஸ்துவுக்குத் தஞ்சமாயிருப்பாரில்லை" என்று உபதேசித்தால், அத்தனைபோதும் "அப்படியே" என்றிருக்குமதுண்டிறே ; இவர் அங்ஙனமன்றிக்கே, அந்நினைவுக்கநுரூபமான பரிமாற்றத்தையுமுடையவரா யிருப்பராயிற்று. ஆக, மனோவாக்காயங்கள் மூன்றும் ஒருபடிப்பட்டிருக்குமோ ? என்னில்,— [இங்ங

நிகமம்.—இங்குமங்கும் இத்யாதி. "எங்ஙனேசொல்லிலுமின்பம்பயக்கும்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி.

இன்மைகண்டு - இல்லாமையையநுஸந்தித்து. இஹலோக பரலோகங்கள் இரண்டிலும் ஶ்ரிய:பதியே தஞ்சமென்றதுக்கு பாவமருளிச்செய்யாநின்றுகொண்டு, ஸப்தார்த்தம் - ஸாதநாநுஷ்டாந இத்யாதி. ஃலவேளையிலும் ஆஶ்ரயணவேளையிலும் பிராட்டி ஸம்பந்தம் வேணுமோ ? என்ன - பண்டைநாளாலே இத்யாதி வாக்யத்வயம். "ஆஶ்ரயணவேளையி லிவள்முன்னாகவேணும்" என்கைக்கு, இவன் தோஷத்தைப்பார்த்து ஈஶ்வரன் சீறுமளவில் அத்தையாற்றிச் சேரவிடும்படியான நீர்மையுடையவளோ ? என்ன - ஹதேதஸ்மிந் இத்யாதி. "ஆஜ்ஞாப்தா ராவணேநைதா ராக்ஷஸ்யோ மாமதர்ஜயந் । ஹதே தஸ்மிந்ந குர்யுர்ஹி தர்ஜநம் வாநரோத்தம॥" இதி யுத்தகாண்டே ஸீதா.(கககூ - ௩௧)"அங்ஙனே" என்றதுக்கு வ்யாவர்த்யபூர்வகமாகஅர்த்தம்- நமக்கும் இத்யாதி.பரிமாற்றத்தை- அநுஷ்டாநத்தை யென்றபடி. ஆகவென்றது - ஆனாலென்றபடி. மூன்றும்ஒருபடிப்பட்டிருக்குமோவென்றது- மாநஸமான அத்யவஸாயமும் காயிகமான அநுஷ்டாநம்போலே

னித்யாதி] - இஸம்ஸாரவவ்ருத்தியிலேசொல்லிற்றாயிற்று ஆயிரம்பாட்டும். நீர், மநோவாக்காயங்கள்மூன்றிலும் ''ஸ்ரிய:பதியேஇவ்வாத்மவஸ்துவுக்குசத்தஞ்சம்'' என்றுஅத்யவஸித்து அருளிச்செய்த இப்பாசுரத்தை யப்யஸிப்பார்க்கு மனோவாக்காயங்கள் மூன்றும் பாஹ்யாதிவிஷயங்களில்நின்றும் மீளவேணுமோ? நீர் * சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும்தேவபிரானையேதந்தைதாயென்றடைந்தவராயிராநின்றீர், இவர்களுக்குமெல்லாம் பின்னை யிப்படிவேணுமோ? என்னில்,—அத்தேவைகளெல்லாம் நம்மோடே: இது கற்பார்க்கு அதுவேண்டாவென்கிறார்:— [எங்ஙனே சொல்லிலு மின்பம்பயக்குமே] - ஏதேனுமோருபடிசொல்லிலும் இன்பமுண்டாம். என்னுடையபாசுரத்தைக் கற்றவர்களென்றிறே ஈஶ்வரன்இவர்களைக்கடாக்ஷிப்பது ; இல்லையாகில், இவர் தம்மைப்போலே மநோவாக்காயங்களுடைய நியதியுண்டாய் அநுபவிக்கப்பெறில் அழகிது; அதில்லாதபோதும் ஸலவ்யபிசாரியாகாதேன்கைக்காகச் சொல்லிற்றத்தனைஇது. [இன்பம்பயக்குமே] - ''ஏஷஹ்யேவாநந்தயாதி'' (ஏஷஹ்யேவாநந்தயாதி) என்கிறபடியே, நிரந்தரஸம்பவதநுபவத்தாற்பிறக்கும் ஆநந்தமானது உண்டாம். (கக)

வாசிகமும் ஒத்திருக்குமோவென்றபடி. ''எங்ஙனேசொல்லிலும்'' என்றதுக்கவதாரிகை - நீர்,மநோவாக்காயங்கள் இத்யாதி. ''நீர்மநோவாக்காயங்கள்'' இத்யாதிவாக்யவிவரணம் - நீர் சிந்தையாலும் இத்யாதி. அதுக்குஹேதுவேதென்ன - என்னுடையபாசுரத்தை இத்யாதி. ''சொல்லிலும்'' என்றயதிஶப்தார்த்தம் - இல்லையாகில் இத்யாதி. பயக்கும் - உண்டாக்கும். ஆநந்தயாதி - ஆநந்தயதி என்றபடி. (கக)

---

*த்ராமிடோபநிஷத்ஸங்கதி.*—[Grantha script text]

---

*த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.*—[என்றைக்குமென்னை] - [Grantha script text]

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

என்தனை நீயிங்குவைத்ததேதுக்கெனமாலும்
என்தனக்குமென்தமர்க்குமின்பமதா—நன்றுகவி
பாடவெனக்கைம்மாறிலாமைபகர்மாறன்
பாடணைவார்க்குஉண்டாமின்பம்.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.

# பத்தாந்திருவாய்மொழி—இன்பம் - ப்ரவேஶங்கள்.

ஆ.—(இன்பம்பயக்க.) -இப்படி என்னைத் திருவாய்மொழி பாடுவித்தருளுகைக்காக, திருநாட்டினின்றும் அங்கே எழுந்தருளியிருந்தபடியே ஸபரிகரமாகத் திருவாறன்விளையிலே வந்துபுகுந்து என்னைத் திருவாய்மொழி பாடுவித்துப் பாட்டைக் கேட்டருளி, திருவடிபெருமாள்குணங்களைச்சொல்லக் கேட்டருளி அஶோகவநிகையிலே பிராட்டி நிர்வ்ருதையாயிருந்தாற்போலே நிர்வ்ருதனாயிருந்ததிருவாறன்விளையை என்றோ சென்று நாம் அநுபவிக்கப்பெறுவது? என்று மநோரதிக்கிறார்.

ஒ.—பத்தாந்திருவாய்மொழியில், எம்பெருமான் தம்மைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட இவ்வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரங்காணாமையாலே, இனி ஆத்மாந்தமாக அடிமை செய்யுமித்தனையே செய்யக்கடவோமென்று பார்த்து, லோகமெல்லாம் வாழும்படி பெரிய பிராட்டியாரோடேகூடத் திருவாறன்விளையிலே, பர்யங்கவித்யையில் சொல்லுகிறபடியே திருவநந்தாழ்வான்மேலே திருவாய்மொழி கேட்டருளுகைக்கீடாம்படி யணித்தாக; ஸ்ரீராமாயணங்கேட்டருளுகைக்குப் பேரோலக்கமாகவெழுந்தருளியிருந்தாற்போலே இருந்தருளுவதுஞ்செய்து தமக்குஉபகாரகனான ஸர்வேஶ்வரனைக் கண்ணாலே கண்டு எல்லாவடிமையும் செய்யவேணுமென்று துணிந்தஆழ்வார், 'அடிமை செய்யுமிடத்தில் திருநாட்டிலேபோய் அடிமைசெய்யவுமிச்சையில்லை, திருவாறன்விளையிலே போய்அடிமை செய்யவேணும்' என்று அடிமைசெய்யும்படிகளை மநோரதிக்கிறார்.

ப.—பத்தாந்திருவாய்மொழியில், கீழ் இப்படி தம்மைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட மஹோபகாரத்தாலே தம்முடையவிரோதி அஸத்ஸமமாம்படி ஹ்ருஷ்டரானவர், அவனுபகாரத்துக்கு ஒரு ப்ரத்யுபகாரங்காணாமையாலே, 'ஶேஷியானவனுக்கு அதிஶயஜநகமான ஶேஷவ்ருத்தியொழிய இல்லை' என்று அறுதியிட்டு, ப்ரதிஸம்பந்தியான அவனுடைய அஶேஷஶேஷித்வப்ரகாஶகமான ஸ்ரிய:பதித்வபூர்த்தியையும், அநந்யார்ஹஶேஷத்வாபாதநத்தையும்; ஆஶ்ரிதரக்ஷணாகாரத்தையும், அநுபாவ்யமான விக்ரஹஶோபத்தையும், அநுபவார்த்தமான அவதாரத்துக்கு மூலமாயுள்ள அநந்தஶயநத்வத்தையும், அநிஷ்டநிவ்ருத்திவிஶிஷ்டமான அபிமதஸாதகத்வத்தையும், ப்ரபலவிரோதிபஞ்ஜநத்வத்தையும், ஆந்தரது:கநிவர்த்தகத்வத்தையும், பாபம்நிவ்ருத்தமாய் ப்ராப்யதேசம் ஸித்திக்கிலும் உத்தேஶ்யமான ஆஸந்நதேஶயோகத்தையும், நிரதிஶயவ்யவஸாயஜநகத்வத்தையும் அநுஸந்தித்து, ஏவம்வித ஸ்வபாவனான அவன் நம்மை விரோதியைக்கழித்து அடிமைகொள்ளுகைக்காக ஆஸந்நமான திருவாறன்விளையிலே ஸந்நிஹிதனான அவன் திருவடிகளிலே அடிமைசெய்யக்கடவோமென்று மநோரதித்து, இப்படி நிவர்த்யவிரோதிஸகலநிரூபண பூர்வகமாக அதினுடைய ஶரண்யநிவர்த்யத்வத்தை நிஷ்கர்ஷித்து நிகமிக்கிறார்.

இ.—பத்தாந்திருவாய்மொழியில், அவன் தம்மைக்கொண்டு கவிபாடுவித்தும் இராண்ட மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரங் காணாமை தடுமாறினார்-கீழ்; இவர்க்கு நாம் ஒருப்பட்டால் ப்ரத்யுபகாரமாகக் கொடுக்கலாவதொன்றுமில்லை; இவர்பக்கலிலேயொன்று

*பெற்று அத்தாலே குறைநிரம்பவேண்டும்படி அபூர்ணனல்லனவன்: ஆனாலும், உபகார ஸ்ம்ருதி இருந்தவிடத்திலிருக்கவொட்டாமையாலே, "நாமும் அவனுக்கு ஒன்றைச்செய்தோமாய் அவனும் நம்பக்கலிலே ஒன்றைக்கொண்டானாகலாம்; ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்திலே அந்வயிப்போம்" என்று பார்த்தார். "தான் கொடுத்த காணங்களைக் கொண்டு தன்திருவடிகளிலே கைங்கர்யத்தைப் பண்ண அத்தையே ப்ரத்யுபகாரமாக நினைப்பானொருத்தனவன்; மோக்ஷஹேதுதன்தனக்கடைத்த வ்ருத்தியைப்பண்ண மோக்ஷிக்கு அதிசயத்தை விளைத்தானாகவுங்கடவன்; ஆகையாலே, அவன்திருவடிகளிலே ஆத்மாந்தமாகஅடிமைசெய்யுமித்தனை"என்றுபார்த்தார். அவனும்அடிமைகொள்ளுகைக்கு—ஸ்ரீராமாயணம் கேட்கைக்குப் பேரோலக்கமாகவெழுந்தருளி இருந்தாற்போலே, திருவாறன் விளையிலே லோகமெல்லாம்வாழும்படி பிராட்டியோடேகூடப்பர்யங்கவித்யையிற்சொல்லுகிறபடியே திருவநந்தாழ்வான்மேலே தன்பரிகரத்தோடேகூடத் திருவாய்மொழியைக் கேட்டருளும்படி அணித்தாகவந்திருந்தான்; அங்கே சென்று கண்ணாலேகண்டு எல்லா அடிமைகளும் செய்யவேணுமென்று துணிந்தவர், அங்கே சென்று அடிமைசெய்யும்படியை மநோரதிக்கிறார். ஸம்ஸாரஸம்பந்தமற்று ஒரு தேசவிசேஷத்திலேபோய் அடிமைசெய்யுமளவும் ஆறியிருக்கவல்லவரல்லாமையாலும், அவன்தான் இங்கேகிட்டவிருக்கஒருதேசவிசேஷத்தேபோய்அடிமைசெய்யஇச்சையில்லாமையாலும் திருவாறன்விளையிலேபுக்குத் திருவாய்மொழிபாடி யநுபவிக்கும்படியை அநுஸந்தித்து இனியராகிறார். ஸ்ரீராமாயணத்திற் காட்டில் இதுக்குவாசி - கவிபாடின ஸ்ரீவால்மீகிபகவானையொழிய குசலவர்கள் கேட்பிக்கையன்றியே பாடினவர்தாமே கேட்பிக்கையும், பாட்டுண்டவன் தனியேயிருந்து கேட்கையன்றியே பிராட்டியுந்தானுங்கூடக் கேட்கையும்.*

ஈடு.—ஸர்வேஶ்வரன் தம்மைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக் கொண்ட மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரந் தேடிக் காணாமை தடுமாறினார் - கீழில்திருவாய்மொழியிலே; இவர்தாம் தம்முடைய ப்ரமத்தாலே ப்ரத்யுபகாரந்தேடித் தடுமாறினாரத்தனைபோக்கி இவர்தமக்குக் கொடுக்கலாவதொன்றுமில்லை; அவன் ஒன்றுகொண்டு குறைதீரவேண்டும் ஸாபேக்ஷனல்லன்; இவர் தம்முடைய உபகாரஸ்ம்ருதி இருந்தவிடத்திலிருக்க வொட்டாமையாலே செய்ததொன்றிறே; ஆனாலும், ஆறியிருக்க மாட்டாரே. இனி, நாமும் அவனுக்கு ஒன்று கொடுத்தோமாய், அவனும் நம்பக்கல் ஒன்று பெற்றானாகச் செய்யலாவதொன்றுண்டு. அவன், தனக்குவகுத்தகைங்கர்யத்தைப்பண்ணவே, அதுதன்னைத் தனக்கு ப்ரத்யுபகாரம்பண்ணிற்றாக நினைத்திருக்கும் ஸ்வபாவனாயிருந்தான்; ஆனபின்பு, நம்முடைய ஸ்வரூபாநுரூபமான ஆத்மாந்ததாஸ்யத்திலே

---

இன்பம்பயக்க ப்ரவேசம்,—*வ்ருத்தவர்த்திஷ்யமாண ஸங்கதிக்காக வ்ருத்தாநுவாதம்* - ஸர்வேஶ்வரன் இத்யாதி. ஆனால் *வெறுமனேயிருக்க வொண்ணாதோவென்ன; உபகாரஸ்ம்ருதியாலே வெறுமனேயிருக்கமாட்டாமல் தடுமாறினாரென்கிறார்* - இவர்தாம் தம்முடைய இத்யாதி வாக்ய சதுஷ்டயத்தாலே. இவருடைய *ஆகிஞ்சந்யத்தாலும் அவனுடைய பூர்த்தியாலும் ப்ரத்யுபகாரம் பண்ண விரகில்லையாகில் வெறுமனேயிருக்கிறதுக்கென்? என்ன* - ஆனாலும் இத்யாதி. ஆனால் *ப்ரத்யுபகாரம்பண்ணும் விரகுஏது? என்ன; ஸங்கதி அருளிச்செய்கிறார்*-இனி,நாமும் இத்யாதி. *அதாவது ஏதென்ன* - அவன்,தனக்கு இத்யாதி. அவன் *என்றதுக்கு.* நினைத்திருக்கும் ஸ்வபாவனாயிருந்தான் *என்றத்தோடே அந்வயம்.* வகுத்தகைங்கர்யம் - *ப்ராப்தமான கைங்கர்யம்.* ஆனபின்பு- *அவன்ஸ்வபாவம் இதுவானபின்பு என்றபடி.* ஆத்மாந்ததாஸ்யம் - *யாவதாத்மபாவியான கைங்கர்*

அதிகரிப்போமென்று பார்த்தார். இனித்தான், வேதவாக்யங்களும் "ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே" (ஸ்வேநரூபேணுபிநிஷ்பத்யதே) என்று - ஸ்வரூபப்ராப்தியளவுஞ்சொல்லவே, அதுக்கு அவ்வருகில் கைங்கர்யமானது†அவவாதஸ்வேதம்போலே தன்னடையே வருமென்று ப்ரஹ்மப்ராப்தியளவும் சொல்லிவிடும். ஆழ்வார்கள் "வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்" என்று அதுதன்னையே சொல்லாநிற்பர்கள், ப்ராப்திபலமான கைங்கர்யத்தில் ருசியாலே. "ஸம்ஸாரம் த்யாஜ்யம், ஸர்வேஶ்வரன் உத்தேஶ்யன்"என்கிற ஜ்ஞாநம் பிறந்து, பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணினவர்கள், "பேஷஜம்பகவத்ப்ராப்திः" (பேஷஜம்பகவத்ப்ராப்திः) என்று பகவத்ப்ராப்தியளவிலே நின்றுர்கள்; அவர்களிற்காட்டில் "மயர்வறமதிநலமருளினன்" என்று பகவத்ப்ரஸாதலப்யமான ஜ்ஞாநத்தையுடையரான இவர்களுக்கு வாசி இதுவாயிற்று. இனி, அடிமைசெய்யுமிடந்தன்னில் "ஶரீரஸம்பந்தமற்று பரமபதப்ராப்திபண்ணினுல் பின்புசெய்கிறோம்" என்று அவ்வளவும் ஆறியிருக்கும்படியன்றே, உபகாரஸ்ம்ருதி இவரை நலிகிறபடி. ஆகையாலே, "ஸ்ரீவால்மீகிபகவான்பாடின ஸ்ரீராமாயணம்கேட்கைக்குத் திருவயோத்யையிலே திருத்தம்பிமாரும் தாமுங்கூடப் பெருமாள் பேரோலக்கமிருந்தாற்போலே, ஸர்வேஶ்வரனும், நாம் பாடினதிருவாய்மொழி கேட்கைக்காகத் திருவாறன்விளையிலே பர்யங்கவித்யையிற் சொல்லுகிறபடியே திருவநந்தாழ்வான்மேலே நாய்ச்சிமாரோடேகூடி நித்யபரிஜநத்தோடேகூட எழுந்தருளியிருந்தான். அங்கேபோய்த் திருவாய்மொழிகேட்பித்து அடிமைசெய்வோம்"என்று மநோரதிக்கிருராய், அம்மநோரதந்தன்னிலும்,—ஸர்வேஶ்வரன் ப்ராப்யனுனல் அர்ச்சிராதிகதியோடு தேஶவிஶேஷத்தோடு வாசியற ப்ராப்யாந்தர்க்கதமிறே. அதாவது - முன்பு அப்ராப்தமாய் பின்பு உபாஸநத்துக்குபலமாய் வருவன யாவைசில,அவையெல்லாம் ப்ராப்யாந்தர்க்கதமாகக்கடவதிறே; அப்படியே,— "திருவாறன்விளையிலே எழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரன் திருவடிகளிலேபோய் அடிமைசெய்யக்கடவோம். அதுதானும்வேண்டா, அத்தேஶப்ராப்திதானேயமையும்; அதுதானும்வேண்டா, இங்கேயிருந்தே அங்கேறப்போவதாக மநோரயிக்கிற

யம் ஶ்ருதியிலே "பகவத்ப்ராப்தியே புருஷார்த்தம்" என்னுநிற்க, கைங்கர்யம் புருஷார்த்தமென்பானென்? என்ன - இனித்தான் இத்யாதி. வேதம்போலே ஆழ்வார்களும் ப்ராப்திமாத்ரத்தைச்சொல்லிவிடவொண்ணுதோ? என்ன - ஆழ்வார்கள் இத்யாதி. அதுதன்னையே - கைங்கர்யந்தன்னையே. அப்படி சொல்லுகைக்கு ஹேதுஏது? என்ன - ப்ராப்திபலமான இத்யாதி. ஆனுல் வேதார்த்தயத்தை உபப்ரும்ஹணமுவேந வெளியிடுகிற ருஷிகள் சொல்லாமைக்கு ஹேதுஏது?என்ன,—ஸ்வரூப யாதாத்ம்யஜ்ஞாநமில்லாமையாலே யென்கிருர் - ஸம்ஸாரம் இத்யாதி. இவர்களுக்கு வாசியேதென்ன - அவர்களில் இத்யாதி. இதுவாயிற்று - கைங்கர்யத்தில் ருசியுடையராகையாயிற்று என்றபடி. பரமபதத்திலே போனுலன்றோ அடிமைசெய்யலாவது, "இங்கேசெய்யவேணும்" என்று அபேக்ஷிக்கிறதுஎன்? என்ன - இனி அடிமை இத்யாதி. "பாம்பணையப்பன்" இத்யாதியைப்பற்ற-பர்யங்க இத்யாதி. "எழில்மலர்மாதர்," "தேவபிரான்" என்றத்தைப்பற்ற - நாய்ச்சிமாரோடே இத்யாதி விஶேஷணத்வயம். அடிமை - வாசிகமான அடிமை. ஆனுல் அவனையொழிய அவனிருந்ததேசம் போகிறவழி எல்லாவற்றையும் மநோரதிக்கிறதென்? என்ன - ஸர்வேஶ்வரன் இத்யாதி. அதுஎங்ஙனேயென்ன - அதாவது இத்யாதி. உபாஸநத்துக்கு - உபாயத்துக்கு என்றபடி. பலம் என்றது - அவாந்தரபலம் என்றபடி. "ஈங்குநினைக்கப்பெற" என்றத்தைப்பற்ற - இங்கேயிருந்தே

† அவவாத ஸ்வேதம் - நெல்முதலியவற்றைக்குத்தினுல் உடம்பில்தோன்றும் வியர்வை.

# ஐந்தாம் பாட்டு.

---

**சீர்கண்டுகொண்டு திருந்துநல்லின்கவி**
**நேர்படயான்சொல்லும் நீர்மையிலாமையில்**
**ஏர்விலாஎன்னைத் தன்னாக்கிஎன்னால்தன்னை**
**பார்பரவின்கவி பாடும்பரமரே.**

*ஆ.—(சீர்கண்டு.) - தன்னுடைய கல்யாணகுணங்களை உள்ளபடிகண்டு கொண்டு, திருந்து நல்லின்கவி நேர்பட யான் சொல்லும் நீர்மையிலாமையில் எனக்கு ஸத்ருஶரில்லை ; இப்படி குணலேசமின்றியேயிருந்த என்னைத் தன்னைப்போலே ஹேய ப்ரத்யநீகத்வ ஸர்வஜ்ஞத்வாதி குணவிஶிஷ்டனாக்கி, என்னால்தன்னை ஸர்வலோகமும் இக்கவியை ஸ்துதிக்கும்படி இன்கவி பாடும் பரமனை என்றுமறப்பன்? என்கிறார்.*

*ஒ.—அஞ்சாம்பாட்டில், தன்னைக் கவிபாடுகைக்கீடான நீர்மையுமின்றிக்கே இச்சையுமின்றிக்கே யிருக்கச் செய்தே, என்னைக்கொண்டு லோகமெல்லாம் கொண்டாடும்படி கவிபாடுவதே! என்ன ஸர்வேஶ்வரனோ? என்கிறார்.*

*[சீரொன்று தொடங்கி]- தன்னுடைய கல்யாண குணாநுஸந்தாந பூர்வகமாகத் திருந்தி இனிதான கவிபை வாய்க்கப்பாடும் நீர்மை எனக்கின்றிக்கே யிருக்கச்செய்தே. [என்னைத் தன்னாக்கி] - என்னைத் தன்னைப்போலே ஜ்ஞாநஶக்திகளையுடையேனாக்கி. தனக்கு நான் ஶேஷமென்னுமிடத்தை யறிவித்தென்றுமாம்.*

*ப.—அநந்தரம், எனக்குக்கவிபாடுகைக்கு யோக்யதையின்றிக்கே யிருக்க, எனக்கு யோக்யதையுண்டாக்கித் தானே தன்னைக் கவிபாடிக்கொள்ளும் பெரியவனாயிருந்தானென்கிறார்.*

*சீர் - ப்ரதிபாத்யங்களான தன்குணங்களை, கண்டு - அபரோக்ஷித்து, கொண்டு- அநுஸந்தித்து, திருந்து - (ப்ரதிபாதகமாம்படி) திருந்தியிருப்பதாய், நல் - ஶப்தார்த்த லக்ஷணோபேதமாய், இன் — ஸ்வபாவே மதுரமான, கவி - கவிகளை, நேர்பட - வாய்க்கும்படியாக, யான் - நான், சொல்லும் - சொல்லுகைக்கீடான, நீர்மை - ஜ்ஞாநஶக்த்யாதிஸ்வபாவம், இலாமையில் - இல்லாமையாலே, ஏர்விலா - அஸத்ருஶனான, என்னை-, தன் - தன்பக்கலிலே, ஆக்கி - ஜ்ஞாநப்ரேமாதிகளை யுடையேனாம்படி பண்ணி, என்னால் - என்னாலே, தன்னை -, பார் - கடிந ஸ்வபாவையான பூமியும் கப்பட, பரவு - கொண்டாடும்படி, இன் - மதுரமான, கவி - கவியை, பாடும் - பாடுதலால், பரமர் - பரமனாயிராநின்றான்.*

*இ.—அஞ்சாம்பாட்டில், தன்னைக் கவிபாடுகைக்கீடான நன்மையுமின்றிக்கே இச்சையுமின்றிக்கே யிருக்க, என்னைக்கொண்டு ஸகலலோகங்களும் கொண்டாடும்படி கவிபாடுவதே? என்ன ஸர்வாதிகனோ! என்கிறார்.*

*[சீர்கண்டு கொண்டு] - அவனுடைய கல்யாண குணங்களிலே அவகாஹித்து. [திருந்து நல்லின்கவி] - கட்டளைப்பட்டு லக்ஷணோபேதமாய், சொல்லினுடைய இனிமை தானே ஆகர்ஷகமான கவி. [நேர்பட] - கவிவாய்க்கும்படி. [யான்சொல்லும் நீர்மை*

யிலாமையில்] - நான் கவிபாடுகைக்கடியான ஜ்ஞாநாதிகுணங்க ளின்றிக்கே யிருக்கச் செய்தேயும். [ஏர்விலாவென்னை] - சைதந்யப்ரயுக்தமான இச்சையுமின்றிக்கே யிருக்கிற என்னை. [தன்னாக்கி என்னால்தன்னை] - தனக்குண்டான ஜ்ஞாநாதிகளை எனக்குண் டாக்கி என்னைக்கொண்டு அபரிச்சிந்நனை தன்னை. [என்னைத் தன்னாக்கி] - தனக்கு அநந்யார்ஹமென்னும் இடத்தை யறிவித்தென்றுமாம். [பார்பரவின்கவி] - விசேஷஜ்ஞ ரோடு அவிசேஷஜ்ஞரோடு வாசிபற எல்லாரும்வாய்புலற்றும்படியான இனியகவியென்னு தல், "பாலேய்தமிழரிசைகாரர் பத்தர்பரவுமாயிரம்" என்கிறபடியே யாதல். [பரமரே]- "நதத்ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே" என்கிற ப்ரமாணங்கொண்டு அறியவேண்டா; என்னையிட்டுக் கவிபாடுவித்துக்கொண்ட இத்தைக்கொண்டே பரத்வம் நிஸ்சயித்துக் கொள்ளலாம்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. தன்னைக் கவிபாடுகைக்கீடான நீர்மையு மின்றிக்கே இச்சையுமின்றிக்கேயிருக்கச்செய்தே, லோகமெல்லாம் கொண்டாடும்படியான கவியை என்னைக்கொண்டு பாடுவதே! என்ன ஸர்வேச்வரனோ? என்கிறார்.

[சீர்கண்டுகொண்டு] - கல்யாணகுணங்களை அவகாஹித்து. [திருந்துஇத்யாதி]- கட்டளைப்பட்டு லக்ஷணோபேதமாய் இனிதான கவிகளை. [நேர்பட இத்யாதி] - இவை யொன்றும் இல்லையாகிலும், சொல்லுகிறவனுடைய நன்மையாலே வருவதொருநன்மை யும் உண்டிறே கவிக்கு; அப்படி வாய்க்கச்சொல்லும் ஸ்வபாவத்தை நான் உடையே னல்லாமையில். [ஏர்விலாவென்னை] - ஏரென்று - அழகு; அதுஇல்லாத என்னை. [தன் னாக்கி] - தன்னோடொக்கப்பண்ணி என்னுதல்: தனக்காக்கியென்னுதல். [என்னால் தன்னையித்யாதி]-என்னையுபகரணமாகக்கொண்டு தன்னைப்பாரிலுள்ளார்அடையப் பரவும் படி இனிய கவிகளைப் பாடினான். விசேஷஜ்ஞர் அவிசேஷஜ்ஞரென்று வாசியின்றிக்கே, எல்லாரும் கொண்டாடும்படி பண்ணினான். [பரமரே] - "நதத்ஸமச்ச" (நதத்ஸமச்ச) என்கிற வாக்யங்கொண்டு இவனுடைய உத்கர்ஷம் அறியவேண்டா; என்னையிடுவித்துக் கவிபாடுவித்துக்கொண்ட இதுவே போரும் அவனுடைய உத்கர்ஷம்அறிகைக்கு. (ரு)

---

அஞ்சாம்பாட்டு.—சீர்கண்டு இத்யாதி. "நீர்மையிலாமையில் ஏர்விலாவென்னை - பார்பர வின்கவிபாடும்பரமரே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - தன்னைக்கவிபாடுகைக்கு இத்யாதி. "ஏர்விலா" என்றத்தைப்பற்ற - இச்சையுமின்றிக்கே என்றது.

"ஏர்" என்று - அழகாய், இச்சையைச்சொல்லுகிறது. கட்டளைப்பட்டு - திருந்தப்பட்டு. இவை - கட்டளைப்பாடு முதலானவை. நீர்மையென்று - ஜ்ஞாநசக்த்யாதிகளைச் சொல்லுகிறது. இலாமையில் - இல்லாதிருக்கச் செய்தேயும் என்றபடி. 'சொல்லுகிறவனுடைய நன்மையாலே' என்ற விடத்திலே - 'கவிராஜகவேராஜகஸமத்ராயாரவாஹநாசாத்ரவேகாவு' இத்யா தியை யருளிச்செய்வர். 'ஏர்" என்று - அழகாய், கவிபாடுகைக்கீடான இச்சையில்லாத என்றபடி. "பாரிலுள்ளார்" இத்யாதியின் விவரணம் - விசேஷஜ்ஞர் இத்யாதி. பரமன் - ஸர்வாதிகன். (ரு)

## ஆறும் பாட்டு

இன்கவிபாடும் பரமகவிகளால்
தன்கவிதான் தன்னைப்பாடுவியாதுஇன்று
நன்குவந்துஎன்னுடனாக்கி என்னால்தன்னை
வன்கவிபாடும்என்வைகுந்தநாதனே.

ஆ.—(இன்கவி.)— இன்கவிபாடும்பரமகவிகள் தனக்குளராயிருக்கச்செய்தே, அவர்களைக்கொண்டு தன்னைக் கவி பாடுவியாதே, இன்று நன்குவந்து என்னுள்ளே புகுந்து, வேதங்களினுள்ளும்அடங்காத தனக்குங்கூட அடங்காத கவிகளைப் பாடின என் வைகுந்தநாதனை என்று மறப்பனென்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், பராசர வ்யாஸ வால்மீகி ப்ரமுகரான கவிகளைக் கொண்டு கவிபாடுவித்துக் கொள்ளாதே, என்னை யுபகரணமாகக் கொண்டு வன்கவிபாடுவதே என்று ப்ரீதராகிறார்.

[தன்கவி] - தனக்கு ஸத்ருசமான கவி. [இன்றுநன்குவந்து] - என்னைக் கொண்டு கவி பாடுவித்துக்கொள்ளுமதுவே ப்ரயோஜநமாகவந்து. [என்னுடனென்று தொடங்கி] - கவிபாடுகைக்குப் பிரியாதபெருமைபோல தாருஉபகரணமாக என்னைக்கொண்டு என்னாலே தன்னைத்தான் ஸ்ரீவைகுண்டநாயனைபடிக்கு ஸத்ருசமாம்படி அரணியகவியைப் பாடாநின்றான்.

ப.—அநந்தரம், பெரியவர்களையிட்டுக் கவிபாடுவித்துக்கொள்ளாதே, என்னாலே தான் தன்னைக்கவிபாடுவித்துக்கொண்டு எனக்கு ஸ்ரீவைகுண்டநாயனை பெருமை தோன்ற இராநின்றானென்கிறார்.

இன் - நிரதிசயமதுரமான, கவி - கவிகளை, பாடும் - பாடுமவர்களாய், பரம கவிகளால் - தங்களுக்கு மேலில்லாத கவிகளான பராசர பாராசர்ய வால்மீகிப்ரப்ருதிகளாலும் முதலாழ்வார்களாலும், தன் - தனக்குத்தகுதியான, கவி - கவியை, தான் - தான் (ப்ரயோஜநனாய்க்கொண்டு), தன்னை - நிரவதிகமாஹாத்ம்யயுக்தனான தன்னை, பாடுவியாது - எப்போதும் பாடுவியாதே, இன்று -, நன்கு - ஸாஹிஸங்ஙிகனாய்க்கொண்டு, வந்து -, (அக்கவிபாட்டை), என்னுடன் - என்னோடே -, ஆக்கி -, என் - எனக்கு, வைகுந்த நாதனே - தான் ஸ்ரீவைகுண்டநாதனான பெருமையைத் தோற்றுவியாநின்றுகொண்டு, என்னால் - என்னாலே, தன்னை - அந்தப்பெருமையையுடைய தன்னை, (பெருமைக்குத் தகுதியாம்படி), வன் - சிக்கென, கவி பாடும் - கவிபாடாநிற்கும்.

இ.—ஆறும்பாட்டில், பராசராதிகளைக்கொண்டு கவிபாடுவித்துக் கொள்ளாதே என்னை யுபகரணமாகக் கொண்டு கவிபாடுவதே! என்று ப்ரீதராகிறார்.

[இன்கவி இத்யாதி] - தன்னைக் கவிபாடுவித்துக்கொள்ள நினைத்தால், பராசரவ்யாஸ வால்மீகிகளாதல், "செந்தமிழ் பாடுவார்" என்னும் முதலாழ்வார்களாதலன்றோ பாத்ரபூதர்; அவர்களையொழிய. [தன்கவி தான் தன்னைப்பாடுவியாது] - கவியும் தன்னது, கர்த்தாவும்தான், விஷயமும்தான். [இன்று நன்குவந்து] - இன்று நானும்உஜ்ஜீவிக்கும்படி வந்தென்னுதல், என்னைக்கொண்டு கவிபாடுமிதுவே ப்ரயோஜந

மாகவென்னுதல்; அப்போது நன்கு, உவந்து - உகந்து. [என்னுடனாக்கி] - கவி பாடுகைக்கு என்னைப்பிரியாத உபகரணமாக்கி என்னுதல்; என்னைத் தன்னோடொக்க ஜ்ஞாநாயிகனாக்கி யென்னுதல். [வன்கவி] - செறிந்தகவி. "மொய்யசொல்லால்" என்கிறபடியே. [என்வைகுந்தநாதனை] - நித்யவிபூதியுக்தனாயிருக்கிற ஏற்றத்துக்குப் போரும்படி என்னைக்கொண்டு கவிபாடினான். நித்யவிபூதிக்கு அழிவில்லாதாப்போலே, அழிவில்லாத ஆயிரமென்று நித்யஸித்தமாம்படி திருவாய்மொழியைப் பாடுவித்தானென்னுதல்; நித்யவிபூதியாலே தனக்கு நிறமுண்டானாப்போலே, இக்கவிபாட்டாலே தனக்கு நிறமுண்டாம்படி பாடினானென்னுதல்.

ஈடு.—ஆறும்பாட்டு. வ்யாஸ பராசர வால்மீகிப்ரமுகரான கவிகளைக் கொண்டு கவிபாடுவித்துக்கொள்ளாதே, என்னை யுபகரணமாகக்கொண்டு கவிபாடுவதே! என்று ப்ரீதராகிறார்.

[இன்கவிபாடும் பரமகவிகளால்]-பின்னைத் தான் தனக்குச் சிலகவிகளைப்பாட வேண்டினால், அதுக்குக்கடாகவிருப்பார் ஸ்ரீவேதவ்யாஸபகவான் ஸ்ரீபராசரபகவான் ஸ்ரீவால்மீகிபகவான் இவர்களுண்டாயிருக்க, மற்றும்வேணுமாகில் "சேந்தமிழ்பாடுவார்" என்று சொல்லப்படுகிற முதலாழ்வார்க ளெல்லாருமுண்டாயிருக்க, என்னைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட இதுவும் ஒருநீர்மையே! என்கிறார். முதலாழ்வார்களிலே ஒருவரை "ஒருகவிசொல்லிக்காணும்" என்ன, [பெருகுமித்யாதி] - ஆற்றுப்பெருக்குப்போலே பெருகாநின்றுள்ள மதத்தையுடைய ஆனையானது. [மாப்பிடிக்குமுன்னின்று] - மதித்து முன்னடிதோற்றுதேவருகிற இத்தையுந் தனக்குக் கையாளாக்கிக்கொள்ளவற்று யாயிற்று இதினுடைய ச்லாக்யதை யிருக்கிறபடி. [முன்னின்று] "நான் இங்குத்தைக்குச்செய்ய வேண்டுவதேன்?" என்று * ஏவிற்றுச்செய்கைக்கு அவஸரப்ரதீக்ஷமாய் நிற்குமாயிற்று. [இருகணிளமூங்கில்வாங்கி] - இரண்டுகண்ணேறி அதுக்குத்தக்க முற்றனவுமின்றிக்கேயிருக்கிற மூங்கிற்குருத்தை வாங்கி; தான் மதித்து முன்னடிதோற்றுதே திரியச்செய்தேயும் பிடியின் பக்கலுண்டான ஆதராதிசயத்தாலே அவதாநத்தோடே ஸாதரமாகவாங்கி. [அருகிருந்த தேன்கலந்து] - திருமஞ்சநத்துக்கு உபகரணங்கள் சமைந்திருக்குமாபோலே, அருகே மலைமுழைஞ்சுகளிலே நிரம்பியிருக்கிற தேன்களிலே வாங்கித் தோய்த்து. மூங்கிற்குருத்தையும் த்ரவத்ரவ்யத்தோபாதியாக அருளிச்செய்கிறார். [நீட்டும்] - இதுதான் இரந்துகொடாநிற்க, அத்தை "உனக்கு வேண்டுவோர்க்குக்கொடாய்" என்று நிற்குமாயிற்று. [வான்கலந்தஇத்

ஆறும்பாட்டு.—இன்கவி இத்யாதி. "இன்கவிபாடும் பரமகவிகளால் தன்கவிதான் தன்னைப்பாடுவியாது - என்னால்தன்னை வன்கவிபாடும்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - வ்யாஸ இத்யாதி.

ஸம்ஸ்க்ருதம் தெரியாதவர்கள் இழக்குமத்தனையன்றோ? என்ன - மற்றும் வேணுமாகில் இத்யாதி. முதலாழ்வார்கள் கவி இனிதாயிருக்குமோ? என்ன - பெருகும் இத்யாதி. இப்பாட்டுக்கு ஸங்கதி - முதலாழ்வார்களிலே இத்யாதி ஸூக்தி வாக்யம். இதுக்கர்த்தம் - ஆற்றுப்பெருக்கு இத்யாதி. "மாப்பிடி" என்றதுக்கர்த்தம் - மதித்து இத்யாதி. "மா" என்று - ச்லாக்யதை. பிடுங்கியென்றதே, "வாங்கி" என்றதுக்குபாவம் - தான்மதித்து இத்யாதி. 'திருமஞ்சநத்துக்கு உபகரணங்கள் சமைந்திருக்குமாபோலே' என்றது - திருமஞ்சநங்கொண்டருளுகைக்குக் கலசங்கள் பூரித்திருக்குமாபோலே யென்றபடி. தோய்த்தென்றதே, "கலந்து" என்றதுக்குபாவம் - மூங்கில் இத்யாதி. கொடுக்குமென்றதே, "நீட்டும்" என்றதுக்குபாவம் - இதுதான் இத்யாதி. "தேன்கலந்து" என்றும் "வான்

யாதி | - மூங்கிற்குருத்தும் தேனும் கலந்தாற்போலேயாயிற்று, மேகமும் அவன்திருநிறமுங் கலந்திருக்கும்படி. இனிய கவிகளைப் பாடவல்ல மேலானகவிகளாலே. [தன்கவிதான் தன்னைப்பாடுவியாது] - கவியும் தன்னது. பாடினானும் தான், ப்ரதிபாத்யனும் தான். அவர்களைக்கொண்டு, தன்னுடைத்தானசொல்லாலே, அதுக்குப்ரதிபாத்யனை தான் தன்னைப் பாடுவியாதே. [இன்றுநன்குவந்து] - இன்று நான் இங்ஙனேஉஜ்ஜீவிக்கும்படிக்கு ஈடாக வந்தேனுதல். அன்றிக்கே, நன்கு உவந்து என்றாய் - நன்றாகவுகந்தேன்றும்; இக்கவிபாடுகைதானே ப்ரயோஜநமாக உகந்து. [என்னுடனாக்கி] - என்னைப்பிரியாத உபகரணமாகக்கொண்டு. [வன்கவிபாடும்] - சொற்செறிவை யுடைத்தாயிருக்கை, "மொய்யசொல்லால்" என்கிறபடியே, ஸ்லயமாயிருக்கையன்றிக்கே. [என்வைகுந்த நாதனே] - "அழியாததான * கலங்காப்பெருநகரத்தை இருப்பிடமாக வுடையோமான வோபாதி, அழியாத வேதம்போலேநித்யமான ஆயிரம்பாட்டுப் பாடுவிக்கவேணும்" என்று பார்த்தான். பரமபதத்தை இருப்பிடமாக வுடையனாகையாலே வந்த ஏற்றத்தோபாதியாக நினைத்திராநின்றானாயிற்று, இக்கவிபாட்டுடையனாகையால்வந்த ஏற்றத்தையும். (சு)

---

## ஏழாம் பாட்டு.

---

வைகுந்தநாதன் என் வல்வினைமாய்ந்தறச்
செய்குந்தன் தன்னை என்னாக்கியென்னால்தன்னை
வைகுந்தனாகப்புகழ வண்தீங்கவி
செய்குந்தன் தன்னை எந்நாள்சிந்தித்தார்வனோ ?

*ஆ.—(வைகுந்தநாதன்) - ஸ்ரீவைகுண்டநாதனையிருந்துவைத்து, என்னுடைய வல்வினைகளையெல்லாம்போக்கி, ஆகலால் குந்தனென்னும் திருநாமத்தையுடையனாய், என்னைத் தன்னைப்போலே தூயனாக்கி, என்னால்தன்னை வைகுந்தனாகப்புகழ வண்தீங்கவி செய்குந்தன் தன்னை காலதத்வமெல்லாம் அநுபவித்தாற்றானோர்வனோ? என்கிறார்.*

*ஒ.—ஏழாம்பாட்டில், என்னைக்கொண்டு நிரதிசயபோக்யமான கவியைப் பாடுவித்துக்கொண்ட இம்மஹோபகாரத்துக்கு, இவனைக் காலமுள்ளதனையும்அநுபவித்தாலும் ஆறே னென்கிறார்.*

*[வைகுந்தநாதனென்று தொடங்கி] - அத்யந்தநிரபேக்ஷனாயிருந்து வைத்து நிர்ஹேதுகமாக என்னுடையப்ரபந்நகங்களை நீக்காநின்றுள்ளவனை. [தன்னை யென்னாக்கி] - என்னைத்தன்னாக்கி. [என்னாலென்று தொடங்கி] - நான் புகழ்ந்தால்*

---

*கலந்த" என்றும் ஸப்தம் ஸமாநமாகையாலே அருளிச்செய்கிறார் - மூங்கிற்குருத்தும் இத்யாதி. "தன்கவி, தான், தன்னை" என்றமூன்றுக்கும் பேதம் அருளிச்செய்கிறார் - கவியும் இத்யாதி. விவரணம் - அவர்களை இத்யாதி. உவந்து-உகந்து. உடன்-பிரியாதஉபகரணம். சொற்செறிவை யுடைத்தாயிருக்குமோ? என்ன, ப்ரமாணம் - மொய்ய இத்யாதி. இப்போது, "வைகுந்தநாதன்" என்றதுக்கு ஸ்வாரஸ்யம் - அழியாததான் இத்யாதி. ஸ்வாரஸ்யாந்தரம் - பரமபதத்தை இத்யாதி. 'என்வைகுந்தநாதன் - இன்கவிபாடும் பரமகவிகளால்' இத்யாரப்ய, 'வன்கவிபாடும்' இத்யந்தவ்யாக்யாநம். (சு)*

தான் ஸ்ரீவைகுண்டநாதனும்படி என்னைக்கொண்டு அழகியவாய் இனியவாயிருந்துள்ள கவியைப் பாடுவியாநின்றுகொண்டு அதுவே ப்ரயோஜநமாயிருந்தவனை.

ப.—அநந்தரம், என்விரோதியைப்போக்கித் தன்பெருமைக்கீடாகக் கவி பாடுவித்துக்கொண்ட உபகாரகனை யநுஸந்தித்து ஒருநாள் த்ருப்திபிறக்குமோ?

வைகுந்தநாதன் - ஸ்ரீவைகுண்டநாதனுன பெருமையையுடையனும்வைத்து, (தன்னையநுபவிக்கைக்குவிரோதியாய்), வல் - ப்ரபலமான, என்வினை- என்பாபத்தை, மாய்ந்தற - நசிக்கும்படி, செய் - பண்ணும், குந்தன் - தன்மையையுடைய, தன்னை-, என்னாக்கி - எனக்குவிஷயமாகும்படியாக்கி, என்னால் - என்னைக்கரணமாகக்கொண்டு, தன்னை - அந்தபாரம்யத்தையுடையதன்னை, வைகுந்தனாக - தன்னுடைய ஸர்வஸ்வ ஹாவகுண்டநம் பிறவாதபடியாக, புகழ் - புகழும்படி,வண் - உதாரமாய், தீம்-இனிதான, கவி - கவியை, செய் - செய்யும்படியான, குந்தன் - உபகாரஸ்வஹாவத்தையுடைய, தன்னை-, சிந்தித்து-,எந்நாள் ஆர்வன்-எந்நாள்திருப்திபிறப்பது? உள்ளதனையும் நினைத்தாலும் ஆராதென்று கருத்து. வல்வினைமாய்ந்தறச் செய்குந்தனென்று - விரோதியைப் போக்கும் குந்தமாகிற ஆயுதத்தை யுடையவனென்றுஞ்சொல்லுவர். கவிசெய்குந்தனென்று - குந்தப்பூப்போலே ஶுத்தஸ்வஹாவனென்றுஞ்சொல்லுவர்.

ஈ.—ஏழாம்பாட்டில், என்னைக்கொண்டு நிரதிஶய போக்யமான கவியைப் பாடுவித்துக்கொண்ட உபகாரத்துக்கு, காலமுள்ளதனையும் உபகாரஸ்ம்ருதியை அநுபவித்தாலும் ஆறேனென்கிறார்.

[வைகுந்தநாதன்] - * அயர்வறுமமரர்களதிபதியா யிருந்துவைத்து, நித்ய ஸம்ஸாரியான என்பக்கலிலே வந்து மேல்விழாநின்றான்; ''லோகநாய: ஸாதாநாந்தாவஸ்ரீ வம்நாயஜிஹதி'' என்கிறபடியே. [என்வல்வினை மாய்ந்தற] - ''ஸஹஸைவ ஹவதி'' என்கிறபடியே அஸத்கல்பனுன என்னுடைய ப்ரபலமான பாபங்களை ஸவாஸநமாகப்போம்படி. ஸர்வஶக்திக்கும் ஒருவிரகாலே போக்கவேண்டும்படியிறே இதின் கனம். [செய்குந்தன்] - ப்ரபலப்ரதிபந்தகங்களைப் போக்குவது நிர்ஹேதுகமாக. உன்னடியார்க்குத் தீர்த்தசுரர்க்குத் தீமைகள் செய்குந்தா'' என்கிறபடியே, ஆஶ்ரிதர்பாபங்களை அநாஶ்ரிதர்மேலேயேறிடும் ஶக்தியைச் சொல்லிற்றாகவுமாம். [தன்னையென்னாக்கி] - என்னைத் தன்னாக்கி. [என்னால்தன்னை வைகுந்தனாகப்புகழ] - நான் புகழ்ந்தால்தான் ஸ்ரீவைகுண்டநாதனுவானு யிராநின்றான். அதுதான் முன்பே நித்யமாயிருக்க, என்கவிபாட்டாலே இப்போது பெற்றானாயிருக்கை. தமப்பன்கொடுத்து, அது தன்னையே மகன்கொடுக்க, அன்று பெற்றானுயிராநின்றானிறே. ஆத்மா நித்யமாயிருக்கச் செய்தேயிறே, ''ஸஹைவ'', என்றும் ''ஸந்தமேநம்'' என்றும் சொல்லுகிறது. [வண்தீங்கவி செய்குந்தன்] - உதாரமாய் இனிதாயிருந்துள்ள கவியை யென்னையிட்டுப் பாடுவித்துக்கொண்ட ஶக்தியையுடையவன். என்கவிபாட்டாலே என் உஜ்ஜீவத்தைப் போக்கினவிது, தன்குறையற்றதாக நினைத்திராநின்றான்; ''துயரறுசுடரடி'' என்னுமாபோலே. [தன்னை] - மஹோபகாரகனை. [எந்நாள் சிந்தித்தார்வனே] - பண்ணினவுபகாரத்தை எத்தனைநாள் அநுஸந்தித்தால் எனக்கு பர்யாப்தி பிறப்பது? காலதத்த்வமுள்ளதனையும் ஸ்மரித்தாலும் பர்யாப்தி பிறக்குமோ? ஶரீரஸம்

*ஸங்யமற்றால் இதுக்கு அவஸரமில்லை; அதுக்கு முன்பு காலம் அல்பமாகையாலே பர்யாப்தி பிறவாதென்கிறார்.*

ஈடு:—ஏழாம்பாட்டு. என்னைக்கொண்டு பரமோதாரமாய் நிரதிசயபோக்யமான கவியைப் பாடுவித்துக்கொண்ட மஹோபகாரத்துக்கு இவனைக் காலதத்த்வமுள்ளதனையும் அநுபவித்தாலும் த்ருப்தனாகிறிலேனென்கிறார்.

[வைகுந்தநாதன்]-உபகரித்தவன் என்னுடையனின்றானொருவனாய் நான் ஆறியிருக்கிறேனோ? அயர்வறுமமரர்களதிபதி ஒரு ஸம்ஸாரிபக்கலிலே மேல்விழாநின்றால் எங்ஙனே ஆறியிருக்கும்படி? **"லோகநாத: புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி"** (லோகநாத: புராபூத்வா ஸுக்ரீவம்நாதமிச்சதி) என்கிற இதுக்கும் அவ்வருகாயிருக்கிறதிறே இது. ஸ்ரீஸுக்ரீவமஹாராஜரை நாதராகவுடையராகைக்கு யோக்யதைஸம்பாதித்தபடியாயிற்று முன்பு லோகநாதரானது. பெறுவார், பெறுதொழிவார்; முன்னம் இச்சியாநின்றார். கிடையாதத்திலேயிறே இச்சைகள்தான் செல்லுவது. **"ஸாமோவாநரேந்த்ரஸ்ய ப்ரஸாதமபிகாங்க்ஷதே"** (ஸாமோவாநரேந்த்ரஸ்ய ப்ரஸாதமபிகாங்க்ஷதே) போலேயாயிற்று [என்வல்வினைமாய்ந்தற] - வல்வினைபோகவேணுமென்றிராத என்னுடைய. "மயர்வறமதிநலமருளினன்" என்றதித்தனையிறே: எனக்கருளினன் என்கைக்கு, அருளுவதற்குமுன்பு தாம்ஒருவர்உளராகக் கண்டிலரிறே: **"அஸந்நேவ ஸ பவதி"** (அஸந்நேவஸபவதி) என்னும்நிலையிறே முன்பு. [வல்வினைமாய்ந்தற] - ஸர்வஶக்தியான தன்னாலேதான் இது செய்யலாமோ? [மாய்ந்தறச்செய்குந்தன்] - என்னுடைய ப்ரபலவிரோதியைப் போக்கின ஶக்தியோகத்தையுடையவன்; "அடியார்க்கச்சத்தீர்த்தசுரர்க்குத்தீமைகள்செய்குந்தா" என்னக்கடவதிறே. முகுந்தா என்கிறத்தை, குந்தனென்று தலைக்குறைத்தலாய்க் கிடக்கிறதென்னவுமாம். அன்றிக்கே குந்தனென்று திருநாமமாகவுமாம். **"குமுத: குந்தர: குந்த:"** (குமுத: குந்தர: குந்த:) என்று குந்தனென்றே திருநாமமாயிற்றிறே. ஆஶ்ரிதர்பக்கலிலே பக்ஷபதித்து அவர்கள்பண்ணின பாபங்களை அநாஶ்ரி

*ஏழாம்பாட்டு.—வைகுந்தநாதன் இத்யாதி "என்னுடல்தன்னை - வண்தீங்கவிசெய்குந்தன் தன்னை எந்நாள் சிந்தித்தார்வனோ" என்றவர்றைக் கடாக்ஷித்தவதாரிகை - என்னைக்கொண்டு இத்யாதி. அநுபவித்தாலுமென்றது - உபகாரஸ்ம்ருதிபண்ணினாலு மென்றபடி.*

*பதப்ரயோகத்துக்குஹ்ருதயம் - உபகரித்தவன் இத்யாதி. லோகநாதனென்கிற மாத்ரமன்றிக்கே, "வைகுந்தநாதன்" என்கையாலே - மஹாராஜர்க்கிவர்க்கு வ்யாவ்ருத்தியருளிச்செய்கிறார் - லோகநாத இத்யாதி. கிஷ்கிந்தாகாண்டே ஹநூமத்ப்ரதிவசனம் (ச-உக) "தஸ்ய ஸ்வர்ணமயா தாரா ப்ரஸந்நாதேவம்யம:" இதிபூர்வார்த்த:; "ஸாகஸா" என்கிறல்யப்புப்போலே, "ஸுக்ரீவா" என்கிறவிதுவும் - அங்கத்வவிதாயகமென்கிறார் - ஸ்ரீஸுக்ரீவ இத்யாதி. "இச்சதி" என்றதுக்கர்த்தம் - பெறுவார் இத்யாதி. "இச்சதி" என்றால் இவ்வர்த்தத்தைக் காட்டுமோ? என்ன - கிடையாதத்திலே இத்யாதி. மேன்மையையுடையவன் தாழநின்றதுக்கு ப்ரமாணாந்தரம் - ஸாம இத்யாதி. †"பஹவஸ்ஸ்வாமிநஸ்ஸந்தி ஸுக்ரீவஸ்ய ஹரீஶ்வரா:" இதி பூர்வார்த்தம். "என்" என்றதுக்கர்த்தம் - வல்வினை இத்யாதி. இவ்வர்த்தத்துக்கு நியாமகமேதென்ன - மயர்வற இத்யாதி. எனக்கருளினனென்னுமதொழிந்ததென்? என்ன - எனக்கு இத்யாதி: தாமுளரன்றோ? என்ன - அஸந்நேவ இத்யாதி. "வல்" என்றதுக்கர்த்தம் - ஸர்வஶக்தியான இத்யாதி. குந்தமென்று - குருந்தமாய், அதின் பூ வெளுத்திருக்கையாலே சுத்தியைச்சொல்லுகிறதென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் - என்னுடைய இத்யாதி. அதுக்கு ப்ரமாணம் - அடியார்க்குத்தீர்த்து இத்யாதி. இது திருநாமமோ? என்ன - குமுத இத்யாதி. "அடியார்க்குத்தீர்த்து" இத்யாதிக்கர்த்தம் - ஆஶ்ரிதர் பக்க*

† கிஷ்கிந்தாகாண்டம் ச-உக.

தார்பக்கலிலே அசல்பிளந்தேறிடும்படியான ஶாக்தியோகத்தையிறே அவ்விடத்திற்சொல்லுகிறது. தன்னையேன்னுக்கிஎன்றது - என்னைத்தன்னோடொக்கப்பண்ணியேன்னுதல், தனக்காம்படிபண்ணி யேன்னுதல். [என்னுல் தன்னைவைகுந்தனுகப்புகழ] - பிதாவானவன் புத்ரனுக்கு ஒருபசுவை நீர்வார்த்துக்கொடுத்துத் திரிய அவன்பக்கலிலே பசுவை நீரேற்றுப்பெறுமாபோலே யிருப்பதொன்றாயிற்று இதுவும். [வைகுந்தனுகப்புகழ] - நித்ய விபூதியிறேயது; இங்ஙனே யிருக்கச்செய்தேயும், இவர்புகழ்ந்த இத்தாலே தனக்குஅவ்விபூதியுண்டாயிற்றதாக நினைத்திராநின்றான். ஆத்மவஸ்துநித்யமாயிருக்கச்செய்தே, 'அஸந்நேவ' (அஸந்நேவ) என்றும் ''ஸந்தமேநம்'' (ஸந்தமேநம்) என்றும் சொல்லாநிற்கிறவோபாதியாயிற்று. ''இன்னான்வாக்காலே கவிபாடினபின்பு அவன்வாழ்ந்தான்'' என்னக்கடவதிறே; அப்படியே, புகழ்ந்தபின்பு தனக்குஅந்தவிபூதியில் இருப்புண்டாயிற்றதாக நினைத்திராநின்றான் அவன். [வண்தீங்கவியித்யாதி] - உதாரமாயினிதாயிருந்துள்ள கவிகளைப்பாடி, அது தன்னைத் தன்பேறாக நினைத்திருக்கிற ஶக்தியையுடையவனை. ''துயரறுசுடரடி'' என்கிறபடியே இவரைக்கொண்டு கவிபாடினபின்பு, தன்துயரம் தீர்ந்தானுயிருக்கிறபடி. இவர் துயர்போனபின்பு தனக்கு ஒருதுயருண்டாய் அதுபோனாற்போலே நினைத்திராநின்றானுயிற்று. ஶரீரத்துக்குவந்த வ்யாதி யநுபவிப்பான் ஶரீரியிறே. ''வ்யஸநேஷு மநுஷ்யாணாம்'' (வ்யஸநேஷு மநுஷ்யாணும்) - திவ்யாந்தঃபுரத்திலுள்ளார்க் காதல் திருத்தாய்மார்க்காதல் ஒருவ்யஸநம் வந்தாலோ துঃகிதராவதேன்றால்? ''மநுஷ்யாணாம் ப்ருஶம் துঃகிதோ பவதி''(மநுஷ்யாணும்ப்ருஶம்துঃகிதோபவதி)-துঃகிதனுனவனளவிலன்றிக்கே, ஆனை யளறுபட்டாற்போலே நோவுபடுவனாயிற்று. ''துঃகிதோ பவதி'' (துঃகிதோபவதி)- இன்றொருபடியாய், பிற்றைநாளொருபடியாய், அநந்தரம் ஆறிப்போம்இவர்களுக்கு; இவர்கள் க்லேசத்தில் நாள்தோறும் புதியராயிருப்பர். வ்யஸநம்இவனதானுல் துঃகமும்இவனதாகவேண்டியிருக்க, இவர் துঃகிதராகைக்கு ஹேதுவேன்? என்னில்?—'' இவன்படுகிற க்லேசம் இவன்காவற்சோர்வால்வந்ததொன்றன்றே, நங்காவற்

லிலே இத்யாதி. அன்றிக்கே, ''குந்தன்'' என்கிற திருநாமம் அந்வர்த்தஸம்ஜ்ஞையென்கிறார் - ஆஶ்ரிதர்பக்கலிலே இத்யாதி என்னுதல். அசல்பிளந்தேறிடும்படியான - ப்ரவேஶிப்பித்தநுபவிக்கும் படியான என்றபடி. அசல் பிளந்தேறிடுகை - அந்யத்ரஸங்க்ரமிப்பிக்கை. ஆக, ''குந்தன்'' என்றதுக்கு - மூன்றர்த்தம். ''என்னுக்கியென்னுல்தன்னை - புகழ'' என்றதுக்கு த்ருஷ்டாந்தம் - பிதாவானவன் இத்யாதி. நித்யமான விபூதி இவர்புகழ்ந்தபின்புஉண்டாயிற்று என்னக்கூடுமோ? என்ன - நித்யவிபூதியிறே இத்யாதி. இதுக்குத்ருஷ்டாந்தம் - ஆத்மவஸ்து இத்யாதி. அப்படியொருவன் கவிபாடினுல் அத்தால் அதிஶயமுண்டாமோ? என்ன - இன்னான் இத்யாதி. ''தன்பேறாக நினைத்திருக்கிற'' என்றதின் உபபாதநமாதல், உக்தார்த்தத்துக்கு ப்ரமாணமாதல் - துயரறு இத்யாதி. தன் துயர்தீர்ந்ததின் உறைப்பை யருளிச்செய்கிறாராதல், விவரணமாதல் - இவர்துயர் இத்யாதி. ஆழ்வார் துঃகம் தன்னதானபடியென்? என்ன - ஶரீரத்துக்கு இத்யாதி. உபபத்திகாட்டி யநுஷ்டாநமுங் காட்டுகிறார்-வ்யஸநேஷு இத்யாதி. அயோத்யாகாண்டே(உ-௬0) ''உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி'' இத்யுத்தரார்த்தம். ''மநுஷ்யாணாம்'' என்றதுக்குஹாவம் - திவ்யாந்தঃபுரத்தில் இத்யாதி. 'ப்ருஶம்'' என்றதுக்கர்த்தம் - துঃகிதனுனவன் இத்யாதி. ''பவதி'' என்கிறவர்த்தமாநார்த்தம் - இன்றொருபடி இத்யாதி. அளறுபட்டாற்போலே - சேற்றிலேயகப்பட்டாற்போலே. அளறு - சேறு. வ்யஸநம் இவனதானுல் அவர்துঃகிதராகைக்கு ஹேதுவை ப்ரஶ்நோத்தரரூபேண அருளிச்செய்கிறார்-வ்யஸநம்இவன்தானுல் இத்யாதி. உதவப்பெற்றிலோமென்று

அம்மநோரதந்தானேயமையும். இனி, நாம் அத்தேசத்தை "ப்ராப்யமென்று புத்தி பண்ணிப்போருகிறவோபாதி அவனும் நாமிருந்ததேசத்தைக் குறித்து வரக்கடவன்: அவ்வளவிலும் நாம் அவனை அநுவர்த்தித்துவிட்டு நாம் அத்தேசத்திலேபோய்ப் புகக் கடவோம்; அத்தேசமே நமக்கு ப்ராப்யம்; அங்கேபோய்ப்புகவே நம்முடைய கைங் கர்யவிரோதிகளடையப் போம். இனி, நான் வேறொன்றிலே இச்சைபண்ணிலும், என் நெஞ்சானது அத்தேசத்துக்கொழிய, வேறொருதேசத்துக்கு ஆளாகமாட்டாது; "பாவோ நாந்யத்ர கச்சதி" (பாவோநாந்யத்ரகச்சதி) என்கிறபடியே." ஆக, திருவாறன்விளை யிலே புக்கு அடிமைசெய்யக்கடவ படிகளை மநோரதித்து இனியராகிறார். ஸ்ரீராமாய ணத்திற்காட்டில் இதுக்குவாசி பாடினாரே கேட்பிக்கையும், பாட்டுண்டாரே கேட்கையு மாயிற்று. " ஸீதாயாஶ்சரிதம்மஹத் " (ஸீதாயாஶ்சரிதம்மஹத்) என்றுநிற்கச் செய்தே, கவிபாட்டுண்டவனையொழியத் தனியேயிருந்திறே கேட்டது. பாடினான் ஸ்ரீவால் மீகிபகவான், கேட்பித்தாரும் குஶலவர்களிறே.

# முதற் பாட்டு.

இன்பம்பயக்க எழில்மலர்மாதருந்தானும்இவ்வேழுலகை
இன்பம்பயக்கஇனிதுடன்வீற்றிருந்துஆள்கின்றஎங்கள்பிரான்
அன்புற்றமர்ந்துறைகின்றஅணிபொழில்சூழ்திருவாறன்விளை
அன்புற்றமர்ந்துவலஞ்செய்து கைதொழுநாள்களுமாகுங்கொலோ ?

*ஆ.—பரஸ்பரஸாஹித்யத்தாலே தங்களுக்கு இன்பமுண்டாம்படியாகவும், அயர்வறுமமரர்களுக்கு இனிதாம்படியாகவும், பிராட்டியோடேகூடத் திருமாமணி மண்டபத்திலே வீற்றிருந்தருளி, இவ்வேழுலகை இன்பம்பயக்க ஆள்கின்ற எங்கள் பிரான் அன்புற்றமர்ந்து உறைகின்ற அணிபொழில்சூழ் திருவாறன்விளை அன்புற்றமர்ந்து வலஞ்செய்து கைதொழுநாள்களும் ஆகவற்றேயோ ? என்கிறார்.*

*ஒ.—முதற்பாட்டில், திருவாறன்விளையிலேபுக்கு மிகவும் ஹ்ருஷ்டராய்க் கொண்டு அடிமைசெய்யும் காலமாகவற்றேஎன்று மநோரதிக்கிறார் [இன்பமென்று தொடங்கி] - எழிலையுடைய பெரியபிராட்டியாரோடேகூட வீற்றிருந்தருளுகையாலே தனக்கு நிரதிஶயாநந்தம் பிறக்கும்படியாகவும் அவளோடேகூட வீற்றிருந்தருளுகை*

இத்யாதி. "ஆடுபறவைமிசைக்கண்டுகைதொழுதன்றி" என்றத்தைப்பற்ற - இனி நாம் அத்தேசத்தை இத்யாதி. "ஒன்றிவலம்செய்யவொன்றுமோதீவினை" என்றத்தைப்பற்ற - அங்கேபோய்ப்புகவே இத்யாதி. "கூடுங்கொலென்னுமென்சிந்தனை" என்றத்தைப்பற்ற - நான்வேறொன்றிலே இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - பாவ இத்யாதி. நிகமநம் - ஆக இத்யாதி. இத்தால் வ்யாவ்ருத்தி - ஸ்ரீராமாயணத்தில் இத்யாதி. அங்கு இவ்விரண்டு மில்லையோவென்ன அருளிச்செய்கிறார்- ஸீதாயா இத்யாதி வாக்யத்வயத்தாலே. "காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் ஸீதாயாஶ்சரிதம் மஹத்। வ்யவஸ்யதி தேஶ்ரவகாரவஶிதவ் தஃ" இதி வாலகாண்டே. (ச - எ). "நிரஹாகிஶ யாஹாஉவாவஹாவெகஷணா।ஷெஷஜஂஹஜவகஷ்ராவிரெகாதாதூஷிகீதா" இதி ஷஷ்ஷஂஷெ.

யாலே இவ்வுலோகத்துக்கு நிரதிஶயாநந்தம் பிறக்கும்படியாகவும் இவ்வுலோகங்களுக்கு ஸுவம் பிறக்கையாலே தனக்கு இனிமைபிறக்கும்படியாகவும் இவ்வுலோகங்களை ஆளாநிற்பதுஞ்செய்து இங்ஙனேயிருக்கிற மஹாஸம்பத்தைக்காட்டிஎங்களைத்திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட மஹோபகாரகன். [அன்புற்றமர்ந்தென்று தொடங்கி]-ஸ்நேஹித்து அநந்யப்ரயோஜநனாய்க்கொண்டு நிரந்தரமாகவர்த்திக்கிற அழகிய பொழில் சூழ்ந்த திருவாறன்விளையை நாமும் அப்படியே அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு ஸ்நேஹித்து ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ப்ரதக்ஷிணம்பண்ணி அடிமைசெய்யும் நாள்களும் ஆகவற்றே !

ப.—முதற்பாட்டில், ஶேஷியானவன் லக்ஷ்மியோடே பரிபூர்ணனாய் எழுந்தருளியிருக்கிற திருவாறன்விளையை அநுபவித்து அடிமைசெய்யுங்காலமும் ஆமோ ? என்கிறார்.

எழில் - ஸௌந்தர்யாதிகுணோபேதையாய், மலர்மாதரும் - பத்மவாஸிநீத்வத்தாலேவந்த போக்யதையையுடைய லக்ஷ்மியும், தானும் - (அவர்கள்தான் விரும்பி மேல்விழும்படியான வைலக்ஷண்யத்தையுடைய) தானும், இன்பம் - (பரஸ்பர) ஆநந்தவ்ருத்தி, பயக்க - உண்டாம்படியாக, இனிதுடன் - போகஸாரஸ்யத்தோடேகூட, வீற்றிருந்து - (ஸர்வஶேஷித்வவ்யாவ்ருத்தி தோன்றும்படி) இருந்து, இவ்வேழுலகை - (வ்யக்தஅவ்யக்த கால ஶுத்தஸத்வாத்மக சதுர்வித அசேதநவர்க்கமும், பத்தமுக்த நித்யரூபமான த்ரிவித சேதநவர்க்கமுமாகிற) ஏழுவகைப்பட்ட இந்த லோகங்களை, இன்பம் பயக்க - ஆநந்தகந்தளிதமாம்படி, ஆள்கின்ற - அடிமைகொள்ளாநிற்குமவனாய், எங்கள் பிரான் - அப்படி யெங்களையும் வாசிககைங்கர்யங்கொண்ட மஹோபகாரகனானவன், அன்புற்று - (அடிமைகொள்ளுகைக்கு ஏகாந்தஸ்த்தலம் என்று) விரும்பி, அமர்ந்து - (அல்லாத பரவ்யூஹாதி ஸ்தலத்திற்காட்டில்) பொருத்தமுடையனாய், உறைகின்ற - (நிரந்தர) வாஸம்பண்ணுகிற, அணி - ஸ்ரீமணீயமான, பொழில் - பொழில், சூழ் - சூழ்ந்த, திருவாறன்விளை - திருவாறன்விளையை, அன்புற்று - (அடிமைசெய்கைக்கு ஆஸந்நஸ்த்தலமென்று) ஸ்நேஹித்து, அமர்ந்து - (ப்ரயோஜநாந்தரங்களைக்கொண்டு அகலப்போகத் தேடாதே) பொருந்தி, வலஞ்செய்து - (ஸ்வரூபாநுரூபமான) அநுகூலவ்ருத்தியைப்பண்ணி, (ஹ்ருஷ்டராய்), கைதொழும் - * பத்தாஞ்சலிபுடராய் நாம் அநுபவிக்கும், நாள்களும் - நாள்கள், ஆகுங்கொல் - உண்டாமோ ?

ஈ—முதற்பாட்டில், திருவாறன்விளையிலே புக்கு ஹ்ருஷ்டராய்க்கொண்டு அடிமைசெய்யுங்காலமாகவற்றே! என்று மநோரதிக்கிறார். [இன்பம்பயக்க] - நிரதிஶயாநந்தம் பிறக்கும்படியாக. நித்யஸம்ஶ்லேஷியானஸம்ஸாரியானவன், ஆநந்தமயனான தன்னோட்டைச்சேர்த்தியாலே ஆநந்திக்குமாபோலேயாயிற்று, பிராட்டியோட்டைச் சேர்த்தியாலே தான் ஆநந்திக்கிறபடி. "அல்லிமலர்மகள்போக மயக்குக்களாகியும் நிற்கும்" என்னக்கடவதிறே; "ராமேண ஸீதயா ஸாயம்". [எழில்மலர் மாதருந்தானும்] - "ராவணோ நாம ஸ்ரீமான்" என்றிறே இவளுக்கு ஏற்றம்; "பத்மவாஸா ஜநகாத்மஜா" என்றிறே தனக்கு ஏற்றம். எழிலையுடைய பெரிய பிராட்டியார். [இவ்வேழுலகை இன்பம்பயக்க] - இருவருங்கூடின சேர்த்தியாலே ஸகல லோகங்களுக்கும் ஆநந்தமுண்டாம்படி. இருவர்க்கும் அந்யோந்யம்பிறந்த வாநந்தமிறே, லோகத்தில் ஆநந்தத்துக்குஅடி. "ராமஸீதாநுப்ராப்ய ராஜ்யம் புநரவாப்தவாந் । ப்ரஹ்ருஷ்டமுதிதோ லோக:"

என்கிறபடியே, மாதா பிதாக்கள் சேரவிருந்தால் ப்ரஜைகளுக்கு மிகவும் ஏற்றமுண்டாமிறே. [இனிதுடன் வீற்றிருந்து ஆள்கின்ற] - இந்த லோகங்களுக்குஸுகம் பிறக்கையாலே தனக்கு இனிமை பிறக்கும்படியாகவும், இவற்றை யாளுகைக்கு வந்திருக்கிறார்கள் இருவருங்கூடவென்று வேறுபாடு தோற்றவிருந்து இவற்றை ரக்ஷியாநிற்கிற. [எங்கள்பிரான்] - என்னையிட்டுத் திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட மஹோபகாரகன். * கேசவன் றமர்க்குப் பின்பு இவர் தனியரல்லரிறே. [அன்புற்று] - திருவாய்மொழி கேட்கைக்கு நல்ல விடமென்று ஸ்நேஹத்தைப்பண்ணி. [அமர்ந்து] - வேறொரு ப்ரயோஜநத்தைக் கணிசியாதே தேஶவாஸந்தானே ப்ராயோஜநமாகக் கொண்டு. [உறைகின்ற] - அவதாரம்போலன்றிக்கே நித்யவாஸம்பண்ணுகிற. [அணிபொழில்சூழ்திருவாறன்விளை] - உர்ஶநீயமானபொழில்சூழ்ந்த தேஶத்தை. [அன்புற்று] - "தெநதெதஉநேஶவ தாஃ" என்கிறபடியே அவன் விரும்பின தேசத்தையே விரும்புமத்தனையிறே; அவன் திருவாய்மொழி கேட்கைக்கு நல்லவிடமென்று ஸ்நேஹித்தாற்போலே, நாமும் திருவாய்மொழி கேட்கைக்கு நல்லவிடமென்று ஸ்நேஹத்தைப் பண்ணி. [அமர்ந்து] - நாமும்அநந்யப்ரயோஜநராய். [வலஞ்செய்து] - அநுகூலவ்ருத்திகளைப்பண்ணி. [கைதொழுநாள்களு மாகுங்கொலோ] - மநோரதத்துக்குக் காலமானதுவே ஸோமத்துக்கும் காலமாகவற்றோ? "கவீஷா நீம்ஸகாஶஸ்ராகஸ்?"

ஈடு.—முதற்பாட்டு. நவாறன்விளையிலேபுக்கு ஹ்ருஷ்டராய்க்கொண்டு அடிமைசெய்யுங் காலமாகவற்றே ? என்று மநோரதிக்கிறார்.

[இன்பம்பயக்க] - "ஆநந்தமயஃ" (ஆநந்தமய:) என்கிற வஸ்துவுக்கும், நித்ய து:கியான ஸம்ஸாரிசேதநனுக்குத் தன்னோட்டைச்சேர்த்தியாலே ஆநந்தமுண்டாமாபோலேயாயிற்று, பிராட்டியோட்டைச்சேர்த்தியாலே அவன்தனக்கும் ஆநந்தமுண்டாம்படியும்; "அல்லிமலர்மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான்" என்று பிராட்டியோட்டைச் சேர்த்தியாலே பிச்சேறியிருக்குமாயிற்று. "ராமஃ" (ராமஃ) - ஸ்ரீபரஶுராமாழ்வானைச்செருக்குவாட்டிப் படைவீட்டிலே வந்துபுகுந்து சக்ரவர்த்தியையும் மஹர்ஷிகளையும் அநுவர்த்தித்து, தர்மோத்தரமாகநடத்திப்போந்தவர். "து" (து) - பித்ருஶுஶ்ரூஷணாதிகளைப்பண்ணிப்பின்பு பிராட்டியோட்டை ரஸதாரையிலே இழிந்தபின்பு, "இதுக்கு முன்பெல்லாம் வாத்ஸ்யாயநம் கற்றுக் காமதந்த்ரமே நடத்திப்போந்தாரித்தனையோ !" என்னும்படி வேறுபட்டார். முன்பு போருகிறநாளில் "இவர் இதுக்குமுன்பு காமரஸம் புதியதுஉண்டறியாரோ?" என்னும்படி

முதற்பாட்டு.—இன்பம் இத்யாதி. "அணிபொழில்சூழ்திருவாறன்விளை" என்று தொடங்கி "ஆகுங்கொல்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - திருவாறன்விளையிலே இத்யாதி.

"எழில்மலர்மாதருந்தானும் - இன்பம்பயக்க" என்று கூட்டி, "எழில்மலர்மாதர்" என்று விஶேஷிக்கையாலே - ஈஶ்வரனுடைய ஆநந்தத்துக்கு ஹேது இவள்சேர்த்தியென்கிறார் - ஆநந்தமயஃ இத்யாதி. ஆநந்தமயஃ என்கிறவஸ்துவான அவன்தனக்கும் - பிராட்டியோட்டைச் சேர்த்தியாலே ஆநந்தமுண்டாம்படியும் என்று அந்வயிப்பது. பிராட்டியோட்டைச் சேர்த்தியாலே ஆநந்தமுண்டாமோ? என்ன - அல்லிமலர்மகள் இத்யாதி. இருவருமான சேர்த்தியிலே ஆநந்தமுண்டாமென்னுமதுக்கு ப்ரமாணம் - ராமஃ இத்யாதி. "ராமோஶ்வஸீதயாஸார்த்தம் விஜஹாரபஹூந்ருதூந்" உத்தராகாண்டம், (௭௭ - ௨௫) "ராம" என்றதுக்கு அர்த்தம் - பரசுராமாழ்வான் இத்யாதி. செருக்குவாட்டி - கர்வத்தைப்போக்கி. வாத்ஸ்யாயநம் - காமஶாஸ்த்ரம். விவரணம் -

போந்த இவர், இப்போது "இதுக்குமுன்பு தர்மதத்த்வம் புதியதுஉண்டறியாரோ?" என்னும்படி வேறுபட்டார். "ஸீதயாஸார்த்தம்"(ஸீதயாஸார்த்தம்) - அயோநிஜையாய் பரமபதத்தில் தானும் அவனுமாயிருந்துகலந்த போதைச் செவ்வியில் ஒன்றுங்குறையாமலிருந்தவளிறே பிராட்டி; இப்படியிருக்கச்செய்தேயும், தம்மைஅழியமாறி இதரஸஜாதீயராய் வந்து அவதரித்தாரேயாகிலும், போகத்தில் வந்தால் அவளுங்கூட அப்ரதாநையாம்படி அதில் தலைநின்றார்: அதுக்குஅடி என்? என்னில் - ராஜபுத்ரரான ரஸிகத்வத்தால்வந்த ஏற்றத்தாலே. "விஜஹார" (விஜஹார) பரிப்பேயொழிய போகத்தில் இழியப்பெற்றிலர்; உபக்ரமத்துக்கே பணிபோந்த தித்தனை; உபோத்காதத்துக்குக் காலம்போந்ததித்தனை. "பஹூந்ருதூந்" (பஹூந்ருதூந்) - 'ஸமாத்வாதஶதத்ராஹம்' (ஸமாத்வாதஶதத்ராஹம்) என்கிறபடியே பன்னிரண்டாண்டொருபடிப்பட அநுபவிக்கச்செய்தேயும், ருதுஶப்தத்தாலேசொல்லுகிறதாயிற்று - அவ்வவகாலங்களுக்குஅடைத்த புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு காலாவயவங்கள்தோறும் அநுபவித்துப்போந்தமை தோற்ற; ஶீதகாலத்துக்கு அடைத்தவைகொண்டு பரிமாறியும், உஷ்ணகாலத்துக்கு அடைத்தவை கொண்டு பரிமாறியும் அநுபவித்தமைதோற்றச் சோல்லுகிறது. "மநஸ்வீ" (மநஸ்வீ) - ப்ரணயதாரையில் வந்தால், அவள்பரிக்தபரிப்புக்கெல்லாம் யானைக்குக் குதிரைவைக் கைக்கூடான நெஞ்சில் அகலமுடையவராயிற்று. "தத்கத:"(தத்கத:)- த்ரவ்யம் த்ரவ்யத்தோடு சேர்ந்தாற்போலன்றிக்கே, ஜாதிகுணங்கள் த்ரவ்யத்தோடு சேருமாபோலே சேர்ந்தார்; 'அநந்யாராகவேணாஹம்' (அநந்யாராகவேணாஹம்) என்றும், 'அநந்யாஹிமயாஸீதா" (அநந்யாஹிமயாஸீதா) என்றுமிறே இருவர் வார்த்தையும். "தஸ்யாநித்யம் ஹ்ருதிஸமர்ப்பித:" (தஸ்யாநித்யம்ஹ்ருதிஸமர்ப்பித:)-இதில் இழிவதற்குமுன்பு இவரை அறிந்திருக்குமவளாகையாலே, "அப்படி பெரியவர் இப்போது என்பக்கலிலே தாழநிற்பதே! இப்படி இவ்தொருநீர்மையே!" என்று எப்போதும் இவளநுஸந்தாநமே யாத்ரை

---

முன்புபோருகிற இத்யாதி.†"ஸஹயாவைதேஹ்யாமே" என்று- அப்ரதாநே த்ருதீயையாக்கி அர்த்தம் - அயோநிஜையாய் இத்யாதி. ஸீதா - லாங்கலபத்ததி: ஆகையாலே,அயோநிஜையாய் என்றது. அநேகவர்ஷ என்னாதே, "விஜஹார" என்றதுக்கு பாவம் - பரிப்பே இத்யாதி. "போகத்திலிழியப்பெற்றிலர்" என்றதின் கருத்தை அருளிச்செய்கிறார் - உபக்ரமத்துக்கே இத்யாதி. விஹாரணம் - விளையாட்டாய், அத்தால் - உபக்ரமத்தைச் சொல்லுகிறது. ஏதத்விவரணம் - உபோத்காதத்துக்கு இத்யாதி. வத்ஸராந் என்னாதே, "ருதூந்" என்கிறதென்? என்ன - ஸமாத்வாதஶ இத்யாதி. விவரணம் - ஶீதகால்த்துக்கு இத்யாதி. ஹேமாவிலே இங்ப்ரத்யயமாக்கி அர்த்தம் - ப்ரணயதாரையில் இத்யாதி. ஆனைக்குக் குதிரைவைக்கையாவது - பிடிகொடுக்குமாபோலே இருந்து பிடிகொடாதொழிகை. அப்படி சேர்ந்திருப்பார்களோ வென்ன, ப்ரமாணம் - அநந்யா இத்யாதி. "அநந்யாராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபாயதா - ஶக்யாலோபயிதும்நாஹம் ஐஶ்வர்யேண தநேந வா", ராவணம் ப்ரதி ஸீதா. (உக - கரு) "அநந்யாஹிமயாஸீதாபாஸ்கரேண ப்ரபாயதா। விஶுத்தா லோகமத்யேஷா மைதிலீ ஜநகாத்மஜா" இதி, ராவணவதாநந்தரம் வஹ்நிதேவாந்ப்ரதி ராம:. (கஉஉ - ககூ) "தத்கத:' என்றதும், 'தஸ்ய ... ஸமர்ப்பித:' என்றதும் 'அஸ்யாதேவ்யா மநஸ்தஸ்மிம்ஸ்தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டிதம்' என்றாற்போலே யிருக்கிறது" என்

† அவ்ஷ்டாத்யாயீ.

யாகையாலே, வேறொன்றும் நெஞ்சிற்படாதே அவள் தன்னைத் தம்பக்கலிலே போகடும் படியானார். "தத்கத:" (தத்கதஃ) - என்கையாலே - இவர் தம்மை அவள்பக்கலிலே ஒக்கினபடி சொல்லுகிறது. "நித்யம்ஹ்ருதிஸமர்ப்பித:" (நித்யம்ஹ்ருதிஸமர்ப்பிதஃ) என்கையாலே- அவள் தன்னை இவர்பக்கலிலே ஒக்கிவைத்தபடி சொல்லுகிறது. இப்படி இருவருமான சேர்த்தியிலே இதுக்குமுன்பு ஆநந்தம் புதியதுண்டறியாதா னொருவனுக்கு ஆநந்தமுண்டாமாபோலேயாயிற்று, க்ஷணந்தோறும் ஆநந்தமுண்டாம்படி. [எழில்மலர் மாதரும்] - "ராகவோர்ஹதிவைதேஹீம்" (ராகவோர்ஹதிவைதேஹீம்) என் னுமாபோலேயாயிற்று இத்தலை. [தானும்] - "யஸ்யஸீதாபவேத்பார்யா" (யஸ்ய ஸீதாபவேத்பார்யா) என்றும், "யஸ்யஸாஜநகாத்மஜா" (யஸ்யஸாஜநகாத்மஜா) என் றும் சொல்லலாம்படியாயிற்று அத்தலை. [இவ்வேழுலகையின்பம்பயக்க] - "ராமஸ்ஸீதாமநுப்ராப்ய ராஜ்யம்புநரவாப்தவாந் | ப்ரஹ்ருஷ்டமுதிதோலோக:" (ராமஸ்ஸீதாமநுப்ராப்ய ராஜ்யம்புநரவாப்தவாந் | ப்ரஹ்ருஷ்டமுதிதோலோகஃ) என்கிற படியே, மாதாபிதாக்களிருவரும் சேரவிருந்து பரியப்புக்கால் ப்ரஜைகளுக்கு ஒருகுறை யும் பிறவாதிறே. ஆக, இருவருமான சேர்த்தியாலே தங்களுக்கு ஆநந்தமுண்டாக, அச்சேர்த்தியைக்காண்கையாலே லோகத்துக்கு ஆநந்த முண்டாக, அதுதன்னைக்கண்டு ப்ரஜை பால்குடிக்கக்கண்டு உகக்கும் தாயைப்போலே இவர்களுக்குண்டான ப்ரீதியைக் கண்டு அத்தாலே தாங்கள் இனியராயிருப்பார்களாயிற்று. [இனிதுடன் வீற்றிருந்தாள் கின்ற] - தன்ஸந்நிதியாலே லோகமடையத் தளிரும் முறியுமாம்படி யிருக்கிறவன், தான் பெருப்பேறுபெற்றாற்போலே, "திருவாய்மொழிகேட்கைக்கூடாயிருப்பதொருதேசம் பெற் றோம்" என்று விரும்பிவர்த்திக்கிற தேசமாயிற்று. [எங்கள்பிரான்]- * கேசவன்தமர்க்குப் பின்பு இவர்தாம் ஏகாகிகளல்லரிறே. என்னை இசைவித்துத் திருவாய்மொழிபாடுவித்துக்

---

றருளிச்செய்வர். ஒக்கினபடி - ஆக்கினபடி. பரதந்த்ரராக்கினபடி இத்யர்த்த:. வசநமெடுத்ததுக்குப்ர யோஜநம்-இப்படி இருவருமான இத்யாதி. "ராகவோர்ஹதி" என்கையாலே, "எழில்மலர்மாதர்" என்று - பிராட்டிவைலக்ஷண்யமும், "யஸ்யஸீதாபவேத்பார்யா" "யஸ்யஸாஜநகாத்மஜா" என்று யஸ்ய என்கிறது * ஶேஷேஷஷ்ட்டியாகையாலும், "பார்யா" என்கையாலும், "தானும்" என்று - பெருமாள்வைலக்ஷண்யமும் சொல்லுகிறது என்றபடி. இத்தலை என்றது - பிராட்டியை. அத்தலை என்றது - பெருமாளை. "தஸ்யாஶ்ஶீலவயோவ்ருத்தாம் தஸ்யாபிஜநலக்ஷணாம் | ராகவோர்ஹதிவைதேஹீம் தம்சேயமஸிதேக்ஷணா." "யஸ்யஸீதாபவேத்பார்யா யஸ்யஹ்யஷ்டாஶ்வஶுரோஜக: | அதிஜீவேத்ஸஸர்வேஷு லோகேஷ்வபிபுரந்தர:" இதி ராவணம்ப்ரதி மாரீசவசநம். (ஆரண்ய-௩௪-௧௮) "அப்ரமேயம்ஹிதத்தேஜோ யஸ்யஸாஜநகாத்மஜா" இதி ராவணம்ப்ரதி மாரீச:. இருவருடைய ஆநந்தம் சொன்னவநந் தரம், லோகத்தாருடைய ஆநந்தம் சொன்னதுக்கு ஸ்வரஸம் - ராமஸ்ஸீதாம் இத்யாதி. ஸம்க்ஷேபே, "த்ருஷ்ட:புஷ்டஸ்ஸுபாஷித:" இதி ஶேஷ:. பூர்வோக்தரான மூவருடைய ஆநந்தத்தை யும் நிகமித்துக்கொண்டு, "இனிதுடன் வீற்றிருந்து" என்றதுக்கு ஸ்வரஸம்- ஆக இருவருமான இத்யாதி. 'அன்புற்றமர்ந்துறைகின்ற' என்றதுக்கு அவதாரிகையாதல், அத்தைக்கடாக்ஷித்து ஸ்வரஸமாதல் - தன் ஸந்நிதியாலே இத்யாதி. "எங்கள்" என்ற பஹுவசநத்துக்கு ஸ்வரஸம் - கேசவன் இத்யாதி. "பிரான்" என்றதுக்கு அர்த்தம் - என்னை இசைவித்து இத்யாதி. கணிசியாதே - அபேக்ஷியாதே.

கொண்ட உபகாரகன். [அன்புற்று] "திருவாய்மொழி கேட்கலாயிருப்பதொரு தேசம் பெறுவோமே!" என்று அங்கே ஸ்நேஹத்தைப்பண்ணி. [அமர்ந்து] - அத்தேஶவாஸத்துக்கு மேற்பட ஒருப்ரயோஜநத்தைக் கணிசியாதே விரும்பி. [உறைகின்ற] - அவதாரங்கள்போலே தீர்த்தம்ப்ரஸாதியாதே, நித்யவாஸம்பண்ணுகிற. [அணிபொழில்சூழ்திருவாறன்விளை] - "ப்ராப்யபூமி" என்று தோற்றும்படியிருப்பதாய், அவன்தனக்கும் விபூதியிலுள்ளார்க்கும் இருந்து திருவாய்மொழிகேட்கைக்கூடான பரப்பையுடைத்தாய், ஶ்ரீமாயிருக்கிற பொழிலாலே சூழப்பட்ட திருவாறன்விளையை. "தேந தே தமநுவ்ரதா:" (தேநதேதமநுவ்ரதா:) என்கிறபடியே அவனுக்கு உத்தேஶ்யமான இடமும் இவனுக்கு உத்தேஶ்யமாகக் கடவதிறே. [அன்புற்று] - "திருவாய்மொழிகேட்கைக்கீடானதேசம் பெற்றோம்" என்று அவன் விருப்பத்தைப் பண்ணினாற்போலே, "திருவாய்மொழிகேட்கைக்கூடாயிருப்பதொரு தேசத்தைப்பெறுவோமே!"என்று அத்தேசத்திலே விருப்பத்தைப் பண்ணி. [அமர்ந்து] - அத்தேசவாஸத்துக்கு அவ்வருகு ஒருப்ரயோஜநத்தைக் கணிசியாதே. [வலஞ்செய்து] - ப்ரதக்ஷிணாதிகளைப்பண்ணி. [கைதொழுநாள்களுமாகுங்கொலோ] - "அபீதாநீம்ஸ காலஸ்ஸ்யாத்" (அபீதாநீம்ஸகாலஸ்ஸ்யாத்) என்றாரே ஸ்ரீகௌஸல்யையார்: போய்வருகை தவிராராகில் மீண்டுபுகுரும்நாள் இன்றாயிற்றாகிலோ என்றாற்போலே, இம்மநோரதத்துக்கு அடைத்தகாலமே அநுபவத்துக்கு அடைத்தகாலமாகப் பெற்றோமாகிலோ ? என்கிறார். (க)

---

"அழகிய பொழிலையுடைய திருவாறன்விளை" என்று - தோப்பை வர்ணித்ததுக்கு பாவம் - ப்ராப்ய பூமி இத்யாதி. "அணிபொழில்" என்கையாலே - பரப்பும் அர்த்தாத்ஸித்தம். "அன்புற்று" என்றதுக்கு அவதாரிகையாதல், "அன்புற்றமர்ந்துறைகின்ற" என்றவநந்தரம், "அன்புற்று" என்றதுக்கு பாவமாதல் - தேந தே இத்யாதி. "ஸர்வேஷாம் ஹி ஸ தர்மாத்மா வர்ணாநாம் குருதே தயாம் | சதுர்ணாம் ஹி வயஸ்ஸ்தாநாம் தேந தே தமநுவ்ரதா:" இத்யயோத்யாகாண்டே. "அன்புற்று" என்றதுக்கு ஶப்தார்த்தம் - திருவாய்மொழி இத்யாதி. இப்போது "ஆகுங்கொலோ" என்று விவக்ஷித்து, இப்படி சொன்னாருண்டோ? என்ன - அபீதாநீம் இத்யாதி. "அபீதாநீம் ஸ காலஸ்ஸ்யாத் வநாத் ப்ரத்யாகதம் புந: | யத்த்வாம் புத்ரக பஶ்யேயம் ஜடாவல்கலதாரிணம்." இத்யயோத்யாகாண்டே கௌஸல்யா. (உ௪ - ௩எ½) ஹே புத்ரக, வநாத் புந: ப்ரத்யாகதம் - ஜடாவல்கலதாரிணம் த்வாம் பஶ்யேயம் யதிதி ஸ கால: இதாநீம் ஸ்யாதபி இத்யந்வய:. இதுக்கு அர்த்தம் - போய்வருகை இத்யாதி. த்ருஷ்டாந்தத்தில்சொன்ன அர்த்தத்தை தார்ஷ்டாந்திகத்திலே அதிதேஶிக்கிறார் - இம்மநோரதத்துக்கு இத்யாதி. எழில்மலர்மாதரும் தானுமான இருவர்க்கும் இன்பமுண்டாம்படியாகவும், அத்தாலே இவ்வேழுலகுக்கும் இன்பமுண்டாம்படியாகவும் இனிதுடன் வீற்றிருந்தானுகிற என்று ஶப்தார்த்தம். 'எழில்மலர்மாதரும் தானும் - இன்பம்பயக்க-இவ்வேழுலகை' என்றுதொடங்கி, 'கைதொழு நாள்களு மாகுங்கொலோ' இத்யந்வய:. (க)

# இரண்டாம் பாட்டு.

ஆகுங்கொல்?ஐயமொன்றின்றி அகலிடம்முற்றவும்ஈரடியே
யாகும்பரிசுநிமிர்ந்த திருக்குறளப்பன்அமர்ந்துறையும்
மாகந்திகழ்கொடிமாடங்கள் நீடு மதிள்திருவாறன்விளை
மாகந்தநீர்கொண்டுதூவிவலஞ்செய்து கைதொழக்கூடுங்கொலோ?

*ஆ.—(ஆகுங்கொல்.)-ஒருஸந்தேஹமின்றிக்கே அகலிடம்முற்றவும் ஈரடியே யாகும்படி அளந்தருளின ஸ்ரீவாமநனெழுந்தருளியிருக்கிற, திருவாய்மொழி பாடுவிக்கை யாகிற மஹோத்ஸவத்துக்காகக் கொடிகட்டி அலங்க்ருதமான திருவாறன்விளையை, சந்தநகர்ப்பூராதி ஸௌரப்ய த்ரவ்யவாஸிதமாய் ஹிமசீதளமான நீர்கொண்டு தூவி வலம் செய்து கைதொழக்கூடுமேயோ? என்கிறார்.*

*ஒ.—இரண்டாம்பாட்டில், திருவாறன்விளையிலே நிரதிசய ஸௌகந்த்யமான நீரைக்கொண்டு திருநீர்விட்டு ப்ரதக்ஷிணம்பண்ணிக் கையாலே தொழவும் கூடவற்றே! என்கிறார்.*

*[அகலிடம்முற்றவும்] - பூமியெல்லாம்:ஸர்வலோகங்களுக்கும் உபலக்ஷணம் [மாகம்] - ஆகாசம்.*

*ப.—அநந்தரம், அநந்யார்ஹத்வ ஆபாதகமான த்ரிவிக்ரமாபதாநத்தையுடையவன் வர்த்திக்கிற திருவாறன்விளையை, ஸௌகந்த்யமான ஜலங்களாலே திருநீரிட்டு ப்ரதக்ஷிணாத்யநுவ்ருத்திகள் பண்ணக்கூடுமோ? என்கிறார்.*

*ஒன்று - ஒரு, ஐயம்இன்றி - ஸந்தேஹம் அற, ஆகுங்கொல் - உண்டாமோ? (எதுஎன்னில்), அகல் - விஸ்தீர்ணமான, இடம் - லோகங்களை, முற்றவும் - எல்லாம், ஈரடியே ஆகும்பரிசு - இரண்டடியே யாம்படி, நிமிர்ந்த - வளர்ந்தருளின, திருக்குறள் - ஸ்ரீவாமநனை, அப்பன் - மஹோபகாரகன், அமர்ந்து - (அவதாரஸ்தலமான தேவலோகத்திலுங் காட்டில்) அமர்ந்து, உறையும் - உறையக்கடவதாய், மா - பெரிய, கம் - ஆகாசத்திலே, திகழ் - விளங்காநிற்கிற, கொடி - கொடிகளையுடைய, மாடங்கள் - மாடங்களையும், நீடு - நெடிய, மதிள் - மதிள்களையுமுடைத்தான, திருவாறன்விளை - திருவாறன்விளையை, மா - விலக்ஷணமான, கந்தம் - ஸௌரபத்தையுடைத்தான, நீர் - நீரை, கொண்டு - கொண்டு, தூவி - தூவி, வலம்செய்து - ப்ரதக்ஷிணம் பண்ணி, கைதொழ - அஞ்சலிபண்ண, கூடுங்கொலோ - கூடுமோ? "ஆகுங்கொல்" என்கிற நினைவை-மேலே உபபாதித்தபடியா யிருக்கிறது. ஐயமொன்றின்றி என்று - மேலேகூட்டவுமாம்; இது சக்யமோவென்கிற ஐயமின்றி அளந்தானென்னவுமாம்.*

*இ.—இரண்டாம்பாட்டில், திருவாறன்விளையிலே விலக்ஷண ஸௌகந்த்யயுக்தமான திருநீர்விட்டு ப்ரதக்ஷிணம் பண்ணிக் கையாலேதொழவும் கூடவற்றே? என்கிறார்.*

*[ஆகுங்கொலையமொன்றின்றி] - இது முடியுமோவென்னும் ஸந்தேஹமின்றியே யென்னுதல், பூமிப்பரப்பை முடியவளக்க முடியுமோவென்னுதல். தன்மௌர்க்யமிறே ஸந்தேஹாஸ்பதம்.[அகலிடம்முற்றவும்]-பஞ்சாசத்கோடிவிஸ்தீர்ணையான பூமியடைய. [ஈரடியித்யாதி] - மூவடியையிரந்து இரண்டடியாலே அளந்தான், ஓரடிக்குச் சிறையிட்டு வைக்கைக்காக. அகலிடமென்று- ஸகலலோகங்களுக்கும் உபலக்ஷணம். [திருக்குறளப்பன்] - ஸ்ரீவாமநனை மஹோபகாரகன். [அமர்ந்துறையும்] - திருப்பாற்*

கடலிலும் ஸ்வர்கத்திலும்போலன்றியே அவன்விரும்பி நித்யவாஸம்பண்ணுகிற தேசம். [மாகந்திகழ்இத்யாதி] - கொடியை யுடைத்தான மாடங்களையும், ஓங்கினமதிளையுமுடைத்தான திருவாறன்விளையை. [மாகம்] - ஆகாசாவகாசத்தையடைய மறையாநின்றதாயிற்று, மாடங்களில் கொடிகள். அவன் திருவடிகளாலளந்த ஆகாசாவகாசத்தளவும் கணிசிக்கிறதாயிற்றுக் கொடிகள். [மாகந்தநீர்] - மஹத்தான கந்தத்தையுடைத்தான நீர். "ஸிஞ்சந்து வஸுதாம் க்ருத்ஸ்நாம் ஹிமசீதேந வாரிணா" என்று. ஸ்ரீநந்திக்ராமம் தொடங்கி ஸ்ரீ பரத்வாஜாஸ்ரமத்தளவும் ஸ்ரீசத்ருக்நாழ்வான் பனிநீரை விடுவித்தானிறே; அப்படியே நாமும் அங்கேபுக்கு அநுகூலவ்ருத்திகளைப் பண்ணக்கூடவற்றே?

ஈடு:—இரண்டாம்பாட்டு. திறவாறன்விளையிலே மிக்கபரிமளத்தையுடைத்தான நீரைக்கொண்டு திருநீர்விட்டு ப்ரதக்ஷிணம்பண்ணிக் கையாலேதொழவுங்கூடவற்றே ? என்கிறார்.

[ஆதுங்கொலையமொன்றின்றி] - இது அநுபாஷணமாகாநிற்கச்செய்தே, ஆதராதிசயஸூசகமாயிருக்கிறது. ஒருஸம்சயமின்றிக்கே நமக்கு இதுகூடவற்றே ? அன்றிக்கே, ஆதுங்கொல் என்கிற ஐயமுங்கூட இன்றிக்கே ஈரடியேயாகும்பரிசு நிமிர்ந்தானென்னவுமாம். எல்லாம்செய்தாலும் "நமக்கு இது கூடுமோ? கூடாதோ?" என்றுஇருந்தானாயிற்று மௌக்த்யத்தாலே. [அகலிடம்முற்றவும்]-பரப்பையுடைத்தான பூமியையும் ஸ்வர்லோகாதிகளுமெல்லாம் இரண்டடியாகும்பரிசு நிமிர்ந்த. இரண்டடியாலே ஸம்யந்தரிக்ஷாதிகளை அளந்தானாயிற்று, ஓரடிக்கு இவனைச் சிறையிட்டுவைக்க நினைத்து. [திருக்குறளப்பன்] - ஸ்ரீவாமநனான மஹோபகாரகன். [அமர்ந்துறையும்] - இந்த்ரனுக்கு ராஜ்யத்தை வாங்கிக்கொடுத்துத் திருப்பாற்கடலிலேபோய்ச் சாய்கையன்றிக்கே, அவன்வந்து நித்யவாஸம் பண்ணுகிற. [மாகந்திகழ் இத்யாதி] - அவன் திருவடிகளாலளந்த ஆகாசப் பரப்படங்கலும் வ்யாபியாநின்றுள்ள கொடிகளையுடைத்தான மாடங்களையும், ஓங்கியிருந்துள்ள மதிட்களையுமுடைத்தான திருவாறன்விளையை.[மாகந்தநீர் இத்யாதி]-"ஸிஞ்சந்து வஸுதாம் க்ருத்ஸ்நாம் ஹிமசீதேந வாரிணா" (ஸிஞ்சந்து வஸுதாம்க்ருத்ஸ்நாம்ஹிமசீதேநவாரிணா) என்று ஸ்ரீநந்திக்ராமந்தொடங்கி ஸ்ரீபரத்வாஜ மஹாநுஸ்ரமத்தளவும்வர, பனிநீராலேவிடுவித்தான் ஸ்ரீசத்ருக்நாழ்வான் என்றதிறே; அப்படியே, மாகந்தநீர்கொண்டு தூவி, அநுகூலவ்ருத்திகளைப்பண்ணிக் கைதொழக் கூடவற்றேயோ ?

---

இரண்டாம்பாட்டு.—ஆதுங்கோல் இத்யாதி. "திருவாறன்விளை மாகந்தநீர்கொண்டு" இத்யாதி மேலெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை - திருவாறன்விளையிலே இத்யாதி.

திரியவும் "ஆதுங்கொல்" என்கிறதென் ? என்ன - இது அநுபாஷணம் இத்யாதி. ஸப்தார்த்தம் - ஒருஸம்சயம் இத்யாதி. "ஐயமொன்றின்றி - ஆதுங்கொல்" என்றபடி. அர்த்தாந்தரம் - அன்றிக்கே இத்யாதி. ஸர்வசக்திக்கு ஸம்சயப்ரஸக்தியேதென்ன - எல்லாம்செய்தாலும் இத்யாதி. முற்றவும் - ஸ்வர்லோகாதிகளையும். ஆதும்பரிசு - ஆம்ப்ரகாரம். மூன்றுஅடியை இரந்து இரண்டடியாலே அளப்பானென் ? என்ன-இரண்டடியாலே இத்யாதி. மாகம்=மஹாகம்: விஸ்ருதமான ஆகாசமென்றபடி. "க்ருத்ஸ்நாம்" என்றதுக்கு அர்த்தம் - ஸ்ரீநந்திக்ராமம் இத்யாதி. "ஸிஞ்சந்து வஸுதாம் க்ருத்ஸ்நாம் ஹிமசீதேந வாரிணா । ததைவாந்யே க்ருதா ராஜ்ஞஸ் ஸமந்தாத் ஸர்வதோ திசம்" இதி ராமாயணே ஸர்க்கே ஸமுதாக்ருதம் ஸ்லோகஸ்ஸ்ய். (யுத்-க௨௰-௬௨)

(உ)

# மூன்றும் பாட்டு.

கூடுங்கொல் ? வைகலும்கோவிந்தனைமதுசூதனைக்கோளரியை
ஆடுபறவைமிசைக்கண்டு கைதொழுதன்றியவனுறையும்
பாடும்பெரும்புகழ்நான்மறைவேள்வியைந்துஆறங்கம்பன்னினர்வாழ்
நீடுபொழில்திருவாறன்விளைதொழ வாய்க்குங்கொல்? நிச்சலுமே.

ஆ.—(கூடுங்கொல்) - ஸௌசீல்யவாத்ஸல்யாதி கல்யாணகுண விசிஷ்டனான எம்பெருமான் பெரிய திருவடி மேலே எழுந்தருளியிருக்கும்படியைக் கண்டு கை தொழுகையன்றியே, அவனுக்குங்கூட ப்ராப்யமாய், ஸாங்க ஸகலவேதவித் தக்ஷரரராய், ததர்த்த பரமபுருஷாராதநரூப பஞ்சமஹாயஜ்ஞாத்யநுஷ்டாநசீலரா யிருந்த திவ்யஜநங்கள் வாழ்கிற திருவாறன்விளையை நிச்சலும் தொழக்கூடுமோ ? என்கிறார்.

ஒ.—மூன்றும்பாட்டில், திருவாறன்விளையில்எம்பெருமான் பெரியதிருவடி வடிமேலே ஏறியருளி இங்கே எழுந்தருளக் கண்டாலும் அவனைத்தவிர்ந்து, நாள் தோறும் திருவாறன்விளையைத் தொழக்கூடவற்றே ! என்கிறார்.

[கோவிந்தனை மதுசூதனைக்கோளரியை] - ஆச்ரிதஸுலபனாய் ஆச்ரிதவிரோதி நிரஸநஸ்வபாவனாய் ப்ரதிகூலர்க்கு முகங்கொள்ளமுடியாதே யிருந்துள்ள எம்பெருமானை. [பாடும்பெரும்புகழ் நான்மறை வேள்வியைந்துஆறங்கம்பன்னினர்] - அவனுடைய பெரும்புகழைப் பாடாநின்றுள்ள ஷடங்கஸஹிதமான நாலுவேதத்தையும் பஞ்சமஹாயஜ்ஞத்தையும் பயின்றவர்கள்.

ப.—அநந்தரம், ஆச்ரிதரக்ஷணார்த்தமான ஆகாரத்தையுடைய கருடவாஹநனை அநுபவித்து, அவன் வர்த்திக்கிற தேசத்தை நித்யமாகத்தொழ வாய்க்கவற்றோ ? என்கிறார்.

வைகலும் - என்றும், கூடுங்கொல் - இப்படிக்கூடவற்றோ ? கோவிந்தனை - கோரக்ஷணத்துக்கு முடிசூடினவனாய், மதுசூதனை - (ரக்ஷ்யவிரோதியான) மதுவுக்கு நிராஸகனாய், கோளரியை - அத்யுஜ்ஜ்வல தேஜோரூப ஸிம்ஹம்போலே விரோதிகளுக்கு அநபிபவநீயனானவனை, ஆடு - ஊர்ஜஸ்வீயகதியான, பறவை மிசை - பெரியதிருவடி மேலே, கண்டு - கண்டு, கைதொழுது - அஞ்சலிபண்ணி, (அநுபவித்து), அன்றி - அவ்வளவன்றியே, அவன் உறையும் - அவன் வர்த்திக்குமிடமாய், பாடும் - (உச்சரிதஸ்வரமாம்படி) பாடப்படுகிற, பெரு — பெரிய, புகழ் - பகவத்குணப்ரதையையுடைத்தான, நான்மறை - (ருக்யஜுஸ்ஸாமாதர்வண ஸ்வரூபமான) நாலுவேதங்களையும், ஐந்து வேள்வி - (தேவபித்ருபூதமநுஷ்யப்ரஹ்மயஜ்ஞ ரூபமான) பஞ்சமஹாயஜ்ஞங்களையும், அங்கம் - (சிக்ஷை நிருக்தம் வ்யாகரணம் சந்தோவிசிதி கல்பஸூத்ரம் ஜ்யோதிஶ்சாஸ்த்ரமென்கிற) அங்கங்கள், ஆறு - ஆறையும், பன்னினர் - பரக்க நிரூபித்துப்போருகிறவர்கள், வாழ் - (பகவதநுபவத்தோடே) வாழ்வதாய், நீடு - பெரிய, பொழில் - பொழிலையுடைத்தான, திருவாறன்விளை - திருவாறன்விளையை, தொழ - தொழ, நிச்சலும் - நித்யமாக, வாய்க்குங்கொல் - வாய்க்கவற்றோ ?

இ.—மூன்றும்பாட்டில், அவன் பெரிய திருவடியின்மேலேயேறி இங்கே யெழுந்தருளக் கண்டாலும், அவனைத் தவிர்ந்து அவ்வூரை நாள்தோறும் தொழக்கூட

வற்றே? என்கிறார். [கூடுங்கொல் வைகலும்] - காலமெல்லாம் இங்ஙனே அநுபவிக்கக் கூடவற்றோ? [கோவிந்தனித்யாதி] - அங்குவர்த்திக்கிறவனைக் கண்டால் மூன்று ஸ்வபாவம் ப்ரகாசியா நிற்கும். அதாவது - ஆஸ்ரிதவத்ஸலனா யிருக்கையும், தத்விரோதி நிரஸநசீலனாயிருக்கையும், அநாஸ்ரிதர்க்கு அநபிகமநீயனா யிருக்கையும். [கோளரி] - 'ஜ்வலந்தம்' என்கிறபடியே நிரதிசய தேஜோயுக்தனாயிருக்கை. [ஆடுபறவைமிசைக்கண்டு] - ஐமவத் ஸ்பர்சத்தாலே களித்தாடா நிற்கிற பெரிதிருவடிமேலே கண்டு. திருவாறன் விளை உத்தேச்யமாகப் போகாநின்றால், அவன் திருநகரி யுத்தேச்யமாக வாராநிற்கும். [கைதொழுது] - அவனை இங்குக் கொள்ளக்கடவதொரு காரியமில்லையேயாகிலும், அநுவர்த்திக்கவேண்டும் ப்ராப்தி யுண்டிறே. [அன்றி] - அவனைவிட்டு. [அவனுறையும்] - அவன் நித்யவாஸம் பண்ணுகிறவூரிலே சென்றநுபவிக்கக்கடவன். [பாடும்பெரும்புகழ் நான்மறை] - அவனுடைய கல்யாணகுணங்களைப் பாடாநின்றுள்ள நாலுவேதங்கள். [வேள்வியைந்து] - பஞ்சமஹாயஜ்ஞம். [ஆறங்கம்] - ஷடங்கம். [பன்னினர்வாழ்] - இவற்றைப் பயின்றவர்கள்; வேததாத்பர்யம் கைப்பட்டவர்கள். நித்யாநுபவம் பண்ணுகிற தேசம். [நீடுபொழிலித்யாதி] - ஓக்கத்தையுடைய பொழில்சூழ்ந்த திருவாறன் விளையிலேபுக்கு, அங்குள்ள வைஷ்ணவர்களோடேகூடி யநுபவிக்கக் காலமெல்லா மிங்ஙனேயாகவற்றோ?

ஈடு.—மூன்றாம்பாட்டு. திருவாறன்விளையிலெம்பெருமான் பெரியதிருவடி மேலே ஏறி எழுந்தருளக்கண்டாலும், அவனைத்தவிர்ந்து திருவாறன்விளையைத் தொழக் கூடவற்றே? என்கிறார்.

[கூடுங்கொல்வைகலும்] - இதுவும் அநுபாஷணமாய், நாள்தோறும் நமக்கு இது கூடவற்றேயோ? [கோவிந்தன் இத்யாதி] - அங்குநிற்கிறவனைக் கண்டால் மூன்று படி தோடைகொள்ளலாயிருக்கும். ஆஸ்ரிதவாத்ஸல்யமும், ஆஸ்ரிதவிரோதிநிரஸந சீலதையும், அநாஸ்ரிதர்க்கு அநபிகமநீயன்என்னுமிடமும்இவை [கோளரி] - "ஜ்வலந்தம்" (ஜ்வலந்தம்) என்கிறபடியே. [ஆடுபறவைமிசைக்கண்டு] - வெற்றிப்புள்ளின்மேலேகண்டு. ஆடு - வெற்றி. அன்றிக்கே, ஸர்வேஸ்வரன்வாஹநம் என்கிற ஹர்ஷப்ரகர்ஷத்தாலே, மதுபாநமத்தரைப்போலே களித்து ஆடாநின்றுள்ள பெரிய திருவடிதிருத்தோளிலே கண்டு என்றுமாம். நாம் திருவாறன்விளையை ப்ராப்யம் என்று போகிறவோபாதி, அவனும் திருநகரியை "உத்தேஸ்யமாம்" என்று வாராநிற்குமிறே. [கண்டு] - நடுவழியிலே கண்டால். [கைதொழுது] - காரியங்கொண்டிலோமேயாகிலும், கிட்டினால் கைதொழுகைக்கு ப்ராப்தியுண்டிறே; ஆகையாலே, முறைதப்பாமல் அநுவர்த்தித்து.

---

மூன்றாம்பாட்டு.—கூடுங்கோல் இத்யாதி. "ஆடுபறவைமிசைக்கண்டு கைதொழுதன்றி யவனுறையும் - திருவாறன்விளைதொழ வாய்க்குங்கொல்நிச்சலும்" என்ற பதங்களைக்கடாக்ஷித்து அவதாரிகை - திருவாறன்விளை இத்யாதி.

மூன்றுதிருநாமத்தைச் சொன்னதுக்கு பாவம் - அங்குநிற்கிறவனை இத்யாதி. தோடைகொள்ளுகை - தோன்றுகை. "கோளரி" தேஜஸ்ஸையுடைய ஸிம்ஹமென்ற விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் - ஜ்வலந்தம் இத்யாதி. பெரியதிருவடிமேலே காண்கைக்கு ப்ரஸக்தியேதென்ன - நாம் திருவாறன் இத்யாதி. அவனைவிட்டு அத்தேசத்தேறப்போகிற உமக்கு அவனைத் தொழவேண்டுவானென்? என்ன - காரியம் இத்யாதி, இத்தால் - சரமபர்வநிஷ்டர்க்கும் ஈஸ்வரன் உத்தேஸ்யமென்

[அன்றி] - அவனைவிட்டு. [அவனுறையும்] - அவன் இராத்தங்கும்ஊரிலேபோய்ப்புகக்கடவோம் ; ஸர்வேஶ்வரன் ப்ராப்யனாகாநிற்கச்செய்தே, ஒருதேசவிஶேஷத்திலே போய் அநுபவிப்பதாக ஒருநியதியுண்டிறே. [பாடும்பெரும்புகழ் நான்மறை] - அவனுடைய கல்யாணகுணங்களைப் பாடாநின்றுள்ள நாலுவகைப்பட்ட வேதங்கள். [வேள்வியைந்து]- பஞ்ச மஹாயஜ்ஞங்கள். [ஆறங்கம்] - அங்கங்கள்ஆறும். இவற்றைப்பன்னினவர்கள் - எல்லைக் கரைகண்டிருக்குமவர்கள். "போதயந்தஃபரஸ்பரம்" (போதயந்தஃபரஸ்பரம்) என்னும்படி, அவ்வூரிலுள்ளாரோடே போய்க் கூடவேணும். [வாழ்] - வேததாத்பர்யபூதனைக் கண்ணாலேகண்டு அநுபவித்து வாழாநின்றுள்ள. [நீடுபொழில்திருவாறன்விளைதொழ] - ஓக்கத்தையுடைத்தான பொழிலையுடையதிருவாறன்விளையைத்தொழ. [வாய்க்குங்கொல்நிச்சலுமே] - அங்குத்தை ஸ்ரீவைஷ்ணவர்களோடே கூடி நித்யாநுபவம்பண்ணக் கூடவற்றேயோ (௩)

## நான்காம் பாட்டு.

வாய்க்குங்கொல் நிச்சலும் எப்பொழுதும் மனத்துஈங்குநினைக்கப்பெற
வாய்க்குங்கரும்பும் பெருஞ்செந்நெலும் வயல்சூழ்திருவாறன்விளை
வாய்க்கும்பெரும்புகழ்மூவுலகீசன் வடமதுரைப்பிறந்த
வாய்க்கும்மணிநிறக்கண்ணபிரான்தன் மலரடிப்போதுகளே.

ஆ.—(வாய்க்குங்கொல்) - ஸ்ரீ மதுரையிலே வந்து திருவவதாரம்பண்ணியருளுகையாலே அத்யுஜ்ஜ்வலமான ஆத்மகுணங்களையும் ரூபகுணங்களையு முடையனாயிருந்த அவனெழுந்தருளியிருந்த திருவாறன்விளையிலே, அவன் திருவடி மலர்களை நெஞ்சால் என்று அநுபவிக்கக்கூடும்? என்கிறார்.

ஒ. - நாலாம்பாட்டில், திருவாறன் விளையிலே செல்லப்பெறேனுமாகில், அங்கு நின்றருளின எம்பெருமான் திருவடிகளை இங்கேயிருந்தாகிலும் என்றும் நிரந்தரமாக நினைக்கக்கூடவற்றே! என்கிறார். [வாய்க்குமென்று தொடங்கி.] - ஸம்ருத்தமான கரும்பும் பெரியசெந்நெலையு முடைத்தான வயல்சூழ்ந்த திருவாறன்விளையிலே எழுந்தருளியிருக்கையாலே வாய்த்திருந்துள்ள பெரும்புகழையுடையஸர்வேஶ்வரனாயிருந்துவைத்து வடமதுரையிலே வந்து திருவவதாரம் பண்ணின வாய்த்திருந்துள்ள நீலரத்னத்தின் நிறத்தையுடைய அநுக்ரஹஶீலனான க்ருஷ்ணனுடைய நிரதிஶய போக்யமான திருவடிகளையே.

ப.— அநந்தரம், அநுபாவ்யவிக்ரஹ விஶிஷ்டனாய்க்கொண்டு திருவாறன்விளையில் வர்த்திக்கிறவன் திருவடிகளை நெஞ்சாலே நிரந்தரமாக அநுபவிக்கும்படி வாய்க்கவற்றோ? என்கிறார்.

---

கிறது. அவன் இங்கேவந்தால் அத்திருநகரி ப்ராப்யமாயிருக்க, அங்கே போவானென்? என்ன - அவன் இராத்தங்கும் இத்யாதி. எதிரேவந்தவனை விட்டு அங்கேபோவானென்? என்ன - ஸர்வேஶ்வரன் இத்யாதி. "பெரும்புகழ் - பாடும் - நான்மறை" என்று அந்வயம். இங்கே - "தஸ்யைஷ ஏவ மஹிமா" என்றது அநுஸந்தேயம். இப்போது இவர்களைச்சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநம் ஏதென்ன-போதயந்த இத்யாதி. "வாழ்" என்றதுக்கு பாவம் - வேத இத்யாதி. (௩)

வாய்க்கும் - (ஸம்ருத்தமாய்) வாய்த்துவருகிற, கரும்பும் - கரும்பும், பெருஞ்செந்நெலும் - பெருஞ்செந்நெலுமான, வயல் - வயல், சூழ் - சூழ்ந்த, திருவாறன்விளை - திருவாறன்விளையிலே, வாய்க்கும் - ஸந்நிஹிதனாகையாலே, பெரும் - அபிவ்ருத்தமான, புகழ் - புகழையுடையனாய், மூவுலகு - த்ரிவித சேதநாசேதநங்களுக்கும், ஈசன் - ஸ்வாமியாய் வைத்து, (ஆஸ்ரிதரக்ஷணார்த்தமாக), வடமதுரை - ஸ்ரீ மதுரையிலே, பிறந்த - அவதரித்து, வாய்க்கும் - (ஆஸ்ரிதர்க்கு அநுபாவ்யமாம்படி) வாய்த்த, மணி — நீலரத்நம்போலே யிருக்கிற, நிறம் - திருநிறத்தையுடைய, கண்ணன் - க்ருஷ்ணனாகிற, பிரான் தன் - மஹோபகாரகனுடைய, மலர் - விகஸிதமான, அடிப்போதுகள் - திருவடித் தாமரைகளை, ஈங்கு - இங்கேயிருந்து, மனத்து - மநஸ்ஸிலே, நினைக்க - நினைக்க, (அவன் நினைவின்படியே), நிச்சலும் - என்றும், (எப்பொழுதும் ஒரு க்ஷணமும்மொழியாமல்), பெற - பெறும்படி, வாய்க்குங்கொல் - வாய்க்கவற்றோ?

இ.—நாலாம்பாட்டில், திருவாறன்விளையில் செல்லப்பெறோமாகில், அங்கு நின்றருளுகிறவனை யவ்வூரிலே சென்று புக்கு அநுபவிக்கும்படியை, இங்கேயிருந்தாகிலும் நிரந்தரமாக நினைக்கக்கூடவற்றே! என்கிறார். [வாய்க்குங்கொல் நிச்சலும்] - நாள்தோறும்இங்ஙனேவாய்க்கவற்றோ? [எப்பொழுதும்] - நித்யாக்நிஹோத்ரம்போலன்றியே, நிரந்தரமாக. [மனத்துஈங்கு நினைக்கப்பெற] - நெஞ்சாலே யிங்கேயிருந்து அநுஸந்திக்கப்பெற. ‘‘[illegible]’’. இவ்வநுஸந்தாநம் ரஸித்தபடியினாலே யிதுக்கவ்வருகு ஒருபேறில்லையென்கிறார். [வாய்க்குமித்யாதி] - ஸம்ருத்தமான கரும்பும், அதுக்குங்கூட நிழல்செய்யும் செந்நெலையுமுடைத்தான வயலாலே சூழப்பட்ட தேசம். இட்டதெல்லாம் குறைவற விளையும் தேசம். [வாய்க்கும் பெரும்புகழ்] - இட்டதெல்லாம் ஸம்ருத்தமாக விளைகிற தேசத்திலே யிருந்தருளுகையாலே, ஸம்ருத்தமாய் அஸங்க்யாதமான கல்யாணகுணங்களையுடையனாகை. [மூவுலகீசன் வடமதுரைப் பிறந்த] - ஸர்வேஸ்வரனாய் வைத்து, *ஸாதுபரித்ராணார்த்தமாக ஸ்ரீ மதுரையிலே வந்தவதரித்த. [வாய்க்கும்மணிநிறக்கண்ணபிரான் தன்] - அப்ராக்ருதமானதிவ்யஸம்ஸ்தாநத்தை இதரஸஜாதீயமாக்குகையாலே பெருவிலையனான நீலரத்நம்போலே யிருக்கிற நிறத்தையுடையனாய் உபகாரசீலனான க்ருஷ்ணனுடைய. [மலரடிப்போதுகளை] - நிரதிஸயபோக்யமான திருவடிகளை. விகஸிதமான திருவடிகளாகிற புஷ்பங்களை - எப்பொழுதும் மனத்துஈங்கு நினைக்கப்பெற - வாய்க்குங்கொல்.

ஈடு.—நாலாம்பாட்டு. இதில், அங்குப்போய் அநுபவிக்கவேண்டா, இங்கேயிருந்து அங்குத்தைப்பரிமாற்றங்களை மநோரதிக்கும் மநோரதம் நமக்குக் கூடுவதுகாண்? என்கிறார்.

[வாய்க்குங்கோல்நிச்சலும்] - நமக்கு இப்பேறு நாள்தோறும்கூடவேணும். [எப்பொழுதும்] - அதுதன்னிலும் நித்யாக்நிஹோத்ரம்போலே ஒருகாலவிஸேஷத்திலே

நாலாம்பாட்டு.—வ

வாய்க்குங்கொல்’’ என்ற பதங்களைக் கடா.

கூடுவதுகாண் - கூடுமோ? என்றபடி.

)த்யாதி. ‘‘ஈங்கு - மனத்து - நினைக்கப்பெற

இதில் அங்குப்போய் இத்யாதி

திரியவும் ‘‘எப்பொழுதும்’’ என்பானென்? என்ன - அது

தன்னிலும் இத்யாதி. ‘‘ஈங்கு’’ என்றதுக்கு - அங்குப்போய் இத்யாதி. ‘‘நினைக்க’’ என்றதே

யாய்ப் போகவொண்ணாது, எல்லாவவஸ்த்தைகளிலும் உண்டாகவேணும். [மனத்தூஉங்கு நினைக்கப்பெற] - அங்குப்போய் அநுஹவிக்கவேண்டா, இங்கேயிருந்து நெஞ்சாலே அங்குத்தைப் பரிமாற்றங்களை அநுஸந்திக்கப்பெறவமையும். “பெற” என்கையாலே - இம்மநோரதத்துக்கு அவ்வருகு ஒருபேறில்லை என்றிருக்கிறாராயிற்று இவர். “**துர்க்கதாவபி**” (துர்க்கதாவபி) - உத்க்ரமணதசையிலே வருவதொரு துர்க்கதியுண்டு, அத்தைப் பரிஹரித்துத்தரவேணுமென்று ப்ரார்த்திக்கிறேனல்லேன்; * ஐயார் கண்டமடைக்கிலும் நின்கழலெய்யாதேத்தும்படி பண்ணியருளவேணும். “**த்வத்கதோமேமநோரத:**” (த்வத்கதோமேமநோரத:) எனக்கு இதுகூடுமென்று தோற்றியிருந்ததோ உனக்கு? ‘**யதிநாஸம் நவிந்தேத**” (யதிநாஸம் நவிந்தேத) - இப்படியிருக்கிற இம்மநோரதத்துக்கு அழிவு வாராதாகில். “**தாவதாஸ்மிக்ருதீஸதா**” (தாவதாஸ்மிக்ருதீஸதா) - நாட்டார், மநோரதமென்றும் அநுஹவமென்றும் இரண்டாகவிறே சொல்லிப்போருவது; எனக்கு இதெல்லாம்வேண்டா, இம்மநோரதமாத்ரத்தாலே க்ருதக்ருத்யன் நான். “**ஸதா**”(ஸதா)- ஶரீரஸம்பந்தமற்றுப்பரமபதத்திலேபோய் ஏற்றமாக அநுஹவிக்குமதிற்காட்டில், நான் பேறாக நினைத்திருப்பது இத்தையே. முற்காலத்திலே இடையாற்றுக்குடிநம்பியென்பாரொருவருண்டு; அவர் திருநாட்கள்தோறும் பெருமாளைவந்து ஸேவித்துப்போனால், மறித்துத் திருநாள்வருந்தனையும் அதுதன்னையே போதுபோக்காக ஸ்மரித்துக்கொண்டிருப்பராயிற்று; ஒருநாள் ஒருதிருநாளில் வ்ருத்தாந்தம்அநுஸந்தியாநிற்கச்செய்தே, “அமுதுசெய்கைக்குப் போது வைகிற்று” என்றார்களாய், “ஆகில் வருகிறதிருநாள் அணித்தாகிறது” என்றாராம். அவர் நூறுவயஸ்ஸாம புகுகையாலே ஶய்யஸஹராநிற்கிறந்து திருமுளைத்திருநாளில் பெருமாள் புறப்பட்டருளுகைக்கு உதவவந்து புகுரப்பெறற்றிலர்: பெருமாளும் தேடியருளிக்காணாமை, “நம் இடையாற்றுக்குடியான் வந்திலன், நங்கண்ணாலமல்லவோ!” என்று திருவுள்ளமானாராம். அவர்தாம் ஆறாந்திருநாளிலே ஸேவித்திருக்கச்செய்தே, “நாம் உனக்குச்செய்ய வேண்டுவதென்?” என்றுகேட்டருள, “தேவரீர் தந்தருளின ஶரீரத்தைக்கொண்டு போரக் காரியங்கொண்டேன்; இனிப்போக்குவரத்துக்கு யோக்யமாகாதபடி போர ஜரித்தது” என்ன, “வாராய், மெய்யே இளைத்தாயாகில் இங்ஙனேயிரு” என்றருளிச்செய்தார்; பெருமாள் நடுவிற்றிருவாசலுக்கு அவ்வருகேயெழுந்தருளுங்காட்டில் திருநாட்டுக்கெழுந்தருளினார். [வாய்க்கும் இத்யாதி] - இட்டதுஅடைய ஸம்ருத்தமான தேசமாயிற்று. வாய்த்த

---

“பெற” என்றதுக்கு பாவம் - பெறஎன்கையாலே இத்யாதி. அப்படி மநோரதமாத்ரமே புருஷார்த்தமோவென்ன, ப்ரமாணம் - துர்க்கதாவபி இத்யாதி. “துர்க்கதாவபிஜாதாயாம் த்வத்கதோமேமநோரத: । யதிநாஸம் நவிந்தேத தாவதாஸ்மிக்ருதீஸதா” இதி ஜிதந்தாயாம். ஐயார் - ஶ்லேஷ்மம். “மே” என்றதுக்கு பாவம் - எனக்கு இத்யாதி. “மமேமதத்துர்க்கஸம்மேந்த்ரு உத்தமஶ்லோகஸந்நிதௌ । விஷயம்நாயயாவஸ்ய ஹ்ருதீக்ருதஸம்ஸாரஜந்தந:” என்றது இவ்விடத்தில் அநுஸந்தேயம். “தாவதா - க்ருதீ - அஸ்மி” என்றதுக்கு வ்யாவ்ருத்திபூர்வகமாக அர்த்தம் - நாட்டார் இத்யாதி. “ஸதா” என்றதுக்கு வ்யாவ்ருத்திபூர்வகமாக அர்த்தம் - ஶரீர ஸம்பந்தம் இத்யாதி. அப்படி மநோரதமாத்ரமே புருஷார்த்தமாயநுபவித்தபேருண்டோவென்ன - முற்காலத்திலே இத்யாதி. இப்படியிருப்பர் என்கைக்கு நியாமகமேதென்ன - ஒருநாள் இத்யாதி. வைகிற்று - கழிந்தது. வருகிறதிருநாள்- இரண்டாம் திருநாள். இத்தால், இப்போது அநுஸந்திக்கிறதிருநாள் முடியலாயிற்று; வருகிறதென்றார் என்றபடி. ப்ரஸங்காத் அவர் வைபவம் - அவர்

கரும்பும், அதுக்கு நிழல்செய்யும்படியாக வளர்ந்த செந்நெலுமான வயலாலே சூழப்பட்ட திருவாறன்விளையில். [வாய்க்கும்பெரும்புகழ்] - இட்டதடைய ஸம்ருத்தமான தேசமாகையாலே, அத்தேசாபிமாநிக்கும் கல்யாணகுணங்களும் ஸம்ருத்தமாகாநிற்குமாயிற்று. [மூவுலகீசன் இத்யாதி] - ஸர்வலோகேச்வரனாயிருந்துவைத்து, * ஸாதுபரித்ராணார்த்தமாக ஸ்ரீமதுரையிலேவந்தவதரித்த. [வாய்க்கும் மணிநிறக்கண்ணபிரான்தன்] - அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்த்தாநத்தையிறே இதரஸஜாதீயமாக்கிற்று; ஆகையாலே, அழகிய நீலமணிபோன்ற திருநிறத்தையுடைய உபகாரசீலனான க்ருஷ்ணனுடைய விகாஸத்தையுடைத்தான திருவடிகளாகிற சேவிப்பூக்களை - ஈங்கு - மனத்து - நினைக்கப்பெற — வாய்க்குங்கோல் நிச்சலும் எப்போழுதும் ? (ச)

---

## ஐந்தாம் பாட்டு.

---

மலரடிப்போதுகள்என்னெஞ்சத்தெப்பொழுதும் இருத்திவணங்க
பலரடியார்முன்பருளிய பாம்பணையப்பனமர்ந்துறையும்
மலரின்மணிநெடுமாடங்கள்நீடு மதிள்திருவாறன்விளை
உலகமலிபுகழ்பாட நம்மேல்வினையொன்று நில்லாகெடுமே.

ப.— (மலரடிப்போதுகள்) - தன் திருவடிமலர்களை என்னெஞ்சத்தெப்போழுதும் இருத்தி வணங்கித் திருவாய்மொழிபாடி அநுபவிக்கும்படி, திருவநந்தாழ்வான் முதலாகவுள்ள பலரடியார் முன்பருளிய பரமகாருணிகன் அமர்ந்துறையும் திருவாறன் விளையினுடைய உலகமலிபுகழ்பாட நம்முடைய க்லேசமெல்லாம் தீரும்; திருவாறன் விளையைப் பாடுங்கோளென்று ஸ்ரீவைஷ்ணவர்களைக் குறித்து அருளிச்செய்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், திருவாறன் விளையினுடைய ஸம்ருத்தமான புகழைப்பாட, நம்முடைய ஸகலதத்த்வங்களும் நீங்குமென்கிறார்.

[மலரடிப்போதுகளென்று தொடங்கி] - அயர்வறுமமரர்களிருக்க அவர்கள் முன்னே தன்னுடைய நிரதிசயபோக்யமான திருவடிகளையே எப்போதும் என்னுடைய நெஞ்சிலே இருத்தி வணங்கும்படியாக என்னை க்ருபைபண்ணியருளினவன் ஸபரிகரனாக வந்து அநந்யப்ரயோஜநனாய் வர்த்தியாநின்ற. இத்தால் - தம்மைத் திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட வுபகாரத்தை யருளிச் செய்கிறார். [பாம்பணையப்பனமர்ந்துறையும்]-திருவநந்தாழ்வானிற் காட்டிலும் விரும்பிவர்த்தியாநின்ற வென்றுமாம். [மலரில் மணியென்றுமேலுக்கு] - புஷ்பங்களோடே கூடின உரியமணிமாடங்கள்.

---

நூறுவயஸ்ஸு— இத்யாதி. "மூவுலகு" என்றது - எல்லாலோகங்களுக்கும் உபலக்ஷணமாக்கி - ஸர்வலோகேச்வரன் என்கிறார். இதரஸஜாதீயனாய் அவதரித்தவிடத்தே வாய்க்கும் மணிநிறமுண்டோவென்ன - அப்ராக்ருத இத்யாதி. வாய்க்கும் மணிநிறம் - அழகிய நீலமணி நிறமென்றபடி. "வாய்க்கும்" என்று - இங்கு, அழகைச்சொல்லுகிறது. அந்வயங்காட்டுகிறார் - ஈங்கு இத்யாதி. 'வாய்க்கும் கரும்பும்'என்றுதொடங்கி, 'மலரடிப்போதுகளை - நிச்சலுமெப்பொழுதும் - ஈங்கு - மனத்து - நினைக்கப்பெற - 'வாய்க்குங்கொல்' இத்யந்வயம்.

(ச)

ப.—அநந்தரம், ஆஸ்ரிதாநுஸாரத்தமாக அநந்தஸாயியானவன் வர்த்திக்கிற திருவாறன்விளையினுடைய ஸம்ருத்தமான புகழைப்பாட, நம் பாபம்ஒன்றுமொழியாமேபோமென்கிறார்.

மலர் - (நிரதிஸயபோக்யமாம்படி) விகஸிதமான, அடிப்போதுகள் - திருவடித்தாமரைகளை, என் - என், நெஞ்சத்து - நெஞ்சத்திலே, எப்பொழுதும் - ஸர்வகாலமும், இருத்தி - இருத்தி, வணங்க - (அநந்யப்ரயோஜனனாய்) வணங்கும்படியாக, பலர் - (ஸூரிகளும் பராஸராதிகளும் பக்தர்களுமான) பலவகைப்பட்ட, அடியார் - அடியார், முன்பு - ஸந்நிதியிலே, அருளிய - (நிரவதிக) க்ருபையைப் பண்ணியருளின, பாம்பணையப்பன் - (ஆஸ்ரிதஸம்ஸ்லேஷஸ்வபாவனையுள்ள) அநந்தஸாயியானவன், அமர்ந்து - (புறம்பு ஜகத்வ்யாபார) அந்யபரதையற்று, உறையும் - (வாஸந்தானே ப்ரயோஜநமாக) வர்த்திக்குமிடமாய், மலரில்-புஷ்போபஹாரங்களை யுடைத்தான, மணி-மணிமயமான, நெடு - ஓங்கின, மாடங்கள் - மாடங்களையும், நீடு - நெடிய, மதிள் - மதிளையுமுடைத்தான, திருவாறன்விளை - திருவாறன்விளையினுடையதாய், உலகம் - லோகத்திலே, மலி - மிக்க, புகழ் - புகழாய், பாட - (உகப்போடே) பாட, நம்-நம்மை, மேல்-மேலிட்டு வர்த்திக்கிற, வினை - பாபங்கள் (தானே), ஒன்றும் - (நம்பக்கல்) ஒன்றும், நில்லா - இல்லாதே, கெடும் - புக்கவிடமறியாமற்போம்.

இ.—அஞ்சாம்பாட்டில், திருவாறன்விளையினுடைய ஸம்ருத்தமான புகழைப்பாட, நம்முடைய ஸகலதுக்கங்களும் நீங்குமென்கிறார்.

[மலரடியித்யாதி] – விகஸிதமான செவ்விப்பூப்போலே யிருக்கிற திருவடிகளை ஸர்வகாலமும் என்நெஞ்சிலேவைத்து அதினுடைய போக்யதையாலே நிர்மமனாய்த் திருவடிகளிலே விழும்படி. [பலரடியார் முன்பருளிய] - அபர்வாமரர்களிருக்கவென்னுதல்; ப்ரஸித்தரான பராஸராதிகளிருக்கவென்னுதல்; இன்கவிபாடும் பரமகவிகளான முதலாழ்வார்களிருக்கவென்னுதல். என்பக்கலிலே விஸேஷகடாக்ஷத்தைப் பண்ணுவதே! முதலிகளெல்லாருமிருக்கத் திருவடிபக்கலிலே விஸேஷகடாக்ஷத்தைப் பண்ணினாற்போலே. அதாகிறது - தம்மைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட வுபகாரம். [பாம்பணையப்பனமர்ந்துறையும்] - பர்யங்கவித்யையிற்போலே திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளுகிற வுபகாரகன், அப்படுக்கையிற் காட்டில் விரும்பிவர்த்திக்கிற தேசம். ஸபரிகரனைப் அநந்யப்ரயோஜநனைப் வர்த்திக்கிறதேசமென்றபடி. [மலரில்மணி நெடுமாடங்கள்] - தேவர்கள் வர்ஷித்த புஷ்பவ்ருஷ்டிபோடேகூடி, ஓங்கினமணிமயமான மாடங்கள், ஓங்கின மதிள் இவற்றையுடைய திருவாறன்விளையினுடைய. [உலகமலி புகழ்பாட] – ஸம்ஸாரத்திலடங்காத ஏற்றத்தைப்பாடவென்னுதல், அங்கெழுந்தருளியிருக்கிறவனுடைய குணங்களைப்பாடவென்னுதல். [நம்மேல் வினையொன்று நில்லா கெடுமே] - நம்பக்கலுண்டான ஸகலதுக்கங்களும் தானே போம்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. திருவாறன்விளையிலே புக்கு அடிமைசெய்கைக்கு விரோதியானவையெல்லாம் அவனுடைய மிக்கபுகழைப்பாடப் பறந்துபோமென்கிறார்.

அஞ்சாம்பாட்டு.—மலரடி இத்யாதி. "மலிபுகழ்பாடநம்மேல் வினையொன்று நில்லா கெடும்" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை - திருவாறன்விளையிலே இத்யாதி.

[மலரடிப்போது இத்யாதி]-மலர்ந்திருந்துள்ள திருவடிகளாகிற செவ்விப்பூக்களை என்னுடைய ஹ்ருதயத்திலே எப்போதுமிருத்தி, அவ்வநுஸந்தாநம் போய்க்கனக்க அத்தாலே நிர்மமனாய்க்கொண்டு திருவடிகளிலேவிழும்படியாக. [பலரடியார்முன்பருளிய]-ஸ்ரீவேதவ்யாஸ ஹமவான், ஸ்ரீவால்மீகிஹமவான், ஸ்ரீபராஶரஹமவான் "இன்கவிபாடும் பரமகவிகள்" என்று சொல்லப்படுகிற முதலாழ்வார்களெல்லாருமுண்டாயிருக்க, என்பக்கலிலே விசேஷ கடாக்ஷம்பண்ணுவதே! "பஹூநிமாநேநமஹதாஹநூமந்தமவைக்ஷத" (பஹூநிமாநேநமஹதாஹநூமந்தமவைக்ஷத) - முதலிகளெல்லோருமிருக்கச்செய்தே திருவடிபக்கலிலே விசேஷகடாக்ஷம்பண்ணினாற்போலே யாயிற்று, பலருமுண்டாயிருக்க இவரை விஷயீகரித்தபடி. "கிழக்குத்தைராஜாக்கள்போல்லாங்காலே இங்கே நலிவு பிறக்குமளவிற் செய்வதென்?" என்று எம்பெருமானார் அத்தை அநுஸந்தித்தருளி "இத்தேசத்தை விடாதே நோக்கிக்கொண்டுகிடந்தோம்; இவ்விடத்துக்கும் அழிவுவரும்படி ஆஸுரவர்க்கம் மேலிடாநின்றது; மேல் செய்யவடுப்பதென்?" என்று பெரியநம்பிக்கு அறிவிக்க; "நான் பெருமாளுடைய திருவெல்லையிலே ஒருப்ராதக்ஷிணம் வரும்படியாக உம்முடைய ஶிஷ்யர்களிலே ஒருவரைப் போரவிடுவது" என்ன, "அதுக்காவாரார்?" என்ன, "என்பின்னேபோராநின்றால் 'ஒருவன்பின்னே போகாநின்றேன்' என்று தன் னெஞ்சிற்படாதே சாயைபோலே என்னைப்பின்செல்வா னொருவனாகவேணும்" என்ன, "அதுக்காவார் ஆர்?" என்ன, "ஆழ்வானைப் போகவிடலாகாதோ?" என்றாராம். [பலரடியார்முன்பருளிய] - பலமுதலிகளுண்டாயிருக்க, ஆழ்வானை ப்ரஸாதித்தாற்போலே. [பாம்பணையப்பனமர்ந்துறையும்]-ப்ர்யங்கவித்யையிற் சொல்லுகிறபடியே திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரன், அப்படுக்கையிற்காட்டிலும் விரும்பி வர்த்திக்கிற தேசமாயிற்று. [மலரின்மணி நெடுமாடங்கள்] - தேவர்கள் வர்ஷித்த புஷ்பத்தோடேகூடி, மணிமயமான மாடங்களின் ஓக்கத்தையுடைத்தாய், ஓங்கின மதிளையுமுடைத்தான திருவாறன்விளை. [உலகமலிபுகழ்பாட] - ஈண்டினவிடத்தில் வெள்ளம்போலே, லோகத்தில் அடங்காதபடியான அவனுடைய கல்யாணகுணங்களை ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு பாட. [நம்மேல்வினையொன்றும் நில்லாகெடுமே]-பாபம்போகைக்காகத் தனித்து ஓர் உத்யோகம் பண்ணவேண்டா, பால்குடிக்க நோய்தீருமாபோலே நம்முடைய பாபங்கள் தாமே நசித்துப்போம். (ரு)

---

"வணங்க" என்னுமளவுக்கும் அர்த்தம் - மலர்ந்து இத்யாதி. போய்க்கனக்க - மிகவுமதிஶயிக்க. போய் - மிகவும் என்றபடி. "வார்தல் போதல் லொழுகல் மூவை நெடுமையாகும்" என்னக்கடவதிறே. விஶேஷகடாக்ஷம்பண்ணுகையாவது - திருவாய்மொழி பாடுவித்துக்கொள்ளுகை. பலரடியார்முன்னே விஶேஷகடாக்ஷம்பண்ணினதுக்கு த்ருஷ்டாந்தம் - பஹூநிமாநேந இத்யாதி. "ஶ்ரீ க்ருஷாணோஜிநாயாஸாவவஸ்வாஸ்யவீரஹா । பஹூநிமாநேநமஹதாஹநூமந்தமவைக்ஷத" இதி ஸுந்தரகாண்டே. (சுகூ-ருக) பலரடியார் முன்பருளினதுக்கு த்ருஷ்டாந்தாந்தரம்-கிழக்குத்தை இத்யாதி. கிழக்குத்தை ராஜாக்கள் - க்ரிமிகண்டாதிகள். மலரில்-மலரோடேகூடின. "மலி" என்றதுக்கு ஹாவம் - ஈண்டின் இத்யாதி. ஈண்டினவிடம்-ஸங்குசிதஸ்த்தலம். உலகம் -லோகத்திலென்றபடி. புகழ்பாடுகிறது பாபநிவ்ருத்திக்கு ஸாதகமாகவோ? என்ன - பாபம் இத்யாதி. 'மலரடிப்போதுகள் என்னெஞ்சத்து' என்று தொடங்கி, பலரடியார்முன்பு அருளினவனாய் - 'மலரில்மணி' தொடங்கி, 'திருவாறன்விளையில் - அமர்ந்துறையும் - பாம்பணையப்பனுடைய - உலகமலிபுகழ்பாட நம்மேல்வினை' இத்யாரப்யாந்வயஃ. (ரு)

## ஆறும் பாட்டு.

**ஒன்றுநில்லாகெடும்முற்றவுந்தீவினை உள்ளித்தொழுமின்தொண்டீர்!
அன்றங்கமர்வென்றுருப்பிணிநங்கைஅணிநெடுந்தோள்புணர்ந்தான்
என்றுமெப்போதுமென்னெஞ்சந்துதிப்ப உள்ளேயிருக்கின்றபிரான்
நின்றவணிதிருவாறன்விளை யென்னும் நீணகரமதுவே.**

*ஆ.—(ஒன்றுநில்லாகெடும்) - அன்றங்கமர்வென்று உருப்பிணிநங்கை யணி நெடுந்தோள் புணர்ந்தருளிய-திருமணம் புணர்ந்தருளின-திருவழகை என்றுமென்னெஞ்சம் துதிப்ப என்னெஞ்சுள்ளே புகுந்திருக்கிறபிரான் நின்ற அணிதிருவாறன்விளை யென்னும் நீள்நகரமதுவே, உள்ளித்தொழுமின் தொண்டீர்! உங்கள் ஸமஸ்தது:கங்களும் போமென்கிறார்.*

*ஒ.—ஆறும்பாட்டில், எம்பெருமான்பக்கல் சாபலமுடையீர்! உங்களுடைய ஸமஸ்த து:க்கங்களும் நீங்கும்படி திருவாறன்விளையை நெஞ்சாலேநினைத்து ஆஸ்ரயியுங்கோள்! என்கிறார்.*

*[அன்றங்கமரென்று மேலுக்கு] - சிசுபாலன் விவாஹார்த்தமாகக் கண்ணாலங் கோடித்த தசையிலே அவனை யுத்தபூமியிலே யுத்தத்திலேவென்று ஸௌந்தர்யஶீலாதி கல்யாணகுண பூர்ணையான ருக்மிணிப் பிராட்டியுடைய அழகியதாய் நெடிதான திருத்தோள்களிலே சென்று ஸம்ஶ்லேஷிப்பதுஞ் செய்து அந்தமணக்கோலத்தோடே என்றும் எப்போதும் என்னெஞ்சம் தன்னைக் கொண்டாடும்படி என் ஹ்ருதயத்திலே இருக்கிற வுபகாரகன்.*

*ப.—அநந்தரம், அநிஷ்டமான விரோதியைத் தலையழித்து அபிமதையான ருக்மிணியை ஸம்ஶ்லேஷித்த க்ருஷ்ணன் வர்த்திக்கிற திருவாறன்விளையை ஆஸ்ரயிக்க, ஸமஸ்தபாபங்களும் போமென்கிறார்.*

*அன்று - (ஶிசுபாலன் கைப்பிடிப்பதாகப் படைதிரட்டின) அன்று, அங்கு - பின்தொடர்ந்து வந்தவிடத்திலே, (ருக்மனை), அமர் - பூசலிலே, வென்று - வென்று, நங்கை - பரிபூர்ணஸ்வபாவையான, உருப்பிணி - ருக்மிணியினுடைய, அணி - அலங்காராலங்க்ருதமாய், நெடு - அதிஶயிதஶோபமான, தோள் - திருத்தோள்களை, புணர்ந்தான் — ("ஹதஶூரஸம்வரிஷ்வஜ" என்கிற கணக்கிலே) ஸம்ஶ்லேஷித்தவனாய், (இவ்வபதாநத்தை), என்றும் - என்றும், எப்போதும் - ஒருக்ஷணமும்மொழியாமல், என் நெஞ்சம் - என் நெஞ்சமானது, துதிப்ப - (அநுபவித்து) ஸ்தோத்ரம்பண்ணும்படி, உள்ளே - என்னகவாயிலே, இருக்கின்ற - இருக்கிற, பிரான் - மஹோபகாரகனானவன், நின்ற - (எல்லாருங் கண்டநுபவிக்கும்படி) நின்றருளின, அணி - தர்ஶநீயமான, திருவாறன்விளை - திருவாறன்விளை, என்னும் - என்று ப்ரசித்தமான, நீள்நகரமது - அந்த மஹாநகரத்தை, தொண்டீர் - அநுபவசாபலமுடைய நீங்கள், உள்ளி - அநுஸந்தித்து, தொழுமின் - தொழும்படி பாருங்கோள்; தீ - க்ரூரமான, வினை - பாபங்கள், ஒன்றும் - ஒன்றும், நில்லா - (ஶேஷிபாதபடி) நிலைகுலைந்து, முற்றவும் - ஸர்வமும், கெடும் - நசித்துப்போம்.*

இ.—ஆறும்பாட்டில், பகவத்விஷயத்தில் சாபலமுடையார், திருவாறன் விளையை ஆஶ்ரயியுங்கோள், உங்களுடைய ஸர்வது:கங்களும் போமென்கிறார்.

[ஒன்றுநில்லாகெடும் முற்றவும்தீவினை] - பாபங்களை நாமேபோக்கப் புக்காவிறே ஶேஷிப்பது; பகவத்ப்ரஸாதத்தாலே போக்குமிடத்தில் ஸவாஸநமாகப் போகத் தட்டில்லை; "ஸர்வபாபா: ப்ரணஶ்யந்தி" "மேருமந்தரமாத்ரோபி". அவன் தானே சொல்லிலும் "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்றிறே சொல்லுவது. [உள்ளித்தொழுமின் தொண்டீர்] - பகவத்விஷயத்தில் சபலரானார், மநோவாக்காயங்களாலே அநுபவிக்கப் பாருங்கோள். [அன்றியத்தி] — ஆஶ்ரிதருடைய ஆபத்துகளிலே உதவுமவன். [அன்று] - சிசுபாலன் ஸ்வயம்வரத்துக்கு முடுகின தஶையிலே. [அங்கு]-அத்தேஶத்திலே, தூணிலே தோற்றினாற்போலே தோற்றி. [அமர்வென்று]-சிசுபாலனை யுத்தத்திலே வென்று. [உருப்பிணிநங்கை] - மார்விலேஅம்பேற்றாலும் பொறுத ஆத்மகுணங்களால் பரிபூர்ணையானவள். [அணிநெடுந்தோள் புணர்ந்தான்] - தனக்குத்தானே யாபரணமாய், போக்தாவினளவல்லாத போக்யதையை யுடைத்தான தோளோடே யணைந்தான். [என்றுமெப்போதும்என்நெஞ்சம்துதிப்ப] - நாள்தோறும் இடைவிடாதே என்மநஸ்ஸு ருக்மிணீ கல்யாணகுணத்தையே கொண்டாடும்படி. [உள்ளே இருக்கின்றபிரான்] - அந்த மணக்கோலத்தோடே என்னுடைய ஹ்ருதயத்திலேயிருக்கிற மஹோபகாரகன். [நின்றவணி திருவாறன்விளையென்னும்நீணகரமதுவே]- ஹ்ருதயத்திலே நிற்கிறவன் கண்ணுக்கு விஷயமாம்படிவந்து நிற்கிற தர்ஶநீயமான திருவாறன்விளையாகிற மஹாநகரமதுவே - உள்ளித்தொழுமின், தொண்டீர்! ஒன்றுநில்லா - முற்றவும்தீவினை கெடும்.

ஈடு.—ஆறும்பாட்டு. எம்பெருமான்பக்கல் சாபலமுடையீர்! உங்களுடைய ஸமஸ்தது:கங்களும் போம்படி திருவாறன்விளையை நெஞ்சாலே நினையுங்கோளென்கிறார்.

[ஒன்றுநில்லாகெடும்முற்றவுந்தீவினை] - இவன்தான் போக்கப்பார்க்குமன்றிறே, புதுப்புடைவை அழுக்குக் கழற்றுமாபோலே சிறிதுகிடக்கச் சிறிதுபோவது; அங்ஙனன்றிக்கே, ஸர்வஶக்தியானவன் போக்குமன்று வாஸநையோடேபோமிறே. "மேருமந்தரமாத்ரோபி" (மேருமந்தரமாத்ரோபி) — மேருவையும், அதின்மேலே மந்தரத்தையும் வைத்தாற்போலேயிருக்கிற கனத்த பாபங்கள்; சரதமாக, பிஷக்கைக்கிட்டின துர்வ்யாதி நசிக்குமாபோலே, * மருத்துவனாய்நின்ற மாமணிவண்ணனைக்கிட்டின பாபங்

---

ஆறும்பாட்டு.—ஒன்றுநில்லா இத்யாதி. "தொண்டீர் - தீவினை - முற்றவும் - ஒன்றுநில்லாகெடும்; திருவாறன்விளையென்னும் நீணகரமது - உள்ளித்தொழுமின்" என்கிறபதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - எம்பெருமான் இத்யாதி.

தீவினை முற்றவும் போகக்கூடுமோவென்ன - இவன்தான் இத்யாதி வாக்யத்வயம். வாஸநையோடே போமென்கிறதுக்கு ப்ரமாணம்-மேரு இத்யாதி. "மேருமந்தரமாத்ரோபி ராஶி: பாபஸ்ய கர்மண:। கேஶவம் வைத்யமாஸாத்ய துர்வ்யாதிரிவ நஶ்யதி" இதி ஸ்ரீவிஷ்ணுதர்மே (எஅ) "மேருமந்தரமாத்ரோபி" என்றதுக்கு அர்த்தம்- மேருவையும் இத்யாதி. "கேஶவம் வைத்யமாஸாத்ய" என்றதுக்கு அர்த்தம் - சரதமாக இத்யாதி. சரதமாக-நிஶ்சயமாக. மருத்துவன்-ஆசார்யன். திருவாறன்விளையை உள்ளித்தொழுதால் பாபங்கள் போமென்ற

களானவை நசிக்கும். "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" (ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) என்றுனிறே. "ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே" (ஸர்வேபாப் மாந:ப்ரதூயந்தே) என்னுநின்றதிறே. இது தேசத்துக்கும் உபலக்ஷணம். [உள்ளித் தொழுமின்தொண்டீர்] - அதனையநுஸந்தித்து ஆச்ரயிக்கப்பாருங்கோள், பகவத்விஷ யத்தில் சாபலமுடையீர்! [அன்றுஇத்யாதி] - அபேக்ஷித்தவர்களுடைய அபேக்ஷித ஸமயத்திலே வந்து தோன்றுமவனுயிற்று. [அன்று] - சிசுபாலன் ஸ்வயம்வரத்திலே முடிகியிருக்கிறவன்று. [அங்கு] - இவன் த்வரியாநின்றான், உடையவன்வந்து கைக் கொள்ளானே என்றிருக்கிறவளவிலே, தூணிலே தோற்றினாற்போலே தோற்றினனு யிற்று. [அமர்வென்று] - அவளுக்காக மார்விலே அம்பேற்று. [உருப்பிணிநங்கை] - எல்லாம் படவேண்டும்படி ஆத்மகுணங்களாலே பூர்ணையா யிருக்கும்படி. [அணி இத் யாதி] - தனக்குத் தானே யாபரணமாய், போக்யதை அளவிறந்துள்ள தோளோடே கலந்தவன். [என்றும் இத்யாதி] - ருக்மிணிப்பிராட்டியுடைய கல்யாணகுணமே காணும் இவர்நெஞ்சில் பட்டுக்கிடப்பது. எல்லாக்காலத்திலும் எல்லாவவஸ்த்தை களிலும் என்னுடைய ஹ்ருதயமானது ஸ்துதிக்கும்படி என்னெஞ்சிலேயிருக்கிற உபகார கன். [நின்ற இத்யாதி] - ப்ரகாசியாநிற்கச்செய்தேயும் கண்ணுக்கு இலக்காகாதபடி யிருக்கையன்றிக்கே, "இவன் நமக்குஉளன்" என்று அச்சந்தீரும்படி கண்ணாலேகண்டு அநுபவிக்கும்படிநிற்கிற அழகிய திருவாறன்விளையாகிற மஹாநகரத்தை - உள்ளித் தொழுமின் தொண்டீர்! தாம் அடிமைசெய்ய மநோரதிக்கிறு ராகில், "உள்ளித்தொழு மின்" என்கிற பரோபதேசத்துக்குக் கருத்தேன் என்னில்?— இவர்க்கு ஸ்வாநுபவந் தான் பரோபதேசத்தை யொழிந்திராது, நெஞ்சை ஸம்போதித்ததோடு தொண்டரேன்றத் தோடு வாசியில்லை.

(௬)

---

## ஏழாம் பாட்டு.

---

நீணகரமதுவேமலர்ச்சோலைகள்சூழ் திருவாறன்விளை
நீணகரத்துறைகின்றபிரான் நெடுமால்கண்ணன்விண்ணவர்கோன்
வாணபுரம்புக்குமுக்கட்பிரானைத் தொலையவெம்போர்கள்செய்து
வாணனையாயிரந்தோள்துணித்தான்சரணன்றி மற்றொன்றிலமே.

---

துக்கு - ஈஸ்வரன் பாபத்தைப் போக்கு மென்கிற ப்ரமாணங்களை எடுப்பானென்? என்ன - இது தேசத்துக்கும் இத்யாதி. பதப்ரயோகத்துக்கு பாவம் - அபேக்ஷித்த இத்யாதி. அமர்வென்று - அமரிலேவென்று. அமர் - யுத்தம். "நங்கை" என்றதுக்கு பாவம் - எல்லாம்பட இத்யாதி. தோள் புணர்ந்தானுடைய குணங்களைத் துதிப்ப என்று கூட்டிக்கொள்வது. "தோள்புணர்ந்தான் - உள்ளே யிருக்கின்ற" என்றதுக்கு பாவம் - ருக்மிணி இத்யாதி. "நின்ற" என்றதுக்கு பாவம் - ப்ரகாசியா நிற்கச்செய்தே இத்யாதி. மநோரதப்ரகரணத்தில் பரோபதேசம் ஸங்கதமாம்படி எங்ஙனேயென்று ஶங் கித்து பரிஹரிக்கிறார் - தாம் அடிமை இத்யாதி. ஆனால், "என்மனமே" என்றாற்போலே தன் திரு வுள்ளத்துக்கு அருளிச்செய்தாலோவென்ன - நெஞ்சை இத்யாதி. நெஞ்சுபோல்வாரை "தொண்டீர்" என்கையாலே - ஸ்வாநுபவஹாநி யில்லை என்றபடி. 'அன்றங்கமர்வென்று' என்றுதொடங்கி, 'நீண கரத்தை' தொண்டீர் - உள்ளித்தொழுமின்; தீவினை - முற்றவும் - ஒன்றுநில்லா கெடும் இத்யந்வய:.

(௬)

ஆ.—(நீணகரமதுவே) - திருவாறன்விளையென்னும் நீணகரமதுவே பரம ப்ராப்யம்; அதுபெறுகைக்கு உபாயம் அதிலே நின்றருளினவவன்; அவனாகிறான் அயர்வறுமமரர்களதிபதியாயிருந்துவைத்து ஆஶ்ரிதவாத்ஸல்ய மஹோததியாகையாலே. ஸ்ரீமதுரையிலே ஆஶ்ரிதபரித்ராணார்த்தமாக வந்து திருவவதாரம் பண்ணியருளின ஆஶ்ரிதவிரோதி நிரஸநைகஸ்வபாவனான க்ருஷ்ணன், அவனல்லது உபாயமில்லை, அவனை ஶரணம் புகுங்கோளென்கிறார்.

ஒ.— ஏழாம்பாட்டில், நமக்கு ப்ராப்யம் திருநாடன்றோவென்னில்?— திருவாறன்விளையே நமக்குப் பரமப்ராப்யம்; அங்குத்தை எம்பெருமானே நமக்கு ப்ராபக

ர.

[நீணகரமதுவே] - நமக்குப் பரமப்ராப்யமான மஹாநகரமதுவே. [மலர்ச்சோலைகளென்று தொடங்கி] - ஒருவர்க்குமெட்டாதபடி அறப்பெரியனாய் அயர்வறுமமரர்களதிபதியாயிருந்துவைத்து க்ருஷ்ணனாய் வந்து திருவவதாரம் பண்ணியருளி பாணபுரத்திலே சென்று புக்கு ஈஶ்வராபிமாநியான ருத்ரன் தொலையும்படி கொடிய யுத்தங்களைப் பண்ணி பாணனுடைய *பாஹுவநச்சேதம்பண்ணியருளுவதுஞ்செய்து நிரதிஶயபோக்யமான திருச்சோலையை யுடைய திருவாறன்விளையிலே இருந்தருளி ஆஶ்ரிதாநுக்ரஹஶீலனானவனே ப்ராபகன். [அன்றிமற்றொன்றிலமே] - வேறு ப்ராப்ய ப்ராபகங்கள் உடையோமல்லோம்.

ப.—அநந்தரம், அநிருத்தனுக்கு ப்ரதிபக்ஷனான பாணனை, அஸஹாயனாம்படி பொருதழித்து, அவன் பாஹுவநத்தைச்சேதித்த க்ருஷ்ணனே ப்ராப்த்யுபாய

ன கரு".

நீணகரம் - (அயோத்யை, அபராஜிதையென்று ஶ்ருதிப்ரஸித்தமான) மஹாநகரம், அதுவே - (அர்ச்சாவதாரஸ்தலமான) அதுவேயாம்படி, மலர் - மலரையுடைத்தான, சோலைகள் - சோலைகள், சூழ் - சூழ்ந்த, திருவாறன்விளை - திருவாறன்விளையாகிற, நீணகரத்து - மஹாநகரத்திலே, உறைகின்ற - நித்தியவாஸம்பண்ணுகிற, பிரான் - மஹோபகாரகனாய், நெடுமால் - ஆஶ்ரிதவ்யாமுக்தனாய்க்கொண்டு, கண்ணன் - க்ருஷ்ணனாயவதரித்த, விண்ணவர்கோன் - நித்யஸூரிஸேவ்யனாய், வாணபுரம் - (அநிருத்தன் நிருத்தனை) பாணபுரத்திலே, புக்கு - சென்று, முக்கட்பிரானை - (ஶக்திஸூசகமான த்ரிநேத்ரத்வத்தையும் ஈஶ்வரத்வாபிமானத்தையுமுடைய) ருத்ரனை, தொலைய - ("ஆஶ்ரிதரக்ஷணம்பண்ணினது அமையும்" என்று) உபரதனாம்படியாக, வெம் - ப்ரதாபோத்தரமான, போர்கள் - பூசல்களை, செய்து - பண்ணி, வாணனை - பாணனுடைய, ஆயிரந்தோள் - ஆயிரந்தோளையும், துணித்தான் - துணித்தவன், சரண் - (தேசப்ராப்திக்கு: உபாயபூதன், அன்றி - அவனையொழிய, மற்று - வேறு, ஒன்று - ஒருபாயத்தை, இலம் - உடையோமல்லோம்.

இ.—ஏழாம்பாட்டில், திருவாறன்விளையே எனக்கு ப்ராப்யமும், அங்கு நின்றருளுகிறவனே ப்ராபகமுமென்கிறார். [நீணகரமதுவே] - கலங்காப்பெருநகரமாய், அபுநராவ்ருத்திலக்ஷணமான தேசம், திருவாறன்விளையே - [மலர்ச்சோலைகள்சூழ்] - நித்யவஸந்தமான தேசம், "அவனுக்கு ப்ராப்யபூமி" என்று தோற்றும்படி போக்யதையையுடைத்தான தேசம். திருவாறன் விளையாகிற அதுவே - நீணகரம். [நீணக

*ரத்துஇத்யாதி]-மஹாநகரத்திலே நித்யவாஸம்பண்ணுகிற மஹோபகாரகன். விண்ணவர் கோனாய்வைத்து, ஆஶ்ரிதர்பக்கல் வ்யாமோஹத்தாலே க்ருஷ்ணனாய் வந்தவதரித்து ஸுலபனானவன். [வாணபுரம்புக்கு] - எதிரிகளிருந்த தேசத்திலே யெடுத்துவிட்டு. [முக்கட்பிரானை] - ஈஶ்வராபிமாநியாய், "வாணனுடைய ரக்ஷணத்துக்கு நான் கடவன்" என்று ஏறட்டுக்கொண்ட ருத்ரனை. [தொலைய] - இனி ரக்ஷகத்வம் வேண்டா: அத்தைப்பொகடும்படி. [வெம்போர்கள் செய்து] - கொடிய யுத்தங்கள் செய்து. வாணனுடைய பாஹுவநத்தைச் சேதித்துவிட்டான். உஷை பித்ருஹீநையாகாமைக்கு. [சரண்] - அவனே அத்தேசத்தை ப்ராபிக்கைக்குஉபாயம். [அன்றிமற்றொன்றிலமே] - வேறுப்ராப்யப்ராபகங்கள் மாறுடக்கடவோமல்லோம்.*

ஈடு.—ஏழாம்பாட்டு. திருவாறன்விளையே ப்ராப்யமென்னாநின்றீர்; அவனன்றோ ப்ராப்யன்? என்ன; அன்று என்ன வல்லேனோ? என் ஸித்தாந்தமிருக்கும்படி கேட்கலாகாதோ? என்கிறார். உபாஸநபலமாய் வருமவையடைய ப்ராப்யாந்தர்க்கதமாகக்கடவது; ஸாத்யவிவ்ருத்திக்குஉடலாய் வருமவையெல்லாம் பலத்துக்குஉடலாகக்கடவது; ஆகையாலே, ப்ராப்யபூமி, அத்தேசமே; அங்கேகொடுபோய்ச்சேர்க்கும் கடகன் அவன்; இது என் ஸித்தாந்த மிருக்கும்படி என்கிறார்.

[நீணகரமதுவே] - * கலங்காப்பெருநகரமாய், புக்கார்க்கு "**ந ச புநரா வர்த்ததே**" (சபுநராவர்த்ததே) என்கிறபடியே ஒருநாளும் மீட்சியில்லாதபடி நித்யாநுபவம்பண்ணும் ப்ராப்யதேசம் அதுவே. [மலர் இத்யாதி] - "அவனுக்குங்கூட ப்ராப்ய பூமி" என்று தோற்றும்படி யிருக்குமாற்று. நித்யவஸந்தமான பொழிலாலே சூழப்பட்ட திருவாறன்விளையாகிற மஹாநகரத்திலேவந்து வர்த்திக்கிற உபகாரகன். [நெடுமால் இத்யாதி] - அயர்வறுமமரர்களதிபதியாயிருந்துவைத்து, ஸம்ஸாரத்தில் தன் பக்கல் ருசியுடையரானவர்கள்பக்கல் வ்யாமோஹத்தாலே க்ருஷ்ணனாய்வந்தவதரித்து, ஒருகடலில்நின்றும் ஒருகடலிலே எடுத்துவிட்டு, ஈஶ்வராபிமாநியாய் "இவன்காரியத்

---

*ஏழாம்பாட்டு.—நீணகரம் இத்யாதி. "நீணகரமதுவே" என்றத்தாலே பலித்தது - திருவாறன்விளை போக்யமென்னுமதிறே; அத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை - திருவாறன்விளையே இத்யாதி. என்னாநின்றீரென்றது - நீரேசொல்லாமென்றபடி. உம்முடைய ஸித்தாந்தமானாலும் உபபந்நமாகவேண்டாவோ? என்ன - உபாஸந இத்யாதி. அதாவது - ப்ராப்யனானவனை ஒருதேசவிசேஷத்திலேபோய் அநுபவிக்கவேண்டுகையாலே, அதுவும் ப்ராப்யமென்றபடி. உபாஸநபலமாய்வருமவையாவன - ஆஶ்ரயணபலமான அர்ச்சிராதிகதி, திவ்யதேசப்ராப்தி முதலானவை. பரிஹாராந்தரம் - ஸாத்யவிவ்ருத்திக்கு இத்யாதி. அதாவது - ஸாத்யப்ரதமாவதி அவத்கைங்கர்யமாய், தத்விசேஷவ்ருத்திஹேதுவாகையாலே, தச்சரமாவதி தேசமாயிருக்கை என்றபடி. கடகனென்றது - உபாயமென்றபடி.*

*இது ப்ராப்யம் என்னுமதுக்கு வாசகம் "நீணகரம்" என்கிறவிது என்னுமிடந்தோற்ற அருளிச்செய்கிறார் - கலங்கா இத்யாதி. அதுவேயென்றது - திருவாறன்விளையை "உறைகின்ற" என்றத்தைக் கடாக்ஷித்து, இதுக்குபாவம் - அவனுக்கும் இத்யாதி. "விண்ணவர்கோன் - நெடுமால் கண்ணன்" என்று அந்வயித்து அர்த்தம் - அயர்வறும் இத்யாதி. ஒருகடலிலேநின்றும் ஒருகடலிலே எடுத்துவிட்டென்றது - த்வாரகை மேலைஸமுத்ரத்திலேயும், சோணிதபுரம் கீழைக்கடற்கரையிலேயுமாகையாலே என்றபடி "முக்கட்பிரானைத்தொலைய வெம்போர்கள்செய்து" என்றதுக்கு அர்த்தம் - ஈஶ்வராபிமாநி இத்யாதி. அவன் அப்படிதோற்றானோவென்ன; தோற்றனன்றோ ஸ்தோத்ரம் பண்ணிற்று*

துக்கெல்லாம் நானே கடவன்'' என்றிருக்கிறவனுடைய அபிமாநமெல்லாந்தொலைந்து "நான் இனி ஒருதேவதையாய் ஒருவன்காரியத்துக்கு அபிமாநித்திரேன்'' என்னும்படி க்ரூரமான யுத்தங்களைப்பண்ணி. "க்ருஷ்ண க்ருஷ்ணமஹாபாஹோ" (க்ருஷ்ண க்ருஷ்ணமஹாபாஹோ.)-"ஆனைக்கும் தனக்குத் தக்கவாதம்'' என்னுமாபோலே, தேவதைகளுக்கு நம்மிற்காட்டில் அறிவுகேடு விஞ்சியிருக்கும். ஒருவில்லை முறித்தபோதாக "அதிகம்மேநிரே விஷ்ணும்" (அதிகம்மேநிரேவிஷ்ணும்) என்பார்களாயிற்று, தேவ ஜாதியாக. [வாணனையாயிரந்தோள்துணித்தான்] - "உஷை பித்ருஹீநையாகவொண்ணாது'' என்றுபார்த்து, உயிரிருக்கத் தோளைக் கழித்துவிட்டானாயிற்று. [சரண்]-அவன் வடகன், திருவாறன்விளையே ப்ராப்யம். ப்ராப்யனானவன்வந்து ஸந்நிதிபண்ணின தேசமாகையாலே,அவனோட்டைஸம்பந்தத்தாலே அத்தேசமும் ப்ராப்யமென்கைக்குத் தட்டில்லை. ஒருஸர்வாதிகனுபாயமாய் பலப்ரதனாகவேணுமே; ஆகையாலே,அவன்-உபாயம், அத்தேசம் ப்ராப்யம். [அன்றிமற்றொன்றிலமே] - இங்ஙனல்லது ப்ராப்யப்ராபகங்கள் மாறாடக்கடவோமல்லோம். (எ)

## எட்டாம் பாட்டு.

அன்றிமற்றொன்றிலம்நின்சரணேயென்று அகலிரும்பொய்கையின்வாய்
நின்றுதன்நீள்கழலேத்திய ஆனையின் நெஞ்சிடர்தீர்த்தபிரான்
சென்றங்கினிதுறைகின்ற செழும்பொழில்சூழ்திருவாறன்விளை
ஒன்றிவலஞ்செய்யவொன்றுமோ? தீவினையுள்ளத்தின்சார்வல்லவே.

*ஆ.—(அன்றிமற்றொன்றிலம்) - ஶரணம்புக்கால் நம்மபேக்ஷிதம் செய்தருளுமோவென்னில்,— * பரமபதமபந்நனாய் ஶரணாகதனான ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆபத்தையெல்லாம்போக்கி அவனை ரக்ஷித்தருளின ஶரணாகதவத்ஸலனல்லனோ திருவாறன்விளையிலே இருக்கிறான்? அவன் நம்முடைய அபேக்ஷிதம் செய்தருளும்; ஆதலால், உங்களுடைய ஸமஸ்த துக்கங்களும் போம்படி திருவாறன் விளையிலேபோய் அநுபவியுங்கோ ளென்கிறார்.*

*ஒ.—எட்டாம்பாட்டில், திருவாறன்விளையிலே புக, நம்முடைய ஸகல து:க்கங்களும் போமென்கிறார்.*

---

*னென்கிறார் - க்ருஷ்ணக்ருஷ்ண இத்யாதி. "ஸம்ஸாரஜ்ஞாநஸம்பந்ந:" என்னும்படியான ஜ்ஞானவானுக்கு அஜ்ஞாநமுண்டோ? "ஜநே" என்பானென்? என்ன - ஆனைக்கும் இத்யாதி. உபபாதநம் - ஒருவில்லை இத்யாதி. தலையையறுத்தே தோளைக்கழித்ததுக்கு ஹேது - உஷை இத்யாதி. உபாஸநபலமாய் வருமதாகையாலே பரமபதமன்றோ ப்ராப்யம்? திருவாறன்விளை ப்ராப்யமாகக்கூடுமோ? என்ன - ப்ராப்யனானவன் இத்யாதி. உபாயமும் திருவாறன்விளையானாலோவென்ன - ஒருஸர்வாதிகன் இத்யாதி. 'மலர்ச்சோலைகள் சூழ்' இத்யாரப்ய, 'விண்ணவர்கோன் - நெடுமால் கண்ணன்-வாணபுரம்' என்றுதொடங்கி, 'தோள்துணித்தான் சரண் - நீணகரமதுவே; அன்றி மற்றொன்றிலம்' இத்யந்வய:.* (எ)

[அன்றியென்று தொடங்கி] - உன் திருவடிகளை யல்லது வேறொரு பற்றை உடையேனல்லேன் என்று அகன்று ஆழ்ந்திருக்கிற பொய்கையிலே அகப்பட்டுநின்று, ஆபந்நரிருந்த விடத்தளவும் வரக்கடவதான தன்னுடைய திருவடிகளை எத்தின ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுடைய மநோது:க்கத்தைக் கெடுத்தருளின அநுக்ரஹஸீலனான எம்பெருமான். [சென்றங்கென்று மேலுக்கு] - ஏவம்விதாநுக்ரஹத்துக்கிடாகத்தானே சென்று இனிமையோடே வர்த்திக்கிற அழகியபொழில் சூழ்ந்த திருவாறன்விளையைக் கிட்டி வலஞ்செய்ய. எம்பெருமான் தனக்கு ப்ராப்யமாகக் கொண்டு இனியனாய் வர்த்திக்கிற திருவாறன்விளையென்றுமாம்.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதருடைய ஆர்த்தது:கநிவர்த்தகன் வர்த்திக்கிற திருவாறன்விளையை யாஶ்ரயிக்க, நெஞ்சில் ஒருபாபமும் நடையாடாதென்கிறார்.

நின் - உன், சரண் - திருவடிகளை, அன்றி - ஒழிய, மற்று - மற்று, ஒன்று - ஒன்றையும், இலம் - உடையோமல்லோம், என்று - என்று, அகல் - விஸ்தீர்ணமாய், இரும் - அகாதமான, பொய்கையின்வாய் - பொய்கையிடத்திலே, நின்று - (முதலையின்கையிலே யகப்பட்டு) நின்று, தன் -, நீள் - ஆபந்நரிருந்த விடத்தளவும் வரும், கழல் - திருவடிகளை, ஏத்திய - ("நாராயணா" என்று ஸம்பந்தபூர்வகமாக) ஏத்தின, ஆனையின் - ஆனையினுடைய, நெஞ்சு இடர் - ("செவ்வியமாறாமல் பூவைச்சாத்தப் பெற்றிலோம்" என்கிற) நெஞ்சு து:க்கத்தை, தீர்த்த - தீர்த்த, பிரான் - மஹோபகாரகன், சென்று - (ஆஶ்ரிதர்க்கு உதவுகைக்காகச்) சென்று, அங்கு -, இனிது - இனிமையோடே, உறைகின்ற - வர்த்திக்கிற இடமாய், செழும் - நிரதிஶயபோக்யமான, பொழில் - பொழில், சூழ் - சூழ்ந்த, திருவாறன்விளை - திருவாறன்விளையை, ஒன்றி - கிட்டி, வலஞ்செய்ய - வலஞ்செய்ய, ஒன்றுமோ - கூடுமோ? (கூடுமாகில்), தீ - க்രூரமான, வினை - பாபங்கள், உள்ளத்தின் - உள்ளத்தின், சார்வு - பொருத்தத்தை, அல்லவே - உடையவல்லவாம். ஒன்றிவலஞ்செய்ய, தீவினையொன்றும் உள்ளத்தின்சார்வல்லவென்றுஉக்திப்ரகாரமாகவுமாம்.

இ.—எட்டாம்பாட்டில், திருவாறன் விளையிலேபுக, நம்முடைய ஸர்வது:க்கங்களும்போமென்கிறார்.

[நின்சரணே - அன்றி மற்றொன்றிலம்] - "மஜஜூகஷுமதே" என்கிற ஸ்வஸாமர்த்தியம் கார்யகரமாகாதவளவிலே, உன் திருவடிகளையொழிய வேறுபற்றுடையேனல்லேனென்கிறான். [அகலிரும்பொய்கையின்வாய்] - அகன்று ஆழ்ந்திருந்துள்ள பொய்கைவாயிலே. இப்போது அகலமுமாழமும் சொல்லுகிறது - அவனேறவிடுதல், தானேயேறப்பார்க்கில் முடிதல் செய்யும்படியாயிருக்கை. [நின்று] - ஸ்வஸாமர்த்தியம் ஒவிச் செயலற்றுநின்று. [தன்னீள்கழல்] - செயலற்றிருந்தவிடமே யெல்லையாகவளருந் திருவடிகள். நினைத்தவளவிலே "நபிலெஹிதகூதுஸுநு" என்னப்பண்ணுகிற திருவடிகளிலே [ஏத்திய] - முட்டாய்த்தால் "அம்மே!" என்பாரைப்போலே, ப்ராப்தியையும் ஸௌலப்யத்தையும் நினைத்து, "நாராயணா!" என்றுஏத்தினையிற்று. [ஆனையின் நெஞ்சிடர் தீர்த்தபிரான்] - துதிக்கையும் பூவுமொழிய அழுந்தினவளவிலே, "பூவிற்செவ்வியழிவதற்கு முன்பே திருவடிகளிலே சாத்தப்பெற்றிலேன்" என்கிறவிடரைத் தீர்த்த உபகாரகன். [சென்றங்கினிதுறைகின்ற] - இப்படிப்பட்ட ஆபந்நிவாரணத்

துக்கேயென்று தானேசென்று அங்கேயினிமைபோட வர்த்திக்கிறதேசம். மடுவின்கரையிலே யானைக்குதவினாற்போலே, ஆர்த்திகளையிலே வந்து கிட்டினபடிஇவர்க்கு. [செழும்பொழில் சூழ்திருவாறன்விளை] - அவன்''தனக்குப்ராப்யஹூமி'' என்னும்படி ஹோக்யதையாலே மிக்கவூர். [ஒன்றிவலம் செய்ய] - கிட்டி ஆநுகூல வ்ருத்திகளைப்பண்ண. [ஒன்றுமோ தீவினையுள்ளத்தின் சார்வல்லவே] - ஓ! தீவினை - ஒன்றும் - உள்ளத்தின் சார்வல்ல - என்றுஉக்தி ப்ரகாரமாதல்; [ஒன்றிவலஞ் செய்யவொன்றுமோ] - கிட்டிவலஞ் செய்யக்கிட்டுமோ? கிட்டுமாகில் தீவினையுள்ளத்தின் சார்வல்லவென்னுதல்.

ஈடு.—எட்டாம்பாட்டு. திருவாறன்விளையிலேபுக, நம்முடைய ஸகலது:கங்களும் போமென்கிறார்.

[அன்றிமற்றோன்றிலம் நின்சரணேயென்று] - நின்சரணேயன்றிமற்றோன்றிலம் என்று - உன்திருவடிகளையல்லது வேறோரு பற்றுடையேனல்லே னென்று; புறம்பே சிலர் ரக்ஷகராக ப்ரமித்திருக்குமதுவும் தவிர்ந்து. ''஗ஜஆகர்ஷதேதீரே ग्राहआकर्षते जले'' (கஜஆகர்ஷதேதீரே க்ராஹஆகர்ஷதேஜலே) என்கையாலே தான் ரக்ஷகராக நினைத்திருக்குமதுவும் தவிர்ந்து. ''மநஸா சிந்தயந்'' (மநஸா சிந்தயந்) என்கையாலே கூப்பீடேங் கார்ய கரமாமேல்லேயுங் கழிந்தது.அவனைப்பார்த்தால் தானும் அல்லாதாரோபாதி புறம்பாய்க் கடக்கநிற்கும்படியாயிறே ப்ராப்தியிருக்கும்படி. ஆகைச்சுட்டியிறே ப்ரணவத்தில் மத்யமபதம்கிடக்கச்செய்தேயிறே திருமந்த்ரத்தில் மத்யமபதம் ஜீவிக்கிறதும் [அகலிரும் பொய்கையின்வாய்] - அகலத்தையும் ஆழத்தையும் சோல்லவேண்டுமேளவிலே, அகலத்தைச்சோல்லி இருமையைச் சோல்லுகையாலே அது ஆழத்தைச் சோல்லிற்றாகக்கடவது. இப்போது அகலமும் ஆழமுஞ் சோல்லுகிறதுக்குக் கருத்தேன் என்னில்?- அவனுபாயமாய் ரக்ஷித்தல் இல்லையாகில் முடிதல் செய்யுமித்தனைபோக்கி, தான் வேறோரு கரைகாணமாட்டாதாகாதே. [அகலிரும்பொய்கையின் வாய்நின்று] - ஹயஸ்த்தாநத்திலே ஹயநிவ்ருத்த்யுள்ளவிடத்திற்போலே நிற்கும்படியாயிற்றுச் சேயல்மாட்சி. முதலை நீரிலேயிழுக்க, ஆனை கரையிலேயிழுக்க, இரண்டினுடைய வ்யாபாரமுமாய்ச் சேல்லுகை தவிர்ந்து ஒன்றினுடைய வ்யாபாரமேயாய்நிற்கை. [தன்னீள்கழல்]-எதிர்த்தலையில் சேயல்மாட்சியே எல்லையாகவளருந் திருவடிகள். முதலைவாயிலே அகப்பட்டுநிற்கச்சேய்தேயும்,அவனை அநுஸந்தித்தால் அச்சங்கேட்டிருக்கலாம்படி

---

எட்டாம்பாட்டு.—அன்றிமற்று இத்யாதி. '' திருவாறன்விளையொன்றி வலஞ்செய்ய - தீவினையுள்ளத்தின்சார்வல்லவே''என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - திருவாறன்விளையிலே இத்யாதி.

''மற்றோன்றிலம்'' என்றதுக்கு அர்த்தம் - புறம்பே இத்யாதி. ''மற்று'' என்றால் - பிறரையொழியத் தன்னையும் காட்டுமோவென்ன - அவனை இத்யாதி. தன்னுடைய ரக்ஷணத்தில் தனக்கு ப்ராப்தியில்லையென்னுமிடம் எங்கேசொல்லிற்றென்ன - ஆகைச்சுட்டி இத்யாதி. ஆகைச்சுட்டி யென்றது - தன்னுடையரக்ஷணத்தில் தனக்கு ப்ராப்தியில்லாமையாலேயன்றோ என்றபடி. ''இருமை'' என்று - ஆழமாக விவக்ஷித்த அர்த்தத்தை இஸ்ஸப்தம் வசிக்குமோமென்ன - அகலத்தையும் இத்யாதி. ''நின்று'' என்றதுக்கு ஹாவம் - பயஸ்தாநத்திலே இத்யாதி. சேயல்மாட்சி - நிர்வ்யாபாரதை. சேயல்மாட்சிதன்னை உபபாதிக்கிறார் - முதலை இத்யாதி. திருவடிகளுக்கு நீட்சி ஏதென்ன - எதிர்த்தலையில் இத்யாதி. எதிர்த்தலை - இத்தலை என்றபடி. ''நீள்'' என்றதுக்கு அர்த்தாந்தரமாதல், நீட்சியால் இவனுக்கு ஹலித்ததொரு ப்ரயோஜநமாத லருளிச்செய்கிறார் - முதலைவாயிலேஇத்யாதி.

யாகாதேதான் இருப்பது. "ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் ந பிபேதி" (ஆநந்தம்ப்ரஹ்மணோவித்வாந்நபிபேதி) என்னக்கடவதிறே. "ஸுதஸ்ஸந" (சுதஸ்சந)-ப்ராமாதிகத்துக் கன்றிக்கே புத்திபூர்வகமாகப் பண்ணினதுக்கும் அஞ்சவேண்டாதபடியாயிருக்கும். "செய் தாரேல் நன்றுசெய்தார்" என்றால், இவன் எதுக்கு அஞ்ச? புத்திபூர்வகத்துக்கு அஞ்சவேண் டாவிட்டால், ப்ராமாதிகத்துக்கு அஞ்சவேண்டாவென்னுமிடம் கிம்புநர் இறே. ப்ராமாதி கத்துக்கு அஞ்சவேண்டாமை ஸக்தியோகத்துக்கும் உண்டிறே. [எத்திய] - முட்பாய்ந் தால் "அம்மே!" என்பாரைப்போலே, வாஸநையாலே சொன்ன இத்தனை. [ஆனை யின்நெஞ்சிடர்தீர்த்தபிரான்] - துதிக்கை முழுத்தின இடரிறே; நீண்டகை குறுகுமளவு மிறே பார்த்துநின்றது; இவன் கைவிட்டால் கைக்கொள்ளாநின்றானித்தனையிறே. [ஆனை யின் நெஞ்சிடர்தீர்த்தபிரான்] - இப்பூவிற்செவ்வி மாறுவதற்குமுன்னே திருவடிகளிலே சாத்தப்பெறுகிறிலோம்!' என்கிற இடரைப் போக்கினானாயிற்று. அன்றிக்கே, "நாம்அடி யாக ஸர்வேஶ்வரனுக்கு அவத்யம் வருகிறதோ?" என்னும் இடாதல். அதாவது - "இவன் இப்படி க்லேஶிக்க அவன் ரக்ஷித்தபடி அழகியதாயிருந்தது! இவனையோ நாம் இப்படி ரக்ஷகன் என்று நினைத்திருந்தது? என்று நாட்டார் இவனை இப்படி நினைக் கிற் செய்வதேன்?" என்று இடர்ப்பட்டது. "இரண்டும்போய் இரண்டின்வீடு" என் கிறபடியே இரண்டுக்கும் இடர் வாராதபடி கரையிலேகொண்டேறி, பின்னை முதலை வாயைக்கிழித்து ஆனையினிடரை நீக்கினானாயிற்று. இதுக்கு பட்டரருளிச்செய்யும்படி: - "ராஜபுத்ரனைச் சிறையிலே இட்டுவைத்தால், கைக்கூட்டனுக்கும் பாலுஞ்சோறு மிடு வாரைப்போலேகாண்" என்றும். இரண்டும் மோக்ஷத்தைப்பெற்றதே! முதலை ஶாப மோக்ஷமும், ஸ்ரீகஜேந்த்ராழ்வான் ஸாக்ஷாந்மோக்ஷமும் பெற்றார்களிறே. [பிரான்] - ஆனையிடர் போக்கின இதுவும், அதுக்கு அன்றித் தமக்கு உபகரித்தானாக நினைத்திருக்கிறார் காணும் இவர். இஸ்ஸ்ஹாவவ்ருத்தியை உடையவனாகையிறே ஒருவன் வைஷ்ணவனாகை யாவது. அநுகூலரிலே ஒருவனுக்கு ஒருநன்மையுண்டானால் அது தன்னதாக நினைத்

அப்படி அச்சம் கெட்டிருக்கலாமோ? என்ன - ப்ரமாணம் - "ஆநந்தம்" இத்யாதி. அதுக்கு ஹேதுஎது? என்ன - செய்தாரேல் இத்யாதி. ஆனால் ப்ராமாதிகத்துக்கு எப்படியென்ன - புத்தி பூர்வகத்துக்கு இத்யாதி. ப்ராமாதிகத்துக்கொழிய புத்திபூர்வகத்துக்கும் அஞ்சவேண்டாவென்கிறது எது? என்ன - ப்ராமாதிகத்துக்கு இத்யாதி. அதாவது - ஸத்திரிஷ்டவ்யாவ்ருத்யர்த்தமென்றபடி. நினைக்கமாட்டாதது எத்தலற்றோவென்ன - முட்பாய்ந்தால் இத்யாதி. இப்போது ஆனையினிடரைப் போக்குகிறவன் உபக்ரமாவஸ்தையிலேதானே போக்கவொண்ணாதோ? என்ன - துதிக்கை இத் யாதி வாக்யத்ரயம். ஆனைக்கு நெஞ்சிடர் இன்னதென்றும், அத்தைத் தீர்த்த ப்ரகாரமும் அருளிச் செய்கிறார் - இப்பூவிற்செவ்வி இத்யாதி. "நெஞ்சிடர்" என்றதுக்கு மூன்றர்த்தம் மூந்தினது - துதிக்கைமுழுத்தினஇடரிறே என்றது. இரண்டாமர்த்தம் - இப்பூவிற்செவ்வி இத்யாதி. மூன்றா மர்த்தம் - அன்றிக்கே நாமடியாக இத்யாதி. நெஞ்சிடர் தீர்த்ததுக்கு ப்ரமாணம் - இரண்டும்போய் இத்யாதி. முதலையும் ஆனையுமாகிற இரண்டும் ஒன்றையொன்று விட்டுப்போய் இரண்டுக்கும் ஶாப மோக்ஷமும் ஸாக்ஷாந் மோக்ஷமும் உண்டாம்படி திருவுள்ளம்பற்றியருளினாயென்றபடி. † நாலாந் திருவந்தாதி, "மதித்தாய்போய்" இத்யாதி. இரண்டுக்கும் இடர்வாராதபடி என்றவநந்தரம், 'ஒன் றுக்கே இடர்வரும்படி' என்று கூட்டுவது. இரண்டுக்கும் மோக்ஷம்வருவானேன்? என்ன - இதுக்கு "இரண்டின்வீடு" என்றதுக்கென்றபடி. கைக்கூட்டன் - காவற்காரன். ஆனை யன்றோ மோக்ஷத்தைப்பெற்றதென்ன - இரண்டும் இத்யாதி. பெற்றக்ரமமெது? என்ன-முதலை இத் யாதி. இத்தால் - ஸ்வரூபத்தில் ஓரர்த்தத்தை வெளிப்பிக்கிறார் - இஸ்ஸ்ஹாவவ்ருத்தி இத்யாதி. விவா

திருக்கையும், அநர்த்தம்வந்தால் அது தனக்குவந்ததாக நினைத்திருக்கையுமாகிற இவ்விரண்டு முண்டானாலிறே வைஷ்ணவத்வம் உண்டாயிற்றாவது. [சென்றங்கினிதுறைகின்ற] - இவன்உதவாதவன்று அவ்வானைக்குள்ள இடரோபாதியும் போருமாயிற்று, அத்தேசத்தை ப்ராபியாதபோது ஸர்வேஶ்வரனுக்குஉண்டான இடரும். அவன்வந்து தன் ஆதரமெல்லாம் தோன்றும்படி வர்த்திக்கிற அழகிய பொழிலாலே சூழப்பட்ட திருவாறன்விளையைக்கிட்டி ப்ரதக்ஷிணாதிகளைப் பண்ண. [ஒன்றுமோ] - கிட்டுமோ ? [தீவினையுள்ளத்தின்சார்வல்லவே] - அப்போது தீவினை உள்ளத்தின் சார்வாகாது. தேஜஸ்திமிரங்களுக்கு ஸஹாவஸ்தாநமுண்டோ? அவன்வந்து ஹ்ருதயத்திலே நித்யவாஸம்பண்ணத் தீவினையோதுங்க விடமுண்டோ? (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

தீவினையுள்ளத்தின்சார்வல்லவாகித் தேளிவிசும்பேறலுற்றால்
நாவினுள்ளும்உள்ளத்துள்ளும்அமைந்ததொழிலினுள்ளும்நவின்று
யாவரும்வந்துவணங்கும்பொழில் திருவாறன்விளையதனை
மேவிவலஞ்செய்துகைதொழக்கூடுங்கொல்?என்னுமென்சிந்தனையே.

*ஆ.*—(தீவினை) - திருவாறன்விளையோ ப்ராப்யம், திருநாடன்றோ என்னில்? - நிரஸ்தஸமஸ்த ப்ரதிபந்தகராய்த் தெளிவிசும்பேறலுற்றால், திருவாறன்விளையைக் கண்டால் திருநாட்டைவிட்டு இத்தையே ப்ராப்யமாகக் கொண்டு, ஸர்வகரணங்களாலும் அநுபவிப்பார்; திருநாட்டிலுள்ளார்க்கும் இதுவே ப்ராப்யம்; 'என்னெஞ்சும் திருவாறன் விளையைமேவி வலஞ்செய்து கைதொழக்கூடுமேயோ?' என்று மநோரதியாநிற்கும்; அதுவே ப்ராப்யமென்கிறார்.

*ஒ.*—ஒன்பதாம்பாட்டில், என்னுடைய ஹ்ருதயமானது, ஸ்ரீ வைகுண்டமும் திருவாறன்விளையுமிரண்டும் கிடைப்பதானால், ஸ்ரீ வைகுண்டத்திற்காட்டிலும் அங்குள்ளாரும் வந்து விரும்பும் திருவாறன்விளையமையுமென்னுநின்றது என்கிறார்.

[தீவினையென்று தொடங்கி] - ஹ்ருதயம் நிர்தோஷமாய் ஶுத்தஸத்வமயமாய் எப்போதும் தெளிவைப் பண்ணக்கடவதான திருநாட்டிலே போகப்ராப்தமானால். [நாவினுள்ளுமென்று தொடங்கி] - எத்தனையேனும் அளவுடையரான திருநாட்டிலுள்ளாரும் வந்து மநோவாக்காயங்களினாலேபயின்று ஆஶ்ரயிக்கும் நிரதிஶய போக்யமான திருவாறன்விளையைச் சேர்ந்து ப்ரதக்ஷிணம்பண்ணித் தொழக்கூடவற்றேயென்னும் என்னுடைய ஹ்ருதயம்.

---

ணம் - அநுகூலரிலே இத்யாதி. "சென்று" என்றதுக்கு ஹாவம் - இவன்உதவாத இத்யாதி. "ஒன்றுமோ -" ப்ரதக்ஷிணாதிகளைப் பண்ணக்கூடுமோ? என்றபடி. அப்போது - கூடினாலென்றபடி. ப்ரதக்ஷிணாதிகளைப்பண்ணினால் பாபம் ஸ்பர்ஶியாமைக்கு அடியேது? என்ன,-அருளிச்செய்கிறார்-தேஜஸ்திமிரங்களுக்கு-இத்யாதி வாக்யத்வயத்தாலே. இவ்விடத்திலே "ஹ்ருதிஸ்திதே ஹமவாநநாதிரா ஸெஷஸிரவிஶுத்ஸதாயஸோzஸ்யாத்ரா தஸ்வஸேவிவா தகத்ருஹிஸும்ஸவதிகமும் ஸதிவாஸகாரஸேகெடு" (வி - பு - ௬ - எ - ௨௯) என்றது அநுஸந்தேயம். உள்ளத்தின்சார்வல்ல - உள்ளத்தின் சேர்த்தியையுடைய தல்லவாம் என்றபடி. (அ)

ப.—அநந்தரம், பாபநிவ்ருத்தி பிறந்து ப்ராப்யதேசம் ஸித்திக்குமாகிலும், ஸர்வாநுபாவ்யமான திருவாறன்விளையை ப்ராபித்து அநுபவிக்கவமையுமென்னாநின்றது என்னெஞ்சு என்கிறார்.

தீ - க்ரூரமான, வினை - பாபங்கள், உள்ளத்தின் - நெஞ்சில், சார்வுஅல்லவாகி - சேர்த்தியற்று, தெளி-(ஸ்வரூபப்ரகாசம் பிறக்கும்படி) தெளிவையுடைத்தான, விசும்பு - பரமவ்யோமத்திலே, ஏறல் - ஏறுதல், உற்றால் - வந்துகிட்டிலும், என் - என், சிந்தனை - நெஞ்சானது, நாவினுள்ளுமுள்ளத்துள்ளும் - வாங்மநஸங்களிலும், அமைந்த - அதுக்கிடாகச் சமைந்த, தொழிலினுள்ளும் - ப்ரவ்ருத்தியிலும், நவின்று - சேர்த்தியை யுடையராய்க்கொண்டு, யாவரும் - எல்லா விபூதியிலுள்ளாரும், வந்து - வந்து, வணங்கும் - வணங்கும்படியாய், பொழில் - (போக்யதாப்ரகாசகமான) பொழிலையுடைத்தான, திருவாறன்விளை - திருவாறன்விளையாகிற, அதனை - அத்தேசந்தன்னையே, மேவி - கிட்டி, வலஞ்செய்து — அநுகூலவ்ருத்தி பண்ணுகையாலே, கைதொழ-தொழ, கூடுங்கொல் - கூடுமோ? என்னும் - என்னாநின்றது.

இ.—ஒன்பதாம்பாட்டில், பரமபதம் கிட்டுவதாகில் அதிற்காட்டிலும், அங்குள்ளாரும் வந்துவிரும்பும் திருவாறன்விளையே ப்ராப்யமென்னாநின்றது என்மனஸ்ஸென்கிறார்.

[தீவினையுள்ளத்தின் சார்வல்லவாகி] - அவித்யாதிகள் ஆத்மாவைஸ்பர்ஶியாதபடியாய். மநஸ்ஸு நிர்தோஷமாயென்றபடி: [தெளிவிசும்பு] - இங்குள்ளார் அங்கே செல்லிலும் தெளிவைப் பிறப்பிக்கும் தேசம். அவனேவரிலும் போக மோஹங்களை விளைக்கும் இது; * இருள்தருமா ஞாலமிறேயிது, ஶுத்தஸத்வமது. [ஏறலுற்றால்] - போகப்ராப்தமாகில்; கிடைப்பதாகில். [நாவினுள்ளுமித்யாதி] - மநோவாக்காயங்களாலே நித்யஸூரிகளும் பயின்று ஆஶ்ரயிக்குமதாய், நிரதிஶயபோக்யமான திருவாறன்விளையை. "தீவினையுள்ளத்தின் சார்வல்லவாகி" என்னவேண்டாத நித்யநிர்தோஷர் படுகாடுகிடக்கிறதேசமென்கை. [மேவியித்யாதி] - 'கிட்டி அநுகூலவ்ருத்திகளைப் பண்ணவற்றே!' என்னாநின்றது என்மனஸ்ஸு. "ஸாதோ நாட்யஶ்ருதம்" என்று — என்வஶமல்ல என்மநஸ்ஸு.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. "எனக்கு ஸ்ரீவைகுண்டமும் திருவாறன்விளையும் இரண்டும் கிடைப்பதானால், ஸ்ரீவைகுண்டத்தைவிட்டுத்திருவாறன்விளையே யமையுமென்னும் என்னெஞ்சம்" என்கிறார்.

[தீவினை இத்யாதி] - " 'திருவாறன்விளையே ப்ராப்யம்' என்று இங்கிருந்த நாளுண்டான ஸங்கோசத்தாலே சொல்லுகிறீர்: ஸங்கோசங்கழிந்தவாறே பரமபதத்திலே தோள்மாறுகிறீர்" என்ன, அதுவேண்டா: ஸங்கோசங்கழிந்தால் நான் இருக்கும்படியைக் கேட்கலாகாதோ வென்கிறார்: [தீவினையுள்ளத்தின் சார்வல்லவாகி]-பண்டுபண்ணின அவித்யாகர்மவாஸநா ருசிகளானவை, ப்ரத்யக்வஸ்துவை ஸ்பர்ஶியாவாப்க்கொண்டு.

ஒன்பதாம்பாட்டு.—தீவினை இத்யாதி. "தெளிவிசும்பேறலுற்றால் - திருவாறன்விளையதனை மேவி" இத்யாதிகளைக் கடாக்ஷித்து அவதாரிகை - எனக்கு இத்யாதி.

"தெளிவிசும்பேறலுற்றால்" என்னவமைந்திருக்க, "தீவினை, உள்ளத்தின் சார்வல்லவாகி" என்று விஶேஷித்ததுக்கு பாவம் - திருவாறன்விளையே இத்யாதி. இது பதாவதாரிகை. "உள்ளம்" என்று - உள்ளிருக்கிற ஆத்மாவைச் சொல்லுகிறது. ப்ரத்யக்வஸ்து - ஆத்மா. "யாவரும்வந்து •

[தெளிவிசும்பேறலுற்றால்] - திருநாடேறப்போக உத்யோகித்தால். [நாவினுள்ளும் இத்யாதி] - எத்தனையேனும் அதிசயிதஜ்ஞாநரான திருநாட்டிலுள்ளாரும் வந்து மநோ வாக்காயங்களாலே பயின்று ஆச்ரயிக்கும்படி நிரதிசயபோக்யமான திருவாறன் விளையை. [மேவி இத்யாதி] - அத்தேசத்தை நான் சென்று ப்ராபித்து அநுகூலவ்ருத்தி களைப்பண்ணி. [கைதொழக்கூடுங்கொலென்னுமென்சிந்தனையே] - என் நெஞ்சு எனக்கு விதேயமல்ல; "ஹாவோ நாந்யத்ரகச்சதி" (பாவோநாந்யத்ரகச்சதி) என்கிறபடியே.

---

## பத்தாம் பாட்டு.

---

சிந்தைமற்றொன்றின்திறத்ததல்லாத்தன்மை தேவபிரானறியும்
சிந்தையினால்செய்வதானறியாதன மாயங்களொன்றுமில்லை
சிந்தையினால்சொல்லினால்செய்கையால் நிலத்தேவர்குழுவணங்கும்
சிந்தைமகிழ்திருவாறன்விளையுறை தீர்த்தனுக்கற்றபின்னே.

ஆ —(சிந்தை.) - "திருநாடு ப்ராப்யம்" என்னும்ப்ரஸித்தியாலே உம்மைத் திருநாடேறக்கொண்டெழுந்தருளிற் செய்வதென்? என்னில்,—

திருவாறன்விளையே ப்ராப்யமென்றிருக்கைக்கு விரோதியான பாபத்தைப் போக்கி என்னைத் திருவாறன்விளையே ப்ராப்யமென்றிருக்கப் பண்ணினபின்பு, "திருவாறன்விளை" என்றால் என்னெஞ்சு தாழ்ந்துகிடக்கும்படி அறியானோ? ஸர்வஜ்ஞனல்லனோ? என்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், திருவாறன்விளையை ப்ராப்யமென்றிருக்க, அறியாதது ஒன்றுமில்லை.

[சிந்தையினாலென்று மேலுக்கு] - மநோவாக்காயங்களினால் * விண்ணுளாரிலும் சீரியரான நிலத்தேவருடைய குழாங்கள் வணங்கும்படியாய் நிலமிதியாலே புக்காருடைய ஹ்ருதயம் பகிழக்கடவதான திருவாறன்விளையிலே உறையாநிற்பதுஞ் செய்து போக்யதையாலே வேறொரிடத்துக்காகாதபடி கண்டாரையகப்படுத்துக் கொள்ளும் எம்பெருமானுக்கு அற்றபின்பு.

ப —அநந்தரம், திருவாறன்விளையிலே வர்த்திக்கிற தன்பக்கலிலே வ்யவஸிதனானபின்பு நெஞ்சுவேறொன்றிற்போகாதென்னுமிடம அவன்தானே அறியுமென்கிறார்.

---

உள்ளத்துள்ளும் - நாவினுள்ளும் - அமைந்ததொழிலினுள்ளும்நவின்று - வணங்கும்பொழில் திருவாறன்விளையதனை" என்று அந்வயித்தருளிச்செய்கிறார் - எத்தனையேனும் இத்யாதி. நவின்று- கிட்டி. நவிலுகை - கிட்டுகை. பயின்று - கிட்டி. "என்சிந்தனை" என்றதுக்கு பாவம் - என்னெஞ்சு இத்யாதி. இதுக்கு ப்ரமாணம் - ஹாவ இத்யாதி. தீவினை என்றுதொடங்கி, ஏறலுற்றால்- யாவரும்வந்து, உள்ளத்துள்ளும் - நாவினுள்ளும் - அமைந்ததொழிலினுள்ளும் நவின்று - வணங்கும்பொழில் திருவாறன்விளையதனை - என்சிந்தனை - மேவிவலம்செய்து கைதொழக்கூடுங்கொலென்னும் இத்யந்வயம். (கூ)

*சிந்தையினால் சொல்லினால் செய்கையால் - மநோவாக்காயங்களாலே, நிலத்தேவர் - நிலத்தேவரானபாகவதருடைய, குழு - ஸங்கமானது, (அநுஸந்திக்க), வணங்கும் - வணங்கும்படியாய், சிந்தை - (ஸேவார்த்தாக்கள்) நெஞ்சை, மகிழ் - மகிழ்விக்கும், திருவாறன்விளை - திருவாறன்விளையிலே, உறை - வர்த்திக்கிற, தீர்த்தனுக்கு - பரமபாவநபூதனுக்கு, அற்றபின் - (அநந்யார்ஹசேஷமாம்படி) அறுதிபுடைத்தானபின்பு, சிந்தை - நெஞ்சு, மற்றொன்றின் - வேறொன்றை, திறத்ததல்லா - உத்தேஸ்யமாக நினைத்திராத, தன்மை - ஸ்வபாவத்தை, தேவன் - ஸர்வேஸ்வரனை, பிரான் - ஸர்வஜ்ஞன்தானே, அறியும்-;சிந்தையினால் - சிந்தையினால், செய்வ - செய்யப்பட்டு,மாயங்கள் - மறைந்ததொழில்களானவை, தான் - அவன்தான், அறியாதன - அறியாதனவ*
*'ம*

*இ.—பத்தாம்பாட்டில், நீர் திருவாறன்விளையை "ப்ராப்யம்" என்றிருக்க அவன் திருநாட்டைத்தரிலோ? என்ன; 'அவன் ஸர்வஜ்ஞனல்லனோ? அறியானோ?' என்கிறார்.*

*[சிந்தையித்யாதி] - திருவாறன்விளையொழிய வேறொன்றில் ப்ராப்யபுத்தியில்லையென்னுமிடம் ஸர்வேஸ்வரன் அறியும். உம்முடைய நினைவுக்கு ஸர்வேஸ்வரனை ஸாக்ஷியாக்குகைக்கு ஹேதுவென்? என்னில்,—[சிந்தையினாலித்யாதி] - நினைவுக்கு வாய்த்த தலையிலே யிருக்கிறவனறியானோ? மநஸ்ஸாலே செய்யுமவற்றில் அவனறியாத வஞ்சகங்களொன்றுமில்லை. [சிந்தையினாலித்யாதி] - நித்யஸூரிகளைப்போலே, மநோவாக்காயங்களாலே பூஸுரரான முமுக்ஷுக்கள் திரள்திரளாக வந்து ஆஸ்ரயிப்பர்கள். [சிந்தை மகிழ் திருவாறன்விளை] - கிட்டினாரை நிரதிஸயாநந்தியாக்கும் தேசம். இவ்வத்யவஸாயம் என்றுதொடங்கி? என்ன [உறைதீர்த்தனுக்கு] - அங்குத்தை நித்யவாஸத்தாலே தனக்கு போக்யதையைக் காட்டிப் புறம்புள்ள ருசியைப் போக்கித் தன்பக்கலிலே ருசியைப் பிறப்பித்தவனுக்கு. [அற்றபின்] - அவன்பக்கலிலே அநந்யார்ஹமாம்படி ருசி பிறந்தபின்பு - சிந்தைமற்றொன்றின் திறத்ததல்லாத்தன்மை தேவபிரான்அறியும்.*

ஈடு.—பத்தாம்பாட்டு. இதுதான் ஒருக்திமாத்ரமாய் உம்முடைய நெஞ்சு பரமபதத்தை விரும்பினாலோ? என்ன ; "அத்தை, என் நினைவுக்கு வாய்த்தலையிலேயிருக்கிற ஸர்வேஸ்வரனைக் கேட்டுக்கொள்வது" என்று இங்ஙனே அருளிச்செய்வர் சீயர். அன்றிக்கே, பிள்ளான், "நீர் 'திருவாறன்விளையே ப்ராப்யம்' என்றிருக்கிறீர்; ஈஸ்வரன் ஸ்வதந்த்ரனன்றோ? அவன் பரமபதத்தைத்தரிலோ" என்ன; 'அவன் ஸர்வஜ்ஞனன்றோ; அறியானோவென்கிறார்" என்று; புருஷார்த்தப்ரதனன்றோ ? புருஷன் அர்த்தித்தத்தையன்றோ கொடுப்பது.

[சிந்தைமற்றொன்றின் திறத்ததல்லாத்தன்மை தேவபிரானறியும்] - நெஞ்சானது பரமபதப்ரஸங்கமும் நினையாதது ஸர்வேஸ்வரனறியும். தன்மை - ஸ்வபாவம். மற்

*பத்தாம்பாட்டு.—சிந்தைமற்று இத்யாதி. "மாயங்களொன்றுமில்லை" என்றுமளவும் கடாக்ஷித்த அவதாரிகை - இதுதான் இத்யாதி வாக்யத்வயம். "அறியும்" என்கையாலே - கேட்டுக்கொள்வது என்று ஸித்தம். வாய்த்தலை - மூலம். அறிந்தாலோவென்ன - புருஷார்த்த இத்யாதி. "இவ்வர்த்தத்துக்கு ஸாக்ஷியாக அவனைக்கேட்டுக்கொள்" என்று நஞ்சீயருடைய கருத்து.*

*முந்தின அவதாரிகையிலே அருளிச்செய்கிறார் - உம்மைக்கேட்க இத்யாதி. அவனையறியாதே இவன் நினைக்கவொண்ணாதோவென்ன - அவன் நினைத்தால் இத்யாதி. அப்படி அவனறி*

றேன்கிறது - பரமபதத்தின்பேர் சொல்லுகையுங்கூட அஸஹ்யமானபடி. உம்மைக்கேட்க, ஸர்வேஶ்வரனை ஸாக்ஷியாகச் சொன்னதுக்குக் கருத்தேன்? என்ன - [சிந்தையினால் இத்யாதி] - அவன் நினைத்தால் இவன் அநந்தரம் நினைக்கவேண்டும்படியிருக்க, அவன் அறியாததுஉண்டோ? * உள்ளுவாருள்ளத்தெல்லாம் உடனிருந்தறியுமவனன்றோ? அவன் நினைப்பிட்டாலன்றோ இவனுக்கு நினைக்கலாவது? நெஞ்சால் செய்யப்படுவனவற்றில் அவனறியாத வஞ்சநங்க ளொன்றுமில்லை. [சிந்தையினால் இத்யாதி] - நித்யஸூரிகளோபாதி முமுக்ஷுக்களும் வந்து ஆஶ்ரயிக்கும் தேசமாயிற்று. மநோவாக்காயங்கள் மூன்றிலும் ஹிம்ஸாபரரான ஸ்ரீவைஷ்ணவர்கள் திரண்டுவந்து ஆஶ்ரயிக்கும் தேசமாயிற்று. [சிந்தை மகிழ்திருவாறன்விளை]- ஆரேனுமாகப் புக்காரை நிரதிஶயாநந்திகளாகப்பண்ணும் தேசமாயிற்று. "ப்ராப்யபூமி" என்று தோற்றும்படி இருக்குமாயிற்று. திருவாறன்விளையிலே வந்து வர்த்திக்கிற ஸர்வேஶ்வரனைக் கேட்டுக்கொள்வது. உமக்கு இத்தெளிவுதான் என்றுதொடங்கி வந்தது? என்ன, - [தீர்த்தனுக்கற்றபின்] - அவன் தன்னுடைய போக்யதாதிஶயத்தாலே எனக்குப் புறம்புண்டான பற்றைத் தவிர்ந்துத் தனக்கே அநந்யார்ஹனும்படி பண்ணிக்கொண்ட அன்றுதொடங்கி: உஜ்ஜீவிக்கப்பண்ணின அன்றுதொடங்கி; நடுவே உஜ்ஜீவியாதே கிடந்துபோந்ததே அநாதிகாலம். (க0)

---

## பதினொராம் பாட்டு.

---

**தீர்த்தனுக்கற்றபின் மற்றோர்சரணில்லையென்றெண்ணித் தீர்த்தனுக்கே**
**தீர்த்தமனத்தனனாகிச் செழுங்குருகூர்ச்சடகோபன்சொன்ன**
**தீர்த்தங்களாயிரத்துள் இவைபத்தும்வல்லார்களைத் தேவர்வைகல்**
**தீர்த்தங்களேயென்றுபூசித்துநல்கியுரைப்பர் தந்தேவியர்க்கே.**

*ஆ.—(தீர்த்தனுக்கற்றபின்) - திருவாறன்விளையே ப்ராப்யமென்றிருக்கைக்கு விரோதியான என்னுடைய பாபத்தைப்போக்குகையாலே பவித்ரம் அதில் நின்றருளின எம்பெருமான்; அதிலும் பவித்ரம் அவனை ப்ரதிபாதித்த திருவாய்மொழி*

---

யுமோவென்ன ப்ரமாணம் - உள்ளுவார் இத்யாதி. அவன் நினைத்தவநந்தரம் நினைக்கவேணுமோவென்ன - அவன் நினைப்பிட்டால் இத்யாதி. ஶப்தார்த்தம் - நெஞ்சால் இத்யாதி. "செய்வ" என்றது - செய்யப்படுவனவற்றில் என்றபடி. கீழ்ப்பாட்டிலே நித்யஸூரிகள் ஆஶ்ரயித்தபடி சொன்னவனந்தரம், இங்கே முமுக்ஷுக்கள் ஆஶ்ரயிக்கிறபடியைச் சொன்னதுக்கு பாவம் - நித்யஸூரிகளோபாதி இத்யாதி. "சிந்தையினால் சொல்லினால் செய்கையால்" என்று - கார்யேகாரணோபசாரம் பண்ணுகிறது. இன்னார்சிந்தை என்னாமையாலே அருளிச்செய்கிறார் - ஆரேனும் இத்யாதி. இத்தால் பலிதம் - ப்ராப்யபூமி இத்யாதி. பரமபதப்ரஸங்கம் நினையாதிருக்கிற இவர், "தேவபிரான்" என்று பரமபதநிலயனைச் சொல்லுவானென்? என்கிற ஶங்கையிலே, "தேவபிரான்" என்றதுக்கு அர்த்தம் - திருவாறன்விளையிலே இத்யாதி. உஜ்ஜீவிக்கப்பண்ணின அன்றுதொடங்கி யென்றது - மத்யமாக்ஷரத்தி லர்த்தத்தை எனக்கு உண்டாக்கின அன்றுதொடங்கி யென்றபடி. இதில் வ்யதிரேகஸித்தமான அர்த்தத்தை அருளிச்செய்கிறார் - நடுவே இத்யாதி. நடுவேயென்றது - விஶேஷகடாக்ஷத்துக்கு முன்புள்ள காலத்தை. அகாரமகாரங்களுக்கு நடுவேயென்றும். சிந்தையினால் என்றுதொடங்கி, தீர்த்தனுக்கற்றபின் - சிந்தை மற்றொன்றின் என்றுதொடங்கி, தேவபிரானறியும்: சிந்தையினால் செய்வதானறியாதன மாயங்களொன்றுமில்லை இத்யந்வய:. (க0)

கள் இவைவல்லார் அவற்றிலும் பவித்ரபூதரென்று, இந்த்ராதிதேவர்கள் ஸத்கரித்துக் கொண்டு தங்கள் ப்ரணயிநிகளுக்குச் சொல்லுவரென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி வல்லார் * அயர்வறுமமரர்களால் ஶ்லாகநீயரென்கிறார்.

[தீர்த்தனுக்கற்றபினென்றுதொடங்கி] - தன் திருவழகைக் கண்டாரை வேறோரிடத்துக்கு உரித்தாகாதபடி பண்ணவல்ல திருவாறன்விளையில் எம்பெருமானுக்கேயாகத் தாம்அற்றபின்பு மற்றொரு ப்ராப்யம் இல்லையென்று பார்த்தருளி அவனுக்கே துணிந்த திருவுள்ளத்தையுடையராய். [செழுங்குருகூர் என்று தொடங்கி] - ஸம்ருத்தமான திருநகரியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த தீர்த்தங்களான ஆயிரம் திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி வல்லார்களை. தீர்த்தமாகையாவது—தன்போக்யதையாலே மற்றொன்றில் போகவொட்டாதபடிபண்ணவற்றாதல், பாவநமாதல். [தேவரென்று தொடங்கி] - தேவர்களானவர்கள் ஸமுத்ராதிகளைப்போலே ஔபோகாலங்களிலன்றிக்கே எல்லாக்காலங்களிலும் பவித்ரபூதர் என்று தங்கள் மஹிஷிகளை ஸ்நேஹித்துக்கொண்டாடி அவர்களுக்கு ஸர்வஸ்வதாநம் பண்ணினாராய்ச் சொல்லாநிற்பர். தேவர்களாகிறார்- அயர்வறுமமரர்களென்றும், மற்றைப்ரஹ்மாதிகளென்றும் சொல்லாநிற்பர்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லவர்களை நித்யஸூரிகள் ஶ்லாகிப்பரென்று ஃபலத்தை யருளிச்செய்கிறார்.

தீர்த்தனுக்கு - (உபாயோபதேஷ்டாவான) அவனுக்கு, அற்றபின் - அநந்யார்ஹமானபின்பு, மற்று - வேறு, ஓர் - ஒரு, சரண் - உபாயம், இல்லை - இல்லை, என்று -, எண்ணி - அறுதியிட்டு, தீர்த்தனுக்கே - (* ஸர்வபாபவிமோசகனாய்ப் பரமபாவநபூதனான) அவனுக்கே, தீர்த்த - அறுதியாக்கப்பட்ட, மனத்தனாகி - நெஞ்சையுடையவராய்க்கொண்டு, செழும் - ஊர்ஜஸ்வியமான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்ததாய், தீர்த்தங்கள் - தனித்தனியே வித்யாஸ்த்தாநங்களான, ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழியிலும், இவைபத்தும் - இப்பத்தையும், வல்லார்களை - அப்யஸிக்கவல்லவர்களை, தேவர் - நித்யஸூரிகளானவர்கள், வைகல் - ஸர்வகாலமும், தம் - தங்கள், தேவியர்க்கு - மஹிஷிகளுக்கு, பூசித்து - பஹுமாநமாக, நல்கி - ஸ்நேஹித்து, தீர்த்தங்களை - (ஸம்ஸாரதோஷ நிவர்த்தகரான) பவித்ரபூதர், என்று - என்று, உரைப்பர் - சொல்லாநிற்பர்கள். இது - அறுசீராசிரிய விருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழிவல்லார் நித்யஸூரிகளால் ஶ்லாகநீயரென்கிறார்..

[தீர்த்தனுக்கற்றபின்] - தன்னழகைக்காட்டிப்புறம்புள்ள பற்றையறுத்தவனுக்கேயாகத் துணிந்தபின்பு. [மற்றோர்சரணில்லையென்றெண்ணி] - வேறொருதஞ்சமில்லையென்றநுஸந்தித்து, வாஹ்யருசியைத்தவிர்த்தவனுக்கே துணிந்த திருவுள்ளத்தையுடையராய், [செழுங்குருகூர்ச்சடகோபன்சொன்ன] - இவர்க்கு இந்தநன்மைக்கடி திருநகரியிற் பிறப்பாயிற்று. [செழுங்குருகூர்] - ஆத்மகுணங்களை ஸம்ருத்தமாக்கும் தேசம். [தீர்த்தங்களாயிரத்துள்] - தன்னினிமையாலே புறம்புள்ளவற்றை யறுக்குமென்னுதல், பாவநமென்னுதல். [தேவர்] - நித்யஸூரிகள். [வைகல்] "அபர்வணி

கடல்நீண்டலரகாது" என்னுமாபோலன்றியே, ஸர்வகாலமும். [தீர்த்தங்களை யென்று - தந்தேவியர்க்கு - பூசித்து நல்கியுரைப்பர்] - மஹர்ஷிகளை ஸ்நேஹித்துக்கொண்டாடும் ஊமையிலே அவர்களுக்கு ஸர்வஸ்வதாநம்பண்ணினார்களாகச் சொல்லுவர்கள். நித்ய ஸூரிகள் மஹர்ஷிகளைக்கொண்டாடி யிருக்கும்போதாகிறது - தாங்கள் கைங்கர்யத்திலே யிழிந்தா லெடுத்துக்கைநீட்டும்போது. தேவரென்று - ப்ரஹ்மாதிகளையும் சொல்லுவர்.

ஈறு.— நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றவர்கள் *அயர்வறு மமர்களுக்கு ஸ்லாக்யரென்கிறார்.

[தீர்த்தன் இத்யாதி]—இன்னார்க்குத்தீர்த்தனென்னுமையாலே ஸ்வவ்யதிரிக்தர்க் கெல்லாம் தீர்த்தனாயிற்று. தீர்த்தமாவது - தான் பரிசுத்தமுமாய், தன்னைஸ்பர்சித்தா ரும் பரிசுத்தராம்படி பண்ணுமதாயிற்று. *தீர்த்தனுலகளந்த சேவடியை ப்ரஹ்மா விளக்க, அந்ததீர்த்தத்தை பாவநார்த்தமாக ஜடாமத்யே தரித்தான் ருத்ரன். *"ஆறு போதிசடையோன்" என்னக்கடவதிறே. கங்காதரனென்றே பேர் அவனுக்கு. அந்தக் கங்கைக்கு அடியை ஆராய்ந்துகொள்ளுகையிறே இனியுள்ளது; ஆராய்ந்தவாறே அது அடிப்பட்டிருக்குமே; *கங்கைபோதரக் கால்நிமிர்த்தருளிய கண்ணனிறே. [தீர்த்தனுக் கற்றபின்] - தன்னுடைய போக்யதாதிசயத்தாலே தன்னையொழிந்த விஷயங்களி லுண் டான ருசியைக் கழித்தவனுக்கு அற்றபின் என்றுமாம். [மற்றோர்சரணில்லை யென் றெண்ணி] - அவனையொழிய ரக்ஷகரில்லையென்று தெளிந்தாராயிற்று. [தீர்த்தனுக்கே தீர்த்தமனத்தனாகி] - பாஹ்யவிஷயங்களில் ருசியைப் போக்கினவனுக்கே அறுதியாக எழுதிக்கொடுத்த நெஞ்சையுடையராய். "உனைநினைந்தெள்கல்தந்த எந்தாய்" என்றாரே

---

நிகமம்.—தீர்த்தனுக்கு இத்யாதி. "வல்லார்களைத் தேவர்வைகல் தீர்த்தங்களே" இத்யாதி களைக் கடாக்ஷித்து அவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி.

"தீர்த்தன்" என்றால் - பரிசுத்தனென்று காட்டுமதொழிய, ஸ்வவ்யதிரிக்தர்க்கெல்லாம் சுத்தியைவிளைக்குமவனென்று காட்டுமோவென்ன - தீர்த்தமாவது இத்யாதி. அப்படி தன்னை ஸ்பர்சித்தாரையும் சுத்தமாக்கினானோவென்ன - தீர்த்தனுலகளந்த இத்யாதி. இவ்விடத்திலே - "தஸ்ய ஹ வை பாதம் ப்ரஹ்மா ப்ரக்ஷால்யா ... பாவநாய ... ஜடாபிர் ... ஸீ ... ஸுவயாரணாத்" என்கிற ஸ்லோகம் அநுஸந்தேயம். அப்படி தரித்தானோவென்ன, — ப்ரமாணம் - ஆறுபோதி இத்யாதி. கங்கையை ஏகதேசத்திலே யடக்கின ஜடையையுடையவ னித் யர்த்தம். திருவேழுகூற்றிருக்கை. அவன் இந்தத்தீர்த்தத்தை தரித்தானென்னுமதுக்கு உபபத்தி யருளிச்செய்வாராக அதிஷ்டிகை - கங்காதரன் இத்யாதி. கங்காதரனென்றமாத்ரத்திலே அவன் திருவடிகள் விளக்கின தீர்த்தத்தை தரித்தானென்னுமிடம் தோன்றுமோவென்ன; அதுக்குஹேதுவை விசாரித்துக்கொள்ளவேணு மென்னுமத்தையும், அப்படி விசாரித்தால் திருவடிகளிலே பிறந்ததா யிருக்குமென்னுமத்தையும் அருளிச்செய்கிறார் - அந்தக்கங்கைக்கு இத்யாதி வாக்யத்வயத்தாலே. அடிப்பட்டிருக்கும் - ஸம்பந்தமாயிருக்கும். திருவடிகளை ஸ்பர்சித்திருக்கும் என்றுமாம். அப்படி யிருக்குமோவென்ன - கங்கைபோதர இத்யாதி. கங்கைபுறப்படும்படியாகத் திருவடிகளை நிமிர்த் தருளின ஸர்வேச்வரன் என்றபடி. திருமொழி, நாலாம்பத்து, இரண்டாந்திருமொழி, "அங்கையா லடி" இத்யாதி. "தீர்த்தன்" என்றதுக்கு - போக்யன் என்று அர்த்தாந்தரம் - தன்னுடைய இத்யாதி. "போக்யஸ்ஸத்தனனவனுக்கு" என்றத்தால் பலித்தஸாவம் - பாஹ்ய இத்யாதி. அப்படி பாஹ்ய விஷயங்களில் ருசியைப்போக்கினானோவென்ன, ப்ரமாணங்கள - உனைநினைந்து இத்யாதி. எள்கல் - உபேக்ஷை. ஸௌந்தர்யம் புறம்புபோகவொட்டாதென்னுமதுக்கு ப்ரமாணம் - மனைப்பால் இத்யாதி.

கீழ் ; "மாற்பால்மனஞ்சுழிப்ப மங்கையர்தோள்கைவிட்டு" என்றும், "பரமாத்மநி யோ ரக்தோ விரக்தோ(அ)பரமாத்மநி"(பரமாத்மநியோரக்தோவிரக்தோபரமாத்மநி)என்றும் சொல்லுகிறபடியே, தன்பக்கலிலே நெஞ்சை வைத்தால் பின்பு புறம் போகவொட்டாதே. ஸௌந்தர்யம் * "மனைப்பால்பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம் - துறந்தார் தொழுதாரத்தோள்" என்று - மனைப்பால் பேரின்பத்தில் கைகழியவொட்டாதே. [செழுங்குருகூர்ச்சடகோபன்சொன்ன] - அதுக்கடியான ஜந்மபூமியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த. [தீர்த்தங்களாயிரம்] - ஆயிரம்பாட்டும் ஆயிரந்தீர்த்தங்களாயிற்று. இந்தப்பத்தை அப்யஸிக்கவல்லார்களை, தேவருண்டு - திருவடி, திருவநந்தாழ்வான், ஸேனை முதலியார் தொடக்கமானார், இவர்களை "நாள்தோறும்பவித்ரபூதர்" என்று ஆதரித்துக் கொண்டுபோந்து, தங்கள் மஹிஷிகளை ஸ்நேஹித்துக்கொண்டாடும் தசையிலே சொல்லுவார்கள். [நல்கியுரைப்பார் தந்தேவியர்க்கு] - மஹிஷிகளும் தாங்களுமாக ஸ்ரீவைகுண்டநாதனுக்கு அடிமைசெய்து, ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஓடமேற்றிக் கூலி கொள்ளுமளவானவாறே, அவர்களுக்கு ஸர்வஸ்வதாநம்பண்ணிக் கனக்கத் தங்கள் ப்ரபாவத்தைச் சொல்லும்படியாகப்பெறுவர். ஓடமேற்றிக்கூலிகொள்ளும் தசையாகிறது - பகவத்விஷயத்தில் கைங்கர்யம்பண்ணும்போது எடுத்துக்கைநீட்டுகையிறே. சரமஶ்லோகம் ரக்ஷித்துக்கொண்ட அளவுபோலேயிருக்கும்அளவுகளிலே என்றபடி. * (அதாவது - உடையவர், திருக்கோட்டியூர்நம்பி தமக்கு அத்யந்தரஹஸ்யமாக உபதேசித்த சரமஶ்லோகத்தைத் தெற்காழ்வார்திருமுன்பேஎடுத்துக் கைநீட்டினவர்களுக்கு, அவர்கள் விஷயத்திலே உகப்பாலே அருளிச்செய்தாரிறே; அந்தைச்சொல்லுகிறது.) [வைகலும் பூசித்து] - "அபர்வணி கடல்தீண்டலாகாது" என்றாற்போலே, அதுக்கு ஒருநியதியில்லையென்கை. வைகல் - காலம். "ஒழிவில்காலமெல்லா முடனாய்மன்னி" என்று தத்விஷயத்தில் இவர் ப்ரார்த்தித்தத்தை இது கற்ற ததீய விஷயத்திலே நித்யஸூரிகள் அடிமை செய்வார்கள். (கக)

---

"அத்தோள் - தொழுதார் - பேரின்பமெல்லாம் துறந்தார்" என்று அந்வயித்து அர்த்தம் - மனைப்பால் பேரின்பத்தில் இத்யாதி. தையானது - தோளானது. கழியவொட்டாது - போகவொட்டாதென்று ஸ்வபாவார்த்தம். அதுக்கடியான - இதரவிஷய ப்ராவண்யத்தைத் தவிரும்படி பிறந்த அத்யவஸாயத்துக்கு அடியான என்றபடி. ஆயிரம்பாட்டும் தீர்த்தம்போலே பரமபாவநமென்றபடி. "தேவர் - பூசித்து" என்றுகூட்டி அர்த்தம் - தேவருண்டு இத்யாதி. "நல்கி" என்றதுக்கு அர்த்தம் - இவர்களை - ஆதரித்துக்கொண்டு என்று. தேவியர்க்கு நல்கியுரைக்கைக்கு ஹேதுவேதென்ன - மஹிஷிகளும் இத்யாதி. நல்குதல் - ஸ்நேஹித்தலும், கொடுத்தலும். ஓடமேற்றிக்கூலிகொள்ளுமளவாவது - ஓடத்திலேற்றினபின்பு நட்டாற்றில் கூலிபொருந்திக்கொள்ளில் கொடாதிருக்கவொண்ணாத தசையென்றபடி. மஹிஷிகளொடுத்துக்கைநீட்டின ப்ரீதிப்ரகர்ஷத்தாலே என்றுகூட்டுவது. தங்கள் என்றது - இத்தை அப்யஸித்தவர்களை. "ஓடமேற்றிக் கூலிகொள்ளுமளவானவாறே" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் - சரமஶ்லோகம் இத்யாதி. அதாவது - அதிகுஹ்யமாகப் பேணிக்கொண்டிருந்த சரமஶ்லோகத்தை, த்ரௌபதிகுழல்முடிக்கைக்காக வ்யாமோஹத்தாலே அர்ஜுநனுக்கு வெளியிடவேண்டும்படியான அளவுபோலேயிருக்கிற அளவுகளிலே என்றபடி. "வைகல்" என்றதுக்குபாவம் - அபர்வணி இத்யாதி. பலிதம் - ஒழிவில்காலம் இத்யாதி. தீர்த்தனுக்கற்றபின் என்றுதொடங்கி, வல்லார்களைத் தேவர்வைகல் பூசித்து - தீர்த்தங்களேயென்று - தம்தேவியர்க்கு - நல்கியுரைப்பர் இத்யந்வய꞉. (கக)

த்ரமிடோபநிஷத்ஸங்கதி.— [illegible] ॥

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.— [illegible] ॥

[illegible] ॥

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

இன்பக்கவிபாடுவித்தானை இந்திரையோடு
அன்புற்றுவாழ்திருவாறன்விளையில்—துன்பமறக்
கண்டடிமைசெய்யக் கருதியமாறன்கழலே
திண்திறலோர்யாவர்க்குந் தேவு.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.

---

ஏழாம்பத்து ஸம்பூர்ணம்

PRINTED AT THE "NOBLE PRESS" TRIPLICANE, MADRAS.

ஸ்ரீ

# பகவத் விஷயம்

## எட்டாம் பத்து

## திருவாய்மொழி மூலமும்

ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி,
இருபத்திநாலாயிரப்படி, ஈடு முப்பத்தாறாயிரப்படி வ்யாக்யாநங்களும்,
சீயர் அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு, த்ரவிடோபநிஷத்ஸங்கதி,
த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி, திருவாய்மொழி
நூற்றந்தாதி இவைகளுடன்.



சே. கிருஷ்ணமாசாரியர் பதிப்பு



வை. மு. கோபாலகிருஷ்ணமாசார்யராலும்,
சே. பார்த்தஸாரதி ஐயங்காராலும்,
பரிசோதிக்கப்பெற்றது.




திருவல்லிக்கேணி,
நோபில் அச்சுக்கூடம்.

சுக்லவருடம்] [1929.

ஸ்ரீ:

# திருவாய்மொழி

## எட்டாம் பத்து.

## முதல்திருவாய்மொழி—தேவிமார் ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(தேவிமாராவார்.) கீழில் திருவாய்மொழியிலே மநோரதித்தபடி பெறாமையாலே அத்யந்தம் அவஸந்நராய், எம்பெருமானுடைய ஆஶ்ரிதவாத்ஸல்யாதிகுணங்களை அதிஶங்கைபண்ணும்படி கலங்கி, "காணுமாறருளாய்" என்று கூப்பிடுகிறார்.

### ஒன்பதினாயிரப்படி.

எட்டாம்பத்தில், முதல்திருவாய்மொழியில், பெரிய பிராட்டியார் தொடக்கமான மஹிஷிகளோடும், தனக்கு நித்யபரிசாரகரான அயர்வறுமமரர்களோடுங்கூடின நித்யவிபூதியுக்தனாய், என்றும் தனக்குரக்ஷ்யமான ஜகத்விபூதியையுமுடையனாய்த் தன்விபூதியிலுள்ளாரெல்லார்க்கும் எல்லாப்படியாலும் ரக்ஷகனுமாய், இப்படிகளாலே அத்யந்தம் விலக்ஷணனுமாய், பிரிந்தார்க்கு தரிக்கவொண்ணாதபடி ஸௌந்தர்ய ஔதார்யாதிகளாலே நிரதிஶய போக்யனுமாயிருந்துள்ள எம்பெருமானைத் திருவாறன்விளையிலே கண்டு அடிமைசெய்யவேணுமென்று ஆசைப்பட்டு, அப்போதே தம்அபேக்ஷிதம் பெறாமையாலே மிகவும்நோவுபட்டு, தமக்குப்பிறந்த தஶாவிபாகத்தாலே, அவன் ஆஶ்ரிதர்க்கு அத்யந்தஸுலபனென்றும் எல்லார்க்குமீஶ்வரனாய் ரக்ஷகனாயிருப்பானொருவனென்றும்இருக்கிற தமக்கு உஜ்ஜீவநஹேதுவான இந்த ஜ்ஞாநங்கள் பொய்யோவென்று ஶங்கித்து, அத்தால் மிகவும் அவஸந்நரான ஆழ்வாரை எம்பெருமான், "உம்மை ஶப்தாதிவிஷயப்ராவண்யத்தைத் தவிர்த்து இப்படி நம்மாலல்லது செல்லாதபடி பண்ணினோம்; இனி உமக்குச் செய்யாததுஉண்டோ?" என்ன, அத்தையநுஸந்தித்து அதிஶங்கையுந்தவிர்ந்து தரித்து முடிக்கிறார்.

### பன்னீராயிரப்படி.

எட்டாம்பத்தில், இப்படி ஏழாம்பத்திலே - உபாயநிவர்த்யமான விரோதிப்ராபல்யத்தை அநுஸந்தித்து, தந்நிவ்ருத்திப்ரகாரத்தை இப்பத்திலே அநுஸந்திப்பதாக; விரோதிநிவர்த்தகனுடைய ஆஶ்ரிதாகாங்க்ஷாதீந ஸாந்நித்யத்தையும், ஸ்வவிஷயத்திலே ஸங்க்ரஹமுண்டேயாகிலும் இதரஸங்க்ரஹமற்றார்க்கல்லது ஸுலபனல்லனென்னுமத்தையும், ஸ்வாஶ்ரிதஜந விஶ்லேஷத்தில் தான் அஸஹாயனென்னும்படியான ப்ரேமஜநகத்வத்தையும், ஆஶ்ரிதவிஷயத்தில் அத்யந்ததுர்மோசமான விரோதிகளைப் போக்கி அவர்கள் ஸம்பத்தே ஸம்பத்தாயிருக்கும்ஆகாரத்தையும், ப்ராப்யபூதனை தன்பக்கலிலே ப்ராவண்யமுண்டானால் ப்ரதிபந்தகம் தன்னடையே கழலுமென்னு

மிடத்தையும், ஆஶ்ரிதவிரோதியைப் போக்குகைக்கு ஆஸந்நமாயிருக்குமிருப்பையும், அந்தஸ்திதனைக்கொண்டு அஶேஷவிரோதிநிவர்த்தகனும்படியையும், அப்ருதக்ஸித்தமான ஆத்மஶாந்தியை ப்ரகாஶிப்பித்து ஔபாதிக தோஷத்தினுடைய அதிஶங்காநிராகரணத்தையும், அபாஸ்ததோஷனை அதிகாரியை அதிஶயிதஸ்வாத்யாம்ருதத்திலே மக்நனாக்கும்படியையும், ஸ்வஸாஸ்யத்திலும் அதிகமான ஸ்வகீயஸாஸ்யஸம்ஶத்தை ப்ரகாஶிக்கும்படி தத்விரோதிநிவர்த்தந ப்ரகாரத்தையும் அருளிச்செய்து, பூர்வநிரூபிதமான விரோதியினுடைய நிவ்ருத்திக்ரமத்தை உபபாதித்தருளுகிறார்.

இதில் முதல்திருவாய்மொழியில், அடிமைசெய்யப்பாரித்த அர்ச்சாவதார ஸ்தலத்திலே ஆஶாநுரூபமான அபிமதம் ஸித்தியாமையாலே ஆர்த்தராய் மிகவும் பகவதநுபவாகாங்க்ஷை நடக்க, அந்த ஆகாங்க்ஷைக்கு ஹேதுவான அநவதிகவிபூதி பூர்த்தியையும், அந்தவிபூதிரக்ஷணார்த்தமான அவதாரங்களினுடைய அதிஶயித போக்யதையையும், ஆஶ்ரிதஸௌலப்யதாவிஶிஷ்டமான அநிஷ்டநிவர்த்தகத்வத்தையும், ஆஶ்ரிதஅநாஶ்ரிதவிஷயமாக உண்டான அநுகூலப்ரதிகூலரூபத்தையும், அஶேஷப்ரகாரரக்ஷகத்வத்தையும், அகிலாத்மபாவத்தையும், அஶேஷப்ரகார போக்யதையையும், ஆஶ்ரிதஸம்ரக்ஷணார்த்தமான க்ஷீரார்ணவஶாயித்வத்தையும், அதிஶயிதபுருஷார்த்தமான ப்ராப்ய தேஶவர்த்தித்வத்தையும், ஆஶாநுரூபோபகாரத்தால்வந்த அத்யந்தமஹத்தையையும் அநுஸந்தித்து; ஏவம்ப்ரகாரவிஶிஷ்டனான ஸர்வேஶ்வரன், தம்முடைய ஆகாங்க்ஷாநுரூபமாக முகங்காட்டி ஆஶ்வஸிப்பித்த ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்.

## இருபத்துநாலாயிரப்படி.

எட்டாம்பத்தில், முதல்திருவாய்மொழியில், ஸர்வேஶ்வரன், பர்யங்கவித்யையிற் சொல்லுகிறபடியே திருவநந்தாழ்வான்மேலே யிருக்குமாபோலே, நாய்ச்சிமாரோடும், நித்யபரிசாரகராய்த் தனக்கு அஸாதாரணராயிருக்கும் பரிகரத்தோடுங்கூடத் திருவாறன்விளையிலே திருவாய்மொழி கேட்கைக்காக வந்திருந்தான், அங்கேசென்று திருவாய்மொழிபாடி அநுகூலவ்ருத்திகளையும்பண்ணி அநுபவிப்போம்' என்று பாரித்தார்; அது மநோரதமாத்ரமேயாய், கால்நடையாடாதபடியான வலஹாநியாலே அங்கேபோய் அதுசெய்து தலைக்கட்டப்பெற்றிலர். புருஷகாரபூதைகளான நாய்ச்சிமாரும் நித்யஸூரிகளுமுண்டாயிருக்க, ஸர்வாபேக்ஷிதங்களையும் கொடுக்கைக்கு உண்டான ஐஶ்வர்யம் உண்டாயிருக்க, ஆஶ்ரிதார்த்தமாக நினைத்தவிடங்களிலே உதவுகைக்கு உண்டான நிரதிஶயபோக்யமான விக்ரஹங்களும் உண்டாயிருக்க, இத்தலையில் ஆசையும் குறைவற்றிருக்க, நமக்கு இழக்கவருவதே! என்று இன்னாதானவர், தமக்கு உஜ்ஜீவநஹேதுவாய், ஈஶ்வரனுக்கு நியதமாயிருக்கிற ஆஶ்ரிதஸௌலப்யதையென்ன! அந்தர்யாமியாய்ப்புக்குநின்று ஸத்தையைநோக்கி ஸர்வாபேக்ஷிதப்ரதத்வத்தால்வந்த ஸர்வரக்ஷகத்வமென்ன! இந்தகுணங்கள் நம்மைத்தேற்றிப் பொய்யாகிறதோ? என்று அக்குணங்களிலே அதிஶங்கை பண்ணினார். குணஜ்ஞாநத்தால் ஜீவித்திருக்குமவர்க்குக் குணத்திலே அதிஶங்கைபிறந்தால், தத்விஷயஜ்ஞாநமும் பொய்யாகையாலே, ஜீவிக்கவிரகில்லைபிறே. "வ்யாத: வ்யாஜஜ்ஞ: க்ருதஜ்ஞஶ்ச ஸாநுக்ரோஶ ஶரணாகதவத்ஸல: ஸத்யேந அநுக்ரோஶஸ்ஸௌஶீல்யேந ஸாகஸ்யாத: ।" உதாஹ்ருதி. ஈஶ்வரன், இப்படி இவர்க்குப்பிறந்த அவஸாதத்தைப் பார்த்தருளி, நாம் உமக்கு ஒன்றும்

*செய்திலோமென்றிருந்தீரோ? புறம்புள்ளவற்றில் துவக்கையறுத்தோம்: இப்படி நம்மா லல்லது செல்லாதபடி பண்ணினோம்: மேலுள்ளமோக்ஷமும் நாமேதருவதாக இருந் தோம்: நீர் இங்ஙன் கூப்பிடுகிறதென்?'' என்று, இவர் தம்இழவெல்லாம்மறக்கும்படி விஸ்ரம்ஹணீயத்வ ப்ரமுகமான குணங்களைக் காட்டிக்கொடுக்கக்கண்டு அத்தையநுஸந் தித்து, அதில்அதிஶங்கையுந் தீர்ந்து தரித்து இனியராகிறார்.*

## ஈடு—முப்பத்தாறுயிரப்படி.

பிராட்டிமாரோடே நித்யபரிகரம்ஸேவிக்க, பர்யங்கவித்யையிற் சொல்லு கிறபடியே திருவநந்தாழ்வான்மேலே ஸர்வேஶ்வரன், நாம் பாடின திருவாய்மொழி கேட்கைக்காகத் திருவாறன்விளையிலே எழுந்தருளியிருந்தான்: நாம் அங்கேபோய்த் திருவாய்மொழி கேட்பித்து அநுகூலவ்ருத்திகளையும்பண்ணி அநுபவிப்போமென்று பாரித்தார்; அது மநோரதமாத்ரமாய், நினைத்தபடி தலைக்கட்டப் பெற்றதில்லை. 'பிராட்டி மார் அருகே எழுந்தருளியிருக்க, நித்யஸூரிக ளுண்டாயிருக்க, நினைத்தபடி கார்யஞ் செய்து தலைக்கட்டுகைக்கீடானஐஶ்வர்யம் குறைவற்றிருக்க,ஆஶ்ரிதர்உகந்தவற்றைத் தன க்குத் திருமேனியாகக்கொண்டு உதவும் ஸ்வபாவனுயிருக்க, எனக்கு ருசியிற் குறைவற் றிருக்க, நினைத்தபரிமாற்றம் பெறுதொழிவோமே!' என்று வெறுத்தார். இவர்தாம் ஸர் வேஶ்வரன்பக்கல் தமக்குத் தஞ்சமாக நினைத்திருப்பது இரண்டு ஸ்வபாவத்தை:— ஆஶ்ரிதபரதந்த்ரனு யிருக்குமிருப்பையும், ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களும் தனக்கு ப்ரகாரமாகத் தான் ப்ரகாரியாய் இவற்றுக்குவந்த வ்யஸநம் தனக்குவந்ததாக நினைத்தி ருக்கும் ப்ராப்தியையு மாயிற்று ; அவையிரண்டும் தம்பக்கல் கார்யகரமாகக் கண்டிலர்; ''நானொருவன் தோற்றி ஸர்வேஶ்வரனுக்கு இவையும் பொய்யாகப்புகுகிறதோ?'' என்று அதிஶங்கைபண்ணினார். 'குணஜ்ஞாநத்தாலே ஜீவிக்குமவர் குணங்களிலே அதிஶங் கைபண்ணினுல் ஜீவிக்கமாட்டாரே. இவர்தம்மை நாம் இழக்கவொண்ணுது, இவரை ஸமாதாநம்பண்ணும்விரகுஏதோ?'' என்றுபார்த்து, ''வாரீர்! நீர், கண்டதெல்லாவற்றிலும் அதிஶங்கைபண்ணுகிறதென்? நாமும் உமக்கொன்றும் செய்திலோமோ? இவ்வளவாக உபகரித்த நாம் மேலுள்ளதுஞ் செய்வோங்காணும்; நீர் இங்ஙனே அதிஶங்கைபண்ண வேண்டா'' என்று தன்னுடைய விஸ்ரம்ஹணீயத்வ ப்ரமுகமான கல்யாணகுணங்களை

---

*தேவிமார்ப்ரவேஶ— ஸங்கதி* - பிராட்டிமாரோடே *இத்யாதி.* ''*எழில்மலர்மாதரும்*'' *என்றத்தைப்பற்ற* - பிராட்டிமாரோடே *என்றது.* ''*யாவரும்வந்தவணங்கும்*'' *என்றத்தைப்பற்ற*- நித்யபரிகரம்ஸேவிக்க *என்றது.* ''*பாம்பணையப்பன்*'' *என்றத்தைப்பற்ற* - திருவநந்தாழ்வான் மேலே *என்றது. பர்யங்கவித்யையாவது* - ஆதாரஶக்திக்ரமத்திலே *திருவநந்தாழ்வான்மேலே மஹிஷீபூஷணாயுத பரிஜநபரிச்சதாதிவிஶிஷ்டனுய், நித்யமுக்தாநுபாவ்யனுய் எழுந்தருளி யிருக்கும் ப்ரகாரத்தைச் சொல்லுகிற வேதாந்தம்.* ''*தேவிமாராவார்*'' *என்றுதொடங்கி,* ''*நின் னுருவம்*'' *என்னுமளவுங்கடாக்ஷித்து* - பிராட்டிமாரருகே *இத்யாதி* விஶேஷணசதுஷ்டயமும், ''*காணுமாறருளாய்*'' *என்றத்தைப்பற்ற* - ருசியில்குறைவற்றிருக்க *என்றது. வெறுக்கிறது எதுக் காக? என்ன* - இவர்தாம் *இத்யாதி.* ''*உமருகந்துகந்தவுருவம்*'' *இத்யாதியைப்பற்ற* - ஆஶ்ரிதபர தந்த்ரனுய் *இத்யாதி.* ''*இறந்ததும்நீயே*'' *இத்யாதியைப்பற்ற* - ஸ்வவ்யதிரிக்த *இத்யாதி.* ருக்குவந்தவ்யஸநம் *என்றவிடத்திலே* - ''வ்யஸநேஷு மநுஷ்யாணாம்'' *இத்யாத்யநுஸந் தேயம்.* ''*அறிவொன்றும் சங்கிப்பன்*'' *என்றத்தைப்பற்ற* - அதிசங்கைபண்ணினார் *என்றது.* இவர் *அப்படி அதிசங்கைபண்ணினுல் ஈஶ்வரன் செய்யநினைத்ததேது? என்ன*-குணஜ்ஞாநத்தாலே

யும், தான் இவ்வளவாகப்பண்ணின உபகாரங்களையுங் காட்டி, இவருடைய அதிஶங்கை யைத் தீர்த்து ஸமாதாநம்பண்ண, ஸமாஹிதராய், அத்தை யநுஸந்தித்து இனியராகிறார்.

**வ்யாதஜஹ்யாதி, "ப்ராஜ்ஞ:"** (ப்ராஜ்ஞ:)- தம்மாலேயபிமதம்பெறவிருப் பார்அறிவிற்குறையால் இழக்கவேண்டாதபடி தம்மளவையும் அவர்களளவையும் அறி கைக்குஈடான அறிவுடையவர். **"க்ருதஜ்ஞஶ்ச"** (க்ருதஜ்ஞஶ்ச) - கிட்டமேவன் தன்பக் கல் வைமுக்யம்பண்ணுமது தவிர்ந்து ஓரடி வர நின்ற எல்லையும் அறிவர். **"ஸாநுக்ரோஶஶ்ச"** (ஸாநுக்ரோஶஶ்ச) - அறிவுகொண்டு காரியங்கொள்ளவும்அறியாதேயிருக் குமவர்களுக்கு, அவர்களிழவை யநுஸந்தித்து "ஐயோ!" என்று இரங்குமவராயிருப்பர். **"ராகவ:"** (ராகவ:) - இது இவர்தம்மைத் தோற்றிவந்ததல்ல; குடிப்பிறப்பாலே. **"ஸத்வ்ருத்த:"** (ஸத்வ்ருத்த:) - பரஸம்ருத்த்யேகப்ரயோஜநராயிருப்பர். **"க்யாத:"** (க்யாத:) - இப்படி எதிரிகள்கோஷ்டியிலும் ப்ரஸித்தர். **"நிரநுக்ரோஶஶங்கே"** (நிரநுக்ரோஶஶங்கே) - இக்குணங்களையுடைய பெருமாளை இத்தசையில் எனக்கு முகங்காட்டக்காணாமையாலே, இக்குணங்களொன்றுமில்லாத ந்ருஶம்ஸரோபாதியாக ஶங்கியாநின்றேன். அவர்க்குக் குணங்கள்உண்டாகாதொழியாதிறே. **"மத்பாக்யஸங்க்ஷயாத்"**(மத்பாக்யஸங்க்ஷயாத்)- என்னுடையஹாநியாலேயாமித்தனையிறே. "அறிவோன்றும் சங்கிப்பன்வினையேன்" என்றாரிறே இவரும். இத்திருவாய்மொழிக்கு ஆளவந்தாரருளிச்செய்யும் ஶ்லோகம், இது.

---

## முதற் பாட்டு.

---

**தேவிமாராவார்திருமகள்பூமி ஏவ மற்றமரராட்செய்வார்**
**மேவியவுலகம்மூன்றவையாட்சி வேண்டுவேண்டுருவம்நின்னுருவம்**
**பாவியேன்றன்னையடுகின்றகமலக்கண்ணது ஓர்பவளவாய்மணியே!**
**ஆவியே! அமுதே! அலைகடல்கடைந்தவப்பனே! காணுமாறருளாய்.**

**ஆ —** [*தேவிமாராவார்*]. *லக்ஷ்மீமஹிஷீளாநாயகனாய், * ஶேஷஶேஷாஶந ஶருடப்ரமுக நாநாவிதஅநந்த பரிஜந பரிசாரிகா பரிசரித சரணயுகளனாய், நிகிலபுவந நிர்மாண த்ராண ஸம்ஹாராதிலீலனாய், ஆஶ்ரித பரித்ராணார்த்தமாக இச்சாநுகுண விக்*

---

*இத்யாதி. "பெரியவப்பனை" இத்யாதியைப்பற்ற* - விஸ்ரம்ஹணீயத்வ *இத்யாதி. "தாள்களை எனக்கே தலைத்தலைச்சிறப்பத்தந்த" என்றதைப்பற்ற* - **தான்** *இவ்வளவாக இத்யாதி.*

*இப்படி அவன்குணங்களிலே அதிஶங்கைபண்ணிணுருண்டோ? என்ன* - **வ்யாத:**இத் *யாதி. "வ்யாத:ப்ராஜ்ஞ:க்ருதஜ்ஞஶ்ச ஸாநுக்ரோஶஶ்ச ராகவ: । ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோஶஶங்கே மத்பாக்யஸங்க்ஷயாத்" இதி ஸுந்தரகாண்டே ஸீதா.* (உ௬-௧௬) அநுக்ரோ ஶம்-*தயை.* காரியங்கொள்ளவும்அறியாதே *என்றது - ஆபிமுக்யம்பண்ணி உஜ்ஜீவிக்கவும் அறி யாதே என்றபடி.* "**வ்யாத:**" *இத்யாதியாலே - குணங்களெல்லாவற்றையும்சொல்லி, "நிரநு க்ரோஶஶங்கே" என்று க்ருபையொன்றிலும் அதிஶங்கித்தது மற்றையவற்றுக்கும்உபலக்ஷணம்.* **"மத்பாக்யஸங்க்ஷயாத்"** *என்றாற்போலே இவரும் அருளிச்செய்ததுஉண்டோ? என்ன*-**அறிவோன் றும் இத்யாதி.**

ரஹனாய், ஸ்வஸௌந்தர்யஹ்ருத அஶேஷ மநோநயந கமலதளாயத லோசநனாய், அத்யுஜ்ஜ்வல வித்ருமஸமாநவதநனாய், நீலரத்நஸத்ருஶ திவ்யரூபனாய், எனக்கு தாரகனாய், போக்யனாய், ப்ரணதஜநஸமீஹித நிர்வர்த்தநைக ஸ்வபாவனாயிருந்த உன்னைக் காணுமாறு அருளாயென்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், பிரியில் தரிக்கவொண்ணாதபடி நிரதிஶயபோக்யனான நீ, உன்னை நான் காணும்படி க்ருபைபண்ணியருளவேணுமென்கிறார்.

[ஏவவென்று தொடங்கி] - மற்று ஏவ அடிமை செய்யக்கடவார் - அபர்வறு மமரர்கள்; உன்னுடைய ஆஜ்ஞாநுபாலநம் பண்ணக்கடவதான பத்தரும், முக்தரும் நித்யருமான த்ரிவிதசேதநரும் ஆளக்கடவ விபூதி; உனக்கு விபூதியென்றால் தகுதியான மூன்றுலோகமென்றுமாம். [வேண்டுவேண்டுருவம் நின்னுருவம்] - ஜகத்ரக்ஷணத்துக்கு வேண்டினவேண்டின வடிவு உன்வடிவு. [பாவியேனென்று மேலுக்கெல்லாம்] - இங்ஙனே ஸுலபனான உன்னை இழக்கைக்கீடான பாபத்தைப்பண்ணின என்னை நோவுபடுத்தாநின்றுள்ள அழகிய திருக்கண்களையும் விலக்ஷணமான திருப்பவளத்தையும் உடையையாய், ஒருகாலும் விடவொண்ணாத பேரழகையுமுடையையாய், எனக்கு தாரகனான ப்ராணனுமாய், நிரதிஶயபோக்யனுமாய், அபேக்ஷித்தார் அபேக்ஷிதங்களைக் கடலைக்கடைந்தாகிலும் கொடுக்கும் உபகாரகனுமானவனே!

ப.—முதற்பாட்டில், நிரவதிகவிபூதியுக்தனாய், விஶ்லேஷத்தில் தரியாதபடி பண்ணும் போக்யதையையுடைய உன்னை நான் காணும்படி இரங்கவேணு மென்கிறார்.

தேவிமார்ஆவார் - (உன்னழகுக்கும் பெருமைக்குந் தகுதியான) தேவிமாராவார், திருமகள் - (உனக்கு நிரதிஶய ஸம்பத்ரூபையான) லக்ஷ்மியும், பூமி-(ஸமஸ்தவிபூத்யபிமாநிநியான) பூமியும்; மற்று - (அதுக்குமேலே) பின்னையும், (இவர்களோடேகூடவிருக்கிற நீ), ஏவ - (க்ரியதாமிதிமாம்வத என்கிறபடியே) நியோகிக்க, ஆட்செய்வார் - கைங்கர்யம்பண்ணுவார்கள், அமரர் - நித்யஸூரிகள்; மேவிய - (உன்னோடு அப்ருதக்ஸித்தமாம்படி) பொருந்திய, மூன்றவை-(ப்ரதாநபுருஷகாலாத்மகமான) த்ரைவித்யத்தையுடைய, உலகம் - லோகங்கள், ஆட்சி- ஆஜ்ஞாநுவிதாயிகள்; வேண்டு- (அவற்றினுடைய ரக்ஷணார்த்தமாக) தத்ததவஸ்தோசிதமாயும், வேண்டு - ஸ்வாபிமதமுமாயுமிருக்கிற, உருவம் - ரூபங்கள், நின் - உனக்கு, உருவம் - (அஸாதாரண)ரூபங்கள்; (இந்த உபயவிபூதி நிர்வஹணத்தைக்காட்டினவளவன்றியே), பாவியேன்தன்னை- (இவ்வாகாரத்தை அநுபவிக்கப்பெறாத) பாபத்தையுடைய என்னை, அடுகின்ற - (முடிப்பாரைப்போலே) நலிகிற, கமலம் - (நிரதிஶயபோக்யமான) தாமரைபோன்ற, கண்ணது - கண்ணும், ஓர்-அத்விதீயமான, பவளம் - பவளம்போன்ற, வாய் - அதரஶோபையையுமுடைத்தான, மணியே - நீலரத்நம்போலே ஸ்பர்ஶநீயனாய், ஆவியே - (வ்யதிரேகத்தில் தரிக்கவொண்ணாதபடி) ப்ராணபூதனாய், (அவ்வளவன்றியே), அமுதே - (அழிந்த ஸத்தையை உண்டாக்கும் அநவரதபோக்யமான) அம்ருதமாய், (அர்வாசீநாம்ருதத்தில் அபேக்ஷையுடையார்களுக்கும்), அலைகடல்கடைந்தஅப்பனே - அருந்தொழில்செய்து கொடுக்கும் அதிஶயிதோபகாரகனானவனே! (அப்படி ஆயாஸிக்கவேண்டாதபடி), காணுமாறு - கண்டு அநுபவிக்கும்படியாக, அருளாய் - க்ருபைபண்ணியருளவேணும்.

இ.—முதற்பாட்டில், பிரிவில் தரிக்கவொண்ணாதபடி நிரதிசயபோக்யனான நீ, உன்னை நான் காணும்படி க்ருபைபண்ணியருளவேணுமென்கிறார்.

[தேவிமாராவார் திருமகள்பூமி] - அவர்கள் புருவம்நெளிந்தவிடத்தே உனக்குக் கார்யஞ்செய்யவேண்டும்படி வல்லவைகளாயிருக்கிறார் பிராட்டியும் ஆண்டாளும்; "ந கஶ்சிந் நாபராத்யதி" என்று பொறைக்கு உவாத்தாயிருக்கும் ஒருத்தி: "பொறுப்பதெத்தை? குற்றந்தானுண்டோ?" என்று அப்பொறைதான் ஒருவடிவு கொண்டாற்போலேயிருக்கும்ஒருத்தி; ஒருத்திஸம்பத்தாயிருக்கும், ஒருத்திஸம்பத்துக்கு விளைபூமியாயிருக்கும்; அவர்கள் அருகேயிருக்க எனக்கு இழக்கவேண்டுகிறதென்? என்கை. [ஏவல இத்யாதி] - அவனும் அவர்களுமான சேர்த்தியிலே யெடுத்துக் கை நீட்டுவார் நித்யஸூரிகள். [ஏவ] - கைங்கர்யந்தான் உத்தேஶ்யமானவோபாதி, ஏவிக்கொள்ளுகையும் உத்தேஶ்யமென்கை; "க்ரியதாமிதி மாம் வத" மற்றென்று - துல்ய விகல்பத்தையாயிற்று. திருமூலத்தடத்திலே அணைந்தால் பிராட்டிமார்க்கு உள்ள இனிமை, அச்சேர்த்தியிலே கைங்கர்யம்பண்ணப் பெறுகையாலே இவர்களுக்கு உண்டாம்; "ஶ்ரீமாந் நாராயணோ நித்யः": ஸ்வருபாநுரூபமாயிறே ஸாதகங்களிருப்பது; "வேதம் வல்லார்களைக்கொண்டு" என்கிறபடியே, அவர்களும், புருஷகாரபூதராயிறேயிருப்பது. [மேவிய இத்யாதி] - புருஷகாரம் உண்டானாலும் அபேக்ஷிதம் கொடுக்கைக்கீடான ஐஶ்வர்யம் வேணுமிறே. [மேவியவுலகம்] - தகுதியாய்ப் பொருந்தினவுலகமென்னுதல், ஆஜ்ஞாபரிபாலநம் பண்ணுமென்னுதல், [மூன்றவையாட்சி] - பத்தரும், முக்தரும், நித்யஸித்தருமென்னுதல். மேலுங்கீழும் நடுவுமான சதுர்த்தஶ புவநமென்னுதல். [வேண்டுவேண்டுருவம் நின்னுருவம்] - ரக்ஷணத்துக்கு வேண்டினவேண்டின வடிவென்னுதல்; இச்சாக்ருஹீதமான வடிவென்னுதல்; ஆஶ்ரிதர் உகந்தவடிவென்னுதல். [பாவியேன்தன்னை] - புருஷகாரமும் உண்டாய், விபூதியையும் உடையனாய், ஆஶ்ரிதாதீநமான விக்ரஹயோகத்தையு முடையனாயிருக்க, இழக்கைக்குஅடியான பாபத்தைப் பண்ணின என்னை. அந்தமாஹாத்ம்யத்துக்குப் புறம்பாவேனேயென்கிறார். [அடுகின்ற] - முடிகின்ற. "உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்ணன்" என்கிற திருக்கண்களையுடையவனே! [பவளவாய்] - "ஸவிலாஸஸ்மிதாதாரம் பிப்ராணம் முகபங்கஜம்" என்கிற ஸ்மிதத்தையுடையவனே! [மணியே] - விடாயர்முகத்தே குளிர்ந்தநீர்வெள்ளத்தை வெட்டிவிட்டாற்போல ஶ்ரமஹரமான வடிவையுடையவனே! இவைகிடீர் எனக்கு பாதகமாய் நடக்கிறது! [ஆவியே] - ஒரு வாயுவிஶேஷமன்று இவர்க்குப்ராணன்; நாய்ச்சிமாரோடும், விபூதியோடும், திவ்யவிக்ரஹத்தோடுங்கூடின ஸமுதாயிகவஸ்துவாயிற்று இவர்க்கு ப்ராணன். [அமுதே] - தாரகமாத்ரமாயிருக்கையன்றிக்கே, நிரதிஶய போக்யபூதனானவனே! [அலைகடல்கடைந்த அப்பனே] - நிரதிஶயபோக்யனாயிருந்த உன்னை அநாதரித்து, புறம்பே ஓர்உப்புச்சாறு அமையுமென்றிருப்பார்க்கு, உடம்பு நோவக் கடலைக்கடைந்துகொடுக்கும் உபகாரகனே! [காணுமாறருளாய்] - எனக்குக் கடல்கடையவேண்டா, வடிவைக்காட்டவமையும். இவர்க்கு ப்ராப்யம் அம்ருதமன்று காண்கை; உபாயமும் கடல் கடைகையன்று; அருளே. "ப்ராப்யப்ராபகமிரண்டும் ஒன்றே" என்று இருப்பார்க்குக் கார்யம் செய்யலாகாதோ? என்கை.

ஈடு.—முதற்பாட்டு. பிரியில் தரிக்கவொண்ணாதபடி நிரதிஶயபோக்யனான நீ, உன்னை நான் காணும்படி க்ருபைபண்ணியருளவேணு மென்கிறார்.

[தேவிமார் இத்யாதி]-† **“நகஶ்சிந்நாபராத்யதி”** (நகஶ்சிந்நாபராத்யதி) என்பாரும் அருகேயிருக்க, எனக்கு க்லேஶப்படவேண்டுகிறஹேதுவென்? ‡ **“மித்ரமௌபயிகம்”** (மித்ரமௌபயிகம்): ராவணன் பிராட்டி திருமுன்பேநின்று சிலவற்றை ஜல்பிக்கப்புக்கவாறே, ப்ரஜைநலிந்ததென்றாத் தாய் சீறுளிறே! ஜநநியானமுறையாலே, அவன் அநர்த்தங்கண்டு ஹிதமருளிச்செய்கிறாள். “அவர்திருவடிகளிலே ஶரணம்புகு” என்றால், அவன் தாழ்வாகநினைத்து இசையானென்னுமத்தாலே - தோழமைக்கொள் என்கிறாள்; அவர்§ **“மித்ரபாவேந”** (மித்ரபாவேந) என்பர்: இவள் **“மித்ரமௌபயிகம்”** (மித்ரமௌபயிகம்) என்னும். அவ்வருகுபோனாலும் பரமஸாம்யாபத்தியிறே கோடுப்பது. எனக்கு ஶத்ருவாயிருப்பாரோடு உறவுபண்ணவேண்டுகிறதென்? என்னுமே! **“ஸ்தாநம் பரீப்ஸதா”** (ஸ்த்தாநம்பரீப்ஸதா)-கெடுவாய், வழிபறிப்பார்க்கும் தறையிலேகால்பாவி நின்றுகொள்ளவேணுமே: உன் சடியிருப்பை ஆசைப்பட்டாயாகில் இத்தனையுஞ்செய்யவேணும். ‘எனக்கு ஒருகுடியிருப்பும் வேணுமோ? ஆகாஶசாரிகளாயன்றோ இருப்பது நாங்கள்’ என்று அவனுக்கு நினைவாக, **“வதம்சாநிச்சதா”** (வதம்சாநிச்சதா)-அவர்அம்புகள் ஆகாசத்திலே நடவாதோ? **“கோரம்”** (கோரம்) - உன்னைச் சிங்கவிளக்கேரித்துக்கோல்லாதே நற்கொலையாகக் கோல்லும்போதும் அவரைப்பற்றவேணுங்காண். **“த்வயா”** (த்வயா)-பலசோல்லியென்? உனக்கு அவர்வேணும். **“அஸௌ”** (அஸௌ) - அவர்படி உனக்குத்தோற்றுகிறதில்லையோ? உருவுவெளிப்பாட்டாலே முன்னிலை இவளுக்கு: அச்சத்தாலே முன்னிலையாகத்தோற்றும் அவனுக்கு. ‘தீரக்கழிய அபராதம்பண்ணி நிற்கிற என்னைக் கைக்கொள்ளுவரோ?’ என்ன **“புருஷர்ஷப:”** (புருஷர்ஷப:) -

---

*முதற்பாட்டு.—தேவிமார் இத்யாதி. “அமுதே - காணுமாறருளாய்” என்றவற்றைக் கடாக்ஷித்து அவதாரிகை - பிரியில்தரிக்க இத்யாதி.*

*பிராட்டிமாரைச்சொன்ன அநந்தரம், ‘காணுமாறருளாய்’ என்றதுக்கு ஭ாவம்-* **நகஶ்சித்** *இத்யாதி. புருஷகாரத்தின் உறைப்பைக்காட்டுகிறார் -* **மித்ரம்** *இத்யாதி. ஶ்லோகாவதாரிகை -* **ராவணன்** *இத்யாதி. ப்ரதிகூலனானவனுக்கு ஹிதஞ்சொல்லுவானென்? என்ன -* **ப்ரஜை** *இத்யாதி. மேலே “***ஶரணாகதவத்ஸல:***” என்னுமவள், ஶரணம்புகு என்னாதே, “***மித்ரம் - கர்த்தும் - ஔபயிகம்***” என்பானென்? என்ன -* **அவர்திருவடிகளிலே** *இத்யாதி. தங்கள் ஸ்வபாவத்தாலும் சொல்லுகிறாளென்று பரிஹாராந்தரம் -* **அவர் மித்ரபாவேந** *இத்யாதி. அதாவது - “மித்ரபாவேந” என்னுமவர்அபிப்ராயத்தை யறிந்து, “மித்ரமௌபயிகம்” என்னும் என்றபடி. தங்களோடு ஸமராக நினைத்திருப்பர்களென்கைக்கு, இவர்கள் ஸாம்யாபத்திப்ரதரோ? என்ன -* **அவ்வருகு** *இத்யாதி. “***ஸ்தாநம்பரீப்ஸதா***” என்றதுக்கு அவதாரிகை -* **எனக்கு** *இத்யாதி.* **கோள்ளவேணுமே** *- பறிக்கவேணுமே.* **சிங்கவிளக்கேரிக்கை** *- தலையிலே சாணியை வைத்து விளக்கேற்றுகை; வாலிலே பந்தங்கட்டி யெரிக்கையும். ராவணனைப்பார்த்து “***அஸௌ***” என்று காட்டுகிறவளுடைய ஭ாவம் -* **அவர்படி** *இத்யாதி. அவர் அஸந்நிஹிதராயிருக்க, “***அஸௌ***” என்று முன்னிலையாகத் தோற்றக்கூடுமோவென்ன -* **உருவு இத்யாதி வாக்யத்வயம். “ஶிவ-**

---

† *ராமா-யுத்*-116, 44. ‡ *ராமா-ஸுந்*-21, 20. *ராமா-யுத்*-18, 3.

நீசெய்தவற்றை ஒன்ருக நினைத்திருப்பாரோருவரல்லர், புருஷோத்தமர்காண். [தேவி மாராவார் திருமகள்பூமி] - அவர்கள்புருவம் நெளிந்தவிடத்தே உனக்குக் காரியஞ்செய்ய வேண்டும்படி வல்லவைகளாயிருக்கிற பெரியபிராட்டியாரும்ஆண்டாளாரும் †''நகஶ்சிந்நாபராத்யதி'' (நகஶ்சிந்நாபராத்யதி) என்று பொறைக்கு உவாத்தாயிருக்கும் ... '' என்று அந்தப்பொறைவிளையும் பூமி

‡''க்ரியதாமிதிமாம்வத'' (க்ரியதாமிதிமாம்வத): மின்னிமுழங்க வல்லட ... மேகத்வநிபோலே, கம்பீரமாயிறே திருமிடற்றோசைதானிருப்பது. [மற்றமரராட்செய் வார்] - இச்சேர்த்தியில் கிட்டிநின்று அடிமைசெய்வார் நித்யஸூரிகள். மற்றென்பது — துல்யவிகல்பத்தையாயிற்று: திருமுலைத்தடத்திலே அணைந்தால் பிராட்டிமார்க்குண்டான இனிமை இச்சேர்த்தியிலே கைங்கர்யம்பண்ணப்பெறுகையாலே இவர்களுக்கும் உண்டாம்; §''ரமமாணாவநேத்ரய:'' (ரமமாணுவநேத்ரய:) என்கிறபடியே, ஸ்வரூபாநுரூபமாயிறே ஸங்கங்களிருப்பது: பெருமாளுக்கும் பிராட்டிக்கும் அந்யோந்ய ஸம்ஶ்லேஷத்தால் பிறக்கும் ரஸம், இருவருமானசேர்த்தியைக் காண்கையாலே பிறக்கும் இளையபெருமாளுக்கு. [அமரராட்செய்வார்] - ''வேதம்வல்லார்களைக்கொண்டு'' என்கிறபடியே அவர்களும் புருஷகாரபூதராயிறே யிருப்பது. பிராட்டிமாரும் அருகேயுண்டாய், ''மற்று'' என்று அவர்களோடொக்க விகல்பித்துச் சொல்லலாம்படியான நித்ய ஸூரிகளு முண்டானாலும், ஐஶ்வர்யத்திலே குறையுண்டாகில் கார்யஞ்செய்யவொண்ணுதிறேயென்னில்,—[மேவிய இத்யாதி] - கீழும் மேலும் நடுவுமான லோகங்களைச் சொல்லுதல், த்ரிவிதசேதநரையுஞ் சொல்லுதல். [மேவிய] - லோகத்துக்கு இவன் ரக்ஷகனென்ருல் தகும்படியிருக்குமென்னுதல், ராஜ்யந்தான் பொருந்தியிருக்குமென்னு

க்ரீடாவிஜிகீஷா'' இத்யாதி தாதுவாலே க்ரீடாவதிகளென்ருய், வல்லவைகள் என்கிருர். ஹிதம் - நகஶ்சிந் இத்யாதி வாக்யத்வயம். உவாத்தாய்-உபாத்யாயனுய். இருவரையும் சொல்லுகிறதுக்கு பாவம் - அவர்கள் இத்யாதி. கைங்கர்யம் உத்தேஶ்யமானல் தாங்களே செய்யவொண்ணுதோ? ஏவிச்செய்யவேணுமோ? என்ன - கைங்கர்யந்தான் இத்யாதி. அதாவது - பாரதந்த்ர்யம் ஸ்வரூபமாகையாலே, ஏவுகை ப்ராப்தமென்றபடி. அவனுடைய மிடற்றோசை போக்யமாகையாலும் ஏவவேணுமென்று பாவாந்தரம் - மின்னி இத்யாதி. ''திருமகள்பூமி'' என்றவநந்தரம், ''ஆட்செய்வார்'' என்றதுக்கு பாவம் - இச்சேர்த்தியில்இத்யாதி. துல்யவிகல்பமாம்போது பிராட்டிமாருடைய ஸங்கம் இவர்களுக்குமுண்டோ? என்ன - திருமுலைத்தடத்திலே இத்யாதி. உக்தத்துக்கு ப்ரமாணம் - ரமமாணா இத்யாதி. '(த்ரய: - ரமமாணா:'' என்றதுக்கு பாவம்-ஸ்வரூப இத்யாதி வாக்யத்வயம். அமரரைச்சொன்னதுக்கு ப்ரயோஜநமேதென்ன - வேதம் இத்யாதி. யத்வா, ''மற்று'' என்று-துல்யவிகல்பத்துக்கு, போகத்தில் துல்யத்வத்தைக் கீழ் அருளிச்செய்து, புருஷகாரத்வத்தில் துல்யதையாக பாவாந்தரம் - வேதம் இத்யாதி என்னுதல்; ஏதந்நியாமகம் - மற்று என்று அவர்களோடொக்க என்ற மேலில்வாக்யம். ''மேவிய'' இத்யாதிக்கு அவதாரிகை - பிராட்டிமாரும் இத்யாதி. ரக்ஷகனென்றல் - ஆளுகிறவனென்ருல் என்றபடி. முந்தின அர்த்தத்தில், ''மேவிய'' என்றது - ஆட்சிக்கு விஶேஷணம். முந்தின அர்த்தத்துக்கு ப்ரமாணம் - ஜெத்ரு

† ராமா-யுத்-116, 44. ‡ ராமா-ஆரண்ய-15, 7. § ராமா-ஸங்க்ஷேபே-ங-க,

தல். "த்ரைலோக்யமபி நாதேந யேந ஸ்யாந்நாதவத்தரம்" (த்ரைலோக்யமபி நாதேநயேநஸ்யாந்நாதவத்தரம்) — த்ரைலோக்யத்தையும் கையடைப்பாக்கினுலும், ரக்ஷ்யம் சுருங்கி ரக்ஷகத்வப்பாரிப்பே விஞ்சியிருக்கும். [வேண்டுவேண்டுருவம் நின்னுருவம்]- அவ்வோரக்ஷணத்துக்கு வேண்டினவேண்டினவென்னுதல்; * இச்சாக்ருஹீதமென்னுதல்; ஆஶ்ரிதர் உகந்தவற்றையே தனக்குத் திருமேனியாகக்கொள்ளுமென்னுதல். [பாவியேன்தன்னை] - புருஷகாரமுண்டாய், விபூதியையுமுடையனாய், ஆஶ்ரிதாதீநமான விக்ரஹத்தையு முடையனாயிருக்க, இழக்கைக்கடியான பாபத்தைப்பண்ணின என்னை, அந்த மாஹாத்ம்யத்துக்குப் புறம்பாவேனே! என்கிறார். [அடுகின்ற] - முடிகின்ற. † உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்ணையுடையவனே! [பவளவாய்] - "ஸவிலாஸஸ்மிததாரம் பிப்ராணம் முகபங்கஜம்" (ஸவிலாஸஸ்மிததாரம்பிப்ராணம்முகபங்கஜம்) என்கிற ஸ்மிதத்தையுடையவனே! [மணியே] - விடாயர்முகத்தே குளிர்நீர்வெள்ளத்தை வெட்டிவிட்டாற்போலே ஶ்ரமஹரமானவடிவையுடையவனே! இவைகிடீர் எனக்கு பாதகமாகிறது; [ஆவியே] - ஒரு வாயுவிஶேஷமன்று இவர்க்கு ப்ராணன்; நாய்ச்சிமாரோடும் நித்யஸூரிகளோடுங்கூடிக் கண்ணும் வாயும் வடிவுமாயாயிற்று இவருடைய ஆவியிருப்பது. [அமுதே] - தாரகமான ப்ராணனாய், போக்யவஸ்துவைப் புறம்புதேடவேண்டாதே போக்யமும் தானேயாயிருக்கை. போக்யமும்தானானால் ஸாதித்துக்கொள்வார் இவரன்றிக்கே உபாயமும்தானேயாயிருக்கை. [அலைகடல்கடைந்தவப்பனே] - ப்ரயோஜநாந்தரபரர்க்கும் அரியனசெய்து அபேக்ஷிதங்களைச்செய்யும் உபகாரகனே! உமக்குச்செய்யவேண்டுவதேன்? என்ன,

---

ப்ர. — [மேவியவுலகம் மூன்றவையாட்சி] — ஸ்வாம்யாகாரேண [உ] பட்டா-
பிஷேகஸ்நாநாதேஸ்வராய: — யதாவதாபிஷேகார்ஹத்வேந தஃ பாரமேஷ்
ட்யஜ்ய ॥ கஉ ॥ ஸந்நித்வஸ்தேநாயோபக்ஷீவாத் பக்ஷணாஜ்ஜஃ ॥ த்ரைலோ
க்யமபி நாதேந யேந ஸ்யாந்நாதவத்தரம் ॥ கங ॥ ஸநேநஶ்ரியஸாஸத்வஸ்யோஜ்
யஹீதோ ॥ மதக்லேஶாஹவிஷ்யாதிஸந்தேதவஸ்திவேஶ்யவோகச ॥

---

லோக்யம் இத்யாதி. "நாதவத்தரம்" என்றதுக்கு அர்த்தம் - த்ரைலோக்யத்தையும் இத்யாதி. "இச்சாக்ருஹீதம்" என்ற த்விதீயார்த்தத்துக்கு, "வேண்டுவேண்டுருவம்" என்று - மூழச்சொல்லாய், எப்போதுமொக்க வேண்டினவுருவ மென்றபடி மூன்றாமர்த்தத்துக்கு, ஆஶ்ரிதர்வேண்டினரூபமே உனக்குவேண்டினரூபமாயிருக்கு மென்றபடி. "பாவியேன்" என்றதுக்கு - கீழில் பதங்களைக்கடாக்ஷித்து அர்த்தம் - புருஷகாரம் இத்யாதி. "மேவிய" இத்யாதியைக்கடாக்ஷித்து, "பாவியேன்" என்றதுக்கு அர்த்தாந்தரம் - அந்த மாஹாத்ம்ய இத்யாதி. "கமலக்கண்ணதோர்" என்றதுக்கு அர்த்தம் - உயிர்க்கெல்லாம் இத்யாதி. கீழெல்லாம் சொன்ன வநந்தரம், "ஆவி" என்றதுக்கு அர்த்தம் - ஒருவாயு இத்யாதி வாக்யத்வயம். "அலைகடல்கடைந்தவப்பன்" என்றதுக்கு அவதாரிகை - போக்யமும் இத்யாதி. இப்பதத்தில் "உபாயமும்தானே" என்று தோற்றுகிறதோவென்ன - ப்ரயோஜநாந்தரபரர்க்கு இத்யாதி. அத்தேவதைகளைப்பற்றத் தமக்கு வ்யாவ்ருத்தி அருளிச்செய்கிறார் - எனக்கு இத்யாதி, "காணுமாறு, அருளாய்" என்கிற பதத்வயஃபலிதஹாவம் - வடிவை இத்யாதி வாக்யத்வயம். தேவதைகளில் தமக்குண்டான வ்யாவ்ருத்தியை அருளிச்செய்கிறாராதல், ஃபலிதமாதல் - ப்ராப்யப்ராபகங்கள் இத்யாதி. "த்ரைலோக்யமபி நா

---

† இந்த ஈட்டின் பங்க்தியைப் பார்க்கும்போது 'கமலக் கண்ணவோர் பவள வாய் மணியே' என்று பாடமிருக்குமோ என்று தோன்றுகின்றது.

[காணுமாறருளாய்]- எனக்குக் கடல்கடையவேண்டா, அவ்வடிவைக்காட்ட அமையும். வடிவைக்காண்கை - ப்ராப்யம், அருள் - ப்ராபகம். ''ப்ராப்யப்ராபகங்கள் நீயே'' என்றிருப்பார்கார்யம் செய்யலாகாதோ ? (க)

## ரண்டாம் பாட்டு

காணுமாறருளாயென்றென்றேகலங்கிக் கண்ணநீரலமர வினையேன்
பேணுமாறெல்லாம்பேணி நின்பெயரேபிதற்றுமாறருளெனக்கந்தோ !
காணுமாறருளாய்காகுத்தா! கண்ணா! தொண்டனேன்கற்பகக்கனியே !
பேணுவாரமுதே! பெரியதண்புனல்சூழ் பெருநிலமெடுத்தபேராளா !

ஆ.—[காணுமாறருளாய்.] – இப்படி, காணுமாறருளா யென்றென்றே கலங்கிக் கண்ணநீரலமர வினையேன், இதற்குமேல் இல்லையென்னும்படி ஆசைப்பட்டாலும், உன்திருநாமங்களையே சொல்லிக் கூப்பிடப்பெறும் இதுவோ எனக்கருளும் அருள்! இங்ஙனன்றிக்கே, காணுமாறருளாய். காணவொண்ணுமோ? என்னில்,—காணவேணுமென்று அபேக்ஷித்தார்க்கு, சக்ரவர்த்தித்திருமகனும்ஸ்ரீவஸுதேவர் திருமகனும் வந்து திருவவதாரம்பண்ணியன்றோ உன்னைக் காட்டிக்கொடுத்தருளிற்று? நெஞ்சாலே அநுபவிக்கலாம்படி உன்னை எனக்கு போக்யமாகத் தந்தருளின பரமோதாரனல்லையோ? மற்றும் ஆசைப்பட்டாரெல்லார்க்கும் உன்னை போக்யமாகக் கொடுக்குமவனல்லையோ? மஹார்ணவாந்தர்நிமக்நமான ஜகத்தையெடுத்து ரக்ஷித்தருளின பரமகாருணிகனல்லையோ? காணுமாறருளாய் என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், ''என்றுங்காணவேணும்'' என்று மிகவும் நோவுபட்டிருக்குமிருப்போ என்திறத்துச்செய்தருளப் பார்த்தருளிற்று? ஐயோ ! இங்ஙனேபடாமே உன்னைக்காணும்படி க்ருபைபண்ணியருளவேணும்! என்கிறார்.

[காணுமாறென்று தொடங்கி] - காணுமாறு அருளாய் என்று நிரந்தரமாகச் சொல்லாநின்றுகொண்டு அந்த காருணத்வநிவழியே ஹ்ருதயம் கலங்கிக்கலங்கின ஹ்ருதயத்துக்குப் போக்குவிட்டாற்போலே மிகவும் கண்ணநீர்வரும்படி உன்னைக்காணாதே இப்படிக்லேசப்படுகைக்கிடான பாபத்தைப்பண்ணின நான்தேடும்படியெல்லாம்தேடிஉன்னைப்பெறாதவ்யஸநத்தாலே உன்னுடைய திருநாமங்களைப் பிதற்றும்படியான இதுவோ நீஎனக்குப்பண்ணும் க்ருபை ? [காகுத்தாவென்று தொடங்கி] - அர்த்திகளுடைய ஸர்வாபேக்ஷிதமும் கிடைக்கும் ககுத்ஸ்தகுலத்திலே வந்துபிறந்தருளி, அதுக்குமேலே அங்குப்பெறாதனவும் பெறலாம்படி க்ருஷ்ணனாய்வந்து திருவவதாரம்பண்ணி சபலனான எனக்கு அயத்நஸித்தபோக்யனானவனே ! [பேணுவாரென்று தொடங்கி] - உன்னையாசைப்பட்டார்க்கு நிரதிசயபோக்யனாய், உன்னையாசைப்படுதல் தன்ஆபத்தை உனக்கறிவித்தல் செய்யமாட்டாதேயிருந்த ஜகத்தை ப்ரளயார்ணவத்தினின்றும் வெறும் உன்க்ருபையாலே எடுத்தபெரியோனே!

---

யெநயெநஸ்ராணாயவந்தஸ்ய । கநெநஶ்ரேயஸாஸஂயோஜ்யஸெஹீஜோஸ்ய'' ஐதந்யொஸ்ரகாஷெ, உஶஸயஃ. ''ஸவிஶாஸ'' இத்யாதி (ஸ்ரீவிஷ்ணுபுராணே) 'வஹ ஜெஂஶெஶ (17,21.) (க)

ப.—அநந்தரம், "வேண்டுவேண்டுருவம் நின்னுருவம்" என்றுசொன்ன அவதார விக்ரஹபோக்யதையை அநுஸந்தித்து, நான் க்லேஶியாதபடி கண்டு அநுபவிக்கும்படி க்ருபைபண்ணியருளவேணுமென்கிறார்.

காணுமாறு - காணும்படி, அருளாய்-க்ருபைபண்ணவேணும், என்றென்று - என்று பலகாலுஞ்சொல்லி, கலங்கி - (காணப்பெறாமையாலே) கலங்கி, கண்ணநீர் - கண்ணினுடைய நீர், அலமர - பரவாநிற்க, வினையேன் - காணப்பெறாத பாபத்தையுடையேனான நான், (உன்னை ஆசைப்பட்டும் நீ ஆதரியாதவளவில்), பேணும் - (ஆத்மாத்மீயங்களையும் இழந்தும் பலகாலும் ஶரணம்புக்கும் மோஹித்தும் இப்படி) ஆதரிக்கும், ஆறு - ப்ரகாரம், எல்லாம் - எல்லாம், பேணி - ஆதரித்து, (அவ்வளவிலும் கிடையாமையாலே), நின் - உன், பெயரே - திருநாமங்களையே, பிதற்றுமாறு - சொல்லிக் கூப்பிடும்படியாகவிறே, எனக்கு — எனக்கு(ப்பண்ணின), அருள் - அருள்; அந்தோ - ஐயோ! (ஆஶாலேஶமுடையாரும் அநவரதமநுபவிக்க, எனக்கு இப்படி பலித்தது! ஆனபின்பு), காகுத்தா - ககுத்ஸ்த வம்ஶத்திலே பிறந்து (காட்டோடு நாட்டோடு வாசியறக் காட்சிகொடுக்குமவனாய்), கண்ணா - க்ருஷ்ணனாய் அவதரித்து (பெண்பிறந்தாரெல்லாரும் கண்டநுபவிக்கும்படி எளியனாய்), (இவ்வளவன்றியே); தொண்டனேன் - சபலனான எனக்கு, கற்பகம் - (நீதானே உன்னை ப்ரகாஶிப்பித்த) ஔதார்யத்தையுடையையாய், கனியே-(அப்போதே நுகரவேண்டும்படி)பக்வபலபூதனாய், பேணுவார் - ஆசையுடையார்க்கு, அமுதே - ஸத்தாஹேதுவான நித்யபோக்யமாய், பெரிய-அபர்யந்தமாய், தண் - ஶீதளமான, புனல் — ப்ரளயஜலத்திலே, சூழ் - அழுந்தின, பெருநிலம் — மஹாப்ருதிவியை, எடுத்த - எடுத்த, பேராளா - மஹாபுருஷனே! (முழுகவும்மீட்கவும்வேண்டா); காணுமாறு - (நான்) கண்டு அநுபவிக்கும்படி, அருளாய் - க்ருபைபண்ணியருளவேணும்.

இ.—இரண்டாம்பாட்டில், "காணவேணும் என்று மிகவும் நோவுபட்டிருக்குமிருப்பேயோ என் திறத்தில் செய்யப்பார்த்தது? நான் இங்ஙனேபடாமே உன்னைக்காணும்படி க்ருபைபண்ணியருளவேணும்" என்கிறார்.

[காணுமாறருளாய்] - "அலைகடல்கடைந்த அப்பனே! காணுமாறருளாய்" என்னச்செய்தே காணப்பெறாதேயிருக்க, பின்னையும் "காணுமாறருளாய்" என்கிறானிறே. காண்கைக்கு ஒருப்ரவ்ருத்தி பண்ணுமவரல்லரே. வர்ஷதாரையாலல்லது தரியாத சாதகம்போலே அருளல்லது அறியாதவர்; ப்ரவர்த்திக்கைக்குத் தாம் ஶக்தரானாலும், ப்ராப்தியில்லை என்றிருக்குமவர். [என்றென்றே] - அநவரதம் இத்தையே சொல்லாநிற்பர். ஒருகால்சொன்னால் வரக்காணாதொழிந்தால், வேறொரு புகலுண்டாகில் அன்றே அத்தைப் பற்றலாவது? [கலங்கி] - இப்படி கூப்பிட்டு ஒருபடிப்படச் சொல்லாநின்ற வந்த ஊருணத்வநிவழிய ஹ்ருதயத்திலேபிறந்த கலக்கம் ஒருகாலைக்கொருகால் ஏறிவாராநின்றது. "ஜஹிமம்வீரவஸநஞ்ச". [கண்ணநீரலமர]- அகவாயிற் கலக்கம் உள்ளடங்காமை கண்ணநீராய்ப் ப்ரவஹியாநின்றது. [வினையேன்] - இதுக்குமுன்பு அவ்விஷயத்தைப்பற்றினார்க்குக் கலக்கமும் கண்ணநீருமில்லைகிடீர்! ஆஶாலேஶமுடையார் காற்கடையிலே துவளக்கடவ தத்த்வத்தைப்பெறுகைக்கு நான் இங்ஙனே கூப்பிடும்படியான பாபத்தைப் பண்ணினேன். [பேணுமாறெல்லாம் பேணி] - முதலிலே அயோக்யனென்று அகன்று, "அவன்விரும்பாத நானும் என்னுடைமையும் எனக்கு

வேண்டா" என்று ஆற்றாமையாலே மடலிலேகைவைத்து, பலபடியும் ப்ரபத்திபண்ணி, ப்ரணயரோஷம் தலையெடுத்துக் கிலாய்ப்பதும் செய்தவிடத்திலும். [நின்பெயரே பிதற்றுமாறருள் எனக்கு] - எனக்கருள் உன்பெயரே பிதற்றுமாறுய்விட்டது. உன்னைப்பெறாத வ்யஸநத்தாலே உன்னுடைய திருநாமங்களை அக்ரமமாகச்சொல்லிக் கூப்பிடும் இதுவோ நீ எனக்குப்பண்ணும் க்ருபை? நீசவிஷயங்களை ஆசைப்பட்டுக் கூப்பிடுமத்தைத் தவிர்த்து, நம்மையொழியச் செல்லாமைவிளைத்து, நம்மைப் பேர்சொல்லிக் கூப்பிடும்படி பண்ணினோமேயென்றன்றோ இருக்கிறது? ஸம்ஸாரிகளிற்காட்டில் வ்யாவ்ருத்தியோ எனக்கு வேண்டுவது? என் அபிமதம் பெறவேண்டாவோ? [அந்தோ] - உன்னை நீ பிரிந்தறியாய்; பிரிந்தாரைக்கண்டறியாய்; நித்யஸூரிகள் பிரிந்தறியார்கள். ஸம்ஸாரிகள் பிரிவறியார்கள்; இவ்வாற்றாமையையுடையார் இவரொருவருமேயாயிற்று. [காணுமாறருளாய்] - திருவாறன்விளையைத் திருநகரியிலேயணித்தாக்குதல், நான் கால்நடைதந்துபோய்ப் புகவல்லேனும்படி பண்ணுதல் செய்யாய்! 'இப்படி நாமெங்கே செய்யக்கண்டு நிர்பந்திக்கிறீர்?' என்ன,—[காகுத்தா]- ககுத்ஸ்த வம்சத்திலே அவதரித்து உன்வடிவை எல்லார்க்கும் காட்டிற்றில்லையோ? "ராகவ ஸம்ஹநநம் ..." "...ஸம்ஸ்வாபாமி" என்னும்படியன்றோ? [கண்ணா] - ருஷிகளுக்கேயன்றிக்கே "தாஸோ..." என்று இடைப்பெண்களுக்கு உன்னைக் காட்டிற்றிலையோ? [தொண்டனேன் கற்பகக்கனியே] - எனக்கு உபகரித்ததுகிடக்க, பழங்கிணறு கண்வாருகிறதேன்? விஷயாந்தரங்களிலே சபலனான என்னை அத்தைத்தவிர்த்து நீயே வந்து உன்னை எனக்கு ஸர்வஸ்வதாநம்பண்ணினவனே! அயத்நஸித்தபோக்யனானவனே! [பேணுவார்அமுதே] - உன்பக்கல் ஆஸாலேஶமுடையார்க்கு நிரதிஶயபோக்யனானவனே! கலங்குகையும், அக்ரமமாகக் கூப்பிடுகையும் மிகையாம்படியன்றோ உன்படியிருப்பது? [பெரிய இத்யாதி] - ஆர் உன்னைப்பேணி, ப்ரளயங்கொண்ட ஜகத்தையெடுத்து ரக்ஷித்தது? ப்ரளயார்ணவம் சூழ்ந்த மஹாப்ருதிவியை யதினின்றும் உத்தரித்த பெரியோனே! உன்னை ஆசைப்படுதல், ஆபத்தையறிவித்தல் செய்யமாட்டாத ஜகத்தையன்றோ ரக்ஷித்தது? நீ யறிய ஆபத்துண்டாமத்தனையன்றோ ரக்ஷிக்கைக்கு வேணுவது? [பேராளா] - ரக்ஷ்யத்தினளவல்லாதபடியான ரக்ஷகனுடைய பாரிப்பு.

ஈடு.—இரண்டாம்பாட்டு. காணவேணுமென்று மிகவும் நோவுபட்டிருக்கும் இருப்பேயோ என்திறத்துச் செய்தருளப் பார்த்தது? நான் இங்ஙன்படாமே உன்னைக் காணும்படி க்ருபை பண்ணியருளவேணு மென்கிறார்.

[காணுமாறருளாய்] - ஒருகால் "காணுமாறருளாய்" என்றால், அப்போதே செய்யக் காணவிட்டால், "நாமே ப்ரவர்த்தித்துப் பெறுகிறோம்" என்றிருக்குமவரன்றே. வர்ஷதாரையாலல்லது பரியாத சாதகம்போலே அவனருளே பார்த்திருக்குமவராகை

---

இரண்டாம்பாட்டு.—காணுமாறு இத்யாதி. "பிதற்றுமாறருளெனக்கு - காணுமாறருளாய்" என்றவற்றைக் கடாக்ஷித்து அவதாரிகை - காணவேணும் இத்யாதி.

மீளவும் "காணுமாறருளாய்" என்றது ஆற்றாமையின் அதிசயமென்கிறார் - ஒருகால் இத்யாதி. எதுபோலேயென்ன - வர்ஷதாரையால் இத்யாதி. வீப்ஸைக்கும் அவதாரணத்துக்கும்

யாலே, திரியட்டும் ''காணுமாறருளாய்'' என்கிறார். [என்றேன்றே]-பலகாலும் வார்த்தை இதுவே. ''புறம்பேயும் ஒருபுகலுண்டு'' என்றிருக்கிலிறே அத்தைப் பற்றுவது. [கலங்கி] - கலக்கமேயாயிற்று ஏறிவருவது;†''ஜடிலம்சீரவஸநம்'' (ஜடிலம்சீரவஸநம்). [கண்ண நீரலமர] - நிரம்பின ஏரிகளுக்குப் பரீவாஹம்போலே, கலங்கினகலக்கம் உள்ளடங்காமல் கண்ணநீராய் ப்ரவஹியாநிற்கும். [வினையேன்] - இதுக்குமுன்பு இவ்வவஸ்துவைக்காண ஆசைப்பட்டாரில் கலங்கிக் கண்ணநீர்பாய்ந்துஅறிவாரில்லைகிடீர்! ''காணவேணும்'' என்கிற ஆஸாலேஸமுடையார்க்குத் தன்னைக்காட்டி அவர்கள் கண்ணநீரையுந் துடைக்கு மவனை ஆசைப்பட்டுக் கிடையாதே, கண்ணுங்கண்ணநீருமாம்படியான பாபத்தைப் பண்ணினேன். [பேணுமாறேல்லாம்பேணி] - பேணுகை - ஆசைப்படுகை. முதலிலே அயோக்யன் என்று அகன்று, ''அவன் விரும்பாத நானும் என்னுடைமையும் எனக்கு வேண்டா'' என்று ஆற்றாமையாலே மடலெடுக்கையிலே கைவைத்து, பலபடியும் ப்ரபத்தி பண்ணி, ப்ரணயரோஷம் தலையெடுத்துக் கிலாய்ப்பதுஞ் செய்தவிடத்திலும். [நின்பெயரே பிதற்றுமாறருளெனக்கு]-நீஎனக்கு அருளப்பார்த்தபடி, நின்பெயரே பிதற்றுமாறாய்விட்டது; உன்னைப்பெறாத வ்யஸநத்தாலே உன்னுடைய திருநாமங்களைச்சொல்லி அக்ரமமாகக் கூப் பிடும்படியோ நீ எனக்குப் பண்ணும் க்ருபை? 'நீசவிஷயங்களை ஆசைப்பட்டுக் கூப்பிடு மது தவிர்ந்து நம்பேரைச்சொல்லிக் கூப்பிடும்படி பண்ணினோமாகில் இனியேன்?' என் றிருக்கிறாயோ? ஸம்ஸாரிகளில் வ்யாவ்ருத்தியோ எனக்குவேண்டுவது? என் அபிமதம் பெறவேண்டாவோ? [வினையேன் பேணுமாறேல்லாம்பேணி] - பேணுதல் - ஆசைப்படு தல். ஆசைப்படும் வழியெல்லாம் ஆசைப்பட்டு. பலவழியுண்டோ ஆசைப்பாட்டில் என் னில்? - உண்டு; வகுத்த விஷயத்திலாசை, அபிமதவிஷயத்திலாசை. இவர்க்கு வகுத்த விஷயம் அபிமதமாயிருக்கும். வகுத்தவிஷயத்திலாசை க்ரமமாயிருக்கும், அபிமதவிஷ யத்திலாசை வரம்பழிந்திருக்கும். வகுத்தவிஷயத்தி லாசைக்கு, அவனைக் கால்கட்டக் கிடைக்கும்; அதுவும் செய்தாரிறே: ''நோற்றநோன்பு,'' ''ஆராவமுது,'' ''மானேநோக்கு,''

ஸாவம் - பலகாலும் இத்யாதி. வேறுவார்த்தையில்லையோ? என்ன - புறம்பேயும் இத்யாதி. ''காணுமாறருளாயென்றென்றேகலங்கி'' என்றத்தாலே-ஆகிஞ்சந்யஅநந்யகதித்வம் சொல்லுகிறது. இன்னகாலம் கலங்கி என்னுமையாலே - ஏறிவருவது என்றது. கலங்குகை - து:கப்படுகை. இப் படி கலங்கினார் உண்டோ? என்ன - ஜடிலம் இத்யாதி. விஸ்லேஷமுண்டானால் கண்ணநீர்பாய் கிறது எல்லாருக்கும் ஸஹஜமாயிருக்க, தம்மை ''வினையேன்'' என்றுசொல்லுவானென்? என்ன, அருளிச்செய்கிறார் - இதுக்குமுன்பு இத்யாதி. விவரணம் - காணவேணும் இத்யாதி. ஆசாலேஸ முடையார்க்கு என்றது - ஸ்ரீகஜேந்த்ராழ்வான், ஸ்ரீகோபிமார் முதலானோரை. ''பேணுமாறெல் லாம்பேணி-'' ஆசைப்படும் ப்ரகாரமெல்லாம் ஆசைப்பட்டு. ப்ரகாரமேதென்ன - முதலிலே இத் யாதி. ''எனக்கு - அருள் - நின்பெயரேபிதற்றுமாறு'' என்று அந்வயித்து அர்த்தம் - நீ எனக்கு இத்யாதி. விவரணம் - உன்னைப்பெறாத இத்யாதி. ஹார்த்தபாவம் - நீசவிஷயங்களை இத்யாதி. இதுதானே போராதோ உமக்கு உபகாரம்?என்ன- ஸம்ஸாரிகளில் இத்யாதி வாக்யத்வயம். அபி மதமாவது - ஸாக்ஷாத்காரம். ''ஆறு'' என்றதுக்கு - கீழே, ப்ரகாரமாகச்சொல்லி, இங்கே, வழி யென்று அர்த்தாந்தரம் - ஆசைப்படும் வழி இத்யாதி. இவர்க்கு இரண்டும் பிந்நமாயிருக்குமோ? என்ன - இவர்க்கு இத்யாதி. த்விவிதவிஷயத்தில்ஆசைகளுக்கும் பேதமேதென்ன - வகுத்தவிஷ யத்தில் இத்யாதி. இவ்விரண்டும் தீரும் ப்ரகாரமேதென்ன - வகுத்தவிஷயத்திலாசைக்கு இத் யாதி. அன்றிக்கே, க்ரமமாயிருக்கும்படி யென்? என்ன - வகுத்தவிஷயத்தி லாசைக்கு இத்யாதி

† ராமா. அயோ. 100, 1.

"பிறந்தவாறு," "உலகமுண்டபெருவாயன்" இவற்றிலே. அபிமதவிஷயத்தி லாசைக்கு, அபிமதன்பாடேறத் தூதுவிடுகை தொடக்கமாக மடலெடுக்கை கமுடிவாகத் துணிகை; அவையுமெல்லாம் செய்தாரிறே "அஞ்சிறையமடநாரை" தொடக்கமாக, "மாசறுசோதி," "வைகல்பூங்கழிவாய்," "பொன்னுலகாளீர்" இத்யாதிகளிலே. இப்படி பேணுமாறெல்லாம் பேணியும், நின்பெயரே பிதற்றுமாறே நீ எனக்குஅருளும்அருள் என்கிறார். [அந்தோ]- உன்னை நீ பிரிந்தறியாய், பிரிந்தாரைக் கண்டறியாய். நித்யஸூரிகள் பிரிந்தறியார்கள், ஸம்ஸாரிகள் பிரிவறியார்கள்; இவ்வாற்றாமை யுடையேன் நானொருவனுமே யாயிற்று. [காணுமாறருளாய்] - திருவாறன்விளையை அணித்தாக்குதல், எனக்கு அவ்வளவும் கால்நடைதருதல் செய்யும்படிபண்ணாய். இப்படி நீர் எங்கே அருளக்கண்டு நிர்ப்பந்திக்கிறீர்? என்ன, - [காகுத்தா]- "கஃகூஸுவம்ஶவிஃவாஃஷுயாஃதி." (ககுத்ஸ்த்தவம்ஶேவிமுகாஃப்ரயாந்தி) "ரூவஸஂஹநந" (ரூபஸம்ஹநநம்) - ஸம்ஸ்த்தாநந்தன்னை "லக்ஷீஂ" (லக்ஷ்மீம்) - ஸமுதாயஶோபையை. "ஸௌகுமாய்" (ஸௌகுமார்யம்) -அநுகூலர்க்கும் அடுத்துப்பார்க்கப் பொறுதிருக்கை. "ஸுவேஷதாஂ" (ஸுவேஷதாம்) - தாபஸவேஷம். "ஶஃஶுவிஸ்மிதாகாராஃ" (தத்ருஶுர்விஸ்மிதாகாராஃ)- விஸ்மிதாந்தஃகரணராய்க்கொண்டு கண்டார்கள். ஆர்தான்? என்னில்,-"வநவாஸிநஃ" (வநவாஸிநஃ) - படைவீட்டிலுள்ளார் காணப்பெறுதத்தைச் சருகிலேதின்று தூற்றிலே கிடந்தவர்கள் பெற்றார்கள். 'அது ஒருகாலம் அங்ஙனேசெய்து போனோமாகில், அதுகொண்டு வளைக்கிறீரோ'? என்ன?- [கண்ணா]- ருஷிகளுக்கேயன்றிக்கே, †"தாஸாமாவிரபூத்" (தாஸாமாவிரபூத்) என்று இடைச்சிகளுக்கும் இடையர்க்கும் காட்டிற்றிலையோ? புறம்பு தேடிப்போகிறதென்? [தொண்டனேன் கற்பகக்கனியே] - ஶப்தாதிவிஷயங்களிலே அந்யபரனாய், அவற்றிலே சபலனாய்த்திரிகிற என்னை, அத்தைத் தவிர்த்து உன்னை ஸர்வஸ்வதாநம்பண்ணினவனே! [பேணுவாரமுதே] - நீயேவந்து மேல்விழாநின்றால் "அல்லோம்" என்னுதார்க்கு நிரதிஶயபோக்யனானவனே! [பெரிய இத்யாதி] - ஆர் உன்னைப்பேணப் ப்ரளயங்கொண்ட ஜகத்தை எடுத்து ரக்ஷித்தது? ப்ரளயார்ணவஞ்சூழ்ந்த மஹாப்ருதிவியை அதினின்றும் உத்தரித்த பெரியோனே! உன்னைஆசைப்படுதல், ஆபத்தை யறிவித்தல்

---

என்னுதல். வரம்பழிந்திருக்கும்படி யென்? என்ன - அபிமதவிஷயத்தில் இத்யாதி. இப்படி சொன்னவிடத்திலும் உதவாமையாலே விஷண்ணராகிறவருடைய விஷாதத்தை த்வேதா அருளிச்செய்கிறார்-உன்னை நீ இத்யாதி வாக்யத்வயத்தாலே. பிரிந்தாரைக் கண்டறியானோ? என்ன- நித்யஸூரிகள் இத்யாதி வாக்யத்வயம். ஆனபின்பு, விஶ்லேஷவ்யஸநம் எனக்கே உள்ளதென்கிறார் - இவ்வாற்றாமை இத்யாதி. அருளும்ப்ரகாரமேதென்ன - திருவாறன்விளை இத்யாதி. ககுத்ஸ்த்தவம்ஶத்திலே பிறந்தால் அர்த்திகள் கார்யம் செய்யவேணுமோ? என்ன - கஃகூஸுவஂஶ இத்யாதி. "நிவெஷாகாவெஶவிநவெஂஷூகநூாஂ ஷுயஷு வெஶவாணயஂவிஹாக்ஷிஃ। நஹூயிஷுநஃ காரூவஶாஹாவெதாஃ கஃகூஸுவஂஶவிஃவாஃஷுயாஷி" இதிவிஷணுவாராணெ, ஶஙாதாரஂஷுதி கநூாயீஷுவௌஹாரிஃ. (உ-நக) அப்படிஆருக்குக்காட்டினோம்என்ன-ரூவஸஂஹநநஂஇத்யாதி. ஆரண்யகாண்ட (க-கங). "திலம்" என்ற அசேதநஸமாதிக்கு ஸாவம்-ஆர்உன்னை இத்யாதி.வாக்யவிவரணம்-உன்னை ஆசைப்

---

† ஸ்ரீபாகவதே. 10, 32, 2.

செய்யமாட்டாத ஜகத்தையன்றே ரக்ஷித்தது? நீ அறிய ஆபத்துஉண்டாமத்தனையன்றே ரக்ஷிக்கவேண்டுவது? [பேராளா] - ரக்ஷ்யத்தினளவல்லாத ரக்ஷகனுடைய பாரிப்பு. (உ)

---

## மூன்றாம் பாட்டு.

---

**எடுத்தபேராளன்நந்தகோபன்தன் இன்னுயிர்ச்சிறுவனே! அசோதைக்கு**
**அடுத்தபேரின்பக்குலவிளங்களிறே! அடியனேன்பெரியவம்மானே!**
**கடுத்தபோரவுணனுடலிருபிளவாக் கையுகிராண்டஎங்கடலே!**
**அடுத்ததோருருவாய்இன்றுநீவாராய் எங்ஙனந்தேறுவர்உமரே?**

*ஆ.—(எடுத்த)-அயத்நேந நிதியெடுத்தாற்போலேஎடுத்து அநுபவிக்கலாம் படி ஸ்ரீநந்தகோபர்க்கும், யசோதைப்பிராட்டிக்கும் பரமஸாலபனைப், ஸ்ரீப்ரஹ்லாத ப்ரதிஜ்ஞாஸமய ஸம்பூதனைப், தத்விரோதபஸாரநிரஸநோசித ஸ்ரீந்ருஸிம்ஹரூபனைப், நவராங்குரகோடிவிதாரித தத்புஜாந்தரனைப், தத்விதாரணஹேதுபூதநிரவதிகஆஸ்ரித வாத்ஸல்ய மஹோததியா யிருந்துவைத்து, ஆஸ்ரிதனென எனக்கு அரியையாய் இன்று நீ வருகிறிலை; வாராதொழிந்தால், உன்னுடைய ஆஸ்ரித வாத்ஸல்ய குணைகதாரகரான ஆஸ்ரிதஜநங்கள் எங்ஙனேதரிக்கும்படி? என்கிறார்.*

*ஒ.—மூன்றாம்பாட்டில், ஆஸ்ரிதஸாலபனையிருக்கிற நீ, இன்று வந்து என் ஆபத்தை நீக்காதொழியில், உன்குணமே ஜீவநமாயிருக்கும் உன்னுடையார் எங்ஙனே தரிக்கும்படி? என்கிறார்.*

*[எடுத்த என்றுதொடங்கி] - நிதியெடுத்தாற்போலே உன்னையெடுத்துக் கொண்ட பாக்யாதிகரான ஸ்ரீ நந்தகோபருடைய ஈற்சிவனை சிறுவனே! [அசோதைக்கு என்றுதொடங்கி] - யசோதைப்பிராட்டிக்கு வருத்தமின்றிக்கே கிட்டுவதுஞ் செய்து அவர்களுக்குப் பேரின்பத்தை விளைக்கும் ஸ்வபாவனைப் இடைக்குலத்துக்கு ஆனைக்கன்றுபோலே ப்ரகாசயனைவனே! [அடியனேன் பெரிய அம்மானே]-எனக்கு எட்டவொண்ணாத ஈஸ்வரனைவனே! [கடுத்த என்றுதொடங்கி] - ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வானுக்காக அப்போதைக்கு யோக்யமான வடிவைக்கொண்டு யுத்தசண்டதிதையை யுடைய ஹிரண்யனுடைய உடல் இருபிளவாம்படி கையுகிராண்ட அபரிச்சேத்யமான வடிவையுடைய நீ,எனக்கு இப்படிப்பட்ட ஆபத்து வர்த்திக்கிறஇன்று எனக்குஉசிதவந் திரவந்து தோற்றுகிறிலை!*

*ப.—அநந்தரம், ஆஸ்ரிதபவ்யனைக்கொண்டு அநிஷ்டத்தை நிவர்த்திப்பிக் கும் நீ, என் அவஸ்த்தாநுரூபமாக வாராதவளவில் உன்னைப்பற்றினவர்கள் எங்ஙனே விஸ்வஸிப்பர்? என்கிறார்.*

---

படுதல் இத்யாதி. ஹலிதம்-நீ அறிய இத்யாதி. 'காணுமாறருளாயென்றென்றே' என்றுதொடங்கி, 'எனக்கு - அருள் - நின்பெயரே பிதற்றுமாறாய்விட்டது - அந்தோ - காகுத்தா' என்றுதொடங்கி, 'எடுத்தபேராளா - காணுமாறருளாய்' இத்யந்வய:. (உ)

எடுத்த — (உரிஞ்ரன் மஹாநிதியை யெடுத்தாற்போலே உன்னை) எடுத்துக் கொண்ட, பேராளன் - பெரியவனான, நந்தகோபன்தன் - நந்தகோபனுக்கு, இன் - நிரதிசயபோக்யமான, உயிர் — ப்ராணனாய்க்கொண்டு, சிறுவனே - (ஹவ்யனாய் அத்யந்த) சைசவத்தையுடையனாய், (தேவகியார்பிரிந்திருக்க), அசோதைக்கு — யசோதைக்கு, அடுத்த - வந்துகிட்டின, பேரின்பம் — ("தொல்லையின்பத்திறுதி" என்கிற படியே) நிரதிசய ஆநந்தாவஹனாய், குலம் - அக்குலத்துக்கு, இளங்களிறே - ஆனைக்கன்றுபோலே செருக்கனாய் வர்த்திப்பானாய், (தாயுந் தமப்பனுமாக நினைத்திராதே), அடியேனன் - அடியேனை எனக்கு, பெரிய—(உன் பெருமையெல்லாங்காட்டி) எட்டாதிருக்கும், அம்மானே — ஸ்வாமியாய், (ப்ரபலமாய்), கடுத்த போர் - யுத்தகண்டூதி விஞ்சியிருக்கிற, அவுணன் - ஹிரண்யாஸுரனுடைய, உடல் - ஶரீரம், இருபிளவுஆ - இரண்டுபிளப்பாம்படி, கை - கையில், உகிர் - உகிரை, ஆண்ட - பரிகரமாக வுடையையாய், எங்கடலே - (இப்படி ஆஶ்ரிதவிஷயவாத்ஸல்யத்துக்கு) ஜலதியானவனே ! (நீ, அன்றுபோலே), இன்று — இன்றும், அதித்தது - அநுரூபமான, ஓர் உருவாய் - வடிவைக்கொண்டு, வாராய் - வருகிறிலை; (ஒருவிஷயத்திலுதவாதிருந்தால்), உமர் - உன்னைத் தஞ்சமென்றிருப்பார், எங்ஙனம் - எங்ஙனே, தேறுவர் - விஶ்வஸிப்பர்? ஒன்றோடொன்றடுத்த ரூபமென்று - நரஸிம்ஹரூபமாகவுமாம்.

இ—மூன்றாம்பாட்டில், ஆஶ்ரித ஸுலபனாயிருக்கிற நீ, இன்று வந்து என் ஆபத்தை நீக்காதொழியில், உன்குணமே ஜீவநமாயிருக்கிற ஆஶ்ரிதர் உன்னை எங்ஙன் விஶ்வஸிக்கும்படி ? என்கிறார்.

[எடுத்த பேராளன்] - நிதியெடுத்தாற்போலே உன்னை யெடுத்துக்கொண்ட பாக்யாதிகன். நெடுநாள் நோன்புநோற்றுப் பெற்று முகத்திலே விழிக்கப்பெறாதே, சிலர் போரவிட்டிருக்க, நிதியெடுத்தாற்போலே யெடுத்து புத்ரமுகம் கண்டார் இவரிறே. முன்பு ரிக்தனாய்ப்போந்தவன் கனக்க ஜீவிக்கப்புக்கவாறே, "இவன் எடுப்பெடுத்தான்" என்பர்களிறே. [பேராளன்]—பெரியோன். அவன் பெருமையோபாதி போருங்கிடீர் என் சிறுமை! "நீ மகனாகவேணும்" என்றார்க்கோ முகங்காட்டலாவது ? [நந்தகோபன் இத்யாதி] - ஸ்ரீ நந்தகோபருடைய நற்சீவன் ஒரு வடிவுகொண்டு புத்ரனாய் உலாவுகிறபடி. க்ருஷ்ணாவதாரத்திலே வெண்ணெய் களவுகண்டு ஹவ்யனாய்த்திரிந்த நாலுநாளுமாயிற்று, இவர் தமக்கு ப்ரயோஜநாம்ஶமாக நினைத்திருப்பது. கீழ் பரத்வத்தை 'மண்பற்றென்று' கழிப்பர்; கம்ஸவயுத்துக்குமேல் 'நுனிக்கரும்பென்று' கழிப்பர். [அசோதைக்கடுத்த] - அவளுக்கு வந்து கிட்டிக்கொடு நிற்கக்கண்ட இத்தனை. ப்ரஸவ வேதநாக்லேஶத்தாலே மயங்கிக் கிடந்தவள் உணர்ந்துவந்த வநந்தரம், இவன் முகத்தைப் பார்த்து விழித்தவித்தனை; "உதஸ்துவஸுவுஸுஶாஸாயஶோதாஜாதகோதஜ:" [பேரின்பம்]- நிரதிசயஸுவத்தை விளைத்தவன்; "தொல்லையின்பத் திறுதிகண்டாளே" என்கிறபடியே. * அந்தமில் பேரின்பத்தைச் சிற்றின்பமாக்கினான். [குலவிளங்களிறே] - இடைக்குலத்துக்கு ஆனைக்கன்றுபோலே ஶ்லாக்யனானவனே ! அஜாதமாய்ப் பருவத்தாலே ஆகர்ஷகமாயிருப்பதொரு மத்தகஜம்போலே, யசோதைப்பிராட்டிக்குப் பிடிகொடாதே திரியும்படி என்னவுமாம்; அகப்பட்டபோது, "யதிஶக்ரோஷிமத்ஸு" என்னும்படியிறே இருப்பது; "தறியார்ந்தகருங்களிறே போலநின்று

தடங்கண்கள் பனிமல்கும் தன்மையானை" என்னக்கடவதிறே. [அடியனேன்பெரிய அம்மானே] - விபரீதஜ்ஞாநமுடையார்க்கோ வந்துகிட்டலாவது? ஸ்வரூபஜ்ஞாநமுடையார்க்கு வந்து கிட்டலாகாதோ? அடியே னென்றிருப்பார்க்கோ உன் பெருமையெல்லாங் காட்டுவது? [கடுத்தபோரித்யாதி] - யூகண்டுதி வர்த்திக்கிற ஹிரண்யனுடைய உடலானது இரண்டு கூறும்படியாக. [கையுகிரான்ட]-"படையாண்டான்" என்னுமாபோலே. [எங்கடலே] - "மஹாவிஷ்ணும்" என்கிறபடியே, அபரிச்சேத்யமான வடிவையுடையவனே! ப்ரஹ்லாதனுக்கு ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே வந்து உதவினதும் தமக்கு உதவினதாக நினைத்திருக்கிறார். [அடுத்த தோநுவாய்] - அப்போதைக்கு யோக்யமான வடிவைக்கொண்டு. "நராஸ்யார்த்த காத்ரம் ஸிம்ஹாஸ்யார்த்த காத்ரம் ததா" என்கிறபடியே அவன்வரத்தில் அகப்படாத வடிவைக்கொண்டு; பதற்றத்தாலே ஒன்றினுடலையும் ஒன்றின்தலையையும் ஒன்றாகச் சேர்த்துக்கொண்டு வந்தா னென்னவுமாம். [இன்றுநீ வாராய்] - அன்றுமின்றுமாயிற்று உதவவேண்டும் நாள்: அன்று உதவினாய், இன்று உதவுகிறிலை. விபரீதஜ்ஞாநமுடையார்க்கு உதவினாய்; யதாஜ்ஞாநமுடையார்க்கு உதவினாய்; இரண்டுகோடிக்கும் புறம்போ நான்? "மகன்" என்று கலங்கினவனுக்கு உதவினாய்: "த்வத்வஸ்தோஹம்ஸ்வஸ்த" என்கிற தெளிவையுடையவனுக்கு உதவினாய்: "என்றென்றே கலங்கி" என்கிற கலக்கத்தையுடைய எனக்கேயோ உதவலாகாது? [எங்ஙனம் தேறுவர்உமரே] - நீ வாராவிட்டால் நான் முடிகிறேன்; அது கிடக்க: உன் குணஜ்ஞாநத்தாலே யரிக்கிற ஆஸ்ரிதர் எங்ஙனே யரிப்பார்கள் என்னுதல்; "உன்குணங்களே தஞ்சம்" என்றிருக்குமவர்கள் எங்ஙனே உன்னை விஸ்வஸிக்கும்படி? என்னுதல்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. ஆஸ்ரிதஸுலபனாயிருக்கிற நீ இன்றுவந்து என் ஆபத்தை நீக்காதொழியில், உன்குணமே ஜீவநமாயிருக்கிற ஆஸ்ரிதர் உன்னை எங்ஙனே விஸ்வஸிக்கும்படி? என்கிறார்.

[எடுத்தபேராளன்] - நீயியெடுத்துக்கொண்டாற்போலே உன்னை யெடுத்துக்கொண்ட ஸ்லாக்யாதிகன். இருவருமோக்க நோன்புநோற்க, அவர் பெற்று முகத்திலே விழிக்கப்பெறாதே போரவிட்டிருக்க, நீயியெடுத்தாற்போலே யெடுத்து புத்ரமுகங்கண்டவனிறே. முன்பு ரிக்தனாய்ப்போந்தவன் கனக்க ஜீவிக்கப்புக்கவாறே, "இவன் எடுப்பெடுத்தான்" என்பர்களிறே. [பேராளன்] - பெரியோன். அவன்பெருமையோபாதியும் போருங்காணீர் என் சிறுமையும்; "நீ மகனாகவேணும்" என்பார்க்கோ முகங்காட்டலாவது? ஸ்ரீநந்தகோபருடைய நற்சீவன் கண்ணுக்குத்தோற்ற ஒருவடிவுகொண்டு திரிகிறவித்தனை.

---

மூன்றாம்பாட்டு.—எடுத்த இத்யாதி. "நந்தகோபன்தன் இன்னுயிர்ச்சிறுவனே" என்று தொடங்கி, "இன்றுநீவாராய்; எங்ஙனம் தேறுவர்உமரே" என்கிறவற்றைக் கடாக்ஷித்து அவதாரிகை - ஆஸ்ரித இத்யாதி.

"எடுத்த" என்றதுக்கு ஸாவம் - நீயியெடுத்து இத்யாதி. இருவரும் நோன்புநோற்றிருக்க, இவரை "எடுத்தபேராளன்" என்பானென்? என்ன-இருவருமோக்க இத்யாதி. "எடுத்த" என்றால் - நீயியெடுக்கையைச் சொல்லுமோ? என்ன - முன்பு இத்யாதி. பெருமைசொன்னதுக்கு ஸாவம் - அவன்பெருமை இத்யாதி. அவன் - நந்தன். ஸார்த்தஸாவம் - நீமகனாக இத்யாதி. "இன்னுயிர்ச்சிறுவன்" என்றதுக்கு ஸாவம் - ஸ்ரீநந்தகோபருடைய இத்யாதி. பெற்றப்ராப்தி

[அசோதைக்கடுத்த] - ஒக்கநோற்கச் செய்தேயும் க்லேஶம் மிக்கிருக்குமிறே, உடம்பு நொந்து பெற்றவளாகையாலே; இவள் ப்ரஸவவேதநை அநுபவியாதிருக்கப் பெற்றுக் கொடுநின்றுளித்தனே. கிட்டிக்கொண்டுநிற்கச் கண்டதித்தனே; "ததர்ஶப்ரபுத்ராஸாயஶோதாஜாதமாத்மஜம்" (ததர்ஶசப்ரபுத்தாஸாயஶோதாஜாதமாத்மஜம்). [பேரின்பம்] - நிரதிஶய ஸுகத்தைவிளைத்தவன்; "தொல்லையின்பத்திறுதிகண்டாளே" என்னும்படி இவளுக்கு நிரதிஶய ஆநந்தத்தை விளைத்தானாயிற்று. * அந்தமில் பேரின்பத்தைச் * சிற்றின்பமாக்கினன். [குலவிளங்களிறே] - இடைக்குலத்துக்கு ஆனைக்கன்றுபோலே ஶ்லாக்யமானவனே! அபிஜாதமாய், பருவத்தாலே ஆகர்ஷகமா யிருப்பதோரு மத்தகஜம் போலே, யசோதைப்பிராட்டிக்குப் பிடிகொடாதே திரியும்படி என்னவுமாம்; அகப்பட்டாலும் ஆனைக்கன்றுபோலே யாயிற்று இருப்பது; "தறியார்ந்தகருங்களிறே போலநின்று" - என்கிறபடியே ஒருகம்பத்தோடே சேர்ந்த களியானைபோலே யாயிற்றுக் கட்டுண்டுநிற்கும் போதும் இருக்கும்படி. "தடங்கண்கள்பனிமல்கும்" - இவள்† "யஶோதாக்ஷி" (யதி ஶக்நோஷி) என்றால், பின்னை அவனுக்குக் கண்ணநீர்பாய்கைக்கு மேற்படவில்லை: ஸர்வ ஶக்தி அஶக்தனென்று தோற்றவிருக்கையிறே இவள் நியமிக்க வல்லளாகிறது? "தன்மையானை" - ஆஶ்ரிதரிட்ட வழக்காகையே ஸ்வபாவமாகவுடையவனை? [அடியனேன் பெரியவம்மானே] - உன்னை "மகன்" என்றிருப்பார்க்கோ உதவலாவது, முறையுணர்ந்திருப்பார்க்கு உதவலாகாதோ? நான் முறையிலே நின்றவாறே நீயும் முறையிலே நில்லாநின்றுய். "அடியேன்" என்று நான்சொல்ல, நீ ஈஶ்வரனுபிராநின்றாய். [கடுத்த இத்யாதி] - யுத்தகண்டூதியையுடையனை ஹிரண்யாஸுரனுடலை இரண்டுபோதியாம்படி. [கையுகிராண்ட]-"படையாண்டான்" என்னுமாபோலே. [எங்கடலே]– "மஹாவிஷ்ணு" (மஹாவிஷ்ணும்) என்னும்படி பெரியகிளர்த்தியோடேவந்து ப்ரஹ்லாதனுக்கு உதவின

இருவர்க்கும் ஒத்திருக்க, "அசோதைக்கடுத்த" என்பானென்? என்ன - ஒக்கநோற்க இத்யாதி வாக்யத்வயம். "அடுத்த" என்றதுக்கு அர்த்தம் - கிட்டிக்கொண்டு இத்யாதி. இதுக்கு ப்ரமாணம் - ததர்ஶ இத்யாதி. "ததர்ஶசப்ரபுத்தாஸாயஶோதாஜாதமாத்மஜம் । நீலோத்பலதளஶ்யாமம்ததோத்யர்த்தம்முதம்யயௌ" இதி வைஷ்ணவே. (ச-உரு) அப்படி விளைத்தானோ? என்ன - தொல்லை இத்யாதி. "பேரின்பம்" என்றதுக்கு அர்த்தம்-அந்தமில் இத்யாதி. "குலம்" என்று - இடைக்குலமாதல், ஆபிஜாத்யமாய் களிறுக்கு விஶேஷணமாதல். குலத்திலே பிறந்த இளவானை என்று இரண்டாமர்த்தத்துக்கு ஶப்தார்த்தம். திருமொழி பாசுரமெடுக்கைக்கு அதிஷ்டிகை - அகப்பட்டாலும் இத்யாதி. அகப்பட்டாலும் ஆனைக்கன்றுபோலே யிருக்குமோ? என்ன - தறியார்ந்த இத்யாதி. இப்பாசுரத்துக்கு அர்த்தம் - ஒருகம்பத்தோடே இத்யாதி. களியானை - மதித்தவானை. களி - கர்வம். ஸர்வஶக்தி இப்படியிருக்கைக்கு ஹேதுவேதென்ன - ஸர்வஶக்தி இத்யாதி. அடியனை எனக்குப் பெரியனாயிருக்கிறவனே என்கிறவருடைய ஹார்த்தபாவம் - உன்னை இத்யாதி வாக்யத்வயம். "அடியனேன்" என்றவநந்தரம், "பெரியவம்மானே" என்றதுக்குபாவம் - நான் முறை இத்யாதி. கீழ்வாக்யவிவரணம் - அடியேன் என்று இத்யாதி. "போரிலே - கடுத்த - அவுணன்" என்று அந்வயித்து - யுத்தகண்டூதியையுடையனென் என்கிறார். "எம்" என்றதுக்கும், "கடல்" என்றதுக்கும் பாவம் - மஹாவிஷ்ணு இத்யாதி. "உக்ரம்வீரம் மஹாவிஷ்ணும் ஜ்வலந்தம்ஸர்வதோமுகம் । ந்ருஸிம்ஹம்பீஷணம்பத்ரம்ம்ருத்யும்ருத்யும் நமாம்யஹம்" இதி ஶ்ருதேஷ்யதே. அடுத்தல் - சூழலாய், எங்கும் சினைத்திருந்த வடிவை

† ஸ்ரீவிஷ்ணுபுரா-5, 6, 115.

அது தம்பேறுயிருந்தபடி. [அடுத்ததோருருவாய்] - இவன் எங்கேகாட்டப்புகுகிறுன் என்று அறியாமையாலே எங்குமோக்கச் சினைத்துக்கோடு நின்றுன். ஒன்றை அறுதியிட்டுத் தோற்றப்பற்றுதபடி அவன்மிகைக்கையாலே அப்போதைக்கு யோக்யமான வடிவைக்கொண்டு. "நரஸ்யார்த்ததநும் க்ருத்ஸ்நாஸிம்ஹஸ்யார்த்ததநும் ததா" (நரஸ்யார்த்ததநும்க்த்ருவாஸிம்ஹஸ்யார்த்ததநும்ததா) என்கிறபடியே அவன்வரத்திலே அகப்படாத வடிவைக் கொண்டு; பதற்றத்தாலே ஒன்றினுடலையும் ஒன்றின்தலையையும் சேர்த்துக்கொண்டு வந்தானென்றுமாம். அடுத்ததோருருவாயாயிற்றுக் கடுத்தபோரவுணனுடல் பிளந்தது. [இன்றுநீ வாராய்] - அன்றுமின்றும் ஆயிற்று உதவவேண்டுவது? அன்று உதவினுய், இன்று உதவுகிறிலை. விபரீதஜ்ஞாநமுடையார்க்கு உதவினுய், யதாஜ்ஞாநமுடையார்க்கு உதவினுய், இவ்விரண்டுகோடிக்கும் புறம்போ நான்? "மகன்" என்று கலங்கினவனுக்கு உதவினுய்: "மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்" (மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்) என்னுந் தெளிவுடையவனுக்கு உதவினுய்: "என்றென்றேகலங்கி" என்கிற கலக்கமுடைய எனக்கேயோ உதவலாகாதது? நீ வாராதொழிந்தாலும் ஜீவிக்க ஆசையுடையார்க்கேயிறே உன்னைக் காற்கட்டவேண்டுவது. அதுகிடக்கிடீர்; ஆனுல், நீர் ஏதுக்குப் படுகிறீர்? என்ன, - [எங்ஙனம் தேறுவர்உமரே] - இவ்வளவில் நீ முகங்காட்டாவிட்டால், உன் குணஜ்ஞாநத்தாலே ஜீவிக்குமவர்கள் பிழைப்பர்களோ? "உன்குணங்களேதஞ்சம்" என்றிருக்கிறவர்கள் எங்ஙனே உன்னை விஶ்வஸிக்கும்படி? என்னுதல். (ரு)

## நான்காம் பாட்டு.

---

உமருகந்துகந்தவுருவம்நின்னுருவமாகி உன்தனக்குஅன்பரானு
ரவர்உகந்தமர்ந்தசெய்கையுன்மாயைஅறிவோன்றுஞ்சங்கிப்பன்வினையேன்
அமரதுபண்ணியகலிடம்புடைசூழ்அடுபடையவித்தஅம்மானே!
அமரர்தம்அமுதே!அசுரர்கள்நஞ்சே!என்னுடையாருயிரேயோ!

---

*யுடையனுய் என்று முந்தின அர்த்தம்; இத்தை அருளிச்செய்கிறுர் - இவன் எங்கே இத்யாதி. சினைத்துக்கோடு-தழைத்துக்கொடு. "அடுத்ததோருருவாய்" என்றதுக்கு-யோக்யமானவடிவையுடையனுய் என்று அர்த்தாந்தரம் - ஒன்றை அறுதியிட்டு இத்யாதி. அடுத்துப்பிடித்தவுருவாய் என்று மூன்றுமர்த்தம் - நரஸ்ய இத்யாதி. விவரணம்-பதற்றத்தாலே இத்யாதி. அன்றிக்கே, இரண்டாமர்த்த விவரணம் - நரஸ்யார்த்ததநும் இத்யாதி வாக்யத்வயமும். இரண்டர்த்தமென்கையே ஸ்வரஸம். விவரணம் - மகனென்று இத்யாதி. மகனென்று கலங்கினவன் - நந்தகோபன். "எங்ஙனம் தேறுவர்" என்றதுக்கு ஸங்கதியாதல், என் ய ஹார்த்தஸாவமாதல் - நீவாராதொழிந்தாலும் இத்யாதி. ஸங்கதியானபோது, அதுகிடக்கிடீர் என்னுமளவும் ஏகவாக்யம். அதுகிடக்கிடீர் - "இன்றுநீவாராய்" என்னுமது கிடக்கிடேரென்றபடி. "உமர் - எங்ஙனம் தேறுவர்" என்கையாலே - தாம் நிராஸராகிறுரென்றது ஸித்தம். "தேறுவர்" என்று - தரிப்பரென்னுதல், விஶ்வஸிப்பரென்னுதல், "நரஸ்யார்த்ததநும்" இத்யாதி, ஸஹஸ்ராரதே, ஜ்ஞாநஸமெஸ்த. 'எடுத்தபேராளன்' என்று தொடங்கி, 'அடுத்ததோருருவாய்-கடுத்தபோரவுணன் உடலிருபிளவாக்கையுகிராண்ட எங்கடலே - இன்றுநீவாராய்-உமர்-எங்ஙனம்தேறுவர்' இத்யந்வய:.*

ஆ.—(உமருகந்து) - ஆஸ்ரிதவிரோதி நிரஸநைக ஸ்வபாவனாய், ஆஸ்ரித பரமபோக்யனாய், ஆஸ்ரிதவிரோதிநாஸகத்வைக ஸ்வரூபனாய், எனக்கு தாரகனாயிருந்த உன்னுடைய ஆஸ்ரிதேச்சாதீந திவ்யாவதார திவ்யசேஷ்டிதத்வ ரூபமான ஆஸ்ரிதவாத்ஸல்யகுணமொன்றுமே எனக்குதாரகம்; நீ வாராமையாலே, அதுவும் என்னுடைய பாபத்தாலே பொய்யோவென்று ஸங்கியாநின்றேனென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், ஆஸ்ரிதர்உகந்த ரூபசேஷ்டிதாதிகளையே நீயுகப்புதி என்னும் இவ்வறிவு ஒன்றுமே தரித்திருக்கிற நான், அவ்வறிவு பொய்யோவென்று ஸங்கியாநின்றேனென்கிறார்.

[அமரதுபண்ணியென்று மேலுக்கு]-பாண்டவர்களுக்காக மஹாயுத்தத்தைப் பண்ணி மஹாப்ருதிவியெல்லாம் வ்யாபித்து நலிகிற ஸேனையை முடித்தபெரியோனே! இச்செயலாலே தேவர்களுக்கு இனிமையாய் அஸுரர்களுக்குநஞ்சாய் எனக்கு தாரகனானவனேயோ?

ப.—அநந்தரம், ஆஸ்ரிதாநாஸ்ரிதவிஷயங்களில் அநுகூலனுமாய் ப்ரதிகூலனுமாயிருக்கையாலே, உன்னுடைய ரூபகுணசேஷ்டிதங்கள் ஆஸ்ரிதாதீநமென்று நினைக்கிற அறிவு ஸங்கநீயமாகாநின்றதென்கிறார்.

அது - தாத்யாதிமுகத்தாலே லோகப்ரஸித்தமான, அமர் - யுத்தத்தை, பண்ணி - உண்டாக்கி, அகல் - விஸ்தீர்ணையான, இடம் - பூமியினுடைய, புடை - பரிஸரமெங்கும், சூழ் - சூழ்ந்திருப்பதாய், அடு - கொலையிலே உத்யுக்தையான, படை - ஸேனையை, அவித்த - (நிஸ்ஸேஷமாக) நஸிப்பித்த, அம்மானே - ஸ்வாமியாய், (பூமியளவன்றியே), அமரர்தம் - (அநுகூலரான) தேவர்களுக்கு, அமுதே - அதிஸயித போக்யமாய், அசுரர்கள் - (ப்ரதிகூலரான) அஸுரர்களுக்கு, நஞ்சே - (ப்ராணவிநாஸ ஹேதுவான) நஞ்சாய், (உபயாகாரத்தாலும்), என்னுடை - எனக்கு, ஆருயிரே - தாரகனானவனே! உமர் - உனக்குஅஸாதாரண மோக்ஷபூதரானவர்கள், உகந்துகந்த - எப்போதமுகந்த, உருவம் - ரூபமே, நின் - உனக்கு, உருவமாகி - ரூபமாய், உன்தனக்கு- அவ்வடிவிலே, அன்பராானவர் - அன்பையுடையரானவர்கள், உகந்து - ஆதரித்து, அமர்ந்த - அநந்யப்ரயோஜநமாக, செய்கை - அடிமைசெய்கைக்கிடாயிருக்கிற, உன் - உன்னுடைய, மாயை - ஆஸ்சர்யசேஷ்டிதங்களை, அறிவு ஒன்றும் - அறியும் இதொன்றையுமகடபட, சங்கிப்பன் - ஸங்கயாநிறபன், வினையேன் - தஞ்சமாகநினைத்திருக்கும்அர்த்தத்திலே ஸங்கைபிறக்குபபடியான பாபத்தையுடைய நான். ஓ - ஓ என்று தம்மிழவுதோறை அருளிச்செய்கிறார்.

இ.—நாலாம்பாட்டில், உன்னை ஆஸ்ரிதரிட்ட வழக்காக்கி வைப்புதி என்னும் அறிவுஒன்றுமே தரித்திருக்கிற நான், அதுவும் பொய்யோவென்று ஸங்கியாநின்றேன் என்கிறார்.

[உமருகந்துகந்தவுருவம்நின்னுருவமாகி] - உனக்கு அஸாதாரணராயிருப்பார் எப்போதுமுகந்தரூபமே உனக்குத்திருமேனியாக நினைத்திருப்புதி என்னுதல், உனக்கு அஸாதாரணராயிருப்பாருகந்தவற்றாலே நீயுகந்திருக்கும் வடிவிறே உனக்குவடிவாய்விட்டது என்னுதல். "தமருகந்ததெவ்வுருவம்" "தாம்ஸ்தெயெவ ஹஜாம்யஹம்" [உன்றனக்கன்பாரானவர்]- உன்பக்கலிலே ப்ரேமபரவஸராயிருக்குமவர்கள். [உகந்து]-

*அத்யாதரத்தைப்பண்ணி. [அமர்ந்தசெய்கையுன்மாயை] - ப்ரயோஜநநிரபேக்ஷமாகக் கிட்டவேண்டும் செயல்கள் உன்னுடைய ஆஶ்சர்யசேஷ்டிதங்கள். [அறிவொன்றும் ஶங்கிப்பன்] - தன்னை ஆஶ்ரிதரிட்டவழக்காக்கும் அறிவேயாயிற்று, இவர் உஜ்ஜீவந ஹேதுவாக நினைத்திருப்பது ? அதொன்றிலும் ஶங்கைபண்ணுகின்றேன்: [வினையேன்] நான்கண்ணுஞ்சுழலையிட்டு அதிஶங்கைபண்ணின போதாக ஸ்வரூபாநுபந்தியான குணங்களில்லையாகாதிறே ; அதிலே அதிஶங்கைவர்திக்கைக்கடி என் பாபமிறே. [அமர்இத்யாதி] - ஆஶ்ரிதபக்ஷபாதியென்னு மிடத்திலே உதாஹரணங்கள் காட்டுகிறார்: [அமரதுபண்ணி] - அந்தமஹாபாரத யுத்தத்தைப்பண்ணி. "பெரியபாரதங்கைசெய்து" என்கிறபடியே ஸாரத்யவேஷத்தோடே கையாளாய். உடம்புச்சீடிடாதே தன்னைப்பேணாதே நின்று போரைவிளைத்து. [அகலிடப்பொழில்சூழ்] - பெருப்பரப்பையுடைய பூமியெல்லாம். பொழில் - பூமி. [சூழ்படை] - வ்யாபித்துநலிகிற ஸேநையை. ஸர்வதோமுகமாகச் சூழ்ந்துகொண்டு கொல்லவந்த ஸேநையை. [அவித்த] - "ஸாரயி, ஸாரயி" என்று வாய்பாறிக்கொண்டுவந்த உபவர்க்கத்தைமுடித்த. [அம்மானே] - "தேவாநாம் தாநவாநாம் ச ஸாமாந்யமதிதைவதம்" என்று ஸர்வஸாதாரணனாயிருக்க, ஆஶ்ரிதபக்ஷபாதத்தாலே தவிரோதிகளையழியச்செய்தவனே! [அமரர்தம்அமுதே] - அஸுரர்களையழியச்செய்து குடியிருப்புக்களைக் கொடுக்கையாலே தேவர்களுக்கு நிரதிஶயபோக்யனானவனே ! [அசுரர்கள்நஞ்சே] - ஜந்மத்தாலே அஸுரர்களாயும், ஸ்வபாவதோஷங்களாலே அஸுரர்களாயுமுள்ளவர்களுக்குஆற்றவொண்ணாதநஞ்சானவனே! [என்னுடையாருயிரேயோ] - எனக்கு ஸத்தாஹேதுவானவனே! அநுகூலர்க்கு போக்யனாய் ப்ரதிகூலர்க்கு நஞ்சாயிருக்கிற இரண்டும் எனக்கு தாரகம் என்றுமாம்.*

ஈடு.—நாலாம்பாட்டு. "உன்னை ஆஶ்ரிதரிட்டவழக்காக்கிவைப்புதி" என்னும் அறிவு ஒன்றுவுமே தரித்திருக்கிற நான், அதுவும் பொய்யோவென்று ஶங்கியா நின்றேனென்கிறார்.

[உமருகந்துகந்தவுருவம்நின்னுருவமாகி] - உனக்கு அஸாதாரணராயிருப்பார் மாறாதே உகந்தவடிவை உனக்குத் திருமேனியாகக்கோள்ளுவுதியென்னுதல், உனக்கு நல்லராயிருக்குமவர்கள் உகந்தத்தாலே நீயுகந்து அதுஉனக்கு வடிவேன்னுதல். "**யேயதாமாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம்**" (யேயதாமாம்ப்ரபத்யந்தே தாம் ஸ்ததைவபஜாம்யஹம்) என்னுமாபோலே; "தமருகந்ததேவ்வுருவம்" இத்யாதி. [உன் தனக்கன்பராானவர்] - உன்பக்கல் ப்ரேமபரவஶராயிருக்குமவர்கள். [உகந்து] - அத்யாதரத்தைப்பண்ணி. [அமர்ந்தசெய்கை உன்மாயை] -ப்ரயோஜநநிரபேக்ஷமாகக் கிட்ட வேண்டும்செயல்கள், உன்னுடைய ஆஶ்சர்யசேஷ்டிதங்கள். [அறிவொன்றும்சங்கிப்

*நாலாம்பாட்டு.—உமர் இத்யாதி. "உமருகந்துகந்தவுருவம்" என்றுதொடங்கி, "அறிவொன்றும் சங்கிப்பன் வினையேன்" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - உன்னை இத்யாதி.*

*"உமருகந்துகந்தவுருவம்" என்கிற வீப்ஸைக்கு இரண்டுபாவம் - உனக்கு அஸாதாரண இத்யாதி வாக்யத்வயம். எப்போதும் உகந்து போருகிற என்று முந்தினபாவம்; விஷயவிபாகத்தாலே பேதத்தையங்கீகரித்துஇரண்டாம்பாவம். ஆஶ்ரிதர்உகந்தத்தையே திருமேனியாகக் கொள்ளுமோவென்ன, ப்ரமாணங்கள்- யேயதா இத்யாதி வாக்யத்வயம். கீதாபாஷ்ய-தேவு (கக). ப்ரயோஜந நிரபேக்ஷமாகக் கிட்டவேண்டும் செயல்கள் உன்னுடைய ஆஶ்சர்யசேஷ்டிதங்க*

பன்] - இந்தஒருகுணத்தையும்பற்றின அறிவாயிற்று இவர்க்கு ஸத்தாஹேது; அதிலே யாயிற்று இப்போது இவர்க்கு அதிஶங்கை வர்த்திக்கிறது. [வினையேன்]-நானொருவன். கண்ணுஞ்சுழலையிட்டு அதிஶங்கைபண்ணுங்காட்டில், ஸ்வரூபாநுபந்திகுணங்க ளில்லை யாகாதிறே; அதிலே அதிஶங்கைபண்ணுகிறது, நான்பண்ணினபாபமிறே; †"**வ்யாதஃ பராஜ்ஞஃ க்ருதஜ்ஞஸ்ச ஸாநுக்ரோஶஸ்ச ராகவஃ | ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோஶ ஶங்கே மத்பாக்யஸங்க்ஷயாத்**" (க்யாதஃபராஜ்ஞஃக்ருதஜ்ஞஶ்ச ஸாநுக்ரோஶஶ்ச ராகவஃ | ஸத்வ்ருத்தோநிரநுக்ரோஶஶ்ஶங்கேமத்பாக்யஸங்க்ஷயாத்) - இப்படிப்பட்ட குணங்களுடையவர்க்கு நான் அதிஶங்கை பண்ணுங்காட்டில் அவையில்லையாகிறதன் றிறே: நான் ஶங்கிக்கைக்கடி என் பாக்யஹாநி என்றருளிறே. [அமரதுபண்ணி] - ஆஶ்ரித பக்ஷபாதி என்னுமிடத்துக்கு உதாஹரணங்காட்டுகிறார்: அந்த அமரைப்பண்ணி. மஹா பாரதமிறே:பூமிப்பரப்படைய நெளியும்படியிறே வந்துசூழ்ந்துகொண்டது. [சூழ்அடுபடை யவித்த] - ஸர்வதோதிக்கமாகச்சூழ்ந்துகொண்டு கொல்லவந்த ஸேனையைஅவித்த. துர் வர்க்கமுடைய காட்டுத்தீக் கிளர்ந்தாற்போலே கிளர்ந்து, "ஸாரதி, ஸாரதி" என்று வாய் பாறிக்கொண்டுவந்துதோற்ற அவர்கள்கிளர்த்தியை அவித்தானாயிற்று. "மழைகொலோ வருகின்றது" என்று சொல்லுகிற க்ருஷ்ணனாகிற காளமேகமிறே ஏறியவித்தது. [அம் மானே] - ஸர்வஸ்வாமியாயிருந்துவைத்து ஆஶ்ரிதபக்ஷபாதத்தாலே அநாஶ்ரிதரைக் கிழங்கெடுத்துப் போகட்டானித்தனை. [அமரர்தமமுதே] - தேவர்களுக்காக ஆஸுர ப்ரக்ருதிகளோடே அம்பேற்றுப்பண்ணின வ்யாபாரங்களாலே அவர்களுக்கு நிரதிஶய போக்யனாயிருக்கும்படி. [அசுரர்கள்நஞ்சே]- ஜந்மத்தாலே அஸுரர்களாயும் ஸ்வபாவ த்தாலே அஸுரர்களாயு முள்ளவர்களுக்கு ஆற்றவொண்ணாத நஞ்சானவனே! [என்னு டையாருயிரேயோ] - எனக்கு ஸத்தாஹேதுவானவனே! தேவர்களுக்கு போக்யனாய் அஸுரவர்க்கத்துக்கு நஞ்சாயிருக்கிறவிருப்புத் தமக்கு ஸத்தாஹேதுவாயிருக்கிறபடி. (சு)

---

*ளென்றது - அவர்கள் யாதொருசேஷ்டிதங்களை உகப்பர்களோ, அந்த சேஷ்டிதங்களை உடைத்தா யிருப்பாயென்றபடி. இவ்வதிஶங்கை அவன் உமக்கு உதவாமையாலே வந்ததன்றோவென்ன -* **நானொருவன்** *இத்யாதி.* **கண்ணுஞ்சுழலையிட்டு** *- ஆற்றாமையின் அதிஶயத்தாலே கண்சுழன்றென்ற படி. இப்படி அதிஶங்கைபண்ணினருண்டோவென்ன -* **வ்யாதஃ** *இத்யாதி.* "**பாக்யஸங்க்ஷயாத்**" *என்றதுக்கு அர்த்தம் -* **இப்படிப்பட்ட** *இத்யாதி. விக்ரஹசேஷ்டிதங்கள் சொன்னது - ஸ்வரூப குணங்களுக்கும் உபலக்ஷணம். அவனுடைய விக்ரஹமும் செயலும் ஆஶ்ரிதாதீந மென்னுமதுக்கு நியாமகம் -* **பாரதஸமரவ்ருத்தாந்த***மென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார்-* **ஆஶ்ரிதபக்ஷபாதி** *இத்யாதி. "அந்த" என்கிற ப்ரஸித்திக்கு பாவம் -* **மஹாபாரதமிறே** *என்று. "அகலிடம் புடை சூழ்" என்றதுக்கு அர்த்தம் -* **பூமிப்பரப்படைய** *இத்யாதி. "அவித்த" என்றதுக்கு வாஸனை -* **துர்வர்க்கம்** *இத்யாதி. அவிக்கைக்கு அவன் மழையோவென்ன -* **மழைகொலோ** *இத்யாதி.* **பெரி யாழ்வார்திருமொழி.** *"அம்மானே - அடுபடையவித்த" என்றதுக்கு பாவம் -* **ஸர்வஸ்வாமியாய்** *இத்யாதி. "அடுபடையவித்த" என்றவநந்தரம், "அமரர்தமமுதே" என்றதுக்கு பாவம் -* **தேவர் களுக்காக** *இத்யாதி. கீழோடேகூட்டி பாவம் -* **தேவர்களுக்கு** *இத்யாதி. அம்மானாயிருந்து வைத்து - அது - அமர் - பண்ணி, அகலிடம் புடைசூழடுபடை யவித்த - அமரர்தமமுதே! அசுரர் கள்நஞ்சே! என்னுடையாருயிரேயோ! உமருகந்து' என்று தொடங்கி, 'சங்கிப்பன் வினையேன்' இத்யந்வய:.* (சு)

---

† ஸ்ரீராமா-ஸுந்தர-உ௫-௧௩.

## ஐந்தாம் பாட்டு.

ஆருயிரேயோ! அகலிடமுழுதும்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்த
பேருயிரேயோ! பெரியநீர்படைத்துஅங்குறைந்து அதுகடைந்தடைத்துடைத்த
சீரியரேயோ! மனிசர்க்குத்தேவர்போலத் தேவர்க்குந்தேவாவோ!
ஒருயிரேயோ! உலகங்கட்கெல்லாம் உன்னைநான் எங்குவந்துறுகோ!

**ஆ.**—(ஆருயிரேயோ) - நீரே உபாயங்களையநுஷ்டித்து என்னைப்ராபிக்குமத்தனையன்றோ வென்னில்? - எனக்கு தாரகனாய், நிகிலஜகந்நிர்மாண மஹார்ணவநிமக்ந ஜகதுத்தரண நிகரணோத்கிரண விக்ரமண ஹேதுபூத பரமகாருண்ய விஶிஷ்டனாய், பயோநிதி ஶயந மந்தந பந்தந பேதந ஹேதுபூத ப்ராணயித்வ குணயுக்தனுமாய், ஆத்மகுணங்களாலும் ரூபகுணங்களாலும் மநுஷ்யரிற்காட்டில் தேவர்கள் எத்தனை விலக்ஷணராயிருப்பார், அப்படியே தேவர்கள் மநுஷ்யரென்னும்படி அந்தக்குணங்களால் விலக்ஷணனாய் ஸர்வலோகங்களுக்கும் ஆத்மாவாயிருந்த உன்னை நான் என்னுடைய யத்நத்தாலே எங்ஙனே ப்ராபிக்கும்படி? என்கிறார்.

ஒ —அஞ்சாம்பாட்டில், காண்கைக்கீடான ஸாதநாநுஷ்டாநத்தைப் பண்ணி என்னைவந்து காணீர் என்னில்; நான் யத்நம்பண்ணி வந்து காண்கையென்று ஒருபொருளில்லை: ஸர்வநிர்வாஹகனான நீ உன்னை எனக்குக் காட்டவேணுமென்கிறார்.

[ஆருயிரேயோ] - எனக்கு தாரகனானவனே! [அகலிடமென்று தொடங்கி]- கேவலக்ருபையாலே ஜகத்தினுடைய ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணின பெரியோனே! [பெரியநீரென்று தொடங்கி] - ஜலஸம்ருத்தியைப் பண்ணி அங்கே ஶயநாதிகளைப் பண்ணின சீரியவனே! [மனிசர்க்கென்று தொடங்கி] - ஐஶ்வர்ய பரிசரணாதிகளால் மநுஷ்யரிற்காட்டில் தேவர்கள் விலக்ஷணமாயிருக்குமாபோலே அவற்றால் தேவர்களுக்கும் விலக்ஷணனானவனே! [ஓருயிரேயோ உலகங்கட்கெல்லாம்] - எல்லார்க்கும் நீயே ஆத்மாவானவனே!

ப.—அநந்தரம், ஸர்வப்ரகாரரக்ஷகனான உன்னை நான் யத்நம்பண்ணிக் காண்பது எங்கே? என்கிறார்.

("ப்ராணஸ்ய ப்ராண:" என்கிறபடியே தாரகமான ப்ராணாதிகளுக்கு தாரகனாகையாலே), ஆருயிரே - பரிபூர்ண ப்ராணபூதனாய், அகல் - விஸ்தீர்ணமான, இடம் - ஜகத்தை, முழுதும் - எல்லாம், படைத்து - ஸ்ருஷ்டித்து, இடந்து - (ப்ரளயத்தில் அழியாமல்) இடந்தெடுத்து, உண்டு - வயிற்றிலே வைத்து நோக்கி, உமிழ்ந்து - உமிழ்ந்து (வெளிநாடுகாட்டி), அளந்த - (அபிமானமறும்படி) அளந்துகொண்ட, பேருயிரே - ஸர்வாதிகஶேஷியாய், (ஜகத்தை உஜ்ஜீவிப்பிக்கைக்காக), பெரிய நீர் - மஹாஜலமான ஏகார்ணவத்தை, படைத்து - ஸ்ருஷ்டித்து, அங்கு-அங்கே, உறைந்து - கண்வளர்ந்தருளி, அது - (தத்கார்யமான) க்ஷீரார்ணவத்தை, கடைந்து - கடைந்து, அடைத்து - (தத்ஸஜாதீயமான கடலை) அடைத்து, உடைத்த - (ஸம்ஸாரிகளுக்கு தீர்த்தஹேதுவாம்படி தநுஷ்கோடியாலே) உடைத்த, சீரியரே - (ஆஶ்ரிதரக்ஷணத்தில் ஆத்மாவோபாதி) சீரியனாய், மனிசர்க்கு - மநுஷ்யாதிகளுக்கு, தேவர்போல -

தேவர்கள் உத்தேஶ்யரானவோபாதி, தேவர்க்கும் - தேவர்களுக்கும், தேவா - (தேஶ்யதயா) ஆஶ்ரயணீயனும், உலகங்கட்கெல்லாம் - (ப்ராணகம்யமான) ஸகலபதார்த்தங்களுக்கும், ஓருயிரே - ஏகாத்மாவானவனே! உன்னை - (ஶரீரத்துக்கு ஆத்மாவைப் போலே ஆதாரகனுமாய், ஶேஷியுமாய், பரிவனுமாய், உத்தேஶ்யனுமாய், அவ்வாத்மாக்களைப்போலே ஸ்வரூபபேதமில்லாதபடி ஸகலசேதநாசேதநங்களுக்கும் ஏகநியந்தாவான ஆத்மாவான) உன்னை யொழிய, நான் - (த்வதேகதார்யனுமாய், த்வதேகஶேஷபூதனுமாய், த்வதேகரக்ஷ்யனுமாய், த்வதேகாஶ்ரயனுமாய், த்வதேகநியாம்யனுமாயிருக்கிற) நான், எங்கு - எங்கே, வந்து - வந்து, உறுகோ - கிட்டுவேன்? ஸ்வதந்த்ரனான உன்னுடைய யத்நம் பலபர்யந்தமாமதொழிய ஸர்வப்ரகார பரதந்த்ரனான நான் யத்நம்பண்ணிக் கிட்டுவதுஒன்றுண்டோவென்று. ப்ரதிபதம் ஓ! என்றது - 'அத்தலை இத்தலையாவதே!' என்கிற வெறுப்பைக் காட்டுகிறது.

இ.—அஞ்சாம்பாட்டில், "ஶாஸ்த்ரம் ப்ரயோக்தவ்யம்" என்று பேறு உம்மதானால் ஸாதநமும் உம்முடைய தலையிலேயாகவேண்டாவோ? என்ன, 'நான் யத்நம் பண்ணிவந்து காண்கையென்றொரு பொருளில்லை' என்கிறார்.

[ஆருயிரேயோ] - ஶரீரரக்ஷணம் ஆத்மாவதன்றோ? ஶரீரந்தான் தன்னை ரக்ஷித்துக்கொள்ளவோ? ஸம்பந்தமேயோ வுள்ளது, அநுஷ்டாநமில்லையோ? என்கிறார். [அகலிடமுழுதும்படைத்து] - "பஹுஸ்யாம்"என்று ஸங்கல்பித்துப்பரப்பையுடைய ஸ்ருஷ்டித்து, இத்தை ப்ரளயங்கொள்ள மஹாவராஹமாயுத்தரித்து, பின்பு ப்ரளயங்கொள்ளப்புக வயிற்றிலேவைத்துரக்ஷித்து உள்ளிருந்துநோவுபடாமே வெளிநாடுகாணவுமிழ்ந்து, மஹாபலியாலே அபஹ்ருதமான பூமியில் எல்லைநடந்து மீட்டுக்கொண்டு, இப்படி யபேக்ஷிப்பாருமின்றிக்கே யிருக்க, கேவலக்ருபையாலே ரக்ஷித்த நீவேண்டாவோ இதுக்கு, ஹிதம்பார்க்கும்போது? [பேருயிரேயோ]-பெரியோனே! [பெரியநீரித்யாதி]- பிராட்டியோடு ஸம்ஸாரிகளோடு வாசியற ரக்ஷிக்கும் சீர்மையைச் சொல்லுகிறது. "ஶயிதம் த்ரைவக்ஷ்ர்":"நமக்கும்பூவின்மிசைநங்கைக்கும் இன்பனே" என்கிறபடியே. [பெரியநீர்படைத்தங்குறைந்து] - ஏகார்ணவத்தை ஸ்ருஷ்டித்து ஸ்ருஷ்ட்யர்த்தமாக அதிலே கண்வளர்ந்து. [அதுகடைந்து] - பிராட்டியை லபிக்கைக்காக அத்தைக் கடைந்து, அவளோடே ஸம்ஶ்லேஷிக்கைக்காக அத்தையடைத்து, அவ்வருகுண்டான ராக்ஷஸர் ஆஶ்ரிதரை நலியாதபடி அத்தையுடைத்த. [சீரியரேயோ] - நித்யாஶ்ரிதையோடு அல்லாதாரோடு வாசியற விஷயீகரிக்குந்தனைசீரியவனே! [மனிசர்க்குஇத்யாதி] - ஐஶ்வர்யத்தாலும் கௌரவத்தாலும் மநுஷ்யர்களிற்காட்டில் தேவர்கள் உத்க்ருஷ்டராயிருக்குமாபோலே, அவற்றாலே தேவர்கள் மநுஷ்யஸ்தாநீயராம்படி ஸர்வாதிகனானவனே! ஸர்வாதிகனான நீ வேண்டாவோ, ஹிதசிந்தைபண்ணும்போது? ஸகல சேதநாசேதநங்களுக்கும் ஏகாத்மாவானவனே! ஆத்மா, ஶரீரத்துக்கு ஹிதசிந்தைபண்ணுமதொழிய, ஶரீரம் ஸ்வரக்ஷணத்தைப்பண்ண என்பதொன்றுண்டோ? ஆதாரமாய் நியந்தாவாய் ஶேஷியாயிருக்கிற நீயொழிய, ஆதேயமாய் நியாம்யமாய் ஶேஷமான இது, ஸ்வரக்ஷண சிந்தைபண்ணவோ? சைதந்யத்துக்கு விநியோகம் "பேறுஅவனாலே" என்றிருக்கை, பெற்ற அம்ஶத்தில் உபகாரஸ்ம்ருதி புண்டாகை, அநுபவிக்கை இவற்றிலேயன்றோ? [உன்னை] - ஆத்மபூதனான உன்னை. [நான்] - ஶரீரபூதனான நான் ஸாதநாநுஷ்டாநம்பண்ணி வந்துகிட்டவென்பதுஒன்றுண்டோ?

ஈடு.—அஞ்சாம்பாட்டு. 1"ஶாஸ்த்ரஃபலம் ப்ரயோக்தரி" (ஶாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி) என்று பேறு உம்மதானால் ஸாதநம் உம்முடையதலையிலே ஆகவேண்டாவோ? என்ன, நான் யத்நம்பண்ணி வந்துகாண என்று ஒருபொருளில்லைகாணேன்கிறார்.

[ஆருயிரேயோ]-உயிர் நீயாயிருக்க நான் என்ன ஸாதநாநுஷ்ட்டாநம் பண்ணி வந்து கிட்டுவேன்? ஶரீரரக்ஷணம் ஆத்மாவதன்றே? ஶரீரந்தான் தன்னை ரக்ஷித்துக் கொள்ளவோ? ஸம்பந்தமேயோ, அநுஷ்ட்டாநமும் இல்லையோ? என்கிறார்:- [அகலிடமுழுதும்படைத்து] - 2"பஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்று பூமிப்பரப்படங்க ஸ்ருஷ்டித்து, ப்ரளயத்திலே நோவுபட மஹாவராஹமாய் எடுத்துக்கொண்டேறி, திரிய ப்ரளயம்வர வயிற்றிலேவைத்து நோக்கி, உள்ளே கிடந்து தளராதபடி வெளிநாடுகாண உமிழ்ந்து, மஹாபலியாலே அபஹ்ருதமான பூமியிலே எல்லைநடந்து மீட்டுக்கொண்டு, இப்படி அந்த துர்த்தசைகளிலே அபேக்ஷாநிரபேக்ஷமாக உணர்ந்து நோக்கும் நீயே இது கிட்டும் விரகு பார்க்கவேண்டாவோ? [பேருயிரேயோ] - பெரியோனே! [பெரிய நீர் இத்யாதி] - ஸர்வவிஷயமாகப்பண்ணும் வ்யாபாரத்தோடு பிராட்டிக்காகப் பண்ணும் வ்யாபாரத்தோடு வாசியற்றிருக்கும்படி. [பெரியநீர்படைத்து அங்குறைந்து]- ஏகார்ணவத்தை ஸ்ருஷ்டித்து,ஸ்ருஷ்ட்யர்த்தமாக அதிலேகண்வளர்ந்து. [அதுகடைந்து]- பிராட்டியை லபிக்கைக்காக அத்தைக்கடைந்து, அவளோட்டை ஸம்ஶ்லேஷத்துக்காக அத்தை யடைத்து அவ்வருகுண்டான ராக்ஷஸர்வந்து ஆஶ்ரிதரைநலியாதபடி அத்தை யுடைத்த. [சீரியரேயோ]-நித்யாஶ்ரிதையோடு அல்லாதாரோடு வாசியற விஷயீகரிக்குஞ் சீர்மையுடையவனே! [மனிசர் இத்யாதி]-ஐஶ்வர்யத்தாலும் கௌரவ்யதையாலும் மநுஷ்யர்களுக்கு தேவர்களிருக்குமாபோலேயாயிற்று, அந்தத்தேவர்களிற்காட்டில் ஸர்வேஶ்வர னிருக்கும்படி. [ஓர்உயிரேயோ உலகங்கட்கெல்லாம்]-கேவலஶரீரமோ, ஆத்மாவோ, ஹிதசிந்தைபண்ணுவார்? நான் உன்னைப் பெறுகைக்கு ஸாதநாநுஷ்ட்டாநம் பண்ணுகிறேன், உன்னைப்போலேயிருப்பதோரு தத்த்வாந்தரமுண்டாகில் சொல்லிக்காண். உயிராயிருக்கிற உன்னை ஶரீரஸ்தனான நான் என்ன ஸாதநாநுஷ்ட்டாநத்தைப்பண்ணி வந்து கிட்டுவேன்? ஆத்மா ஶரீரத்துக்கு ஹிதசிந்தைபண்ணுமதொழிய, ஶரீரம் ஸ்வரக்ஷ

*அஞ்சாம்பாட்டு.—ஆருயிரேயோ இத்யாதி. 'எங்குவ கா" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை -* **ஶாஸ்த்ரஃபலம்** *இத்யாதி.*

*பதப்ரயோகத்துக்கு* **ஹாவம் — உயிர்நீயாய்** *இத்யாதி. உயிர் அவனானால் ஸாதநாநுஷ்ட்டாநம் பண்ணப்போகாதோ? என்ன -* **ஶரீர** *இத்யாதி. விவரணமாதல். "அகலிடம்" இத்யாதிக்கு அவதாரிகை -* **ஸம்பந்தமேயோ** *இத்யாதி. ஜகத்ஸ்ருட்யாதிகளைச் சொன்ன அநந்தரம், பிராட்டியை லபிக்கைக்குப்பண்ணின வ்யாபாரங்களைச் சொன்னதுக்கு ஹாவம் -* **ஸர்வவிஷயமாக** *இத்யாதி.* **வாசியற்றிருக்கும்படி** *என்றது - பிராட்டிகார்யம்போலே எல்லார்கார்யமும்செய்யும் என்றபடி. "பெரியநீர்படைத்தங்குறைந்து - அகலிடமுழுதும்படைத்து" என்று அந்வயிப்பது.* *சீர்மை ஏதென்ன -* **நித்யாஶ்ரிதை** *இத்யாதி. "உலகங்கட்கெல்லாம் - உயிர்" என்றதுக்கு ஹாவம் -* **கேவல** *இத்யாதி. "ஓர்" என்றதுக்கு ஹாவம் -* **நான்உன்னை** *இத்யாதி. கீழே "ஆருயிரேயோ" என்றது - ஸ்வவிஷயம்; "ஓருயிரேயோ" என்றது - ஸர்வவிஷயம்; ஆகையாலே புநருக்தியில்லையென்னுதல். அதவா, "ஆருயிரேயோ" என்றதின் நிகமநம் - "ஓருயிரேயோ" என்றதென்னுதல். "உன்னைநான்" இத்யாதிக்கு அர்த்தம் -* **உயிராயிருக்கிற** *இத்யாதி. விவரணம் -* **ஆத்மா** *இத்யாதி. ஶரீர ஶரீரிஹாவ லக்ஷணங்கள் சொல்லாநின்றுகொண்டு, பூர்வோக்தார்த்தத்தை ஸ்த்திரீகரிக்கிறார் -*

1. பூர்வமீமாம்ஸாயாம். 2- ஊரம் உ-உ-உ

ணத்தைப்பண்ண என்பதோன்றுண்டோ? ஆதாரமாய் நியந்தாவாய் சேஷியாயிருக்கிற நீயொழிய, ஆதேயமாய் நியாம்யமாய் சேஷமான இது ஸ்வரக்ஷணத்தைப்பண்ணவோ? ஆதாராதேய நியந்த்ருநியாம்யபாவங்களாலே ஶரீரலக்ஷணம் இதுக்குஉண்டானபின்பு, அல்பசைதந்யமும் "நீயே கடவாய்" என்கிற ப்ரதிபத்திக்குக் கண்ட வித்தனையன்றி ஸாதநாநுஷ்டாநம் பண்ணக்கண்டதோ ? (ரு)

---

## ஆறும் பாட்டு.

---

**எங்குவந்துறுகோ? என்னையாள்வானே! ஏழுலகங்களும்நீயே**
**அங்கவர்க்கமைத்ததெய்வமும் நீயே அவற்றவைகருமமும்நீயே**
**பொங்கியபுறம்பால்பொருளுளவேலும் அவையுமோநீயின்னேயானால்**
**மங்கியஅருவாம்நேர்ப்பமும்நீயே வான்புலனிறந்ததும்நீயே.**

*ஆ —(எங்குவந்து.)-ஸர்வலோகங்களும், தத்ஸமாராத்யமான அக்நீந்த்ராதி தைவமும், அவற்றினுடைய க்ரியைகளும், லோகத்துக்குப் புறம்புள்ள பதார்த்தங்களும், ப்ரக்ருதி ஸம்யுக்தமாய் கர்மஸங்குசித ஜ்ஞானமாய் ஸூக்ஷ்மமாயிருந்த புருஷஸமஷ்டியும், கர்மஸம்பந்தரஹிதமாய், ப்ராக்ருதி விநிர்முக்தமாய், பரிசுத்தமாயிருந்த ஆத்மஸ்வரூபமும் நீயே; ஆதலால், என்னுடைய யத்நத்தால் உன்னை நான் எங்ஙனே ப்ராபிக்கும்படி? இதற்கு முன்பு நிர்ஹேதுகமாக என்னை விஷயீகரித்தாற்போலே, இன்னமும்உன் க்ருபையாலே விஷயீகரித்தருளாய் என்கிறார்.*

*பூர்வோக்தமான ஆத்மஶரீரபாவம் இந்த ஸாமாநாதிகரண்யமென்னுமிடஞ் சொல்லிற்றாயிற்று.*

*ஒ.—ஆறும்பாட்டில், கீழிற்பாட்டில் சொன்னபொருளை விஸ்தரிக்கிறார். [என்னையென்று தொடங்கி] - என்னையாளுகிறவனே! ஸர்வலோகமும் நீயிட்டவழக்காம்படி யிருந்தவனே !*

*[அங்கவர்க்கென்று தொடங்கி] - அந்தலோகங்களிலுள்ளார்க்கு சமைத்த தெய்வமும் அவற்றினுடைய ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களும் அவற்றுக்குப்புறம்பு விஸ்த்ருதமான மஹதாதிகளும் நீயிட்டவழக்கு. [இன்னேயானால்]—இங்ஙனேயானால். [மங்கியவென்று தொடங்கி] - கார்யாகாரமழிந்து காரணவஸ்தமான ஸூக்ஷ்மப்ரக்ருதியும் அத்தையும் கூட வ்யாபிக்கவல்ல புருஷனும் நீயிட்டவழக்கு. வைஜீவஸமஷ்டியும் முக்தாத்மாக்களு மென்றுமாம்.*

---

ஆதாரமாய் இத்யாதி. இவ்விபூதி ஶரீரமானபடி எப்படியென்ன, ஶரீரலக்ஷணமுண்டாகையாலே என்கிறார் - ஆதாராதேய இத்யாதி. ஶரீரம்போலே அசேதநமன்றே, சிறிது சைதந்யமுண்டே யென்ன - அல்பசைதந்யமும் இத்யாதி. 'ஆருயிரேயோ! பெரியநீர்படைத்தங்குறைந்து அகலிடமுழுதும்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்த பேருயிரேயோ! அதுகடைந்தடைத்துடைத்தசீரியரேயோ! மனிசர்க்குத் தேவர்போலத் தேவர்க்கும் தேவாவோ! உலகங்கட்கெல்லாம் ஓருயிரேயோ! உன்னை நான் எங்குவந்துறுகோ?' இத்யந்வய:. (ரு)

ப.—அநந்தரம், கார்யகாரணாவஸ்த்த ஸகலபதார்த்தங்களும் நீயிட்டவழக்காம்படி ஸர்வாத்மபூதனாகையாலே எங்கேவந்து கிட்டுவது? என்கிறார்.

என்னை-என்னை, ஆள்வானே-(இவ்வளவும்வர) நிர்வஹித்தவனே ! ஏழுலகங்களும் - (ஸாதநாநுஷ்ட்டாநம்பண்ணுவார்க்கு அநுஷ்ட்டாநஸ்த்தலமாயும் ப்ராப்யமாயுமுள்ள) ஸமஸ்தலோகங்களும், நீயே-நீயிட்டவழக்கு: அங்கு-அந்தலோகங்களில், அவர்க்கு-(பலார்த்திகளான) ஆராதகர்க்கு, அமைத்த- (பலப்ரதமாகவும் ஆராத்யமாகவும்) சமைத்துவைத்த, தெய்வமும்-தைவங்களும், நீயே-நீயிட்டவழக்கு: அவற்றவை-அத்தைவங்கள் விஷயமாக, கருமமும்-(ஆராதநரூபமான அவ்வோ) கர்மங்களும், நீயே-நீயிட்டவழக்கு: பொங்கிய-(இந்தலோகங்களிற்காட்டில்) விஞ்சி, புறம்பால்-புறம்பான, பொருள்-(மஹதாதி ஸமஸ்த) பதார்த்தங்கள், உளவேலும்- (ப்ரமாணப்ரஸித்தமாய்த்தோன்றின) வுண்டாகிலும், அவையும்-அவையும், நீ-நீயிட்டவழக்கு: மங்கிய-(ஸம்ஹ்ருத்யவஸ்தமாய்) நாமரூபரஹிதமான, அருவாம் நேர்ப்பமும் - ஸூக்ஷ்மசிதசித்தும், நீயே - நீயிட்டவழக்காயிருக்கும்: வான்-பரமாகாசத்தில், புலனிறந்ததும்-அதீந்த்ரியமான முக்தாத்மவர்க்கமும், நீயே-நீயிட்டவழக்காயிருக்கும்: இன்னே-இப்படி, ஆனல்-ஸர்வாத்மபூத னதலினல், நான் - (த்வதேகநிர்வாஹ்யனான)நான், (யத்நம்பண்ணி), உன்னை - உன்னை, எங்கு - எங்கே, வந்து உறுகோ - வந்து கிட்டுவேன் ?

இ.—ஆறும்பாட்டில், உக்தார்த்தத்தை விஸ்தரிக்கிறார். [எங்கு வந்துறுகோ] - உன்னளவுஎது? நான்நிற்கிற நிலைஎது? நீ என்னைக் கிட்டுமதொழிய நான் ஸாதநாநுஷ்ட்டாநம்பண்ணி வந்துகிட்டவோ?

[என்னையாள்வானே] - இவ்வளவு புகுரநிறுத்தினவனே ! இவ்வளவு நான்வர நின்றேனாகிலன்றே மேலும் எனக்கு பரமாவது ? [ஏழுலகங்களும் நீயே] - ஸர்வலோகங்களும் நீயிட்டவழக்காம்படி யிருக்கிறவனே ! அபேக்ஷைவர்த்திக்கிற என்னையொழிய விமுகராயிருப்பார்தானோ ஸ்வாதீநராயிருக்கிறார்கள் ? அந்தலோகங்களிலுள்ளார்க்குச்சமைந்த தெய்வமும் நீயிட்டவழக்கு. அவர்களைக் குடிமைகொள்ளுகிற தேவர்களோ ஸ்வாதீநராயிருக்கிறார்கள்? அவற்றினுடைய ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களும் நீயிட்டவழக்கன்றே ? [பொங்கியவித்யாதி] - ஒன்றுக்கொன்று விஸ்த்ருதமாய், அண்டத்துக்குப்புறம்பாய், அதுக்குக்காரணமான மஹதாதிகளென்று சிலவுண்டாகில், அவையும் உன் அதீநம். [மங்கியவித்யாதி] - கார்யாகாரமழிந்து காரணாவஸ்தமாய்,ஸூக்ஷ்மமான அவ்யக்தமும் நீயிட்டவழக்கு. [வான்புலனிறந்ததும் நீயே] - அவ்யக்தத்தையும் வ்யாபிக்கவற்றாய், அதீந்த்ரியமான காரணாவஸ்த பத்தஸமஷ்டியும் நீயிட்டவழக்கு. [நீயின்னேயானல்] - அர்த்தஸ்த்திதி இதுவானபின்பு எங்குவந்துறுகோ? ஆரேனுமாக, ஒருவன் தன்காரியம் தான் நிர்வஹித்துக்கொள்ளுமன்றன்றே என்காரியம் எனக்குபரமாவது?என்றபடி. “மங்கியவருவாம் நேர்ப்பமென்ற-பத்தஸமஷ்டி” என்றும், “வான் புலனிறந்ததென்று - முக்தஸவரூபத்தையும் சொல்லுகிறது”என்றும் பிள்ளான். அப்போது, அஸத்ஸமமாய் ஸூக்ஷ்மமான ஆத்மஸமஷ்டியென்றும், வான்புலனிறந்ததென்று வானிலேயாய் - பரமபதத்திலேயாய், அதீந்த்ரியமான முக்தஸ்வரூபமென்றும் நிர்வாஹம்.

ஈடு.—ஆறும்பாட்டு. உக்தார்த்தத்தை விஸ்தரிக்கிறார்:- [எங்குவந்துறுகோ]- மேருஶிகரத்திலே நிற்கிறானொருவனை ஒரு†பங்கு சென்றுகிட்டவோ! [என்னையாள் வானே] - இவ்வளவும் வரநின்றேன் நானாகிலன்றோ, மேலும் நான் வந்து கிட்டப்பார்ப் பது? [ஏழுலகங்களும்நீயே] - ஸகலலோகங்களும் நீ யிட்டவழக்காம்படி இருக்கிற வனே! அபேக்ஷிக்கிற என்னையொழிய விமுகராயிருப்பார் தாமோ ஸ்வாதீநரா யிருக்கிறார்: [அங்கவர்க்கு அமைத்த தெய்வமும்நீயே] - அவர்களைக் குடிமைகொள்ளு கிற தேவதைகளும் நீயிட்டவழக்கு. [அவற்றவைகருமமும் நீயே] - அவ்வோ தேவதை களுடைய ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களோதான் அவர்கள்பக்கல்கிடக்கிறது? ஆக, இவ் வருகுண்டான கார்யவர்க்கம் த்வததீநம் என்னுமிடஞ் சொல்லிற்று. [பொங்கிய இத் யாதி] - ஒன்றுக்கொன்று விஸ்த்ருதமாய், அண்டத்துக்குப் புறம்பாய், அதுக்குக் காரண மான மஹதாதிகளென்று சிலவுண்டாகில், அவையும் உன்அதீநம். [மங்கிய இத்யாதி]- கார்யாகாரமடங்க அழிந்து ஸூக்ஷ்மாவஸ்த்தையைஹஜித்திருக்கிற அவ்யக்தமும் நீயிட்ட வழக்கு. [வான்புலனிறந்ததும் நீயே] - இவற்றின்படியன்றிக்கே, வானாய் - அவ்யக் தத்தையும் வ்யாபிக்கவற்றாய், சக்ஷுராதிகரணங்களுக்கு அவிஷயமாயிருந்துள்ள காரண மான ஜீவஸமஷ்டியும் நீயிட்டவழக்கு: பத்தாத்மஸ்வரூபமும் நீயிட்டவழக்கென்கை. [இன்னேயானால் - எங்குவந்துறுகோ] - அர்த்ததத்த்வம் இதுவானபின்பு, எங்கே வந்து கிட்டக்கடவேன்? "மங்கிய அருவாம் நேர்ப்பமென்று - பத்தஸமஷ்டி" என்றும், "வான்புலனிறந்ததென்று - முக்தஸ்வரூபத்தைச் சொல்லுகிறது" என்றும் பிள்ளான். அப்போது, அஸத்ஸமமாய் ஸூக்ஷ்மமான ஆத்மஸமஷ்டியென்றும், பரமபதத்திலேயாய் அதீந்த்ரியமான முக்தாத்மஸ்வரூப மென்றும் நிர்வாஹம். இத்தால் சொல்லிற்றாயிற்று என்? என்னில், - கார்யாவஸ்த்தையோடு காரணாவஸ்த்தையோடு முக்தனான அவஸ்த் தையோடு வாசியற உன்னை பார்த்திருக்கவேண்டினபின்பு, நான் என்காரியத்துக்குக் கடவேனாகையென்று ஒரு பொருளுண்டோ? (கூ)

---

ஆறும்பாட்டு.—எங்குவந்துஇத்யாதி. "எங்குவந்துறுகோ!" என்கிற ஸ்வரத்துக்குபாவம்- மேரு இத்யாதி. "எங்கு" என்று - அவனவர்த்திக்கிற ஸ்த்தாநத்தின் ஔந்நத்யமும், "வந்துறுகோ" என்று தம்முடைய அஶக்தியும் தோற்றுகிறது. இவ்வளவும்வா - உன்பக்கல் ருசிபிறக்குமளவும் வா என்றபடி. "அங்கவர்க்கு" இத்யாதிக்கு அவதாரிகை - அபேக்ஷ இத்யாதி. "பொங்கிய -" ஒன்றுக்கொன்று தஶகுணிதமாய் என்றபடி. "பொருள்" என்று - மஹதஹங்காராகாஶ வாயு அக்நிஜல ஷடாவரணத்தைச் சொல்லுகிறது. "உளவேலும்" என்கிற யஷிஶப்தம் - வார்த்தைப் பாடு. "நேர்ப்பம்-" அவ்யக்தமென்றபடி. "வானாய்" என்றதின் விவரணம் - அவ்யக்தத்தையும் வ்யாபிக்கவற்றாய் என்றது: அதாவது - ஜ்ஞாநத்வாரா விபுவாய், அத்தாலே வ்யாபிக்கவற்றாய் என்றபடி. ப்ரக்ருதியிலே லீநமாய்க் காரணமான ஜீவஸமஷ்டியு மென்றபடி. பிள்ளான் நிர்வாஹத் துக்கு, ப்ராக்ருத்யாத்யாவரண ஸப்தகத்தையும் - பொருளென்கிறது. ஶப்தார்த்தம் - அப்போது இத்யாதி. நேர்ப்பம் - ஆத்மா. 'என்னையாள்வானே' என்று தொடங்கி, "இன்னேயானால்-எங்குவந்து றுகோ" இத்யந்வய:. (கூ)

† பங்கு-நொண்டியாயிருப்பவன்.

## ஏழாம் பாட்டு.

**இறந்ததும்நீயேயெதிர்ந்ததும்நீயே நிகழ்வதோநீயின்னேயானல் [யேன்
சிறந்தநின்தன்மையதுவிதுவுதுவேன்றுஅறிவோன்றுஞ்சங்கிப்பன்வினை
கறந்தபால்நெய்யே! நெய்யினின்சுவையே! கடலினுளமுதமே! அமுதிற்
பிறந்தவின்சுவையே! சுவையதுபயனே! பின்னைதோள்மணந்தபேராயா!**

*ஆ.—[இறந்ததும்நீயே] – பூதஃவிஷ்யத்வர்த்தமாந ஸகலஜந்துஜாதத்துக்கும் ஆத்மாவாய் ரக்ஷகனயிருந்த உன்னுடைய இந்த நிரவயிக காருண்யத்தையும் பொய்யோவென்று ஶங்கியாநின்றேன். இப்படி அதிஶங்கைபண்ணுவானென் ? என்னில்,—நிரவயிக ஹோக்யஃதனயிருந்த உன்னைக் காணப்பெறுதொழிந்தால் ஶங்கை பிறவாதோ? என்கிறார்.*

*ஒ —ஏழாம்பாட்டில், ஜகத்தடைய உனக்குஶேஷமாய், அதுக்குநீயே நிர்வாஹகனபிருத்தி என்னும் இவ்வறிவொன்றுங் கொண்டு யரித்திருக்கிறநான், கர்மத்தாலே யிதுவும் பொய்யோவென்று ஶங்கியாநின்றேன் என்கிறார்.*

*[இறந்ததென்றுதொடங்கி]- காலத்ரயவர்த்திபதார்த்தங்களும்நீயிட்டவழக்கு. இங்ஙனேயாகையாலே ஶேஷியாயிருக்கிறஉனக்கு ஶேஷம் ஸகலபதார்த்தங்களும். [கறந்தபால் நெய்யென்று மேலுக்கு] - பால்தொடக்கமாக ஒன்றுக்கொன்று விலக்ஷணமான பதார்த்தங்களை அவனுடைய ஹோக்யதைக்கு ஸத்ருஶமாகச்சொல்லி, அவன்படிக்கு அவையும் போராமையாலே அதுதன்னையே சொல்லுகிறார். [கறந்தபால்] - கறந்தபோதை ரஸத்தை நினைக்கிறது. [சுவையதுபயனே] - ரஸாநுஃவத்தால் வந்த ஸுகம். இங்குப்பேசின ஹோக்யதாப்ரகர்ஷமுண்டாயிருக்க, இவர்க்கு அப்போதே கிடையாமை அதிஶங்காஹேது என்று கருத்து.*

*ப.—அநந்தரம், ஸர்வப்ரகார ஹோக்யஃதனை நீ, காலோபாதிகமாயும் தேஶோபாதிகமாயுமுள்ள ஸமஸ்தபதார்த்தங்களையும் ப்ரகாரமாக உடையையாயிருப்புதி என்கிற இத்தத்த்வஜ்ஞாநத்தையும் ஶங்கிக்கும்படி பண்ணுகின்றது உன்னைக் கிட்டப்பெறாத இழவு என்கிறார்.*

*கறந்த – கறந்தபோதே, பால்–(ஸ்வாஃாவிக ரஸத்தையுடைத்தான) பாலாய், நெய்யே - (அதில் ஸாராம்ஶமான) நெய்யாய், நெய்யின் - நெய்யினுடைய, இன்- இனிய, சுவையே - ரஸமாய், (இப்படி லௌகிகஹோக்யமன்றியே, திவ்யஹோக்யமாம்படி), கடலினுள் - கடலிலேபிறந்த, அமுதமே - அம்ருதமாய், அமுதில் - அந்த அம்ருதத்திலே, பிறந்த - உத்பந்நமாய், இன்சுவையே - (லோகோத்தரமான) இனிமையாய், சுவையது - அவ்வினிமையால்பிறந்த, பயனே - ப்ரயோஜநமான ஸுகமாய்,(இப்படி ப்ராக்ருத ஹோக்யமாமளவன்றியே, அநந்யப்ரயோஜநர்க்கு அதிஶயித ஹோக்யபூதனும்படி),பின்னை-நப்பின்னைப்பிராட்டி,தோள் - திருத்தோளோடே,மணந்த- ஸம்ஶலேஷித்த, பேராயா - மஹாப்ரஃாவனை க்ருஷ்ணனே ! வினையேன்-உன்னுடைய நிரதிஶயஹோக்யதையை அநுஃவிக்கப்பெறாத) பாபத்தையுடைய நான், இறந்ததும் நீயே எதிர்ந்ததும்நீயே நிகழ்வது ஓ நீ - பூதஃவிஷ்யத்வர்த்தமாந காலோபலக்ஷித ஸகல*

பதார்த்தங்களும் (தனித்தனியே) நீயிட்டவழக்கு; இன்னே - இப்படி, ஆனால் - ஆனபின்பு, அது-தூரஸ்த்தமாயும், இது-ஸந்நிஹிதமாயும், உது - அதூர விப்ரக்ருஷ்டமாயுமுள்ள தேசோபலக்ஷித ஸகலபதார்த்தங்களும், சிறந்த - விலக்ஷணமான, நின் - உன்னுடைய, தன்மை - ஸ்வபாவங்கள், என்று-எனறு,
ஜ்ஞாநம், ஒன்றும் - ஒன்றையுமகப்பட, சங்கிப்பன் - குலையப்புகுகிறதோ என்று ஶங்கியாநிற்பன்.

இ.—ஏழாம்பாட்டில், ஸகலபதார்த்தங்களும் உனக்கு ப்ரகாரதயாஶேஷமாய், ப்ரகாரியானநீயே அவற்றுக்குநிர்வாஹகனென்னும் அறிவொன்றும்கொண்டு தரித்திருக்கிற நான், என்பாபத்தாலே அதிலும் அதிஶங்கை பண்ணுநின்றேனென்கிறார்.

[இறந்தது இத்யாதி] - காலத்ரயத்திலும் வர்த்திக்கிற ஸகலபதார்த்தங்களும் நீயிட்டவழக்கு. தாந்தாமுள்ள காலத்தில் அவ்வோபதார்த்தங்களுக்கு ஶேஷிகளாயிருப்பாரில் வ்யாவ்ருத்தி. [சிறந்தநின்தன்மை அதுவிதுவுதுவென்று] - தூரஸ்யமாயும் ஸந்நிஹிதமாயும் அதூரவிப்ரக்ருஷ்டமாயுமிருக்கிற ஸகலபதார்த்தங்களும் ஶேஷித்வத்தாலே சிறந்திருந்துள்ள உன்னுடையப்ரகாரம். 'இன்னேயானால் - இறந்ததும்நீயே' என்னுதல். 'இன்னேயானால் - சிறந்தநின்தன்மை' என்னுதல் - தூரஸ்யமாயும், ஸந்நிஹிதமாயும், அதூரவிப்ரக்ருஷ்டமாயுமுள்ள பதார்த்தங்கள் உனக்குப்ரகாரமாயற்றால் காலத்ரயவர்த்தி ஸகலபதார்த்தங்களும் நீயிட்டவழக்கென்னுதல், காலத்ரயவர்த்தி ஸகலபதார்த்தங்களும் நீயிட்டவழக்காகையாலே ஸகலபதார்த்தங்களும் உனக்கு ப்ரகாரமென்னுதல். [அறிவொன்றும் ஶங்கிப்பன்] - ஶரீரமதமான தேஹம் ஆத்மாவுக்காறாற்போலே, எல்லாருடைய தேஹங்களும் ப்ரகாரியான உன்னதென்னும் ஸம்பந்தஜ்ஞாநமொன்றையுமாயிற்று எனக்கு உஜ்ஜீவநஹேதுவாக நினைத்திருப்பது; அதொன்றிலும் அதிஶங்கை பண்ணுநின்றேன். [வினையேன்] - கலக்கத்தாலே அதிஶங்கைபண்ணுங்காட்டில் அவன்ஸ்வரூப மில்லையாகாதிறே; எனக்கு இப்புத்திபிறக்கைக்கடி என்பாபமிறே. கீழில் அதிஶங்கைக்கும் இதுக்கும் நெடுவாசியுண்டு. ஆஶ்ரித பரதந்த்ரனென்கிற ஸ்வபாவத்திலே அதிஶங்கைபண்ணினால், ஆஶ்ரயணத்திற்குறையாலே அங்கீகரித்திலனென்று நினைத்திருக்கலாம்; இதில் அவனுடைய ஸத்பாவத்திலே அதிஶங்கைபண்ணுகிறதிறே. ஸர்வப்ரகாரியாய்க் கொண்டிறே அவனுடையஸத்தை. ஸ்வவ்யதிரிக்தங்கள் ப்ரகாரமாய்க்கொண்டிறே யுண்டாவது? இப்படிஸ்வரூபத்திலே யதிஶங்கை வர்திக்கைக்கடியென்? என்னில், அதிஶங்காஹேது சொல்லுகிறது: [கறந்த பால் இத்யாதி] - வ்யதிரேகத்தில் ஜமத்துஉபஸம்ஹ்ருதமென்று நினைக்கவேண்டும்படியான உன்போக்யதாப்ரகர்ஷம் அதிஶங்காஹேது. [கறந்தபால்] - கறந்தபோதே ரஸத்தை நினைக்கிறது; கறவாதபாலில்லையிறே; உபாதிவிஶேஷங்களால் வந்த ரஸவிஶேஷத்தை வ்யாவர்த்திக்கிறது. [நெய்யே] - அதில் ஸாராம்ஶம். [நெய்யினின்சுவையே] - நெய்யின் இன்சுவையானவனே! மஹத்வத்தைக்கலக்கி அதில் ஸாரமான அம்ருதமானவனே! [அமுதிற்பிறந்த இன்சுவையே] - அந்த அம்ருதத்திற்பிறந்த இனியரஸமானவனே! [சுவையதுபயனே] - ரஸாநுபவத்தால் வந்த ஸுகமானவனே! ஒன்றிலொன்று மேற்பட்ட ரஸங்களைச்சொல்லி, அவைபோராமையாலே தன்னையே சொல்லுகிறது. [பின்னைதோள் மணந்தபேராயா] - ஒருமிதுநாநுபவமாயிற்று இவர்க்குபோக்யம்,

*ஸம்ஸாரியை ஆநந்திப்பிக்குமாபோலேயாயிற்று ஆநந்தமயனை அவளுகப்பிப்பது; இருவருடையவுஞ் சேர்த்தியழகாயிற்று இவர்க்குபோக்யம்.*

ஈடு.—ஏழாம்பாட்டு. ஸகலபதார்த்தங்களும் உனக்கு ப்ரகாரதயா ஶேஷமாய், நீ ப்ரகாரியாய், நீயே அவற்றுக்கு நிர்வாஹகனென்னும் அறிவொன்றுங்கொண்டு யிரித்திருக்கிற நான் என்பாபத்தாலே அதிலும் அதிஶங்கைபண்ணுகின்றேனென்கிறார்.

[இறந்தது இத்யாதி]-"இக்காலத்துக்கு நான் கடவேன், மற்றொருகாலத்துக்கு வேறேசிலர் கடவர்" என்றுதான் உன்னாலே சொல்லலாமோ? பூதகாலத்திலுள்ளாரோடு பவிஷ்யத்காலத்திலுள்ளாரோடு வர்த்தமாநகாலத்திலுள்ளாரோடு வாசியற எல்லாரும் த்வததீநர். "இன்னேயானால் - எங்குவந்துறுகோ" என்று கீழிற்பாட்டோடே அந்வயம். [சிறந்தநின்தன்மை அதுவிதுவுதுவென்று] - தூரஸ்தமாயும், ஸந்நிஹிதமாயும், அதூரவிப்ரக்ருஷ்டமாயுமுள்ள ஸகலபதார்த்தங்களும், ஶேஷித்வத்தாலே சிறந்திருந்துள்ள உன்னுடைய ப்ரகாரம். "இன்னேயானால் இறந்ததும்நீயே" என்னுதல், "சிறந்தநின்தன்மை" என்னுதல் - இப்படி காலத்ரயவர்த்தி பதார்த்தங்களும் நீ யிட்ட வழக்காகையாலே ஸகலபதார்த்தங்களும் உனக்கு ப்ரகாரமென்னுதல்; தூரஸ்த்தமாயும் ஸந்நிஹிதமாயும் அதூரவிப்ரக்ருஷ்டமாயுமுள்ள பதார்த்தங்கள் உனக்கு ப்ரகாரமாயற்றால் காலத்ரயவர்த்தி பதார்த்தங்களும் நீயிட்டவழக்கென்னுதல். [என்றறிவொன்றும் சங்கிப்பன்] - தன்னையொழிந்தவடங்கலும் தனக்கு ப்ரகாரமாய்த் தான் ப்ரகாரியாயிருக்கையாலே, இவற்றுக்கு வந்தது தனக்கு வந்ததாக நினைத்திருப்பானொருவனென்கிற அறிவாயிற்று, இவர்க்கு ஜீவிக்கைக்குஹேது; அதொன்றிலும் அதிஶங்கைபண்ணுகின்

---

*ஏழாம்பாட்டு.—இறந்ததும் இத்யாதி. "அதுவிதுவுது - சிறந்தநின்தன்மை - என்றறிவொன்றும் சங்கிப்பன்வினையேன்" என்கிறவற்றைக்கடாக்ஷித்து அவதாரிகை - ஸகல இத்யாதி. "இறப்பு எதிர்" என்று - காலபரமாகையாலே, "இறந்தது, எதிர்ந்தது" என்றது - தத்தத்கால வர்த்தி பதார்த்தவாசகமாகிறது.*

*ஏககாலவர்த்திபதார்த்த நிர்வாஹக னென்னாதே, "காலத்ரயவர்த்திபதார்த்தநிர்வாஹகன் நீ" என்றதுக்கு பாவம் - இக்காலத்துக்கு இத்யாதி. பதார்த்தம் - பூதகாலத்தில் இத்யாதி. "இன்னேயானால் -" இப்படியானாலென்றபடி. "இறந்ததும் நீயே" என்றுதொடங்கி, "நிகழ்வதோநீயின்னேயானால் - எங்குவந்துறுகோ" என்று கீழிற்பாட்டோடே அந்வயமானபோது, "அதுவிதுவுது - சிறந்தநின்தன்மை - என்றறிவொன்றும் சங்கிப்பன் வினையேன்" என்று மேலே அந்வயம். "இன்னேயானால்" என்றது - இப்பாட்டுக்குஶேஷமாக யோஜநாத்வயம் அருளிச்செய்கிறார் - இன்னேயானால் இத்யாதி வாக்யத்வயத்தாலே. த்ருதீயயோஜநாவிவரணம் - இப்படி காலத்ரய இத்யாதி. இந்தயோஜனையில், "இன்னேயானால்" என்றது - இப்படியாகையாலே என்றபடி. த்விதீயயோஜநாவிவரணம் - தூரஸ்த்தமாயும் இத்யாதி. த்விதீயயோஜனையில், "அதுவிதுவுதுவென்கிறவை - சிறந்தநின்தன்மை - இன்னேயானால் - இறந்ததும்நீயே எதிர்ந்ததும் நீயே நிகழ்வதோநீயென்கிற - அறிவொன்றும் சங்கிப்பன்வினையேன்" என்று அந்வயம். த்ருதீயயோஜனையில், "இறந்ததும்நீயே எதிர்ந்ததும்நீயே நிகழ்வதோநீயின்னேயானால் - அதுவிதுவுது - சிறந்தநின்தன்மை - என்றறிவொன்றும் சங்கிப்பன்வினையேன்" என்று அந்வயம். "'அதுவிதுவுது - சிறந்தநின்தன்மை' என்றது- †'ஸர்வம் ஸமாப்நோஷி' என்றாற்போலே; 'இறந்ததும் நீயே' இத்யாதி- †'ததேவாஸ்மி ஸர்வம்' என்றாற்போலேயிருக்கிறது" என்று அருளிச்செய்வர்.*

*இவவறிவிலே ஶங்கிக்கிறேனென்கைககு, இத்தைத் தஞ்சமாக நினைக்கைக்கு ஹேதும்வ*

**இவற்றுக்குவந்தது** *இத்யாதி. "வினையேன்" என்றதுக்குக் கீழில் பதத்தோடே ஸங்கதியருளிச்*

றேன், அது எனக்குக் கார்யகரமல்லாமையாலே. [விணையேன்]- கலக்கத்தாலே அதிஶங்கைபண்ணுங்காட்டில் அவன்ஸ்வரூப மில்லையாகாதிறே: எனக்கு இப்புத்தி பிறக்கைக்கடி என்பாபமிறே. †"𑌸𑌙𑍍𑌗𑍇 𑌮𑌦𑍍𑌭𑌾𑌗𑍍𑌯𑌸𑌙𑍍𑌕𑍍𑌷𑌯𑌾𑌤𑍍" (ஶங்கேமத்பாக்யஸங்க்ஷயாத்)-கீழிலதிஶங்கைக்கும் இதுக்கும் நெடுவாசியுண்டு. ஆஶ்ரிதபரதந்த்ரனென்கிற ஸ்வபாவத்திலே அதிஶங்கைபண்ணிலுல்ஆஶ்ரயணத்திற் குறையாலேயென்று நினைத்திருக்கலாம்; இதில் அவனுடைய ஸத்பாவத்திலேயிறே அதிஶங்கை. ப்ரகாரியாய்க் கொண்டிறே அவனுடைய ஸத்தை; ஸ்வவ்யதிரிக்தங்கள் அவனுக்கு ப்ரகாரமாய்க்கொண்டிறே உண்டாவது? இப்படி ஸ்வரூபத்தில் அதிஶங்கை வர்த்திக்கைக்கு அடியேன்? என்னில்; - அதிஶங்காஹேது சொல்லுகிறது:[கறந்தபால் இத்யாதி]-வ்யதிரேகத்தில் ஜகத்து உபஸம்ஹ்ருதமென்று நினைக்கவேண்டும்படியான உன்போக்யதாப்ரகர்ஷம் அதிஶங்காஹேது. [கறந்தபால்] – கறந்தபோதை ரஸத்தை நினைக்கிறது: அல்லது கறவாதபாலில்லையிறே: உபாதிவிஶேஷத்தால்வந்த ரஸவிஶேஷத்தை வ்யாவர்த்திக்கிறது. [நெய்யே] - அதில் ஸாராம்ஶம். [நெய்யினின்சுவையே] - நெய்யில்இனியசுவையானவனே! [கடலினுளமுதமே] - மஹத்தத்த்வத்தைக்கலக்கி அதில் ஸாராம்ஶமாக வாங்கின அம்ருதம் போலே போக்யனுனவனே! [அமுதில்பிறந்த இன்சுவையே] - அதில் ரஸாம்ஶத்தைச்சொல்லுகிறது. [சுவையதுபயனே]- ரஸாநுபவத்தால்வந்த ஸுகரூபமானவனே! ஒன்றிலொன்று மேற்பட்ட ரஸாம்ஶங்களைச்சொல்லி, அதுபோராமையாலே தன்னையே சொல்லுகிறது. [பின்னைதோள்மணந்தபேராயா] - ஒருமிதுநாநுபவமாயிற்று இவர்க்கு போக்யம். ஸம்ஸாரியை அவன் ஆநந்திப்பிக்குமாபோலேயாயிற்று, ஆநந்தமயனை அவள் உகப்பிக்கும்படி. இருவருடைய சேர்த்தியழகாயிற்று இவர்க்கு போக்யம். (எ)

*செய்கிறுர் - கலக்கத்தாலே இத்யாதி வாக்யத்வயத்தாலே. உக் ப்ரமாணம் - 𑌸𑌙𑍍𑌗𑍇 இத்யாதி. கீழிலதிஶங்கைக்கும் இதுக்கும் வாசியேதென்ன - கீழில் இத்யாதி. கீழிலதிஶங்கையென்றது - நாலாம்பாட்டிலதிசங்கை. இதுக்கும் - இப்பாட்டிலதிஶங்கைக்கு மென்றபடி. ப்ரகாரித்வத்திலேயன்றோ அதிஶங்கை? ஸத்பாவத்திலேயோ? என்ன - ப்ரகாரியாய் இத்யாதி. ப்ரஸங்காத் ப்ரதிகோடியையும் காட்டுகிறுர் - ஸ்வவ்யதிரிக்த இத்யாதி. அந்தஹேதுவேதென்ன - வ்யதிரேகத்தில் இத்யாதி. பால்என்னுமல், "கறந்தபால்" என்று விஶேஷித்ததுக்கு ப்ரயோஜநமும், வ்யாவர்த்யமும் அருளிச்செய்கிறுர் - கறந்தபோதை இத்யாதி வாக்யத்ரயத்தாலே. உபாதிவிஶேஷமாவது - காய்ச்சுகை முதலானவை. மேலுக்கு அவதாரிகை - ஒன்றிலொன்று இத்யாதி. தன்னை - அவன்தன்னை என்றபடி. பேராயா - பெரிய இடையனே! கேவலம் அவனைச்சொல்லாதே, "பின்னைதோள்மணந்த" என்றுவிஶேஷித்ததுக்கு பாவம் - ஒருமிதுந இத்யாதி. "பின்னைதோள்மணந்த" என்றத்தால் பலிதம் - ஸம்ஸாரியை இத்யாதி. "ஒருமிதுநாநுபவம்" இத்யாதியின் விவரணம் - இருவருடைய இத்யாதி. பேராயா - பெரியோனே என்றுமாம். 'கறந்தபால் நெய்யே' இத்யாரப்ய, 'மணந்தபேராயா - இறந்ததும் நீயே' என்றுதொடங்கி, 'இன்னேயானுல் - அதுவிதுவுது - சிறந்தநின்தன்மை - என்றறிவொன்றும் சங்கிப்பன் விணையேன்' இத்யந்வய:. இது மூன்றும் யோஜனையில். "என்றறிவொன்றும்" என்றது - என்கிற ஜ்ஞாநமொன்றையு மென்றபடி; என்றறிகிற அறிவொன்றுமென்றுமாம். (எ)*

† ராமா-ஸுந்தர-(உ-கூ-கங)

## எட்டாம் பாட்டு.

**மணந்தபேராயா ! மாயத்தால்முழுதும் வல்வினையேனையீர்கின்ற**
**குணங்களையுடையாய்! அசுரர்வன்கையர்கூற்றமே! கொடியபுள்ளுயர்த்தாய்!**
**பணங்களாயிரமுடையபைந்நாகப்பள்ளியாய்!பாற்கடற்சேர்ப்பா!**
**வணங்குமாறறியேன் மனமும்வாசகமும்செய்கையும்யானும்நீதானே.**

**ஆ.**—(மணந்தபேராயா.) - உம்முடையஅபேக்ஷிதம் செய்யவேண்டுமாகில் ஓரஞ்சலிமாத்ரமாகிலும் பண்ணமாட்டீரோ? என்னில்;—அதுக்கு உத்தரம் மேலிட்டு, ப்ரவணஸ்வபாவனாகையாலும், "ஹ்ருதயாந்யாததே நவஜநஸ்ய குணவத்தயா" என்னும் ப்ரக்ரியையாலே முழுதும் வல்வினையேனையிருந்த என்னையுங்கூட ஈராநின்ற ஸௌசீல்யாதி கல்யாணகுணங்களை உடையையாயிருக்கையாலும், ஆச்ரிதவிரோதிநிரஸநைக ஸ்வபாவனாயிருக்கையாலும், ஆச்ரிதருடைய ஆபத்துக்கு உதவவருகைக்கீடான பெரிய திருவடியை திவ்யவாஹநமாக உடையவனாகையாலும், திருநாட்டில்நின்றும் வந்து ஆச்ரிதருடைய ஆபத்தைப்போக்கப் பற்றாமை அணித்தாகத் திருப்பாற்கடலிலேவந்து திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகையாலும், மத்ஸ்வரூபகரணசேஷ்டிதங்கள் த்வத்ஸங்கல்பாயத்தமாய் த்வதாத்மகமாய் த்வச்சரீரமாகையாலும், என்னால் ஒரு செயலில்லை ; ஆதலால், வணங்குமாறு அறியேனென்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், ஏதேனுஞ்செய்தாலும் நீரே யத்நம்பண்ணவேண்டாவோ ? என்னில்,—ஆத்மாத்மீயங்களடைய உன்னதாய்,எனக்கென்ன ஒருஉபகரணமில்லாமையாலே என்னால் செய்யலாவதொன்றுமில்லை; ரக்ஷிக்கவல்லையுமாய் ரக்ஷணஸ்வபாவனுமான நீயே வந்து என்னை விஷயீகரித்தருளவேணுமென்கிறார்.

[மணந்த என்றுதொடங்கி] - அத்யபிநிவிஷ்டனாய்க்கொண்டு நப்பின்னைப்பிராட்டியுடைய திருத்தோள்களையணைந்த பேராயனே ! ஒன்றொழியாமே எல்லாம் என்னையீரும்படியான குணங்களையுடையவனே ! இப்போது காணப்பெறாத இன்னாப்பாலே, 'வல்வினையேன்' என்கிறார். [அசுரர்வன்கையர் கூற்றமே] - வன்கையரான அஸுரர்களுக்கு ம்ருத்யுவானவனே ! [கொடிய புள்ளுயர்த்தாய்] - கண்டதிசையிலே ப்ரதிபக்ஷத்தை மாய்க்கவல்ல பெரிய திருவடியைக் கொடியாகவுடையவனே ! [பணங்களென்று தொடங்கி]- உன்னோட்டை ஸ்பர்சத்தாலே விகஸிதமான ஆயிரம்பணங்களையும் கண்வளரப்போரும்படி விஸ்தீர்ணமான உடம்பையுமுடைய திருவநந்தாழ்வானைப் படுக்கையாகக்கொண்டு ரக்ஷ்யஜந்துக்களுக்கு அணித்தாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறவனே !

ப.—அநந்தரம், ஆச்ரிதஸம்ச்லேஷார்த்தமாகவும் விரோதிநிரஸநார்த்தமாகவும் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற நீயிட்ட வழக்காம்படி என் கரணங்களும் கரணியான நானும் உனக்கு ப்ரகாரமானபின்பு, நான் வணங்குவன் என்றொரு ப்ரகாரம் அறிகிறிலேனென்கிறார்.

மாயத்தால் - ஆச்சர்யசேஷ்டிதங்களாலே, முழுதும் - அகிலபதார்த்தங்களையும், மணந்த - அபிமதையோடே செறிந்து உகப்பிக்கும், பேராயா - பெருமையை

யுடைய க்ருஷ்ணனாய், வல்வினையேனை - அப்படி ஸம்ஶ்லேஷிக்கப்பெறாத ப்ரபலபாபத்தையுடையேனான என்னை, ஈர்கின்ற - ஸர்வகாலமும் ஈராநிற்கிற, குணங்களை - (ஶீலஸௌலப்ய ஸௌந்தர்யாதிகளான) குணங்களை, உடையாய் - (ஸ்வஹாவமாக) உடையையாய், வன்கையசுரர் - (ஆஶ்ரிதவிரோதிகளான) ப்ரபலாஸுரர்க்கு, கூற்றமே - ம்ருத்யுவாய், கொடிய - (அவர்கள் கண்டபோதே) முடியும்படியான, புள் - பெரியதிருவடியை, உயர்த்தாய் - (கொடியாக) உடையையாய், (இப்படி ஜகத்ரக்ஷணார்த்தமாக), ஆயிரம் பணங்கள் - ர, உடைய - உடையனுமாய், பை - அதிவிஸ்தீர்ணமான, நாகம் - நந்தாழ்வானாகிற, பள்ளி - படுக்கையை, ஆய் - உடையையாய்க்கொண்டு, பாற்கடல் - திருப்பாற்கடலிலே, சேர்ப்பா - கண்வளர்ந்தருளுகிறவனே! மநமும் வாசகமும் செய்கையும் - மநோவாக்காயரூப கரணங்களும், யானும் - (கரணியான) நானும், (உனக்கு ப்ரகாரமாய்க்கொண்டு), நீதானே - நீதானேயாம்படியாயிருந்தது; (ஆகையால்), வணங்கும் - வணங்குகைக்கு, ஆறுஅறியேன் - ஒருகர்த்தாவையும் லேன், கர லேன்.

இ:—எட்டாம்பாட்டில், ஏதேனுஞ்செய்தாலும் பேறுஉம்மதாய் ஆஶ்ரயிக்கைக்குக் காரணமும்உண்டானால் நீரே யத்நிக்கவேண்டாவோ? என்னில், — ஆத்மாத்மீயங்களடைய உன்ன நமானபின்பு என்னால் செய்பலாவதொன்றில்லை; நீயே ரக்ஷிக்க வேணு மென்கிறார்.

[மணந்தபேராயா மாயத்தால்] - அ ஹி கிவேஶத்தாலே நப்பின்னைப்பிராட்டியோடே ஸம்ஶ்லேஷித்த பேராயனே! நப்பின்னைப் பிராட்டியிற்காட்டில் இடைத்தனத்தில் க்ருஷ்ணனுக்குஉண்டான ஏற்றம். [வல்வினையேனை முழுதுமீர்கின்ற குணங்களையுடையாய்] - குணங்களிலே ஒருகுணம் ஆஶ்வாஸஹேதுவாகிறதில்லை. உன்குணமாகையும் நானாகையுமே ஈருகைக்கு வேண்டுவது. எல்லாமொக்க ஈரும்படியான குணங்களையுடையவனே! [வல்வினையேன்] - சிலர் குணஜ்ஞாநத்தாலே ஜீவித்திருக்க, அதுவும் வாயகமாம்படி பாபத்தைப்பண்ணினேன். "பஹவொ நூவகஶ்யாணமுணாஃவா ஸ்யூஸநிகெ". [ஈர்கின்ற] - நலிந்ததாய் விடுகிறதில்லை: அம்புபட்டநோவுக்கு மருந்திட்டாற்றலாம், குணஜ்ஞாநத்தாலேவந்த நோவுக்குப் பரிஹாரமில்லை. [அசுரர்வன்கையர்கூற்றமே] - கண்பாராதே நலியும் அஸுரர்களுக்கு அந்தகனானவனே! அநுகூலரை குணங்களாலேயழிக்கும்: ப்ரதிகூலரை ஆயுதத்தாலேயழிக்கும். [கொடியபுள்ளுயர்த்தாய்] - உன்னிலும் கண்டபோதே ப்ரதிபக்ஷத்தை மாய்க்கவல்ல பெரியதிருவடியைக் கொடியாக உடையவனே! ப்ரதிபக்ஷத்தை முடிக்கைக்குத் தான் வேண்டா, கொடியைக்காணவே முடியும் அத்தனை. [பணங்கள் இத்யாதி] - ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதமான ஃபணங்களையுடையனாய், ஸுவதநூவஜநித ப்ரீதிக்குப் போக்குவிடுகைக்குப் பல தலையையுடையனாய், தானும்பிராட்டியும் பரிமாறப்புக்கால் விஸ்தீர்ணமாயிருக்கும் உடம்பையுடையனான திருவனந்தாழ்வானைப் படுக்கையாகயுடையவனே! [பாற்கடல் சேர்ப்பா] - இப்படிப்பட்ட திருவநந்தாழ்வானை ஆஸநமாகக்கொண்டு பரமபதத்திலேயிருக்கையன்றிக்கே, ஆர்த்தரக்ஷணத்துக்கு அணித்தாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறவனே! [வணங்குமாறறியேன்] - பரமபதத்தைவிட்டுத் திருப்பாற்கடலிலே வந்து சாய்ந்து என்னுடைய ரக்ஷணத்துக்கு முற்பாடனாயிருக்கிற உனக்கு நானொரு

கிஞ்சித்காரம் பண்ணினேனாக ஒருவிரகறிகிறிலேன். உமக்கு மநோவாக்காயங்களுண்டு; அவற்றுக்கு ஆஶ்ரயமான நீர்உண்டு; வணங்கத்தட்டென்? என்ன, [மனமுமித்யாதி]- அவற்றினுடைய ஸத்பாவமே யமையுமோ? அவை ஸ்வாதீநமாகவேண்டாவோ? மநோவாக்காயங்களினுடைய ஸத்தை நீயிட்டவழக்கன்றோ?

ஈடு.— எட்டாம் பாட்டு. ஏதேனும் செய்தாலும் பேறு உம்மதாய் உமக்கு ஆஶ்ரயிக்கைக்குக் கரணங்களுமுண்டானால் நீரே யத்நிக்கவேண்டாவோ? என்ன, - ஆத்மாத்மீயங்களடைய உன் அதீநமானபின்பு என்னால் செய்யலாவது ஒன்றில்லை, நீயே ரக்ஷிக்கவேணுமென்கிறார்.

[மணந்தபேராயா மாயத்தால்]- அபிநிவேஶத்தாலே நப்பின்னைப்பிராட்டி தோளோடே ஸம்ஶ்லேஷித்த பேராயனே! நப்பின்னைப்பிராட்டியிற்காட்டில் இடைத்தனத்தில் க்ருஷ்ணனுக்குஉண்டானஏற்றம். [முழுதும்வல்வினையேனையீர்கின்றகுணங்களையுடையாய்] - (முழுதும் - ஈர்கின்றகுணங்கள்) சிலகுணங்கள் ஈரச் சிலகுணங்கள் தாரகமாகையன்றிக்கே, எல்லாம் ஒக்க ஈரும்படியான குணங்களையுடையவனே! உன்குணங்களாகையும் நானாகையுமே நோவுபடுகைக்குஅடி. [வல்வினையேன்]- சிலர் குணஜ்ஞாநத்தாலே ஜீவித்திருக்க, அது பாதகமாம்படி பாபந்தைப்பண்ணினேன். [ஈர்கின்ற] - நலிந்து தாய் விடுகிறதில்லை: அம்புபட்டபுண் மருந்திட்டு ஆற்றலாம், குணத்தால் வந்தநோய்க்குப் பரிஹாரமில்லையே. [அசுரர்வன்கையர்கூற்றமே] - முன்கை மிடுக்கரான அஸுரர்க்கு அந்தகன் தண்ணீரென்னும்படி கூற்றமானவனே! [கொடியபுள்ளுயர்த்தாய்] - கண்ட போதே ப்ரதிபக்ஷத்தை மாய்க்கவல்ல பெரியதிருவடியைக் கொடியாகவுடையவனே! ப்ரதிபக்ஷத்தை முடிக்கைக்குத் தான் வேண்டா, கொடியைக்காணவமையும். [பணங்கள் இத்யாதி] - ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதமான ஃபணங்களையுடையனாய், பகவதநுபவ ஹர்ஷத்துக்குப் போக்குவீடாகப் பலதலைகளையும் உடையனாய், ஸர்வேஶ்வரனுக்கும் பிராட்டிமார்க்கும் நினைத்தபடி பரிமாறுகைக்கீடான பரப்பையுடையனாயிற்றுத் திருவநந்தாழ்வா னிருப்பது; அப்படிப்பட்டிருக்கிறவனைப் படுக்கையாக உடையவனே! [பாற்கடற் சேர்ப்பா] - ஆஶ்ரிதர்கூக்குரல் கேட்கைக்காகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தவனே! [வணங்குமாறுஅறியேன்] - பரமபதத்தைவிட்டுத் திருப்பாற்கடலிலே சாய்ந்து என்

---

எட்டாம்பாட்டு—மணந்த இத்யாதி. "வணங்குமாறறியேன், மனமும் வாசகமும் செய்கையும்யானும்நீதானே" என்றவற்றைக் கடாக்ஷித்து அவதாரிகை-ஏதேனும் இத்யாதி.

"மாயம் -" அபிநிவேஶம். "பேராயா" என்றதுக்கு அர்த்தம் - நப்பின்னை இத்யாதி. "முழுதுமீர்கின்ற" என்றதுக்கு பாவம் - சிலகுணங்கள் இத்யாதி. "வல்வினையேனையீர்கின்ற குணங்கள்" என்றுகூட்டி பாவம் - உன்குணங்களாகையும் இத்யாதி. விஶ்லேஷவேளையிலே குணங்கள் பாதகமாகை ஸஹஜமாயிருக்க, "வல்வினை" என்று நோவுபடுவானென்? என்ன - சிலர் இத்யாதி.குணஜ்ஞானத்தாலேயென்றது-"தவிம்ஶபவஹவொமாணாஃ" என்றத்தைப் பற்ற. வர்த்தமாநார்த்தம் - நலிந்துதாய் இத்யாதி. ப என்ன - அம்பு இத்யாதி. "வன்கையர், வன்கூற்றம்" என்று அந்வயித்து அதுக்கு வ்யாவர்த்யம் - முன்கை [illegible]யாதி. புள்ளின்கொடுமைசொல்லி, "உயர்த்தாய்" என்றதுக்கு பாவம் - ப்ரதிபக்ஷத்தை இத்[illegible]தி. "பணங்கள், ஆயிரம், பை" என்ற மூன்றுக்கும் அர்த்தம் - ஸ்வஸ்பர்ஶத்தாலே இத்யாதி. "சேர்ப்பா -" சேர்ந்தவனே. "வணங்குமாறறியேன்" என்று உபாயம் தேடுவதில், வணங்காதே வெறுமனே இருக்கவொண்ணாதோ? என்ன - பரமபதத்தை இத்யாதி. "ஆறு" என்றதுக்கு

னுடைய ரக்ஷணத்துக்கு முற்பாடனாயிருக்கிற உனக்கு நான் ஒரு கிஞ்சித்காரம் பண்ணினேனாகைக்கு ஒருவிரகறிகிறிலேன். 'அறியாதொழிகிறதேன்?' உமக்கு மனோவாக்காயங்களுண்டு, அவற்றுக்கு ஆஶ்ரயம் நீருண்டு, வணங்கத்தட்டேன்?' என்ன, - [மனமும் இத்யாதி] - எனக்காயிருப்பதொரு நெஞ்சும் வாக்கும் செய்கையும் எனக்காயிருப்பதொரு நானும் உண்டாகவேணுமே; எல்லாம் நீயிட்டவழக்காயன்றோ இருக்கிறது. வணங்கவேணுமென்னும் நினைவுண்டு, வணங்குப்ப்ரகாரம் அறிகிறிலேன். (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

யானும்நீதானேயாவதோமெய்யே அருநரகவையும்நீயானால்
வானுயரின்பமெய்திலென்? மற்றைநரகமேயெய்திலென்? எனினும்
யானும்நீதானாய்த்தெளிதோறும்நன்றும் அஞ்சுவன் நரகம்நானடைதல்
வானுயரின்டம்மன்னிவீற்றிருந்தாய்! அருளுநின் தாள்களையெனக்கே.

ஆ.—(யானும்நீதானே.) - உம்முடைய ஸ்வரூபமுட்பட ஸர்வமும் நானேயென்னுமிடம் அறிந்தீராகில் உமக்கு என்பக்கல் அலப்தாம்ஶமுண்டோ? என்னில்,—ஸர்வமும் நீயேயாதலால், இவ்விடத்தே யிருந்தத்தோடு திருநாட்டிலிருந்தத்தோடு வாசியில்லை நிரூபிக்கில்; அப்படியேயாகிலும், ஸர்வமும்நீயே யென்னுமிடத்தை அறியச்செய்தேயும், திருநாட்டிலே நீயேயாயிருக்குமிருப்பைக் காணாதேயிருக்கும் இவ்விருப்பாகிற நரகத்தை மிகவும் அஞ்சாநின்றேன்; அருளு நின்தாள்களை எனக்கே என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஸகலபதார்த்தங்களும் உனக்கு ஶேஷமானபின்பு, இந்தஜ்ஞாநத்தோடே ஸம்ஸாரத்திலேயிருந்தத்தோடு திருநாட்டிலே யிருந்தத்தோடு வாசியில்லையாகிலும், ஶேஷத்வ ஜ்ஞாநவிரோதியான ஸம்ஸாரத்திலேயிருக்க அஞ்சாநின்றேன்; இதுக்கு அநுகூலமான திருநாட்டிலே என்னைக் கொடுபோகவேணுமென்கிறார்.

[யானும்நீதானே யாவதோமெய்யே] - நானும் உனக்கே ஶேஷமென்னுமிடம் ஸத்யம். [அருநரகவையும்நீ] - மற்றும் ஸம்ஸாரத்திலுண்டான சேதநாசேதநபதார்த்தங்களெல்லாம் உனக்கே ஶேஷம். [ஆனால் என்றுதொடங்கி] - 'ஆனபின்பு ஶேஷத்வ ஜ்ஞாநத்தோடே திருநாட்டிலேபோய் நிரதிஶயாநந்தத்தைப் பெற்றிருந்தத்தோடு ஸ்வபாவத்துக்கும் ஶேஷத்வஜ்ஞாநத்துக்கும் எதிர்த்தலையான ஸம்ஸாரத்திலே யிருந்தத்தோடு வாசியென்?' என்று இப்பொருளுண்டேயாகிலும். [யானும்நீ என்றுதொடங்கி]- ஸகலபதார்த்தங்களும் உனக்கு ஶேஷமாகையாலே நானும் உனக்கு ஶேஷமென்று உணருந்தோறும் ஸம்ஸாரத்திலிருப்பை மிகவும் அஞ்சாநின்றேன்; இந்தஜ்ஞாநம் பரிமாறக்கடவதான திருநாட்டிலே நிரதிஶயாநந்தியாய்க் கொண்டு வேறுபட இருந்தருளின நீ, அங்கே எனக்கு உன் திருவடிகளைத் தந்தருளவேணும்.

---

ஸாவம் - வணங்கவேணுமென்னும் இத்யாதி. 'மாயத்தால் - மணந்தபேராயா - வல்வினையேனை - முழுதும் - ஈர்கின்ற குணங்களையுடையாய்' இத்யாரப்ய, 'சேர்ப்பா - மநமும் வாசகமும் செய்கையும் யானும்நீதானே - வணங்குமாறறியேன்' இத்யந்வய:. (அ)

ப.—அநந்தரம், இவ்வறிவோடே எங்குமிருந்தாலும் குறைவற்றிருக்க, து:காத்மகமான ஸம்ஸாரத்திலிருக்க அஞ்சாநின்றேன் ; நிரதிஶயபுருஷார்த்தமான ப்ராப்ய தேசவர்த்தியான உன்திருவடிகளைத் தந்தருளவேணுமென்கிறார்.

யானும் - (அஹம்புத்திவ்யவஹார விஷயமான) நானும், நீதானே - (த்வத்ப்ரகாரபூதனாகையாலே) நீதானேயா யிருப்பன் ; (இப்படி "ஸஹம்ஸெவக்ஷஹெஷிஸமஸெ செவஸெ" என்று), ஆவது - இவ்வர்த்தம், (ப்ரமாணப்ரஸித்தமாகையாலே), மெய்யே- பரமார்த்தம்: அரு - துஸ்தரமாய், நரகவையும் - து:கோத்தரமான ஸம்ஸாரத்தில் வஸ்துக்களானவையும், ("ஸவஂ ஖ல்விதம் ப்ரஹ்ம" என்கிற மர்யாதையாலே), நீ - த்வத் ப்ரகாரபூதங்கள்; ஆனால் - ஆனபின்பு, வான் - (விலக்ஷணமான உனக்கு ஶேஷமான ஆத்மாவுக்கு அநுரூபமான) பரமபதத்தில், உயர் - உச்ச்ரிதமான, இன்பம் - ஆநந்தத்தை, எய்தில்என் - பெற்றிருக்கில் என்? மற்றை - (அவிலக்ஷணமாய் ஸ்வாதந்த்ர்யாவஹமாய் து:கோத்தரமாகையாலே) அதுக்கெதிர்த்தட்டான, நரகமே - ஸம்ஸாரநிரயத்தை, எய்தில் - பெறில், என் - என்? எனினும் - என்கிற அர்த்தஸ்த்திதியானது லோகத்திலே வ்யவஹரித்துப்போரினும், யானும் - (ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய் விலக்ஷணமான) அஹமர்த்தம், நீதானாய் - (அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநனான) நீயாம்படி த்வத்ப்ரகாரமாக, தெளிதொறும் - உணர்ந்தபோதெல்லாம், நரகம்- ஸம்ஸாரநிரயத்தை, நான் - நான், அடைதல் - கிட்டுகையை, (ஸ்ரீ கௌஸ்துபத்தைச் சேற்றிலேபுதைத்த வோபாதி), நன்றும் - மிகவும், அஞ்சுவன் - அஞ்சாநின்றேன்; வான் - (பரமவ்யோம ஶப்தவாச்யமான) பரமபதத்திலே, உயர் - (அவாங்மநஸகோசரமாம்படி) உச்ச்ரிதமான, இன்பம் - ஆனந்தத்தை, மன்னி - உடையயாய்க்கொண்டு, (நிரந்தரமாக), வீறு - உன்னுடைய ஸர்வஶேஷித்வ வ்யாவ்ருத்தி தோன்ற, இருந்தாய் - எழுந்தருளியிருக்கிறவனே! (இவ்விபூதியிலுள்ளார் அநுபவித்து அடிமைசெய்கிற), நின் - உன், தாள்களை - திருவடிகளை, எனக்கு - எனக்கு, அருளு - தந்தருளவேணும்.

இ.—ஒன்பதாம்பாட்டில், "ஸகலபதார்த்தங்களும் நீயிட்டவழக்கு" என்கிற இந்தஜ்ஞாநத்தோடே யிருக்குமிடத்து ஸம்ஸாரத்தோடு பரமபதத்தோடு வாசியில்லையேயாகிலும் இந்தஜ்ஞாநத்துக்கு விரோதியான ஸம்ஸாரத்திலிருக்க அஞ்சாநின்றேன்; இதுக்கு அநுகூலமான பரமபதத்திலே என்னைக் கொடுபோக வேணுமென்கிறார்.

[யானும் நீதானே]-நானும் "நீ" என்கிற சொல்லுக்குள்ளேயாம்படி உனக்கு ப்ரகாரமாயிருக்கிறவனே! "தத்த்வமஸி", "ஐததாத்ம்யமிதம் ஸர்வம்" "ஸர்வம் ஸமாப்நோஷி ததோऽஸி ஸர்வ:." [ஆவதோமெய்யே] - உனக்கு ப்ரகாரமாயிருக்கிற இவ்வர்த்தம் ஸத்யம். [அருநரகவையும் நீ] - ஸம்ஸாரத்திலுண்டான சேதநாசேதநங்களுக்கும், என்னோபாதி உன்னோட்டைப்ராப்தியுண்டு. நான் நீயிட்டவழக்காயிருக்கிறவோபாதி ஸகலபதார்த்தங்களும் நீயிட்டவழக்கு. [ஆனால்] - அர்த்தஸித்திதி இது வானபின்பு. [வானுயரின்பமெய்தில்என்]-இப்ஶேஷத்வ ஜ்ஞாநத்தோடே திருநாட்டிலே போய் நிரதிஶயாநந்தத்தைப் பெற்றிருக்கில்என் ? [உயரின்பம்] - நிரதிஶயாநந்தம். [மற்றைநரகமே எய்தில்என்] - ஸ்வபாவத்துக்கும் ஶேஷத்வஜ்ஞாநத்துக்கும் எதிர்த்தலையான ஸம்ஸாரத்திலேயிருக்கில்என்? ஶேஷவஸ்துவானால் ஶேஷியுடைய எல்லைக்குள்ளே "அவன்செய்தபடி செய்கிறான்" என்றிருக்குமதொழிய, அவனை நிர்பந்திக்கக் கடவ

னல்லவென்பதோர் அர்த்தமுண்டு; [எனினும்]-இவ்வர்த்தம் இப்படியானாலும். [யானும் நீதானாய்த்தெளிதொறும்] - ஸகலபதார்த்தங்களும் உனக்கு அத்யந்தபரதந்த்ரமாகையாலே, நானும் உனக்கு அத்யந்தபாரதந்த்ரனென்னும் தெளிவுபிறக்கப் பிறக்க. [நன்றும் அஞ்சுவன்நரகம் நானடைதல்] - ஶேஷத்வஜ்ஞாநத்துக்கு விருத்தமான ஸம்ஸாரத்திலேயிருக்கில், அகப்பட்ட இந்தஜ்ஞாநத்தையும் இழப்பனென்று நான் அஞ்சாநின்றேன். "உம்மோடு மற்றுள்ள ஸகலபதார்த்தங்களோடு வாசிபற நம்மைக்குறித்து அத்யந்த பாதந்த்ரமானபின்பு பரமபதத்திலிருப்போடு ஸம்ஸாரத்திலிருப்போடு வாசியென்? என்று நீகைவாங்கியிருக்கப் புகுகிறாயோ"? என்று ஸம்ஸாரத்திலிருப்பை நான் மிகவும் அஞ்சாநின்றேன். 'இப்படி யஞ்சுகிறவுமக்கு நாம் செய்யவேண்டுவதென்?' என்ன - [வானுயரின்பம் மன்னிவீற்றிருந்தாய்] - பரமபதத்திலே நிரதிஶயாநந்தயுக்தனாய்க் கொண்டு உன்னுடைய ஶேஷித்வத்தால் வந்த வேறுபாடெல்லாந்தோற்ற, உனக்கமைந்தாரும் நீயுமாகவிருப்பதோரிருப்பு உண்டு. [அருளு நின்தாள்களையெனக்கே] - அவ்விருப்பிலே என்னைக் கொண்டுபோய், அவர்கள் அநுபவிக்கிற உன்திருவடிகளை எனக்குத் தந்தருளவேணும்.

ஈடு —ஒன்பதாம்பாட்டு. "ஸகலபதார்த்தங்களும் நீயிட்டவழக்கு" என்கிற இந்தஜ்ஞாநத்தோடேயிருக்குமிடத்தில் ஸம்ஸாரத்தோடு பரமபதத்தோடு வாசியில்லையேயாகிலும், இந்தஜ்ஞாநத்துக்கு விரோதியான ஸம்ஸாரத்திலிருக்க அஞ்சாநின்றேன்: இதுக்கு அநுகூலமான பரமபதத்திலே என்னைக்கொடுபோகவேணுமென்கிறார்.

[யானும்நீதானேயாவதோமெய்யே]. - நான் "நீ" என்கிற சொல்லுக்குள்ளே அடங்கும்படி உனக்குப்ரகாரமாய், நான் ப்ரஹ்மஶப்தவாச்யனும்படியிருக்கிற இவ்வர்த்தமோ, அது ஸத்யம். †"ஆத்மேத்யேவது க்ருஹ்ணீயாத்",‡"அஹம்மநுரபவம்ஸூர்யஶ்ச" (ஆத்மேத்யேவது க்ருஹ்ணீயாத்,அஹம்மநுரபவம்ஸூர்யஶ்ச) என்றிறே முக்தர் பாஶுரம். [மெய்யே] - அதில் ஸம்ஶயமில்லை. [அருநரகவையும்நீ] - எனக்குப் பொறுக்கவொண்ணாதே கால்வாங்கியல்லது நிற்கவொண்ணாதபடியான ஸம்ஸாரமும் நீயிட்ட வழக்கு. இது இப்போதுசொல்லுகிறது, நீ நினைத்தவன்று கழித்துத்தரவல்லையென்கைக்காக. ஆக, நானும் எனக்குவிரோதியான ஸம்ஸாரமும் உனக்கு ப்ரகாரம். [ஆனால்] - அர்த்ததத்த்வம்இதுவானால். [வானுயரின்பமெய்தில்என்] - ஶேஷத்வஜ்ஞாநத்தோடே திருநாட்டிலேபோய் நிரதிஶயாநந்தத்தைப் பெற்றிருக்கில் என்? [மற்றைநரகமே

ஒன்பதாம்பாட்டு.—யானும்நீ இத்யாதி. "நன்றும் அஞ்சுவன்நரகம் நான் அடைதல், வானுயரின்பம் மன்னிவீற்றிருந்தாய்" இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - ஸகல இத்யாதி. கண்டதெல்லாவற்றிலும் அதிஶங்கைபண்ணுகிறதென்? ஸர்வமும் ப்ரகாரமாக நாம் ப்ரகாரியாகவிருக்கிற அறிவுகொண்டு ஆறியிருக்கவொண்ணாதோ? என்ன-ஸகல இத்யாதி என்று கீழோடே இதுக்குஸங்கதி. "யானும்நீதானே, அருநரகவையும்நீ" என்றது - ஸகலபதார்த்தங்களுக்கும் உபலக்ஷணம். தன்னை அவனாகச் சொல்லலாயிருக்குமோ? என்ன - ஆத்மேத்யேவ இத்யாதி. முக்தர்பாசுரம் - முக்தப்ராயர் பாசுரமென்றபடி. அவதாரணார்த்தம் - அதில் இத்யாதி. நரகவையென்றது - நரகமென்றபடி. ஸம்ஸாரமும் உனக்கு ப்ரகாரமென்றதுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார்-இது இப்போது இத்யாதி. பதத்வயோக்தார்த்தத்தைச் சேர்த்து அருளிச்செய்கிறார் - ஆகநானும் இத்யாதி. "எனினும்" என்றதுக்கு அர்த்தம் - உடையவன் இத்யாதி வாக்யத்

† 3. ‡ ப்ரஹதாரணியகே-சு.

யெய்திலென்] - ஸ்வபாவத்துக்கும் ஶேஷத்வஜ்ஞாநத்துக்கும் எதிர்த்தட்டான ஸம்ஸாரத்திலே இருக்கிலென்? உடையவன் வைத்தவிடத்திலே கிடக்குமத்தனையன்றோ என்று ஓரார்த்த தத்த்வமுண்டே; [எனினும்] - இவ்வர்த்தம் இப்படியானாலும். [யானும்நீதானாய்த் தெளிதோறும்] - இஸ்ஸம்ஸாரம் உனக்குப்புறம்பு என்கிற ஆகாரத்தாலன்றிக்கே, "நான் உனக்கு அத்யந்தஶேஷபூதன்" என்கிற தெளிவு பிறக்கப்பிறக்க. [நன்றும் அஞ்சுவன்நரகம் நான் அடைதல்] - 'ஶேஷத்வஜ்ஞாநமுண்டானபின்பு ஶேஷவஸ்துஶேஷிசெய்தபடிகண்டு அவனெல்லைக்குள்ளே கிடக்குமித்தனையன்றோ? நம்மை நிர்ப்பந்திக்கக்கடவனோ?' என்றிறே தேவர்க்குநினைவு! உனக்கு இது நினைவானாலும், இஸ்ஸம்ஸாரத்திலிருப்பை நான் மிகவும் அஞ்சாநின்றேன்: ஶேஷத்வப்ரதிபத்திக்கு விரோதியாகையாலே. நீர் அஞ்சுங்காட்டில் நம்மாற் செய்யலாவதுண்டோ? என்னில்-[வானுயரின்பம் மன்னிவீற்றிருந்தாய்இத்யாதி]- இதுவேயன்றிக்கே, நித்யவிபூதியிலே நிரதிஶயாநந்தயுக்தனாய், உன்னுடைய ஶேஷித்வ வ்யாவ்ருத்தி தோற்ற இருப்பதோர் இருப்புண்டே; அவ்விருப்பிலே என்னையழைத்து அஸாதாரணர்பரிமாற்றத்தை எனக்குத் தரவேணும். (௯)

## பத்தாம் பாட்டு.

தாள்களையெனக்கேதலைத்தலைச்சிறப்பத்தந்த பேருதவிக்கைம்மாறு
தோள்களையாரத்தழுவி என்னுயிரையறவிலைசெய்தனன்சோதீ! [தாய்!
தோள்களாயிரத்தாய்! முடிகளாயிரத்தாய்! துணைமலர்க்கண்களாயிரத்
தாள்களாயிரத்தாய்!பேர்களாயிரத்தாய்!தமியனேன்பெரியவப்பனே!

*ஆ.—(தாள்களை.) - ஸம்ஸாரிகளெல்லாரும் ப்ராக்ருதவிஷயைக தாரக போஷக போக்யராயிருக்கச்செய்தே, என்னை உன் திருவடிகளையே தாரகபோஷக போக்யமாயிருக்கும்படி பண்ணியருளினாய்; இந்த மஹோபகாரமே அமையாதோ? இவ்வுபகாரத்துக்குக் கைம்மாறாக என்னுடைய ஆத்மாவை உனக்கே அடிமையாகத்தந்தே னென்னும் ப்ரீதியாலே ஸம்பாவித்து, தம்முடைய ஆத்மாவை ஆத்மாந்தஶேஷமாகக் கொடுத்து, இந்தமஹோபகாரத்தைப்பண்ணின உன்னை ஒருகால் காணவேணும். காண எளிதோ? என்னில்,—காணவேணுமென்று அபேக்ஷித்த ஆஶ்ரிதர்க்காகவன்றோ, நீ அஸங்க்யேய திவ்யரூபங்களையும், அஸங்க்யேய கல்யாணகுணங்களையும் உடையையாயிருக்கிறது; உன்னையொழிய ஒருக்ஷணமாத்ரமும் செல்லாதிருக்கிற எனக்கும் அரியையாகலாமோ? பிரானே! என்கிறார்.*

---

வயம். *புறம்பென்கிற ஆகாரத்தாலன்றிக்கேயென்றது - உன்னையொழிய ஸ்வதந்த்ரமென்கிற ஆகாரத்தாலன்றிக்கே, உனக்கு அத்யந்த பரதந்த்ரமாகையாலே என்றபடி. "நீதானாய்த்தெளிதோறும்" என்றது - நீதானாகத் தெளிவுபிறக்கப்பிறக்க என்றபடி. "நான்" என்றதுக்கு பாவம் - ஶேஷத்வஜ்ஞாநம் இத்யாதி என்னுதல்; "உடையவன்வைத்தவிடத்திலே" இத்யாதிவாக்யவிவரணமாதல். இதுவேயன்றிக்கே - இஸ்ஸம்ஸாரமேயன்றிக்கே என்றபடி. 'யானும்நீதானே' என்று தொடங்கி, 'யானும்நீதானாய்த் தெளிதொறும் - நரகம் - அடைதல் - நான் - நன்றும்அஞ்சுவன் - வானுயரின்பம் மன்னிவீற்றிருந்தாய் - நின்தாள்களையெனக்கு - அருள்' இத்யந்வய:.* (௯)

ஒ.—பத்தாம்பாட்டில், நான் ஆசைப்பட்டபடியே திருவடிகளை எனக்குத் தந்தருளின மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமாக என்னாத்மாவை உனக்குத்தந்தேனென்கிறார்.

[தாள்களையென்று தொடங்கி] - “நான்பெற்றபடி பேறுபெற்றாரில்லை” என்னும்படி மிகவும் பரிபூர்ணமாம்படி திருவடிகளை எனக்குத்தந்த மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமாக உனக்குத் தரப்புகுகிறதென்று மிகவும் கொண்டாடி என்னாத்மாவை உனக்கே ஸ்வம்மாகத் தந்தேன். [சோதீ] - தம்மோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே எம்பெருமானுக்குப்பிறந்த ஔஜ்ஜ்வல்யம். [தோள்களென்று தொடங்கி] - தம்மைத் தரிப்பிக்கையாலே எம்பெருமானுக்குப்பிறந்த பௌஷ்கல்யத்தைப் பேசி உன்படியிருந்தபடியென்? என்றுகொண்டாடுகிறார்: [தமியனேன் பெரியவப்பனே] - உன்னைப்பிரிந்து தனிமைப்பட்டு நோவுபடுகிற எனக்கு உன்னைக்காட்டியருளி, உன்னுடைய குணங்களிலே அதிஶங்கைபண்ண, அவ்வதிஶங்கையைப்போக்கின மஹோபகாரகனே!

ப.—அநந்தரம், ஆஶாநுரூபோபகாரத்துக்குத் தாம்பண்ணின ப்ரத்யுபகாரத்தாலே அத்தலையிற்பிறந்த ஔஜ்ஜ்வல்யத்தையும் அதிஶயித வைபவத்தையும் அருளிச்செய்கிறார்.

(“அருளாநின்தாள்களை எனக்கே” என்ற ஆசைக்கீடாக), தாள்களை - அத்திருவடிகளை, எனக்கே - எனக்கு அஸாதாரணமாம்படி, (மோக்ஷத்வப்ரதிஸம்பந்தியாகவும், ஆஶ்ரயணப்ரதிஸம்பந்தியாகவும், கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியாகவும்), தலைத்தலை - மேன்மேலென, சிறப்ப - சிறக்கும்படி, தந்த - தந்தருளின, பேருதவி - மஹோபகாரத்துக்கு, கைம்மாறு - ப்ரத்யுபகாரமாக, (அமூர்த்தமான), என் - என், உயிரை — ஆத்மவஸ்துவை, (உபகாரஸ்ம்ருதியிலுண்டான ஹர்ஷாதிஶயத்தாலே), தோள்களை - தோள்கள், ஆர - நிரம்பும்படி, தழுவி - (மூர்த்தவஸ்துவை) ஆலிங்கநம்பண்ணுமாபோலே அத்யாதரம்பண்ணி, (இஷ்டவிநியோகார்ஹமாம்படி, உபகார ப்ரத்யுபகாரங்களிலுண்டான க்ரயவிக்ரயஸமாதியாலே), அறவிலை - அறவிலை, செய்தனன் - செய்துதந்தேன்: சோதீ - (“அதுவுமற்றாங்கவன்தன்னது” என்று மீளாதே உபகாரஸ்ம்ருதியிலுண்டான கலக்கத்தாலே பண்ணின ஸமர்ப்பணத்தை, ஹர்ஷப்ரகர்ஷத்தாலே, உன்னது பெற்றாயாயிராதே பெறாப்பேறுபெற்றாயான) ஔஜ்ஜ்வல்யத்தையுடையவனே! தோள்கள் ஆயிரத்தாய் - (இந்த வடிவிலொளியளவன்றிக்கே, பாஹுமுகமாகத் தழைத்த “ஆயிரந்தோளால்” என்கிறபடியே (உபகாரமான திருத்தோள்கள் ஆயிரத்தையுமுடையையாய், முடிகள் ஆயிரத்தாய்-(“ஸஹஸ்ரஶீர்ஷா” என்கிறபடியே) திருமுடிகள் ஆயிரத்தையுமுடையையாய், துணை மலர் கண்கள் ஆயிரத்தாய் - (“ஸஹஸ்ராக்ஷ:” என்கிறபடியே) இணையான மலர்போன்ற திருக்கண்கள் ஆயிரத்தையுமுடையையாய், தாள்கள் ஆயிரத்தாய் - (“ஸஹஸ்ரபாத்” என்கிறபடியே) திருவடிகள் ஆயிரத்தையுமுடையையாய், பேர்கள் ஆயிரத்தாய்- (“நாமஸஹஸ்ரவாந்” என்கிறபடியே) திருநாமங்கள் ஆயிரத்தையுமுடையையாய், தமியனேன் - (அறிவையும் ஶங்கிக்கும்படி தனிமைப்பட்ட) எனக்கு, பெரிய அப்பனே - உன்பெருமைக்கீடாக உபகரித்தஸ்வாமியானவனே! இப்படி ஔஜ்ஜ்வல்யத்தையும் வைபவத்தையுமுடையவனே! எனக்கு மஹோபகாரகனாய் என்றுமாம். ‘என்னுயிரை அறவிலைசெய்தனன்’ என்று அந்வயம்.

இ.—பத்தாம்பாட்டில், தாம் அபேக்ஷித்தபடியே திருவடிகளைத்தந்தருளின மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமாக இவ்வாத்மவஸ்துவை உனக்குத்தந்தேனென்கிறார். இப்போது திருவடிகளைக்கொடுக்கையாவது - ஸம்ஸாரத்தோடு பொருந்தாதபடியையும், தன்னையொழியச் செல்லாதபடியையும் தமக்குப்பிறப்பித்த தஶையை ப்ரகாஶிப்பிக்கை.

[தாள்களையெனக்கே தலைத்தலைச்சிறப்ப] - உன்திருவடிகளைப்பற்றினாரில், 'நான்பெற்றபேறு பெற்றாரில்லை' என்னும்படியைக்கொண்ட. "இன்கவிபாடும் பரமகவிகளால்" என்று - பராஶராதிகள், முதலாழ்வார்களுண்டாயிருக்க, என்னைக்கொண்டு வாசிகமான அடிமையைக்கொண்ட. [தலைத்தலைச் சிறப்பத்தந்த] - மிகச் சிறக்கும்படி தந்த: பூர்ணமாம்படி தந்த என்கை. [பேருதவி] - கொள்கின்ற என்தரத்திலன்றிக்கே, தன்தரத்திலே தருகை. [கைம்மாறு] - ப்ரத்யுபகாரமாக. [தோள்களையாரத்தழுவி] - உனக்குத்தரப்புகுகிற வஸ்துவென்று மிகவும் கொண்டாடி. உபகாரஸ்ம்ருதியிலுண்டான ஹர்ஷத்தாலே, அமூர்த்தமான ஆத்மவஸ்து ஸாவயவம்போலே அணைக்கலாம்படி தடித்தது. [†என்னுயிரை] — விலக்ஷணமான ஆத்மாவை. [அறவிலைசெய்தனன்] - இஷ்டவிநியோகார்ஹமாம்படி யாவிலைசெய்து தந்தேன். தாம் முன்பு "மனமும் வாசகமும் செய்கையும் யானும் நீதானே" என்று சொன்ன வார்த்தையை மறந்து உபகாரஸ்ம்ருதியாலேவந்த ஹர்ஷத்தாலே ப்ரமித்துச்சொல்லுகிறார். [சோதீ] - இவர்பண்ணின ஆத்மஸமர்ப்பணத்தாலே அவனுக்குப்பிறந்த ஔஜ்ஜ்வல்யம். இவர் தம்மதல்லாததொன்றை ஹர்ஷத்தாலே கலங்கிக்கொடுத்தார்; அவன் தன்னதல்லாததொன்றைப் பெற்றானாய் அத்தாலே உஜ்ஜ்வலனாகாநின்றான். * மயர்வறமதிநலமருளப்பெற்ற இவர் கலங்கச்சொல்லவேணுமோ? * மயர்வறமதிநலமருளினவன்தான் கலங்காநின்றான். முன்பு இழவாலே கூப்பிட்டவர், தரித்து ப்ரத்யுபகாரத்திலே [தோள்களென்று தொடங்கி]. இழிந்தபடியைக்கண்டு, அத்தாலே அவனுக்குப்பிறந்த பௌஷ்கல்யத்தைப் பேசுகிறார்:— உபகாரஸ்ம்ருதியில் உண்டான ஹர்ஷத்தாலே, அமூர்த்தமான ஆத்மவஸ்து அணைக்கலாம்படி தடித்தாற்போலே, * ஸதைகரூபரூபமானவடிவும் ஸாதஸாவமாயிற்று. அவாப்தஸமஸ்தகாமனானவன் ஒருஸம்ஸாரியைலபித்து ஹ்ருஷ்டனானானென்கிற இதுகூடுமோவென்னில்? - ஸார்வபௌமனான க்ஷத்ரியனுக்கு உபர்த்தி உண்டென்னா அபிமதையான மஹிஷிபக்கலிலே சாபலமின்றிக்கே யொழியுமோ? அவாப்தஸமஸ்த காமத்வமும் ப்ரமாணஸித்தமாய், ஆஶ்ரிதவாத்ஸல்யமும் ப்ரமாணப்ரஸித்தமானால் அப்படியேகொள்ளுமித்தனையன்றோ? எனக்கு ஹர்ஷத்தைத் தானே பிறப்பித்து, அந்தஹர்ஷத்தைக் கண்டு அத்தாலே தான் இப்படி விஸ்த்ருதனாவதே! என்று கொண்டாடுகிறார். [தமியனேன்] - அவன்ஸ்வரூபத்திலும் ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்திலும் அதிஶங்கைபண்ணின போதை வெறுமையைநினைத்துச் சொல்லுகிறார். [பெரியவப்பனே] - அவ்வதிஶங்கைகளையும்போக்கி இவ்வளவு புகுரநிறுத்தின மஹோபகாரகனே!

---

† இருபத்து நாலாயிரத்தில் 'இன்னுயிரை' என்று பாடமாகில் அர்த்தத்துக்குச் சேரும்.

ஈடு.—பத்தாம்பாட்டு. தாம் மநோரதித்தபடியே திருவடிகளைத் தந்தருளின மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமாக இவ்வாத்மவஸ்துவை உனக்குத்தந்தே னென்கிறார். இப்போது திருவடிகளைக் கொடுக்கையாவது - ஸம்ஸாரத்தோடுபொருந்தாதபடியையும் தன்னையொழியச்செல்லாதபடியையும் தமக்குப்பிறப்பித்த ஊமையை ப்ரகாஶிப்பிக்கை.

[தாள்களையெனக்கே தலைத்தலைச்சிறப்பத்தந்த] - "பலரடியார்முன்பருளிய" என்கிறபடியே- ஸ்ரீவால்மீகிஹமவான், முதலாழ்வார்கள்தொடக்கமானார் உண்டாயிருக்க, என்பக்கலிலே விஶேஷகடாக்ஷம் பண்ணி, மிகச்சிறக்கும்படி தந்த: பூர்ணமாகத் தந்த என்கை. [பெருதவி] - கொள்ளுகிற என்தரத்திலன்றிக்கே, தன்தரத்திலே தருகை. [கைம்மாறு] - ப்ரத்யுபகாரமாக. [தோள்களையாரத்தழுவி] - ஒருவனுக்குஒருவன் கந்ய கையையணைத்துக் கொடுக்குமாபோலே, இங்கும்அணைத்துக்கொடுக்கலாம்படி அமூர்த்த மான ஆத்மவஸ்து தாளுந்தோளுமாய்ப்பணைத்ததாயிற்று உபகாரஸ்ம்ருதியாலே. "என தாவியாவியும் நீ" "எனதாவியார்? யான் ஆர்?", "மனமும்வாசகமும்செய்கையும் யானும்நீ தானே" என்பதானவற்றை மறந்தார் ஹர்ஷத்தாலே. [என்னுயிரையறவிலைசெய்தனன்]- என்னுடைய ஆத்மவஸ்துவை தேவர்க்கு அநந்யார்ஹமாம்படி அற விலை செய்துதந்தேன். [சோதீ]-இவர் தம்மதல்லாததொன்றைத் தம்மதாக ப்ரமித்துக் கொடுத்தாற்போலே, அவ னும் தன்னதல்லாததொன்றைப் பெற்றாற்போலே ப்ரமித்து உஜ்ஜ்வலனாகாநின்றான்: "விஜ்வர:"(விஜ்வர꞉) என்னும்படி யிராநின்றான். [தோள்கள்இத்யாதி] - முன்புஇழ வாலே கூப்பிட்டவர் தரித்து ப்ரத்யுபகாரத்திலே இழிந்தபடியைக்கண்டு, அத்தாலே அவ னுக்குப் பிறந்த பௌஷ்கல்யத்தைப். பேசுகிறார். உபகாரஸ்ம்ருதியாலே இவருடைய ஆத்மவஸ்து தாளுந்தோளுமாய்த் தளிர்த்தாற்போலே, ஸதைகரூபமானவடிவும் ஶத ஶாகமாயிற்று. ஒருஸம்ஸாரியை லஹித்து அவாப்த ஸமஸ்தகாமனை இவன் இப்படி ஹ்ருஷ்டனானானென்கிறஇது கூடுமோ? என்னில், ஸார்வபௌமனை க்ஷத்ரியனுக்கு ஒருயர்த்தியுண்டேன்று, அஹிமதையான மஹிஷிபக்கலிலே சாபலமின்றிக்கே ஒழியுமோ? அவாப்தஸமஸ்தகாமத்வமும் ப்ரமாணஸித்தமாய், ஆஶ்ரிதவாத்ஸல்யமும் ப்ரமாணப்ர ஸித்தமானால் அப்படியேகொள்ளுமத்தனையன்றோ? எனக்கு ஹர்ஷத்தைப்பிறப்பித்து,

பத்தாம்பாட்டு.—தாள்களை இத்யாதி. "பெருதவிக்கைம்மாறு" என்றுதொடங்கி, "அற விலைசெய்தனன்" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - தாம் மநோரதித்த இத்யாதி. ஆனால், தாள்களைத் தந்தானோ? என்ன - இப்போது இத்யாதி.

"தலைத்தலை"-மிகவும். "சிறப்ப-" ஶ்லாக்யமாக. "எனக்கே" என்கிற அவதாரணார்த்தம் - பலரடியார் இத்யாதி. ஹவிதம் - பூர்ணமாக இத்யாதி. உபகாரத்துக்கு மஹத்வம் ஏது? என்ன - கொள்ளுகிற இத்யாதி. நிரவயவமான உயிருக்குத் தோள்களுண்டோ? என்ன - ஒருவனுக்கு இத் யாதி. ஆத்மாவாகிற பெண்ணின்தோளை ஆரத்தழுவி என்றபடி. ஆத்மஸமர்ப்பணம், கீழ் அத்யந்த பாரதந்த்ரமாகச்†சொ வுக்திகளோடு விரோதியாதோ? என்ன - எனதாவி இத்யாதி.உஜ்ஜ்வலனா னுக்கு ப்ரமாணம் - விஜ்வர꞉ இத்யாதி. "தோள்களாயிரத்தாய்" என்றுதொடங்கி வர்ணிக்கிறதுக்கு ஹாவம் - முன்பு இழவாலே இத்யாதி. "அறவிலைசெய்தனன்-" அறவிலைசெய்து தந்தேனென்ற படி. விக்ரஹம் ஸதைகரூபமாயிருக்க, அநேகாவயவங்களாகப் பணைக்கக்கூடுமோ? என்ன - உபகார ஸ்ம்ருதியாலே இத்யாதி. யுக்தியேயன்றிக்கே ப்ரமாணகதியாலும் கூடுமென்கிறார் - அவாப்த ஸமஸ்தகாமத்வமும் இத்யாதி. ஆஶ்ரிதவாத்ஸல்யமும் ப்ரமாணப்ரஸித்தமானாலென்றது - "ந த தொவிஜாமஹே" இத்யாதி ப்ரமாணங்களைப்பற்ற. "தோள்களாயிரத்தாய்" ஶயா꞉ ஸம்

† இங்கே அந்வயிக்கவில்லை: சொன்ன என்று இருக்கலாமென்று தோன்றுகின்றது.

அந்தஹர்ஷத்தைக்கண்டு அத்தாலே தான் இப்படி விஸ்த்ருதனுவதே!என்று கொண்டாடு கிறார். [தமியனேன்] - இவன்ஸ்வரூபத்திலும் ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்திலும் அதிஶங்கை பண்ணினபோதை வெறுமையை நினைத்துச்சொல்லுகிறார். [பெரியவப்பனே] - பண்ணினவுபகாரம், ஓர் அளவுபட்டிருந்ததில்லையீ!என்பக்கலிலே ஒருநன்மையுண்டாய்ச் செய்தாயல்லையிறே, ப்ராப்தியாலே செய்தாயத்தனையிறே. (கo)

---

## பதினோராம் பாட்டு.

---

பெரியவப்பனைப்பிரமனப்பனை உருத்திரனப்பனை முனிவர்க்கு
உரியவப்பனை அமரரப்பனை உலகுக்கோர்தனியப்பன்தன்னை
பெரியவண்குருகூர்வண்சடகோபன் பேணினஆயிரத்துள்ளும் [கே.
உரியசொல்மாலையிவையும்பத்துஇவற்றால்உய்யலாந்தொண்டீர்!நங்கட்

ஆ.—(பெரியவப்பனை) - ப்ரஹ்மாதி ஸகலஸம்ஸாரகணங்களுக்கும், ஸர்வலோகத்துக்கும் ஈஶ்வரனாயிருந்த நீயே உன்திருவடிகளைத் தந்தருளவேணும் என்று ஆசைப்பட்டு, "ஶஶ்வத்ஸௌஹ்ருதஸம்பத்ஸ்யாத" என்று பிராட்டிசொன்னாற்போலே சொன்ன உரியசொல்மாலையான இத்திருவாய்மொழியை வல்லார்க்கு எம்பெருமானைப்பெறலாம்; நான்பட்டபாடு படவேண்டா. நீர் இப்பாடு படுவானேன்? என்னில்,—இக்கண்ணாலே இப்போதே காணவேணுமென்று படுகிறேன்; எம்பெருமானைப் பெறுமொழிகிறேனென்று படுகிறேனல்லேனென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியிற் சொன்ன அர்த்தத்தையெல்லாம் ஸங்க்ரஹேண சொல்லி, இத்திருவாய்மொழி கற்றார்க்கு எம்பெருமானைப்பெற்று உய்யலாமென்கிறார்.

[பிரமனென்று தொடங்கி]-ப்ரஹ்மேஶாநாதிகளுக்கெல்லாம் நிர்வாஹகனானவனை. முனிவர்க்குரிய அப்பனாகையாவது - கேவலம் ப்ரஹ்மபாவனையேயானவர்களுக்குத் தன்னோடுண்டான அணுமை சொல்லுகிறது. உலகுக்கோர் தனியப்பன் தன்னையென்கிறது - ப்ரஹ்ம லோகத்துக்கெல்லாம் தனியே நிர்வாஹகனானவனை. [பேணினவாயிரம்] - எம்பெருமானைத் தாம் ஆசைப்பட்ட படியைச் சொன்ன ஆயிரம். [உரியசொல்] - ஸம்பவத்குணங்களுக்கு நேரே ப்ரதிபாதகமாகை.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழி ஆத்மோஜ்ஜீவநஹேது என்று ஃபலத்தை யருளிச்செய்கிறார்.

---

புத்திகளுக்கு ஸாவம்-எனக்குஹர்ஷத்தை இத்யாதி. இப்போது ஹர்ஷமாயிருக்க, "தமியனேன்" என்கிறதென்? என்ன - இவன் ஸ்வரூபத்திலும் இத்யாதி. "அப்பன்" என்றதுக்கு - உபகாரகன் என்றருளிச்செய்து, ஸ்வாமியென்று அர்த்தாந்தரம் - என்பக்கலிலே இத்யாதி. 'சோதீ, தோள்களாயிரத்தாய்' என்றுதொடங்கி, 'பெரியவப்பனே - தாள்களையெனக்கே தலைத்தலை' என்று தொடங்கி, அறவிலைசெய்தனன்' இத்யந்வய:. (ரு0)

பெரியவப்பனை - ஸர்வாதிகஸ்வாமியாய், பிரமன் - (ஸகலஸ்ரஷ்டாவான) ப்ரஹ்மாவுக்கு; அப்பனை - உத்பாதகனாய், (அப்படியே), உருத்திரன் - (ஸம்ஹாரகர்த்தாவான) ருத்ரனுக்கும், அப்பனை - உத்பாதகனாய், முனிவர்க்கு - (ஜ்ஞாநாதிகரான ஸநகாதி) முநிகளுக்கு, உரிய அப்பனை - அஸாதாரண சேஷியாய், அமரர் - (அநந்யஷ்டரான) தேவர்களுக்கு, அப்பனை - உத்பாதகனாய், (இப்படி), உலகுக்கு - ஸகலலோகத்துக்கும், ஓர் - அத்விதீயனான, தனிஅப்பன்தன்னை - ப்ரதாந நாயகனானவனை, பெரிய - பெரிய, வண் - ஸம்பத்தையுடைத்தான, குருகூர் - திருநகரிக்குநிர்வாஹகராய், வண் - (ப்ரபந்தநிர்மாணமுகத்தாலே) மஹோதாரரான, சடகோபன் - ஆழ்வார், பேணின - (அத்யந்தாபிநிவேசம்பண்ணி) ஆதரித்துச்சொன்ன, ஆயிரத்துள்ளும் - ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளும், (ஐகவத்போக்யதாதிகுணப்ரதிபாதநத்தில்), உரிய - உரிய, சொல்மாலை - சப்தஸந்தர்ப்பத்தை யுடைத்தாயிருக்கும், இவைபத்தும் — இவைபத்தும்: இவற்றால் - இவற்றாலே, தொண்டீர் - (இதரவிஷயங்களிலே சபலராய்த்) தொண்டராய்த் திரிகிறவர்களே! நங்கட்கு - (அநாதிகாலம் அந்யபரரான) நமக்கு, உய்யலாம் - உஜ்ஜீவிக்கலாம். இது - எழுசீராசிரியவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியிற் சொன்ன அர்த்தத்தை ஸங்க்ரஹேணசொல்லி, இத்தையப்யஸிப்பார்க்கு ஈஸ்வரனைலபித்து உஜ்ஜீவிக்கலாமென்கிறார்.

[பெரியவப்பனை] - உபயவிபூதிக்கும் நிர்வாஹகனானவனை. [பிரமனப்பனை] - ஸதாஷ்டாப்ஹஹாவநேஸ்வரனுக்கு ஜநகனானவனை. [உருத்திரனப்பனை] - அவனுக்குப் புத்ரனாய், அவன்தன்னளவிலும் மிகைத்துத்திரிகிற ருத்ரனுக்கு உத்பாதகனானவனை: "கஉதிஷுஹண்ணாநாஜ". [முனிவர்க்குரியவப்பனை] - முனிவரென்கிறது - ஸநகாதிகளை அவர்களுக்குக் கேவலம் ப்ரஹ்மஜாவநந்யயாயிருக்கையாலே உரியவென்று - அனுமை சொல்லுகிறது. [அமரரப்பனை] - தேவர்களுக்கு உத்பாதகனானவனை: [உலகுக்கோர் தனியப்பன்தன்னை] - இப்படி பிரித்துச்சொல்லுகிறதென்? ஸகலலோகங்களுக்கும் ஏகநிர்வாஹகனானவனை. இப்போது இவைசொல்லுகிறதென்? என்னில்,— நிதியெடுத்தவன் "இன்னதுகண்டேன்; இன்னதுகண்டேன்" என்னுமாபோலே, ஸ்வரூபத்திலும் குணத்திலும் அதிசங்கைபண்ணினபோது இழந்தாராயிருந்தவற்றை லபிக்கையாலே, இவற்றைப் பிரித்துப் பேசுகிறார். முனிவர்க்குரியஅப்பனை யென்கிறது - ஆச்ரிதஸுலபதையைச் சொல்லுகிறது. [பெரியவண்குருகூர்] - ரக்ஷணம் தாழ்த்தவாறே அதிசங்கைபண்ணுகையும், உபகாரஸ்ம்ருதியாலே ஹ்ருஷ்டராகையுமாகிற இவையுண்டாகைக்கடி, அவ்வூரில் பிறப்பென்கை. [வண்சடகோபன்] - மாநஸாநுபவமாத்ரமேயாய்விடாதே, ப்ரபந்நீகரித்த ஔதார்யம். [பேணினவாயிரத்துள்ளும் உரியசொல்மாலை இவைபத்து] - அவனைத் தாம் ஆசைப்பட்டபடியைச் சொன்ன இப்பத்து. [உரியசொன்மாலை] - "யதோவாசொநிவதந்தே" என்று மீளுகையன்றிக்கே, ஐகவத்குணங்களுக்கு நேரே வாசகமாகை. [இவற்றால் உய்யலாந்தொண்டீர் நங்கட்கே] - அநாதிகாலம் ஐகவத் விமுகராய், விஷயாந்தரப்ரவணராய், "அஸந்நேவ" என்கிறபடியே அஸத்ஸமராயிருக்கிற நமக்கு, "ஸந்தமேநம்" என்கிறபடியே உஜ்ஜீவிக்கலாம்.

ஈடு:—நிகமத்தில் - இத்திருவாய்மொழியிற்சொன்ன அர்த்தத்தை ஸங்க்ரஹேணசொல்லி, இத்தை அப்யஸிப்பார்க்கு ஸர்வேஶ்வரனை லபித்து உஜ்ஜீவிக்கலாமென்கிறார்.

[பெரியவப்பனை] - உபயவிபூதியுக்தனை. [பிரமனப்பனை] - சதுர்த்தஶ புவநேஶ்வரனான ப்ரஹ்மாவுக்கு உத்பாதகனானவனை. [உருத்திரனப்பனை] - அவன் புத்ரனான ருத்ரனுக்கும் நிர்வாஹகனானவனை. "முனிவர்க்குரிய வப்பனை" - யென்கிறது, ஸநகாதிகளுக்கு ப்ரஹ்மபாவநையேயாகையாலே: உரியவென்று *அணுமைசொல்லுகிறது. [அமரரப்பனை] - தேவர்களுக்கு உத்பாதகனானவனை. [உலகுக்கோர்தனியப்பன் தன்னை] - இப்படிப் பிரித்துச்சொல்லுகிறதேன்? ஸகலலோகங்களுக்கும் ஏகநிர்வாஹகனானவனை. §"**பூதாநாம்யோவ்யயঃபிதா**" (பூதாநாம்யோவ்யயঃபிதா) என்றிறேயிருப்பது. இப்போது இவை சொல்லுகிறதேன்? என்னில், நிதியெடுத்தவன் "இன்னதுகண்டேன், இன்னதுகண்டேன்" என்னுமாபோலே, ஸ்வரூபத்திலும் குணத்திலும் அதிஶங்கை பண்ணினபோது இழந்தாராயிருந்தவற்றை லபிக்கையாலே இவற்றைப்பிரித்துச்சொல்லுகிறார். முனிவர்க்குரிய அப்பனையென்று - ஆஶ்ரிதஸௌலப்யத்தையைச் சொல்லுகிறது. [பெரிய வண்குருகூர்] - ரக்ஷகன் தாழ்த்தவாறே அதிஶங்கைபண்ணுகையும், உபகாரஸ்ம்ருதியாலே ஹ்ருஷ்டராகையுமாகிற இவற்றுக்கடி, அவ்வூரில் பிறப்பென்கை. [வண்சடகோபன்]- மாநஸாநுபவமாத்ரமாய்விடாதே, ப்ரபந்தீகரித்த ஔதார்யம். [பேணினவாயிரத்துள்ளும் உரியசொல்மாலையிவையும்பத்து] - அவனைத் தாம் ஆசைப்பட்டபடியைச் சொன்ன பத்து. [உரியசொன்மாலை] - † "**யதோவாசோநிவர்த்தந்தே**" (யதோவாசோநிவர்த்தந்தே) என்று மீளுகையன்றிக்கே, பகவத்குணங்களுக்கு நேரேவாசகமாகை. [இவற்றாலுய்யலாந் தொண்டீர்நங்கட்கே] - அநாதிகாலம் பகவத்விமுகராய், விஷயாந்தரப்ரவணராய், ‡'**அஸந்நேவ**' (அஸந்நேவ) என்கிறபடியே அஸத்ஸமராயிருக்கிற நமக்கு, ‡'**ஸந்தமேநம்**' (ஸந்தமேநம்) என்கிறபடியே உஜ்ஜீவிக்கலாம். (கக)

*நிகமம்.*—பெரிய இத்யாதி. "இவற்றாலுய்யலாம்" என்றதைக் கடாக்ஷித்து அவதாரிகை - இத்திருவாய்மொழியில் இத்யாதி. இத்திருவாய்மொழியிற் சொன்ன அர்த்தமாவது - ஆஶ்ரிதபாரதந்த்ர்யமும், ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தவஸ்து ப்ரகாரித்வமும்.

"பெரியவப்பனை" என்றதுக்கு - பரமஶேஷியென்று அர்த்தமாகையாலே, அத்தால் பலித்த அர்த்தம் - உபயவிபூதியுக்தனை என்று. "உரியவப்பனை" என்று விஶேஷித்ததுக்கு பாவம் - ஸநகாதிகளுக்கு இத்யாதி. ப்ரஹ்மபாவனை - ப்ரஹ்மைகத்யாநத்தையுடையராகை. தனி - அஸஹாயனென்றபடி. "ஏகநிர்வாஹகன்" என்னுமதுக்கு ப்ரமாணமாதல், "அப்பன்" என்றதுக்கு ஜநகனை அர்த்தாந்தரமாதல் - பூதாநாம் இத்யாதி. இப்போது இவை என்றது - "பெரியவப்பன்" என்றுதொடங்கிச் சொன்னவற்றை. ஸ்வரூபத்தில் அதிஶங்கைதீர்ந்தமைக்குப் பதங்கள் ஸ்புடமாய், ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தில் அதிஶங்கைதீர்ந்தமைக்கு பதம்அஸ்புடமாயிருக்கையாலே, அது இன்னதென்று வ்யக்தமாக அருளிச்செய்கிறார் - முனிவர்க்குரிய இத்யாதி. திருநகரியில் ஸம்பந்தம் சொல்லுகிறதுக்கு பாவம் - ரக்ஷகன் இத்யாதி. *வண்மையேதென்ன - மாநஸாநுபவம் இத்யாதி. பேணின - ஆசைப்பட்ட. உரிய - தகுதியாக. 'பெரிய வண்குருகூர் வண்சடகோபன் - ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு - பெரியவப்பனை' என்றுதொடங்கி, 'உலகுக்கோர் தனியப்பன்தன்னை - முனிவர்க்குரியவப்பனை - பேணின - இவையும்பத்து - உரியசொன்மாலை - இந்தப் பத்துப்பாட்டும் ஸர்வேஶ்வரனுக்கு ஸத்ருஶமான ஸந்தர்ப்பத்தை யுடைத்தாகையாலே, 'தொண்டீர், நங்கட்கு - இவற்றாலுய்யலாம்' என்றந்வயம். (கக)

* அணுமை - சமீபம். § ஸ்ரீமஹாபாரதம்,ஸஹஸ்ரநாமாத்யாயம். † தை-ஆ-க. ‡ தை - ஆ - க.

த்ரவிடோபநிஷத்ஸங்கதி. — [illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி. — [illegible]

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

தேவனுறைபதியிற்சேரப்பெருமையால்
மேவுமடியார்வசனுமெய்ந்நிலையும்—யாவையுந்தா
னுய்நிலையுஞ்சங்கித்தவைதெளிந்தமாறன்பால்
மாநிலத்தீர்! நங்கள்மனம்.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.

## இரண்டாந் திருவாய்மொழி - நங்கள் - ப்ரவேஶங்கள்.

ஆ.—(நங்கள் வரிவளை.)- இந்தவ்யஸநம் முறுகி எம்பெருமானோடேகலந்து பிரிந்த பிராட்டியாய், காணவேணுமென்று கூப்பிடுகிறார். ஶ்ரீவைகுண்டநாதனான ஸர்வேஶ்வரனும், "உன்னுடைய கடாக்ஷலக்ஷ்யமாகப் பெறுவதுகாண், என்று ஆசைப்பட வேண்டும்படியான வடிவையுடைய நீ, ஆசைப்படுகைக்கூடாயிருப்பதொரு விஷயமுண்டோ? நீயாசைப்பட்ட விஷயமேது?" என்றும், "உனக்குச்செல்லுகிற அவஸாதமேது?" என்றும் இவளுடைய தோழிமார் கேட்க;

ஒ.—இரண்டாந்திருவாய்மொழியில், ஸம்ஸாரத்தோடு பொருந்தாதபடி தன் பக்கலிலே மிகவும் ஆபிமுக்யத்தைப் பிறப்பித்தபடியை யநுஸந்தித்து தரித்த ஆழ்வார், "இவ்வவஸாநத்திலும் அவன் வந்து விஷயீகரியாதொழிகைக்குக் காரணம் ஸம்ஸாரத்தில் ஸங்கம் நிஶ்ஶேஷமாகப் போகாமை" என்றுபார்த்து, "நாம் அறியாமே எம்பெருமானறிய ஏதேனும் ஸம்ஸாரத்திற் பற்றுண்டாகிலும் அத்தைவிடவேணும்" என்றத்யவஸித்து, அதில் தாம் நசையற்றபடியை அந்யாபதேஶத்தாலே பேசுகிறார். எம்பெருமானோடே விஶ்லேஷித்து மிகவும் நோவுபடுகிறாளொருபிராட்டி, "அவனைப் பெறுமைக்குக் காரணம், தோழிமார்தொடக்கமான பரிகரங்களிலுண்டான ஸங்கலேஶமாகவேணும்" என்றுபார்த்து அவற்றில் நசையறவிட்டு அவனைக் காணப்பெறுமையாலே மிகவும் தளர்ந்திருக்கிற இவளைக்கண்டு இவளுடைய தோழிமாரும் தாய்மாரும் மிகவும் விஷண்ணைகளாய், "உனக்கோடுகிற வ்யஸநம் என்?" என்றுகேட்க, "என்னுடையதஶை பேசநிலமன்று; நீங்கள் என்னையலைத்து உங்களுக்கு ஒருப்ரயோஜநமில்லை"

என்றுசொல்லி, குலத்திலும், பந்துக்கள்பக்கலிலும், ஸ்வஶரீரத்திலும், தன்னுடைய அபிமாநாதிகளிலும், மற்றும் தன்னுடைய பரிகரங்களிலும் உண்டான நசையற்றேன்; அதுக்கடியாக, அவனாலே அபஹ்ருதசித்தையுமானேன் என்று அவர்களைக்குறித்துச் சொல்லுகிறாள்: இவள்தானே எம்பெருமானை அபிஸரித்து அபேக்ஷிதம்பெறாதே நோவுபடுகிறாள் ஒருத்தி.

ப.—இரண்டாந்திருவாய்மொழியில், தம்முடைய ஆகாங்க்ஷாநுரூபமாக அகவாயிலே அவன்வந்து முகங்காட்டினபடியை அநுஸந்தித்தவர், அவனுடைய பூர்த்தியைக் கண்டு பாஹ்யஸம்ஶ்லேஷம்பண்ண அபிநிவேஶித்து அதித்வரிதரித்தாராய், ப்ராப்யபூதனான ஈஶ்வரனுடைய அபிகம்யத்வஸூசகமான ஸௌலப்யாதி குணவத்தையையும், அநுபாவ்யாகாரத்தையும், ஆகர்ஷகமான ஆபிரூப்யத்தையும், அநிஷ்டநிரஸகமான பரிகரவத்தையையும், அபரிச்சேத்யமான ஔஜ்ஜ்வல்யாதிஶயத்தையும், அதிஶயிதஜ்ஞாநர்க்கும் அவமந்துமஶக்யதையையும், அபிநிவேஶஜநகமான ஆகாரவிஶேஷங்களையும், ஆஸ்பஸக்தவிஷயத்தில் அஸுலபதையையும், அநந்யார்ஹத்வபாதகத்வத்தையும், சித்தாபஹாரியான திவ்யவிக்ரஹோச்ச்ராயத்தையும் அநுஸந்தித்து, ஏவம்பூதனான ஸர்வேஶ்வரனை அநுபவிக்குமிடத்து இவ்வருகுண்டான அநுபவத்தில் ஸங்கம்அற்றாலல்லது ஸித்தியாதென்று அறுதியிட்டு த்வரையாலே ஆர்த்தரான தம்முடைய ஆர்த்தியை ஆற்றுகைக்காக நிஷேதோந்முகரான ஸுஹ்ருத்ப்ரப்ருதிகளைக்குறித்துத் தம்முடைய நிஸ்ஸங்கதையை வெளியிட்டப்ரகாரத்தை, நாயகனை ஈஶ்வரனைப்பிரிந்த நாயகியானவள், தன்னுடைய அபிஸாரோத்யோகத்தாலே தோழிமார் தாய்மாரோடு தான் வளர்த்த கிளி பூவை மயில்குயில்களோடு வாசியற ஸர்வர்பக்கலிலும் ஸங்கமற்று, தன்னுடைய ஸ்த்ரீத்வாதிகுணங்களையும் அநாதரித்து அவன்வடிவழகிலே அபஹ்ருதசித்தையான ஆகாரத்தைப் பேசின பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

இ.—இரண்டாந்திருவாய்மொழியில், கீழில் திருவாய்மொழி ப்ராபகப்ரதாநம்; இது ப்ராப்யப்ரதாநமாயிருக்கிறது. கீழே, அவன்குணங்களிலும் ஸ்வரூபத்திலும் அதிஶங்கைபண்ணித் தெளிந்து, "வணங்குமாறறியேன்" என்று தந்தலையில் ஸாதநபோக்யதையைத் தவிர்த்து, "யானும் நீதானேயாவதோ மெய்யே" என்று அவன்பக்கல் ந்யஸ்தபரதையைச்சொல்லி, இப்படி ப்ராஸங்கிகமாக "அவனே ப்ராபகம்" என்னுமிடத்தை நிஷ்கர்ஷித்தார். அவனே ப்ராபகனென்னுமிடத்தில் பேற்றுக்கு விளம்பஹேதுவில்லையாயிருக்க, "அவன்வந்து முகங்காட்டாதொழிகைக்குக் காரணம் அவனறிய ஸம்ஸாரத்தில் ஸங்கம் நிஶ்ஶேஷமாகப்போகாமை" என்றுபார்த்து, நாம்அறியாமே அவனறிய ஏதேனும் ஸம்ஸாரத்தில் பற்றுண்டாகிலும் அத்தைவிடவேணும்" என்று அத்யவஸித்து, ஸம்ஸாரத்தில் தாம் நசையற்றபடியை யந்யாபதேஶத்தாலே யருளிச்செய்கிறார். எம்பெருமானோடே கலந்து பிரிந்தாளொரு பிராட்டி அவன்தானேவரக் கண்டிருக்குமதொழிய, தன்னாற்றாமையாலே "தலைமகனிருந்த தேசத்தேறப் போமித்தனை" என்று அபிஸாரிகையாய்ப் புறப்பட்டுப் போகப்புக, தோழிமார் தொடக்கமான பந்துக்கள், "அவன் தானேவரக்கண்டிருக்குமதொழிய நீபுறப்பட்டுப் போகை போராது" என்று ஹிதஞ்சொல்லி நிஷேதிக்க, "நமக்கு இவர்கள்பக்கலுண்டானபற்றாலே நம்பக்கலிலே அவன் நெகிழ்ந்திருக்கிறானாகவேணும்" என்று நினைத்து, தனக்குத் தோழிமார்பக்கலிலும், தாய்மார்பக்கலிலும், மற்றுமுள்ள பந்துக்கள் பக்கலிலும்,

குலத்திலும், ஸ்வஶரீரத்திலும், ஸ்த்ரீத்வமர்யாதையிலும் ஸங்கமற்றபடியைத் தோழி மார்க்கறிவிக்கிற பாசுரத்தாலே, தமக்கு ப்ராப்யவிரோதிகளில் ருசியற்றிருக்கிற படியை ஸர்வேஶ்வரனுக்கு அறிவிக்கிறார்.

ஈடு.—கீழில்திருவாய்மொழி ப்ராபகப்ரதாநம்; இது ப்ராப்யப்ரதாநமாயிருக் கிறது. கீழே அவன்குணங்களிலும் ஸ்வரூபத்திலும் அதிஶங்கைபண்ணித் தேளிந்து, "வணங்குமாறறியேன்" என்று தந்தலையில் ஸாதநயோக்யதையைத்தவிர்த்து, "யானும் நீ தானேயாவதோமெய்யே" என்று அவன்பக்கல் ந்யஸ்தபரதையைச்சொல்லி, இப்படி ப்ரா ஸங்கிகமாக "அவனேப்ராபகன்" என்னுமிடத்தை நிஷ்கர்ஷித்தார். அவனே ப்ராபக னுமிடத்தில் பேற்றுக்கு விளம்பஹேதுவில்லையாயிருக்க, அவன்வந்து முகங்காட்டாதொழி கைக்கு ஹேது உண்டாகவேணுமென்று பார்த்தார்; அதில் அவன்பக்கல் பார்க்கலாவ தோன்றில்லை, இதுக்கடி நம்பக்கலிலேயாகவேணும்; "மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித் மஹ தஸ்தி ந ஸம்ஶய:" (மமைவதுஷ்க்ருதம்கிஞ்சிந்மஹதஸ்திநஸம்ஶய:) ரா-ஸு.க-அ-சஅ௨. என்றருளிறேபிராட்டி இவரும் அப்படியே, "நெடுநாள் ஸம்ஸரித்துக் கண்டதெல்லாவற்றிலும் ருசிபண்ணிப் போந்தோம்; நம்முடைய பூர்வவ்ருத்தத்தையும் நமக்கு இப்போதுள்ள அள வையும் ஸர்வஜ்ஞனவன் அறியாமையில்லை; நாம் அறியாதிருக்க, அவனறிய அவன்பக் கல் ருசியிலே நமக்குக்குறையுண்டாகவேணும்" என்றுபார்த்து, "அது உண்டாகவுமாம், இல்லையாகவுமாம்: புறம்புண்டானவற்றில் ருசியில்லையென்னுமிடத்தை அவன்திருவுள் ளத்திலே படுத்துவோம்" என்றுபார்த்து, ப்ராப்யவிரோதிகளிலும், ப்ராபகவிரோதிகளிலும் தமக்கு ருசியில்லாமையை அந்யாபதேஶத்தாலே அருளிச்செய்கிறார். ஸர்வேஶ்வரனோடு கலந்து பிரிந்தா ளொருபிராட்டி, அவன்தானே வரக்கண்டிருக்கையன்றிக்கே, அபிஸாரி கையாய் அவனிருந்த தேசத்தேறப் போவதாக ஒருப்பட, இத்தையநுஸந்தித்த தோழிமார் தோடக்கமானர், "உனக்கு இது ஆகாதுகாண்" என்று ஹிதஞ்சோல்லி மீட்கப்பார்க்க, அவர்களைக்குறித்து, தோழிமார் தோடக்கமானவர்களிலும் மற்றுமுள்ளவர்களிலும் நசை யில்லாமையை அவர்களுக்கு அறிவிக்கிற பாசுரத்தாலே தமக்கு நசையில்லாமையை அவன்திருவுள்ளத்திலே படுத்துகிறார்.

---

நங்கள்வரிவளை ப்ரவேஶ: கீழில் திருவாய்மொழிக்கும் இத்திருவாய்மொழிக்கும் ஸங்கதமான அர்த்தத்தை அருளிச்செய்கிறார் - கீழில் இத்யாதி வாக்யத்வயத்தாலே. ப்ராபகப்ர தாநமானபடி எங்ஙனே? என்ன - கீழே அவன் இத்யாதி. இத்திருவாய்மொழிக்கு ஸங்கதி- அவனே இத்யாதி. "நம்பக்கலிலேயாகவேணும்" என்றதுக்கு ப்ரமாணம் - மமைவ இத்யாதி. "மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித் மஹதஸ்தி ந ஸம்ஶய:" இத்யாஹ ஸீதா. "கிஞ்சித்" என்றது- அநிர் வாச்யமென்றபடி. ப்ராப்யவிரோதி-கிளிமுதலானவை. ப்ராபகவிரோதி- தாயார்முதலானோர். ப்ராபக விரோதிகளில் நசையற்றபடியைச் சொல்லுகை இத்திருவாய்மொழிக்கு அநபேக்ஷிதம்; ஸ்ரீகோசாங் தாங்களிலுமில்லை. மாதாபிதாக்களுக்கு ப்ராபகவிரோதித்வம் தச்சுஶ்ரூஷணாதிகளாலே சிலபலங்க ளுண்டென்று ஶாஸ்த்ரம்சொல்லுகையாலே. அந்யாபதேஶப்ரகாரத்தை விஸ்தரிக்கிறார் - ஸர் வேஶ்வரனோடு இத்யாதி. "காஞாயீ நீச யயாதிஸஞ்சிதம் ஸாஹஸாஸிகா."

## முதற் பாட்டு.

நங்கள்வரிவளையாயங்காளோ! நம்முடையேதலர்முன்புநாணி, நுங்கட்குயானென்றுரைக்குமாற்றம் நோக்குகின்றே னெங்குங்காணமாட்டேன், சங்கஞ்சரிந்தனசாயிழந்தேன் தடமுலைபொன்னிறமாய்த்தளர்ந்தேன், வெங்கண்பறவையின்பாகனெங்கோன் வேங்கடவாணனைவேண்டிச்சென்றே.

ஆ.—(நங்கள் வரிவளை) - உகவாதார்முன்பு என்னுடைய அவஸாதத்தை வ்யஞ்சிப்பிக்கையிலுள்ள லஜ்ஜையாலும், அவஸாதந்தான் நிரவதிகமாயிருக்கையாலே அதுக்கு வாசகமாயிருப்பதொரு ஶப்தம்காணாமையாலும் என்னுடைய அவஸாதத்தை உங்களுக்குச் சொல்லமாட்டுகிறிலேன். இப்படி அவஸாதம் வருகைக்கு ஆசைப்பட்டதென்? என்னில்,—தீக்ஷ்ண நிரீக்ஷண நிர்தக்த ப்ரதிபக்ஷனை பெரிய திருவடியை வாஹநமாகவுடைய திருவேங்கடமுடையானை ஆசைப்பட்டு "சங்கம்சரிந்தன சாயிழந்தேன் தடமுலை பொன்னிறமாய்த் தளர்ந்தேன்" என்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், எம்பெருமானை யாசைப்பட்டு அவன் உகந்தருளின விடங்களிலேசென்றும் அபேக்ஷிதம் பெறுமையாலே மிகவும் அவஸந்நையாயிருக்கிற இப்பிராட்டியை, தோழிமாரானவர்கள், "உகவாதாரெதிரன்றோ லஜ்ஜிக்கவேண்டுவது? எங்களுக்கு லஜ்ஜிக்கவேணுமோ? உனக்கோடுகிற வுமையைச்சொல்லு" என்ன, 'அவர்களெதிர் லஜ்ஜித்துச்சொல்லாதே உங்களுக்குச் சொல்லலாம் வார்த்தை பார்த்தவிடத்திலொன்றுங் காண்கிறிலேன்' என்கிறார்.

[வரிவளை ஆயங்கள்] - தோழிமார். [ஏதலர்] - ஶத்ருக்கள். [சங்கஞ்சரிந்தனவென்று மேலுக்கு] - ப்ரதிகூலர்க்கு பயங்கரமான த்ருஷ்டியையுடைய பெரிய திருவடியாலே ஏறியருளிவந்து என்னை யடிமைகொண்ட திருவேங்கடமுடையானைக் காணவாசைப்பட்டு அவனிருந்தவிடத்திலே போய் அபேக்ஷிதம்பெறுமை மிகவும் நோவுபட்டு வளைகள்கழன்றன:ஒளியிழந்தேன்: பூர்ணமான முலைகளும் விரஹவ்யஸநத்தாலே விவர்ணமாய் நானுந் தளர்ந்தேன். வ்யஸநம் உங்களுக்குச் சொல்லவேண்டா: என் வடிவிலே தெரியுமென்று கருத்து. "ஈக்ஷ்யதாம் க்ருஶா தீனா" என்றாற்போலே, அநவாப்தியாலே 'வெங்கட்பறவை' என்கிறாள் காணும்.

ப.—முதற்பாட்டில், ஸர்வஸுலபனை திருவேங்கடமுடையானை ஆஸ்ரித வேஷித்து என் ஆபரணஶோபையோடு ஆஸ்ரூப்யத்தோடு வாசியற இழந்தேனென்று தோழிமார்க்கு அறிவிக்கிறார்.

வரி - வரியையுடைத்தான, வளை - வளையையுடையராயிருக்கிற, நங்கள் - நம்முடைய, ஆயங்காளோ - ஆயங்காள்! (நம்முடை ஸமாநஸுகதுக்கைகளான உங்களைப் போலன்றியே), ஏதலர் - (ஹிதவசநம்பண்ணி மீட்கத்தேடுகிறவர்களாகையாலே சாத்ரவ கோடியிலே நிற்கிறதாயார்) அயலார்: முன்பு - முன்பு, நாணி - (சொல்ல)நாணி, நுங்கட்கு - (அந்தரங்கைகளான) உங்களுக்கு, யான் உரைக்கும் - யான்சொல்லலாவது, ஒன்று-ஒரு, மாற்றம் - வார்த்தையானது, நோக்குகின்றேன்-பாராநின்றேன்: எங்கும் -

எல்லாவழியாலும், (இந்தவிகாரஹேதுவைப் பாசுரமிட்டுச்சொல்லும்படி), காண மாட்டேன் - காணமாட்டுகிறிலேன்; (ஆதலால், என்விகாரங்கொண்டு அறியுமித்தனை; அதாவது), வெம் - (ஆஸ்ரிதவிரோதிகளை யழியச்செய்யும்) வெவ்விய, கண் - பார்வை யுடைய, பறவையின் - பெரியதிருவடியை நடத்தும், பாகன் - நிர்வாஹகனாய், (அந்த வாஹநாதிஷ்டாநத்தைக்காட்டி), எம் - என்னையடிமைகொண்ட, கோன் - ஸ்வாமியாய், (அநுபவிக்கைக்கிடாக), வேங்கடம் - திருமலையிலே, வாணனை - ஸாலஹனாய்வந்துநிற்கிற இவனை, வேண்டி - (இவ்வாகாரங்களடியாக) அபிநிவேஶித்து, சென்று - நடந்து, சங்கம் - (என்னுடைய) சங்குவளைகளானவை, சரிந்தன - சரிந்துகழன்றன; சாய் - (ஸ்வாபாவிகமான) வடிவிலொளியும், இழந்தேன் - இழந்தேன்; தடம் - பெரிய, முலை - முலைகள், பொன்னிறமாய் - (பசப்பாலே) பொன்னிறமாய், தளர்ந்தேன் - ஶிதில ஶரீரையானேன். நிர்த்தோஷப்ரமாணருடனாய், நிருபாதிகஸம்பந்தயுக்தனாய், நிரவதிக ஸௌலப்யவிஶிஷ்டனானவனென்று கருத்து.

ஈ.—முதற்பாட்டில், தோழிமாரானவர்கள், "உகவாதாரெதிரன்றோ லஜ்ஜிக்கவேண்டுவது? எங்களுக்கு லஜ்ஜிக்கவேணுமோ? உனக்கு ஓடுகிற தஶையைச் சொல்லு" என்ன, "பிறர்க்குலஜ்ஜித்து உங்களுக்குச்சொல்லலாம் வார்த்தை பார்த்த விடத்துஒன்றும் காண்கிறிலேன்" என்கிறாள்.

[நங்கள்வரிவளை] - முன்பு உங்களோடு என்னோடு வாசியற எல்லார்க்குமுண்டான வளை. "ஸஹதோஷாகோஷஸம்பந்தம்" என்று ஸாகூத:கங்கணொன்றாகச் சொல்லிப்போந்த நீங்கள், அநுஷ்டாநத்திலே வந்தவாறே ஹேதிப்பதே! இப்போது அநுஷ்டாநத்தில் ஹேதுமென்? என்னில்; நான் சங்கஞ்சரிந்தேன்: நீங்கள் வளை கழலாதிருந்திகோள். [வரிவளை] - வரியையுடைத்தான வளையென்கை. இவள்கையில் வளைதொங்காதிருக்க, அவர்கள் வளையூரிப்பர்களோ? என்னில்,— பிராட்டியைப் பிரிந்தவிடத்தில் பெருமாளிற்காட்டில் தம்முடைய காவற்சோர்வாலே வந்ததென்று வ்யஸநமிரட்டித்திருக்கச் செய்தேயும் பெருமாள்தளருவ ரென்று தம்முடைய தளர்த்தி தோற்றாதபடி இளையபெருமாள் தரித்திருக்குமாபோலே, இவளையூரிப்பிக்கைக்காக வளையூரிப்பர்கள். [ஆயங்காளோ] - தோழிமாரிலும் தரமுண்டாயிருக்க, இதிலெல்லாரும் ஒருபடிப்பட்டிருக்கிறார்கள். ஆயங்கள்-தோழிமார். [ஓ] - விஷாதாதிஶயஸூசகம். அவர்களை ஸம்போதித்து வார்த்தை சொல்லுவதற்குமுன்னே விஷண்ணையாகிறாள். இவ்விஷாதஹேதுவைப் புறம்புள்ளார்க்கு மறைத்தாலும் எங்களுக்குச் சொல்லவேண்டாவோ? உனக்கோடுகிற தஶையைச்சொல்லாய்! என்ன, [நம்முடை இத்யாதி] - தோழிமார் ஹிதஞ்சொல்லி இப்போது மீட்கப்பார்க்கிறார்களாகிலும், பேறும் இழவும் விழுக்காட்டி லொத்திருக்கைபாலே-நம்முடையேதலர் என்கிறாள். ஏதலர் - ஶத்ருக்கள். இவளுக்கு ஶத்ருக்களில்லையிறே; ஹிதஞ்சொல்லி மீட்கப்புகுகிற தாய்மாராயிற்று ஶத்ருக்கள். [ஏதலர் முன்புநாணி] - ஶத்ருக்கள்முன்பு லஜ்ஜித்து. [நுங்கட்கு] - தோழிமாரான உங்களுக்கு, நானொருவார்த்தை சொல்லவேணுமென்று ஆராய்ந்து பாராநின்றேன். [எங்கும் காணமாட்டேன்] - இதுக்கொரு பாசுரமிட்டுச் சொல்லவேணுமென்று பார்த்தவிடத்து ஒருபடியாலும் க்ஷமையாகிறிலேன். மாட்டேனென்கிறதென்? சிலர்க்குமறைத்து ஆப்தர்க்குச் சொல்லத்தட்டேன்? என்ன, [சங்கஞ்சரிந்தன] - இத்தை யார்க்கு மறைத்து ஆர்க்கு வெளியிடுவேன்? [சங்கஞ்சரிந்தன] -

"ஜமதஃஷூதிழ" என்றாற்போலே யிருக்கிறதாயிற்று. அதாவது - இவள் கையும் வளையு மாயிராதவன்று நாயகனுளனுகமாட்டான்: இருவருமான சேர்த்தியிலேயுண்டாகக்கடவ உஜ்ஜ்வலாதியுமழியும்; இவள் கையும் வளையுமாயிருக்க நாயகனுளனும்: இருவருமான சேர்த்தியிலே உஜ்ஜ்வலாதியும் உஜ்ஜீவிக்கும். [சாயிழந்தேன்] - அவனோடுகலந்து பெற்றதாய் அவன்வருமளவும் யரிக்கைக்குக் கைம்முதலான எழிலையும்இழந்தேன். [தட முலேஇத்யாதி] - அவன்வந்தாலும் ப்ரயோஜநமில்லாதபடி அவன் கைம்முதலும் அழிந் தது. [தடமுலே] - போக்தாவால் உண்டறுக்கவொண்ணுத பரப்பையுடைத்தாகை. [பொன்னிறமாய்] - விவர்ணமாய்; ஸாலோக்ஷத்ரம் மணலீடாய்ப் போமாபோலே. [தளர்ந் தேன்] - இழந்தவை வந்தாலும் தொங்குகைக்கு ஆஶ்ரயமில்லை. [வெங்கட்பறவை யித் யாதி] - இழந்த இழவுக்கு ஹேதுசொல்லுகிறது. [வெங்கட்பறவை] - வெவ்விய கண்ணையுடைய பெரியதிருவடி வருமிடத்தில் ப்ரபலப்ரதிபந்தகங்களைப் போக்கிக் கொடுவரவல்ல னென்னுதல்: ஸம்ஶ்லேஷஉமையில் கண்ணற்றுக் கொடுபோமவ னென் னுதல். "சுக ஸிராஃ சு ஸிரஹூஷயஃ". [பறவையின் பாகனெங்கோன்] - பெரிய திருவடிமுதுகிலிருப்பைக் காட்டியாயிற்று என்னை யநந்யார்ஹையாக்கிற்று. [வேங்கட வாணனை] - பரமபதத்திலிருப்பை யாசைப்பட்டேனல்லேன்; நமக்குக் காட்சிதருகைக்கு வரநின்ற விடத்திலே. [வேண்டிச் சென்றே]-நம்மையாசைப்பட்டு நிற்கிறவனைக் காண ஆசைப்பட்டுச் சென்று. அவன்தான் வரக்கண்டிருக்கையன்றிக்கே, அவனிருந்த தேசத்தளவும் சென்று, அபேக்ஷிதம்பெறுமையாலே சங்கஞ் சரிந்தன. [சென்று]-பால் சென்றாற்போலேசென்று என்றுமாம்.

ஈடு.— முதற்பாட்டு. தோழிமாரானவர்கள், "உகவாதார் எதிரன்றோ லஜ் ஜிக்கவேண்டுவது? எங்களுக்கு லஜ்ஜிக்கவேணுமோ! உனக்கோடுகிற உமையைச்சொல்லு" என்ன, பிறர்க்குமறைத்து உங்களுக்குச் சொல்லலாம்வார்த்தை பார்த்தவிடத்து ஒன்றுங் காண்கிறிலே னென்கிறாள்.

[நங்கள்வரிவளை] - முன்பு உங்களோடு என்னோடு வாசியற எல்லார்க்குமுண் டான வளை. †"ஏகம் துஃகம் ஸுகம் ச நௌ" (ஏகம்துஃகம்ஸுகஞ்சநௌ) என்று ஸுகதுஃகங்களோன்றாகச் சொல்லிப்போந்த நீங்கள் அநுஷ்டாநத்திலே வந்தவாறே ஹேஸிப்பதே! இப்போது அநுஷ்டாநத்தில் பேதமேன்? என்னில்,—கையிலேகண்டி லோமோ? நான் சங்கையற்றிருந்தேன், நீங்கள் சங்கையுடையிகோளாயிருந்திகோள். [வரிவளை] - வரியையுடைய வளையென்னுதல், உர்ஶநீயமான வளையென்னுதல். இவளை யரிப்பிக்கைக்காக அவர்களும் வருந்தி யரித்திருப்பர்களிறே. பிராட்டியைப் பிரிந்தவிடத்

முதற்பாட்டு.—நங்கள் இத்யாதி. "நம்முடையேதலர்" என்றுதொடங்கி, "காணமாட் டேன்" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - தோழிமார் இத்யாதி.

"நங்கள்" என்றத்தை வரிவளைக்கு விஶேஷணமாக்கி, விஶ்லேஷதசையிலே வரி வளையெங்கேயென்ன - முன்பு உங்களோடு இத்யாதி. 'நங்கள்" என்று - ஆத்மவிவஹுவசந மாய், "வரிவளையையுடைய நங்களாயங்காளோ" என்று - தோழிமார்க்கு விஶேஷணமாக்கி, அர்த் தாந்தரம் - ஏகம் துஃகம் இத்யாதி. ரஸோக்தியாகக் கீழ்வாக்யவிவரணம் - நான்சங்கையற்று இத்யாதி. சங்கு - வளையென்று ஸ்வஹ்ராவார்த்தம்; சங்கையென்று-யவதி. இவள்கையில் வளை தொங்காதிருக்க அவர்கள் யரித்திருக்கை ஸ்நேஹத்துக்குக் கொத்தையன்றோ? என்ன - இவளை யரிப்பிக்கைக்காக இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - பிராட்டியை இத்யாதி. காவற்சோர்வு -

† ராமா-கிஷ்-டு-கஅ.

தில் பெருமாளிற்காட்டிலும் "தம்முடையகாவற்சோர்வாலே வந்தது" என்று தளர்த்தி இரட்டித்திருக்கச்செய்தேயும், பெருமாள் தளருவரேன்று தம்முடைய தளர்த்திதோற்றுத படி இளையபெருமாள் தரித்திருந்தாற்போலே, இவர்களும் தரித்திருப்பர்கள் வளையை. [ஆயங்காளோ] - தோழிமாரிலும் தரமுண்டாயிருக்க, இப்போது எல்லாரும் ஒருபடிப்பட்டிருக்கிறார்கள். [ஆயங்காள்] - தோழிமீர்! [ஓ]-விஷாதாதிசய ஸூசகம். அவர்களை ஸம்போதித்துவைத்து வார்த்தைசொல்லுவதுக்குமுன்னே விஷண்ணையாகிறாள். இவ்விஷாத ஹேதுவைப் புறம்புள்ளார்க்கு மறைத்தாயாகிலும் எங்களுக்குச் சோல்லவேண்டாவோ? உனக்கு ஓடுகிறதசையைச் சோல்லாயென்ன, [நம்முடை இத்யாதி] - தோழிமார் இப்போது ஹிதஞ்சோல்லிமீட்கப் பாராநின்றார்களாகிலும், பெறுமிடத்தல் விழுக்காட்டில் ஒத்திருக்கையாலே 'நம்முடை ஏதலர்' என்கிறாள். ஏதலர் - சத்ருக்கள். இவளுக்குச் சில சத்ருக்களில்லையிறே; ஹிதஞ்சோல்லிமீட்கப் பார்க்கிற தாய்மாரிறே சத்ருக்கள். [ஏதலர்முன்புநாணி]- சத்ருக்கள்முன்பு லஜ்ஜித்து. [நுங்கட்கு] - தோழிமாரான உங்களுக்கு. [யான்இத்யாதி] -நான் ஒருவார்த்தைசொல்லவேணுமென்று ஆராய்ந்து பாராநின்றேன். [எங்குங்காணமாட்டேன்] - இதுக்கு ஒருபாசுரமிட்டுச்சொல்லவேணுமென்று பார்த்தவிடத்து ஒருபடியாலும் க்ஷமையாகிறிலேன். மாட்டேனென்கிறதென்? சிலர்க்கு மறைத்து ஆப்தர்க்குச்சொல்லத்தட்டென்? என்ன, - [சங்கம்சரிந்தன] - நான்இத்தை யார்க்குமறைத்து ஆர்க்குவெளியிடுவது? "ஜகதஸ்தமிதம்" (ஜகதஸ்தமிதம்) என்றாற் போலேகாணும் இருக்கிறது. இவளைக்கிடையாதபோது நாயகனில்லை; நாயகனில்லாத போது உபயவிபூதியுமில்லை. அதாவது - இவள கையும்வளையுமாயிராதவன்று நாயகன் உளனுகமாட்டான: இருவருமானசேர்த்தியிலே உண்டாகக்கடவ உபயவிபூதியும் அழியும். [சாயிழந்தேன] - அவனோடேகலந்துபெற்றதாய அவன் வருமளவும் ரக்ஷிக்கைக்குக் கைம்முதலான எழிலையுமிழந்தேன். [தடமுலைஇத்யாதி] - அவன்வந்தாலும் ப்ரயோஜநமில்லாதபடி அவன்கைம்முதலும் அழிந்தது. [தடமுலை] - போக்தாவாலுண்டறுக்கவொண்ணாத பரப்பையுடைய முலை. [போன்னிறமாய்] - விவர்ணமாய். ஸுக்ஷேத்ரம் மணல்டாய்ப் போமாபோலே. [தளர்ந்தேன] - இழந்தவைவந்தாலும் தோங்குகைக்கு ஆஸ்ரயமில்லை. [வேங்கட்பறவையின் பாகனேங்கோன்இத்யாதி] - இழந்த இழவுக்கு ஹேது சோல்லுகிறது. [வேங்கட்பறவை] - வெவ்விய கண்ணையுடைய பெரியதிருவடி. வருமிடத்தில் ப்ரதபந்தகங்களையும போக்கிக்கொடுவரு மென்னுதல். ஸம்ஸ்லேஷ

---

ரக்ஷாச்யுதி. ஹேஹேவசநார்த்தம் - தோழிமாரிலும் இத்யாதி. விஷாதாதிசயமேதென்ன - அவர்களை இத்யாதி. என்னுடையேதலர் என்னுதே, மீட்கப்பார்க்கிற தோழிமாரையுங்கூட்டி "நம்முடையேதலர்" என்கிறதென் ? என்ன - தோழிமார் இப்போது இத்யாதி. இப்போது "ஏதலர்" என்கிறது ஆரை? என்ன - இவளுக்குச்சில இத்யாதி. "மாட்டேன்" என்றதுக்கு அர்த்தம் - இதுக்கொருபாசுரம் இத்யாதி. சழன்றன என்னுதே, "சரிந்தன" என்றதுக்கு பாவம் - ஜகதஸ்தமிதம் இத்யாதி. அஸ்தமிதமானபடி எப்படி? என்ன - இவளைக்கிடையாதபோது இத்யாதி வாக்யத்வயம். உக்தார்த்தவிவரணம் - அதாவது இத்யாதி வாக்யத்வயமும். "சாய்" என்றது - ஸமுதாயஸோபை. போச்சுதென்னுதே, "இழந்தேன்" என்றதுக்கு பாவம் - அவனோடே இத்யாதி. "தடமுலை" என்றுவர்ணித்து, "பொன்னிறமாய்" என்றதுக்கு பாவம் - அவன்வந்தாலும் இத்யாதி. "தடம்" என்றதுக்கு அர்த்தம் - போக்தாவால் இத்யாதி. "தடமுலை" என்று - முலையினுடைய போக்யதையைச்சொல்லி, பொன்னிறமாச்சுதென்றதுக்கு த்ருஷ்டாந்தம்-ஸுக்ஷேத்

தசையிலே பிரித்துக்கொடுபோமென்னுதல்; †"[Grantha text]" (அக்ரூரः க்ரூரஹ்ருதயः.) [பறவையின்பாகனெங்கோன்] - பெரியதிருவடிமுதுகி லிருப்பைக்காட்டியாயிற்று, என்னை அநந்யார்ஹையாக்கிற்று. [வேங்கடவாணனை] - பரமபதத்திலிருப்பை ஆசைப்பட்டேனல்லேன்: நமக்குக் காட்சிதருகைக்கு வரநின்றவிடத்தே. [வேண்டிச் சென்றே] - நம்மைவேண்டிவந்தவனை நாம் வேண்டிச்சென்று: நாம்ஆசைப்பட்டுச்சென்று என்றபடி. அவன்தான் வரக்கண்டிருக்கையன்றிக்கே, அவனிருந்ததேசத்தளவும் சென்று அபேக்ஷிதம் பெறுமையாலே, சங்கஞ் சரிந்தன. [சென்று]-பால்சென்றாற்போலே சென்று அற்றேன்றுமாம். (க)

## இரண்டாம் பாட்டு.

**வேண்டிச்சென்றேன்றுபெறுகிற்பாரில் என்னுடைத்தோழியர்நுங்கட்கேலும், ஈண்டிதுரைக்கும்படியையந்தோ! காண்கின்றிலேனிடராட்டியேன்நான், காண்தகுதாமரைக்கண்ணன்கள்வன் விண்ணவர்கோன் நங்கள்கோனைக்கண்டால், ஈண்டியசங்கும்நிறைவுங்கோள்வான்எத்தனை காலம்இளைக்கின்றேனே!**

*ஆ.—(வேண்டிச்சென்று) - நீ ஆசைப்பட்ட விஷயம் திருவேங்கடமுடையானாகில் அது யுக்தம். உனக்குங்கூட ஸ்ப்ருஹணீயனானவனாகிலும், நீயாசைப்பட்டால் கிடையாததுண்டோ? என்னில்,—ஆசைப்பட்டபொருள் பெறவாரெல்லாரிலும் தலையாயிருக்கச்செய்தேயும், ஆசைப்பட்டுப்பெறாதே நான்படுகிறவ்யஸநம் வாசாமகோசரமாகையாலே வ்யஸநப்படுமத்தனையல்லது உங்களுக்குச் சொல்லுகைக்கு ஒருசொல்லு சொல்லக் காண்கிறிலேன். அவனை ஆசைப்பட்டால் உத்தரக்ஷணம் பெறுதொழியில் தளர்ந்துகொண்டு நிற்குமித்தனையோ வென்னில்; - ஸௌந்தர்யமாநமானாலும் அபூர்வ தர்சநீயமாய், புண்டரீகதளாமலாயதமான திருக்கண்களையுமுடையனாய் தத்ஸௌந்தர்ய பரிமுஷித ஸகலஜந மநோநயநனாய், * அயர்வறுமமரர்களதிபதியா யிருந்துவைத்து, என்னை அடிமைகொண்ட பரமசீலனாயிருந்த அவனை ஆசைப்பட்டுப் பெறாதே, என்னுடைய வலயாதிஸௌஷணங்களையும், ஆத்மகுணங்களையும் இழந்து, அவைகொள்கைக்கு நான்வருந்துகிறது எத்தனைகாலமுண்டு? என்கிறார்.*

*ஒ.—இரண்டாம்பாட்டில், உனக்கு அத்யந்தம் அந்தரங்கைளாயிருக்கிற எங்களுக்கு உன்னுடைய நோவு சொல்லலாகாததுமுண்டோ? என்ன,— என் து:கத்தின் மிகுதியாலே உங்களுக்குச்சொல்லும் பாசுரமறிகிறிலேனென்கிறாள்.*

---

ரம் இத்யாதி. இரண்டாமர்த்தத்துக்கு ப்ரமாணம் - அக்ரூரः இத்யாதி. "வேங்கடவாணனை" என்றதுக்கு வ்யாவர்த்யம் - பரமபதத்தில் இத்யாதி. "வேண்டிச்சென்று" என்றதுக்கு ஸப்தார்த்தம் - நம்மை இத்யாதி. "சென்று" என்றதுக்கு பாவம் - அவன்தான் இத்யாதி. "சென்று" என்றதுக்கு அர்த்தாந்தரம் - பால் இத்யாதி. முந்தின அர்த்தத்துக்கு, "சென்று" என்றது - பேரயென்றபடி. இரண்டாம்அர்த்தத்துக்கு, இளைத்தென்றபடி.'வெங்கட்பறவை' என்றுதொடங்கி, வேண்டிச்சென்று - கிடையாமையாலே 'சங்கம் சரிந்தன' என்றுதொடங்கி, 'தளர்ந்தேன்'-ஆசையாலே,'நங்கள்வரிவளை' என்றுதொடங்கி, 'காணமாட்டேன்' இத்யந்வயः. (க)

---

†விஷ்ணு-பு-ரு-கஅ-௩ய.

[வேண்டிச் சென்றென்றுதொடங்கி] - ஏதேனுமொன்று என்னைவந்து அர்த்தித்தாலும் அதுபெறும் வரிசையையுடைய தோழிமாரான உங்களுக்காகிலும். சென்றென்றது - வந்தென்றவாறு. [ஈண்டென்று தொடங்கி] - படுகிறதுःகத்தை உங்களுக்குச்சொல்லவேண்டாதபடி நோவாட்டியான நான் இப்போது இதுசொல்லும்படி அறிகிறிலேன். [காண்தகுதாமரைக் கண்ணனென்று மேலுக்கு] - எப்போதும் காணவேண்டும்படி ஸ்ப்ருஹணீயமான திருக்கண்களைக்காட்டிஎன்னுடைய ஆத்மாத்மீயங்களை அபஹரித்து அயர்வறுமமரர்களை யடிமைகொண்டாற்போலே நம்மை யடிமைகொண்டவனைக் கண்டிடில் அவன்பக்கலிலே திரண்டவளையும் நிறைவும் கொள்கைக்காக எத்தனை காலம் துःகப்படக்கடவேன்?

ப.—அநந்தரம், அநுபாவ்யாகார விசேஷத்தையுடையனை அவன்அபஹரித்த வளைமுதலானவற்றை வாங்குகைக்கு எத்தனைகாலம் க்லேசிக்கிறேன்?உங்களுக்கு அகப்பட இதுசொல்லும் விரகறிகிறிலேனென்கிறாள்.

சென்று - (இவன்பாடே) சென்று, ஒன்று - ஒன்று, வேண்டி - வேண்டி, பெறுகிற்பாரில் - பெறவேணுமென்றிருப்பாரில், என்னுடை - எனக்கு அஸாதாரணைகளான, தோழியர் - தோழியரான, நுங்கட்கேலும் - உங்களுக்கேயாகிலும், ஈண்டு - இவ்விடத்தில், இது-இந்த அவஸாதுஹேதுவை, இடராட்டியேன்-துःகாதிசயத்தையான, நான் - நான், (சொல்லி யாறவேண்டி யிருக்கச்செய்தே), உரைக்கும்படியை - சொல்லும்படி, அந்தோ - ஐயோ ! காண்கிறிலேன் - காண்கிறிலேன்; (துःகமேதென்னில்), காண் - (எப்போதும்) காண்கைக்கு, தகு - தக்கிருப்பதாய், தாமரை - (விகாஸம், செவ்வி, குளிர்த்தி, நாற்றங்களாலே) தாமரைபோன்றிருக்கிற, கண்ணன் - கண்ணையுடையனாய், கள்வன் - (பார்வையாலே தன் வைலக்ஷண்யத்தைக் காட்டி வஞ்சித்து ஸர்வஸ்வாபஹாரம் பண்ணின) க்ரித்ரிமனாய், (இக்கண்ணழகாலே), விண்ணவர் - ஸூரிகளை யடங்க, கோன் - அலற்றப்பண்ணுமவனாய், (அப்படி), நங்கள் - என்னையும், கோனை - ஈடுபடுத்தினவனை, கண்டால் - கண்டால், ஈண்டிய - (என்பக்கலில் நின்றும்) அங்கே போய்க்குவிந்த, சங்கும் - வளைவளையும், நிறைவும் - ஸ்த்ரீத்வாதிபூர்த்தியையும், கொள்வான் - வாங்கிக்கொள்ளுகைக்காக, எத்தனை - எத்தனை, காலம் - காலமுண்டு, இளைக்கின்றேன் - தளர்ந்து க்லேசிக்கிறேன்.

இ.—இரண்டாம்பாட்டில், "இப்படியானாலும் அந்தரங்கைளான எங்களுக்கு உன்நோயிற் சொல்லலாகாததுண்டோ? சொல்லாய்!" என்ன,'துःகாநுபவத்தால் வந்தஇளைப்பின் மிகுதியாலே உங்களுக்குச்சொல்லலாம் பாசுரமறிகிறிலேன்'என்கிறாள்.

[வேண்டிச்சென்றுஒன்றுபெறுகிற்பாரில்] - என்பக்கலிலே வந்து ஒன்றை யபேக்ஷித்துப் பெறுமவர்களில் தலையான வரிசையையுடைய தோழிமாரான உங்களுக்காகிலும். [என்னுடைத் தோழிமார்] - நிருபாதிகஸௌஹார்துமுடைய தோழிமார் : உயிர்த்தோழியர். சென்றென்றது - வந்தென்றபடி. அங்ஙனன்றிக்கே, "அவனை ஒன்று அபேக்ஷித்துச் சென்றாரில் ஓர் அபேக்ஷிதம்பெற்றறிவாரில்லை; "ஸகலஃபலப்ரதோஹி விஷ்ணு:' என்கிறது - உக்திமாத்ரமே" என்றொரு தமிழன் நிர்வஹித்தான். [ஈண்டு] - இப்போது முன்பெல்லாம் சொல்லிப் போந்தேனாகிலும்இப்போது சொல்லலாவது காண்கிறிலேன். [இது] - எல்லாவற்றிலும் பாசுரமிட்டுச் சொல்லிப் போந்தேனாகிலும் இது

சொல்லுகைக்குப் பாசுரம் காண்கிறிலேன். [உரைக்கும்படியை] - நெஞ்சிலே விஷமூர்ந் தாற்போலே பூராநின்றது, பாசுரமிட்டுச் சொல்லலாவதில்லை. [அந்தோ; காண்கின்றி லேன்] - எனக்கோடுகிற தசையை உங்களுக்குச் சொல்லி அநுஸந்திப்பித்துத் தரிக்க, கேட்கிறவுங்களிலும் எனக்குத் தேட்டமாயிருக்க, பாசுரம் காண்கிறிலேன். "ஹா ஹெவெரவயார்ருதெ". [இடராட்டியேன் நான்] - என்னிடருக்கன்றிக்கே, "சொல்லு, சொல்லு" என்று அலைக்கிறவுங்களுக்கன்றிபே, துக்கப்படுகிற நான். [காண்தகுதாம ரைக்கண்ணன்] - காணத்தக்கிருந்துள்ள கண்களையுடையவன். ஸதாதர்ஶநயோக்யமான கண்கள். விகாஸம், செவ்வி, குளிர்த்தி, நாற்றம் இவற்றாலே பங்கஜஸத்ருஶமாயிருக்கை. [கள்வன்] - "நானும் என்னுடைமையும் உன்னதன்றோ" என்று ஒருகால் தன் செல்லா மையை ஆவிஷ்கரித்து, ஆத்மாத்மீயங்களை யபஹரிக்கவன். [விண்ணவர்கோன் நங்கள் கோனை] - நித்யஸூரிகளைப்போலே என்னை அநந்யார்ஹையாக்கினவன். ஒருவிபூதி யாகப் படுத்தினபாட்டைக்கிடீர் என்னையொருத்தியையும் படுத்திற்று! [கண்டால்] - காணப்பெற்றால். [ஈண்டிய சங்கும் நிறைவும் கொள்வான்] - அவன்பக்கலிலே திரண்ட வளையையும், அடக்கத்தையும் அவன்பக்கலிலே கொள்ளுகைக்காக. தன்பக்கல் தொங்காதவை யெல்லாவற்றுக்கும் புகல் அங்கேயென்றிருக்குமே. [எத்தனை காலம் இளைக்கின்றேனே] - இவ்வாசையோடே எத்தனைகாலமுண்டு இளைத்துப்போருகிறது?

ஈடு — இரண்டாம்பாட்டு. "இப்படியானாலும் அந்தரங்கைகளான எங்க ளுக்கு நோவிற் சொல்லலாகாததுண்டோ? சொல்லாய்" என்ன, "து:காநு஭வத்தால்வந்த இளைப்பின் மிகுதியாலே உங்களுக்குச் சொல்லும் பாசுரம் அறிகிறிலேன்" என்கிறாள்.

[வேண்டிச்சென்றொன்று பெறுகிற்பாரில் இத்யாதி] - என்பக்கலிலேவந்துஒன்றை யபேக்ஷித்துப் பெறுமவர்களில் தலையான வரிசையையுடைய தோழிமாரான உங்களுக் காகிலும். [என்னுடைத்தோழியர்] - உயிர்த்தோழியர். சென்றென்றது - வந்தென்றபடி. அங்ஙனன்றிக்கே, பதஸங்கதைப்பண்ணி, [வேண்டிச்சென்றொன்றுபெறுகிற்பார்இல்] - அவனை ஒன்றபேக்ஷித்துச்சென்றாரில் ஓரபேக்ஷிதம்பெற்றாரில்லை; "ஸகுருமெறுஅ ஜொஹிவிஷ்ணு:" (ஸகலபலப்ரதோஹி விஷ்ணு:) 'வேண்டிற்றெல்லாந்தரும்' என்கிற விடம் உக்திமாத்ரமே" என்று நஞ்சீயர் நிர்வஹித்தான். [ஈண்டு] - இப்போது. முன் பெல்லாம் சொல்லிப் போந்தேனேயாகிலும் இப்போது சொல்லலாவதுகாண்கிறிலேன். [இது] - எல்லாவற்றிலும் பாசுரமிட்டுச் சொல்லிப்போந்தேனேயாகிலும், இது சொல்லு

---

இரண்டாம்பாட்டு—வேண்டி இத்யாதி. "ஈண்டிதுரைக்கும்படியை யந்தோ காண்கின் றிலேனிடராட்டியேன்" என்றவற்றைக் கடாக்ஷித்து அவதாரிகை - இப்படியானாலும் இத்யாதி.

"சென்று வேண்டி - ஒன்றுபெறுகிற்பாரில் என்னுடைத்தோழியர் நுங்கட்கேலும்", என்று அந்வயித்து அர்த்தம் - என்பக்கலிலே இத்யாதி. "தலையானவரிசையையுடைய" என்ற துக்கு ஸப்தமேதென்ன - என்னுடைத்தோழியர் இத்யாதி. இவ்வர்த்தத்துக்கு, "பெறுகிற்பாரில்" என்றது - ஸப்தமீ. "சென்று" என்றது - விபரீதலக்ஷணையாய், வந்தென்றபடி. த்விதீயார்த் தம் - வெறுப்பிலே. பதஸங்க்ருத்தைப் பண்ணியென்றது - "பெறுகிற்பார்" என்கிற இவ்வளவிலே பதத்தைநிறுத்தி என்றபடி. "இல்" என்றது - இல்லையென்றபடி. "பெறுகிற்பார்"-பெற்றாரென்ற படி. "ஈண்டு" என்கிறதுக்கு ஭ாவம் - முன்பெல்லாம் இத்யாதி. "இது" என்றதுக்கு வாஸநை -

கைக்குப் பாசுரங் காண்கிறிலேன். [உரைக்கும்படியை] - நெஞ்சிலே விஷமூர்ந்தாற் போலே ஊராநின்றது; பாசுரமிட்டுச் சொல்லலாவதில்லை. [அந்தோ! காண்கின்றிலேன்]- எனக்கோடுகிற தசையை உங்களுக்குச் சொல்லி அகஞ்சுரிப்படுத்தி ,,ரிக்கைக்கு, கேட்கிற உங்களிலும் எனக்குத் தேட்டமாயிருக்க,பாசுரங் காண்கிறிலேன். † "ப்ரலாபைரேவ யாரூதெ" (ப்ரலாபைரேவ தார்யதே). [இடராட்டியேன்நான்] - நோவாட்டியேன் நான். என் இடருக்கன்றிக்கே, "சொல்லு, சொல்லு" என்றலைக்கிற உங்களுக்கன்றிக்கே, துகைப்படுகிற நான்: [காண்தகு தாமரைக்கண்ணன்] - காணத்தக்கிருந்துள்ள கண்ணை யுடையவன். ஸதா தர்ஸநயோக்யமான கண்கள்: விகாஸம், செவ்வி, குளிர்த்தி, நாற்றம். இவற்றால் பங்கஜஸத்ருஸமாயிருக்கை. [கள்வன்] - நோக்காலே தன் செல்லாமையை ஆவிஷ்கரித்து, என்ஆத்மாத்மீயங்களை அபஹரித்தவன். [விண்ணவர்கோன் நங்கள்கோனை] - நித்யஸூரிகளைப்போலே என்னை அநந்யார்ஹையாக்கினவன். ஒருவிபூதியாகப் படுத்தின பாட்டைக்கிடீர் என்னையொருத்தியையும் படுத்திற்று. [கண்டால்] - காணப்பெற்றால். [ஈண்டியசங்கும்] - திரண்டவளையையும். ஒருவலம்புரி கிடந்தவிடத்தே ஆயிரம் சங்குசேரும். "வலம்புரியாழியன்வேங்கடவேதியன்" இறே. [நிறைவும்] - அடக்கத்தையும். [கொள்வான்] - கொள்ளுகைக்காக. தன் பக்கல் தொங்காததவை யெல்லாவற்றுக்கும் புகல் அங்கேயென்றிருக்குமே. இவளுக்குக் கைமுதல் அங்கேயிறே. இதுவாகில் உன்துணிவு காலஞ்சென்றவாறே நீயே இளைத்துமீளுகிறாயென்ன?—[எத்தனை காலமிளைக்கின்றேனே] - இதுசொல்லிப் பகட்டக் கேட்பனோ? இவ்வாசையோடே எத்தனைகாலமுண்டிளைத்துப்போருகிறது? (உ)

எல்லாவற்றிலும் இத்யாதி. "உரைக்கும்படியை" என்றதுக்கு வாஸனை - நெஞ்சிலே இத்யாதி. "உரைக்கும்படியை - காணமாட்டேன்" என்கையாலே - நெஞ்சில் நிறைந்திருக்கிறது ஸித்தம். "அந்தோ!" என்று விஷண்ணையாகிறவளுடைய பாவம் - எனக்கோடுகிற இத்யாதி. அகஞ்சுரிப்படுத்தி - ஸங்கோசிப்பித்து. அப்படி சொலவு த்ாரணத்துக்குடலாய்த் தேட்டமாயிருக்குமோ வென்ன - ப்ரலாபைரேவ இத்யாதி. நோவேது? என்ன - என் இடருக்கு இத்யாதி. "இடராட்டியேன்" என்றதுக்கு அவதாரிகையிலொரு பாவமும், இங்கேயொரு பாவமும். விவரணம் - ஸதா தர்ஸந இத்யாதி. "தாமரைக்கண்" என்றதுக்கு அர்த்தம் - விகாஸம் இத்யாதி. "தாமரைக்கண்ணன்" என்றத்தையும் கூட்டி, "கள்வன்" என்றதுக்கு பாவம் - நோக்காலே இத்யாதி. இத்தால் பாவம்-ஒருவிபூதியாக இத்யாதி. இவள்கையிற்சங்குகள் அவனிடத்தில் திரளுகைக்கு ஹேதுவேதென்ன - ஒருவலம்புரி இத்யாதி. அவனுக்கு வலம்புரியுண்டோவென்ன - வலம்புரியாழியன் இத்யாதி. திருமொழி. ஸ்பஷ்டோர்த்த:. அவனிடத்திலே கொள்ளவேணுமென்கிறதென்? என்ன - தன்பக்கல் இத்யாதி. கேட்பனோ - கேட்பேனோவென்றபடி. பகட்ட - ப்ரமிப்பிக்க. 'காண்தகுதாமரை' என்றுதொடங்கி, எத்தனைகாலமிளைக்கின்றேன்;ஆகையாலே,இடராட்டியேன் நான் - சென்றொன்று - வேண்டி - பெறுகிற்பாரில் வைத்துக்கொண்டு, 'என்னுடைத்தோழியர் நுங்கட்கேலும் ஈண்டிதுரைக்கும்படியை - காண்கின்றிலேன் - அந்தோ!' இத்யன்வய:. அன்றிக்கே, 'காண்தகுதாமரை' என்றுதொடங்கி, இளைக்கின்றேன்; ஆகையாலே, வேண்டிச்சென்றொன்று பெறுகிற்பாரில்: 'என்னுடைத்தோழியர் என்றுதொடங்கி,இடராட்டியேன்நான்- காண்கின்றிலேன் - அந்தோ!' என்று தமிழன் நிர்வாஹத்துக்கு அந்வயம். "தெவெந ஸிஹ்வ ந ... ஸுவிபாஷிதஷு ... ஹிந்ந ... " உதி ஸ்ரீ விஷ்ணு ...

†"ஸோகக்ஷோபெ ச ஹ்ருதயம்" உத்யாதி உத்தரராம சரிதநாடகே.

## மூன்றாம் பாட்டு.

காலமிளைக்கிலல்லால்வினையேன்நான்இளைக்கின்றிலன்கண்டுகோண்மின்
ஞாலம்அறியப்பழிசுமந்தேன் நன்னுதலீர்! இனிநாணித்தானென் ?
நீலமலர்நெடுஞ்சோதிசூழ்ந்த நீண்டமுகில்வண்ணன்கண்ணன்கொண்ட
கோலவளையோடுமாமைகொள்வான் எத்தனைகாலமுங்கூடச்சென்றே.

ஆ.—(காலமிளைக்கில்.) - அவனை யாசைப்பட்டுப் பெறாதே உனக்குள்ள வையுமிழந்து அவைபெறுகைக்கு நெடுங்காலம் வருந்தியும் பெறாதபின்பு இனித்தான் வருந்தினால் கிடைக்குமோ? இனி, அவைபெறுகையில் வருந்தாதேவிட்டாலோ ? என்னில்,—நிரவதிக நீலஜ்யோதி:பரிவ்ருதமஹாவலாஹக ஸத்ருஶமான திருமேனியையுடையனான க்ருஷ்ணனாலே அபஹ்ருதமான கோலவளையொடுமாமைகொள்வான் உத்யுக்தையான நான், எத்தனைகாலம் கூடச்சென்றாகிலும் கொள்வன் ? இக்காலதத்த்வந்தான் முடிந்துபோமத்தனையல்லது நான்கொண்டல்லதுவிடேன்; இத்தைக் கண்டு கொண்மின். அவன்தானாசைப்பட அவனுக்கும் அரியையாயிருக்கடவ நீ, "அவனையாசைப்பட்டால் உனக்குப் பழிவருமென்று லஜ்ஜையில்லையோ? என்னில்,—'ஞாலமறியப் பழிசுமந்தேன்: நன்னுதலீர்! இனி, நாணித்தானென் ?' என்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், நாங்கள் சொல்லவிட்டிலையேயாகிலும் நீயேயிளைத்து விடுகிறாயிறே? என்ன ; நித்யகாலதத்த்வம் முடியிலும் நான் அவனைக் கண்டல்லதுவிடே

[ஞாலம் அறியவென்று மேலுக்கு] - "உனக்கு லஜ்ஜையில்லையோ" என்று தோழிமார் சொல்ல, நெடுங்காலம் ஸம்ப்ஶ்லேஷார்த்தமாகச் சென்றாகிலும் நீலமாய்விகஸியாநின்றுள்ள மிக்க ஒளிசூழ்ந்து பெருத்த முகில்நிறத்தையுடைய க்ருஷ்ணன் இவ்வழகைக்காட்டி அபஹரித்துக்கொண்ட அழகியவளையும் மாமையும் கொள்ளுகைக்காக ஜகத்தெல்லாம் அறியும்படி பழிசுமந்தேன் ? இனி லஜ்ஜித்து என்னப்ரயோஜநமுண்டு?

ப.—அநந்தரம், அதிஶயிதாபிரூப்யத்தை யுடையவனைச் சென்று கிட்டி என்வளைதொடக்கமானவை வாங்குமிடத்தில், நீங்கள் "அவன் துர்லபன்" என்று விலக்கிலும், காலம் முடிந்துபோகிலும், நான் கிட்டியல்லது விடேனென்கிறாள்.

நீலம் - நீலநிறமாய், மலர் - விகஸிதமாய், நெடும்-அபரிச்சேத்யமான, சோதி- தேஜஸ்ஸாலே, சூழ்ந்த - சூழப்பட்ட, நீண்டமுகில் - மஹாமேகம்போலே யிருக்கிற, வண்ணன் - நிறத்தையுடைய, கண்ணன் - க்ருஷ்ணன், கொண்ட - அபஹரித்துக் கொண்ட, கோலம் - தர்ஶநீயமான, வளையொடு - வளையோடேகூட, மாமை - என் நிறத்தை, எத்தனைகாலமும்-, கூடச்சென்றே - கூடச்சென்றேயாகிலும், கொள்வான் - கொள்ளுகைக்காக, ஞாலம் - லோகம், அறிய - அறியும்படி, பழி - (துணிந்து புறப்பட்டாளென்கிற) பழியை, சுமந்தேன் - சுமந்தேன்; நல் - அழகிய, நுதலீர் - நுதலையுடைய தோழிமீர்! இனி - இனி, நாணித்தான் - லஜ்ஜித்து, என் - என்னப்ரயோஜநமுண்டு ? (ஆதலால்), காலமிளைக்கிலல்லால் - காலமிளைத்து முடிந்துபோமதொழிய, வினையேன் - (அவன் துர்லபனானாலும் விடமாட்டாத) பாபத்தையுடைய, நான் - நான்,

இளைக்கின்றிலன் - இளைத்துவிடுகிறேனல்லேன்; கண்டுகொண்மின் - இது ப்ரத்யக்ஷித்துக்கொள்ளுங்கோள் !

இ.—மூன்றாம்பாட்டில், "ஜ்ஞவத்விஷயத்தில் ப்ராவண்யம் தண்ணிது" என்கிறோமல்லோம்: நாங்கள் சொல்லமீண்டிலையேயாகிலும் எட்டவொண்ணாத விஷயமாகையாலே நாட்சென்றவாறே நீயே மீளுவுதி; எங்கள் வார்த்தைக்கு மீண்டாயாகவமையாதோ?' என்ன ; காலதத்த்வம் முடியிலும் அவனைக்கண்டாலல்லது விடேனென்கிறாள்.

[காலம் இத்யாதி]-"க்ஷணாதிஸூக்ஷ்மவாநுகாலோ ஷோடஶாம்ஶதாஸ்" என்கிற காலம் முடியுமத்தனையல்லது நானிளைத்து மீளுகிறேனல்லேன். [நானிளைக்கின்றிலன்]-"நகாலஸ்தத்ர வை ப்ரபு:" என்று காலத்துக்கும் அவ்வருகான விஷயத்தை விளாக்குலை கொண்ட அபிநிவேஶத்தையுடைய நான் மீளுவேனோ? [வினையேன்] - "துர்லபம்" என்றாலும் விடவொண்ணாத விஷயத்திலே கைவைக்கும்படி பாபத்தைப்பண்ணினேனென்னுதல், நீங்கள்சொன்ன வார்த்தை நெஞ்சில் படாதபடியான பாபத்தைப்பண்ணினேனென்னுதல். [கண்டு கொண்மின்] - சொல்லுமத்தனைபோக்கி முடியாதுகாண் என்ன, ப்ரத்யக்ஷிக்கப் புகுகிற வர்த்தத்துக்கு வேறொன்று வேணுமோ? இப்படித்துணிந்தால் லோகமடையப் பழிப்புச்சொல்லாதோ? என்ன, [ஞாலம் அறியப் பழிசுமந்தேன்]- "நாடுமிரைக்கவே - யாமடலூர்ந்தும்" என்ற அன்றுதொடங்கிப் பழிசுமந்துபோருகிறேனன்றோ ? ஆனாலும் ஸ்த்ரீத்வப்ரயுக்தமான லஜ்ஜையைவிடாதே நோக்கவேண்டாவோ? என்ன-[நன்னுதலீர்இனி நாணித்தானென்] - ஜகத்தெல்லாம்அறியப் பழிசுமந்த பின்பு லஜ்ஜித்து என்ன ப்ரயோஜநமுண்டு? [நன்னுதலீர்] - நுதல் - நெற்றி. உங்கள்முகத்தில் எழிலழியாதிருக்க என்முகத்தில் எழில் குடிபோனபடி கண்டிகோளே! இந்நெடுவாசியைப் பார்த்தன்றோ ஒருவார்த்தை சொல்லுவது. [நீலமலர் இத்யாதி] — நீலமாய், விஸ்த்ருதமாய், அபரிச்சேத்யமான தேஜஸ்ஸு சூழ்ந்த அபரிச்சேத்யமான காளமேகத்தின் நிறம்போலேயிருக்கிற நிறத்தையுடைய ஆஶ்ரிதஸவ்யன் இவ்வழகைக் காட்டி யபஹரித்துக் கொண்ட. [கோலவளை] - அவன் தன்கையிலேபிட்டுக்கொண்டு கொண்டாடும் வளையாகையாலே - அழகிய வளையென்கிறாள். [மாமை] - அவன் கொண்டாடுகிற நிறம். [கொள்வான்] - வளையோடேகூடின நிறத்தை மீட்டுக்கொள்ளுகைக்காக. [எத்தனைகாலமும் கூடச்சென்றே] - நெடுங்காலம் ஸம்ஶ்லேஷார்த்தமாகச் சென்றாகிலுமென்னுதல், காலமெல்லாங் கூடியாகிலும் சென்றென்னுதல். 'நீலமலரென்று தொடங்கி, கோலவளையொடுமாமை - எத்தனைகாலமும் கூடவாகிலும் சென்று - கொள்வன் ; ஞாலம் அறியப் பழிசுமந்தேன்: நன்னுதலீர் ! இனி நாணித்தானென் ? காலம் இளைக்கிலல்லால் வினையேன் நானிளைக்கின்றிலன் கண்டுகொண்மின்' என்று வாக்யபேதம் பண்ணி அந்வயிக்கை முக்யம்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. 'நாங்கள் சொல்ல மீண்டிலையாகிலும் எட்டவொண்ணாத விஷயமாகையாலே நாட்சென்றவாறே நீயேமீளுவுதி: எங்கள்வார்த்தைக்கு மீண்டாயாக அமையாதோ?' என்ன, - காலதத்த்வம் முடியிலும் நான் அவனைக் கண்டல்லது விடேனென்கிறாள்.

மூன்றாம்பாட்டு.—காலம் இத்யாதி. "காலமிளைக்கிலல்லால்வினையேன் நானிளைக்கின்றிலன்" என்ற பதத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - நாங்கள் இத்யாதி.

[காலம் இத்யாதி] - ''அநாதிர்ப்பகவாந் காலோநாந்தோஸ்ய'' (அநா திர்ப்பகவாந் காலோநாந்தோஸ்ய) என்கிற காலம் முடிந்துபோமித்தனையல்லது நான் இளைத்து மீளுகிறிலேன். [நான்இளைக்கின்றிலன்]-† ''நகாலஸ்தத்ரவைப்ரபு:'' (நகாலஸ்தத்ரவைப்ரபு: ) என்று காலத்துக்கும் அவ்வருகான விஷயத்தை விளாக்குலை கொண்ட அபிநிவேசத்தையுடைய நான் மீளுவனோ? [வினையேன்] - ''துர்லபம்'' என்றாலும் மீளவோண்ணாதவிஷயத்திலே கைவைக்கும்படியான பாபத்தைப் பண்ணினேனென்னுதல், நீங்கள்சொன்னவார்த்தை நெஞ்சில் படாதபடியான பாபத்தைப் பண்ணினே னென்னுதல். இப்போது இங்ஙனேசொன்னாயாகிலும் மேல்அநுஷ்ட்டிக்கிறாய் நீயேயென்ன, [கண்டுகொண்மின்] - ப்ரத்யக்ஷிக்கலானவர்த்தம் பிறர்பக்கலிலே கேட்டறியவேணுமோ? உன்துணிவு இதுவானபின்பு எல்லாருமொக்கப் பழிசொல்லுகிறார்களிறேயென்ன, [ஞாலம்அறியப்பழிசுமந்தேன்] - இன்றோ நான்பழிசுமந்தது ? ''நாடுமிரைக்கவே'' என்றவன்றே பழிசுமந்திலேனோ ? ''பழிசுமந்தேன் என்னுமது வார்த்தையோ? ஸ்த்ரீத்வப்ரயுக்தமான லஜ்ஜையை நோக்கவேண்டாவோ ?'' என்ன, [நன்னுதலீரினிநாணித்தானேன்] - நம் அழகு அழிவதற்குமுன்பன்றோ அவைநோக்க வேண்டுவது? ஜகத்ப்ரஸித்தமாய்விட்டதாகில் இனிலஜ்ஜித்து என்னப்ரயோஜநமுண்டு? [நன்னுதலீர்] நுதல்-நெற்றி. உங்கள்முகத்தில் எழிலழியாதிருக்க என்முகத்தில் எழில் குடிபோனபடி கண்டிகோளே; இந்தநெடுவாசியைப் பார்த்தன்றோ வார்த்தைசொல்லுவது? அது கிடக்க: அவன் ஸௌந்தர்யம் நம்மை நினைத்தபடிசெய்யவொட்டாநின்றதோவென்கிறது மேல்:—[நீலமலர் இத்யாதி]-நீலமான நிறத்தையுடைத்தாய். [மலர்]-விஸ்த்ருதமாய். [நெடு]-அபரிச்சேத்யமாய்.[சோதிசூழ்ந்தஇத்யாதி]-தேஜஸ்ஸாலே சூழப்பட்டு, அபரிச்சேத்யமாயிருப்பதொரு காளமேகத்தின் நிறம்போலேயிருக்கிற நிறத்தையுடையனாய், அவ்வடிவைப் பரார்த்தமாக்கிவைக்கும் அவன்அபஹரித்த சீர்மையமான வளையோடேகூட அவன் வாய்புலற்றும் நிறத்தையும் மீட்டுக்கொள்ளுகைக்காக, காலமெல்லாம் கூடச்சென்றும் - ஞாலமறியப்பழிசுமந்தேன், நன்னுதலீர் ! இனிநாணித்தானேன் ? [எத்தனைகாலமும் கூடச்சென்று] - நெடுங்காலம் ஸம்ஸ்லேஷார்த்தமாகச் சென்று என்னுதல். (ரு)

நீ இளையாமைக்கு ஹேதுவேதென்ன - நகால இத்யாதி. அநாதிர்ப்பகவாந் இத்யாதி- ''ஸவ்யாஹ்ருதிகாஸப்ரணவா ... ஜபேத்ஸதா'' இத்யுத்தரார்த்தம். (விஷ்ணு-பு-க-உ-உஅ) அவர்களை ''நன்னுதலீர்'' என்கையாலே தான் எழிலிழந்தமையை ஸூசிப்பித்தவத்தாரிக்கு ''... '', என்றதுக்கு அர்த்தம் - நம்மழகு அழிவதற்கு இத்யாதி. ''ஞாலமறியப்பழிசுமந்தேன் - ...'' என்று கூட்டி பாவாந்தரம்-ஜகத்ப்ரஸித்தமாய் இத்யாதி. ''நன்னுதலீர்'' என்று அவர்களை ஸம்போதிக்கிறவளுடைய ஹார்த்தபாவம்-உங்கள்முகத்தில் இத்யாதி வாக்யத்வயமும்.அதுகிடக்க-பரிஹரிக்குமது கிடக்கச்செய்தே என்றபடி. முந்தின அர்த்தத்துக்கு, ''எத்தனைகாலமும் கூடச்சென்று'' என்று-முழுச்சொல்லாய், காலமெல்லாம் கூடியுமென்றபடி. நீலமலர் என்றுதொடங்கி, 'கூடச்சென்று - ஞாலமறியப்பழிசுமந்தேன் நன்னுதலீரினிநாணித்தானென்? ஆகையாலே, காலமிளைக்கிலல்லால் வினையேன் நானிளைக்கின்றிலன் கண்டுகொண்மின்' இத்யந்வய:. அன்றிக்கே, ''நாணித்தானென்'' என்று க்ரியாபதமாகவுமாம். (ரு)

† இது, ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் ப்ரதமாம்சத்தில் ஒன்பதாவது அத்தியாயத்திலுள்ளதென்பர்.

# நான்காம் பாட்டு.

கூடச்சென்றேன் இனியென்கொடுக்கேன் ? கோல்வளைநெஞ்சத் தொடக்கமெல்லாம், பாடற்றொழிய இழந்துவைகல் பல்வளையார்முன்பரி சழிந்தேன், மாடக்கொடிமதிள்தென்குளந்தை வண்குடபால்நின்றமாயக் கூத்தன் ஆடற்பறவையுயர்த்தவெல்போர் ஆழிவலவனையாதரித்தே.

ஆ.--(கூடச்சென்றேன்) - இதுக்குமுன்பு அவனை யாசைப்பட்டு உன்னுடைய உபகரணங்களை இழந்தாற்போலே, இனியுள்ளவற்றையும் இழவாதே அவனை யாசைப்படத்தவிர்ந்தாலோ ? என்னில்,—ஹேமமிரிஸிகர ஸத்ருஶ ப்ராஸாதாலங்க்ருதமாய், த்வஜவிராஜித ப்ராகாரபரிவ்ருதமாய், தக்ஷிணதிக்திலகபூதமாயிருந்த திருக்குளந்தையில் பரமோதாரமான மேலைத்திக்கிலே, வைநதேயவாஹநனாய், விஜிதரிபுநிகர ஸாதநமான விஶ்ராந்த தக்ஷிணபுஜனாய்க்கொண்டு, ஸாந்த்ருத்தவத்தர்ஶநீயனாம்படி நின்றருளின அவனை ஆதரித்துக் கூடச்சென்றேன். சென்று, கோல்வளைநெஞ்சத்தொடக்கமெல்லாம் பாடற்றொழிய இழந்து வைகல் பல்வளையார்முன்னே என்ஸ்வபாவமெல்லாமிழந்தேன். இனி என்கொடுக்கேன் ? என்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், உன்துணிவுஇதுவாக எல்லாவற்றையுமிழக்கிறாயிறே என்று தோழிமார் சொல்ல ; இனியெத்தையிழப்பது ? பண்டே எல்லாமிழந்தோமிறேயென்று யதாநிநோரயம் ஸம்ஶ்லேஷிக்கப் பெறாமையாலே சொல்லுகிறாள்.

[கூடச்சென்றேன்] - இப்பாட்டுக்கு, நல்ல மாடங்களையும் கொடியோடுகூடின மதிள்களையுமுடைய தெற்குத்திக்கிலேயுண்டான திருக்குளந்தையில் விலக்ஷணமான மேற்பார்ஶ்வத்திலே நின்றருளுவதுஞ்செய்து ஸர்வேஶ்வரவாஹநமென்னும் ஹர்ஷத்தாலே ஆடாநின்றுள்ள பெரியதிருவடியாலே வஹிக்கப்படுவதுஞ் செய்து போரிலேவெல்லும் திருவாழியை வலத்திலேயுடைய மாயக்கூத்தனை ஆதரித்து ஸம்ஶ்லேஷிக்கச்சென்று என் அழகிதான வளை நெஞ்சு தொடக்கமாக எல்லாவற்றையும் நிஶ்ஶேஷமாக இழந்து அவனையும் குணஹாநி சொல்லக்கடவ ஸ்த்ரீகள் எதிரே என்னுடைய ஸ்த்ரீத்வப்ரகாரமான குணங்களை யிழந்தேன். இனி எத்தைக் கொடுப்பேன் ?

ப.—அநந்தரம், ஆஶ்ரிதாநிஷ்ட நிவர்த்தகமான ஆயுதாதிபூர்த்தியையுடையவனைக் கிட்டவேணுமென்று நினைத்து ஸர்வஸ்வாபஹாரம்பிறந்த நான் இனி எத்தைக் கொடுப்பதென்கிறாள்.

மாடம் - மாடங்களையும், கொடி - கொடியோடுகூடின, மதிள் - மதிளையுமுடைத்தாய், தென் - நன்றான, குளந்தை - திருக்குளந்தையில், வண் - அழகிய, குடபால் - மேற்பக்கத்திலே, நின்ற - நின்ற, மாயக்கூத்தன் - ஆஶ்சர்ய சேஷ்டிதயுக்தனாய், ஆடல் - (ஹர்ஷத்தாலே) தர்ஶநீயகதியான, பறவை - பெரியதிருவடியை, உயர்த்த - மேற்கொண்டிருப்பானாய், (ஆஶ்ரிதவிரோதிநிரஸநத்தில்), வெல் - வெற்றியையுடைத்தான, போர் - போரையுடையனான, ஆழி - திருவாழியை, வலவனை - வலத்திலேயுடையனானவனை, ஆதரித்து - ஆதரித்து, கூட - ஸம்ஶ்லேஷிக்கவேணுமென்று, (நான்), கோல் - அழகிய, வளை - வளை, நெஞ்சம் - நெஞ்சு, தொடக்கமெல்லாம் - தொ

டக்கமானவையெல்லாம், பாடு - என்பக்கல், அற்று - ஶேஷியாமல், ஒழிய - விட்டுப் போம்படியாக, இழந்து - இழந்து, பல் - பல, வளையார் - வளையையுடையபெண்டுகள், முன் - முன்னே, வைகல் - நெடுங்காலமுண்டு, பரிசு - என்ஸ்வபாவம், அழிந்தேன் - அழிந்துபோய், இனி - இனி, என் - எத்தை, கொடுக்கேன் - கொடுப்பேன்? ஆழி வலவனென்று - வல்லவனென்றுமாம். நெஞ்சத்துளக்கமென்று - நெஞ்சோடுண்டான துவக்கு இழந்தேனென்றுமாம்.

இ.—நாலாம்பாட்டில், உன்துணிவிதுவாக இன்னமெல்லாவற்றையும் இழக்கிறாயிறே என்ன ; இனி எத்தையிழப்பது? எல்லாமிழந்திலேனோ ? என்கிறாள்.

[கூடச்சென்றேன்] - ஸம்ஶ்லேஷார்த்தமாகச் சென்றேன். ஸ்வரூபத்தை யழியமாறியன்றோ நான் சென்றது? [இனியென் கொடுக்கேன்] - பண்டே எல்லாம் இழந்தபின்பு இனி எத்தையிழப்பது ? [கோல்வளை] - அழகியவளை. [நெஞ்சமித்யாதி] - நெஞ்சு தொடக்கமானவையெல்லாம். அவன் விஶ்லேஷாதிபோபாதி போரும் இவளுடைய பரிகரத்தின்பரப்பும். [பாடற்றொழிய இழந்து] - என்பக்கல் ஸவாஸநமாக ஸம்பந்தமற்றுப்போம்படி யிழந்து. [வைகல் பல்வளையார்முன்] - என்றுமொக்கப் பல வகைப்பட்ட வளையையுடைய ஸ்த்ரீகள்முன்பே, அவனையுமென்னையும் குணஹாநி சொல்லக்கடவ ஸ்திரீகள் எதிரே. [பரிசழிந்தேன்] - பரிசு - ப்ரகாரம். என்னுடைய ப்ரகாரம் - ஸ்த்ரீத்வப்ரகாரம்; அத்தையிழந்தேன். கழற்றிப் பூணுமவற்றை அவர்கள் யரித்திருக்க, கழற்றவொண்ணாதபடி ஆபரணமாயிருக்கிற லஜ்ஜாதிகளை யிழந்தேன். [மாடக்கொடிமதிள் தென்குளந்தை] - மாடங்களையும் கொடியோடுகூடின மதிள்களையுமுடைத்தாய், தெற்குத்திக்குக்கு ஶ்லாக்யமான திருக்குளந்தையில். [வண்குடபால் நின்ற] - அழகிதான மேற்பார்ஶ்வத்திலே நின்ற. மேலைத்திக்கில் நிற்கிறவிதுவும் ஒரு வைலக்ஷண்ய ஹேது. [மாயக்கூத்தன்]-ஆஶ்சர்யசேஷ்டிதன். [ஆடல்பறவையுயர்த்த]-ஸர்வேஶ்வர வாஹநமென்னும் ஹர்ஷத்தாலே மயூபாநம் பண்ணினாற்போலே களித்தாடாநின்றுள்ள பெரியதிருவடியாலே வஹிக்கப்பட்டவனை. பெரியதிருவடி திருத்தோளிலிருப்பும் ஒருவைலக்ஷண்யஹேது. [வெல் போராழிவலவனை] - யுத்தத்தில் வெற்றியோடல்லது மீளாத திருவாழியை வலவருகே யுடையவனை யாதரித்து. 'மாடக்கொடிமதிள்' என்றுதொடங்கி, 'வெல்போராழிவலவனை - மாயக்கூத்தனை-ஆதரித்து - கூடச்சென்றேன் - கோல்வளை நெஞ்சத்தொடக்கமெல்லாம் பாடற்றொழியவிழந்து வைகல்பல்வளையார்முன் பரிசழிந்தேன் - இனியென் கொடுக்கேன்?'

ஈடு.—நாலாம்பாட்டு. உன்துணிவு இதுவாக இன்னமுள்ளதடைய இழக்கிறாயிறேயென்ன; 'இனி நான் எத்தை இழப்பது?' என்கிறாள்.

[கூடச்சேன்றேன்]-நான் முடிந்து ஒருதலையேயாம்படி கிட்டினேனென்னுதல், ஸம்ஶ்லேஷார்த்தமாகச்சேன்று கிட்டினேனென்னுதல். [இனியேன்கோடுக்கேன்] – பண்டே எல்லாமிழந்தபின்பு இனி எத்தை இழப்பது? [கோல்வளை இத்

---

நாலாம்பாட்டு.—கூடச்சேன்றேன் இத்யாதி. "கோல்வளை" என்றுதொடங்கி, "பரிசழிந்தேன் - இனியென்கொடுக்கேன்" என்றவற்றைக் கடாக்ஷித்து அவதாரிகை - உன்துணிவு இத்யாதி.

முந்தினயோஜனையில், ஶரீரத்தைவிட்டு நித்யவிஶ்லேஷியிலேபோய் அவனோடே கூடும்படி சென்று என்று ஶப்தார்த்தம்; அத்தைக்கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - பண்டே இத்யாதி.

யாதி]-ஊர்ஸநீயமான வளை, நெஞ்சுதொடக்கமானவை யெல்லாம் என்பாடற்று வாஸநை யோடே போம்படியாக இழந்து. அவன் விபூதியோபாதி போரும், இவள்பரிகரத்தின் பரப்பும். [வைகல்பல்வளையார்முன் பரிசழிந்தேன்]-கழற்றிப்பூணும் ஆஹரணமும் இழ வாதவர்கள் முன்பே, கழற்றவேண்டாத ஆஹரணமான பரிசுண்டு-ப்ரகாரம்-லஜ்ஜை; அத்தை இழந்தேன். [மாடக்கொடிமதிள் தென்குளந்தை] - மாடங்களையும், கொடி யோடேகூடின மதிளையுமுடைத்தான தென்குளந்தையிலே. [வண்குடபால்நின்ற]-அழகி தான மேலைப்பார்ஸ்வத்திலேநின்ற. இதுவும் ஒரு பரத்வஹேதுபோலே. [மாயக்கூத்தன்]-ஆஸ்சர்யசேஷ்டிதன். [ஆடல் பறவையுயர்த்த] - ஸர்வேஸ்வரவாஹநமென்னும் ஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே களித்தாடாநின்றுள்ள பெரியதிருவடியாலே வஹிக்கப்பட்டிருப்பானாய். [வெல்போராழிவலவனை] - புக்கபோரிலே வென்றல்லது மீளாத திருவாழியை வல வருகேயுடையனாயிருக்கிற ஸர்வேஸ்வரனை ஆசைப்பட்டு. 'மாடக்கொடிமதிள் தென் குளந்தை வண்குடபால் நின்ற - ஆடல்பறவையுயர்த்த வெல்போராழிவலவனை - மாயக்கூத்தனை - ஆதரித்து - கூடச்சென்றேன் - கோல்வளைநெஞ்சத் தொடக்கமெல் லாம் பாடற்றொழிய இழந்து வைகல்பல்வளையார்முன் பரிசழிந்தேன் - இனி என்கொடுக் கேன்?' என்றந்வயம். (ச)

## ஐந்தாம் பாட்டு.

ஆழிவலவனையாதரிப்பும்ஆங்கவன் நம்மில்வரவுமெல்லாம்
தோழியர்காள்!நம்முடையமேதான்?சொல்லுவதோ இங்கரியதுதான்
ஊழிதோறூழியொருவனாக நன்குணர்வார்க்குமுணரலாகா
சூழலுடையசுடர்கொளாதித் தொல்லையஞ்சோதிநினைக்குங்காலே.

(ஆழிவலவனை) - அவனை ஆசைப்பட்டாற் பெறவொண்ணாத: துஷ்ப்ராபன், அவனை ஆசைப்படவேண்டாவென்னில்; * பரஞ்ஜ்யோதிஸ்ஸான ஸர் வேஸ்வரனை நினைக்கப்புக்கால் ஜ்ஞாநவதாம் அக்ரேஸரர்களான ஸநகாதிமுநிகளுக்கும் ஊழிதோறூழிகூடினாலும் ஒருவனாகஉணரவொண்ணாத திவ்யசேஷ்டிதங்களையும், தேஜஃ ப்ரப்ருத்யஸங்க்யேய கல்யாணகுணத்தையும் உடையானொருவனாகிலும் அந்தஸங்கசக்ர மஹாயுதனாயிருந்தவனை ஆசைப்படுகையும், ஆசைப்பட்ட நம்போல்வார்பக்கல் அவன் வருகையும், நாம் தொடங்கியோ? இப்படி அரியனாயிருக்கச்செய்தே, ஆசைப்படு வாரும், பெறுவாருமெத்தனைவர்? "அவனரியன், அவனையாசைப்படவேண்டா" என்று சொல்லுகை யெளிதென்னாச் சொல்லுமித்தனையோ? என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், அறியவும்எட்டவும் அரிதானநிலத்தை ஆசைப் பட்டு அதுக்குஉஃகப்படுகிறாயென்று தோழிமார்சொல்ல, அவன் எத்தனையேனும்

பாடு - பக்கமாய், என்பார்ஸ்வத்திலே. அற்று - இராதே. ஒழிய - போம்படியாக என்றபடி. "எல்லாம்" என்கைக்கு அநேகமுண்டோவென்ன - அவன்விபூதி இத் யாதி. மேலைப்பார்ஸ்வத்திலே நிலையைச்சொன்னதுக்கு பாவம் - இதுவும் இத்யாதி. இதுவும் ஒரு பரத்வஹேதுவென்று - ஆடல் பறவை, ஆழிவலவன் என்றத்தை ஸமுச்சயிக்கிறது. (ச)

விஸஜாதீயனாய் ஊர்ஜ்ஜிதனாயிருந்தானை யாகிலும், அவனையாஶ்ரயிக்கையும், அவனாலே விஷயீகரிக்கப்படுகையும், இம்மர்யாதை நான் தோற்றியுண்டாயிற்றோ? இது அநாதியன்றோ? என்கிறாள்.

[ஆழிவலவனையென்று தொடங்கி] - தோழியர்காள்! ஸர்வேஶ்வரனை நாம் ஆதரிக்கையும் அவன் நம்மை விஷயீகரிக்கையும் இவையெல்லாம் நம்மளவதோ? அர்த்தஸ்திதி ஏதேனுமாயிருக்க இங்கேயிருந்து தோற்றிற்றுச் சொல்லாநிற்கைதான் அரிதோ! [ஊழியென்று மேலுக்கெல்லாம்] - அவன்படியை யநுஸந்திக்கப்புகில் அர்த்தஸித்தி அழகிதாகவறிய வல்லவர்களுக்கும் காலமுள்ளதனையும் கூடினாலும் இப்படிப்பட்டவனென்று நிலையிடவொண்ணாதானாய்த் தப்பாமே யகப்படுத்திக்கொள்ளும் விரகுகளையுடைய தேஜ:ப்ரப்ருதி அஸங்க்யேயகல்யாணகுணங்களையுடையனாய் நிருபாதிகமுமாய் விஸஜாதீயமுமான அழகையுடைய ஜகத்காரணபூதன்.

ப.—அநந்தரம், தத்த்வஜ்ஞராயிருப்பார்க்கும் அபரிச்சேத்யமான அதிஶயித ஔஜ்ஜ்வல்யத்தை யுடையனான ஸர்வேஶ்வரனை யாசைப்படுகையும், அவன் நமக்கு முகங்காட்டுகையும், நம்முடைய அளவேயாயிருக்கிறதோ வென்கிறாள்.

நினைக்குங்கால் - (ஆராய்ந்து) பார்க்குமளவில், (தத்த்வத்தை), நன்கு - நன்றாக, உணர்வார்க்கும் - உள்ளபடி அறியவல்லார்க்கும், ஊழிதோறூழி - காலதத்வமுள்ளதனையும், ஒருவனாக-ஏவம்வித ஸ்வபாவனாயிருப்பானொருவனாக, உணரலாகா - பரிச்சேதித்தறியவொண்ணாதபடி, சூழல் - (ஆஶ்ரிதரை அகப்படுத்திக் கொள்ளும்) சூழ்ச்சியாகிற சேஷ்டிதங்களை, உடைய - உடையனாய், சுடர் - (ஸ்வரூபபரிணாமம் வாராதபடி உபாதாநமாகையும் உபாதாநமான தானே நிமித்தமாகையும், சிதசித்பரிணாமம் தனக்குத் தட்டாதபடியுமாகிற) தேஜஸ்ஸை, கொள் - உடைய, ஆதி - காரணபூதனாய், தொல்லை - நித்ய அஸாதாரணமாய், அம் - அப்ராக்ருதமான, சோதி - ஜ்யோதிர்மயரூபத்தை யுடையனாய், ஆழிவலவனை - கையுந்திருவாழியுமான ஸர்வேஶ்வரனை, ஆதரிப்பும் - ஆதரித்தாஶ்ரயிக்கையும், ஆங்கு - ஆஶ்ரயணாவஸ்த்தையில், அவன் - (ஸர்வஸ்மாத்பரத்வத்தோபாதி ஸௌஶீல்யத்தையுமுடைய) அவன், நம்மில் - (ஆஶ்ரிதைகளான) நம்பக்கலிலே, வரவும் - வருகையும், (அபேக்ஷிதங்கள்செய்கையும்), எல்லாம் - எல்லாம், நம்முடையமே தான் - நம்மளவிலே உடையோமானோமோ? தோழியர்காள் - (என்னோபாதி இவ் விஷயத்தில் வாசியறியும்) தோழிமீர்காள்! (ஸர்வஸாதாரணமான ஸௌலப்ய ஸௌஶீல்யாதிகள் கிடக்க), சொல்லுவதோ - ஸ்வைரமான தௌர்லப்யம் சொல்லுகைபோ, இங்கு - இங்கு, அரியதுதான் - அரியதாயிருக்கிறது?

இ.—அஞ்சாம்பாட்டில், அறியவும் எட்டவுமொண்ணாத விஷயத்திலே அதிப்ரவணையாய் எதுக்கு உத்கப்படுகிறாயென்ன, ஆனாலும் அவனையாஶ்ரயிக்கையும், அவனாலே விஷயீக்ருதராகையுமான இம்மர்யாதை நான் தோற்றியுண்டாயிற்றோ? அநாதியன்றோ? என்கிறாள்.

[ஆழிவலவனையாதரிப்பும்] - கையுந்திருவாழியுமான ஸர்வேஶ்வரனை நாம் ஆஶ்ரயிக்கையும். [ஆங்கு] - ஆஶ்ரயணதஶையிலே. [அவன்] - மேன்மையோபாதி நீர்மையுமுடையவன். [நம்மில்வரவும்] - ஆஶ்ரயித்த நாம் இருந்த ப்ரதேஶங்களிலே வந்து விஷயீகரிக்கையும் இவையெல்லாம். [தோழியர்காள்] - என்னோபாதியிவ்விஷயத்தில் அவகாஹித்தவர்களல்லிகோளோ? [நம்முடையமே தான்] - நம்அளவதோ?

அவனையாஶ்ரயிக்கையும், அவனபேக்ஷிதம் செய்கையுமாய்ப் போருகிற இது நம்மளவிலே யுண்டாயிற்றதொரு மர்யாதையோ? [சொல்லுவதோ இங்கரியதுதான்]-அர்த்தஸ்த்திதி யேதேனுமாயிருக்க,தோற்றிற் றுச்சொல்லாநிற்கைதான் அரிதோ? நிவாரகரில்லையென்று ப்ரதிபந்நங்களைச் சொல்லக்கடவதோ? அவன் கிட்டவரியனென்று ப்ரதிபந்நங்களைச் சொல்லக்கடவதோ? அவன் கிட்ட அரியனாயிருக்கிறமை யில்லையோ? என்ன, அது தானும் என்வாயிலே கேளுங்கோள்! [ஊழியித்யாதி] - [நன்குணர்வார்க்கும் - ஒருவனென்று - ஊழிதோறூழி - உணரலாகா] - அர்த்தஸ்திதியுள்ளபடி யறியவல்லவர்களுக்கும் ஏவம்விஶிஷ்டனென்று காலமெல்லாம் கூடினாலும் நிலையிடவொண்ணாது. [சூழலுடைய] - தன்பக்கலிலேதப்பாமல் அகப்படுத்திக்கொள்ளும் விரகுகளையுடையவனாயிருக்கும். [சுடர்கொளாதி] - தேஜஃப்ரப்ருத்யஸங்க்யேய கல்யாணகுணகணைஜமுத்காரண பூதன். [தொல்லையஞ்சோதி] - ஸ்வாபாவிகமாய், நிரவத்யக தேஜோரூபமான விக்ரஹத்தையுடையவனை. [நினைக்குங்கால்] - அவன் பெருமையையாராயப்புகில். 'நினைக்குங்கால் - நன்குணர்வார்க்கும் - ஒருவனை - ஊழிதோறூழி - உணரலாகாச் சூழலுடைய சுடர்கொளாதித் தொல்லையஞ்சோதி - ஆழிவலவனை யாதரிப்பும்', என்றந்வயம். ஊர்ஜ்ஜேஞபனென்றத்தால் வைலக்ஷண்யம் சொல்லிற்று : விலக்ஷணவிஷயமே ஸாலம்பமானால், மேல்விழுந்து பற்றவன்றோ வடிப்பது? என்கை.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. 'வாங்மநஸ்ஸுக்களுக்கு எட்டவொண்ணாத விஷயத்திலே அதிப்ரவணையாய் ஏதுக்கு துஃகப்படுகிறாய்'என்ன ; ஆனாலும் அவனையாஶ்ரயிக்கையும் அவனாலேவிஷயீக்ருதராகையுமான இம்மர்யாதை நம்மைத் தோற்றியுண்டாயிற்றோ, அநாதியன்றோ ? என்கிறாள்.

[ஆழிவலவனையாதரிப்பும்] - திருவாழியை வலவருகேயுடையனானவனை ஆஶ்ரயிக்கையும். [ஆங்கு] - ஆஶ்ரயணதஶையிலே. [அவன்] - மேன்மையோபாதி நீர்மையுடையனானவன். [நம்மில்வரவுமெல்லாம்] - ஆஶ்ரயித்த நாமிருந்த ப்ரதேசங்களிலேவந்து விஷயீகரிக்கையுமாகிற இவையெல்லாம். [தோழியர்காள்] - என்னோபாதி இவ்விஷயத்திலே அவகாஹித்திகோளல்லிகோளோ? [நம்முடையமேதான்] - நம்மளவதோ ? அவனை யாஶ்ரயிக்கையும் அவன் அபேக்ஷிதம் செய்கையுமாய்ப் போருகிற இது, நம்மைத்தோற்றிப் புதியதாகவிட்டதோரு மர்யாதையோ ? [சோல்லுவதோ இங்கரியதுதான்] - அர்த்தஸ்த்திதி ஏதேனுமாயிருக்க, தோற்றிற்றுச் சொல்லுகையோ அரியது ! நிவாரகரில்லையேன்று ப்ரதிபந்நங்களைச் சொல்லக்கடவதோ? அவன் கிட்ட அரியவனாயிருக்கிறமை இல்லையோவேன்ன ; அதுதானும் நான் சொல்லக் கேட்கவேண்டாவோ உங்களுக்கு? [ஊழி இத்யாதி] - (நன்குணர்வார்க்கும் - ஒருவனேன்று - ஊழிதோறூழி - உணரலாகா) எத்தனையேனும் அதிஶயிதஜ்ஞாநரா யிருப்பார்க்கும், காலமெல்லாம் கூடியறியப்புக்காலும் அறியப்போகாது, ஏவம் விஶிஷ்டன் என்று. [சூழலுடைய] - கிட்டினாரை அகப்படுத்திக்கோள்ளுகைக்கு ஈடான விரகுகளை யுடையனாயிருக்கும். [சுடர்கோள்] - தேஜஃ ப்ரப்ருதிஅஸங்க்யேய கல்யாணகுணங்களை யுடைய

அஞ்சாம்பாட்டு.—ஆழிவலவனை இத்யாதி. "ஆழிவலவனை" என்றுதொடங்கி, "நம்முடையமேதான்" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - வாங்மநஸ்ஸுக்களுக்கு இத்யாதி.

"நம்மில்வரவும்" என்றத்தைப்பற்ற - மேன்மையோபாதி இத்யாதி. நம்மில்-நாமிருந்த

வன். [ஆதி] - ஜகத்காரணபூதன். [தொல்லையஞ்சோதி] - ஸ்வாபாவிகமாய், நிரவயிகதேஜோரூபமாய், இதரவிஸஜாதீயமான திவ்யவிக்ரஹத்தை யுடையனாயிருக்கும். [நினைக்குங்கால்] - அவன்பெருமையை ஆராயப் புகில். 'நினைக்குங்கால் - நன்குணர்வார்க்கும் - ஒருவனாக - ஊழிதோறூழி - உணரலாகாச் சூழலுடைய சுடர்கொளாதித் தொல்லையஞ்சோதி - ஆழிவலவனை யாதரிப்பும், ஆங்கவன் நம்மில் வரவுமெல்லாம், தோழியர்காள்! நம்முடையமேதான், சொல்லுவதோ இங்கரியதுதான்?'—விலக்ஷண வஸ்துவே ஸுலபமானால், பற்றவடுக்குமோ? விடவடுக்குமோ? என்கிறாள். (ரு)

# ஆறாம் பாட்டு.

---

**தொல்லையஞ்சோதிநினைக்குங்கால் என்சொல்லளவன்றிமையோர்தமக்கும்**
**எல்லையிலாதனசூழ்ப்புச்செய்யும்அத்திறம்நிற்கவெம்மாமைகொண்டான்**
**அல்லிமலர்த்தண்துழாயுந்தாரான் ஆர்க்கிடுகோவினிப்பூசல்?சொல்லீர்**
**வல்லிவளவயல்சூழ்குடந்தை மாமலர்க்கண்வளர்கின்றமாலே.**

*ஆ.—(தொல்லையஞ்சோதி) - அவன் அரியனல்லனோவென்னில்?— நாம் சொல்லுமளவோ அவனுடைய அருமை? ப்ரஹ்மாதிதேவர்களுக்குங்கூட அறியவொண்ணாத ஸ்வரூபஸ்வபாவங்களையுடையா னொருவனல்லனோ? அத்திறம்நிற்க, என்னை விஷயீகரித்தருளுகைக்காகத் திருக்குடந்தையிலேபுகுந்துவைத்து என்னுடைய ஸர்வஸ்வத்தையும் அபஹரித்துத் தன்திருவடிகளில்அல்லிமலர்த்தண்துழாயும் தருகிறிலன். இப்படி அந்யாயஞ்செய்த அவனையொழிய மற்று ஆரைக்கூப்பிடுவோம்? சொல்லீர் ! என்கிறாள்.*

*ஒ.—ஆறாம்பாட்டில், ''நீர்சொல்லுகிறபடி எளியனல்லன், எட்டாதானொருவன்'' என்று தோழிமார் சொல்ல, 'உபர்லபனாகிலும் ஸுலபனாகிலும் நம்மை இப்படி நோவுபடுத்தினவன்வாசலிலே கூப்பிடாதே நம்மோடே ஸம்பந்தமில்லாதாரையோ இன்னாதாவது?' என்கிறாள்.*

*[என்சொல்லளவென்று தொடங்கி] - அவனுடைய வைலக்ஷண்யம் பேச்சினளவன்று; அதிசயிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளுக்கும் மிகவும் உபர்ஜ்ஞேயமாயிருக்கும் வைலக்ஷண்யத்தை யுடையனா யிருந்துவைத்துத் தன்னுடைய ஸௌந்தர்யாதிகளைக் காட்டி என்னை ஈடுபடுத்தினான். [அல்லிமலரென்று தொடங்கி] - என்னை இப்படி நோவு படுத்தி வைத்த தான் வந்து ஸம்ஶ்லேஷியாவிட்டால் தன்னோடு ஸ்பர்ஶமுள்ள வற்றைத் தந்தாகிலும் என்னை உஜ்ஜீவிப்பிக்கிறிலன். என்னை யிப்படிநலிந்த இவனுக்குக் கூப்பிடாதே யாருக்குக் கூப்பிடுவோம்? சொல்லிகோள். [வல்லியென்று தொடங்கி]- பூங்கொடிபடர்ந்த சோலைகளும் வளவிதான வயலும் சூழ்ந்த திருக்குடந்தையிலே கண் வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரன். [குடந்தை] - கூப்பீடு கேட்கும்படி ஸந்நிஹிதனென்று கருத்து.*

---

*விடத்தே. விவரணம் - நீவாராகர் இத்யாதி. அந்வயத்தில் பாத்வத்தை முந்தறச்சொல்லி, அநந்தரம் நீர்மையைச் சொன்னதுக்கு பாவம் - விலக்ஷணவஸ்து இத்யாதி.* (ரு)

ப.—அநந்தரம், அதிசயிதஜ்ஞாநர்க்கும் அவமந்தும்அசக்யமாம்படி ஸம்ஸயஜநகனான அவன், நம்மோடே ஸம்ஸ்லேஷித்து ஈடுபடுத்தினபின்பு, வேறு ஆர்க்குக் கூப்பிடுவோமென்கிறாள்.

நினைக்குங்கால் - ஆராயப்பார்த்தோமாகில், தொல்லை - அஸாதாரணமாய், அம் - அநவயிகமான, சோதி - அவனுடைய தேஜஸ்ஸானது, என் - என்னுடைய, சொல்லளவு - சொல்லிலடங்குமது, அன்று - அன்று; இமையோர்தமக்கும் - (அதிசயித ஜ்ஞாநரான) ப்ரஹ்மாதிகளுக்கும், (நிஷ்கர்ஷிக்கவொண்ணாதபடி), எல்லையிலாதன-அபர்யந்தமான, சூழ்ப்பு - ஸம்ஸயத்தை, செய்யும் - விளைக்கும், அ - அந்த, திறம் - மேன்மையினுடையாட்டம், நிற்க - நிற்க: வல்லி - பூங்கொடியும், வளம் - அழகிய, வயல் - வயலும், சூழ் - சூழ்ந்த, குடந்தை - திருக்குடந்தையிலே, மா - ஸ்லாக்யமான, மலர் - தாமரைபோலேயிருக்கிற, கண் - திருக்கண்கள், வளர்கின்ற - வளரும்படி சாய்ந்தருளின, மால் - ஆஸ்ரிதவ்யாமோஹத்தை யுடையவனுப்கொண்டு, எம் - என், மாமை - நிறத்தை, கொண்டான் - அபஹரித்தான், அல்லி - பூந்தாரினுடைய, மலர் - விகாஸத்தையுடைத்தான, தண்துழாயும் - திருத்துழாய்மாலையையும், தாரான்-தருகிறிலன்; இனி - (நாம் அவனாலேநலிவுபட்ட) பின்பு, (நலிந்த அவனையொழிய), ஆர்க்கு - ஆரிருக்கலாரிட்டு, பூசலிடுகோ - கூப்பிடுவோம் ; (உறவுசெய்து அநப்படுத்தினவனையொழிய உறவில்லாதார்க்குக் கூப்பிட்டுப்ரயோஜநமென்)? சொல்லீர் - சொல்லிகோள்!

இ.—ஆரும்பாட்டில், நீ சொல்லுகிறபடியே எளியனல்லன், ஸௌலப்யன் என்ன; ஸௌலப்யனுகிலும் ஸௌலப்யனுகிலும் தன்னையொழியச் செல்லாதபடி நம்மைப் புகுரநிறுத்தினவன் வாசலிலே கூப்பிடாதே, ஸம்பந்தமில்லாதார் வாசலிலேயோ கூப்பிடுவது? என்கிறாள்.

[தொல்லையஞ்சோதி நினைக்குங்கால்] - ஆராயப்புகில், இதரவிஸஜாதீயமான விக்ரஹத்தை யுடையவன். [என்சொல்லளவன்று] - அவன் வைலக்ஷண்யம் என்னுடைய பேச்சினளவன்று. நான் ஓர்அவஸ்தையிலிருந்து சொல்லுமளவோ அவன்பெருமை? [இமையோர் இத்யாதி] - அதிசயிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளுக்கும் அளவிறந்த ஸம்ஸயங்களைப் பண்ணும்; "யநாயம்ஸமவாநுஷ்ஹாஜாநாதிவாரமேவஷ(ு" "ந ஹ ாஷ)ுகேநவிஷக்ஷிஷ". இமையோரென்று நித்யஸூரிகளாய், அவர்கள் * சூட்டுநன்மாலைகள் தூயனவேந்திநிற்க, ஈட்டியவெண்ணெய் தொடுவுண்ணப்போந்தமென்றுமாம். [அத்திறம்நிற்க வெம்மாமைகொண்டான்] - அம்மேன்மையுங் கிடக்கச்செய்தே, தன்ஸௌந்தர்யாதிகளைக்காட்டி என்நிறத்தைக் கொண்டான். என்னோடே இடைகொண்டல்லது புரியானுப், நம்முடைய நிறத்தைக்கொண்டது அந்தவைலக்ஷண்யத்தைப் பாராதே என்கிறாள். [அல்லிமலர்த் தண்துழாயுந்தாரான்] - இப்படி நோவுபடுத்தினவன்தான் வாராவிட்டால், தன்னோடு ஸ்பர்ஸமுள்ளவற்றைத் தந்தாகிலும் என்னையுஜ்ஜீவிப்பிக்கிறிலன். அபிமதம் கிட்டாதொழிந்தால் ஸத்தையை நோக்கவேண்டாவோ? [ஆர்க்கிடுகோ இத்யாதி] - நலிந்த இவனுக்குக் கூப்பிடாதே யாருக்குக் கூப்பிடுவோம்? சொல்லிகோள்! ஸம்பந்தமில்லாதார் வாசலிலே சென்று கூப்பிடவோ? [வல்லி இத்யாதி] - பூங்கொடிபரந்த சோலைகளும், வளவிதான வயல்களும் சூழ்ந்த திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஸ்வரன். வளம் - அழகு. [மாமலர்க்கண் வளர்கின்றமாலே] - ப்ராப்தனுனவன் மலர்ந்த தாமரைப்பூப்போலேயிருக்கிற கண்கள் என்

*னளவில் அலரக் காண்கிறிலேன். விசேஷகடாக்ஷம்பண்ணக் காண்கிறிலே னென்கை. கூக்குரல் கேட்கைக்கு ஸங்கிஹித னென்கை. 'வல்லிவளவயல் சூழ்குடந்தை மாமலர்க் கண் வளர்கின்றமால் - தொல்லையஞ்சோதி நினைக்குங்கால்' என்றுதொடங்கி, 'ஆர்க்கிடு கோவினிப்பூசல் சொல்லீர்!' என்று அந்வயம்.*

ஈடு.—ஆறும்பாட்டு 'நீ சொல்லுகிறபடியே எளியனல்லன், துர்லபன்' என்ன; ஸுலபனாகிலும் து:ர்லபனாகிலும் தன்னையொழியச் செல்லாதபடி நம்மைப்புகுர நிறுத்தினவன்வாசலிலே கூப்பிடாதே, ஸம்பந்தமில்லாதார் வாசலிலேயோ கூப்பிடுவது?' என்கிறாள்.

[தொல்லையஞ்சோதிநினைக்குங்கால்] - ஆராயப்புக்கால், இதரவிஸஜாதீயமான விக்ரஹத்தையுடையவன். [என்சொல்லளவன்று] - அவனுடைய வைலக்ஷண்யம், என்னுடையபேச்சினளவன்று. நான் ஓர்அபலையிருந்து சொல்லுமளவோ அவன்பெருமை? [இமையோர்இத்யாதி] - எத்தனையேனும்அதிசயிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளுக்கும் அளவிறந்த ஸம்சயங்களைப் பண்ணுநிற்கும். "**யந்நாயம்பகவாந்ப்ரஹ்மா ஜாநாதிபரமம்பதம்,**" (யந்நாயம்பகவாந்ப்ரஹ்மா ஜாநாதிபரமம்பதம்,) "**நக்ராஹ்யஃகேநசித் க்வசித்.**" (நக்ராஹ்யஃகேநசித் க்வசித்) இதன்றிக்கே, இமையோர் என்கிறது - நித்யஸூரிகளையாய், அவர்கள் * சூட்டுநன்மாலைகள் தூயனவேந்திநிற்க, தான் * ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப் போரும்படியாகவுமாம். [அத்திறம்நிற்க வெம்மாமை கொண்டான்] - அம்மேன்மையுங் கிடக்கச்செய்தே, தன் ஸௌந்தர்யாதிகளைக்காட்டி என்நிறத்தைக் கொண்டான். என்னோடே இட்டீடுகொண்டல்லது தரியாதானாய், நம்முடைய நிறத்தைக்கொண்டது தன்னுடைய வைலக்ஷண்யத்தைப் பாராதேயன்றோ? [அல்லிமலர்த் தண்துழாயுந்தாரான்] - நம்நிறத்தைக்கொண்டால் தன்னோடே ஸ்பர்சமுள்ளதொன்றைத்தந்து நம்மை உஜ்ஜீவிப்பிக்கலாமிறே, அது செய்கிறிலன். அது செய்

---

*ஆறும்பாட்டு.—தொல்லையஞ்சோதி இத்யாதி. "அத்திறம்நிற்க வெம்மாமைகொண்டான் - ஆர்க்கிடுகோவினிப்பூசல்சொல்லீர்" இத்யாதிகளைக் கடாக்ஷித்து அவதாரிகை-நீசொல்லுகிற இத்யாதி. "குடந்தைமாமலர்க்கண்வளர்கின்ற" என்றத்தைப்பற்ற - ஸுலபனாகிலும் என்றது. "இமையோர்தமக்கும்" இத்யாதியைப்பற்ற - துர்லபனாகிலும் என்றது. "மால்" என்றத்தைப்பற்ற - ஸம்பந்தமில்லாதார் என்றது.*

*"நினைக்குங்கால் - அஞ்சோதி" என்றதுக்கு பாவம் - ஆராயப்புக்கால் இத்யாதி. தன்பேச்சளவன்றோவென்ன - நான் ஓர்அபலை இத்யாதி. இவ்விடத்திலே - "நயஸ்யரூபாணி ஸுதாநி யஸ்ய ந வர்ணஜாத்யாதிபிரிஷ்டகல்பிதம் ... தஸ்யகயம்யோஷிதுஸ்ஸ்ரிஷ்டி" (வி-பு-ரு-எ-௬௧). என்றது அநுஸந்தேயம். "தமக்கும்" என்றத்தை உபஜீவித்தருளிச்செய்கிறார் - எத்தனையேனும் இத்யாதி. ஸம்சயங்களையென்றது அறியாமைகளையென்றபடி. ஸம்சயங்களைப்பண்ணுமென்னுமதுக்கு ப்ரமாணத்வயம் - யந்நாய இத்யாதி. "தந்தாவஜ்ஜஞாதவஸவ்ருததா வ்ருத", இத்யுத்தரார்த்தம் 'தவாஹுராத்ராதேயவாநேஹீஸஞ்ஜ்ஞா: ஸவேஷாம்ஸாக்ஷிபூதோஸௌநக்ராஹ்யஃகேநசித் க்வசித்" இதி (பாரத-மோ-௧௪௬-௪) ப்ரஹ்மருத்ரஸம்வாதே. ஸம்பந்தமில்லாதார் வாசலிலேயோகூப்பிடுவது' என்று - உபகாரம்சொல்லி "மாமைகொண்டான்" என்று - அபகாரம்சொல்லுவானென்? என்ன - என்னோடே இத்யாதி இட்டீடு-விவாதம். அல்லி - உள்ளிதழ். தந்தானாகில் தாமோவென்ன - அதுசெய்தானாகில் இத்யாதி.*

தாளுகில் பூவுக்குஇட்டோம்போலும் என்றிருக்கலாமே. [ஆர்க்கிடுகோவினிப்பூசல்சொல்லீர்] - நம்மைநலிந்தவன் வாசலிலே கூப்பிடாதே ஆர்வாசலிலே கூப்பிடுவோம்? சொல்லிகோள்! [வல்லி இத்யாதி]. பூங்கொடிபடர்ந்த சோலைகளும், வளவிதான வயல்களும் சூழ்ந்த திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரன். [மாமலர்க்கண் வளர்கின்றமால்] - ப்ராப்தனுனவன் மலர்ந்த தாமரைப்பூப்போலேயிருக்கிறகண் என்னளவில் அலரக் காண்கிறிலேன். விஶேஷகடாக்ஷம் பண்ணக்காண்கிறிலே னேன்கை. கூக்குரல் கேட்கைக்கு ஸந்நிஹித னேன்கை. 'வல்லிவளவயல்சூழ்குடந்தை மாமலர்க்கண் வளர்கின்றமால், தொல்லையஞ்சோதி' என்றுதொடங்கி, 'ஆர்க்கிடுகோவினிப்பூசல் சொல்லீர்' என்றந்வயம். (சு)

---

## ஏழாம் பாட்டு.

---

**மாலரிகேசவன்நாரணன் சீமாதவன்கோவிந்தன்வைகுந்தனென்றென்று**
**ஓலமிடஎன்னைப்பண்ணிவிட்டிட்டு ஒன்றும்உருவுஞ்சுவடுங்காட்டான்**
**ஏலமலர்க்குழலன்னைமீர்காள்! என்னுடைத்தோழியர்காள்! என் செய்கேன்?**
**காலம்பலசென்றுங்காண்பதானை உங்களோடெங்களிடையில்லையே.**

ஆ.—(மாலரி) - இப்படி கூப்பிடச்செய்தேயும் தன்னைக்காட்டாதிருக்கிற அவனை ஆசைப்படுவாருண்டோவென்னில்,—ஆஶ்ரிதவத்ஸலன், ஆஶ்ரிதார்த்திஹரன், ஆஶ்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவன், ஸர்வஶக்தி, ஸமஸ்தகல்யாணகுணநிதி, ஶ்ரிய:பதி, பரமஶீலவான், ஶ்ரீவைகுண்டநிலயன் என்றுகூப்பிடும்படி பண்ணிவிட்டிட்டு ஒன்றும் உருவும் சுவடுங்காட்டான்; ஏலமலர்க்குழலன்னைமீர்காள்! என்னுடைத் தோழியர்காள்! என்செய்கேன்? வ்யஸநம் பொறுக்கலாயிருக்கிறதில்லை; காலம்பலசென்றும் உங்களா கண்டல்லதுவிடேன்; நீங்கள் இதற்குவிரோதத்தைப்பண்ணில் உங்களோடும் ?ர்.

ஒ.—ஏழாம்பாட்டில்,

என்று உறவுமுறையார்அலைக்க; அவனுடைய ஸௌந்தர்யா லையகப்பட்ட நான் காலமெல்லாங் கூடவாகிலும் அவனைக் கண்டல்லதுவிடேன், ரோயிகளான உங்களோட்டை ஸம்பந்தம் எனக்குவேண்டாவென்கிறாள்.

---

பூவுக்கிட்டோம் போலுமென்றது - காமுகர் காமிநிகளுக்குஇட்டதென்றபடி. பூவுக்கிட்டோமென்று - காமிநிகளுக்கிட்டத்தை. பூவுக்கிட்டோமென்று- ஸங்கேதச்சொல். இத்தால் - அவன் திருத்துழாய்தந்தானுகில், நாமும் பூவுக்கிட்டதென்றிருக்கலாமென்றுகருத்து. "இனி - ஆர்க்கு - பூசல் - இடுகோ - சொல்லீர்" என்று அந்வயித்து அர்த்தம் - நம்மை நலிந்தவன் இத்யாதி. "வல்லி"என்றது -சோலைக்கும் உபலக்ஷணம். வளவிதான - அழகிதான. தாத்பர்யம் - ப்ராப்தனுனவன் இத்யாதி. மா - ஶ்லாக்யமாய், மலர் - மலர்ந்த என்றபடி. கீழ்வாக்யத்துக்கு பாவம் - விஶேஷகடாக்ஷம் இத்யாதி-"குடந்தைமாமலர்க்கண் வளர்கின்ற" என்றதுக்கு பாவம்-கூக்குரல் இத்யாதி. வல்லிவளவயல் என்றுதொடங்கி, மால் - நினைக்குங்கால் - தொல்லையஞ்சோதி என்றுதொடங்கி, பூசல்சொல்லீர் இத்யந்வய:. (சு)

[மாலரியென்று தொடங்கி] - ஆஶ்ரிதவிஷயத்தில் மிகவும் வ்யாமுக்தன், அவர்களுடைய ப்ரதிகூலங்களைப் போக்குமவன், அவர்கள் நித்யாநுபவம் பண்ணாநின்றாலும் விடவொண்ணாதபடியான அழகிய திருக்குழலையுடையான், ஆஶ்ரிதவத்ஸலன், இக்குணங்களுக்கெல்லாம் அடியாம்படி நீர்மையுடைய பெரியபிராட்டியார்க்கு வல்லபன், ஆஶ்ரிதர்க்கு அத்யந்தஸுலபன், இங்ஙனேயிருக்கிற இவன் அத்யந்தம் பரிபூர்ணனான ஸ்ரீவைகுண்டநாதன் என்று நிரந்தரமாகக் கூப்பிடும்படி பண்ணிச் சமைத்து என்னை அசேதநங்களைப் பொகடுமாபோலே பொகட்டுத் தன்னையும் காட்டுகிறிலன்; தானின்ன விடத்திலானென்று அறிகைக்கிடாக அடையாளம் ஒன்றும் காட்டுகிறிலன். [ஏலமலர்க் குழலன்னைமீர்காள்] - பண்டுபோலே நீங்கள் தரித்திருக்க நான் காணவல்லேனே என்று கருத்து. [ஆணை] - அவ...

ப.—அநந்தரம், அபிநிவேஶஜநகமாய் ஆஶ்ரிதோபகாரகனுடைய ஆகாரங்களை அநுபவித்து ஈடுபட்ட நான் அநேககாலஞ் சென்றேயாகிலும் கண்டல்லது விடேன்: விலக்குகிற உங்களோடு எங்கள்பக்கல் ஒருதொடக்கமில்லை என்கிறாள்.

மால் - ஆஶ்ரிதவ்யாமுக்தனானவன், (அந்தவ்யாமோஹத்தாலே), அரி - அவர்கள்பாபங்களை அபஹரிக்கும் ஸ்வபாவத்தையுடையவன், (நிவ்ருத்தபாபரானார்க்கு நித்யாநுபாவ்யமான துணையாம்படி), கேசவன் - ப்ரஶஸ்தகேஶனானவன், நாரணன்-(கீழ்ச் சொன்ன வ்யாமோஹாதிகளுக்கெல்லாம் தளமான) நிருபாதிக ஸம்பந்தத்தையுடையவன், சீமாதவன் - (இக்குணங்களை ப்ரவ்ருத்தமாக்கும் லக்ஷ்மிக்குப் பதியானவன்; (ஸ்ரீயப்பதித்வ நாராயணத்வங்கள் நிறம்பெறும்படி பிறந்து), கோவிந்தன் - ஆஶ்ரிதஸுலபனானவன், வைகுந்தன் - (ஸுலபதையைக்கண்டு ஆஶ்ரயித்தார்க்குக்கொடுக்கும்) பரிபூர்ண விபூதியையுடையவன், என்றென்று - என்றென்று இந்தஸ்வபாவங்களைப்பலகாலுஞ் சொல்லி, (ஒருகார்யார்த்தமாகவன்றியே), ஓலமிட - ஆர்த்யதிஶயத்தாலே கூப்பிடும்படி, (இதுவே ஸ்வபாவமாக), என்னை - என்னை, பண்ணி - பண்ணி, விட்டு - கைவிட்டு, இட்டு - பொகட்டு, ஒன்றும் - ஒருப்ரகாரத்தாலும், உருவும் - தன்வடிவையும், சுவடும் - தன்னைக்கிட்டுகைக்குஈடாயிருப்பதோரடையாளத்தையும், காட்டான் - காட்டுகிறிலன்; (என்னைவிலக்குவதாக உத்யோகித்து), ஏலம் - ஏலம்போலே ஸ்ரமஹரமான பரிமளத்தையும், மலர் — பூவையுமுடைத்தாயுள்ள, குழல் - குழலையுடைய, அன்னைமீர்காள் - அன்னைமீர்காள்! (ஏவம்விதைகளாய்), என்னுடை - எனக்கு அஸாதாரணைகளான, தோழியர்காள் - தோழிமீர்காள்! (அவன் ஈடுபடுத்தி முகங்காட்டாதொழியில்), என்செய்கேன் - என்னாலேசெய்யலாவதென்? என்றான்! ('இப்போதைக்கு விட்டுப்பிடி' எனினும்), பலகாலும் - காலதத்த்வமுள்ளதனையும், சென்றும் - சென்றாகிலும், ஆணை - ஆணையே, காண்பது - காணக்கடவேன்; உங்களோடு - (இந்த வ்யவஸாயத்தைக் உங்களோடு, எங்கள் - எனக்கு, இடை - ஒருஸம்பந்தம், இல்லை - கேவலம் ஆணையென்றது - அவன் நாமக்ரஹணம் பண்ணுமைக் கென்றுகருத்து. அல்லது, உ ல்லாத இவர்களை ஆணையிடக்கூடாதிறே.

இ.—ஏழாம்பாட்டில், அவனைக் கண்டுமுடிகை யரிது, விடவில்லையேயென்று உறவுமுறையார் அலைக்க; அவன்குணங்களிலேயகப்பட்ட நான் காலமெல்லாம் கூட

வாகிலும் அவனைக் கண்டல்லதுவிடேன், தத்விரோதிகளான உங்களோட்டை ஸம்பந்தம் எனக்குவேண்டா என்கிறாள்.

[மால்] - ஆஸ்ரிதர்பக்கல் வ்யாமோஹமே வடிவாகவுடையவன். * பொய்ந்நின்ற ஞானந்தொடங்கி, இவ்வளவும் வரக் கூப்பிடப்பண்ணின வ்யாமோஹம். [அரி]- ஆஸ்ரிதவிரோதி நிரஸந ஸீலன். [கேசவன்] - நித்யாநுபவம் பண்ணுகின்றாலும் விடவொண்ணாத ப்ரஸஸ்தகேஸன். [நாரணன்] - ஆஸ்ரிதர்பக்கல் குணாகுணநிரூபணம் பண்ணாத வாத்ஸல்யத்தை யுடையவன். [சீமாதவன்] - இந்தகுணங்களுக்கெல்லாம் அடியான நீர்மையையுடைய பிராட்டிக்கு வல்லபன். [கோவிந்தன்] - லக்ஷ்மீஸம்பந்தத்தாலே ஆஸ்ரிதர்க்குக் கையாளாயிருக்குமவன். [வைகுந்தன்] - இப்படியிருக்கிறவன் அவாப்தஸமஸ்தகாமனான ஸ்ரீவைகுண்டநாயன். [என்றென்று]-ஒருகாலிருகால் சொல்லுகையன்றிக்கே நிரந்தரமாக. [ஓலமிட] - காரியப்பாடறக் கூப்பிடும்படி. [என்னைப்பண்ணி] - "ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய" என்கிறபடியே இதுவே யாத்ரையாகப் பண்ணி. [விட்டு] என்னைத் தன்பக்கலினின்றும் பிரித்து. [இட்டு] - அசேதநவத் பொகட்டு. [ஒன்றும் உருவுஞ்சுவடுங் காட்டான்] - தன்வடிவைக் காட்டுகிறிலன் தானிருந்தவிடத்துக்கு ஓர் அடையாளம் காட்டுகிறிலன். "தாஸாமாவிரபூச்சௌரி:" என்கிறபடியே வடிவைக்காட்டுதல் ராமாஸ்ரமத்தில் ஸ்ரீபரதாழ்வானுக்கு, "ஹுதகந்தர்ஸாஞ்ச ஸ்ருகந்தௌதி" என்கிறபடியே யஜ்ஞாதிகள் அடையாளமானாற்போலே, இருந்தவிடத்துக்கு ஸூசகம் காட்டுதல் செய்கிறிலன். [ஏலமலர்க்குழலன்னைமீர்காள்] — நீங்கள் பண்டிருக்கக் கண்டாற்போலேயிருக்கக் காணவல்லேனே யென்கிறாள். ஏலம்போலே கமழுகிற நறுநாற்றத்தையுடைய மலர். நான் இப்பாடுபட ஒப்பனையில் குறியழியாதிருக்குமவர்களன்றோ நீங்கள். [என்னுடைத் தோழியர்காள்] - உங்களுக்கு ஹிதஞ்சொல்லி மீட்குமதில்லை, என் ப்ரியமேயிறே யுங்களுக்கு உத்தேஸ்யம். [என்செய்கேன்] - தன்வடிவைக் காட்டுதல், இருந்தவிடத்துக்கொரு சுவடு தெரிவித்தல் செய்கிறிலன். மேல் நான் செய்யவடுப்பதென்? என்ன; எங்களைக் கேட்கில் விட்டுப்பற்ற வடுக்குமென்ன,—[காலம்பலசென்றும் காண்பது] - காலமெல்லாங் கூடவாகிலும் கண்டல்லது மீளேன். சொல்லலாமத்தனையல்லது செய்யப்போமோ? என்ன, [ஆணை] - அவனுடையஆணை விடுகிறவர்களோடு ஸம்பந்தமில்லாமையாலே யவர்களாணையிடாளே! இப்படி இவள் ஆணையிடச் செய்தேயும் தங்கள் சாபலத்தாலே சிலசொல்லப்புக. [உங்களோடு எங்களிடையில்லையே] - உங்களோடு எனக்கு ஒருஸம்பந்தமில்லை: நீங்களொன்றும் சொல்லவேண்டா? என்கிறாள்.

ஈடு.—ஏழாம்பாட்டு. அவனைக்கண்டு முடிகைஅரிது, விடவல்லையே என்று உறவுமுறையாரலைக்க; அவன் குணங்களிலே அகப்பட்ட நான் காலமெல்லாம்கூடவாகிலும் அவனைக்கண்டல்லது விடேன்: தத்விரோதிகளான உங்களோட்டை ஸம்பந்தம் எனக்கு வேண்டா என்கிறாள்.

---

ஏழாம்பாட்டு.—மால் இத்யாதி. "காலம்பலசென்றும்காண்பது ஆணை, உங்களோடெங்களிடையில்லையே" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - அவனை இத்யாதி. முடிகை - தலைக்கட்டுகை.

[மால்] - ஆஶ்ரிதர்பக்கல் வ்யாமோஹமே வடிவாகவுடையவன். * போய்ந் நின்றஞானந் தொடங்கி, இவ்வளவும்வரக் கூப்பிடப்பண்ணின வ்யாமோஹம். [அரி] - விரோதிநிரஸநஶீலன். [கேசவன்] - காலமெல்லாம் அநுபவியாநின்றாலும் மீளவொண்ணாதபடி ப்ரஶஸ்தகேஶன். [நாரணன்] - ஆஶ்ரித வத்ஸலன். [சீமாதவன்] - அதுக்கடியான ஶ்ரியःபதியானவன். [கோவிந்தன்] - அவளோட்டைச் சேர்த்தியாலே ஆஶ்ரிதர்க்குக் கையாளாயிருக்குமவன். [வைகுந்தன்]-இதுக்கெல்லாம்அடியான மேன்மையையுடையவன். [என்றென்று] - நிரந்தரமாக [ஓலமிட] – காரியப்பாடறக் கூப்பிடும்படி. [என்னைப்பண்ணி] - † "**ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய**" (ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய) என்கிறபடியே, இதுவேயாத்ரையாகப் பண்ணி. [விட்டு]-என்னைத் தன்பக்கலினின்றும் பிரித்து. [இட்டு] - அசேதநவத் போகட்டு [ஒன்றும்உருவும்சுவடுங்காட்டான்]-தன்வடிவைக்காட்டுகிறிலன், தானிருந்தவிடத்துக்கு ஓரடையாளங்காட்டுகிறிலன். ‡ "**தாஸாமாவிரபூத்**" (தாஸாமாவிரபூத்) என்கிறபடியே வடிவைக்காட்டுதல், ராமாஶ்ரமத்தில் ஸ்ரீபரதாழ்வானுக்கு யஜ்ஞதூமாதிகள் அடையாளமானாற்போலே, இருந்தவிடத்துக்கு ஒருஸூசகம்காட்டுதல் செய்கிறிலன் [ஏலமலர்க்குழலன்னைமீர்காள்] - நீங்கள் பண்டிருக்குமாபோலே நான் உங்களை என்று காணக்கடவேன்? [ஏலமலர்] - ஏலம்போலே கமழுகிற பரிமளத்தையுடைய மலர். [என்னுடைத்தோழியர்காள்]-உங்களுக்கு ஹிதஞ்சொல்லி மீட்குமதில்லை. என்ப்ரியமேயிறே உங்களுக்கு உத்தேஶ்யம். [என்செய்கேன்]-ஓரடையாளமும் காணாத நான் இனி எத்தைச் செய்வேன்? எங்களைக்கேட்கில் விடவடுக்குமென்ன, - [காலம்பலசென்றும்காண்பது] - காலமெல்லாம் கூடவாகிலும் கண்டல்லது மீளேன். அது செய்துதலைக்கட்டலாவதொன்றல்லகாணென்ன; - [ஆணை]-விடுகிறவர்களாணையிடாளிறே, பற்றுகிறவனாணை யிடுகிறாள். இப்படி துணியச்செய்தேயும் ஹிதஞ்சொல்லத் தொடங்கினார்கள்: [உங்களோடு இத்யாதி] - உங்களோடு எனக்கு ஒரு ஸம்பந்தமில்லை, எனக்கு நீங்கள் ஹிதஞ்சொல்லவேண்டா. (எ)

---

*அந்த வ்யாமோஹமேதென்ன - போய்ந்நின்ற இத்யாதி. அன்றிக்கே, ஸ்வவிஷயே வ்யாமோஹமாக அர்த்தாந்தரமாதல். "என்றென்றோலமிட" என்கையாலே - காரியப்பாடறக் கூப்பிடும்படி என்றது. காரியப்பாடாவது - க்யாதிலாப பூஜாபேக்ஷை. சுவடு - அடையாளம். "உருவும்சுவடும் - ஒன்றும் - காட்டான்" என்று அந்வயம். அப்படி காட்டினவிடமுண்டோ? என்ன - தாஸாமி இத்யாதி வாக்யத்வயம். இப்போது ஏலமலர்க்குழலாயிருக்கிறார்களோ? என்ன - நீங்கள்பண்டு இத்யாதி. "என்னுடை" என்றதுக்கு பாவம் - உங்களுக்கு இத்யாதி வாக்யத்வயம். ஆராணை இடுகிறது?என்ன-விடுகிறவர்கள் இத்யாதி. 'ஏலமலர்க்குழலன்னைமீர்காள், என்னுடைத்தோழியர்காள் - மாலரி' என்றுதொடங்கி 'உருவும்சுவடும் - ஒன்றும் - காட்டான் - என்செய்கேன், காலம்பல' என்றுதொடங்கி,'இடையில்லையே' இத்யந்வய:. (எ)*

---

† ரா - அ - ௪௦ - ।  ‡ பார - பு - ௪௦ - ௩௨ - ௨,

## எட்டாம் பாட்டு.

இடையில்லையான்வளர்த்தகிளிகாள்! பூவைகள்காள்! குயில்காள்! மயில்காள்!, உடையநம்மாமையுஞ்சங்கும்நெஞ்சும் ஒன்றுமொழிய வொட்டாது கொண்டான், அடையும்வைகுந்தமும்பாற்கடலும் அஞ்சனவெற்புமவைநணிய, கடையறப்பாசங்கள் விட்டபின்னையன்றி அவனவைகாண்கொடானே.

ஆ.—(இடையில்லை) - தன்னை ப்ரதிஸந்யிக்கிற அன்னைமாரோடும் உறவறச் செய்தேயும் அவனைக்காணுதொழிந்தவாறே, தான்வளர்த்த தன்னுடைய லீலோபகரணமான கிளிகள், பூவைகள், குயில்கள், மயில்களென்கிற இவற்றோடுள்ள ஸம்பந்தமாகாதே அவனைக்காண்கைக்கு ப்ரதிஸந்யகமென்றுபார்த்து, அவற்றைநோக்கிச் சொல்லுகிறாள்: அவன் நம்முடைய நிறமும், வளையும், நெஞ்சும் தொடக்கமாகவுள்ள ஸர்வஸ்வத்தையும் அபஹரித்துக்கொண்டுபோனானாகிலும், பரமப்ராப்யமான திருநாடும், திருப்பாற்கடலும், திருமலையும் தன்னையாசைப்பட்டார்க்குக் காணல் நணியவாகில் காட்டாதொழிவானென்? என்னில், - உங்கள்பக்கலுள்ள ஸங்கம் நிஶ்ஶேஷமாகப்போனாலல்லது அவன் அவைகாண்கொடான்: ஆதலால் இனி உங்களோடும் உறவில்லையென்கிறாள்.

ஒ.—எட்டாம்பாட்டில், கிளிகள் பூவைகள் தொடக்கமான பரிகரங்களில் தனக்கு உண்டான நைரபேக்ஷ்யத்தைச் சொல்லுகிறாள்.

[இடையில்லை] - என்பக்கல் அவகாஶமில்லை. [உடைய நம்மாமையென்று தொடங்கி] - நம்முடைய மாமைதொடக்கமான பரிகரங்களை நிஶ்ஶேஷமாகக் கொண்டவன் சேரும் பரமபதம், திருப்பாற்கடல், திருமலை இவ்விடங்களிற்செல்லுகையில் ஓரருமையில்லை; இப்போது நமக்குஅரிதாவானென் என்னில்? வாஹ்யருசிகள் நிஶ்ஶேஷமாகப் போனாலல்லது அவற்றைக்காட்டான்.

ப —அநந்தரம், நிஸ்ஸங்கர்க்கல்லது அவன் ஸுலபனாகாதபடியாலே முன்பே வந்த வர்க்கத்தில் ஸங்க்ராஹித்யஞ்சொன்னாளாய், தன் லீலோபகரணங்களான ஶுகஶாரிகாதிவிஷயமான ஸங்க்ராஹித்யத்தைச் சொல்லுகிறாள்.

யான் - யான், வளர்த்த-வளர்த்துப்போந்த, கிளிகாள்-கிளிகாள்! பூவைகள்காள் - பூவைகாள்! குயில்காள் - குயில்காள்! மயில்காள் - மயில்காள்! (உங்களுக்கு), (என்பக்கல்), இடை - ஓரவகாஶம், இல்லை - இல்லை; நம்முடைய - நம்முடையதான, மாமையும் - நிறத்தையும், சங்கும் - வளையையும், நெஞ்சும் - நெஞ்சையும், ஒன்றும் - ஒன்றும், ஒழிய - அவஶேஷிக்க, ஒட்டாது - ஒட்டாதே, கொண்டான் - அபஹரித்துக்கொண்டவன், அடையும் - எட்டாதபடிபோயிருக்கிற, வைகுந்தமும் - பரமபதமும், பாற்கடலும் - திருப்பாற்கடலும், அஞ்சனவெற்பும் - திருமலையுமாகிற, அவை - ப்ராப்யஸ்தலங்களானவை, நணிய - கிட்டியநுபவிக்கக்குறையில்லை: பாசங்கள் - (இதரவிஷயத்தில்) ஸங்கங்களை, கடையற - ஸவாஸநமாக, விட்ட - விட்ட, பின்னை - பின்பு, அன்றி - அல்லது, அவன்-ப்ராப்யபூதனானவன், அவை - அந்த போகஸ்தாநங்களை, காண்கொடான் - காணக்கொடான்.

இ.—எட்டாம்பாட்டில், கிளி தொடக்கமான லீலாபரிகரங்களில் தனக்கு உண்டான அநாதரத்தைச் சொல்லுகிறாள்.

[இடையில்லை] - உங்களுக்குளன்பக்கல் ஓரவகாஶமில்லை. [யான்வளர்த்தகிளிகாள்] - பழமைகொண்டு பின்னாட்டுகிறிகோளன்றோ நீங்களும்? [பூவைகள்காள் இத்யாதி] - முன்பு இவள் ஆதரித்தவை அவனுடைய லீலோபகரணங்களிலும் குவாலிறே; அவையெல்லாவற்றிலும் நசையற்றபடி. [உடைய இத்யாதி] - எல்லாவற்றிலும் நசையற்றபடிக்கு ஹேதுசொல்லுகிறாள்: நம்முடைத்தான நிறமும், வளையும், நெஞ்சும், வாஹ்யங்களோடு ஆந்தரங்களோடு வாசியற நம்பக்கலொன்றும் ஶேஷியாதபடி கைக்கொண்டவன்சேரும் பரமபதமும்; இத்தலையிலுள்ளதெல்லாம் நேராகக்கொண்டு எட்டவொண்ணாத நிலத்திலேபோய்ப் பாரித்து வெற்றிகொண்டாடியிருந்தானென்கை. [பாற்கடலும்] - அத்தோடு தோள்தீண்டியான திருப்பாற்கடலும். [அஞ்சனவெற்பும்] - திருமலையும் பரமபதத்தோடொக்கச் சொல்லலாயிருக்கிறதாயிற்று. [அவைநணிய] - ப்ராப்யபூமியானவை நமக்குக் கிட்டிற்றின. ஆனால், புக்கநுபவிக்கத்தட்டேன்? என்ன, - அவனாகிறான் - சுணையுடையனாயிருப்பானொருவன், புறம்பேயுமொருவிஷயத்திலே நசைகிடக்க ஸ்வாநுபவத்தைக் காட்டிக்கொடான். [கடையறஇத்யாதி] - பின்னாட்டாதபடி நிஶ்ஶேஷமாக வாஹ்யபருசிபோனாலல்லது ஹேயஸ்தாநங்களைக் காட்டிக்கொடான். கீழே, "வணங்குமாறறியேன்" என்று ப்ராபகாஸங்களைவிட்டாராய், இங்கே ப்ராப்யாஸங்களை விட்டேனென்கிறார்.

ஈடு.—எட்டாம்பாட்டு. கிளிகள்தொடக்கமான லீலோபகரணங்களில் தனக்கு உண்டான அநாதரத்தைச் சொல்லுகிறாள்.

[இடையில்லை] - என்பக்கல் உங்களுக்கு ஓரவகாஶமில்லை. [யான்வளர்த்த கிளிகாள்] - பழமைகொண்டு பின்னாட்டுகிறிகோளிறே நீங்களும். [பூவைகள்காள் இத்யாதி] - முன்பு இவள்ஆதரித்தவை, அவனுடைய லீலோபகரணங்களிலும் குவாலிறே; அவையெல்லாவற்றிலும் நசையற்றபடி. [உடைய இத்யாதி] - எல்லாவற்றிலும் நசையற்றபடிக்கு ஹேதுசொல்லுகிறது: நம்முடைத்தான நிறமும், வளையும், நெஞ்சும், வாஹ்யங்களோடு ஆந்தரங்களோடு வாசியற நம்பக்கல் ஒன்றும் ஶேஷியாதபடி கைக்கொண்டவன். [அடையும்வைகுந்தமும்] - சேரும் பரமபதமும். இத்தலையிலுள்ளதெல்லாம் நேராகக்கொண்டு, எட்டவொண்ணாதநிலத்திலேபோய்ப் பாரித்து வெற்றிகொண்டாடியிருந்தா னென்கை. [பாற்கடலும்] - அத்தோடு தோள்தீண்டியான திருப்பாற்கடலும். [அஞ்சனவெற்பும்] - திருமலையும் பரமபதத்தோடொக்கச் சொல்லலாயிருக்கிறதாயிற்று. [அவைநணிய] - ப்ராப்யபூமியானவை கிட்டிய : கிட்டிற்றின. ஆனால், அநுபவிக்கத் தட்டேன்? என்ன, - அவன் சுணையுடையவன், புறம்பேயும் ஒருவிஷயத்திலே நசை

---

எட்டாம்பாட்டு.—இடையில்லை இத்யாதி. "மயில்காள்" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - கிளிகள் இத்யாதி.

இடை - அவகாஶம். "யான்வளர்த்த" என்றதுக்கு ஸாவம் - பழமைகொண்டு இத்யாதி. கிளிதொடக்கமானவற்றில் ஬ஹுவசநத்துக்கு ஸாவம்-முன்பு இவள் இத்யாதி. "உடைய நம்" என்றது - நம்முடையதான என்றபடி. ஒழியவொட்டாது - ஶேஷிக்கவொட்டாதபடி. "அடையும்" என்றது - ஈஶ்வரனைச்சேருகிற என்றபடி. "கொண்டான் அடையும்வைகுந்தமும்" என்றுகூட்டி ஸாவம் - இத்தலையிலுள்ளதெல்லாம் இத்யாதி. ப்ரவேஶத்திலே - இத்திருவாய்

கிடக்க ஸ்வாநுபவத்தைக் காட்டிக்கொடான். [கடை இத்யாதி] - பின்னுட்டாதபடி ஸவாஸநமாக ஸாஹ்யருசிபோனுலல்லது ஹோமஸ்த்தாநங்களைக் காட்டிக்கொடான். கீழே - "வணங்குமாறறியேன்" என்று ப்ராபகாபாஸங்களை விட்டார்; இங்கே - ப்ராப்யா பாஸங்களை விடுகிறுர். (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

**காண்கொடுப்பானல்லன் ஆர்க்குந்தன்னைக்†கைசெயப்பாலதோர் மாயந்தன்னுல், மாண்குறள்கோலவடிவுகாட்டி மண்ணும்விண்ணும் நிறையமலர்ந்த, சேண்சுடர்த்தோள்கள்பலதழைத்த தேவபிராற்குஎன் நிறைவினேடு, நாண்கொடுத்தேனினியென்கொடுக்கேன்? என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள் !**

*ஆ.—(காண்கொடுப்பானல்லன்) - உனக்குத் தன்னைக்காட்டாரே எனனில் ?—ஸ்வவ்யதிரிக்தவிஷயஸங்கம் விட்டாலல்லது ஆர்க்கும் தன்னைக்காட்டானென்று அவற்றை நோக்கிச் சொல்லி, தத்தர்பார்த்தமான ஸ்வோத்யோகத்தை ப்ரதிபந்திக்கைக்காக, "அவனையாசைப்பட்டு, இதுக்குமுன்பு உன்னுடைய உபகரணங்களை இழந்தாற்போலே இன்னமுள்ளவற்றை இழவாதேயிருக்கப்பார்க்கில் அத்தைவிடு" என்று அந்யாராயிருப்பார் சொல்ல; அவர்களைநோக்கி, "ஸர்வஜ்ஞனுய் ஸர்வஶக்தியாயிருந்த ஸர்வேஶ்வரனுலும் இப்படி நிர்மிக்கமுடியாது" என்னும்படி ஆஶ்சர்யமாய், நிரதிஶய ஸௌந்தர்யவிஶிஷ்டனுமாய், ஸர்வவஶீகரணமான தன்னுடைய மாண்குறள் கோலவடிவு காட்டி, மஹாபலியுடைய ஸர்வேந்த்ரியங்களையும் அபஹரித்து, நெய்தல்பூவலர்ந்தாற்போலே ஸர்வலோகமும் நிறையும்படி மலர்ந்த திருமேனியையும், கற்பகச்சோலை தழைத்தாற்போலே தழைத்த நிரதிஶயோஜ்ஜ்வலமான திருத்தோள்களையும் உடையனுயிருந்த தேவபிராற்கு என்நிறைவினேடு நாண்கொடுத்தேன்; இனி என்கொடுக்கேன் ? என்னுடை நன்னுதல் நங்கைமீர்காள் ! என்று சொல்லுகிறுர்.*

*ஓ.—ஒன்பதாம்பாட்டில், "இதுவே துணிவாகில் உன்னையும் உனக்குள்ளனவும் இழக்கிறுயிறே" என்று சொன்ன தாய்மாரைக் குறித்து, பண்டேநிறைவும் லஜ்ஜையும் இழந்தேன்: இனி எத்தையிழப்பது ? என்கிறுள்.*

*[காண்கொடுப்பானல்லன் ஆர்க்குந்தன்னை] - ஸ்வயத்நத்தால் காணப்புகில் எத்தனையேனும் அளவுடையார்க்கும் தன்னைக்காட்டும் ஸ்வபாவனல்லன். [கைசெயப்பாலதென்று தொடங்கி] - மஹாபலியை வஞ்சிக்கைக்காக அக்ரித்ரிமமான குறள் வடிவைக்காட்டி ஸமஸ்தலோகமும் விம்மும்படிவளருவதுஞ் செய்து நீண்டு ஒளியையுடைத்தான பலதோள்களையுமுடையனுய் தேவர்களுக்கு உபகாரகனுனவனுக்கு. [கைசெயற்பாலது] - வேணுமென்று உயிர்பெறப் பண்ணினுற்போலே யிருக்கையென்றுமாம்.*

*மொழி ப்ராப்யப்ரதாநமென்று சொன்னத்தை இங்கேகாட்டுகிறுர் - கீழேவணங்குமாறு 'நம் - உடைய - மாமையும் சங்கும்' என்றுதொடங்கி, காண்கொடான்; ஆகையாலே, யான் வளர்த்த என்றுதொடங்கி, இடையில்லை இத்யந்வய:. (அ)*

---

† கைசெயற்பாலதோர் என்றும் பாடம்.

[என்னுடைநன்னுதல் நங்கைமீர்காள்]-இச் சேஷ்டிதம் அறியாமையாலே அழகையுடையராய் பூர்ணைகளாய்த் தனக்கு ஹிதஞ்சொல்லுகிறபடியைச் சொல்லி ஸம்போதிக்கிறாள்.

ப—அநந்தரம், வாமநவேஷத்தைக்காட்டி அநர்கார்ஹமாம்படி ஜகத்தை அளந்துகொண்ட ஸர்வேஶ்வரனுக்கு என்னுடைய பூர்த்தியோடே லஜ்ஜையுமிழந்தேன்; இனி எத்தைக்கொடுப்பேன்? என்கிறாள்.

ஆர்க்கும்-எத்தனையேனும் அளவுடையார்க்கும், (ஸ்வயத்நத்தாலே), தன்னை - தன்னை, காண்கொடுப்பான் அல்லன் - காணக்கொடுக்குமவனல்லனாய் வைத்து, (ஆஶ்ரிதார்த்தமாக), மாயந்தன்னால் - தன்வஞ்சகத்தாலே, கைசெய் - கைததொழிலுக்கு, அப்பாலது - அப்பாலாய், ஓர் - அத்விதீயமான, கோலம் - ஸௌந்தர்யத்தையுடைய, மாண் - அர்த்தியான, குறள்வடிவு - வாமநவேஷத்தை, காட்டி - காட்டி, (அநந்தரத்திலே), மண்ணும் - பூமியும், விண்ணும் - ஊர்த்வலோகமும், நிறைய - நிறையும்படியாக, மலர்ந்த - விஸ்த்ருதனாய், சேண் - ஓங்கி, சுடர் - உஜ்ஜ்வலமான, பல - பல, தோள்கள் - தோள்களும், தழைத்த — தழைத்திருக்கிற, தேவபிரார்க்கு - ப்ரஹ்மருத்ராயிபதியான அவனுக்கு, என - எனனுடைய, நிறைவினோடு - ஸ்த்ரீத்வபூர்த்தியோடே கூட, நாண் - லஜ்ஜையையும், கொடுத்தேன் - கொடுததேன்; என்னுடை - என்னோடு உறவுஉடையீர்களாய், நல் - உஜ்ஜ்வலமான, நுதல் - நெற்றியையுடைய, நங்கைமீர்காள் - குறைவற்றவர்களே! (ஸ்வரூபஸ்வபாவங்களிரண்டும் இழந்தபின்), இனி - இனி, என் - எத்தை, கொடுக்கேன் - கொடுப்பேன்?

இ.—ஒன்பதாம்பாட்டில், "இதுவேதுணிவாகில் ஆத்மாத்மீயங்களை நேராக இழக்கிறாயிறே" என்ற உறவுமுறையாரைக் குறித்து, முன்பே அடைய இழந்திலேனோ? இனி எத்தையிழப்பேன்? என்கிறாள.

[காண்கொடுப்பானல்லன் ஆர்க்குந்தன்னை]-எத்தனையேனும் அதிஶயிதஜ்ஞாநர்க்கும், ஸ்வயத்நத்தாலே யறியப்புகில், தன்படிகளைக் காட்டிக்கொடாத ஸ்வபாவன். [கைசெய இத்யாதி] - [மாயந்தன்னால் - கைசெயப்பாலதோர் - கோலம் - மாண்குறள் - வடிவுகாட்டி] - மாயந்தன்னால் - க்ரித்ரிமத்தாலே. க்ரித்ரிமமாவது — உபயவிபூதியுக்தனான தான் ஒன்றுமில்லாதானாய் வருகையும், ஶ்ரிய:பதியான தன்னை அர்த்தியாக்குகையும், சிறுகாலைக்காட்டிப் பெரியகாலாலே யளந்துகொள்ளுகையும். [கைசெயப்பாலதான - கோலவடிவு] - கைசெய் - கைசெய்கைக்கு அப்பாலதான அழகையுடைய வடிவு. கைசெய்கையை - கைசெய் என்று குறைத்துக் கிடக்கிறது: அக்ரித்ரிமமான அழகையுடைய வடிவென்கை. கைசெயலென்கையாலே - உயிர்பெறவெழுதினாற்போலேயிருந்துள்ள கோலவடிவென்றுமாம். [மாண்குறள் - வடிவு]-இரப்பிலேதகணேறி அபரிச்சேத்யனான தான் வாமநவேஷனாய். [காட்டி] - மஹாபலியைவஞ்சிக்கைக்காக அக்ரித்ரிமமான குறள்வடிவைக் காட்டி. [மண்ணும் விண்ணும் நிறைய மலர்ந்த] - கையிலே நீர்விழுந்த ஸமநந்தரம் ஸமஸ்தலோகங்களும் விம்ம வளர்ந்த. [சேண்சுடர்த்தோள்கள் பலதழைத்த] - நீண்டு ஒளியையுடைததாய், கல்பகதரு பணைத்தாற்போலே பலதோள்களை யுடையவன். [தேவபிரார்க்கு] - இந்த்ரனிழந்த ராஜ்பத்தைக்கொடுத்து தேவர்களுக்கு உபகாரகனானவனுக்கு. [என்நிறைவினோடு நாண்கொடுததேன்] - இந்த்ரன் ராஜ்யம்பெற்றான், மஹாபலி ஔதார்யம்பண்ணிப் போனான், நான் எனக்கு ஸர்வ

ஸ்வம்மான அடக்கத்தையும் லஜ்ஜையையுமிழந்தேன். [இனி என்கொடுக்கேன்] - இனி எத்தைக்கொடுப்பேன்? [என்னுடைநன்னுதல் நங்கைமீர்காள்] - இது௳ வம் அறியாமையாலே அழகிலும் குறைவற்றுப் பூர்ணைகளாய் எனக்கு ஹிதஞ்சொல்லலாமிறே யுங்களுக்கென்கிறாள். கீழே நாலாம் பாட்டிலேயும் "இனி என்கொடுக்கேன்" என்று சொல்விற்று: இதுக்கும் அதுக்கும் வாசியென் என்னில்?—பெரியதிருவடி முதுகிலிருப்பிலும் கையும் திருவாழியுமான சேர்த்தியிலும் தோற்று மாயக்கூத்தனையாசரித்துக் கலக்கச் சென்று கிட்டாமையாலே வந்த இழவு - அதில்; ஸ்ரீவாமநனுடைய அழகிலும் சீலத்திலும் தோற்று மஹாபலியைப்போலே ஸர்வஸ்வத்தையும் இழந்தேன் என்கிறது - இதில்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. "இதுவே துணிவாகில் ஆத்மாத்மீயங்களை நேராக இழக்கிறாயிறே" என்ற தாய்மாரைக்குறித்து, 'முன்பே அடைய இழந்திலேனோ? இனி எத்தை இழப்பது? என்கிறாள்.

[காண்கொடுப்பானல்லனார்க்குந்தன்னை] - ஸ்வயத்நத்தாலே காணநினைப்பார் எத்தனையேனும் அதிசயிதஜ்ஞாநரேயாகிலும், தன்னைக்காட்டும் ஸ்வபாவனல்லன். [கைசெய் இத்யாதி] - (மாயந்தன்னால் - கைசெயப்பாலதோர் - கோலம் - மாண்குறள் - வடிவுகாட்டி) மாயந்தன்னால் - க்ரித்ரிமத்தாலே. க்ரித்ரிமமாவது - உபயவிபூதியுக்தனான தான் ஒன்றுமில்லாதானாய்வருகையும், ஸ்ரிய:பதியான தன்னை அர்த்தியாக்குகையும், சிறுகாலைக்காட்டிப் பெரியகாலாலே அளந்துகொள்ளுகையும். [கைசெயப்பாலதான - கோலவடிவு] - கைசெய்கைக்கு அப்பாலதான அழகையுடைய வடிவு. கைசெய்கையை - கைசெய் என்று குறைத்துக்கிடக்கிறது. அக்ரித்ரிமமான கோலமென்னுதல். அன்றிக்கே, † கருவி உயிர்பெறவெழுதினாற்போலே யிருந்துள்ள கோலவடிவென்றுமாம். [மாண்குறள் - வடிவு] - இரப்பிலே தகணேறி அபரிச்சேத்யனான தான் வாமநவேஷனாய். [கோலவடிவு] - இப்படி அழிவுக்கிட்டவடிவுக்கு ஆலத்திவழிக்கவேண்டியிருக்கை. [காட்டி] - மஹாபலியை வஞ்சிக்கைக்காக அக்ரித்ரிமமான அழகையுடைய மாண்குறளான வடிவைக்காட்டி. [மண்ணும்விண்ணும்நிறையமலர்ந்த] - கையிலே நீர்விழுந்த ஸமநந்தரம் ஸமஸ்தலோகங்களும் விம்ம வளர்ந்த. [சேண்சுடர்த்தோள்கள் பலதழைத்த] - நீண்டு ஒளியையுடைத்தாய், கல்பகதரு பணைத்தாற்போலே பலதோள்களையுடையவன். [தேவபிரார்க்கு] - இந்த்ரனிழந்த ராஜ்யத்தைக்கொடுத்து தேவர்களுக்கு உபகாரகனானவனுக்கு. [என்

ஒன்பதாம்பாட்டு.—காண்கொடுப்பான் இத்யாதி. "நாண்கொடுத்தேன் இனியென் கொடுக்கேன்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - இதுவே இத்யாதி.

"கைசெய்கை" என்றிருக்கவில்லையேயென்ன - கைசெய்கையை இத்யாதி. "கைசெய்கைக்கு அப்பாலது" என்றத்தால் பலிதம் - அக்ரித்ரிமம் இத்யாதி. கைசெய்கைக்கப்பாலதான - கடந்திருப்பதான என்றாய், அக்ரித்ரிமமான என்றபடி. "க்ரியயா நிவ்ருத்த: க்ருத்ரிம:" என்கிற ந்யாயத்தாலே, க்ரித்ரிமமென்று - பண்ணைப்பட்டத்தைச்சொல்லி, அக்ரித்ரிமமென்று - பண்ணப்படாதபடி என்றபடி. இத்தால் - சித்ரத்தில் எழுதப்போகாத வடிவழகென்கை. கையாலே செய்கையை - சித்ரமாக எழுதுகையை, பாலது - ஸ்வபாவமாகவுடைத்தான, கோலவடிவென்று அர்த்தாந்தரம் - அன்றிக்கே கருவி இத்யாதி. கருவி - சித்ரம். உயிர்பெற - ப்ராணனுண்டாம்படி அழகிதாகவென்றுமாம். "மாண்" என்று - ப்ரஹ்மசாரியாகையாலே - இரப்பிலேதகணேறி என்கிறார். அழிவுக்கிட்டவடிவுக்கு - தன்மேன்மையைவிட்டு நீர்மையைக் கொள்ளுகைக்காகக்கொண்ட வடிவுக்கென்றபடி. முந்தின அர்த்தத்தை யுபஜீவித்து, "காட்டி" என்றதுக்கு அர்த்தம் - மஹா

† இந்தப் பொருளில் 'கைசெயற்பாலதோர் மாயந்தன்னால்' என்று பாடம்.

நிறைவினோடுநாண்கொடுத்தேன்] - நான் இரண்டுராஜ்யமிழந்தேன். இந்த்ரன் ராஜ்யம்பெற்றுப் போனான், மஹாபலி ஔதார்யம்பண்ணிப்போனான், நான் எனக்கு ஸர்வஸ்வமுமான அடக்கத்தையும் லஜ்ஜையையும் இழந்தேன். [இனியென்கொடுக்கேன்] - இனி எத்தைக்கொடுப்பேன்? [என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள்] - து:கம்அறியாமையாலே அழகிலும் குறைவற்று, பரிபூர்ணைகளாய், எனக்கு ஹிதஞ்சொல்லலாமிறே உங்களுக்கு. கீழ் நாலாம்பாட்டிலே, "இனியென்கொடுக்கேன்" என்றுசொல்லிற்று; இதுக்கும் அதுக்கும் வாசியென்? என்னில், - பெரியதிருவடி முதுகிலிருப்பிலும் கையுந்திருவாழியுமான சேர்த்தியிலும் தோற்று * மாயக்கூத்தனை ஆதரித்துக் கலக்கச்சென்று கிட்டாமையாலே வந்த இழவு - அதில்; ஸ்ரீவாமநனுடைய அழகிலும் ஶீலத்திலும் தோற்ற மஹாபலியைப்போலே ஸர்வத்தையும் இழந்தேனென்கிறது - இதில். (௯)

---

## பத்தாம் பாட்டு.

---

**என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள்! யானினிச்செய்வதென்? என்னெஞ்சு என்னை, நின்னிடையேனல்லேனென்றுநீங்கி நேமியுஞ்சங்கும் இருகைக்கொண்டு, பன்னெடுஞ்சூழ்சுடர் ஞாயிற்றோடு பால்மதியேந்தி ஓர் கோலநீல, நன்னெடுங்குன்றம்வருவதொப்பான் நாண்மலர்ப்பாதம் அடைந்ததுவே.**

*ஆ.—(என்னுடை) - "ஆகிலும் அவனை ஆசைப்படுகை ஈடல்ல" என்று அவர்கள்சொல்ல, 'நான் தோழிமாரைவிட்டாற்போலே என்னெஞ்சு என்னை நின்னிடையேனல்லேன் என்று நீங்கி, ஶங்கசக்ர ஸஹாயனாய், நீலமான திருமேனியையுடையனாய், கிரணமிகதீப்தியுக்த திவாகர ஶீதாகராலங்க்ருத ஶிரதிரூப ரமணீய வரணீய ஜங்கம நீல மஹாசலம்போலேயிருந்த அவனுடைய நாண்மலர்ப்பாதமடைந்தது; யான் இனிச்செய்வதென்? என்னுடைநன்னுதல் நங்கைமீர்காள்!' என்கிறார்.*

*ஒ.—பத்தாம்பாட்டில், "இங்ஙனே செய்யலாமோ? தரித்திருக்கவேண்டாவோ?" என்று தோழிமார்சொல்ல, என்னெஞ்சானது என்னைவிட்டுப்போய் எம்பெருமானழகிலே யகப்பட்டது, இனி என்னாற்செய்யலாவதில்லை யென்கிறாள்.*

[என்னுடையென்றுதொடங்கி] - எனக்குஉறவுமுறையாரான நிர்து:கைகளான நங்கைமீர்காள்! இப்படியவஸ்தையான நான் இனி எத்தைச்செய்வேன்? [என்னெஞ்

---

பலி இத்யாதி. "நிறைவும், நாணும்" என்று இரண்டாலையாலே ரஸோக்தி - நான் இரண்டு ராஜ்யமிழந்தேன் என்று. இத்தை விவரிக்கிறார்-இந்த்ரன் ராஜ்யம் இத்யாதி வாக்யத்ரயத்தாலே. இவர்களுடைய அழகையும் பூர்த்தியையும் சொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் - து:கமறியாமையாலே இத்யாதி. இப்புநருக்திக்கு விஷயபேதத்தாலே வந்தபேதமொழிய, ஆகாரபேதமில்லையென்று பரிஹரிக்கிறார் - பெரியதிருவடி இத்யாதி வாக்யத்வயத்தாலே. 'என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள் - ஆர்க்கும்தன்னை - காண்கொடுப்பானல்லனாய் - கைசெயப்பாலதான ஓர் கோலம் - மாண்குறள் - வடிவுகாட்டி - மாயந்தன்னால்-மண்ணும்விண்ணும் நிறையமலர்ந்த சேண்சுடர் - தழைத்த - பல - தோள்களையுடைய - தேவபிராற்கு - என்னிறைவினோடு நாண்கொடுத்தேன், இனி என்கொடுக்கேன்' இத்யந்வய:. (௯)

சென்றுதொடங்கி]-என்நெஞ்சு, என்னை யுன்னோடு எனக்கடைவில்லையென்று அகன்று, திருவாழியையும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் இரண்டுகையிலும் ஏந்திக்கொண்டு, பலவாய் தூரமாகச்சென்று எங்கும் வ்யாபியாநின்றுள்ள ஒளியையுடைய ஆதித்யனோடே பேரொளியையுமுடைய சந்த்ரனையும்வந்தி அழகியதாய் நீலமாய் மிகவும் நெடிதாயிருப்பது ஒருமலை நடந்துவருமாபோலே யிருக்கிறவனுடைய நாட்பூப்போலேயிருக்கிற திருவடிகளைச் சேர்ந்தது.

ப.—ஆநந்தரம், மநோஹாரியாய் உத்துங்கமான வடிவழகையுடைய அவன் திருவடிகளிலே என்நெஞ்சானது என்னைவிட்டு ப்ரவேசித்தது; நீங்கள் நியமிக்கிறதுக்கு என்னாற்செய்யலாவதென்? என்கிறாள்.

என் - எனக்கு ஐவ்யமாய்ப்போந்த, நெஞ்சு - நெஞ்சானது, நின் - (அவன் விஶ்லேஷித்துப்போன) உனக்கு, இடையேனல்லேன் - காரணமாவேனல்லேன், என்று - என்று, என்னை - (காணியான) என்னை, நீங்கி - விட்டகன்று,— நேமியும் - திருவாழியையும், சங்கும் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், இருகை - இரண்டுதிருக்கையிலும், கொண்டு - ஏந்திக்கொண்டு, பல் - பலவாய், நெடும் - பரந்து, சூழ் - சூழ்ந்த, சுடர் - சுடரையுடைத்தான, ஞாயிற்றோடு - ஆதித்யனோடேகூட, பால் - பால்போலேவெளுத்த நிறத்தையுடைய, மதி - சந்த்ரனையும், ஏந்தி - தன் கொடுமுடிகளிலே ஏந்தி, ஓர் - அத்விதீயமாய், கோலம் - தர்ஶநீயாகாரமாய், நீலம் - நீலநிறத்தையுடைத்தாய், நல் - யாதுவைசித்ர்யாதிகளா லுண்டான வைலக்ஷண்யத்தையுடைத்தாய், நெடு - உத்துங்கமான, குன்றம் - மலை, வருவது - நடந்துவருமது, ஒப்பான் - ஒத்து, (ஆஶ்ரிதர்க்குவந்து தோற்றுமவனுடைய), நாள் - அபிநவமான, மலர் - தாமரைபோலே யிருக்கிற, பாதம் - திருவடிகளை, அடைந்தது - அடைந்தது; என்னுடை - என்னோடு உறவுடையிகோளாய் வைத்து, (என்னீடுபாடறியாதபடியாலே), நன்னுதல் - அவயவஶோபையாலும், ஆத்மகுணத்தாலும், நங்கைமீர்காள - பூர்ணைகளாயிருக்குமவர்களே! யான் - (உங்களைப் போலன்றியே ஈடுபட்ட) நான், இனி - அஸஹாயையாம்படி நெஞ்சமிழந்தபின்பு, (உங்கள நியமநத்துக்கு), என் - எத்தை, செய்வது - செய்வேன்? நெஞ்சுடையாரன்றோ ய ருத்து.

இ.—பத்தாம்பாட்டில், எல்லாஞ்செய்தாலும் ஹிதைஷிகளாய் ஬ந்துக்களான நாங்கள் சொல்லிற்றுக்கேட்கவேணுங்காணென்ன, 'நீங்கள் சொன்னவார்த்தை கேட்கைக்கு நெஞ்சுவேணுமே; அது அவன் பக்கலிலேபோயிற்று' என்கிறாள்.

[என்னுடை நன்னுதல் நங்கைமீர்காள்] - எனக்குஉறவுமுறையாரான நீங்கள், வடிவழகிலும் ஸ்த்ரீத்வத்திலும் குறைவற்றிருக்கையாலே நிர்து:கைகளாயிருந்திகோள். [யான்] - நான் எல்லாமிழந்து அவஸந்நையாயிருந்தேன். [இனிச் செய்வதென்] - இப்படியானபின்பு, எத்தைச்செய்வேன? 'இவற்றை மீட்கவோ, அவனை நியமிக்கவோ, எல்லாவளவிலும் ஶரித்திருக்கவேண்டாவோ? என்ன, 'அதுக்கு நெஞ்சு வேண்டாவோ?' என்கிறாள் :—[என்நெஞ்சு] - எல்லாவவஸ்தையிலும் இதுக்குமுன்பு எனக்கு ஐவ்யமாய்ப்போந்த என்நெஞ்சு. [என்னை] — தன்னைக்கொண்டு ஜீவித்திருந்த என்னை. [நின்னுடையேனல்லேனென்று நீங்கி] - உன்னோடு எனக்குஅடைவில்லையென்று அகன்று. * ஐகத்ருக்ஷாவஶேஷம் பண்ணிப்போயிற்று. ப்ராப்திசொல்லி

மீட்கவொண்ணாதபடி, "ஸங்க்ரு ஸம்ஶயா" என்றுபோயிற்று. உங்களுக்கு நான் நிற்கிற நிலையிலேயிறே என்னெஞ்சு எனக்கவ்வருகே போனபடி. [நேமியும் இத்யாதி] - பின் தொடரவொண்ணாதபடி கடலிலேபாயிற்றுப்புக்கது. வெறும்புறத்திலே யாலத்திவழிக்க வேண்டும்படியிருக்கிற இரண்டுகையிலும் ஆழ்வார்களை தரித்து, பலவாய் தூரப்போய் எங்கும் வ்யாபிப்பனவான ஒளிகளையுடைய ஆதித்யனோடேகூட அவனோடொத்த தேஜஸ்ஸையும் வெண்மையையுமுடைய சந்த்ரனையேந்தி, அத்தேஜஸ்ஸுக்களுக்கு பரபாகமமாய், இதரவிஸஜாதீயமாய், ஸ்ரமஹரமாய் கண்டார் கண்குளிரும்படி நீலமாய், மற்றும் அநுக்தமான அழகுகளையுடைத்தாய், அபரிச்சேத்யமாயிருப்பதொரு மலை நடந்து வருமாபோலேயாயிற்று ஆழ்வார்களைக்கொண்டு உலாவும்படி. [நாண்மலர்ப் பாதமடைந்தது] - செவ்விப்பூவிலே வண்டுபடிந்தாற்போலே திருவடிகளிலே சேர்ந்தது. யான் இனிச் செய்வதென் ?

ஈடு.—பத்தாம்பாட்டு. எல்லாஞ்செய்தாலும் ஹிதைஷிகளான நாங்கள் சொல்லிற்றுக் கேட்கவேணுங்காணென்ன,—'நீங்கள்சொன்ன வார்த்தை கேட்கைக்கு நெஞ்சுவேணுமே; அவன்பக்கல் போயிற்று' என்கிறாள்.

[என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள்] - எனக்கு உறவுமுறையாரானநீங்கள், வடிவழகிலும் ஸ்த்ரீத்வத்திலும் குறைவற்றிருக்கையாலே நிர்த்தோஷைகளாயிருந்திகோள். [யான்] - நான் எல்லாமிழந்து அவஸந்நையானேன். [இனிச்செய்வதென்] - இப்படியான பின்பு, எத்தைச்செய்வேன் ! இவற்றைமீட்கவோ, அவனைநியமிக்கவோ ? எல்லாவளவிலும் தரித்திருக்கவேண்டாவோ ? என்ன, 'அதுக்கும் நெஞ்சுவேண்டாவோ?' என்கிறாள். [என்னெஞ்சு]-எல்லாஅவஸ்த்தையிலும் எனக்குஸவ்யமான நெஞ்சு. [என்னை]-தன்னைக் கொண்டு ஜீவிக்க இருக்கிற என்னை. [நின்னிடையேனல்லேனென்று நீங்கி] - உன்னோடு எனக்கு அடைவில்லையென்று அகன்று. * உத்க்ருஷ்ய ராவணோ ஷம் (இத்யுக்த்வாபருஷம்) பண்ணிப்போயிற்று. ப்ராப்திசொல்லி மீட்கவொண்ணாதபடி. "ஸங்க்ரு ஸம்ஶயா" (ஸங்ந்யஸ்தம்மயா) என்றுபோயிற்று. உங்களுக்கு நான் நின்றநிலையிறே என்னெஞ்சு எனக்கவ்வருகேபோனபடி. [நேமியும் இத்யாதி] - பின்தொடரவொண்ணாதபடி கடலிலேயாயிற்றுப் புக்கது.வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டியிருக்கிற இரண்டுகையிலும் ஆழ்வார்களை தரித்து, பலவாய் தூரப்போய் எங்குமொக்க வ்யாபிப்பனவான ஒளிகளையுடைய ஆதித்யனோடே பாலோடொத்த தேஜஸ்ஸையுடைய சந்த்ரனையேந்தி, அத்தேஜஸ்ஸுக்களுக்கு பர

---

பத்தாம்பாட்டு.—என்னுடை இத்யாதி. "என்னெஞ்சு - நாண்மலர்ப்பாதமடைந்தது" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - எல்லாம்செய்தாலும் இத்யாதி.

செய்யலாவதில்லையோவென்ன - இவற்றை இத்யாதி. இவற்றையென்றது - கீழிற் பாட்டிற்சொன்ன நாணும் நிறைவும் தொடக்கமானவற்றை. அடைவு - ஸம்பந்தம். அகன்றதின் சரமாவதியை அருளிச்செய்கிறார் - உத்க்ருஷ்ய இத்யாதி. "உத்க்ருஷ்ய ராவணோ ஷம்வாக்யம் ராவணம்ராவணாநுஜ: । ஆஜகாமமுஹூர்த்தேநயத்ரராம: ஸலக்ஷ்மண:" இதி யுத்தகாண்டே. (௧௭-௧) ஸம்பந்தம்சொல்லி மீட்கப்போகாதபடி ஸவாஸநமாகவிட்டுப்போயிற்றென்கிறார் - ப்ராப்திசொல்லி இத்யாதி. "உங்களோடெங்களிடையில்லை" என்று நான் போனாற் போலே நெஞ்சும் போயிற்றதென்கிறார் - உங்களுக்கு இத்யாதி. "நேமியும்" இத்யாதி பதங்களுக்கு வாஸநை - பின்தொடர இத்யாதி. "நல்" என்றதுக்கு அர்த்தம் - மற்றும் அநுக்தமான

ஹாகமாய், இதரவிஸஜாதீயமாய், கண்டார்கண்குளிரும்படி நீலமாய், மற்றும் அநுக்தமான அழகுகளையுடைத்தாய், அபரிச்சேத்யமாயிருப்பதொருமலை நடந்துவருமாபோலேயாயிற்று, ஆழ்வார்களை ஏந்திக்கொண்டு உலாவும்படி. [நாண்மலர்ப்பாதமடைந்ததுவே] - சேவ்விப்பூவிலே வண்டுபடிந்தாற்போலே சேர்ந்தது - யான் இனிச்செய்வதேன்? (கo)

## பதிேனாராம் பாட்டு.

பாதமடைவதன்பாசத்தாலே மற்றவன்பாசங்கள்முற்றவிட்டுக்
கோதில்புகழ்க்கண்ணன்தன்னடிமேல் வண்குருகூர்ச்சடகோபன்சோன்ன
தீதிலந்தாதியோராயிரத்துள் இவையுமோர்பத்துஇசையோடும்வல்லார்
ஆதுமோர்தீதிலராகி இங்குமங்குமேல்லாம்அமைவார்கள்தாமே.

ஆ.—(பாதமடைவதன்) - திருவடிகளைச் சேரவேணுமென்னும் ஆசையாலே, தத்வ்யதிரிக்தவிஷயஸங்கத்தை நிஶ்ஶேஷமாகவிட்டு, ஸ்வவ்யதிரிக்த ஸகல விஷயஸங்கநிவர்த்தகமான கல்யாணகுணங்களையுடையனை கண்ணன்தன்னடிமேல் வண்குருகூர்ச்சடகோபன்சொன்ன நிரவத்யமான இத்திருவாய்மொழியைவல்லார், நிரஸ்த ஸமஸ்ததுஃவராய், அங்குமிங்குமெல்லாப்படியாலும் பரிபூர்ணரென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழிவல்லார் அவித்யாகர்மாதி தோஷங்களும் நீங்கி, இஹலோகபரலோகங்களில் தாங்களே ப்ரதானராவ ரென்கிறார்.

[பாதமென்று தொடங்கி] - எம்பெருமான் திருவடிகளைப் பெறுகையாலுண்டான ஆசையாலே புறம்புண்டான வலியஸங்கங்களையெல்லாம் விட்டு. [கோதிலென்று தொடங்கி] - தன்திருவடிகளை யாஶ்ரயித்தார்க்குப் புறம்புண்டான ஸங்கங்களை அறுக்கவல்லவான கல்யாணகுணங்களையுடைய க்ருஷ்ணன் திருவடிகளிலே ஆழ்வார் அருளிச்செய்த ஸ்வவத்குணங்களையொழிய க்ரந்தரப்ரஸங்கமாகிற பொல்லாங்கில்லாத ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி வல்லார்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை இசையோடே அப்யஸிக்கவல்லவர்கள், உபயவிபூதியிலும் ஸகலதநுஸவ பரிபூர்ணராயிருப்பரென்று பலத்தை அருளிச்செய்கிறார்.

பாதம் - திருவடியை, அடைவதன் - ப்ராபிக்கையிலுண்டான, பாசத்தாலே - அபிநிவேஶத்தாலே, மற்ற - இதரவிஷயமாய், வன் - ப்ரபலமான, பாசங்கள் - பாசங்களை, முற்ற - நேராக, விட்டு - விட்டு, (இப்படி இதரஸங்கமறுகையாலே), கோது — கோது, இல் - அற்ற, புகழ் - புகழையுடைய, கண்ணன்தன் - க்ருஷ்ணன், அடிமேல் - திருவடிகள் விஷயமாக, வண் - (தம்முடைய ஸ்வவ்ருத்தியை ப்ரபந்தீகரித்த) பரமௌதார்யத்தையுடைய, குருகூர்ச்சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்ததாய்,

அழகுகளையுடைத்தாய் என்றது. ''யானினிச்செய்வதென்'' என்றதுக்கு, இப்பாட்டுக்கு ஸாபேக்ஷமாக ஒரு தாத்பர்யம்அருளிச்செய்கிறார் - சேவ்விப்பூவிலே இத்யாதி. 'என்னுடைநன்னுதல் நங்கைமீர்காள், என்னெஞ்சுஎன்னைநின்னிடையேன்' என்றுதொடங்கி, அடைந்தது; யானினிச் செய்வதென்?' இத்யந்வய:, (கக)

(கர்த்தாந்தர ப்ரஸ்தாவமாகிற) தீது, இல் - இன்றியே, அந்தாதி - அந்தாதியாய், ஓர் - அத்விதீயமான, ஆயிரத்துள் - ஆயிரத்துள், ஓர் - (கடலிலே முத்துப்பட்டாற்போலே) அத்விதீயமான, இவை - இவை, பத்தும் - பத்தையும், இசையொடும் - இசையோடேகூட, வல்லார் - அப்யஸிக்கவல்லவர்கள், (அவித்யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதி ஸம்பந்தரூப தோஷங்களில்), ஆதும் - ஏதேனும், ஓர் - ஒரு, தீது - தோஷம், இலராகி - இன்றியே, இங்கும் - இந்தவிபூதியிலும், ("க்ருஷ்ணஞ்சைவ ஸமசிஷ" என்கிறபடியே குணநுபவபூர்ணராய்), அங்கும்-அந்தவிபூதியிலும்,("ஸோச்நுதே ஸர்வாந் காமாந்" என்கிறபடியே அவாப்தஸமஸ்தகாமராய்க்கொண்டு அநந்யாதீநராய்), எல்லாம் அமைவார்கள்தாமே - ஸர்வப்ரகாரபரிபூர்ணராவர்கள். இது - எண்சீராசிரியவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி வல்லார், அவித்யாதிஸகலதோஷங்களும் நீங்கி இஹலோகபரலோகங்களில் தாங்களே க்ருதக்ருத்யராவரென்கிறார்.

[பாதம் இத்யாதி]-திருவடிகளைக் கிட்டுகையிலுண்டான ஸங்கத்தாலே புறம்புண்டான வலியஸங்கங்களை நிஶ்ஶேஷமாக விட்டார்; இதுவாயிற்று இத்திருவாய்மொழியில் சொல்லிற்றாயிற்றது. புறம்புள்ள பற்றறுக் திருவடிகளை ஆசைப்பட்டவரல்லர்; "மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு" என்கிறபடியே, திருவடிகளில் ஸங்கத்தாலே ஔபாயிகமான பாஹ்யஸங்கத்தைத் தவிர்ந்தவர். [கோதில் புகழ்] - திருவடிகளில் ஸங்கத்துக்குமுதல் அவனுடைய கல்யாணகுணங்கள். இக்குணங்களுக்குக் கோதாவது - தன்னையொழியப் புறம்பேயும் நசைபண்ணும்படியிருக்கை. [கண்ணன் தன்னடிமேல்] - இப்புகழையுடைய க்ருஷ்ணனுடைய திருவடிகளிலேயாயிற்றுச் சொல்லிற்று. "எல்லாம் கண்ணன்" என்றிறே தொடங்கிற்று. பரமோதாரரான ஆழ்வார் அருளிச்செய்த. [தீதிலந்தாதி]-ப்ரபந்தத்துக்குத் தீதாவது: கர்த்ராந்தர ப்ரஸ்தாவம். ராமவ்ருத்தாந்தத்தைச் சொல்லப்புக்கு, ஸம்வத்ஸரக்ஷணாத் பத்தி, புஷ்பகவர்ணநம் இவற்றிலேயிழிகையும், "நாராயணகதாமிமாம்" என்று சொல்லிவைத்து, விட்டார் விட்ட அம்பெண்ணுகையும், இவை. [ஓராயிரத்துள்ளிவையுமோர் பத்து இசையொடும் வல்லார்]-அத்விதீயமான திருவாய்மொழியில், இப்பத்தைப் ப்ரீதிப்ரகர்ஷத்தாலே சொல்லுமவர்கள். [ஆதுமோர் தீதிலராகி] - அவித்யாதிதோஷங்களும் நீங்கும். புறம்புள்ள நசைபற்றிருக்கச்செய்தே, ப்ரபந்தந் தலைக்கட்டுகைக்காக விருக்குமதுவும் அவர்களுக்கில்லை [இங்கும் அங்கும் எல்லாமமைவார்கள்தாமே] - இஹலோகத்தோடு பரலோகத்தோடு வாசிபறக் குறைவற்றிருப்பர்கள்; இஹலோகத்தில், "க்ருதக்ருத்யாः ப்ரதீக்ஷந்தே" என்கிறபடியே சமைந்திருப்பர்கள்; பரலோகத்தில், "ஸஹம்ஸவதேப்யமாநந்தி" என்று குறைவற்றிருப்பர்கள், [தாமே]-ஈஶ்வரன் முழங்கைத் தண்ணீர்வேண்டா, உபயவிபூதியிலும் தாங்களே ப்ரதானராவர்கள்.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழிவல்லார், அவித்யாதி ஸகலதோஷங்களும் நீங்கி, இஹலோக பரலோகங்களில் தாங்களே க்ருதக்ருத்யராவ ரென்கிறார்.

[பாதம் இத்யாதி] - திருவடிகளைக் கிட்டுகையிலுண்டான ஸங்கத்தாலே புறம்புண்டான வலியஸங்கங்களை நிஶ்ஶேஷமாகவிட்டார்: இதுவாயிற்று இத்திருவாய்மொழியிற் சொல்லிற்றாயிற்று. புறம்புள்ள பற்றுக்களற்றுத் திருவடிகளை யாசைப்பட்டவரல்லர்; "மாற்பால்மனஞ்சுழிப்ப மங்கையர்தோள்கைவிட்டு" என்கிறபடியே, திருவடிகளில் ஸங்

நிகமம்.—பாதம் இத்யாதி."இவையுமோர்பத்துஇசையொடும்வல்லார்" என்றுதொடங்கி மேலெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி. மொழி றத்தைப்பற்ற - அவித்யாதி ஸகலதோஷங்களும் என்றது.

அடைவதன் - அடைகையிலுண்டான என்றபடி. இத்திருவாய்மொழியில் சொன்ன அர்த்தத்தைச் சுருங்கவருளிச்செய்ததென்னுமிடம் தோன்ற அருளிச்செய்கிறார் - இதுவாயிற்று இத்யாதி. இத்தால் இவர்க்கு வ்யாவ்ருத்தி - புறம்புள்ள இத்யாதி, தவிர்ந்தவர் என்னுமளவாக.

கத்தாலே ஔபாதிகமான பாஹ்யஸங்கத்தைத் தவிர்ந்தவர். [கோதில்புகழ்] - திருவடிகளில் ஸங்கத்துக்கு முதல் அவனுடைய கல்யாணகுணங்கள். குணங்களுக்குக்கோதாவது - தன்னையொழியப் புறம்பேயும் நசைபண்ணும்படியிருக்கை. [கண்ணன் தன்னடிமேல்] - இப்புகழையுடைய க்ருஷ்ணன் திருவடிகளிலேயாயிற்றுச் சொல்லிற்று. பரமோதாரரான ஆழ்வாரருளிச்செய்த. [தீதிலந்தாதி] - ப்ரபந்தத்துக்குத் தீதாவது - கதாந்தர ப்ரஸ்தாவம். ராமவ்ருத்தாந்தத்தைச் சொல்லப்புக்கு, ஸுப்ரஹ்மண்யோத்பத்தி, புஷ்பக வர்ணநம் இவைதொடக்கமானவற்றிலே இழிகை; "நாராயணகதாமிமாம்" (நாராயணகதாமிமாம்) என்று யுக்தப்ரகாராதிகளைச் சொல்லுகை; [ஓர்ஆயிரத்துள்ளிவையுமோர் பத்திசையொடும்வல்லார்] - அத்விதீயமான ஆயிரந்திருவாய்மொழியில் இப்பத்தையும் ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே சொல்லுமவர்கள். [ஆதுமோர்தீதிலராகி] - அவித்யாதி தோஷங்களும் நீங்கும். புறம்புள்ள நசையற்றிருக்கச்செய்தே ப்ரபந்தம் தலைக்கட்டுகைக்காக இருக்குமதுவும் அவர்களுக்கில்லை. [இங்குமங்குமெல்லாமமைவார்கள் தாமே] - இஹலோகத்தோடு பரலோகத்தோடு வாசியறக் குறைவற்றிருப்பார்கள். இஹலோகத்தில், "க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே" (க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே) என்கிறபடியே சமைந்திருப்பார்கள்; பரலோகத்தில், †"அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" (அஹம்ஸர்வம் கரிஷ்யாமி) என்று குறைவற்றிருப்பர்கள். [தாமே] - ‡(ஈஶ்வரன் முழங்கைத்தண்ணீர் வேண்டா,) உபயவிபூதியிலும் தாங்களே ப்ரதாநராவர்கள். (கக)

---

"பாதமடைவதன்பாசத்தாலே" என்றத்தோடே "கோதில்புகழ்" என்றதுக்கு ஸங்கதி - திருவடிகளில் இத்யாதி. கதாந்தரப்ரஸ்தாவமுண்டான ப்ரபந்தங்களைக் காட்டுகிறார்-ராமவ்ருத்தாந்தத்தை இத்யாதி வாக்யத்வயத்தாலே. "நமோ ப⁴க³வதே தஸ்மை வ்யாஸாயாமிததேஜஸே । யஸ்ய ப்ரஸாதா³த்³வக்ஷ்யாமி நாராயணகதாமிமாம்." இசையோடே பாடும்போது ப்ரீதியுண்டாக வேண்டுகையாலே - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே என்கிறார். "ஆதும் - தீது" என்றதுக்கு அர்த்தம் - அவித்யாதி இத்யாதி. "ஓர்தீது" என்றதுக்கு அர்த்தம் - புறம்புள்ள இத்யாதி. இருக்கும் ப்ரகாரமேதென்ன - இஹலோகத்தில் இத்யாதி வாக்யத்வயம். "தாமே" என்ற அவதாரணார்த்தம் - உபயவிபூதியிலும் இத்யாதி. 'ப்ராயஶ: ஸர்வகார்யாணி க்ருத்வா த்யாக³மிதே ஜநா: । க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதி²ம்' இதி ஶௌநக:. (கக).

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.—ஸம்ப்ராப்தே சாவிஶ்லேஷே நிஜவாக்³ஸ்ம்ருதாயாம் ப்ராப்தேர்விலம்பா³தஜநிதபரஷ்வாஸவாஸ்யப்ரஶஸ்ய: । ஸ்வஸ்ய ஶ்லிஷ்டஸ்தநாதீ³ஸ் ஸ்வஹிதேவிஷயே ஸ்வஸ்வவிந்நவிப்ரவணதாம் ஶாஶ்வதீம் த³ர்ஶிதீயம் ॥

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.— தாவத்ப்ராப்த்யநாப்தௌ ஸ்வாத்மஹநநயநதயாநீததேஹோக்ருதிஸ்வாதுஷ்யோ ப்ரத்யுஷ்டிதஸ்வாதூ⁴ர்வயாரதயா யோக³ஸி நிஜஜநேஶு । ஶ்வேஷாவ்யாஹ்ருதஸாவாஸ்ப்ருதிஹதிவிரஹாத்³ஜநாத்³ருஶ்யஹாவாஞ்சிஸ்ஸ்ருஜாநாம் ஜநாநாம் ஸாம்யஹத இதி ப்ராஹநாயஶ்ஶோரி: ॥

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

நங்கருத்தைநன்றாகநாடி நிற்கும்மாலறிய
இங்கிவற்றிலாசை எமக்குளதென்—சங்கையினால்
தன்னுயிரில்மற்றில்நசை தானொழிந்தமாறன்தான்
அந்நிலையை ஆய்ந்துரைத்தான் அங்கு.

---

† ரா-அயோத். 31, 25.

‡ குண்டலிதம் இருபத்துநாலாயிரப்படி.

ஶ்ரீ:

# மூன்றாந் திருவாய்மொழி—அங்குமிங்கும் : ப்ரவேஶங்கள்.

## ஆறாயிரப்படி.

இப்படி எம்பெருமானைப்பிரிந்து வ்யஸநப்படுகிற தமக்கு ஒரு துணையின்றியே யிருக்கிறபடியை அருளிச்செய்கிறார்.

## ஒன்பதினாயிரப்படி.

மூன்றாந் திருவாய்மொழியில், கீழில் திருவாய்மொழியில் பத்தாம்பாட்டிலே எம்பெருமானுடைய திருவழகை மிகவும் அநுஸந்தித்த ஆழ்வார், "ஆரேனும் அர்த்தித்ததுவே வ்யாஜமாகக்கொண்டு, தந்தாம் ப்ரயோஜநங்களல்லது அறியாதிருப்பாரும், மத்யஸ்தரும், ஶத்ருக்களுமேயாய்த் தன்பக்கல் பரிவுடையாரொருவருமின்றிக்கேயிருக்கிற ஸம்ஸாரத்திலே, அத்யந்த ஸுகுமாரனானதான், தன்னிற்காட்டிலும் ஸுகுமாரமான பரிகரங்களோடே பலகாலும் வந்து திருவவதாரம்பண்ணியருளி: அவ்வவகாலங்களில் அர்த்திகளுடைய அர்த்திதங்களைப் பூரிக்கைக்காகத் தனியேயுலாவிநிற்பது: அவ்வளவன்றிக்கே, கோயில்கள்தோறும் நித்யஸந்நிஹிதனாவது: தான் இப்படித் தனிமைப்படாநிற்க நான் உதவப்பெறுகிறிலேன்" என்று இவர் பீதராக, தனக்குப்பரிவருள்ளபடியையும், பரிவரில்லையேயாகிலும் தன்னை ஒருவரால் நலியவொண்ணாதபடியான ஸாமர்த்யத்தையுங் காட்டியருளக்கண்டு பயந்தீர்ந்து த்ருப்தராய் முடிக்கிறார்.

## பன்னீராயிரப்படி.

மூன்றாந்திருவாய்மொழியில், அவனுடைய நிஸ்ஸங்கஸுலபதையை யநுஸந்தித்து, இதரஸங்கநிவ்ருத்திபூர்வகமாகத் தாம் தத்விஷயத்திலே ஸக்தரானபடியை அநுஸந்தித்தவர், அவன் ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக இந்த விபூதியிலே தன் போக்யதையையும் ஸௌகுமார்யத்தையும் பாராதே ஆஸுரப்ரக்ருதிகளும் அந்யபரருமான திரள்களுக்குநடுவே அஸஹாயனாய்வந்து வர்த்திக்கிற இதுக்குஅஞ்சி; அவனுடைய அதிஶயித போக்யதையையும், விரோதிநிரஸநோத்யுக்தமான ஆயுதவத்தையையும், ஸஹாயாந்தரராஹித்யத்தையும், க்ஷணகாலம் காணாதொழியிலும் கல்பமாம்படி அச்சத்தை விளைக்கும்படி ஆபிரூப்யாதிஶயத்தையும், ஆயாஸஸஹமல்லாத ஸௌகுமார்யத்தையும், ரமணீய விக்ரஹனாய்வைத்து விரோதிநிரஸநார்த்தமாக வ்யாபரிக்கும்படியையும், கிஞ்சித்காராநுகுணமான ஶ்ரிய:பதித்வத்தையும், அஶேஷஜநஸம்ஶ்லேஷ ஸ்வபாவத்தையும், அதிஶயிதஜ்ஞாநர்க்கும் அறியவரியவாகாரத்தையும், அத்யந்தவிலக்ஷணபுருஷரும் ஸேவிக்கும்படியான அதிஶயிதஶக்தியோகத்தையும் அநுஸந்தித்து, ஏவம்ப்ரகாரவிஶிஷ்டனானவன் தன்னழகையும் மார்த்தவத்தையும் பாராதே ப்ரதிகூலபூயிஷ்டமான ஸம்ஸாரத்திலே அஸஹாயனாய்வர்த்திக்கிறவளவிலே அடிமைசெய்யப் பெற்றிலோமென்று தளர்ந்தவர், அவன் தன்னுடைய ஆஶ்ரிதஸாமக்ர்யத்தையும் அதிஶயிதஶக்தியையுங் காட்டக்கண்டு ஸமாஹிதராயுகந்து தலைக்கட்டுகிறார்.

## இருபத்துநாலாயிரப்படி.

மூன்றாந் திருவாய்மொழியில், கீழில் திருவாய்மொழியில் பத்தாம்பாட்டிலே - "ஓர்கோலநீல நன்னெடுங்குன்றம்வருவதொப்பான்" என்று வடிவழகை யநுஸந்தித்த வாறே தாம் பட்டக்லேசத்தைமறந்து, "இவ்வடிவோடே ஸம்ஸாரத்திலேசிலர் அர்த்தித் ததுவே வ்யாஜமாகத் தனியே வந்தவதரித்து உதவாநிற்கும்; சத்ருக்களும், மத்யஸ்த ரும், ப்ரயோஜநாந்தரபரருமாய்ப் பரிவுடையாரொருவருமின்றிக்கே யிருக்கிற ஸம்ஸா ரத்திலே, அர்த்திகளுடைய அபேக்ஷிதங்களைப் பூரிக்கைக்காக ஸம்ஸாரிஸஜாதீயனாய், சிலர்க்கு பரதந்த்ரனாயும், அவதாரத்தில் பிற்பாடர்க்கும் கோயில்களிலும் க்ருஹங்களி லும் ஸந்நிஹிதனாயும் வர்த்திக்கிற இவனுடைய ஸௌகுமார்யம் அறிந்து பரியக்கடவா ரொருவருமில்லை; நானும் உதவப்பெறுகிறிலேன்" என்று அவன் தனிமைக்கு வெறுத்து ஸீதராக, "'நமக்குப் பரிவரில்லை' என்று ஐயப்படவேண்டா, முமுக்ஷுக்களும் முக்த ரும் நித்யஸித்தரும் நமக்குப் பரிகையே யாத்ரையாயிருக்குமவர்களன்றோ? நமக்குத் தான் சிலர் பரியவேண்டியோ இருக்கிறது" என்று ஸர்வேஸ்வரன் தன் சக்திகளைக் காட்டி ஸமாதாநம்பண்ண, ஸமாஹிதராய் ஹ்ருஷ்டராகிறார். "ஸர்வேஸ்வரனுக்குப் பரிகைக்குத் தமக்குக் கூட்டாவார் இல்லையென்று தன் தனிமைக்கு வெறுக்கிறார்" என் றுஞ் சொல்லுவர்கள். நித்யஸூரிகள் பகவதநுபவத்திலே அந்யபரர்; ஸம்ஸாரிகள் சப்தாதிவிஷயங்களிலே அந்யபரராதல், தங்களுக்காக அவனையும் புக்கிலக்காக்குதல் செய்வர்கள்; ஆகையாலே, பரிகைக்குத் தமக்கொரு துணையன்றிக்கே யிருக்கிற தனி மைக்கு வெறுக்கிறார். சேஷவஸ்துவுக்கு "சேஷியே ரக்ஷகன்" என்னும் வெளிச் சிறப்பு அறிவுக்கு முதலடி; சேஷவஸ்துவாகில், சேஷிக்கு அதிசயத்தை விளைத்துத் தன் ஸ்வரூபம் பெறுமதாகையாலே, "அவன்ரக்ஷ்யன், நாம் ரக்ஷகர்" என்னுமளவும் செல்லவறிகை - உள்ளபடி ஸ்வரூபத்தை யுணருகையாவது.

## ஈடு—முப்பத்தாறாயிரப்படி.

கீழில் திருவாய்மொழியில், பத்தாம்பாட்டிலே - "ஓர்கோலநீலநன்னெடுங் குன்றம் வருவதொப்பான்" என்று வடிவழகை யநுஸந்தித்தவாறே, தாம் பட்ட க்லே சத்தை மறந்து, "இவ்வடிவோடே ஸம்ஸாரத்திலே தனியேவந்து அவதரித்துஉலாவாநிற் கும், சத்ருக்களும், மத்யஸ்த்தரும், ப்ரயோஜநாந்தரபரருமாய் இவனுக்குப்பரிவுடையார் ஒருவருமின்றிக்கேயிருக்கிற ஸம்ஸாரத்திலே, அர்த்திகளுடைய அபேக்ஷிதங்களைப் பூரிக் கைக்காக ஸம்ஸாரிஸஜாதீயனாய், சிலர்க்குப் பரதந்த்ரனாயும் † (சிலர்அர்த்தித்ததுவே வ்யாஜமாக,) அவதாரத்துக்குப் பிற்பட்டார்க்குக் கோயில்களிலும் க்ருஹங்களிலும் ஸந்நிஹிதனாயும் வர்த்திக்கிற இவனுடைய ஸௌகுமார்யம் அறிந்து பரியக்கடவாரொருத் தருமில்லை; நானும் உதவப்பெறுகிறிலேன்" என்று அவன்தனிமைக்கு வெறுத்து ஸீத

அங்குமிங்கும் ப்ரவேசம்:—கீழே ஆத்மாத்மீயங்களிலே நசையற்றபடியைச் சொல்லி, இதிலே "அவனுக்குப் பரிவரில்லை" என்று து:கப்படுகிறதுக்கு ப்ரஸக்தி ஏதென்ன - கீழில் திரு வாய்மொழியில் இத்யாதி. "என்மனம்சூழவருவாரே" என்றத்தைப்பற்ற - ஸம்ஸாரத்திலே இத் யாதி. "ஞானவர்யாவரும் - வானவர்" என்றத்தைப்பற்ற - சத்ருக்களும் இத்யாதி த்ரயம். "கோளூ ரகத்தும்புளிங்குடியும்" என்றத்தைப்பற்ற - கோயில்களிலும் இத்யாதி. "கைகளையாரத்தொழக் காணேன்" என்றத்தைப்பற்ற - நானும் உதவப்பெறுகிறிலேன் என்றது. "கலக்கமில்லா" இத்

† குண்டலிதம் "இவ்வடிவோடே" என்பதற்கு அடுத்து முன் இருப்பின் நலம்.

ராக; "'நமக்குப்பரிவரில்லை' என்று பயப்படவேண்டா, முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யஸித்தரும் நமக்குப் பரிகையே யாத்ரையாயிருக்குமவர்களன்றோ ? நமக்குத்தான் வேறே சிலர் பரியவேண்டியிருந்ததோ?" என்று ஸர்வேஶ்வரன் தன் ஸர்வஶக்தித்வத்தைக்காட்டி ஸமாதாநம்பண்ண, ஸமாஹிதராய் ஹ்ருஷ்டராகிறார். "ஸர்வேஶ்வரனுக்குப் பரிகைக்குத் தமக்குக்கூட்டாவாரில்லையென்று தம் தனிமைக்கு வெறுக்கிறார்' என்றும் சொல்லுவர்கள். 'நித்யஸூரிகள் ஹகவதநுபவத்திலே அந்யபரர்; ஸம்ஸாரிகள் ஶப்தாதிகளிலேஅந்யபரர் : ப்ரஹ்மேஶாநாதிகள், தங்களுக்காக 'நீணகர்நீளெரிவைத்தருளாய்' என்று அவனை அம்புக்கிலக்காக்குதல், ஏவித்தேவைகொள்ளுதல் செய்வர்கள்: ஆகையாலே, பரிகைக்குத் தமக்கொருதுணையில்லை" என்று தம்தனிமைக்கு வெறுக்கிறார். ஶேஷவஸ்துவுக்கு "ஶேஷியே ரக்ஷகன்" என்னும் வெளிச்சிறப்பு அறிவுக்கு முதலடி ; ஶேஷவஸ்துவாகில், ஶேஷிக்கு அதிஶயத்தைவிளைத்துத் தன்ஸ்வரூபசித்தியாகையாலே, "அவன்ரக்ஷ்யன், நாம் ரக்ஷகர்" என்னுமளவும் செல்லவறிகை-ஸ்வரூபத்தை உள்ளபடி உணருகையாவது.

---

## முதற் பாட்டு.

அங்குமிங்கும் வானவர்தானவர்யாவரும்
எங்கும்இனையையென்று உன்னையறியகிலாதலற்றி
அங்கஞ்சேரும்பூமகள்மண்மகள்ஆய்மகள்
சங்குசக்கரக்கையவனென்பர் சரணமே.

**ஆ.**—*ஸ்வர்க்காதிலோகங்களிலும், இந்தலோகத்திலும், மற்றுமெங்கும் வர்த்திக்கிற தேவதானவ ப்ரப்ருதி ஸமஸ்தாத்மாக்களும், ஏவம்பூதனென்று உன்னை உள்ளபடியறியாதே, லக்ஷ்மீ பூமி நீளாநாயகனாய், ஶங்கசக்ரதரனாய், பரமப்ராப்யனாயிருந்த உன்னைத் தங்களுக்கு ப்ராப்யமான க்ஷுத்ரைஶ்வர்யத்துக்கு உபாயமென்பர் ; ஆதலால், எனக்கு அவர்கள் துணையல்லரென்கிறார்.*

*ஒ.—முதற்பாட்டில், ஸம்ஸாரத்தில் விலக்ஷணரோடு அவிலக்ஷணரோடு வாசியின்றிக்கே, உன்னுடைய ஸௌகுமார்யத்தை யநுஸந்தித்து, உனக்குப் பரிவரின்றிக்கே உன்னைத் தந்தாமுக்கு இஷ்டப்ராப்திஸாதநமென்றேயிருப்பரென்று ஐஶ்வர்யார்த்திகளை இகழ்கிறார்.*

[*அங்குமென்று தொடங்கி*] - மேலில் லோகங்களிலும் இந்த லோகத்திலும் மற்றும் எல்லாலோகங்களிலுமுண்டான அநுகூலரான தேவர்கள் ப்ரதிகூலரான அஸுர

---

*யாதியைப்பற்ற - முமுக்ஷுக்களும் இத்யாதி. "மாகடல்தன்னைக்கடைந்தானை" என்றதைப் பற்ற - ஸர்வஶக்தித்வத்தை என்றது. "தாளும்தோளும்கைகளையார" இத்யாதியைப்பற்ற ஸங்கத்யந்தரம் - ஸர்வேஶ்வரனுக்கு இத்யாதி. துணையில்லையென்கிறதென், நித்யஸூரிகள்முதலானோர் இல்லையோவென்ன - நித்யஸூரிகள் இத்யாதி. தேவை - கார்யம். ரக்ஷகனைக்கண்டால் ஸ்வாபேக்ஷிதங்களை அர்த்திக்குமதொழிய, பரியத்தேடுகிறதென் ? என்ன - ஶேஷவஸ்துவுக்கு இத்யாதி. சரமாவதியேதென்ன - ஶேஷவஸ்துவாகில் இத்யாதி. இத்திருவாய்மொழி "ஆழ்வாருடைய திருப்பல்லாண்டு" என்று அருளிச்செய்வர்.*

ரர்கள் மற்றும் இரண்டு வகையுமான மநுஷ்யாதிகளெல்லாம் இப்படி நிரதிஶயபோக்ய னென்று உன்னையறியாதே உன்படியைச் சொல்லுகிறாராக ஏதேனுமொருபடியைச் சொல்லிக்கதறி. [அங்கம்சேரும் இத்யாதி]- இத்தால் ஸௌகுமார்யத்தையும் அழகை யுஞ் சொல்லுகிறது.

ப.—முதற்பாட்டில், உன்னுடைய நிரதிஶயபோக்யதையை அறியாதே, உன்ஶக்தியோகத்தையேசொல்லி அநுகூல ப்ரதிகூல விபாகமற அபிமதஸாதனமென்று நிற்பர்களென்கிறார்.

அங்கும் - ஊர்த்வலோகங்களிலும், இங்கும் - பூமியிலும், எங்கும் - (பாதாளாதிகளான) ஸமஸ்தப்ரதேசங்களிலும், வானவர் — (அநுகூலரான) தேவர்களும், தானவர் - (ப்ரதிகூலரான) அஸுரர்களும், யாவரும் - (ததாவிதரான) மநுஷ்யாதிகளுமெல்லாம், உன்னை - (அநுபாவ்ய மஹிஷ்யாதிவிஶிஷ்டனான) உன்னை, இனையை - இவ்வித போக்யன், என்று - என்று, அறியகிலாது - அறியமாட்டாதே, அலற்றி - (ரக்ஷகத்வைகாந்தமான ஸர்வஶக்தியோகாதிகளைச்சொல்லிக் கூப்பிட்டு, பூமகள்- புஷ்பபரிமளம் வடிவுகொண்டாற் போலேயிருக்கிற லக்ஷ்மியும், மண்மகள் - (கந்தவதியாகையாலே போக்யதையேவடிவான) பூமியும், (அவ்வளவேயன்றியே), ஆய்மகள் - (ஆபிஜாத்யாதிக்யத்தையுடைய) நீளையும், (ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளிலேயகப்பட்டு), அங்கம்- திருமேனியை, சேரும் - பிரியாமல்பொருந்தி அநுபவிக்கும்படியாய், சங்குசக்கரம் - (அநுபாவ்யரான) ஆழ்வார்களை, கையவன் - கையிலேயுடையவனாயிருக்கிற இவன், (போக்யபூதனென்று அநுபவியாதே), (புருஷகாரபூர்த்தியையு முடையவனாகையாலே), ஶரணம் - அபீஷ்டஃபல ஸாதநதன், என்பர் - என்னுநிற்பர்கள். ப்ரதிகூலரான அஸுரவர்க்கத்தைப்பற்றவும் ஶேஷித்வம் ஸாதாரணமாகையாலே, ஸ்வாபீஷ்டஸிதத்யர்த்தமான ஶரண்யத்வமும் உண்டென்றுகருத்து. ப்ரயோஜநாந்தரபரரானவர்களும், இவனுடைய ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளை அநுஸந்தித்துப் பரிவராகப்பெற்றதில்லை யென்று வெறுத்தாராயிற்று.

ஈ.—முதற்பாட்டில், அவன் ஸௌகுமார்யத்தை அநுஸந்தித்துப் பரிகையன்றிக்கே, அவனைத் தங்களுக்கு இஷ்டப்ராப்திஸாதந மென்றிருப்பார்களென்று ஐஶ்வர்யார்த்திகளை க்ஷேபிக்கிறார்.

[அங்குமிங்கும்] - மேலில் லோகங்களிலும், பூமியிலும். [எங்கும்] - அநுக்தமான பாதாளங்களிலும். [வானவர்] - அநுகூலர்கள். [தானவர்]-ப்ரதிகூலரான அஸுரர்கள். [யாவரும்] - இரண்டுவகையுமான மநுஷ்யாதிகளும். [இனையையென்று உன்னை] - உன்னை இனையையென்று-ஸர்வஶேஷியான உன்னை இப்படிப்பட்டாயென்று: நிரதிஶய ஸௌகுமார்யயுக்த னென்று. இவர் நெஞ்சில் அவன் ஸௌகுமார்யமேயாயிற்று உறைத்திருப்பது. கருமுகைமாலையைப்போலேயிறே இவர் நினைத்திருப்பது. [அறியகிலாது] - அறியாதே. பரிய அறியாமைக்கு, அநுகூலரான தேவர்களோடு, ப்ரதிகூலரான அஸுரர்களோடு, இரண்டும்கலசின மநுஷ்யரோடு வாசியில்லை. அவனைப்பரியக்கண்டவர்கள்எல்லாரும் என்றிருக்கிறாராயிற்று இவர். [அலற்றி] - "பஹுவுஜஹ:" "ஸஹஸ்ரஶீர்ஷ:" என்று, உன்னுடைய ரக்ஷகத்வத்துக்கு உடலான வசநங்களைக் கதறுநிற்பர்கள். உன்னை ரக்ஷ்யனென்றறியார்கள். [அங்கம்சேரும் இத்யாதி]—இதுக்கு

மேல் ஸௌகுமார்யத்தையும் அழகையும் சொல்லுகிறது: [பூமகள் மண்மகளாய் மகள் - அங்கஞ்சேரும்] - அவனைபாஶ்ரயிக்கைக்கு புருஷகாரமாகப் பிராட்டிமார் உண்டென்பர்கள். "நகஶ்சிந்நாபராத்யதி" என்பாரும், "குற்றத்தையுணருகிற தென்? பொறுக்குமித்தனையன்றோ?" என்பாரும், முதலிலே குற்றங்காண வொண்ணாத படி ஸ்வஹோக்யதையை முன்னிடுவாரும் அங்கேயுண்டென்பர்கள். "வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்றமங்கையும் பல்லாண்டு" என்று அச்சேர்த்திக்கு மங்களாஶாஸநம் பண்ணுவாரில்லை. [சங்குசக்கரக் கையவன்] - கையுந்திருவாழியுமான அழகை யநுஷவிக்க இழிவாரில்லை. நம்பிரோஹிகளைத் துணிக்கைக்குக் கையிலே தவ்யாயுதங் களையுடையவனென்பர்கள். "வடிவார்சோதி வலத்துறையும்" என்று அச்சேர்த்திக்கு மங்களாஶாஸநம் பண்ணவேண்டியிறேயிருப்பது. [என்பர்-சரணமே] - அஶிமதஸாதந மென்பர்கள். அஶிமதமென்றறிவாரில்லை; ஸுகுமாரமான விஷயமென்றறிவாரில்லை. முந்தானையேற்றல், எதிரிகளம்புக்கு இலக்காக்குதல் செய்யுமித்தனை.

ஈடு.—முதற்பாட்டு. இதில், முதற்பாட்டில், உன் ஸௌகுமார்யத்தை யறிந்து பரிகையன்றிக்கே, தங்களுக்குஇஷ்டப்ராப்திஸாதநமென்றுஇருப்பர்களென்று ஐஶ்வர்யார்த்திகளை க்ஷேபிக்கிறார்.

[அங்குமிங்கும் இத்யாதி]-உபரிதநலோகங்களிலும், பூமியிலும். [எங்கும்]- அநுக்தமான பாதாளாதிகளிலும் [வானவர்]-அநுகூலர். [தானவர்] - ப்ரதிகூலர். [யாவரும்] - இரண்டுவகையுமான மநுஷ்யாதிகளும். [இனையையென்றுஉன்னை] - உன்னை இனையையென்று - ஸர்வஶேஷியான உன்னை, இப்படிப்பட்டாயென்று - நிரதிஶய ஸௌகுமார்யயுக்தனென்று. இவர் நெஞ்சில் அவன் ஸௌகுமார்யமே யாயிற்று உறைத்திருப்பது. கருமுகை மாலைபோலேயிருக்கிற உன்படியறியாதே. [அறிய கிலாது] - அறியாதே பரிய அறியாமைக்கு, அநுகூலரான தேவர்களோடு, ப்ரதிகூல ரான அஸுரர்களோடு, இவ்விரண்டுங்கூடின மநுஷ்யரோடு வாசியில்லை. அவனைப் பரியக்கண்டவர்கள்எல்லாரு மென்றிருக்கிறாராயிற்று இவர். [அலற்றி]- † "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்." (யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்) ‡ "பராஸ்ய ஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச" (பராஸ்யஶக்திர்விவிதைவஶ்ருயதே ஸ்வாபாவிகீ

முதற்பாட்டு.—அங்கும் இத்யாதி. "இனையையென்று - அறியகிலாது - சரணம - என பர்" என்றவற்றைக் கடாக்ஷித்து அவதாரிகை - உன் ஸௌகுமார்யத்தை இத்யாதி.

"எங்கும்" என்றது - பாதாளாதிவாஸிகளான தானவரென்றபடி. விவரணம் - நிரதிஶய இத்யாதி. "இனையை" என்றது - ஸாமாந்யமாயிருக்க, "ஸௌகுமார்யயுக்தன்" என்று சொல் லுமோவென்ன, புத்திஸ்த்தமாகையாலே சொல்லுமென்கிறார் - இவர்நெஞ்சில் இத்யாதி. "இனை யை, அறியகிலாது" என்கிற இரண்டையுங்கூட்டி ஶாவம் - கருமுகை இத்யாதி. ப்ரஸக்தஸ்யஹி ப்ரதிஷேத:, ப்ரதிகூலரான தாநவர்க்குப் பரிய யோக்யதையுண்டோ? வெறுக்கிறதென்? என்ன,- த்ருஷ்டாந்தார்த்தமென்கிறார் - பரிய அறியாமைக்கு இத்யாதி. அதாவது - ப்ரதிகூலரானவர்கள் பரிய அறியாதாப்போலே, அநுகூலரும் பரிய அறியார்களென்றபடி. "விதித: ஸ ஹி தர்மஜ்ஞ: ஶரணாகதவத்ஸல:" த்யாதிப்படியே வஸ்துதத்யா பரியக்கண்டவர்களென்று பரிஹாராந்தரம் - அவனைப்பரிய இத்யாதி. வஸ்துஸ்த்திதியறிந்து ஆஶ்ரயித்தமை - ப

† முண்டகோபநிஷத் - 1, 1. ‡ ஶ்வேதாஶ்வதரோபநிஷத்- 6.

ஜ்ஞாநபலக்ரியாச) என்று, தங்களுடைய ரக்ஷணத்துக்குஉடலான வசநங்களைக் கதறு நிற்பர்கள். உன்னை ரக்ஷ்யனென்று அறியார்கள். [அங்கஞ்சேரும் இத்யாதி] - இதுக்கு மேல் ஸௌகுமார்யத்தையும் அழகையுஞ்சொல்லுகிறது:—[பூமகள் மண்மகளாய்மகள் - அங்கஞ்சேரும்] - அவனையாஶ்ரயிக்கைக்குப் புருஷகாரமாகப் பிராட்டிமாருண்டேன் பர்கள். †"நகஶ்சிந்நாபராத்யதி" (நகஶ்சிந்நாபராத்யதி) என்பாரும். "குற்றத்தை யுணருகிறதேன்? பொறுக்குமித்தனையன்றோ?" என்பாரும், முதலிலே குற்றங்காணுதபடி ஸ்வபோக்யதையை முன்னிடுவாரும் அங்கேஉண்டேன்பர்கள். "வடிவாய்நின்வல மார்பினில் வாழ்கின்றமங்கையும்பல்லாண்டு" என்று அச்சேர்த்திக்கு மங்களாஶாஸநம் பண்ணுவாரில்லை. [சங்குசக்கரக்கையவன்] - கையுந்திருவாழியுமான அழகை அநு ஸவிக்கைக்கு இழிவாரில்லை. நம் விரோதியைத் துண்டிக்கைக்குக் கையிலே திவ்யாயு தங்களையுடையவ னேன்பர். "வடிவார்சோதிவலத்துறையும் சுடராழியும்பல்லாண்டு" என்னவேண்டியிருக்குமே இவர்களுக்கு. [என்பர்சரணமே] - (சரணம் - என்பர்) அபிமதஸாதநம் என்பர் அபிமதமேன்றறிவாரில்லை - ஸௌகுமாரவிஷயமேன்றறிவா ரில்லை; முந்தானையேற்றல், எதிரிகளம்புக்கு இலக்காக்குதல் செய்வர்கள். (க)

## இரண்டாம் பாட்டு.

சரணமாகிய நான்மறைநூல்களுஞ்சாராதே
மரணந்தோற்றம் வான்பிணிமூப்பென்றுஇவைமாய்த்தோம்
கரணப்பல்படை பற்றறவோடுங்கனலாழி
அரணத்திண்படையேந்திய ஈசற்குஆளாயே.

களிலே கண்டுகொள்வது. "அலற்றி" என்றதுக்கு - அக்ரமமாக ஸ்தோத்ரம்பண்ணியென்றதே "கதறுநிற்பர்கள்" என்றது, ஆழ்வார்க்குஅஸஹ்யமென்னுமிடம் தோற்றுகைக்காக. பின்னை எது செய்யவேணுமென்ன; ஸௌகுமார்யத்தை அநுஸந்தித்துப்பரியவேணும், அதுசெய்கிறார்களில்லை யென்கிறார் - உன்னைரக்ஷ்யனேன்று இத்யாதி. புஷ்பஹாஸஸுகுமாரயைகையாலே நிரதிஶய ஸௌ குமார்ய ஸௌந்தர்யயுக்தையான பிராட்டிமுதலானார்சேரும் திருமேனியென்கையாலே - இவ னுடைய ஸௌந்தர்யமும் ஸௌகுமார்யமும் ஸித்தமென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார்- இதுக்குமேல் இத்யாதி. அவனை ரக்ஷகனென்றிருக்குமவர்கள், பிராட்டிமாரை ப்ரதிபத்திபண் ணும் ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்-அவனை இத்யாதி. புருஷகரிக்கும் ப்ரகாரமெப்படியென்ன . நகஶ்சித் இத்யாதி. ஸ்வபோக்யதையைமுன்னிடுவாரும் என்றவிடத்திலே -‡"[illegible]" என்கிற ஶ்லோகம் அநுஸந்தேயம். அவர்களுடைய ப்ரதிபத்தியை அச்சீகரிக்கும் இவ ருடைய ஸாவத்தை அருளிச்செய்கிறார் - வடிவாய் இத்யாதி. இப்பதத்தை ப்ரயோகிக்கிறவ ருடைய ஹார்த்தஸாவம் - கையும் இத்யாதி. ஆனால் தாம் எப்படியிருப்பர்? என்ன - வடிவார் சோதி இத்யாதி. விவரணம் - ஸௌகுமாரவிஷயம் இத்யாதி. ஸாதநமென்றுசெய்வதேதென்ன - முந்தானையேற்றல் இத்யாதி. இத்தால் - த்விவிதைஶ்வர்யகாமரையும் சொல்லுகிறது. 'அங்குமிங் கும்-எங்கும்வானவர்தானவர் - யாவரும் - உன்னை-இனையையென்று - அறியகிலாதலற்றி - பூமகள் மண்மகள்ஆய்மகள் - அங்கஞ்சேரும் - சங்குசக்கரக்கையவன் - சரணம் - என்பர்' இத்யந்வய:. (க)

† ரா-யுத். 116, 44. ‡ ஸ்தோத்ரரத்நம் -8.

ஆ.—(சரணமாகிய) - இப்படி ஐஸ்வர்யார்த்திகள் துணையல்லரென்று அருளிச்செய்து, கைவல்யார்த்திகளும் தமக்குத் துணையல்லரென்கிறார். ஐஸ்வர்யோபாய விதாயக ஶாஸ்த்ரங்களை விட்டு மோக்ஷோபாயவிதாயக ஶாஸ்த்ரத்தை அவலம்பித்தாலும், அப்ராக்ருத ஸ்வாஸாதாரண திவ்யரூபவிஶிஷ்டனாய், ஶங்கசக்ரதராநான பரமபுருஷனை ஶாஸ்த்ரமாக அநுஸந்தித்து, இக்த்ரியஜயத்தைப்பண்ணி, ஸம்ஸார நிவ்ருத்திமாத்ரத்தை ப்ராப்யமாகப்பற்றினீர் மித்தனையிறே; அவன் திருவடிகளை ப்ராப்யமாகப் பற்றிற்றிலீரிறே; ஆகலால், நீங்களும் எனக்குத் துணையல்லீரென்கிறார். தம்மோடு அவர்களுக்குஉண்டான ஐஸ்வர்ய வைராக்யரூப ஸாம்யத்தாலே கைவல்யார்த்திகளை அஸ்மச்சப்தத்தாலே வ்யபதேஶிக்கிறார்.

ஓ.—இரண்டாம்பாட்டில், கைவல்யபுருஷார்த்தநிஷ்டரை யிகழ்கிறார்.

[சரணமென்று தொடங்கி] - "த்ரைகுண்யவிஷயாவேதா:" என்கிறபடியாலே ஐஸ்வர்யபுருஷார்த்தத்தையும் புருஷார்த்தத்துக்கு ஸாதநத்தையும் ப்ரதிபாதிக்கிற வேதபாகங்களைவிட்டு மோக்ஷோபதேஶம்பண்ணுகிற வேதாந்தபாகத்திற் சொல்லுகிறபடியே ஜந்மமரணங்களும், ப்ரபலமான வ்யாதிகளும், ஜரைதொடக்கமான ஷட்பாவவிகாரங்களையும் மாய்த்தவித்தனையிறே, நாம் செய்ததென்று முமுக்ஷுக்களை க்ஷேபிக்கிறது. [கரணப்பல்படை யென்றுதொடங்கி] - உபகரணங்களையுடையராய் வந்த ஶத்ருஸேனை நிஶ்ஶேஷமாக ஓடும்படி கனலாநிற்பதுஞ்செய்து ஆஶ்ரிதர்க்கு அரணாய் அவர்களையொருநாளும் விடக்கடவதன்றிக்கேயிருக்கிற திருவாழியாழ்வானாகிற திவ்யாயுதத்தை ஏந்ினஸர்வேஶ்வரனுக்கு அடிமையாயே. 'கரணப்பல் படையென்றது' - கரணக்ராமம் விஷயங்களில் நின்றும் பற்றறவோடும்படி கனலாநின்றுள்ள திருவாழியென்றுமாம்.

ப.—அநந்தரம், விரோதிநிரஸக பரிகரவானானவனைக்கொண்டு கேவலம் ஜராமரணாதிநிவ்ருத்தியைப் பண்ணிக்கொள்ளுகிற கேவலரை, ஶேஷத்வ ஸாமர்த்யத்தாலே உடன்பட்டுநின்று க்ஷேபிக்கிறார்.

(த்ரைகுண்யபுருஷர்களுக்கு), சரணமாகிய - புகலிடமாய், (ஐஸ்வர்யதத்ஸாதந ப்ரதிபாதகமான), நால் - நாலுவகைப்பட்டதாயிருக்கிற, மறை - வேதங்களாகிற, நூல்களும் - ஶாஸ்த்ரங்களை, சாராதே - ("வேதவாதரதா:பார்த நாந்யதஸ்தீதிவாதிந:" என்று மேலெழத்தோன்றுகிற அர்த்தங்களை) ப்ரதிபத்திபண்ணப்பற்றாதே, (நிஸ்த்ரைகுண்யராய்க்கொண்டு, முமுக்ஷுக்களாய்), கரணம் - வாயோபகரணங்களையுடைத்தாய், பல் - பஹுவிதமான, படை - ஶத்ருஸேனைகள், பற்று - பற்று, அற - அற, ஓடும் - ஓடும்படி, கனல் - தீப்தமாகிற, ஆழி - திருவாழியாழ்வானாகிற, அரணம் - ரக்ஷகமாய், திண் - [illegible]மான, படை - ஆயுதத்தை, ஏந்திய - உடையனை, ஈசற்கு - ஸர்வேஶ்வரனுக்கு, ஆளாய் - ஶேஷபூதராய்வைத்து, (ஶேஷத்வாநுரூபமான அதிஶயத்தை விளைத்துப் பரியாதே), மரணம் - மரணம், தோற்றம்-ஜந்மம், வான் - பெரிய, பிணி - வ்யாதி, மூப்பு - ஜரை, என்று - என்றுசொல்லுகிற, இவை - ஷட்பாவவிகாரங்களை, மாய்த்தோம் - கழித்துக்கொண்டுவிட்டோ மித்தனையிறே. தாஸ்யம் ஸ்வரூபமாயிருக்க, ஸ்வார்த்தபரராகை அநுரூபமோ? என்றுகருத்து.

இ—இரண்டாம்பாட்டில், அஸ்திரத்வாதி தோஷயுக்தமான ஐஸ்வர்யத்தைவிட்டு, நித்யாத்மாநுபவ காமரான கைவல்யநிஷ்டரை யிகழ்கிறார்.

[சரணமாகிய இத்யாதி] - "த்ரைகுண்யவிஷயாவேதா:" என்கிறபடியாலே ஐஶ்வர்யதத்ஸாதநங்களை ப்ரதிபாதிக்கிற பூர்வபாகத்தில் இழியாதே, மோக்ஷத்தையுபதேசிக்கிற வேதாந்தபாகத்திலே புகுராநின்று, ஸர்வேஶ்வரனையாஶ்ரயித்து, ஶரீரஸம்பந்தத்தை மாய்த்தோமித்தனையன்றோ நாமும் செய்தது? என்று க்ஷேபிக்கிறது. [சரணமாகிய]-ஐஶ்வர்யதத்ஸாதந விஷயஜ்ஞாநஸாதநமான. [நான்மறை நூல்கள்]- சதுர்வேதமாகிற ஶாஸ்த்ரங்கள். நூல் - ஶாஸ்திரம். "வேதஶாஸ்த்ராவிரோதிநா" என்னக்கடவதிறே. [மரணம் தோற்றம்]-ஜந்மமரணங்கள். [வான்பிணி மூப்பென்றிவை மாய்த்தோம்] - ப்ரபல வ்யாதி, ஜரை தொடக்கமான ஷட்பாவவிகாரங்களை மறுவ விடாதபடி கழித்துக்கொண்டவித்தனையிறே நாமும் செய்தது. பூஜாவசநம் க்ஷேபத்திலே. [காணப்பல்படை யித்யாதி] - உபகரணங்களையுடைய பலவகைப்பட்ட ஶத்ருஸேனை நிஶ்ஶேஷமாக ஓடும்படி ஜ்வலியாநின்ற திருவாழிபென்னுதல்; கரணக்ராமம் விஷயங்களினின்றும் நிஶ்ஶேஷமாகப்பற்றற ஓடும்படி கனலாநின்றிருந் துள்ள திருவாழியென்னுதல். [அரணத்திண்படை] - ஆஶ்ரிதர்க்கு அரணுப், ஶத்ருக்களுக்கு ஸஹிக்கவொண்ணுகதாயிருக்கை. [திண்படை] - ஈஶ்வரன் விடிலும் ஆஶ்ரிதரை விடாதவென்றுமாம். [ஏந்திய ஈசற்கு] - திருவாழியையேந்துகையாலே ஸர்வேஶ்வரனானவனுக்கு. [ஆளாயே] — இவர்கள் ஆளாகையாவதென்? என்னில்,—பகவத்ப்ராப்தி காமகோபாதி, பகவத்பஜநமும் அந்திமஸ்ம்ருதியும் உண்டாகைபாலே சொல்லுகிறது. ஆளாயே - மரணந்தோற்றம் வான்பிணி மூப்பென்றுஇவை மாய்த்தோம்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. "ஐஶ்வர்யம்போலே நிலைநில்லாததோன்றன்றே இது: நித்யமாயிருப்பதோன்றன்றோ?" என்று ஆத்மலாபத்துக்காக உபாஸிக்கிற கேவலர் வந்துதோற்ற, அவர்களை க்ஷேபிக்கிறார்.

[சரணம்இத்யாதி] - †"த்ரைகுண்யவிஷயாவேதா:" (த்ரைகுண்யவிஷயா வேதா:)என்கிறபடியேஐஶ்வர்யதத்ஸாதநங்களை ப்ரதிபாதிக்கிறபூர்வபாகத்தில்இழியாதே, அத்தைவிட்டுமோக்ஷத்தை உபதேசிக்கிறவேதாந்தபாகத்திலே புகுராநின்று, ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயித்து, ஶரீரஸம்பந்தத்தை மாய்த்தோமித்தனையன்றோ நாம் செய்தது! என்று க்ஷேபிக்கிறது. [சரணமாகிய] - ஐஶ்வர்ய தத்ஸாதந விஷயஜ்ஞாந ஸாதநமான. [நான்மறை நூல்கள்] - சதுர்வேதமாகிற ஶாஸ்தரங்கள். நூல் - ஶாஸ்த்ரம். நூலென்று - பிரித்து, ஆகமாதிகளைச் சொல்லுகிறதென்றுமாம். நான்மறையாகிற ஶாஸ்த்ரமென்றே அருளிச் செய்வது. ‡"வேதஶாஸ்த்ராவிரோதிநா"(வேதஶாஸ்த்ராவிரோதிநா) என்னக்கடவதிறே. [மரணம்தோற்றம்] - ஜந்மமரணங்கள், ப்ரபலவ்யாதி, ஜரைதொடக்கமான ஷட்பாவ

---

இரண்டாம்பாட்டு.—சரணமாகிய இத்யாதி. "மரணம் தோற்றம் வான்பிணிமூப்பென்றிவை மாய்த்தோம்" என்றத்தைக் கடாக்ஷித்துஅவதாரிகை - ஐஶ்வர்யம்போலே இத்யாதி.

இப்பாட்டுக்கெல்லாம் பாவம் - த்ரைகுண்ய இத்யாதி. தத்ஸாதநமென்றது - ஜ்யோதிஷ்டோமாதிகளை. "நான்மறைநூல்" என்றது - பூர்வபாகத்தை. வேதாந்தபாகத்திலே நின்று என்றது - அர்த்தாத்ஸித்தம். நாம் செய்ததென்றது - நீங்கள் செய்ததென்றபடி. நான்மறைநூல் சரணமாகையாவதென்? என்ன - ஐஶ்வர்ய இத்யாதி. தத்ஸாதநமென்றது- ஜ்யோதிஷ்டோமாதிகளை; ஐஶ்வர்யவிஷய தத்ஸாதநவிஷய ஜ்ஞாநங்களுக்கு ஸாதநமான என்றபடி. "வேதமான ஶாஸ்த்ரம்" என்ற இடமுண்டோவென்ன - வேதஶாஸ்த்ர இத்யாதி.

† ஸ்ரீபகவத்கீதை-2, 45.

விகாரங்களை மறுவலிடாதபடி கழித்துக்கொண்டவித்தனையிறே நாமும் செய்தது. பூஜா வசநம் க்ஷேபத்திலே. [கரணப்பல்படை இத்யாதி] - உபகரணங்களையுடைத்தாய்ப் பல வகைப்பட்ட ஶத்ருஸேநை நிஶ்ஶேஷமாக ஓடும்படி ஜ்வலியாநின்ற திருவாழியென்னுதல்; கரணக்ராமங்களை விஷயங்களினின்றும் நிஶ்ஶேஷமாகப் பற்றற ஓடும்படி கனலாநின்றிருந்துள்ள திருவாழியென்னுதல். [அரணத்திண்படை] - ஆஶ்ரிதர்க்கு அரணாய், ஶத்ருக்களாலே பேதிக்கவொண்ணாதபடியா யிருக்கை. [திண்படை] - ஈஶ்வரன்விடிலும் ஆஶ்ரிதரை விடாதவென்றுமாம். [ஏந்தியவீசற்கு] - திருவாழியை ஏந்துகையாலே ஸர்வேஶ்வரனானவனுக்கு. [ஆளாயே] - அவர்கள் ஆளாகையாவதேன் என்னில்? - ஭கவத்ப்ராப்திகாமநோபாதி ஭கவத்பஜநமும் அந்திமஸ்ம்ருதியுமுண்டாகையாலே சொல்லுகிறது. ஆளாயே - மரணந்தோற்றம் வான் பிணி மூப்பென்றிவைமாய்த்தோம். (உ)

---

## மூன்றாம் பாட்டு.

---

ஆளுமாளார் ஆழியும்சங்கும்சுமப்பார்தாம்
வாளும்வில்லுங்கொண்டு பின்செல்வார்மற்றில்லை
தாளுந்தோளும் கைகளையாரத்தொழக்காணேன்
நாளும்நாளும்நாடுவேன் அடியேன்ஞாலத்தே.

*ஆ.—(ஆளுமாளார்) - தன்தனிமையினுடைய ப்ரஸங்கத்தாலே அவன் தனிமையை நினைத்து, "அவன்தனிமைக்கு உதவப்பெற்றிலேன்" என்று சொல்லிக்கொண்டு தம்முடைய தனிமையைச் சொல்லுகிறார்.*

*மாரீசநிரஸநார்த்தமாகவாதல், கரதூஷணநிரஸநார்த்தமாகவாதல் எழுந்தருளும்போது, துணையின்றியே, தன்னுடைய ஶங்கசக்ராதி திவ்யாயுதங்களைத் தானே சுமந்துகொண்டுபோகாநிற்கும்; வாளும் வில்லுங்கொண்டு பின்செல்வார்மற்றில்லை; தானெழுந்தருளும்போது அவனுடைய திவ்யாயுதங்களைச் சுமந்துகொண்டு, அவன் திருவடிகளையும் திருத்தோள்களையும் என்னுடைய கைகளினுடைய விடாய்தீரும்படி தொழக் காணப் பெறுகிறிலேன்! "காந்தாரே விஜநே விஸ்ருஷ்டா பாலேவ கந்யா விலலாப ஸீதா" என்றபிராட்டியைப்போலே, அவனைக் காணவேணுமென்று ஆசைப்*

---

"க்ருஷ்டஂ யதோ ராவணேந ஸஸ வேதஸாஸ்த்ராவிரோதிநா । யஸ்தர்கேணாநுஸந்தத்தே ஸ ஧ர்மஂ வேத நேதரஃ". ஆர்ஷம் - ரிஷித்ருஷ்டபுராணாதிகம். ஧ர்மோபதேஶம் - மநுவசநம். மாய்த்துக்கொண்டிகோளென்னாதே, "மாய்த்தோம்" என்று - பூஜ்யோக்தியேதென்ன - பூஜா வசநம் இத்யாதி. "மாய்த்தோம்" என்றதிலேநோக்கு. உபகரணங்களாவன - ரத கஜாதிகள். த்விதியார்த்தத்துக்கு, "கரணம்" என்று - இந்த்ரியங்களாய், "பல்படை" என்று - ஸமூஹமாய், இந்த்ரியக்ராமங்களென்றபடி. ஆளாகையாவதேன்னேன்னில் என்றது - ஭கவதநுபவத்தைவிட்டு ஸ்வாநுபவத்ருப்தர் ஆளாகையாவதென்? என்னில் என்றபடி. 'சரணமாகிய நான்மறைநூல்களும் சாராதே - கரணப்பல்படை' என்றுதொடங்கி, ஆளாய்க்கொண்டு 'மரணம் - தோற்றம்' என்று தொடங்கி, மாய்த்தோம் இத்யந்வய:. ஆழியாகிற அரணத்தின் படையென்றபடி. (உ)

பட்டு, நாளும்நாளும் இந்தலோகமாகிற காட்டிலே தனியே கிடந்து கூப்பிடாநின்றே னென்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், ஆரேனும் ஸ்வப்ரயோஜநபரராய், அர்யித்ததுவே வ்யாஜமாகக்கொண்டு, விறறியாதே தன்னோடே எதிரிடவல்ல ஸம்ஸாரத்திலேவந்து வர்த்தியாநிற்கும்; அங்குத்தைக்கு ரக்ஷகமாக நான் உதவப்பெறுகிறிலே னென்கிறார்.

[ஆளுமென்றுதொடங்கி]-திருவாழியையும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் வருந்தி யரிக்கிறார், அதிஸுகுமாரரான தாம். [வாளும்வில்லுங்கொண்டு பின்செல்வார்மற் றில்லை] - திருவாழியையும் பாஞ்சஜந்யத்தையும் ஒருநாளும் கைவிடாராகில் மற்றை திவ்யாயுதங்களைக்கொண்டு பின்செல்வாரின்றிக்கே யொழிந்தால் அதில் என்னையாகி லும்வவுகிறில ரென்றுகருத்து. [தாளுந்தோளுமென்று மேலுக்கு] - தனக்குரக்ஷகமாகப் பின்னே திரிந்து தன்னைப்பெறாதே யுறுவிக்கிடக்கிற கைகள் பூர்ணமாம்படி தான் நடந்தருளும்போதை பரிஸ்பந்தத்தாலே மிகவும் அழகிதானதிருவடிகளையும் திருத் தோள்களையும் தொழுலாம்படி காணப்பெறுகிறிலேன்: நான் என்றுமொக்கஸம்ஸாரத்திலே தேடாநிற்பன்.

ப.—அநந்தரம், விரோதிப்ரசுரமான ஜகத்தில் ஆஸ்ரிதரக்ஷணார்த்த மாக ப்ரவ்ருத்தனான அவனுடைய ஸஹாயாந்தராஹித்யத்தை அநுஸந்தித்து, நான் அடிமைசெய்யும்படி காணப்பெறுகிறிலேனென்று வெறுக்கிறார்.

ஞாலத்து – (ராவணாதிர்யோதநஸமரான ப்ரதிகூலர் வர்த்திக்கிற) ஜகத் திலே, ஆளும் - (பரிவராயிருப்பார்) ஆளும், ஆளார் - (வேணுமென்று) அங்கீகரிக்கி றிலர்; தாம் - (அடுத்துப் பார்க்கப்பொறாத ஸௌகுமார்யத்தையுடைய) தாம், யும் - திருவாழியையும், சங்கும் - திருச்சங்கையும், சுமப்பார் - (மலையெடுத்தாற் போலே) வஹிப்பர், (அப்படியானாலும்), வாளும் - நந்தகத்தையும், வில்லும் - ஸ்ரீசார்ங் கத்தையும், கொண்டு-கொண்டு, ("வ்ரூஷதஸாயநாஷாணி" என்கிற இளையபெரு மாளைப்போலே), பின்செல்வார் - பின்செல்லுகைக்கு, மற்று - வேறொருவர், இல்லை - இல்லையாயிராநின்றது; (நான் பின்செல்லவென்றுநினைக்கிலும்), தாளும் - ("தேதோ தஜ ஜாதிரூ" என்னும்படி நடக்கிற) திருவடிகளையும், தோளும் - ("ஸாஸோஹயாவே ஷூஸூ:" என்று நிழல்செய்கிற திருத்தோள்களையும், கைகளை - என்கைகளைக் கொண்டு, ஆர - பூர்ணமாக, தொழ - தொழுது அடிமைசெய்கைக்கு, காணேன்-(என் கண்ணாலே) காணப்பெறுகிறிலேன்; அடியேன் - (சேஷத்வமே ஸ்வரூபமான) நான், (சேஷிக்கு அதிசயஜநகமான சேஷவ்ருத்தியே ஜீவநமாகையாலே, பசியர் சோறு தேடுமாபோலே), நாளும் நாளும் - நாள்தோறும், நாடுவன் - தேடாநின்றேன்.

இ.- மூன்றாம்பாட்டில், அவர்களைவிட்டுத் தம்முடையஆர்த்தியிலேயிழிகிறார். ப்ரயோஜநாந்தரபரர்க்காகத் தன்வாசியறியாதே எதிரிடவல்ல ஸம்ஸாரத்திலே தனியே வர்த்தியாநிற்கும்; அங்குத்தைக்குரக்ஷகமாக நான்உதவப்பெறுகிறிலேனென்று இன் னாதாகிறார்.

[ஆளுமாளார்] - உபயவிபூதியிலும் பரிகைக்கு ஓர் ஆளில்லை. தனியே யொருத்தரை யாளவேணு மென்றிருக்கிறார். நித்யஸூரிகள் ஸமவநுபவத்திலே அந்யபரர்; ஸம்ஸாரிகள் ஸப்தாதிவிஷயபரர். [ஆழியும்சங்கும்சுமப்பார்தாம்] - ஆஜ

ரணமான திவ்யாயுதங்கள், அவன்ஸௌகுமார்யத்தாலே மலையெடுத்தாற்போலே சுமையாய்த் தோற்றுகிறது இவர்க்கு. எதிரிகளுக்கு அஸ்த்ரமாய் அநுபவிப்பார்க்கு ஆபரணமாயிருக்கிறவை, ஸௌகுமார்யத்தை யநுஸந்தித்த இவர்க்கு மலையாயிருக்கிறது. [தாம்] - தம்மைப் பார்த்துக்கொள்ள வேண்டாவோ ? 'எப்போதும்கைகழலா நேமியானன்றே, நிரூபகங்களானவை சுமையோ?' என்ன, அதுதானே செய்கிறது ? [வாளும்வில்லுங்கொண்டு பின்செல்வார்மற்றில்லை] - வாளும்வில்லுங்கொண்டுபின்னே செல்லுகைக்கு இளையபெருமாள்மாத்திர மொருவருண்டாளுலோ? "ஆளுமாளார், சுமப்பார்தாம், பின்செல்வார்மற்றில்லை" என்கிறது— பரிவரானநீர்இவற்றுக்கு ஆளன்றேவென்று தம்மை யேவுகைக்காக. [தாளும்தோளும்] - நடக்கும்போது நடைச்சக்ரவத்து பிடிக்கவேண்டும்படியாயிற்று மாறியிடுந் திருவடிகளிருப்பது. "ஸுவ்ருத்தௌ புஜௌ" என்னக் கடவதிறே: அத்தையும், வீசுந்தோள்களையும். [கைகளை யார] - தன்னைப்பிரிந்துஉருவிக்கிடக்கிற கைகளை, ஆர - வயிறாரஉண்ண என்பாரைப் போலே. [தொழக்காணேன்] - தொழக்காணப்பெறுகிறிலேன் ; தொழுகையென்றும் பரிகையென்றும் பர்யாயமாயிற்றுஇவர்க்கு.ப்ரேமப்ரபத்தாலே - எனக்கன்று, அவனுக்கென்றிறே சொல்லுகிறது. தொழுகையும், நம: என்கையும், பர்யாயமிறே. [நாளும் நாளும்நாடுவன்] - அவன் தனிமையை யநுஸந்தித்து, "அவனுக்கு என்வருகிறதோ?" என்று நாள்தோறும் ஆராயாநிற்பன். [நாளும்நாளும்] - ஸம்பந்தம் நித்யமாகில், தத்கார்யமான பரிவும் நித்யமாகக் கடவதிறே. [அடியேன்]-ஸ்வரூபஜ்ஞாநமுடையநான்: ரக்ஷிக்கதிரமயத்தை விளக்கை ரக்ஷவஸ்துவுக்கு ஸ்வரூபமென்றறிந்த நான். [ஞாலத்தே] - பரமபதத்திலேயிருந்து அஸ்தாநேபய ஶங்கைபண்ணுகிறேறே ? அஸ்த்ரப்ரயோகம் பண்ணுவார், நாகபாஶத்தையிட்டுக் கட்டுவார், அழைத்துவைத்து மல்லரையிட்டு வஞ்சிக்கத்தேடுவார், பொய்யாஸநமிடுவாராகிற தேசத்திலேயிறே வர்த்திக்கிறது.

௫௫.—மூன்றும்பாட்டு. ப்ரயோஜநாந்தரபரர்க்காகத் தன்வாசியறியாதே எதிரிடவல்ல ஸம்ஸாரத்திலே தனியே வர்த்தியா நிற்கும்; அங்குத்தைக்கு ரக்ஷையாக நான் உதவப்பெறுகிறிலேனென்று இன்னாதாகிறார்.

[ஆளுமாளார்] - விபூதித்வயத்திலும் பரிகைக்கு ஆளில்லை; தனியே ஒருவரை ஆளவேணுமென்றிருக்கிறார். நித்யஸூரிகள் பகவதநுபவத்திலே அந்யபரர், ஸம்ஸாரிகள் ஶப்தாதிகளிலே அந்யபரர். [ஆழியும் சங்கும் சுமப்பார்தாம்] - ஆபரணமான திவ்யாயுதங்கள், அவன் ஸௌகுமார்யத்தாலே மலையெடுத்தாற் போலே சுமையாய்த் தோற்... அஸ்த்ரமாய் அநுபவிப்பார்க்கு ஆபரணமாயிருக்கிறவை.

மூன்றும்பாட்டு.—ஆளும் இத்யாதி. "ஞாலத்தே - ஆளுமாளார்" என்று தொடங்கி "தொழக்காணேன்" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை-ப்ரயோஜநாந்தர இத்யாதி. "தொழக்காணேன்" என்றத்தைப்பற்ற - நான் உதவப்பெறுகிறிலேன் என்றது.

உபயவிபூதியையும்ஆளாநிற்க, "ஆளுமாளார்" என்கிறதென் ? என்ன - விபூதித்வயத்திலும் இத்யாதி வாக்யத்வயம். இல்லாதபடி எப்படியென்ன - நித்யஸூரிகள் இத்யாதி வாக்யத்வயம். ஏந்தினர் என்னுதே, "சுமப்பார்" என்றதுக்கு பாவம் - ஆபரணமான இத்யாதி. ஆயுதங்கள் ஆபரணமானபடி எப்படியென்ன - எதிரிகளுக்கு இத்யாதி. "வாளும்வில்லுங்கொண்டு" என்

[தாம்] - தம்மைப் பார்த்துக்கொள்ளவேண்டாவோ. • எப்போதும் கைகழலா நேமியா னன்றோ, அவனுக்கு நிரூபகங்களான இவை சுமையோ? என்ன,—அது தான்செய்கிறது. [வாளும்வில்லுங்கொண்டு]- இளையபெருமாளைப்போலே ஒருவர் பின்னே கொடுசென்றாலா காதோ? "ஆளுமாளார், சுமப்பார்தாம், பின்செல்வார்மற்றில்லை" என்கிறது - "பரிவரான நீர் அவற்றுக்கன்றோ?" என்று தம்மை ஏவுவாராக. [தாளுந்தோளும்] - நடக்கும்போது நடைச்சக்ரவத்துப்பிடிக்கும்படியாயிற்று, மாறியிடும்திருவடிகளிருப்பது. "அக்ரதஃப்ரயயௌராமஃ" (அக்ரதஃப்ரயயௌராமஃ) என்னக்கடவதிறே. அத்தையும், வீசுதோள்களை யும். [கைகளையார] - "வயிறுரவுண்ண" என்பாரைப்போலே. [தொழக்காணேன்] - தொழுகையும், பரிகையும், பர்யாயம்போலேகாணும். தொழக்காணப் பெறுகிறிலேன். நமஸ்ஸப்தத்தால் - எனக்கன்று, அவனுக்கேன்றிறே சொல்லுகிறது. தொழுகையும், நமஃ என்கையும், பர்யாயமிறே. [நாளும்நாளும் நாடுவேன்] - அவன்தனிமையை அநுஸந்தித்து, "அவனுக்கு என்வருகிறதோ?" என்று நாள்தோறும் ஆராயாநிற்பன். ஸம்பந்தம் நித்யமா னால் தத்கார்யமான பரிவும் நித்யமாகக் கடவதிறே. [அடியேன்]- ஸ்வரூபஜ்ஞாநமுடைய நான்-ஶேஷிக்கு அதிஶயத்தை விளைக்கையே ஶேஷவஸ்துவுக்கு ஸ்வரூபமென்றறிந்த நான். [ஞாலத்தே] - பரமபதத்திலேயிருந்து அஸ்த்தாநேபயஶங்கை பண்ணுகிறேனோ? ப்ரஹ் மாஸ்த்ர ப்ரயோகம்பண்ணுவார், நாகபாசத்தையிட்டுக் கட்டுவார், அழைத்துவைத்து மல் லரையிட்டு வஞ்சிக்கத்தேடுவார், பொய்யாஸநமிடுவாராகிற தேசத்திலே வர்த்தியாநின்றால் நான் அஞ்சாதேசெய்வதேன்? (ங)

---

*இறதுக்கு அவதாரிகை - எப்போதும் இத்யாதி. "பின்செல்வார்மற்றில்லை" என்று வயிறெரி கைக்கு, பின்செல்வாருண்டோ? என்ன - இளையபெருமாளை இத்யாதி. ஏவுவாராக என்றது - தம்மை ஏவுகைக்காக என்றபடி. தாள்களையும் தோள்களையும் தொழுகைக்கு, அப்படி ஆகர்ஷகமா யிருக்குமோவென்ன-நடக்கும்போது இத்யாதி. நடைச்சக்ரவத்துப் பிடிக்கையாவது - கதிஸார்வ பௌமன்வந்தானென்றுவிருதுபிடிக்கை.மாறியிடும்திருவடிகள் ஆகர்ஷகமென்னுமதுக்குப்ரமாணம்- அக்ரதஃஇத்யாதி."அக்ரதஃப்ரயயௌராமஸ்ஸீதாமத்யே ஸுமத்யமா'(ஸ்ரீ ரா-அயோத்யா3,28) இத்யாதி. "கைகளையார" என்றது-கைகளார என்றபடி. ஐகாரம் - அவ்யயம். "ஆர" என்றதுக்கு அர்த்தம் வயிறார இத்யாதி. பரியக்காணேனென்னாதே,"தொழக்காணேன்"என்பானென்?என்ன- தொழுகையும் இத்யாதி. தொழுகையும் பரிகையும் பர்யாயமானபடி எப்படியென்ன - நமஸ்ஸப் தத்தால் இத்யாதி. அதாவது - அவனுக்கு பரதந்த்ரமானால் அவனுக்கு அதிசயத்தைப்பண்ணுகை ஸ்வரூபமாகையாலே, நமஸ்ஸப்தத்தாலே பரிவைச் சொல்லுகிறதென்றபடி. தொழுகைதான் நமஸ்கார வாசியோவென்ன - தொழுகையும் இத்யாதி. நாள்தோறும் ஆராயவேணுமோ? என்ன - ஸம்பந்தம் இத்யாதி. விவரணம் - ஶேஷிக்கு இத்யாதி. "ஞாலத்தே" என்றதுக்கு பாவம் - பரம பதத்திலே இத்யாதி வாக்யத்வயம். (ங)*

## நான்காம் பாட்டு.

ஞாலம்போனகம்பற்றி ஓர்முற்றுருவுருவாகி
ஆலம்பேரிலை அன்னவசஞ்செய்யுமம்மானே!
காலம்பேர்வதுஓர்காரிருளூழியொத்துளதால் உன்
கோலங்காரெழில் காணலுற்றுஆழுங்கொடியேற்கே.

**ஆ.**—(ஞாலம்) - ஓர் முற்றுருவுருவாய், அந்தப்பிள்ளைத்தனத்தாலே ஸர்வலோகங்களையும் அமுதுசெய்து, பெரியவெள்ளத்திலே சிறியதோராலிலையிலே, யசோதைப்பிராட்டியைப்போலேயிருப்பாளொருதாயாருமின்றியே, தனியே கண்வளர்ந்தருளுகிறதசையில் துணையாயிருக்கப்பெறாமையாலும், உன்வடிவழகைக்காண ஆசைப்பட்டுப்பெறாமையாலும், அபாரமான துக்கார்ணவத்திலே நிமக்நனாய்க்கிடக்கிற எனக்கு ஒருக்ஷணமானது, அந்தகாரமயமான ராத்ரி யுகமாய்ச் செல்லுகிறதென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், ஸப்ரமாணமாம்படி ஆலிலையிலே ரக்ஷகரின்றிக்கே தனியே கண்வளர்ந்தருளுகிறபடியை யநுஸந்தித்து, "இவனுக்குஎன்வருக்கிறதோ?" என்று பீதராகிறார்.

[ஞாலமென்று தொடங்கி] - அத்யந்தஸுகுமாரமான சிறுவடிவைக்கொண்டு ஜகத்தையெல்லாம் வயிற்றிலே புகவைத்து சிறிய ஆலிலையிலே இடம் வலங்கொள்ளும் ஸ்வபாவனான பெரியோனே! [காலமென்று தொடங்கி] - ஒருக்ஷணத்தில் நின்றும் ஒருக்ஷணத்தில் பேரும் ஸந்திமாத்ரம் மஹாந்தகாரமான கல்பத்தோடு ஒவ்வாநின்றது, உனக்கு ரக்ஷாசிந்தை பண்ணுகைக்காகக் கறுத்த ஒளியையுடைய உன் அழகியவடிவைக் காண ஆசைப்பட்டுப்பெறாதே மிகவும் நோவுபடுகிற மஹாபாபியான எனக்கு.

ப.—அநந்தரம், அஸஹாயனான வடதளசாயியினுடைய ஆஸஹாய்யத்துக்கு என்னப்ரமாதம்வருகிறதோவென்று அஞ்சிக்கலங்கின ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்.

ஓர் - அத்விதீயமாய், முற்றூ - அதிமுக்தமான, உருவாகி - வடிவையுடையையாய், ஞாலம் - மஹாஜகத்தை, போனகம் - போஜநமாக, பற்றி - அமுதுசெய்து, ஆல் - ஆலென்று, பேர் - பேர்சொல்லலாமளவானது, இலை - ஓரிலையிலே, அன்னவசஞ்செய்யும் - இடம்வலங்கொண்டு கண்வளர்ந்தருளுகிற, அம்மானே - ஸ்வாமியானவனே! (அந்தப்ரளயத்திலே என்னப்ரமாதம் வருகிறதோவென்று), கார் - காளமேகத்தின், எழில் - எழிலையுடைத்தான, உன்-, கோலம் - வடிவழகை, காணலுற்று - காணவேணுமென்று நிர்ப்பந்தித்து, ஆழும் - (அச்சத்தாலே) அழுங்காநிற்கும்படியான, கொடியேற்கு - கொடியபாபத்தையுடைய எனக்கு, பேர்வது - ஒருக்ஷணத்தில்நின்றும் க்ஷணாந்தரத்திலேபேருகிற, காலம் - காலாவகாசமானது, ஓர் - அத்விதீயமான, காரிருள் - காடாந்தகாரத்தையுடைத்தான, ஊழியொத்து - கல்பம்போலே, உளது - ஆகாநின்றது. உன்னுடைய அகடிதகடநாஸாமர்த்யமான ஶக்தியோகமும் ஸர்வரக்ஷகத்வபூர்த்தியும் அச்சத்துக்குஉறுப்பாமென்று கருத்து.

இ.—நாலாம்பாட்டில், "ஞாலத்தே - நாளும் நாளும் நாடுவன்" என்றார்; அந்த ஸம்ஸாரத்திலே வடதளஶயநத்திலே பிறந்த ப்ரமாதத்தையநுஸந்தித்து பீத

ராகிறுர். நீர் இங்ஙனே க்லேசப்படுகிறதென்? ப்ரளயாபத்திலே ஸர்வரக்ஷகனனவ னன்றே நான்?என்ன; ஸர்வரக்ஷகவஸ்துவோ ப்ரளயத்திலேயகப்பட்டதென்று ஶீதரா கிறுரென்றுமாம்.

[ஞாலம் போனகம்பற்றி] - பரப்பையுடைத்தான பூமியைத் திருவயிற் றிலேவைத்து. "ஸாத்மிக்கும், ஸாத்மியாது" என்றறியாதே, இத்தைச்செய்வதே! "வெண்ணெயும் ஸாத்மியாது" என்றிருக்குமவரிறே. [ஓர் முற்றுருவு ருவாகி] - அதுக் கடி, இவனுடைய ஶைஶவமென்கிறுர். வெண்ணெயமுது செய்தருளுவதற்கும் கீழே யிறே பிஞ்சிலே. யசோதாஸ்தநந்யபத்துக்கும் கீழாயிறேயிருப்பது இந்தமௌக்த்யம். ப்ரளயாபத்திலே வரையாதே ரக்ஷித்தஸர்வரக்ஷகத்வமும், அவடிதகடநாஸாமர்த்யமும் இவர்நெஞ்சிலே பட்டதில்லை; ஸௌகுமார்யமே யாயிற்று இவர்க்குத் தோற்றியிருப்பது. அங்கு ஒருதொட்டிலிலே கிடக்கப்பெற்றது; இங்கு, ஒருபவனை ஆலிலையிலேயாயிற் றுக் கண்வளர்ந்தருளுகிறது. [பேரிலை] - ஆலிலையென்று பேர்மாத்ரமானத்திலே யென்னுதல்; விபரீதலக்ஷணையாய், சிற்றிலையென்னுதல். [அன்னவசம் செய்யும்] - உணவுக்கிடாக இடம்வலம் கொள்ளும். "கிடக்கில் தொட்டில்கிழியவுதைத்திடும்" என் கிறபடியே பண்ணும் வ்யாபாரமடைய, இதிலேபண்ணுகின்றுன். தனக்கு ஸாத்மியாத பூமியை அமுதுசெய்கையும், "ஸாத்மியாது" என்றறியாத முக்த்யுகையும், ப்ரளயத் திலே அல்பாவகாஶமான ஆலிலையிலே கண்வளர்ந்தருளுகையும், அதிலே வ்யாபரிக் கையும், இதெல்லாம் பயஸ்தாநமாயாயிற்றிருக்கிறது இவர்க்கு. [அம்மானே] - ஸர்வ ரக்ஷகனனவனே! ஒரு காபுருஷனுக்கு வந்ததொன்றன்றிக்கே ஸர்வரக்ஷகனனவனுக்கு வந்தப்ரமாதமென்று இதுவும் பயஸ்தாநமாகிறது இவர்க்கு. [காலம்பேர்வதோர் காரி ருள் ஊழியொத்துளதால்] - உன்தனிமையை யநுஸந்திக்க, ஒருக்ஷணத்தினின்றும் க்ஷணாந்தரத்திலே பேரும் ஸங்க்யாமாத்ரம், மஹாந்தகாரமான கல்பமாய்க்கொண்டு நெடுகாநின்றது எனக்கு. [உன்கோலங்காரெழில் காணலுற்று] - உன்னுடைய கறுத்த எழிலான கோலமென்னுதல்; மேகத்தினுடைய எழில்போலேயிருந்துள்ள அழகென் னுதல். [காணலுற்றழுங் கொடியேற்கே] - மங்களாஶாஸநம் பண்ணுகைக்கு உன்னு டைய அழகிய வடிவைக்காணஆசைப்பட்டுப் பெறுதே மிகவும் நோவுபடுகிற மஹாபாபி யான எனக்கு. ஒருகாலத்திலே முடியாதே, நித்யமாயிருப்பதொரு பயம் அநுவர்த்திக் கும்படியான பாபத்தைப்பண்ணினேன். ஸம்ஸாரபயம் அவன்காலிலே குனியத்தீரும்; "ரக்ஷகனுக்கு என்வருகிறதோ?" என்கிற பயத்துக்கு முடிவில்லை.

ஈடு.—நாலாம்பாட்டு. இவர் இப்படி அஞ்சினவாறே, ப்ரளயாபத்தினின் றும் ஜகத்தையெடுத்து வயிற்றிலேவைத்து நோக்கினவனன்றே நான்? நீர் நமக்கு பயப் பட வேண்டாகாணுமென்று தான் ஸர்வரக்ஷகனயிருக்கிறவிருப்பைக் காட்டினன்; ஸர்வரக்ஷகமான வஸ்துவாகாதே ப்ரளயத்திலே அகப்படப்புக்கதென்று அதுக்கும் அஞ்சுகிறுர்.

---

நால்ாம்பாட்டு.—ஞாலம் இத்யாதி. "ஆலம்பேரிலையன்னவசம்செய்யுமம்மானே" என் றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - இவர் இப்படி இத்யாதி.

[ஞாலம் போனகம்பற்றி] - "இது நமக்கு ஸாத்மியாது" என்றறியாதே, பூமிப்பரப்பையன்றே வயிற்றிலே யெடுத்துவைத்தது? "வெண்ணெயும் ஸாத்மியாது" என்றிறே இவரிருப்பது? [ஓர்முற்றுருவுருவாகி] - †ஒருகோறுட்டிலே தெறித்தால் மற்றைக் கோறுட்டாலே பால்பாயும் பருவமாயிற்றுப் பருவம். யசோதாஸ்தநந்தயத்துக்கும் கீழாயிறேயிருப்பது, இந்த மௌக்த்யம். ப்ரளயாபத்திலே வரையாதே ரக்ஷித்தரக்ஷகத்வமும், அகடிதகடநாஸாமர்த்யமும் இவர்நெஞ்சில் படுகிற தில்லை; ஸௌகுமார்யமேயாயிற்று இவர்க்குத் தோற்றியிருக்கிறது. [ஆலம்பேரிலை] - அந்த ஒரு தொட்டிலிலே கிடக்கப்பெற்றது, இங்கு ஒருபவனை ஆலிலையிலேயாயிற்றுத் திருக்கண் வளர்ந்தருளுகிறது. [பேரிலை] - பேருகிற இலை : முகிழ்விரிகிற இலை. **"கதந்வயம் ஶிஶு: ஶேதே லோகே நாஶமுபாகதே | ஶாகாயாம் வடவ்ருக்ஷஸ்ய பல்லவேத்வதிவிஸ்மித:"** (கதந்வயம்ஶிஶுஶ்ஶேதே லோகேநாஶமுபாகதே | ஶாகாயாம்வடவ்ருக்ஷஸ்ய பல்லவேத்விதிவிஸ்மித:) † **"இளந்தளிரில் கண்வளர்ந்த"** என்கிற படியே. ஆலிலையென்று - ஒரு பேர் மாத்ரமென்னுதல், பெரிய இலையென்று விபரீதலக்ஷணையாய், சிற்றிலையென்றுதல். [அன்னவசஞ் செய்யும்] - உணவுக்கூடாகஇடம் வலங்கொள்ளும். யசோதைப்பிராட்டி தொட்டிலில் பண்ணும் வ்யாபாரமெல்லாம் பண்ணுமாயிற்று அதுக்குள்ளே. * கிடக்கில் தொட்டில் கிழியவுதைத்திடுமேதில். தனக்கு ஸாத்மியாதபூமியை அமுதுசெய்கையும், "ஸாத்மியாது" என்றறியாத முக்யனுகையும், ப்ரளயத்திலே அல்பாவகாசமான ஆலிலையிலே கண்வளர்ந்தருளுகையும், அதிலேகிடந்தவிடத்திற்கிடவாதே வ்யாபரிக்கையும், இதெல்லாம் ஹயஸ்த்தாநமாயிருக்கிறதாயிற்று இவர்க்கு. [அம்மானே] - ஸர்வரக்ஷகனுனவனே! ஒரு கா புருஷனுக்கு வந்ததோன்றன்றிக்கே ஸர்வரக்ஷகனுனவனுக்கு வந்ததென்று இதுவும் ஹயஸ்த்தாநமாகிறது இவர்க்கு. [காலம் இத்யாதி] - உன்தனிமையை அநுஸந்திக்க அநுஸந்திக்க, ஒரு க்ஷணத்தின்றும் க்ஷணாந்தரத்திலேபேருகிற நடுவில்ஸந்திமாத்ரம், மஹாந்தகாரமான கல்ப

---

"ஞாலத்தைப்போனகமாகப்பற்றி" என்றதுக்கு ஹாவம்-இதுநமக்கு இத்யாதி. போனகம்பற்றி - திருப்போனகமாக ஸ்வீகரித்து. "ஓர்" என்றதுக்கு ஹாவம் - ஒரு † கோறட்டிலே இத்யாதி. கோறடு - கபோலம். "ஓர்" என்றதுக்கு வ்யாவர்த்யம் - யசோதா இத்யாதி. ரக்ஷகத்வமும் அகடிதகடநாஸாமர்த்யமும் ஸங்க்ருத்திஹேதுவன்றோ? என்ன - ப்ரளயாபத்திலே இத்யாதி. "ஞாலம்போனகம்பற்றி" என்கையாலே - ரக்ஷகத்வமும், "ஆலம்பேரிலை" என்கையாலே - அகடிதகடநாஸாமர்த்யமும் தோற்றுகிறது. "ஆலம்பேரிலை" என்றத்தால் வ்யாவ்ருத்தி - அந்த ஒரு தொட்டில் இத்யாதி வாக்யத்வயம். "பேரிலை" என்றதுக்கு - மூன்றர்த்தம். ஆலந்தளிரிலேகண்வளர்ந்தானேயென்ன - **கதந்வயம்** இத்யாதி. "**கதந்வயம்ஶிஶுஶ்ஶேதே லோகேநாஶமுபாகதே | ஶாகாயாம்வடவ்ருக்ஷஸ்ய பல்லவேத்விதிவிஸ்மித:**". உணவுக்கீடாக - உண்டதுக்கீடாக. விவரணம் - யசோதைப் பிராட்டி இத்யாதி. இளந்தளிரில் கண்வளர்ந்த என்றது - திருமொழியில் "மஞ்சாடு" இத்யாதி. தொட்டிலில்பண்ணும் வ்யாபாரம்ஏதென்ன - கிடக்கில் இத்யாதி; பெரியாழ்வார் திருமொழி. தொட்டிலில்வளர்த்தினல் தொட்டில்கிழியும்படி உதையாநிற்குமென்றபடி. "ஞாலம்போனகம்" இத்யுக்தார்த்தத்தை நிகமிக்கிறார் தனக்கு ஸாத்மியாத இத்யாதி. "அம்மான்" என்றதுக்கு ஹாவம் - ஒரு காபுருஷனுக்கு இத்யாதி. "பேர்வதோர் - காலம் - காரிருளூழியொத்துளதால்" என்று அந்வயித்து அர்த்தம் - உன் தனிமையை இத்யாதி. "காரிருள்":

---

† கொறட்டிலே என்று சீயாரும்பதத்துக்குப் பாடம். கொடிற்றிலே என்று இருக்கலாமோ எனத்தோன்றுகின்றது.

மாய்க்கொண்டு நெடுகாநின்றது எனக்கு. [உன்கோலம் காரேழில்காணலுற்று] - உன்னுடைய கறுத்த எழிலான கோலமென்னுதல், மேகத்தினுடைய எழில் போலேஇருந்துள்ள அழகென்னுதல். [காணலுற்றுழுங்கொடியேற்கு] - மங்களாஸாஸநம் பண்ணுகைக்கு உன்னழகியவடிவைக்காணஆசைப்பட்டுப் பெறுதே நோவுபடுகிற மஹா பாபியான எனக்கு. ஸம்ஸாரஸயம் அவனை ஆஸ்ரயிக்கப்போம்; ஒருகாலத்திலும் முடியாதே நித்யமாயிருப்பதொரு ஸயம் அநுவர்த்திக்கும்படியான பாபத்தைப் பண்ணினேன். "ரக்ஷகனுக்குஎன்வருகிறதோ?" என்கிற ஸயத்துக்கு முடிவில்லையே. (௪)

## ஐந்தாம் பாட்டு.

கோடியார்மாடக் கோளூரகத்தும்புளிங்குடியும்
மடியாதின்னே நீதுயில்மேவிமகிழ்ந்தது தான்
அடியார்அல்லல் தவிர்த்தஅசைவோ? அன்றேல்இப்
படிதான்நீண்டுதாவிய அசைவோ?பணியாயே.

—(கொடியார்) - "அந்தஇழவுதீரவேணும்" என்று ஆஸ்ரிதர்க்கு ஆத்ம ஊரகம்பண்ணுகைக்குக் கொடிகட்டிக்கொண்டிருக்கிற திருக்கோளூரிலும் திருப்புளிங்குடியிலும் போய்ப் புக்கவிடத்திலே, தம்மைத்திருக்கண்ணாலே பார்த்தருளுதல், ஒருவார்த்தை யருளிச்செய்தல், ஒருதிவ்யசேஷ்டிதத்தைப்பண்ணுதல் செய்தருளாதே ஒருபடியே கண்வளரக்கண்டவாறே நீயொருபடியே கண்வளர்ந்தருளுகிறது ஆஸ்ரிதவிரோதி நிரஸநஜநித ஸ்ரமத்தாலேயோ? அன்றிக்கே, த்ரைலோக்ய விக்ரமணஜநித ஸ்ரமத்தாலேயோ? என்றுகொண்டு, இவனுக்குஒரு வ்யஸநமுண்டானதாக ஸங்கித்து வ்யஸநப்படுகிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், திருக்கோளூரிலும் திருப்புளிங்குடியிலும் கண்வளர்ந்தருகிறபடியை இவர் ஸயந்தீரக் காட்டியருளக்கண்டு சேஷ்டைகளைப்பண்ணாதே ஒருபடிப்படக் கண்வளர்ந்தருளி அத்தாலே இனியையாகைக்குக் காரணமென்? என்று தம்முடைய ஸபத்தாலே எம்பெருமானைக் கேட்கிறார்.

[மடியாது] - சோம்பாமையுமாம். [அடியாரென்றுதொடங்கி] - ஆஸ்ரிதர்க்காக அஸுரராக்ஷஸரோடேபிணங்கி அவர்களுடைய உஜ்ஜீவங்களைக் கெடுத்தவருத்

காரென்று - கறுப்பாய், மஹாந்தகாரமென்றபடி. முந்தின அர்த்தத்துக்கு, "கார்" என்று - கறுப்பாய், "எழில்" என்று - தேஜஸ்ஸாய், "கோலம்" என்று - விக்ரஹமாய், கறுத்ததேஜஸ்ஸையுடைய விக்ரஹமென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு "கார்" என்று - மேகமாய், "எழில்" என்று - அழகாய், "கோலம்" என்றும்-அழகாய், மேகத்தினுடைய அழகுபோலேயிருந்துள்ள அழகென்னுதல். "ஆழும்" என்கிற வர்த்தமாநார்த்தம் - ஸம்ஸார பயம் இத்யாதி வாக்யத்வயம். இது நித்யமாயிருக்குமோ? என்ன - ரக்ஷகனுக்கு இதயாதி. விக்ரஹவைலக்ஷண்யம் நித்யமாகையாலே பரிவும் நித்யமாயிருக்குமென்றபடி. 'ஞாலம் போனகம்' என்றுதொடங்கி, 'அம்மானே - உன் - காரெழில் - கோலம் - காணலுற் றுழும்கொடியேற்கு - பேர்வதோர் - காலம் - காரிருளூழியொத்துளதால்' இத்யந்வய:.
(௪)

தமோ? அன்றிக்கே, இப்பூமியை அதிஸுகுமாரமான வடிவோடே வளர்ந்தருளி அளந்த நோவோ? அருளிச் செய்தருளாய்!

ப.—அநந்தரம், திருக்கோளூரிலும் திருப்புளிங்குடியிலும் முசியாதே கண்வளர்ந்தருளுகிறது, ஆஸ்ரிதவிரோதிநிவர்த்தநத்தாலும் த்ரிவிக்ரமாபதாநத்தாலும் வந்த ஆயாஸமோ? என்கிறார்.

(விரோதிகளும்அறியலாம்படி), கொடி - கொடிகள், ஆர் - செறிந்த, மாடம் - மாடத்தையுடைய, கோளூர் - திருக்கோளூர்க்கு, அகத்தும் - உள்ளும், (பலவிடத்தில் படுக்கைபடுத்தது அலேச்சலின் மிகுதியென்று ஶங்கிக்கலாம்படி), புளிங்குடியும் - திருப்புளிங்குடியிலும், மடியாது - மீளாதே, இன்னே - (ஒருபடிப்பட) இப்படி, துயில் மேவி - கண்வளர்ந்தருளினவத்தாலே, நீ - நீ, மகிழ்ந்ததுதான் - உகட்புப்பிறந்திருக்கிறவிது, (ஆஶ்ரிதவிரோதிகளான ராவணாதிகளை நிரஸித்து), அடியார் - அவர்கள், அல்லல் - துக்கத்தை, தவிர்த்த - போக்கின, அசைவோ - அலேச்சலாலேயோ? அஃறேல் - அதல்லவாகில், இ - இந்த, படிதான் - பூமியை, நீண்டு - ஒருநாளே வளர்ந்து, தாவிய - அளந்துகொண்ட, அசைவோ - ஆயாஸமோ? (உன்திருமிடற்றோசையில் வாசியாலே நான் உன்ஆயாஸத்தின் மிகுதி யறிகைக்காகவும், நொந்தவிடம்அறிகைக்காகவும்), பணியாய் - அருளிச்செய்யவேணும். அளந்ததாளைப்பிடித்தல், எய்த்த தோளைப்பிடித்தல் செய்கையிலே இவர்க்குக் கருத்து.

ஈ.—அஞ்சாம்பாட்டில், ப்ரளயார்ணவத்திலே தனியே கண்வளர்ந்தருளின விடத்தில் ஶங்கை நிர்ப்பயமாய்ப் பரிவருண்டான திருக்கோளூர் திருப்புளிங்குடி தொடக்கமான இடங்களிலே கண்வளர்ந்தருளுகிறபடியை இவர் ஶங்காநிவ்ருத்திக்காகக் காட்டிக் கொடுக்க, 'அதுதானும் ஶங்காஹேது' என்கிறார்.

[கொடியார்மாடக் கோளூரகத்தும்] - கொடிமிக்க மாடங்களையுடைய திருக்கோளூரிலும், ஶத்ருக்கள்கிடந்தவிடம்அறிந்து அபிசரிக்கும்படி கொடிகட்டிக்கொண்டு கிடக்கவேணுமோ? கம்ஸஶங்கையத்தாலே பிறரறியாதபடி வளர்ந்தாற்போலே யிருக்கலாகாதோ? [புளிங்குடியும்] - இதுவும் ஒருஶங்காஹேது. பலவிடங்களிலே படுக்கை படுக்கிறது ஶ்ரமத்தின்மிகுதி யென்றிருக்கிறார். [மடியாது] - இடம்வலம்கொள்ளாதே - பாடோடும்படியாக வென்னுதல்; மடியென்று சோம்பாய், சோம்பாதேயென்னுதல். அதாகிறது - அவன் நமக்காகக் கிடக்கிறானென்றறிந்து பரிகைக்குஒருத்தரைப் பெற்றிலோமென்று கிடையிளகா தொழிகை. [இன்னே] - "கிடந்ததோர்கிடக்கை" என்னுமித்தனையொழிய, பாசுரமிடப் போகாதிருக்கை. [நீதுயில்மேவி மகிழ்ந்தது தான்] - அவிகாரியாயிருக்கிற நீ, ஒருபடியே கண்வளர்ந்தருளி, அத்தாலே இனிமையாகைக்குஹேதுவென்? இவன்முகத்தில் தெளிவுக்குஅடி முன்னேயொரு ஶ்ரமமுண்டாகையிறே. ஶ்ரமமுண்டாயிருப்பார்க்கு உறங்கவுறங்க முகம்தெளிந்துவரக் காண்கையாலே, இங்கும் இத்தெளிவுக்கடி ஶ்ரமமென்கிறார். [அடியாரல்லல்தவிர்த்த அசைவோ] - திருவடிகளிலே ஶரணம்புகுந்த இந்த்ராதிகளுக்காக ராவணாதிகளை யழியச்செய்து, அவர்கள் துக்கங்களைக்கெடுத்த இளைப்போ? [அன்றேல்] - அன்றிக்கே. [இப்படி இத்யாதி] - அன்றேபிறந்து அன்றேவளர்ந்து ஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டு காடுமோடையும் அளந்து கொள்ளுகையாலே திருவடிகள் நொந்தோ? [பணியாயே] - தோள்நொந்தோ, திருவடிகள் நொந்தோ, அருளிச்செய்யாய்! தோள்நொந்ததென்னில்

தோளைப்பிடிக்கவும், திருவடிகள் நொந்ததென்னில் திருவடிகளைப் பிடிக்கவும் அருளிச் செய்யாய். ஸாவஜ்ஞராய் அகவாயிலோடுகிறது அறிந்து அது செய்கையன்றியே "பணியாய்" என்கிறதென் என்னில்? சொல்லும்போதை ஸ்வரஸாதங்கொண்டு ஓடுகிற உடைமை யறிந்து டரிஹரிப்பாராக. உகந்தருளின நிலங்களிலும் செய்யமுடியாததில்லை, சொல்ல முடியாமை யிருக்கிறனத்தனையோ! என்றிருப்பாரிறே.

ஈடு—அஞ்சாம்பாட்டு. ப்ரளயார்ணவத்திலே தனியே கண்வளர்ந்தருளுகிறுனென்று பயப்பட்டவர் பயந்தீர, பரிவரும்உண்டாய், நிர்ப்பயமான திருக்கோளூர் திருப்புளிங்குடி தொடக்கமான இடங்களிலே கண்வளர்ந்தருளுகிறபடியைக் காட்டிக்கொடுக்க, அதுதானும் இவர்க்கு பயஹேதுவாயிற்று.

[கோடியார்மாடக் கோளூரகத்தும்] - கோடிமிக்க மாடங்களையுடைய திருக்கோளூரிலும்: ஶத்ருக்கள்கிடந்தவிடமறிந்து அபிசரிக்கும்படி கொடிகட்டிக்கொண்டு கிடக்கவேணுமோ? கொடிக்கு பயப்படவல்லார் இவரைப்போலில்லை. கம்ஸ ஹயத்தாலே ஒளித்து வளர்ந்தாற் போலே இருக்கலாகாதோ? இந்தப்பயமில்லையிறே கீழ்ப்பாட்டில், அநுகூலப்ரதிகூலவிஹாமமற ஸம்ஹ்ருதமாய்க் கிடக்கையாலே. [புளிங்குடியும்]- இதுவும் ஒருபயஹேது. பலவிடங்களிலும் படுக்கை படுக்கிறது ஶ்ரமத்தின்மிகுதி யென்றிருக்கிறுர். [மடியாது] - இடம்வலங்கொள்ளாதே என்னுதல்; மடியென்று - சோம்பாய், சோம்பாதே என்னுதல். அதாவது - நமக்காக இவன்கிடக்கிறுனென்றுஅறிந்து "பரிகைக்குஒருத்தரைப் பெற்றிலோம்"என்று இளகாதொழிகை. [இன்னே] - இப்படியே. "கிடந்த தோர்கிடக்கை" என்னுமித்தனையொழிய, பாசுரமிடப்போகாதிருக்கை. [நீ துயில்மேவி மகிழ்ந்ததுதான்] - * அவிகாரியாயிருக்கிற நீ ஒருபடியே கண்வளர்ந்தருளி, அத்தாலே இனியனுகைக்கு ஹேதுவென்? இவன்முகத்திலே தெளிவுண்டாயிருந்தது, அதுக்கடி முன்பே ஒருஶ்ரம முண்டாகையிறே என்றிருக்கிறுர்; ஶ்ரமமுடையார்க்கு உறங்கவுறங்க முகந் தெளிந்துவரக் காண்கையாலே. [அடியாரல்லல்தவிர்த்தஅசைவோ]-திருவடிகளிலே ஶரணம்புகுந்த இந்த்ராதிகளுக்காக ராவணுதிகளை அழியச்செய்து, அவர்களுடைய துக்கங்களைக் கெடுத்த இளைப்போ? [அன்றேல்] - அன்றியே. [இப்படிஇத்யாதி] - அன்றே பிறந்துஅன்றேவளர்ந்து ஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டு காடுமோடையும் அளந்து கொள்ளுகையாலே திருவடிகள்நொந்தோ? [பணியாயே]-தோள்நொந்தோ, திருவடிகள்

---

அஞ்சாம்பாட்டு - கோடியார் இத்யாதி. "கோளூரகத்தும்புளிங்குடியும் - துயில்மேவி மகிழ்ந்தது" என்றவற்றைக் கடாக்ஷித்து அவதாரிகை - ப்ரளயார்ணவத்திலே இத்யாதி.

"கொடியார்" என்று விசேஷிக்கிறவருடைய ஹார்த்தஹாவம் - ஶத்ருக்கள் இத்யாதி வாக்யத்வயம். "கொடியார்மாடம்" என்றதுக்கு ரஸோக்தி - கோடிக்கு இத்யாதி. கொடியேன்று - ஸ்த்ரீக்கும்பேர். கீழிற்பாட்டைப்பற்ற வாசியை அருளிச்செய்கிறுர் - இந்தப்பயம் இத்யாதி. இல்லாமைக்கு ஹேது அருளிச்செய்கிறுர் - அநுகூல இத்யாதி. இரண்டு திருப்பதியில் கண்வளர்ந்தத்தைச் சொல்லுகிறவருடைய ஹாவம்-இதுவும் இத்யாதி - அதெப்படியென்ன - பலவிடங்களிலும் இத்யாதி. இடம்வலங்கொள்ளாதே என்கிறவர்க்கு ஹாவம்-பாடேடாடிக்கிடப்பதே என்று விஷண்ணராகிறுரென்று. "சோம்பாதே" என்றதுக்கு ஹாவம் - அதாவது நமக்காக இத்யாதி. இளகாதொழிகையாவது - எழுந்திராதொழிகை யென்றபடி. இன்னபடி யென்று சொல்லுகிறதுக்கென்? என்ன - கிடந்ததோர் இத்யாதி. இனியனுகை நல்லதன்றோவென்ன - அதுக்குஹாவம் - இவன்முகத்திலே இத்யாதி. இது எங்கேகண்டோமென்ன - ஶ்ரமமுடையார்க்கு

நொந்தோ? அருளிச்செய்யாய்; தோள் நொந்ததென்னில் தோளைப்பிடிக்க, தாள்நொந்ததென்னில் தாளைப்பிடிக்கவும் அருளிச்செய்யவேணும். ஸ்வரஸாதங்கொண்டு அறியலாமென்று கேட்கிறார். உகந்தருளினவிடங்களிலும் செய்யமுடியாததில்லை: சொல்ல நினையாமலிருக்கிறது னித்தனையென்றிருக்கிறார். (ரு)

---

## ஆறாம் பாட்டு.

---

பணியாவமரர் பணிவும்பண்புந்தாமேயாம்
அணியாராழியுஞ்சங்கமும் ஏந்துமவர்காண்மின்
தணியாவெந்நோய் உலகில்தவிர்ப்பான் திருநீல
மணியார்மேனியோடு என்மனம்சூழவருவாரே.

*ஆ.*—(பணியாஅமரர்) - ஸ்வாஸ்ரித சதுர்முகாதி தேவர்களுக்கு ஸ்வேதர ஸகலஜநாஸிவந்த்யத்வ நிரதிஸயஐஸ்வர்ய ப்ரதனுய், ஸகலலோகதுலெவ நிரஸநார்த்தமாக ஸ்வாத்மவிஷேஷண ஸங்குசக்ராதி திவ்யாயுதயரனுய், நிரதிஸய ரமணீய நீலரத்நஸத்ருஸனுயிருந்த அவனை ஆசைப்பட்டுக்கிடீர் நான் இப்பாடுபடுகிறதென்கிறார்.

*ஒ.*—ஆறாம்பாட்டில், திருநாட்டிலே அயர்வறுமமரர்கள் பரியஎழுந்தருளியிருக்கிற ஸர்வேஸ்வரன்கிடீர் ஸமஸ்தாத்மாக்களுடைய தணியாவெந்நோய் தவிர்க்கைக்காக என்மனம் மறுகும்படி இவ்வுலகிலே வருகிறவன்! என்கிறார்.

[பணியாவமரரென்று தொடங்கி] - வேறுசிலரைப் பணிகைக்கு ஸம்பாவனையின்றிக்கேயிருக்கிற அயர்வறுமமரர்கள் பணிவுக்கும் ஜ்ஞாநாதிகுணங்களுக்கும் தாமே விஷயமாய்க்கொண்டு அழகுமிக்கிருந்துள்ள திருவாழியையும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் ஏந்துமவர்கிடீர்! [தணியாவென்று மேலுக்கு] - ஒருநாளும் முடியாத கொடிய துக்கங்களைத் தவிர்க்கைக்காக அழகியவடிவோடே இவ்வுலகத்திலே வருகிறவர்.

*ப.*—அநந்தரம், நித்யஸூரிகளுக்கு அநுபாவ்யமான நிரதிஸய போக்ய விக்ரஹத்தோடே ப்ரதிகூல ஹுயிஷ்டமான இஜ்ஜந்மத்தில் "என்னுகிறதோ", என்று என்நெஞ்சு கலங்கும்படி வாராநின்றாரென்கிறார்.

("நகிஞ்சிநா" என்கிறபடியே ஓரவஸ்தையிலும்), பணியா - (ஔபாதிகமாகவாகிலும் வேறொருவர்காலில்) பணியவேண்டாதபடி, அமரர் - (அநந்யாதிபதிகளான) நித்யஸூரிகளுடைய, பணிவும் - (ஸ்வரூபப்ரயுக்தமாய் ஸ்வாபாவிகமான) பணிவுக்கும், பண்பும் - (அவர்கள் ஜ்ஞாநப்ரேமாதி) ஸ்வபாவங்களுக்கும், தாமேயாம் - தாமே விஷயமாய்க்கொண்டு, அணி - ஆபரணரூபமான, ஆர் - போக்யதையையுடைய, ஆழியும் - திருவாழியையும், சங்கமும் - திருச்சங்கையும், ஏந்தும் - (அவர்களுக்கு அநுபாவ்ய

---

இத்யாதி. அசைவு - இளைப்பு. இப்படி - இப்பூமி. கீழ்வாக்யவிவரணம் - தோள்நொந்ததென்னில் இத்யாதி. "பணியாய்" என்றதுக்கு ஹார்த்தபாவமாதல், பாவாந்தரமாதல் - ஸ்வரஸாதம் இத்யாதி. ஸ்வரஸாதம் - ஸ்வரத்தின்தளர்த்தி. ஸாதம் - தளர்த்தி. அர்ச்சாவதாரம் வார்த்தையருளிச்செய்யக் கூடுமோ? என்ன - உகந்தருளின இத்யாதி. (ரு)

மாம்படி) ஏந்தியிருக்கும், அவர்காண்மின் - அவர்கிடீர், (அப்பரிவரிருக்கச்செய்தே), உலகில் - லோகத்தில், தணியா - ஒருகாலும்தணியாமல் நடக்கக்கடவதாய், வெம் - அதிஸந்தபரிதாபஹேதுவான, நோய்-(அவித்யாகர்மவாஸநாருசி ப்ரக்ருதிஸம்பந்தரூப) வ்யாதிகளை, தவிர்ப்பான் - களைகைக்காக, திரு - (அந்த நித்யஸூரிகளுக்கு நித்யாநுபாவ்யமாய் நிரதிஸயஸௌந்தர்ய ஸௌகுமார்யாதி) ஸம்பத்தை, ஆர் - உடைத்தான, நீலமணி - நீலரத்நம்போலேயிருக்கிற, மேனியோடு - திருமேனியோடேகூட, (இவ்வடிவழகுக்குஎன்ன தீங்குவருகிறதோ'! என்று), என் - என், மனம் - மனஸ்ஸானது, சூழ - ப்ரமிக்கும்படி, வருவார் - ஸம்ஸாரத்திலே வருவர்.

ஈ—ஆறும்பாட்டில், ரக்ஷகனைக்குறித்து இப்படி அஞ்சக்கடவீரோ? என்ன; நித்யஸூரிகள் அநுபவிக்கும் உபயவிபூதியிலும் அஸ்தாநேபயஸங்கை பண்ணிப் பரியவிருக்கும்அவன் அவ்வடிவோடே ஸம்ஸாரத்திலேவந்து உலாவாநின்றால், அஞ்சாதே செய்வதென்? என்கிறார்.

[பணியாவமரர்] - வேறே சிலரைப்பணிய ஸம்பாவனையில்லாத நித்யஸூரிகள். முன்பு அஸேவ்யர்காலிலே குனிந்து ஒருநாளிலே அநுகூலித்து, "அழுக்குடம்பெச்சில்வாய்" என்று அநுதபித்து, பின்பு அவன்காலிலே குனிந்தவர்களல்லர். [பணிவும்பண்பும் தாமேயாய்] - அவர்கள்பணிவுக்கும் ஜ்ஞாநாதிகுணங்களுக்கும் தாமே விஷயமாயிருக்குமவர். [அணியாராழியும் சங்கமுமேந்தும்] - ஸர்வாபரணமும் தானேயாகப்போரும்படியான திவ்யாயுதங்களை தரித்து நித்யஸூரிகளுக்குக் காட்சிகொடுத்தால், அவர்களுக்கும் அஸ்தாநேபயஸங்கை பண்ணவேண்டும்படியிறே யிருப்பது. அவர்களுக்கு நான் பட்டது படவேண்டியிருக்கும். [அவர்காண்மின்] - அவர்கிடீர் ஐஸ்வர்யத்திலே வருகிறார். தமக்கு ஒருப்ரயோஜநத்துக்காகத்தான் வருகிறாரோ? [உலகில் - தணியாவெந்நோய் தவிர்ப்பான்] - உலகில் தணியாவெந்நோய் தவிர்க்கைக்காக. [தணியாவெந்நோய்] - ஒருநாளும் தணியாத தாபத்ரயாதிகள். [திருநீலமணியார் மேனியோடு] - நீலமணிபோலே ப்ரமஹரமாய் ஸுகுமாரமான வடிவோடே: இங்கேவரவேண்டினால், அவ்வடிவைக்கொண்டு வரவேணுமோ? [என்மனம்] - அந்த ஸுகுமாரமான வடிவோடே ஸம்ஸாரத்திலே யுலாவாநின்றான் என்றறிந்த என்மநஸ்ஸானது. [சூழவருவாரே] - சுழன்றுவரும்படி வருகிறவர். 'தணியாவெந்நோய் — தவிர்ப்பான் - உலகில் - வருவார் என்றுமாம்.

ஈடு.— ஆறும்பாட்டு. நீர் இங்ஙனே கிடந்து படுகிறதேன்? ஸர்வரக்ஷகனன்றோ அவன்! என்ன; நித்யஸூரிகள் பரியவிருக்கக்கடவ அவன் ஸம்ஸாரத்திலே அவ்வடிவோடேவந்து உலாவாநின்றால் நான் இப்படிப் படாதே செய்வதேன் என்கிறார்.

[பணியாவமரர்]-வேறே சிலரைப் பணிய ஸம்பாவனையில்லாத நித்யஸூரிகள். முன்பு அஸேவ்யர்காலிலே குனிந்து ஒருநாளிலே அநுகூலித்து, "அழுக்குடம்பெச்சில்வாய்" என்றுஅநுதபித்து, பின்பு வகுத்தார்காலிலே குனிந்தவர்களல்லர்: பணித்

---

ஆறும்பாட்டு, - பணியா இத்யாதி. "பணியாவமரர்" என்று தொடங்கி "என்மனஞ்சூழவருவாரே" என்றதைக் கடாக்ஷித்து அவதாரிகை - [illegible]

இத்தால் வ்யாவ்ருத்தி - முன்புஅஸேவ்யர் இத்யாதி. அழுக்குடம்பெச்சில்வாய் என்கிறதுக்கு பாவம், ஸரீரத்துக்குஅழுக்காவது - பிறரைவணங்குகை, வாய்க்குஎச்சிலாவது - பிறரை

தல் பணிதல் செய்யாதவர்கள். இத்தால் - முக்தரை வ்யாவர்த்திக்கிறது. [பணிவும் பண்பும்தாமேயாம்] - அவர்கள் பணிவுக்கும் ஜ்ஞாநாதிகுணங்களுக்கும் தாமே விஷயமாயிருக்குமவர். [அணியாராழியும் சங்கமுமேந்தும்] - ஸர்வாபரணமும் தானேயாகப் போரும்படியான திவ்யாயுதங்களை யரித்து, நித்யஸூரிகளுக்குக் காட்சி கொடுத்தால் அவர்களும் அஸ்தாநே ஭யஶங்கைபண்ணி மங்களாஶாஸநம் பண்ணும்படியாயிற்று இருப்பது. அவர்களுக்கும் நான் பட்டதுபடவேணும். [அவர்காண்மின்]-அவர்கிடீர் ஹயஸ்தாநத்திலே பிறக்கிறுர். தமக்கு ஒரு ப்ரயோஜநத்துக்காகத்தான் வருகிறுரோ? [உலகில் - தணியாவெந்நோய் - தவிர்ப்பான்] 'தணியாவெந்நோய்' - ஒருநாளும் முடியாத தாபத்ரயாதிகள். [திருநீலமணியார்மேனியோடு] - நீலமணிபோலே ஶ்ரமஹரமாய் ஸுகுமாரமானவடிவோடே. இங்கே வரவேண்டினுல், அவ்வடிவோடே வரவேணுமோ? [என் மனம்]-அந்த ஸுகுமாரமானவடிவோடே ஸம்ஸாரத்திலே உலாவுகிறுனென்றறிந்த என் மநஸ்ஸானது. [சூழவருவாரே] - சுழன்றுவரும்படி வருகிறவர். தணியாவெந்நோய் - தவிர்ப்பான் - உலகில் - வருகிறவ ரேன்றுமாம். (சு)

## ஏழாம் பாட்டு

வருவார்செல்வார் வண்பரிசாரத்திருந்த என்
திருவாழ்மார்வற்கு என்திறம்சோல்லார்செய்வதேன்?
உருவார்சக்கரம்சங்குசுமந்து இங்குஉம்மோடு
ஒருபாடுழல்வான் ஓரடியானுமுளனேன்றே.

*ஆ.—(வருவார்) - நான் இப்பாடுபடாநிற்கச்செய்தே அவன்எழுந்தருளாதொழிகிறது என்னுடைய வ்யஸநமறியாமை என்று பார்த்து; ஸ்வகார்யார்த்தமாகப் போகிறுரும் வருகிறுரும் திருப்பரிசாரத் தேறப்போகிறுராகவும் அங்குநின்று வருகிறுராகவும் நிஶ்சயித்து, அவர்கள், திருப்பரிசாரத்திலே எனக்குத் தாயும் தந்தையுமாய் என்னைத் தேடிக்கொண்டிருக்கிற என்திருவாழ்மார்வற்கு, நிரதிஶய ஔஜ்ஜ்வல்ய ஸௌகுமார்ய ஶங்காதி திவ்யாயுதங்களைச் சுமந்துகொண்டு இந்தலோகத்திலே தனியே யெழுந்தருளும்போது பின்னே சாயையைப்போலே திரிவான்ஓரடியானும் உளனென்று என்திறஞ் சொல்லார், செய்வதென்? என்கிறுர்.*

*ஒ.—ஏழாம்பாட்டில், நான் அங்கு உதவப்பெறுதே அவஸந்நனுல், என்னைப்போலே அக்ஷமதையின்றிக்கே நிரந்தரமாய்ப் போவதுவருவதாய்த் திரிகிறவர்*

*ஸ்தோத்ரம்பண்ணுகையென்று. திருக்குறுந்தாண்டகம், "ஆவியை" இத்யாதி. என்றதுக்கு தந்த்ரேண அர்த்தத்வயம்-பணிதல் இத்யாதி. பணிதல் - ஸ்தோத்ரம் பண்ணுகை. பணிதல் - வணங்குகை. பணிவுக்கும் - வணங்குகைக்குமென்றபடி. "பண்பு" என்று - நீர்மையாய், ஜ்ஞாநாதி குணங்களுக்கு மென்றபடி. "அணி" என்று - ஆபரணமாய், ஆர்தல் - அமைதலாய், ஸர்வாபரணமும் தானேயாகப் போரும்படியானஎன்று பதார்த்தம்- "வருவார்" என்றத்தைக் கடாக்ஷித்து ஶ்ரவம் - அவர்கிடீர் இத்யாதி. மேலுக்குஅவதாரிகை - தமக்கு இத்யாதி. சூழ - சுழல என்றபடி. கீழே, "உலகில் - தணியாவெந்நோய் - தவிர்ப்பான்" என்றுகூட்டி, இங்கே "உலகில் - வருவார்" என்று கூட்டுகிறுர் - தணியாவெந்நோய்தவிர்ப்பான் இத்யாதி. (சு)*

களிலே ஒருவர், ஒருபாடுழல்வான் ஓரடியானுமுளனென்று திருப்பரிசாரத்து என் ஸ்வாமிநியான பெரியபிராட்டியார் ஸந்நிதியிலே எம்பெருமானைத் தருவிப்பாரைப் பெறுகிறிலோ மென்கிறார்.

[உருவார் சக்கரமென்று தொடங்கி] - அழகுமிக்கிருந்துள்ள திருவாழியையும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் ஸாதரமாக யுரித்துக்கொண்டு ஒருபார்ஶ்வத்துக்கெல்லாம் நிரந்தரமாகப்பரிவான் ஒரு அநந்யபரனும் உளன் என்று.

ப —அநந்தரம், கிஞ்சித்கரிக்கைக்குப் பிராட்டியோடே திருப்பரிசாரத்திலே யிருக்கிறவர்க்கு, உமக்குப் பரிவனுயிருப்பான்ஒருகிங்கர னுண்டென்று ஒருவரும் சொல்லுகிறிலர் என்று வெறுக்கிறார்.

வருவார் - (அங்குநின்றும்) வருவார், செல்வார் - (இங்குநின்றும்) செல்லுவாராகிற அவர்கள், வண் - விலக்ஷணஸம்பத்தையுடைத்தான, பரிசாரத்து - திருப்பரிசாரத்திலே, என் - என்னை அடிமைகொள்ளுகைக் கீடாக, இருந்த - எழுந்தருளியிருக்கிற, திருவாழ்மார்வற்கு — ஸ்ரீமானுக்கு, உரு - வடிவழகால், ஆர் - பொருத்தமான, சக்கரம் - திருவாழியையும், சங்கும் - திருச்சங்கையும், சுமந்து - யுரித்துக்கொண்டு, இங்கு - இந்தவிபூதியிலே, உம்மோடு - உம்மோடேகூட, ஒருபாடு - பார்ஶ்வவர்த்தியாய்க்கொண்டு, உழல்வான் - திரிவான், ஓர் - (அத்விதீயனுயிருப்பான்) ஒரு, அடியானும் - அடியானும், உளன் - உளன், என்று - என்று, என் - என், திறம் - இடையாட்டம், சொல்லார் - சொல்லுகிறிலர்கள். வருகிறவர்கள் தம்மை அழைத்துவாராமையாலும், போகிறவர்கள் ஒருமறுமாற்றம் கேளாமையாலும், இவர்கள் வரத்தும் போக்கும் தமக்காகவென்று நினைத்துச் சொல்லுகிறிலீரென்கிறார். (இவர்கள் சொல்லாதவளவில் அவர்அறிந்து அங்கீகரிக்கைக்கு), செய்வது - செய்யலாவது, என் - ஏது ? என்று வெறுக்கிறார்.

இ.—ஏழாம்பாட்டில், இங்கேவந்து திருப்பரிசாரத்திலே எழுந்தருளியிருக்க, நான் உதவப்பெறுதே யவஸந்நனுனல், ஓரடியானுமுளனென்று அவனுக்கு அறிவிப்பாரையும் பெறுகிறிலோ மென்கிறார்.

[வருவார் செல்வார்] - திருநகரியில்நின்றும் திருப்பரிசாரத்திலே மஹாபயமாக இசங்காநிற்கும். ஸ்வகார்யத்தாலே த்வரித்துப்போவாரை நம்தஶையை யங்கே யறிவிக்கப்போகிறுரென்றும், அங்குநின்று இங்கேவருவாரைத் தம்மையழைக்க வருகிறுரென்றும் இருப்பர். இயக்கமற்றிருக்கிறதன்றுகிடீர் ! [வண்பரிசாரத்திருந்த] - திருப்பரிசாரத்திலிருப்புக்கு மங்களாஶாஸநம் பண்ணவேணும். [என்திருவாழ்மார்வர்க்கு] - அதுக்குமேலே பிராட்டியோட்டைச் சேர்த்திக்கு மங்களாஶாஸநம் பண்ணவேணும். "ஸவாம்ஸு ஊஹஔெவெஒஹ்ர" என்று இளையபெருமாளைப்போலே தொடர்ந்து அடிமைசெய்யவேண்டும்படியாயிற்று இங்குத்தையிருப்பு. [என்திறஞ்சொல்லார்] - என்னிடையாட்டம் ஒருவரும் சொல்லுகிறிலர்கள். [திருவாழ்மார்வர்க்கு] - என்ஸ்வாமிநி ஸந்நிதியாகையாலே சொன்னவார்த்தை விலைசெல்லுங்கிடீர் ! [செய்வதென்] - இதுக்கு என்றைச் செய்யலாவதென் ? அங்குச்சென்றுல் சொல்லும்பாசுரமென் என்னில் ?—[உருவார் இத்யாதி] - அழகுமிக்கிருந்துள்ள ஆழ்வார்களை ஸாதரமாக யுரித்தென்னுதல், திருமேனிக்கெல்லாம் வேறு ஆபரணம்வேண்டாதே தானே யாபரணமாகப் போரும்படியான ஆழ்வார்க ளென்னுதல். [இங்கு] - ஒருநாடாகப் பரியும்

தேசமிறே அது. பரிவாரின்றிக்கேயிருக்கிற தேசத்திலே. [உம்மோடு ஒருபாடுழல்வான்] - இடைவிடாதே ஒருபார்ஶ்வத்தைப்பற்றித் திரிவான். ஒருபார்ஶ்வத்துக்கு இளையபெருமாளுளரிறே. [ஓரடியானுமுளனென்று] - அநந்யபரனாயிருப்பான் ஒருவனுளனென்று. "ஸஹோதரா..." என்று கைவாங்கியிருப்பர்; ஒருவன் உளனென்று என் திறம் சொல்லார்; செய்வதென்?

௭௫.—ஏழாம்பாட்டு. இங்கேவந்து திருப்பரிசாரத்திலே எழுந்தருளியிருக்க நான்உதவப்பெறாதே அவஸந்நனானால், ஓரடியானுமுளனென்று அவனுக்கு அறிவிப்பாரையும் பெறுகிறிலோ மென்கிறார்.

[வருவார்செல்வார்] - திருநகரியினின்றும் திருப்பரிசாரத்திலே மஹாபதமாக இசங்காநிற்கும். ஸ்வகார்யத்தாலே த்வரித்துப்போவாரைத் தம்தசையையறிவிக்கப்போகிறார்களென்றும், அங்குநின்றும் வருவாரைத் தம்மையழைக்கவருகிறார்களென்று மிருப்பர். இயக்கமற்றிருக்கிறதன்று கிடீர். திருப்பரிசாரத்திலிருப்புக்குப் பரியவேணும்; அதுக்கு மேல் பிராட்டியோட்டைச்சேர்த்திக்குப் பரியவேணும். "஭வாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா" (பவாம்ஸ்துஸஹவைதேஹ்யா) என்று இளையபெருமாளைப்போலே தொடர்ந்து போய் அடிமைசெய்யவேண்டும்படியாயிற்று இங்கிருக்கிறவிருப்பு. [என்திறஞ்சொல்லார்]- சொன்னவார்த்தைகேட்பிப்பாரில்லாமை சொல்லாதொழிகிறாரல்லர்கிடீர்! [என்திருவாழ்மார்வற்கு]-என்ஸ்வாமிநி ஸந்நியியாகையாலே சொன்னவார்த்தை விலைசெல்லுங்கிடீர். [செய்வதென்] - இதுக்கு என்னாற்செய்யலாவதேன்? ஸ்வகார்யபரராய்ப் போவர்களாகில், அவர்கள் அங்குப்போனால் சொல்லும்பாசுரமெது? என்ன—[உருவார்சக்கரம் இத்யாதி] - அழகுமிக்கிருந்துள்ள ஆழ்வார்களை ஸாதரமாக தரித்தென்னுதல், திருமேனிக்கெல்லாம் வேறோராபரணம் வேண்டாதே தானே ஆபரணமாகப்போரும்படியான ஆழ்வார்களை தரித்து என்னுதல் [இங்கு]-பரிவரின்றிக்கேயிருக்கிற ஸம்ஸாரத்திலே. [உம்மோடொருபாடுழல்வான்] - இடைவிடாதே ஒருபார்ஶ்வத்தைப்பற்றித்திரிவான். ஒருபார்ஶ்வத்துக்கு இளையபெருமாளுண்டிறே. [ஓரடியானுமுளனென்றே] - அநந்யப்ரயோஜநனு

---

ஏழாம்பாட்டு.—வருவார் இத்யாதி. "வண்பரிசாரத்திருந்த என்திருவாழ்மார்வற்கு - ஓரடியானுமுளனென்று - என்திறஞ்சொல்லார்"என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - இங்கேவந்து இத்யாதி.

அவனுக்குத் தாம்உளரென்றறிவிக்கை தேட்டமானால் "செல்வார்"என்ன அமைந்திருக்க, வருவாரைச் சொல்லுவானென்? என்ன - திருநகரியில் இத்யாதி. அதாவது - போவாரும் வருவாருமாய் வழிநடவாநிற்கச்செய்தே, என்திறஞ்சொல்லாதிருக்கிறார்களென்றபடி. இசங்காநிற்கும் - நடவாநிற்கும். பரிஹாராந்தரம் - ஸ்வகார்யத்தாலே இத்யாதி. "திருநகரியில்" இத்யாதி முந்தின பரிஹாரவிவரணம் - இயக்கம் இத்யாதி. இயக்கம் - வழிநடப்பு. "வண்பரிசாரத்திருந்த" என்றதுக்கு ஭ாவம் - திருப்பரிசாரத்தில் இத்யாதி. "திருவாழ்மார்வற்கு" என்றதுக்கு ஭ாவம் - அதுக்குமேல் இத்யாதி. கைங்கர்யப்ரதிஸம்பந்தி ஒருமிதுநமென்னுமிடம் தோற்றுகைக்காகப் பிராட்டியோட்டைச் சேர்த்தி சொல்லுகிறதென்று ஭ாவாந்தரம்- '஭வாம்ஸ்து' இத்யாதி. புருஷகாரத்வேந பிராட்டியோட்டைச் சேர்த்தி சொல்லுகிறதென்று மூன்றாம்஭ாவம்-சொன்னவார்த்தை இத்யாதி. ஏதத்விவரணம் - என்ஸ்வாமிநி இத்யாதி. முந்தின அர்த்தத்துக்கு, "உரு" என்று - அழகு. இரண்டாமர்த்தத்துக்கு, "உரு" என்று - திருமேனி, "ஆர்" என்று - அழகு. "உழல்வான்" என்ற வர்த்தமாநார்த்தம் - இடைவிடாதே என்றது. மற்றைப் பார்ஶ்வத்துக்கோ? என்ன - ஒருபார்ஶ்வத்துக்கு இத்யாதி. "அடியான்" என்றதுக்கு஭ாவம் - அநந்ய இத்யாதி.

யிருப்பா ஞெருவனுளனேன்று. "ஸமஹாத்மாஸு துர்லப:" (ஸமஹாத்மாஸு துர்லப:) என்கிறபடியே ஒருவரில்லையென்று கைவாங்கியிருப்பர்; அதுவேண்டா, ஒருவனுளனேன்று என்னிடையாட்டம் சொல்லுகிறிலர்கள் ; செய்வதேன் ? (எ)

---

## எட்டாம் பாட்டு.

†என்றேயென்னை உன்னேரார்கோலத்திருந்தடிக்கீழ்
நின்றேயாட்செய்ய நீ*கொண்டருளநினைப்பதுதான் ?
குன்றேழ்பாரேழ் சூழ்கடல்ஞாலமுழுவேழும்
நின்றேதாவிய நீள்கழலாழித்திருமாலே!

**ஆ.**—(என்றேயென்னை.) 'அவன் ஸர்வஜ்ஞனல்லனோ? அறிந்து அருளாமை யுண்டோ நினையாமையல்லது?' என்று பார்த்து, 'என்னை உன்ஏரார்கோலத் திருந்தடிக் கீழ் நின்றே ஆட்செய்யும்படி நீ விஷயீகரித்தருள நினைப்பதுதான் என்று?' என்று அபேக்ஷித்து, பின்னையும் அபேக்ஷிதம் செய்தருளாதொழிந்தவாறே, 'நான் ஒருபாயா நுஷ்டானம் பண்ணுமையாலாகாதே அபேக்ஷிதஞ் செய்தருளாதொழிகிறது?' என்று பார்த்து, 'உன்னுடைய க்ருபையாலே நிர்ஹேதுகமாக ஸர்வலோகத்தையும் அளந்தருளி னாற்போலே, அடியேனுடைய அபேக்ஷிதம் செய்தருளாய்' என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், 'உன்திருவடிக்கீழ் என்னை நிலைபாளாகக்கொள்வது என்று ?' என்று எம்பெருமானை ஆழ்வார் கேட்கிறார்.

[ஏரார் கோலத்திருந்தடிக்கீழ்] - அழகுமிக்கிருந்துள்ள திருவடிக் கீழ். [குன்றென்று தொடங்கி] - ஶங்கசக்ராதி திவ்யாயுதயரனுப், ஸ்ரீய: பதியாய், குலபர்வதங்களேழையும் ஏழுத்வீபங்களையும் ஏழுகடல்சூழ்ந்த பூமியையும் எல்லாவற்றையும் நின்றநிலையிலே அநாயாஸேந அளந்தருளின நீண்ட திருவடிகளையும் உடையையானவனே ! நினைத்தது முடிக்கவல்லவனே ! என்றுகருத்து. லோகங்களை யெல்லாமளந்த ப்ரமந்தீர அடிமைசெய்யப் பெறுகிறிலே னென்றுமாம்.

ப.—அநந்தரம், அகிலவஸ்து ஸம்ஶ்லேஷ ஸ்வபாவனான நீ, உன்திருவடி களிலே நான் அடிமைசெய்யும்படி அங்கீகரிப்பது என்று ? என்கிறார்.

ஏழ்குன்று - ஸப்தகுலபர்வதங்களையும், ஏழ்பார் - ஸப்தத்வீபங்களையும், சூழ் - சூழ்ந்த, கடல் - அவ்வேவாஸமுத்ரங்களையும், ஏழ்ஞாலமும்- பூம்யாதியான ஸப்த லோகங்களையும், முழு - முழுக்க, நின்றே - நின்றநிலையிலே நின்று, தாவிய - கவ டடித்துக்கொண்ட, நீள்-நெடிய, கழல் - திருவடிகளையுடையனாய், ஆழி-(அந்த ஶேஷித்வ ஸூசகமான) திருவாழியையுடையனாய், திருமாலே ஸ்ரீய:பதியானவனே ! என்னை -

---

'ஓர், உளன்" என்றதுக்குபாவம் - "ஸமஹாத்மா" இத்யாதி. வண்பரிசாரத்திருந்த என்று தொடங்கி, மார்வற்கு - உருவார்என்று தொடங்கி, உளனென்று - வருவார்செல்வார் - என்திறஞ் சொல்லார்: செய்வதென்? இத்யந்வய:. (எ)

---

† என்றேல் என்று பன்னீராயிரப்படிக்குப் பாடம் எனக் காண்கிறது.

* பன்னீராயிரப்படிக்கு 'கொண்டருளி' என்ற பாடமுமுண்டு : இருபத்து நாலாயிரப் படிக்கு 'கொண்டருளி' என்று பாடம் எனக்

(உனக்கு மோக்ஷஸாதனைப் பரிவனாயிருக்கிற) என்னை, உன்-(ஸுகுமாரனாய் நோக்யபூதனான) உன்னுடைய, ஏர்-அழகு, ஆர்-விஞ்சின, கோலம்-ஆபரணசோபையையுமுடைத்தாய், திருந்து - ஸ்வாபாவிக ஸௌந்தர்ய விசிஷ்டமான, அடிக்கீழ் - திருவடிகளின் கீழே, நின்றே - (ஒருகாலும் பிரியாதே) நின்று, ஆட்செய்ய - (உன்னுடைய ஸ்ரிய:பதித்வ ஸௌகுமார்யாதிகளுக்கீடாக மங்களாசாஸநம்பண்ணி) அடிமைசெய்வேணும்படி, நீ - நீ, கொண்டருளி - (உன் திருவுள்ளத்தாலே) அங்கீகரித்து, நினைப்பதுதான் - (இது முழுக்க நிர்வஹிப்பதாக) நினைத்தருளுவதுதான், என்று - என்றாயிருக்கிறது ? கொண்டருள நினைப்பதென்றுஞ் சொல்லுவர். என்றேல் - என்றதில், ஏல் - அசை.

இ.—எட்டாம்பாட்டில், 'பிறரைவிடீர் : உன் திருவடிக்கீழே பரிகைக்கு நிலையாளாக என்னைக்கொள்வது என்று ?' என்று அவன்தன்னைக் கேட்கிறார்.

[என்றே] - உம்முடைய கார்யம் செய்கிறோமென்ன; அதுதான் என்று? என்கிறார். [என்னை] - உனக்குப்பரிந்தன்றி உளனாகாதிருக்கிற என்னை. [உன் இத்யாதி]- உன்னழகுமிக்க ஒப்பனைதிருந்தின திருவடிகளின்கீழே. மங்களாசாஸநம் பண்ணியல்லது நிற்கவொண்ணாத திருவடிகளென்கை. [நின்றேயாட்செய்ய] - "ஜெஹிமெ ஜஹாதிசெ" என்று ப்ரயோஜநத்தைக் கொண்டுபோகையன்றிக்கே, விடாதே நின்று அடிமைசெய்ய. [நீகொண்டருளி] - நான் கிடந்தானே கண்டேறுகையன்றிக்கே, அடிமை செய்வானென்று திருவுள்ளத்திலே கொண்டருளி. [நினைப்பதுதான்] - [நின்றேயாட்செய்ய - நினைப்பதுதான்] - அவன்நினைவுக்கே ஸலவ்யாப்தியுள்ளது, அஸிநிவேசம் அப்ரயோஜநமென்றிருக்கிறார். [குன்றேழ் இத்யாதி]-"வண்பரிசாரத்திருந்த" என்று- எழுந்தருளியிருக்கிற இருப்புத் தனக்கே பரியவேண்டியிருக்க, அதிமாநுஷமான செயல்களைச்செய்தால் மங்களாசாஸநம் பண்ணியே நிற்கவேண்டாவோ ? ஸப்தகுலபர்வதமென்ன, ஸப்தத்வீபமென்ன, அவற்றைச்சூழ்ந்த ஸப்தஸமுத்ரமென்ன, இப்படி ஏழுவகைப்பட்ட பூமியையடைய நின்றநிலையிலே நின்றளந்துகொள்ளும்படி நீண்ட திருவடிகளை யுடையையாய்! கையும் திருவாழியுமான ஸ்ரிய:பதியே! சங்கசக்ராதி திவ்யாயுதயானாய், ஸ்ரிய:பதியாய் வைத்து, காடுமேடுடையுமான பூமியை ஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டு அளந்துள்ள ப்ரமந்த்ர சிசிரோபசாரம் பண்ணப்பெறுவது என்றுகாண்! என்கை. அரியனசெய்பவல்ல நீ,நான் உன் யடிமை செய்யும்படி நினைத்தருள வேணுமென்றுமாம்.

ஈடு.—எட்டாம்பாட்டு, 'பிறரைவிடீர்: உன்திருவடிக்கீழே பரிகைக்கு நிலையாளாக என்னைக் கோள்வது என்று ?' என்று அவன்தன்னைக் கேட்கிறார்.

[என்றே] - உம்முடைய கார்யம் செய்கிறோமிறே என்ன; அதுதான் என்று? என்கிறார். [என்னை] - உனக்குப் பரிந்தன்றி உளேனாகாதிருக்கிற என்னை. [உன் இத்யாதி]-உன் அழகு மிக்க ஒப்பனை திருந்தின திருவடிகளின் கீழே. மங்களாசாஸநம் பண்

எட்டாம்பாட்டு - என்றே இத்யாதி. "அடிக்கீழ்நின்றே ஆட்செய்ய நீகொண்டருள" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - பிறரைவிடீர் இத்யாதி.

செய்கிறோமென்றாலொழிய, "என்று" என்று கேட்கக்கூடாமையாலே, அவன் கார்யம் செய்கிறோமென்று திருவுள்ளம்பற்றினமையை அருளிச்செய்கிறார் - உம்முடைய இத்யாதி. "ஏரார்" இத்யாதியால் வர்ணித்ததுக்கு பாவம் - மங்களாசாஸநம் இத்யாதி. இத்தால் பலிதம் .

ணியல்லது நிற்கவொண்ணாத திருவடிகளென்கை. [நின்றேயாட்செய்ய] - "தேஹமிதேதாமிதே" (தேஹமிமேததாமிதே) என்று ப்ரயோஜநத்தைக் கொண்டுபோகையன்றிக்கே, விடாதே அடிமைசெய்ய. [நீ கொண்டருள] - நான் கிடந்தானை கண்டேறுகையன்றிக்கே, அடிமை செய்வானென்று திருவுள்ளத்தே கொண்டருள. [நினைப்பதுதான்]- † (நின்றேயாட்செய்ய - நினைப்பதுதான்) அவன் நினைவுக்கே பல வ்யாப்தியுள்ளது. தம்மஹிநிவேசம் அப்ரயோஜகமென்றிருக்கிறார். [குன்றேழ் இத்யாதி]- "வண்பரிசாரத்திருந்த" என்று - எழுந்தருளியிருக்கிறவிருப்புத்தனக்குப் பரியவேண்டியிருக்க, அதிமாநுஷமான செயலைச் செய்தால் மங்களாசாஸநம்பண்ணியே நிற்கவேண்டாவோ ? ஸப்தகுல பர்வதமென்ன, ஸப்தத்வீபமென்ன, அவற்றைச் சூழ்ந்த ஸப்தஸமுத்ரமென்ன, இப்படி ஏழுவகைப்பட்ட பூமியையடைய நின்ற நிலையிலே நின்று அளந்து கொண்டருளும்படி நீண்ட திருவடிகளை உடையையாய்க் கையும் திருவாழியுமான ஸ்ரீயஃபதியே! ஸங்குசக்ராதி திவ்யாயுதங்களையுடைய ஸ்ரீயஃபதியாய்வைத்து, காடுமோடையுமான பூமியையடைய, நின்ற நிலையிலே ஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டு அளந்த ஸ்ரமந்தீர ஸிஸிரோபசாரம் பண்ணப்பெறும் நாள் என்று? என்கை. அரியனசெய்யவல்ல நீ, நான் உன் திருவடிகளைக்கிட்டிநின்று அடிமை செய்யும்படி நினைத்தருளவேணு மென்றுமாம். (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

> திருமால்! நான்முகன் செஞ்சடையானென்றிவர்கள் எம்
> பெருமான்தன்மையை யாரறிகிற்பார்? பேசியென்?
> ஒருமாமுதல்வா! ஊழிப்பிரான்!என்னையாளுடை
> கருமாமேனியனென்பன் என்காதல்கலக்கவே.

ஆ. – (திருமால்.)-'ஆகிலும் என்னை உள்ளபடியறிந்து வத்தினாலல்லது உம்முடைய அபேக்ஷிதம் செய்யக்கடவது என்?' என்னில்,-திருமால்! எம்பெருமானாயிருந்த உன்னுடைய ஸ்வரூபரூப குணவிபூத்திகளை ஸர்வஜ்ஞரான ப்ரஹ்மாதிகள்தாம் அறியவல்லரோ? இவ்வர்த்தம் உபபாதநீயமோ? ஆன்பின்பு அதிக்ஷுத்ரனான நான்அறிந்தேத் துகையாவதென் ? என்ன, - அங்ஙனேயாகில், அத்விதீயபரமகாரணபூதனே! "காலவக்ரஸ்வரூபம் ஸ்வரூபம் ச கேஸவ: । ஸர்வயோனிர ஹர்வாது வரிவத..யதேசநிஸ்" என்று சொன்னாற்போலே,ஸங்கல்பமாத்ரத்தாலே க்ருதத்ரேதாதி ஸகல யுகப்ரவர்த்தகனே ! ப்ராக்ருத க்ஷுத்ரவிஷய ப்ரவணனான என்னையுங்கூடத் தோற்பித்து அடிமையாக்கவல்ல * நிரவயிக ஸௌந்தர்ய ஸௌகுமார்யலாவண்ய யௌவநாதி

---

அவன் நினைவுக்கே இத்யாதி. மேலுக்கெல்லாம்பாவம் - வண்பரிசாரத்து இத்யாதி. வாக்யவிவரணம் - ஸங்க சக்ராதி இத்யாதி. த்ரிவிக்ரமாபதாநத்தை அருளிச்செய்தது பரியவேண்டும் செயலாகையாலே யென்று கீழேயருளிச்செய்தது. பாவாந்தரம் - அரியன இத்யாதி. அதாவது திருவுலகளந்தருளின அவடிதம்போலே என்னையும் உன் திருவடிகளிலே ஆளாக்கிக்கொள்ளுகையும் அவடிதமிறே; இத்தையும் செய்யவேணுமென்றபடி. 'குன்றேழ்'என்றுதொடங்கி, 'திருமாலே - என்னை உன்னேரார்என்று தொடங்கி, என்றே - கொண்டருள நினைப்பதுதான்' இத்யந்வய: (அ)

† குண்டலிதம்—ப்ரக்ஷிப்தம்.

அநந்த குணநிதியாய், * நீலமேவ ஸத்ருஶமான திவ்யரூபத்தையுடையவனே யென்று சொல்லுவானென் ? என்னில்; காதலாலே கலக்குண்டு சொன்னேன், நான் அறிந்து சொன்னேனல்லேன் என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ப்ரஹ்மாதிகள் உகூதாதிகளுண்டாயிருக்க, நீர் என் செய்ய அஞ்சுகிறீர்! என்று எம்பெருமான் அருளிச்செய்ய; அவர்கள் உன்னுடைய ஸௌகுமார்யாதிகளையறியார்கள். நான் என்னுடைய ஸ்நேஹத்தாலே கலங்கிக் கதறு நின்றேனென்கிறார்.

[திருமால்] - திருமாலே ! [எம்பெருமான் தன்மையை] - ஸர்வேஶ்வரனுன உன்னுடைய படியை. [ஒருமாவென்ற மேனுக்கு] - விலக்ஷணபரமகாரணமாய் காலோபலக்ஷிதஸகலபதார்த்தங்களுக்கும் ஸ்வாமியாய் என்னையடிமை யாக்கிக்கொண்ட அழகிய கறுத்த திருமேனியையுடையவன் என்று சொல்லாநிற்பன், என்னுடைய ஸ்நேஹம் என்னையஞ்சிக் கலங்கப்பண்ண.

ப.—அநந்தரம், அதிஶயிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளும் உன்ஸௌகுமார்யம் அறியாமையாலே, என்ப்ரேமம்கலக்க நான் பரிவனுய்க் கூப்பிடாநின்றேனென்கிறார்.

திரு - பெரியபிராட்டியார்க்கு; மால் - வல்லஹனுன வைலக்ஷண்யத்தை யுடையவனே ! நான்முகன் - (ஸ்ருஷ்டியில் பஹுமுவவ்யாபாரனுன) ப்ரஹ்மாவும், செஞ்சடையான் - (தபஃபரனுன) ருத்ரனும், என்று - என்றுப்ரஸித்தரான, இவர்கள் - இவர்கள், எம்பெருமான் - எனக்குஸ்வாமியாய் ஸர்வாதிகனுன உன்னுடைய, தன்மையை-(ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதியான ஸ்வாபாவிக) வைலக்ஷண்யத்தை, அறிகிற்பார் - அறிய வல்லார், ஆர் - ஆர்தான்? என் - என்னுடைய, காதல் - ப்ரேமமானது, கலக்க - (நெஞ்சைக்) கலக்க, ஒரு - அத்விதீயமான, மா முதல்வா - பரமகாரணபூதனே! (ஸ்ருஷ்டமான ஆத்மாக்களுக்கு), ஊழி-காலாநுரூபமாக, பிரான்-உபகாரகனுனவனே! என்னை - என்னை, ஆளுடை - அடிமைகொண்ட, கரு - ஶ்யாமளமான, மாமேனியன் - விலக்ஷணவிக்ரஹயுக்தனே! என்பன் - என்றுசொல்லாநிற்பன்; (உன் ஸௌகுமார்யத்தைப்பாராதே, "மாதுர்யமே!" என்று பிராட்டியஞ்சும்படி ஜகத்பாலநத்தைப்பண்ணுவது, உத்பந்நரானசேதநர்க்கு ஆபத்துத்தோற்றுங்காலந்தோறும் உபகாரகனுய் வ்யாபரிப்பது, என்போல்வாரை அங்கீகரிக்கைக்காக அழகியவடிவைக்கொண்டு வருவதாகப்புக்கவாறே உன்னுடைய ஸௌகுமார்யத்துக்கு அஞ்சாநின்றேன்; அவாங்மநஸகோசரமான இந்த ஸௌகுமார்யத்துக்கு), பேசியென் - என்னபாசுரமிட்டுச்சொல்லுவது ?

இ.—ஒன்பதாம்பாட்டில், நமக்குப்பரிய ப்ரஹ்மாதிகளுண்டாயிருக்க, நீர் இங்ஙன் அஞ்சுகிறதென் ? என்ன; அவர்கள் உன்ஸௌகுமார்யம் அறிவர்களோ ? என

[திருமால்] - திருமாலே ! என்று ஸம்போதிக்கிறார். நீயும் பிராட்டியுமான சேர்த்திக்கு மங்களாஶாஸநம் பண்ணவல்லர்களோ அவர்கள் ? [நான்முகன்] - ஸ்ருஷ்டிக்கு உறுப்பான பலமுகங்களையுமுடையனுய், அதிலே அந்யபரனுனவன். [செஞ்சடையான்] - ஸாதகவேஷந் தோற்றநிற்கிற ருத்ரன், தன் அபிமதலாபத்திலே யந்யபரன். [எம்பெருமான் தன்மையை] - ஸர்வேஶ்வரனுன உன்னுடைய ஸௌகுமார்யத்தை. [யார் அறிகிற்பார்]-யார்அறிகிறவர்? அந்யபரராயிருக்கிறவர்கள் உன்ஸௌகுமார்யத்தை

அறிவர்களோ? அநந்யபரராலுல்தான் தேவருடைய ஸௌகுமார்யம் சிலர்க்கு அறியநிலமோ? [பேசியேன்]-சொல்லியென்ன ப்ரயோஜநமுண்டு ? அவர்களைப் பரிவராக்கவோ ! உன் ஸௌகுமார்யத்தைப் பரிச்சிந்நமாக்கவோ ? பரிகைக்கு நீருண்டே யென்ன ; நானும்செய்வது இவ்வளவன்றோ ? என்கிறார்: - [ஒருமாமுதல்வா] - விலக்ஷணமான பரமகாரணமானவனே ! [ஊழிப்பிரான்] - காலோபலக்ஷித ஸகலபதார்த்தங்களுக்கும் ஸ்வாமியானவனே! [என்னை]-புறம்பே அந்யபரனான என்னை, அநந்யபரனும்படிபண்ணின வடிவழகையுடையவனே! [என்பன்] - இவ்வளவிறே என்னளவு. ஸர்வநிர்வாஹகனுய் வடிவழகாலேயென்னைச்சேர்த்துக்கொண்ட இதிறே என்னைக்கலங்கப்பண்ணிற்று. [என்காதல் கலக்கவே] - என்ப்ரேமமானது நான் அஞ்சும்படி கலங்கப்பண்ண, உன்வடிவழகிலும் மேன்மையிலும் கலங்கிச்சொன்னேன் இத்தனைபோக்கி, உன்ஸௌகுமார்யத்தை எல்லைகண்டு சொன்னேனல்லேன்: ப்ரேமாந்யனுய்ச்சொன்னேனத்தனைபோக்கி, நெஞ்சொழிந்து சொன்னேனல்லேன். ப்ரயோஜநாந்தரபரரான ப்ரஹ்மாதிகள் பரிவும் உனக்கு ஸத்ருஶமன்று; ப்ரேமாந்யனை என்னுடையபரிவும் உனக்கு ஸத்ருஶமன்று என்ற

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. நமக்குப்பரிய ப்ரஹ்மாதிகளுண்டாயிருக்க, நீர் இங்ஙன் அஞ்சுகிறதேன் ? என்ன, அவர்கள் உன் ஸௌகுமார்யம் அறிவர்களோவென்கிறார்.

[திருமால்] - திருமாலென்று நிஷ்கர்ஷித்து ஸம்போதிக்கிறார். நீயும் பிராட்டியுமான சேர்த்திக்கு மங்களாஶாஸநம்பண்ணுவர்களோ அவர்கள் ? [நான்முகன்] - ஸ்ருஷ்டிக்கு உறுப்பான பலமுகங்களையுடையனுய், அதிலே அந்யபரனுனவன். [செஞ்சடையான்] - ஸாதகவேஷந்தோற்ற நிற்கிற ருத்ரன்: தன்னபிமதலாபத்திலே அந்யபரன். [எம்பெருமான்தன்மையை] - ஸர்வேஶ்வரனுன உன்னுடைய ஸௌகுமார்யத்தை. [ஆரறிகிற்பார்] - சிலராலே அறியலாயிருந்ததோ ? அந்யபரராயிருக்கிறவர்கள் உன் ஸௌகுமார்யத்தை அறிய வல்லர்களோ ? அநந்யபரராலுல்தான் தேவருடைய ஸௌகுமார்யந்தான் சிலராலறியலாமோ ? [பேசியேன்] - இதுசொல்லி என்னப்ரயோஜநமுண்டு ? அவர்களைப் பரிவராக்கவோ ? உன் ஸௌகுமார்யத்தைப் பரிச்சிந்நமாக்கவோ? அவர்கள் நம்மை அறியமாட்டார்களாகில் அறிந்த நீர் பேசிக்காணீரேன்ன, "என்னுல்தான் செய்யலாயிருந்ததோ!" என்கிறார்: [ஒருமாமுதல்வா] - விலக்ஷணமான பரமகாரணமானவனே ! [ஊழிப்பிரான்] - காலோபலக்ஷித ஸகலபதார்த்தங்களுக்கும் ஸ்வாமியானவனே ! [என்னை இத்யாதி] - புறம்பே அந்யபரனுன என்னை அநந்யபரனும்படிபண்ணின வடிவையுடையவனே ! [என்பன்] - இவ்வளவிறே என்னளவும். ஸர்வநிர்வாஹகனுய் வடிவழகிலே

ஒன்பதாம்பாட்டு.—திருமால் இத்யாதி. "நான்முகன் செஞ்சடையானென்றிவர்கள் - ஆரறிகிற்பார்" என்றவற்றைக்கடாக்ஷித்து அவதாரிகை - நமக்குப்பரிய இத்யாதி.

திருமாலும் நான்முகனுமென்கிற ப்ரமநிவ்ருத்யர்த்தமாக, "திருமால்" என்றது - ஸம்போதநமென்று அருளிச் செய்கிறார் - திருமாலென்று நிஷ்கர்ஷித்து இத்யாதி. நிஷ்கர்ஷித்து - பிரித்துஎன்றபடி. "நான்முகன்" என்றுதொடங்கி, "ஆரறிகிற்பார்" என்னுமளவும் பாவம் - நீயும்பிராட்டியும் இத்யாதி. ப்ரஹ்மாவென்னுதே, "நான்முகன்" என்றுவிஶேஷித்ததுக்கு பாவம்- ஸ்ருஷ்டிக்கு இத்யாதி. "செஞ்சடையான்" என்றுவிஶேஷித்ததுக்கு பாவம் - ஸாதகவேஷம்இத்யாதி. தன்மை-ஸௌகுமார்யம். "ஆரறிகிற்பார்" என்றதுக்குபாவம் - அநந்யபரராலுல்தான் இத்யாதி. ஶப்தார்த்தம் - இதுசொல்லி இத்யாதி. விவரணம்-அவர்களை இத்யாதி. "என்பன்" என்றதுக்குபாவம் - இவ்வளவிறே இத்யாதி. இவ்வளவிறே என்னளவுமென்றது - உன்ஸௌகுமார்யத்

என்னைச் சேர்த்துக்கொண்ட இதிறே என்னைக்கலங்கப்பண்ணிற்று. [என்காதல்கலக்கவே] - என்னுடையப்ரேமமானது நான் அஞ்சும்படி கலங்கப்பண்ண, உன்வடிவழகிலும் மேன்மையிலும் கலங்கிச் சொன்னவத்தனைபோக்கி, உன் ஸௌகுமார்யத்தை எல்லை கண்டுசொன்னேனல்லேன். ப்ரேமாந்தனாய்க்கொண்டு சொன்னேனத்தனைபோக்கி, நெஞ்சொழிந்துசொன்னேனல்லேன். ப்ரயோஜநாந்தரபரரான ப்ரஹ்மாதிகள்பரிவும்உனக்கு ஸத்ருசமன்று, ப்ரேமாந்தனான என்பரிவும் உனக்கு ஸத்ருசமன்று என்றதாயிற்று. (கூ)

---

## பத்தாம் பாட்டு.

---

கலக்கமில்லா நல்தவமுனிவர் கரைகண்டோர்
துளக்கமில்லா வானவர் எல்லாந்தொழுவார்கள்
மலக்கமெய்த மாகடல்தன்னைக்கடைந்தானை
உலக்கநாம்புகழ்கிற்பது என்செய்வது? உரையீரே.

*ஆ.—(கலக்கமில்லா.) அவனை அறிந்து ஏத்தினீராகிலோவென்னில்,— அஸ்஖லிதஜ்ஞாநராய், நிரதிசயபக்திபுக்தராய், பகவதநுபவைகபோகரான * அயர்வறுமமரர்கள், அவனுடைய - கல்யாணகுண மஹோததியினுடைய-இக்கரைகண்டார்; பகவத்பரிசர்யைகபோகரான நித்யஸித்தபுருஷர்கள், அவன்திருவடிகளில் ஸ்துத்யாதி பரிசர்யைபண்ணுவார்; அசேஷாஸ்பதமஹோததியை க்ஷுபிதமாம்படி கடைந்தருளினவன் பரிசர்யைபண்ணப்படுகிறவன். இப்படியிருக்கிற அவனை நாம் உள்ளபடியறிந்து புகழுகையாவதென் ? ஆகில், நீர் புகழ்வானேன் ? என்னில்,—என்காதல் என்னைக் கலக்காநின்றால் நான் செய்வதென் ? ஆனபின்பு, உன்க்ருபையாலே அடிமைகொண்டருளவேணுமென்கிறார்.*

*ஒ.—பத்தாம்பாட்டில், 'என்னுடைய ஸௌகுமார்யாதிகளை யநுஸந்தித்துப் பரிவராய்க் காப்பார் அநேகருளர்: ஒருவரும் பரியவேண்டாதபடி நான் பெரியமிடுக்கன்' என்று எம்பெருமான் அருளிச்செய்ய; அத்தையநுஸந்தித்துத் தம்முடைய பயங்கெட்டு ஹ்ருஷ்டராகிறார்.*

*[கலக்கமென்று தொடங்கி] - தங்களுடைய அறிவுகளுக்கு, விஷயங்களால் கலக்கமின்றிக்கே நல்ல தபஸ்ஸுக்களையுமுடையராய் முமுக்ஷுக்களான முனிகளும் முக்தரும் அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான அயர்வறுமமரர்களும் என்கிற இவர்களெல்லாம் அவனைப் பரிந்து காக்கக்கடவார். [மலக்கமென்று தொடங்கி]-பெருங்கடல் மலங்*

---

*திக்குத் தகும்படி சொன்னேனல்லேன், கலங்கிச்சொன்னேன் என்றபடி. கலங்குகைக்கு ஹேது ஏதென்ன - ஸர்வநிர்வாஹகனுய் இத்யாதி. கீழ்வாக்யவிவரணம் - ப்ரேமாந்தனாய் இத்யாதி. இப்பாட்டால் பலித்ததென் ? என்ன - ப்ரயோஜநாந்தர இத்யாதி. 'திருமால் - எம்பெருமானை உன்தன்மையை - நான்முகன்என்றுதொடங்கி, ஆரறிகிற்பார் ? பேசியென்? என்காதல்கலக்கவே - ஒருமாமுதல்வாஎன்றுதொடங்கி, கருமாமேனியனென்பன்' இத்யந்வய:.* (க)

கும்படிகடைந்த பெருமிடுக்கனை நாம் முடியப் புகழவல்லோமாகையாவது என்செய்தபடி? சொல்லீர்கோள்.

ப.—அநந்தரம், முமுக்ஷுக்களோடு முக்தர்களோடு நித்யஸூரிகளோடு வாசியற நமக்குப் பரிவராயிருக்க, நாம் ஶக்திமான்களாயிருக்க, நீர் அஞ்சவேண்டா வென்ன,—ஆஶ்ரிதஜநஸாமக்ர்யத்தையும் அதிஶயித ஶக்தியோகத்தையும் அநுஸந்தித்து ஸமாஹிதராகிறார்.

(வ்யூஹஸாவநாநிஷ்டராகைபாலே), கலக்கம் - (ஸாம்ஸாரிக ஸ்வபாவங்களாகிற) கலக்கம், இல்லா - அற்ற, நல்தவம் - ஜ்ஞாநரூப தபஸ்ஸையுடைய, முனிவர் - ஸநகாதிமுநிகள், கரைகண்டோர் - ("வேஸாயுநஃபாரமாப்நோதி" என்கிறபடியே ஸம்ஸாரஅத்வாவைக்) கரைகண்டமுக்தர், (அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தராகையாலே ஒருகாலும்), துளக்கம் - சலநம், இல்லா - அற்ற, வானவர் - நித்யஸூரிகள், எல்லாம் - எல்லாரும், தொழுவார்கள் - (பரிவராய்க்கொண்டு) தொழுது மங்களாஶாஸநம் பண்ணுமவர்கள்; மா - அபரிச்சிந்நமான, கடல்தன்னை - ஸமுத்ரத்தை, மலக்கமெய்த - கலங்கும்படி, கடைந்தானை - கடைந்தஸர்வஶக்தியுக்தனை, நாம் - , உலக்க - முடியக்கண்டு, புகழ்கிறபது - புகழவல்லோமாகையாகிற இது, என்செய்வது - என்செய்ததாயிற்று? உரையீர் - சொல்லீர்கோள்என்று லௌகிகரைப்பார்த்துச் சொன்னாராயிற்று.

இ —பத்தாம்பாட்டில், நம் ஸௌகுமார்யாதிகளை யநுஸந்த்ருத்துப் பரிவராய் நமக்குரக்ஷகராயிருப்பார் அநேகருளர்; ஒருத்தர் பரியவேண்டாதபடி நான் பெருமிடுக்கன் என்று அவன் அருளிச்செய்ய, அத்தைபநுஸந்தித்து பயங்கெட்டு ஹ்ருஷ்டராகிறார்.

[கலக்கமில்லா நல்தவமுனிவர்] - தங்கள் ஜ்ஞாநத்துக்கு விஷயங்களால் கலக்கமின்றிக்கே, மஹாதபஸ்ஸுக்களையுடைய மநநஶீலரான ஸநகாதிகள். [கரைகண்டோர்] - முக்தர். [துளக்கமில்லாவானவர்] - முதலிலே ஸம்ஸார ஸ்பர்ஶகந்தமில்லாத நித்யஸூரிகள். துளக்கம் - சலநம்: அதாகிறது - ஸங்கோசம் [எல்லாந்தொழுவார்கள்] - முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யஸித்தருமான இவர்களெல்லாம் அடிமை செய்கிறவர்கள். அடிமைசெய்கையாவது - ஸ்வாமிக்கு அதிஶயத்தைப் பண்ணுமதாகையாலே மங்களாஶாஸநமிறே. [மலக்கமெய்த] - மஹத்தத்த்வமானகடலை க்ஷுபிதமாம்படி கடைந்த பெருமிடுக்கனை: பரியுமவர்கள் தாங்களும் குழைசரக்காம்படி மிடுக்கனென்கை. [உலக்கநாம்புகழ்கிறபதென்செய்வது? உரையீரே] - அவன்படியை நேராக அறியாதநாம் பரிவிலேயிழிந்து முடியப்பேசப்புக்கது, என்செய்தோமானோம்? சொல்லீர்கோள்! முன்பு தன்மிடுக்கைக் காட்டினவிடங்களில் அத்தை ப்ரதிபத்திபண்ணாதே, அதுதன்னைச் சொல்ல, இப்போது ஸமாஹிதராயிற்று, இப்ப்ரபந்தம் தலைக்கட்டக்கடவதாகையாலேயாதல்; ஈஶ்வரனுடைய ஜீவநாத்ருஷ்டத்தாலே யாதலிறே.

ஈடு.—பத்தாம்பாட்டு. இவர் பயத்தைப்பரிஹரிக்கைக்காக நமக்கு ஸநகாதிகள் முக்தர் நித்யஸூரிகள் இவர்கள் கிட்டிநின்று பரிமாறுகிறார்கள்: நாம்தாம் அரிய செயல்களும் செய்யவல்லோம் சிலரானபின்பு, நீர் நமக்த அஞ்சவேண்டாகாணுமென்ன; முன்பு

---

பத்தாம்பாட்டு.—கலக்கமில்லா இத்யாதி. "கடைந்தானை" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - இவர்பயத்தை இத்யாதி. முன்பு பயஹேதுக்களானவை என்றது - திருவுலகளந்தருளினது, வடதளஶாயித்வம் தொடக்கமானவற்றை. "மலக்க மெய்தமாகடல்தன்னைக்கடைந்

ஸயஹேதுக்களானவைதானே பயநிவ்ருத்திக்கு உடலாய் 'அத்தையநுஸந்தித்து இனியராகிறார். இவர்தமக்கு இன்னபோது இன்னது ஸயஹேதுவாம், இன்னபோது இன்னது பரிஹாரமாம் என்று தெரியாதிறே.

[கலக்கமில்லாநல்தவமுனிவர்] - தங்கள் ஜ்ஞாநத்துக்கு விஷயங்களால்வரும் கலக்கமின்றிக்கே, மஹாதபஸ்ஸுக்களை யுடையராய் மநநஸீலரான ஸநகாதிகள். [கரைகண்டோர்] - முக்தர். [துளக்கமில்லாவானவர்] - துளக்கம் - நடுக்கம். ஸம்ஸாரஸ்பர்ஶமில்லாத நித்யஸூரிகள். துளக்கம் - சலநம். அதாவது - ஸங்கோசம். [எல்லாந்தொழுவார்கள்] - முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யஸித்தருமான இவர்கள் அடிமை செய்கிறவர்கள். அடிமையாவது - ஸ்வாமிக்கு அதிஶயத்தைப் பண்ணுமதாகையாலே, மங்களாஶாஸநமிறே. [மலக்கம்இத்யாதி]-மஹத்தத்த்வமான கடலை க்ஷுபிதமாம்படி கடைந்த பெருமிடுக்கன். பரிகிறவர்கள்தாங்களும் குழைசரக்காம்படி பெருமிடுக்கனென்கை. [உலக்கஇத்யாதி] - அவன் படியை நேராக அறியாத நாம் பரிவிலே மிழிந்து முடியப்பேசப் புக்கது, என்செய்தோமானோம்? சொல்லிகோள். முன்பு தன்மிடுக்கைக்காட்டினவிடங்களில் அத்தை ப்ரதிபத்திபண்ணுதே அதுதன்னையேசொல்ல இப்போது ஸமாஹிதமாயற்றது, இப்ப்ரபந்தம் தலைக்கட்டக்கடவதாகையாலேயாதல், ஈஶ்வரனுடைய ஜீவநாத்ருஷ்டத்தாலேயாதலிறே. (க0)

---

## பதினோராம் பாட்டு.

உரையாவெந்நோய்தவிர அருள்நீள்முடியானை
வரையார்மாட மன்னுகுருகூர்ச்சடகோபன்
உரையேய்சொல்தொடை ஓராயிரத்துளிப்பத்தும்
நிரையேவல்லார் நீடுலகத்துப்பிறவாரே.

**ஆ.**—(*உரையா*) - *துர்வசமாய் காலாக்நிஸத்ருஶமாயிருந்த விரஹவ்ருமத்தாலுள்ள ஸந்தாபம் தவிரும்படி நிரதிஶயவிஷயீகார ஸூசகமான காருண்யமய ஶிர: கம்பநத்தாலே தம்மைவிஷயீகரித்த எம்பெருமானைச்சொன்ன இத்திருவாய்மொழியை வல்லார், ஸம்ஸாரமருகாந்தாரத்தில் பிறவார் என்கிறார்.*

*ஒ —நிரமத்தில், இத்திருவாய்மொழிவல்லார், எம்பெருமானுடைய தனிமைகண்டு ஶுபப்படும் ஸம்ஸாரத்திலே பிறவாரென்கிறார்.*

---

*தானே'' என்றத்தைப்பற்ற*-பயநிவ்ருத்திக்கு உடலாய் என்றது. *பயஹேதுவானது பயநிவ்ருத்திக்குஉடலாகக்கூடுமோ? என்ன* - இவர்தமக்கு இத்யாதி.

*அர்த்தாந்தரம்* - சலநம் இத்யாதி. *''துளக்கம்'' என்று ஸம்ஸாரஸ்பர்ஶமாதல், ஜ்ஞாநஸங்கோசமாதல். பரிவர்களென்னுதே, 'தொழுவார்கள்' என்கிறதென்? என்ன* - அடிமையாவது இத்யாதி. *ஹலிதம்* - பரிகிறவர்கள் இத்யாதி. குழைசரக்கு - *ரக்ஷ்யவஸ்து. உலக்க-முடிய. முன்பு மிடுக்கைக்காட்ட பயப்பட்டுப் பரிகிற இவர், இப்போது ஸமாஹிதரானதுக்கு ஹேதுவை இரண்டுவகையாக அருளிச்செய்கிறார்* - முன்பு இத்யாதி வாக்யத்வயத்தாலே. *''உரையீர்'' என்றது - ஸந்நிஹித* ஸ்ரீ*வைஷ்ணவர்களைக்குறித்து. 'கலக்கமில்லா' என்றுதொடங்கி, தொழுவார்கள் - மாகடல் தன்னை - மலக்கமெய்த - கடைந்தானை, நாம் - உலக்க - புகழ்கிறபது என்செய்வது? உரையீர் இத்யந்வய:.* (க0)

[உரையாவென்று தொடங்கி] - வாயால் பேசவொண்ணாதபடி தமக்கு வர்த்தித்த பயம்போம்படியருளும் ஸ்வபாவனாய் அதுக்கீடான ஸர்வேஶ்வரத்வஸூசகமான பெரிய திருவபிஷேகத்தையுமுடையவனைத் தம்முடைய வ்யஸநம்போகையாலே ஸம்ருத்தமான திருநகரியையுடைய ஆழ்வாருடைய உக்தியாய் சேர்ந்த சொற்றொடையை உடைத்தாயிருந்துள்ள விலக்ஷணமான ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழியை. [நிரையேவல்லார்] - அர்த்தக்ரமத்திலே அறிவார்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை அப்யஸித்தார்க்கு ஃபலமாக ஸம்ஸாரநிவ்ருத்தியை அருளிச்செய்கிறார்,

உரையா - வாசாமகோசரமாம்படி, ("ஸௌகுமார்யாதிகளுக்கு என்னவருகிறதோ?" என்று அதிஶங்கையைப்பிறப்பித்து), வெம் - பரிதாபஹேதுவான, நோய்- (கலக்கமாகிற) நோயானது, தவிர - தீரும்படியாக, அருள் - தன்னுடைய விபூதிபூர்த்தியையும் ஶக்திபூர்த்தியையுங்காட்டின, நீள்முடியானை - ஸர்வாதிகஶேஷியானவனை, வரை - வரை, ஆர் - செறிந்தாற்போலேயிருக்கிற, மாடம் - மாடங்கள், மன்னு - ஸ்திரமாம்படியாயிருக்கிற, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் — ஆழ்வாருடைய, உரை - உக்திப்ரகாரமாய், ஏய் - செறிந்த, சொல்தொடை - சொல்தொடையையுடைத்தாய், ஓர் - அத்விதீயமான, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இப்பத்தும் - இப்பத்தையும், நிரையே - அடைவுபட, வல்லார்-சொல்லவல்லர்கள்,—நீடு - விஸ்தீர்ணமாய், உலகத்து — (பகவத்விஷயத்துக்குப் பரிவரில்லாத) இஸ்ஸம்ஸாரத்திலே, பிறவார் - பிறவார். இது - கலித்துறை.

இ.— நிகமத்தில், இத்திருவாய்மொழியை யப்யஸிப்பார், அவன்தனிமை கண்டு பயப்படும் ஸம்ஸாரத்தில் பிறவாரென்கிறார்.

[உரையா வெந்நோய்] - வாசாமகோசரமாய் அதிக்ரூரமான நோய். தம்மளவில் ஸாத்மிக்கையன்றிக்கே, "உபயவிபூதியுக்தனுக்கு என்வருகிறதோ?" என்று அஞ்சின நோயிறே. [தவிரஅருள்] - இதுபோம்படிக்கீடாக அருளும் ஸ்வபாவனான உபயவிபூதி நாதனை. இவ்வாழ்வாருடைய பயந்தீர்ந்தபின்பாயிற்று உபயவிபூதிக்கும் ரக்ஷகனைச் சூடின முடி நிலைநின்றதாயிற்று. [வரையார் இத்யாதி] - இவர் பயம் நிவ்ருத்தமானவாறே, ஸம்ருத்தமுமாய் ஸ்திரமுமாயிற்றுத் திருநகரியும். உக்தியாய்ச்சேர்ந்த சொற்றொடையையுடைத்தாய், விலக்ஷணமான ஆயிரம். [இப்பத்தும் நிரையேவல்லார்] - இப்பத்தை அடைவுதப்பாமல் அப்யஸிக்கவல்லார். தமக்குப்பிறந்த கலக்கத்தாலே, இதில் இழிவார்க்கும் அடைவுபட அநுஸந்திக்கவொண்ணாதென்றிருக்கிறார். [நீடுலகத்துப் பிறவாரே] - பூமிப்பரப்படைய அநுஸந்தித்தால், பரப்பேயாய், ஸர்வேஶ்வரன் தனிமைக்குப்பரிய ஒருவரைக்கிடையாத இத்தேசத்தில் பிறவார்கள்; ஒருநாடாக மங்களாஶாஸநம் பண்ணுகிற தேசத்திலேபோய் நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்கள்.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழி யப்யஸிப்பார், அவன்தனிமைகண்டு பயப்படும் ஸம்ஸாரத்தில் பிறவா ரேன்கிறார்.

---

நிகமம் - உரையா இத்யாதி. "வல்லார் நீடுலகத்துப்பிறவார்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி.

[உரையாவெந்நோய்] - வாசாமகோசரமாய், அதிக்ரூரமான நோய். தம்மள வில் ஸாத்மிக்கையன்றிக்கே, "உபயவிபூதிநாயனுக்குளன்வருகிறதோ?" என்று அஞ் சின நோயிறே [தவிரவருள்நீள்முடியானை] - இதுபோம்படிக்கீடாக அருளும் ஸ்வபா வனை உபயவிபூதிநாயனை. "இவர்பயம்போம்படி 'உம்முடைய அபேக்ஷிதம் செய் கிறேம்' என்று ப்ரஸ்ஸம்பநம் பண்ணினான்போலேகாண்" என்று அம்மங்கியம்மாள். இவ் வாழ்வாருடைய பயம் நிவ்ருத்தமானபின்பாயிற்று, உபயவிபூதிக்கும் ரக்ஷகனாய்ச் சூடின முடியும் நிலைநின்றதாயிற்று. [வரையார்இத்யாதி] - இவர்பயம் நிவ்ருத்தமானவாறே ஸம் ருத்தமுமாய் ஸ்த்திரமுமாயிற்றுத் திருநகரியும். [உரையேய் இத்யாதி] - உக்தியால் சேர்ந்த சொல் தொடையையுடைத்தாய் விலக்ஷணமான ஆயிரம். [இப்பத்தும் நிரையேவல் லார்] - இப்பத்தை அடைவுதப்பாமல் அப்யஸிக்கவல்லார்: தமக்குப்பிறந்த கலக்கத் தாலே, இதிலிழிவார்க்கும் அடைவுபட அநுஸந்திக்கவோண்ணு தென்றிருக்கிறர். [நீடுல கத்துப்பிறவாரே] - இப்பூமிப்பரப்பையடைய அநுஸந்தித்தால், பரப்பேயாய், ஸர்வேஶ் வரன்தனிமைக்குப் பரிய ஒருவரைக் கிடையாத இத்தேசத்திலே பிறவார்கள்; ஒருநாடாக மங்களாஶாஸநம்பண்ணுகிற தேசத்திலேபோய் நித்யாநுபவம் பண்ணப்பெறுவர். (கக)

*உரையா - உரைக்கப்போகாதபடியான என்றபடி. வாசாமகோசரதை ஏதென்ன - தம்மளவில் இத்யாதி. தம்மளவில் ஸாத்மிக்கையன்றிக்கே என்றது - ஸம்ஸாரதோஷத்தைக் கண்டு தமக்காகப் பயப்படுகையன்றிக்கே என்றபடி. "நீள்முடியான்" என்றதுக்கு அர்த்தம் - உபயவிபூதிநாதனை என்று. பரிகிறப்ரகாணத்திலேதிருவபிஷேகத்தைச்சொன்னதுக்கு இரண்டு வகையாக பாவம் - இவர்பயம் இத்யாதி வாக்யத்வயத்தாலே. "வரையார்மாடம் -" வரை யோடே ஸாத்ருஶ்யாகாரேணபொருந்தின மாடமென்றபடி. இதுக்குபாவம் - இவர்பயம் இத் யாதி. மன்னு - ஸ்திரமான என்றபடி. ஏய்கை - பொருந்துகையாய், ஸுப்தங்களாய்ச்சேர்ந்த ஶப்தஸந்தர்ப்பமென்றபடி - நிரையே - அடைவே என்றபடி. அடைவென்கிறதென்? அருமையுண் டோ? என்ன - தமக்குப்பிறந்த இத்யாதி. அநுஸந்தித்தால் - விசாரித்துப்பார்த்தால் என்றபடி. 'வரையார்மாடமன்னுகுருகூர்ச்சடகோபன் - உரையாவெந்நோய் தவிர அருள் நீள்முடியானை - உரையேய்சொல்தொடை' இத்யாரப்ய, 'பிறவார்' இத்யந்வய:* (கக)

**த்ராவிடோபநிஷத்ஸங்கதி.** — [illegible]

**த்ராவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.** — [illegible]

| | | |
|---|---|---|
| **திருவாய்மொழி நூற்றந்தாதி.** | } | *அங்கமரர்பேண அவர்கட்கேவாழ்திருமாற்கு இங்கோர்பரிவரிலையென்றஞ்ச—எங்கும் பரிவருளரென்னப்பயந்தீர்ந்தமாறன் வரிகழற்றுள்சேர்ந்தவர்வாழ்வார்.* |

*ஆழ்வார்திருவடிகளே ஶரணம், எம்பெருமானார்திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.*

# நான்காந் திருவாய்மொழி—வார்கடாவருவி - ப்ரவேஶங்கள்.

ஆ.—இப்படி விரஹவைர்மாஸிதப்தரான ஆழ்வாருடைய விடாயைப் போக்கியருளுகைக்காக, முன்னமே திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையிலே, ஒரு தாமரைத்தடாகம் நின்றாற்போலே தான் நின்றருளினபடியைக் காட்டக்கண்டு, ப்ரீதியாலே, ஸகலஜநமநோநயநஹாரி திவ்யசேஷ்டித ஸௌலப்ய ஸௌந்தர்யாதி கல்யாண குணகண ஸர்வேஶ்வரத்வங்களைப்பேசி, அந்தத்தாமரைத்தடாகம் இருந்தவிடத்தேறச் செல்லவேணுமென்கிறார்.

ஒ.—நாலாந்திருவாய்மொழியில் கீழில் திருவாய்மொழியில் எம்பெருமானுடைய தனிமையை யநுஸந்தித்து மிகவும் பீதரான ஆழ்வார்க்கு, ஶௌர்யவீர்யாதி குணங்களையும், ஸ்ருஷ்டிஸ்தித்யாதிகளாகிற அத்புதகர்மங்களையு முடையனாய், அதுக்குமேலே மிகவும்ஶக்திமான்களாய்த் தனக்குப் பரிவராயிருப்பார் அநேகரோடேகூடத் திருச்செங்குன்றூரிலே தானிருந்தருளினபடியைக் காட்டியருளக்கண்டு; எம்பெருமான், ஸ்ரீஸுக்ரீவ மஹாராஜருடைய பயத்தைத் தம்முடைய ஸாமர்த்த்யத்தைக்காட்டிடபெருமாள் தீர்த்தருளினாற்போலேயும், மல்லயுத்தத்தில் பார்ஶ்வஸ்தருடைய பயத்தை அம மல்லரை முடித்து க்ருஷ்ணன் தீர்த்தருளினாற் போலேயும், தம்முடைய பயத்தைப் போக்கியருள, அத்தாலே "க்ருதார்த்தனானேன், இனி அவனையல்லது எனக்கு தாரக போஷக போக்யாதிகளில்லை," என்று மிகவும் ப்ரீதராகிறார்.

ப.—நாலாந் திருவாய்மொழியில், கீழ் அவனுடைய ஸௌகுமார்யத்தாலே தனிமைக்குஅஞ்சின இவருடைய பயந்தீரும்படி பரிவரையும் ஶக்தியையுங்காட்டி ஆஶ்வஸிப்பித்த ஸர்வேஶ்வரன், "இவர் இப்படியஞ்சிற்று விரோதிபூயிஷ்டதேசமென்றாயிருக்கும்; நம்முடைய விரோதிநிவர்த்தகத்வத்தையும் ஜகத்ஸ்ருஷ்ட்யாதி ஶக்தியையுங் காட்டுவோம்" என்று இவர் திருவுள்ளத்திலே ப்ரகாஶிப்பிக்க; அவனுடைய அகில விரோதி நிவர்த்தகத்வத்தையும், அஶேஷ ஜகத்விஷயமான ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரத்தையும், ஆஶ்ரிதாபத்ஸகத்வத்தையும், ஆஶ்ரிதார்த்தமான அதிஶயித வ்யாபாரத்தையும், ஆஶ்ரயணீயஸ்தலாந்தர விலக்ஷணமான தேசவிஶேஷஸ்திதியையும, ஆஶ்ரயணீயதா வைலக்ஷண்யத்துக்கு அடியான ஸர்வப்ரகாரோபகாரகத்வத்தையும், அநுஸாவ்யமான ஆபிரூப்யாதிஶயத்தையும், ஜகஜ்ஜந்மாதி ஹேதுத்வத்தையும், ஸ்ரஷ்ட்ருஸ்ருஜ்யாதி விபாகமில்லாத ஸர்வாத்மபாவத்தையும், ஸததாவிர்பூதி ஹேதுவான நிருபாதிக ஶேஷித்வத்தையும் அநுஸந்தித்து, ஏவம்பூதனான ஸர்வேஶ்வரன், பரிவரான வைதிகாக்ரேஸருடைய ஸம்பத்தே தனக்குஸம்பத்தாம்படி திருச்செங்குன்றூரிலே யெழுந்தருளிநின்ற அதிஶயத்தை அநுஸந்தித்து ஸந்துஷ்டராகிறார்.

இ.—நாலாந்திருவாய்மொழியில் "ஸர்வேஶ்வரன் ஸம்ஸாரிகளுடைய அபேக்ஷையேயாலம்பநமாக ஸம்ஸாரத்திலே வந்து அவதரித்துத் தனியேயுலாவாநிற்கும். ஸம்ஸாரிகளும் தந்தாம் அபேக்ஷிதத்தைப்பற்றக் கிட்டுமதொழிய இவன்வாசியறிந்து பரியக் கடவாரில்லை. என்னாகிறதோ?" என்று அஞ்சின இவர்க்கு, அந்த அச்சந்தீரும்படி, 'நமக்குப் பரிவருமுண்டு; ஒருத்தர்பரிய வேண்டாதபடி அவர்களுக்கு ரக்ஷகமாம்படியான மிடுக்

கும் நமக்குஉண்டு'' என்று தன்படிகளைக் காட்டி ஸமாதாநம்பண்ண ஸமாஹிதராய்நின்றார் கீழ்; இதில்-''தேஹாத்மாபிமாநிகளுக்கு தேஹஜ்ஞாநம் பிறந்தாலும் தேஹாத்மாபிமானம் பின்னாட்டுமாபோலே, இவராகிறார் ப்ரேமஸ்வபாவராயிருப்பர், இன்னமும் மறுவலிடக்கூடும், மறுவலிடாதபடி பரிஹரிக்கவேணும்'' என்று தன் ஸௌர்யவீர்யாதி குணங்களையும், ஸ்ருஷ்ட்யாதிகளாகிற அத்புதகர்மங்களையும், எதிரிட்ட விரோதிவர்க்கத்தை வேரோடே வாங்கிப்போகடவல்ல ஸர்வஶக்தியையும் காட்டி; ஸ்ரீ விபீஷணாழ்வான் நிமித்தமாக மஹாராஜர்க்குப் பிறந்த பயத்தை, ''பிஶாசாந்தாநவாந்யக்ஷாந்'' என்று தன்மிடுக்கைக்காட்டிச் சக்ரவர்த்தித்திருமகன் போக்கினாற்போலேயும், மல்லயுத்தத்தில் ''நஸமம்யுத்தமித்யாஹு:'' என்கிறபடியே பாரஶ்வஸ்தருடைய பயத்தை க்ருஷ்ணன் மல்லரையழித்துத் தீர்த்தருளினாற்போலேயும், தம்முடைய பயத்தைப் போக்கியருள, அத்தாலே க்ருதார்த்தராய், ''இனி நமக்கு ரக்ஷகபோஷகபோக்யாதிகள் அவனல்லதில்லை'' என்று ப்ரீதராய் முன்பு அழகைக்கண்டு பரிவாலேபீதரானவர், அழகிலே நெஞ்சு சென்றுஅநுபவித்து க்ருதக்ருத்யராய்த் தலைக்கட்டுகிறார்.

ஈடு.—''ஸர்வேஶ்வரன் ஸம்ஸாரிகளுடைய அபேக்ஷையே ஆலம்பநமாக ஸம்ஸாரத்திலே வந்தவதரித்துத் தனியே உலாவாநிற்கும்: ஸம்ஸாரிகளும் தந்தாம் அபேக்ஷிதங்களைப்பற்றக் கிட்டுமதொழிய இவன்வாசியறிந்து பரியக்கடவாரில்லை: என்புகுகிறதோ?'' என்று அஞ்சின இவர்க்கு, அந்த அச்சந்தீரும்படி ''நமக்குப்பரிவருண்டு: ஒருத்தர் பரியவேண்டாதபடியான மிடுக்கும் நமக்குண்டு'' என்று தன்படிகளைக்காட்டி ஸமாதாநம்பண்ண ஸமாஹிதராய்நின்றார்-கீழ்; இதில்-''இவராகிறார் ப்ரேமஸ்வபாவராயிருப்பர், * காதல்மையலேறிக்கலங்கி, ''முக்தரும் நித்யரும் இங்கில்லையே, ஸநகாதிமுமுக்ஷுக்கள் நல்லதபஸ்ஸும் மநநத்யானமும் விடமாட்டார்கள்: கடல்கடைந்தது தேவயோநியிலேயன்றோ'' என்று கலங்குவர். இன்னம் இவர்க்கு இது மறுவலிடக்கூடும்'' என்று பார்த்து, மறுவலிடாதபடி தன்ஸௌர்யவீர்யாதி குணங்களையும், ஸ்ருஷ்ட்யாத்யத்புதகர்மங்களையும், எதிரிட்டவிரோதி வர்க்கத்தை வேரோடேவாங்கிப் போகடவல்ல ஶக்தியையும் காட்டிக்கொடுத்து, அதுக்குமேலே, ''அதிஶயிதஜ்ஞாநஶக்திகராய்த் தனக்குப்பரிவராயிருப்பார் மூவாயிரம் ப்ராஹ்மணருண்டு'' என்று காட்டிக்கொடுக்கக்கண்டு க்ருதார்த்தராய், அவன் வடிவழகிலேயும் நெஞ்சுசென்றநுபவித்து இனியராகிறார்.

ஸ்ரீ விபீஷணாழ்வான் †''ராகவம்ஶரணம்கத:'' (ராகவம்ஶரணம்கத:) என்றுவந்து விழுந்தபோது, மஹாராஜர் பெருமாள்பக்கல் ப்ரேமத்தாலேகலங்கி, துணுக்

வார்கடாவருவி ப்ரவேஶே,—ஸங்கதிகபூர்த்தம் வ்ருத்தத்தை அநுவதிக்கிறார் - ஸர்வேஶ்வரன் இத்யாதி. ஸமாஹிதராணல் மீளவும் இத்திருவாய்மொழியிலே பயநிவ்ருத்தி பண்ணிக்கொடுப்பானென்? என்ன - இதில் இவராகிறர் இத்யாதி. ''சீர்கொள்'' இத்யாதியைப்பற்ற - ஸௌர்யவீர்யாதி இத்யாதி. ''படைத்தளித்தழிக்கும்'' இத்யாதியைப்பற்ற - ஸ்ருஷ்ட்யாத்யத்புத இத்யாதி. ''கஞ்சனைத்தகர்த்த,'' ''அசுரர்வன்கையர்வெங்கூற்றை'' இத்யாதியைப்பற்ற - விரோதி வர்க்கத்தை இத்யாதி. ''வண்சிவனுமயனும் தானுமொப்பார்'' என்றத்தைப்பற்ற - அதிஶயித ஜ்ஞாந இத்யாதி. ''மனக்கொள்சீர்,'' ''மூவாயிரவர்'' இத்யாதியைப்பற்ற - தனக்குப் பரிவராய் இத்யாதி. ''திருச்செய்யகமலக்கண்ணும்'' இத்யாதியைப்பற்ற - அவன்வடிவழகிலேயும் என்றது.

அப்படி அவன் தன்ஸௌர்யாதிகளைக்காட்டி ஸமாதாநம்பண்ண பயந்தீர்ந்து ஸமாஹிதரானார் உண்டோவென்ன, - இரண்டு த்ருஷ்டாந்தங் காட்டுகிறார் - ஸ்ரீவிபீஷணாழ்வான் இத்யாதி

† ரா- யுத்- 17, 14.

கேன்று, ''இவன்சொன்னவார்த்தை பெருமாள் திருச்செவியிலே படுமாகில் சாலத்தப்பாம்'' என்று, ''நாயன்றே! ராவணப்ராதா ராக்ஷஸஜாதி: அவன் புத்ரக்கடவனல்லன்'' என்ன, ''இவர் நம்பக்கல் பரிவாலேசொல்லுகிறவார்த்தை, நம்மடேக்கைக்காட்டவே தெளிவர்'' என்றுபார்த்து, ''**விஶாசாந்தாநவாந்**'' (பிஶாசாந்தாநவாந்) இத்யாதியாலே தம்முடைய மிடுக்கைக்காட்டக்கண்டு அவர் அச்சந்தீர்ந்து, ''**கிமத்ரசித்ரம்**'' (கிமத்ரசித்ரம்) என்று இனியரானுற்போலவும், மல்லயுத்தத்தில் *''**நஸமம்யுத்தமித்யாஹு:**'' (நஸமம்யுத்தமித்யாஹு:) என்கிற பார்ஶ்வஸ்த்தருடைய ஹயத்தை, அவர்கள் ஸந்நிதியிலே க்ருஷ்ணன் மல்லரை யழியச்செய்து தீர்த்தருளினுற்போலவும், தம்முடைய ஹயத்தைப் போக்கியருள, அத்தாலே க்ருதார்த்தராய், ''இனி நமக்கு யாரகபோஷக ஹோக்யங்கள் இவனல்லது இல்லை'' என்று ப்ரீதராய், முன்பு அழகைக்கண்டு பரிவாலே ஹீதரானவர், அழகிலே நெஞ்சுசென்றநுஹவித்து க்ருதார்த்தராய்த் தலைக்கட்டுகிறுர்.

## முதற் பாட்டு.

வார்கடாவருவியானைமாமலையின் மருப்பிணைக்குவடிறுத்துருட்டி,
ஊர்கொள்திண்டாகனுயிர்செகுத்துஅரங்கின் மல்லரைக்கொன்றுசூழ்பரண்
மேல், போர்கடாவரசர்புறக்கிட மாடமீமிசைக்கஞ்சனைத்தகர்த்த, சீர்
கொள்சிற்றுயன்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றுறுஎங்கள்செல்சார்வே.

*ஆ.*—(வார்கடாவருவி) - *நிஷ்யந்தமாந மதஜலமாகிற ஸரித்தையுடைத்தான குவலயாபீடமாகிற மஹாசலத்தினுடைய தந்தயுகளமாகிற ஶிகரங்களை முறித்துருட்டி, ஊர்கொள் திண்பாகனுயிர் செகுத்து, ஹஜதந்த வாயுத தரராய், நம்பி மூத்தபிரானும் தானும் ஸர்வலீலாவலோகிதங்களையுடைய இரண்டுஸிம்ஹங்கள் க்ஷுத்ரம்ருகங்கள் நடுவே புக்காற்போலே, ரங்கமத்யத்திலே போய்ப்புக்கு மல்லரைக்கொன்று, மஞ்சோபரிஸ்த்திதராய், இத:பூர்வம் யுத்தத்தில் பராஜிதரான ராஜாக்கள் த்ரஸ்தராய்க் கெடும்படி யெழப் பாய்ந்து, மஞ்சோந்நதஸ்த்தலஸத்தனை கம்ஸனை, * வெண்ணெய்விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டத னேசைகேட்டு விளையாடினுற்போலே தகர்த்த சீர்கொள் சிற்றுயன் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றுறு எங்களுக்கு ப்ராப்யமென்கிறுர்.*

ஒ.—*முதற்பாட்டில், குவலயாபீட மல்லப்ரப்ருதிகளான ப்ரதிகூலரை நிரஸித்த சீர்கொள் சிற்றுயனுடைய திருச்செங்குன்றூரில் திருச்சிற்றுறு எங்களுடைய ஹயத்தைப் போக்கவல்ல புகலென்கிறுர்.*

பெருமாள் உக்தியாலே பயத்தைப் போக்கினுர்: க்ருஷ்ணன் அநுஷ்டாநத்தாலே பயத்தைப்போக்கினன். ''தேனை நன்பாலை'' இத்யாதியைப்பற்ற - இனி நமக்கு யாரக இத்யாதி. ''**விஶாசாந்** **தாநவாந்யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந் । அங்குல்யக்ரேண தாந்ஹந்யாமிச்சந்ஹரிகணேஶ்வர**'' இதி யுத்தகாண்டே, அபயப்ரதாநப்ரகரணே, ஸ்ரீவசநம். தத்ரைவ, ஸ்ரீவச: ''கிமத்ரசித்ரம் தர்மஜ்ஞ லோகநாதஶிகாமணே । யத்த்வமார்யம் ப்ரபாஷேதா: ஸத்த்வவாந்ஸத்பதே ஸ்த்தித:''. (க)

* ரா - யுத் - 103 - 5½.

[வார்கடாவென்று தொடங்கி] - பாயாநின்றுள்ள மதஜலமாகிற அருவியை யுடைய ஆனையாகிற பெரியமலையினுடைய இரண்டுகொம்புகளாகிற ஶிகரங்களை அநாயாஸேந முறித்து அத்தையுருட்டி நிலையுடையனுப், ஆனையைநடத்துகிற பாகனுடைய ப்ராணனைப்போக்கி ரங்கத்திலே புகேஶாந்முவரான மல்லரைக்கொன்று. [சூழ்பர ணென்று தொடங்கி] - சூழவுண்டான பரண்களின்மேலே நின்ற ஆண்பிள்ளைகளான ராஜாக்கள் முதுகிட்டுப் போம்படி மாடத்தின்மேலேயிருக்கிற கம்ஸனை விழவிட்டுத் தகர்த்த.

ப.—முதற்பாட்டில், குவலயாபீடம் முதலான அகில விரோதிநிரஸகனை சீர்கொள் சிற்றுயன் வர்த்திக்கிற திருச்செங்குன்றூர் நமக்கு நிர்ப்பயமான ஆஶ்ரய ணீயஸ்தலமென்கிறுர்.

வார் - பாய்கிற, கடா - மதமாகிற, அருவி - அருவியையுடைய, ஆனை - ஆனை யாகிற, மா - பெரிய, மலையின் - மலையினுடைய, மருப்பு - கொம்புகளாகிற, இணை - சேர்ந்த, குவடு - சிகரங்களை, இறுத்து - முறித்து, உருட்டி - (அநாயாஸேந ஆனையை) உருட்டி, ஊர்கொள் - (ஆனை கொம்பு முறிந்திருக்கவும்) நடத்திக்கொண்டு வரவல்ல ஶிக்ஷையில், திண் - திண்மையையுடையனை, பாகன் - பாகனுடைய, உயிர் - ப்ராணனை, செகுத்து - அழித்து, (அநந்தரத்திலே), அரங்கில் - ரங்கமத்யகதரான, மல்லரை - (சாணூரமுஷ்டிகராகிற) மல்லரை, கொன்று - கொன்று, சூழ் - (ரங்கம்) சூழ்ந்த, பரண்மேல் - மச்சுக்களிலே (நிற்பாராய்), போர் - போரை, கடா - நடத்தக்கடவ, அரசர் - ராஜாக்கள், புறக்கிட - பிறகிட்டுப்போம்படியாக, மாடமீமிசை - உத்துங்கமான மாடத்தில் மேல்நிலத்திலேயிருக்கிற, கஞ்சனை - கம்ஸனை, தகர்த்த - (பசளைக்குட முடைத்தாற்போலே தள்ளிக்குதித்து) உடைத்துப்பொகட்ட, சீர் - வீரஸ்ரீயை, கொள் - உடையனுய், சிறு - பாலனுன, ஆயன் - க்ருஷ்ணனெழுந்தருளிநிற்கிற, திருச்செங் குன்றூரில் - திருச்செங்குன்றூரில், திருச்சிற்றுறு - திருச்சிற்றுறுனது, எங்கள் - எங்க ளுக்கு, செல் - சென்று கிட்டுகைக்கு, சார்வு - ஆஶ்ரயணீயஸ்தலம்.

இ.—முதற்பாட்டில், குவலயாபீடம் முதலான ப்ரதிகூலரை நிரஸித்த சீர்கொள் சிற்றுயனுடைய திருச்செங்குன்றூரில் திருச்சிற்றுறு எங்களுக்கு நிர்பயமான புகலென்கிறுர்.

[வார்கடாவருவியானை மாமலையின்] - வாராநின்றுள்ள மதஜலமான அரு வியையுடைய ஆனையாகிற மாமலையினுடைய. கடா - மதம். மதகரமான த்ரவ்யங் களைத் தீற்றிப்பிச்சேற்றி, புகுகிறவாசலிலே நிறுத்தினுன், ப்ரமாதத்தாலே பிறந்த தென்று மாதுலனுய் வெறுத்துவிடுவானுக நினைத்து. "புகுவாய்நின்ற போதகம்வீழப் பொருதான்" என்னக்கடவதிறே: "பொற்றையுற்ற முற்றல்யானை" என்றுதொடங்கி, "மருப்பொசித்த பாகன்" என்னக்கடவதிறே. [மருப்பிணைக் குவடிறுத்து] - மருப் பாகிற இணைக்குவடுகளை யிறுத்து: கொம்பாகிற சேர்ந்தஶிவரங்களை அநாயாஸேந முறித்து. [உருட்டி] - திருவடிகளாலே அநாயாஸேந நூக்கி. [ஊர்கொள் திண்பாக னுயிர்செகுத்து] - திண்ணியனுய் ஆனையைநடத்துகிற பாகனுடைய ப்ராணனைப்போக்கி. திண்மையாகிறது - ஆனை கொம்பைமுறிந்தாலும் உயிர்பெறுத்தி நடத்தவல்ல ஶிக்ஷா பலம். ஆனையின்கொம்பை முறித்தாலும் இவனையழியாவிடில் ப்ரயோஜநமில்லை. ஆனையின்கொம்பை முறிக்கைக்குள்ள அருமைபோருமாயிற்று, இவனுயிரைப் போக்கு

கைக்கு. [அரங்கின் மல்லரைக்கொன்று] - ஆனையினுடைய இரண்டுகொம்பையும் இருவருங்கொண்டு ரங்கமத்யத்திலே புக்கவளவிலே, யுத்தோந்முகராய்வந்த சாணூர முஷ்டிகரைக்கொன்று. ஆனைபோயிற்றாகிலும் மல்லருண்டென்று கம்ஸன் நினைத்திருந்தவர்களையும் அழியச்செய்தபடி. “ நவஸம்யோகஸ்ஸித்யாஹா: ” என்று பெண்கள் முதலான பார்ஸ்வஸ்தரடங்கக் கூப்பிட்டு ஸீதரான ஸமயத்திலே, அவர்கள் ஐயமெல்லாம் போம்படி அநாயாஸேந மல்லரைக்கொன்று. [சூழ்பரண்மேல்] - சுற்றுமுண்டான மஞ்சஸ்தலத்தின்மேலே நின்ற. [போர்கடா அரசர்புறக்கிட] - கெடும்படையை வெற்றியுண்டாம்படி கடாவிப்போரும் அரசர். “ ஸேநாநயவிஶாரதா: ” என்கிறபடியே, தூசித்தலையிலே வெற்றியேயடல்லது மீளாதபடி படைபொருத்தி யுத்தத்தை நடத்தவல்ல ராஜாக்கள் ஸிம்ஹத்தைக்கண்ட நரிபோலே முதுகுகாட்டி ஓடும்படியாக. [மாடமீமிசை] - “ துங்கஶைலமிவ ஸ்ரிதம் ” என்கிறபடியே, உயர்ந்த மாடத்திலேயிருந்த. [கஞ்சனைத்தகர்த்த] - கம்ஸனைக் கீழே விழவிட்டு மேலே தான் குதித்து, அதிலேநக்கரைந்து நசிக்கும்படிபண்ணினான்; “ ஜக்ராஹ தம் க்ருஷ்ண: கேஶேஷு நஷ்டமௌலிநம் ” என்கிறபடியே. “ கேஶேஷ்வாக்ருஷ்ய விகளத்கிரீடமவநீதலே ஸ கம்ஸம் பாதயாமாஸ தஸ்யோபரி பபாத ச ॥ ” “ராஜத்ரோஹிகளைக் கொல்லும்போது ராஜசிஹ்நங்களை வாங்கிக்கொல்லுமாபோலே, தான்கொடுத்த முடியைவாங்கிக் காண் கொன்றது !” என்று பணிக்கும் அம்மங்கியம்மாள். [சீர்கொள் சிற்றாயன்] - பருவம் நிரம்பாதிருக்கச்செய்தே, வீரஸ்ரீயால் குறைவற்றிருக்கிறவன். [திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு] - புலிநின்ற தூறுபோலே ப்ரதிகூலர்க்கு அஞ்சவேண்டும் ஊர். [எங்கள்] - மஹாராஜர், பெரியாழ்வார், ஸ்ரீவிதுரர், தாம் இவ்வனைத்த பரிவர்க்கு. [செல்சார்வே] - நிர்பயஸ்தாநமென்று புகும் புகல்; கீழ் இவர்க்கு ஓடினபயம்நீங்கிற்று என்னுமது இபல் தழைப்பிலே தெரிந்திருக்கிறபடி கண்டதே.

ஈடு.—முதற்பாட்டு. குவலயாபீடம் முதலான ப்ரதிகூலரை நிரஸித்த சீர்கோள் சிற்றாயனுடைய திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு எங்களுக்கு நிர்ப்பயமான புகலென்கிறார்.

[வார்கடாவருவியானைமாமலையின்] - வாராநின்றுள்ள மதஜலமான அருவியையுடைய ஆனையாகிற மாமலையினுடைய. கடா - மதம். மதகரமான த்ரவ்யங்களைத் தீற்றிப் பிச்சேற்றி, புகுகிறவாசலிலே நிறுத்தினான், ப்ரமாதத்தாலே வந்ததென்று மாதுலனாய்க் கண்ணநீர்விழவிட்டுத்தானிருப்பானாக. “புகுவாய்நின்றபோதகம் வீழப்பொருதான்” என்னக்கடவதிறே. [மருப்பிணைக் குவடிறுத்து] - மருப்பாகிற இணைக்குவடுகளை இறுத்து: கொம்பாகிற ஶிகரங்களை அநாயாஸேந முறித்து. அம்மலையிலே இரண்டு ஶிக

---

முதற்பாட்டு.—வார்கடா இத்யாதி. வார்கடாவருவி தொடங்கி, “ எங்கள்செல்சார்வு ” என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை-குவலயாபீடம் இத்யாதி.

வார்தல் - ஒழுகுதல். அருவிபோலே மதம் ப்ரவஹிக்கைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் - மதகரமான இத்யாதி. தீற்றி - புஜிப்பித்து. நிறுத்தினவனுக்குக் கருத்து அருளிச்செய்கிறார் - ப்ரமாதத்தாலே இத்யாதி. அப்படி வாசலிலே நிறுத்தினானேயென்ன - புகுவாய் இத்யாதி. புகுகிறவழியிலே நின்ற குவலயாபீடமானது முறிந்துவிழும்படி பொருதவன் வர்த்திக்கிற தேசமென்றபடி. திருமொழி, ஆறும்பத்து, ஐந்தாந்திருமொழி, ஆறும்பாட்டு, “புகுவாய்” இத்யாதி. போதகம் - ஆனை. அது எப்படியிருக்கிறதென்ன - அம்மலையிலே இத்யாதி. இது

ரங்களை ஒடித்தாற்போலே. [உருட்டி] - கொம்புகளைப்பறித்தவாறே யுளுக்காந்தது: திருவடிகளாலே அநாயாஸேந தள்ளி. [ஊர்கோள்திண்பாகன்] - உயிருள்ள பதார்த்தத்தை நடத்துமாபோலே நடத்தவல்லனுயிற்று ஶிக்ஷாபலத்தாலே. திண்ணியனுய் ஆனையை நடத்துகிற பாகன். [உயிர்செகுத்து] - அத்தைத் தள்ளினுலும் இவனுயிர் போகாதவன்று அத்தை முடித்ததாகாது காணும். [அரங்கின்மல்லரைக்கொன்று] - ஆனையின் கொம்புகளை இரண்டையும் இருவருங்கொண்டு ரங்கமத்யத்திலே புக்கவளவிலே, அச்செருக்குப் பொறுமையாலே, யுத்தோந்முகராய் வந்த சாணூரமுஷ்டிகர்களைக் கொன்று. ஆனை திர்யக்காகையாலே விரகறியாதே பட்டது; அது போயிற்றாகிலும் மல்லருண்டேன்று கம்ஸன் நினைத்திருந்தவர்களை அழியச்செய்தபடி. † "நஸமம்யுத்தமித்யாஹு:" (நஸமம்யுத்தமித்யாஹு:) என்று பெண்கள்முதலான பார்ஶ்வஸ்தரடங்கக் கூப்பிட்டு ஸீதரான ஸமயத்திலே, அவர்கள் ஹயமெல்லாம் போம்படி அநாயாஸேந மல்லரைக்கொன்று. [சூழ்பரண்மேல்]-சுற்றுமுண்டான மஞ்சத்தின்மேலே நின்ற. [போர்கடாவரசர்புறக்கிட]-கெடுபடையை வெற்றியுண்டாம்படி கடாவிப்போரு மரசர்: "ஸேநாநயவிஶாரதா:" (ஸேநாநயவிஶாரதா:) என்கிறபடியே தூசித்தலையிலே வேற்றியோடல்லது மீளாதபடி படைபொருத்தி யுத்தத்தை நடத்தவல்ல ராஜாக்கள் முதுகுகாட்டி ஓடும்படியாக. [மாடமீமிசை]-"துங்கமஞ்சவ்யவஸ்த்தித:" (துங்கமஞ்சவ்யவஸ்த்தித:) என்கிறபடியே, உயர்ந்த மாடத்திலே இருக்கிற. தனக்கு ஹயம்எவ்வளவுண்டு அவ்வளவும் உயர்த்தினுயிற்று மாடத்தை. [கஞ்சனைத்தகர்த்த] - அவனிருக்கிற இடத்தளவும் எழப்பாய்ந்து, "கஞ்சன் குஞ்சிபிடித்தடித்தபிரான்" என்கிறபடியே - மயிரைப்பிடித்துக் கீழே விழவிட்டு மேலே பாய்ந்து பசளைக்கலம்போலே உடைத்தான்; "அவஜ்ஞயாஹதம்த்ருஷ்ட்வா க்ருஷ்ணேநமதுரேஶ்வரம்" (அவஜ்ஞயாஹதம்த்ருஷ்ட்வா க்ருஷ்ணேநமதுரேஶ்வரம்) என்கிற

"குவடு" என்றதுக்கு ஹாவம். "உருட்டி" என்றதுக்கு ஹாவம் - கொம்புகளை இத்யாதி. கொம்புகளைப்பறித்து உருட்டினுல் இவன் நடத்தும்படி எப்படியென்ன - உயிருள்ள இத்யாதி. ஶப்தார்த்தம்-திண்ணியன் இத்யாதி. ஆனையைக்கொன்றால் போராதோ, பாகனையும் முடிக்கிறதென்? என்ன - அத்தைத்தள்ளினுலும் இத்யாதி. ஆனையையும் பாகனையும் நிரஸித்தவநந்தரம், மல்லர்களை நிரஸிக்கைக்கு நிதாநத்தை அருளிச்செய்கிறார் - ஆனையின் இத்யாதி. இம்மல்லநிரஸநத்தால் ஃபலித்த ப்ரயோஜநத்தை அருளிச்செய்கிறார் - ஆனைதிர்யக்கு இத்யாதி. கீழ்ச்சொன்ன ப்ரயோஜநத்தை ப்ரகாராந்தரேண அருளிச்செய்யாநின்றுகொண்டு, ஶப்தார்த்தமும் அருளிச்செய்கிறார் - நஸமம் இத்யாதி. கடா - கடாவுகிற. அவர்கள் யுத்தத்தை நடத்துகிற ஸாமர்த்த்யத்தின் உறைப்பை அருளிச்செய்கிறார் - கெடுபடையை இத்யாதி. விவரணம் - ஸேநாநய இத்யாதி. "அவிதாதாஹதஶூரவஸேநாநயவிஶாரதா: । அத்யஷ்டவ்யஸ்தாநகேஷ்வேதே ஸர்வஸாஶேஷா:" உத்யோகபர்வணி (உக) ஶ்லோக:. "மீமிசையானமாடம்" என்றதுக்கு ப்ரமாணங்காட்டாநின்றுகொண்டு, அதுக்கு அர்த்தமும் அருளிச்செய்கிறார்-துங்கஇத்யாதி. மாடத்தை உயர்த்துவானேன்னென்ன-தனக்கு பயம் இத்யாதி. மஞ்சத்திலிருக்கிறவனை நிரஸித்த ப்ரகாரத்தை விசதமாக்காநின்றுகொண்டு, "தகர்த்த" என்றதுக்கு அர்த்தம் - அவனிருக்கிற இத்யாதி. பசளைக்கலம் - பச்சைப்பானை. அநாயாஸேந கொன்றதுக்கு ப்ரமாணம் – அவஜ்ஞயா இத்யாதி. மயிரைப்பிடித்துக் கீழேவிழவிட்டு மேலே பாய்ந்து கொன்ற

† இது, ராமாயணத்தில் யுத்தகாண்டத்திலே (103-5) தேவகந்தர்வாதியரின் வசனமாக வந்துள்ளதேயாகிலும், ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஸௌகுமார்யத்தையும் அசுரரின் கொடுமையையுங்கண்டு அஞ்சிய மதுராநகரத்துப் பெண்களின் வசனமாகவும் வருதற்குரியதாதலால் இங்கு எடுத்தாளப்பட்டதென்பர்.

படியே. "கேஶேஷ்வாக்ருஷ்ய விகளத்கிரீடமவநீதலே | ஸகம்ஸம்பாதயாமாஸ தஸ்யோபரிபபாதச." (கேஶேஷ்வாக்ருஷ்ய விகளத்கிரீடமவநீதலே | ஸகம்ஸம்பாதயாமாஸ தஸ்யோபரிபபாதச). "ராஜத்ரோஹிகளைக்கோல்லும்போது ராஜசிஹ்நங்களை வாங்கிக் கோல்லுமாபோலே, தான் கோடுத்த முடியை வாங்கிக்காண் கோன்றது" என்று அம்மங்கியம்மாள் பணிப்பர். [சீர்கோள்சிற்றுயன்] - பருவம் நிரம்பாதிருக்கச்செய்தே வீரஸ்ரீயால் குறைவற்றிருக்கிறவன். [திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு] - புலிநின்றதூறுபோலே ப்ரதிகூலர்தங்களுக்கு அஞ்சவேண்டுமூர். [எங்கள்]-மஹாராஜர், பெரியாழ்வார், ஸ்ரீவிதுரர், தாம், பிள்ளையுறங்காவில்லிதாஸர், இங்ஙனொத்த பரிவர். [செல்சார்வே] - நிர்ப்பயஸ்த்தாநமென்று புகும் புகல். கீழ், இவர்க்கு ஓடினஹயம்நீங்கிற்றென்னுமிடம் இயல்தழைப்பிலே தெளிந்திருக்கிறபடி கண்டதே! (க)

## இரண்டாம் பாட்டு.

**எங்கள்செல்சார்வு யாமுடையமுதம் இமையவரப்பனென்னப்பன் [ன்**
**பொங்குமூவுலகும்படைத்தளித்தழிக்கும் பொருந்து மூவுருவனெம்மருவ**
**சேங்கயலுகளுந்தேம்பணைபுடைசூழ் திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு**
**அங்கமர்கின்ற ஆதியானல்லால் யாவர்மற்றுஎன்அமர் துணையே?**

ஆ.—(எங்கள்செல்சார்வு) - நமக்கு ப்ராப்யமாய், நமக்கு போக்யமாய், * அயர்வறுமமரர்களதிபதியாய், எனக்கு ஸ்வாமியாய், நிகிலலோகவநநிர்மாணத்ராண ஸம்ஹாரணலீலனாய், த்ரிமூர்த்திரூபனாய், ப்ரதிகூலஜநதுர்த்தர்ஶனாய், ஸர்வகாரணமாய், மதமுதிதமீநாகுல மஹாமிளிதஸலில ஶீதள ஶ்யாமள பஹுள பலாச ஸாரஸி குஸும தருநிகர பரிவ்ருதமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு அங்கமர்கின்றவனல்லது மற்று எனக்கொரு துணையில்லையென்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், ஜகத்ஸ்ருஷ்ட்யாதிஸமர்த்தனாய் திருச்செங்குன்றூரிலே நின்றருளின எம்பெருமானல்லது எனக்கு நல்ல துணையில்லை என்கிறார்.

---

துக்கு ப்ரமாணம் - கேஶேஷு இத்யாதி. கஞ்சன்குஞ்சி பிடித்தடித்தபிரான் - கம்ஸனுடைய மயிரைப்பற்றி யடித்த உபகாரகன் இத்யர்த்த:, திருமொழி, மூன்றாம்பத்து, பத்தாந்திருமொழி, மூன்றாம்பாட்டு, "உம்பரும்" இத்யாதி. விகளத்கிரீடு என்றதுக்கு ப்ரயோஜநத்தை ஆப்தஸம்வாதத்தாலே ஊர்ஜிப்பிக்கிறார் - ராஜத்ரோஹிகளை இத்யாதி. "சிற்றாயன் - சீர்கோள்" என்று அந்வயித்து பாவம் - பருவம் இத்யாதி. சூரன்வர்த்திக்கிறவூர் என்றதுக்கு பாவம் - புலிநின்ற தூறு இத்யாதி. "எங்கள்" என்ற பஹுவசநத்துக்கு பாவம் - மஹாராஜர் இத்யாதி. இத்திருவாய்மொழியிலே ரஸம் நிவ்ருத்தமானதுக்கு நியாமகமேதென்ன - கீழ் இவர்க்கு இத்யாதி. "[illegible]" (உரு) இதிஹாஸ்யாவ, "கேஶேஷ்வாக்ருஷ்ய விகளத்கிரீடமவநீதலே | ஸகம்ஸம்பாதயாமாஸ தஸ்யோபரிபபாதச." ததைவ, "[illegible]" இதி [illegible]. (க)

[எங்களென்று தொடங்கி] - எங்கள்புகல் எங்களுடைய நிரதிஶயபோக்யம். அயர்வறு மமரர்கள் அதிபதியாய்வைத்து என்னை அடிமைகொண்டவன். [பொங்கென்று தொடங்கி] - தனக்கு விபூதியாய் ஸம்ருத்தமான இம்மூன்று லோகத்தையும் படைப்பது, ரக்ஷிப்பது, அழிப்பதான இச்செயல்களுக்குப் பொருந்தின மூன்றுவடிவையுமுடையான். [எம்மருவன்] - எனக்கு தாரகனாயுள்ளான். [செங்கயலுகளுமென்று மேலுக்கு] - இளமையாலே சிவந்திருக்கிற கயல்கள் களியாநின்றுள்ள தேனையுடைத்தான நீர்நிலம் சூழ்ந்த திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றிலே நிரந்தரவாஸம் பண்ணுகிற ஸர்வகாரணமானவனல்லது வேறு எனக்குச்சேர்ந்த துணையில்லை.

ப.—அநந்தரம், அஶேஷஜகத்விஷயமான ஸ்ருஷ்ட்யாதி வ்யாபார ஸமர்த்தனாய்த் திருச்செங்குன்றூரில் எழுந்தருளியிருக்கிறவனல்லது எனக்கு நல்துணையில்லை யென்கிறார்.

எங்கள் - எங்களுக்கு, செல் - சென்று ஆஶ்ரயிக்கப்படுவதான, சார்வு - புகலிடமாய், (புகலிடமாமளவன்றியே), யாம் - நாம், உடை - உடையோமான, அமுதம் - போக்யமுமாய், இமையவர் - (அஸ்கலிதஜ்ஞாநரான) ஸூரிகளுக்கு, அப்பன் - உபகாரகனாய், (அப்படியே), என் - எனக்கும், அப்பன் - உபகாரகனாய், பொங்கு - ஸம்ருத்தமான, மூவுலகும் - லோகத்ரயத்தையும், படைத்து - ஸ்ருஷ்டித்து, அளித்து - ரக்ஷித்து, அழிக்கும் - ஸம்ஹரிப்பானாய், பொருந்து - (இதுக்குப்) பொருந்தின, மூவுருவன் - மூர்த்தித்ரயத்தையுமுடையனாய், (இவ்வாகாரங்கள் எனக்கு ப்ரகாஶிக்கும்படி), எம் - எனக்கு, அருவன் - அந்தராத்மாவாய், (அப்படியே முகந்தோன்றாமை நிற்கையன்றியே, கண்கண்டு அநுபவிக்கும்படி), செம் - (இளமையாலே) சிவந்த, கயல் - கயல்கள், உகளும் - உகளிக்கும்படி, தேம் - தேன் விஞ்சின, பணை - மருதநிலத்தாலே, புடைசூழ் - சூழப்பட்ட, திருச்செங்குன்றூர் - திருச்செங்குன்றூரில், திருச்சிற்றாறு - திருச்சிற்றாறாகிற, அங்கு - விலக்ஷணதேசத்திலே, அமர்கின்ற - பொருந்தி வர்த்திக்கிற, ஆதியான் - ஸகல ஸத்தாஹேதுபூதனானவன், அல்லால் - அல்லது, மற்று - வேறு, என் - எனக்கு, அமர் - அநுரூபமான, துணை - ஸஹாயம், யாவர் - ஆர்தான்? பணை - நீர்நிலமுமாம்.

இ.—இரண்டாம்பாட்டில், ஜகத்ஸ்ருஷ்ட்யாதிஸமர்த்தனாய்த் திருச்செங்குன்றூரிலேநின்றருளினவனல்லது எனக்கு நல்லதுணையில்லை என்கிறார்.

[எங்கள் செல்சார்வு] - ஆஶ்ரிதர்க்கு நிருபமானபுகல். * கேசவன்தமர்க்குப்பின்பு இவர் தனியரல்லரே. "குன்றமெடுத்தபிரானடியாரொடுமொன்றிநின்ற சடகோபனுரை" என்று அவர்களோடொன்றிநின்றுசொல்லுகிற சொல்லிறே. [யாமுடையமுதம்] - புகலையாய் போக்யவஸ்து வேறு தேடவேண்டாதிருக்கை. தேவர்களுடைய அம்ருதத்தை வ்யாவர்த்திக்கிறது. [இமையவரப்பன் என்னப்பன்] - நித்யஸூரிகளை அடிமைகொண்டாற்போலே என்னை அடிமைகொண்டவன்: குறைவற்றார்க்கு ஸத்தாஹேதுவாய், குறைவுக்கெல்லையான எனக்கும் ஸத்தாஹேதுவானவன். [பொங்கு இத்யாதி] - விஸ்த்ருதமாய் மூன்றுவகைப்பட்ட லோகங்களையுண்டாக்கி நோக்கி யழிக்குபவன். [பொருந்து மூவுருவன்] - இச்செயல்களுக்குப் பொருந்தின மூன்று வடிவையுடையவன். ப்ரஹ்மாந்தர்யாமியாய்நின்று ஸ்ருஷ்டிக்கும்: ருத்ராந்தர்யாமியாய் நின்று ஸம்ஹரிக்கும்: ஸ்வேநரூபேண நின்று பாலநம்பண்ணும். பொருந்துகையாவது -

ரஜஸ்தமஃப்ரசுரமான ப்ரஹ்மாதிகளோடு, திவ்யவிக்ரஹத்தோடு வாசியற்றிருக்கை. [எம்மருவன்] - தான் ஸகலத்துக்கும் உத்பத்த்யாதி ஹேதுவாயிருப்பதொன்று இல்லையென்னுமிடத்தைக்காட்டி எனக்கு தாரகனானவன். "உத்பவஸ்திதிநாசாநாம் ஹேதும் ஹேதுரீச்வரஃ" ஸ்வேதரஸகலமும் தன்நினைவாலேயாய்த் தான் ஒருவர்நினைவின்படியன்றிக்கேயிருக்கிறபடியைக்காட்டி என்னையுரிப்பித்தவன். [செங்கயலுகளும்] - ஸௌவநத்தாலே சிவந்த கயல்கள் களித்துவர்த்திக்கிற தேசம். பரிவரில்லையென்று முன்பே க்லேசித்து, பின்பு * வார்கடா வருவியாய் ப்ரீதராகவேண்டாதே, ஸகலபதார்த்தங்களும் களித்துவர்த்திக்கிற தேசமென்கை. [தேம்பணை புடைசூழ்] - தேனையுடைத்தான நீர்நிலம் சூழப்பட்ட என்னுதல், மருதநிலத்தாலே சூழப்பட்ட வூரென்னுதல். [அங்கமர்கின்ற] - அவதாரங்கள் போலன்றிக்கே நித்யவாஸம்பண்ணுகிற வூர். [ஆதியான்] - ஸர்வகாரணபூதனானவன் என்னுதல், எனக்கு ஸத்தாஹேதுவானவனென்னுதல். ப்ரஜைக்கு பரத்யாஸந்நையாய் வர்த்திக்குந் தாயைப்போலே, என்ஸத்தையை நோக்கிக் கொண்டிருக்கிறவன். [அல்லால் யாவர் மற்று என் அமர்துணையே] — இவனையொழிய வேறு எனக்குச் சேர்ந்த துணையில்லை. அல்லாதார் கழுத்துக்கட்டியாதல்; துணையென்று பேராய், ஆபத்திலே கூட விழுதல் செய்யுமித்தனையென்கை.

ஈடு.—இரண்டாம்பாட்டு. ஜகத்ஸ்ருஷ்ட்யாதி ஸமர்த்தனாய்த் திருச்செங்குன்றூரிலே நின்றருளினவனல்லது எனக்கு நல்துணையில்லையென்கிறார்.

[எங்கள் செல்சார்வு] - அநுகூலராயிருப்பார்க்கெல்லாம் அஞ்சவேண்டாத புகல். [யாமுடை யமுதம்] - புகலேயாய், போக்யவஸ்து வேறே தேடவேண்டாதேயிருக்கை. "எங்கள், யாம்" என்னப்பலருண்டே; *கேசவன்தமர்க்குப்பின்பு தனியரல்லரே. "குன்றமெடுத்தபிரானடியாரோடு ஒன்றிநின்ற சடகோபன்" என்று அவர்களோடு ஒன்றிநின்று சொல்லுகிற சொல்லிறே. [இமையவரப்பனென்னப்பன்] - நித்யஸூரிகளை அடிமைகொண்டாற்போலே என்னை அடிமைகொண்டவன்: குறைவற்றார்க்கும் ஸத்தாஹேதுவாய், குறைவுக்கெல்லையான எனக்கும் ஸத்தாஹேதுவானவன். [பொங்கு இத்யாதி] - விஸ்த்ருதமான த்ரைலோக்யத்தையும் உண்டாக்கி ரக்ஷித்து, அழிக்குமவன். [பொருந்துமூவுருவன்] - இச்செயல்களுக்குப் பொருந்தின மூன்று வடிவை உடையவன்: ப்ரஹ்மாந்தர்யாமியாய் ஸ்ருஷ்டிக்கும்: ருத்ராந்தர்யாமியாய் ஸம்

இரண்டாம்பாட்டு.—எங்கள் இத்யாதி. "படைத்தளித்தழிக்கும் - திருச்செங்குன்றூரில்" என்றுதொடங்கி, "அல்லால்யாவர்மற்றென்னமர்துணையே" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - ஜகத்ஸ்ருஷ்ட்யாதி இத்யாதி.

"எங்கள், யாம்" என்று - மங்களாசாஸநபரரைக் கூட்டி அருளிச்செய்கிறார் - அநுகூலராய் இத்யாதி. புகலேயாய் இத்யாதி †வாக்யத்வயத்துக்கு - உபாயாந்தரங்கள்போலன்றிக்கே, ப்ராப்யப்ராபகங்களிரண்டும் தானேயாயிருக்கை என்று கருத்து. "எங்கள், யாம்" என்ற பஹுவசநத்துக்கு - ஸ்வஸம்பந்திகளையும் கூட்டி அருளிச்செய்கிறாரென்று தாத்பர்யாந்தரம் - எங்கள் யாம் இத்யாதி வாக்யத்வயம்: ஏகார்த்தமாதல். இப்போது, "எங்கள்" என்கைக்கு அவர்கள் ஸந்நிஹிதரோவென்ன - குன்றமெடுத்த இத்யாதி. நித்யஸூரிகளுக்கு அநந்தரம் தம்மைச் சொன்னதுக்கு பாவம் - நித்யஸூரிகளை இத்யாதி. விவரணம் - குறைவற்றார்க்கும் இத்யாதி. "பொருந்து" என்றதுக்கு - செயல்களோடே சேர்ந்த விக்ரஹமென்று அர்த்தம் - இச்செயல்களுக்கு இத்யாதி. மூன்றுவடிவையும் இவன் உடையனாகையாவதேதென்ன - ப்ரஹ்மாந்தர்யாமி இத்யாதி. கீழே

† இருபத்துநாலாயிரப்படியிற்போல "தேவர்களுடைய அம்ருதத்தை வ்யாவர்த்திக்கிறது" என்று வாக்யமும் ஈட்டிலிருந்தால்தான் இங்கு வாக்யத்வயத்துக்கு என்பது சேரும்.

ஹரிக்கும்: ஸ்வேநரூபனே நின்று பாலநத்தைப் பண்ணும். பொருந்துகையாவது - ரஜஸ் தமஃ ப்ரசுரரான ப்ரஹ்மாதிகளோடு ‡ திவ்யவிக்ரஹத்தோடு வாசியற்றிருக்கை. [எம்மருவன்] - "அல்லாதார்காரியம் நம் புத்த்யதீநமாயிருக்குமல்லது நங்கார்யம் அல்லாதார் நினைவின்படியல்லகாணு மிருப்பது" என்று எனக்குஅறிவித்து, ।என் ஹயநிவ்ருத்தியைப்பண்ணி, எனக்கு தாரகனானவன். "உத்பத்திஸ்த்திதிநாஶாநாமஹேதும்ஹேதுமீஶ்வரம்" (உத்பத்திஸ்த்திதிநாஶாநாமஹேதும்ஹேதுமீஶ்வரம்) - ஸ்வேதர ஸகலங்களும் தன்னினைவிலேயாய், தான் ஒருவன் நினைவின்படி யன்றிக்கே இருக்கிறபடியைக் காட்டி என்னை தரிப்பித்தவன். [செங்கயலுகளும்] - யௌவநத்தாலே சிவந்தகயல்கள் களித்து வர்த்திக்கும் தேசம். பரிவரில்லையேன்று முன்பே க்லேஶித்து, பின்பு * வார்கடாவருவியாய் ப்ரீதராகவேண்டாதே, ஸகல பதார்த் தங்களும் களித்தேவர்த்திக்கும் தேசமென்கை. [தேம்பணைபுடைசூழ்] - தேனையுடைத் தான நீர்நிலங்கள் சூழ்ந்த என்னுதல், மருதநிலத்தாலே சூழப்பட்ட ஊரென்னுதல். [அங்கமர்கின்ற] - அவதாரங்கள்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே நித்யவாஸம்பண்ணுகிற ஊர். [ஆதியான்] - ஸர்வகாரணமானவ னேன்னுதல், எனக்கு ஸத்தாஹேதுவானவ னேன்னுதல்: ப்ரஜைக்கு ப்ரத்யாஸந்நமாக வர்த்திக்கும் தாயைப்போலே, என் ஸத் தையை நோக்கிக்கொண்டிருக்கிறவன். [அல்லால் யாவர்மற்றுஎன்னமர்துணையே] - இவனையொழிய எனக்குச் சேர்ந்த துணையில்லை. அல்லாதார் கழுத்துக் கட்டியாதல், துணையென்று பேராய் ஆபத்திலேகூட வழுதல் செய்யுமித்தனை. (உ)

---

## மூன்றாம் பாட்டு.

---

என்னமர்பெருமான்இமையவர்பெருமான்இருநிலமிடந்தவெம்பெருமான்
முன்னைவல்வினைகள்முழுதுடன்மாள என்னையாள்கின்றவெம்பெருமான்
தென்திசைக்கணிகொள்திருச்செங்குன்றூரில்திருச்சிற்றாற்றங்கரைமீபால்
நின்றவெம்பெருமான்அடியல்லால்சரணநினைப்பிலும் பிறிதில்லையெனக்கே.

ஆ.—(என்னமர்) - பரமஸாம்யஸம்ஶ்லேஷைகபோகனாயிருந்துவைத்து, மத்ஸம்ஶ்லேஷைகபோகனாய், மத்ஸ்வாமியாய், மஹார்ணவமக்நையான பூமியை எடுத்

"செயல்களுக்குப் பொருந்தின" என்று அருளிச்செய்து திவ்யமங்களவிக்ரஹம்போலே அப்ருதக் ஸித்தமாகப் பொருந்தின மூவுருவன் என்று அர்த்தாந்தரம் - பொருந்துகையாவது இத்யாதி. "மூவுருவன்" என்ற அநந்தரம், "எம்மருவன்" என்று - தமக்கு தாரகனென்றதுக்கு பாவம் - அல்லாதார் இத்யாதி. எம்மருவன் - எனக்கு அந்தராத்மாவானவ னென்றபடி. எல்லாவற்றுக்கும் தான் காரணமாய், தனக்கு ஒரு காரணமின்றிக்கே இருக்குமோவென்னில் - உத்பத்தி இத்யாதி. "வராஹபுராணம்ரஹ்மாண்ட....."உத்பத்திஸ்த்திதிநாஶாநாமஹேதும் ஹேதுமீஶ்வரம்"(௩௬)உத்தி,ப்ரஹ்மமேவ,ஜேவாநுஸ்ருதிஸ்ஸூர். இதுக்கு அர்த் தம் - ஸ்வேதர இத்யாதி. இத்தால் பாவம் - பரிவரில்லை இத்யாதி.*மருதநிலம் - நதீதீரம். "ஆதி யான்" என்றதுக்கு முந்தின அர்த்தம் - "பொங்குமூவுலகும் படைத்து" இத்யாதியின் அநுவாதம்; த்விதீயார்த்தம் - "எம்மருவன்" என்றதின் அநுவாதம். த்ருஷ்டாந்தபூர்வகமாக த்விதீயார்த்தவிவ ரணம் - ப்ரஜைக்கு இத்யாதி. 'ஆதியானல்லால் - என்னமர்துணை - மற்று - யாவர்' என்றந்வயம். வேறில்லையோ? என்ன,—அல்லாதார் இத்யாதி. (உ)

---

* மருதநிலம் - வயலும், வயல்சார்ந்த இடமும் என்பர், தமிழர்.
‡ திவ்யமங்கள விக்ரஹத்தோடு என்று பாடமிருக்கலாமென்று தோன்றுகின்றது.

தருளினாற்போலே ஸ்வவிரஹஜநித நிரவதிகவ்யஸநமஹார்ணவநிமக்நனான என்னை எடுத்தருளி, ஸ்வவிஷய கைங்கர்யைகபோகப்ரதனாய், தக்ஷிணதிக் பாகபூஷணமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரைமீபால்நின்ற எம்பெருமானுடையதிருவடிகளல்லது மற்று நினைப்பிலும் எனக்கொரு ப்ராப்யமில்லையென்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், ஸ்ரீவராஹமாய் ப்ரளயங்கொண்ட ஜகத்தையெடுத்தருளித் திருச்செங்குன்றூரிலே நின்றருளின எம்பெருமானுடைய திருவடிகளல்லது வேறு சரணம் எனக்கு மநோரதத்திலுமில்லை என்கிறார்.

[என்னென்று தொடங்கி] - அயர்வறுமமரர்கள் அதிபதியாய் எனக்கு அமர்ந்த ஸ்வாமியாயுள்ளான். நித்யஸூரிகள் மங்களாசாஸநத்தைக்கொண்டு எப்போதும் ஸேவிக்கிறபடியைக் காட்டித் தம்முடைய ஸபத்தைக் கெடுத்தானென்று கருத்து. [இருநிலமிடந்த எம்பெருமான்] - ப்ரளயங்கொண்ட மஹாப்ருதிவியை யெல்லாம் எடுத்த தன்னுடைய ஸாமர்த்த்யத்தைக்காட்டி என்னையடிமைகொண்டவன். [முன்னையென்று தொடங்கி] - தன்னுடைய ஸௌர்யவீர்யாதிகளைக்காட்டிக் கீழில்திருவாய்மொழியிற் சொன்ன ஸம்மெல்லாம்போம்படி என்னையாளுகிறவன். ப்ராக்தநமான ப்ரபல கர்மங்களாகவுமாம். [தென்திசைக்கு அணியென்று தொடங்கி மேலுக்கு] - தெற்குத்திக்குக்கு ஆபரணமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையில் மேல் பார்ஸ்வத்தில்.

ப.—அநந்தரம், வராஹரூபியாய் ப்ரளயாபத்திலே பூமியை இடந்தெடுத்து ரக்ஷித்தவன் திருவடிகளொழிய வேறு உபாயமில்லை யென்கிறார்.

இமையவர் - நித்யஸூரிகளுக்கு, பெருமான் - நிர்வாஹகனாற்போலே, என் - எனக்கு, அமர் பெருமான் - அநுரூபநாயகனாய், இரு நிலம் - மஹாப்ருதிவியை, இடந்த - (ப்ரளயாபத்தில் ஈடுபடாமல்) இடந்தெடுத்த, எம்பெருமான் - என்னுடைய நாதனாய், (அப்படியே), முன்னை - அநாதியாய், வல் - ப்ரபலமான, வினைகள் - பாபங்கள், முழுது - எல்லாம், உடன் - ஏகோத்யோகத்திலே, மாள - நசிக்கும்படி, என்னை - என்னை, ஆள்கின்ற - அடிமைகொண்டருளுகிற, எம்பெருமான் - பெருமையையுடையனாய், தென் திசைக்கு - தெற்குத்திக்குக்கு, அணி - அலங்காரமாக, கொள் - கொள்ளப்படுவதான, திருச்செங்குன்றூரில் - திருச்செங்குன்றூரில், திருச்சிற்றாற்றங்கரை - திருச்சிற்றாற்றங்கரையின், மீபால் - மேல்பக்கத்திலே, நின்ற - நின்றநிலையழகிலே, எம்பெருமான் - என்னை அடிமையாக்கினவனுடைய, அடி - திருவடிகளை, அல்லால் - ஒழிய, எனக்கு-என்னுடைய, நினைப்பிலும் - மநோரதஉசையிலும், பிறிது - வேறொரு, சரணம் - புகல், இல்லை - இல்லை.

இ.—மூன்றாம்பாட்டில், ஸ்ரீவராஹமாய் ப்ரளயங்கொண்ட பூமியை எடுத்தருளித் திருச்செங்குன்றூரிலே நின்றருளினவனுடைய திருவடிகளல்லது வேறு மநோரதத்திலும் எனக்கு சரணமில்லை யென்கிறார்.

[என்னமர்பெருமான் இமையவர்பெருமான்] - * அயர்வறுமமரர்கள் அதிபதியாய், எனக்கு அமர்ந்தஸ்வாமியாயுள்ளான். நித்யஸூரிகள் இடைவிடாமல் மங்களாசாஸநம் பண்ணுகிறபடியைக்காட்டி என் ஸயத்தைத் தீர்த்தானென்கை. [இருநிலமிடந்த எம்பெருமான்] - ப்ரளயங்கொண்ட மஹாப்ருதிவியையெடுத்த தன்ஸாமர்த்த்யத்தைக்காட்டி என்னை யடிமைகொண்டவன். ப்ரளயங்கொண்ட பூமியோபாதி ஸர்

வரும் தனக்குக் குழைசரக்காயிருக்கிற படியைக் காட்டித் தம்ஸ்பத்தைக் கெடுத்தானென்கை. [முன்னையித்யாதி]-ப்ராக்தநமான ப்ரபல கர்மங்கள் வாஸநையோடே போம்படி என்னை அடிமைகொண்டவன். ஸௌர்யவீர்யாதிகளைக் காட்டிக் கீழ் எனக்குப்பிறந்த ஸயமெல்லாம் போம்படி யென்னையடிமைகொண்டவனென்கை. வல்வினை யென்கிறது - ஸக்திபாரவஶ்யத்தையாயிற்று. இதிறே "உஸபவிஸதி நாதனுக்கு என்வருகிறதோ?" என்னும் ஸயத்தைப் பிறப்பித்தது. ஸயஹேதுவிறே பாபமாகிறது. ப்ராக்தந ப்ரபலகர்மங்களென்றுமாம். [தென்திசைக்கு அணியித்யாதி] - ஆர்யர் இகழ்ந்தஸூமியான தெற்குத் திக்குக்கு ஆபரணமான ஊர். [மீபால்நின்ற எம்பெருமான்]-மேலைத்திக்கில் நிலையும்உத்கர்ஷஹேதுவாய்,இவர்க்கு ஸயநிவ்ருத்திக்குஉடலாயிருக்கிறது.நிரபேக்ஷயாஇறே பரத்வமிருப்பது. [அடியித்யாதி] - அவன் திருவடிகளொழிய மற்று ரக்ஷகமாயிருப்பதொருவஸ்து மநோரதத்திலு மில்லை.

ஈடு'—மூன்றாம்பாட்டு. ஸ்ரீவராஹமாய் ப்ரளயங்கொண்ட பூமியை எடுத்தருளித் திருச்செங்குன்றூரிலே நின்றவனுடைய திருவடிகளல்லது வேறுமநோரதத்திலும் எனக்கு ஶரணமில்லையென்கிறார்.

[என்னமர்பெருமான் இமையவர்பெருமான்]-* அயர்வறும்மரர்களதிபதியாய், என்க்கு அமர்ந்த ஸ்வாமியாயுள்ளான். நித்யஸூரிகள் தனக்குப் பரிவராயிருக்கிற இருப்பைக் காட்டி, நான் அஞ்சாதபடி பண்ணி என்னுடைய ஶேஷத்வத்தை நிர்வஹித்தவன். [இருநிலம் இத்யாதி]-ப்ரளயங்கொண்ட மஹாப்ருதிவியை எடுத்த தன் ஸாமர்த்த்யத்தைக் காட்டி என்னை அடிமைகொண்டவன். ப்ரளயங்கொண்ட பூமிபோபாதி ஸர்வரும் தனக்குக் குழைசரக்காயிருக்கிறபடியைக் காட்டித் தம் பயத்தைக் கெடுத்தானென்கை. [முன்னை இத்யாதி] - ப்ராக்தநமான ப்ரபலகர்மங்களை வாஸனையோடே போக்கி என்னை அடிமைகொள்ளுகிற ஸ்வாமி. ஶௌர்யவீர்யாதிகளைக்காட்டி, கீழ் எனக்குப்பிறந்த பயமெல்லாம்போம்படி என்னை அடிமைகொண்டவனென்கை. வல்வினை என்கிறது - ஶக்திபாரவஶ்யத்தையாயிற்று. அதிறே "ஸர்வஶக்திக்கு என்வருகிறதோ?" என்னும் ஸயத்தைப் பிறப்பித்தது. [தேன்திசை இத்யாதி] - ஆர்யர்களிகழ்ந்த பூமியான தேற்குத்திக்குக்கு ஆபரணமானஊர். [மீபால்நின்றவெம்பெருமான்] - மேலைத்திக்கில் நிலையும் உத்கர்ஷஹேதுவாய், இவர்க்கு ஸயநிவ்ருத்திக்கு உடலாயிருக்கிறது. நிரபேக்ஷயாஇறே பரத்வமிருப்பது. [அடி இத்யாதி] - அவன் திருவடிகளொழிய மற்று ரக்ஷகமாயிருப்பதொருவஸ்து மநோரதத்திலு மில்லை. (௩)

---

மூன்றாம்பாட்டு.—என்னமர் இத்யாதி. "இருநிலமிடந்த" என்று தொடங்கி, "அடியல்லால் - நினைப்பிலும் பிறிது - சரண் - இல்லை" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - ஸ்ரீவராஹமாய் இத்யாதி.

"இமையவர்பெருமான் - என்னமர்பெருமான்" என்று அந்வயித்து அர்த்தம் - அயர் வறும் இத்யாதி. இத்தால் ஸாவம் - நித்யஸூரிகள் இத்யாதி. "இருநிலமிடந்த" என்கிற பதப்ரயோகத்துக்கு ஸாவம் - ப்ரளயங்கொண்ட இத்யாதி. முழுதுடன் - ஸவாஸநமாக வென்றபடி. அர்த்தாந்தரம் - ஶௌர்யவீர்யாதி இத்யாதி. த்விதீயார்த்தத்துக்கு, வல்வினையாவதேதென்ன - வல்வினை என்கிறது இத்யாதி. அத்தை வல்வினையென்பானேன்? என்ன - அதிறே இத்யாதி. த்விதீயார்த்தத்திலே, "முன்னை" என்றது - கீழில் திருவாய்மொழியி லென்றபடி. இதுக்கு ஸாவம் - மேலைத்திக்கில் இத்யாதி. அப்படி உத்கர்ஷஹேதுவோவென்ன - நிரபேக்ஷயா இத்யாதி. "அடியல்லால் - பிறிது - சரணம் நினைப்பிலும் - இல்லை" என்று அந்வயித்து அர்த்தம் அருளிச்செய்கிறார் - அவன்திருவடிகளொழிய இத்யாதி. (௩)

## நான்காம் பாட்டு.

**பிறிதில்லையெனக்குப்பெரியமூவுலகும்நிறையப் பேருருவமாய்நிமிர்ந்த**
**குறியமாணெம்மான்குரைகடல்கடைந்த கோலமாணிக்கமென்னம்மான்**
**செறிகுலைவாழைகமுகுதெங்கணிசூழ் திருச்செங்குன்றூர்திருச்சிற்றாறு**
**அறிய மெய்ம்மையேநின்றஎம்பெருமான் அடியிணையல்லதோரரணே.**

**ஆ.**—(பிறிதில்லை.) நிரதிசய ரமணீயமான ரூபநிங்கரீக்ருத மஹாத்மகனாய், ஸம்வர்த்தித ஸ்வரூப மஹத்ரூப பரிபூர்ணவிஸ்தீர்ண ஹூவநத்ரயனாய், மதிதமஹாரவ பயோநிதியாய், ஸௌந்தர்யஸார நீலரத்ந ஸத்ருஶ திவ்யரூபனாய், மத்ஸ்வாமியாய், வஹுள ஹலபுஞ்ச கதளீ பூக நாளிகேர ராஜிபரிவ்ருதமான திருச்செங்குன்றூரில்திருச்சிற்றாற்றங்கரையிலே, ஆஶ்ரிதர்க்குத் தன்னை உள்ளபடியே அறியலாம்படி நின்றருளின எம்பெருமானடியிணையல்லது ஓரரண் பிறிதில்லையென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், மஹாபலியை வென்றும் கடலைக்கடைந்தும் ஆஶ்ரிதருடைய ஆபத்தைப்போக்கித் திருச்செங்குன்றூரிலே நின்றருளின எம்பெருமான் திருவடிகளல்லது வேறுஎனக்கு அரணில்லையென்கிறார்.

[பிறிதில்லை யெனக்கு] - வேறில்லை யெனக்கு [குரைகடல்கடைந்த கோல மாணிக்கம் என்னம்மான்] - மஹாகோஷம் எழும்படி கடலைக்கடைந்த ஸாமர்த்யத்தாலும் அப்போதைபழகாலும் என்னையடிமைகொண்டவன். [அறியமெய்ம்மையே நின்ற எம்பெருமான்] - பூர்ணமாக அநுஹவிக்கலாம்படி நின்ற.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதார்த்தமான த்ரைவிக்ரம ஸமுத்ரமதநரூபமான அதிஶயித வ்யாபாரத்தையுடையவன் திருவடிகளையொழிய வேறு எனக்குஒருரக்ஷகருமில்லை யென்கிறார்.

பெரிய - மஹாவகாசமான, மூவுலகும் - த்ரைலோக்யமும், நிறைய - நிறையும்படியாக, பேர் - பெரிய, உருவமாய் - வடிவையுடையனாய்க்கொண்டு, நிமிர்ந்த - வளர்ந்த, குறிய மாண் - வாமநப்ரஹ்மசாரியான, எம்மான் - என் ஸ்வாமியாய், குரை - அதிகோஷத்தையுடைத்தான, கடல் - கடலை, கடைந்த - கடைந்த, கோலம் - ரமணீயமான, மாணிக்கம் - ரத்நம்போலேயிருக்கிற வடிவை, என் - எனக்கு(ப்ரகாசிப்பித்த), அம்மான் - நாதனாய், செறி - செறிந்த, குலை - குலையையுடைய, வாழை - வாழை, கமுகு - கமுகு, தெங்கு - தெங்குகளின், அணி - நிரைகள், சூழ் - சூழ்ந்த, திருச்செங்குன்றூர் - திருச்செங்குன்றூரில், திருச்சிற்றாறு - திருச்சிற்றாறுகிற திருப்பதியில் வர்த்திக்கிறவர்கள், அறிய - (தன்னை) உள்ளபடியறியும்படியாக, மெய்ம்மையே நின்ற - யதாவத்ப்ரகாஶம்பண்ணி எழுந்தருளியிருக்கிற, எம்பெருமான் - ஸர்வேஶ்வரனுடைய அடியிணை - திருவடிகளை, அல்லது - ஒழிய, பிறிது - வேறு, எனக்கு - எனக்கு, ஓர் - ஏகதேசமும், அரண் - ஒருரக்ஷகர், இல்லை - இல்லை.

இ.—நாலாம்பாட்டில், மஹாபலியை வென்றும் கடலைக்கடைந்தும் ஆஶ்ரிதர் ஆபத்தைப்போக்கித் திருச்செங்குன்றூரிலே நின்றருளினவன் திருவடிகளல்லது வேறு எனக்கு அரணில்லை யென்கிறார்.

*[பிறிதில்லையெனக்கு] - அவனையொழிய வேறெனக்கு ரக்ஷகரில்லை. [பெரிய மூவுலகும் நிறையப்பேருருவமாய் நிமிர்ந்த]-ப்ரஹ்மலோக பர்யந்தமான ஆகாஶாவகாஶமடைய விம்ம வளர்ந்த. தொடங்கினகார்யம்வென்ற ப்ரீதிப்ரகர்ஷத்தாலே வளர்ந்தபடி. [குறியமாணெம்மான்] - வளருகைக்கு உடலாகக்கொண்ட வாமநவேஷத்தையும், அர்த்தித்வத்தையுங்காட்டி என்னை யடிமைகொண்டவன். மஹாபலியை வெல்லுகைக்குக்கொண்ட வடிவைக்காட்டி ஹயத்தைக் கெடுத்தபடி. [குரைகடல் கடைந்த] — மஹாகோஷம் எழும்படி கடலைக்கடைந்தவன். [கோலமாணிக்கம்] - பெருவிலையனான ரத்நம்போலேயிருக்கிற அழகியவடிவைக் கொண்டாயிற்றுக் கடலைக்கடைந்தது. [என்னம்மான்] - கடல்கடைந்த ஸாமர்த்தியத்தையும் வடிவழகையுங்காட்டி என்னை யடிமைகொண்டவன். [செறிகுலையித்யாதி] - செறிந்த குலையையுடைத்தான வாழை, அப்படியேயிருக்கிற கமுகு, தெங்கு, இவற்றின் திரளாலே சூழப்பட்ட வூர். ஊர்ச்சிறப்பென்றும் அரணென்றும் இரண்டில்லை. செறிந்தகுலைகளாலும் திரண்டு சூழ்ந்திருக்கையாலும் உகவாதார்க்குப் புகுரவொண்ணாதிருக்கை. [திருச்சிற்றாறறிய] - திருச்சிற்றாற்றிலுள்ளார் "ஸர்வேஶ்வரன்" என்றறியும்படியாக. * ஜநா:ஶ்ரீநிவஸ. [மெய்ம்மையேநின்ற எம்பெருமான்] - "ஸத்யஂஜ்ஞாநமநந்தஂ" என்றும் "ஸத்யஂஸ்வாபாவிகோ ஜாத:" என்றும், மறைக்கவேண்டாதபடி பத்தும்பத்தாக நின்ற என்ஸ்வாமி. [அடியிணையல்லதோர் அரணே] - அவன்திருவடிகளல்லது ஒரு ரக்ஷகமில்லை. அடியிணையல்லதோர் அரண் - பிறிதில்லை எனக்கு.*

ஈடு.—நாலாம்பாட்டு. மஹாபலியைவென்றும் கடலைக்கடைந்தும் ஆஶ்ரிதர் ஆபத்தைப்போக்கித் திருச்செங்குன்றூரிலே நின்றருளினவன் திருவடிக ளல்லது வேறு எனக்கு அரணில்லை யென்கிறார்.

[பிறிதில்லை எனக்கு] - அவனையொழிய வேறு எனக்கு ரக்ஷகரில்லை. [பெரிய மூவுலகும் நிறையப் பேருருவமாய்நிமிர்ந்த] - ப்ரஹ்மலோக பர்யந்தமான ஆகாஶாவகாசமடைய விம்மவளர்ந்த: தொடங்கின கார்யம் வென்ற ப்ரீதிப்ரகர்ஷத்தாலே வளர்ந்தபடி. [குறியமாணெம்மான்] - வளருகைக்கு உடலாகக்கொண்ட வாமநவேஷத்தையும், அர்த்தித்வத்தையுங்காட்டி என்னை அடிமைகொண்டவன். மஹாபலியை வெல்லுகைக்குக் கொண்ட வடிவைக்காட்டி ஹயத்தைக் கெடுத்தபடி. [குரைகடல் கடைந்த] - மஹாகோஷமெழும்படி கடலைக்கடைந்தவன். [கோலமாணிக்கம்] - பெருவிலையனான ரத்நம்போலேயிருக்கிற அழகியவடிவைக் கொண்டாயிற்றுக் கடலைக்கடைந்தது. [என்னம்மான்] - கடல்கடைந்த ஸாமர்த்த்யத்தையும் அழகையுங்காட்டி என்னை அடிமைகொண்டவன். [செறிகுலைவாழை இத்யாதி] - செறிந்த குலையையுடைத்தான வாழை, அப்படிப்பட்ட

*நாலாம்பாட்டு.—பிறிதில்லை இத்யாதி. "பேருருவமாய்" என்றுதொடங்கி, "என்னம்மான் - அடியிணையல்லதோரரண்" என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை -* மஹாபலியை *இத்யாதி.*

*பிறிது - வேறென்றபடி. "அடியிணையல்லது - பிறிது - அரண் - இல்லை" என்று அந்வயித்து அர்த்தம்-*அவனையொழிய *இத்யாதி. நிமிர்ந்த - விம்மவளர்ந்த. அன்றுபிறந்த முக்தன் இப்படி வளரக்கூடுமோவென்ன -* தொடங்கின *இத்யாதி. "மாண்" என்கையாலே - அர்த்தித்வம். இத்தால் ஹாவம் -* மஹாபலியை *இத்யாதி. "செறிகுலை" என்றதை - கமுகுதெங்குகளோடும் கூட்டுவது. "அணி" என்று - பங்க்தியாய், திரளென்றபடி. பயம் கெடுகிறவிடத்திலே அரணைச்*

கமுகு, தெங்கு, இவற்றின் திரளாலேசூழப்பட்ட ஊர். ஊர்ச்சிறப்பென்றும் அரணென்றும் இரண்டில்லை. செறிந்த குலைகளாலும் திரண்டு சூழ்ந்திருக்கையாலும் உகவாதார்க்குப் புகுர வொண்ணுதிருக்கை. [திருச்சிற்றாறறிய] - திருச்சிற்றாற்றிலுள்ளார் "ஸர்வேஶ்வரன்" என்றறியும்படியாக. * ஸத்யாத்ஸத்யம். [மெய்ம்மையேநின்ற வெம்பெருமான்] - "ஆத்மாநம் மாநுஷம் மந்யே" (ஆத்மாநம்மாநுஷம்மந்யே) என்றும், "அஹம் வோ பாந்தவோ ஜாத:" (அஹம்வோபாந்தவோஜாத:) என்றும், மறைக்கவேண்டாதபடி பத்தும்பத்தாகநின்ற என்ஸ்வாமி. [அடியிணையல்லதோரரணே] - அவன்திருவடிகளல்லது ஒரு ரக்ஷகமில்லை. அடியிணையல்லதோரரண் - பிறிதில்லை எனக்கு. (ச)

## ஐந்தாம் பாட்டு.

அல்லதோரரணும் அவனில் வேறில்லை அதுபொருளாகிலும் அவனை
யல்லதென்னுவி யமர்ந்தணைகில்லாது ஆதலாலவனுறைகின்ற [கும்
நல்லநான்மறையோர் வேள்வியுள்மடுத்த நறும்புகைவிசும்பொளிமறைக்
நல்லநீள்மாடத் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறெனக்கு நல்லரணே.

ஆ.—(அல்லதோரரணும்) — மற்றுள்ள திருநகரிகளில் ஸாந்நித்யமுண்டாயிருக்கிறானும் திருச்செங்குன்றூரில் நின்றருளின அவனேயல்லனோ? ஆனபின்பு, அவனே அரண் என்னும் நிர்ப்பந்தமென்? என்னில்,—அல்லாத திருநகரிகளில் அரணாயிருக்கிறவனும் அவனில் வேறில்லை; பொருள்அது; ஆகிலும், என்னெஞ்சு அவனையல்லது அமர்ந்தணைகில்லாது; ஆதலால், அவனுக்கு ஆயதநமாய், ஶக்தி யுக்த சதுர்வேதவித்ப்ரா ஸாரானவர்களுடைய யாகங்களிலே ஹுதமான ஹவிர்கந்த ஹோம தூமத்தாலே திரஸ்க்ருத கநதல நிவில தேஜஸ்ஸாய் ஶ்ரீமத்யுந்நத ப்ராஸாதாலங்க்ருதமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு எனக்கு நல்லரணென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், மற்றுகந்தருளின நிலமெல்லாம் அவனதேயாய், அவ்விடங்களில் நின்றருளுகிறானும் தானேயாகிலும், திருச்செங்குன்றூரையும் அங்கு நின்றருளுகிற எம்பெருமானையும் அல்லது என்ஹ்ருதயம் சேர்ந்தணைபாதென்கிறார்.

[அல்லதென்று தொடங்கி]-அல்லாத கோயில்களும் அவனையொழிந்திருப்பதில்லை. அர்த்த தத்த்வமிருக்கும்படி அது. [நல்லநான்மறையோர்]-அநந்யப்ரயோஜநர். [வேள்வியுள் மடுத்த] - யாகங்களில் ப்ரவ்ருத்தமான.

ப.—அநந்தரம், அர்ச்சாஸ்தலாந்தரங்களும் அவனையொழிந்திராதிருக்கத் திருச்செங்குன்றூரில் நிலையொழிய என்னெஞ்சு பொருந்துகிறதில்லையென்கிறார்.

அல்லது - (திருச்செங்குன்றூரொழிந்த) அல்லாத, ஓரரணும் - (அர்ச்சாஸ்தலங்களான) புகலிடமும், அவனில் - அவனையொழிந்து, வேறு - வேறாயிருப்பது,

சொல்லுமதொழிய, சிறப்பைச்சொல்லுவானென்? என்ன - ஊர்ச்சிறப்பென்றும் இத்யாதி. அரணும் ப்ரகாரமேதென்ன - செறிந்த இத்யாதி. "திருச்சிற்றாறு" என்றால் அங்குள்ளாரைக் காட்டுமோவென்ன - ஸத்யாத் இத்யாதி. 'பிறிது - அரண் - இல்லை' என்றந்வயம். (ச)

இல்லை - இல்லை ; அது - அதுவே, பொருள் - அர்த்தஸ்த்திதி ; ஆகிலும் - ஆனாலும், ("ஸாவொ நாந்ருத மவுதி" என்கிற கணக்கிலே), அவனை-(திருச்செங்குன்றூரில்) நிற்கிறவனை, அல்லது - ஒழிய, என் - என், ஆவி - ஆத்மவஸ்து, அமர்ந்து - பொருந்தி, அணைகில்லாது - கிடக்கிறதில்லை ; ஆதலால் - ஆகையால், அவன் - அவன், உறைகின்ற - நித்யவாஸம் பண்ணும் தேசமாய், நல்ல - ப்ரேமஸஹிதரான, நான்மறையோர் - சதுர்வேதிகள், வேள்வியுள் - யாகாதிகளிலே, மடுத்த - அக்நிமுகத்தில் ஸமர்ப்பித்த, நறும் - ஹவிர்கந்தியான, புகை - தூமமானது, விசும்பு - ஆகாசத்தில், ஒளி - ஆதித்யாதிதேஜஸ்ஸை, மறைக்கும் - மறைக்கும்படியாய், நல்ல - விலக்ஷணமாய், நீள் - ஓங்கின, மாடம் - மாடங்களையுடைத்தான, திருச்செங்குன்றூரில் - திருச்செங்குன்றூரில், திருச்சிற்றாறு - திருச்சிற்றாறானது, எனக்கு - எனக்கு, நல் - நிர்ப்பயமான, அரண் - புகலிடம். அன்றியே, கீழ் - அவன் திருவடிகளையொழிய உபாயமில்லையென்றாய், 'அல்லாத கர்மாத்யுபாயங்களும் தத்ஸம்பந்திகளன்றோ?' என்கிற ஶங்கையிலே, அல்லாத ரக்ஷணோபாயங்களும் தச்சரணரூபங்களாகையாலே அவனை யொழிந்திருப்பதொன்றில்லை; அது வேதாந்தஸித்தமான அர்த்தம்; ஆனாலும், தச்சேஷமான என்னாத்மாவானது அவ்யவஹிதோபாயமான அவனையொழிந்த ஸாதநாந்தரோபாயங்களில் அநுரூபப்ரவ்ருத்திபண்ணிக் கிட்டமாட்டுகிறதில்லை ; ஆதலால், அவன்வர்த்திக்கிற அர்ச்சாஸ்தலமே எனக்குப் புகலிடமென்றாராகவுமாம்.

ஈ.—அஞ்சாம்பாட்டில், அல்லாதவுகந்தருளின தேசங்களுண்டாயிருக்கத் திருச்செங்குன்றூரிலே அதிநிர்பந்தம் பண்ணுகிறதென் ? என்ன, அங்ஙனேயிருக்கச்செய்தேயும் திருச்செங்குன்றூரிலல்லது என்னுடைய ஹ்ருதயம் சேர்ந்தணையாதென்கிறார்.

[அல்லதோர் அரணும் அவனில் வேறில்லை] - அல்லாத [illegible] பொழிந்திருப்பதில்லை. [அதுபொருள்] - அர்த்த தத்த்வம் அது. [ஆகிலும்] - இங்ஙனேயிருந்ததாகிலும். [அவனையல்லது என்னுவியமர்ந்து அணைகில்லாது] - திருச்செங்குன்றூரில் நின்றருளினவனையல்லது என்மநஸ்ஸு சேர்ந்தணையாது. திருவடி, "ஸாவொ நாந்ருத மவுதி" என்றது, பரமபதத்தில் ப்ராப்தியில்லாமையோ? ராமாவதாரத்தில் ஸாவபக்ஷத்தாலேயிறே; அப்படியே இவரும். [ஆதலால்] - அத்தாலே. [அவனுறைகின்ற] - அவன் நித்யவாஸம்பண்ணுகிற - திருச்செங்குன்றூரென்றந்வயம். [நல்ல நான்மறையோர்] — அநந்யப்ரயோஜநரான ப்ராஹ்மணர். [வேள்வியுள்மடுத்த நறும்புகை] - யாகங்களிலே ப்ரவ்ருத்தமான ஹவிர்கந்தியான தூமம். அநந்யப்ரயோஜநராகில் இவர்கள் அநுஷ்டாநத்துக்கு ஃபலமென் ? என்னில்; ஸ்வயம் ப்ரயோஜநமாதல், பகவத்ப்ரதிபக்ஷங்களை அழியச்செய்யும் அபிசாரம் ஃபலமாதல். எம்பெருமானைப்போலேயாயிற்று அவ்வூரில் ப்ராஹ்மணரும். [விசும்பொளி மறைக்கும்] - ஆகாசத்தில் ஒளியுள்ள ஆதித்யாதிகளை மறைக்குமென்னுதல் ; விசும்புதன்னில் ஒளியை மறைக்குமென்னுதல். [நல்ல நீள்மாடம்] - ஒருகாமம் வேண்டா, ஊர்அரண்தானே ப்ரதிகூலர்க்கு து:ஷ்ப்ராபமாயிருக்கை. [திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு] - "மாடமா மயிலைத் திருவல்லிக்கேணி" என்னுமாபோலே. [எனக்கு நல்லரணே] - "என்தான் வருகிறதோ?" என்று ஸீதனை எனக்கு நல்லபுகலான தேஶம்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. அல்லாத உகந்தருளின தேசங்களுமுண்டாயிருக்கத் திருச்செங்குன்றூரிலே நீர் அதிநிர்ப்பந்தம் பண்ணுகிறதேன்? என்ன,—அதுஅங்ஙனே இருக்கச் செய்தேயும் திருசசெங்குன்றூரிலல்லது எனக்கு ஹ்ருதயம் சேர்ந்தணையாதேன்கிறார்.

[அல்லதோரரணுமவனில்வேறில்லை] -. அல்லாதவிடங்களும் அவனுக்குப் புறம்பாயிருப்பதில்லை. [அதுபொருள்]-அர்த்ததத்த்வம் அது. [ஆகிலும்] - இங்ஙனே இருந்ததேயாகிலும். [அவனையல்லது என்னுவி அமர்ந்தணைகில்லாது] - திருச்செங்குன்றூரிலே நின்றருளினவனை யல்லது என்மநஸ்ஸு சேர்ந்தணையாது; ஸ்ரீவைகுண்டநாதன் ஈஶ்வரனல்லாமையும் ப்ராப்தியில்லாமையுமோ, திருவடி "பாவோ நாந்யத்ர கச்சதி" (பாவோநாந்யத்ரகச்சதி) என்றது? அப்படியே இவரும். அமர்ந்தணைகை - உள்வேதுப்பற்றுப் பொருந்துகை. [ஆதலால்] - இப்படியாகையால். [அவனுறைகின்ற]-அவன் நித்யவாஸம்பண்ணுகிற - திருச்செங்குன்றூர் என்றந்வயம். [நல்லநான்மறையோர்] - அநந்யப்ரயோஜநரான ப்ராஹ்மணர். [வேள்வியுள்மடுத்தநறும்புகை] - யாகங்களிலே ப்ரவ்ருத்தமான ஹவிர்க்கந்தியான தூமம். அநந்யப்ரயோஜநராகில் இவர்களநுஷ்டாநத்துக்கு ப்ரயோஜநமேன்? என்னில்,—ஸ்வயம் ப்ரயோஜநமாதல், பகவத்ப்ரதிபக்ஷங்களை அழியச் செய்யுமபிசாரம் பலமாதல். எம்பெருமானாரைப்போலேயாயிற்று அவ்வூரில் ப்ராஹ்மணரும். [விசும்பொளிமறைக்கும்] - ஆகாசத்தில் ஒளியுள்ள ஆதித்யாதிகளை மறைக்குமென்னுதல், விசும்புதன்னில் ஒளியை மறைக்குமென்னுதல். [நல்லநீள்மாடம்] - ஒருகர்மமும் வேண்டா, ஊரரண்தானே ப்ரதிகூலர்க்கு துஷ்ப்ராபமாயிருக்கும். [திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு] - "மாடமாமயிலைத் திருவல்லிக்கேணி" என்னுமாபோலே. [எனக்கு நல்லரணே] - அஸ்த்தாநே பயஶங்கைபண்ணும் எனக்கு பயநிவ்ருத்தியுண்டாம் தேசம், அதுவல்லதில்லை. திருச்சிற்றாறென்று - திருப்பதிக்கும்பேர், ஆற்றுக்கும்பேர்.

---

அஞ்சாம்பாட்டு.—அல்லதோர் இத்யாதி. "ஆகிலும் அவனையல்லது என்னுவி அமர்ந்தணைகில்லாது" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - அல்லாத இத்யாதி.

எங்கும் ப்ராப்தியொத்திருக்க, இங்ஙன் அருளிச்செய்யலாமோவென்ன - ஸ்ரீவைகுண்டநாதன் இத்யாதி. நன்மைஎது? என்ன - அநந்யப்ரயோஜநர் இத்யாதி. அப்படி அபிசாரம்பண்ணினருண்டோ? என்ன - எம்பெருமானாரை இத்யாதி. எம்பெருமானார் க்ருமிகண்டனுக்காக மேல்நாட்டிலே அபிசாரம்பண்ணுவித்த கதை இங்கே அநுஸந்தேயம். எம்பெருமானார் புழுவனுக்காக அபிசரிக்கலாமோவென்ன, - "யதா ஸக்திப்ரதாநஸ்ய தேவதாந்தரநிஷேதாஸ்து" என்றிருக்கையாலே அபிசரிக்கலாமென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, விசும்பினுடைய ஒளியென்றபடி. "திருச்செங்குன்றூர்" என்று - பட்டணமாய், "திருச்சிற்றாறு" என்று திருப்பதியைச் சொல்லுகிறதென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - மாடமாமயிலை இத்யாதி. மயிலை- மயிலாப்பூர். மயிலாப்பூரென்று - படைவீட்டுக்குப்பேர். திருவல்லிக்கேணியென்று - திருப்பதி, திருமொழி, இரண்டாம்பத்து, மூன்றாந்திருமொழி, "வேதத்தை" இத்யாதி. "திருச்சிற்றாறு" என்று - அங்குத்தை நதியையன்றோ சொல்லுவது? என்ன, திருச்சிற்றறென்று இத்யாதி. அல்லதோரரணும் என்று தொடங்கி, அணைகில்லாது, ஆதலால் - நல்ல நான்மறையோர் என்று தொடங்கி, நல்ல நீள்மாடம் - அவனுறைகின்ற - திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறெனக்கு நல்லரணே இத்யந்வயம்.

(ரு)

## ஆறும் பாட்டு.

---

எனக்குநல்லரணையெனதாருயிரை இமையவர்தந்தைதாய்தன்னைத்
தனக்குந்தன்தன்மையறிவரியானைத் தடங்கடற்பள்ளியம்மானை
மனக்கோள்சீர்மூவாயிரவர் வண்சிவனுமயனுந்தானுமொப்பார்வாழ்
கனக்கோள்திண்மாடத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறதனுட்கண்டேனே.

ஆ.—(எனக்கு நல்லரணை.) - எனக்கு நித்யரக்ஷகனும், எனக்குப் ப்ராணனும், அயர்வறுமமரர்களுக்குப் பிதாவாய் மாதாவாய், ஸ்வேநாபி துரவபோதய ஸ்வமஹிம ஸ்வபாவனும், க்ஷீரார்ணவஶாயியாயிருந்த எம்பெருமானை; ஸகலமநோஹர கல்யாணகுணவிசிஷ்டராய், தனித்தனியே ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரவஜ் ஜகஜ்ஜந்ம ஸ்த்திதி ஸம்ஹார ஸமர்த்தராய், த்ரிஸஹஸ்ர ஸங்க்யாஸங்க்யாதரான ஜனங்களாலே அத்யாஸ்யமாநமாய், த்ருடதர ப்ராஸாத பரிகர்மிதமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறதனுள் ...ர.

ஒ.—ஆறும்பாட்டில், ஸர்வஜ்ஞனை தனக்குங்கூட அறியமுடியாத படியையுடையனும், அயர்வறுமமரர்களுக்கு ஸர்வவிதபந்துவுமாய், ப்ரஹ்மாதிகளுக்கு ஸமாஶ்ரயணீயனுய்க்கொண்டு திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனை "தனக்கென்புகுருகிறதோ ?" என்று அஞ்சாதபடி நிர்பயமான திருச்செங்குன்றூரிலே காணப்பெற்றேனென்கிறார்.

[எனக்கென்று தொடங்கி] - எனக்கு நல்லபுகலுமாய் எனக்குதாரகனுமானவனை. [அம்மானை] - பெரியோனை. [மனக்கொள்சீரென்று மேலுக்கு] - எம்பெருமானுடைய குணங்களை எப்போதும் மநஸ்ஸிலேகொண்டு ஸ்ருஷ்ட்டி ஸ்த்திதி ஸம்ஹார க்ஷமராயிருப்பார் மூவாயிரம் ப்ராஹ்மணர், தன்னையநுபவித்துத் தனக்குப்பரிந்து வர்த்திப்பதுஞ்செய்து, செறிந்த திண்ணிய மாடங்களையுடைய திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றிலே காணப்பெற்றேன்.

ப.—அநந்தரம், ஸர்வப்ரகாரோபகாரகனும், க்ஷீரார்ணவஶாயியான ஸர்வேஶ்வரனை, பரிவரான வைதிகாக்ரேஸரர் வர்த்திக்கிற திருச்செங்குன்றூரிலே காணப்பெற்றேனென்கிறார்.

எனக்கு - எனக்கு, நல் - நிர்ப்பயமான, அரணை - புகலிடமாய், (அவ்வளவன்றியே), எனது — எனக்கு, ஆருயிரை - ஸத்தாதாரகனும், (நித்யஸூரிகள் ஸத்தைக்கும் வ்ருத்திக்கும் ஹேதுபூதனுகையாலே), இமையவர் - அவர்களுக்கும், தந்தைதாய் தன்னை - தந்தைத்தாயாயிருப்பானும், தனக்கும் - (ஸர்வஜ்ஞனை) தனக்கும், தன்-தன், தன்மை-பெருமை, அறிவுஅரியானை-அறியவரிதா யிருக்குமவனும், (ஆஶ்ரித ரக்ஷணார்த்தமாக), தடம் - விஸ்தீர்ணமான, கடல் - கடலிலே, பள்ளி - கண்வளர்ந்தருளுமவனான, அம்மானை - ஸர்வேஶ்வரனை, மனம் - நெஞ்சிலே, கொள் - கொள்ளப்பட்ட, சீர் - ஸக

வ. டயரான, வண் - ஜ்ஞாநாதிஸம்பத்தையுடையரான, சிவனும் - ருத்ரனும், அயனும் - ப்ரஹ்மாவும், தானும் - (ஸர்வேஶ்வரனை) தானும், ஒப்பார் - ஒக்குப்படி (ஒரொருவரே ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளுக்கு

க்ஷமரானவர்கள்), வாழ் - ("ஜமத்ஸ்ருஷ்டிவ்யாபாரம் ஜகுர்" என்கிறபடியே அதில் தாத்பர்ய மற்று ஸம்ஹாரஸ்ருஷ்டி மாகிற) வாழ்ச்சியையுடையராய்க்கொண்டு வர்த்திக்கிறஸ்த்தல மாய், கனம் - செறிவை, கொள் - உடைத்தாய்க்கொண்டு, திண் - ஸ்த்திரமான, மாடம் - மாடங்களை புடைத்தான, திருச்செங்குன்றூரில் - திருச்செங்குன்றூரில், திருச்சிற்று றதனுள் - திருச்சிற்றாறுகிற விலக்ஷணதேசத்துக்குள்ளே, கண்டேன் - காணப் பெற்றேன்.

இ.—ஆறும்பாட்டில், நித்யஸூரிகளுக்கு ஸர்வவிதபந்துவுமாய், ப்ரஹ்மாதிகளுக்கு ஆச்ரயணீயனுமாய்க்கொண்டு திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற வனை, "தனக்கு என்வருகிறதோ?" என்று அஞ்சவேண்டாதபடி நிர்ப்பயமான திருச்செங்குன்றூரிலே காணப்பெற்றே னென்கிறார்.

[எனக்கு நல்லரணை] - "அபயம் ப்ரதிஷ்டாம் விந்ததே" என்கிற விஷயத்துக்கு பயப்படுகிற எனக்கு நிர்ப்பயமான அரணானவனை. [எனதாருயிரை] - தன்னுடைய ரக்ஷகத்வத்தைக்காட்டி எனக்கு தாரகனானவனை. [இமையவர் இத்யாதி] - பயப்ரஸங்கமில்லாத பரமபதத்திலேயிருந்து, அஸ்தானே பயசங்கைபண்ணுகிற நித்யஸூரிகளுக்கு ஸர்வவிதபந்துவானவனை. "சூழ்ந்திருந்தேத்துவர்" என்று அவர்களும் அஸ்தானே பயசங்கைபண்ணி மங்களாசாஸநம் பண்ணுநிற்பர்கள். அஸ்தானே பயப்படவேண்டும்படியிறே விஷய வைலக்ஷண்யம். [தனக்குந்தன் தன்மையறிவரியானை] - ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனான தன்னாலும் தன்னைப் பரிச்சேதிக்கப்போகாது. முதலிலே பயத்துக்கு அவகாசமில்லை. ஒருவஸ்துவைப் பரிச்சேதித்து நலிபவேணும். [தடங்கடல் பள்ளியம்மானை] - மதுகைடபர்களை யழியச்செய்கைக்கும், ச்வேத த்வீபவாஸிகளுக்கு ஆச்ரயிக்கைக்கும், ப்ரஹ்மாதிகள் பரிகைக்கும் திருப்பாற்கடலிலே பள்ளிகொண்டவனை. [மனக்கொள்சீர் மூவாயிரவர்] - பகவத்குணங்களை மநஸ்ஸிலே கொண்டு, "இவனுக்கென் வருகிறதோ?" என்று அஸ்தானே பயசங்கைபண்ணி வர்த்திப்பார் மூவாயிரம் ப்ராஹ்மணருண்டு. அவ்வூரில் ப்ராஹ்மணரும் இவர்கோடியிலுள்ளாராயிற்று; "அனுஜ்ஞாதோ ஜடாயுஷா" என்கிற ஸ்ரீபரத்வாஜபகவானோடு ஒக்குமவர்கள். தன்னைப் பிரிந்தவன்று முதல் ராவணவதம் பண்ணிமீளுமளவும் செல்ல, "இவர்களுக்குஎன் வருகிறதோ?" என்று இத்தையே நினைத்திருந்தவனிறே ஸ்ரீபரத்வாஜபகவான் [வண்சிவனும் அயனும் தானுமொப்பார்வாழ்] - ஜகத்துக்கு ஸ்ருஷ்ட்யாதிகளுக்குக்கடவராய், ப்ரதாநரான மூவரும் செய்யக்கடவ கார்யத்தை ஒரொருத்தரே செய்யவல்லராம்படியாயிற்று இவர்கள் சக்தியிருக்கும்படி. [கனக்கொள் திண்மாடம்] - செறிந்து திண்ணிதானமாடம். ஒருவர் பரியவொண்ணாதபடி ஊராண்டானே யமைந்திருக்கை. [திருச்சிற்றாறுஅதனுட்கண்டேனே] - பயப்பட்ட தேசத்திலே பயநிவ்ருத்தி பிறந்தாற்போலே, ஸம்ஸாரத்துக்குள்ளே நிர்ப்பயமாயிருப்பதொரு ஸ்தானமுண்டாய், அதிலே காணப்பெற்றேன்.

---

ஈடு.—ஆறும்பாட்டு. நித்யஸூரிகளுக்கு ஸர்வவிதபந்துவுமாய், ப்ரஹ்மாதிகளுக்கு ஆச்ரயணீயனுமாய்க்கொண்டு திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற இவனை "தனக்கென்வருகிறதோ;" என்று அஞ்சவேண்டாதபடி நிர்ப்பயமான திருச்செங்குன்றூரிலே காணப்பெற்றே னென்கிறார்.

[எனக்குநல்லரணை] - "அதஸோऽபயங்கதோ भवति" (அதஸோபயங்கதோபவதி) என்கிறவிஷயத்துக்குப் பயப்படுகிற எனக்கு நிர்ப்பயமான அரணானவனை. [எனதாருயிரை] - தன்னுடைய ரக்ஷகத்வத்தைக் காட்டி எனக்கு தாரகனானவனை. [இமையவர்தந்தைதாய்தன்னை - அஸ்த்தாநே பயசங்கைபண்ணும் நித்யஸூரிகளுக்கு ஸர்வவித பந்துவுமானவனை. "சூழ்ந்திருந்தேத்துவர்பல்லாண்டு" என்னக்கடவதிறே. [தனக்குந் தன் தன்மையறிவரியானை] - ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனான தன்னாலும் தன்னைப் பரிச்சேதிக்கப்போகாது. முதலிலே பயத்துக்கு அவகாசமில்லை: ஒருவஸ்துவைப் பரிச்சேதித்து நலியவேணுமே. [தடங்கடல்பள்ளியம்மானை] - ச்வேதத்வீபவாஸிகள் ஆச்ரயிக்கைக்கும், மதுகைடபாதிகளை அழியச்செய்கைக்கும், ப்ரஹ்மாதிகள்பரிகைக்கும்திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனை. [மனக்கொள்சீர்மூவாயிரவர்] - பகவத்குணங்களை மநஸ்ஸிலேகொண்டு, "இக்குணயிகனுக்கு என்வருகிறதோ?" என்று அஸ்த்தாநேபயசங்கை பண்ணி வர்த்திப்பார் மூவாயிரம் ப்ராஹ்மணருண்டு. அவ்வூரில் ப்ராஹ்மணரும் இவர் கோடியிலேயாயிற்று; "வவந்தே நியதோ முநிம்" (வவந்தேநியதோமுநிம்) என்கிற ஸ்ரீபரத்வாஜமஹாமுநியோடொக்குமவர்கள். தன்னைப்பிரிந்த அன்றுமுதல் ராவணவதம் பண்ணி மீளுமளவுஞ்செல்ல, "இவர்களுக்கு என்வருகிறதோ?" என்று இத்தையே நினைத்திருந்தவனிறே ஸ்ரீபரத்வாஜபகவான். [வண்சிவனுமயனும் தானுமொப்பார் வாழ்]-மூவர்செய்யும்கார்யமும் ஓரோருத்தரே செய்யவல்லராயிருப்பர்கள். அதிகாரிபுருஷர்களில் இவர்களுக்குஉண்டான ஏற்றம். [கனக்கொள்திண்மாடம்] - † (செறிந்துதிண்ணிதானமாடம்.) இவர்களும்மிகை, ஊரரண்தானே சிலர்க்கு ப்ரவேசிக்கப்போகாது. [திருச்சிற்றறத்துள்கண்டேனே] - பயப்பட்டதேசத்திலே பயம் நிவ்ருத்தமானாற்போலே, ஸம்ஸாரத்துக்குள்ளே நிர்ப்பயமாயிருப்பதோருதேச முண்டாய், அதிலேகாணப்பெற்றேன். (சு)

*ஆறும்பாட்டு — எனக்கு இத்யாதி. "இமையவர்தந்தைதாய்தன்னை - தடங்கடல்பள்ளியம்மானை - மூவாயிரவர் - வாழ் - கனக்கொள்" என்றுதொடங்கி, "கண்டேனே" என்ற பதங்களைக் கடாக்ஷித்துஅவதாரிகை* - நித்யஸூரிகளுக்கு இத்யாதி.

"அதஸோऽபயங்கதோ भवति" *என்கிற விஷயத்துக்கு என்றது - தன்பக்கல் மநஸ்ஸைவைத்தாரை நிர்ப்பயமாக்கும் விஷயத்துக்கு என்றபடி. அஸ்த்தாநே பயசங்கைபண்ணுவாரோவென்ன* - சூழ்ந்திருந்து இத்யாதி. *பலிதம்* - முதலிலே இத்யாதி. *அது எப்படியென்ன* - ஒருவஸ்துவை இத்யாதி. *திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகைக்கு மூன்றுப்ரயோஜநம் அருளிச்செய்கிறார்* - ச்வேதத்வீப இத்யாதி. *அப்படி அவர்கள் பரிவாரோ? என்ன, த்ருஷ்டாந்தம்* - அவ்வூரில் இத்யாதி. *இவர் கோடியிலே என்றது - ஆழ்வார் கோடியிலே என்றபடி. த்ருஷ்டாந்தாந்தரம்* - வவந்தே இத்யாதி. *"முநிம்" என்றதுக்கு அர்த்தம்* - தன்னை இத்யாதி. "ஸ ஹி ராமம் ததா த்ருஷ்ட்வா ஸத்யப்ரதிஜ்ஞம் ராக்ஷஸாந் ஹதவந்தம். ஸர்வம் ஸமாப்ய வவந்தே நியதோ முநிம்" ஐதிஹ்யகாண்டே (கஉஎ - க). *இவர்களைக் கண்டவாறே பயம் நிவ்ருத்தமாயிற்று என்னுமிடந்தோன்ற அவர்கள் பக்தியினுறைப்பை அருளிச்செய்கிறார்* - மூவர்செய்யும் இத்யாதி. *மூவாயிரவரும் மூவருக்கொத்தவர்களென்னாதே, "ஓரோருத்தரே" என்றதுக்கு பாவமேதென்ன* - அதிகாரி இத்யாதி. *இவர்களுக்கு மென்றது - மூவாயிரவரை. "திருச்சிற்றறத்துள் கண்டேன்" என்கிறவருடைய பாவம்* - பயப்பட்ட தேசத்திலே இத்யாதி. (சு)

---

† *குண்டலிதம் ப்ரக்ஷிப்தம்.*

## ஏழாம் பாட்டு.

திருச்செங்குன்றூரில்திருச்சிற்றாறதனுட்கண்ட அத்திருவடியென்றும்
திருச்செய்யகமலக்கண்ணும் செவ்வாயுஞ்செவ்வடியுஞ்செய்யகையும்
திருச்செய்யகமலவுந்தியும்செய்ய கமலமார்வுஞ்செய்யவுடையும்
திருச்செய்யமுடியுமாரமும்படையும் திகழவென்சிந்தையுளானே.

ஆ.—(திருச்செங்குன்றூரில்.) - திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறதனுள் கண்ட அந்த ரமணீய தாம்ரகமல ஸத்ருசமான திருக்கண்களும், வித்ருமஸத்ருசமான திருப்பவளமும், கமலஸத்ருசமான திருவடிகளும், கமலஸத்ருசமான திருக்கைகளும், கமலஸத்ருசமான திருநாபியும், நிஜபுஜாந்தரமந்திர இந்திரா திவ்யரூப மயூகவாஹி ஸம்ஹிதமாகையாலே சிவந்த தாமரைபோலேயிருந்த திருமார்வும், திவ்யபீதாம்பரமும், நிரதிசய தேஜோரூபமான திருவபிஷேகமும், திவ்யமௌக்திகஹாரமும், சங்கசக்ராதி திவ்யாயுதங்களும் திகழ என்சிந்தையுளிருந்தானென்றார்.

ஓ—ஏழாம்பாட்டில், திருச்செங்குன்றூரிலே நின்றருளின சீர்கொள்சிற்றாயன், ஒருநாளும் மறக்கவொண்ணாதபடி தன்திருவழகோடே என்ஹ்ருதயத்திலே வந்துபுகுந்தானென்கிறார்.

[திருவடி] - ஸ்வாமி. [திருச்செய்ய கமலக்கண்ணென்று மேலுக்கு] - ப்ரணதாஞனை ப்ரமஹரமான வர்ஷதாரைபோலே நோக்கக்கடவதாய் அழகிதாய்ச் சிவந்த தாமரைப்பூப்போலே யிருக்கிற திருக்கண்களும் அவர்களைக்கண்ட ஹர்ஷப்ரகர்ஷத்தாலே வினவுவாரைப்போலே ப்ரமஹரமாம்படி முறுவல்செய்கையாலே சிவந்துதோன்றின திருப்பவளமும் கண்ணுக்கும் முறுவலுக்கும் தோற்றார்க்கு இளைப்பாறலாம்படி சிவந்த திருவடிகளும், திருவடிகளிலே விழுந்தவர்களை யுரிப்பிக்கும்படியாக ஸ்பர்சிக்கும் சிவந்த திருக்கையும், தன்னுடைய ஸ்பர்சத்தாலே யுரித்துநின்றவர்கள் விடாதேநின்று நிரந்தரமாக அநுபவிக்கும்படி யழகிதாய்ச் சிவந்ததிருநாபியும், பெரியபிராட்டியார் ஸந்நிதாநத்தாலே சிவந்ததிருமார்வும், நீலமான நிறத்துக்குப் பகைத்தொடையாம்படி சிவந்த திருப்பீதாம்பரமும், ஸர்வேச்வரத்வ ஸூசகமாய் அழகியதாய், சிவந்திருக்கிற திருவபிஷேகமும், தன்திருமார்வுக்குத் தகுதியான திருவாரமும், மிகவும் பணைத்த கல்பகதருபணைத்தாற்போலே யுரித்தருளின திவ்யாயுதங்களும்எல்லாம் விளங்கும்படி என்றுமொக்க என்னுடைய ஹ்ருதயஸ்தனானான்.

ப.—அநந்தரம், அதிசயிதமான அவயவ ஆபரண ஆயுத சோபைகளோடே திருச்செங்குன்றூரிலே யெழுந்தருளியிருக்கிற என் ஸ்வாமியானவன் என்னெஞ்சுக்குள்ளே நித்யஸந்நிஹிதனாகாநின்றானென்கிறார்.

திருச்செங்குன்றூரில் - திருச்செங்குன்றூரில், திருச்சிற்றாறதனுள் - திருச்சிற்றாற்றில் வர்த்திக்கிற, கண்ட - (நான்) கண்ட, அத்திருவடி - ஸ்வாமியானவன், செய்ய - சிவந்த, கமலம் - கமலம்போலே யிருக்கிற, திருக்கண்ணும் - திருக்கண்களும், செம் — சிவந்த, வாயும் - திருப்பவளமும், செம் - சிவந்த, அடியும் - திருவடிகளும், செய்ய - சிவந்த, கையும் - திருக்கைகளும், செய்ய - சிவந்த, கமலம் — கமலத்தை

இரங்கி - க்ருபைபண்ணி, நீ - (க்ஷணமும் பிரியவொண்ணாத அழகையுடைய) நீ, காண - காட்சியாகிற ப்ரயோஜநத்தைப் பெறும்படி, வாராய் - வருகிறிலை. அந்தோ - ஐயோ! ஆசைப்பட்டுக் கூப்பிட்டாலும் முகங்காட்டவரலாகாதோ?

இ.—இரண்டாம்பாட்டில், என்விடாய் கெடும்படி அழகிய மயிர்முடியோடே வந்து தோன்றியருளவேணு மென்கிறார்.

[காணவாராய் என்றென்று] - ஒருகால் அழைத்துவரக் காணாவிட்டால், "நம்மாசையை ஆவிஷ்கரித்தோம், வந்தபோது வருகிறான்" என்றிருக்கிறாரல்லர்; நிரந்தரமாகக் கூப்பிடாநிற்பர். [கண்ணும்வாயும் துவர்ந்து] - எங்ஙனே வருமென்று அறியாமையாலே, திக்குக்கள்தோறும் பார்த்துக் கண் பசையற வுலர்ந்தது. "கண்ணநீர் கைகளாலிறைக்கும்" என்கிறதசையும் கழிந்தது, கூப்பிட்டுநாவும் பசையறவுலர்ந்தது. [அடியேன் நாணி] - அத்தலையில் அவத்யம் நம்மதாம்படியான ஸம்பந்தத்தையுடைய நான் லஜ்ஜித்து. இவனைநாட்டார் என்சொல்லுகிறாரென்று லஜ்ஜித்தேனென்னுதல்; ப்ரயோஜநார்த்தியாய்க்கூப்பிடுகையன்றிக்கே, முறையறிந்து காண்கைக்குக்கூப்பிட்டநமக்கு உதவினபடி யழகிதாயிருந்ததென்று லஜ்ஜித்தேனென்னுதல். [நன்னாடு] - * கஐஐகெஸ ஸாஜநமாகையாலே விபரீதலக்ஷணையாதல்; விஷயாநுபவத்தாலே களித்துவர்த்திக்கிற தேசமென்னுதல்; தம்மைப்போலே கூப்பிடக் காணாமையாலே அவனைப்பெற்றிருக்கிறார்களென்னும் நினைவாலேயாதல். இது பிள்ளான் நிர்வாஹம். [அலமந்தால்] - தடுமாறினால். [இரங்கி] - உனக்கு அபேக்ஷையில்லாவிட்டால் பரார்த்தத்துக்கிரக்க வேண்டாவோ? ருஷிகளுக்குள்ள ஆந்ருஶம்ஸ்யமுமில்லையோ? [ஒருநாள்] - பலநாள் வேணுமென்கிறேனோ? [நீ] - கண்டுகொண்டு நிற்கவேண்டும் வைலக்ஷண்யத்தையுடைய நீ. [அந்தோ] - உன் வைலக்ஷண்யம் அறியாதொழிந்தால், என்னார்த்தியும் அறியாதொழிவதே! [காணவாராய்] - ப்ரயோஜநார்த்தியாய் அழைக்கிறேனோ? [கருநாயிறுதிக்கும்] - கறுத்திருக்கிற ஆதித்யன் உதிக்கிற. [கருமாமாணிக்கநாள் நல்மலை போல்] - அவ்வாதித்யனுடைய உதயகிரி இருக்கிறபடி. நீலமாய்ப் பெருவிலையனை ரத்நபர்வதம்போலே. [நாள் நல்மலை] - "நாட்பூ" என்னுமாபோலே, ஔஜ்ஜ்வல்யமான மலை. [சுடர்ச்சோதி முடி] - மிக்கபுகரையுடைய மயிர்முடி. 'கருநாயிறுதிக்கும்' - என்கிற த்ருஷ்டாந்தபலத்தாலே முடியென்று - மயிர்முடியாகிறது. [சேர்சென்னி] - அதுக்காஶ்ரயமான திருமேனி நீலரத்நபர்வதம் போலேயாயிற்றிருப்பது. [அம்மானே] - ஸர்வேஶ்வரனே! நித்யஸம்ஸாரியாய்ப் போந்தஸம்ஸாரி முக்தனாய்ச்சென்றால், தாபஹரமாக அவனுக்குச்செய்வது திருக்குழலைப் பேணுமத்தனை. "கெஶவஃ க்லெஶநாஶநஃ"

ஈடு.—இரண்டாம்பாட்டு. என்விடாய் கெடும்படி அழகியமயிர்முடியுடனே வந்து தோற்றியருளவேணு மென்கிறார்.

[காணவாராயென்றென்று] - ஒருகால் "காணவாராய்" என்றால் வரக் காணாவிட்டால், ஆறியிருக்கவல்லரன்றே; பின்னையும் "காணவாராய், காணவாராய்"

---

இரண்டாம்பாட்டு.—காணவாராய் இத்யாதி. "கருநாயிறுதிக்கும் - சுடர்ச்சோதிமுடி" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - என்விடாய் இத்யாதி.

திரியவும் "காணவாராய்" என்கிறதென்னென்ன - ஒருகால் இத்யாதி. கண்ணும் வாயும் துவருகைக்கு ஹேது அருளிச்செய்கிறார் - எங்ஙனேவரும் இத்யாதி வாக்யத்வயத்தாலே.

என்பராயிற்று. [கண்ணும் வாயும் துவர்ந்து] - எங்ஙனேவருமென்று அறியாமையாலே, திக்குக்கள்தோறும் பார்த்துக் கண்பசையறவுலர்ந்தது. "கண்ணநீர்கைகளாலிறைக்கும்" என்னும் தசையும் கழிந்தது. கூப்பிட்டு வாயும் பசையறவுலர்ந்தது. [அடியேன்நாணி]- அத்தலையில்அவத்யம் நம்மதாம்படியான ஸம்பந்தமுடைய நான் லஜ்ஜித்து. இவனை நாட்டார் என்சொல்லுகிறார்களென்று லஜ்ஜித்தேன்னுதல்; ப்ரயோஜநார்த்தியாய்க் கூப்பிடுகையன்றியே, முறையறிந்து காண்கைக்குக் கூப்பிட்ட நமக்குத் தன்படி அழகிதாயிருந்ததென்று லஜ்ஜித்தேன்னுதல். [நன்னாடு] - * அநந்தக்லேஶபாஜநமாகையாலே விபரீதலக்ஷணையாதல், விஷயாநுபவத்தாலே களித்துவர்த்திக்கும் தேசமென்னுதல். பிள்ளான், "எம்பெருமானைப்பெற்று அநுபவிக்கும் நாடுகாண்" என்னுமாம், "இல்லையாகில் கூப்பிடார்களோ?" என்று. [அலமந்தால்] - தடுமாறினால். [இரங்கி] - உனக்கு அபேக்ஷையில்லாவிட்டால் பராநர்த்தத்துக்கு இரங்கவேண்டாவோ? ருஷிகளுக்குள்ள ஆந்ருஶம்ஸ்யமு மில்லையோ? [ஒருநாள்] - பலநாள் வேணுமென்கிறேனோ? [நீ] - கண்டுகொண்டு நிற்கவேண்டும்படி வைலக்ஷண்யத்தையுடைய நீ. [அந்தோ] - உன் வைலக்ஷண்யம் அறியாதொழிந்தால், எனனார்த்தியும் அறியாதொழிவதே! [காணவாராய்] - ப்ரயோஜநார்த்தியாய் அழைக்கிறேனோ. [கருநாயிறுதிக்கும] - கறுத்திருக்கிற ஆதித்யனுதிக்கிற. [கருமாமாணிக்கநாள்நல்மலைபோல] - அவ்வாதித்யனுதிக்கிற உதயகிரி இருக்கிறபடி. நீலமாய்ப் பெருவிலையனான ரத்நபர்வதம்போலே. [நாள்நல்மலை] - "நாட்பூ" என்னுமாபோலே, அபிநவமாய் தர்ஶநீயமான மலை. "கருமாமாணிக்கம் - நன்மலைமேல் - கருநாயிறுதிக்கும் - பொழுது - போல் - முடிசேர்சென்னியம்மான்" என்றுகூட்டுவது. நாள் - பொழுது. [சுடர்ச்சோதிமுடி] - மிக்க புகரையுடைய மயிர்முடி. 'கருநாயிறுதிக்கும்' - என்கிற த்ருஷ்டாந்தபலத்தாலே, முடியென்று - மயிர்முடியாகிறது. [சேர்

இத்தால் பாவம் - கண்ணநீர் இத்யாதி. கூப்பிட்டு இத்யாதிவாக்யம் எங்ஙனேவரும் இத்யாதிவாக்யத்தோடேகூட்டு. "நாணி" என்றதின் †முந்தின அர்த்தாநுகுணமாக "அடியேன்" என்றதுக்கு அர்த்தம் - அத்தலையிலவத்யம் இத்யாதி. "அடியேன்" என்றதுக்கும் "நாணி" என்றதுக்கும் அர்த்தாந்தரம் - ப்ரயோஜநார்த்தியாய் இத்யாதி. ஆக, லஜ்ஜாஹேது இரண்டு. "நன்னாடு" என்றதுக்கு மூன்றர்த்தம் - அநந்தக்லேஶ இத்யாதி வாக்யத்ரயத்தாலே. இரண்டாமர்த்தம் - ஸம்ஸாரிகளபிப்ராயத்தாலே. விஷயாநுபவத்தாலே - ஶப்தாதிவிஷயாநுபவத்தாலே. அது எப்படியென்ன-இல்லையாகில் இத்யாதி. "அலமந்தால் - தடுமாறினால்இரங்கி" என்றதுக்கு பாவம்- உனக்கு இத்யாதி.பராநர்த்தத்துக்கு இரங்கினவர்களுண்டோவென்ன-ருஷிகளுக்கு இத்யாதி.ருஷிகளுக்குள்ள என்றது - பிராட்டிக்கு இரங்கின வால்மீகியைக்கடாக்ஷித்து. "நீ" என்றதுக்கு - "காணவாராய்" என்றதுக்கு அநுகுணமாக அர்த்தம் - கண்டுகொண்டு இத்யாதி. "அந்தோ" என்றதுக்கு ஹார்த்தபாவம் - உன் வைலக்ஷண்யம் இத்யாதி. "கருமாமாணிக்கமலை" என்று வர்ணிக்கிறதுக்கு பாவம் - அவ்வாதித்யன் இத்யாதி. நாட்பூ - அப்போதலர்ந்தபூ. அர்த்தாந்தரம் - கருமாமாணிக்கம் இத்யாதி- முந்தின அர்த்தத்துக்கு, நாளநன்என்று - முழுச்சொல்லாய், அதுக்கர்த்தம் - அபிநவமாய், அத ஏவ தர்ஶநீயமானமலையென்றபடி. கருமாமாணிக்கநாள்நல்மலையில் - கருநாயிறுதிக்குமாபோலேயிருக்கிற - முடிசேர்சென்னியம்மானென்றபடி. இரண்டாமர்த்தத்துக்கு, "நாள், நல்" என்று பிரித்து, நாளென்று - பொழுதாய், "கருமாமாணிக்கம் - நன்மலைமேல் கருநாயிறுதிக்கும் - பொழுது - போல் - முடிசேர்சென்னியம்மான்" என்று அந்வயிப்பது. "முடி" என்றால் - மயிர்முடியென்கைக்கு நியாமகம்ஏது?என்ன- கருநாயிறு இத்யாதி. மயிர்முடிக்கு ஆஶ்ரயம் - உத்தமாங்கமாய், அது திருமேனியிலேகதேசமாகையாலே - அதுக்காஶ்ரயமானதிருமேனி என்கிறாராதல்,

† இங்கே அரும்பதவாக்யம் அந்வயிக்கவில்லை.

சென்னி] - அதுக்குஆஶ்ரயமான திருமேனி ரத்நபர்வதம்போலேயாயிற்றிருப்பது. [அம்மானே] - ஸர்வேஶ்வரனே! ஸம்ஸாரி முக்தனாய்ச்சென்றால், தாபஹரமாக அவனுக்குச் செய்வது திருக்குழலைப்பேணுமத்தனை. "கேஶவ:க்லேஶ நாஶந:"(கேஶவ:க்லேஶ நாஶந:) என்றிறே இருப்பது. (உ)

## மூன்றும் பாட்டு.

முடிசேர்சென்னியம்மா!நின்மொய்பூந்தாமத்தண்துழாய்
கடிசேர்கண்ணிப்பெருமானே! என்றென்றேங்கியழுதக்கால்
படிசேர்மகரக்குழைகளும் பவளவாயும்நால்தோளும்
துடிசேரிடையுமமைந்தது ஓர்தூநீர்முகில்போல்தோன்றாயே.

ஆ.—(முடிசேர்.) - நிரதிஶயபரிமள துளஸீலலிததரமான அலகஹாரத்தையுடையவனேயென்றென்று ஏங்கி அழுதக்கால், கர்ணபாஶ ஸுஸம்ஶ்லிஷ்ட மகர குண்டல வித்ருமஸத்ருஶாத்ர சதுர்பாஹு தநுதர மத்யஶோபிதமாய், விமலஸலில பரிபூர்ணமாயிருப்பதொரு பயோதம்போலே வந்து தோன்றுகிறிலை என்கிறார்.

ஓ.—மூன்றும்பாட்டில், என்னுடைய ஆர்த்திதீரும்படி விலக்ஷணமாய் ஶ்ரமஹரமான தூநீர்முகில்போலே வந்துதோற்றியருள வேணுமென்கிறார்.

[முடியென்று தொடங்கி] - ஸர்வைஶ்வர்யஸூசகமான திருவபிஷேகத்தோடேகூடின சென்னியையுடைய ஸர்வேஶ்வரனே! உனக்குத்தகுதியாய் மிகவும் அழகியதாய் ஒளியையுடைத்தாய் ஶ்ரமஹரமாய்ப் பரிமளம் மிகாநின்றுள்ள திருத்துழாய் மாலையையுடைய பெரியோனே என்று நிரந்தரமாகச் சொல்லாநின்றுகொண்டு பொருமியழுதால். [படிசேர் மகரக்குழையென்று மேலுக்கு] - படியாய்ச் சேர்ந்திருந்துள்ள மகரக்குழைகளும் பவளம்போலேயிருக்கிற வாயும் நாலுதோளும் துடியையொத்திருந்துள்ள இடையையுமுடைத்தாய்க்கொண்டு சமைந்து தெளிந்த நீரை முகக்கையாலே நல்லநிறத்தையுடைய மேகம்போலே வந்துதோன்றவேணும். படியாவது - திருவுடம்பென்றுமாம்.

ப.—அநந்தரம், ஆஹ்லாதஜநகஸௌந்தர்யத்தையுடைய காளமேகம்போலே உன்னுடைய ஔதார்யம் ப்ரகாஶிக்கும்படி வந்துதோற்றவேணுமென்கிறார்.

முடி-(உபலக்ஷிதநாதத்வத்தால்வந்த ஆதிராஜ்யத்துக்கு ஸூசகமான) திருவபிஷேகத்தோடு, சேர் - பொருந்தின, சென்னி - திருமுடியையுடைய, அம்மா -

---

"சென்னி" என்று - விக்ரஹத்துக்கும்உபலக்ஷணமாதல். மயிர்முடியைச்சொன்னதுக்கு ஹாவம் ஸம்ஸாரி இத்யாதி. அப்படி தாபஹரமோவென்ன, ப்ரமாணம் - கேஶவ: இத்யாதி. "நரகே பச்யமாநஸ்து யமேந பரிபாஷித: । கிம் த்வயா நார்சிதோ தேவ: கேஶவ: க்லேஶநாஶந:" "கருமாமாணிக்கம் - நன்மலைமேல் கருநாயிறுதிக்கும் .நாள் - போலேயிருக்கிற சுடர்ச்சோதி முடிசேர்சென்னியம்மானே - காணவாராயென்றென்று" என்று தொடங்கி, 'நீ அந்தோ! காணவாராய த்யந்வய: (உ)

ஸ்வாமியானவனும், நின் - உனக்கு அஸாதாரணமாய், மொப் - செறிந்து, பூ - ஒப்பு நீயமாய், தாமம் - ஒளியையுடைத்தாய், தண் - குளிர்ந்த, துழாய் - திருத்துழாயாகிற, கடி சேர் - பரிமளோத்தரமான, கண்ணி - மாலையையுடைய, பெருமானே - ஸர்வாதிக னானவனே! என்றென்று - என்றென்று, ஏங்கி - பொருமி, அழுதக்கால் - அழுதால், படி - வடிவுக்கு, சேர் - சேர்ந்த, மகரக்குழைகளும் - திருமகரக்குழைகளும், பவளம்- பவளம்போன்ற, வாயும் - திருவதரமும், நால் - நாலு, தோளும் - திருத்தோளும், துடிசேர் - துடிபோலேயிருக்கிற, இடையும் - இடையுமுடைத்தாம்படி, அமைந்தது - சமைந்த, தூ - நிர்மலமான, நீர் - நீர்மையாலே பூர்ணமாய், ஓர் - அத்விதீயமாயிருப்பதொரு, முகில்போல் - மேகம்போலே (உன்னுடைய உபகாரகத்வம் ப்ரகாசிக்கும் படி), தோன்றாய் - தோன்றவேணும்.

இ.—மூன்றாம்பாட்டில், தெளிந்தநீரைப் பருகின காளமேகம்போலே ப்ரமஹரமான வடிவோடே என்னார்த்தி தீரவந்து தோன்றவேணுமென்கிறார்.

[முடிசேர் சென்னியம்மா] - ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகத்தோடே சேர்ந்தசென்னியையுடையஸர்வேஶ்வரனே! [நின்மொய் பூந்தாமத்தண் துழாய்] - தகுதியாய்ச் செறியத்தொடுக்கப்பட்டு மநோஹரமாய் ஒளியையுடைத்தாய் ப்ரமஹரமாய், நாட்செல்லநாட்செல்லப் பரிமளம் மிக்குச்செல்லுகிற திருத்துழாய் மாலையையுடைய ஸர்வேஶ்வரனே! [என்றென்று] - ஒருகால் சொல்லி யாறியிருந்தேனுய்த்தான் தாழ்க்கிறாயோ? [ஏங்கியழுதக்கால்] - பொருமியழுதக்கால்: என்னுடைய அழுகைக்குரலில் தளர்த்தியைக்கேட்டால் சடக்கெனவந்துகொடு நிற்கவேண்டாவோ? [படிசேர் மகரக் குழைகளும்]-ஸ்வபாவமாய்க்கொண்டு சேர்ந்தவென்னுதல்; படியென்று-திருமேனியாய், அதுக்குச் சேர்ந்தவென்னுதல். "படிகண்டறிதியே" என்னக்கடவதிறே. [பவள வாயும்] - வந்ததெல்லாம் தோற்றும் திருவதரமும், அணைக்கைக்கு கல்பகதரு பணைத்தாற்போலே நாலுதோள்களும், துடிபோலேயிருந்த இடையுமாய்க்கொண்டு சமைந்ததொரு முகில்போலேயாயிற்று வடிவிருப்பது. இவ்விஶேஷணங்கள் கேவலம் முகிலுக்கில்லாமையாலே அத்விதீயமை. [தூநீர்முகில்] - தெளிந்தநீரை முகந்த முகில். அகவாயில்தண்ணளியெல்லாம் வடிவழகிலே காணலாம்படி வந்துதோற்றவேணும்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. தெளிந்தநீரைப்பருகின காளமேகம்போலே ப்ரமஹரமான வடிவோடே என்னார்த்தி தீரவந்து தோற்றவேணுமென்கிறார்.

[முடிசேர்சென்னியம்மா] - ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகம் சேர்ந்த சென்னியையுடைய ஸர்வேஶ்வரனே! [நின்மொய்பூந்தாமத்தண்துழாய்] - தகுதியாய்ச் செறியத் தொடுக்கப்பட்டு மநோஹரமாய் ஒளியையுடைத்தாய் ப்ரமஹரமாய், நாட்செல்ல நாட்செல்லப் பரிமளம் மிக்குச்செல்லுகிற திருத்துழாய்மாலையையுடைய ஸர்வேஶ்வரனே. [என்றென்று] - ஒருகால்சொல்லி ஆறியிருக்கிறேனாய்த்தான் ஆறியிருக்கிறாயோ? [ஏங்கியழுதக்கால்] - பொருமி அழுதக்கால். என்னழுகைக்குரலில் தளர்த்தியைக்கேட்டால்

மூன்றாம்பாட்டு.—முடிசேர் இத்யாதி. "தூநீர்முகில்போல்தோன்றாயே" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - தெளிந்தநீரை இத்யாதி.

"முடிசேர்" என்று விஶேஷித்ததுக்குபாவம் - ஆதிராஜ்ய இத்யாதி. நின் - உனக்குத் தகுதியாய். தாமம் - ஒளி. "சேர்" என்கிற வர்த்தமானார்த்தம் - நாட்செல்ல இத்யாதி, இத்தால்

சடக்கேனவந்து கொடுேற்கவேண்டாவோ? [படிசேர்மகரக்குழைகளும்] - படியாய்ச் சேர்ந்தவென்னுதல், படியிலேசேர்ந்தவென்னுதல்: ஸ்வபாவமாய்க்கொண்டு சேர்ந்த வென்னுதல், திருமேனியிலேசேர்ந்த வென்னுதல். "படிகண்டறிதியே" என்னக் கடவதிறே. [பவளவாயும்] - வைங்யமெல்லாந்தோற்றும் திருப்பவளமும். [நால்தோளும்] - அணைக்கைக்குக் கல்பகதருபணைத்தாற்போலே நாலுதோளும். [துடி இத்யாதி] - துடி போலேயிருந்த இடையுமாய்க்கொண்டு சமைந்ததொரு முகில்போலேயாயிற்று வடிவிருப்பது. இவ்விஶேஷணங்கள் கேவலம் முகிலுக்கு இல்லாமையாலே அபூதோபமை. [தூநீர்முகில்] - தெளிந்தநீரைமுகந்த முகில். அகவாயில்தண்ணளியெல்லாம் வடிவிலே காணலாம்படி வந்துதோற்றவேணும். (௩)

## நான்காம் பாட்டு

தூநீர்முகில்போல்தோன்றும்நின்சுடர்கோள்வடிவுங்கனிவாயும்
தேநீர்கமலக்கண்களும் வந்தென்சிந்தைநிறைந்தவா!
மாநீர்வெள்ளிமலைதன்மேல் வண்கார்நீலமுகில்போலத்
தூநீர்க்கடலுள்துயில்வானே! எந்தாய்! சொல்லமாட்டேனே.

*ஆ.—(தூநீர்.) - விமலஸலில பரிபூர்ணமாயிருப்பதொரு பயோதம்போலே யிருந்த உன்னுடைய உஜ்ஜ்வலமான திருவடிவும், கனிவாயும், மகரந்தநிர்ஹரமாய் கம்பீராம்பஸ்ஸமுத்பூதமாய் - ஸம்ருத்தநாளமாய் - ரவிகரவிகஸிதமான புண்டரீக தளம்போலேயிருந்த திருக்கண்களும், நயநகோசரமன்றியே வந்து என்சிந்தைநிறைந்து வ்யஸநகரமாகிறபடி சொல்லநிலமல்ல வென்கிறார்.*

*ஒ. - நாலாம்பாட்டில், உன்னுடைய அழகுவந்து என்ஹ்ருதயத்தில் நிறைந்து நலிகிறபடி என்னால் சொல்லி முடிகிறதில்லையென்று எம்பெருமானை நோக்கி விஜ்ஞாபிக்கிறார்.*

*[தேநீரென்று தொடங்கி] - தேனாகிற நீரையுடைய செவ்வித்தாமரைப் பூப்போலேயிருக்கிற கண்களும் என்ஹ்ருதயத்திலே பூர்ணமாய் நலிகிறபடி. தேனின் நீர்மையையுடைய வென்றுமாம். [மாநீர்வெள்ளிமலையென்று மேலுக்கு] - நீர் வெள்ளத்திலே வெள்ளிமலையின்மேலே அழகிதாய்க் கறுத்துக் கிடந்ததொரு மேகம்போலே ஶுத்தஜலமான கடலிலே திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளும் என்ஸ்வாமீ!*

---

ஸாவம் - என்னழகை இத்யாதி. உத்தரார்த்தத்வயவிவரணம் - ஸ்வபாவமாய் இத்யாதி வாக்யத்வயம். "படி" என்றால் - திருமேனியைக்காட்டுமோவென்ன - படிகண்டு இத்யாதி. திருப்பவளத்தைச்சொல்லுகிறவதுக்குஸாவம்-வைங்யமெல்லாம் இத்யாதி; "நாற்றோள்" என்றதுக்குஸாவம்-அணைக்கைக்கு இத்யாதி. "தூநீர்முகில்போல்தோன்றும்" என்றதுக்குஸாவம் - அகவாயில் இத்யாதி. துடி - வாத்யவிஶேஷம். முடிசேர்சென்னியம்மா! நின்மொய்பூந்தாமத்தண் - கடிசேர் - துழாய் - கண்ணிப்பெருமானே என்றுதொடங்கி அந்வயம். இங்கு த்ருஷ்டாந்தமில்லாமையாலே, "முடி" என்று - திருவபிஷேகம். (௩)

ப.—அநந்தரம், ஆஸ்ரிதார்த்தமாக க்ஷீரார்ணவத்திலே கண்வளர்ந்தருளுகிற உன்வடிவழகு என்னெஞ்சிலே நிறைந்தபடி சொல்லமாட்டுகிறிலேனென்கிறார்.

மா - பெரிய, நீர் - நீருக்குள்ளே (கிடக்கிறதொரு), வெள்ளிமலைதன்மேல் - வெள்ளிமலையின்மேலே, வண் - உதாரமான, கார் - கார்காலத்தில், நீலமுகில்போல - காளமேகம்போலே, தூ - வெளுத்த, நீர் - நீரையுடைய, கடலுள் - க்ஷீரார்ணவத்திலே, (ஓங்கின திருவரவணையின்மேலே), துயில்வான் - கண்வளர்ந்தருளுகிற, எந்தாய் - என் ஸ்வாமியானவனே! தூ - தெளிந்த, நீர் - நீராலேபூர்ணமான, முகில்போல் - மேகம் போலே, தோன்றும் - ப்ரகாஶியாநிற்கிற, நின் - உன்னுடைய, சுடர் - ஒளியை, கொள் - உடைத்தான, வடிவும் - வடிவும், கனி - பக்வபலம்போலேயிருக்கிற, வாயும் - திருவதரமும், தேன்நீர் - மதுஜலத்தையுடைய, கமலம் - கமலம்போலே (ஶ்ரமஹரமான), கண்களும் - திருக்கண்களும், வந்து - (இங்கே) வந்து, என் - என், சிந்தை - நெஞ்சு, நிறைந்தவா - நிறைந்தபடி, சொல்லமாட்டேன் - (பாசுரமிட்டுச்) சொல்லமாட்டுகிறிலேன். தேநீர்கமலம் - தேனை ஸ்வபாவமாகவுடைய கமலமென்றுமாம். வெள்ளிமலையென்கிற த்ருஷ்டாந்தபலத்தாலே திருவரவணை அத்யாஹார்யம். அன்றியே, ஶ்லாக்யமான நீர்மையையுடைய வெள்ளிமலையென்று - ஓங்கின க்ஷீரார்ணவத்துக்கு த்ருஷ்டாந்தமாகவுமாம்.

ஈ.—நாலாம்பாட்டில், உன்னழகு வந்து என்மநஸ்ஸிலே நிறைந்து நலிகிற படியை என்னால் பேசிமுடிகிறதில்லையென்கிறார்.

[தூநீர்முகில்போல் தோன்றும்] - கண்டபோதே விடாய்கெடும்படியான வர்ஷுகவலாஹகம்போலேயாயிற்றுத் தோன்றும்போது. [நின்சுடர் கொள்வடிவும்] - ஶுத்தஸத்த்வமாகையாலே நிரவதிகதேஜோரூபமான விக்ரஹத்துக்கு, †உபசயஸ்வரூபமான மேகமோ த்ருஷ்டாந்தம்? [கனிவாயும்] - கண்டபோதே நுகரலாம் கனிபோலேயிருந்துள்ள வாயென்னுதல், கனிந்திருந்துள்ள வாயென்னுதல். [தேநீர் கமலக்கண்களும்] - தேறுகிற நீரையுடைத்தான தாமரைப்பூப்போலேயிருக்கிறகண்களும். இத்தால் செவ்வியை நினைக்கிறது. தேனினுடைய நீர்மையையுடைய கண்களென்றுமாம். அதாவது — கண்ணாலே பருகலாம்படியிருக்கை. [வந்தென் சிந்தை நிறைந்தவா] - வந்து என்ஹ்ருதயத்திலே நிறைந்தபடி - சொல்லமாட்டேனென்றந்வயம். இதர விஷயங்கள் அநுபவித்துவிட்டால் விஸ்மரிக்கலாயிருக்கும், இவ்விஷயம் அநுபவித்துப் போகின்றாலும் நெஞ்சிலே யூற்றிருக்கும். [மாநீர் வெள்ளிமலைதன்மேல்] - மிக்க நீர் வெள்ளத்திலே ஒருவெள்ளிமலையின்மேலே. திருப்பாற்கடலிலே திருவநந்தாழ்வான் மேலேயென்கை. [வண்கார் நீலமுகில்போல] - உதாரமாய்க் கறுத்து நெய்த்திருப்பதொரு முகில் படிந்தாற்போலே. ஔதார்ஷ்டாந்திகமான திருவநந்தாழ்வானை யழைத்துக் கொள்ளுமித்தனை. [எந்தாய்] - கீழ்ச்சொன்ன வைலக்ஷண்யமில்லையாகிலும் விடவொண்ணாத ப்ராப்திபிருக்கிறபடி. [வந்தென்சிந்தை நிறைந்தவா - சொல்லமாட்டேன்] - மநஸ்ஸில் ப்ரகாஶம் க்லேஶஹேதுவாகாநின்றது, இதுக்கொரு பாசுரம் அறிகிறிலேன். விரஹதஶையில் ஶ்ருஙாநுஸந்தாநம் க்லேஶத்துக்கு உடலாமித்தனையிறே. தூநீர்க்கடலுள் துயில்வானேயென்று - "நெஞ்சுநிறையக் காணவேணும்" என்னும் அபேக்ஷையில்லாதார்க்கு முற்பாடனாய்வந்து சேர்ந்தபடி சொல்லுகிறது.

† உபசயாபசய என்ற பாடம் பொருந்தும்.

ஈடு.—நாலாம்பாட்டு. உன்னுடைய வடிவழகுவந்து என்மநஸ்ஸிலே நிறைந்து நலிகிறபடி என்றால் பேசிமுடிகிறதில்லையென்கிறார்.

[தூநீர்முகில்போல்தோன்றும்] - கண்டபோதே விடாய்கெடும்படியான வர்ஷுகவலாஹகம்போலேயாயிற்றுத் தோன்றுவது. [நின்சுடர்கொள்வடிவும்]-சுத்தஸத்த்வமயமாகையாலே நிரவதிகதேஜோரூபமான விக்ரஹத்துக்கு, அன்னலும் துன்னலுமாய்த் திரண்ட மேகத்தை ஒப்பாகச் சொல்லவொண்ணாதிறே. * ஒண்சுடர்க்கற்றையிறே. [கனிவாயும்] - கண்டபோதே நுகரலாம் கனிபோலேயிருக்கிற வாயும். [தேநீர்கமலக் கண்களும்] - தேனுகிற நீரையுடைத்தான தாமரைப்பூப்போலேயிருந்த கண்களும். இத்தால் - செவ்வியை நினைக்கிறது. தேனினுடைய நீர்மையையுடைய கண்களென்றுமாம். அதாவது - கண்ணாலே பருகலாயிருக்கை. [வந்தென் சிந்தைநிறைந்தவா] - வந்து என் சிந்தைநிறைந்தவா - சொல்லமாட்டேனென்றந்வயம். இதரவிஷயங்கள் அநுபவித்துவிட்டால் விஸ்மரிக்கலாயிருக்கும்: இவ்விஷயம்அநுபவித்துப் போரநின்றாலும் நெஞ்சிலேயூற்றிருக்கும். [மாநீர்வெள்ளிமலைதன்மேல்]-மிக்கநீர்வெள்ளத்தே ஒருவெள்ளிமலையின்மேலே. [வண்கார்நீலமுகில்போல] - உதாரமாய்க் கறுத்து நெய்த்திருப்பதொருமுகில் படிந்தாற்போலே யென்னுதல். உதாரமாய்க் கார்காலத்தில் முகில்படிந்தாற்போலே என்னுதல். [தூநீர்க்கடலுள்துயில்வானே] - சுத்தஜலத்திலே திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிறவனே! வெள்ளிமலையென்கிற த்ருஷ்டாந்தபலத்தாலே தார்ஷ்டாந்திகத்திலும் அழைத்துக்கொள்ளுமித்தனை. [எந்தாய்] - கீழ்ச்சொன்ன வைலக்ஷண்யமில்லையாகிலும் விடவொண்ணாத ப்ராப்தியிருக்கிறபடி. [எந்தாய் - வந்தென்சிந்தைநிறைந்தவா - சொல்லமாட்டேன்] - மநஸ்ஸில் ப்ரகாசம் க்லேசஹேதுவாகாநின்றது, இதுக்கு ஒரு பாசுரம் அறிகிறிலேன். விரஹதசையில் குணாநுஸந்தாநம் க்லேசத்துக்கு உடலாமத்தனையிறே. தூநீர்க்கடலுள் துயில்வானென்று - "காணவேணும்" என்னும் அபேக்ஷையில்லாதார்க்கு முற்பாடனாய்வந்து சாய்ந்தபடி சொல்லுகிறது. (ச)

---

*நாலாம்பாட்டு.—தூநீர் இத்யாதி. "சுடர்கொள்வடிவும் கனிவாயும் - கண்களும் - சிந்தைநிறைந்தவா - சொல்லமாட்டேன்" என்றத்தைக்கடாக்ஷித்துஅவதாரிகை - உன்னுடைய இத்யாதி.*

*"தூநீர்முகில்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் - கண்டபோதே இத்யாதி. 'முகில்போல்' என்று த்ருஷ்டாந்தம்சொன்னால், "வடிவும்" என்னாதே, "சுடர்கொள்" என்றுவிசேஷிக்கிறதென்னென்ன - சுத்தஸத்த்வ இத்யாதி. அன்னல் - புகை. துன்னல் - சிறுதிவலை. "நிரவதிகதேஜோரூபம்" என்றதுக்குப்ரமாணம் - ஒண்சுடர் இத்யாதி. "தேனீர்கமலக்கண்" என்கிறத்தால் ஃபலிதம் - இத்தால் இத்யாதி. தேனுகிற நீரென்றபோது, செவ்வியைச் சொல்லுகிறது; தேனினுடைய ஸ்வபாவத்தையுடைய கண்ணென்றபோது, போக்யதையைச்சொல்லுகிறது. நிறைந்தவா - நிறைந்தப்ரகாரம். விஶ்லேஷதசையிலே "நிறைந்தவா" என்கிறதென்னென்ன - இதரவிஷயங்கள் இத்யாதி வாக்யத்வயம். "கார், நீலம்" என்றதுக்குஅர்த்தம் - கறுத்துநெய்த்தது என்று. "கார்" என்றதுக்கு அர்த்தாந்தரம் - கார்காலத்தில் என்று. திருவநந்தாழ்வானுக்கு வாசகசப்தமில்லையேயென்ன - வெள்ளிமலையென்கிற இத்யாதி. சப்தார்த்தம் - மநஸ்ஸில் இத்யாதி. மநஸ்ஸிலே ப்ரகாசிக்கிறது க்லேசஹேதுவோவென்ன - விரஹதசையில் இத்யாதி. ஸமுத்ரசாயித்வகதநப்ரயோஜநமேது?என்ன - தூநீர்க்கடலுள் இத்யாதி. மாநீர் வெள்ளி என்றுதொடங்கி, எந்தாய் - தூநீர்முகில்போல் என்றுதொடங்கி, நிறைந்தவா - சொல்லமாட்டேன் இத்யந்வய:.* (ச)

## ஐந்தாம் பாட்டு.

சொல்லமாட்டேனடியேன் உன்துளங்குசோதித்திருப்பாதம்
எல்லையில்சீரிளநாயிறு இரண்டுபோலென்னுள்ளவா!
அல்லலென்னுமிருள்சேர்தற்கு உபாயமென்னே? ஆழிசூழ்
மல்லைஞாலமுழுதுண்ட மாநீர்க்கொண்டல்வண்ணனே!

ஆ.—(சொல்லமாட்டேன்)-ப்ரளயகால ஸகல ஸலில பரிபூர்ணமான மேகத்தின் நிறம்போலேயிருந்த திருநிறத்தையுடையவனே! உன்னுடைய நிரதிஶயதீப்தியுக்தமான திருவடிகள், நிரதிஶயதேஜோமயமாய் நிரவதிகஸௌந்தர்யநிதியாயிருப்ப இளநாயிறிரண்டுபோலே என்னுள்ளே விளங்குகிறபடி மறக்கவும் முடிகிறதில்லையென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், உன்னுடைய அழகு என்னுடைய ஹ்ருதயத்திலே யநுஸம்ஹிதமாய் நின்று நலியாநின்றது; இது மறக்க விரகுசொல்ல வேணுமென்கிறார்.

[சொல்லமாட்டேனென்று தொடங்கி] - விளங்காநின்ற வொளியையுடைய திருவடிகள் எல்லையில்லா வொளியையுடைய இரண்டு ஆதித்யர்களைப்போலே என்னுள்ளேநின்று நலிகிறபடி நான் சொல்லமாட்டுகிறிலேன். [அல்லலென்று தொடங்கி] - அநர்த்தரூபமாகச் சொல்லுகிற அஜ்ஞாநம் வருகைக்கு உபாயமென்? சொல்லவல்லையே!; கடல்சூழ்ந்த மஹாப்ருதிவியையெல்லாம் ப்ரளயத்தில் அந்தரப்படாமே திருவயிற்றிலேவைத்துப் பரிஹரித்தருளின பரமோதாரனே!

ப.—அநந்தரம், ஆபத்ஸகனான உன்திருவடிகள், பாலாதித்யர்கள்போலே என்னெஞ்சிலே ப்ரகாஶியாநின்றதுகள்; கிட்டி அநுபவிக்கப்பெறாமல் க்லேசியாதபடி மறக்க விரகேதோ? என்கிறார்.

ஆழி - ஸமுத்ரத்தாலே, சூழ் - சூழப்பட்ட, மல்லல் - பெரிய, ஞாலம் - ஜகத்தை, முழுது - எல்லாம், உண்ட-(ப்ரளயங்கொள்ளாமல்) வயிற்றிலேவைத்து, மா - நிரம்பின, நீர் - நீரையுடைத்தான, கொண்டல் - காளமேகம்போலேயிருக்கிற, வண்ணனே - வடிவையுடையனானவனே! அடியேன் - (உன் ஆபத்ஸகத்வத்துக்குத்தோற்று) அடிமைப்பட்ட நான், (என்னகவாயில் ப்ரகாஶத்துக்கு), சொல்லமாட்டேன் - பாசுரமிட்டுச் சொல்லமாட்டுகிறிலேன்; உன் - உன்னுடைய, துளங்கு - விளங்குகிற, சோதி - தேஜஸ்ஸையுடைத்தான, திருப்பாதம் - திருவடிகளானவை, எல்லைஇல் - அளவிறந்த, சீர் - அழகையுடைய, இளநாயிறு - பாலாதித்யர்கள், இரண்டுபோல் - இருவரைப்போல, என் - என், உள்ளஆ - உள்ளேயாகாநின்றன; 'இப்படி ப்ரகாசியாநிற்க, (கண்டு கிட்டி அநுபவிக்கப் பெறாமல் க்லேசியாதபடி), அல்லல் - து:கஸ்வரூபம், என்னும் - என்னலாம்படியான, இருள் - (மறப்பாகிற) இருளை, சேர்தற்கு - கிட்டுகைக்கு, உபாயம் - வழி, என்னே-ஏது? (சொல்லவேணும்.) ஆநந்தமாக ப்ரகாஶிக்கச்செய்தே, பாஹ்யஸம்ஶ்லேஷம் கிடையாதொழிவதில் மறக்கை உத்தேஶ்யமென்று கருத்து. பூர்வோத்தரங்களான பாட்டுக்கள் ஆர்த்திஸூசகமாகையாலே இதுக்கும் இதுவே பொருள்.

இ.—அஞ்சாம்பாட்டில், உன்னுடைய அழகு என்னுடையஹ்ருதயத்திலே ஸ்ம்ருதிவிஷயமாய் நின்று நலியாநின்றது: இது மறக்க ஒருவிரகு சொல்லவேணுமென்கிறார். மறக்கும்பரிஹாரம் என்னுடைய அஸக்யாநமன்றோ? மறவீரென்ன; நீ * மயர்வறுக்கையாலே * துயரறுசுடரடி என்மநஸ்ஸிலே குடிபுகுந்து நலியாநின்றது; "ஶரணம்" என்று நீயே சொல்லவேணும்.

[சொல்லமாட்டேன்] - என்ஹ்ருதயத்திலே நின்று நலிகிறபடிக்குப் பாசுரமிடப்போகிறதில்லை. [அடியேன்] - ஸம்பந்தத்தாலே தவிரமாட்டுகிறிலேன். அதேதென்ன? [உன்துளங்கு இத்யாதி] - விளங்காநின்ற ஒளியையுடைய உன்திருவடிகள். [எல்லையில்சீர்] - அளவிறந்த அழகையுடைய பாலாதித்யர்கள் இருவரைப்போலே என்ஹ்ருதயத்திலேநின்று நலிகிறபடி. பாலாதித்யர்களென்கிறது - கண்ணுலேபருகலாம்படியிருக்கையாலும், பாதிக்கத்தொடங்கின இத்தனையென்று தோற்றுகையாலும். [இளநாயிறு] - என்னை பாதிக்க அது இளமை மிகுகிறது. என்னுள்ளவா - சொல்லமாட்டேன். [அல்லல் இத்யாதி] - உன்னைக்காட்டாதே அருமைப்படுத்தப் பார்த்தாயாகில், ஸர்வாத்மகமாகச் சொல்லுகிற அஜ்ஞாநமாகிற இருள்சேருகைக்கு உபாயமென்? சொல்லவல்லையே! அநர்த்தரூபமான விஸ்ம்ருதி தேட்டமாம்படியிறே, வடிவழகு ஹ்ருதயத்திலேநின்று நலிகிறபடி. ஏதேனுமாக இவர்க்கு ஸர்வநிவ்ருத்தியேயிப்போது வேண்டுவது. திருவடிகள் நெஞ்சிலே ப்ரகாஶியாநிற்க, அஜ்ஞாநம் வந்துசேருகைக்கு ப்ரஸங்கமின்றியேயிருக்க, அதனைஅபேக்ஷிக்கிறாரிறே. கடல்சூழ்ந்த மஹாப்ருதிவியையெல்லாம் ப்ரளயத்தில் அந்தரப்படாமே வயிற்றிலேவைத்து ரக்ஷித்த பரமோதாரனே! என்னுதல்; ஆழிசூழ்மல்லை ஞாலமுழுதுண்ட மாநீரென்று - ஏகார்ணவமாய், அத்தைப்பருகின மேகம்போலேயிருந்துள்ள வடிவையுடையவனே! என்னுதல். மல்லைஞாலம் - மஹாப்ருதிவி.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. உன்னுடைய அழகு என் ஹ்ருதயத்திலே ஸ்ம்ருதி விஷயமாய் நலியாநின்றது; இதுமறக்க ஒருவிரகு சொல்லவேணு மென்கிறார்.

[சொல்லமாட்டேன்] - என் ஹ்ருதயத்திலே நின்று நலிகிறபடிக்குப் பாசுரமிடப்போகிறதில்லை. [அடியேன்] - ஸம்பந்தத்தாலே தவிரமாட்டுகிறிலேன். [உன்துளங்கு இத்யாதி] - அதேதேன்ன,-விளங்காநின்றுள்ள ஒளியையுடைய உன்திருவடிகள். [எல்லை இத்யாதி] - அளவிறந்த அழகையுடைய பாலாதித்யர்களிருவரைப்போலே என்ஹ்ருதயத்தே நின்று நலிகிறபடி. பாலாதித்யர்களென்கிறது * கண்ணுலே பருகலாயிருக்கையாலும், பாதிக்கத்தொடங்கினவித்தனை என்றுதோற்றுகையாலும். [இளநாயிறு]- என்னை பாதிக்க பாதிக்க இளமை மிகுகிறபடி.(என்னுள்ளவா சொல்லமாட்டேன்.)

---

அஞ்சாம்பாட்டு.—சொல்லமாட்டேன் இத்யாதி. "உன்துளங்குசோதித்திருப்பாதம் - என்னுள்ளவா, அல்லலென்னுமிருள் * சேர்தற்குஉபாயமென்னே" என்றபதங்களைக்கடாக்ஷித்து அவதாரிகை -உன்னுடைய இத்யாதி.

"இரண்டுபோலென்னுள்ளவா - சொல்லமாட்டேன்" என்றந்வயாநுகுணமாக அர்த்தம். என்ஹ்ருதயத்திலே இத்யாதி. ஆனால் விடுகிறதுக்கென்னென்ன - ஸம்பந்தத்தாலே இத்யாதி. அதேதேன்ன என்றது - மாட்டாதப்ரகாரமேதென்ன என்றபடி. சீர் - அழகு. "இளநாயிறு" என்றதுக்கு பாவம் - பாலாதித்யர்கள் இத்யாதி. பாவாந்தரம் - என்னைபாயிக்க இத்யாதி.

[அல்லல் இத்யாதி] - "உன்னைக்காட்டாதே அருமைப்படுத்தப்பார்த்தாயாகில், நாட்டார் 'தண்ணிது' என்கிற அஜ்ஞாநம்வருவதுஒருபாயம்ஏதோ?" என்றருளிச் செய்வர் பட்டர்; இப்போது மறந்து பிழைக்கலாமேன்னுமத்தாலே. "திருவடிகள் என்ஹ்ருதயத்திலே ப்ரகாஶியாநிற்க, து:கவாத்மகமாம்அஜ்ஞாநம் வருகைக்கு உபாயமுண்டோ" என்னும் அம்மாள். உண்டாகில், உண்டுடுத்துத் திரியலாமே நாட்டாரோபாதி! [ஆழி இத்யாதி] - கடல்சூழ்ந்த மஹாப்ருதிவியையெல்லாம் ப்ரளயத்திலே நசியாமே வயிற்றிலே வைத்து ரக்ஷித்த பரமோதாரனே! ஆழிசூழ்மல்லைஞாலம் முழுதுண்டமாநீரேன்று - ஏகார்ணவமாய், அத்தைப்பருகின மேகம்போலே யிருக்கிற வடிவையுடையவன் என்னுதல். மல்லை ஞாலம் - மஹாப்ருதிவி. (ரு)

---

## ஆறாம் பாட்டு.

---

கொண்டல்வண்ணா! குடக்கூத்தா! வினையேன்கண்ணா! கண்ணா! என்
அண்டவாணா! என்றுஎன்னையாளக்கூப்பிட்டழைத்தக்கால்
விண்தன்மேல்தான்மண்மேல்தான்விரிநீர்க்கடல்தான்மற்றுத்தான்
தொண்டனேனுன்கழல்காண ஒருநாள்வந்துதோன்றாயே.

*ஆ.—(கொண்டல்வண்ணா) - மேகஶ்யாமளனே, அஶேஷ மநோஹர திவ்யசேஷ்டிதங்களையுடையவனே, பாக்யஹீநனான என்னுடையகண்ணா, கண்ணா என்று என்னை யடிமைகொண்டருளுகைக்காகக் கூப்பிட்டழைத்தக்கால், திருநாட்டில் நின்றுதல், பூமியிலுள்ள திருநகரிகளில் நின்றுதல், திருப்பாற்கடலில் நின்றுதல், ஒரு தூணில்நின்றுதல், தொண்டனேனுன்கழல்காண ஒருநாள்வந்து தோன்றாயென்கிறார்.*

*ஒ.—ஆறாம்பாட்டில், உன்னுடைய ஸௌந்தர்யாதிகளைநினைத்து, "காணவேணும்" என்று நோவுபட்டுக் கூப்பிடுகிற நான் உஜ்ஜீவிக்கும்படி எங்கேனுமோரிடத்திலேவந்து தோற்றியருளவேணுமென்கிறார்.*

*[கொண்டல்வண்ணாகுடக்கூத்தா] - நிரதிஶயஸௌந்தர்யத்தையும் மநோஹாரியான சேஷ்டிதத்தையுமுடையவனே! [வினையேன் கண்ணாகண்ணா] - எனக்கு த்ருஷ்டியான க்ருஷ்ணனே! [வினையேன்] - காணப்பெறாத இன்னாப்பாலே - வினை*

---

*"அல்லலென்னுமிருள்சேர்தற்குபாயமென்னே" என்றதுக்கு ஹார்த்தபாவம் -* உன்னைக்காட்டாதே இத்யாதி. *"உபாயமேதோ" என்று அவனைக் கேட்கிறாரென்று* பட்டர்நிர்வாஹம்; *இப்பக்ஷத்தில், "அல்லல்" என்று - தண்மை. அஜ்ஞாநத்தை ப்ரார்த்திக்கைக்கு ஹேது அருளிச்செய்கிறார் -* இப்போது *இத்யாதி. "என்னுள்ளவா" என்றத்தைக்கூட்டி, "அல்லல்" என்றதுக்கு அர்த்தாந்தரம் -* திருவடிகள் *இத்யாதி. உபாயமுண்டோ, இல்லையே என்று - †பிரிநிலையேகாரமாக* அம்மாள் நிர்வாஹம்; *இப்போது, "அல்லல்" என்று - து:கம். உண்டானாலோவென்ன -* உண்டாகில் *இத்யாதி. "முழுதுண்ட" என்றது - முந்தின அர்த்தத்தில், ஈஶ்வரனுக்கு விஶேஷணம்; இரண்டாமர்த்தத்தில், மாநீர்க்கு விஶேஷணம். ஆழிசூழ் என்றுதொடங்கி, கொண்டல்வண்ணனே - உன்துளங்குசோதி என்றுதொடங்கி, என்னுள்ளவா - அடியேன் - சொல்லமாட்டேன் - அல்லலென்னுமிருள்சேர்தற்கு உபாயமென்னே இத்யந்வய:.* (ரு)

---

† *எதிர்மறை என்று இருக்கலாம்.*

யேன் என்கிறார். [என்னண்டவாணாவென்று தொடங்கி] - என்னை விஷயீகரிக்கைக்காக அண்டாதிபதியானவனே! என்று என்னையடிமை கொள்ளுகைக்காகக் கூப்பிட்டழைத்தக்கால். [தொண்டனேன்] - சபலனான நான்.

ப.—அநந்தரம், ஆகர்ஷகமான ஸௌந்தர்யசேஷ்டிதாதிகளிலேயகப்பட்டுக் கூப்பிட்டால் ஏதேனும் ஒருமுகத்தாலே வந்து தோன்றவேணு மென்கிறார்.

கொண்டல் - (ப்ரமஹரமான) காளமேகம்போன்ற, வண்ணா - வடிவையுடையவனே! (அவ்வழகேயன்றியே), குடக்கூத்தா - (மநோஹாரிசேஷ்டிதமான) குடக்கூத்தையுடையவனே! வினையேன் - (அத்தைக்கண்டு அநுபவிக்கப்பெறாத) பாபத்தையுடைய எனக்கு, கண்ணா - த்ருஷ்டிபூதனானவனே! கண்ணா - (ஆஸ்ரிதஸுலபனாகைக்காகக்) க்ருஷ்ணனானவனே! என்-எனக்கு ப்ராப்யபூதனாகைக்காக, அண்டவாணா-பரமபதநிர்வாஹகனாயிருக்கிறவனே! என்று — என்று (பலகாலும் உன்ஸ்வபாவங்களைச் சொல்லி), என்னை - என்னை, ஆள - அடிமைகொள்ளுகைக்காக, கூப்பிட்டு-(என்னார்த்தி அதிசயத்தாலே) கூப்பிட்டு, அழைக்கக்கால் - அழைத்தக்கால், (காளமேகம்போலே), விண்தன்மேல்தான் - பரமபதத்தில் நின்றுதல், மண்மேல்தான் - (அவதாரங்களுக்கும் அர்ச்சைகளுக்கும் ஸ்தலமான) பூமியில்நின்றுதல், விரிநீர் கடல்தான் - (அவதாரகந்தமான) க்ஷீரார்ணவத்தில் நின்றுதல், மற்றுத்தான் - (அந்தராத்மாவாய் நிற்கிற) அகவாயில் நின்றுதல், தொண்டனேன் - அதிசபலனான நான், உன் - உன், கழல் - திருவடிகளை, காண - காணும்படியாக, ஒருநாள் - ஒருநாள், வந்து-வந்து, தோன்றாய் - தோன்றவேணும்.

இ.— ஆறும்பாட்டில், உன்னுடைய ஸௌந்தர்யாதிகளை நினைத்து, "காணவேணும்" என்று கூப்பிடுகிற நான் காணும்படி ஏதேனுமோரிடத்திலே வந்து தோற்றியருளவேணு மென்கிறார்.

[கொண்டல்வண்ணா] - கண்டபோதே விடாய்கெடும்படி ப்ரமஹரமான வடிவையுடையவனே! [குடக்கூத்தா] - மநோஹரமான சேஷ்டிதங்களையுடையவனே! [வினையேன் கண்ணாகண்ணா] - எனக்கு த்ருஷ்டியான க்ருஷ்ணனே! [வினையேன்] - கண்ணையிழந்திருக்கும் படியான பாபத்தைப் பண்ணினேன். [என்னண்டவாணா என்று] - என்னை விஷயீகரிக்கைக்காக அண்டாதிபதியானவனே! கல்யாணகுணபோமம் ஆஸ்ரிதார்த்தமாயிருக்கிறப்போலே, விபூதியோமமும் தமக்காக வென்றிருக்கிறார். [என்னையாள] - ஒருப்ரயோஜநாந்தரத்துக்காக அழைக்கிறேனோ? என்னை நித்யகைங்கர்யங் கொள்ளவேணுமென்றன்றோ அழைக்கிறது? [கூப்பிட்டழைத்தக்கால்] - க்ரமப்ராப்தியை ஸஹிக்கவல்லேனாய்த்தான் தாழ்க்கிறாயோ? என் ஆர்த்தத்வநி கேட்டால் "க்ரமத்திலே வருகிறோம்" என்று ஆறியிருக்கலாயிருந்ததோ? [விண்தன்மேல் தான்] - மாநீர்க்கொண்டல் வருமாகாசத்திலே தோற்றவேணும். [விண்தன்மேற்றான்]- பரமபதத்திலிருக்கிற விருப்போடே வந்து தோற்றவுமாம். [மண்மேற்றான்] - அவதரித்துவந்து தோற்றவுமாம். [விரிநீர்க் கடல்தான்] - க்ஷீராப்தியில் கண்வளர்ந்தருளுகிறபடியே வந்து தோற்றவுமாம். [மற்றுத்தான்] - தூணிலேவந்து தோற்றினாற்போலேயாதல் ஆனைக்கு உதவவந்து தோற்றினாற்போலேயாதல் தோற்றவுமாம். [தொண்டனேன்] - உன் திருவடிகளில் கைங்கர்யத்திலே சபலனான நான். [உன்கழல்

காண] - எனக்கு ஜீவநமான திருவடிகளைக்காண. [ஒருநாள்வந்து தோன்றாயே] - "பல நாள் வேணும்" என்று நிர்ப்பந்திக்கிறேனோ? என் ஸத்தையை நோக்குகைக்கு ஒரு நாள் வந்து தோற்றியருளவேணும்.

ஈடு.—ஆறும்பாட்டு. உன்னுடைய ஸௌந்தர்யாதிகளை நினைத்து "காண வேணும்" என்று கூப்பிடுகிற நான் காணும்படி ஏதேனுமோரிடத்திலேவந்து தோற்றி யருளவேணுமென்கிறார்.

[கொண்டல்வண்ணா] - காணவே விடாயாறும்படியான வடிவை யுடைய யவனே! [குடக்கூத்தா] - மநோஹாரியான சேஷ்டிதத்தையுடையவனே! [வினையேன் கண்ணாகண்ணா] - எனக்கு த்ருஷ்டிபூதனான க்ருஷ்ணனே! [வினையேன்] - கண்ணை யிழந்திருக்கும்படியான பாபத்தைப் பண்ணினேன். [என்னண்டவாணாவென்று] - என்னை விஷயீகரிக்கைக்காக அண்டாதிபதியானவனே! கல்யாணகுணயோகம் ஆஸ்ரி தார்த்தமாய் இருக்குமாபோலே, விபூதியோகமும் தமக்காகவென்றிருக்கிறார். [என்னை யாள] - ஒரு ப்ரயோஜநாந்தரத்துக்காக அழைக்கிறேனோ? என்னை நித்யகைங்கர்யங் கொள்ளவேணுமென்றன்றோ அழைக்கிறது? [கூப்பிட்டழைத்தக்கால்] - க்ரமப்ராப்தி ஸஹிக்கவல்லேனாய்த்தான் தாழ்க்கிறாயோ? என் ஆர்த்தநாதங்கேட்டால் "க்ரமத்திலே வருகிறோம்" என்று ஆறியிருக்கலாயிருந்ததோ? [விண்டன்மேல்தான்] - மாநீர்க்கொண் டல் ஸஞ்சரிக்கும் ஆகாசத்திலே தோற்றவுமமையும். [விண்தன்மேல்தான்] - பரமபதத் திலிருக்கிற இருப்போடேவந்து தோற்றவுமாம். [மண்மேல்தான்] - அவதரித்துத்தோற் றவுமாம். [விரிநீர்கடல்தான்] - க்ஷீராப்தியில் கண்வளர்ந்தருளுகிறபடியே வந்து தோற் றவுமாம். [மற்றுத்தான்] - தூணிலேவந்து தோற்றினாற்போலே யாதல், ஆனைக்குவந்து தோற்றினாற்போலே யாதல் தோற்றவுமாம். [தொண்டனேன்] - உன் திருவடிகளில் கைங்கர்யத்தில் சபலனான நான். [உன்கழல்காண] - எனக்கு ஜீவநமான திருவடிக ளைக்காண. [ஒரு நாள் வந்து தோன்றாயே] "பலநாள்வேணும்" என்று நிர்ப்பந்திக்கிறே னோ? என்ஸத்தை கிடக்கைக்கு ஒருநாள் வந்து தோற்றியருளவேணும். (சு)

---

ஆறும்பாட்டு.—கொண்டல் இத்யாதி. "கொண்டல்வண்ணா" இத்யாதிகளையும், "வந்து தோன்றாய்" என்றத்தையும் கடாக்ஷித்து அவதாரிகை - உன்னுடைய இத்யாதி.

"கொண்டல்வண்ணா" என்றதுக்கு ஹாவம் - காணவே இத்யாதி. வினைஎது? என்ன- கண்ணை இத்யாதி. தம்மை விஷயீகரிக்கைக்காகவோ விபூதியோகமென்ன - கல்யாணகுண யோகம் இத்யாதி. "கூப்பிட்டழைத்தக்கால்" என்கிற புநருக்திக்குஹாவம் - க்ரமப்ராப்தி இத் யாதி. ஏதத்விவரணம் - என்ஆர்த்தநாதம் இத்யாதி. யத்வா, "அழைத்தக்கால்" என்றதுக்கும் "கூப்பிட்டு" என்றதுக்கும் க்ரமேண ஹாவத்வயம் - க்ரமப்ராப்தி இத்யாதி வாக்யத்வயமும் என்னுதல். அர்த்தாந்தரம் - பரமபதத்தில் இத்யாதி. ஒருநாளமையுமோவென்ன - என்ஸத்தை இத்யாதி. (சு)

---

# ஏழாம் பாட்டு.

---

வந்துதோன்றாயன்றேல் உன்வையந்தாயமலரடிக்கீழ்
முந்திவந்துயான்நிற்ப முகப்பேகூவிப்பணிகோள்ளாய்
செந்தண்கமலக்கண்கைகால் சிவந்தவாயோர்கருநாயிறு
அந்தமில்லாக்கதிர்பரப்பி அலர்ந்ததொக்குமம்மானே!

*ஆ.—(வந்துதோன்றாய்.) — * ஆதாம்ர சீதள ஸரோருஹ ஸத்ருசமான நயன பாணி வதநங்களையுடைத்தாய், நிரவதிக தீப்தியுக்தமாயிருப்பதொருகருநாயிறு போலேயிருந்த நீ வந்துதோன்றாய் ; அன்றேல், * அநாலோசித விசேஷாசேஷ லோகசரண்யமாய், * லோகவிக்ராந்தமா யிருந்த உன் திருவடிமலர்களின்கீழே, உன் திருவுள்ளத்தி லபேக்ஷிதமான கைங்கர்யத்தை நீ அருளிச்செய்வதற்கு முன்பே அறிந்து செய்யக்கடவனாய்ச் சமைந்துநிற்க முகப்பே கூவிப்பணிகொள்ளாயென்கிறார்.*

*ஒ.—ஏழாம்பாட்டில், இங்கேவந்து தோன்றியருளுதல், வாராமைக்குக் கண்ணழிவுண்டாகில் என்னை அங்கேயழைத்து அடிமைகொள்ளுதல் செய்யவேணு மென்கிறார்.*

*[வையந்தாய மலரடிக்கீழ் முந்திவந்துயான்நிற்ப] - ஒருவரையும் இழக்கக்கடவதன்றிக்கே நிரதிசயபோக்யமாய் லோகத்தையெல்லாம் அளந்த உன்னுடைய திருவடிக்கீழே முற்கோலிவந்து நிற்கும்படி.*

*ப.—அநந்தரம், அசேஷஸம்ச்லேஷ ஸ்வபாவனாய், அதிரமணீயமான ஸௌந்தர்யத்தையுடையையாயிருக்கிற நீ, என்முன்னே வந்து தோன்றுதல், உன் முன்னே யழைத்து அடிமைகொள்ளுதல் செய்யவேணு மென்கிறார்.*

*செம் - சிவந்து, தண் - குளிர்ந்த, கமலம் - தாமரைபோலேயிருக்கிற, கண் - கண்ணையும், கை - கையையும், கால் - காலையும், சிவந்த - சிவந்த, வாய் - வாயையுமுடைத்தாயிருப்பது, ஓர் - ஒரு, கருநாயிறு - நீலநிறமான நாயிறானது, (ஆயிரமென்கிற அளவன்றியே), அந்தம் - முடிவு, இல்லா - இல்லாத, கதிர் - கதிரை, பரப்பி - பரப்பி, அலர்ந்ததொக்கும் - விஸ்தீர்ணமானாற்போலே யிருக்கிற, அம்மானே - (வடிவழகையுடைய) ஸ்வாமியே! வந்து - (அவ்வழகோடே) வந்து, தோன்றாய் - தோன்றவேணும் ; அன்றேல் - அந்தநினைவன்றாகில், வையம் - ஸகலஜகத்தையும், தாய - (வரையாமல்) ஸம்ச்லேஷித்த, மலர் - (விகஸிதமான) தாமரைபோலே யிருக்கிற, அடிக்கீழ் - திருவடிகளின்கீழே, முந்தி - முற்பாடனாய்க்கொண்டு, யான் - நான், வந்து - வந்து, நிற்ப - (தரித்து) நிற்கும்படியாக, உன் - உன், முகப்பே - திருமுன்பே, கூவி - அழைத்து, பணி - அடிமை, கொள்ளாய் - கொண்டருளவேணும்.*

*இ.—ஏழாம்பாட்டில், இங்கேவந்து தோற்றியருளுதல், அதுக்குக் கண்ணழிவுண்டாகில் என்னையங்கேயழைத்து அடிமைகொள்ளுதல் செய்தருளவேணு மென்கிறார்.*

*[வந்துதோன்றாய்] - நானிருந்தவிடத்திலே உன்னைக்கொண்டுவந்து காட்டியருளாய்! [அன்றேல்] - என் ஆர்த்தியைப்பார்த்து உன்க்ருபையாலே வந்து முகங்*

காட்டவேணும். அதுசெய்யப் பார்த்திலையாகில்; உன்பூர்த்தியையும் என்சிறுமையை யும் பார்த்து வந்துமுகங்காட்டிற்றிலையாகில் என்றுமாம். [உன் வையம் தாயமலரடிக் கீழ்] - வஸிஷ்ட்டசண்டாள விபாகம்பாராத திருவடிகள். [மலரடிக்கீழ்] - ஒருசெவ் விப்பூவைக் கொண்டாயிற்றுக் காடுமோடையும் அளந்தது. [மலரடிக்கீழ் முந்திவந்து யான்நிற்ப] - நிரதிசயபோக்யமான திருவடிகளின்கீழே முற்பாடனாய்வந்து நிற்கும் படியாக. [முகப்பேகூவிப் பணிகொள்ளாய்] - "க்ரியதாமிதிமாம்வத" என்று கண் முகப்பே யடிமை கொண்டருளவேணும். குணஜ்ஞானத்தாலே தரித்திருக்கும் ஸாதாழ் வான் ப்ரக்ருதியல்லேன்; "ஜாநந்த்யாஸேவோ ஸூதன" என்னும்இளையபெருமாள் ப்ர க்ருதியான என்னை அடிமைகொண்டருளவேணும். [செந்தண் இத்யாதி] - சிவந்து குளிர்ந்த தாமரைபோலே கண்ணையும் கையையும் காலையுமுடையனாய், சிவந்தவாயை யும் உடையனாய், நீலமான நிறத்தையுமுடையனாயிருப்பானொரு ராகுத்யன், "ஸஹஸ் ஸ்ரம்" என்று ஒருஸங்க்யையின்றிக்கே யள்விறந்த கிரணங்களைப் பரப்பிக்கொண்டு விகஸிதனாற்போலே வந்துதோன்றவேணும். [அம்மானே] - உன்மேன்மையைப் பார்த்து அங்கேயழைத்து அடிமைகொள்ளுதல், உன்னுடைமை நசியாமைக்கு த்வரை யுண்டாகில் உனக்கு வந்தடிமைகொள்ளுதல் செய்தருளவேணும்.

ஈடு.—ஏழாம் பாட்டு. இங்கேவந்து தோற்றியருளுதல், அது திருவுள்ளமல்ல வாகில் அங்கேயழைத்து அடிமைகொள்ளுதல் செய்தருளவேணுமென்கிறார்.

[வந்துதோன்றாய்] - என் கண்வட்டத்திலே வந்து தோன்றவேணும். தந் தைகாலில் விலங்கற வந்துதோன்றிய தோன்றலையிறே. வந்து தோன்றாயென்கிறது. [அன் றேல்] - என்னார்த்தியைப்பார்த்து உன்னுடைய க்ருபையாலே வந்து முகங்காட்டப் பார்த்திலையாகில். உன்பூர்த்தியையும் என் சிறுமையையும் பார்த்து முகங்காட்டப் பார்த் திலையாகிலென்றுமாம். [உன்வையந்தாயமலரடி]-வஸிஷ்ட்டசண்டாளவிபாகம் பாராத திருவடிகள். [மலரடி] - ஒரு செவ்விப்பூவைக்கொண்டாயிற்றுக் காடுமோடையு மளந் தது. [மலரடிக்கீழ் முந்திவந்துயான்நிற்ப] - நிரதிசயபோக்யமான திருவடிகளின்கீழே முற்பாடனாய் வந்து நிற்கும்படியாக. [முகப்பே] - கண்வட்டத்திலே. [கூவிப்பணி கோள்ளாய்] - சோற்றையிட்டுப் பணிகோள்ளாய். "க்ரியதாமிதிமாம்வத" (க்ரியதா மிதிமாம்வத) என்று கண்முகப்பே அடிமைகொண்டருளவேணும். குணஜ்ஞானத்தாலே

---

ஏழாம்பாட்டு.—வந்துதோன்றாய் இத்யாதி. "வந்துதோன்றாயன்றேல் - உன் - முகப்பே கூவிப்பணிகொள்ளாய்" என்றவற்றைக் கடாக்ஷித்து அவ்தாரிகை - இங்கே இத்யாதி.

தோன்றாய் - தோன்றவேணும். "வந்துதோன்றாய்" என்கைக்கு முன்பு ஆர்க்குவந்து தோன்றினோமென்ன - தந்தைகாலில் இத்யாதி. திருமொழி. தோன்றல்-முதலி: ப்ரயோகனென்ற படி. "அன்றேல்" என்றதுக்கு பாவத்வயம் - என்னார்த்தியை இத்யாதி வாக்யத்வயம். "வை யம்" என்ற அசேதந ஸமாதிக்கு பாவம் - வஸிஷ்ட்ட இத்யாதி. முற்பாடனாயென்றது - "அஹம் ஸர்வம்கரிஷ்யாமி" என்று முற்பாடனாயென்றபடி. "கூவி" என்றதுக்கு பாவம் - சோற்றை இத்யாதி. கீழ் - மிடற்றோசை போக்யமாகையாலே "கூவிப்பணிகொள்ளவேணும்" என்றருளிச் செய்து, ப்ராப்தமாகையாலும் கூவிப்பணிகொள்ளவேணுமென்று பாவாந்தரம் - க்ரியதாம் இத் யாதி. "பணிகொள்ளாய்" என்று நிர்ப்பந்திக்கிறதென்? குணஜ்ஞானத்தாலே தரித்திருக்கவொண் ணாதோவென்ன - குணஜ்ஞாந இத்யாதி. இளையபெருமாள்ப்ரக்ருதியானபடி எப்படி? என்ன-

தரித்திருக்கும் ஸ்ரீஹரதாழ்வான் ப்ரக்ருதி யல்லேன்; "ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ" (ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ) என்னும் இளையபெருமாள் ப்ரக்ருதியான என்னை அடிமைகொண்டருளவேணும். "வழுவிலாவடிமைசெய்யவேண்டும்" என்றும், "நின்னலாலிலேன்" என்றும் இட்டுவைத்தவிடத்தில் கிடக்கமாட்டேன். "நன்றுமஞ்சுவன் நரகம்நானடைதல்" என்னுமவரிறே. [செந்தண் இத்யாதி] - சிவந்து குளிர்ந்த தாமரை போலே கண்ணையும் கையையும் காலையுமுடையனாய், சிவந்த வாயையுமுடையனாய், நீலமான நிறத்தையுடையனாயிருப்பானொராதித்யன், "ஸஹஸ்ரம்" என்றுஒரு ஸங்க்யையின்றிக்கே அளவிறந்த கிரணங்களைப் பரப்பிக்கொண்டு விகஸிதமானாற்போலே வந்து தோன்றவேணும். [அம்மானே] - உன்மேன்மையைப் பார்த்து அங்கேயழைத்து அடிமைகொள்ளுதல், உன்னுடைமை நசியாமைக்கு த்வரையுண்டாகில் இங்கேவந்து அடிமைகொள்ளுதல் செய்தருளவேணும். (எ)

## எட்டாம் பாட்டு.

ஒக்குமம்மானுருவமென்று உள்ளங்குழைந்துநாணாளும்
தொக்கமேகப்பல்குழாங்கள் காணுந்தோறுந்தொலைவன்நான்
தக்கவைவர்தமக்காய் அன்றீரைம்பதின்மர்தாள்சாயப்
புக்கநல்தேர்த்தனிப்பாகா!வாராயிதுவோபொருத்தமே ?

*ஆ.—(ஒக்குமம்மான்.)-உன் திருமேனியோடொக்குமென்று தொக்கமேகப் பல்குழாங்கள் காணுந்தோறும் நாணாளும் உள்ளங்குழைந்து தொலைவன்நான்; உன்னை மறந்திருக்கவொட்டுகிறதில்லை இந்தமேகங்கள்; உன்திருவடிகளையே ப்ராப்யமும் ப்ராபகமுமென்றிருக்கும் ஐவர்க்கு மோக்ஷபூதனாய், அன்று ஈரைம்பதின்மர்தாள்சாயப் புக்கநற்றேர்த்தனிப்பாகா! அத்தேரை இங்ஙனே நிறுத்திக்கொண்டுவாராய், இதுவோ உன்னுடைய ப்ரணயித்வமென்கிறார்.*

*ஒ.—எட்டாம்பாட்டில், உன்னோடு ஸத்ருசமான மேவதர்சநத்தாலே நான் வ்யஸநப்படாநிற்க, என்னோடுவந்து ஸம்ச்லேஷித்தருளுகிறிலை; இங்ஙனேயோ உன்னுடைய ஸ்வபாவம்? என்கிறார்.*

*[நாணாளும்] - நாள்தோறும் நாள்தோறும். [தொக்க] - திரண்ட. [தக்கவை வரென்று தொடங்கி] - மிகவும் சீர்மையுடைய பாண்டவர்களைவர்க்குமாய், ஒருசீர்மையுமின்றிக்கே இவர்களுக்கு விரோதிகளுமான துர்யோதநாதிகள் நூற்றுவரும் காலறும்படி புக்க உன்னைஸாரதிபாகவுடைத்தாகையாலே அதிச்லாக்யமான தேருக்குத் தனியே நிர்வாஹகனானவனே! வருகிறிலை. "ஸேநயோருபயோர்மத்யே ரதம் ஸ்தாபய*

வழுவிலா இத்யாதி. அப்படி இட்டுவைத்தவிடத்தில் கிடக்கமாட்டாரோவென்ன - நன்றுமஞ்சுவன் இத்யாதி. கிரணஸ்த்தாநே - அவயவங்கள். "அம்மான்" என்றதுக்கு - பரத்வமும், ஸ்வாமித்வமுமென்று அர்த்தத்வயம் - உன்மேன்மை இத்யாதி வாக்யத்வயத்தாலே. செந்தண்கமலம் என்றுதொடங்கி, அம்மானே - வந்துதோன்றாயன்றேல் என்றுதொடங்கி, பணிகொள்ளாய் இத்யந்வய:. அவதாரிகையிலே, அங்கேயழைத்தடிமைகொள்ளுதலென்றது - "முந்திவந்து யான் நிற்கும்படிபண்ணி முகப்பே" என்கையாலே; அங்கேயழைத்து என்றது அர்த்தாத்ஸித்தம். (எ)

ஒ8zவ்ரூத" என்றால் அப்படிச் செய்யலாவது அர்ஜுநனுக்கேயோ? எனக்காக அந்தத் தேரைத் திரியவிட்டால் ஆகாதோ? என்றுகருத்து.

ப.—அநந்தரம், போலிகண்டு நான் க்லேஶியாநிற்க, ஆஶ்ரிதபக்ஷபாதியான நீ வந்து தோன்றுகிறிலையென்கிறார்.

'அம்மான் - ஸ்வாமியானவன், உருவம் - வடிவழகு, ஒக்கும் - ஒக்கும்,' என்று - என்று, உள்ளம் - நெஞ்சு, குழைந்து - ஶிதிலமாய், நாள்நாளும் - நாடோறும், தொக்க - திரண்ட, மேகம் - மேகங்களினுடைய, பல் - பல, குழாங்கள் - ஸமூஹங்களை, காணுந்தோறும் - காணும்பொழுதெல்லாம், நான்—நான், தொலைவன் - க்லேஶியாநிற்பன்: தக்க - (நீயெல்லாவுறவுமாம்படியான) தக்கோர்மையையுடைய, ஐவர்தமக்கு - பாண்டவர்களைவர்க்கும், ஆய் - ஏவலாளாய்க்கொண்டு, அன்று - (பாரதயுத்தம் ப்ரவ்ருத்தமான) அன்று, ஈரைம்பதின்மர் - (அவர்களுக்கெதிரிகளான) நூற்றுவரும், தாள்சாய - காலற்றுப்போம்படி, புக்க - (ஸேநாமத்யத்திலே) ப்ரவேஶித்த, நல்-(உன்னயிஷ்டடாநத்தாலே) ஶ்லாக்யமான, தேர் - தேருக்கு, தனிப்பாகா - (ரதியான அவன் உன்முதுகின் கீழே ஒதுங்கும்படி) அத்விதீயஸாரதியானவனே! வாராய் - (அவ்வழகோடே) வருகிறிலை; இதுவோ - இதுவோ, பொருத்தம் - (ஆஶ்ரிதவிஷயத்தில்) பொருத்தமிருந்தபடி?

ஈ.—எட்டாம்பாட்டில், உன்னோடு ஸத்ருஶமான மேகதர்ஶநத்தாலே நோவுபடாநிற்க, வந்து முகங்காட்டுகிறிலை; உன்ஸங்க ஸ்வபாவமிதுவோவென்கிறார்.

[ஒக்குமம்மான் உருவமென்று] - ஸர்வேஶ்வரனுடைய வடிவுக்கு, * யூஒ8 ஜெ்ராதிஸம்ஊரோதா० ஸமூஹமான மேகத்தை ஸத்ருஶமென்று ப்ரமிப்பர். [உள்ளங்குழைந்து] - இது தோற்புரையன்றியே, அகவாய் ஶிதிலமாய். [நாணாளும்] - நாள்தோறும் நாள்தோறும்; இந்த ஶைதில்யம் காதாசித்கமன்றியே, இடைவிடாமல் செல்லுகை. திரண்டமேகஸமூஹங்களைக் காணுந்தோறும். [தொலைவன் நான்] - "கண்டநாள் கருருவம் காண்டோறும் நெஞ்சோடும்." யர்மிலோபம் பிறக்கிறதுமில்லை, ஜீவித்திருக்கவும் பெறுகிறிலேன். [நான்] - மேகதர்ஶநம் ஆஶ்வாஸஹேதுவிறே நாட்டுக்கு. [தக்கவைவர்] - என்ன மேகதர்ஶநத்துக்கு இடைந்து பாண்டவர்களை நோக்கிற்று? "பந்துக்களும் ஜீவிக்கவேணும், எங்களுக்கு ஐந்து குடிக்காடமையும்" என்னும் தக்கோர்மையுடையவர்கள். [தமக்காய்] - "ராய०ஸாவய" என்னலாம்படி கையாளாய். [அன்று] - அன்று உதவிற்றும் தமக்கென்றிருக்கிறார். [ஈரைம்பதின்மர் தாள் சாயப்புக்க] - "பந்துக்கள் ஜீவிக்கில் ஜீவியோம்" என்ற நூற்றுவர் காலறும்படியாகத் தூசித்தலையிலே புக்கவனன்றோ? [நல்தேர்] - இவனை ஸாரதியாகவுடைத்தாகையாலே அதிஶ்லாக்யமான தேர். [தனிப்பாகா] - தனியே நிர்வாஹகனானவனே! ரதியைக் காண்கிறிலர். "நகாங்க்ஷே விஜய०க்ருஷ்ண" என்றவனைச் சேடஞ்சாத்தி வ்யாபரிக்கையாலே, ஸாரதியையாயிற்று இவர்காண்கிறது. [வாராய்] - "ஸேநயோருபயோர்மத்யே ரதம் ஸ்தாபய" என்று பாண்டவர்கள் ஶத்ருக்கள் மேலேவிட்ட தேரை, என்னை நலிகிற மேகத்தின்மேலே விடலாகாதோ? ஐவருமாய், எதிரிகள் நூற்றுவரென்று ஸங்க்யாதாராலோ செய்யலாவது? தனியனுமாய், மேகங்கள் அஸங்க்யாதமானால் உதவலாகாதோ? [இதுவோ

பொருத்தம்] - ஆஶ்ரிதரோடு முன்பு பொருந்திப் போந்தபடியிதுவோ? ஆஶ்ரிதர்க்காக ஹீநஸாரத்யங்களைப்பண்ணியும், "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுத்தும், பகலையிரவாக்கியும் பக்ஷபதித்தது பொய்யோ? "நாராயணகயாஶிகூ" என்றவனும் கைக்கூலிகொண்டு புலமைபாடினுனென்கிறுர். இப்போது தமக்கு உதவில் அவையும் பொய்யாவதென்றிருக்கிறுர். [வாராய்] - எனக்கு இதெல்லாம் வேணுமோ? வந்து முகங்காட்டவமையாதோ? உன்வடிவைக்காட்டி மேகங்கள் அநுகூலமாம்படி பண்ணுதல், மேகதர்ஶநம் பாதகமாகாதபடி பண்ணுதல் செய்தருளவேணும்.

ஈடு.—எட்டாம்பாட்டு. உனக்குப்போலியான மேகதர்ஶநந்தாலே நோவுபடாநிற்க, வந்துமுகங்காட்டுகிறிலை; இதுவோ உன்ஸங்கஸ்வபாவம்? என்கிறுர்.

[ஒக்குமம்மானுருவமென்று] - "ஸர்வேஶ்வரன்வடிவு இதரவிஸஜாதீயம்" என்று புத்திபண்ணுநிற்கச்செய்தே, * தூமஜ்யோதிஸ்ஸலிலமருதாம் ஸமூஹமான மேகத்தை ஸத்ருஶமென்று ப்ரமிப்பர். [உள்ளங்குழைந்து] - இது தோற்புரையன்றியே, அகவாய் ஶிதிலமாய். [நாளும்] - இந்தசைதில்யம் காதாசித்கமன்றிக்கே, இடைவிடாமல்செல்லுகை. [தோக்கமேகப்பல்குழாங்கள்] - மேககலங்களுக்குஇடையார்; திரண்டமேகஸமூஹங்களைக் காணுந்தோறும். [நாளும்-தொலைவன்] - தர்மிலோபம் பிறக்கிறதுமில்லை, ஜீவித்திருக்கவும் பெறுகிறிலேன். [நான்] - மேகதர்ஶநம் நாட்டார்க்கு ஆஶ்வாஸஹேதுவிறே. [தக்கவைவர்]- என்ன மேகதர்ஶநத்துக்குஇடைந்து பாண்டவர்களை நோக்கிற்று? "பந்துக்கள்ஜீவிக்கவேணும், எங்களுக்கும் ஐந்துகுடிக்காடு அமையும்" என்னும் தக்கோர்மையுடைய ஐவர். [தமக்காய்] - "ரதம்ஸ்த்தாபய" (ரதம்ஸ்த்தாபய) என்னும்படி கையாளாய். [அன்று] - அவர்கள் தனியரான அன்று. [ஈரைம்பதின்மர்தாள்சாய]-' பந்துக்கள் ஜீவிக்கில் ஜீவியோம்"என்ற நூற்றுவரும் கால

---

எட்டாம்பாட்டு.—ஒக்கும் இத்யாதி. "தொக்கமேகம்" என்றுதொடங்கி, "தொலைவன் நான்-வாராய், இதுவே பொருத்தம்" என்றபதங்களைக் கடாக்ஷித்துஅவதாரிகை-உனக்கு இத்யாதி.

"ஒக்கும்" என்றதுக்குபாவம் - ஸர்வேஶ்வரன் இத்யாதி. "தூமஜ்யோதிஸ்ஸலிலமருதாம் ஸந்நிபாதக்வமேகஸந்தேஶார்த்தாக்வகரணைக்ரணீயா: உத்ஸுக்யாதபரிகணயந்குஹ்யகஸ்தம்யயாசே காமார்த்தாஹிப்ரக்ருதிக்ருபணாஶ்சேதநாசேதநேஷு" இதி மேகஸந்தேஶ (க-ரு). இதுவென்றது - மேகஸமூஹதர்ஶநத்தால்வந்த துர்க்கமென்றபடி. தொலைவன் - தொலையாநிற்பன்; க்லேஶியாநிற்பனென்றபடி. "தொலைவன்" என்கிற வர்த்தமாநார்த்தம் - தர்மிலோபம் இத்யாதி வாக்யத்வயம். "நான்" என்றதுக்கு லௌகிகவ்யாவ்ருத்தியென்றுவிவக்ஷித்து, மேகதர்ஶநத்தில் நாட்டார்க்கிருக்கும்படியை அருளிச்செய்கிறுர் - மேகதர்ஶநம் இத்யாதி; ஆஶ்வாஸஹேதுவிறே, அதின்றியே நோவுபடுகிறநான்என்றபடி. "தக்கஐவர்" இத்யாதிக்குஹார்த்தபாவம் - என்ன மேக இத்யாதி. "தக்கவைவர்" என்றதுக்குஅர்த்தம் - பந்துக்கள் இத்யாதி. குடிக்காடு - குப்பம். தக்கோர்மை - நன்மை. "ஆய்" என்றதுக்குஅர்த்தம் - ரதம் இத்யாதி. ஸேநயோருபயோர்மத்யே ரதம்ஸ்தாபய மேச்யுத" இத்யாதி, கீதாஸ ப்ரதமே (உக). தேருக்கு

றும்படியாக. [புக்க] - தூசித்தலையிலேபுக்க. [நல்தேர்] - இவனை ஸாரதியாகவுடைத் தாகையாலே அதிஶ்லாக்யமான தேர். [தனிப்பாகா] - தனியே நிர்வாஹகனானவனே! ரதியையக்காண்கிலர். ''**நகாங்க்ஷே விஜயம் க்ருஷ்ண**'' (நகாங்க்ஷே விஜயம்க்ருஷ்ண) என்றவனைச் சேமம் சாத்திவைத்து வ்யாபரிக்கையாலே, ஸாரதியையாயிற்று இவர்காண் கிறது. [வாராய்] - ''**ஸேநயோருபயோர்மத்யே ரதம் ஸ்தாபய**'' (ஸேநயோருப யோர்மத்யேரதம்ஸ்த்தாபய) என்ன, உபயஸேனையின் நடுவே தேரைநிறுத்தின நீ, அத் தேரை இம்மேகங்களின்நடுவே நடத்தினாலாகாதோ? ஐவருமாய், எதிரிகள் ஸங்க்யாதருமா னாலோ உதவலாவது ? தனியனுமாய், மேவு ஸமூஹங்கள் அஸங்க்யாதமானால் உதவலா காதோ ? [இதுவோபொருத்தம்] - ஆஶ்ரிதரோடு முன்பு நீ பொருந்திப்போந்தபடி இது வோ? ஆஶ்ரிதர்க்காக தௌத்யஸாரத்யங்கள்பண்ணியும், ''ஆயுதமெடேன்'' என்று ஆயுத மெடுத்தும், பகலை இரவாக்கியும் பக்ஷபதித்தது பொய்யோ? † ''**நாராயணகதாமிமாம்**'' (நாராயணகதாமிமாம்) என்றவனும் கைக்கூலிகொண்டு புலமைபாடினானாகாதே யென் கிறார். இப்போது தமக்கு உதவில் அவை மெய்யாவதென்றிருக்கிறார். [வாராய்] - எனக்கு இதெல்லாம் வேணுமோ? முகங்காட்டவமையாதோ ? (அ)

## ஒன்பதாம் பாட்டு.

---

**இதுவோபொருத்தம் ? மின்னாழிப்படையாய்! ஏறுமிருஞ்சிறைப்புள்**
**அதுவே கொடியாவுயர்த்தானே! என்றென்றேங்கியழுதக்கால்**
**எதுவேயாகக்கருதுங்கொல்? இம்மாஞாலம்பொறைதீர்ப்பான்**
**மதுவார்சோலை உத்தரமதுரைப்பிறந்தமாயனே.**

*றுத்யாதி. ரதியிருக்க, ஸாரதிக்குத் தனிமையேதென்ன* - ரதியை *இத்யாதி. அதுக்குஹேதுவேதென்ன* - **நகாங்க்ஷே** *இத்யாதி.* ''**நகாங்க்ஷே விஜயம் க்ருஷ்ண நசராஜ்யம் ஸுகாநிச। கிந்நோ ராஜ்யேந கோவிந்த கிம்போகைர்ஜீவிதேநவா**'' இதி **கீதாஸூபூயதே** (க.உ). '' *தேர்த்தனிப்பாகா வாராய்* '' *என்றதுக்கு ஹார்த்தபாவம்* - **ஸேந யோ:** *இத்யாதி. பாண்டவர்களில் தமக்குஉண்டான வ்யாவ்ருத்தியை அருளிச்செய்கிறார்* - ஐவரு மாய் *இத்யாதி வாக்யத்வயத்தாலே. விவரணம்*-ஆஶ்ரிதர்க்காக *இத்யாதி.புராணஸ்த்தமான ஆஶ்ரித பாரதந்த்ர்யம் பொய்யாகக்கூடுமோவென்ன* - *நாராயணகதாமிமாம்* இத்யாதி.''**நமோ ஸ்மஹவதே தஸ்மை வ்யாஸாயாமிததேஜஸே। யஸ்ய ப்ரஸாதாத் வக்ஷ்யாமி நாராயணகதாமிமாம்**'' புலமை - *கவி. ஆனால்அது மெய்யாவதெப்போதென்ன* - இப்போது *இத்யாதி.* வாராய் - *வரு கிறிலை.* **ஸாவாந்தரம்** - *எனக்கு இத்யாதி. தொக்கமேகப்பல்குழாங்கள் காணுந்தோறும் - அம்மா னுருவம் - ஒக்கும் - என்றுஉள்ளங்குழைந்து, நாணேும் - நான் - தொலைவன் ; தக்கவைவர்என்று தொடங்கி, தனிப்பாகா - இதுவோபொருத்தம்? வாராய் இத்யந்வய:.* (அ)

† **ஸபாபர்வதே.**

ஆ.—(இதுவோபொருத்தம்.) - திருவாழியை மின்னாகவுடைய திவ்ய ரூபமாகிற நீலமேகத்தையுடையவனே! ஆஸ்ரிதருடைய ஆபத்துக்கு உதவ வருகைக்கீடான பெரியதிருவடியை திவ்யவாஹநமாகவுடையவனே! இதுவோ முடிந்தது என்றென்று ஏங்கியழுதக்கால், ஆஸ்ரிதது:கவாஸஹிஷ்ணுவாகையாலே தத்து:கஹேதுபூத பூபார நிர்ஹரணார்த்தமாக, மதுவார்சோலை உத்தரமதுரைப்பிறந்த ஆஸ்சர்யபூதனே! நீ எதுவாக நினைத்திருக்கும்? என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், இருந்ததேகுடியாக எல்லாருடைய ஆர்த்திகளையும்போக்கி ரக்ஷித்தருளுகைக்காக ஸ்ரீமதுரையிலே வந்து திருவவதாரம்பண்ணியருளின ஆஸ்சர்யகுணகனான க்ருஷ்ணன், தன்னைக் காணவாசைப்பட்டு நோவுபடுகிற எனக்கு என்செய்தருள நினைக்கிறானோ? என்கிறார்.

[மின் என்றுதொடங்கி] - ஆஸ்ரிதவிரோதிநிரஸநத்துக்கு உறுப்பாய் மின்னு நின்றுள்ள திருவாழியாகிற திவ்யாயுதத்தையுடையையாய் ஆஸ்ரிதரோடு ஸர்வவிய ஸம்ஸ்லேஷமும் பண்ணுமவனே! [எதுவேயாகக் கருதுங்கொல்] - இவ்வார்த்திபோக்கியருளத் திருவுள்ளமாயருளுமோ? இவ்வார்த்த நாதம் கேட்டால் அத்யந்தாயாளுவானவனுடைய திருவுள்ளம் எங்ஙனே புண்படுமோ? என்றுமாம்.

ப.—அநந்தரம், ஆஸ்ரிதரை அநேகவித கைங்கர்யங்கொள்ளும் ப்ரகாரத்தை நினைத்துக் கூப்பிட்டால், ஆஸ்ரிதவிரோதி நிரஸநார்த்தமாக அவதரித்தவன் என்னினைத்திருக்கிறானோ? என்கிறார்.

'மின் - ஒளியாலே ஆபரணமாம்படியான, ஆழி - திருவாழியை, படையாய் - ஆயுதமாகவுடையவனே! ஏறும் - வாஹநமான, இரு - பெரிய, சிறை — சிறகையுடையனை, புள்ளதுவே - பெரியதிருவடி தன்னையே, கொடி ஆ - கொடியாக, உயர்த்தானே - எடுத்தவனே! இதுவோ - இதுவோ, பொருத்தம் - (அவர்களளவிலும்) பொருத்தமிருக்கும்படி,' என்றென்று-என்றுபலகாலுஞ்சொல்லி, ஏங்கி - பொருமி, அழுதக்கால்- அழுதக்கால், இ - இந்த, மாஞாலம் - மஹாப்ருதிவியின், பொறை - பாரத்தை, தீர்ப்பான் - போக்குகைக்காக, மது - மது, வார் - ப்ரவாஹியான, சோலை - சோலையையுடைய, உத்தரமதுரை - வடமதுரையிலே, பிறந்த - ஸர்வேஸ்வரத்வ ஸூசகமான (சிஹ்நங்களோடே) அவதரித்த, மாயன் - ஆஸ்சர்யபூதனானவன், (என் கண்ணநீர் மாற வருவதாக நினைத்திருக்கிறானோ? இப்படி அழுதேபோவனென்று நினைத்திருக்கிறானோ), எதுவேயாக - ஏதாகவோ, கருதும் - திருவுள்ளம்பற்றுவது?

இ—ஒன்பதாம்பாட்டில், இருந்ததே குடியாக ரக்ஷிக்க வந்தவதரித்த க்ருஷ்ணன், தன்னைக்காண்கையே தேட்டமான எனக்கு என்செய்ய நினைத்திருக்கிறான்? என்கிறார்.

வோ பொருத்தம்] - இப்படிக் கூப்பிடச் செய்தேயும் வரக்காணாமையாலே கண்ணுஞ்சுழலையிட்டு மறித்து 'இதுவோ பொருத்தம்?' என்கிறார். [மின்னாழிப் படையாய்] - மேவத்திலே மின்னினாற்போலே, ஆஸ்ரிதவிரோதி நிரஸநஸீலமான திருவாழியைப்படையாக உடையவனே! அத்திருவாழியைக்கொண்டு என்னுடைய ப்ரதிபந்தகத்தின்மேலே வ்யாபரிக்கலாகாதோ? என்கை. [ஏறும் இருஞ்சிறை] - ஏறக்கடவதான பெரியசிறகையுடைய புள்ளானதுதன்னையே த்வஜமாக எடுத்தவனே! ஆஸ்

*ரிதரை எல்லாவடிமையும் கொள்ளுமவனன்றோ? [என்றென்று இத்யாதி] - இப்பாசுரம் மாறாதே பொருமிப்பொருமி அழாநின்றால். [எதுவேயாகக் கருதுங்கொல்] - இக்கூப்பீட்டுக்கு முகங்காட்ட நினைக்கிறானோ? கூப்பிட்டே போவானென்றிருக்கிறானோ? இக்கூப்பீட்டுக்கு அவன்திருவுள்ளம் எங்ஙனே புண்படுகிறதோ? என்றுமாம். [இம்மாஞாலம் பொறைதீர்ப்பான்] - இம்மஹாப்ருதிவியின் பாரத்தைப் போக்குகைக்காக. [மதுவார் சோலையித்யாதி] - மதுஸ்யந்தியான சோலையையுடைய வடமதுரையிலே, சத்ருக்களான கம்ஸாதிகள் நடுவே பிறந்த மாயனே! ஆவிர்பவிக்கையன்றிக்கே கர்ப்பவாஸம் பண்ணிவந்து அவதரித்த ஆஶ்சர்யகுணகனான க்ருஷ்ணன். "ஸம்ஸாரநிரஸநம்" என்கிற வ்யாஜத்தாலே ஸம்ஸாரிஸஜாதீயனாய் வந்தவதரித்து ஆஶ்ரிதவிரோதிகளைப்போக்கி ஆஶ்ரிதரை ரக்ஷிக்கும் ஸ்வபாவனானவன், நம்கூப்பீட்டுக்கு என்ன நினைத்திருக்கிறானென்கை.*

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. அந்திமதசையில் ஸ்வர்க்கத்தேறப்போன இவர்கள் நிற்கிடீர்; திருவாழியாழ்வான்முதலான நித்யரோடும் பொருத்தமிதுவோ? என்று ஸ்வகதமாக விசாரிக்கிறார். இருந்ததேகுடியாக ரக்ஷிக்கவந்த க்ருஷ்ணன், தன்னைக்காண்கையே தேட்டமான எனக்கு என்செய்தருளுமென்று நினைக்கிறாராகவுமாம்.

[இதுவோபொருத்தம்] - இப்படிக்கூப்பிடச்செய்தேயும் வரக்காணாமையாலே கண்ணுஞ்சுழலையிட்டு, மீண்டும் 'இதுவோபொருத்தம்?' என்கிறார். [மின்னாழிப்படையாய்] - மேகத்திலே மின்னினாற்போலே, ஆஶ்ரிதவிரோதிநிரஸநஶீலமானதிருவாழியைப் படையாகவுடையவனே! அத்திருவாழியைக்கொண்டு என்னுடைய ப்ரதிபந்தகத்தின் மேலே வ்யாபரித்தாலாகாதோ? [ஏறும் இத்யாதி] - ஏறக்கடவ பெரியசிறகையுடைய புள்ளானதுதன்னையே த்வஜமாக எடுத்தவனே! ஆஶ்ரிதரை எல்லாவடிமையும் கொள்ளுமவனன்றோ? [என்றென்றேங்கியழுதக்கால்] - இப்பாசுரம் மாறாதே பொருமிப்பொருமி அழாநின்றால். [எதுவேயாகக்கருதுங்கொல்] - இக்கூப்பீட்டுக்கு முகங்காட்டநினைக்கிறானோ? கூப்பிட்டேபோவானென்றிருக்கிறானோ? இக்கூப்பீட்டுக்கு அவன்திருவுள்ளம் எங்ஙனே

---

*ஒன்பதாம்பாட்டு.—இதுவோ இத்யாதி. "மின்னாழிப்படையாய் - புள்ளதுவே கொடியாவுயர்த்தானே - இதுவோபொருத்தம்" என்றவற்றைக்கடாக்ஷித்து அவதாரிகை - அந்திமதசையில் இத்யாதி. "மின்னாழிப்படையாய்" என்றுதொடங்கி, "கொடியாவுயர்த்தானே - இதுவோ பொருத்தம் - என்றென்றேங்கியழுதக்கால் - இம்மாஞாலம்" என்றுதொடங்கி, "பிறந்தமாயனே - எதுவேயாகக் கருதுங்கொல்" என்று அந்வயம் விவக்ஷிதம். அன்றிக்கே, "இம்மாஞாலம்" என்று தொடங்கி, "பிறந்த மாயனை - மின்னாழிப்படையாய்" என்றுதொடங்கி, "எதுவேயாகக் கருதுங் கொல்" என்றுஅந்வயவிவக்ஷயாஸங்கத்யந்தரம் - இருந்ததே இத்யாதி. இப்பக்ஷத்தில், "இதுவோ பொருத்தம்" என்றது - அநுவாதம். ஸ்வகதமாகவென்றது - யோஜநாத்வயத்துக்குமொக்கும். இரண்டாம்யோஜனை - "எதுவேயாகக்கருதுங்கொல்இம்மாஞாலம்" இத்யாதிபதங்களைக்கடாக்ஷித்து. இருந்ததேகுடியாக - எல்லாரையுமொக்க. "மாயனே" என்ற ஏகாரம்-ஈற்றசை.*

*த்விதீயயோஜநாநுகுணமாக அர்த்தம் - இப்படிக்கூப்பிட இத்யாதி. இத்தால்பாவம் - அத்திருவாழியை இத்யாதி. வாஹநத்வ த்வஜத்வங்கள் சொன்னதுக்குபாவம் - ஆஶ்ரிதரை இத்யாதி. "அதுவேகொடியாவுயர்த்தானே" என்றது - எல்லாவடிமைக்கு முபலக்ஷணமென்றபடி. இரண்டாமவதாரிகைக்கு அநுகுணமாக அர்த்தம் - இக்கூப்பீட்டுக்குமுகம் இத்யாதி. முந்தின அவதாரிகைக்கு அநுகுணமாக அர்த்தம் - இக்கூப்பீட்டுக்கு இத்யாதி. "பொறை" என்று - பாரத்தை*

புண்படுகிறதோ? என்றுமாம். [இம்மாஞாலம்பொறைதீர்ப்பான்] - இம்மஹாப்ருதிவியி னுடைய ஹாரத்தைப் போக்குகைக்காக. [மதுவார்சோலை] - மதுஸ்யந்தியான சோலை யையுடைய. [உத்தரமதுரை] - வடமதுரையில், ஶத்ருக்களான கம்ஸாதிகள்நடுவே பிறந்த மாயனே! ஆவிர்ப்பவிக்கையன்றியே, "தததுூ உ௱ஷ ெமஶசாவெஸ" (தததஸ்சத்வாதமே மாஸே) என்கிறபடியே கர்ப்பவாஸம்பண்ணிப்பிறந்த ஆஶ்சர்யபூதனே! 'ஷ௶ஹார நிர ஸநம்' (பூபாரநிரஸநம்) என்கிற வ்யாஜத்தாலே இதரஸஜாதீயனாய்வந்தவதரித்து ஆஶ்ரி தவிரோதிகளைப்போக்கும் ஸ்வபாவனானவன், நம் கூப்பீட்டுக்கு என்நினைத்திருக்கிறு னென்கை. (௯)

## பத்தாம் பாட்டு.

பிறந்தமாயா!பாரதம்பொருதமாயா!நீயின்னே
சிறந்தகால்தீநீர்வான்மண்பிறவுமாயபெருமானே
கறந்தபாலுள்நெய்யேபோல்இவற்றுளெங்குங்கண்டுகோள்
இறந்துநின்றபெருமாயா! உன்னையெங்கேகாண்கேனே ?

*ஆ—(பிறந்தமாயா) - ஸாதுபரித்ராணார்த்தமாகவும், துஷ்க்ருத்விநாஶார்த் தமாகவும் ஸ்ரீமதுரையிலே பிறந்தருளின ஆஶ்சர்யபூதனே! - நீ இப்படி ஸர்வத்ர ஸந்நி ஹிதனாயிருந்துவைத்து உன்னைக்காட்டியருளுகிறிலை, இனி உன்னை எங்கே காண்கேன்? என்கிறார்.*

*ஒ—பத்தாம்பாட்டில், ஸந்நிஹிதனாய் வைத்துக் கண்ணால் காணவொண் ணாதபடிநின்ற ஆஶ்சர்யபூதனை உன்னைநான் காண்பதெவ்விடத்தே? என்கிறார்.*

*[பிறந்தமாயா] - அகர்மவஶ்யனாயிருந்து வைத்து க்ருபாதிஶயத்தாலே அப்ரா க்ருத திவ்யஸம்ஸ்தாநத்தோடே கர்மவஶ்யரோடே ஸஜாதீயனாய்வந்து திருவவதாரம் பண்ணியருளின ஆஶ்சர்யபூதனே! [பாரதம்பொருதமாயா] - ஆயுதமெடுக்கக் கடவ தன்றாக ப்ரதிஜ்ஞைபண்ணி ஸாரத்யத்திலே அதிகரித்துவைத்து, பாண்டவர்கள் வெல் லும்படி பாரதயுத்தம் பண்ணின ஆஶ்சர்யபூதனே! [நீயின்னே] - நீ இப்படி ஸுலபனா யிருக்கச்செய்தே. [சிறந்தகாலென்றுதொடங்கி] - ப்ருதிவ்யாதிகளான பூதங்களுக் கும், அவற்றின் கார்யங்களுக்கும் ஆத்மாவாய் நின்றவனே! காற்றுக்குச் சிறப்பாகிறது தாரகத்வம். [கறந்தபாலென்றுதொடங்கி] - கண்ணாலேகாண்கிறபாலினுள் நெய்யுண் டாயிருக்கச் செய்தே காண்கையரிதானாற்போலே இவை எல்லாவற்றினுள்ளும் நின்று வைத்துக் காணவொண்ணாதபடி நிற்கிற அத்யாஶ்சர்யபூதனே! [கறந்த] - காலத்தா லும் ஆதஞ்சநாதிகளாலும் உள்ள பரிணாமராஹித்யத்தை நினைக்கிறது.*

---

*லக்ஷிக்கிறது. "உத்தரமதுரை" என்றதுக்குபாவம் - ஶத்ருக்களான இத்யாதி. "மாயன்" என்ற துக்குபாவம் - ஆவிர்ப்பவிக்கை இத்யாதி.ஃபலிதம்-பூபார இத்யாதி. இதுவோபொருத்தம், மின் னுழிப்படையாய் என்றுதொடங்கி, அழுதக்கால் - இம்மாஞாலம் என்றுதொடங்கி, மாயனே - எதுவேயாகக் கருதுங்கொல் இத்யந்வயம்.* (௯)

ப.—அநந்தரம், அவதாரப்ரயுக்த ஸௌலப்யத்துக்குப் பிற்பட்டு, அந்நிலையும் அதீந்த்ரியமானால் எங்கேகாண்பதென்று ஆர்த்தராகிறார்.

பிறந்த - "அஜாயமாநோ பஹுதா விஜாயதே" என்கிறபடியே அஜஹத்ஸ்வபாவனாய்க்கொண்டு அவதரித்த, மாயா - ஆஸ்சர்யபூதனாய், (ஆஸ்ரிதார்த்தமாக), பாரதம் - மஹாபாரதயுத்தத்தைப்பண்ணுமிடத்தில், பொருதமாயா - ("ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுத்தல், பகலை இரவாக்குதல் முதலான) ஆஸ்சர்யசேஷ்டிதங்களைச்செய்து நடத்தினவனே! நீ - நீ, இன்னே - இப்படி ஸாலப்ஹனாயிருக்கச்செய்தே, சிறந்த - (ஜகத்காரணத்வத்தால்வந்த சிறப்பையுடைய, கால்தீநீர்வான்மண் - பஞ்சபூதங்களையும், பிறவும் - மற்றுமுள்ள ஹௌதிகபதார்த்தங்களையும், ஆய - ப்ரகாரமாகவுடைய, பெருமானே - ஸர்வாதிகனாய், ("ஸர்வபூதேஷு தமாயிநோ" என்கிறகணக்கிலே), கறந்த - கறந்த, பால்-பாலுக்கு, உள் - உள்ளில், நெய்யேபோல் - நெய்போலே, (மயித்துக்காண்பார்க்கொழிய), கண்டுகொள் இறந்து - காண அரிதாம்படி, இவற்றுள் - இப்பதார்த்தத்துக்குள்ளில், எங்கும் - எல்லாவிடத்திலும், நின்ற - நின்ற, பெருமாயா - அத்யாஸ்சர்யபூதனானவனே! உன்னை - (இப்படி அதீந்த்ரியனான) உன்னை, எங்கே - எவ்விடத்திலே, காண்கேன் - காணக்கடவேன்.

இ.—பத்தாம்பாட்டில், அவதாரத்துக்குப் பிற்பாடனாய், அந்தர்யாமித்வம் கண்ணுக்கு அவிஷயமானபின்பு, உன்னை எவ்விடத்தேபோ காண்பது? என்கிறார்.

[பிறந்தமாயா] - அகர்மவஸ்யனாய் வைத்து, அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்தானத்தை இதரஸஜாதீயமாக்கிவந்தவதரித்த ஆஸ்சர்யபூதனே! [பாரதம்பொருதமாயா] - பிறந்தாற்போலே இருப்பதொன்றாயிற்று இவ்வாஸ்சர்யமும்; ஸத்யப்ரதிஜ்ஞனானவன் அஸத்யப்ரதிஜ்ஞனவாஸ்சர்யம்; "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுக்கையும், பகலை இரவாக்குகையும். [நீயின்னே] - இப்படி ஸாலப்ஹனாயிருக்கச்செய்தே. [சிறந்த இத்யாதி] - காரணமான ப்ருதிவ்யாதிபூதங்களுக்கும். [பிறவும்இத்யாதி] - கார்யமான தேவாதிபதார்த்தங்களுக்கும் ஆத்மாவான ஸர்வேஸ்வரனே! காற்றுக்குச் சிறப்பாகிறது—காரணத்வம் ஒத்திருக்கதாரகத்வத்தால் வந்தவுற்றம். [கறந்த இத்யாதி] - கண்ணாலேகாண்கிற பாலினுள்ளே நெய்யுண்டாயிருக்கக் காண்கைஅரிதானாற்போலே, ஸகல பதார்த்தங்களிலும் நின்றுவைத்துக் காணவொண்ணாதபடி நிற்கிற ஆஸ்சர்யபூதனே. [கறந்த பால்] - காலத்தாலும் ஆதஞ்சநமர்த்தனங்களாலும் தோற்றுகிற நெய் கறந்தகாலத்தில் தோற்றாதிறே. உன்பக்கலிலே ந்யஸ்தபராகையாகிற ஸம்ஸ்காரத்தாலல்லது காணவரியை என்கை. [உன்னை எங்கே காண்கேனே] - பரமபதத்தில் காட்சிக்கு ஸரீர ஸம்பந்தம் அறவேணும்; அவதாரத்துக்குப் பிற்பாடனானேன்; அர்ச்சாவதாரம் நினைத்தபடி கிடையாது; அந்தர்யாமித்வம் கண்ணுக்கு விஷயமன்று. இனி, எங்கே காணப்புகுகிறேன்?

ஈடு.—பத்தாம்பாட்டு. அவதாரத்துக்குப் பிற்பாடனாய், அந்தர்யாமித்வம் கண்ணுக்கு அவிஷயமானபின்பு, உன்னை நான் எவ்விடத்தே காண்பதென்கிறார்.

---

பத்தாம்பாட்டு.—பிறந்தமாயா இத்யாதி. "பிறந்தமாயா" இத்யாதியையும், "கண்டுகொள்இறந்துநின்ற பெருமாயா உன்னையெங்கேகாண்கேன்" என்றத்தையும் கடாக்ஷித்து அவதாரிகை - அவதாரத்துக்கு இத்யாதி

[பிறந்தமாயா] - அகர்மவஶ்யனும்வைத்து, அப்ராக்ருத திவ்யஸம்ஸ்த்தாநத்தை இதரஸஜாதீயமாக்கி வந்தவதரித்த ஆஶ்சர்யபூதனே! [பாரதம்பொருதமாயா] - பிறந்தாற்போலே யிருப்பதோன்றுயிற்று இவ்வாஶ்சர்யமும்! ஸத்யப்ரதிஜ்ஞனவன் அஸத்யப்ரதிஜ்ஞனானதாஶ்சர்யம். ''ஆயுதமெடேன்'' என்று ஆயுதமெடுக்கையும்,பகலை இரவாக்குகையும்.[நீயின்னே]-நீ இப்படி ஸுலபனுயிருக்கச்செய்தே. [சிறந்த இத்யாதி] - காரணமான ப்ருதிவ்யாதிபூதங்களுக்கும். [பிறபும்]-தத்கார்யமான தேவாதிபதார்த்தங்களுக்கும். [ஆய பெருமானே]-ஆத்மாவான ஸர்வேஶ்வரனே!காற்றுக்குச்சிறப்பாவது-காரணத்வமோத்திருக்கயாரகத்வத்தால்வந்த ஏற்றம்.[கறந்த இத்யாதி] - கண்ணாலே காண்கிற பாலினுள்ளே நெய்யுண்டாயிருக்கக் காணவரிதானாற்போலே ஸகலபதார்த்தங்களிலும் நின்றுனைத்துக் காணவொண்ணாதபடி நிற்கிற அத்யாஶ்சர்யபூதனே! ப்ரஹ்மவிதுபநிஷத்து, ''𑌗𑌵𑌾𑌮𑌨𑍇𑌕𑌵𑌰𑍍𑌣𑌾𑌨𑌾𑌂 𑌕𑍍𑌷𑍀𑌰𑌸𑍍𑌯 𑌤𑍍𑌵𑍇𑌕𑌵𑌰𑍍𑌣𑌤𑌾 | 𑌕𑍍𑌷𑍀𑌰𑌵𑌤𑍍𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌲𑌿𑌙𑍍𑌗𑌿𑌨𑌸𑍍𑌤𑍁 𑌗𑌵𑌾𑌂 𑌯𑌥𑌾 || 𑌘𑍃𑌤𑌮𑌿𑌵 𑌪𑌯𑌸𑌿 𑌨𑌿𑌗𑍂𑌢𑌂 𑌭𑍂𑌤𑍇 𑌭𑍂𑌤𑍇 𑌚 𑌵𑌸𑌤𑌿 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 | 𑌸𑌤𑌤𑌂 𑌮𑌨𑍍𑌥𑍇𑌤𑌵𑍍𑌯𑌂 𑌮𑌨𑌸𑌾 𑌮𑌨𑍍𑌥𑌾𑌨𑌭𑍂𑌤𑍇𑌨 || 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌧𑌿𑌵𑌾𑌸𑌂 𑌯𑌦𑍍𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌚 𑌵𑌸𑌤𑍍𑌯𑌪𑌿 | 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍁𑌗𑍍𑌰𑌾𑌹𑌕𑌤𑍍𑌵𑍇𑌨 𑌤𑌦𑌸𑍍𑌮𑍍𑌯𑌹𑌂 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵 𑌇𑌤𑌿||'' (கவாமநேகவர்ணாநாம்க்ஷீரஸ்யத்வேகவர்ணதா | க்ஷீரவத்பஶ்யதி ஜ்ஞாநம்லிங்கிநஸ்துகவாம்யதா || க்ருதமிவபயஸிநிகூடம் பூதேபூதேசவஸதிவிஜ்ஞாநம் | ஸததம்மந்தேதவ்யம்மநஸாமந்தாநபூதேந || ஸர்வபூதாதிவாஸமயத் பூதேஷுசவஸத்யபி | ஸர்வாநுக்ராஹகத்வேந ததஸ்ம்யஹம்வாஸுதேவஇதி) என்கிறபடியே. [கறந்தபால்] - காலத்தாலும் மதநாதியாலும் தோற்றுகிறநெய், கறந்தகாலத்தில் தோற்றாதிறே. உன்பக்கலிலே ந்யஸ்தபரனானைகையாகிற ஸம்ஸ்காரத்தாலல்லது காண அரியையென்கை. [உன்னை எங்கேகாண்கேனே] - பரமபதத்தில் காட்சிக்கு ஶரீரஸம்பந்தமறவேணும்; அவதாரத்துக்குப் பிற்பாடனானேன்; அர்ச்சாவதாரம் நான் நினைத்தபடி கிடையாது; அந்தர்யாமித்வம் கண்ணுக்கு விஷயமன்று; இனி இவ்விழவோடே முடிந்துபோமித்தனையாகாதே. (௧௦)

அவதாரத்தில்ஆஶ்சர்யமேதென்ன-அகர்மவஶ்யனும் இத்யாதி.பாரதம்பொருகையில்ஆஶ்சர்யமேதென்ன-ஸத்யப்ரதிஜ்ஞன்இத்யாதி.அஸத்யப்ரதிஜ்ஞனானபடி எப்படி?என்ன-ஆயுதம்இத்யாதி காரணத்வமோத்திருக்கஎன்றது-ஶ்ருத்யந்தரங்களோபாதிகாரணத்வம்ஓத்திருக்கஎன்றபடி.'கண்டுகொள் இறந்துநின்ற' என்றது - கண்டுகொள்ளுகையை அதிக்ரமித்துநின்றஎன்றபடி. பாலுக்குள்ளே நெய்யிருக்குமாபோலே அந்தர்யாமியாயிருக்குமோவென்ன-𑌗𑌵𑌾𑌂 இத்யாதி. ஜ்ஞாநமென்றது-ஜ்ஞாநஸ்வரூபனான ஆத்மாவை. 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌃-𑌲𑌿𑌙𑍍𑌗𑌿𑌨𑌃, தேவாதிஶரீரபேதங்களையுடையவர்களென்றபடி. 𑌗𑌵𑌾𑌂 𑌯𑌥𑌾-கோக்களுக்குஎப்படி வர்ணபேதவிஶிஷ்டஶரீரபேதங்கள், அப்படியே தேவாதிஶரீரபேதங்கள். '𑌘𑍃𑌤𑌮𑌿𑌵𑌪𑌯𑌸𑌿𑌨𑌿𑌗𑍂𑌢𑌂-𑌭𑍂𑌤𑍇-𑌭𑍂𑌤𑍇𑌚𑌵𑌸𑌤𑌿𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍' என்றமாத்ரமே இவ்விடத்துக்கும்வேண்டுவது. விஜ்ஞாநம் - பரமாத்மா. ''𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌧𑌿𑌵𑌾𑌸𑌂𑌯𑌤𑍍'' என்று தத்புருஷனில்அர்த்தத்தையும், ''𑌭𑍂𑌤𑍇𑌷𑍁𑌚𑌵𑌸𑌤𑍍𑌯𑌪𑌿'' என்று-பஹுவ்ரீஹியிலர்த்தத்தையும் சொல்லுகிறது. ''𑌤𑌦𑌸𑍍𑌮𑍍𑌯𑌹𑌮𑍍'' என்று - உபாஸகன வார்த்தை. பாலென்னாதே, ''கறந்தபால்'' என்று விஶேஷித்ததுக்கு பாவம் - காலத்தாலும் இத்யாதி. மதநாதி என்கிற ஆதிஶப்தத்தாலே- மதநபூர்வபாவியான †ஆதஞ்சநத்தைச்சொல்லுகிறது. தோற்றாதிறே - அதுக்காகவிஶேஷிக்கிறதென்றபடி. ''𑌮𑌨𑍍𑌥𑌾𑌨𑌭𑍂𑌤𑍇𑌨-𑌮𑌨𑌸𑌾-𑌸𑌤𑌤𑌂𑌮𑌨𑍍𑌥𑍇𑌤𑌵𑍍𑌯𑌮𑍍'' என்றதுக்கு அர்த்தம் - உன்பக்கலிலே இத்யாதி. பரத்வத்தையும் அர்ச்சாவதாரத்தையுங் கூட்டி, உக்தத்தை நிகமிக்கிறார் - பரமபதத்தில் இத்யாதி. (௧௦)

† ஆதஞ்சநம் - பாலிற் பிரைகுத்தித் தோய்த்தல்.

எங்கேகாண்கேன்!ஈன்துழாயம்மான்தன்னையான்?என்றென்று
அங்கேதாழ்ந்தசொற்களால்அந்தண்குருகூர்ச்சடகோபன்
செங்கேழ்சொன்னவாயிரத்துள் இவையும்பத்தும்வல்லார்கள்
இங்கேகாண இப்பிறப்பேமகிழ்வர் எல்லியுங்காலையே.

ஆ.—(எங்கேகாண்கேன்.) - எங்கேகாண்கேன் ஈன்துழாயம்மான்தன்னை யானென்றென்று அங்கே ப்ரவண மநஸ்கராய், ப்ரேமார்த்ர விஹ்வலமான சொற்களாலே அந்தண்குருகூர்ச்சடகோபன் ஆர்ஜவோபேதமாகச்சொன்ன ஆயிரத்துள் இவை பத்தும் வல்லார்கள், இந்த லோகத்திலே இஜ்ஜந்மத்திலே எல்லாருங்காண எம்பெருமானை எப்போதும் காணப்பெற்று மகிழ்வரென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி வல்லார், ஆழ்வார்பட்ட து:க்கம் படாதே, இஹலோகத்திலே இஜ்ஜந்மத்திலே எம்பெருமானைப் பெற்று நிரந்தரமாக ஸுகிப்பரென்கிறார்.

[எங்கேயென்றுதொடங்கி] - ஸர்வைஶ்வர்ய ஸூசகமாய் நிரதிஶயபோக்யமான திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனான ஸர்வேஶ்வரனை நான் எங்கே காண்கேன் என்று நிரந்தரமாகச் சொல்லாநின்றுகொண்டு அந்தபாவத்திலே ப்ரவணமான சொற்களாலே. [செங்கேழ்] - செவ்விதாம்படி. [எல்லி] - இரவு. [காலை] - பகல்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக, ஸம்ஸாரத்திலே ஸுகாநுபவலாபத்தை அருளிச்செய்கிறார்.

'ஈன் - நிரதிஶயபோக்யமான, துழாய் - திருத்துழாய்மாலையையுடைய, அம்மான்தன்னை - ஸர்வேஶ்வரனை, யான் - (இப்படி ஆர்த்த்யதிஶயத்தையுடைய) நான், எங்கே - எங்கே, காண்கேன் - காணக்கடவேன்', என்றென்று - என்று பலகாலுஞ் சொல்லி, அங்கே - அவனுடைய போக்யதையிலும் ஶேஷித்வத்திலும், தாழ்ந்த - ப்ரவணமான, சொற்களால் - சொற்களாலே, அம் - தர்ஶநீயமாய், தண் - ஶ்ரமஹரமான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், (பகவத்ஸ்வபாவங்களை ப்ரதிபாதிக்குமிடத்தில்), செங்கேழ் - ஆர்ஜவத்தை யுடைத்தாய்க்கொண்டு போரும்படி, சொன்ன - அருளிச்செய்த, ஆயிரத்துள் - ஆயிரத்துக்குள்ளே, இவையும்பத்தும் இவைபத்தையும், வல்லார்கள் - பாவவ்ருத்தியோடே அப்யஸிக்கவல்லவர்கள், இங்கே - இந்தப்பூமியிலே, காண - (எல்லாரும்) காணும்படி, இப்பிறப்பே - இஜ்ஜந்மத்திலே, எல்லியுங்காலை - ராத்ரிந்திவம் இடைவிடாதபடி, மகிழ்வர் - பகவதநுபவஜநிதாநந்தத்தை யுடையராவர்கள். எல்லி - ராத்ரி. இது - அறுசீராசிரியவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழிவல்லார், இவ்வாழ்வார்பட்ட து:க்கம் படாதே, இஹலோகத்திலே இஜ்ஜந்மத்திலே அவனைப்பெற்று நிரந்தரமாக ஸுகிப்பரென்கிறார்.

[ஈன்துழாயம்மான்தன்னை - எங்கேகாண்கேன்] - ஐஶ்வர்ய ஸூசகமான திருத்துழாய்மாலையையுடைய ஸர்வேஶ்வரனைக் கண்டல்லது தரிக்கமாட்டாதபடி சபல

*ஞ நான் எங்கேகாணக்கடவேன்? [என்றென்று] - நிரந்தரமாகச் சொல்லி. ஒருகால்சொல்லி "ஆசையை ஆவிஷ்கரித்தோமிறே" என்று ஆறியிருக்கிறாரல்லரே; லாபத்தளவும் சொல்லுமித்தனையிறே. [அங்கேதாழ்ந்த சொற்களால்]- தோளும், தோள்மாலையிலும் அந்த ஶேஷித்வத்திலும் ப்ரவணமான சொற்களாலே. [அந்தண்குருகூர்ச்சடகோபன்] - "உபதிஷ்டந்தாம் ஸர்வே" என்னுமாபோலே, இவ்வாற்றாமைக்கெல்லாம் இடங்கொடுத்த ஆழ்வார் என்று ஆளவந்தார் நிர்வாஹம்: [செங்கேழ்சொன்ன] - செவ்விதாகச்சொன்ன; நினைவும், சொல்லும், செயலும் ஒருபடிப்பட்டிருக்கை. [செங்கேழ்] - செவ்விதாக என்றபடி, [இங்கேயித்யாதி] - இஹலோகத்திலே இஜ்ஜந்மத்திலே திவாராத்ரவிஶ்லேஷமின்றிக்கே ஸம்வதநுபவம்பண்ணி மகிழப்பெறுவர். "ஆளக்கூப்பிட்டழைத்தக்கால்" என்று - கூப்பிடவந்து முகங்காட்டாதத்தால் பிறந்த தன்னுடைய அவத்யத்தை, ஆழ்வாரை ஆஶ்ரயித்தார்பக்கலிலே தீருமாயிற்று அவன்; பார்யையோடே வெறுப்புண்டானால் அவள்பக்கல் முகம்பெறுகைக்கு ப்ரஜைகளை ஸ்லாகிப்பாரைப் போலே.*

ஈடு.—நிகமத்தில்-இத்திருவாய்மொழிவல்லார், தாம்பட்ட து:கம்படாதே, இஹலோகத்திலே இஜ்ஜந்மத்திலே அவனைப்பெற்று நிரந்தரமாக ஸம்ஶ்லேஷிப்பரென்கிறார்.

[ஈன்துழாயம்மான்தன்னையான்எங்கேகாண்கேன்] - ஐஶ்வர்ய ஸூசகமான திருத்துழாய்மாலையையுடையஸர்வேஶ்வரனைக் கண்டல்லதுதரிக்கமாட்டாதபடிசபலனான நான் எங்கேகாணக்கடவேன்? [என்றென்று] - பரத்வாதிகளைப் பெறாத நான்உன்னை நிரந்தரமாகச்சொல்லி. ஒருகால்சொல்லி "ஆசையை யாவிஷ்கரித்தோமிறே" என்று ஆறியிருக்கிறாரல்லரே;லாபத்தளவும் சொல்லுமித்தனையிறே [அங்கேதாழ்ந்தசொற்களால்]-தோளும், தோள்மாலையிலும், அந்த ஶேஷித்வத்திலும் ப்ரவணமான சொற்களாலே. [அந்தண்குருகூர்ச்சடகோபன்] - "உபதிஷ்டந்தாம் ஸர்வே வ்யாயய:" (உபதிஷ்டட்டந்துமாம் ஸர்வேவ்யாதய:)என்கிறபடியே, இவ்வாற்றாமைக்கெல்லாம் ஆடல்கொடுத்த ஆழ்வார்" என்று ஆளவந்தார் நிர்வாஹம். [செங்கேழ்சொன்னஇத்யாதி]-மநோவாக்காயங்கள் ஏகரூபமாய்ச்சொன்ன ஆயிரத்திலும் இப்பத்தையும். [வல்லார்கள்]-அப்யஸிக்கவல்லார். [இங்கே இத்யாதி] - இஹலோகத்திலே இஜ்ஜந்மத்திலே திவாராத்ர விஶ்லேஷமின்றிக்கே ஸம்வதநுபவம் பண்ணி மகிழப்பெறுவர்: "ஆளக்கூப்பிட்டழைத்தக்கால்" என்று கூப்பிட வந்து

*நிகமம்.*—எங்கேகாண்கேன் *இத்யாதி- "இவையும்பத்தும்வல்லாகள் இங்கே - இப்பிறப்பே மகிழ்வர்எல்லியுங்காலையே" என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை* - இத்திருவாய்மொழி *இத்யாதி.*

*ஈன் - இனிதான என்றபடி. "அம்மான்" என்று ஶேஷித்வம். வீப்ஸையேதென்ன - ஒருகால் இத்யாதி. "அங்கேதாழ்ந்த" என்றதுக்கு அர்த்தம் -* தோளும் *இத்யாதி. "அங்கே" என்று - "ஈன்துழாயம்மான்" என்றத்தைப் பராமர்ஶிக்கிறது. ஆழ்வார் து:கிதராயிருக்க, "அந்தண் குருகூர்" என்னலாமோவென்ன-*உபதிஷ்டந்து *இத்யாதி. அதாவது "கர்மபலமென்றாதல், க்ருபாபலமென்றாதல்" இத்யாதிப்படியே சலியாதிருக்கையாலே, ஊரும் தழைத்ததென்றபடி.*
"உபதிஷ்டந்தாம் ஸர்வே வ்யாயய: பாதகாநி ச । ந த்வேநாஹம் பரித்யக்ஷ்யாமி தங்கிஷாம் ஸர்வாஸ்வபி" இதிஹாஸஸமுச்சயே. ஆடல்கொடுத்த - இடங்கொடுத்த. *"செங்கேழ்" என்று முழுச்சொல்லாய், செவ்விதாக என்றபடி. "இங்கே - இப்பிறப்பே-எல்லியுங் காலையும் - காண - மகிழ்வர்" என்று அந்வயித்து அர்த்தம் -* இஹலோகத்திலே இத்யாதி. இவர்க்கு

முகங்காட்டாத அவத்யத்தை இப்பத்தை யப்யஸித்தவர்களோடே கடுகவந்து முகங்காட்டித் தீருமாயிற்று ஈஸ்வரன்; பார்யையோடே வெறுப்புண்டானால் அவள்பக்கல் முகம் பெறுகைக்காக ப்ரஜைகளை ஸ்லாகிப்பாரைப்போலே. (சக)

---

ஸகவதநுஸவம் கிடையாதிருக்க, இப்பத்தை யப்யஸித்தார்க்குக் கிடைக்கக் கூடுமோவென்ன - ஆளக்கூப்பிட்டு இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம்-பார்யையோடே இத்யாதி. ஈன் தழாயம்மான் தன்னை யான் - எங்கேகாண்கேன் - என்றென்று, அங்கே தாழ்ந்த என்று தொடங்கி எல்லியுங் காலையும் - மகிழ்வர் இத்யந்வய:. (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.— ஸாக்ஷேஸாநூர தநஸ்ரீவிஷ்வ ஸ்ரீஸம்ஸோவநு நிஜஷ்டநவீஜவாதிதவ்ய:। வசெஷவதிதவமதஸ்ஷ ஷ்காராநாவ்யாய ஸௌரியிவணு ஜாஷாவ ॥.

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளீ.— ஞூஸெஷாநிதக்வா ஷுஹகேடதயா வாஜிதாஷுளஸயிக்வாஜீஷதஸ்ஜேக்வாஹிதஸாஐதயாவஷ ஸஷெராவஜாநூஜ। ஸாரயூாதாணஸஷெநா ரவநிஷஷதெச ரஷராக க்வயோமா ஜீவாவெக்ஷாஷதீக்ஷாஷவதிதஜவநெ ஸ்ரீவதிஸெதஷாணி ॥

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி**

மாயன்வடிவழகைக்காணுதவல்விடா
யாய்அதறவிஞ்சியழுதலற்றம்— தூயபுகழ்
உற்றசடகோபனைநாமொன்றிநிற்கும்போதுபகல்
அற்றபொழுதானதெல்லியாம்.

ஆழ்வார்திருவடிகளே ஸரணம், எம்பெருமானார்திருவடிகளே ஸரணம், ஜீயர்திருவடிகளே ஸரணம்.

---

## ஆறாந் திருவாய்மொழி—எல்லியும் ப்ரவேஸங்கள்.

ஆ.—(எல்லியுங்காலையும்.) - எம்பெருமான் என்னுடைய விடாயெல்லாம் தீரும்படி அருள்செய்தருளினான்.

ஒ.—ஆறாந்திருவாய்மொழியில், ஆழ்வாருடைய ஆர்த்தத்வநியைக் கேட்டு தப்தஹ்ருதயனாய், அவருடைய ஆர்த்திதீரும்படி ஸம்ஸ்லேஷித்தருளுகைக்காக வருகையிலே உத்யுக்தனான எம்பெருமான்,— ஸ்ரீபரதாழ்வானுக்குத் தாம் எழுந்தருளின ப்ரீதி ஸாத்மித்தால் திருவயோத்யையிலே புக்கருளுகைக்காக ஸ்ரீபரத்வாஜ பகவான் ஆஸ்ரமத்திலே பெருமாள் விட்டருளினாற்போலேயும், ஸ்ரீவஸுதேவர் திருமகன்

தூதெழுந்தருளினபோது நேரேசென்று ஹஸ்திநபுரத்தில் புகாதே குஶஸ்த்தலத்திலே விட்டருளினாற் போலேயும், ஆழ்வார்தம்பாடு நேரவந்து புகுந்தருளாதே, தான்வந்த வரவில் இவர்க்குப் பிறந்த ப்ரீதி ஸாத்மித்தால் வந்து ஸம்ஶ்லேஷித்தருளுகைக்காகத் திருக்கடித்தானத்திலே வந்து புகுந்தருளித் தம்மோடே கலக்கிறபடியைக்கண்டு ப்ரீதராகிறார்.

ப.—ஆறுந்திருவாய்மொழியில், இப்படி அநுபவாபிநிவேஶத்தாலே அத்யந்தம் ஆர்த்தராய்க் கூப்பிட்ட இவ்வாழ்வாருடைய ஆர்த்தி தீருகைக்காக "இவருடைய ஸகலவிரோதிகளையும்போக்கி ஸம்ஶ்லேஷிப்போம்" என்று ஈஶ்வரன் திருக்கடித்தானத்திலே ஆஸந்நமாக வந்து ஸந்நிஹிதனானபடியை ப்ரகாஶிப்பிக்க; அவனுடைய ஆஸக்திநிதாநமான ஶேஷித்வத்தையும், அஶேஷவிரோதிநிவர்த்தகமான ஸாமர்த்யத்தையும், பராக்ரமைசர்யத்தால் வந்த வீரஶ்ரீயோகத்தையும், ஆந்தரவிரோதி நிவர்த்தகமான அந்தஃப்ரவேஶத்தையும், ப்ரத்யாஸத்திக்கடியான ப்ராப்யதேசவர்த்தித்வத்தையும், அவனிலும் அவன்தேசம் விரோதிநிவர்த்தகமென்னுமிடத்தையும், தேசஸ்ம்ருதிமாத்ரமே து:கநிவர்த்தகமென்னுமிடத்தையும், ஆஸந்நதேசத்தினுடைய அஸாதாரண்யத்தையும், அர்ச்சாந்தர ஸ்த்தலத்திலும் ஸந்நிஹிதனென்னுமிடத்தையும், ஆஸந்நதேசஸ்த்திதி அந்த:ப்ரவேஶார்த்தமென்னு மிடத்தையும் அநுஸந்தித்து, நெஞ்சிலே வந்து புகுந்து தம்முடைய விரோதியைப்போக்கி அநுபவிப்பதாக அத்யாஸந்நனான அவனுடைய அபிநிவேஶத்தைக்கண்டு தமக்குப்பிறந்த ஹர்ஷத்தை அருளிச்செய்கிறார்.

இ.—ஆறுந்திருவாய்மொழியில், * மாயக்கூத்தனில் ஆழ்வார்க்கோடின ஆர்த்தியளவன்று, ஈஶ்வரனுக்குப் பிறந்தவிடாய்; இது பேச்சுக்கு நிலமாகையாலே பேசலாயிற்று. அவனுக்குப் பேச்சுக்கு நிலமல்லாமையாலே பேசப்பெற்றதில்லை. "ஊடிய ம்ஶோவஸா ந ஜீவிஷ்யே" என்றிறே இத்தலையில்விடாய்; "நஜீவேயம் க்ஷணமபி" என்றிறே அத்தலையிருப்பது. கீழ் இவர் ஆர்த்தியோடே கூப்பிட முகங்காட்டப் பெறாமையாலே, "ஹ்ரியேஷா ஹி மே ஶோகஹா" என்று பிற்பாட்டுக்கு லஜ்ஜித்து, தப்தஹ்ருதயனாய், இவருடைய ஆர்த்திதீர ஸம்ஶ்லேஷிக்கைக்காக வருகையிலே உத்யுக்தனானவன், "ஒருகாலேசென்று முகங்காட்டில், ஒருகாலே ஆறுபெருகில் உடைகுலைப்படுமாபோலே இவர் ஶிதிலராவர்" என்று இவர் பக்கலிலே நேரேவந்து புகுராதே, "வரவை அறிவித்து ப்ரீதி ஸாத்மித்தவாறே முகங்காட்டுவோம்" என்றுபார்த்து, பெருமாள் ஸ்ரீபரதாழ்வானுக்குத் தாம் எழுந்தருளின ப்ரீதி ஸாத்மித்தவாறே எழுந்தருளுகைக்காக ஸ்ரீபரத்வாஜ மஹர்ஷியாஶ்ரமத்திலே ற்போலேயும்; ஸ்ரீக்ருஷ்ணன் தூதெழுந்தருளுகிறபோது "நினைவின்றிக்கே போய்ப்புக்கவாறே யுத்ராதிகள் ப்ரீதியாலே ஶிதிலராகக்கூடும்" என்று, "குஶஸ்த்தலே நிவஸதி ஸ ச ப்ராதரிஹைஷ்யதி" என்று வரவு வார்த்தையானவாறே பிற்றைநாள் ஹஸ்திநபுரத்திலே போய்ப் புக்காற்போலேயும் ஸம்ஶ்லேஷோந்முகனாய், திருக்கடித்தானத்திலேபுகுந்து நிற்கிற நிலையைக் காட்டிக்கொடுக்க, தம்மோடு கலக்கைக்கு ஒருப்பட்டு நிற்கிறநிலையை அநுஸந்தித்து க்ருதக்ருத்யராய், அத்தைப் பேசி இனியராகிறார். கீழில்திருவாய்மொழியில் வ்யஸநப்படுத்தின நினைவுதானே இப்போது உஜ்ஜீவநமாம்படி பண்ணினான். * செறுவாரும் நட்பாகுவரிறே செங்கோனருள் பெற்றவாறே.

ஈடு.— * மாயக்கூத்தனில், ஆழ்வார், தமக்கோடினவிடாய் பேச்சுக்கு நில மாகையாலே பேசினர்; ஈச்வரனுக்கோடினவிடாய் பேச்சுக்கு நிலமல்லாமையாலே பேசிற்றில்லை. "ஊர்த்வம் மாஸாந் நஜீவிஷ்யே" (ஊர்த்த்வம்மாஸாந்நஜீவிஷ்யே) என்று இத்தலையில் விடாய்; "நஜீவேயம் க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி) என்றிறே அத் தலையிருப்பது. * "மாயக்கூத்தனில் இவர்க்கோடினவிடாய்க்கு உதவப்பெற்றிலோம்" என்னுமத்தாலே தப்தனாய், ஆதுலனாய், பிற்பாட்டுக்கு "ஹ்ரீரேஷா ஹிமமாதுலா" (ஹ்ரீரேஷாஹிமமாதுலா) என்கிறபடியே லஜ்ஜித்து. "இனி நாம் கடுகமுகங்காட்டில் ப்ரீதியாலே உடகுலைப்படுவர், ப்ரீதியை ஸாத்மிப்பித்து உளராக்கிப் பரிமாறவேணும்" என்று, பதினாலாண்டு பிரிவாலே நொந்த ஸ்ரீபரதாழ்வானை ப்ரீதிப்பித்து முகங்காட்டுகைக்காகத் திருவடியைப் போகவிட்டு, ஸ்ரீபரத்வாஜ மஹாமுநி ஆச்ரமத்திலே இருந்தாற்போலவும்; பாண்டவர்களுக்காகத் தூதுபோகிறபோது, ப்ரேமபரவசரான விதுராதிகள் ப்ரீதியை அகஞ்சரிப்படுத்தி முகங்காட்டுகைக்காக, *"குசஸ்த்தலே நிவஸதிஸச ப்ராதரிஹேஷ்யதி" (குசஸ்த்தலே நிவஸதிஸச ப்ராதரிஹேஷ்யதி) என்கிறபடியே - குசஸ்த் தலத்திலே விட்டுக்கொண்டிருந்து, பிற்றைநாள் ஹஸ்திநபுரத்திலே எழுந்தருளினாற்போல வும்; தம்மோடே ஸம்ச்லேஷோந்முகனான ஸர்வேச்வரன், தம்முடைய ப்ரீதியை ஸாத் மிப்பித்துத் தம்மோடே கலக்கைக்காகத் திருக்கடித்தானத்திலே எழுந்தருளியிருந்து, தம் பக்கல் பண்ணுகிற வ்யாமோஹத்தை அநுஸந்தித்து இனியராய், அத்தைப்பேசி அநுபவிக் கிறார். கீழில் திருவாய்மொழியில் வ்யஸநஹேதுவான நினைவுதானே இப்போது உஜ்ஜீவ நமாம்படி பண்ணினான். * செறுவாரும் நட்பாகுவரிறே செங்கோனருள்பெற்றவாறே.

---

எல்லியும்காலையும் ப்ரவேசம்: தம்முடையவிடாய் சொன்னாற்போலே அவனுடைய விடாயையும் சொல்லவேண்டாவோவென்ன - மாயக்கூத்தனில் இத்யாதி. அப்படி அதிசயித் திருக்குமோவென்ன - ஊர்த்வம் இத்யாதி. ஸங்கதி - மாயக்கூத்தனில் இத்யாதி. ஆதுலனாய் - கால் பாவாதவனாயென்றபடி. இப்படி வ்யஸநாதிசயத்தையுடையவனாகையாலே மாயக்கூத்த னில் என்றுகூட்டுவது. இழேஅப்படி விடாய்த்தவரைப் பூர்ணமாக அநுபவிப்பியாதே, திருக்கடித் தானத்திலேவந்து நிற்கிறதுக்கு ஹேதுவேதென்ன - இனிநாம் இத்யாதி. இவ்விடத்திலே - "நாளைவதுவை" என்கிறத்தை அருளிச்செய்வர். வதுவை - விவாஹம். அதாவது - இன்று வதுவையென்னாதே, "நாளைவதுவை" என்றது - ப்ரீதி ஸாத்மிக்கைக்காக என்றபடி. ஒருஸ்திரீ, தாரித்ர்யத்தாலே நொந்திருக்க, புத்ரன் தேடிக்கொண்டுவந்த தநராசியை முன்னே சொரிய, ப்ரீதியாலே வாராநிற்கச்செய்தே, ப்ரீதி தலைமண்டையிட்டு முடிந்தாளென்கிற லௌகிககதையை அருளிச்செய்வர். "ஸாத்மிப்பித்து உளராக்கிப் பரிமாறவேணும்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் - பதினாலாண்டு இத்யாதி. இழேயும் குறைநுஸந்தாநமாயிருக்க, அங்கே துக்கமும், இங்கே ப்ரீதியுமாவா னென்? என்ன - கீழில்திருவாய்மொழியில் இத்யாதி. இதுகூடுமோவென்ன - செறுவாரும் இத்யாதி. திருவிருத்தம், "சேமம்" இத்யாதி. செறுவார் - சத்ருக்கள். நட்பாகுவர் - உறவாவர்கள். "உபப்லவ்யாதிஹ ஸ்த்தாஸ்யாமஹம்நாகபுரம் கதோ குசஸ்த்தலே நிவஸதிஸச ப்ராதரி ஹேஷ்யதி"

---

* பார - உத்தியோக (அகூ-க) இப்போது அச்சிட்ட புத்தகத்தில் 'வ்ருகஸ்த்தலே' என்று பாடபேதம் காண்கிறது.

## முதற் பாட்டு.

எல்லியுங்காலையும் தன்னைநினைந்தெழ
நல்லவருள்கள்நமக்கே தந்தருள்செய்வான்
அல்லியந்தண்ணந்துழாய்முடி அப்பனூர்
செல்வர்கள்வாழுந் திருக்கடித்தானமே.

ஆ.—ஒருவன் செய்தருளினபடியே என்றென்று நினைத்துக் கிடக்கும்படி அருள்செய்தருளினான்; அவ்வருள்தான் ஏதென்றால்,—முன்னம் திருக்கடித்தானத்திலே வந்து புகுந்தருளினானென்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், என்னுடைய ஆர்த்தி தீர்த்தருள்வான் ஸர்வேச்வரனே; அவன் ஊர் திருக்கடித்தானம் என்கிறார்.

[எல்லியுமென்று தொடங்கி] - காலதத்த்வமுள்ளதனையும் "ஒருவன் செய்தருளும்படியே" என்று தன்னை நினைத்து உஜ்ஜீவிக்கும்படி. [செல்வர்கள்] - எம்பெருமானோடு நித்ய ஸம்ச்லேஷம்பண்ணுமவர்கள். [அல்லியித்யாதி] - கீழில் திருவாய்மொழியில், "நின்மொய்பூந்தாமத்தண்துழாய்" என்றுஆசைப்பட்டபடியே தோற்றி.

ப.—முதற்பாட்டில், நமக்கு நிரதிசயோபகாரம்பண்ணவந்த ஸர்வசேஷியானவன் தேசம் திருக்கடித்தானமென்கிறார்.

எல்லியுங்காலையும் - ராத்ரிதிவாவிபாகமில்லாதபடி, தன்னை-(உபகாரகனை) தன்னை, நினைந்து - ஸ்மரித்து, எழ - உஜ்ஜீவிக்கும்படியாக, (நிர்ஹேதுகமாகையாலே), நல்ல - விலக்ஷணமான, அருள்கள் - (ஆபிமுக்ய ஆஸக்தி அந்த:ப்ரவேச விரோதிநிவர்த்தக அநுபவங்களுக்கடியான)நிரவதிகக்ருபைகளை, ("தாரேன்பிறர்க்குஉன்னருளென்னிடைவைத்தாய்" என்கிற க்ஷணத்திலே), நமக்கே - நமக்கே அஸாதாரணமாக, தந்து-தந்து, (மேலும் இடைவிடாமல்), அருள் - அருள், செய்வான் - செய்வானாய், ("தாமத்தண்துழாய்க்கடிசேர் கண்ணிப்பெருமான்" என்று இவர் ஆசைப்பட்டாற்போலே), அல்லி - பூந்தாரையுடைத்தாய், அம் - தர்சநீயமாய், தண்ணம் - குளிர்ந்த, துழாய் - திருத்துழாய் மாலையாலே அலங்க்ருதமான, முடி - திருமுடியையுடைய, அப்பன் - சேஷியாயுள்ள உபகாரகனானவனுடைய, ஊர் - (அஸாதாரண) தேசம், செல்வர்கள் - (பகவத்கைங்கர்யஸம்பத்தையுடையாரான) பாகவதரானவர்கள், வாழும் - (அநுபவஜனிதஹர்ஷத்தாலே ஆநந்திகளாய்) வர்த்திக்கிற, திருக்கடித்தானம் - திருக்கடித்தானமாம்.

இ.—முதற்பாட்டில், என்னுடைய ஆர்த்தி தீர்த்தருள்வான் ஸர்வேச்வரனே; அவன் ஊர் திருக்கடித்தானம் என்கிறார்.

[எல்லியும் இத்யாதி] - அஹோராத்ர விபாகமின்றிக்கே உபகாரகனை தன்னை, "ஒருவன் செய்தருளும்படியே" என்று நினைத்து நான் உஜ்ஜீவிக்கும்படியாக. [நல்லவருள்கள்] - இத்தலையில் குற்றம்பாராதே, வெறுமையே பார்த்துத் தன்பேறாக அருளுகை. * மாயக்கூத்தனில் விடாய்க்கருளினான் என்றிருக்கிறிலர். [நமக்கே தந்தருள் செய்வான்] - "பலரடியார் முன்பருளிய" என்று நித்யஸூரிகளும் தாம்பெற்ற

*பேறு பெற்றிலர் என்றாயிற்று நினைத்திருப்பது. [அல்லியந்தண்ணந்துழாய் முடியப்பன்]-கீழில் திருவாய்மொழியில்-"மொய் பூந்தாமத்தண்டுழாய்க் கடிசேர் கண்ணிப்பெருமான்" என்று இவர் ஆசைப்பட்டபடியேயாயிற்று வந்துநிற்கிறது. [ஊர்செல்வர்கள் வாழும் திருக்கடித்தானமே] - [செல்வர்கள்] - முன்பு * மாயக்கூத்தனைப், பின்பு * எல்லியும் காலையுமாக வேண்டாதவர்கள். ஸதாநுபவமாகிற நிரவதிகஸம்பத்தையுடையவர்கள். "லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்ந:". [வாழும்] - கைங்கர்யாநுபவம்பண்ணுகிற ஊர். செல்வர்கள் வாழும் ஊர் - திருக்கடித்தானமென்னுதல்; அப்பனூர் செல்வர்கள் வாழும் திருக்கடித்தானமென்னுதல். தண்ணந்துழாய் முடியப்பன் - அருள்செய்வான், அவன்நிற்கிற திருக்கடித்தானம் நமக்கு ப்ராப்யபூமியென்கை. அப்பன் - உபகாரசீலன்.*

ஈடு.—முதற்பாட்டு.—என்னுடைய ஆர்த்திதீர்த்தருளுவான் ஸர்வேஶ்வரனே; அவனூர் திருக்கடித்தானமென்கிறார்.

[எல்லியுங்காலையும் இத்யாதி] - அஹோராத்ர விபாகமின்றிக்கே எல்லாக்காலத்திலும் உபகாரகனை தன்னை நினைத்து உஜ்ஜீவிக்கும்படி. [நல்லவருள்கள்] - என்குற்றமாதல், தன் ஸார்வஜ்ஞ்யமாதல் பாராதே, தன்பேறாகப்பண்ணின அருள். * மாயக்கூத்தனில் விடாய்க்கு அருளினனென்று இருக்கிறிலர். [நமக்கேதந்தருள் செய்வான்] - "பலரடியார்முன்பருளிய" என்கிறபடியே, நித்யஸூரிகளும் தாம் பெற்ற பேறு பெற்றிலர் என்றாயிற்று நினைத்திருப்பது. [அல்லியந்தண்ணந்துழாய்முடி] - கீழில்திருவாய்மொழியிலே "மோய்பூந்தாமத்தண்டுழாய்க்கடிசேர்கண்ணிப்பெருமானே" என்று இவர் ஆசைப்பட்டபடியே காட்டிக்கொடுத்தான். [ஊர்] - இப்படி உபகாரகனானவன் வர்த்திக்கையாலே நமக்கு ப்ராப்யபூமி திருக்கடித்தானமென்கிறார். [செல்வர்கள்வாழும்] - * மாயக்கூத்தனும் * எல்லியுங்காலையுமாக வேண்டாதே, அநுபவத்தோடே காலங்கழிக்கிறவர்கள்; "லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்ந:" (லக்ஷ்மணோலக்ஷ்மீஸம்பந்ந:) என்கிறபடியேயிருப்பார் சிலர். [எல்லியும் இத்யாதி] - அப்பனானவனூர் என்னுதல்; செல்வர்கள்வாழும் ஊர் திருக்கடித்தானமென்னுதல்; அல்லியந்தண்ணந்துழாய் முடியப்பன் - நல்லவருள்கள் நமக்கேதந்து அருள்செய்வானென்னுதல். (க)

---

*முதற்பாட்டு.—எல்லியும் இத்யாதி. "நமக்கேதந்தருள்செய்வான் - அப்பன், ஊர் - திருக்கடித்தானம்" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை - என்னுடைய இத்யாதி.*

*"அப்பன்" என்றத்தைப்பற்ற - உபகாரகன் என்றது. எழ - எழும்படி; உஜ்ஜீவிக்கும்படி. அருளுக்கு நன்மையேதென்ன - என்குற்றமாதல் இத்யாதி. "தன்பேறாக" என்கிறதென்? கீழில்விடாய்க்காகவன்றோ? என்ன - மாயக்கூத்தனில் இத்யாதி. "நமக்கே" என்றஅவதாரணார்த்தம் - பலரடியார் இத்யாதி. தண்ணம் - முழுச்சொல்லு. குளிர்த்தி. "வாழும்" என்கிற வர்த்தமாநார்த்தம்-மாயக்கூத்தனும் இத்யாதி. அநுபவம் ஸம்பத்தோவென்ன - லக்ஷ்மணோலக்ஷ்மி இத்யாதி. செல்வர்கள்வாழும் திருக்கடித்தானம் - எல்லியும் காலையும் என்றுதொடங்கி, அப்பனூரென்னுதல்; அன்றியே, எல்லியும் காலையும் என்றுதொடங்கி, அப்பனதாய் - செல்வர்கள் வாழும் ஊர் - திருக்கடித்தானமென்னுதல்; அன்றிக்கே, அல்லியந்தண்ணந்துழாய்முடியப்பன் - எல்லியும் காலையும் தன்னை நினைந்தெழ நல்லவருள்கள் நமக்கே தந்தருள்செய்வான்: அவனூர் செல்வர்கள்வாழும் திருக்கடித்தானமென்னுதல்; இது அவதாரிகாநுகுணம்.* (க)

## இரண்டாம்பாட்டு.

திருக்கடித்தானமும் என்னுடைச்சிந்தையும்
ஒருக்கடுத்து உள்ளேஉறையும்பிரான்கண்டீர்
செருக்கடுத்துஅன்றுதிகைத்தஅரக்கரை
உருக்கெட வாளிபொழிந்தவொருவனே.

ஆ.—(திருக்கடித்தானமும்.) பின்னையும் செய்தருளுகிறான். திருக்கடித்தானத்தையும் என்னெஞ்சையுமொக்கத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டருளினான். அவனாரென்னில்?—செருக்கடுத்து அன்று திகைத்தவரக்கரை உருக்கெடவாளிபொழிந்த அத்விதீயன் கண்டீர்! என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், என் பக்கல்வருகைக்கு ப்ரதிபந்தகங்களையுமெல்லாம் எம்பெருமான் தானே போக்கி, திருக்கடித்தானத்திலும் என்னுடைய சிந்தையிலும் ஒக்க அபிநிவேசத்தைப்பண்ணி என்னுள்ளே வர்த்தியாநின்றான் என்கிறார்.

[பிரானென்று மேலுக்கு] - யுத்தகண்டூதியாலே மதிகெட்ட ராக்ஷஸரை சரீரம் அழியும்படி சரவர்ஷத்தை வர்ஷித்த உபகாரகன் கிடீர்!

ப.—அநந்தரம், அசேஷவிரோதிநிவர்த்தநஸமர்த்தனான சக்ரவர்த்தித்திருமகன், திருக்கடித்தானத்தையும் என்னெஞ்சையும் ஒருபடிப்பட நினைத்து வர்த்திக்கும் உபகாரசீலனென்கிறார்.

(பரபலஹானிஜபலங்களாலே), செரு-யுத்தத்திலே, கடுத்து - செருக்குமிஞ்சி, அன்று - (தீயிலேநெருப்பெழுந்தாற்போலே சீற்றம்விளையும்படி பெருமாளுக்கு அபராதம்பண்ணின) அன்று, திகைத்த - (ஆரைவெல்லலாமென்று) ப்ரமித்த, அரக்கர்-(ராவணாதி) ராக்ஷஸர், உரு - உருவம், கெட - அழிந்து சிந்நமாம்படிக்கீடாக, வாளி - சரவர்ஷத்தை, பொழிந்த - வர்ஷித்த, ஒருவன்கண்டீர் - ஏகவீரனானவன்கிடீர், திருக்கடித்தானமும் - திருக்கடித்தானமாகிற திருப்பதியையும், (அப்படி அபிமதமான), என்னுடை சிந்தையும் - என் நெஞ்சையும், ஒருக்கடுத்து - ஒருமைப்படப்பிடித்து, உள்ளே - இரண்டுக்குள்ளே, உறையும் - வர்த்திக்கிற, பிரான் மஹோபகாரகன். இரண்டையுமொக்கப்பிடித்து என்னுள்ளே வர்த்திக்கிறவனென்றுமாம்.

இ.--இரண்டாம்பாட்டில், என்பக்கல் வருகைக்கு ப்ரதிபந்தகங்களையும் தானேபோக்கி, திருக்கடித்தானத்திலும் என் ஹ்ருதயத்திலும் ஒக்க அபிநிவேசித்து, என்னுள்ளே வர்த்தியாநின்றான் என்கிறார்.

[ஒருக்கடுத்து] - ஒருங்கவடுத்து. அதாகிறது - ஒக்கநினைக்கை. திருப்பதியையும் என் ஹ்ருதயத்தையும் ஒக்க ஆதரித்து. [உள்ளேயுறையும்] - என்மநஸ்ஸிலே நித்யவாஸம் பண்ணுநின்றான். விரோதி செய்ததென்? என்ன; அது ராக்ஷஸர்பட்டது பட்டது. [செருக்கடுத்து] - யுத்தகண்டூதி வர்த்தித்து. [திகைத்த அரக்கரை] - சக்ரவர்த்தித்திருமகனை வெல்ல நினைத்த மதிகேடரான ராக்ஷஸரை. [அன்று] - ''ஜநஸ்தாநே'' என்ற அன்று. [உருக்கெட] - 'பிந்நம் பிந்நம் சரைர்தக்தம்''. [வாளி பொழிந்த] - ''சரவர்ஷம் வவர்ஷஹ''. [ஒருவனை பிரான்கண்டீர்] - ஏகவீரனை உபகாரகன் கண்டீர்!

ஈடு.—இரண்டாம் பாட்டு. என்பக்கல் வருகைக்கு ப்ரதிபந்தகங்களையும் தானேபோக்கி, திருக்கடித்தானத்திலும் என்ஹ்ருதயத்திலும் ஒக்கஅபிநிவேசித்து என்னுள்ளே வர்த்தியாநின்றானென்கிறார்.

[ஒருக்கடுத்து] - ஒருங்கவடுத்து. அதாகிறது - ஒக்க நினைக்கை. திருக்கடித்தானத்தையும் என்ஹ்ருதயத்தையும் ஒக்கவிரும்பி. [உள்ளேயுறையும்] - மநஸ்ஸிலே நித்யவாஸம்பண்ணாநின்றான். விரோதிசெய்ததேன்? என்ன, - அது ராக்ஷஸர்பட்டது பட்டது. [செருக்கடுத்து] - யுத்தகண்டூதி வர்த்தித்து. [அன்று] - "நநமேயம்" (நநமேயம்) என்றவன்று. [திகைத்தவரக்கரை] - சக்ரவர்த்தித்திருமகனை வெல்லலாமென்று நினைத்த மதிகேடரான ராக்ஷஸரை. [உருக்கெட] - "ஸிம்ஹம் ஸிம்ஹம் மஸமீக்ஷ்ய" (சிங்கம் சிங்கம்ஸரைர்த்தக்தம்). [வாளிபொழிந்த] - "ஸரவர்ஷம் வவர்ஷஹ" (ஸரவர்ஷம் வவர்ஷஹ) என்கிறபடியே. [ஒருவன்] - ஏகவீரனானவன். (உ)

## மூன்றாம் பாட்டு.

ஒருவரிருவரோர்மூவரெனநின்று
உருவுகரந்துஉள்ளுந்தோறுந்தித்திப்பான்
திருவமர்மார்வன் திருக்கடித்தானத்தை
மருவியுறைகின்ற மாயப்பிரானே.

ஆ.—(ஒருவர்.) பின்னையும் ஒருவராய் இருவராய் மூவராய்த்தோன்றி, உருவுதெரியாதபடி வந்து வாளிபொழிந்தவனென்று அவன் செயலையே அநுஸந்தித்து, அதுக்குமேலே, இன்று திருக்கடித்தானத்திலும் என்னெஞ்சிலும் பிராட்டியோடே கூடவந்து புகுந்தருளினானென்கிறார்.

ஒ —மூன்றாம்பாட்டில், பிராட்டியோடேகூடத் திருக்கடித்தானத்தை மருவியுறையாநின்றுகொண்டு என்பக்கலிலே ஆஸ்சர்யமாம்படி ப்ரவணனானவன், உள்ளுந்தோறும் தித்தியாநின்றான் என்கிறார்.

[ஒருவ ரிருவ ரோர்மூவரெனநின்று உருவுகரந்து] - மூலபலத்தோடு யுத்தம் பண்ணியருளுகிறபோது புக்குற ஒருவராய்த்தோற்றிச் சாரிகையிலே வேகம்மிகமிக இருவரும் மூவருமாய்த்தோற்றி இந்த்ரியஸம்யோகத்துக்கு இடமில்லாதபடி வேகம்

இரண்டாம்பாட்டு.— திருக்கடித்தானம் இத்யாதி. "செருக்கடுத்தன்று" என்றதொடங்கி, "உள்ளேயுறையும்பிரான்கண்டீர்" என்கிற பதங்களைக்கடாக்ஷித்து அவதாரிகை - என்பக்கல் இத்யாதி.

ஸப்தார்த்தம் - திருக்கடித்தானத்தையும் இத்யாதி. உத்தரார்த்தமநுஸந்தித்து பூர்வார்த்தம்அநுஸந்திப்பது. திகைத்த - ப்ரமித்த. உரு - சரீரம்; ஸப்தஸ்வாரஸ்யம் - ஸரவர்ஷ இத்யாதி. தஸ்தாரரோஹாசஜாயநாராசாயவீர் । ஊஷ்தாராக்ஷஸ வெஸந்யம் தஸரவர்ஷம்வவர்ஷஹ" இதியாங்காண்டு (கூச-கஅ). (உ)

மிக்கவாறே வடிவுதெரியாதபடியாய் உருக்கெட வாளிபொழிந்த ஒருவனென்று கீழில் பாட்டோடே அந்விதமாகக்கடவது.

ப.—அநந்தரம், பராக்ரமைஸ்வர்யத்தாலே வீர ஸ்ரீவிஶிஷ்டனானவன், திருக்கடித்தானத்திலே ஸந்நிஹிதனாய், எனக்கு போக்யபூதனாயிராநின்றானென்கிறார்.

(மூலபலநிரஸநத்தில் பராக்ரமைஸ்வர்யத்தாலே), ஒருவர் - (ப்ரதமம்) ஒருவராய், இருவர் - (பின்னை) இருவராய், மூவரென - (பின்) மூவரென்னும்படி, நின்று - நின்று, ஓர் - அத்விதீயமான, உருவு - ரூபம், கரந்து - (இலக்குக் குறிக்கவொண்ணாதபடி) இந்த்ரியாவிஷயமாய்க்கொண்டு, (உருக்கெட வாளிபொழிந்த ஒருவனானவன் அந்த வீர ஸ்ரீயோடே வந்தானென்னும்படி), திரு - லக்ஷ்மியை, அமர் மார்வன் - திருமார்பிலே உடையனாய்க்கொண்டு, திருக்கடித்தானத்தை - திருக்கடித்தானத்தை, மருவி - பொருந்தி, உறைகின்ற - நித்யவாஸம் பண்ணுகிற, மாயப்பிரான் - ஆஸ்சர்யோபகாரகனாய், உள்ளுந்தோறும் - நினைக்குந்தோறும், தித்திப்பான் - இனியனாகாநின்றான்.

இ.—மூன்றாம்பாட்டில், பிராட்டியோடேகூடத் திருக்கடித்தானத்திலே வந்தானென்கிறார்.

"ஒருவரிருவர் மூவரெனநின்று உருவுகரந்து - உருக்கெட வாளிபொழிந்த ஒருவன்" என்று கீழோடே அந்விதமாகக்கடவது. மூலபலம் சாம்படி பொருகிறவன்று முந்துற ஒருவனாய்த்தோற்றி, சாரிகையில் வேகம் மிகமிக இருவரும் மூவருமாய்த்தோற்றி. [உருவுகரந்து] - வேகம் மிக்கவாறே இந்த்ரியஸம்யோகத்துக்கு இடமில்லாதபடியாகையாலே, ரூபக்ரஹணமரிதாய் - உருக்கெடவாளிபொழிந்த ஒருவன் என்று அந்வயம். வ்யாபரித்த சடக்காலே ரூபம் கண்ணுக்குப் பிடிபடாதொழிகை. [திருவமர்மார்வன்] - "நக்ஷத்ரநாதவர்யுதி" என்னும் பிராட்டியோடே கூடவாயிற்று வந்தது. திருக்கடித்தானத்தோடே பொருந்திவர்த்திக்கிறவனாய், என்பக்கலிலே ஆஸ்சர்யமாம்படி ப்ரவணனான ஸர்வேஸ்வரன். [உள்ளுந்தோறும் தித்திப்பான்] - அநுஸந்திக்க அநுஸந்திக்கப் புதியனாய்க்கொண்டு ரஸியாநின்றான்.

ஈடு.—மூன்றாம் பாட்டு. பிராட்டியோடேகூடத் திருக்கடித்தானத்திலே நித்யவாஸம்பண்ணுகிற ஆஸ்சர்யபூதனான உபகாரகன் அநுஸந்திக்குந்தோறும் இனியனாகாநின்றானென்கிறார்.

[ஒருவர் இத்யாதி] - வாளிபொழிந்தபடி எங்ஙனேயென்ன, - இங்ஙனேயென்கிறார். [ஒருவரிருவரோர்மூவரெனநின்று உருவுகரந்து] - ஒருவராய்த்தோன்றி, இருவராய்த்தோன்றி, மூவராய்த்தோன்றி, பின்னை இந்த்ரியஸம்யோகமில்லாதபடி சாரிகைவந்து. ஒருவரிருவரோர் மூவரென நின்று உருவுகரந்து - செருக்கடுத்தன்று திகைத்த அரக்கரை உருக்கெட வாளிபொழிந்தவொருவன் - திருக்கடித்தானமும் என்னுடைச்சிந்தையும் ஒருக்கடுத்து உள்ளேயுறையும்பிரான் கண்டீர் என்று கீழ்ப்பாட்டோடே அந்வய

---

மூன்றாம்பாட்டு.—ஒருவர் இத்யாதி. "திருவமர்மார்வன்" என்று தொடங்கி, "மாயப்பிரான் - உள்ளுந்தோறும்தித்திப்பான்" என்றவற்றை அநுஸந்தித்துஅவதாரிகை - பிராட்டியோடு இத்யாதி.

"ஒருவரிருவரோர்" இத்யாதிக்குஅர்த்தம் - வாளிபொழிந்த இத்யாதி. உருவுகரந்து சாரிகைவந்தவேகம், சக்ஷுரிந்த்ரியத்தாலே விக்ரஹம் க்ரஹிக்கப்போகாதென்றபடி. சாரிகைவந்து - அதிவேகத்துடனே ஸாரிவந்து. "உருவுகரந்து" என்னுமளவும் கீழ்ப்பாட்டோடே அந்

மாகக்கடவது. [திருவமர்மார்வன்] – ''நகஸ்ஸிஙாபராத்யதி'' (நகஸ்சிந்நாபராத்யதி) என்னும் பிராட்டியோடே கூடவாயிற்று வந்தது. [திருவமர்மார்வன் திருக்கடித்தானத்தை மருவியுறைகின்ற மாயப்பிரான் - உள்ளுந்தோறும்தித்திப்பான்] - பெரிய பிராட்டியார் நித்யவாஸம்பண்ணுகிற திருமார்வையுடையனாய், திருக்கடித்தானத்தை மருவியுறையாநின்றுகொண்டு என்பக்கலிலே ஆஶ்சர்யமாம்படி ப்ரவணனானவன், அநுஸந்திக்குந்தோறும் புதியனாய் இனியனாகாநின்றான். (௩)

---

## நான்காம் பாட்டு.

---

மாயப்பிரான் எனவல்வினைமாய்ந்தற
நேசத்தினால் நெஞ்சம்நாடுகுடிகொண்டான்
தேசத்தமரர் திருக்கடித்தானத்தை
வாசப்பொழில் மன்னுகோயில்கொண்டானே.

ஆ.—(மாயப்பிரான்) - இவன் திருக்கடித்தானத்தைக் காட்டிலும் என்னெஞ்சிலே, வல்வினைகள் தீரும்படி ஸ்நேஹத்தைப் பண்ணிக்கொண்டு குடியாக இருந்தருளினானென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், எம்பெருமான் திருக்கடித்தானத்தைப் பகலிருக்கை மாத்ரமாகக்கொண்டு, என்னுடைய ஹ்ருதயத்தை, அத்யபிநிவேஶத்தைப்பண்ணி நிரந்தர வாஸஸ்தாநமாகக் கொண்டருளினான் என்கிறார்.

[மாயப்பிரானென்று தொடங்கி] - ஆஶ்சர்யமான குணசேஷ்டிதாதிகளையுடைய ஸர்வேஶ்வரன் தன்னைப்பிரிந்து காணவாராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து நான் படும் து:கமெல்லாம் நிஶ்ஶேஷமாகப் போம்படி தன்னோட்டை ஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்களாலே நாடுபோலேவளர்ந்த நெஞ்சிலே ஸ்நேஹத்தாலே ஸபரிகரமாக நிரந்தரவாஸம் பண்ணுகின்றான். [தேசத்தமரரென்று தொடங்கி] - * அயர்வறுமமரர்களுக்கும் ப்ராப்யபூமியான திருக்கடித்தானத்தைத் தனக்கு வாசத்தையுடைய பொழிலோடுகூடின கோயிலாகக் கொண்டானான மாயப்பிரான்.

ப.—அநந்தரம், திருக்கடித்தானத்தை வாஸஸ்தாநமாக ஸ்வீகரித்தவன், என்னுடைய ப்ரபலபாபங்களைப் போக்குகைக்காக நெஞ்சுக்குள்ளே நித்யவாஸம்பண்ணாநின்றானென்கிறார்.

தேசம் - (நிரதிஶய) தேஜஸ்விகளான, அமரர் - ஸூரிகளுக்கு ப்ராப்யமாய், வாசம் - பரிமளோத்தரமான, பொழில் மன்னு - பொழில் சேர்ந்த, திருக்கடித்தானத்தை - திருக்கடித்தானத்தை, கோயில் - கோயிலாக, கொண்டான் - கொண்ட, மாயப்பிரான் - ஆஶ்சர்யோபகாரகனானவன், என - என்னுடைய, வல் - ப்ரபலமான, வினை - பாபங்கள், மாய்ந்துஅற-நசித்துப்போம்படியாக, நேசத்தினால் - என்பக்கல் ஸங்

---

விதம். ''திருவமர்மார்வன் - பிரான் - உள்ளுந்தோறும் தித்திப்பான்'' என்று - தனியேவாக்யம். பாட்டுக்கு உரைக்கும் அந்வயம் - திருவமர்மார்வன் இத்யாதி. ஶப்தார்த்தம் - பெரிய இத்யாதி.

ஸாதிஶயத்தாலே, நெஞ்சம் - என்நெஞ்சாகிற, நாடு - விஸ்தீர்ணபூமியை, குடி - (தனக்குக்) குடியிருப்பாக, கொண்டான் - கொண்டான்.

இ.—நாலாம்பாட்டில், திருக்கடித்தானத்தைக் கலவிருக்கையாகக்கொண்டு ஸ்நேஹாதிஶயத்தாலே என்நெஞ்சை நிரந்தர வாஸஸ்தாநமாகக்கொண்டான் என்கிறார்.

[மாயப்பிரான்] - ஆஶ்சர்யகுண சேஷ்டிதங்களையுடைய உபகாரகன். [என வல்வினைமாய்ந்தற] - தன்னைப்பிரிந்து நான்பட்ட துக்கமெல்லாம் நிஶ்ஶேஷமாகப் போம்படி. மாயக்கூத்தனில் * காணவாராயென்றென்று கண்ணும்வாயும் துவர்ந்துபட்ட விடாயெல்லாம் வாஸனையோடே போம்படி. [நேசத்தினால்] - எனக்கு உபகரித்தான யிருக்கையன்றிக்கே, என்பக்கல் ஸங்காதிஶயத்தாலே. [நெஞ்சம்நாடு] - ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்களாலே இவர்நெஞ்சு பரமபதம்போலே இடமுடைத்தானபடி. [குடி கொண்டான்] - ஸபரிகரமாக நித்யவாஸம் பண்ணுகின்றான்; "அரவத்தமளியினோடும்" என்கிறபடியே. [தேசத்தமரர் இத்யாதி] - நிரந்தர ஸவாநுபவத்தாலே தேஜஸ்ஸையுடைய நித்யஸூரிகளுக்கு ப்ராப்யபூமியாய் - வாசத்தையுடைய பொழிலோடே கூடின - திருக்கடித்தானத்தை - கோயிலாகக்கொண்டு வர்த்திக்கிற - மாயப்பிரான் - நேசத்தினால் நெஞ்சம்நாடு குடிகொண்டான்.

ஈடு.—நாலாம்பாட்டு. திருக்கடித்தானத்தைப் பகலிருக்கைமாத்ரமாகக் கொண்டு ஸங்காதிஶயத்தாலே என்னெஞ்சையே நிரந்தரவாஸஸ்தாநமாகக் கொண்டானென்கிறார்.

[மாயப்பிரான்] - ஆஶ்சர்யமான குணசேஷ்டிதங்களையுடைய உபகாரகன். [எனவல்வினைமாய்ந்தற] - தன்னைப் பிரிந்து நான்பட்ட க்லேசமெல்லாம் நசித்துப்போம்படி; * மாயக்கூத்தனில் * காணவாராயென்றென்று கண்ணும்வாயும் துவர்ந்து பட்ட விடாயெல்லாம் வாஸநையோடேபோம்படி. [நேசத்தினால்] - தான் என்பக்கல்பண்ணின ஸங்கத்தாலே. [நெஞ்சம் நாடு] - ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்களாலே ஒரு த்ரிபாத்விபூதி போலே ஆக்கினானாயிற்று, இவர்திருவுள்ளத்தை. [குடிகொண்டான்] - ஸபரிகரமாக நித்ய வாஸம்பண்ணுகின்றான்: † அரவத்தமளிப்படியே. [தேசத்தமரர்திருக்கடித்தானத்தை] - நித்யாநுபவம் பண்ணுகையா லுண்டான தேஜஸ்ஸையுடைய நித்ஸூரிகளுக்கு ப்ராப்ய மான திருக்கடித்தானத்தை. [வாசப்பொழில்மன்னு] - வாசத்தையுடைய பொழிலோடே கூடின. தேசத்தமரர் திருக்கடித்தானத்தை - கோயில்கொண்டான் - நேசத்தினால் நெஞ்சம் நாடு குடிகொண்டான். (௪)

---

நாலாம்பாட்டு.—மாயப்பிரான் இத்யாதி- "திருக்கடித்தானத்தை - கோயில்கொண்டான் - நேசத்தினால் நெஞ்சம் நாடு குடிகொண்டான்" என்றவற்றைக்கடாக்ஷித்து அவதாரிகை - திருக்கடித்தானத்தை இத்யாதி. பகலிருக்கை - பகலுக்குஉலக்கமிருக்கை.

கீழில்திருவாய்மொழியி லார்த்திக்கு அநுகுணமாக அர்த்தம் - தன்னைப்பிரிந்து இத்யாதி. ஏதத்விவரணம் - மாயக்கூத்தனில் இத்யாதி. அணுவான நெஞ்சு நாடாம்படியென்? என்ன - ஸம்ஶ்லேஷ இத்யாதி. இருந்தானென்னாதே. "குடிகொண்டான்" என்றதுக்கு பாவம் - ஸபரிகரமாக இத்யாதி. இதுக்கு ப்ரமாணம் - அரவத்தமளிப்படியே என்று. தேஜஸ்ஸேதென்ன - நித்யாநுபவம் இத்யாதி. மாயப்பிரானெனவல்வினைமாய்ந்தற - வாசப்பொழில்மன்னு - தேசத்தமரர் திருக்கடித்தானத்தை - கோயில்கொண்டான் - நேசத்தினால் நெஞ்சம்நாடு குடிகொண்டான் இத்யந்வயம். (௪)

---

† பெரியாழ்வார் திருமொழி, 5, 2, 10.

## ஐந்தாம் பாட்டு.

**கோயில்கொண்டான்தன்திருக்கடித்தானத்தைக்**
**கோயில்கொண்டான்அதனோடும் என்னெஞ்சகம்**
**கோயில்கொள் தெய்வமெல்லாந்தொழ வைகுந்தம்**
**கோயில்கொண்ட குடக்கூத்தவம்மானே.**

ஆ.—(கோயில்கொண்டான்) - அங்குமிங்குமாய் இருந்தருளுகையன்றியே, ஸ்நேஹாதிஶயத்தாலே திருக்கடித்தானத்தையுங்கொண்டு, என்னெஞ்சினுள்ளே புகுந்தருளினானென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், என்பக்கலுள்ள ப்ரேமாதிஶயத்தாலே, திருக்கடித்தானத்தோடேகூட என் ஹ்ருதயத்திலே புகுந்தருளினான் என்கிறார்

[கோயிலென்று தொடங்கி.] - நித்ய ஸித்தபுருஷர்கள் தன்னைத்தொழும் ஸ்ரீவைகுண்டத்தைக் கோயிலாகக்கொண்ட குடமாடுகைதொடக்கமான மநோஹாரியான சேஷ்டிதங்களையுடைய ஸர்வேஶ்வரன்.

ப—அநந்தரம், ப்ராப்யமான பரமபதத்திலே வர்த்திக்கிறவன், திருக்கடித்தானத்தோடே என்னெஞ்சை வாஸஸ்தாநமாகக் கொண்டானென்கிறார்.

கோயில்கொள் - விலக்ஷணவிமாநோபேதரான, தெய்வமெல்லாம் - நித்ய ஸூரிகள், தொழ - தொழும்படியாக, வைகுந்தம் - (ப்ராப்யதேச) பரமபதத்தை, கோயில் - வாஸஸ்தாநமாக, கொண்ட - உடையனாய், (ஆஶ்ரிதார்த்தமாக அவதரித்து), குடக்கூத்த - குடக்கூத்தாகிற (மநோஹாரிசேஷ்டிதத்தை யுடைய), அம்மான் - (க்ருஷ்ணனான) ஸ்வாமியானவன், திருக்கடித்தானத்தை - திருக்கடித்தானத்தை, தன் கோயில் - தனக்குஅஸாதாரணதேசமாக, கொண்டான் - ஸ்வீகரித்துக்கொண்டு, அதனோடும் - அதுதன்னோடே, என் - என், நெஞ்சகம் - நெஞ்சையும், கோயில் - (தனக்குக்) கோயிலாக, கொண்டான் - கொண்டான்.

இ.—அஞ்சாம்பாட்டில், என்பக்கல் ப்ரேமாதிஶயத்தாலே திருக்கடித்தானத்தோடே கூடவந்து என்நெஞ்சிலே புகுந்தான் என்கிறார்.

[கோயில்கொண்டான் இத்யாதி] - திருக்கடித்தானத்தைத் தனக்கு அஸாதாரணமான கோயிலாகக்கொண்டான். [கோயில்கொண்டான் இத்யாதி] - "செருப்பு வைத்துத் திருவடித் தொழப்புக்காரைப்போலே யாகவொண்ணாது" என்று திருக்கடித்தானத்தோடே வந்துபுகுந்தான். [கோயில்கொள் தெய்வம்] - அநந்த கருட விஷ்வக்ஸேந ப்ரமுகர். பரமபதத்திலும் இவர்களுக்கும் ஓரோர்கோயி லுண்டாயாயிற்றிருப்பது. நித்யஸூரிகள் அநுபவிக்கப் பரமபதத்தைக் கோயிலாக உடையவன். [குடக்கூத்தவம்மான்] - ஸர்வேஶ்வரனுகையாலே நித்யஸூரிகளோபாதி ப்ராப்திபொத்திருக்க, "ஸம்ஸாரிகள் இழக்கவொண்ணாது" என்று க்ருஷ்ணனாய் வந்தவதரித்து,குடக்கூத்து முதலான மநோஹாரி சேஷ்டிதங்களைப் பண்ணி, அவதாரத்துக்குப் பிற்பாடனான எனக்காகத் திருக்கடித்தானத்தைக் கோயிலாகக்கொண்டு, அதுதன்னோடே வந்து என்நெஞ்சிலேபுகுந்தான்; "அழகிய பாற்கடலோடும்" என்கிறபடியே. திருக்கடித்தா

னத்தில் நிலை என்னைப்பெறுகைக்காகையாலே, ஸாத்யம் கைப்பட்டால் ஸாதநத்தில் இழிவாரில்லையிறே. இனியொரு ஸ்ந்தவ்யமுமில்லை உண்டென்றிராதொழிகை.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. என்பக்கல் ப்ரேமாதிசயத்தாலே திருக்கடித்தானத் தோடேகூட என்ஹ்ருதயத்திலே புகுந்தருளினானென்கிறார்.

[கோயில்கொண்டான் இத்யாதி] - திருக்கடித்தானத்தைத் தனக்கு அஸாதாரணமான கோயிலாகக்கொண்டான். [கோயில் இத்யாதி] - "செருப்புவைத்துத் திருவடிதொழுவாரைப்போலே ஆகவொண்ணாது" என்று, திருக்கடித்தானத்தோடேகூட வந்து என்னெஞ்சிலே புகுந்தருளினான். [கோயில்கொள் இத்யாதி] - ஓரோ கோயில்களுண்டாயிருக்குமிறே - திருவடி, திருவநந்தாழ்வான், ஸேனைமுதலியார் இவர்களுக்கு; அவர்கள்தொழும்படி ஸ்ரீவைகுண்டத்தைத் தனக்குக் கோயிலாகக்கொண்ட ஸர்வேஸ்வரன், க்ருஷ்ணனாய்வந்து அவதரித்துக் குடக்கூத்தாடி, அந்தஸ்ரமமாறும்படி திருக்கடித்தானத்தைக் கோயில்கொண்டான்; அத்தோடேகூட "என்ஹ்ருதயத்தை - தனக்குக் கோயிலாகக்கொண்டான்; *அழகியபாற்கடலோடும்" என்கிறபடியே. திருக்கடித்தானத்தில் நிலை என்னைப் பெறுகைக்குஆகையாலே, ஸாத்யம் கைப்பட்டால் ஸாதநத்தி லிழிவாரில்லையாயிருக்க, என்னைப்பெற்றது அத்தேசத்திலே நிற்கையாலேயென்று அத்தேசத்தோடே வந்துபுகுந்தான். (ரு)

---

## ஆறாம் பாட்டு.

கூத்தவம்மான் கொடியேனிடர்முற்றவும்
மாய்த்தவம்மான் மதுசூதவம்மானுறை
பூத்தபொழில் தண்திருக்கடித்தானத்தை
ஏத்தநில்லா குறிக்கொண்மினிடரே.

ஆ.—(கூத்தவம்மான்.) - இஸ்ஸம்ருத்தியெல்லாம் திருக்கடித்தானத்தை ஆஸ்ரயித்ததினாலே வந்ததென்னும் ப்ரீதியாலே, மது கைடபாதி ப்ரதிகூலநிரஸநம் பண்ணினாற்போலே ஸ்வகீயகுணசேஷ்டித ஆவிஷ்காரத்தாலே ஸ்வவிஸ்லேஷஜநிதமான என்னுடைய து:கத்தைப் போக்கியருளினவன் உறைகின்ற திருக்கடித்தானத்தை ஏத்த

---

அஞ்சாம்பாட்டு.—கோயில் இத்யாதி. "அதனோடுமென்னெஞ்சகம் - கோயில்கொண்டான்" என்றத்தைக் கடாக்ஷித்துஅவதாரிகை - என்பக்கல்இத்யாதி. "திருக்கடித்தானத்தோடே இவர்ஹ்ருதயத்திலே புகுருகைக்கு ஹேது - 'இவரைப்பெற்றது இவ்வூரிலே நிற்கையாலேயன்றோ' என்று இவர்பக்கல் ஆதராதிஸயத்தாலே" என்னுமிடந்தோன்ற - என்பக்கல் ப்ரேமாதிஸயத்தாலே என்கிறார்.

தன் - தனக்கு. "அதனோடும்" என்றதுக்குஹாவம் - செருப்புவைத்து இத்யாதி. திருக்கடித்தானத்தோடு என்னெஞ்சைக் கோயிலாகக் கொள்ளக்கூடுமோ? என்ன - அழகிய இத்யாதி. திருக்கடித்தானத்தோடேகூட இவர் திருவுள்ளத்திலே இருக்கிறதுக்கு ஹாவமேதென்ன - திருக்கடித்தானத்தில் இத்யாதி. 'கோயில்கொள்'என்று தொடங்கி, 'கூத்தவம்மான் - திருக்கடித்தானத்தை - தன் - கோயில்கொண்டான்; அதனோடும்என்னெஞ்சகம் - கோயில்கொண்டான்' இத்யந்வயம். (ரு)

வாருங்கோளென்று ஸ்ரீவைஷ்ணவர்களை அழைத்துக்கொண்டு, அவர்களோடேகூட ஏத்தி ஹ்ருஷ்டராகிறார்.

ஓ.—ஆறும்பாட்டில், மதுகைடபாதிகளைப் போக்கினாற்போலே தன்னைக் காணப்பெறாத என்னுடைய விடாயெல்லாம் போக்கின ஸர்வேச்வரன் நிரந்தரவாஸம் பண்ணுகிற திருக்கடித்தானத்தை ஏத்துங்கோள்; உங்களுடைய ஸமஸ்த து:க்கங்களும் போம்; இத்தைக் குறிக்கொள்ளுங்கோள் என்று ப்ரீதிப்ரகர்ஷத்தாலே பரரைக் குறித்து அருளிச்செய்கிறார்.

[கூத்தவென்று தொடங்கி] - மநோஹாரியான குணசேஷ்டிதாதிகளால் பெரியனாய் நிரதிசயது:க்கத்தை உடையேனான என்னுடைய து:க்கத்தைப்போக்கின என் ஸ்வாமி. [மதுசூதனென்று மேலுக்கு] - ப்ரதிகூல நிரஸநஸ்வபாவனான ஸர்வேச்வரன் நிரந்தரவாஸம் பண்ணுவதுஞ்செய்து பூத்தபொழிலையுடைத்தாய் பரமஹரமான திருக்கடித்தானத்தை.

ப.—அநந்தரம், விரோதிநிரஸநஸ்வபாவனானவன் வர்த்திக்கிற தேசந்தானே விரோதியைப் போக்குமென்கிறார்.

கூத்த - மநோஹாரிசேஷ்டிதங்களாலே, அம்மான் - (லோகத்துக்கு) ஸ்வாமியாய், கொடியேன் - ("காணவேணும்" என்று பலகாலும் நிர்ப்பந்தித்துக் கூப்பிட்ட) கொடுமையையுடைய என், இடர் - நெஞ்சுது:க்கத்தை, மாய்த்த - போக்கி, அம்மான் - அடிமைகொண்டவனுப், (ஆஸ்ரிதவிரோதியை), மதுசூதன் -மதுவை அழித்தாற்போலே அழிக்கும், அம்மான்-ஸ்வாமியானவன், உறை - வர்த்திக்கும்தேசமாய், பூத்த - புஷ்ப ஸம்ருத்தமான, பொழில் - பொழிலையுடைய, தண் - குளிர்ந்த, திருக்கடித்தானத்தை - திருக்கடித்தானத்தை, ஏத்த-ஸ்தோத்ரம்பண்ணினவளவிலே, இடர் - து:க்கங்கள் முற்றவும் - எல்லாம், நில்லா - நிலைகுலைந்துபோம்; குறிக்கொண்மின் - (இத்தைக்) குறிக்கொள்ளுங்கோள்.

இ.—ஆறும்பாட்டில், தம்முடைய ப்ரீதிப்ரகர்ஷத்தாலே, திருக்கடித்தானத்தை எல்லாரும் ஆச்ரயியுங்கோளென்று பரரைக்குறித்து அருளிச்செய்கிறார்.

[கூத்தவம்மான்] - மநோஹாரிசேஷ்டிதங்களாலே பெரியனானவன். [கொடியேன்] - தன்னைப்பிரிகையாலே நிரதிசயது:க்கத்தையுடைய நான். [இடர்முற்றவும்]-என்னுடையது:க்கத்தை நிஶ்ஶேஷமாக. [மாய்ந்தவம்மான்]-உருமாய்த்த என் ஸ்வாமி. [மதுசூதவம்மானுறை] - ப்ரதிகூலநிரஸநஸ்வபாவனான ஸர்வேச்வரன் நித்யவாஸம்பண்ணுகிற தேசம். [பூத்தபொழில்] - அவன் நித்யவாஸம்பண்ணுகையாலே நித்யவஸந்தமான பொழில். கடாக்ஷவர்ஷம் மாறில்லிறே பூ மாறுவது. [தண்திருக்கடித்தானத்தை] - பரமஹரமான திருக்கடித்தானத்தை. [ஏத்தநில்லா இடர்] - இனி ஏத்தைச்செய்ய, இடரானது, "நமக்கு தேசமன்று" என்று தானே போம். [குறிக்கொண்மின்] - இத்தை "ஓலக்கவார்த்தை" என்றிராதே, பஹுமாநம்பண்ணுங்கோள்.

ஈடு—ஆறும்பாட்டு. தம்முடைய ப்ரீதிப்ரகர்ஷத்தாலே, திருக்கடித்தானத்தை எல்லாரும் ஆச்ரயியுங்கோ ளென்கிறார்.

---

ஆறும்பாட்டு.—கூத்தவம்மான் இத்யாதி. "குறிக்கொண்மின்" என்றத்தைக்கடாக்ஷித்துஅவதாரிகை - தம்முடைய இத்யாதி. இதில் பரோபதேசம் பண்ணுகைக்கடி அருளிச்செய்கிறார் - தம்முடைய ப்ரீதிப்ரகர்ஷத்தாலே என்று.

[கூத்தவம்மான்] - மநோஹாரியான சேஷ்டிதங்களையுடைய ஸர்வேஶ்வரன். [கோடியேன்] - மஹாபாபியான என்னுடைய. [இடர்முற்றவும்மாய்த்தவம்மான்] - தன்னைப்பிரிந்து நான் பட்ட க்லேசத்தையெல்லாம் வாஸநையோடேபோக்கின என் ஸ்வாமி. [மதுசூதன் இத்யாதி] - ப்ரதிகூலநிரஸநஸ்வபாவனான ஸர்வேஶ்வரன் நித்யவாஸம்பண்ணுகிற தேசம். [பூத்தபொழில்]-அவன் நித்யவாஸம்பண்ணுகையாலே நித்யவஸந்தமானபொழில். கடாக்ஷவர்ஷம் மாறிலிறே பூ மாறுவது? [தண்திருக்கடித்தானத்தை] - பரமஹரமான திருக்கடித்தானத்தை. [ஏத்தநில்லா - இடர்] - இனியத்தைச் செய்ய, இடரானது "நமக்கு இது தேசமன்று" என்று * சும்மெனாதே கைவிட்டோடும். [குறிக்கோண்மின்] - இத்தை "ஓலக்கவார்த்தை" என்றிராதே, புத்திபண்ணுங்கோள்.

---

## ஏழாம் பாட்டு.

---

கோண்மினிடர்கெட உள்ளத்துக்கோவிந்தன்
மண்விண்முழுதுமளந்த ஒண்தாமரை
மண்ணவர்தாந்தொழ வானவர்தாம்வந்து
நண்ணு திருக்கடித்தானநகரே.

*ஆ*—(கொண்மின்) - *கோவிந்தனுடைய மண் விண் முழுதுமளந்த ஒண் தாமரையை மண்ணவர்தாம் தொழுகிறபடியைக் காண்கைக்காக, வானவர்தாம்வந்து நண்ணு திருக்கடித்தானநகரை நினையுங்கோள்; இடர்கெடுமென்கிறார்.*

*ஓ.—ஏழாம்பாட்டில், உங்களுடைய ஸமஸ்தது:க்கங்களும் போம்படியாகத் திருக்கடித்தானத்தை ஹ்ருதயத்தால் நினையுங்கோள் என்கிறார்.*

*[கோவிந்தனென்றுதொடங்கி] - எல்லார்க்கும் ஸுலபனானவனுடைய ஸகல லோகங்களையும் அளந்த நிரதிஶயபோக்யமான திருவடிகளை ஒன்றும் அளவில்லாத பூமியிலுள்ளாரும் தொழ அவர்களுக்கு ஸுலபனாயிருந்த இருப்பைக் காண்கைக்காக பேரளவுடைய * அயர்வறுமமரர்களும் வந்து நண்ணுகின்றுள்ள திருக்கடித்தானநகரை.*

*ப.—அநந்தரம், அவனுடைய தேசஸ்ம்ருதிமாத்ரமே விரோதிநிவர்த்தகமென்கிறார்.*

*கோவிந்தன் - ஸர்வஸுலபனான ஔஜ்ஜ்வல்யத்தை யுடையவனுடைய, மண் - பூமியையும், விண் - ஊர்த்த்வலோகத்தையும், முழுதும் - ஒன்றொழியாமல், அளந்த - அளந்துகொண்ட, ஒண் - நிரதிஶயபோக்யமான, தாமரை - திருவடித்தாமரைகளை, மண்ணவர் - பூமியிலுள்ளார், தாம் - தங்களுக்கு அஸாதாரணபோக்யமென்று, தொழ - தொழாநிற்க, வானவர் - (நித்யாநுபவம்பண்ணுகிற) பரமபதவாஸிகள், தாம் - தாங்களும், வந்து - (ஸௌலப்யமநுபவிக்கைக்கு) வந்து, நண்ணு - ப்ராபிக்கும்படியான, திருக்கடித்தானம் - திருக்கடித்தானமாகிற, நகரை - நகரத்தை, இடர் - து:க்கமெல்லாம்,*

---

*அவன் நித்யவாஸம்பண்ணினால் நித்யவஸந்தமாகவேணுமோ வென்ன* - கடாக்ஷவர்ஷம் இத்யாதி. "பூத்தபொழில்" என்கையாலே - *போக்யதையாலே ஏத்தினர் என்று கருத்து போக்யதையாலே ஏத்தினால் இடர்போமோவென்ன* - இனியத்தை இத்யாதி. சும்மெனாதே - *மூச்சுவிடாதே. கூத்தவம்மான் இத்யாரப்ய ஏத்த - இடர் - நில்லா, குறிக்கொண்மின் இத்யந்வய:.*

கெட - போகும்படியாக, உள்ளத்து - நெஞ்சிலே, கொண்மின் - கொள்ளும்படிபாருங்கோள்.

இ.— ஏழாம்பாட்டில், உங்கள் து:கநிவ்ருத்திக்கு ஏத்தவேண்டா; திருக்கடித்தானத்தை நெஞ்சாலே நினையுங்கோள் என்கிறார்.

[கொண்மின் இத்யாதி] - உங்கள் ஸமஸ்தது:கங்களும் போம்படியாகத் திருக்கடித்தானத்தை மநஸ்ஸாலே நினையுங்கோள். [கோவிந்தன் இத்யாதி] - ஸர்வஸுலபனானவனுடைய, ஸகலலோகங்களையும் வரையாதே அளந்த. [ஒண்டாமரை] - ஒருசெவ்விப்பூவைக் கொண்டாயிற்று அளந்தது. [மண்ணவர் தாம்தொழ] - ஸௌலப்யத்தையும் ஸௌசீல்யத்தையும் அறியமாட்டாத அஜ்ஞர் தொழ. [தாம்தொழ] - பரமபதம் நித்யஸூரிகளுக்கேயாயிருக்குமாபோலே, உகந்தருளினதேசம் ஸம்ஸாரிகளுக்கேயாயிருக்கை. அந்யர்க்குவைத்த இறையிலியில் கண்ணுடையார்க்கு ப்ராப்தியில்லையிறே. [வானவர்] - அஸங்குசிதஜ்ஞாநராய் நித்யாநுபவம்பண்ணுமவர்கள் தாம்வந்து நண்ணுகிற தேசம். "நமக்கவ்வருகானவன், தாழ்வுக்கு எல்லையான ஸம்ஸாரிகள் தொழும்படி நிற்கிற சீலமிருந்தபடியென்?" என்று இத்தை அநுபவிக்கைக்கு இங்கேவந்து ஆச்ரயிக்கும் திருக்கடித்தான நகரை - கொண்மினிடர்கெட வுள்ளத்து. இங்குள்ளார் அங்கேபோவது மேன்மையை அநுபவிக்க; அங்குள்ளார் இங்குவருவது சீலகுணாநுபவம்பண்ண.

ஈடு.— ஏழாம்பாட்டு. உங்கள் து:கநிவ்ருத்திக்கு ஏத்தவேண்டா, திருக்கடித்தானத்தை நெஞ்சாலே நினைக்க வமையு மென்கிறார்.

[கோள்மின்இத்யாதி] - உங்கள் ஸமஸ்தது:கங்களும் போம்படியான திருக்கடித்தானத்தை மநஸ்ஸாலே நினையுங்கோள். [கோவிந்தன்] - ஸர்வஸுலபனானவனுடைய. [மண்விண்முழுதுமளந்தவோண்தாமரை] - ஒருதாமரைப்பூவைக்கொண்டாயிற்று, பூம்யந்தரிக்ஷங்களை அளந்துகொண்டது. [மண்ணவர்தாங்தொழ] - இடக்கை வலக்கையறியாத பூமியிலுள்ளார்தொழ; பரமபதம் நித்யர்க்கேயாயிருக்குமாபோலே, உகந்தருளினதேசம் ஸம்ஸாரிகளுக்கேயாயிருக்கை. [வானவர் இத்யாதி] - ஸம்ஸாரிகளுக்கு முகங்கொடுத்துக்கொடுநிற்கிற நீர்மையை அநுஸந்தித்து, நித்யஸூரிகளும் வந்துகிட்டுகிற தேசத்தை-கோண்மினிடர்கேடவுள்ளத்து. இங்குள்ளார் அங்குப்போவது மேன்மையை அநுபவிக்க ; அங்குள்ளார் இங்குவருவது சீலகுணாநுபவம் பண்ணுகைக்கு. (எ)

---

ஏழாம்பாட்டு.—கோண்மின் இத்யாதி. "இடர்கெடவுள்ளத்து - கொண்மின்" என்றதைக்கடாக்ஷித்துஅவதாரிகை - உங்கள் இத்யாதி.

பதார்த்தம்-உங்கள்ஸமஸ்த இத்யாதி. அளந்ததிருவடிகளென்னாதே, "தாமரை" என்று விசேஷித்ததுக்கு பாவம் - ஒருதாமரை இத்யாதி. இத்தால் பாவம் - பரமபதம் நித்யாதி. ஸம்ஸாரிகளுக்காயிருக்கிறவிடத்திலே வானவர் வருவானென்? என்ன - ஸம்ஸாரிகளுக்கு இத்யாதி. இங்குள்ளாரங்கும், அங்குள்ளாரிங்கும் வருகிறதுஏதுக்காகவென்ன - இங்குள்ளாரங்கு இத்யாதி. கோவிந்தன் மண் விண்முழுதும் என்றுதொடங்கி, நகரை இடர்கெடஉள்ளத்து - கொண்மின் இத்யந்வயம். (எ)

## எட்டாம் பாட்டு.

தானநகர்கள் தலைச்சிறந்தெங்கெங்கும்
வானிந்நிலங்கடல் முற்றுமெம்மாயற்கே
ஆனவிடத்தும் என்னெஞ்சுந்திருக்கடித்
தானநகரும் தனதாயப்பதியே.

ஆ.—(தானநகர்கள்.) - இப்படி திருக்கடித்தானத்தை அநுஸந்தித்து, பின்னையும் தன்திறத்துச்செய்தருளின நன்மையைச்சொல்லுகிறார். உம்முடையநெஞ்சும், திருக்கடித்தானமும் எம்பெருமானுக்குஇருப்பிடமாகச் சொன்னீர்; வானிந்நிலங்கடல் முற்றும் அவனுக்கிருப்பிடமல்லவோ? என்னில்,— அங்ஙனேயாகிலும் என்னெஞ்சும் திருக்கடித்தானமும் அவனுக்குப்பிறந்துடைய திருநகரியாயிருக்குமென்கிறார்.

ஒ —எட்டாம்பாட்டில், எம்பெருமானுக்கு ஸ்தாநமான விலக்ஷணமான நகரங்களெங்கும் பல உண்டாயிருக்கச்செய்தேயும், என்னுடைய நெஞ்சையும் திருக்கடித்தானத்தையும் தன்னுடைய தாயப்ராப்தமான ஸ்தாநமாக்கொண்டு ஸ்நேஹித்திருக்கும் என்கிறார்.

[தானநகரென்று தொடங்கி] - மேலில் லோகங்களிலும், பூமி, கடலிலும் எல்லாவிடங்கள் எல்லாம் ஆஸ்சர்யபூதனானவனுக்கு மிகவும் ஸ்லாக்யமான இருப்பிடமான நகரங்களாயிருக்கச்செய்தேயும்.

ப.—அநந்தரம், பரமபதாதி ஸர்வப்ரதேசத்திலும் ஸ்லாக்யமான ஸ்தாநங்களுண்டாயிருக்க, என்னெஞ்சும் திருக்கடித்தானமும் அவனுக்கு அஸாதாரண தேசமாகாநின்றதென்கிறார்.

வான் - பரமபதம், இ - இந்த, நிலம் - பூமி, கடல் - க்ஷீரார்ணவங்களாகிற, எங்கெங்கும் - எல்லாவிடத்திலும், தானம் - ஆவாஸஸ்தாநமான, நகர்கள் - நகரங்கள், முற்றும் - முற்றவும், தலை - தலைப்பட்ட, சிறந்து - சிறப்பையுடைத்தாய்க்கொண்டு, எம்மாயற்கே - எனக்கு ஆஸ்சர்யபூதனானவனுக்கே, ஆனவிடத்தும் - ஆயிருக்கச்செய்தேயும், என் - என்னுடைய, நெஞ்சும் - நெஞ்சும், திருக்கடித்தானம் நகரும் - (இந்திருக்கைக்காகவந்து ஸந்நிஹிதனை) திருக்கடித்தானமாகிற நகரமும், தன - தனக்கு, தாயம் — தாயப்ராப்தமான, பதியே - அஸாதாரணதேசமாய் இராநின்றது.

இ.—எட்டாம்பாட்டில், அவனுக்கு விலக்ஷணமான நகரங்கள் பல உண்டாயிருக்கச்செய்தேயும், என்நெஞ்சையும் திருக்கடித்தான நகரையும் தாயப்ராப்தமான ஸ்தாநமாக விரும்பியிருக்கும் என்கிறார்.

[தானநகர் இத்யாதி] - [வானிந்நிலங்கடல் - எங்கெங்கும் - தலைச்சிறந்த - தானநகர்கள் - முற்றுமெம்மாயற்கே யானவிடத்தும்] - மேலில் லோகங்களிலும், பூமியிலும், கடலிலும், கண்டவிடமெல்லாம் மிகவும் ஸ்லாக்யமான இருப்பிடமான நகரங்கள் முற்றும். [எம்மாயற்கே] - என்பக்கலிலே அபிநிவிஷ்டனான ஆஸ்சர்யபூதனுக்கு. [ஆனவிடத்தும்] - ஆயிருக்கச்செய்தேயும். என்நெஞ்சும் திருக்கடித்தானநகரமும் தனக்கு தாயப்ராப்தமான ஸ்தாநமாக விரும்பியிராநின்றான்.

ஈடு.—எட்டாம்பாட்டு. அவனுக்கு விலக்ஷணமானநகரங்கள் பலவுமுண்டாயிருக்கச்செய்தேயும், என்னுடைய நெஞ்சையும் திருக்கடித்தானத்தையும் தாயப்ராப்தமான ஸ்த்தாநமாக விரும்பியிருக்கு மென்கிறார்.

[தானநகர் இத்யாதி] - (வானிந்நிலங்கடல் - எங்கெங்கும் - தலைச்சிறந்த - தானநகர்கள் - முற்றுமெம்மாயற்கேயானவிடத்தும்) - மேலில் லோகங்களிலும், பூமியிலும், கடலிலும், கண்டவிடமெல்லாம் மிகவும் ஶ்லாக்யமான இருப்பிடமான நகரங்கள்முற்றும் என்பக்கலிலே அபிநிவிஷ்டனான ஆஶ்சர்யபூதனுக்கு. [ஆனவிடத்தும்] - ஆயிருக்கச்செய்தேயும். என்னெஞ்சும் திருக்கடித்தானநகரும் தனக்கு தாயப்ராப்தமான ஸ்த்தாநமாக விரும்பியிராநின்றான். (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

தாயப்பதிகள் தலைச்சிறந்தெங்கெங்கும்
மாயத்தினால் மன்னிவீற்றிருந்தானுறை
தேசத்தமரர் திருக்கடித்தானத்துள்
ஆயர்க்கதிபதி அற்புதன்தானே.

ஆ.—(தாயப்பதிகள்.) - எல்லாம் அவனுக்குத் தாயப்பதிகளன்றோவென்னில், — அதுஅட்படியேயாகிலும் திருக்கடித்தானமென்றால் அவன்திருவுள்ளம் விழுந்து கிடக்கும்படி ஆஶ்சர்யமென்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், 'கீழ்ச்சொன்னவையெல்லாம் அவனுக்குத்தாயப்பதிகள் அல்லவோ?' என்னில்,— அதுஅப்படியாகிலும், என்னோடே ஸம்ஶ்லேஷிக்கைக்கு உறுப்பான நிலமென்று திருக்கடித்தானத்திலே அத்யபிநிவிஷ்டனானான் என்கிறார்.

[தாயப்பதிகளென்று தொடங்கி] - மிகவும் விலக்ஷணமாய்ப் பழையதாய் வருகிற ஸ்தாநங்களெங்கும் அபிநிவேஶத்தாலே விடாதே தன்ஐஶ்வர்யமெல்லாந் தோற்றும்படி இருந்தருளினவன் நிரந்தரவாஸம்பண்ணுகிற. [தேசத்தமரர் திருக்கடித்தானத்துள்] - தேஜஸ்ஸையுடைய நித்யஸூரிகளுக்கும் பரமப்ராப்யமான திருக்கடித்தானத்துள்.

ப —அநந்தரம், திருக்கடித்தானத்திலே நித்யவாஸம்பண்ணுகிற ஆஶ்சர்யபூதக்ருஷ்ணன்தானே அல்லாதஸ்த்தலங்களிலு மிருந்தானென்கிறார்.

தேசம் - தேஜஸ்விகளான, அமரர் - நித்யஸூரிகளுக்கு ப்ராப்யமான, திருக்கடித்தானத்துள் - திருக்கடித்தானத்துள்ளே, உறை - வர்த்திக்குமவனாய், ஆயர்க்கு - கோபர்களுக்கு, அதிபதி - நிரவதிகஸ்வாமியான, அற்புதன்தான் - ஆஶ்சர்யகுணசேஷ்

---

எட்டாம்பாட்டு.—தானநகர்கள் இத்யாதி. "தலைச்சிறந்த - தானநகர்கள் - திருக்கடித்தானநகரும் தனதாயப்பதியே" என்கிறபதங்களைக்கடாக்ஷித்து அவதாரிகை - அவனுக்கு இத்யாதி. "வான், இந்நிலம்" என்று பதஜேதம். தலைச்சிறந்த - மிகவும்ஶ்லாக்யமான. எம்மாயற்கு. வானிந்நிலங்கடல் - எங்கெங்கும் - தலைச்சிறந்த தானநகர்கள் - முற்றும் - உண்டானவிடத்திலும், என்னெஞ்சும் திருக்கடித்தானநகரும் தனதாயப்பதியே இத்யந்வயः. (அ)

டிதங்களையுடையவன்தான், தாயம் - அஸாதாரணமான, பதிகள் - அர்ச்சாஸ்த்தலங்கள், எங்கெங்கும் - எல்லாவிடத்திலும், தலை - தலைப்பட்ட, சிறந்து - ஸ்ரீலாதிகுணஸம்பத்தையுடையவனாய்க்கொண்டு, மாயத்தினால் - ஆஶ்சர்யஸௌந்தர்யாதி விக்ரஹகுணவிஶிஷ்டனாய், மன்னி - பொருந்தி, வீற்று - (பரவ்யூஹாதிகளிற்காட்டில் தன்னுடைய வ்யாவ்ருத்தி) தோன்றும்படியாய், இருந்தான் - இருந்தவன்.

இ—ஒன்பதாம்பாட்டில், 'கீழ்ச்சொன்னவையெல்லாம் அவனுக்குத்தாயப்பதிகள் அன்றோ?' என்னில்,—அப்படியேயாகிலும், "என்னோடே கிட்டுகைக்கு உறுப்பானநிலம்" என்று திருக்கடித்தானத்திலே அபிநிவிஷ்டனானான் என்கிறார்.

[தாயப்பதிகள் இத்யாதி] - [தலைச்சிறந்த - தாயப்பதிகள் - எங்கெங்கும்] - மிகவும் விலக்ஷணமாய்ப் பழையதாய் வருகிறஸ்தாநங்களெங்கும். [மாயத்தினால்] - அபிநிவேஶத்தாலேயென்னுதல், இச்சையாலே என்னுதல்: "மாயாவயுநம்ஜ்ஞாநம்". [மன்னிவீற்றிருந்தான்] - விரும்பி, தன்ஐஶ்வர்யமெல்லாம் தோற்ற இருந்தருளினவன். ஐஶ்வர்யத்தால்வந்த வேறுபாடுதோற்ற இருந்தவன் என்றுமாம். [உறை] - நித்யவாஸம்பண்ணுகிற. [தேசத்தமரர்] - தேஜஸ்ஸை யுடைய நித்யஸூரிகளுக்குப் ப்ராப்யபூமியான திருக்கடித்தானத்துள். [ஆயர்க்கதிபதி] - கோபஸஜாதீயனாய் வந்து அவதரித்து, அவர்களில் தலைவனானவன். [அற்புதன்] - ஆஶ்சர்யமானபடிகளை உடையவன். உகந்தருளின தேசங்கள் எல்லாவற்றிலும் விருப்பம் உண்டாகிலும், என்னைலபிக்கைக்குத் திருக்கடித்தானத்திலே தன்மேன்மையும் நீர்மையுமெல்லாம் ப்ரகாஶியாநின்றான் என்கிறார்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. அல்லாததிருப்பதிகளுமெல்லாம் அவனுக்கு அப்படியேயன்றோவென்னில், - அதுஅப்படியேயாகிலும் "என்னோடேகிட்டுகைக்கு உறுப்பானநிலம்" என்று திருக்கடித்தானத்திலே அத்யபிநிவிஷ்டனானனென்கிறார்.

[தாயப்பதிகள் இத்யாதி] - (தலைச்சிறந்த - தாயப்பதிகள் - எங்கெங்கும்) மிகவும் விலக்ஷணமாய்ப் பழையதாய்வருகிற ஸ்த்தாநங்களெங்கும். [மாயத்தினால்] — அபிநிவேஶத்தாலே யென்னுதல், இச்சையாலே என்னுதல். 'மாயாவயுநம் ஜ்ஞாநம்" (மாயாவயுநம்ஜ்ஞாநம்). [மன்னிவீற்றிருந்தான்] - விரும்பி, தன் ஐஶ்வர்யமெல்லாந்தோற்றும்படி இருந்தருளினவன். ஐஶ்வர்யத்தால்வந்த வேறுபாடுதோற்ற இருந்தவனென்றுமாம். [உறை] - நித்யவாஸம்பண்ணுகிற. [தேசத்தமரர் இத்யாதி]-தேஜஸ்ஸையுடைய நித்யஸூரிகளுக்கு ப்ராப்யபூமியான திருக்கடித்தானத்துள். [ஆயர்க்கதிபதி] - கோபஸஜாதீயனாய் வந்தவதரித்து அவர்களில் தலைவனானவன். [அற்புதன்] - ஆஶ்சர்யமானபடிகளையுடையவன். உகந்தருளின தேசங்களெல்லாவற்றிலும் விருப்ப

---

ஒன்பதாம்பாட்டு.—தாயப்பதிகள் இத்யாதி. "எங்கெங்கும் - தலைச்சிறந்த - தாயப்பதிகளாயிருக்கச்செய்தேயும் - திருக்கடித்தானத்திலே - மாயத்தினால் - வீற்றிருந்தான்" என்றவற்றைக்கடாக்ஷித்து அவதாரிகை - அல்லாத இத்யாதி. அப்படியேயன்றோ என்றது - தாயப்ராப்தமன்றோவென்றபடி.

"மாயம்" என்றால் - இச்சையைக்காட்டுமோவென்ன - மாயாவயுநம் இத்யாதி. "வீற்றிருந்தான்" என்று முழுச்சொல்லாய், ஐஶ்வர்யமெல்லாம் தோற்றும்படியிருந்தான் என்னுதல்; "வீறு" என்றுபிரித்து, வேறுபாடு தோற்றவிருந்தான் என்னுதல். பாட்டுக்கு ஃபலித்த

முண்டாகிலும், என்னை லஹிக்கைக்காகத் திருக்கடித்தானத்திலே, தன்மேன்மையும் நீர்மையுமெல்லாம் ப்ரகாசிக்கநின்று னென்கை. (கூ)

———

## பத்தாம் பாட்டு.

அற்புதன்நாராயணன் அரிவாமனன்
நிற்பது மேவி இருப்பதென்னெஞ்சகம்
நற்புகழ்வேதியர் நான்மறைநின்றதிர்
கற்பகச்சோலைத் திருக்கடித்தானமே.

ஆ —(அற்புதன்.) - இப்படி திருநாடு திருப்பாற்கடல் தொடக்கமாகவுள்ள திருநகரிக ளெல்லாவற்றிலும் அத்யந்தம் அபிமதமாயிருந்த திருக்கடித்தானத்திலே நிற்பது; மேவியிருப்பது என்னெஞ்சகமென்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், என்னைப்பெறுந்தனையும் திருக்கடித்தானத்திலே நின்றருளினன்; என்னோடு ஸம்ஸ்லேஷித்தபின்பு நிற்பதும் இருப்பதும் என்னெஞ்சிலே என்கிறார். இப்பாட்டுக்கெல்லாம் அநந்யப்ரயோஜநர் என்னும் புகழையுடைய வைதிகராலே உச்சரிக்கப்படாநின்றுள்ள நாலுவேதங்களும் நிரந்தரமாக முழங்காநின்றுள்ள கல்பகவநத்தை உடைத்தான திருக்கடித்தானத்தில் ஆஸ்ரிதவத்ஸலனாய் ஆஸ்ரிதவிரோதி நிரஸநஸமர்த்தனாய் ஆஸ்ரிதருடைய ஸர்வாபேக்ஷிதங்களும் முடித்துக்கொடுக்கும் ஸ்வபாவனாய் இப்படி அத்யாஸ்சர்யபூதனானவன் நிற்பதும் மேவியிருப்பதும் என்ஹ்ருதயத்திலே. திருக்கடித்தானமென்று - ஸப்தம்யர்த்தே ப்ரதமையாகிறது.

ப.—அநந்தரம், ஆஸந்நமான திருக்கடித்தானத்தில் நிற்கிறது என்னெஞ்சிலே பொருந்தி வர்த்திக்கைக்காக என்கிறார்.

அற்புதன் - (அநுபாவ்யமான) ஆஸ்சர்யசேஷ்டிதங்களையுடையனாய், நாராயணன் - (அதுக்கு அநுரூபமான) ஸம்பந்தத்தையுடையனாய், அரி - அநுபவவிரோதி நிரஸநஸீலனாய், வாமனன் - அர்த்தியாய்வந்து அநுபவிப்பிக்குமவன், மேவி-பொருந்தி, இருப்பது - இருப்பது, என் - என், நெஞ்சகம் நெஞ்சுக்குள்: நிற்பது - (அதுக்கு உறுப்பாகவந்து) நிற்பது, நற்புகழ் - அநந்யப்ரயோஜநத்வப்ரதையையுடையரான, வேதியர் - வைதிகருடைய, நால் - நாலு, மறை - வேதங்களும், நின்று - நின்று, அதிர் - முழங்கும்படியாய், கற்பகம்-கல்பகமயமான, சோலை-சோலையையுடைத்தான, திருக்கடித்தானம் - திருக்கடித்தானம்.

இ.—பத்தாம்பாட்டில், என்னைப்பெறுந்தனையும் திருக்கடித்தானத்திலே நின்றான்: என்னோடு ஸம்ஸ்லேஷித்தபின்பு நிற்பதும் இருப்பதும் என்னெஞ்சிலே என்கிறார்.

---

ஹாவம் - உகந்தருளின இத்யாதி. 'தலைச்சிறந்த - தாயப்பதிகள் - எங்கெங்கும் மாயத்தினால்' என்று தொடங்கி, 'தேசத்தமரர் திருக்கடித்தானத்துள் - உறை - ஆயர்க்கதிபதியற்புதன்தானே இத்யந்வயம். (கூ)

[நாராயணன்] - தன்னுடைமையைவிட்டுக்கொடாத வத்ஸலன். "ரிவ-ஞ ணாவேவஜ ஒலு:" [அரி] - ஆஶ்ரிதவிரோதி நிரஸந ஸமர்த்தன். வயிற்றிலேபிறந்த ப்ரஜை தாயை அறிந்து நேர்முகம் பார்த்தால் அதின் தோஷம் போக்குகை. [வாமனன்] - தன்னைத்தாழவிட்டு ஆஶ்ரிதருடைய ஸர்வாபேக்ஷிதங்களையும் முடித்துக் கொடுக்குமவன். தான் அர்த்தியாய் வந்து கிட்டுமவன். [அற்புதன்] - கிட்டினால் அநுபவிக்கைக்கு நிரதிஶயபோக்யனானவன். இப்படிகளாலே அத்யாஶ்சர்யபூதன். [நற்புகழ் இத்யாதி] - அநந்யப்ரயோஜநரென்னும் புகழை யுடைய வைதிகராலே உச்சரிக்கப்பட்ட நாலுவேதங்களினுடைய ப்ரதித்வநியாலே முழங்காநின்றுள்ள கல்பக வனத்தையுடைய திருக்கடித்தானத்திலே - நிற்பது, மேவியிருப்பது என் நெஞ்சகமென்னுதல்; திருக்கடித்தானத்து - நாராயணன் அரிவாமனன் - அற்புதன் - நிற்பதும் மேவியிருப்பதும் என் நெஞ்சகமென்னுதல்: திருக்கடித்தானமென்று ஸப்தம்யர்த்தே ப்ரதமை.

ஈடு.—பத்தாம்பாட்டு. என்னைப்பெறுமளவும் திருக்கடித்தானத்திலே நின்றான், என்னைப்பெற்றபின்பு நிற்பதுமிருப்பதும் என்னெஞ்சிலே யென்கிறார்.

[நாராயணன்] - தன்னுடைமையை விட்டுக்கொடாத வத்ஸலன். [அரி] - ஆஶ்ரிதவிரோதிநிரஸந ஸமர்த்தன். [வாமனன்] - தன்னைச் சிறுகவிட்டு ஆஶ்ரிதருடைய ஸர்வாபேக்ஷிதங்களையும் முடிக்குமவன். [அற்புதன்] - இப்படிகளாலே ஆஶ்சர்ய பூதன். [நற்புகழ் இத்யாதி]-அநந்யப்ரயோஜநர் என்னும் புகழையுடைய வைதிகராலே உச்சரிக்கப்பட்ட நாலுவேதங்களாலும் முழங்காநின்றுள்ள கல்பகவநத்தையுடைய திருக்கடித்தானத்திலே - அவன்நிற்பது, மேவியிருப்பது என்னெஞ்சகமென்னுதல்; திருக்கடித்தானத்து - நாராயணன் அரி வாமனன் - அற்புதன் - நிற்பதும் - என்னெஞ்சகம், மேவியிருப்பதும் - என்னெஞ்சகமென்னுதல். திருக்கடித்தானமென்று - ஸப்தம்யர்த்தே ப்ரதமை. (க0)

## பதினோராம் பாட்டு.

சோலைத்திருக்கடித்தானத்து உறைதிரு
மாலை மதிள்குருகூர்ச் சடகோபன்சொல்
பாலோடமுதன்ன ஆயிரத்திப்பத்தும்
மேலைவைகுந்தத்து இருத்தும்வியந்தே.

---

பத்தாம்பாட்டு.— அற்புதன் இத்யாதி. "சோலைத்திருக்கடித்தானத்து - நாராயணன் - நிற்பதும் மேவியிருப்பதுஎன்னெஞ்சகம்" என்றவற்றைக் கடாக்ஷித்து அவதாரிகை - என்னைப் பெறுமளவும் இத்யாதி-

வாத்ஸல்யாதிகளால் ஆஶ்சர்யபூதனென்கைக்காக, நாராயணாதி ஶப்தங்களுக்கு வ்யாக்யானம். வேதியர்புகழுக்கு நன்மையாவது - அநந்யப்ரயோஜநத்வம்; அத்தை அருளிச்செய்கிறார் - அநந்ய இத்யாதி. நான்மறைநின்றதிராநின்றுள்ளதுமாய், கற்பகச்சோலையையுமுடைய திருக்கடித்தானத்திலே. திருக்கடித்தானமென்று - ப்ரதமையாயிருக்க, ஸப்தமியாகச் சொல்லுவானென்? என்ன - திருக்கடித்தானம் இத்யாதி. இரண்டாமந்வயம்-நற்புகழ்வேதியர் என்றுதொடங்கி மேலே வ்யாக்யாநத்தி லிருந்தபடியே. (க0)

ஆ.—(சோலை) - சோலைத்திருக்கடித்தானத்துறை திருமால் கவிக்கு ப்ரதிபாத்யன். மதிள்குருகூர்ச் சடகோபன் கவிபாடுகிறானால் இவைபெய்ரோனையிருக்கிறன. இவைவல்லாரை, எம்பெருமான் ஒருக்ஷணம் பிரியில் தரிக்கமாட்டானென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றவர்களை இதுதானே திருநாட்டில் கொடுபோய்விடுமென்கிறார்.

[சோலையென்றுதொடங்கி] - அழகிய திருச்சோலையையுடைய திருக்கடித்தானத்திலே உறைகிற ஸ்ரீய꞉பதியை ஆழ்வார் அருளிச்செய்த பாலும்அமுதும்கலந்தாற்போலேயிருக்கிற வாச்யவாசகங்களுடைய பொருத்தத்தையுடைய ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி. [வியந்து] - அத்யாதரத்தைப்பண்ணி.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு ஃபலமாக பரமபதப்ராப்தியை அருளிச்செய்கிறார்.

சோலை - சோலைகளையுடைய, திருக்கடித்தானத்து - திருக்கடித்தானத்திலே. உறை - நித்யவாஸம்பண்ணுகிற, திருமாலை - ஸ்ரீய꞉பதியைப்பற்ற, மதிள் - (அரணான்) மதிளையுடைய, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வாருடைய, சொல்-சொல்லாய், (வாச்யவாசக ஸம்ப்ந்லேஷத்தில் இனிமையாலே), பாலோடமுதன்ன- பாலும்அமுதும் கலந்தாற்போலே யிருக்கிற, ஆயிரத்து - ஆயிரந்திருவாய்மொழியில், இப்பத்தும் - இப்பத்தும், மேலை - உத்துங்கதேசமான, வைகுந்தத்து - பரமபதத்திலே, (இத்திருவாய்மொழியில் ஸம்ப்ந்தமுடையாரை), வியந்து - உகந்து, இருத்தும் - ப்ரதிஷ்டிதராக்கும். இது - கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றவர்களை, இதுதானே திருநாட்டிற் கொடுபோய்விடும் என்கிறார்.

[சோலையித்யாதி] - ப்ரமஹரமாய் ஊர்ஜஸீயமான சோலையையுடைய திருக்கடித்தானத்திலே நித்யவாஸம்பண்ணுகிற ஸ்ரீய꞉பதியை. [மதிள்குருகூர்] - ஸாம்ஸாரிக ஊரிதங்களுக்குப் போகவொண்ணாத அரணையுடைய திருநகரி. [சடகோபன்சொல்] - "ரவுவாரவரிதம்ஃரிவுணீதழ" என்னுமாபோலே. பாலோடமுதன்ன - ஆயிரமென்னுதல்; இப்பத்தென்னுதல். வாச்யவாசகங்களுடைய சேர்த்தியிருக்கிறபடி. பாலென்கிறது—சோலைத்திருக்கடித்தானத்துறை திருமாலென்கிற வாச்யத்தை; அமுதென்கிறது - சடகோபன்சொல் என்கிறவாசகத்தை. இது ஆளவந்தார் நிர்வாஹம். [இப்பத்தும்-வியந்து-மேலைவைகுந்தத்திருத்தும்]-"ஸம்ஸாரத்திலேஇத்தை அப்யஸிப்பாரொருவன் உண்டாவதே!" என்று விஸ்மயப்பட்டு, ஸர்வாதிகமான பரமபதத்திலே கொடுபோய்வைக்கும். மாயக்கூத்தன் நடையாடாத தேசத்திலே வைத்து, ஒருநாளும் பிரியாத அநுபவத்தைக் கொடுக்கும்.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழி கற்றவர்களை, இதுதானே திருநாட்டிலே கோடுபோய்விடு மென்கிறார்.

---

நிகமம் - சோலை இத்யாதி. "மேலைவைகுந்தத்திருத்தும்வியந்தே" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி.

[சோலை இத்யாதி] - ஶ்ரமஹரமாய் தர்ஶநீயமான சோலையையுடைய திருக்கடித்தானத்திலே நித்யவாஸம்பண்ணுகிற ஸ்ரீயஃபதியை. [மதிள்குருகூர்] - ஸாம்ஸாரிக துரிதங்களுக்குப் புகவொண்ணாத அரணையுடைய திருநகரி. [சடகோபன்சொல்] - *"ரகுவரசரிதம் முநிப்ரணீதம்"(ரகுவரசரிதம்முநிப்ரணீதம்)என்னுமாபோலே. பாலோடமுதன்ன ஆயிரமென்னுதல், பாலோடமுதன்ன - இப்பத்தென்னுதல். வாச்ய வாசகங்களுடைய சேர்த்தியிருக்கிறபடி. பாலென்கிறது-சோலைத் திருக்கடித்தானத்துறை திருமாலை. அமுதென்கிறது - சடகோபன் சொல்லென்கிற வாசகத்தை. இது - ஆளவந்தார் நிர்வாஹம். [இப்பத்தும் - வியந்து - மேலைவைகுந்தத்திருத்தும்]-"ஸம்ஸாரத்திலே இத்தை அப்யஸிப்பாரொருவனுண்டாவதே என்று விஸ்மயப்பட்டு ஸர்வாதிகமான பரமபதத்திலே கொடுபோய்வைக்கும். மாயக்கூத்தனில் விடாய் நடையாடாத தேசத்திலேவைத்து, ஒருநாளும் பிரியாத அநுபவத்தைக் கொடுக்கும். (கக)

---

சோலைக்கு உண்டான ஶைத்ய ஸௌந்தர்யங்களைப்பற்ற - ஶ்ரமஹரமாய் தர்ஶநீயமான என்றது. "மதிள்" என்றதுக்கு பாவம் - ஸாம்ஸாரிக இத்யாதி. "திருமாலை - சடகோபன்" என்கையாலே பாவம் - ரகுவர இத்யாதி. அன்ன - ஸத்ருஶமான. இப்பத்துக்கு விஶேஷணமானதிலே ஒரு ஸௌகர்யமுண்டென்கிறார் - வாச்ய இத்யாதி. இத்தை விவரிக்கிறார் - பாலென்கிறது இத்யாதி வாக்யத்வயத்தாலே. ப்ரகாரணநுகுணமாக விவரிக்கிறார் - மாயக்கூத்தனில் இத்யாதி. இத்திருவாய்மொழியால் - பாடி வீடுபெற்றபடி சொல்லுகிறது. இத்திருவாய்மொழியில் அதிஷ்டாநதேவதையான எம்பெருமான் ஆஶ்சர்யப்பட்டென்றபடி. (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.—ஸந்த்யஃஸ்வஸந்தேஶே தத்ஸவிதாநஸாந்த்ரா
ஸ்ரீஸந்தேஸம்ஸ்ரஸ்வத்ஸந்தேஶாநநாக்ஸ்ரஜரா। ஸேவகாநாம் தோஷமதவாந் இதி
இதாவந்த்ரம்ஸாஸம்யக் தஸ்ம் இதி ஸம்பவ விசெய்ஸஹேது॥

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.—ஶாகலாநீதா ஸஹ்ய
ஸ்ரீதஸப்த்ஸம்யாதாந் ஸ்வகஸ்ஸாவாதாஸ்ரஸ்ய வக்ரியகாம் தப்ரபமணஸஜநாஸ
ரிவ்யம்ஸகதாஸ। ஶேவிதகாஸஸேஷாஸிதவிஷய தோஷஸ்வத்கதா
வஞ்சராஸா தகாஸஸவவிதரணே ஸஜ்ஜதாஸ க்ருஷ்ணஃ॥ அள॥

---

திருவாய்மொழி நூற்றந்தாதி. {
எல்லிபகல்நடந்த இந்தவிடாய்தீருகைக்கு
மெல்லவந்துதான் கலக்கவேணுமென - நல்லவர்கள்
மன்னுகடித்தானத்தேமாலிருக்கமாறன்கண்டு
இந்நிலையைச்சொன்னானிருந்து.

---

ஆழ்வார் திருவடிகளேஶரணம், எம்பெருமானார் திருவடிகளேஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.

---

* ராமா - பால - (உ-சஙு).

# ஏழாந்திருவாய்மொழி—இருத்தும்-ப்ரவேஶங்கள்.

ஒ.—ஏழாந்திருவாய்மொழியில், தாமே தமக்கு ப்ராதிகூல்யநிவ்ருத்தியைப் பிறப்பித்து, அதுவே பற்றாசாக ஒருநாளும் அபாயங்கள்கண்டு உபேக்ஷியாதே அத்யந்தவத்ஸலனுமாயிருந்துள்ள ஸர்வேஶ்வரன், அநாதிகாலம் தம்மைப்பெறுகைக்குப் பண்ணின யத்நபாஹுள்யத்தையும், அவனுக்குத் தம்மைப் பெறுகையிலுண்டான அபிநிவேஶத்தையும், தம்மோடே ஸம்ஶ்லேஷித்து இந்த ஸம்ஶ்லேஷத்தைப் பெரும்பேறு பெற்றானாகக் கொண்டிருந்தருளுகிறபடியையும் அநுஸந்தித்து, அவனுடையபடியைப் பார்க்க, தம்முடைய அர்த்தித்வாதிகள் புறணியாயிருக்கிறபடியை அநுஸந்தித்து, ஸ்ரீவிபீஷணாழ்வான் பெருமாளுடைய நீர்மையைக்கண்டு ஈடுபட்டாற்போலே, "நாம் என்செய்தோமானோம்!" என்று லஜ்ஜிதருமாய், எம்பெருமானுடைய வ்யாமோஹத்தைக்கண்டு விஸ்மிதருமாய், ஹ்ருஷ்டருமாய், அவனுடைய க்ருபாதிகுண ஸமுத்ரத்திலே அழுந்தின ஆழ்வார், — ராமகதாமங்கள ஶ்ரவ்யமான அஶோகவநிகையின் நடுவே ராமகீர்த்தநத்தைப் பண்ணிக்கொண்டுவந்த திருவடியைக்கண்டருளி மிகவும் ஹ்ருஷ்டையாய், "ராமஸம்பந்திகளாயிருப்பார் இத்தேஶத்தில் வரக்கூடாது: ஆனபின்பு, இது ஸ்வப்நாதிகளோ ?" என்று ஸ்ரீஜநகராஜன் திருமகள் அதிஶங்கையைப்பண்ணி மெய் என்று தெளிந்து இனியளானாற்போலே,—எம்பெருமான் அதிவ்யாமோஹத்தோடே தம்மோடே கலந்தருளினபடியை அநுஸந்தித்து, "இது ப்ரமஸ்வப்நாதிகளிலேயன்றே?" என்று அதிஶங்கையைப்பண்ணி, அன்று என்று தெளிந்து ப்ரீதராகிறார் ; எம்பெருமானுக்கு ஈஶ்வரத்வமன்று ஸ்வரூபம்: பாரதந்த்ர்யம்" என்று இத்திருவாய்மொழிக்குக் கருத்து.

ப.—ஏழாந்திருவாய்மொழியில், திருக்கடித்தானத்திலே எழுந்தருளியிருந்த ஸர்வேஶ்வரன், தம்முடைய திருவுள்ளத்திலே ஸமஸ்தவிரோதிகளும் கழியும்படி புகுந்து பரிபூர்ணமாக எழுந்தருளியிருக்கக்கண்டு, அவன்தானே அர்த்தியாய்ப்புகுந்தபடியையும், அவனுடைய விரோதிநிவர்த்தகத்வத்தையும், அஜ்ஞாந தமோநிரஸநத்தையும், அதுக்கடியான அத்யுஜ்ஜ்வல விக்ரஹயோகத்தையும் ஸாஸ்த்ரஸ்த்திதியையும், அத்தால் பிறந்த அவயவஶோபையையும், அவ்வழகினுடைய அநுபாவ்யத்வாதிஶயத்தையும், நிர்ஹேதுகோபகாரத்தையும், அதிஶயிதோபகாரத்தினுடைய அநுஸந்தேயத்வத்தையும், நித்யாநுபாவ்யபரத்வத்தையும் அநுஸந்தித்து, ஏவம்பூதனான ஸர்வேஶ்வரன் தன்திருவுள்ளத்தில் புகுந்திருக்கிற அதிஶயிதவ்யாமோஹத்திலே விஸ்மிதராய், " இது ப்ரமமோ ? மாயாதிவிகாரமோ?" என்று ஶங்கித்து, நம்மளவில் விப்ரலம்பியானென்று தெளிந்து, "இதோருபகாராதிஶயமே!" என்று அத்யந்தம் ஹ்ருஷ்டராகிறார்.

இ.—ஏழாந் திருவாய்மொழியில், தமக்கு ப்ராதிகூல்யநிவ்ருத்தியைப் பிறப்பித்து, அத்வேஷாபிமுக்யம் முதலான அவஸ்தைகளைப் பிறப்பித்து, அநாதிகாலம் பூர்வபுத்திபூர்வம்பண்ணின ப்ராதிகூல்யத்தை விஸ்மரித்து, ஆநுகூல்யம் பிறந்தபின்பு ப்ராமாதிகமாகப்பிறந்த குற்றங்களில் அஜ்ஞனென்னும்படி வத்ஸலனு

யிருக்கிற ஸர்வேஶ்வரன், அநாதிகாலம் தம்மைப்பெறுகைக்கு "எதிர்சூழல்புக்கு" என்கிறபடியே தாம்பிறந்த ஜந்மங்கள்தோறும் அவதரித்தபடியையும், கீழ்ப்பிறந்த இழவெல்லாம் தீரும்படி கலந்தபடியையும், இது தமக்கு உபகரித்தானாயிருக்கை யன்றியே தான் பெறுப்பேறு பெற்றானாயிருக்கிறபடியையும் அநுஸந்தித்து, அவ னுடைய அர்த்தித்வத்தைக்கண்ட அநந்தரம் தாம் அர்த்தித்துக்கூப்பிட்ட இது புறணி யாய்த் தோற்றுகையாலே,—"ராவணோநாமதுர்வ்ருத்தோராக்ஷஸோராக்ஷஸேஶ்வர:" என்று - ஸ்ரீவிபீஷணாழ்வான் பெருமாள் நீர்மையைக் கண்டபின்பு "நாம் என்செய்தோ மானோம்?" என்று லஜ்ஜித்தாற்போலவும், ராமகுணங்கள் நடையாடாத அசோகவநிகை யில்திருவடி சென்று, "ஸம்ஸ்ருஷ்ட்வா ராமவாக்ய..." என்று இனிதாம்படி ராமகுணங்க ளைச்சொல்லக்கேட்ட பிராட்டி, "இந்நிலத்தில் இதுகூடாது, 'கிந்நுஸ்யாச்சித்தமோஹோயம் பவேத்வாதகதிஸ்த்வியம் । உந்மாதஜோவிகாரோவாஸ்யாதியம் ம்ருகத்ருஷ்ணிகா'" என்று அதிஶங்கைபண்ணி "மெய்" என்று தெளிந்து இனியளானாற்போலவும்,—அவன் தம்பக்கல்பண்ணின வ்யாமோஹத்திலே அதிஶங்கைபண்ணி, "மெய்" என்றுதெளிந்து, அந்தவ்யாமோஹத்தைப் பேசி ஹ்ருஷ்டராகிறார். இத்திருவாய்மொழியில் லாபத் துக்கு க்ருஷிபண்ணினபடியாயிருக்கிறது கீழெல்லாம்; இது ஸ்திரமாகைக்கு வேலி யடைக்கிறார் மேல். ஸர்வேஶ்வரன் ஸ்வதந்த்ரனென்று உபபாதித்தது கீழ்; அங்ஙன் னன்று, ஆஶ்ரிதபாரதந்த்ர்யமே அவனுக்கு ஸ்வரூபமென்கிறது இத்திருவாய்மொழியில்.

ஈடு.—இத்திருவாய்மொழியில் பேற்றுக்கு க்ருஷிபண்ணினபடி கீழடைய; மேல்-இப்பேற்றுக்கு வேலியாயிருக்கிறது. 'இத்திருவாய்மொழிதன்னில் செய்கிறதேன்?' என்னில், தாம் அநாதிகாலம் புத்திபூர்வகமாகப் பண்ணிப்போந்த ப்ராதிகூல்யங்களை யடைய விஸ்மரித்து, ஆநுகூல்யம் பிறந்தபின்பு ப்ராமாதிகமாக உண்டானவற்றைக் காணக் கண்ணிட்டு, தம்முடையபேற்றுக்குத் தானே யத்நித்து, தமக்குப்பிறந்த விடாய் தீரும்படி ஸம்ஶ்லேஷித்து, இதுதான் இவர்க்கு உபகரித்தானாயிருக்கையன்றிக்கே தன் பேறாயிருக்கிறபடியை அநுஸந்தித்து "தானே அர்த்தியாய்த் தன்பேறாக வந்துகலந்தவனை நாம் இரப்பாளராய்க் கூப்பிட்டவிடம் என்செய்தோமானோம்?" என்று லஜ்ஜித்து, "ஒரு ஸம்ஸாரிசேதநன்பக்கலிலே ஸர்வேஶ்வரன் பண்ணும் விஷயீகாரமிருக்கும்படியேயிது!" என்று வித்தராய்; *"ராவணோநாமதுர்வ்ருத்தோராக்ஷஸோராக்ஷஸேஶ்வர:"

---

இருந்தும் வியந்து ப்ரவேஶ. * மாயக்கூத்தனில் விடாய்தீரக் கலந்த கலவியா லுண்டான இத்திருவாய்மொழியில் ப்ரீதி வாசாமகோசரமென்று விவக்ஷித்து, கீழும்மேலும் ப்ரீதியுண்டாயிருக்க இதுக்கு ஆதிக்யமேதென்ன அருளிச்செய்கிறார் - இத்திருவாய்மொழி யில் இத்யாதிவாக்யத்வயத்தாலே. வேலியாயிருக்கிறதென்றது - வர்த்தகமாயிருக்கிற தென்ற படி. வாசாமகோசரமான ப்ரீதியை உபபாதிக்கைக்காக, தத்விஷயங்களையை அநுவதிக்கிறார் - இத்திருவாய்மொழிதன்னில் இத்யாதி. "எதிர்சூழல்புக்கு" என்றத்தைக் கடாக்ஷித்து - தம்முடையப் பேற்றுக்கு இத்யாதி. "என்னுள் இருள்தானறவீற்றிருந்தான்" என்றத்தைப்பற்ற - தமக்குப் பிறந்தவிடாய் இத்யாதி. "இருந்தான்கண்டுகொண்டு" என்றத்தைப்பற்ற - இதுதான் இவர்க்கு இத்யாதி. "அருத்தித்தெனைத்தோர்பலநாளழைத்தேற்கு" என்றத்தைக்கடாக்ஷித்து - தானே அர்த்தியாய் இத்யாதி. "என்தன்கருத்தையுறவீற்றிருந்தான்" என்றத்தைப்பற்ற - ஒருஸம்ஸாரி சேதநன் இத்யாதி. ஐகவதங்கீகாரத்தாலே ஈடுபட்டமைக்கு த்ருஷ்டாந்தம்-ராவண இத்யாதி. "விபீஷணோமஹாப்ராஜ்ஞோஜ்யேஷ்டோஸௌமேஸோஜயந்து" இத்யுத்தரார்த்தம். யுத் - (கக-க)

(ராகவேணுபயேதத்தே ஸங்நதோராவணுநுஜஃ) என்று 'ராவணன் பின் பிறந்த நாம் ரகு குலத்திலுள்ளார்க்கு ஆளாகப் புகாநின்றோமோ?' என்றிருந்தவன், பெருமாள்பாடேநின்றும் அருளப்பாடிட்டு வந்தவாறே, "என்னையே இப்படி கைக்கொண்டருளுவது! அவன் பின் பிறந்த தண்மை எங்கேபோயிற்று ?" என்று, வேரற்றமரம்போலே, கூடவந்த நால்வரோடும் திருவடிகளிலேவிழுந்து தறைப்பட்டாற்போலவும்; ராமகுணங்கள் நடையாடாத அசோகவநிகையிலே திருவடி போய்ப்புக்கு, "ஸம்ஶ்ர வேமதுரம்வாக்யம்" (ஸம்ஶ்ர வேமதுரம்வாக்யம்) என்று, பிராட்டி உளளாம்படி ராமநாமஸங்கீர்த்தநத்தைப்பண்ண, "இந்நிலத்தில் இது பரிமாறுவதொன்றல்ல: "கிந்நுஸ்யாச்சித்தமோஹோயம்பவேத்வாதகதிஸ்த்வியம் | உந்மாதஜோவிகாரோவா ஸ்யாதியம்ம்ருகத்ருஷ்ணிகா" (கிந்நு ஸ்யாச்சித்தமோஹோயம்பவேத்வாதகதிஸ்த்வியம் | உந்மாதஜோவிகாரோவா ஸ்யாதியம் ம்ருகத்ருஷ்ணிகா) என்று இது சித்தமோஹத்தால் வந்ததோ? வாதகதியோ ? உந்மாதஜ விகாரமோ? ம்ருகத்ருஷ்ணிகையோ?" என்று பலபடிகளை ஶங்கித்து, "முன்னேநின்று வார்த்தைசொல்லாநின்றான்: இது கேட்டு நாம் விக்ருதராகிறமையு முண்டு: ஆனபின்பு, இது மெய்யாமித்தனை" என்று ஸ்ரீஜநகராஜன்திருமகள் தேளிந்து ஹ்ருஷ்டையானாற் போலவும் ;—இவரும், "இதுவும் ப்ரமஸ்வப்நாதிகளிலேயொன்று" என்று ஶங்கித்து, "அங்ஙனல்ல, மெய்" என்று தெளிந்து ப்ரீதராய், "நமக்கு அத்வேஷத்தைப் பிறப்பித்து, ஆபிமுக்யத்தையுண்டாக்கித் தன்னாலல்லது செல்லாமையைப்பிறப்பித்து, தன்மேன்மை பாராதே இப்படி தாழநின்று வந்து கலந்து பரிமாறுவதே ! இதேன்ன ஆஶ்ரிதபாரதந்த்ர்யம் ! இதென்ன நீர்மை !" என்று அவன்படிகளை அநுஸந்தித்து ஹ்ருஷ்டராகிறார்.

---

## முதற் பாட்டு.

---

இருத்தும்வியந்தென்னைத் தன்பொன்னடிக்கீழென்று
அருத்தித்தேனைத்தோர்பலநாளழைத்தேற்குப்
பொருத்தமுடை வாமனன்தான்புகுந்துஎன்தன்
கருத்தையுற வீற்றிருந்தான்கண்டுகொண்டே.

*ஆ.—(இருத்தும்வியந்து) - இப்படி "என்னெஞ்சிலே புகுந்தருளுகிறான், 'நான் தன்னைப்பிரிந்து பட்ட பாடெல்லாம் ஒன்றன்று' என்னும்படி தான் என்னைப்பிரிந்து வ்யஸநப்பட்டு ஒருவண்ணம் என்னைக்கண்டுகொண்டு புகுந்து பரிபூர்ணனாயிருந்தருளினான்: ஒருவனுடைய ப்ரணயித்வமிருக்கும்படியென் ? இவனையாகாதே நான், 'இதுவோ பொருத்தம் ?' என்றுசொல்லிற்று" என்கிறார்.*

---

" ஸநதஃ " என்றதிலே நோக்கு. ஶங்கித்துத் தெளிந்ததுக்கு த்ருஷ்டாந்தம் - ராமகுணங்கள் இத்யாதி. "மருள்தானீதோ மாயமயக்குமயக்கே" என்றத்தைப்பற்ற-இவரும் இத்யாதி. 'மாய மயக்கு மயக்கான்' என்றத்தைப்பற்ற - அங்ஙனல்ல மெய்யென்று தெளிந்து என்றது. "வைத்தேன்மதியால்" என்றத்தைப்பற்ற - நமக்குஅத்வேஷத்தை இத்யாதி. ஸஸம்பாஷ வியாஞ்ஞாம் விஜயிஷ்யாமிஷோகஷு: । ஸம்ஶ்ர வேமதுரம்வாக்யமேவமேவ ஸ்ராவ்ய ஜநாரணஃ" (ரு-க-க) "கிந்நுஸ்யாச்சித்தமோஹோயம்" உத்யாதி, ஸாஸூரகாண்டே. (ரு௪-உரு௫)

ஒ.—முதற்பாட்டில், இத்திருவாய்மொழியில் தம்மோடுகலந்த கலவியைச் சுருக்காகவருளிச்செய்கிறார்.

[இருத்துமென்று தொடங்கி] - "ஸம்ஸாரத்திலே நம்மை ஆசைப்படுவாருண்டாவதே!" என்று விஸ்மயப்பட்டு என்னைத் தன்னுடைய ஶ்லாக்யமான திருவடிகளின்கீழே இருத்தும் என்று தன்னை அர்த்தித்து அநேககாலம் கூப்பிட்ட எனக்காக. [அழைத்தேற்கென்று] - அவனுடைய ப்ரணயித்வஸ்வபாவத்தை அநுஸந்தியாதே இவன்தான் தாழ்த்தானாகவும், † ப்ரணயஸ்வபாவனான வாமநன்தன் அர்த்திதைபாலே புகுந்து 'தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" என்றுள்ள என்னுடைய மநோரதத்தைத் தான் கைக்கொண்டு க்ருதார்த்தனாயிருந்தான்.

ப.—முதற்பாட்டில், நான் அர்த்தியாய்க் கூப்பிட்டழைத்த விடாயெல்லாம் தீரும்படி தான் அர்த்தியாய், என்னெஞ்சிலே பெறாப்பேறுபெற்றானாகப் புகுந்திருந் திருந்தானென்கிறார்.

என்னை — (தன்னையொழியச்செல்லாமையையுடையேனான) என்னை, (என் ப்ராவண்யாதிசயத்தைக்கண்டு), வியந்து - விஸ்மிதனாய், 'தன் - தன்னுடைய, பொன் - நிரதிஶயபோக்யமான, அடிக்கீழ்-திருவடிகளின்கீழ், இருத்தும் -இருத்தும்,' என்று - என்று, அருத்தித்து - அர்த்தித்து, எனைத்து - அநேககாலம், ஓர் பலநாள் - ஒருபடிப்பட நாள்தோறும், அழைத்தேற்கு - அழைத்துக்கூப்பிட்ட எனக்கு,—தான் - தான், பொருத்தம் - ப்ராவண்யம், உடை - உடையனான, வாமனன் - வாமநனாய்க்கொண்டு, புகுந்து - (மஹாபலியஜ்ஞவாடத்துக்குப்போனாற்போலே தானேவந்து) புகுந்து, என் தன் - என்னுடைய, கருத்தை - (அர்த்தித்வவிஶிஷ்டமான) நெஞ்சிலே, உற - ஸுஸ்திரமாம்படிக்கீடாக, வீறு - (என்னிலும் தனக்குப்பிறந்த அதிஶயமோ) வ்யாவ்ருத்தி தோற்றும்படி, (பெறாப்பேறுபெற்றாற்போலே), கண்டுகொண்டு - பூர்ணானுபவம் பண்ணிக்கொண்டு, இருந்தான் - இருந்தான்.

இ—முதற்பாட்டில், இத்திருவாய்மொழியில் தம்மோடுகலந்த கலவியை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

[என்னைத்தன் பொன்னடிக்கீழ் - வியந்து இருத்தும் - என்று] - தன்வாசி அறியாதே ஶப்தாதிவிஷயங்களிலே அந்யபரனான என்னை ஶ்லாக்யமான தன்திருவடிகளின்கீழே. * வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள்பிடிக்கும் மெல்லடியிறே. [வியந்து] - "ஸம்ஸாரத்திலே நம்மையே அபேக்ஷிப்பானொருவன் உண்டாவதே!" என்று விஸ்மயப்பட்டு: "ஸஹோதாஸுஷ்டூஸுः" என்று கைவாங்கியிருக்கும் அவனிறே ஒருநாளும்பிரியாதபடி இருத்தி அடிமைகொள்ளும். தன்பொன்னடிக்கீழ் என்று - ப்ராப்யஸ்வரூபம் சொல்லிற்று; இருத்துமென்று - ப்ராபகஸ்வரூபமும் அவனே என்கிறது. [வியந்து - இருத்தும்] - தன்பேறாக இருத்தும். [அருத்தித்து] - "தன் பேறாக இருத்தும்" என்கையாலே - அர்த்தித்வமும் மிகை, சைதந்யப்ரயுக்தமாய் வந்த தித்தனை. [எனைத்தோர் பலநாள்] - நாளும் தொக்க மேகப்பல்குழாங்கள் காணுந் தோறும் தொலைவன்நான்" என்றதைச் சொல்லுகிறார். [அழைத்தேற்கு]-"என்னை ஆளக்கூப்பிட்டழைத்தக்கால்" என்றதைச் சொ[illegible]ர.
அறியாதே தாழ்த்தானாகவும், நாம் அதிஶிஷ்டனாகவும் கூப்பிட்டு என்னகார்யம்

† இங்கே க்ரந்தம் லோபித்திருக்கிறதுபோல் தோன்றுகின்றது அந்வயிக்கவில்லை.

செய்தோம் என்கிறார்காண்'' என்னும் பிள்ளான். அழைக்கவுங்கூட மாட்டாத இவனையோ நாம் அழைத்தது? அத்தலையில் ப்ரணயித்வத்தை அநுஸந்தித்தால், அர்த்தித்வமே தொடங்கி மிகையாயிறே இருப்பது: *எழுதுமென்னும் இதுமிகையிறே. [பொருத்தமுடை]-இப்படி பொருத்தமுடையவனையோ நான் "இதுவோ பொருத்தம்'' என்றது? [வாமனன்] - அர்த்தித்வமில்லாத மஹாபலியோடே பொருந்தினவனையோ, அர்த்தித்வமுடையேனாயிருக்க என்னோடு பொருந்திற்றிலன் என்கிறது? [தான்புகுந்து] — தன்னுடைமை பெறுகைக்கு அர்த்தியானவன், என்னைத் தான் பெறுகைக்கு அர்த்தியாய் வந்துபுகுந்தான். [என்தன் கருத்தையுற] - "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே'' என்ற என் கருத்தை - மநோரதத்தை, தான் கைக்கொண்டு வந்துபுகுந்தான். [வீற்றிருந்தான்] - என்னைப்பெறுகையாலே 'ஸம்ஸாரங்கொண்டவரை மீட்டோம் என்றிருந்தோம்: மாயக்கூத்தன் கொண்டவரும் பிழைக்கப் பெற்றோமே' என்று குறைவற்றிருந்தான் என்னுதல்; என்னோட்டைக் கலவி தன்பேறாக இருக்கிற வேறுபாடு தோற்றும்படி இருந்தான் என்னுதல். [கண்டுகொண்டே] - ப்ரபலவ்யாதிக்குப் பிழைத்த புத்ரனைப் பார்த்துக்கொண்டிருக்கும் பிதாவைப்போலே, "விஜ்வர: ப்ரமுமோத ஹ'' என்கிறபடியே † மாயக்கூத்தனில் ஆற்றாமைக்குப் பிழைத்தவனென்று, வைத்தகண் வாங்காதே யிரா நின்றான்.

ஈடு.—முதற்பாட்டு. இத்திருவாய்மொழியில் தமக்குண்டான லாபத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

[என்னைத்தன்பொன்னடிக்கீழ் - வியந்து - இருத்தும் - என்று] - தன் வாசியறியாதே ஶப்தாதிவிஷயங்களிலே அந்யபரனான என்னை, ஶ்லாக்யமான தன் திருவடிகளின்கீழே, "† 'ஸமஹாத்மா ஸுதுர்லப:' (ஸமஹாத்மாஸுதுர்லப:) என்று கைவாங்கியிருக்கும் ஸம்ஸாரத்திலே நம்மை அபேக்ஷிப்பானொருவனுண்டாவதே!'' என்று விஸ்மயப்பட்டு இனி ஒருநாளும் பிரியாதபடி இருத்தி அடிமைகொள்ளும். இத்தால், ப்ராப்ய ப்ராபகங்களைச் சொல்லுகிறது. தன்பொன்னடிக் கீழென்று - ப்ராப்ய ஸ்வரூபம் சொல்லிற்று; இருத்துமென்று - ப்ராபகனுமவனே யென்றது. [வியந்து-இருத்தும்] - தன்பேறாக இருத்தும். [அருத்தித்து] - சேதநனைவாசிக்கு இத்தனையும்வேணுமிறே. [எனைத்தோர்பலநாள்] - "நாளுநாளும்'' என்றத்தைச் சொல்லுகிறார். [அழைத்தேற்கு]-"என்னையாளக்கூப்பிட்டழைத்தக்கால்'' என்றத்தைச் சொல்லுகிறார். "இவன் ப்ரணயித்வத்தையறியாதே, தாழ்த்தானாகவும், நாம் அபிநிவிஷ்டராகவும் நினைத்துக்கூப்பிட்டு என்னகார்யஞ்செய்தோமென்கிறார்காண்!'' என்னும் பிள்ளான் ‡ (அழைக்கவுங்கூடமாட்டாத இவனையோ நாமழைத்தது )அத்தலையில் ப்ரணயித்வத்தை அநுஸந்தித்தால்,

முதற்பாட்டு.—இருத்தும் இத்யாதி.

விஸ்மயஹேதுகபூர்வார்த்தம் - ஸமஹாத்மா )ப்படி சொன்னத்தால் ஹிதத்தை அருளிச்செய்கிறார் - இத்தால் இத்யாதி. சொல்லும் ப்ரகாரமேதென்ன - தன்பொன்னடிக்கீழ் இத்யாதிவாக்யத்வயம். "வியந்து'' என்றதுக்கு பாவம் - தன்பேறாக இத்யாதி. அருத்தித்து - அர்த்தித்து. தன்பேறாகவிருத்தினால் அர்த்திக்கிறதென்? என்ன - சேதநனை இத்யாதி. * மாயக்கூத்தனில் "நாளுநாளும்'' என்றத்தை அநுபாஷிக்கிறதென்கிறார் - நாளுநாளும் இத்யாதி. கீழுக்கெல்லாம் பாவம் - இவன் ப்ரணயித்வத்தை இத்யாதி. அநுதபிக்கிறதென்? அர்த்திக்கவேண்டாவோ? என்ன - அத்தலை இத்யாதி. "அர்த்தித்வம் மிகை'' என்னுமிதுக்கு ப்ர

† ஸ்ரீ - எ - ௧௯.  ‡ குண்டலிதம் ப்ரக்ஷிப்தம்.

அர்த்தித்வமேதொடங்கி மிகையாயிறேயிருப்பது ; *எழுதுமென்னுமிது மிகையாயிறே யிருப்பது. [பொருத்தமுடை] - இப்படிப் பொருத்தமுடையவனையே "இதுவோபொருத் தம்?" என்றது. [வாமனன்] - நான் அர்த்தித்தவிடம் என்செய்தேனுனேன். தன்னு டைமைபெறுகைக்குத் தான்இரப்பாளனானவனே. [தான்புகுந்து]-என்னைத் தான் பெறு கைக்கு அர்த்தியாய்வந்துபுகுந்து. [என்தன்கருத்தையுற] - "தனக்கேயாக எனைக்கொள் ளுமீதே" என்ற என்னினைவைத் தான் கைக்கொண்டான். [வீற்றிருந்தான்] - இவ ரைப்பெற்ற அத்தாலுண்டான வேறுபாடு வடிவிலேதோற்ற க்ருதக்ருத்யனாயிராநின்றான். [கண்டுகொண்டே] - மஹாவ்யாதியைத் தப்பின புத்ரனை மாதாபிதாக்கள் பார்த்துக் கொண்டிருக்குமாபோலே * மாயக்கூத்தனில் விடாய்க்குத்தப்பினவ ரென்று பார்த்துக் கொண்டிராநின்றான்.

## ரண்டாம் பாட்டு.

இருந்தான்கண்டுகொண்டு எனதேழைநெஞ்சாளும்
திருந்தாதவோரைவரைத் தேய்ந்தறமன்னிப்
பெருந்தாட்களிற்றுக்கு அருள்செய்தபெருமான்
தருந்தானருள்தான் இனியானறியேனே.

நந்தான்.] - எனனுள்ளே புகுநதருளுகைறன, எனனுடைய ஸர்வ கரணங்களும் இக்குணமல்லது மற்றொருகுணமறியாதபடிதொருபடி இருந்தருளினான் ; ஆதலால், "இதின்மேலில்லை" என்னும்படி பண்டெனக்குச் செய்தருளின அருளை ஓரரு ளாக மதியே னென்கிறார்.

ஓ.—இரண்டாம்பாட்டில், என்னுடைய இந்த்ரியவஶ்யதையைத் தன்னழ கைக்காட்டித் தவிர்த்து என்னை விஷயீகரித்தருளின மஹோபகாரத்தோடு ஒவ்வாது ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுடைய ஆபந்நிவாரணமும் என்கிறார்

[இருந்தானென்று தொடங்கி.] - நிதிகண்டாரைப்போலே என்னைக்கண்டு க்ருதார்த்தனாய் என்னுடைய சபலமானநெஞ்சை ஆளாநிற்பதுஞ்செய்து எத்தனையேனும் பலவான்கள் திருத்தப்புக்காலும் திருந்ாதே சேதநரைப்போலேநின்று நலிகிற ஐந்து இந்த்ரியங்களும் போய் க்ஷயிக்கும்படி என்மநஸ்ஸிலே விடாதேயிருந்தான். [பெருந்

மாணம் - எழுதுமென்னும் இத்யாதி. "பொருத்தமுடை" என்றதுக்கு ஹார்த்தஹாவம் - இப்படி இத்யாதி. "வாமனன்" என்றதுக்கு ஹார்த்தஹாவம் - நான்அர்த்தித்த இத்யாதி வாக்யத்வயம். தன்னுடைமை இத்யாதி வாக்யாநந்தரம் நான்அர்த்தித்த இத்யாதிவாக்யம் அநுஸந்தேயம். "என் தன்கருத்தையுற-" என்னுடைய ப்ரார்த்தநாரூபமான நினைவைத் தான்உற்றென்றபடி. என்னினை வைத் தான் கைக்கொண்டான் என்றது - நான் தனக்கேயுறுப்பாக விநியோகப்பட என்னுமா போலே, தான் எனக்கேயுறுப்பாக விநியோகப்படவேணுமென்று அபிஸந்திபண்ணினானென்ற படி. "கண்டுகொண்டு" என்றதுக்கு ஹாவம் - மஹாவ்யாதி இத்யாதி. 'என்னைத் தன்பொன் னடிக்கீழ்·வியந்து - இருத்தும் - என்று அருத்தித்தெனைத்தோர்' என்றுதொடங்கி, 'என்தன்கருத் தையுற - கண்டுகொண்டு - வீற்றிருந்தான்' இத்யந்வயம். (க)

தாட்களிறு என்று மேலுக்கு] - என்னுடைய இந்த்ரியங்களை வென்று தந்தபின்பு ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆபந்நிவாரணோபகாரத்தையும் ஓர் உபகாரமாக நினையேன். [தருமருள்] - தந்த அருள். 'பெருந்தாட்களிற்றுக் கருள்செய்த பெருமான் - தான் - தரும்-அருள்தான் இனி யான் அறியேன்' என்றந்வயம்.

ப.—அநந்தரம், விரோதியான இந்த்ரியங்கள் பலக்ஷயம்பிறக்கும்படி என்னெஞ்சில் எழுந்தருளியிருந்த உபகாரத்துக்கு அளவறிகிறிலேனென்கிறார்.

எனது - என்னுடைய, ஏழை-சபலமான, நெஞ்சு-நெஞ்சை, (தாங்கள் இட்ட வழக்காம்படி), ஆளும்-ஆண்டுகொண்டுபோருவதாய், திருந்தாத-அநியாம்யதயா, ஓர் - அத்விதீயமான, ஐவரை - ஐந்திந்த்ரியங்களும், தேய்ந்து - க்ஷயித்து, அற - முடியும் படியாக, மன்னி - ஸுஸ்திரமாம்படி (நெஞ்சிலே) புகுந்து, கண்டுகொண்டு - (நிதி யெடுத்துக்) கண்டுகொண்டிருப்பாரைப்போலே, இருந்தான் - போராமலிருந்தவன், பெரு - பெரிய, தாள் - தாளையுடைத்தான, களிற்றுக்கு — களிற்றுக்கு, அருள்செய்த - (ஒருமுதலையால்வந்த க்லேசத்தைத் தீர்த்து) அருள்செய்த, பெருமான்-ஸர்வாதிகன், தான் - தான் , தரும் - (அவனுக்கு) உபகரிக்கும், அருள்தான் - உபகாரம், (இனி என்னளவில் அருளைக்கண்டபின்பு), யான் அறியேன் - (ஓரருளாக) அறிகிறிலேன். ஐந்துஇந்த்ரியங்களாகிற முதலையிலே அநாதிகாலமகப்பட்ட எனக்கு நீ பண்ணின இந்த வுபகாரத்துக்கு அது ஸத்ருசமன்று என்று கருத்து.

இ.—இரண்டாம்பாட்டில், என்னுடைய இந்த்ரியவஶ்யதையைத் தன்னழகாலேதவிர்த்து, என்னை விஷயீகரித்தருளின உபகாரத்தோடொவ்வாது ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆபந்நிவாரணமும் என்கிறார்

[இருந்தான் கண்டுகொண்டு.] - தரித்ரன் நிதி கண்டால் கண்டுகொண்டிருக்குமாபோலே, பார்த்தபடியே இராநின்றான். "கதேந்த்ரேந்த்ரேஹிவீக்ஷந்தஜநதாவிசேஷவஜ்ரதஃ" என்கைக்கு, எதிர்த்தலையான தம்மைக் காண்கிறிலர். இத்தை நினைத்திறே "அர்யித்வம் மிகை" என்றது, முதற்பாட்டில். [எனதேழை நெஞ்சாளும்] - கண்டதெல்லாவற்றிலும் சபலமாயிருக்கிற என் நெஞ்சை அதுவேபற்றாசாக இந்த்ரியங்கள் பொதி எடுக்கத்தொடங்கிற்று; ஈஶ்வரஶேஷமான நெஞ்சை இந்த்ரியங்கள் பணிகொள்ளத்தொடங்கிற்று. [திருந்தாத] - அநாதிகாலம் ஸர்வஶக்தி திருத்தப்பார்த்தவிடத்திலும் திருந்தாத வன்மையையுடைய இந்த்ரியங்கள். [ஓரைவரை] - இப்படிபண்ணுகைக்கு இன்னம் ஓரைவரில்லை: இவற்றால் பட்ட நலிவின்மிகுதியாலே சேதநஸமாயியாலே சொல்லுகிறார். [தேய்ந்தறமன்னி இருந்தான்] - ப்ராக்ருதவிஷயங்களில் பற்றறும்படி புகுந்திருந்தான். ப்ராக்ருதவிஷயங்களில் பற்றுநேராக க்ஷயிக்கும்படி தன் வடிவழகைக் காட்டிக்கொண்டு புகுந்திருந்தான். விஷயாந்தரங்களிலும் வடிவழகிலே யிறே இவன் துவக்குண்டிருப்பது. ராஜாக்கள் ஶத்ருக்களை ஆஸநபலத்தாலே அழிக்குமாபோலே, இந்த்ரியங்களுக்கு விஷயங்களில் பற்றுஅறும்படி புகுந்திருந்தான். [பெருந்தாள் இத்யாதி] - பெரியதாளையுடைய களிற்றுக்கு அருளின ஸர்வேஶ்வரன். வடிவில்கனமும் நோவிற்பாடாற்ற வொண்ணமைக்கு உடல் என்கை. [பெருமான் - தான் - தரும் - அருள்தான்] - தருமருள் - தந்த அருள்; "தரும்" என்கிற இது காலத்ரயத்திலும் சொல்லலாயிருக்கையாலே. ஆஶ்ரிதர்க்குச்செய்தது தமக்குச் செய்த

*தாகவிறே இவர் நினைத்திருப்பது. [இனியானறியேனே] - எனக்கு உதவினபின்பு நான் அத்தை ஒன்ருக நினைத்திரேன். ஆனைநோவுபட்டது ஆயிரம் வத்ஸரம், அகப்பட்ட பொய்கை பரிச்சின்நம், முதலையொன்று; எனக்குக்காலம் அநாதி, அகப்பட்டது ஸம்ஸாரார்ணவத்திலே, முதலைஐந்து; இத்தை மீட்டுக்கொண்ட மஹாகுணத்துக்கு அது ஒருகுணமாயற்றதோ? ஸ்ரீகஜேந்த்ராழ்வான்பக்கல் பண்ணின அருளையிட்டுப் புறம்புள்ளார்பக்கல் பண்ணின அருளை வ்யாவர்த்தித்தார்; தமக்குப்பண்ணின அருளையிட்டு அதுதன்னை வ்யாவர்த்திக்கிருர்.*

**ஈடு.**—இரண்டாம் பாட்டு. என்னுடைய இந்த்ர்யவஶ்யதையைத் தன்னழகாலே தவிர்த்து, என்னை விஷயீகரித்த உபகாரத்தோடோவ்வாது ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆபந்நிவாரணமுமேன்கிருர்.

[இருந்தான் கண்டுகோண்டு] - ஊரித்ரன், ஶாநலாஸமுண்டானல் பார்த்துக்கோண்டிருக்குமாபோலே, பார்த்தபடியே இராநின்ருன். "**அந்யோந்யமபி வீக்ஷந்தௌ நத்ருப்திமுபஜக்மது:**" (அங்யோங்யமபி வீக்ஷங்தௌநத்ருப்திமுபஜக்மது:) என்கிறபடியே சோல்ல எதிர்த்தலையான தம்மைக் காண்கிறிலர். [ஊனதேழைநேஞ்சாளும்] - கண்டதேல்லாவற்றிலும் சபலமாயிருக்கிற ஏன்னெஞ்சை, அதுவே பற்ருசாக இந்த்ரியங்கள் போதியேடுக்கத்தோடங்கிற்று. ஒரு ப்ரபலனைப்பற்ருதே நடுவேநின்றவாறே பணிகோள்ளத்தோடங்கிற்று. [திருந்தாத] - ஸர்வஶக்தியான ஸர்வேஶ்வரனுலும் அநாதிகாலம் திருத்தப்போகாதபடியிறே இவற்றின் வன்மையிருப்பது. [ஓரைவரை] - இனியிப்படி ஓரைவரைத் தேடப்போகாது. இவற்ருல்பட்ட நலிவின் மிகுதியாலே சோல்லுகிருர். [தேய்ந்தறமன்னி - இருந்தான்] - கண்ணுக்கிலக்கான ப்ராக்ருதவிஷயங்களில் பற்று நேராகக்ஷயிக்கும்படி, தன்வடிவழகைக் காட்டிக்கோண்டு புகுந்திருந்தான். விஷயாந்தரங்களிலும் வடிவழகிலேயிறே இவன் துவக்குண்டிருப்பது. ராஜாக்கள், ஶத்ருக்களை ஆஸநபலத்தாலே வேல்லுமாபோலே, "இருப்பாலே இந்த்ரியங்களை வேல்லவேணும்" என்று வந்து புகுந்திருந்தான். * போதரேயேன்றுசோல்லிப்

---

*இரண்டாம்பாட்டு.—இருந்தான் இதயாதி. "திருந்தாதவோரைவரை" என்றுதொடங்கி, "அருள்தானினியானறியேன்" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - என்னுடைய இத்யாதி.*

*"கண்டுகொண்டு - இருந்தான்" என்றதுக்கு த்ருஷ்டாந்த பூர்வகமாக ஸாவம் - ஊரித்ரன் இத்யாதி. "அவன்கண்டுகொண்டு - இருந்தான்" என்றதைச் சொல்லுகிறதென், தாம் பார்த்துக்கொண்டிருந்தத்தைச் சொல்லாதே? என்ன - அந்யோந்ய இத்யாதி. "ததஸ்ஸர்வே ஸீதாவாஸௌ கபிராஜவசௌ | அந்யோந்யமபி வீக்ஷந்தௌ நத்ருப்திமுபஜக்மது:" ஐதிகிஷ்கிந்தாகாண்டே (ரு-கஎ௬). "அவன்கண்டுகொண்டு - இருந்தான்" என்கையாலே - எதிர்த்தலையான தம்மைக்காண்கிறில ரென்றபடி. விவரணம் - ஒருப்ரபலனை இத்யாதி. நடுவேநின்றவாறேயென்றது - விஷயசபலனுய் நடுவே நின்றவாறேயென்றபடி. இந்த்ரியங்களைத் திருத்தப்போகாததின் உரப்பை அருளிச்செய்கிருர் - ஸர்வஶக்தி இத்யாதி. ஐந்து என்னுதே ஐவர் என்றதுக்கு ஸாவம் - இவற்றல்பட்ட இத்யாதி. தேய்ந்தற - நிஶ்ஶேஷமாம்படியாக. குணங்களிருக்க வடிவழகைக் காட்டுவானென்? என்ன - விஷயாந்தரங்களிலும் இத்யாதி. "மன்னி - இருந்தான்" என்றதுக்குஸாவம் - ராஜாக்கள் இத்யாதி. அழகாலே இந்த்ரியவஶ்யதையைப் போக்கிக்கொண்டு - புகுந்திருந்தானென்றதுக்கு ப்ரமாணம் - போதரே இத்யாதி. இங்கே போரீர் என்றுசொல்லி, ஹ்ருதயத்திலே புகுந்து தன்பக்கல் ஆஸாம் பெருகும்படி வைத்த அழகை*

புந்தியிற்புகுந்து தன்பாலாதரம்பெருகவைத்த அழகனிறே [பெருந்தாள் இத்யாதி] - பெரியதாள்களையுடைய களிற்றுக்கு அருளின ஸர்வேஶ்வரன். வடிவில் கனமும் நோவில் பாடாற்றவொண்ணுமைக்கு உடலென்கை. [பெருமான் - தான்-தரும் - அருள்தான்]- தருமருள் - தந்தவருள். "தரும்" என்கிறவிது - காலத்ரயத்திலும் சொல்லலாயிருக்கையாலே சொல்லுகிறுர். ஆஶ்ரிதர்க்குச் செய்ததும் தமக்குச்செய்ததாகவிறே இவர்நினைத்திருப்பது. [இனியானறியேன்] - எனக்கு உதவினபின்பு, நான் அத்தை ஒன்றுக நினைத்திரேன். ஆனை நோவுபட்டது ஆயிரம்வத்ஸரம், அகப்பட்ட பொய்கை பரிச்சிந்நம், முதலையொன்று; எனக்குக் காலம் அநாதி, அகப்பட்டது ஸம்ஸாரார்ணவத்திலே, முதலை அஞ்சு: இத்தை மீட்டுக்கொண்ட மஹாகுணத்துக்கு அதொருகுணமாயற்றதோ? ஸ்ரீகஜேந்த்ராழ்வான்பக்கல் பண்ணின அருளையிட்டுப் புறம்புள்ளாரை வ்யாவர்த்தித்தார்; தமக்குப்பண்ணின அருளையிட்டு அதுதன்னை வ்யாவர்த்திக்கிறுர். (உ)

---

## மூன்ரும் பாட்டு.

---

அருள்தானினியானறியேன் அவனென்னுள்
இருள்தானற வீற்றிருந்தானிதுவல்லால்
பொருள்தானெனின் மூவுலகும்பொருளல்ல
மருள்தானீதோ? மாயமயக்குமயக்கே.

*ஆ—[அருள்தான்.]- என்னுள்ளேயிருந்தருளின இவ்வருளல்லது மற்ருேரருளை நான் ஓரருளாக மதியேன்; அவனும் என்னுள்ளேயிருந்தருளின இவ்விருப்பல்லதுமற்று லீலோபகரணமான அண்டங்களையும் திருநாட்டையும் ஒருபொருளாக மதியானென்று, இப்படி எம்பெருமானுக்குத் தம்பக்கலுள்ள அபிநிவேஶத்தைப்பேசி, தம்முடைய நிகர்ஷத்தை அநுஸந்தித்து, ஏவம்விய ஸகவதஹிநிவேஶ விஷயத்வ ரூபஸம்பத்தானது எனக்கு ஸம்பவியாது; என்னுடைய ப்ரமமாதல், அவன் என்னை ப்ரமிப்பித்தாணுதலல்லது இது கூடாதென்கிறுர்.*

*ஓ.—மூன்ரும்பாட்டில், ஸர்வேஶ்வரன் தம்பக்கல் இப்படி நிரதிஶயவ்யாமோஹத்தைப் பண்ணுகையாகிற இது கூடாதது ஒன்று; ஆகையாலே, இவ்வநுபவம் விப்ரமாதிகளிலே ஒன்ருே? என்று ஶங்கிக்கிறுர்*

*[அவனென்று தொடங்கி.] - ஸர்வேஶ்வரன் எனக்குண்டான அஜ்ஞாநாதிகள் எல்லாம் போம்படி என்ஹ்ருதயத்திலே வீற்றிருந்தான்; இவ்விருப்பொழிய தன்னு*

---

*யுடையவனூர் இத்யர்த்தஃ. திருமாலை "சூதனுய்" இத்யாதி. "களிறு" என்ருதே, "பெருந்தாள்" என்று விஶேஷித்ததுக்குபாவம்-வடிவில் இத்யாதி. "தரும்" என்ருல்-தந்தவென்று ஸதார்த்த வாசகமாமோவென்ன - தருமென்கிற இத்யாதி. கொடுத்தவென்ருதே, 'தரும்" என்பானென்? என்ன - ஆஶ்ரிதர்க்கு இத்யாதி. அருள்தான் - அருள்தன்னையென்றபடி. "இனி" என்றதுக்கு பாவம் - எனக்குஉதவின இத்யாதி. எனக்கு உதவினவென்றது - இந்த்ரியவஶ்யதையைப் போக்கினத்தை. நினையாமைக்கு வாசியேதென்ன - ஆனை இத்யாதி. 'எனதேழை' என்று தொடங்கி, தேய்ந்தறமன்னி - கண்டுகொண்டு - இருந்தான்: இனியான் - பொருந்தாட்களிற்றுக்கு அருள்செய்தபெருமான் - தான் - தரும் - அருள்தான் - அறியேன்' இத்யந்வயஃ.* (உ)

டைய ஸர்வைஸ்வர்யமும் ஒருபுருஷார்த்தமாக நினைத்திருக்குமோ என்றுபார்த்தால் அது வும் அவனுக்கு ஒரு சரக்கல்ல. [மருளென்று தொடங்கி] - என்னுடைய ப்ரமமோ? ஆஸ்சர்யமான ப்ரமஸாதநங்களாலே ப்ரமிப்பித்தானே?

ப.—அநந்தரம், என்னுடைய அவித்யாதிரூபமான இருள்போம்படி என் னெஞ்சிலே புகுந்திருந்தான்; இது அவனுக்கு அதிசயித புருஷார்த்தமாய் இராநின்றது; இத்தை இப்போது உபகாரமென்று நினைத்திருக்கிறிலேன்; இது ப்ரமமோ? மாமா யமோ? என்கிறார்.

அவன்-என்பக்கலிலே அத்யந்தாபிநிவிஷ்டனானவன், என்னுள் - என்னெஞ் சுக்குள்ளான, இருள்தான் - (அஜ்ஞாநாதி) தமஸ்ஸெல்லாம், அற - போம்படி, வீற்று - பெரிய மேன்மையோடே, இருந்தான்; இருந்தான், (அவனுக்கு), இது - இவ்விருப்பு, அல்லால் - ஒழிய, பொருள்தான் - வேறு புருஷார்த்தம், எனில் - உண்டோவென்னில், மூவுலகும் - த்ரிவித சிதசித்ஶேஷத்வமும், பொருளல்ல - ஒருபொருளாயிருக்கிறதில்லை; (இது அஸம்பாவிதமாகையாலே), இனி - இனி, (இத்தை), அருள்தான்-ஓர்உபகாரமாக, யான் - , அறியேன் - நினைத்திருக்கிறிலேன்: ஈதுதான் - இதுதான், மருளோ - என்ன ப்ரமமோ, (அவன்தான்), மாயம் - ஆஸ்சர்யமான, மயக்கு - ப்ராமகசேஷ்டிதங்க ளாலே, மயக்கே - ப்ரமிப்பிக்கிறபடியோ.

இ.—மூன்றும்பாட்டில், ஸர்வேஸ்வரன் தன் பக்கல் இப்படி வ்யாமோஹம் பண்ணுகை கூடாததொன்றாகையாலே, இவ்வநுபவம் ப்ரமாதிகளிலே பிறந்ததோ என்று ஶங்கிக்கிறார்.

[அருள்தானினியானறியேன்]- என்னுடைய இந்த்ரியவஶ்யதையைத்தவிர்த்த இது தன்னையும் இப்போது நான் ஒன்றாக நினைத்திருக்கிறிலேன்: எத்தைப் பற்றி? என் னில்,—அவன் என்னுடைய ஹ்ருதயத்திலே அஜ்ஞாநாதிகள் எல்லாம் போம்படி தன் குறைவு தீர்ந்தானாய் அத்தாலே வந்த வேறுபாடு தோற்ற இருந்தான். [இதுவல்லால் பொருள்தானெனில் மூவுலகும் பொருளல்ல] - "நாட்டார் ஐஸ்வர்யங்களில் தலையாக நினைத்திருப்பது - த்ரைலோக்ய ஐஸ்வர்யத்தை ஆயிற்று: இவன் என்ஹ்ருதயத்திலே புகுந்தபின்பு, அத்தையும் ஒருபொருளாக நினைத்திலன்" என்று ஆளவந்தார் நிர்வாஹ மாகத் திருமாலையாண்டான் பணிக்கும். "என்ஹ்ருதயத்திலே வீற்றிருந்த விதொழிய வீற்றிருந்தேழுலகும் தனிக்கோல் செல்ல இருக்கிற ஐஸ்வர்யத்தையும் ஒரு புருஷார்த்த மாக நினைத்திருக்குமோ? என்று பார்த்தால் அதுவும் அவனுக்கு ஒருசரக்கல்ல" என்று எம்பெருமானார் நிர்வாஹம்; இதுவே ப்ரகரணத்துக்குச் சேருவது. [மருள்தானீதோ] - ஸர்வேஸ்வரன் ஒரு ஸம்ஸாரியைப்பெற்று ஹ்ருஷ்டனானான் என்கிற இது கூடுவதொன் றன்று. நான் ப்ரமித்தேனோ? [மாயமயக்கு மயக்கே] - தன் ஆஸ்சர்யமான ப்ரம ஸாதநங்களாலே ப்ரமிப்பித்தானோ? அநாதிகாலம் ப்ரக்ருதியைக்காட்டி அறிவுகெடுத் தான்; இப்போது தன் வ்யாமோஹத்தைக் காட்டி அறிவு கெடாநின்றான்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. அவாப்த ஸமஸ்த காமனான ஸர்வேஸ்வரன், தன் பக்கல் இப்படி வ்யாமோஹம் பண்ணுகை கூடாததொன்று என்று ஶங்கித்து, இவ்வநு பவம் ப்ரமாதிகளிலே பிறந்ததோவென்கிறார்.

---

மூன்றாம் பாட்டு.—அருள்தான் இத்யாதி. "மருள்தானீதோ" என்றத்தைக் கடாக். அவதாரிகை - அவாப்த இத்யாதி.

[அருள்தானினியானறியேன்] - என்னுடைய இந்த்ர்யவஶ்யதையைத் தவிர்த்த இதுதன்னையும் இப்போது ஒன்றாக நினைத்திரேன். எத்தைப்பற்ற? என்னில்,—[அவன் இத்யாதி]-அவன், என்னுடைய ஹ்ருதயத்தில் அஜ்ஞாநாந்தகாரமெல்லாம் போம்படி பெறும்பேறுபெற்றானாய், அவ்வேறுபாடுதோற்ற இராநின்றான்; இனி எனக்கு வேறொன்று தோற்றுமோ? [இதுவல்லால் இத்யாதி] - இதுக்குத் திருமாலையாண்டான் பணிக்கும்படி - "நாட்டார், ஐஶ்வர்யங்களில் தலையாகச் சொல்லுவது - த்ரைலோக்யைஶ்வர்யத்தையிறே; அதுவும் எனக்கு ஒரு சரக்கல்லவென்கிறார்" என்று. எம்பெருமானார் அருளிச்செய்யும்படி - "என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்து எழுந்தருளியிருக்கிற இருப்பொழிய, * வீற்றிருந்தேழுலகுந்தனிக்கோல்செல்ல இருக்குமிருப்பையும் தனக்கு ஐஶ்வர்யமாக நினைத்திருக்குமோவென்றுபார்த்தால், அதுவும் ஒரு சரக்காக நினைத்திருக்கிறிலன்" என்று; இதுவே ப்ரகரணத்துக்குச் சேருவது. [மருள்தானீதோ] - ஒருஸம்ஸாரி சேதநனைப்பெற்று ஸர்வேஶ்வரன் இப்படி இருந்தானேன்னுமது கூடுவதொன்றன்று; இது என்னறிவுகேட்டாலே சொல்லுகிறேனோ ? [மாயமயக்குமயக்கே] - அன்றிக்கே, அவன் தன்னுடைய ஆஶ்சர்யமான ப்ரமஸாதநங்களையிட்டு ப்ரமிப்பித்தானோ? நெடுநாள் ப்ரக்ருதியையிட்டு அறிவுகெடுத்தான், இப்போது தன் வ்யாமோஹத்தாலே என்னை ப்ரமிப்பித்தான். (௩)

## நான்காம் பாட்டு.

மாயமயக்குமயக்கான் என்னைவஞ்சித்து
ஆயனமரர்க்கரியேறு எனதம்மான்
தூயசுடர்ச்சோதித் தனதென்னுள்வைத்தான்
தேசந்திகழும் தன்திருவருள்செய்தே.

*வேறொன்றுதோற்றுமோ என்றது - இந்த்ரியவஶ்யதையைப் போக்கினதுவும் ஓரதிசயமாய்த் தோற்றுமோ என்றபடி. "இதுவல்லால் - மூவுலகும் - பொருள்தானெனில் - பொருளல்ல" என்று அந்வயம். இன்னார்க்குப்பொருளல்ல என்னாமையாலே நிர்வாஹத்வயம் - இதுக்கு இத்யாதி. "இதுவல்லால் - * மாயக்கூத்தனில் விடாய்தீரக் கலந்த இவனை அநுபவித்திருக்குமதொழிய, மூவுலகும் பொருள்தானெனில் - த்ரைலோக்யைஶ்வர்யமும் ஐஶ்வர்யமோவென்று பார்த்தால், பொருளல்ல – அது எனக்கு ஓரைஶ்வர்யமாய்த் தோற்றாது" என்று ஆளவந்தார் நிர்வாஹத்துக்கு பாவார்த்தம். என்னுடைய ஹ்ருதயத்திலே இருக்குமதொழிய, ஸர்வலோகேஶ்வரனாயிருக்கையும் ஐஶ்வர்யமோவென்று பார்த்தால், அது அவனுக்கு ஐஶ்வர்யமல்ல" என்று எம்பெருமானார் நிர்வாஹத்துக்கு பாவார்த்தம். இன்னார்க்குப்பொருளல்ல என்னாமையாலே - எனக்குப் பொருளல்ல: ஈஶ்வரனுக்குப்பொருளல்லவென்றபடி. ஈஶ்வரவ்யாமோஹகதந ப்ரகரணமாகையாலே சேருமென்றபடி. "ஈது - மருள்தான் - ஓ - " இதுஎன்னுடைய ப்ராந்தியோவென்று பாவார்த்தம். ப்ராந்தியாவானேன்? யதார்த்தமாக வொண்ணாதோ? என்ன - ஒரு ஸம்ஸாரி இத்யாதி. "மாய மயக்கு"-ஆஶ்சர்யமான ப்ரமஸாதநம். அவன் எப்போதும் ப்ரமிப்பிக்குமோ?என்ன,— நெடுநாள் இத்யாதி. அவனென்னுள் இருள்தானறவீற்றிருந்தான்: இனி - அருள்தான் - யானறியேன்; இதுவல்லால் – மூவுலகும் - பொருள்தானெனில் - பொருளல்ல; ஈது மருள்தான் - ஓ - மாயமயக்கு மயக்கே இத்யந்வயம்.* (௩)

ஆ —(மாயமயக்கு.)-நிரவதிக வாத்ஸல்ய ஸௌசீல்யத்தையுடையனுயிருந்தவனே, என்னுடைய நிகர்ஷத்தைப்பார்த்து, என்திறத்துப் பொய்செய்தருளான்; ஆதலால், ஹேயப்ரத்யநீகமானவன் திருவடிவை என்னுள்ளே ஸர்வலோகமும் அறியும்படி மெய்யே வைத்தருளினுனென்கிறுர்.

ஒ.—நாலாம்பாட்டில், அபர்வ ஹமமரர்களுக்கும் மூகக்கொள்ள வொண்ணுதபடியையுடையனு யிருந்துவைத்து, ஆடனுய் என்னையடிமைகொண்ட பரமப்ராப்தன், என்னைவஞ்சித்து ப்ரமிப்பியான்; என்னுள்ளே கலந்தருளினுன் என்கிற இதில் ஒருஸம்ஶயமில்லை என்கிறுர். என்பக்கலிலே நிர்ஹேதுகக்ருபையைப்பண்ணி ஹேயப்ரத்யநீகமாய் விலக்ஷணதேஜோரூபமான திருவடிகளை என்னுள்ளே வைத்தருளினுன்.

ப.—அநந்தரம், விலக்ஷண தேஜோரூபமான விக்ரஹத்தை எனக்குள்ளே வைத்தான்; ஆதலால், என்னை ப்ரமிப்பியானென்கிறுர்.

ஆயன் - அறிவில்லாத இடையர்க்கு ஸஜாதீயனுய்க்கொண்டு ஸுலபனுய், அமரர்க்கு - (அறிவுடைய) ஸூரிகளுக்கு, அரியேறு - அபரிச்சேத்யமான மேன்மையையுடையனுய், எனதம்மான் - (இந்த பரத்வஸௌலப்யங்களை எனக்கு ப்ரகாஶிப்பித்த) என் ஸ்வாமியானவன், தேசந்திகழும் - தேசப்ரஸித்தமாம்படியான, தன் - தன், திரு - அஸாதாரணமான, அருள் - க்ருபையை, செய்து - நிர்ஹேதுகமாகப்பண்ணி, தனது - தனக்கு அஸாதாரணமாய், தூய - நிர்மலமாய், சுடர் - அத்யுஜ்ஜ்வலமாய், சோதி - தேஜோமயமான திவ்யவிக்ரஹத்தை, என் - என்னுடைய, உள் - நெஞ்சுக்குள்ளே, வைத்தான் - (ப்ரதிஷ்டிதமாம்படி) வைத்தான்; (ஆதலால்), என்னை - (தன்னையொழிய அறியாத) என்னை, வஞ்சித்து — (அநாஶ்ரிதரைச் செய்யுமாபோலே) வஞ்சித்து, மாயமயக்கு - தன்னுடைய ஆஶ்சர்ய ப்ரமஸாதநங்களாலே, மயக்கான் - ப்ரமிப்பியான்.

இ.—நாலாம்பாட்டில், க்ருஷ்ணனுய் அவதரித்து என்னை அடிமைகொண்ட பரமாப்தனுனவன் என்னை ப்ரமிப்பித்தானுகக்கூடாது; என்னுள்ளே கலந்தருளினுன் என்கிறவிதில் ஒருஸம்ஶயமில்லை என்கிறுர்.

[என்னைவஞ்சித்து - மாயமயக்குமயக்கான்]- அநாஶ்ரிதரான து4ர்யோத4நாதிகளைக்குறித்து, "ஆயுத4மெடேன்" என்று ஆயுத4மெடுத்தும், பகலை இரவாக்கியும் வஞ்சித்தான் இத்தனையொழிய, பாண்டவர்கள் விஷயத்திலே யத்தைச் செய்தானே? ஆகையால், தனக்கேகாந்தமான என்னை, ஆஶ்சர்யமான ப்ரமஸாத4நங்களாலே ப்ரமிப்பியான். ஹேதுவென் என்னில்? [ஆயனமரர்க்கரியேறெனதம்மான்] - நித்யஸூரிகளுக்கும் முகக்கொள்ள வொண்ணுதபடியையுடையனுய் வைத்து, க்ருஷ்ணனுய் வந்தவதரித்து, எனக்கு முறைமை அறிவித்த பரமாப்தன் - என்னைவஞ்சித்து - மாயமயக்குமயக்கான். முறைமை உணர்த்தின வழியென் என்ன? [தேசந்திகழும் தன் திருவருள்செய்து - தூயசுடர்ச்சோதிதனதென்னுள் வைத்தான்] - லோகமெல்லாம் அறியும்படி என்பக்கலிலே நிர்ஹேதுக க்ருபையைப்பண்ணி. [தன்திருவருள்] - புறம்பொருவர்க்கின்றிக்கே தனக்கே அஸாத4ாரணமானவருள். ஹேயப்ரத்யநீகமாய், விலக்ஷணதேஜோரூபமாய், தனக்கு அஸாத4ாரணமான வடிவை என்னுள்ளத்தே வைத்தான். தான் அநந்யஸாத்யன் என்னும்படியைக்கொண்டு என்னுள்ளே தன்னை ப்ரகாசிப்பித்தான். "தமெஸௌஷக்ஷுஷா விஷ்ணுஂ தேஜஸா ஸஹ."

ஈடு.—நாலாம்பாட்டு. அவன் என்னை ப்ரமிப்பித்தானல்லன்; என்னுள்ளே கலந்தருளினனே; இதில் ஒருஸம்ஶயமில்லை யென்கிறார்.

[என்னைவஞ்சித்து மாயமயக்கு மயக்கான்] - அநாஶ்ரிதரான துர்யோதநாதிகளைக் குறித்து "ஆயுதமேடேன்" என்று ஆயுதமெடுத்தும், பகலை இரவாக்கியும் வஞ்சித்தானித்தனை யல்லது, பாண்டவர்கள்விஷயத்தில் அத்தைச் செய்தானோ? ஆகையால், தனக்கே பரமான என்னை வஞ்சித்து, ஆஶ்சர்யமான ப்ரமஸாதநங்களாலே ப்ரமிப்பியான். ஹேதுவென்னென்ன - [ஆயனமரர்க்கரியேறு எனதம்மான்] - நித்யஸூரிகளுக்கும் அவ்வருகான ஏற்றத்தையுடையனாய்வைத்து, க்ருஷ்ணனாய் வந்து அவதரித்து, என்னுடைய ஶேஷத்வத்தை நிர்வஹித்த பரமாப்தன், என்னைவஞ்சித்து - மாயமயக்குமயக்கான்: ஆனால், இப்பேறு வந்தபடிதானென்னென்ன - [தேசந்திகழும் தன்திருவருள்செய்து - தூயசுடர்ச்சோதித் தனதென்னுள் வைத்தான்] - லோகமெல்லாம் அறியும்படி என்பக்கலிலே நிர்ஹேதுக க்ருபையைப்பண்ணி. [தன்திருவருள்] - புறம்பொருவர்க்கின்றிக்கே தனக்கே அஸாதாரணமான அருள். ஹேயப்ரத்யநீகமாய், விலக்ஷண தேஜோரூபமாய், ஶுத்தஸத்த்வமயமாய், தனக்கே அஸாதாரணமான வடிவை என்னுள்ளேவைத்தான். தான் அநந்யஸாத்யனென்னும்படியைக் கொண்டு என்னுள்ளே ப்ரகாஶிப்பித்தான்; "தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்" (தஸ்யைஷஆத்மா விவ்ருணுதே தநூம்ஸ்வாம்) என்கிறபடியே. (௪)

---

## ஐந்தாம் பாட்டு.

---

திகழுந்தன்றிருவருள்செய்து உலகத்தார்
புகழும்புகழ் தானதுகாட்டித்தந்துஎன்னுள்
திகழும்மணிக்குன்றமொன்றே ஒத்துநின்றான்
புகழும்புகழ் மற்றெனக்குமோர்பொருளே.

ஆ.—[திகழும்.] - லோகமெல்லாம் அறியும்படி என்னுள்ளே யிருந்தருளின அத்தனையேயோ? இப்புகழையே லோகமெல்லாம் புகழும்படியாகவு மிருந்தருளினன். இருந்தருளுகிறான்; தன்னுடைய உத்கர்ஷத்தையும் என்னுடைய நிகர்ஷத்தையும் பார்த்து, "நான் அத்தைவிட்டகலுகிறேன்" என்னும் பயத்தாலே, நான் தன்னை

---

நாலாம்பாட்டு.—மாயம் இத்யாதி. "மாயமயக்குமயக்கான் - தனதென்னுள்வைத்தான்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - அவன்என்னை இத்யாதி.

"என்னைவஞ்சித்து - மாயமயக்குமயக்கான்" என்கிறது என்னஉரப்புக்கொண்டு என்ன: அவனுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தை அநுஸந்தித் தென்கிறார் - அநாஶ்ரிதரான இத்யாதி. விலக்ஷணதேஜோரூபதைக்கு ஹேது - ஶுத்தஸத்த்வமயத்வம். திகழுகை - ப்ரகாசமாய், அறியும்படியென்றபடி. ஈஶ்வரன் வைக்கவேணுமோவென்ன - தான் அநந்ய இத்யாதி. "அநந்யஸாத்யன்" என்னுமதுக்கு ப்ரமாணம் - தஸ்யைஷ இத்யாதி. அமரர்க்கரியேறு - ஆயன் - எனதம்மான் - தேசந்திகழுந்திருவருள்செய்து - தூயசுடர்ச்சோதித் தனதென்னுள்வைத்தான்; ஆகையால், என்னைவஞ்சித்து - மாயமயக்கு மயக்கான் இத்யந்வயம். (௪)

விடமாட்டாதபடியாகத் தன்னழகைக்காட்டி என்னை வசீகரித்துக் கொண்டருளின புகழல்லது மற்று அவனுடையபுகழை ஒருபுகழாக மதியேனென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், "ஒருவர் பெறும்பேறே" என்று என்னை எல்லாரும் கொண்டாடும்படி வந்து என்னுள்ளே நின்றருளினான்; இத்தால்வந்த புகழை அல்லது இவனுடைய மற்றுள்ள புகழை ஒருபுகழாகமதியேன் என்கிறார்.

[உலகத்தார் புகழும் புகழ் தானது காட்டித்தந்து] - என்னுடைய பேற்றை லோகமெல்லாம் ஸ்தோத்ரம் பண்ணும்படி. [என்னுள்ளென்று தொடங்கி] - விளங்காநின்றது ஒரு நீலமலைபோலே என்னுள்ளே நின்றான். மணிக்குன்றமென்று - தம்முடைய ஹ்ருதயத்திலே யிருக்கிற எம்பெருமான் இங்கு நின்று போராமையும், இத்தாலே பூர்ணனாகையும், தேஜஸ்வியாகையும் தொடக்கமானவற்றைச் சொல்லுகிறது.

ப.—அநந்தரம், என்னெஞ்சுக்குள்ளே அசலப்ரதிஷ்டிதனாய்க்கொண்டு நின்றான். இதுஒழிய வேறொன்றை அவனுக்குப் புகழாக நினைத்திருக்கிறிலேனென்கிறார்.

திகழும் - (நிர்தோஹதுகமாயும் நிரவதிகமாயு மிருக்கையாலே இரண்டுதலைக்கும்) ஔஜ்ஜ்வல்யாவஹமான, தன்—, திருவருள் - திருவருளை, செய்து - பண்ணி, உலகத்தார் - லோகத்தார், புகழும் - (இதுகண்டு) புகழுகிற, அது - அந்த, புகழ் - (ப்ரஸித்தமான) புகழையும், தான் - தான், காட்டித்தந்து - எனக்கு ப்ரகாசிப்பித்து, என்னுள் - எனக்குள்ளே, திகழும் - விளங்காநிற்கிறது, ஒன்று - ஒரு, மணிக்குன்றம் ஒத்து - மாணிக்கமலைபோலே, நின்றான் - நின்றான்; எனக்கு - எனக்கு, (இந்நிலையொழிய), மற்று - மற்று, புகழும் - (அவனைப்) புகழுகிற, புகழும் - புகழானதுவும், ஓர் - ஒரு, பொருளே - பொருளாயிருக்கிறதோ?

இ.—அஞ்சாம்பாட்டில், "ஒருவர்பெறும்பேறே!" என்று லோகமாகக் கொண்டாடும்படி வந்து என்னுள்ளே நின்றருளினான். இத்தால் வந்த புகழை யல்லது இவனுடைய மற்றுள்ள புகழை ஒன்றாக மதியேன் என்கிறார்.

[திகழும் தன்திருவருள் செய்து] - பிறருடைய பரிச்சின்நமான அருள்போலன்றிக்கே, இரண்டு தலைக்கும் நிறமாம்படியான தன் க்ருபையை என்பக்கலிலேபண்ணி. [உலகத்தார் இத்யாதி] - என்னுடைய பேற்றைக் குறித்து லோகத்தார் பண்ணும் ஸ்தோத்ரத்தைத் தான் காட்டித்தந்தான். பாலேய் தமிழரிசைகாரர் பத்தர் பரவுமாயிரம்" என்று லோகமாகக் கொண்டாடும்படி பண்ணுகை; "[illegible]" என்று ஸர்வர்க்கும் ஸம்ருத்தியை விளைக்கக்கடவ இத்தை எல்லாரும் செவிதாழ்த்துக் கேளுங்கோள் என்றாற்போலே. [என்னுள் திகழும் மணிக்குன்றமொன்றே யொத்துநின்றான்] - விளங்காநின்றதொரு நீலமலைபோலே, என்னுள்ளே நின்ற இம்மஹாகுணத்தையல்லது மற்றுள்ள புகழை ஒரு புகழாக மதியேன். என்னுடைய இந்த்ரிய வஶ்யதையைத் தவிர்த்த குணத்தையும் இனி நான் ஒரு சரக்காக நினைத்திரேன்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. "ஒருவர்பெறும்பேறே!" என்று லோகமடையக் கொண்டாடும்படி என்னுள்ளே வந்து நின்றருளினன்: அத்தால்வந்த புகழையல்லது இவனுடைய மற்றுள்ள புகழையும் ஒன்றாக மதியேனென்கிறார்.

[திகழுந்தன்திருவருள்செய்து] - பிறருடைய பரிச்சிந்நமான அருள்போலன்றிக்கே, இரண்டுதலைக்கும் நிறமாம்படியான தன்க்ருபையை என்பக்கலிலே பண்ணி. [உலகத்தார் இத்யாதி] - என்னுடையபேற்றைக் குறித்து லோகத்தார்பண்ணும் ஸ்தோத்ரத்தைத் தான் காட்டித்தந்தான். "பாலேய்தமிழரிசைகாரர்பத்தர் பரவுமாயிரம்" என்று லோகமாகக்கொண்டாடும்படி பண்ணுகை. *"இமௌ முநீ பார்த்திவலக்ஷணாந்விதௌ குஶீலவௌ சாபி மஹாதபஸ்விநௌ"* (இமௌமுநீபார்த்திவலக்ஷணாந்விதௌகுஶீலவௌ சாபி மஹாதபஸ்விநௌ) என்றாற்போலே நாடாகப் புகழாநின்றது. [என்னுள் இத்யாதி] - என்னுள்ளே வந்து புகுந்து, பெறும்பேறுபெற்றானாய், நிலைபெற்றுப் புகருடையனாய்க் கால்வாங்கிப்போகமாட்டாதே, விளங்காநின்ற ஒரு ரத்நபர்வதம் போலே நின்றான். [புகழும்புகழ்] - என்னுள்ளேநின்ற இம்மஹாகுணத்தை யல்லது, மற்றுள்ள புகழை ஒருபுகழாக மதியேன். என்னுடைய இந்த்ரியவஶ்யதையைப் போக்கினானென்று நான்சொன்ன இது ஒருசரக்காகநினைத்திரேன். (ரு)

---

*அஞ்சாம்பாட்டு.—திகழும் இத்யாதி. "உலகத்தார்புகழும்புகழ்தானதுகாட்டித்தந்து என்னுள் - நின்றான்; புகழும்புகழ் மற்றெனக்குமோர்பொருள்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - ஒருவர் இத்யாதி.*

*"தன்திருவருள்" என்றதுக்கு ஹாவம் - பிறருடைய இத்யாதி. "திகழும்" என்றத்தைப் பற்ற - இரண்டுதலைக்கும் இத்யாதி. இரண்டுதலைக்கும் நிறமாம்படியென்றது - நிர்ஹேதுகமாகையாலே, அவன் நைரபேக்ஷ்யத்துக்கும் இவன் பாரதந்த்ர்யத்துக்கும் நிறமாம்படியென்றபடி. "புகழும்புகழ்"- கொண்டாடும் கொண்டாட்டம். என்னுடைய பேற்றைக் குறித்து-என்னைக்கொண்டு திருவாய்மொழி பாடுகையாகிற பேற்றைக்குறித்தென்றபடி. காட்டித்தருகையாவதென்? என்ன- பாலேய்தமிழர் இத்யாதி. ப்ரபந்தத்தை ஶ்லாகித்தபேருண்டோவென்ன - இமௌ முநீ இத்யாதி.*

**இமௌ முநீ பார்த்திவலக்ஷணாந்விதௌ குஶீலவௌ சைவ மஹாதபஸ்விநௌ | மமாபி தத்பூதிகரம் ப்ரவக்ஷ்யதே மஹாநுபாவம் சரிதம் நிபோத்யதாம்" இதி பாலகாண்டே**

*(4-32). ப்ரபந்தத்தைக் கொண்டாடின இது பாடினபேரை ஶ்லாகித்ததுக்கும் உபலக்ஷணம்; ஸ்ரீ ராமாயணத்தையும், அத்தைப்பாடின குசலவர்களையும் கொண்டாடினாற்போலேயென்று இவ்வாக்யத்துக்குக் கருத்து. "திகழும்" என்றத்தைப்பற்ற - பெறும்பேறுபெற்றானாய் என்றது. நிலைபெற்றுக் கால்வாங்கிப் போகமாட்டாதேயென்றது - "குன்றம்" என்றத்தைப்பற்ற. "மணி" என்றத்தைப் பற்ற - புகருடையனாய் என்றது. மற்றுமுள்ள புகழாவதேதென்ன - என்னுடைய இத்யாதி. மற்றும் புகழும்புகழ் - எனக்குமோர்பொருளே என்று அந்வயம். ஓர்பொருளே - ஒருபொருளா [illegible] உலகத்தார் புகழும்புகழைத் தான்காட்டித்தந்து என்று அந்வயிப்பது.* (ரு)

# ஆறாம் பாட்டு.

பொருள்மற்றெனக்குமோர்பொருள்தன்னில் சீர்க்கத்
தருமேல் பின்னையார்க்கு அவன்தன்னைக்கொடுக்கும்?
கருமாணிக்கக்குன்றத்துத் தாமரைபோல்
திருமார்வுகால்கண்கை செவ்வாயுந்தியானே.

ஆ.—(பொருள்மற்றெனக்கும்.) - தானாகிற ஸம்பத்தையொழிய வேறே சீரியதொருஸம்பத்தை எனக்குத்தந்தால், நிரவதிக ஸௌந்தர்யஸம்பத்தையுடையனான தன்னை வேறுகொள்வாரில்லையென்று, இப்படி தன்னை எனக்கு போக்யமாகத் தந்தருளினானல்லனிறே; என்பக்கலுள்ள அபிநிவேசமிறே யென்கிறார்.

ஒ.—ஆறாம்பாட்டில், வேறு ஒரு புருஷார்த்தத்தை எனக்குத் தந்தால், அத்யந்த விலக்ஷணமான திருவழகையுடைய தன்னைக் கொள்ளுவாரில்லாமையன்றிறே, என்பக்கலுண்டான அபிநிவேசத்தாலே தன்னை எனக்குத் தந்தருளினான் என்கிறார்

[பொருளென்று தொடங்கி.] - லோகத்தில் புருஷார்த்தவர்க்கத்தில் மற்றொரு புருஷார்த்தத்தை எனக்கு சீர்க்கத்தந்தால். [ஆர்க்கு அவன் தன்னைக் கொடுக்கும்] - தன்னைக் கொள்ளுவாரில்லை என்று க்ஷேபம்.

ப.—அநந்தரம், என்னவாயிலேநின்ற உபகாரத்தாலே, நிரதிசயஸௌந்தர்ய விசிஷ்டனானவன் தன்னை ஒருவர்க்குக்கொடுக்கவொண்ணாமல் எனக்குத்தந்தானோ? என்கிறார்.

(எனக்குத்தன்னைத்தந்த இத்தாலே), கருமாணிக்கக்குன்றத்து - கருமாணிக்க மலையின்மேலே, தாமரைபோல் - தாமரைக்காடு அலர்ந்தாற்போலே செவ்விபெற்ற, திருமார்வு - திருமார்பு, கால் - திருவடிகள், கண் - திருக்கண்கள், கை - திருக்கைகள், செம் - சிவந்த, வாய் - திருவதரம், உந்தியான் - திருவுந்திகளையுடையனானவன், மற்று - மற்றுமுள்ள, பொருள்தன்னில் - புருஷார்த்தங்கள்தன்னிலே, எனக்கும் - எனக்கும், ஓர் - ஒரு, பொருள் - புருஷார்த்தத்தை, சீர்க்க - சீர்க்க, தருமேல் - தந்துவிட்டானாகில், பின்னை - பின்னை, அவன் - அவன், தன்னை - (நிரதிசயபுருஷார்த்தரூபனான) தன்னை, ஆர்க்கு - ஆருக்கு, கொடுக்கும் - கொடுப்பான்? புறம்புகொள்வாரில்லாமல் மறந்தானல்லனே; க்ருபாகார்யமென்றுகருத்து.

இ.—ஆறாம்பாட்டில், விலக்ஷண புருஷார்த்தங்களில், இது ஒழிய எனக்கு வேறொன்றைத் தந்துவிட்டால், புறம்பு தன்னை வேறொருவர் கொள்வாரில்லாமல் தன்னை எனக்குத் தந்தானோ? என்பக்கல் அபிநிவேசத்தாலே தந்தருளினனத்தனையன்றோ? என்கிறார்.

[பொருளித்யாதி] - [பொருள்தன்னில் - மற்றெனக்கும் ஓர் பொருள் - சீர்க்கத்தருமேல்] - புருஷார்த்தவர்க்கத்திலே வேறே கனத்ததொரு புருஷார்த்தத்தை. [தருமேல்] - தந்துவிட்டால். [அவன் - பின்னையார்க்கு - தன்னைக் கொடுக்கும்] - இப் பொகடுசரக்கைக் கொள்வாரில்லையிறே என்று க்ஷேபம். [கருமாணிக்கமித்யாதி]. கொள்வாரில்லாதவஸ்து இருக்கிறபடி. [கருமாணிக்கக்குன்றது]- ஆஶ்ரயத்துக்கு த்ருஷ்

டாந்தம். [தாமரை போல்] - அவயவ ஶோபைக்கு த்ருஷ்டாந்தம். [திருமார்வு] - புருஷகாரமான பிராட்டியிருக்கிற திருமார்வு. [கால்] - அச்சேர்த்திக்குத் தோற்றுவிழும் திருவடிகள். [கண்] - திருவடிகளிலே விழுந்தாரைக் குளிரநோக்கும் கண். [கை] - அவர்களை எடுத்தணைக்கும் கை. [செவ்வாய்] - இன்சொல்லுச் சொல்லும் திருவயரம். [உந்தி] - அவர்களுக்கு அநுபாவ்யமான திருவுந்தி. "உந்தி மேலதன்றே?" என்னக்கடவதிறே.

ஈடு.—ஆறும்பாட்டு. எனக்குத் தன்னையொழிய வேறொன்றைத் தந்துவிட்டால், புறம்பு தன்னை வேறொருவர்கோள்வாரில்லாமை எனக்குத்தந்தானே? என்பக்கல் அபிநிவேஶத்தாலே தந்தருளினனென்கிறார்.

[பொருள் இத்யாதி.] - † (பொருள்தன்னில் - மற்றெனக்குமோர் - பொருள் - சீர்க்கத்தருமேல்)-புருஷார்த்தவர்க்கத்திலே வேறே கனத்ததொரு புருஷார்த்தத்தை, தருமேல் - தந்துவிட்டால். [பின்னையார்க்கு அவன் தன்னைக் கொடுக்கும்] - பின்னை இப்பொருள் கடிதாகக் கைக்கோள்வாருண்டோ? என்! கைக்கோள்வாரில்லையோ? என்னில், - [கருமாணிக்கம் இத்யாதி]-இவ்வேப்பங்குடிநீரைப் புறம்பு ஸ்வீகரிப்பாருண்டோ? [கருமாணிக்கக்குன்றத்து] - ஆஶ்ரயத்துக்கு த்ருஷ்டாந்தம். [தாமரைபோல்] - அவயவ ஶோபைக்கு த்ருஷ்டாந்தம். [திருமார்வு] - புருஷகாரமான பிராட்டியெழுந்தருளியிருக்கிற மார்வு. [கால்]-அச்சேர்த்திக்குத்தோற்றுவிழும்திருவடிகள். [கண் இத்யாதி]-திருவடிகளிலே விழுந்தாரைக் குளிரநோக்கும் கண், அவர்களை எடுத்தணைக்கும் கை, இன்சொல்லுச் சொல்லும் திருவதரம், அவர்களுக்கு அநுபாவ்யமான திருவுந்தி. * "உந்திமேலதன்றே" என்னக்கடவதிறே. (சு)

---

## ஏழாம் பாட்டு.

---

செவ்வாயுந்தி வெண்பல்சுடர்க்குழைதம்மோடு
எவ்வாய்ச்சுடரும் தம்மில்முன்வளாய்க்கோள்ளச்
செவ்வாய்முறுவலோடு எனதுள்ளத்திருந்த
அவ்வாயன்றி யானறியேன்மற்றருளே.

---

ஆறும்பாட்டு.—பொருள் இத்யாதி. "பின்னையார்க்கு அவன் தன்னைக்கொடுக்கும்" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை - எனக்கு இத்யாதி. இப்பாட்டு ப்ரீதியதிஶயத்தாலே க்ஷேபோக்தியேயாகிலும், ஸ்வபாவார்த்தத்திலே அவதாரிகையென்று கண்டுகொள்வது.

அர்த்தாநுகுணமாக அந்வயம் - பொருள்தன்னில் இத்யாதி. மற்று - வேறென்றபடி. புருஷார்த்தவர்க்கத்தில் வைத்துக்கொண்டு, வேறு எனக்குக் கனத்தபுருஷார்த்தத்தைத் தந்துவிட்டாலென்று ஸப்தார்த்தம். கடிதாக-சீக்ரமாக. வேப்பங்குடிநீரென்று-வ்யதிரேகலக்ஷணயா, போக்யதையைக் காட்டுகிறது. வேப்பங்குடிநீர் - வேப்பஞ்சாறு கஷாயம். உண்டோ என்றது - இல்லையோ? என்றபடி. "குன்றம்" என்றது - அவயவங்களுக்கு ஆஶ்ரயமான விக்ரஹத்துக்கு த்ருஷ்டாந்தமென்றபடி. திருவுந்தி அநுபாவ்யமென்னுமதுக்கு ப்ரமாணம்-உந்திமேலதன்றே இத்யாதி. கருமாணிக்கம்என்று தொடங்கி, உந்தியானே - பொருள்தன்னில்வைத்துக்கொண்டு - எனக்கு - மற்றுமோர் - பொருள் - சீர்க்கத்தருமேல், பின்னையார்க்கு அவன்தன்னைக்கொடுக்கும் இத்யந்வய: "பின்னையார்க்கு அவன் தன்னைக்கொடுக்கும்" என்ற ஸ்வரத்தாலே - கொள்வாரில்லாமல் தந்தானே? அன்றே; தன்க்ருபையாலே தந்தானென்றபடி. (சு)

ஆ.—(செவ்வாயுந்தி) - இன்னமும் இவ்வழிவிவேபத்தையே விஸ்தரிக்கிறது. "என்னோடு கலந்தருளின கலவியாலுள்ள நிரவதிகப்ரீதியாலே, திருப்பவளத்தினழகையும், மற்றுமுள்ள திவ்யாவயவ திவ்யபூஷணகதமான நிரவதிகதேஜஸ்ஸையுமெல்லாம் வளைந்துகொடுவைத்து, என்முன்னே திருமுகத்திலேடு வெள்ளம் பெருகிப் புறப்படும்படியாகச் செவ்வாய்முறுவலோடு எனதுள்ளத்திருந்த அவ்வழிவிவேபகுணமல்லது மற்றொருகுணத்தைக் குணமாக மதியேனென்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், எம்பெருமானுக்குத் தம்மோட்டைக் கலவியாலுள்ள ஹர்ஷத்தாலே முறுவல்செய்த திருப்பவளத்தில் அழகை யநுஸந்தித்து மிகவும் ப்ரீதராகிறார்

[செவ்வாயென்று தொடங்கி.]-திருப்பவளமும் திருநாஸீகமலமும் வெளுத்த திருமுத்தும் சுடரையுடைத்தான திருமகரக்குழையோடே மற்றும் எவ்விடத்திலுமுண்டான ஒளியும் ஒன்றுக்கொன்று முற்கோலி தம்முள்ளே கலசும்படி. ஒன்றுக்கொன்று முற்பட்டு என்னை வளைத்துக்கொள்ள வென்றுமாம். [செவ்வாயென்று தொடங்கி] - சிவந்ததிருப்பவளத்தில் முறுவலோடு என்னுடைய ஹ்ருதயத்திலே இருந்தபடி அல்லது மற்றுஅருள்கள், அறியேன். இதுவே அமையும், மற்றொன்றும் வேண்டா என்றுகருத்து.

ப.—அநந்தரம், இவ்வழகோடே என்னுள்ளே முறுவல் செய்திருக்கிற இருப்பொழிய வேறோராகாரத்தையும் அறிகிறிலேனென்கிறார்.

செம் - சிவந்த, வாய் - வாய், (செம்) உந்தி - சிவந்த திருநாபி, வெண் - வெளுத்த, பல் - திருமுத்து, சுடர் - ஒளியையுடைத்தான, குழைதம்மோடும் - திருமகரக்குழை இவற்றோடேகூட, எவ்வாய் - எல்லா அவயவங்களினுடைய, சுடரும் - ஒளியும், தம்மில் - தம்மில்தாம், முன் - முற்பட்டு, வளாய்க்கொள்ள-சூழ்ந்துகொள்ள, (திருவுள்ளத்திலுகப்புக்கு ப்ரகாசகமாம்படி), செம் - சிவந்த, வாய் - திருப்பவளத்தின், முறுவலோடு - முறுவலோடே, எனது - என், உள்ளத்து - நெஞ்சுக்குள்ளே, இருந்த - இருந்த, அ - அந்த, வாய் - ப்ரகாரத்தை, அன்றி - ஒழிய, மற்று - வேறொரு, அருள் - ஆகாரத்தையும், யான் அறியேன் - யான் நினைக்கிறிலேன்.

இ.—ஏழாம்பாட்டில், அவன் தம்மோட்டைக்கலவியாலே ஹ்ருஷ்டனாய், அது தன்பேறாக முறுவல்செய்த திருப்பவளத்தை அநுஸந்தித்து ப்ரீதராகிறார்.

[செவ்வாய் இத்யாதி] - சிவந்த திருவயரம், திருவுந்தி, வெளுத்த திருமுத்து, புகரையுடைத்தான திருமகரக்குழை இவற்றோடேகூட. [எவ்வாய்ச்சுடரும்] - மற்றுமெவ்விடத்திலும்உண்டான தேஜஸ்ஸும். வாய் - இடம். [தம்மில் முன் வளாய்க்கொள்ள] - ஒன்றுக்கொன்று முற்கோலி என்னை வளைத்துக்கொள்ள. அஹமஹமிகையாய் முற்பட்டு வளைத்துக்கொள்ள வென்னுதல், ஒன்றுக்கொன்று முற்பட்டு என்னை வளைத்துக்கொள்ளவென்னுதல். [செவ்வாய் இத்யாதி] - சிவந்த திருப்பவளத்தில் முறுவலோடே என்னுடைய ஹ்ருதயத்திலே இருந்த. "அவாப்தஸமஸ்தகாம:" என்றிருக்குமவன் இவரைப்பெற்றவிது தன்பேறென்று தோற்ற, ஹ்ருஷ்டனாய் முறுவல் செய்திருந்தபடி. பூவலரும்போது எங்குமொக்க ஒருசெவ்வி பிறக்குமாபோலே, திவ்யாவயவங்கள் தோறும் ஒருவிக்ருதி பிறக்கும்படியாயிற்று ஸ்மிதம்பண்ணிற்று.

[அவ்வாயன்றி] - அவ்விடமன்றி. ஸ்மிதம்பண்ணிக் கொண்டிருந்த இருப்பல்லது, "காந்தஸ்மிதா" என்று ஸ்வரூபத்தைச்சொல்லி, "ஜாதஹாஸா" என்றதிறே, அப்போதைய ஹர்ஷத்தால் உண்டான விக்ருதி என்னுமிடம் தோற்ற. மற்றுண்டான அருளை நான் அறியேன். இதுவே, அமையும்; மற்றொன்றும் வேண்டா என்கை.

ஈடு.—ஏழாம்பாட்டு. அவன் தம்மோட்டைக் கலவியாலே ஹ்ருஷ்டனாய், அது தன்பேறாக முறுவல்செய்த திருப்பவளத்தை அநுபவித்து ப்ரீதராகிறார்.

[செவ்வாய் இத்யாதி] - சிவந்த திருவதரம், திருவுந்தி, வெளுத்ததிருமுத்து, புகரையுடைத்தான திருமகரக்குழை இவற்றோடேகூட. [எவ்வாய்ச்சுடரும்] - மற்றுமெவ்விடத்து முண்டான தேஜஸ்ஸமூஹம். வாய் - இடம். [தம்மில்முன்வளாய்க்கொள்ள] - ஒன்றுக்கொன்று "நான், நான்" என்று தம்மில்தாம் முற்பட்டு வளைத்துக்கொள்ள. †அஹமஹமிகையாய் முற்பட்டு வளைத்துக்கொள்ளவேண்ணுதல், முற்பட்டு என்னைவளைத்துக் கொள்ளவேண்ணுதல். [செவ்வாய்முறுவலோடு எனதுள்ளத்திருந்த] - "அவாக்யநாதர:" (அவாக்யநாதர:) என்றிருக்கடவ தத்த்வம், இவரைப்பெற்று "இது தன்பேறு" என்று தோற்ற முறுவல்செய்திருந்தபடி. பூவலரும்போது எங்குமொக்க ஒரு செவ்விபிறக்குமாபோலே, திவ்யாவயவங்கள்தோறும் ஒருவிக்ருதி பிறக்கும்படியாயிற்று ஸ்மிதம்பண்ணிற்று. [அவ்வாயன்றி] - அவ்விடமன்றி. ஸ்மிதம் பண்ணிக்கொண்டிருந்த இருப்பல்லது. "காந்தஸ்மிதா" (காந்தஸ்மிதா)என்று ஸ்வரூபத்தைச்சொல்லி, "ஜாதஹாஸா" (ஜாதஹாஸா) என்றதிறே, அப்போதை ஹர்ஷத்தாலுண்டான விக்ருதியேன்னுமிடந் தோற்ற. மற்றுண்டான அருளை நான்அறியேன். இதுவேயமையும், மற்றொன்று வேண்டாவென்கை. (எ)

---

ஏழாம்பாட்டு.—செவ்வாய் இத்யாதி. "செவ்வாய்முறுவலோடு" இத்யாதிகளைக் கடாக்ஷித்து அவதாரிகை - அவன் இத்யாதி.

மற்றுமெவ்விடத்துமுண்டான என்றது - ஸமுதாயசோபை. "நான் நான்" என்று தன்னில்தான் முற்பட்டு வளைத்துக்கொள்ள என்றத்தை இரண்டுவகையாக அருளிச்செய்கிறார் - அஹமஹமிகை இத்யாதி வாக்யத்வயத்தாலே. முந்தின அர்த்தத்துக்கு, "தம்மில்முன்" என்று முழுச்சொல்லு; தன்னில்தான் முற்பட்டு, பரஸ்பரம் வளைத்துக்கொள்ள என்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, "தம்மில்,முன்" என்றுஇரண்டுபதம்: தங்களிலே முன்பு ஆழ்வாரை வளைத்துக்கொள்ள என்றபடி. முன் - முன்பே. "செவ்வாய்முறுவல்" என்றதுக்குபாவம் - அவாக்யநாதர: இத்யாதி. முறுவலின் ஸ்வபாவகதநம்பண்ணுகிறார் - பூவலரும் இத்யாதி. "அவ்விடமன்றி" என்றதின் விவரணம் - ஸ்மிதம்பண்ணி இத்யாதி. "செவ்வாய்" என்றும், "செவ்வாய்முறுவல்" என்றும் புநருக்தமன்றோவென்ன - காந்தஸ்மிதா இத்யாதி. அப்படியே, செவ்வாயென்று - ஸ்வரூபகதநமாய், செவ்வாய்முறுவலென்று - இவரைப்பெற்ற ப்ரீதியாலே வந்த ஸ்மிதத்தைச் சொல்லுகிறதென்றபடி. இத்தால் பலிதம்-இதுவேயமையும் இத்யாதி. "ஸ்மிதேநாபாஸயந்தீவ ஸீதா ஸீதாம்ஸுவக்த்ரேவ ஸம்ப்ரஹ்ருஷ்டேவ ஸா ததா । காந்தஸ்மிதா க்ஷணஜாதஹாஸா ஸாதோஹவீதா ஸஹஸா வாக்யஜாதம்" இதி ஸ்ரீராமாயணே, ஸுந்தரகாண்டே, ஸர்க: (கங-கஉ). (எ)

---

† அஹமஹமிகயா என்று பாடமிருக்கலாமென்று தோன்றுகின்றது.

# எட்டாம் பாட்டு.

---

அறியேன்மற்றருள் என்னையாளும்பிரானார்
வெறிதேயருள்செய்வர் செய்வார்கட்குகந்து
சிறியேனுடைச் சிந்தையுள்மூவுலகும்தன்
நெறியாவயிற்றில்கொண்டு நின்றொழிந்தாரே.

ஆ — (அறியேன்மற்றருள்.) - இப்படி அபிநிவிஷ்டனாய்க்கொண்டு தன்னுடைய ஸர்வைச்வர்யத்தோடுங்கூட என்னுள்ளே புகுந்திருந்தருளுகைக்கு ஹேது வென்? என்றால், ஒருஹேதுவின்றியே வெறிதேசெய்தருளினானென்கிறார்.

ஒ. — எட்டாம்பாட்டில், இப்படி எம்பெருமான் தன்னோடேவந்து ஸம்ச்லேஷிக்கைக்கு ஹேது அவனுடைய க்ருபையொழிய மற்றொன்றில்லையென்கிறார்.

[என்னையென்று தொடங்கி.] — என்னை அடிமைகொள்ளுகிற மஹோபகாரகரானவர் தாம் விஷயீகரிக்கவேண்டுவார்க்குநிர்ஹேதுகமாக உகந்துக்ருபைபண்ணுவர். [சிறியேனென்று தொடங்கி] — மூவுலகையும் தன்னுடைய வயிற்றினுள்ளே வைத்து அதுக்குப்பாங்காக வைத்துக்கொண்டு அவ்வைச்வர்யத்தோடே சிறியேனுடைய சிந்தையுள் நின்றொழிந்தார்.

ப. — அநந்தரம், க்ஷுத்ரனான என்னெஞ்சிலே பூர்ணராய்க்கொண்டுவந்து புகுந்துநின்றவர்தாம், உபகரிக்க நினைத்தார்க்கு நிர்ஹேதுகமாக உபகரிப்பராகாதே யென்கிறார்.

மற்று - வேறொன்றை, அருள் - உபகாரமாக, அறியேன் - நினைத்திருக்கிறிலேன்; என்னை - என்னை, ஆளும் - அடிமைகொண்ட, பிரானார் - மஹோபகாரகனானவர், செய்வார்கட்கு - தாம் உபகரிக்கநினைத்தார்க்கு, வெறிதே - நிர்ஹேதுகமாக, உகந்து - உகந்து, அருள் - உபகாரத்தை, செய்வர் - பண்ணுவர்; (எங்ஙனேயென்னில்), சிறியேனுடை - அதிக்ஷுத்ரனான என், சிந்தையுள் - நெஞ்சிலே, மூவுலகும் - ஜகத்த்ரயத்தையும், நெறிஆ - ரக்ஷ்யரக்ஷகபாவமாகிறமுறை தப்பாதபடி, தன்வயிற்றில் - தமக்குள்ளே, கொண்டு - கூடக்கொண்டு, நின்றொழிந்தார் - நின்றுவிட்டார்: ஆதலாலென்று கருத்து.

இ. — எட்டாம்பாட்டில், அவன் தம்மோடுவந்து கலக்கைக்கடி, அவன் க்ருபை என்கிறார்.

[அறியேன் மற்றருள்] - வேறு ஓர்அருள் அறியேன். [என்னையாளும் பிரானார்] - என்னை அடிமைகொள்ளுகிற உபகாரகரானவர். [வெறிதேயருள் செய்வர்] - நிர்ஹேதுகமாக க்ருபைபண்ணுவர். ஆருக்கென்னில்? [செய்வார்கட்கு] - தாந்தாமொன்றைச் செய்வார்கட்கென்னில், "வெறிதேயருள் செய்வர்" என்னக்கூடாது; "யமேவைஷ வ்ருணுதே": தாம் விஷயீகரிக்க நினைத்தார்க்கு. [உகந்து] - தம்முடைய உகப்பேஹேதுவாக: தம்முடைய உகப்புக்கு, "ப்ரியதம ஏவ வரணீயோ பவதி" என்று ப்ரியதமனன்றோ விஷயமென்னில்; சைதந்யப்ரயுக்தமானருசி, ஸ்வரூபம் இத்தனையல்லது, பேற்றுக்கு ஸாதநமாகப் பெறுமையாலே அத்தை ஹேதுவாகச்

சொல்லவொண்ணாது. அத்யல்பனான என்னுடைய ஹ்ருதயத்திலே. ஸம்ஸாரிகள் நித்யஸித்தர் கோடியிலேயாம்படியிறே தம்மை நினைத்திருப்பது. மூவுலகும் தன் வயிற்றினுள்ளே அவற்றுக்குப் பாங்காகவைத்துக்கொண்டு. நெறியா - பாங்காக. அன்றியே, மூவுலகை முறையிலே வயிற்றிலேகொண்டு என்றுமாம். ரக்ஷகன் ரக்ஷ்யத்தை நோக்குகை முறையிறே. [நின்றொழிந்தாரே] - [சிறியேனுடைச் சிந்தையுள் நின்றொழிந்தாரே] - ஜகத்ரக்ஷணத்தில் முறையிலே நின்றார், என்பக்கல் முறைகெட நில்லாநின்றார். அதிக்ஷுத்ரனான என்ஹ்ருதயத்திலே தன்மேன்மையோடே புகுந்து நிற்கிறவனுக்கு, தன்னுடைய ரக்ஷ்யவர்கத்தை நோக்கினான் என்கிற இது ஒரு குணமோ? அவன் - மூவுலகுக்கும் அவ்வருகாக இவரை நினைத்திராநின்றான்; இவர் - தம்மை ஸம்ஸாரிகளுக்குக் கீழாக நினைத்திராநின்றார்.

ஈடு.—எட்டாம்பாட்டு. அவன் தம்மோடேவந்து கலக்கைக்கடி அவன் க்ருபையென்கிறார்.

[அறியேன்மற்றருள்] - வேறருளுமறியேன். [என்னையாளும்பிரானார்] - என்னை அடிமைகொள்ளுகிற உபகாரகரானவர். [வெறிதேயருள்செய்வர்] - நிர்ஹேதுகமாக க்ருபைபண்ணுவர். ஆருக்கென்னில் - [செய்வார்கட்கு] - "யமேவைஷவ்ருணுதே" (யமேவைஷவ்ருணுதே) என்று தாம் விஷயீகரிக்க நினைத்தார்க்கு. தாந்தாமோன்று செய்வார்க்கென்னில், "வெறிதே" என்னக்கூடாதிறே. ஆனாலும் ஒருஹேதுவேண்டாவோ அருளுக்கென்னில்,— உகப்பாயிற்று ஹேது: "ப்ரியதம ஏவஹிவரணீயோபவதி" (ப்ரியதம ஏவஹிவரணீயோபவதி) என்னக்கடவதிறே. ருசியுண்டானாலும், இவன் சேதநனாவாசிக்குச் சைதந்யப்ரயுக்தமான ஸ்வபாவமாகக்கொள்ளுமித்தனையல்லது, பேற்றுக்கு ஸாதநமாகச்சொல்லவொண்ணாதிறே. நிர்ஹேதுகமாகவருள் இப்படி எங்கேகண்டோமென்ன-புறம்பு தேடிப்போகவேணுமோ? [சிறியேனுடைச்சிந்தையுள்] - அத்யல்பனாயிருக்கிற என்னுடைய ஹ்ருதயத்தினுள்ளே. [மூவுலகும் இத்யாதி] - உடையவன் உடைமையைநோக்குவது முறையாலேயாயிருக்குமிறே. தம்முடைய ரக்ஷ்யவர்க்கத்தை முறையிலே நோக்குகிறவர், என்னுடைய ஹ்ருதயத்திலே பொருந்தி முறைகெடப் பரிமாறாநின்றார். தம்மைச் சிறுமைக்கெல்லையாக நினைத்தபடியாலே முறைகேடாய்த்தோற்றாநின்றது.

---

எட்டாம் பாட்டு.—அறியேன் இத்யாதி. "வெறிதேயருள்செய்வர்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை -அவன் தம்மோடே இத்யாதி.

"செய்வார்கட்கு" என்று ஸாதநத்தை அநுஷ்டிப்பார்க்கென்றாலோவென்ன - தாந்தாம் இத்யாதி. உகப்பென்றது ஈஸ்வரனுடைய உகப்பென்றபடி. ஈஸ்வரனுகப்பே விஷயீகாரஹேது வென்னுமதுக்கு ப்ரமாணம் - ப்ரியதம இத்யாதி. கேவலநிர்ஹேதுகமென்னலாமோ, ருச்யாதிகள் ஸாதநமானாலோவென்ன - ருசியுண்டானாலும் இத்யாதி- மூன்றுலோகத்தையும் வயிற்றிலே கொண்டது முறையோவென்ன - உடையவன் இத்யாதி. முறையாலேயாயிருக்குமிறே என்றதுக்கு - முறைகெடப்பரிமாறாநின்றார் என்றத்தோடே அந்வயம். "நெறியா -" முறையிலே. "தன் வயிற்றிற்கொண்டு" என்று அந்வயிப்பது. "நின்றொழிந்தார்" என்கையாலே - முறைகெடவென்றது ஸித்தம். முறைகெடப்பரிமாறுகையாவது - இவரை சேஷியாய்வைத்து, தான் சேஷபூதனாய்ப் பரிமாறுகை. சேஷபூதனை, சேஷிவிஷயீகரிக்கிறது முறைகேடோவென்ன - தம்மை இத்யாதி. ஆனால் அவன்படி எது? என்ன - அவன்இவரை இத்யாதி. என்னையாளும்பிரானார் - செய்வார்கட்குகந்து - வெறிதேயருள்செய்வர்; மூவுலகும் - நெறியா - தன் வயிற்றிற்கொண்டு -

யிற்று இது. அவன் இவரை மூவுலகுக்கும் அவ்வருகாக நினைத்திராநின்றான்; இவர், தம்மை மூவுலகுக்கும் இவ்வருகாக நினைத்திராநின்றார். (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

வயிற்றில்கொண்டு நின்றொழிந்தாரும்யவரும்
வயிற்றில்கொண்டு நின்றொருமூவுலகும் தம்
வயிற்றில்கொண்டு நின்றவண்ணம்நின்றமாலை
வயிற்றில்கொண்டு மன்னவைத்தேன்மதியாலே.

ஆ.—(வயிற்றில்கொண்டு) - அண்டங்களையும், அண்டாந்தர்வர்த்திகளான சதுர்முகர்களையும், சதுர்முகாஜ்ஞாநுவர்த்திகளான தேவாதி ஸ்த்தாவராந்தமான ஸமஸ்தஜந்துக்களையும், ஸ்வஸங்கல்ப ஸஹஸ்ரைகதேசத்திலே நியமித்தருளுகிற எம்பெருமான்படியை அறிந்துகொண்டேனிறே யென்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், இப்படி விஷயீகரிக்கைக்கு நீர் செய்ததென் என்னில்? அநுமதிமாத்ரம் பண்ணினேனத்தனை என்கிறார்.

[வயிற்றிற்கொண்டு நின்றொழிந்தாரும் யவரும் வயிற்றிற்கொண்டுநின்று] - ஜநத்தை வயிற்றிலேவைத்துப்பரிஹரிக்குமாபோலே, பரிஹரிக்கும் க்ஷத்ரியாதிகளையும் அவர்களில் அளவுடைய ப்ரஹ்மாதிகளையும் ஸங்கல்பத்திலேகொண்டு நிற்பதுஞ்செய்து. [ஒருமூவுலகும் தம்வயிற்றிற் கொண்டென்று மேலுக்கெல்லாம்] - மூன்றுலோகத்தையும் தன்ஸங்கல்ப ஸஹஸ்ரைகதேசத்தாலே நடத்துகையாலே ஓர் ஆயாஸம் தோற்றாதே பண்டுபோலேநின்ற ஸர்வேஶ்வரனை நிரந்தரமாக என்மநஸ்ஸிலே வைத்துக்கொண்டேன், அநுமதியாலே. ஜநத்தை வயிற்றிலே வைத்துப் பரிஹரிப்பாரைப் பரிஹரிக்கும் க்ஷத்ரியாதிகளும், அவர்களிற்காட்டில் அளவுடைய ப்ரஹ்மாதிகளும் இவர்களெல்லாம் தன்னுள்ளே அடங்கும்படியாக இடம் உடைத்தான மூன்றுலோகத்தையும் என்றுமாம். "மன்னவைத்தேன்மதியாலே" என்றது - இவன்படியை அறிந்துகொண்டேன் என்கிறார்" என்றும் செல்லுவர்.

ப.—அநந்தரம், அவனுடைய ஸர்வப்ரகார ரக்ஷகத்வத்தை என்னெஞ்சிலே ஸுஸ்த்திரமாக வைத்தேனென்கிறார்.

வயிற்றிற்கொண்டு - (தாயானவள் வயிற்றிலேவைத்து நோக்குமோபாதி) ரக்ஷகராய் நின்றுபோந்த, நின்றொழிந்தாரும் - க்ஷத்ரியர்களையும், யவரும் - (அவர்களுக்கு மேலான)ப்ரஹ்மாதிகளையும், வயிற்றில்- தன்னுடைய ஸ்வரூபைகதேசத்திலே, கொண்டு - கொண்டு, நின்று - நின்று, ஒரு - அத்விதீயமான, மூவுலகும் - ஜகத்த்ரயத்தையும், தம்- தம்முடைய, வயிற்றில் - ஸங்கல்பைகதேசத்திலே, கொண்டு - தரித்து, நின்றவண்ணம் - (யதாபூர்வாவஸ்த்திதியான) ஸ்வரூபத்தோடே, நின்ற - நின்ற, மாலை - ஸர்வாஶ்ரயரானவரை, மதியாலே - ("இசைவித்தென்னை" என்று அவர்தந்த)

---

சிறியேனுடைச்சிந்தையுள் நின்றொழிந்தார்; ஆகையாலே, மற்றருள் - அறியேன்இத்யந்வய: "ப்ரியதமேனவரணீயோலப்ய:" இதிஶ்ருதே:, ஜிஜ்ஞாஸாயிதரா... (அ)

அநுமதியாலே, வயிற்றில் - என்னகவாயிலே, கொண்டு - கொண்டு, மன்ன - பேராத படி, ன.

).—ஒன்பதாம்பாட்டில், 'இப்படி விஷயீகரிக்கைக்கு நீர் செய்தது என்?' என்னில்,— 'அநுமதிமாத்ரம் பண்ணினேனித்தனை' என்கிறார்.

[வயிற்றிற்கொண்டு நின்றொழிந்தாரும்] - ஜநநியானவள், ப்ரஜையை வயிற்றிலே வைத்து நோக்குமாபோலே, ஜகத்தைநோக்கும் க்ஷத்ரியாதிகளையும். [யவரும்] - அவர்களிற்காட்டில் அளவுடைய ப்ரஹ்மாதிகளையும். [வயிற்றிற்கொண்டு நின்றொருமூவுலகும்] - க்ஷத்ரியாதிகளையும் ப்ரஹ்மாதிகளையும் தன்னுள்ளே கொண்டிருக்குள்ள மூவுலகையும். [தம்வயிற்றிற்கொண்டு] - தம்முடைய ஸங்கல்ப ஸஹஸ்ரைகதேசத்திலேநடத்திக்கொண்டு என்னுதல்; அவர்களையும் வயிற்றிலேகொண்டு நின்று ஒருமூவுலகையும் தம்வயிற்றிலேகொண்டுஎன்னுதல். [நின்ற வண்ணம் நின்ற மாலே]- இவற்றையடையத் தம்வயிற்றிலேகொண்ட விடத்திலும், ஒருவிகாரமின்றிக்கே முன்புபோலேநின்ற ஸர்வேஶ்வரனை. ஸவிபூதிகனானவனை என்னுடைய ஹ்ருதயத்திலே கொண்டு ஒருநாளும் பிரியாதபடியாக வைத்துக்கொண்டேன். [மதியாலே] - "இவன்படியை அறிந்துகொண்டேன் என்கிறார்" என்னும் அம்மாள். அங்ஙனன்றிக்கே, "[illegible]" என்றுக்கி என் அநுமதிமாத்ரத்தாலே" என்பர் பட்டர்; அவன் புகுருகிறவிடத்தில் விலக்காமைபாலே என்கை.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. இப்படி விஷயீகரிக்கைக்கு நீர்செய்ததேன்? என்னில், - அநுமதிமாத்ரம்பண்ணினே னித்தனை யென்கிறார்.

[வயிற்றில்கொண்டு நின்றொழிந்தாரும்]-ஜநநியானவள், ப்ரஜையை வயிற்றிலே வைத்து நோக்குமாபோலே, ஜகத்தை நோக்கும் க்ஷத்ரியாதிகளையும். [யவரும்] - இந்த க்ஷத்ரியர்தங்களையும் நோக்கிக்கொண்டு போருகிற ப்ரஹ்மாதிகளையும். [வயிற்றில் இத்யாதி] - ப்ரஹ்மாதிகளையும் க்ஷத்ரியாதிகளையும் தன்னுள்ளே கொண்டிருந்துள்ள மூவுலகையும். [தம்வயிற்றில்கொண்டு] - தம்முடைய ஸங்கல்ப ஸஹஸ்ரைகதேசத்தாலே நடத்திக்கொண்டேன்னுதல்; வயிற்றில்கொண்டு நின்றொழிந்தாரையும் யவரையும் வயிற்றிற்கொண்டு நின்றொருமூவுலகையும் தம் வயிற்றிற்கொண்டேன்று பிரித்துச் சொல்லுதல். [நின்றவண்ணம்நின்றமாலே] - இவற்றையடையத் தன்வயிற்றில் கொண்டவிடத்திலும், ஒருவிகாரமின்றிக்கே நின்ற ஸர்வேஶ்வரனை. ஸவிபூதிகனை ஸர்வேஶ்வரனை என்னுடைய ஹ்ருதயத்திலே பேராதபடி வைத்தேன். [மதியாலே] - "இவன்

ஒன்பதாம்பாட்டு.—வயிற்றில் இத்யாதி. "மதியாலே - மன்னவைத்தேன்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை பட்டர்நிர்வாஹத்திலே-இப்படி இத்யாதி.

"வயிற்றில்கொண்டுநின்று" என்று விஶேஷிக்கையாலே ஃபலித்தஹாவம் - ஜநநி இத்யாதி. "நின்றொழிந்தாரும் - " நின்று போந்தவர்களுமென்றபடி. ப்ரஹ்மாதிகளையுமென்றது - "[illegible]" என்றவிடத்திற்போலே, ப்ராஹ்மணாதிகளையு மென்றபடி. வஸிஷ்டாதிகள், இக்ஷ்வாகு வம்ஶத்தில் ராஜாக்களை ஸ்வஸ்வமஹிமாவிலேலே நோக்கிக்கொண்டிருந்தார்களிறே. ஆதிஶப்தத்தாலே - அவர்களுக்கும் கௌரவ்யரான தேவர்களைச் சொல்லுகிறது. வயிறு - ஹ்ருதயம். நின்றவண்ணம் - பூர்வமிருந்த ப்ரகாரத்திலே. 'மன்ன' - பேராதபடி. "மதி" என்று - ஜ்ஞாநமாதல், அநுமதியாதல். "மதி" என்றதுக்கு அம்மாள் நிர்வாஹம் - "மதி" என்று ஜ்ஞாநமாய், ஜ்ஞாநத்தாலே அவனை ஹ்ருதயத்திலே வைத்தேன்றபடி. அதாவது - அவன்படிகளை அறிந்து

படியை அறிந்துகொண்டேனென்கிறார்” என்னும் அம்மாள். ௰”
என்றுக்கி, “அநுமதிமாத்ரத்தாலே”? என்பர் பட்டர்; அதாவது - அவன் புகுருகிறவிடத்தில் விலக்கிற்றிலனேன்கை. (௯)

## பத்தாம் பாட்டு.

வைத்தேன்மதியால் எனதுள்ளத்தகத்தே
எய்த்தேயொழிவேனல்லேன் என்றுமெப்போதும்
மொய்த்தேய்திரைமோதுதண்பாற்கடலுளால்
பைத்தேய்சுடர்ப் பாம்பணைநம்பரனையே.

ஆ.—(வைத்தேன்மதியால்) - அவன்படி எங்ஙனேயாக அறிந்ததென்றால்,—ஆஶ்ரிதர்பக்கல் ஸந்நிவிஷ்டனாயிருக்கை அவன்படியென்று அறிந்துகொண்டேன்; இது அவன்படியான பின்பு, அவனை நான் ஒருநாளும் விடுவேனல்லேனென்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், ‘எம்பெருமான் ஸபரிகரமாக என்னுள்ளே வந்து புகுந்தான்; அவனை இனி ஒருநாளும் விஶ்லேஷித்து து:கப்படேன்’ என்கிறார்.

[மொய்த்தென்று தொடங்கி] - நிரந்தரமாகத் தகுதியான திரைகள் மோதா நிற்பதுஞ்செய்து ஶ்ரமஹரமான திருப்பாற்கடலினுள்ளே தன்னுடைய ஸ்பர்ஶ ஸுகத்தாலே ஃபணம் விரிப்பதும்செய்து தகுதியான தேஜஸ்ஸையுமுடையனான திருவநந்தாழ்வானை அணையாகவுடையனுமாய் ஆஶ்ரிதஸுலபனான ஸர்வேஶ்வரனை.

ப.—அநந்தரம், ஸர்வஸ்மாத்பரனான க்ஷீராப்திநாயனை என்னெஞ்சுக்குள்ளே வைத்து, இடைவிடாமல் அநுபவிப்பேனென்கிறார்.

மொய்த்து - செறிந்து, ஏய் - (திருவநந்தாழ்வான் திருமேனிக்குத்) தகுதியான, திரை - திரைகள், மோது - அலையாநிற்பதாய், தண் - ஶ்ரமஹரமான, பாற்கடலுள் - க்ஷீராப்தியினுள்ளே, பைத்து - விரிகிறபணங்களையுடையனாய், ஏய் - ஸ்வாபாவிகமான, சுடர் - தேஜஸ்ஸையுடையனான, பாம்பு - திருவநந்தாழ்வானை, அணை - படுக்கையாக உடையனாய்; நம் - நமக்கு, பரனை - ஶேஷியானவனை, மதியால் - என்னநுமதியாலே, எனது - என், உள்ளத்தகத்தே - நெஞ்சுக்குள்ளே, வைத்தேன் - வைத்தேன்: என்றும் - எல்லாத்திவஸத்திலும், எப்போதும் - எல்லாப்போதிலும், எய்த்தேயொழிவேனல்லேன் - இனி விஶ்லேஷித்துத் தளரக்கடவேனல்லேன். இந்நிலையிலே தவிரக்கடவேனல்லேனென்றுமாம்.

இ.—பத்தாம்பாட்டில், அவன் ஸபரிகரமாக என்னுள்ளே புகுந்தான்: அவனை இனி ஒருகாலமும்பிரிந்து க்லேஶப்படுகிறேனல்லேன் என்கிறார்.

[வைத்தேன் இத்யாதி] - அநுமதியாலே என்னெஞ்சினுள்ளே வைத்தேன். அநுமதிமாத்ரத்துக்குள்ள ஸாபல்யமென்? அவன் ஹ்ருதயஸ்தனானபின்பு பிரிந்து

கொண்டு என்றதாய், நிர்ஹேதுகமாக அங்கீகரிக்கும் ப்ரகாரத்தையறிந்து, “இனி ப்ரதிஷேதிக்கக் கடவோமல்லோம்” என்றிருக்கிறாரென்றபடி. “ஈதிஃ-ஊநு-ஈதிஃ” என்றது - “யாதநூ நஃவஸ-ஐவாய-௩ஃ” என்று தாதுலீநமானவர்த்தத்துக்கு வாசகமான உபஸர்க்கத்தைக் கூட்டி, அநுமதியென்கிறதென்றபடி. (௯)

துஃகப்படுகிறேனல்லேன். இது எத்தனை குளிக்கு நிற்கும் என்ன? - [என்றும் எப்போதும்]-ஸர்வதிவஸத்திலும், ஸர்வாவஸ்தையிலும். [மொய்த்தேய்திரை] - நிரந்தரமாய், ஏய்ந்த - தகுதியான, திரை மோதாநிற்பதாய், ஸ்ரமஹரமான திருப்பாற்கடலிலே: சிறுதிவலை படிலும், "மோதிற்று" என்னும்படியிறே ஸௌகுமார்யமிருப்பது. [பைத்தேய் சுடர்ப்பாம்பணை] - திரைகள் அவன்திருமேனியில் படாதபடி விரித்த பணத்தையுடையனுப் அநுபவத்துக்குத் தகுதியான தேஜஸ்ஸையுடைய திருவநந்தாழ்வானைப் படுக்கையாக வுடையவனை. [நம்பரனை] - நமக்கு ஸுலபனான ஸர்வேஸ்வ

- வைத்தேன் மதியால். "அரவத்தமளியினோடும் அழகிய பாற்கடலோடும்" படியே.

ஈடு.—பத்தாம்பாட்டு. எம்பெருமான் ஸபரிகரமாக என்னுள்ளேபுகுந்தான்; அவனை நான் இனி ஒருநாளும் விஶ்லேஷித்து துஃகப்படேனென்கிறார்.

[வைத்தேன்மதியாலென துள்ளத்தகத்தே] - அநுமதியாலே என்னெஞ்சினுள்ளே வைத்தேன்: ஓரநுமதிமாத்ரத்துக்கு இத்தனை பலமுண்டாவதே!. [எய்த்தேயொழிவேனல்லேன்] -இனி ஒருநாளும் இளைத்து க்லேஶப்படக்கடவே னல்லேன். இவ்வார்த்தை எத்தனைகுளிக்கு நிற்குமென்ன,-[என்றுமெப்போதும்] - எல்லாத்திவஸத்திலும், எல்லாவவஸ்த்தையிலும். [மொய்த்தேய்திரை] - திரண்டு தகுதியான திரைகள் மோதாநின்றுள்ள ஸ்ரமஹரமான திருப்பாற்கடலிலே. சிறுதிவலை படிலும் "மோதிற்று" என்னும்படியிறே ஸௌகுமார்யமிருப்பது! [பைத்தேய்சுடர்ப்பாம்பணை] - திரைகள்வந்து திருமேனியில் படாதபடி விகஸிதமான பணங்களையுடையனுய், பகவதநுபவத்தாலுந்த தகுதியான புகரையுடையனுன திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகையாலுண்டான ஏற்றத்தையுடையவன். [நம்பரனை] - அவ்வேற்றத்தை நமக்கு வெளியிட்டுத்தந்தவனை: வைத்தேன்மதியால் எனதுள்ளத்தகத்தே, எய்த்தேயொழிவேனல்லேன் என்று மெப்போதும். * அரவத்தமளியினோடும் அழகியபாற்கடலோடுங்காணும் இவர்திருவுள்ளத்திலே புகுந்திருந்தது. (க0)

---

பத்தாம்பாட்டு.—வைத்தேன் இத்யாதி. "பாம்பணைநம்பரனை - எனதுள்ளத்தகத்தே - வைத்தேன்மதியால், எய்த்தேயொழிவேனல்லே னென்றுமெப்போதும்" என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - எம்பெருமான் இத்யாதி. "பாம்பணைநம்பரன்" என்றத்தைப்பற்ற - ஸபரிகரமாக என்றது.

"மன்னவைத்தேன்மதியால்" என்று கீழேசொல்லியிருக்க, மீளவும் "வைத்தேன்மதியால் எனதுள்ளத்தகத்தே" என்றதுக்கு பாவம் - ஓரநுமதி இத்யாதி. "எய்த்தேயொழிவேனல்லேன்" என்று - முழுச்சொல்லாய், இளைத்து க்லேஶப்படக் கடவேனல்லேனென்றபடி. "என்றுமெப்போதும்" என்ற பதத்தைக்கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - இனிஒருநாளும் இத்யாதி. "என்றுமெப்போதும்" என்ற புநருக்திக்கு பாவம்-எல்லாத்திவஸத்திலும் இத்யாதி. "மொய்த்து, ஏய்" என்று பதச்சேதம். மொய்த்து - திரண்டு. "ஏய்" என்று - தகுதியாய், திருமேனியில் ஸௌகுமார்யத்துக்குத் தகுதியான திரையென்றபடி. "தகுதியானதிரை" என்றுவைத்து, "மோது" என்னலாமோவென்ன - சிறுதிவலை இத்யாதி. "பைத்து, ஏய், சுடர்" என்று பதச்சேதம். "பைத்து" - விகஸிதமானபணங்களையுடையனுய் என்றபடி. இத்தால் பாவம் - அரவத்தமளி இத்யாதி. அமளி - படுக்கை. மொய்த்தேய்திரை என்றுதொடங்கி, பரனை - மதியாலெனதுள்ளத்தகத்தே - வைத்தேன்; என்றுமெப்போதும்-எய்த்தேயொழிவேனல்லேன் என்றுஅந்வயம்: ஆல் - அவ்யயம். (க0)

## பதினோராம் பாட்டு.

சுடர்ப்பாம்பணைநம்பரனைத் திருமாலை
அடிச்சேர்வகை வண்குருகூர்ச்சடகோபன்
முடிப்பான்சொன்னவாயிரத்து இப்பத்தும்சன்மம்
விடத் தேய்ந்தறநோக்கும் தன்கண்கள்சிவந்தே.

ஆ.—(சுடர்ப்பாம்பணை) - இத்திருவாய்மொழி, ஸகலதநுஸவவிரோயி ஸம்ஸார த்ருஷ்டிவிஷ மென்கிறார்.

ஒ.—நிகமத்தில், கற்றவர்களுடைய ஸம்ஸாரத்துக்கு இப்பத்தும் த்ருஷ்டி விஷம் என்கிறார்.

[அடிச்சேர் வகையென்று தொடங்கி] - திருவடிகளைச் சேருகை ஸ்வபாவ மான ஆழ்வார் தம்முடைய ஸாம்ஸாரிக ஸகலது:க்கங்களையும் போக்குகைக்காக அருளிச் செய்த ஆயிரம் திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி.

ப—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு ஃபலமாக, ஜந்மஸம்பந்தநிவ்ருத் தியை. அருளிச்செய்கிறார்.

சுடர் - நிரவதிகதேஜஸ்ஸையுடைய, பாம்பு - திருவநந்தாழ்வானை, அணை - படுக்கையாகவுடையனாய், நம் - நமக்கு, பரனை - சேஷியான, திருமாலை - ஸ்ரிய:பதியை, அடி - திருவடிகளிலே, சேர்வகை - சேரும்படியை, முடிப்பான் - தலைக் கட்டிக்கொள்ளுகைக்காக, வண் - நிரதிஶயஸம்பத்தையுடைய, குருகூர் - திருநகரிக்கு நிர் வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்த, ஆயிரத்து - ஆயி ரத்தில், இப்பத்தும் - இப்பத்தும், சன்மம் - (ஃபலவநுபவப்ரதிபந்தகமான)ஜந்மம், அற - மிகவும், தேய்ந்து - க்ஷயித்து, விட - நஶிக்கும்படியாக, தன் - தன், கண்கள் - கண்கள், சிவந்து - சிவந்து, நோக்கும் - பார்க்கும். ஜந்மவிநாஶஹேதுத்வத்தால் திரு வாய்மொழியைப் புருஷஸமாதியாலே சொல்லுகிறது. இது கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இப்பத்தானது, தன்னைக் கற்றவர்கள் ஸம்ஸாரத்துக்கு த்ருஷ்டிவிஷம் என்கிறார்.

[சுடர்ப்பாம்பணை நம்பரனைத் திருமாலை] - இப்பத்தும் கற்றார்க்கு ஜந்மமறு கையிறே ஃபலமாகச்சொல்லுகிறது. அது அற்றால் போய் அநுபவிக்கும் ப்ராப்யத்தைச் சொல்லுகிறார்-பர்யங்கவித்யையிற் சொல்லுகிறபடியே திருவநந்தாழ்வான் மடியிலே ஸர் வேஶ்வரனும் பிராட்டியும் எழுந்தருளியிருக்கிற இருப்பை அநுபவிக்கையிறே முக்த ப்ராப்யம்: "அணைவதரவணைமேல் பூம்பாவையாகம் புணர்வது" என்னக்கடவதிறே. [அடிச்சேர்வகை யித்யாதி] - திருவடிகளைச் சேருகையே ஸ்வபாவமாக உடைய ஆழ்வார், ஜ்ஞாநாநந்தங்களன்று நிரூபகம்; திருவடிகளில் சேர்த்தியே நிரூபகம். [முடிப்பான் சொன்னவாயிரத்திப்பத்தும்] - ஸம்ஸாரஸம்பந்தத்தையறுக்க அருளிச் செய்தஆயிரத்திலும் இப்பத்து. அடிச்சேர்வகை - முடிப்பான் என்றுமாம். [சன்மமித் யாதி]-ஜந்மஸம்பந்தம் அறும்படிஇப்பத்தும் தன்கண்கள் சிவந்துநோக்கும். அதாகிறது- ஜந்மத்துக்கு இப்பத்தும் த்ருஷ்டிவிஷமென்கை. ஜந்மத்துக்கும் இப்பத்துக்கும் ஸஹாந வஸ்தாநலக்ஷண விரோதமுண் டென்கை.

ஈடு.—நிகமத்தில் - இப்பத்தானது, தன்னைக்கற்றவர்கள் ஸம்ஸாரத்துக்கு த்ருஷ்டிவிஷ மென்கிறார்.

[சுடர்ப்பாம்பணைநம்பரனைத்திருமாலை] - இப்பத்தும் கற்றார்க்கு ஜந்மமறுகையிறே ஃபலமாகச் சொல்லுகிறது; அத்தால் போய் அநுபவிக்கும் ப்ராப்யத்தைச்சொல்லுகிறது - பர்யங்கவித்யையிற் சொல்லுகிறபடியே திருவநந்தாழ்வான்மடியிலே பெரியபிராட்டியாரோடே எழுந்தருளியிருக்கக் கண்டு அநுபவிக்கையிறே முக்தப்ராப்யபோகந்தான். [அடிச்சேர்வகை இத்யாதி] - திருவடிகளிலே சேருகையே தமக்கு ஸ்வபாவமாகவுடைய ஆழ்வார். ஜ்ஞாநாநந்தங்களன்று இவர்க்கு நிரூபகம்; ஶேஷத்வமாயிற்று. [முடிப்பான் சொன்ன இத்யாதி] - ஸம்ஸார ஸம்பந்தத்தை அறுக்கைக்காகச் சொன்ன ஆயிரத்து இப்பத்து அடிச்சேர்வகை - முடிப்பானென்றுமாம். சன்மமானது விட்டுப்போம்படியாக நோக்கும். அதுசெய்யுமிடத்தில், [இப்பத்தும் - தன்கண்கள்சிவந்து - நோக்கும்] - அதாவது-ஜந்மத்துக்கு இப்பத்தும் த்ருஷ்டிவிஷமென்கை. இப்பத்துக்கும் ஜந்மத்துக்கும் ஸஹாநவஸ்தாநலக்ஷண விரோத முண்டென்கை. (கக)

---

*நிகமம்.—சுடர்ப்பாம்பணை இத்யாதி. "சன்மம்விட - கண்கள்சிவந்து - நோக்கும்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - இப்பத்தானது இத்யாதி.*

*"ஜந்மத்துக்கு இப்பத்தும் த்ருஷ்டிவிஷம்" என்கிற ப்ரகரணத்திலே, "சுடர்ப்பாம்பணை நம்பரனைத்திருமாலை" என்று விஶேஷிக்கிறதுக்கு பாவமேதென்ன அருளிச்செய்கிறார் - இப்பத்தும் கற்றார்க்கு இத்யாதி வாக்யத்வயத்தாலே. போய்அநுபவிக்கும் ப்ராப்ய மெப்படியிருக்குமென்ன - பர்யங்கவித்யையில் இத்யாதி. வகை - ஸ்வபாவம். "அடிச்சேர்வகை" என்றத்தால் ஃபலிதம் - ஜ்ஞாநாநந்தங்கள் இத்யாதி. முடிப்பான் - முடிக்கைக்காக என்றபடி. விவரணம் - இப்பத்துக்கும் இத்யாதி. சுடர்ப்பாம்பணை என்றுதொடங்கி, இப்பத்தும் - தன்கண்கள்சிவந்து - சன்மம் - தேய்ந்தறநோக்கும் இத்யந்வய:. தேய்ந்தற - விட்டுப்போம்படியாக. ஜந்மவிநாஶஹேதுத்வத்தாலே இப்பத்தைப் புருஷஸமாதியாலே சொல்லுகிறது.* (கக)

---

*த்ரவிடோபநிஷத்ஸங்கதி.*—[illegible]

---

*த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.*—[illegible]

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி**

இருந்தவன்தான்வந்திங்கிவரெண்ணமெல்லாம்
திருந்தவிவர்தந்திறத்தேசெய்து - பொருந்தக்
கலந்தினியனுய்நிற்கக்கண்டசடகோபர்
கலந்தநெறிகட்டுரைத்தார்கண்டு.

---

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.

# எட்டாந்திருவாய்மொழி—கண்கள்சிவந்து - ப்ரவேஶங்கள்.

ஒ.—எட்டாந்திருவாய்மொழியில், இப்படி ஆழ்வாரோடே ஸம்ஶ்லேஷிக்கப் பெற்று இவர் தம்மிற்காட்டிலும் அதிப்ரீதனான எம்பெருமான், இவர் * வளவேழுலகிற்படியே தம்மை அயோக்யராக அநுஸந்தித்து அகன்று வ்ருத்தஸம்ஶ்லேஷம் கலங்காமே இஸ்ஸம்ஶ்லேஷம் உருவச்செல்லுகைக்கு உறுப்பாக இவருடைய ஆத்மவைலக்ஷண்யத்தைக் காட்டிக்கொடுக்கையிலே உபக்ராந்தனாய், "முதலிலே தம்முடைய ஆத்மஸ்வரூபாநுஸந்தாநம் பண்ணவென்னில், 'இந்த க்ஷேத்ரத்தில் என்?' என்று அத்தைக் காற்கடைக்கொண்டு பிடிதாரார்" என்று பார்த்தருளி, ஆத்மாவலோகத்துக்கு இசையும்படியாக நிரதிஶயபோக்யனான தன்னுடைய ஸ்வரூபரூபகுணாதிகளைக் காட்டிக்கொடுத்து, அவ்வழியாலே, "இவ்வாத்மா தனக்கு அநந்யார்ஹஶேஷம்" என்னுமிடத்தையும், "தனக்கு நிறம் கொடுக்கும்படியான வைலக்ஷண்யத்தை யுடைத்து" என்னுமிடத்தையும் காட்டிக் கொடுத்தருளக்கண்டு அநுஸந்தித்து ப்ரீதராகிறார். "முதலிலே இரண்டரைப்பாட்டு - * இருத்தும்வியந்தில் அநுபவித்த அழகு பின்னாட்டுகிறது" என்றுஞ்சொல்லுவர். "ஆத்மா ஸ்வாஶ்ரயமென்னுமிடத்தைக் காட்டிக்கொடுக்கைக்காக, அதுக்கு ஆஶ்ரயமான தன்னை முற்படக்காட்டிக் கொடுக்கிறான்" என்றுஞ் சொல்லுவர்.

ப.—எட்டாந்திருவாய்மொழியில், ஜீ-தம்முடைய நெஞ்சிலே வந்து புகுந்திருந்து இந்த்ரியாதிவிரோதிகளையும் நஶிப்பித்துத் தன்பேறாகக்கலந்து ப்ரீதனான ஈஶ்வரன், "'இவருக்கு நிகர்ஷாபாதகமான விரோதி வந்தேறி' என்னுமிடம் இவரறியும்படி, இவருடைய ஸ்வரூபமானது நமக்கு ப்ரகாரமாயிருக்கிறபடியையும், விலக்ஷணமாயிருக்கிறபடியையும் காட்டி நைர்தோஷ்யத்தை ப்ரகாஶிப்பிப்போம்" என்று திருவுள்ளம்பற்றி; இவருடைய ஆத்மஸ்வரூபம் தன்னை ஆஶ்ரயித்திருக்கு மென்கைக்கு உறுப்பாகத் தான் இவருடைய ஹ்ருதயத்திலே இருக்கிறவிருப்பையும், ஸர்வாந்தராத்மபூதனான தன்னுடைய நிரதிஶயஜ்ஞாநாநந்த யோகத்தையும், அஹமர்த்தபூதனான ஆத்மாவும் தனக்கு ப்ரகாரபூதனென்னு மிடத்தையும், ஸர்வகாரணபூதனான தான் விலக்ஷணஸாரஸ்யத்தையுடையனான சேதநனுக்கு அப்ருதக்பூதனான நிலையையும், ஸ்வப்ரகாரபூதனான ஆத்மாவினுடைய துரவகமத்வத்தையும், நிஷ்க்ருஷ்டாத்மஸ்வரூபத்தினுடைய ப்ராப்யபாவத்தையும், ஏவம்வித ஆத்மஜ்ஞாநமில்லாதாருடைய ஸம்ஸாரஸம்பந்தத்தையும், ஆத்மப்ராப்திகாமனுடைய அந்திமஸ்ம்ருத்யபேக்ஷையையும், ஸ்வரூபைக்யரூபமான மோக்ஷம் அஸம்பாவிதமென்னுமிடத்தையும், ஏவம்விதனான ஆத்மாவுக்குத் தன்பக்கல் ப்ரத்யாஸத்தியே உஜ்ஜீவநஹேதுவென்னுமிடத்தையும் ப்ரகாஶிப்பித்தபடியை அநுஸந்தித்து, இப்படி விலக்ஷணமான ஆத்மாவினுடைய நைர்தோஷ்யத்தை ப்ரகாஶிப்பித்துத் தன்திருவடிகளிலே சேர்த்துக்கொண்டானென்று ப்ரீதராகிறார்.

இ—எட்டாந்திருவாய்மொழியில். * மாயக்கூத்தனில் விடாய்தீர * இருத்தும் வியந்திலே, இப்படி "எவ்வாய்ச்சுடரும் தம்மில் முன்வளாய்க்கொள்ள" என்கிற படியே நிரவயிகப்ரீதியோடே ஸம்ஶ்லேஷிக்கப்பெற்றனாய், இவர்விடாயும் தீர்ந்து தன்விடாயும் தீர்ந்து தம்மிலும் அதிகப்ரீதனானவன், "இவர் * வளவேழுலகிற்படியே தம்மை 'சிறியேனுடைச் சிந்தையுள்' என்று அயோக்யராக அநுஸந்தித்து அகலுவார் ஒருத்தர்; அத்தாலே வ்ருத்தஸம்ஶ்லேஷம்ஶயிலமாம்: இஸ்ஸம்ஶ்லேஷரஸம் கலங்காமே உருவச்செல்லுகைக்கு உறுப்பாக ஆத்மவைலக்ஷண்யத்தைக் காட்டுவோம்" என்று காட்டிக்கொடுக்கையிலே உபக்ரமித்தான்; இவர்தாம் அகலநினைப்பது - "நித்ய ஸம்ஸாரியாய்ப்போந்த இவ்வாத்மா அங்குத்தைக்கு அயோக்யம்" என்றாயிற்று; அவன் வைலக்ஷண்யத்தைக் காட்டிக் கொடுக்கையாவது:— "ஸ்வயம்ப்ரகாஶஜ்ஞாநாதி குணகமாய், "ஶாவவொஷூகிவெஷெஹீ" என்று பிராட்டிமாரோபாதியும் ஸ்ரீகௌஸ்துபத்தோபாதியும் உம்மோட்டைச்சேர்த்தி நமக்கு ஸத்ருஶமாய்க்காணுமிருப்பது: வந்தேறியான குறையைப் பார்க்கக்கடவீரல்லீர் காணும்"என்றாயிற்று. "இந்தஸ்வரூப வைலக்ஷண்யத்தை இவர்நெஞ்சிலே படுத்தவே இவர் நம்மைவிடார்; அதுசெய்யுமிடத்தில் முதலிலே 'ஆத்மஸ்வரூபத்தைப் பாரீர்' என்னில்; அவ்வாயன்றி யானறியேன்' என்று நம்முடைய குணங்களிலே கால்தாழ்ந்து, புறம்பொன்றில் போகாதவராகையாலே, 'மின்மினிபோலேஇருக்கிற இதுகொடு கார்யமென்?' என்று அத்தைக் காற்கடைக்கொண்டு பிடிதாரார்" என்றுபார்த்து, தன்வடிவைக்காட்டி இவரை வரவணைத்து, இவருடைய ஸ்வரூபம் தனக்கு ப்ரகாரமாய், தன்னைக்காணும் காட்சிக்குள்ளே காணலாம்படியிருக்கிறபடியையும், தனக்கும் நிறங்கொடுக்கும்படியான வைலக்ஷண்யத்தை உடைத்தாயிருக்கிறபடியையும் காட்டிக்கொடுக்கக் கண்டு ப்ரீதராகிறார். முதல் இரண்டரைப்பாட்டாலே — தன்வடிவழகைக்காட்டி, அவ்வழியாலே ஸ்வரூபத்தைக் காட்டிக் கொடுக்கிறானாயிருக்கிறது. "முதல் இரண்டரைப்பாட்டு ஆத்மாஶ்ரயமென்னுமிடத்தைக் காட்டிக்கொடுக்கைக்காக ஆஶ்ரயமான தன்னைக் காட்டிக்கொடுக்கிறான்" என்றும் சொல்லுவர். * "இருத்தும் வியந்தில் அழகு பின்னாட்டுகிறது" என்றும் சொல்லுவர்கள்.

ஈடு.— * மாயக்கூத்தனில் இவர்க்கோடின விடாயெல்லாம் ஆறும்படி வந்து ஸம்ஶ்லேஷித்து, தன்விடாயுந்தீர்ந்து, இவரைப்பெற்ற பேற்றாலே ப்ரீதனாய், "நினைவின்றிக்கே யிருக்கச்செய்தே இங்ஙனே சேரவிழுந்தது. இனி ப்ரவ்ருத்தமான ஸம்ஶ்லேஷம் ஶயிலமாகவொண்ணாது; இவராகிறார் - * வளவேழுலகிலாழ்வாராயிற்று; நம்மைக் கிட்டக்கோள்ள 'சிறியேனுடைச்சிந்தை' என்று தம் அயோக்யதையை அநுஸந்தித்தவர், இன்னம் அதுபின்னாட்டி அகலப்பார்ப்பர்; ஏற்கவே பரிஹரிக்கவேணும்" என்றுபார்த்து, "இனி இவர்தாம் அகலப்பார்ப்பதும் 'அநாதிகாலம் ஸம்ஸரித்துப்போந்த ஆத்மவஸ்து அங்குத்தைக்கு யோக்யமன்று' என்றாயிற்று: இது அங்ஙனல்ல, வந்தேறியான இத்தைப்பா

---

கண்கள்சிவந்து ப்ரவேஶ: கீழும் மேலும் ஐகவத்ப்ரகரணமாயிருக்க, இதில் ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யம் சொல்லுகிறதுக்கு ஸங்கதியேது? என்கிற ஶங்கையிலே ஸங்கதியருளிச்செய்கிறார் - மாயக்கூத்தனில் இத்யாதி. சஶப்தத்தாலே - ஆழ்வாருடையவிடாயும் தீர்ந்ததென்றபடி. ஶைதில்யப்ரஸக்தி ஏதென்ன - இவராகிறர் இத்யாதி. பரிஹரிக்கும் க்ரமமேதென்ன - இனிஇவர்தாம் இத்யாதி. அடியைப் பாரீர் என்றது - இவ்வாத்ம வஸ்துவினுடைய ஸ்வாபாவிகா

ராதே அடியைப்பாரீர்" என்று, "இவ்வாத்மவஸ்துவினுடைய வைலக்ஷண்யத்தை இவர் நெஞ்சிலே படுத்தவேணும்" என்றுபார்த்து; "நித்யமாய், ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய், நமக்கு அத்யந்தஶேஷமாய்க்காணு மிருப்பது; நீர் கிட்டுமது நமக்கு அவத்யமல்ல: கௌஸ்துபத்தோபாதி பிராட்டிமாரோபாதி நமக்கு நிறமாமித்தனை" என்று இவருடைய ஸ்வரூபவை லக்ஷண்யத்தை இவர்நெஞ்சிலே படுத்துகிறானாய்; "அதுசெய்யுமிடத்தில், 'உம்முடைய ஆத்மஸ்வரூபமிருக்கும்படி காட்டவாரீர்' என்றால், 'மின்மினிபோலே யிருக்கிற இதில் சரக்கேன்?' என்று இவர் இசைவாரொருவரல்லர்; 'அவ்வாயன்றியானறியேன்மற்றருள்' என்று நம்வடிவழகிலே துவக்குண்டிருப்பதொன்றுண்டு; நம்மை முன்னிட்டு நமக்கு ப்ரகாரமாயிருக்கிற ஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுப்போம்" என்று பார்த்து, "வாரீர், நம்முடைய வடிவழகிருக்கிறபடிகண்டீரே; நம்மைக் காணும் காட்சியிலே உம்மையுங் காணலாய்க்காணு மிருப்பது" என்று தன்னுடைய வடிவழகை முற்பட அநுபவிப்பித்து, தனக்கு நூபுராதிகளோபாதி அத்யந்தபோக்யமுமாய் அத்யந்தஶேஷமுமாயிருக்கிற ஆத்மஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுக்க, அத்தை அநுபவித்து இனியராகிறார். இத்திருவாய்மொழியில் முதலிரண்டரைப்பாட்டாலே தன்னையநுபவிப்பித்து, அநந்தரம் ஆத்மஸ்வரூபத்தைக்காட்டிக்கொடுத்தானாயிருக்கும். அதுக்குஅடியென்? என்னில், —"வஸ்துதான் ஸ்வாஶ்ரயமாயல்லது இராமையாலே ஆஶ்ரயமான தன்னைக்காட்டி, பின்னை ஸ்வரூபத்தைக்காட்டிக் கொடுக்கிறான்" என்பாருமுண்டு. அன்றிக்கே, "ஸ்வரூபமிருக்கும்படியைக் காட்டித்தரவாரு மென்றால் இசையார்' என்று தன்னை முற்படக் காட்டிக்கொடுக்கிறான்" என்பாருமுண்டு. "இரண்டரைப்பாட்டாலும் - * இருத்தும்வியந்திற்கலவி பின்னாட்டுகிறது" என்பாரு

## முதற் பாட்டு.

கண்கள்சிவந்துபெரியவாய் வாயுஞ்சிவந்துகனிந்து உள்ளே
வெண்பலிலகுசுடரிலகு விலகுமகரகுண்டலத்தன்
கொண்டல்வண்ணன்சுடர்முடியன் நான்குதோளன்குனிசார்ங்கன்
ஒண்சங்கதைவாளாழியான் ஒருவனடியேனுள்ளானே.

*ப.—(கண்கள்சிவந்து.) - என்னோடே ஸம்ஶ்லேஷத்தாலுண்டான ஸந்தோஷத்தை யுடைய* (continues) *னுடைய ஸ்த்தைர்யார்த்தமாகத் தன்னுடைய நிரவதிகமான அழகைக்காட்டி என்னை வஶீகரித்துக்கொண்டு என்னுள்ளே இருந்தருளினானென்கிறார்.*

---

*காரத்தைப் பாரீர்என்றபடி. "அடியைப்பாரீர்" என்றதின் விவரணம் - நித்யமாய் இத்யாதி. ஆனால், ஶ்ரீவத்விக்ரஹத்தையும் ஸ்வரூபத்தையும் சொன்னவநந்தரம் ஆத்மஸ்வரூபத்தைச் சொல்லுவானென்? என்ன அருளிச்செய்கிறார் - அதுசெய்யுமிடத்தில்என்றுதொடங்கி மேலெல்லாம். நம்மைக் காணும்காட்சியிலே இத்யாதிக்கு - நம்முடையவிக்ரஹாதிகளோபாதி உம்முடைய ஸ்வரூபமும் நமக்குப்பாரதந்த்ரமான ஆகாரத்தாலே போக்யமாயிருக்குமென்றுகருத்து. கீழ், கௌஸ்துபத்தோபாதி என்றது - ப்ரணயித்வநிபந்தந ஸ்வாபிப்ராயத்தாலே; இங்கு நூபுராதிகளோபாதி என்றது தத்த்வஸ்த்திதியால்வந்த ஆழ்வாரபிப்ராயத்தாலே. அதுக்கடியென்? என்னில் என்றது - ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தைக் காட்டுகிறவிடத்திலே முதலிரண்டரைப்பாட்டாலே அநுபவிப்பிக்கைக்கடியென்? என்னில் என்றபடி.*

ஒ.—முதற்பாட்டில், எம்பெருமான் தன்னோட்டைக் கலவியாலே புதுக் கணித்து ஸௌந்தர்யாதிகளைக் காட்டக்கண்டு அநுபவிக்கிறார்.

[வாயும் சிவந்துகனிந்து] - நிரதிசயபோக்யமான செவ்வியையுடைத்தாய். [உள்ளே வெண்பலிலகு சுடரிலகுவிலகு மகரகுண்டலத்தன்] - என்னோட்டைக் கலவி யாற்பிறந்த ஹர்ஷப்ரகர்ஷத்தாலே முறுவல்செய்த திருப்பவளத்தில் சிவப்போடு பணைத் தொடையாய் உள்ளே விளங்காநின்றுள்ள திருமுத்தின் ஒளியையும் விளங்காநின்று கொண்டு அலைந்துவருகிற மகரகுண்டலத்தையுமுடையான். சங்கு, கதை, வாள் ஆழி யான். [ஒருவன்] - அத்விதீயன்.

ப.—முதற்பாட்டில், ஸர்வப்ரகாரவிலக்ஷணமான வடிவழகோடே என் னெஞ்சுக்குள்ளே புகுந்திருந்தானென்கிறார்.

(ஸம்ஶ்லேஷப்ரீத்ய திஶயத்தாலே), கண்கள் - திருக்கண்கள், சிவந்து - சிவந்து, பெரியவாய் - பெருத்திருப்பனவாய், (அப்படியே), வாயும் - திருவதரமும், சிவந்து - சிவந்து, கனிந்து - பழுத்து, உள்ளே - அகவாயிலே, வெண் - வெளுத்த, பல்- திருமுத்து நிரையினுடைய, இலகு - விளங்குகிற, சுடர் - சுடரையும், இலகு - அத் யுஜ்ஜ்வலமாய், விலகு - அசைகிற, மகரகுண்டலத்தன் - மகரகுண்டலத்தையுமுடைய னாய், (இவ்வவயவஶோபைக்கும் பரபாகரூபமாய்), கொண்டல் - காளமேகத்தின், வண் ணன் - நிறம்போலேயிருக்கிற ரூபஶோபையையுடையனாய், (அவ்வடிவழகுக்குத்தகுதி யாய்), சுடர் - பேரொளியையுடைத்தான, முடியன் - திருவபிஷேகத்தையுடையனாய், நான்கு தோளன் - (அந்த ஸர்வேஶ்வரத்வாநுரூபமான)நாலுதிருத்தோள்களையுமுடை யனாய், ("ஷிவ்யாஸவாஷிதவதஜகுஜை" என்கிறபடியே அந்த புஜகல்பகம் பூத் தாற்போலேயிருக்கிற), குனி - வளைந்த, சார்ங்கம் - ஸ்ரீசார்ங்கம், ஒண் - தர்ஶநீயமான, சங்கு - ஸ்ரீபாஞ்சஜந்யம், கதை - கௌமோதகி, வாள் - நந்தகம், ஆழியான் - திரு வாழியாகிற திவ்யாயுதத்தையுடையனாய், ஒருவன்-(இவ்வவயவஶோபையாலும் ஆபரண ஶோபையாலும் ஆயுதஶோபையாலும்) அத்விதீயனானவன், அடியேன் - (இவ்வழ கிலே துவக்குண்டு) அடியேனான என்னுடைய, உள்ளான் - அகவாயிலே ப்ரகாஶியா நின்றான். சங்குகதையென்கிற இத்தை - சங்கதையென்று கடைக்குறைத்தலாய்ச் சொல்லிற்று.

இ.—முதற்பாட்டில், அவன் தம்மோட்டைக்கலவியாலே புதுக்கணித்த ஸௌந்தர்யாதிகளைக் காட்டக் கண்டநுபவிக்கிறார்.

[கண்கள் சிவந்து] - "தஸ்யயதாகப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" என்று கண்களாகிறது சிவந்திறே இருப்பது. இப்போது சிவந்து என்கிறது - * மாயக் கூத்தனில் விஶ்லேஷத்தாலே விவர்ணமானது, ஸம்ஶ்லேஷித்தபின்பு தன்நிறம்பெற்ற படி. கண்ணிலே துவக்குண்டு கால்வாங்கமாட்டாதே யிருக்கிறவிருப்பு, இசையிலே காணுமித்தனை. [பெரியவாய்] - ஏகரூபமாயிருக்கிற இதுக்கு வ்ருத்திஹ்ராஸங்கள் உண்டோவென்னில்,—கர்மநிபந்தநமாய் வருமது இல்லையென்னுங்காட்டில், வாத்ஸல்ய நிபந்தநமாய் வருமதுதவிராதே; ஆஶ்ரிதஸம்ஶ்லேஷத்தில் அவிக்ருதனாகில் ஆஶ்ரய ணீயனன்றிக்கே ஒழியுமிறே. அவனும், கடலுடைந்தாற்போலே தன்னளவிலே விக் ருதனாகக்கடவனிறே. [வாயும் சிவந்து] - கண்களையன்றிக்கே, "செவ்வாயுந்திவெண்

பல்சுடர்க்குழை" என்று கலவியாற்பிறந்த சிவப்பைச்சொல்லுகிறது. [கனிந்து] - சிவப்பாய்ப்பரிந்து போகையன்றிக்கே, நெப்பூறியிருக்கை. நிரதிஶயபோக்யமான செவ்வியைச் சொல்லுகிறது. [உள்ளே வெண்பலிலகுசுடர்] - உள்ளே விளங்காநின்றுள்ள திருமுத்தொளியையும். [உள்ளே] - திருவயரத்துக்குள்ளுப் புகுகையினுடைய அருமை சொல்லுகிறது. [வெண்பலிலகு சுடர்] - சிவப்புக்கு பரபாகமமாய்க்கொண்டு விளங்காநின்ற ஒளி. அது இத்தைத்தள்ள, இது அத்தைத்தள்ள இட்டளத்தில் வெள்ளம்போலே முழாவாநிற்கை. [இலகுவிலகு மகரகுண்டலத்தன்] - திருக்குழலில் இருட்சிக்கு ப்ரகாஶமாய் அலைந்துவருகிற திருமகரக்குழையையுமுடையவன். அலைந்து வருகையாவது - இவரைப்பெற்ற பேற்றாலே "இசங்ஙனே ஸம்பவிப்பதே!" என்று திருமுடியை அசையாநிற்கை. [கொண்டல் வண்ணன்] - வர்ஷுகவலாஹகம்போலே வடிவு குளிர்ந்தது. [சுடர்முடியன்] - தன் அழகாலே அல்லாத அழகை அடங்கப்பூட்டாக்கிடும் திருவபிஷேகத்தையுடையவன். * மாயக்கூத்தனில் விடாய்தீருகையாலே வந்தபுகர். "முடிசேர் சென்னியம்மா" என்று இவர் கூப்பிடாநிற்க, இவரை உபேக்ஷித்துக்கவித்திருப்பதொரு முடியுண்டோ? ரக்ஷ்யவர்க்கம் நோவுபடாநிற்க, ரக்ஷகனும் முடிசூடியிருப்பது ஓரேற்றமுண்டோ? [நான்குதோளன்] - இவரை அணைக்கையாலே தோள்களும் பணைத்தது. ஆத்மகுணங்களளவில் நிற்பார் இவ்விஷயத்தில் தேசிகரல்லர். இப்படி வடிவழகுக்கு அவ்வருகு அறியாதிருக்கையாயிற்று இதில் தேசிகனுகை. ப்ரதமத்தில் ருசிஜநகமாய், பின்பு ஶுபாஶ்ரயமாய், பின்பு ஸதாநுபவத்துக்கு விஷயமாயிறேயிருப்பது. [குனிசார்ங்கன் இத்யாதி] - "மகரகுண்டலத்தன்" என்கிறவோபாதி, இவையும் சில ஆபரணங்களிருக்கிறபடி. வீரர்கள்பிடித்த வில்லாகையாலே, தானே வளைந்தாயிற்று இருப்பது. "வளையுமிணை நீலவில்" "உண்பது சொல்லிலுலகளந்தான் வாயமுதம்." ஸ்பர்ஶநீயமான சங்கு கதை வாள் ஆழியான். [ஒருவன்] - புண்டரீகாக்ஷனுய், காளமேகநிப ஶ்யாமனுய், சதுர்புஜனுய், ஶங்கசக்ராதி திவ்யாயுதோபேதனுகையாலே அத்விதீயன். [அடியேன்] - அவனுடைய ஶேஷித்வம் அத்விதீயமாயிருக்கிறுப்போலே த்ரிவிதாத்மவர்க்கத்திலும் இவருடைய ஶேஷத்வம் அத்விதீயம். ஸ்வரூபஜ்ஞாநத்தாலன்றிக்கே அழகுக்குத்தோற்று-அடியேன் என்கிருர். [உள்ளானே]- "யுவா குமார:" என்று கேட்டேபோம்படியான அழகு, வயிரப்பேழை திறந்தாற்போலே அவயவஶோபையும் ஆபரணஶோபையும் ஆயுதஶோபையுமாய் மிளிரா

ஈடு.—முதற்பாட்டு. அவன், தம்மோட்டைக்கலவியாலே புதுக்கணித்த திவ்ய ஸௌந்தர்யாதிகளோடே என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்திருந்தானேன்கிருர். நம்ஆழ்வார்கள், வடிவழகுக்கு அவ்வருகு ஸ்வரூபகுணங்களில் இழியமாட்டார்கள்: திவ்ய விக்ரஹத்தை ஶுபாஶ்ரயமாகப் பற்றினபின்னை அவ்வருகுபோவானேன்று ஶாஸ்த்ரங்கள் சொல்லுகிறது - இத்தைவிட்டுப் போகச் சொல்லுகிறதல்ல: ஸ்வரூபகுணங்களும் உபாஸ்ய

முதற்பாட்டு.—கண்கள் இத்யாதி. "கண்கள்சிவந்து" என்றுதொடங்கி, "ஒருவனடியேனுள்ளானே" என்னுமளவும் கடாக்ஷித்துஅவதாரிகை - அவன், தம்மோட்டை இத்யாதி. ஸ்வரூபகுணங்களைவிட்டு விக்ரஹத்தை அநுபவிப்பானென் ? என்ன - நம்ஆழ்வார்கள் இத்யாதி. விக்ஹத்தைவிட்டு ஸ்வரூபகுணங்களிலே போவானென்று ஶாஸ்த்ரஞ்சொல்லாநின்றதேயென்ன,— திவ்யவிக்ரஹத்தை இத்யாதி. ஆனுல், எதுக்காகச் சொல்லுகிறதென்ன - ஸ்வரூபகுணங்களும்

மேன்மைக்காகச் சொல்லுகிறது. அவன் தன்னோடு பிராட்டிமாரோடு ஶேஷபூதரோடுவாசி யில்லை; எல்லார்க்கும் அபிமதமாயிருக்குமாயிற்றுத் திருமேனி.

[கண்கள்சிவந்து] - ''தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ'' (தஸ்யயதாகப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ) என்று கண்களாகில் சிவந்திருக்குமிறே; இப்படியிருக்கச்செய்தே * மாயக்கூத்தனில் விஶ்லேஷத்தாலே விவர்ணமானது, * இருத்தும்வியந்தில் ஸம்ஶ்லேஷத்தாலே தன்னிறம்பெற்றபடி. கண்ணிலேதுவக்குண்டு கால் வாங்கமாட்டாதே யிருக்கிறவிருப்பு, இசையிலேகாணுமித்தனை [பெரியவாய்] - வ்ருத்தி ஹ்ராஸாதிக ளுண்டாகிறதாயிற்று. 'ஸதைகரூபரூபாய' (ஸதைகரூபரூபாய) என்கிறது - கர்மநிபந்தநமான விகாரங்கள் இல்லையென்ற இத்தனையொழிய ஆஶ்ரித ஸம்ஶ்லேஷத்தாலே பிறக்கும் விகாரத்தை இல்லையென்கிறதன்றே; அப்படியேயான வன்று ஆஶ்ரயணீயனன்றிக்கே யொழியுமே. அவனும் தன்னளவிலே விக்ருதனாகக் கடவனிறே. [வாயும்சிவந்து] - கண்ணேயன்றிக்கே, திருவதரமும் தன்னிறம் பெற்ற படி சொல்லுகிறது. ''செவ்வாய் - வெண்பல் சுடர்க்குழை'' என்றது பின்னாட்டுகிற படி. [கனிந்து] - இச்சிவப்பு, தன்னிலேயூறி நெய்த்துத் தோற்றாநின்றதாயிற்று. [உள்ளே]- திருவதரத்தில் சிவப்பைவிட்டு, உள்ளுப்புகுகையிலுண்டான அருமையடையத் தோற்று கிறது. [வெண்பலிலகுசுடர்] - திருவதரத்திற்சிவப்புக்குப் பரபாகமான வெண்மையை யுடைத்தாய், தேஜஸ்ஸா நின்று சுழியாநின்றதாயிற்று. [இலகுவிலகுமகரகுண்டலத்தன்]- திருக்குழலிலிருட்சிக்கு ப்ரகாஶகமாய், அலைந்துவருகிற திருமகரகுண்டலத்தையுடைய வன். ''இக்கலவி நமக்கு ஸம்பவிப்பதே!'' என்று தலைசீய்த்துப்படாநின்றான்போலே. கடலுடைந்தாற்போலே தன்னளவிலே ஹ்ருஷ்டனாகாநின்றான். [கொண்டல் வண்ணன்] - வர்ஷுகவலாஹகம்போலே வடிவும் குளிர்ந்து கறுத்தது. முன்பு விவர்ணமாய்ப் போலே திருமேனியிருந்தது. [சுடர்முடியன்] - தன்னழகாலே அல்லாதவழகை முட்டாக் கிடும் திருவபிஷேகத்தையுடையவன். * மாயக்கூத்தனில் இவர் விடாய்தீர்ந்தபின்பா யிற்று முடியும் நற்றரித்தது. ''முடிசேர்சென்னியம்மா'' என்றிறே கூப்பிட்டது. [நான்கு

---

இத்யாதி. விக்ரஹந்தான் பிராட்டிமார்க்கொழிய ஶேஷபூதர்க்கு அபிமதமாகக் கூடுமோவென்ன

இப்போது ''சிவந்து'' என்கையாலே ஹாவம் - ''தஸ்ய யதா'' இத்யாதி. சிவந்து என்கிற ஸ்வரத்துக்கு ஹாவம் - கண்ணிலே இத்யாதி. வ்ருத்திஹ்ராஸாதிகளுண்டானால், ''ஸதைகரூபரூபாய'' என்கிறத்தோடு விரோதியாதோவென்ன - ஸதைக இத்யாதி. அப்படியேயானாலோவென்ன - அப்படியே இத்யாதி. ''பெரியவாய்'' என்றதுக்கு ஹாவம் - அவனும் இத்யாதி. பெரியவாய் - பெருத்ததென்றபடி. தன்னளவிலே என்றது - தன்பெருமைக்கீடாக என்றபடி. ''வாயும்'' என்றசப்தார்த்தம் - கண்ணேயன்றிக்கே இத்யாதி. ''இருத்தும் வியந்திற்கலவி பின்னாட்டுகிறது'' என்றத்தை உர்ப்பிப்பிக்கிறார் - செவ்வாய் இத்யாதி. ''உள்ளே'' என்ற ஸ்வரத்துக்கு ஹாவம் - திருவதரத்தில் இத்யாதி. விலகுதல் - சலித்தல். திரு மகரகுண்டலத்துக்கு அசைவுவருகைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் - இக்கலவி இத்யாதி. இவையெல்லாவற்றுக்கும் ஹாவம் - கடல் இத்யாதி. இப்போது ''கொண்டல்வண்ணன்'' என்கை யாலே ஹாவம் - முன்பு இத்யாதி. திருவபிஷேகத்துக்கு விக்ருதியேதென்ன - மாயக்கூத்தனில் [illegible] தான் இவர் ஆசைப்பட்டபடியேவந்து அநுபவிப்பித்ததுக்குத்யோதகமாக இருக்குமென்

தோளன்] - இவரை அணைத்தபின்பு தோள்கள் பணைத்தபடி. [குனிசார்ங்கன்] - "மகர குண்டலத்தன்" என்கிறவோபாதி, இவையும் சிலவாபரணங்க ளிருக்கிறபடி. வீரர்கள் கையில் வில்லு வினையில்லாதபோதும் வளைந்தேயிருக்குமிறே. [ஒண்சங்கு] - "உண்பது சொல்லில்," "உன்செல்வம் சாலவழகியது" என்னும்படியான ஒண்சங்கு. [கதைவாளாழியான்] - இவற்றையுடையவன். [ஒருவன்] - புண்டரீகாக்ஷனாய், காளமேகநிபஸ்யாமனாய், சதுர்ப்புஜனாய், ஶங்கசக்ராத்யதிவ்யாயுதோபேதனாகையாலே அத்விதீயன். [அடியேன்] - அவனுடைய ஶேஷித்வம் அத்விதீயமாயிருக்கிறப்போலே, இவருடைய ஶேஷத்வமும் அத்விதீயம். அதாவது- ஸ்வரூபஜ்ஞாநத்தாலன்றிக்கே அழகுக்குத்தோற்று - அடியேனென்கிறார். [உள்ளானே] - பராகர்த்தமான மநஸ்ஸை ப்ரத்யக்விஷயமாக்கினவாறே, "யுவாகுமார:" (யுவாகுமாரஃ) என்று கேட்டேபோம்வடிவழகு, வயிரப்பேழை திறந்தாற்போலே அவயவஶோபையும் ஆயுதஶோபையும் ஆபரணஶோபையுமாய் மிளிராநின்றதாயிற்று. (க)

## இரண்டாம்பாட்டு.

அடியேனுள்ளான்உடலுள்ளான் அண்டத்தகத்தான் புறத்துள்ளான்
படியேயிதுவென்றுரைக்கலாம்படியனல்லன் பரம்பரன்
கடிசேர்நாற்றத்துள்†ளாலை இன்பத்துன்பக்கழிநேர்மை
ஒடியாவின்பப்பெருமையோன் உணர்விலும்பரொருவனே.

*ஆ.—[அடியேனுள்ளான்] - அஸங்க்யேயமான அண்டங்களுக்கெல்லாம் நிர்வாஹகனாய், நிரஸ்தஸமாப்யதிகனாய், அநாக்ராத துஃகசந்த நித்யஸித்த நிரவதிகாநந்தத்தையுடையனாய், ஸர்வஜ்ஞனாய், நிரபேக்ஷனாயிருந்துவைத்து, என்னுடைய நிகர்ஷத்தையும் தன்னுடைய உத்கர்ஷத்தையும்அநுஸந்தித்து, தன்னோடு கலந்து பரிமாறுகைக்கு நான்ஈடல்லேனென்று அகலுகிறேனென்னும் பயத்தாலே என்னால்தன்னைவிடமுடியாதபடிதொருபடி தன்னழகைக் காட்டிக்கொண்டு என்னுள்ளே புகுந்தருளுகையன்றியே என்னுடம்பினுள்ளேயும் புகுந்தருளினானென்கிறார்.*

---

கிறார் - முடிசேர் இத்யாதி. ஆபரணங்களோடே ஆயுதங்களை எடுக்கிறதுக்கு பாவம் - மகரகுண்டலத்தன் இத்யாதி. 'குனி' என்றதுக்கு பாவம் - வீரர்கள் இத்யாதி. "ஒண்சங்கதை" என்றது-கடைக்குறைத்தலாய், ஒண்சங்கு கதை'என்றபடி. சங்குக்கு ஒண்மையேதென்ன - உண்பது இத்யாதி. நாய்ச்சியார்திருமொழி. அத்விதீயத்வமேதென்ன-புண்டரீகாக்ஷனாய் இத்யாதி. "ஒருவன்" என்றத்தை "அடியேன்" என்றத்தோடேகூட்டி பாவார்த்தம் - அவனுடைய இத்யாதி. ஶேஷத்வம் அத்விதீயமாகையாவதேதென்ன - அதாவது இத்யாதி. உள்ளான் - உள்ளேயிருக்கிறானென்றபடி. "கண்கள்சிவந்து" என்றுதொடங்கி, "உள்ளான்" என்னுமளவுக்கும் பாவம் - பராகர்த்தமான இத்யாதி. வயிரப்பேழை - வஜ்ரங்களிருக்கிறபெட்டி. வயிரப்பேழைதிறந்தாற்போலே என்கிறவிடத்திலே. "ஶ்ரீராஜாநஞ்சம்நிராம்" இத்யாத்யநுஸந்தேயம். க்ரமேணாந்வய:. "உள்ளேவெண்பல்" இத்யாதிக்கு - அகவாயிலே வெளுத்தபல்லினுடைய ப்ரகாசிக்கிற தேஜஸ்ஸையும், இலகு - ப்ரகாசிப்பிப்பதாய், விலகு - சலியாநிற்கிற, மகரகுண்டலத்தையுமுடையவனென்று ஸமுதாயார்த்தம். (க)

---

† ஆல், ஐ-என்ற இரண்டும் அசை யென்னலாம்.

ஒ.—இரண்டாம்பாட்டில், ஸர்வவிலக்ஷணனுயிருக்கிற எம்பெருமான், என் உள்ளே புகுந்தருளுகையன்றிக்கே, என்ஶரீரத்தினுள்ளே புகுந்தருளினன் என்கிறார். என்னுள்ளா னென்னவேண்டுமிடத்திலே "அடியேனுள்ளான்" என்கையாலே - அடியேனென்றும் நானென்றும் பர்யாயம்.

[அண்டத்தென்று தொடங்கி] - ஸர்வமதனுய் தனக்கு உபமானரஹிதனுய் மேற்பட்ட பதார்த்தங்களுக்கும் மேற்பட்டுள்ளான். [கடிசேர் என்றுதொடங்கி] - லோகத்திற்காண்கிற விலக்ஷணமான நாற்றத்தையுடைய ஆலையை அநுபவித்தாலுள்ள ஸுகத்தில் அஸ்திரத்வாதி தோஷம் நீக்கினுலுள்ள வைலக்ஷண்யத்தையுடைத்தாய் நித்யமுமாயிருந்துள்ள ஆநந்தத்தை உடைத்தான. [உணர்விலும்பரொருவனே] - அறிவில் மேற்பட்டு அத்விதீயனுபுள்ளான். அறிவில் மேற்பட்டிருந்துள்ள * அயர்வறுமமரர்கள் அதிபதியாயுள்ளவனென்றுமாம்.

ப.—அநந்தரம், ஸர்வாந்தராத்மபூதனுய் நிரதிஶய ஜ்ஞாநாநந்தயுக்தனுனவன், என் ஆத்மாவோடு சரீரத்தோடு வாசியற உள்ளே புகுந்துநின்றுனென்கிறார்.

அண்டத்து - அண்டத்துவாயினுண்டான ஸமஸ்தபதார்த்தங்களுக்கும், அகத்தான் - அந்தராத்மாவாய், புறத்து - புறவாயில் அவ்யக்த மஹதஹங்காரங்களுக்கும், உள்ளான் - ஆத்மபூதனுய், இதுவே - இதுவே, படி - ப்ரகாரம், என்று - என்று, உரைக்கலாம்படியன் - சொல்லலாம்படி இருப்பதொரு ப்ரகாரத்தையுடையன், அல்லன் - அல்லனுய், பரம்பரன் - (பரரான நித்யமுக்தர்களுக்கும்) பரனுயிருப்பானொருவனுய், கடிசேர் நாற்றத்துள்ளாலை - விலக்ஷணமான கந்தங்களெல்லாம் சேர்ந்த பரிமள ஸமுதாயத்தை அவகாஹித்தநுபவித்து, இன்பம் - இன்பத்தினுடைய, துன்பம் - (அல்பாஸ்த்திரத்வாதி நிபந்தநமான) துன்பத்தினுடைய, கழி - கழிவையுடைத்தான, நேர்மை - ஸௌக்ஷ்மாம்ஶத்தினுடைய, ஒடியா - (விச்சேத ரஹிதமாகையாலே) நித்யமான, இன்பம் - ஆநந்தத்தினுடைய, பெருமையோன் - அபரிச்சேத்யதையையுடையனுய், உணர்வில் - ஜ்ஞாநத்தில்வந்தால், உம்பர் - அந்த (ஆநந்தம்போலே நித்யத்வஅபரிச்சிந்நத்வங்களாலே) மேலாயிருப்பான், ஒருவன் —, (மோக்ஷத்வைகநிரூபணீயமான அஹமர்த்தத்தினுடைய) உள்ளான் - அகவாயிலே அந்தராத்மதயா நில்லாநின்றுன்; உடல் - (அத்யந்தஹேயமான) ஶரீரத்தினுடைய, உள்ளான் - ஹ்ருதயாம்ஶத்திலேயும் வர்த்தியாநின்றுன். படியேயிதுவென்று - உபமாநராஹித்யத்தைச் சொல்லிற்றாகவுமாம். மந்தாநுபவஸுகத்ருஷ்டாந்தம், ப்ரதிபத்த்யர்த்தமாகச் சொல்லுகிறது; உபயலிங்கவிஶிஷ்டமாய், ஸ்வேதர ஸமஸ்த விலக்ஷணமான ஜ்ஞாநாநந்த மாஹாத்ம்யத்துக்கு த்ருஷ்டாந்தமில்லாமையாலே.

இ.—இரண்டாம் பாட்டில், ஸர்வவிலக்ஷணனுயிருக்கிறவன் என்னுள்ளே புகுந்தருளுகையன்றிக்கே, என்ஶரீரத்திலே வந்து கலந்தானென்கிறார்.

[அடியேனுள்ளான்] - என்னுள்ளானென்னவேண்டும் ஸ்தாநத்திலே "அடியேனுள்ளான்" என்றது, அடியேனென்கிறது - அஹம்ஶப்தபர்யாயமாகையாலே. ஜ்ஞாநாநந்தங்களிலும் அந்தரங்கம் ஶேஷத்வமென்கை. [உடலுள்ளான்] - சேதநனுக்கு, திவ்யாத்மஸ்வரூபத்திலும் திவ்யமங்களவிக்ரஹமே உத்தேஶ்யமாயிருக்கிறாப்போலே, ஆஶ்ரிதன் ஸ்வரூபத்திற்காட்டிலும் இவன் தேஹத்தையாயிற்று ஈஶ்வரன்விரு

*ம்பியிருப்பது; செருக்கர் அபிமதவிஷயத்தில் அழுக்கு உகக்குமாபோலே. இத்தால்-ஜீவ பரசேஷமும், ஜீவர்களுக்கு பரஸ்பரசேஷமும், சேஷசேஷித்வ ஸம்பந்தமும் அபாரமார்த்யம்" என்றும் "ஔபாதிகம்" என்றும் சொல்லுகிற பக்ஷங்கள் அர்த்தாத்ப்ரதிக்ஷிப்தங்கள். ஆழ்வானுக்கு திருக்கோட்டியூர்நம்பி, "'அடியேனுள்ளான்' என்னப்பெற்றபடியென்!" என்று பணித்தார். 'உம்முடைய திருமேனியை விரும்புகிறவன் ஆர்?' என்ன,—சொல்லுகிறது மேல்: [அண்டத்தகத்தான்] - அண்டாந்தர்வர்த்திகளான பதார்த்தங்களோடு புறம்புள்ள பதார்த்தங்களோடு வாசியற ஸர்வகதனானவன். ஸர்வகதமான வஸ்து இவர் ஒருவ்யக்தியில் ஏகதேசமான ஶரீரத்திலே அகப்பட்டதென்கை.—[படியேயிது]-[இதுவே - படி] - ஸர்வதாஸத்ருஶமாயிருப்பதோர் உபமாநத்தை உடையவனல்லன். ஸர்வகதமுமாய், ஸர்வநிர்வாஹகமுமாய் இருப்பதொரு வஸ்துவுண்டாகிலிறே ஒப்புச் சொல்லலாவது. சொல்லும் படிதான் என்? என்னில்,—[பரம்பரன்] - மேலானவற்றுக்கெல்லாம் மேலானவன்: "நேதிநேதி" என்கிறபடியே இவ்வளவன்று என்னுமித்தனை. இவ்விஷயத்தை ப்ரதிபத்தி பண்ணும்படிதான் என்? என்னில்,—[கடிசேர் நாற்றத்துள்ளாலை] - வேதங்கள் "நிலமன்று" என்றுமீண்டத்தை இவர் நிலமாக்கிப் பேசுகிறார்காணும். "கடி" என்றும், "நாற்றம்" என்றும் - பரிமளம். மீமிசைச் சொல்லாய் - மிக்கபரிமளமென்கை. "கடி" என்று - புதுமையாய், செவ்விப்பரிமளமென்றுமாம். பரிமளத்துக்கு உள்ளும்புறம்புமில்லாதபடியாலே நாற்றத்திலென்றபடி. [இன்பத்துன்பக் கழிநேர்மை] - அதினுடைய அநுபவத்தால்வந்த ஸுகத்தில், து:க்காம்ஶத்தைக் கழித்தநேர்மையுண்டு - நுண்மை, ஸுகாம்ஶம். புஷ்பத்தில் பரிமளத்தை த்ருஷ்டாந்தமாகச் சொல்லுகையாலே - அதில் அல்பாஸ்த்ரங்கள் து:க்காம்ஶம்; அதுகழிந்த நுண்மை - ஸுகாம்ஶம். [ஒடியாவின்பப் பெருமையோன்] - ஒடியாததுமாய், பெரியதுமான ஸுகத்தையுடையவன். நித்யமாய், நிரதிஶயமான ஆநந்தத்தையுடையவன். [உணர்வி லும்பரொருவனை]-ஜ்ஞாநத்தில்வந்தால் மேலான ஒருவன். அத்விதீயஜ்ஞாநாநந்தஸ்வரூபனென்கை. [ஒடியாவின்பப் பெருமையோனுணர்விலும் பரொருவன் - அடியேனுள்ளானுடலுள்ளான்] - எல்லார்க்கும் ஸ்ப்ருஹணீய விஷயமாயிருக்கிறவன்கிடீர் என் ஶரீரத்தை ஆதரிக்கிறான்.*

ஈடு.—என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்திருந்த அளவன்றிக்கே, என்ஶரீரத்திலேயும் புகுந்து கலந்தானேனென்கிறார்.

[அடியேனுள்ளான்] — திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்திலே ஆறுமாஸம் ஆழ்வான் ஸேவித்துநின்று போரப்புக்கவாறே, "ஆழ்வான்! ஆழ்வார் 'அடியேனுள்ளான்' என்றபடிகண்டாயே" என்ன, "க்ருதார்த்தனானேன்" என்று போந்தானும். என்னுள்ளான் என்னவேண்டுமிடத்திலே, 'அடியேனுள்ளான்' - என்கையாலே - ஜ்ஞாநாநந்தங்

---

*இரண்டாம்பாட்டு, - அடியேன் இத்யாதி. "உடலுள்ளான்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - என்னுடைய இத்யாதி.*

*ஆத்மாவுக்குஜ்ஞாநாநந்தாதிகளும்நிரூபகமாயிருக்க, ஶேஷத்வத்தைநிரூபகமாக அருளிச்செய்ததுக்கு ஸம்வாதம் - திருக்கோட்டியூர் இத்யாதி. '**ஜ்ஞாநாநந்த3மயஸ்த்வாத்மா ஶேஷோ ஹி பரமாத்மந:**' என்றும், "**ஜ்ஞாநமயோऽமல:**" என்றும், '**தா3ஸபூ4தா:**" என்றும் இத்யாதிகளாலே ஜ்ஞாநாநந்தங்களும் ஶேஷத்வமும் ஆத்மாவுக்கு நிரூபகமாகச் சொல்லாநின்றது; இதிலே அந்த*

களன்று வஸ்துவுக்கு நிரூபகம்; ஶேஷத்வமென்கை. ஜ்ஞாநாநந்தங்களிலும் அந்தரங்கம் பகவச்சேஷத்வமென்கை. [உடலுள்ளான்] - சேதநனுக்கு பகவத்ஸ்வரூபத்திலும் திவ்யமங்களவிக்ரஹமே உத்தேஶ்யமானாற்போலே, ஈஶ்வரனுக்கும், இவர்ஸ்வரூபத்திலும் இவர்கழிக்கிற ஶரீரம் உத்தேஶ்யமாய்த் தோற்றுகின்றது; செருக்கர் அபிமதவிஷயத்தில் அழுக்கு உகக்குமாபோலே. இத்தால் - "ஜீவபரபேதமும், ஜீவர்களுக்கு பரஸ்பரபேதமும், ஶேஷஶேஷிஸம்பந்தமும் அபரமார்த்தம்" என்கிற பக்ஷங்கள் அர்த்தாத்ப்ரதிக்ஷிப்தங்கள். உம்முடைய திருமேனியை விரும்புகிறவன் 'ஆர்?' என்ன, - இன்னானென்கிறதுமேல்:— [அண்டத்தகத்தான்புறத்துள்ளான்] - அண்டாந்தர்பூதமானபதார்த்தங்களோடு, புறம்புள்ள பதார்த்தங்களோடு வாசியற ஸர்வகதனானவன். ஸர்வகதமான வஸ்துகிடீர் ஒருவ்யக்தியில் ஏகதேசமான ஶரீராம்ஶத்திலே அகப்பட்டதென்கை. [படியேயிது] - (இதுவே - படி.) ஸர்வதா ஸத்ருஶமாயிருப்பதோர் உபமானத்தை உடையவனல்லன். ஸர்வஶக்தமுமாய் ஸர்வநிர்வாஹகமுமாயிருப்பதொரு வஸ்துவுண்டாகில்றே ஒப்புச்சொல்லலாவது. சொல்லும்படிதான் என்? என்னில், - [பரம்பரன்] - மேலானவற்றுக்கெல்லாம் மேலானவன். † "நேதிநேதி" (நேதிநேதி) என்கிறபடியே — இவ்வளவன்று என்னுமித்தனை. ஆனாலும் இவ்விஷயத்தை ப்ரதிபத்தி பண்ணும்படிதானேன்? என்னில், [கடிசேர்நாற்றத்துள்ளாலை] - ஆலை-மது. "கடி" என்றும், "நாற்றம்" என்றும் - பரிமளமாய், மீமி

---

ரங்க நிரூபகமேது?" என்று எம்பெருமானார் திருவோலக்கத்திலே ப்ரஸ்துதமாக, ஸர்வஜ்ஞராயெழுந்தருளியிருக்கச்செய்தேயும், "இத்தை ஆசார்யமுகேந வெளியிடவேணும்" என்றுபார்த்து, திருக்கோட்டியூர்நம்பி ஸந்நிதிக்கு "ஆழ்வான்! இத்தைப்பெற்று வாரும்" என்று வரக்காட்டியருள, அவரும் எழுந்தருளி, நம்பியைஸேவித்து, இந்த வ்ருத்தாந்தத்தை விண்ணப்பஞ்செய்து, ஆறுமாஸம் ஸேவித்திருக்க, அவர் இரங்காமையாலே "எம்பெருமானார் ஸந்நிதியிலேபோய் ஸேவித்துவருகிறேன்" என்று போகப்புக, அவரையழைத்து "ஆழ்வான்! * மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார்தானே 'அடியேனுள்ளான், என்றபடி கண்டாயே!" என்றருளிச்செய்ய, "க்ருதார்த்தனானேன்" என்று எழுந்தருளினாரென்றபடி. ஐதிஹ்யத்துக்கு வ்யாக்யாதா பாவமருளிச்செய்கிறார் - என்னுள்ளான் இத்யாதி. அவையும் நிரூபகமாயிருக்க, அன்றென்கிறதென்னென்ன - ஜ்ஞாநாநந்த இத்யாதி. ஶேஷத்வம் அந்தரங்கமாகையாவது - பகவத்ப்ரகாரதயா லப்தஸத்தாகமான வஸ்துவாகையாலே ப்ரதமம் ஶேஷத்வத்தையிட்டு நிரூபித்துக்கொண்டு, பின்னை மற்றுள்ளவற்றையிட்டு நிரூபிக்கவேண்டும்படியிருக்கை. தம்மிடத்திலிருந்தால் போராதோ? ஹேயமான ஶரீரத்தை விரும்புகைக்கு அடியேதென்ன - சேதநனுக்கு இத்யாதி. பகவத்விக்ரஹம் அப்ராக்ருதமாகையாலே விரும்புகை ப்ராப்தம்: இது ப்ராக்ருதமன்றோ? உத்தேஶ்யமாகக் கூடுமோவென்ன - செருக்கர் இத்யாதி. "அடியேன்" என்றும், "உள்ளான்" என்றும் சொல்லுகையாலே - ஜீவபரபேதமும், "அடியேன்" என்ற ஏகவசநத்தாலும், "அண்டத்தகத்தான்" என்கையாலும் - ஜீவபரஸ்பரபேதமும், "அடியேன்" என்று - ஶேஷத்வம் சொல்லுகையாலே - ஶேஷஶேஷிபாவ ஸம்பந்தமும் சொல்லுகையாலே, ப்ரதிக்ஷிப்தங்களென்கை. புறம்புள்ள பதார்த்தங்களென்றது - மஹதாதிகளை. பதப்ரயோகத்துக்கு பாவமாதல், "அண்டத்தகத்தான் புறத்துள்ளான் - உடலுள்ளான்" என்றத்தையும் கூட்டி பாவமாதல்-ஸர்வகதமான இத்யாதி. "இதுவே-படி- என்றுரைக்கலாம்படியனல்லன்-" இதுவே ஸர்வதா ஸத்ருஶமென்று சொல்லலாம்படியான உபமானத்தைஉடையனல்லனென்று ஶப்தார்த்தம். அதுக்கு ஹேதுவேதென்ன - ஸர்வஶக்தமும் இத்யாதி. "மேலானவற்றுக்கெல்லாம் மேலானவன்" என்றதுக்கு ப்ரமாணம் - நேதிநேதி இத்யாதி. இவ்வளவல்லஇவ்வளவல்ல என்றபடி. ஆனாலும் என்றது - பரிச்சேதிக்கப் போகாவிட்டாலுமென்றபடி "கடி - நாற்

† (ப்ரு-உப-௪-௬)

சைச்சொல்லாய் - மிக்கபரிமளமென்கை. ‘‘கடி’’ என்று - புதுமையாய், செவ்விப்பரிமளமென்றுமாம். பரிமளத்துக்கு உள்ளும்புறம்புமில்லாமையாலே-நாற்றத்திலென்றபடி. [இன்பத்துன்பக்கழிநேர்மை] - அதினுடைய அநு஭வத்தால்வந்த ஸுகத்தில் து:காம்ஶத்தைக் கழித்த நேர்மையுண்டு - நுண்மை - ஸுகாம்ஶம். புஷ்பத்தில் பரிமளத்தை த்ருஷ்டாந்தமாகச் சொல்லுகையாலே, அதில் அல்பாஸ்த்திரத்வங்கள் து:காம்ஶம்; அதுகழிந்த நுண்மை - ஸுகாம்ஶம்: துன்பங்கழிந்த இன்பமென்றபடி. [ஒழியாவின்பப்பெருமையோன்] - ஒழியாததுமாய், பெரியதுமான ஸுகம். நித்யமுமாய் நிரதிஶயமுமான ஆநந்தத்தையுடையவன்; ‡ ‘‘ஆநந்தமய:’’ (ஆநந்தமய:) என்கிறார். [உணர்விலும்பரோருவனே] - ஜ்ஞாநத்தில்வந்தால் மேலானவொருவன். அத்விதீய ஜ்ஞாநாநந்தஸ்வரூபனென்கை. [ஒழியாவின்பப்பெருமையோனுணர்விலும்பரோருவன் - அடியேனுள்ளான் - உடலுள்ளான்] - எல்லார்க்கும் ஸ்ப்ருஹணீயவிஷயமாயிருக்கிறவன்கிடீர் என் ஶரீரத்தை ஆதரிக்கிறான்! (உ)

---

## மூன்றாம் பாட்டு.

---

> **உணர்விலும்பரோருவனை அவனதருளாலுறற்பொருட்டு என்**
> **உணர்வினுள்ளேயிருத்தினேன் அதுவுமவனதின்னருளே**
> **உணர்வுமுயிருமுடம்பும் மற்றுலப்பிலனவும்பழுதேயாம்**
> **உணர்வைப்பெறவூர்ந்திறவேறி யானுந்தானாயொழிந்தானே.**

*ஆ.—(உணர்விலும்பர்.)-‘‘இப்படி எம்பெருமான் செய்தருளுகைக்கு ஹேதுவென்? என்னில்,—இச்சாமாத்ரமே காரணமாகச் செய்தருளினான்; அதுதான் என்னாலே வந்ததொன்றன்று: அதுவும் அவனுடைய ப்ரஸாதத்தாலே வந்தது’’ என்றுகொண்டு, இப்படி * இருத்தும்வியந்திற் சொன்ன பொருளை அநுபாஷித்து, பின்னையும், இவ்வளவோ அவன் எனக்குச் செய்தருளிற்று? வ்ருத்த ஸம்ஶ்லேஷஸ்த்தைர்யார்த்தமாக, தன்னுடைய ஸௌந்தர்யாவிஷ்காரத்தாலே என்னை வஶீகரித்துவைத்ததுவும் போராமே, என்னோடுபண்ணின ஸம்ஶ்லேஷத்துக்கு ஭ங்கம் வருகிறதென்னும் ஭யத்தாலே, ஒன்றை*

---

*றத்து - ஆலையுள் - துன்பங்கழிந்த - இன்பம் - நேர்மை - சேர் - ஒழியாவின்பப்பெருமையோன்’’ என்று அந்வயிப்பது. சேர் - ஸத்ருஶமான என்றபடி. ஆலை, பூவிலேயுண்டாமதாகையாலே, நாற்றமென்றது - பூவில் பரிமளமென்றபடி. அதில் து:காம்ஶமேதென்ன - புஷ்பத்தில் இத்யாதி. ஒழியா - நித்யமாய் என்றபடி. விவரணம் - நித்யமுமாய் இத்யாதி. ‘‘கடி நாற்றத்து - ஆலையுள்’’ என்று - ஸர்வகந்தங்களையும் ஸர்வரஸங்களையும்சொல்லி, ததநு஭வத்தில் அல்பாஸ்த்திரத்வாதி தோஷங்கழிந்த ஆநந்தத்தில் ஸாராம்ஶத்தோடே ஸத்ருஶமாய் நித்யமுமாய் நிரதிஶயமுமான ஆநந்தத்தையுடையவனென்று ஶப்தார்த்தம். அந்வயித்ததுக்கு ஭ாவம் - எல்லார்க்கும் இத்யாதி. அண்டத்தகத்தான் என்று தொடங்கி, பரம்பரன் - கடிசேர் நாற்றத்துள்ளும், ஆலையுள்ளுமுண்டான - துன்பங்கழிந்த - இன்பம் - நேர்மையோடே - சேர்ந்த - ஒழியாவின்பப்பெருமையோன் உணர்விலும்பரொருவன் - அடியேனுள்ளானுடலுள்ளான் இத்யந்வய:. (உ)*

---

‡ (தை-ஆ-உ.

எனக்குச்செய்யவொண்ணாததொருபடி, அஹமர்த்தவிஶிஷ்டனானதானே அஹம்ஶப்த வாச்யனென்றுதோற்றும்படி தன்னைக்குறித்து இவ்வாத்மாவுக்குண்டான நிரவதிகபுருஷார்த்தமாய் ஸாக்ஷாத்காரரூபமாயிருந்த மோக்ஷைகரஸத்வஜ்ஞாநத்தையும் தந்தருளினான்" என்கிறார்.

ஒ.—மூன்றும்பாட்டில், கேவலக்ருபையாலே ஸ்வவிஷயமாக இச்சையையும் பிறப்பித்து, என்னோடே வந்து ஸம்ஶ்லேஷித்து, ஸம்ஶ்லேஷஸ்தைர்யார்த்தமாக, ஜ்ஞாநாநந்தாமலஸ்வபாவமாய் ஸ்வமோக்ஷைகரஸமான ஆத்மஸ்வரூபத்தையும் எனக்குக் காட்டியருளினானென்கிறார்.

[உணர்விலென்றுதொடங்கி] - அறிவில் மேற்பட்டிருந்துள்ள * அயர்வறுமமரர்களதிபதியை அவன் ப்ரஸாதத்தாலே பெறுகைக்காக என்னுடைய ஹ்ருதயத்திலே இருத்தினேன்: இச்சித்தேனென்றவாறு. [அதுவுமவனதின்னருளே] - அவ்விச்சைதான் பிறந்ததுவும் அவன் ப்ரஸாதத்தாலே. [உணர்வுமென்று தொடங்கி] - வைஷயிகஜ்ஞாநமும் ப்ராணனும் ஶரீரமும்மற்றுமுண்டானஅபரிச்சேத்யமான ப்ரக்ருதிவிகாரங்களும், ப்ரக்ருதியும் அபுருஷார்த்தம் என்னும் அறிவையுடையேனாம்படிபண்ணி, இவைபுருஷார்த்தமல்லாமையைக்காட்டினமாத்ரமன்றிக்கே ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமான ஆத்மஸாக்ஷாத்கார பர்யந்தமாக என்னை நிர்வஹித்து அவ்வளவில் பர்யவஸியாதே என்னைச்சொல்லும் சொல்லாலேதன்னைச் சொல்லலாம்படி ஸ்வப்ரகாரதயா நான் தனக்கு அத்யந்தஶேஷமென்னுமிடத்தையும் காட்டியருளினான்.

ப.—அநந்தரம், தன்க்ருபாதிஶயத்தாலே தான் என்னுள்ளே புகுந்திருக்கும்படி என்னை இசைவிப்பதுஞ்செய்து, நான் தனக்கு ப்ரகாரபூதனாயிருக்கிறபடியையும் ப்ரகாஶிப்பித்தானென்கிறார்.

உணர்வில் - உணர்வு மிக்கிருக்கக்கடவரான, உம்பர்-நித்யஸூரிகளுக்கு ஸர்வப்ரகாரநிர்வாஹகனான, ஒருவனை - அத்விதீயனானவனை, அவனது - அவனுடைய, அருளால் - க்ருபையாலே, உறற்பொருட்டு-ப்ராபிக்கைக்காக, என்-என்னுடைய, உணர்வினுள்ளே - அபேக்ஷாரூபஜ்ஞாநத்துள்ளே, இருத்தினேன் - இருத்தினேன்; அதுவும்-அந்த இச்சைதானும், அவனது - அவனுடைய, இன்அருளே - நிர்ஹேதுகக்ருபையடியாக உண்டானதே;(இப்படி என்னை இசைவித்து என்னுள்ளே புகுந்தவன்),"உணர்வும்-(விஷயாவலம்பியான) ஜ்ஞாநவ்ருத்திவிஶேஷமும், உயிரும் - (ப்ரவ்ருத்திஹேதுவான) பஞ்சவ்ருத்திப்ராணபேதமும், உடம்பும் - (ப்ராணப்ரவ்ருத்திபேதமான) ஶரீரபேதமும், மற்று-மற்றும், உலப்பிலனவும் - (அஸங்க்யாதமான) மஹதஹங்காரேந்த்ரியாதிகளும், பழுது - ஹேயம்", ஆம்-என்கிற, உணர்வை பெற - உணர்வைப் பெறும்படியாக, உணர்ந்து - நடத்தி, இறவெறி - (விலக்ஷணஸ்வரூபனான ஆத்மாவளவும்) முடியக்கொண்டேறி, யானும் - (ஆத்மவிஷயமான) அஹம்புத்திவ்யவஹாரங்களும், தான் ஆய் ஒழிந்தான்- ஸ்வவிஷயமாம்படி ஆத்மப்ரகாரவிஶிஷ்டனாய்விட்டான்.

இ.—மூன்றாம்பாட்டில், கேவலக்ருபையாலே ஸ்வவிஷயமாக இச்சையையும் பிறப்பித்து, என்னோடே ஸம்ஶ்லேஷித்து, ஸம்ஶ்லேஷஸ்தைர்யார்த்தமாக, விலக்ஷணமாய் தனக்கு அநந்யார்ஹமான ஆத்மஸ்வரூபத்தையும் காட்டியருளினான் என்கிறார்.

[உணர்வி லும்ப ரொருவனை] - உணர்விலே உளரான நித்யஸித்தர்-ஜ்ஞாநாயிகரான நித்யஸூரிகளுடைய ஸத்தாதிகள் ஸ்வாதீநமாம்படி இருக்கிற அத்விதீயனை.

ப்ராப்யஸ்வரூபம் சொல்லிற்று. * அயர்வறுமமரர்கள் அதிபதியாயிருக்கிற ப்ராப்யம். "அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவ தென்றுகொலோ" என்றிறே ப்ரார்த்தித்தது. [அவனதருளா லுறற்பொருட்டு]-அவனுடைய ப்ரஸாதத்தாலேபெறுகைக்காக. "ப்ராப்யம்அவன்" என்கிற நிர்பந்தத்தோபாதி, ப்ராபகமும்அவன்ப்ரஸாதம் என்றிறே இவர்இருப்பது. ப்ராப்யமும் ப்ராபகமும் அவனேயாகில் நீர்வாநின்ற அம்ஶமேதென்னில்?—[என்னுணர்வினுள்ளே யிருத்தினேன்] - "வைத்தேன் மதியால்" என்றதுதானிறே. அவனை என்னுடைய ஜ்ஞாநத்துக்கு விஷயமாக்கினேன். இச்சித்தேனென்கை. இச்சைதான் ஸ்வாதீநமோ என்னில்? [அதுவுமவனதின்னருளே]- அந்த இச்சைதானும்பிறந்தது அவன்ப்ரஸாதத்தாலே. நிறைநின்ற வளவுகள்தோறும் "இவ்வளவு அவனாலேபிறந்தது" என்னும்படியாயிற்றிருப்பது அவனுடைய நிருபாதிகஸௌஹார்தம். 'தன்பொன்னடிக்கீழ் - இருத்தும் வியந்து" என்று ப்ராப்ய ப்ராபகமவனே என்று "அருத்தித்து" என்றதிறே; அதனையிறே இங்குச்சொல்லுகிறது. இரண்டரைப் பாட்டுக்குமேல - ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தைக் காட்டித்தந்தானென்கிறது. [உணர்வும்] - வைஷயிகஜ்ஞாநமும். [உயிரும்] - பஞ்சவ்ருத்திப்ராணனும். [உடம்பும்] - ஶரீரமும். [மற்றுலப்பிலனவும்] - மற்றும் அபரிச்சேத்யமான மஹதாதிப்ரக்ருதி விகாரங்களும், ப்ரக்ருதியும். [பழுதேபாமுணர்வைப் பெறவூர்ந்து]- இவை ஹேயமென்னுமறிவை நான் பெறும்படிநடத்தி; "தேரூர்ந்து" என்னுமாபோலே இவை அபுருஷார்த்தமென்னும் உணர்வுண்டு-மயர்வற்றமதி: அத்தை நான் உடையேனும்படிபண்ணி. [இறவேறி] - ப்ராக்ருதி ப்ராக்ருதங்கள் அபுருஷார்த்தமென்னுமளவேயன்றிக்கே முடியப்போய்: ஜ்ஞாநாநந்தஸ்வரூபனாய் நித்யனாய் ஸ்வதஸ்ஸுகியாயிருக்கிறவளவும்செல்ல அறிவித்து. [யானுந்தானாய் ஒழிந்தானே] - அவ்வளவிலும் பர்யவஸியாதே என்னைச்சொல்லுஞ் சொல்லாலே தன்னைச் சொல்லலாம்படி தனக்கு ப்ரகாரதயா ஶேஷமென்னுமிடத்தைக் காட்டித்தந்தான். அஹம் புத்தியும் அஹம்ஶப்தமும் தன்னளவும் செல்லும்படி ப்ரகாரதைகவேஷமாயிருக்கிறபடியைக் காட்டித்தந்தான். தச்சப்தம், குணவிஶிஷ்டவாசியானவோபாதி த்வம் ஶப்தமும் அசித்விஶிஷ்ட ஜீவாந்தர்யாமியாமளவும் காட்டக்கடவதிறே.

ஈடு.—மூன்றாம்பாட்டு. கேவல க்ருபையாலே ஸ்வவிஷயமாக இச்சையையும் பிறப்பித்து, என்னோடே ஸம்ஶ்லேஷித்து, ஸம்ஶ்லேஷ ஸ்த்தைர்யார்த்தமாக, விலக்ஷணமுமாய்த்தனக்குஅநந்யார்ஹமுமான ஆத்மஸ்வரூபத்தையும் காட்டியருளினனேன்கிறார்.

[உணர்விலும்பரோருவனை] - உணர்விலேயுளரான நித்யஸித்தர்: ஜ்ஞாநாதிகரான நித்யஸூரிகளுடைய ஸத்தாதிகள் ஸ்வாதீநமாம்படியிருக்கிற அத்விதீயனை. இத்

---

மூன்றாம்பாட்டு, - உணர்வில் இத்யாதி. "என்னுணர்வினுள்ளேயிருத்தினேன்" என்றுதொடங்கி, "யானுந்தானாயொழிந்தான்" என்னுமளவும்கடாக்ஷித்து அவதாரிகை - கேவல க்ருபையாலே இத்யாதி. * இருத்தும்வியந்தில் ஸம்ஶ்லேஷம் உந்மஸ்தகமாகச் செல்லாநிற்கச் செய்தே, ஆத்மஸ்வரூபத்தைக்காட்டுகிறதுக்கு ப்ரயோஜநம்அருளிச்செய்கிறார் - ஸம்ஶ்லேஷ ஸ்த்தைர்யார்த்தமாக என்று.

விவரணம் - ஜ்ஞாநாதிகரான இத்யாதி. இப்பதத்தால் ஃபலிதார்த்தம் - தே[illegible]ல[illegible]யாதி. அதெப்படி? என்ன - அயர்வறும் இத்யாதி. இப்பதத்துக்கு ஃபலிதம் - ப்ராப்யம்அவனே

தால் - ப்ராப்யஸ்வரூபஞ்சோல்லிற்று. * அயர்வறுமமரர்களதிபதியாயிருக்கு மிருப்பிறே ப்ராப்யம். ''அடியார்கள்குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ'' என்றிறே இவர் ப்ரார்த்தித்தது. [அவனதருளால்] - அவனுடைய ப்ரஸாதத்தாலே. ''ப்ராப்யம்அவனே'' என்கிற நிர்ப்பந்தத்தோபாதி, ப்ராபகமும் அவன்ப்ரஸாதமேயாயிருக்கிறபடி. [உறற் பொருட்டு] - ப்ராபிக்கையின்பொருட்டு. ப்ராப்யப்ராபகம் அவனேயாகில், நீர்அதில் அந்வயித்த அம்ஶமேதென்ன: [என்னுணர்வினுள்ளேயிருத்தினேன்] - அவனை என்னுடைய ஜ்ஞாநத்துக்கு விஷயமாக்கினேன். ''வைத்தேன்மதியால்'' என்றதுதானிறே. இச்சித்தேனென்கை. இச்சைதான் ஸ்வாதீநமோவென்னில், — [அதுவுமவனதின் னருளே] - அந்த இச்சைதான் பிறந்ததும் அவன் ப்ரஸாதத்தாலே. நின்றநின்றஅளவுகள் தோறும், ''இவ்வளவும் அவனாலேபிறந்தது'' என்னும்படியாயிற்றிருப்பது அவனுடைய ஸௌஹார்த்தம். ''தன்பொன்னடிக்கீழ் - இருத்தும்வியந்து'' என்று - ப்ராப்யமும் ப்ராபகமும் அவனேயென்று, ''அருத்தித்து'' என்றதிறே; அத்தையிறே இங்குச்சொல்லு கிறது. இரண்டரைப்பாட்டேன்கிறது அற்றது: மேல் - ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தைக் காட்டித் தந்தானென்கிறது:—[உணர்வும்] - வைஷயிகஜ்ஞாநமும். [உயிரும்] - பஞ்சவ்ருத்திப்ராணனும். [உடம்பும்] - ஶரீரமும். [மற்றுலப்பிலனவும்] - மற்றும் அபரிச்சேத்யமான மஹதாதிப்ரக்ருதிவிகாரங்களும், ப்ரக்ருதியும். [பழுதேயாமுணர்வைப் பெறவூர்ந்து] - இவையெல்லாம், ஹேயமேன்னும்படியான அறிவை நான்பெறும்படி நடத்தி; அந்வர்த்தப்ரயோஜநத்தேர்ஊருமாபோலே. இவை அபுருஷார்த்தமென்னுமுணர் வுண்டு-மயர்வற்றமதி;அத்தை நான்உடையேனும்படிபண்ணி. [இறவேறி]-ப்ரக்ருதி ப்ராக்ருதங்கள் அபுருஷார்த்தங்களேன்னு மளவேயன்றிக்கே முடியப்போய்: ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமாய், பகவச்சேஷதைக ரஸமாயிருக்கும் ஆத்மவஸ்துவேன்னுமளவும் காட்டித் தந்து. [இறவேறி] - முடியவேற்றி. [யானும்தானாயொழிந்தானே - அவ்வளவிலும் பர்யவஸியாதே, என்னைச் சொல்லும்சொல்லாலே தன்னைச்சொல்லலாம்படி தனக்கு ப்ரகாரதயா ஶேஷமென்னுமிடத்தையும் காட்டித்தந்தான். ''ஆழ்வீர்!'' என்றால், ''ஏன்'' என்பான் ஈஶ்வரன்போலேகாணும். அஹம்ஶப்தமும் அஹம்புத்தியும் தன்னளவும் செல்

இத்யாதி. ''பின்னூட்டுகிறது'' என்கிற யோஜனைக்குச்சேரக் காட்டுகிறார் - வைத்தேன் இத்யாதி. ஃபலிதம் - இச்சித்தேனென்கை என்று. ப்ராப்திக்கன்றோ அவன்வேண்டுவது? இச்சைக்கு வேணுமோவென்ன - நின்ற நின்ற இத்யாதி. ''உணர்வு'' என்று - இச்சையைச்சொல்லுமோ வென்ன - தன்பொன்னடி இத்யாதி. யத்வா, ''பின்னூட்டுகிறது'' என்கிறத்தைக் காட்டுகிறாரா தல். ''ஊர்ந்து'' என்கிறபதத்துக்கு ஊாவகயநமுவேந உக்தார்த்தத்தை விஶதீகரிக்கிறார். அந்வர்த்த இத்யாதி. அந்வர்த்தப்ரயோஜநத்தேர் என்றதுக்கு சீயர்காலந் தொடங்கி ஸம்ப்ரதாயமில்லை. ஆனாலும், ஸமர்த்தனான ராஜா தரித்ரனானால் த்ரவ்யார்த்தமாகத் தேர்களிலேயேறித் தானே நடத்துகை. விஜயாவஹமான விஜயரதமுண்டு - அர்ஜுநரதம், அதிலே தானே ஸாரதியாயேறி பீஷ்மாதிகள் ஸாமர்த்யமெல்லாம் பழுதேயாம்படி அத்தேரை நடத்தினாற்போலே, ஶரீரத்துக்கு ரதமென்றுபோகையாலே, ததேகதேஶமான ஹ்ருதயத்திலிருந்து வைஷயிக ஜ்ஞாநாதிகள் பழுதேயாம்படியான ஜ்ஞாநத்தை நடத்தினானென்று அருளிச்செய்யலாயிருக்கும். ''இவையெல்லாம்'' இத்யாதி வாக்யவிவரணம் - இவை அபுருஷார்த்தம் இத்யாதி. முடியப்போகையாவதேதென்ன - ஜ்ஞாநாநந்த இத்யாதி. ''ஊர்ந்து'' என்றதுக்கு அநுகுணமாக, ''இறவேறி'' என்றதுக்கு பதத்தைநெருக்கி அர்த்தமருளிச்செய்கிறார் - முடியவேற்றி என்று. ஃபலிதம் - ஆழ்வீர் இத்யாதி.

லும்படி ப்ரகாரதைக வேஷமாயிருக்கிறபடியைக் காட்டித்தந்தான். * தச்சப்தம் குண விஶிஷ்டவாசியானவோபாதி, * த்வம்ஶப்தமும் அசித்விஶிஷ்ட ஜீவாந்தர்யாமியளவும் செல்லக்கடவதிறே. (௩)

## நான்காம் பாட்டு.

யானுந்தானாயொழிந்தானை யாதும்யவர்க்கும்முன்னோனை
தானும்சிவனும்பிரமனுமாகிப் பணைத்த தனிமுதலைத்
தேனும்பாலுங்கன்னலும் அமுதுமாகித்தித்தித்து என்
ஊனிலுயிரிலுணர்வினில் நின்றவொன்றையுணர்ந்தேனே.

ீ.—(யானுப்) - நான் அநர்ஹனென்றுகொண்டு என்னுடைய இச்சாநு குணமாகத் தன்னை எனக்கு அகலவொண்ணாதபடி, தன்னைக்குறித்து இவ்வாத்மா ஶேஷைகஸ்வபாவனென்னுமிடத்தைக் காட்டித்தந்தருளுகையன்றியே, தன் திருவடிகளை நானே அகலேனல்லேனென்றிருக்கும்படியாக, ஸ்வஶேஷைகரஸமான இவ்வாத்மா நூபுராதிதிவ்யபூஷணம்போலே கல்யாணசாலியாயிருக்குமென்னுமிடத்தையும் காட்டித் தந்தருளினானென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், இவ்வாத்மா தனக்கு அத்யந்த போக்யமென்னுமிடத்தையும் காட்டித்தந்தருளினானென்கிறார்.

[யானும் என்று தொடங்கி] - சேதநாசேதநங்களுக்குக் காரணமுமாய், விலக்ஷணமாய்த் த்யந்தர்ஹனான தானும் ப்ரஹ்மாவும் ருத்ரன் தொடக்கமானகாரியவர்க்கத்துக்கும் காரணமானவனை. [தேனும் பாலும் என்று மேலுக்கு]-நிரதிஶய போக்யமாய் என்னுடைய ஶரீரத்திலும் ப்ராணனிலும் ஜ்ஞாநத்திலும் வ்யாப்தமாய் நின்ற விலக்ஷணமான ஆத்மாவைத் தனக்கு ஶேஷமாகவுடையவனை யறியப்பெற்றேன். யாதும் யவர்க்கும் முன்னோனை, தானும் சிவனும் பிரமனுமாகிப்பணைத்த தனிமுதலை, தேனும்பாலும் கன்னலுமமுதுமாகித்தித்தித்து - என் ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற ஒன்றான யானுந்தானாய் ஒழிந்தானை - உணர்ந்தேன்' என்றந்வயம். இருந்ததேகுடியாக ஸர்வசேதநரையும் விஶேஷித்து அவர்களில் ப்ரதாநரான ப்ரஹ்ம ருத்ராதிகளையும் தன்னுடைய திவ்யஸங்கல்பத்தாலும் தன்னுடைய திவ்யாவதாரங்களாலும் அவர்களுடைய இச்சாதிகளுக்கு அநுகுணமாக ப்ராக்ருதமான ஐஶ்வர்யதாரதம்யத்தைக் கொடுத்து நடத்துகிறவன். அங்ஙனன்றிக்கே, என்னை பொருவனையும் விசேஷித்து முற்றூட்டாகக்கைக்கொண்டு, ஆத்மஸ்ரூபாநுகுணமாக ப்ராக்ருதமானஶப்தாதி விஷயாநுபவம் ஹேயமென்னுமிடத்தையும், ஆத்மஸ்வரூபம் பரதந்த்ரமென்னுமிடத்தையும், ஆத்மா நிரதிஶயபோக்யமென்னுமிடத்தையும் அறிவித்தார் என்று இவ்விரண்டு பாட்டுக்கும் கருத்து. நின்றனிருந்தனிற்போலே இஸ்ஸாமாநாதிகாண்யத்துக்கு விசேஷணம்ஶ

காட்டித்தந்தப்ரகாரமெது? என்ன - அஹம்ஶப்தம் “யானுந்தானாயொழிந்தான்” என்றால் - ஸ்வரூபைக்யமொழிய ப்ரகாரப்ரகாரிபாவம் மாவென்ன; “தத்த்வமஸி” என்கிறவிடத்திற்போலே சொல்லுமென்கிறார் - தச்சப்தம் யாதி. க்ரமேணாந்வய:. (௪)

மான போக்யதையிலே தாத்பர்யம். கீழ் - ஆத்மா ஶேஷத்வபர்யந்தமாக அநு ஸந்திக்கப்பட்டது. இனிமேல் ஆத்மமாத்ரம் அநுஸந்திக்கப்படுகிறது.

ப.—அநந்தரம், ஸமஸ்தகாரணபூதனானவன், "ஜகத்ஸர்வம்" என்கிறபடியே தனக்கு ஸர்வவிதபோக்யபூதனான ஆத்மாவைத் தனக்கு அப்ருதக்ஸித்த ப்ரகாரமாக வுடையனாய் நிற்கிற நிலையை அறியப்பெற்றேனென்கிறார்.

யாதும்யவர்க்கும் - ஸமஷ்டிரூபமான ஸகலசேதநாசேதநங்களுக்கும், முன்னோனை-(நியதபூர்வக்ஷணவர்த்தியான) காரணபூதனாய், தானும்- (வ்யஷ்டிரூப ஸ்ருஷ்டியாதிகளுக்கு உறப்பாக ரக்ஷணத்துக்குக் கடவ) தானும், சிவனும் - (ஸம்ஹாரத்துக்கு கடவ) ருத்ரனும், பிரமனும் ஆகி - (ஸ்ருஷ்டிக்குக்கடவ) ப்ரஹ்மாவுமாய்க்கொண்டு பணைத்த - விஸ்த்ருதனான, தனி முதலை - ப்ரதாநகாரணபூதனாய், (தான் இச்சேதநனுக்கு ஸர்வவிதபோக்யனாமாபோலே), தேனும்பாலும் கன்னலும் அமுதும் ஆகி- தனக்கு இசாநுரூப போக்யமாய்க்கொண்டு, தித்தித்து - ரஸித்து, என் - என்னுடைய, ஊனில் - ஶரீரத்திலும், உயிரில் - ப்ராணனிலும், உணர்வினில் - ஜ்ஞாநத்திலும், நின்ற-அப்ருதக்ஸித்தனாய்க்கொண்டு ஏகாகாரமாயிருக்கிற, ஒன்றை - ஆத்மஸ்வரூபத்தை, (ஶரீரமாக வுடையனாகையாலே), யானும் - அஹமர்த்தமும், தான் ஆய்ஒழிந்தானை - தானாய் விட்டவனை, உணர்ந்தேன் - அறியப்பெற்றேன்.

இ.—நாலாம்பாட்டில், ப்ராப்தியைக் காட்டினவளவேயன்றியே இவ்வாத்மா தனக்கு அத்யந்த போக்யமென்னு மிடத்தையுங் காட்டினானென்கிறார்.

[யானும் தானாயொழிந்தானை] - கீழ்ச்சொன்ன அநந்யார்ஹஶேஷத்வத்தின் ப்ரீதியாலே யநுபாஷிக்கிறார். [யாதுமித்யாதி] — காரணாவஸ்தமான ஸகலசேதநாசேதநங்களுக்கும் காரணமானவனை. நியதபூர்வக்ஷணவர்த்தியிறே காரணமாவது. ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே அவதரித்து, தானும் ப்ரஹ்மருத்ரர்களும் தொடக்கமான கார்யவர்க்கமாய்க்கொண்டு விஸ்த்ருதமான அத்விதீயகாரணமானவனை: நாமரூபங்களிழந்து ஶக்த்யவஸ்த ப்ரளயம்போலே ஸ்வஸ்வரூபத்திலே அந்தர்கதமான சேதநாசேதநங்களை ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறே தன்பக்கலினின்றும் ப்ரயாந புருஷாவஸ்தையையுண்டாக்கி மஹதாத்யண்ட ஸ்ருஷ்டிபர்யந்தமாக ஸ்வேநரூபேண ஸ்ருஷ்டித்தும், அண்டாந்தர்வர்த்தி பதார்த்தங்களுடைய ஸ்ருஷ்டி ஸம்ஹாரார்த்தமாக ப்ரஹ்மருத்ரர்களை ஸ்ருஷ்டித்தும் பாலநார்த்தமாக ப்ரஹ்மருத்ர ஸஜாதீயனாய்வந்து அவதரித்தவனென்கை. [தேனும் இத்யாதி] - "ஸர்வரஸ:" என்று சேதநனுக்கு அவன் இனிதாயிருக்குமாபோலே அவனுக்கும் இவன் போக்யனாயிருக்கை. "அவனுக்கு போக்யம்" என்னுமாகாரத்தாலேயிறே, ஸ்வஸ்வரூபம்இவனுக்கு இனிதாவது. [என்ஊனில் இத்யாதி] - என்ஶரீரத்திலும் ப்ராணனிலும், ஜ்ஞாநத்திலும், வ்யாப்தமான விலக்ஷணமான ஆத்மாவைத் தனக்கு ஶரீரமாகவுடையவனை யறியப்பெற்றேன். "நின்றவொன்று" என்கிற ஆத்மஸ்வரூபவாசியான ஶப்தம், ஆஶ்ரயமான ப்ரகாரிபர்யந்தாபிதாநம் பண்ணுகிறது ஸ்வநிஷ்டமல்லாமையாலே ஶேஷத்வபர்யந்தமாயிறே யிருப்பது. ஆத்மாவினுடைய போக்யதையாகில் சொல்லுகிறது, காரணத்வம் சொல்லுகிறதென் என்னில்? விமுகரானவர்களை கர்மாநுகுணமாக ஸ்ருஷ்டித்துவிட்டான். ஐஶ்வர்யகாமரான ப்ரஹ்மருத்ராதிகளுக்கு ஐஶ்வர்யங்களைக்கொடுத்து அதிகாரங்களை நடத்திக் கொடுத்தான்; என்

*னளவில் இவ்வாத்மா தனக்கு அநந்யார்ஹமாய் போக்யமாயிருக்கிறபடியைக் காட்டித் தந்தானென்கிறார். நின்றனர் இருந்தனரிற்போலே இஸ்ஸாமாநாதிகரண்யத்துக்கு விஶேஷணாம்ஶமான போக்யதையிலே தாத்பர்யம். வையதிகரண்யத்துக்கும், நாட்டார் சொல்லுகிற ஶரீரத்வேஹமன்று பொருள்; ஸாமாநாதிகரண்யத்துக்கும் ஸ்வரூபைக்யமன்று பொருள்: 'யாதும்யவர்க்கும் முன்னோனை' என்று தொடங்கி என்னுனிலுயிரிலுணர்வினில் நின்றவொன்றான - யானுந் தானாயொழிந்தானை உணர்ந்தேன்' என்றந்வயம்.*

**ஈடு.**—நாலாம்பாட்டு. ப்ராப்தியைக்காட்டினவளவேயன்றியே, இவ்வாத்மா தனக்கு அத்யந்தபோக்யமென்னுமிடத்தையும் காட்டித்தந்தா னென்கிறார்.

[யானும்தானாயொழிந்தானை] - கீழ்ச்சொன்ன அநந்யார்ஹஶேஷத்வத்தில் ப்ரீதியாலே அநுபாஷிக்கிறார். [யாதும்இத்யாதி] - யாதும் யவர்க்குமென்று - காரணவஸ்த்தமான சேதநாசேதநங்களைச் சொல்லுகிறது. [முன்னோனை] - கார்யத்துக்கு நியமேந பூர்வக்ஷணவர்த்தியானதிறே காரணமாவது. [தானும்இத்யாதி] - ப்ரஹ்மருத்ரர்கள்நடுவே அவதரித்த தானும், ப்ரஹ்மருத்ரர்கள் முதலான கார்யவர்க்கமுமாய்க் கொண்டு விஸ்த்ருதமான அத்விதீயகாரணமானவனை; சேதநாசேதநங்களடங்க அழிந்தபோது தன்திருமேனியிலே ஶக்த்யவஸ்த்தப்ரபைபோலே ஸூக்ஷ்மரூபேண இவை கிடக்கும்படி †யேறிட்டுக்கொண்டுநோக்கி, ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறே தன்பக்கலினின்றும் விபக்தமாக்கி, அண்டஸ்ருஷ்டியளவும் தானேநடத்தி, அண்டாந்தர்வர்த்திகளில் ப்ரதாநரான ப்ரஹ்மாதிகளைஉண்டாக்கி, ஸ்வேநரூபேணநின்று பாலநகர்மத்தைப்பண்ணியும், ப்ரஹ்மருத்ரர்களுடைய ஶரீரத்தையும் ஆத்மாவையும்அதிஷ்டித்துக்கொண்டுநின்று ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைப்பண்ணியும், அவர்கள் செய்கிற கார்யங்களோடு தான்செய்கிற கார்யங்களோடு வாசியற எல்லாம் தானே நடத்துகிறவனை. [தேனும்] - இப்படி இனிதாயிருக்கிறதுஆர்க்கு?என்னில்.-**"ஸர்வரஸ:"** (ஸர்வரஸ:)என்று சேதநனுக்கு அவன் இனியனாயிருக்குமாபோலே ஈஶ்வரனுக்கும் இது இனிதாயிருக்குமிறே. அவனுக்கு 'என்னது' என்று இனிதாயிருக்கும்; இவனுக்கு "அவனது" என்று இனிதாயிருக்கும். "ஈஶ்வரபரதந்த்ரன்"என்று அறிவதற்குமுன்னும்,"ஸ்வாநுபவம்அமையும்"என்னும்படி இனிதாயிருக்கிறதிறே. [என்னுனில்இத்யாதி] - என்ஶரீரத்திலும், ப்ராணனிலும், ஜ்ஞாநத்தி

*நாலாம்பாட்டு - யானும் இத்யாதி. "தேனும்பாலும்கன்னலுமமுதுமாகி" என்கிறபதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - ப்ராப்தியை இத்யாதி.*

*புநருக்திக்கு பாவம் - கீழ்ச்சொன்ன இத்யாதி. "தானும்சிவனும்" இத்யாதியைப் பற்ற-* **காரணவஸ்தமான** *இத்யாதி. காரணபூதனென்றதே, "முன்னோனை" என்றதுக்கு பாவம் -* **கார்யத்துக்கு** *இத்யாதி. முன்னோனை - காரணபூதனை, "யாதும் யவர்க்கும்" என்று தொடங்கி, "தனிமுதலை" என்னுமளவுக்கும் அர்த்தம் -* **சேதநாசேதநங்கள்** *இத்யாதி* **பணைத்த** *- விஸ்ருதனை. "தானும்" என்றதுக்கு அர்த்தம்-***அண்டாந்தர்வர்த்திகள்** *இத்யாதி. "தேனும்பாலும்" என்று தொடங்கி, "தித்தித்திருப்பதாய் - என்னுனிலுயிரிலுணர்வினில் நின்றவொன்றை" என்று - ஆத்மாவைச் சொல்லுகிறது. இன்னார்க்கு இனிதாயிருக்குமென்னுமையாலே பாவம் -* **இப்படிஇனிதாய்** *இத்யாதி. தமக்கும் ஸ்வரூபம் போக்யமாயிருக்குமே, ஈஶ்வரனுக்கும் தனக்கும் போக்யமாமிடத்தில் வாசியேதென்ன -* **அவனுக்கு** *இத்யாதி வாக்யத்வயம். அப்படி ஆத்மவஸ்து தான் போக்யமாயிருக்குமோவென்ன -* **ஈஶ்வரபரதந்த்ரன்** *இத்யாதி. "நின்றவொன்றை" என்று-*

*† ஏறட்டுக் கொண்டு என்று காண்கிறது.*

லும் வ்யாப்தமாய், விலக்ஷணமான ஆத்மாவைத் தனக்கு ஶரீரமாகவுடையவனை அறிய பெற்றேன். "நின்றவொன்று" என்கிறது ஜீவாத்மஸ்வரூபவாசியான ஶப்தம்: ஆஶ்ர மான ப்ரகாரிபர்யந்தாபிதாநம்பண்ணுகிறது. ஸ்வநிஷ்டமல்லாமையாலே பகவத்பர்ய தமாயிறேயிருப்பது. ஆத்மாவினுடையபோக்யதையாகிற் சொல்லுகிறது, காரணத்வ சொல்லுகிறதேன்? என்னில், - விமுவரான சேதநரை கர்மாநுகுணமாக ஸ்ருஷ்டித் விட்டான்; ஐஶ்வர்யகாமரான ப்ரஹ்மாதிகளுக்கு அவர்களுகந்த ஐஶ்வர்யத்தை கொடுத்துவிட்டான்; எனக்கு. அசிதம்ஶம் த்யாஜ்யமென்னுமிடத்தையும், ஐஶ்வர்ய அபுருஷார்த்தமென்னுமிடத்தையும் ஆத்மவஸ்து தனக்கு அநந்யார்ஹஶேஷமாய் நிர ஶயபோக்யமா யிருக்குமென்னுமிடத்தையும் காட்டித் தந்தானென்கைக்காகச் சொல் கிறார். * நின்றனரிருந்தனரிற்போலே, இஸ்ஸாமாநாதிகரண்யத்துக்கு விஶேஷணம் மான போக்யதையிலே தாத்பர்யம். வையதிகரண்யத்துக்கும், நாட்டார் சொல்லுகி ஶக்தபேத மன்று பொருள்;ஸாமாநாதிகரண்யத்துக்கும் ஸ்வரூபைக்ய மன்று பொருள் 'யாதும்யவர்க்கும் முன்னோனை' 'என்றுதொடங்கி என்னுனி லுயிரிலுணர்வினில் நின் வொன்றுன - யானும் தானாயொழிந்தானை - உணர்ந்தேன்' என்றந்வயம். (ச

---

## ஐந்தாம் பாட்டு.

---

நின்றவொன்றையுணர்ந்தேனுக்கு அதனுள்நேர்மையதுவிதுவென்ற
ஒன்றுமொருவர்க்குணரலாகாது உணர்ந்துமேலுங்காண்பரிது
சென்றுசென்றுபரம்பரமாய் யாதுமின்றித்தேய்ந்தற்று
நன்றுதீதென்றறிவரிதாய் நன்றாய்ஞானங்கடந்ததே.

---

சேதநனையன்றோசொல்லுகிறது, ஈஶ்வரனைச் சொல்லும் வழியேதென்ன - நின்றவொன்று என்கிற இத்யாதி. பண்ணும்ப்ரகாரமேதென்ன - ஸ்வநிஷ்ட்டம் இத்யாதி. ஸ்வநிஷ்ட்ட மல்லாமை யாலேயென்றது - ஸ்வபர்யவஸாயியல்லாமையாலே என்றபடி. ஆத்மாவினுடைய போக்யதை சொல்லுகிறவிடத்திலே காரணத்வம் சொன்னதுக்கு ப்ரயோஜநமில்லையேயென்று ஶங்கித்துப் பரிஹரிக்கிறார் - ஆத்மாவினுடைய இத்யாதி. "யாதும்யவர்க்கும்முன்னோனை" என்றதுக்கு ப்ரயோஜநம் - விமுவரான இத்யாதி. "சிவனும்பிரமனுமாகி" என்றதுக்கு ப்ரயோஜநம் - ஐஶ்வர்யகாமரான இத்யாதி. "தேனும்" என்றுதொடங்கி "ஒன்றையுணர்ந்தேனே" என்றதுக்கு ப்ரயோஜநம் - எனக்கு அசிதம்சம் இத்யாதி. "நின்றவொன்றை" என்கிற ஸாமாநாதிகரண்யத்தாலே, ப்ரகாரியான தன்னைக் காட்டித்தந்தானென்றன்றோ தோற்றுகிறது: ஆத்மஸ்வரூபபோக்யதையைக்காட்டித்தந்தானென்று தோற்றவில்லையே?என்ன - நின்றனர் இத்யாதி. போக்யதாவிசிஷ்டஸ்வரூபத்தில் விஶேஷணம்ஶமான என்றபடி. "நின்றவொன்றை" என்கிற ஸாமாநாதிகரண்யத்தாலே, '[illegible]' என்றாற் போலே ஸ்வரூபைக்யமன்றோ தோற்றுகிறதென்ன - வையதிகரண்யத்துக்கும் இத்யாதி. வையதிகரண்யம் - ப்ராஸங்கிகம். சுத்தபேத மன்றுஎன்றது - ராஜப்ருத்யர்களுக்குப்போலே, அப்ருதக்ஸித்த ஶேஷஶேஷிபாவ நிபந்தநமான பேதம் பொருளென்றபடி. ஸ்வருபைக்யமன்று பொருள் - ஶரீரஶரீரிபாவ நிபந்தநைக்யம் பொருளென்றபடி. "கீழ் அநுபாஷணமென்றது தவிர, "நின்றவொன்றுன - யானும் தானாயொழிந்தானை" என்று அந்வயிக்கையாலே இதுவும் ஒரர்த்தம். அநுபாஷண பக்ஷத்தில், "யாதும்" என்றுதொடங்கி அடைவே அந்வயம்.

(ரு)

ஆ.—"உணர்வுமுயிருமுடம்பும்" என்று தொடங்கி நாலாம்பாட்டளவும் ஆத்மஸி தாத்பர்யமாய், நிர்த்தேசத்தை ஸ்வபக்ஷபர்யந்தமாகப்பண்ணிக்கொடுபோந்தது; இனி, இந்நிர்த்தேசமும் ஆத்மபர்யந்தமேயாகிறது. [நின்றவொன்றை] - இப்படி எம்பெருமானுடைய காருண்யத்தாலே என்னால் ஸாக்ஷாத்க்ருதமாய், ப்ரக்ருதி மஹதஹங்காரவிகாரதேஹேந்த்ரிய ப்ருதிவ்யாதிபூத ஸ்பர்சரூபரஸகந்தாதிவிஷய ரூப சதுர்விம்சதி தத்த்வ விலக்ஷணமாய், தத்ஸ்வபாவமற்ற ரஹிதமாயிருந்த இவ்வாத்மஸ்வரூபத்தை ஒருவர்க்கு அறிகையுமரிது, யோகத்தாலே ப்ரத்யக்ஷிக்கையும் அரிதென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், நான் ஸ்வபவத்ப்ரஸாதத்தாலே அறிந்த இவ்வாத்மவஸ்து ஒருவர்க்கும் அறியப்போகிறதன்று; அறிந்தாலும் ஸாக்ஷாத்கரிக்கப் போகிறதன்று என்கிறார்.

[நின்ற வென்று தொடங்கி] - தேஹேந்த்ரியாதிகளுக்கு ஸ்வாமியாய் நின்ற விலக்ஷணமான ஆத்மாவை ஆராய்ந்தேனுக்கு அதினுடைய வைலக்ஷண்யம் ஒரு ப்ரகாரத்தைச் சொல்லி 'இப்படியிருந்தது' என்று எத்தனையேனும் அறிவுடையார்க்கும் ஒன்றும் அறியவொண்ணாது; அறிந்தால் பின்னை ஸாக்ஷாத்கரிக்க வொண்ணாது. [சென்றென்று தொடங்கி] - போய்ப் போய் ஒன்றுக் கொன்று மேலாயிருக்கிற அன்னமயாதிகளுக்குப் பரனாய் ப்ரக்ருதியின் தன்மை ஒன்றுமில்லாதபடி அத்தோடு அறவிட்டற்று ப்ராக்ருதமானபடியால் நன்றென்றும் தீதென்றும் அறியவொண்ணாதே அறவிலக்ஷணமாய் ஐந்த்ரியகஜ்ஞாநத்துக்கு எட்டாதிருக்கும்: இப்பாட்டில்- ஸாங்க்யத்தில் தத்த்வ ஸங்க்யாநக்ரமத்தாலே ஆத்மஸ்வரூபத்தைச் சொல்லும்படியைச் சொல்லிற்று.

ப—அநந்தரம், இப்படி ஸ்வகவத்ப்ரகாரபூதனை ஆத்மாவினுடைய துரவகமத்வாதிசயத்தை அருளிச்செய்கிறார்.

(நஶ்வரமாய் நாநாகாரமான அசித்துப்போலன்றியே), நின்ற ஒன்றை - நித்ய(மாய் ஜ்ஞாநைகாகார)மான ஆத்மவஸ்துவை, உணர்ந்தேனுக்கு - (அவன் ஸ்வப்ரகாரதயா காட்டக்)கண்ட எனக்கு, அதனுள் — அதினுடைய, நேர்மை - ஸூக்ஷ்மமான வைலக்ஷண்யம், ஒன்றும் - ஒன்றும், (ஒருப்ரகாரத்தாலும்), ஒருவர்க்கு - நிஷ்பந்நஜ்ஞாநராயிருப்பார்க்கும், அதுஇதுஎன்று - ஏவம்விதமென்று, (அநுஹூதஸஜாதீயமாகவும், அநுஹூயமான ஸஜாதீயமாகவும்), உணரல் ஆகாது- (ஶ்ரவணமநநாதிகளால்) அறியப்போகாது; உணர்ந்தும்-(வருந்தி) அறிந்தாலும், மேலும்-ஸமாஸ்யபர்யந்தமாக ஆரோஹித்தவளவிலும், காண்பு அரிது- அபரோக்ஷித்துக் காண அரிதாயிருக்கும்;(அவன் காட்டக்கண்ட எனக்கு), (தேஹேந்த்ரியமநஃப்ராணஸூக்களில் வைத்துக்கொண்டு),பரம்பரம் ஆய் — ஒன்றுக்கொன்றுமேலாய், சென்றுசென்று - சென்றுசென்று, யாதும் - (அவற்றினுடைய விகாராதி) ஸ்வபாவமொன்றும், இன்றி - இன்றியே, தேய்ந்து - அத்யந்த ஸூக்ஷ்மமாய், அற்று- (தத்ஸம்பர்க்கம்) அற்று, நன்றுதீது-(அவற்றுக்குண்டான உத்தரோத்தராபேக்ஷையாய்வருகிற) நன்மையும் தீமையுமுடைத்து, என்று - என்று, அறிவுஅரிதுஆய் - அறிய அரியதாய்,நன்றுஆய்-(ஸர்வப்ரகாரவ்யாவ்ருத்தமான) ஜ்ஞாநாநந்த வைலக்ஷண்யத்தையுமுடைத்தாய், ஞானம் - (அவற்றை அவலம்பிக்கிற) ஜ்ஞாநத்துக்கு, கடந்தது - விஷயமன்றியேயிருந்தது. இதில் ஸாங்க்யோக்த மர்யாதையாலே ஆத்மவ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று.

இ.—அஞ்சாம்பாட்டில், கீழ், ஸௌவத்ப்ரகாரமாக ஆத்மா அநுஸந்திக்க பட்டது ; இதுக்குமேல் நாலுபாட்டு – படமதமான ஸௌக்ல்யத்தை நிஷ்கர்ஷக ஸ தத்தாலே பிரித்துச் சொல்லுமாபோலே, ஆத்மஸ்வரூபமாத்ரத்தை அநுஸந்திக்கிரு இதில் முதற்பாட்டு - ஸௌவத்ப்ரஸாதத்தாலே நான் அறிந்த இவ்வாத்மவஸ்து ஒருவர் கும் அறியப்போகிறதன்று; அது அறிந்தாலும் ஸாக்ஷாத்கரிக்கப்போகிறதன்று என்கிரு

[நின்றவொன்றை] - தேஹேந்த்ரிய மநஃப்ராணபீக்களிற்காட்டில் அந்யபா இவையழியுமன்றும் அழியாதே ஏகரூபமாய், இவற்றுக்கு நியந்தாவுமாய், விலக்ஷ முமான ஆத்மாவை. [உணர்ந்தேனுக்கு] - "உயர்வற உயர்நலமுடையவன்" என் அவன் கல்யாணகுணங்களிலே இழிந்தவராகையாலே இதுக்கு முன்பு மின்மினிபோலே யிருக்கிற ஆத்மஸ்வரூபத்தில் கைவைத்திலர்; பரிகரமும் ஸந்நிரூபாபந்நஜ்ஞாநமா யாலே இத்தை யநுஸந்திக்கப் போதுபெற்றிலர். முக்தன், ப்ராவஜநம்ஸாரு பண்ணு மாபோலேயிறே ஸௌவத்ப்ரவணனுக்கும் ஆத்மஜ்ஞாநம் அவிஷயமாயிருந்தபடி இத்தை யாராய்ந்தவாறே இருந்தபடியென்? [அதனுள் நேர்மை] - அதினுடைய வை க்ஷண்யம். [அதுஇதுஎன்று] - அநுஸைதங்களின்படி யென்றுதல், அநுஸவிக்கி வற்றின்படி யென்றுதல் அறியப்போகாது. [ஒன்றுமொருவர்க்கும் உணரலாகாது] எத்தனையேனும் அதிஶயிதஜ்ஞாநர்க்கும் ஏகதேசமும் அறியப்போகாது; "த்ருஶ யிகதாவெஸஷாவே ஃகூாவஸகுவெதஸா". [உணர்ந்து மேலும் கண்பரிது] - வருந்தி யறிந்தாலும் ஸாக்ஷாத்கரிக்கவொண்ணாது. [சென்று சென்று பரம்பரமாய்] - போய் போய் ஒன்றுக்கொன்று மேலாயிருக்கிற அந்நமயாதிகளுக்குப்பரமாய். [யாதுமின்றி தேய்ந்தற்று] - அவற்றின் ஸ்வஸாவமொன்றும் தட்டாதபடி அவற்றோடு அறத்தொ றற்று. [நன்று தீதென்று அறிவரிதாய்] - தேஹம், தேஹத்தைக்காட்டில் இந்த்ரியம் அதிற்காட்டில் மநஸ்ஸு அதிற்காட்டில் ப்ராணன், அதிற்காட்டில் புத்தி என்கிறதில் வைலக்ஷண்யம் உண்டாகிறாப்போலே ப்ராக்ருதங்களில் உண்டான நன்மை தீமைகள் சொல்லவொண்ணாதிருக்கை. [நன்றாய்]-இவற்றிற்காட்டில் அதிவிலக்ஷணமாய். [ஞானங் கடந்ததே] - ஐந்த்ரியஜ்ஞாநத்துக்கு எட்டாதிருக்கும். கீழில், அவை ஒன்றுக்கொன்று லேவாகியுண்டா யிருக்கச்செய்தேயும் ஏகப்ரமாணஸம்யத்வ ஸாம்யமுண்டு; அதுவு மில்லையென்கிறது, இப்பாட்டில். ஸாங்க்யத்தில் தத்த்வஸங்க்யாநுக்ரமத்தாலே ஆத்மஸ்வ ரூபம் சொல்லும்படியைச் சொல்லிற்று.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. "கீழ் - ஸகவத்ப்ரகாரமாக ஆத்மா அநுஸந்திக்கப் பட்டது ; இதுக்குமேல் நாலுபாட்டு-படமதமான ஸௌக்ல்யத்தைப் பிரித்து நிஷ்கர்ஷக ஸப்தத்தையிட்டு வ்யவஹரிக்குமாபோலே, 'எம்பெம்மானோடு' என்கிற பாட்டளவும் கேவலஆத்மஸ்வரூபத்தைச் சொல்லுகிறது" என்று எம்பார் அருளிச்செய்யும்படி. ஆண்

---

அஞ்சாம்பாட்டு.--நின்ற இத்யாதி. கீழிற்பாட்டில் ப்ரமேயத்தை அநுவதித்துக்கொண்டு, மேல் நாலுபாட்டுக்கும் இரண்டுவகையாக ஸங்கதி அருளிச்செய்கிறார் - கீழ் ஸகவத்ப்ரகாரமாக இத்யாதி வாக்யத்வயத்தாலே. நிஷ்கர்ஷகஸப்தத்தையிட்டு வ்யவஹரிக்குமாபோலே - "வடி ஸாஸௌக்ல்யம்" என்றநிஷ்கர்ஷித்து வ்யவஹரிக்குமாபோலேயென்றபடி, ஸப்தங்கள்தான், நிஷ் கர்ஷகங்களென்றும், அநிஷ்கர்ஷகங்களென்றும் இரண்டுவகையாயிருக்கும். அதில், நிஷ்கர்ஷகங்க ளாவது - தர்மதர்மிகளைப் பிரியஅநுஸந்திக்கை. இதுதான், நியதநிஷ்கர்ஷகமென்றும், வைவக்ஷிக

டான், ''ப்ரகாரமானவேஷத்திலே சொல்லுகிறது'' என்னும். ''நின்றவொன்றை'' என்கிறவிதில் - ஹகவத்ப்ரஸாதத்தாலே நான்அறிந்த இவ்வாத்மவஸ்து ஒருவர்க்கும் அறியப்போகாது, வருந்தியறிந்தாலும் ஸாக்ஷாத்கரிக்கப் போகிறதன் றென்கிறார்.

[நின்றவொன்றை] - *தேஹேந்த்ரியமநஃப்ராணபீக்களிற்காட்டில் அந்யமாய், இவைஅழியுமன்றும் அழியாதே ஏகரூபமாய், இவற்றுக்கு நியந்தாவுமாய், விலக்ஷணமுமான ஆத்மாவை. [உணர்ந்தேனுக்கு] - ஆராய்ந்தேனுக்கு. ''உயர்வறவுயர்நலம்'' என்று அவனுடைய கல்யாணகுணங்களிலே இழிந்தவராகையாலே, இதுக்குமுன்பு மின்மினி போலேயிருக்கிற ஆத்மஸ்வரூபத்தில் கண்வைத்திலர்; பரிகரமும் ஹக்திரூபாபந்நஜ்ஞாநமாகையாலே இத்தையநுஸந்திக்கைக்குப் போதுபெற்றிலர். † (முக்தன், * நோபஜநம் ஸ்மரந் பண்ணுமாபோலேயிறே, ஹகவத்குணப்ரவணனுக்கும் ஆத்மஜ்ஞாநம் அவிஷயமாயிருக்கும்படி). இத்தை ஆராய்ந்தேனுக்கு இது இருந்தபடியென்? என்கிறார்:—[அதனுள்நேர்மை] - அதினுடைய வைலக்ஷண்யம். [அதுவிதுவென்று] - அநுபூதங்களின் படி என்றுதல், அநுஹவிக்கிறவற்றின்படி என்றுதல்அறியப்போகாது. [ஒன்றுமொருவர்க்கு உணரலாகாது] - (ஒருவர்க்கு - ஒன்றும் - உணரலாகாது)- எத்தனையேனும் அதிஶயிதஜ்ஞாநர்க்கும் ஏகதேசமும்அறியப்போகாது. [உணர்ந்துமேலும்காண்பரிது]- ''ஜ்ஞாதும் த்ரஷ்டுஞ்சதத்த்வேந'' (ஜ்ஞாதும்த்ரஷ்டுஞ்சதத்த்வேந) என்கிறபடியே அறியப்போகாது, அறிந்தால் பின்னை ஸாக்ஷாத்கரிக்கவும்போகாது. [சென்றுசென்றுபரம்பரமாய்] -

நிஷ்கர்ஷகமென்றும் இரண்டுவிதமாயிருக்கும். அதில், நியதநிஷ்கர்ஷகமாவது - தர்மதர்மிகளைப் பிரியவே அநுஸந்திக்கை; இதுக்கு உதாஹரணம் - ''மநுஷ்யத்வஜாதி'' என்றது. வைவக்ஷிக நிஷ்கர்ஷகமாவது - தன் இச்சாநுகுணமாகப் பிரித்துச்சொல்லுகை; இதுக்கு உதாஹரணம் - ''படஸ்ய ஶௌக்ல்யம்'' என்று. அநிஷ்கர்ஷகமாவது - தர்மதர்மிகளை அபேதேந அநுஸந்திக்கை; இதுக்கு உதாஹரணம் - ''ஶுக்லః படః'' என்று. ஆண்டான், ''நின்றவொன்றை'' என்றத்தை ப்ரகாரிபர்யந்தமாக்கி, ப்ரகாரமான வேஷத்திலே சொல்லுகிறதென்னுமென்றபடி. ஆக, மேல் நாலுபாட்டும் வைவக்ஷிகநிஷ்கர்ஷகமென்று எம்பார்நிர்வாஹம்; அநிஷ்கர்ஷகமாக ஆண்டான் நிர்வாஹம். ''எம்பெம்மானோடொத்தேசென்று'' என்கிறபாட்டில், கைவல்யபரயோஜநைக்குச்சேர, எம்பார்நிர்வாஹம்; ஹகவதுபாஸநபரயோஜநைக்குச்சேர, ஆண்டான்நிர்வாஹம். ''ஒன்றுமொருவர்க்குணரலாகாது உணர்ந்து மேலும் காண்பரிது'' என்ற பதங்களைக்கடாக்ஷித்து இப்பாட்டில் ப்ரமேயத்தை அருளிச்செய்கிறார் - நின்றவொன்றை என்கிறவிதில் இத்யாதி.

''நின்ற'' என்றதுக்கு- தேஹேந்த்ரியமநஃப்ராணபீக்களிற்காட்டில் அந்யமாய் என்றும், இவைஅழியுமன்றும் அழியாதே ஏகரூபமாயிருக்கும் என்றும் அர்த்தத்வயம். ''ஒன்றை'' என்றதுக்குஅர்த்தம் - இவற்றுக்கு இத்யாதி. ''ஆராய்ந்தேனுக்கு'' என்று இப்போது சொல்லுகிறதென்? என்ன - உயர்வற இத்யாதி. பரிஹாராந்தரம் - பரிகரமும் இத்யாதி. பரிகரம் - ஜ்ஞாநம். இப்போது அவன் வலியக்காட்டிக்கொடுக்கையாலே இத்தை ஆராய்ந்துகொண்டாடுகிறார் - இத்தை இத்யாதி. இது இருந்தபடி யென்னென்றது - மேலைக்கடாக்ஷித்து. ''அதுவிது'' என்றது - அது போலேயிருக்கும், இதுபோலேயிருக்குமென்றபடி. 'அது' என்கையாலே - அநுபூதமானத்தையும், ''இது'' என்கையாலே - அநுபவிக்கிறவற்றையுமென்றபடி. ''அறியப்போகாது'' என்றதுக்கும் ஸாக்ஷாத்கரிக்கப்போகாது'' என்றதுக்கும் த்ருஷ்டாந்தம் - ஜ்ஞாதும் த்ரஷ்டும் இத்யாதி. ஹக்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதோ஽ர்ஜுந । ஜ்ஞாதும் த்ரஷ்டுஞ்சதத்த்வேந ப்ரவேஷ்டுஞ்சபரந்தப'' இதி கீதாயாம், ஸ்லோகாநுமேய (ருச). தேய்ந்தற்று-மிகவும் ஸம்பந்த

† குண்டலிதம் ப்ரக்ஷிப்தமென்பர்.

போய்ப்போய் ஒன்றுக்கொன்று மேலாயிருக்கிற * அந்நமய ப்ராணமய மநோமய ளுக்கு அவ்வருகாய். [யாதுமின்றித்தேய்ந்தற்று] - அவற்றின் ஸ்வபாவங்கள் ஒன் மின்றிக்கே அவற்றோடுறத்தேய்ந்தற்று. [நன்றுதீதென்றறிவரிதாய்] - தேஹம், தேஹ திற்காட்டில் இந்த்ரியம், அதிற்காட்டில் மநஸ்ஸு, அதிற்காட்டில் ப்ராணன் என்று ஒன் றுக்கொன்று வைலக்ஷண்யமுண்டாகிறுப்போலே, ப்ராக்ருதங்களின்படியால் நன்றே றும் தீதென்றும் அறியவரிதாயிருக்கும். [நன்றாய்] - ஸ்வதோவ்யாவ்ருத்தமாய். [ஞான கடந்ததே] - ஐந்த்ரியிகஜ்ஞாநத்துக்கு எட்டாதிருக்கும். கீழில் அவை ஒன்றுக்கொன் றுடுவோசியாயிருக்கச்செய்தேயும் ஏகப்ரமாண ஸம்யத்வ ஸாம்யமுண்டு; அதுவுமில் யென்கிறது. ஆக, இப்பாட்டில்-ஸாங்க்யத்தில் தத்த்வஸங்க்யாநக்ரமத்தாலே ஆத்மஸ் ரூபத்தைச்சொல்லும்படியையும், அதுதன்னை அறிகையிலுண்டான அருமையுஞ்சொ லிற்று.

(௫)

---

# ஆறாம் பாட்டு.

நன்றாய்ஞானங்கடந்துபோய்நல்லிந்திரியமெல்லாமீர்த்து
ஒன்றாய்க்கிடந்தவரும்பெரும்பாழ் உலப்பிலதனையுணர்ந்துணர்ந்து
சென்றாங் கின்பத்துன்பங்கள் செற்றுக்களைந்துபசையற்றால்
அன்றேயப்போதேவீடு அதுவேவீடுவீடாமே.

ஆ. — (நன்றாய்.) - யோகத்தினாலே ஆத்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்கை அருமையென்னென்னில்,—ப்ராக்ருதவிஷயங்களினுடைய அஸ்த்திரத்வாதி தோஷாநு ஸந்தாநத்தாலே ரஸயுக்தமான ஸர்வேந்த்ரியங்களையும் ஆத்மவ்யதிரிக்த ஸர்வவிஷயங் களினின்றும் நிவர்த்திப்பித்தால், இவ்வாத்மஸ்வரூபம் கைவருவது; ஆகையாலே காண்கை அரிதென்கிறார்.

ஒ.—ஆறாம்பாட்டில், யோகஶாஸ்த்ரத்தில் ஆத்மஸ்வரூபப்ராப்தி யுபாய மாகச்சொல்லுகிற இந்த்ரியஜயாதிரூபமான யோகத்தாலே ப்ரக்ருதிவிநிர்முக்த ஆத்ம ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்கலாமென்கிறார்.

[நன்றாய் ஞானங்கடந்து] - அநுபாஷணம். அயவா [ஞானங்கடந்துபோய் நல்லிந்திரியமெல்லாம் ஈர்த்து ஒன்றாய்க்கிடந்த அரும்பெரும்பாழ் உலப்பிலதனை, உணர்ந் துணர்ந்து - நன்றாய் - சென்று] - சக்ஷுராதிகரணங்களுக்கு விஷயமான ஶப்தாதி விஷயங்களில் அகப்படாதே தப்பிப்போய்ப் போனாலும் அவையிருந்த இடமேற இழுக் கக்கடவதாய் மிகவும் வலவத்தான இந்த்ரியகணத்தையும் வென்று ஆத்மாவோடு அநாதியாக விவேகிக்கவொண்ணாதபடி ஸம்ஸ்ருஷ்டமாய் ஸூக்ஷ்மமாய் மஹதாதிவிகா ரங்களாலும் ஸ்வரூபத்தாலும் பெரும்பரப்பாய் நித்யமான ப்ரக்ருதிதத்த்வத்தை மிக

---

மற்று. அவற்றின் ஸ்வபாவமென்றது - தேஹாதிகளின் ஸ்வபாவமென்றபடி. தேஹாதிகள் நன்று தீதென்றறியலாயிருக்கைக்கு ஹேதுவைவும்,அது அப்படி அறியப்போகாதென்னுமத்தையும்தர்ஶிப் பிக்கிறார் - தேஹம் இத்யாதி. இத்தால்பாவம்-கீழில் அவை இத்யாதி வாக்யத்வயம். ஸாங்க்யத்தில்-ஸாங்க்யஶாஸ்த்ரத்திலென்றபடி. தத்த்வஸங்க்யாநக்ரமம் - தத்வகணநாக்ரமம். க்ரமேணாந்வய:

வும் உணர்ந்து அதில் அவகாஹநமின்றிக்கே ஸ்பஷ்டமாய்ப்போய் அதினுடைய லாபாலாப நிமித்தமான ஸுகதுக்கங்களையும் அற விட்டு அவற்றிலுண்டான ருசிவாஸநைகளும் போனால். [அன்றே அப்போதே வீடு, அதுவே வீடு] - அன்றே அப்போதே ப்ரக்ருதி தொற்றறும்; அதுவே ஆத்மப்ராப்தியாவது. [வீடாமே] - இதுவும் புருஷார்த்தமாக இச்சிப்பார்க்குப் புருஷார்த்தமாம்.

ப.—அநந்தரம், யோகஶாஸ்த்ரத்வாரா நிஷ்கர்ஷித்து வருந்தி அபரோக்ஷிக்கப்பட்ட ஆத்மாவினுடைய ப்ராப்யரூபத்தை யருளிச்செய்கிறார்.

நன்றுஆய்-(ப்ராக்ருத ஸகல பதார்த்தங்களிலும் ஸங்காராஹித்யமாகிற) சுத்தியையுடையராய், ஞானம் - (அந்த விஷயங்களிலே ஸங்கிப்பதான) வைஷயிக ஜ்ஞாநங்களையும், கடந்து - தப்பி, போய் - (அவ்வருகே) போய், நல் - (இந்த ஜ்ஞாநஜநகத்வாரா இவனைத் தப்பாமல்ப்ரவர்த்திப்பிக்கும்) நன்மையுடைத்தான, இந்திரியம் - இந்த்ரியங்கள், எல்லாம் - எல்லாவற்றையும், ஈர்த்து - தலையழித்து, ஒன்றாய்க்கிடந்த - ("ஜிதேந்த்ரியைராத்மவஶ்யஸ்" என்கிறபடியே துர்விவேசயாம்படி சேதநனோடு) சேர்ந்துகிடப்பதாய், அரு - துரத்யயமாய், பெரு - ("மம மாயா துரத்யயா" என்று தான்)அபரிச்சிந்நமாய், உலப்பு இல் - (கார்யமுகத்தாலே) அஸங்க்யாதமுமாயிருக்கிற, பாழதனை - ப்ராக்ருதிதத்தவத்தை, (ஆத்மாவிற்காட்டில் அத்யந்தவைஹிர்ப்பூதமாம்படி), உணர்ந்துணர்ந்து - (ஶ்ரவணமநநாதிகளால் பலகாலும்) உணர்ந்துணர்ந்து, சென்று - போய், ஆங்கு - அந்த ஆத்மவிஷயத்தில், இன்பத்துன்பங்கள் - (ப்ராக்ருதமாய் புண்யபாபகார்யமான) ஸுகதுக்கங்களை, செற்றுக்களைந்து - ஸஹேதுகமாகக் கழித்து, பசை - (தத்விஷய வாஸநாருசிகளுமாகிற) பசையும், அற்றால் - அற்றால், அன்றே - அந்நாளிலே, அப்போதே - அம்முஹூர்த்தத்திலே, வீடு - (ஸகல ஸாம்ஸாரிக தோஷ) மோக்ஷம்பிறக்கும்: அதுவே - அதுவே, வீடு - ஆத்மாநுபவ மோக்ஷமாகிறது: வீடாமே — பகவத்ப்ரசாதபூதமாய் விலக்ஷணமான ஆத்மாநுபவமும் ப்ராப்யாந்தர்க்கதமாகக் குறையில்லை.

இ.—ஆறும்பாட்டில், யோகஶாஸ்த்ரத்தில் இந்த்ரியஜயாதிரூபமான யோகத்தாலே ப்ரக்ருதி விநிர்முக்த ஆத்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்கலாமென்கிறார்.

[நன்றாய் ஞானங்கடந்துபோய்] - அநுஸந்தாநமென்றுதல். "நன்றாய்" என்கிற இதுகிடக்க; ஶப்தாதிவிஷயங்களை ஜ்ஞாநஶப்தத்தாலே சொல்லுகிறது. [நல்லிந்திரியமெல்லாம் ஈர்த்து] - தப்பிப்போனாலும் அவையிருந்தவிடத்தே இழுக்கக்கடவ ப்ரபலமான இந்த்ரியகணத்தையும் வென்று. [ஒன்றாய்க் கிடந்த] - ஆத்மாவோடு சேர்ந்து விவேகிக்க ஸம்ஸ்ருஷ்டமாய். [அரும்பெரும் பாழ்] - "தைவீஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா" என்கிறபடியே துஸ்தரமாய் மஹதாதிவிகாரங்களாலும் காரணமான அவ்யக்தஸ்வரூபத்தாலும் பெருப்பரப்பையுடைத்தாய் போகமோக்ஷங்களை விளைத்துக்கொள்ளுகைக்கு யோக்யமாய். [உலப்பிலதனை உணர்ந்துணர்ந்து] - நித்யமான ப்ரக்ருதிதத்த்வத்தை மிகவுமுணர்ந்து. [நன்றாய் சென்று] - ப்ரக்ருதிப்ராக்ருதங்களில் கால்தாழாதே ஸ்பஷ்டனாய்ச்சென்று. [அங்கு] - ஆத்மஸ்வரூபத்திலே. [இன்பத்துன்பம் இத்யாதி] - ப்ராக்ருதங்களை த்யாஜ்யமென்று விட்டாலும், ஸுகதுக்க ஹேதுவான புண்யபாபங் கிடக்குமாகில், அவை கொடுவந்து மூட்டுமிறே; புண்யபாப ஹேதுவான லாபாலாபங்களைப் பற்றிவரும் ஸுகதுக்கங்களைவிட்டு. [பசையற்

ருல்] - அவற்றைவிட்டாலும் ருசிவாஸநைகள் கிடக்குமாகில் பின்னையும் ஸர்ஷிக்கு :
அந்த ருசிவாஸநைகளும் போனால் [அன்றேஇத்யாதி] - அம்முஹூர்த்தத்திலே ப்ரக்ரு
ப்ராக்ருதங்களில் தொற்றறும். ப்ரக்ருதிபின்தனை ஸௌகுமார்யமுடையாரில்லை. த
பக்கல் த்யாஜ்யபுத்திபண்ணினுரைத் தானும் முகம்பாராது. [அதுவேவீடு] - "அ
றது பற்றெனில் உற்றதுவீடுயிர்" என்று ப்ராக்ருதங்களில் தொற்றுஅற்றவாறே ஆ
ப்ராப்திலக்ஷணம் மோக்ஷமாயிருக்கும். அதுக்கென்னச் செய்யவேண்டுவதொன்றில்
[ வீடாமே] - இதுவும் ஒரு புருஷார்த்தமாம். ஸர்வேஸ்வரன் ப்ராப்யனுமிடத்தி
அவனுக்கு ப்ரகாரமாய்க்கொண்டு ஆத்மாவும் ப்ராப்யமாகக் கடவதாகையாலே இதுவு
புருஷார்த்தமாமே என்கிறார். தம்முடைய உத்தேஸ்யத்தில் ஏகதேசத்தைப் பு
ஷார்த்தத்தில் சரமாவதியாக நினைக்கையாலேயிறே முன்பு இவர் இத்தைச் சிரி

ஈடு.—ஆறும்பாட்டு. யோகஸாஸ்த்ரத்திற் சோல்லுகிறபடியே இந்த்ரி
ஜயாதிரூபமான யோகத்தாலே பரக்ருதிவிநிர்முக்தஆத்மஸ்வரூபத்தை துஃகேந ஸாக்ஷா
கரிக்கலா மேன்கிறார்.

[நன்றாய் ஞானங்கடந்துபோய்] - வ்யாவ்ருத்தமான நன்மையை யுடை
தாய், இந்த்ரியஜ்ஞாநத்துக்கு அவிஷயமா யிருக்குமென்று அவற்றை அநுஸாஷிக்கி
தேன்னவுமாம். நன்றாயேன்கிற இதுகிடக்க, ஸப்தாதி விஷயங்களைத் தப்பிப்டே
யென்னுதல். "ஜ்ஞாயத இதிஜ்ஞாநம்" என்கிற ப்ரக்ரியையாலே - ஜ்ஞாநமே
கிறது: ஜ்ஞாநத்தால் காணப்படும் விஷயங்களை, ஜ்ஞாநஸப்தத்தாலே சோல்லுகிறத
[நல்லிந்திரியமெல்லாமீர்த்து] - விஷயங்களைத் தப்பிப்போனாலும், அவையிருந்தவிட
களிலே மூட்டக்கடவதான ஸாமர்த்யத்தையுடைய இந்த்ரியங்களையும்கழித்து. [ஒ
றாய்க்கிடந்த இத்யாதி] - அநாதிகாலம் சேதநனோடு ஸம்ஸ்ருஷ்டமாய்க் கிடப்பதாய்
"மமமாயாதுரத்யயா" (மமமாயாதுரத்யயா) என்கிறபடியே ஒருவரால் கடக்க வ
தாய், மஹதஹங்காராத்யவஸத்தைகளாலே பரப்பையுடைத்தாய், போகமோக்ஷங்க
விளைத்துக்கோள்ளலாம்படியாய், ப்ரவாஹரூபத்தாலும் ஸ்வரூபத்தாலும் நித்யமாயிரு
கிற அசித்தத்த்வத்தை ; ப்ரக்ருதியை கார்யங்களாயும் காரணங்களாயு மிருக்குமென்
மிடத்தை மிகவுமுணர்ந்து. [ஆங்கு - நன்றாய் - சேன்று] - தன்பக்கல் போக்யத
புத்தியைப் பிறப்பிக்கக் கடவதான இதில் கால்தாழாதே, ஆத்மஸ்வரூபத்தளவும்சேன்ற

ஆறும்பாட்டு.—நன்றாய் இத்யாதி. "நல்லிந்திரியமெல்லாமீர்த்து" என்று தொடங்கி "அன்றேயப்போதேவீடு" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - யோகஸாஸ்த்ரத்தில் இத்யாதி.

த்விதீயார்த்தத்துக்கு, "ஆங்கு - நன்றாய் - சென்று" என்று மேலே அந்வயம். ஜ்ஞா மென்று விஷயங்களைச் சொல்லுமோவென்ன - ஜ்ஞேயதேஇத்யாதி. விவரணம் - ஜ்ஞாநத்தால் இத்யாதி. இந்த்ரியங்களுக்கு நன்மையேதென்ன - விஷயங்களை இத்யாதி. இவ்விடத்திலே [Grantha text] என்றது அநுஸந்தேயம். ஈர்த்து-கழித்து. மஹதாதி கார்யாவஸ்த்தையைப் பற்ற - ப்ரவாஹரூபத்தாலும் நித்யமாய் என்றது. காரணாவஸ்த்தையைப்பற்ற - ஸ்வரூபத்தாலும் நித்யமாய் என்றது. "உணர்ந்துணர்ந்து" என்கிற வீப்ஸைக்கு அர்த்தம் - ப்ரக்ருதியை இத்யாதி. "ஆங்கு - சென்று" அவ்வாத்மவஸ்துவிலே சென்று என்றுஸப்தார்த்தம். "நன்றாய்" என்ற

[இன்பத்துன்பம் இத்யாதி] - அத்தை "த்யாஜ்யம்" என்று விட்டாலும், ஸுகதுঃகங்களுக்கு ஹேதுவான புண்யபாபகர்மங்கள் கிடக்குமாகில் பின்னையும் கோண்டு மூட்டுமிறே; அவற்றையும் விட்டு. அவற்றைவிட்டாலும் ருசிவாஸநைகள் கிடக்குமாகில் பின்னையும் கர்ப்பிக்கும்: [பசையற்றால்] - ருசிவாஸநைக ளற்றால். [அன்றேயப்போதே] - அக்காலத்திலே அம்முஹூர்த்தத்திலே. [வீடு]-ப்ரக்ருதி ப்ராக்ருதங்களில் தொற்றுஅறும். ப்ரக்ருதியின்தனை சுணையும், ஸௌகுமார்யமுமுடையதில்லை. தன்பக்கல் த்யாஜ்யபுத்தி பண்ணினாரைத் தானும் முகம்பாராது. [அதுவேவீடு] - "அற்றதுபற்றெனிலுற்றது வீடுயிர்" என்று-ப்ராக்ருதங்களில் தொற்றுஅற்றவாறே ஆத்மப்ராப்திலக்ஷண மோக்ஷமாயிருக்கும். அதுக்கென்னச் செய்யவேண்டுவதில்லை. [வீடாமே] - அவனுக்கு ப்ரகாரமாக ஆத்மவஸ்துவை அநுஸந்தித்து, அவ்வழியாலே இதுதன்னை ப்ராப்யமாகவிறே இவர்தாம் நினைத்திருப்பது. அவ்வளவுபோகமாட்டாதே, இதின் நன்மையைக்கண்டு இவ்வளவிலே கால்தாழ்வார்க்கும் போந்திருந்ததீ ! என்கிறார். தம்முடைய உத்தேஶ்யத்தில் ஏகதேசத்தைப் புருஷார்த்தத்தில் சரமாவதியாகக் கொள்ளுகையாலேயிறே முன்பு இவர் இத்தைச் சிரித்திருந்தது. (௬)

## ஏழாம் பாட்டு.

அதுவேவீடு வீடுபேற்றின்பந்தானுமதுதேறி
எதுவேதானும்பற்றின்றி யாதுமிலிகளாகிற்கில்
அதுவேவீடு வீடுபேற்றின்பந்தானுமதுதேறாது
எதுவே வீடு? ஏதின்பம் என்றெய்த்தாரெய்த்தாரெய்த்தாரே.

---

அதுக்கு ஹாவம் - தன்பக்கல் இத்யாதி. இன்பத்துன்பங்கள் என்றது - ஸுகதுঃகஹேதுவான புண்யபாபங்களையென்றபடி. பலாபிஸந்திரஹிதமான கர்மாநுஷ்டாநத்தாலே முன்பு ஃபலாபிஸந்தியுக்தமாகப் பண்ணின புண்யபாபங்கள் க்ஷயிக்கும்; அத்தைப்பற்ற - அவற்றையும் விட்டு என்கிறார். "செற்றுக்களைந்து-" முழுச்சொல்லு: ஸவாஸநமாகவிட்டு. வீடு - விடுகையுண்டாம். இவனாசையற்றாலும், அநாதியாய் வருகிற ப்ரக்ருதிஸம்பந்தம் விடுமோவென்ன - ப்ரக்ருதியின் தனை இத்யாதி. அதுஎப்படியென்ன - தன்பக்கல் இத்யாதி. சுணை - லஜ்ஜை. இவ்விடத்திலே - "ப்ரக்ருதே꞉ ஸுகுமாரதரம் நகிஞ்சிதஸ்தீதி மே மதிர்பவதி । யா த்ருஷ்டாஸ்மீதி புநர்ந தர்ஶநமுபைதி புருஷஸ்ய" என்ற ஸாங்க்யகாரிகை அநுஸந்தேயம். "அதுவே என்ற அவதாரணார்த்தம் - அதுக்கென்ன இத்யாதி. நினைத்திருப்பது என்றவநந்தரம், 'இப்படி இருக்கிறவர் "வீடாம்" என்று ஈடுபடுவானென்னென்ன' என்று கூட்டுவது. இப்பங்கைக்கு பரிஹாரம் - அவ்வளவு இத்யாதி. இப்போது கொண்டாடுகிறவர், "அதுசெற்று" என்று முன்பு நிரஸிப்பானென்னென்ன - தம்முடைய இத்யாதி. ஏகதேசத்தை என்றது - தமக்கு உத்தேஶ்யமான பகவதநுபவ ஸுகத்திற்காட்டில் அல்பமான ஆத்மாநுபவஸுகத்தை என்றபடி. ஆக, ஈடுபடுகிறது அவர்களபிப்ராயத்தாலே. சிரித்திருந்தது - ஸ்வாபிப்ராயத்தாலே என்றபடி. அன்றே - அக்காலத்திலே. அப்போதே - அம்முஹூர்த்தத்திலே என்றபடி. க்ரமேணாந்வய:. அதுவேவீடு- விடுகைதானே ஆத்மப்ராப்திலக்ஷண மோக்ஷமாயிருக்கும். வீடாமே - ஆத்மப்ராப்திலக்ஷணமோக்ஷந்தானே, அவனுக்கு ப்ரகாரதயா அநுஸந்திக்கிற வழியாலே ப்ராப்யமுமாயிருக்குமென்றபடி. (௬)

ஆ.—(அதுவேவீடு.) - இந்த ஆத்மஸ்வரூபாவிர்பாவமே மோக்ஷமாகிற 1:
மோக்ஷம்பெற்றால் பெறும்ஸுகமாவதும் அதுவேயென்று அத்யவஸித்துக்கொண் டு
வ்யதிரிக்த விஷயஸங்கத்தையெல்லாம் விடில், ஆத்மஸ்வரூபாவிர்பாவலக்ஷமணாயிரு க
மோக்ஷம் கைவரும்: இப்படிசெய்யாதார்க்குக் கைவாராது: அவர்கள் ஸம்ஸரித்தே T
மித்தனையென்கிறார்.

ஒ.—ஏழாம் பாட்டில், இக்குச் சொன்னபடியே ஆத்மாவலோகநம் ப T
ணப்பாராதே அத்தையும்விட க்ஷமராகில், அது மோக்ஷமாவதுவும் மோக்ஷத்தா
பெறும் ஸுகமாவதுவும்.

[அதுவே வீடென்று மேலுக்த] - அதுவே மோக்ஷமாவதுவும் மோக்ஷ
தால் பெறும் ஸுகமாவதுவும் என்று தேறாதே எதுவே மோக்ஷம் எதுவே ஸுக
என்று அத்யவஸிக்கமாட்டாதார் என்றும் க்லேசப்பட்டே போமத்தனை.

ப.—அநந்தரம், உக்தப்ரகாரத்திலே ஆத்மாவலோகநம்பண்ணுதார், தத
ஹவஸித்தியின்றியே ஸம்ஸரிப்பர்களென்கிறார்.

அதுவே - (கீழ்ஸகலத்ப்ரகாரதயா ப்ரஸ்துதனை) ஆத்மாவினுடைய அ
ஹவமே, வீடு - மோக்ஷமாவது; வீடுபேறு - அந்த மோக்ஷலாபத்தால்வரும், இன்ப
தானும்அது - ஆநந்தமுமேயாக, தேறி,-நிஷ்கர்ஷித்து, எதுவேதானும் - ப்ராக்ருதி ப்ர
ருதங்களெல்லாவற்றிலும், பற்று - (போக்யபோகோபகரண போகஸ்தாநரூபேணவ
கிற) ஸங்கம், இன்றி - அற்று, யாதும் - (அத்தாலேவந்த) ருசிவாஸனைகளும், இலிக
தேல் - இன்றியிலேயொழியப்பெறில், அதுவே - (முன்பு தான் அறுதியிட்ட) ஆ
மாநுபவமே, வீடு-மோக்ஷமும், வீடுபேறு - மோக்ஷலாபஜநிதமான, இன்பந்தானும்
ஆநந்தமும், அது - அதுவே; தேறாது - (இப்படி ஸுகவதாத்மகமாக ஆத்மாவை) நிஷ்க
ஷிக்கமாட்டாதே, 'எது - எது, வீடு - மோக்ஷம்? இன்பம் - (அத்தால்வரும் ஸுக
எது - எது?' என்று - என்று, எய்த்தார் - சித்ததெளர்ப்பல்யம்பிறந்தவர்கள், எய்த்தா
எய்த்தாரே - கர்ப்பநரகங்களிரண்டாலும் எய்த்தேதவிடுவார்கள்.

இ.—ஏழாம்பாட்டில், இக்குச் சொன்னபடியே ஆத்மாவலோகநம் பண்
ணப்பாராதே வேறே சில வழிகளாலே ப்ராபிக்கப் பார்க்கில் அது கைவாராதென்கி
றார்.

[அதுவே வீடு] - அந்த ஆத்மப்ராப்தியே மோக்ஷமாவது. [வீடு பேற்றின்
பந்தானுமது] - அம்மோக்ஷத்தைப் பெற்றால் வரும் ஸுகமாகிறதும் அந்த ஆத்மாநு
பவமே. [தேறி] - இப்படி தெளிந்து. [எதுவேதானும் பற்றின்றி] - ப்ராக்ருதியிலும்
ப்ராக்ருதமான சப்தாதிகளிலும் உண்டான பற்றடங்க அற்று. [யாதுமிலிகளாகி
கில்] - அவற்றிலுண்டான வாஸனைகளும் அறத் தவிரப்பெறில். கர்மத்தை அநுஷ்ட
டித்து ஜ்ஞாநத்தையுடையனுப், ஸ்திதப்ரஜ்ஞாக்யாவஸ்தைகள் பிறந்து யோகமும்
நிலைநின்று, ஆத்மஸாக்ஷாத்காரம் பண்ணப்பெறில். [அதுவே வீடு] - கீழ்ச்சொன்ன
ஆத்மப்ராப்தியே மோக்ஷம் [வீடு பேற்றின்பந்தானுமது] — மோக்ஷஸித்தியால் வரும்
ஸுகமும் அந்த ஆத்மாநுபவம். [தேறாது] - இப்படி தெளியமாட்டாதே. [எதுவே
வீடு எதின்பமென்று எய்த்தார்] - 'மோக்ஷமாகிறது எது? மோக்ஷஸுகமாகிறது எது?'
என்று இளைத்தவர்கள். [எய்த்தாரெய்த்தாரே] - என்றும் க்லேசப்பட்டுப் போமித்
தனை. நிராச்ரயமாக ஆத்மஸ்வரூபத்தை அநுஸந்திக்கை நிஷ்ப்ரயோஜநமென்கை.

ஈடு. — ஏழாம்பாட்டு. கீழ்ச்சொன்ன உபாயத்தின்படியே அவ்வஸ்துவை ப்ராபிக்கமாட்டாதே அதிலே ஸம்ஶயமநுவர்த்திக்குமவர்கள் உருவ க்லேஶப்பட்டேபோமித்தனை யென்கிறார்.

[அதுவேவீடு] - கீழ்ச்சொன்ன அதுவே ஆத்மப்ராப்திலக்ஷணமோக்ஷமாகிறது. [வீடுபேற்றின்பந்தானுமது] - அம்மோக்ஷத்தை ப்ராபித்தால்வரும் ஸுகமும் அதுவே. [தேறி] - இப்படி தேளிந்து. [எதுவேதானும்பற்றின்றி] - ப்ரக்ருதிப்ராக்ருதங்களிலுண்டான தொற்றற்று. [யாதுமிலிகளாகிற்கில்]-அதில் ருசிவாஸநைகளும் அறப்பேறில். கர்மத்தையநுஷ்ட்டித்துஜ்ஞாநத்தையுடையனாய்,*ஸ்த்திதப்ரஜ்ஞாவஸ்த்தைபிறந்து, யோகமும் தலைநின்று, ஆத்மஸாக்ஷாத்காரம்பண்ணப்பேறில். [அதுவேவீடு] - கீழ்ச்சொன்ன ஆத்மப்ராப்தியே மோக்ஷம். [வீடுபேற்றின்பந்தானுமது] - மோக்ஷஸித்தியில்வரும் ஸுகமும் அந்த ஆத்மாநுபவம். [தேறாது] - இப்படி தேளியமாட்டாதே. [எதுவே வீடேதின்பமேன்றெய்த்தார்]-'மோக்ஷமாகிறது எது? மோக்ஷஸுகமாகிறது எது?' என்று இளைத்தவர்கள். [எய்த்தாரெய்த்தாரே] - இளைத்தாரிளைத்தாரென்று உருவ க்லேஶப்பட்டேபோமித்தனை; நிராஶ்ரயமாக ஆத்மஸ்வரூபத்தை அநுஸந்திக்கை நிஷ்ப்ரயோஜநமென்கை. (எ)

---

## எட்டாம் பாட்டு.

**எய்த்தாரெய்த்தாரெய்த்தாரென்று இல்லத்தாரும்புறத்தாரும்**
**மொய்த்து ஆங்கலறிமுயங்கத் தாம்போகும்போது உன்மத்தர்போல்**
**பித்தேயேறியநுராகம்பொழியும்போது எம்பெம்மானோடு**
**ஒத்தேசென்று அங்குள்ளங்கூடக்கூடிற்றாகில் நல்லுறைப்பே.**

*ஏழாம்பாட்டு.—அதுவே இத்யாதி. "எதுவேவீடேதின்ப மென்றெய்த்தாரெய்த்தாரெய்த்தாரே" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை - கீழ்ச்சொன்ன இத்யாதி. கீழ்ச்சொன்ன உபாயமாவது - யோகஶாஸ்த்ரம்.*

*வீடுபேற்றின்பம் - வீடுபெறுகையாலுண்டான ஆநந்தம். "அதுவேவீடு, வீடுபேற்றின் பந்தானுமதுதேறி" என்றது - ஜ்ஞாநதசை. "எதுவேதானும்" என்று-முழுச்சொல்லு. "யாதும்" என்று - ருசிவாஸநைகளைச் சொல்லுகிறது. "இலிகளாகிற்கில்-" இல்லாதவர்களாகப்பெறில். விவரணம் - கர்மத்தை இத்யாதி. கர்மத்தையநுஷ்டிக்கையாவது - ஃபலாபிஸந்திரஹிதமாக வர்ணாஶ்ரமதர்மங்களைச் செய்துபோருகை. ஜ்ஞாநத்தையுடையனாகையாவது - ஆத்மப்ராப்திக்கு ஸாதநமுமாய், இந்த்ரியஜயாதிரூபமான ஜ்ஞாநயோகத்திலே ஆரம்பிக்கை. ஸ்த்திதப்ரஜ்ஞாவஸ்த்தையை பிறக்கையாவது - விஷயங்கள் வந்துமேலிட்டாலும் கலங்காததைர்யத்தையுடையவனாகை. யோகம் தலைநிற்கையாவது - ஜ்ஞாநாநந்தலக்ஷணமான ஆத்மவஸ்து ப்ரதிபாஸிக்கும்படி அஷ்டாங்கயோகத்திலே முதிரநிற்கை. கீழ், "அதுவேவீடு" இத்யாதி - ஜ்ஞாநதசை; இங்கு, "அதுவேவீடு" இத்யாதி - ஃபலதசை. நிராஶ்ரயமாக என்றது - யோகஶாஸ்த்ரக்ரமத்தாலன்றிக்கே என்னுதல், விஶ்வாஸஹீநமாக என்னுதல். என்று தேறி என்றும், என்று இப்படி தேறாது என்றும் கூட்டுவது. க்ரமேணாந்வய:.* (எ)

ஆ.—(எய்த்தாரெய்த்தார்.) - இவ்வாத்மஸ்வரூபாவிர்பாவலக்ஷண மோக்ஷமானது இந்த்ரியஜயமாத்ரத்தாலே கைவாராது, அந்திமதசையிலே பகவத்ஸமாராத்மாநுஸந்தானமும் வேண்டுமென்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், இப்படி சூக்ஷ்மஸம்பாதமான ஜ்ஞானம் ஒருவர்க்கு கைவந்தாலும், அந்திமஸ்ம்ருதி இல்லையாகில் அந்த ஜ்ஞானம் கைவருகைக்குப்பட்ட க்லேசமெல்லாம் வ்யர்த்தமென்கிறார்.

[எய்த்தாரென்று தொடங்கி] - முடிந்தாரென்று பலகால் சொல்லி ஸ்வக்ருஹத்தில் ஆசார்யாதிகளும் அவர்களுடைய அவஸ்தையை அறியவந்த புறம்புள்ளாரும் திரண்டு அத்தசையிலே இவர்கள் தங்களுக்கு ஸ்வபாவஹமாம்படிக் கூப்பிட்டுக் கட்டிக்கொள்ள, தாங்கள் ஶரீரத்தை விட்டுப்போம்போது. [உன்மத்தரென்று தொடங்கி] எத்தனையேனும் வீதராகருங்கூட உன்மத்தரைப்போலே அறிவுகெட்டுப் புத்ராதிகள் பக்கலிலே மிகவும் ஸ்நேஹத்தைப்பண்ணும் தசையிலே எம்பெருமானுடைய வைலக்ஷண்யத்தை அநுஸந்தித்து "இப்படி விலக்ஷணன்" என்று ஆத்மாவை அநுஸந்திக்கக் கூடிற்றாகில் ஆத்மப்ராப்தி ஸித்திப்பது. இல்லாவிடில் செய்ததெல்லாம் வ்யர்த்தம். "நின்ற ஒன்றை உணர்ந்து" என்கிற பாட்டுத்தொடங்கி இப்பாட்டளவும், "அவர் நிஷ்க்ருஷ்டாத்மாநுஸந்தான மாத்ரமின்றிக்கே பகவச்சேஷமானவளவும் ஆத்மாவை அநுஸந்திக்கிறது என்றும், இப்பாட்டில், "அந்திமஸ்ம்ருதியும், எம்பெருமான் இவ்வாத்மா தனக்கு போக்யமென்றிருக்குமாபோலே, இவன்றனக்கும் அத்தசையில் போக்யத்வாநுஸந்தானம் கூடுமாகில் அவனுக்கு ஆத்மப்ராப்தி உள்ளது. இல்லையாகில் கிடையாது" என்றும் சொல்லுவர்.

ப.—அநந்தரம், கீழுக்தமான ப்ரக்ரியையாலே ஆத்மப்ராப்திகாமனுக்கு தத்வாலோகநரூபமாநஸாதநம் கைப்பட்டாலும், பகவத்விஷயமான அந்திமஸ்ம்ருதி யுண்டாகிலு மாயிற்று ப்ராப்தி ஸித்திப்பது என்கிறார்.

'எய்த்தார் - (அவயவங்கள் வ்யாபாரக்ஷமமல்லாதபடி) இளைத்தார், எய்த்தார் (இந்த்ரியங்கள் விஷயக்ரஹணஸமர்த்தங்களாம்படி) இளைத்தார்,' எய்த்தார் - (ஶ்வாஸமும் மந்தீபவிக்கும்படி) இளைத்தார், என்று - என்று, இல்லத்தாரும் - க்ருஹத்தில் ஆசார்யபுத்ரப்ருத்யாதிகளும், புறத்தாரும் - புறம்புள்ள ஸம்பந்திபாந்தவ ப்ரப்ருதிகளும்,மொய்த்து - திரண்டு, ஆங்கு - அவ்வவஸ்தையிலே, அலறி - இரிபக்கூப்பிட்டு முயக்க - மேல்விழ, ("தவ்வாதுவஶாஹிதாயத்வாஸகூலேநஸ ஊஶ" என்று இவர்கள்பக்கலிலே நெஞ்சைவைத்து, யமபடரே வழித்துணையாக), தாம் - தாம் போகும்போது - போம் அவஸ்தையிலே, உன்மத்தர்போல் - உந்மாதங்கொண்டவரைப்போலே, பித்தேபேறி - நெஞ்சுகலங்கி, ("ஊமெதகயஂஹவிஷ்யதி" என்று இவற்றின்பக்கல் மமதையாலே), அனுராகம் - அநுராகம், பொழியும்போது - அபிவர்த்திக்குங்காலத்தில், (இக்கலக்கமற்றுத் தெளிவுபிறந்து), எம்பெம்மானோடொத்தேசென்று என்நாயனை ஈஶ்வரன் இவனைத் தனக்கு போக்யமென்று நினைத்திருக்குமாபோலே இவனும் தன்னை அவனுக்கு போக்யமாக அநுஸந்தித்து, அங்கு - அவன் பக்கலிலே, உள்ளம் - (தன்)நெஞ்சு, கூடக்கூடிற்றாகில்-சென்றுகூடப்பெற்றதாகில், நல்-நல்ல, உறைப்பு உறுதி. தத்ப்ராகாரபூதனை ஆத்மாவை லஹித்ததாகலாம். இப்படி துஸ்ஸஹமான ஆத்மாவலோகநத்தையிறே எனக்கு எளிதாக ப்ரகாஶிப்பித்ததென்று கருத்து.

† (அழகியபுன்னைப்பொழில்சூழ்ந்த. அவ்வூரில்) சோலைவாய்ப்பை யன்றே இவள்சொல்லுகிறது. சோலையிலே கலந்தார் வார்த்தையாயன்றே இருக்கிறது. [திருப்புலியூர்புகழுமிவளே] - பிள்ளாய்! இவ்வூர்வாசி எங்கேயறிந்தாள்? அவனுடைய ஆஹரணமோஹைமயோ பாதி அவ்வூரில் சோலையிலும் அவ்வூரிலும் குமிழிநீருண்டாளாய்த் தோற்றுகிறதில்லையோ இவள்வார்த்தையாலே. (உ)

---

## மூன்றும் பாட்டு.

புகழுமிவள்நின்றிராப்பகல் பொருநீர்க்கடல்தீப்பட்டு எங்கும்
திகழுமெரியோடுசெல்வதொப்பச் செழுங்கதிராழிமுதல்
புகழும்பொருபடையேந்திப் போர்புக்கசுரரைப்பொன்றுவித்தான்
திகழுமணிநெடுமாடநீடு திருப்புலியூர்வளமே.

*ஆ.—(புகழுமிவள்.) - அழகியனோ லென்? ஆண்பிள்ளைத்தனமுடையனாக வேண்டாவோவென்னில்,—அந்த ஸௌர்யவீர்யாதி குணங்களையே காண் இவள்இராப்பகல் புகழாநின்றதென்கிறாள்.*

*ஒ.—மூன்றாம்பாட்டில், திருப்புலியூரிலெம்பெருமானுடைய ஆண்பிள்ளைத்தனத்திலே இவள் அகப்பட்டு, அவனுடைய ஸௌர்யாதிகளுக்கு வாசகமான திருநாமங்களைப் பெருங்கிளர்த்தியோடே பேசாநின்றாளென்கிறாள்.*

*[இவள்] - வீரப்பாடுகள் அறிந்து ஈடுபடும் பருவமன்றிக்கேயிருக்கிற இவள். [பொருநீர்க்கடலென்று தொடங்கி] - அலை எறியாநின்றுள்ள கடல் நெருப்புக்கொளுந்திபரப்புமாறின அத்யுஜ்ஜ்வலமான எரியோடேகூட நடந்து செல்லுமாபோலே. [செழுங்கதிராழிமுதல் புகழும் பெரும்படையேந்தி] - மிக்கிருந்துள்ள ஒளியையுடைத்தாய், சத்ருக்களும் புகழும்படியான திருவாழி முதலான பொருகைக்கு ஸாதநமான திவ்யாயுதங்களை ஏந்தி. பொன்றுவிக்கை - முடிக்கை. வளம் - அழகு.*

*ப.—அநந்தரம், அவனுடைய வீரசரிதத்துக்குத்தோற்றவள் அவ்வூரில் அழகைப் புகழாநின்றாளென்கிறாள்.*

*பொரு - (திரைக்கிளப்பத்தாலே ஒன்றுக்கொன்று) பொருது அலைகிற, நீர் - நீரையுடைத்தான, கடல் - கடலானது, தீப்பட்டு - நெருப்பைக்கொளுந்தி, எங்கும் - எங்கும், திகழும் - விளங்குகிற, எரிபொடு - ஜ்வாலைகளோடே, செல்வதொப்ப - செல்வதுபோலே, புகழும் - (சத்ருக்களும்) புகழும்படியாய், செழும் - மிக்க, கதிர் - ஒளியையுடைய, ஆழி - திருவாழி, முதல் - முதலாக, பொரு - பொருந்தின, படை - ஆயுதங்களை, ஏந்தி - ஏந்தி, போர் - யுத்தத்திலே, புக்கு - ப்ரவேசித்து, அசுரரை - அஸு-*

---

செய்கிறார் - சோலைவாய்ப்பை இத்யாதி வாக்யத்வயத்தாலே. "இவள்" என்றதுக்கு ஸாவம் - பிள்ளாய் இத்யாதி. இவள் - அதிபாலையென்றபடி. பிள்ளாயென்றது - தோழியினுடைய வார்த்தைப்பாடு. "புகழும்" என்றதுக்கு ஸாவம் - அவனுடைய இத்யாதி. 'அணிமேருவின்' என்று தொடங்கி, 'புகழுமிவள் - அன்னைமீர் தற்கென்செய்கேன்' இத்யந்வய:. (உ)

ரர்களை, பொன்றுவித்தான் - நசிப்பித்தவனுடைய, திகழும் - விளங்குகிற, மணி - மாணிக்கங்களையுடைத்தாய், நெடு - ஓங்கின, மாடம் - மாடங்களையுடைத்தான, நீட - ஆயாமவிஸ்தாரவத்தாயுள்ள, திருப்புலியூர் - திருப்புலியூரினுடைய, வளம் - அழகை, இவள் - இவள், இராப்பகல் - இராப்பகல், நின்று - ஓவாது நின்று, புகழும் - புகழு நின்றாள். பொருபடை - பொருகிறபடை யென்றுமாம்.

இ.—மூன்றும்பாட்டில், "ஹதஂபாரஂவரிஷ்வஜே" என்னுமாபோலே அவன் ஆண்பிள்ளைத்தனத்திலே தோற்று, அந்த ஶௌர்யவீர்யாதிகளைப் பெருங்கிளர்த்தியோடே பேசாநின்றாள் என்கிறாள்.

[புகழுமிவள் நின்றிராப்பகல்] - நின்றுபுகழும் வீரவாசி அறிந்துபடும் பருவமன்றிக்கே இருக்கிற இவள், கேட்டார் வாய்கேட்டு ஒருகால் சொல்லிவிட்டாளோ அஹோராத்ரம் நின்று வாய்புலற்றுகின்றாள். [புகழும்] - நெஞ்சாலே மதித்துவிட்டவளேவோ? வீரை குடிபோய்விட்டுப் புகழ்கிறிலளோ? [பொருநீர்க்கடல் தீப்பட்டு] திரைக்கிளர்த்தியாலே அலையெறிகிற நீரையுடைய கடல் நெருப்புக்கொளுந்தி. [எ.கும் இத்யாதி] - பரப்புமாறிக்கொண்டு ஜ்வலியாநின்ற எரியோடேகூட நடந்துசெல்லுமாபோலே. [புகழும் பொருபடையான செழுங்கதிராழிமுதல் - ஏந்தி] - "ஹஸ்தி ... " என்கிறபடியே திவ்யாயுதங்கள்தான் அவனைப் புகழாநிற்கும்" என்று ஆளவந்தார் நிர்வாஹம். "ஸஶாஃ ... " என்கிறபடியே 'கையும் ஆயுதப்பொருத்தமும் இருந்தபடி என்?' என்று சத்ருக்கள் புகழும்படியைச் சொல்லுகிறது என்று எம்பெருமானார் அருளிச்செய்வர். [பொருபடை] - யுக்தோத்யுக்தமான ஆயுதம். [செழுங்கதிர்] மிக்க தேஜஸ்ஸையுடைய திருவாழிமுதலான திவ்யாயுதங்களை ஏந்தி. [போர்புக்கு அசுரரைப் பொன்றுவித்தான்] - ஆயுதத்தை யுத்தத்திலேபுக்கு, து்ஷ்ப்ரக்ருதிகளை முடித்தான். பொன்றுவிக்கை - முடிக்கை. [திகழுமித்யாதி] - உஜ்ஜ்வலமான மணிகளையுடைத்தாய், ஓங்கின மாடங்களை யுடைத்தாய், கல்பாவயியான திருப்புலியூரில் அழகைப் புகழும். [வளம்] - அழகு. எதிரிகளுக்குக் கிட்டவொண்ணாமைக்கு அவன்தான் வேண்டா; அவ்வூரே அமையுமென்கை. திருவயோத்யையைப்போலேயும், "அயோத்யா ... " என்கிற பரமபதத்தைப் போலேயு மாயிற்று இவள் இவ்

ஈடு.—மூன்றும்பாட்டு. "ஒப்பனையழகு ருஷிகளும்சொல்லார்களோ, இது கலவிக்கு ஸூசகமாகவேணுமோ" என்ன, "ஹதஂபாரஂவரிஷ்வஜே" (பர்த்தாரம் பரிஷஸ்வஜே) என்று வீரவாசிகண்டேஅணைக்கும் பிராட்டிபாசுரமாயன்றே இவள்வார்த்தையிருக்கிற தென்கிறாள்.

[புகழுமிவள்நின்றிராப்பகல்] † (இவள் - இராப்பகல் - நின்று புகழும்) - வீரவாசியறிந்து ஈடுபடும் பருவமன்றிக்கேயிருக்கிற இவள், கேட்டார்வாய் கேட்டு ஒருகால்

மூன்றும்பாட்டு-புகழும் இத்யாதி. "...ஹதஂபாரஂவரிஷ்வஜே" உதாரணங்களென (30-40).

சொல்லிவிட்டாளோ. அஹோராத்ரம்நின்று வாய்புலற்றுகின்றாள். [புகழும்] - நெஞ்சாலே நினைத்துவிட்ட அளவேயோ? வீரீனை குடிபோய் வாய்விட்டுப்புகழுகிறு ளல்லளோ? [பொரு நீர்க்கடல்தீப்பட்டு] - பொராநின்றுள்ள திரையையுடைத்தான கடல் நெருப்புக்கொளுந்தி. [எங்கும் திகழுமெரியோடுசெல்வதொப்ப] - பரப்புமாறிக்கொண்டு ஜ்வலியாநின்றுள்ள நெருப்போடேகூட நடந்து செல்லுமாபோலேயாயிற்று ஆயுதங்களால் வந்த புகரும் திரு மேனியுமிருக்கும்படி. [புகழும்பொருபடையான - செழுங்கதிராழி முதல் - ஏந்தி] - "ஹேதிபிஸ்ஸேதநாவத்பிருதீரிதஜயஸ்வநம்" (ஹேதிபிஸ்சேதநாவத்பிரு தீரிதஜயஸ்வநம்) என்று திவ்யாயுதங்கள்தான் அவனைப்புகழும்படியாதல்; "'ஶத்ரோ: ப்ரக்யாதவீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:" (ஶத்ரோ:ப்ரக்யாதவீர்யஸ்யரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:) என்கிறபடியே 'கையும் ஆயுதமுமாய்ப் பொருத்தமிருந்தபடியேன்?' என்று ஶத்ருக்கள் புகழும்படியைச் சொல்லுகிறது" என்று எம்பெருமானுர் அருளிச் செய்யும்படி. [பொருபடை] - யுத்தோத்யுக்தமான ஆயுதம். [செழுங்கதிர்] - மிக்கதேஜஸ்ஸையுடைத்தான திருவாழி முதலான திவ்யாயுதங்களையேந்தி. [போர்புக்கசுரரைப்பொன்றுவித்தான்] - ஸாயுயனாய் யுத்தத்திலேபுக்கு துஷ்ப்ரக்ருதிகளைமுடித்தான். பொன்றுவிக்கை-முடிக்கை. [திகழும் இத்யாதி] - உஜ்ஜ்வலமான மாணிக்கங்களையுடைய ஓங்கினமாடங்களையுடைத்தாய், கல்பாவுமாயான திருப்புலியூரிலழகை - புகழும். வளம்-அழகு. எதிரிகளுக்குக் கிட்டவொண்ணுமைக்கு அவன் தான்வேண்டா: அவ்வூரேயமையும். பிராட்டி, ஸ்ரீமிதிலையை விட்டு "ராகவஸ்யநிவேஶநே" (ராகவஸ்யநிவேஶநே) என்று திருவயோத்யையைப் புகழுமாபோலே, இவள் திருநகரியைவிட்டுத் திருப்புலியூர்ப்புகழே புகழாநின்றாள். "அயோத்யாபராஜிதா" (அயோத்யாபராஜிதா) என்கிற பரமபதத்தை நினைத்திருக்குமாபோலேகாணும், இவள் அவ்வூரை நினைத்திருப்பது. "மாகவைகுந்தங்காண்பதற்கு என்மனமேகமேண்ணுமிராப்பகலின்றியே" என்றிறே அங்கும் இவர்பாசுரம். (௲)

---

*கீழ்வாக்யவிவரணம்-அஹோராத்ரம் இத்யாதி. "தீப்பட்டு" என்றது- படபாமுகாக்நியென்றபடி. செல்லுமாபோலே யென்றது - வருமாபோலேயென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, ஶத்ருக்களாலே புகழப்படுமவனென்று ஶப்தார்த்தம். பொருபடை - பொராநிற்கிறபடையென்றபடி. "ஶைக்யஸுக்ரீவமேகபுஷ்பவலாஹகை: । ஹேதிபிஸ்சேதநாவத்பிருதீரிதஜயஸ்வநம்" இதி ரகுவம்ஶே,(௧௦) "ஶத்ரோ:ப்ரக்யாதவீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை: । பஶ்யதாயுத்யமாநஸ்ய க்ருத:காலோ ரகூத்தம" இதி யுத்தகாண்டே, ஸம்க்ஷேபத: திருவணை: "திருப்புலியூர் வளமே - புகழும்" என்ற அவதாரணார்த்தம் - பிராட்டி இத்யாதி. "ஸீதாத்வாஹ ஶத்ருக்நம் ராகவஸ்ய நிவேஶநே நாஶந்நாநாநாஷாநுஹோ ஶாநுஷவயூகாஶேஷ்டிநீ" இதி ஸுந்தரகாண்டே. "திகழுமணிநெடு மாடநீடு" என்ற வர்ணநத்துக்கு ஹாவம் - அயோத்யா இத்யாதி. இப்படி பரமபதத்தை உத்தேஶ்யமாக நினைத்திருப்பரோவென்ன - மாகவைகுந்தம் இத்யாதி. பொருநீர்க்கடல் என்றுதொடங்கி, செல்வதொப்ப - புகழும்பொருபடையான - செழுங்கதிராழிமுதல் - ஏந்திப் போர்புக்கு என்று தொடங்கி, வளமே - இவள் - இராப்பகல் - நின்று - புகழும் இத்யந்வய:. (௲)*

---

## நான்காம் பாட்டு.

ஊர்வளங்கிளர்சோலையும் கரும்பும்பெருஞ்செந்நெலுஞ்சூழ்ந்,
ஏர்வளங்கிளர்தண்பணைக் குட்டநாட்டுத்திருப்புலியூர்
சீர்வளங்கிளர்மூவுலகுண்டுமிழ் தேவபிரான்
பேர்வளங்கிளர்ந்தன்றிப்பேச்சிலள் இன்றிப்புனையிழையே.

ஆ.—(ஊர்வளம்) - ஆண்பிள்ளைத்தனம் அமைபாதிறே: குணவானுயிருக்க வேணுமிறேயென்னில், - அவனுடைய ஆபத்ஸகத்வாதி குணங்களிலேயிறே அகப்பட்டதென்கிறாள்.

ஒ. - நாலாம்பாட்டில், திருப்புலியூரியில் எம்பெருமானுடைய குணவத்தையிலே இவள் ஈடுபட்டாளென்கிறாள்.

[ஊர்வளங்கிளர் சோலை] - தன்னைக்காணவே ஊரில் ஸம்ருத்தியெல்லா தோற்றும்படியான சோலை. [ஏரென்று தொடங்கி] - மிக்கிருந்துள்ள ஏரினுடைய ஸ சாரத்தையுடைத்தான அழகிய நீர்நிலத்தையுடைய குட்டநாட்டுத் திருப்புலியூரி ஸமஸ்தலோகங்களையும் உண்பது உமிழ்வதாய் அத்தாலே தன்னுடைய கல்யாணகுண கள் மிகவும் நிறம்பெறும்படியாவதுஞ்செய்து, அயர்வறுமமரர்கள் அதிபதியானவனு டைய சேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்கள் பலவற்றைப் கிளர்ந்துபேசுமி, தனைபோக்கி மற்றொன்றும் பேசுகிறிலள்; [இப்புனையிழை] - இச்ஸலக்ஷணையா பெண்பிள்ளை.

ப.—அநந்தரம், ஆபத்ஸஹத்வாதி குணைசகாஷங்களையுடைய அவன் தி நாமங்களைப் பெரியகிளர்த்தியோடே சொல்லாநின்றாளென்கிறாள்.

ஊர் - ஊருக்கு, வளம் - வளப்பமாய், கிளர் - உயர்ந்த, சோலையும் - சோலை யும், கரும்பும் - (அத்தோடணைத்துச் சொல்லலாம்) கரும்பும், பெரு பெரிய, செந்நெலும் - செந்நெலும், சூழ்ந்து - சூழ்ந்து, ஏர் - ஏரின், வளம் - அழகு கிளர் - மிகாநிற்கிற, தண் - குளிர்ந்த, பணை - நீர்நிலங்களையுடைய, குட்டநாட்டு, திருப்புலியூர் - குட்டநாட்டுத் திருப்புலியூரில், சீர் - (ரக்ஷகத்வோபயுக்த குணங்கள் னுடைய, வளம் - ஸம்ருத்தி, கிளர் - தோற்றும்படி, மூவுலகு - ஜகத்த்ரயத்தையும் உண்டு - அமுதுசெய்து, உமிழ் - உமிழ்ந்த, தேவபிரான் - ஸௌரிஜோக்யனானவனுடைய பேர் - திருநாமங்களினுடைய, வளம் - ஸம்ருத்தியை, புனை - அணிபப்பட்ட, இ விழை - ஆபரணங்களையுடைய இவள், இன்று - இப்போது, கிளர்ந்தன்றி - கிளர் தன்றி, பேச்சிலள் - சொல்லுகிறிலள். ஏர்வளங்கிளரென்று - அழகிதான ஸம்ருத்தி தோன்றுகிற என்றுமாம்; ஊரின்வளப்பந் தோன்றும்படியான சோலையென்றுமாம்.

இ.—நாலாம்பாட்டில், வெறும்ஆண்பிள்ளைத்தனமேயன்றிக்கே, குணவா ஞய், ஆபத்ஸஹனுயிருக்கிறவனுடைய குணைபிக்யத்திலே இவள் ஈடுபட்டாளென்கிறாள்

[ஊர்வளங்கிளர்சோலையும்] - ஊரில் அழகெல்லாம் தன்னைக்கண்டபோதே தோற்றும்படியான சோலையென்னுதல்; ஊர்க்குச்சிறப்பாய்ச் சோலைக்குள்ள நன்மை

ளெல்லாமுடைய சோலையென்னுதல். வயலடங்கக் கரும்பும், அதுக்கு நிழல் செய்யும் செங்நெலும் சூழ்ந்துகிடக்கும். [ஏர்வளங்கிளர்] - ஏராலுண்டான அழகையுடைத்தான வென்னுதல், ஏரினுடைய ஸமுதாயத்தைச் சொல்லுதல். அதாவது - உழுவது நடுவதாய்ச் செல்லாநிற்கை. [தண்பணை] - மருதநிலமென்னுதல், அழகிய நீர்நிலமென்னுதல். மருதநிலமென்றத்தால் - வயலைச் சொன்னபடி. [சீர்வளங்கிளர் மூவுலகுண்டுமிழ் தேவபிரான்] - குணங்களின் நன்மையடங்கச் செயலிலே தெரியும்படி ஸகலலோகங்களையும் திருவயிற்றிலே வைத்து நோக்கி வெளிநாடுகாண உமிழ்ந்த * அயர்வறுமமரர்களதிபதி; தன்மேன்மைபாராதே உபக்ரமிக்குமவனென்கை. [பேர்வளம்] - திருநாமத்தில் அழகைச் சொல்லுதல்; திருநாமங்களடங்க வென்னுதல். குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களைப் பெரியகிளர்த்தியோடே யன்றோ இவள்சொல்லுகிறது? நாம் திருநாமஞ் சொல்லுகிறாப்போலேயோ? கடலோதங் கிளர்ந்தாற்போலேயன்றோ இவள் சொல்லுகிறது. அப்படியல்லது, வேறொன்றைச் சொல்லமாட்டுகிறிலள். [இன்று] - இவள் தனக்குத்தான் முன்புண்டோ? [இப்புனையிழையே] - திருநாமத்தைச் சொல்லச்சொல்ல ஒருபடி பூண்டாற்போலேயன்றே இருக்கிறது?

ஈடு.—நாலாம்பாட்டு. வெறும் ஆண்பிள்ளைத்தனமே போராதே, ஆபத்ஸகனுக வேணுமேயென்ன, 'அக்குறைதானுண்டோ இவனுக்கு?' என்கிறாள். புனல்தரு புணர்ச்சியையன்றோ இவள் வாய்புலற்றுகிறது.

[ஊர்வளங்கிளர்சோலையும்] - ஊரில் ஸம்பத்தைக் கோட்சொல்லிக் கொடுக்கும் சோலையென்னுதல்; ஊர்களுக்கு இட்டேச்சொல்லும் சிறப்புக்களைத் தேரிவிக்கும்சோலையென்னுதல். [கரும்பும் பெருஞ்சேங்நேலும்சூழ்ந்து]-வயலடங்கக் கரும்பும், அதுக்கு நிழல் செய்யும் சேங்நேலும் சூழ்ந்துகிடக்கும். [ஏர்வளங்கிளர்] - ஏராலுண்டான அழகையுடைத்தாயேன்னுதல், ஏரினுடைய ஸமுதாயத்தைச் சோல்லிற்றுதல். அதாவது - உழுவதுநடுவதாய்ச் சேல்லாநிற்கை. [தண்பணை] - மருதநிலமேன்னுதல், அழகிய நீர்நிலமேன்னுதல். மருதநிலமேன்றத்தால், வயலைச் சோன்னபடி. [சீர்வளங்கிளர்மூவுலகுண்டுமிழ்] — குணங்களின் நன்மையடையச் செயலிலே தேரியும்படி, ஸகலலோகங்களையும் வயிற்றிலே வைத்து, வெளிநாடுகோணவுமிழ்ந்த * அயர்வறுமமரர்களதிபதி. [பேர்வளம்] - திருநாமங்க

---

நாலாம்பாட்டு —ஊர்வளம் இத்யாதி. கலவிக்குறிசொல்லுகிறவிடத்தில் ஆபத்ஸகத்வம் சொல்லுகிறது, ஆபத்ஸகத்வமில்லையென்றவர்களை இசைவிக்கைக்காகவென்கிறார் - வெறும் ஆண்பிள்ளை இத்யாதி. "மூவுலகுண்டு" என்றத்தைப்பற்ற - புனல்தருபுணர்ச்சியை இத்யாதி. புனல்தருபுணர்ச்சியாவது- நீரிலே அமிழ்ந்து போகிற தன்னை நாயகன் உதவியெடுத்தால் அதுக்குத்தோற்று "ஆபத்திலே ரக்ஷிப்பதே!" என்று ஆலிங்கநம் பண்ணிக்கொள்ளுகை யென்றபடி.

மூந்தின அர்த்தத்துக்கு, "ஊர்" என்று - திருப்புலியூர். "வளம்" என்று - ஸம்பத்தாதல், சிறப்பாதல். கிளருகை - சொல்லுகை. த்விதீயார்த்தத்துக்கு ஹாவம் - ஒருவன் ஓரூரைக் கவிபாடும்போது அதின்சிறப்புப் பாடுமதுக்கு த்ருஷ்டாந்தம். திருப்புலியூர்ச் சோலையென்று. நாட்டில் ஊர்களுக்குண்டான அதிசயமெல்லாம் இச்சோலையைக்கொண்டே அறியலாயிருக்குமென்றபடி. ஏர்வளங்கிளர் - "வளம்" என்று - அழகுக்கும், ஸமுதாயத்துக்கும்பேர். கிளர் - சொலவாய், அத்தாலே ஃலிதம் - உடைத்தாகை. ஸமுதாயத்துக்கு நியாமக மருளிச்செய்கிறார் - அதாவது இத்யாதி. "தண்மை" என்று - அழகு. ஏர்வளத்தைக் கிளராநின்றுள்ள தண்பணை என்றபடி. "பணை" என்று - மருதநிலத்துக்கும், நீர்நிலத்துக்கும்பேர். "சீர்" என்று - கல்யாணகுணங்களாய்,

ளினுடைய அழகைச் சொல்லுதல், திருநாமங்களையடங்கவென்னுதல். [கிளர்ந்தன்
பேச்சிலள்] - குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களை, கடல்கிளர்ந்த
போலே பெரியகிளர்த்தியோடேயன்றோ இவள் சொல்லுகிறது. நாம் திருநாமம் சொல்லு
போலேயோ இவள் சொல்லுகிறது. [இன்று] - இவ்வேறுபாடும் நன்மையும் நேற்றில்லை
கிடீர். [இப்புனையிழையே] - திருநாமம் சொல்லச்சொல்ல ஒருபடி ஆபரணம் பூண்ட
போலே இராநின்றாள். (  )

# ஐந்தாம் பாட்டு.

புனையிழைகளணிவும் ஆடையுடைப் புதுக்கணிப்பும்
நினையும்நீர்மையதன்றுஇவட்கிது நின்றுநினைக்கப்புக்கால்
சுனையினுள்தடந்தாமரைமலரும் தண்திருப்புலியூர்
முனைவன்மூவுலகாளி அப்பன்திருவருள்மூழ்கினளே.

ஆ.—(புனையிழைகள்.) - "அவன் ஸௌந்தர்யசீலாதிகுணங்களையுடை
னென்? அவனை வற்கவே அறியப்பெற்றிலோம்: வேறே ஒருவனையந்வேஷித்து அ
னுக்குக் கொடுக்கக்கடவதாய்ச் சொல்லாநின்றபின்பு இனிச்செய்யலாவதில்லை" என்
தாயார்சொல்ல ; தோழியானவள், இயற்கையிற் புணர்ச்சியைச் சொல்லுகை ஈடன்றிதே
யிருக்கச்செய்தே, "இவளையிழக்கிறோம்" என்னும் பயத்தாலே முன்னமே திருப்பு
யூர் முனைவனான ஸர்வேஶ்வரனோடே புணர்ந்தருளினாளென்கிறாள்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், அவனுடைய ஸௌந்தர்யாதிகளை நாமும் பே
கிறிலோமோ? இவளும் அவ்வோபாதி பேசினாளானாலாகாதோவென்ன ; இவள் வ
யிருக்கிறபடி கண்டோமுக்கு அவன் ஐஶ்வர்யகுணத்திலே ஈடுபட்டு அவனோடே ஸம்
ஶ்லேஷித்தாள் என்கிறாள்.

[புனையிழைகளென்று தொடங்கி] - பூணக்கடவ ஆபரணங்கள் பூண்டிரு
கிறபடியும் கூறையுடையும் இவள் வடிவிலேபிறந்த புதுக்கணிப்பும் இவளு
குப்பிறந்த இவ்வழகுகள் ஆராயவொண்ணுவாகிலும் மிகவும் ஆராய்ந்துபார்க்கி
[திருப்புலியூரென்று மேலுக்கு]-திருப்புலியூருக்கு ப்ரதாநனாய் அதுக்குமேலே ஸமஸ்
லோகங்களையும் ஆளக்கடவ ஸர்வேஶ்வரனுடைய ப்ரஸாதத்திலே முழுகினாள். அப்
னென்று - தோழி தன்ப்ரியத்தாலே சொல்லுகிறாள். மூழ்கினளென்றது - கட
கொண்டாற்போலே நமக்குஉதவா ளென்றவாறு.

ப.—அநந்தரம், இவள்வடிவில் புதுமையிருந்தபடியால் அதிஶயிதைஶ்வர்
விஶிஷ்டனானவனுடைய ஸம்ஶ்லேஷத்திலே அவகாஹித்தாளென்கிறாள்.

"வளம்" என்று - நன்மையாய், "கிளர்" என்று - ப்ரகாஶிக்கையாய், குணங்களினுடைய நன்
யடையச் செயலிலே ப்ரகாஶிக்கும்படியென்று பதார்த்தம். விவரணம் - நாம்திருநாமம் இத்யா
"இப்புனையிழையே" என்றவிடத்தில், "இ" என்று - பூர்வபராமர்ஶி. திருநாமத்தைச் சொன்
வநந்தரம், "ஆபரணம்பூண்டவள்" என்கையாலே, திருநாமம்சொல்லுகைதானே ஆபரணமெ
கிறாள் - திருநாமம்சொல்ல இத்யாதி. (  )

புனை - (முன்பு) புனைந்த, இழைகள் - ஆபரணங்களை, அணிவும் - (இப்போது ஓரழகுபெறப்) பூண்டிருக்கிறபடியும், ஆடையுடையும் - பரிவட்டத்தினுடைய அழகும், புதுக்கணிப்பும் - (வடிவில்பிறந்த) புதுமையும், நின்று - (தாமுள்ளதனையும்) நின்று, நினைக்கப்புக்கால் - நினைக்கப்புக்காலும், இவட்கு - இவளுக்கு, இது - இந்த வைலக்ஷண்யம், நினையும் - (லோகமர்யாதையால்) நினைக்கலாம், நீர்மையதன்று - ஸ்வபாவமன்று; (ஆதலால்), சுனையினுள் - சுனைகளுக்குள்ளே, தடம் - பெருத்த, தாமரை - தாமரைகள், மலரும் - மலராநிற்கிற, தண் - ப்ரமஹாரமான, திருப்புலியூர் - திருப்புலியூருக்கு, முனைவன் - ப்ரதாநநிர்வாஹகனாய், மூவுலகு - ஜகத்துக்கு, ஆளி - ஸ்வாமியான, அப்பன் - உபகாரகனுடைய, திருவருள் - நிரதிசயோபகாரத்திலே, மூழ்கினள் - அவகாஹித்தாள்.

இ.—அஞ்சாம்பாட்டில், கீழில் ஸௌந்தர்யம், ஒப்பனை, ஆண்பிள்ளைத்தனம், குணவத்தை, இவை நாமும்பேசுகிறிலோமோ? இவளும், அவ்வோபாதியாளுலோவென்ன, இவள் வடிவிருக்கிறபடி கண்டோமுக்கு அவன்ஐஶ்வர்யகுணத்திலே ஈடுபட்டு ஸம்ஶ்லேஷம் வ்ருத்தமாயிற்று என்கிறாள்.

[புனையிழைகளணிவும்] - பூணக்கடவ ஆபரணங்களைப் பூண்டிருக்கிறபடியும்: நாம் பூட்டினவையாயிருக்கச்செய்தே அப்படி குறிக்கோளுண்டாயிருந்ததோ? [ஆடையுடையும்] - கூறையுடையும்; முகத்தலை பார்த்து உடுத்ததாயோ விருக்கிறது? [புதுக்கணிப்பும்] - முன்புள்ளவற்றுக்குப் பிறந்தவாசியன்றிக்கே இவள்வடிவிலே பிறந்த புதுமைகளும். [நின்று நினைக்கப்புக்கால் - நினையும் நீர்மையதன்றிவட்கிது] - உபக்ரமித்து விடுகையன்றிக்கே காலமெல்லாம் ஆராயப்புக்காலும், இவளுக்குப் பிறந்தவழகுகள் நினைக்கப்போகாது. "யதோவாசோ நிவர்த்தந்தே" என்கிற விஷயத்தை பரிச்சேதிக்கிலும் இவள்படி பரிச்சேதிக்கவிலமன்று. இவையெல்லாவற்றுலும் நீ பரிச்சேதித்த அம்ஶம் ஏதென்ன?— [அப்பன்றிருவருள் மூழ்கினள்சுனையினுள் தடந்தாமரைமலரும்] - பொய்கைகளில் தாமரைமலரும். பொய்கைகளில் தாமரை கண்செறியிட்டாற்போலே பூத்து மலர்ந்துநிற்கும் ஊர். அவ்வூரில் பதார்த்தங்கள் பிறர்க்கு இடங்கொடாதென்கிறாள். [திருப்புலியூர்முனைவன்] - அவ்வூருக்கு ப்ரதாநன். [மூவுலகாளி] - அவ்வளவன்றிக்கே ஸமஸ்தலோகங்களுக்கும் நிர்வாஹகன். [அப்பன்] - "ஐஶ்வர்யத்தாலும் குறைவறப் பெற்றேன்" என்று தன் ப்ரீதியாலே சொல்லுகிறாள்: அவனுடைய. [திருவருள் மூழ்கினள்] - கடல்கொண்ட வஸ்துவையன்றோ நீங்கள் மீட்கப்பார்க்கிறது?

ஈடு.—அஞ்சாம்பாட்டு. வெறும் ஆபத்ஸகத்வமே போருமோ? இவளுக்குத் தக்க ஐஶ்வர்யமு முண்டாகவேணுமேயென்ன; அதுவுமுண்டேன்கிறாள்.

[புனையிழைகளணிவும்] - ஆபரணங்கள் நாம் பூட்டினாற்போலே யிருந்ததோ? [ஆடையுடையும்] - முகத்தலையறிந்து உடுத்ததாயிருந்ததோ? [புதுக்கணிப்பும்] - நீர்பாய்ந்த வயல்போலே இவள்வடிவிலே பிறந்த செவ்வி பாரிகோள்! [நினையும் நீர்மையதன்று

அஞ்சாம்பாட்டு.—புனை இத்யாதி. "மூவுலகாளி" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - வெறும் ஆபத்ஸகத்வம் இத்யாதி.

"புனையிழைகளணிவும் -" பூணப்பட்ட ஆபரணங்களின் சேர்த்தியும். "புதுக்கணிப்பும்" - வடிவிற்செவ்வியும். "நினையும்நீர்மையதன்று -" நினைக்கும்ஸ்வபாவத்தையுடைத்தன்று. "புனையிழைகளணிவும்" என்றதுக்கு ஹார்த்தபாவம் - ஆபரணங்கள் இத்யாதி. "இது" என்றது-

இவட்கிதுநின்றுநினேக்கப்புக்கால்]-(நின்றுநினேக்கப்புக்கால்-நினேயும்நீர்மையதன்றுஇ கிது) உபக்ரமித்து விடுகையன்றிக்கே, காலதத்த்வமுள்ளதனையும் நின்று ஆராயப்பு லும், இவளுக்குப்பிறந்த இவ்வழகுகள் நினைக்கப்போகாது. "யதோவாசோநி வ்ருத்தந்தே" (யதோவாசோநிவர்த்தந்தே) என்கிறவிஷயத்தைப் பரிச்சேதிக்கிலும்,இவள்படி ப சேதிக்கப்போகாது. இவையெல்லாவற்றாலும் நீ பரிச்சேதித்தஅம்சமேதென்ன ?— [ பன் திருவருள்மூழ்கினள் - சுனையினுள்தடந்தாமரைமலரும்] - ஒருபூவே தட தைக் கண்செறியிட்டாற்போலே மலரும். அவ்வூரில் பதார்த்தங்கள் பிறர்க்கு இ கோடாதென்கிறாள். இவளுக்குப் புறம்புபோக்கில்லே. [திருப்புலியூர்முனைவன்] - அ ருக்கு ப்ரதாநன். [மூவுலகாளி] - ஸமஸ்தலோகங்களுக்கும் நிர்வாஹகன். ஐஶ்வ துக்குப் புறம்பு ஒருவரைத் தேடிப்போகவேண்டா. [அப்பன்]- "ஐஶ்வர்யத்தாலும் கு வறப்பெற்றேன்" என்று தன்ப்ரீதியாலே சொல்லுகிறாள். [திருவருள் மூழ்கினளே] - க கொண்ட வஸ்துவை எங்ஙனே மீட்கப்பார்க்கிறபடி? அருட்கடலிலே மூழ்கின இ மீட்கலாமோ உங்களாலே ?

---

## ஆறும் பாட்டு.

---

திருவருள்மூழ்கி வைகலும் செழுநீர்நிறக்கண்ணபிரான்
திருவருள்களுஞ்சேர்ந்தமைக்கு அடையாளந்திருந்தவுள
திருவருளருளால் அவன்சென்று சேர்தண்திருப்புலியூர்
திருவருள்கமுகொண்டழத்தது மெல்லியல்செவ்விதழே.

*ஆ —(திருவருள்)-இப்புதுக்கணிப்பும், புனையிழைகளணிவும், இவளுடை பருவத்தாலும் லீலாரூபசேஷ்டாவிசேஷத்தாலும் ஸம்பவியாதோ? திருப்புலியூ பெருமானோடு கலந்தகலவியால் வந்ததென்னுமிடத்துக்கு அடையாளமென்னென்ன திருப்புலியூர் சராசரங்களுக்கெல்லாம் ஆத்மதாநம்பண்ணுகைக்காக அவ்வூரிலேபுகு நின்றருளின எம்பெருமானுடைய திருவருளாலேவளர்ந்த கமுகினுண்பழம்போ யன்றோ இவள் திருப்பவளமிருப்பதுஎன்கிறாள்.*

*ஒ.—ஆறும்பாட்டில், இவளுடைய வடிவில் வேறுபாடு, லீலாவிநோத தாலும் இவள்பருவத்தாலும் பிறவாதோவென்னில்?—எம்பெருமானுடைய ஔதா*

---

*பூர்வபராமர்ஶி. "இது" என்றதுக்கு அர்த்தம் - இவளுக்குப் பிறந்தஇவ்வழகுகள் என்றது. ரணம் - யதோவாச இத்யாதி. 'புனையிழைகள்' என்று தொடங்கி, 'புதுக்கணிப்புமான இ இவளுக்கு - நின்று நினைக்கப்புக்கால் - நினையும் நீர்மையதன்று' என்று அந்வயிப்பது. தாம யானது சுனையினுடைய பரப்பெல்லாம் மலருமென்று பாவார்த்தம். "தாமரை" என்ற ஏக நார்த்தம் - ஒருபூவே என்றது. "தடம்" என்றதுக்கு அர்த்தம் - கண்செறி இத்யாதி கபளீக தாற்போலே என்றபடி. இதுக்குஹேது - அவ்வூரில் இத்யாதி. இத்தால் ஃபலிதம் இவளு இத்யாதி. "நிர்வாஹகன்" என்றத்தால் ஃபலிதம் - ஐஶ்வர்யத்துக்கு இத்யாதி. "மூழ்கினள்" எ றத்தால் ஃபலிதம் - கடல்கொண்ட இத்யாதி. விவரணம் - அருட்கடலிலே இத்யாதி. புனையிழை கள் என்றுதொடங்கி, புதுக்கணிப்புமான - இது - இவளுக்கு - நின்றுநினைக்கப்புக்கால் - நினை நீர்மையதன்று; சுனையினுள் என்றுதொடங்கி, மூழ்கினள் இத்யந்வய:.*

குணத்திலேயகப்பட்டு அவனோடே ஸம்ச்லேஷித்தமைக்கு அடையாளம் வ்யக்தமாக உண்டென்கிறாள்.

[திருவருளென்று தொடங்கி] - ப்ரமஹரமான திருநிறத்தையுடையனாய் உபகாரசீலனான கிருஷ்ணனுடைய ப்ரஸாதத்திலே மூழ்கி நாடோறும் அவனுடைய விஷயீகாரங்களைப் பெற்றமைக்கு அடையாளங்கள் வ்யக்தமாக உள [திருவருளருளாலென்று மேலுக்கெல்லாம்] - குணாகுண நிரூபணம்பண்ணாதே, எல்லாரையும் விஷயீகரிக்கைக்காக அவன்தானே சென்று சேரும்படியாய் ஒருகாரியப்பாடு வேண்டாதே தானே நிரதிசயபோக்யமாயிருந்த திருப்புலியூரில் அவனுடைய ப்ரஸாதத்தாலே வளருகிற கமுகினுடைய செவ்விப்பழம்போலே யிராநின்றது, ம்ருதுஸ்வபாவையான இவளுடைய அதரம்.

ப.—அநந்தரம், அவ்ரூபனாய் ஸுவ்யனானவனுடைய ஔதார்யகுணமேலே அவகாஹித்து அநுபவித்தமைக்கு அடையாளமுண்டென்கிறாள்.

செழுநீர் - (ஸம்ருத்தஜலமான) மஹார்ணவத்தின், நிறம் - நிறத்தையுடையனாய், கண்ணபிரான் - (ஆஸ்ரிதஸுலபனான) க்ருஷ்ணனாகிற மஹோபகாரகனுடைய, திருவருள் - (நிரவதிகமான) ஔதார்யகுணத்தில், வைகலும் - அநேககாலம், மூழ்கி - அவகாஹித்து, திருவருள்களும் - (ஸம்ச்லேஷதசையில் அவன்பண்ணின) அதிசயிதோபகார பரம்பரைகளையும், சேர்ந்தமைக்கு - இவள்பெற்றபடிக்கு, திருந்த - மறைக்கவொண்ணாத, அடையாளம் — அடையாளங்கள், உள - உள; (அவற்றில்வைத்துக்கொண்டு), திருவருள் - (தன்னுடைய நிருபாதிகமான) திருவருளை, அருளால் - உபகரிக்கைநிமித்தமாக, அவன் - அவன்தானே, சென்று - சென்று, சேர் - சேர்ந்த, தண் - ப்ரமஹரமான, திருப்புலியூர் - திருப்புலியூரில், திருவருள் - அவனுடையகடாக்ஷோபகாரபாத்ரமான, கமுகு - கமுகினுடைய, ஒண்-திரண்டு சிவந்து நன்றான, பழத்தது - பழம்போன்றது, மெல் - மெல்லிய, இயல் - ஸ்வபாவத்தையுடைய இவளுடைய, செம் - சிவந்த, இதழ் - இதழ்போலேயிருக்கிற அதரமானது.

ஈ.—ஆறாம்பாட்டில், இவள்வடிவில் வேறுபாடு லீலாவிநோதத்தாலும் இவள் பருவத்தாலும் பிறவாதேதாவென்னில்; அவனுடைய ஔதார்யகுணத்திலே யீடுபட்டு ஸம்ச்லேஷித்தமைக்கு அடையாளம் வ்யக்தமாக உண்டென்கிறாள்.

[வைகலும் திருவருள்மூழ்கி] - அநேககாலம் அவன் ப்ரஸாதத்திலே யவகாஹித்து. நாம் கண்டத்தையறியும் இத்தனையன்றோ? எதிர்சூழல்புக்கு எத்தனை காலமுண்டுசெல்லுகிறதென்றறிந்தோமோ? [செழுநீர் நிறக்கண்ணபிரான்] - ப்ரமஹரமான வடிவையும் சீலத்தையுமுடையவன். அவன்றனக்கு ஸர்வஸ்வமான வடிவிலும் குணத்திலும் அகப்பட்டமை தோற்றியன்றோவிருக்கிறது [திருவருள்களும் சேர்ந்தமைக்கடையாளம் திருந்த உள] - அவன் விஷயீகாரங்களையும் பெற்றமைக்கு அடையாளம் வ்யக்தமாக உள. நீ இதென்கொண்டு அறிந்தாயென்ன, [திருவருளருளால்]- குணாகுணநிரூபணம் பண்ணாதே விஷயீகரிக்கையாகிற ஸ்வபாவத்தை உபரிக்கைக்காக, அவன்தானே சென்று பொருந்தும் ப்ரமஹரமான வூர். 'திருவருட்கமுகு' என்று சில உண்டு: நீரால் வளருமதன்றிக்கே, பிராட்டியும் தானும் கடாக்ஷிக்க அதுவே நீராக வளருமவை. [மெல்லியல் செவ்விதழ்-ஒண்பழத்தது] - மிருது ஸ்வபாவையான இவளு

டைய அதரம் செவ்விப்பழம் போலேயிராகின்றது. இவளுடைய அவயவம் அவ்வூர் யன்றோ யிருக்கிறது.

ஈடு.—ஆறும்பாட்டு. ஐஸ்வர்யமே போருமோ? உதாரனாகவேண்டாமே என்ன, - அவனுடைய ஔதார்யகுணத்திலே யகப்பட்டு ஸம்ஶ்லேஷித்தமை அடையாளம் வ்யக்தமாக உண்டென்கிறாள்.

[வைகலும் - திருவருள்மூழ்கி] - அநேககாலம் அவன்ப்ரஸாதத்திலே அவ ஹித்து. நாம் கண்டத்தையறியுமித்தனையிறே. எதிர்சூழல்புக்கு இப்படி பரிமாறி கிறது எத்தனைகாலமுண்டு, அறிந்தோமோ? [செழுநீர்நிறக் கண்ணபிரான்] - ஸௌந் ஸௌலப்யங்களைக் காட்டிக்காணும் இவளை இப்படி அகப்படுத்திற்று. [திருவருள்க சேர்ந்தமைக்கு] - அவனுடைய ப்ரஸாதமெல்லாம் இவ்வாஶ்ரயமொன்றிலும் சேர்ந்தமைக்கு. [அடையாளந்திருந்தவுள] - அவன்விஷயீகாரம் பெற்றமைக்கு அ யாளம் வ்யக்தமாக உள. (நீ இதேன்கொண்டறிந்தாய்? என்ன) - [திருவருளருளால் குணாகுணநிரூபணம்பண்ணாதே விஷயீகரிக்கையாகிற ஸ்வபாவத்தை உபகரிக்க காக; திருவருளருளுகைக்காக. ஆல் - அசை [அவன்சென்று இத்யாதி] - * கலங் பெருநகரம் கலவிருக்கையாயிருக்கவன்றோ அவன் இங்குவந்து ஸந்நிஹிதனாயிற்று. " வருட்கமுகு" என்று சிலவுண்டு: அதாவது - நீராலே வளருகையன்றிக்கே, பெ பிராட்டியாரும் ஸர்வேஶ்வரனுமாகக் கடாக்ஷிக்க அத்தால் வளருவன சில; அ டைய அழகியபழம்போலே யிராநின்றது, ம்ருதுஸ்வபாவையான இவளுடைய அத அவ்வாயிலே யறியலாயன்றோ விருக்கிறது.

## ஏழாம் பாட்டு.

மேல்லிலைச்செல்வவண்கோடிப்புல்க வீங்கிளந்தாள்கமுகின்
மல்லிலைமடல்வாழையீன்கனிசூழ்ந்து மணங்கமழ்ந்து
புல்லிலைத்தெங்கினூடு காலுலவுந்தண்திருப்புலியூர்
மல்லலஞ்செல்வக்கண்ணன்தாளடைந்தாள் இம்மடவரலே.

ஆறும்பாட்டு.—திருவருள் இத்யாதி. "திருவருளருளுகைக்காக அவன்சென்றுசேர் திருப்புலியூர்" என்றபதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - ஐஸ்வர்யம் இத்யாதி. "திருவருள் என்கையாலே ஔதார்யம்.

நாலாம்பாட்டிலே "இன்றிப்புனையிழை" என்கிறவிடத்திலே "இவ்வேறுபாடும் ந யும் நேற்றில்லை" என்றதும், இங்கு "வைகலும் திருவருள்மூழ்கி" என்றதும் வ்யாஹதமன் வென்ன - நாம்கண்டத்தை இத்யாதி வாக்யத்வயத்தாலே. உள - உண்டு. அருள் என்ன "திருவருள்" என்றதுக்கு பாவம் - குணாகுண இத்யாதி. "சென்று" என்றது - விபரீதலக யாய், வந்தென்றபடி. "சென்றுசேர்" என்றதுக்கு பாவம் - கலங்காப்பெருநகரம் இத் ஒண்மை - அழகு. பழுத்தது - பழம்போலேயிருக்கிறது. செவ்விதழ் - செவ்விய இதழென் அத்தால் அதரத்தை லக்ஷிக்கிறது. இத்தால் ஃபலித்த தாத்பர்யம் - அவ்வாயிலே இத்யாதி. லியல்செவ்விதழ் - திருவருளருளால் என்றுதொடங்கி, ஒண்பழுத்தது; வைகலும் - மூழ்கி என்றுதொடங்கி, திருந்தவுள இத்யந்வய:.

ஆ.—(மெல்லிலை.) - "இவளுக்குத் திருப்பவளத்திலழ ந்தான் ஸ்வாபாவிக மன்றோ? இது அவனோடு கலந்தமைக்கு அடையாளமல்ல; அவன்தான் இவளோடு கலந்து பரிமாறுகைக்கீடான ப்ராணயித்வமுடையவனோ?" என்ன,—தன்பக்கல் அடங்காமை அவ்வூரில் ஸ்தாவரங்களிலுங்கூட வெள்ளங்கோத்து, அவையும் பரஸ்பர ஸம்ஶ்லேஷபரமாயிருக்கும்படியே பெருகிய இவனுடைய ப்ராணயித்வவெள்ளத்திலேயிறே இவள் அழுந்திற்றென்கிறாள்.

ஒ.—ஏழாம்பாட்டில், தன்பக்கல் அடங்காமல் அவ்வூரில் ஸ்தாவரங்களுங் கூட வெள்ளங்கோத்து, அவையுங்கூட பரஸ்பர ஸம்ஶ்லேஷைகபரமாயிருக்கும் படியாய பெருகுகிற இவனுடைய ப்ராணயித்வவெள்ளத்திலே முழுகினாளென்கிறாள்.

[மெல்லிலையென்று தொடங்கி] - ம்ருதுவான இலையையுடைத்தாய் ஸம்பத்தையோடேகூடித் தன்னைக்கொடுக்கும் ஸ்வபாவமான கொடி தழுவ அத்தாலே வளர்ந்து கொண்டு இளகாநின்றுள்ள தாளையுடைய கமுகோடேகூடின பெரிய இலையையும் மடலையுமுடைய வாழை ஈன்ற பழுத்த குலைகள்சூழ்ந்து அத்தாலே வெள்ளமிடாநின்றுள்ள பரிமளத்தையுடைத்தாய். [புல்லிலைத்தெங்கென்று தொடங்கி] - செறிவின் மிகுதியாலே நேரிதான இலையையுடைய தெங்கின்உள்ளே போக்கடியற்று ஸஞ்சரியாநிற்பதுஞ்செய்து இப்படி நிரதிஶயபோக்யமான திருப்புலியூரில் மிக்கிருந்துள்ள ஸம்பத்தையுடைய க்ருஷ்ணன் திருவடிகளை அடைந்தாள் இந்த முக்தையான பெண்பிள்ளை. [புல்லிலைத் தெங்கென்றது] - சோலையைத்தழுவித் தழைத்திருந்ததெங்கென்றுமாம்.

ப.—அநந்தரம், தேசத்தில் வ்ருக்ஷலதாதிகளும் பரஸ்பர ஸம்ஶ்லேஷத்தாலே ப்ராணயித்வத்தை ப்ரகாஶிப்பிக்கும்படி, பெரிய ப்ராணயித்வைஶ்வர்யத்தையுடைய க்ருஷ்ணன்திருவடிகளை இவள் கிட்டினாளென்கிறாள்.

மெல் - ம்ருதுவான, இலை - இலைத்தழைப்பையும், செல்வம் - ஸௌந்தர்யைஶ்வர்யத்தையும், வண் - (தன்னுடைய உபகாரத்துக்குக்கொடுக்கும்) ஔதார்யத்தையுமுடைத்தான, கொடி - வெற்றிலைக்கொடி, புல்க - சூழ்ந்தணைக்க, வீங்கு - (அத்தோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே) புஷ்டமாய், இளம் - இளகிப்பதித்த, தாள் - அடியுரத்தையுடைத்தான, கமுகின் - கமுகுக்குப் பரிஸரவர்த்திபாய், (இம்மிதுநஸ்ஹ்ருத்துக்கு ஶிஶிரோபசாரம்பண்ணும் பரிசாரிகைகள்போலே), மல் - செறிந்த, இலை - இலையையும், மடல் - (பரிசாரஸாதநம்போலேயிருக்கிற) பூமடலையுமுடைத்தான, வாழை - வாழைகளினுடைய, ஈன் - நிரதிஶயபோக்யமாய் ஹ்ருத்யமான, கனி-பக்வபலங்களை, சூழ்ந்து - பரிஷ்வங்கம்பண்ணுகையாலே, மணம்கமழ்ந்து - பரிமளோத்தரமாய், (அப்படி பரிஸரவர்த்திகளாய்), புல் - செறிந்த, இலை - இலையையுடைத்தான, தெங்கின் - (உயர்ந்த) தெங்கின், ஊடு - நடுவே, கால் - (காமசாரமான) தென்றலானது, உலவும் - உலாவும்படியான, தண் - ஶ்ரமஹரமான, திருப்புலியூர் - திருப்புலியூரில், மல்லலம் செல்வம் - அதிஶயிதமான ப்ராணயித்வஸம்பத்தையுடைய, கண்ணன் - க்ருஷ்ணன், தாள் - திருவடிகளை. இம்மடவரல் - முக்தஸ்வபாவையான இவள், அடைந்தாள்-கிட்டினாள்.

இ.—ஏழாம்பாட்டில், அருளென்று ப்ரஸ்துதமான ஔதார்யத்தளவன்று; ப்ராணயித்வம் பார்த்தாலும் ஸ்தாவரபர்யந்தமாக வசல்காக்குமென்கிறாள். தன்பக்கல்

அடங்காமல் அவ்வூரில் ஸ்தாவரங்களுங்கூட பரஸ்பர ஸம்ச்லேஷைகத்ராகமாம் போருகிறவனுடைய ப்ரணயித்வ வெள்ளத்திலே முழுகினுளென்கிறுள்.

[மெல்லிலையித்யாதி] - மிருதுவான இலையையுடைத்தாய், ஸ்ரத்தை யோட கூடித் தன்னைக் கமுகுக்குமுற்றூட்டாகக்கொடுக்கும் ஸ்வபாவமான கொடிதழுவ [வீங்கிளந் தாட்கமுகின்]-கொடி தழுவத்தழுவ வளராநின்று, ஒருகாலைக்கொருகால் இளகாநின்றுள்ளதாளையுடைய கமுகு. "யஸ்யஸாஜநகாத்மஜா அப்ரமேயம் ஹி தத்தேஜ:" என்னும் ந்யாயத்தாலே, "ஊஷளவாஹா ...". [கமுகின் மல்லிலைமடல்வாழை] - கமுகோடேகூடின பெரிய இலையையும் மடலையுமுடைய வாழை வெற்றிலைக்கொடிக்கும் கமுகுக்கும் வெயில்படாமல் நிழல்செய்கிற வாழை. [ஈன்கனி சூழ்ந்து மணங்கமழ்ந்து] - வாழைகளீன்ற நெருங்கின பழத்தாறுகளைக் காற்று விலையறியாமையாலே வந்துபுகுந்து, பரிமளத்தில் லோபத்தாலே பலகால் சூழவந்து பரிமளத்தை பெறட்டுக்கொண்டு. [புல்லிலைத் தெங்கினூடு காலுலவும்] - செறிவின்மிகுதியாலே நெருங்கின இலையையுடைய தெங்கினுள்ளே யுலாவாநின்றது; விளைவதறியாதே புகுந்து பரிமளித்த வாழைச்சோலையிலே நெருக்குப்பட்டு அல்பம் அவகாசமுள்ள தென்னஞ்சோலையிலே புறப்பட்டுப் போக்கடியற்று ஸஞ்சரியாநின்றது புல்லிலை-புல்லப்பட்ட இலை: அந்யோந்யம் தழுவப்பட்ட இலையென்றுமாம்; வாழையிலையோடே தழுவின இலையையுடைய தெங்கென்றுமாம். [தண்திருப்புலியூர்] தெங்கும் கமுகும் வாழையுமான சோலைநெருக்கத்தாலே ஸ்ரமஹரமான திருப்புலியூர். [மல்லலஞ்செல்வக் கண்ணன்] - நிரவதிகமாய் அழகிதான ஸம்பத்தையுடைய கிருஷ்ணன். [தாளடைந்தாள்] - ப்ரணயித்வ குணத்திலே தோற்றுத் திருவடிகளைப்பற்றினுள். [இம்மடவரல்] இம்முக்த்யான பெண்பிள்ளை. முன்புஎனக்கு ஸ்வமையான இவள் என்னால் விலக்கவொண்ணுத தேசத்திலே போய்ப்புக்காள்.

ஈடு.—ஏழாம்பாட்டு.கேவலம் உதாரனுகப்போராதே, ப்ரணயித்வகுண முண்டாகவேணுமேயென்ன,—அவ்வூரில் ஸ்த்தாவரங்களுங்கூடப் பரஸ்பரம் ஆஸ்ரயமாம்படியன்றே அவனுடைய ப்ரணயித்வகுணமிருந்தபடி யென்கிறுள்.

[மெல்லிலை இத்யாதி] - ம்ருதுஸ்வபாவமான இலையையுடைத்தாய், ஸ்ரத்தையையுடைத்தாயிருக்கிற வண்கோடியுண்டு - உதாரமானகோடி; தன்பர்த்தாவான கமுகுக்குத் தன்னுடம்பை முற்றூட்டாகக்கோடுக்கும் போலே. [வீங்கிளந்தாள்கமுகின் கோடிதழுவத்தழுவ வளராநின்று, ஒருகாலைக்கோருகால் இளகாநின்றுள்ள தாளையுடை கமுகு. "யஸ்யஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹி தத்தேஜ:" (யஸ்யஸாஜநக மஜா - அப்ரமேயம்ஹிதத்தேஜ:) என்னும் ந்யாயத்தாலே. "ஊஷளவாஹா ...

ஏழாம்பாட்டு. - மெல்லிலை இத்யாதி. "வண்கொடிப்புல்க" என்றுதொடங்கி, "புல்லிலைத்தெங்கினூடு" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - கேவலம் இத்யாதி. "வண்கொடி புல்க" என்றத்தைப்பற்ற - ப்ரணயித்வகுண மென்றது. கொடிக்குக்கமுகு ஆதாரமாய், கமுகுக்கு வாழை ஆதாரமாய், வாழைக்குத் தென்னஞ்சோலை ஆதாரமாயிருக்கையாலே - ஸ்த்தாவரங்களுங்கூடப் பரஸ்பரம் ஆஸ்ரயமாம்படி என்றது.

"செல்வம்" என்றது - ஸ்ரத்தையை. இதுக்கு ஔதார்யமேதென்ன தன்பர்த்தாவான இத்யாதி. வீங்குகை - வளருகை. "வண்கொடிப்புல்கவீங்கு" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் யஸ்யஸ ...' என்றதுக்கு த்ருஷ்டாந்தம்—ஊஷள இத்யாதி - வஹிவ ...

ஸ்கந்தேகோபிமதுநிகாதி நீ:" (ததேளபாஹூலதாம் ஸ்கந்தேகோபிமதுநிகாதி நீ:). [கமுகின் மல்லிலைமடல்வாழை] - கமுகோடேகூடின பெரிய இலையையும்மடலையுமுடைய வாழை. வெற்றிலைக்கொடிக்கும் கமுகுக்கும் வெயில்தட்டாதபடி நிழல் செய்து நிற்குமாயிற்று வாழை [ஈன்கனிசூழ்ந்து] - பழத்தாறுகள் தெற்றிக்கிடக்குமாயிற்று. [மணம்கமழ்ந்து] - காற்றுனது விளைவதறியாதேபுக்கு, பரிமளத்தில் லோபத்தாலே அங்கேயிங்கேசுழித்து, பரிமளத்தை ஈறட்டுக்கொண்டு வாழைநெருக்கத்தாலே நெருக்குப்பட்டு, அல்பாவகாசமுள்ள தெங்கின்சோலையிலே புறப்பட்டு ஸஞ்சரியாநிற்குமாயிற்று. [புல்லிலை]- புல்லப்பட்ட இலை: அந்யோந்யம் தழுவப்பட்ட இலையையுடைய தெங்கென்னுதல்; வாழையிலையோடே தழுவின இலையையுடைய தெங்கென்னுதல்; சோலைநெருக்கத்தாலே நேரிதான இலையென்னுதல். [மல்லலம் செல்வக்கண்ணன்] - நிரவதிகமாய் அழகிதான ஸம்பத்தையுடைய க்ருஷ்ணன். [தாளடைந்தாள்] - ப்ரணயித்வகுணத்துக்குத்தோற்றுத் திருவடிகளைப்பற்றினாள். [இம்மடவரல்] - முன்பு எனக்கு ஹவ்யையாய்ப்போந்த இவள்கிடீர் மீட்கவொண்ணாதபடியானாள். (எ)

## எட்டாம் பாட்டு.

மடவரலன்னைமீர்கட்கு என்சொல்லிச்சொல்லுகேன்? மல்லைச்செல்வ
வடமொழிமறைவாணர் வேள்வியுணெய்யழல்வான்புகைபோய்
திடவிசும்பிலமரர்நாட்டைமறைக்கும் தண்திருப்புலியூர்
படவரவணையான்தன்நாமமல்லால் பரவாள்இவளே.

*ஆ.— (மடவரல்.) — ப்ரணயஸ்வபாவம்போலே வ்ருத்தவத்தையு முண்டாகவேணுமிறேயென்ன ;— அவன்வ்ருத்தவத்தையிருக்கும்படி பார்க்கலாகாதோ, மிக்கிருந்துள்ள ஸம்பத்தையுடையரான வடமொழிமறைவாணர் வேள்வியுள் நெய்யழல்வான் புகைபோய்த் திடவிசும்பிலமரர்நாட்டை மறைக்கும் நிரதிசயபோக்யமான திருப்புலியூரில் திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவனுடைய திருநாமமல்லது சொல்லுகிறிலளென்கிறாள்.*

*ஓ.—எட்டாம்பாட்டில், திருப்புலியூரில் எம்பெருமானுடைய வ்ருத்தவத்தையாலே இவள் வஶீக்ருதையானாளென்கிறாள்.*

---

ஓஓஓண்காவஊஊயஸாவிநீ । ஊஊளவாஊஊதாஸ்கந்தேகோபீஸ்யோ நிவாஸிந: உதிவஊஊஓஓமெ ஈாவஸ்ஈாயாழ்" விஷ்ணுபுராணம் (13-54.) "கமுகின்" என்றது - கமுகோடேகூடவென்றபடி. "மல்லிலைமடல் வாழை" என்றதுக்கு பாவம்- வெற்றிலைக்கொடிக்கும்இத்யாதி.' சூழ்ந்து" என்றதுக்கு பாவம் - பழத்தாறுகள் இத்யாதி. தெற்றிக்கிடக்கை - நெருங்கிக்கிடக்கை.வாழையீன்கனி - வாழைகளீன்ற பழங்கள். தாறு - சிப்பு. கமழ்ந்து - க்ரஹித்து. புல்லப்பட்ட -தழுவப்பட்ட. முந்தின அர்த்தத்துக்கு, புல்லிலை - புல்கப்பட்ட இலையென்றபடி. இவ்வர்த்தத்துக்கு, அந்யோந்யம் தென்னிலையும் தென்னிலையும் தழுவிக்கொண்டென்றபடி. மூன்றும் அர்த்தத்துக்கு, புல்லிலை-புல்லிதான இலை; நேரிதான இலையென்றபடி. மல்லல் - பெருமை. மடப்பம்-ஹவ்யதை. மடவரல் - ஹவ்யையானவள். (எ)

[மடவரல்] - மடவந்தபடி. பற்றிற்றுக் கைவிடாமையும். [மல்லைச்செ மென்று மேலுக்கு] - மிக்கிருந்துள்ள ஸ்ரீயையுடையராய் ஸம்ஸ்க்ருதபாஷையும் வே களும் தாங்களிட்ட வழக்கான ப்ராஹ்மணருடைய ஸமவாய ஸ்வரூபம யாகங்களிலே ஹோமம்பண்ணின நெய்கள்பட்ட அக்னிகளில் நின்றும் புறப்பட ுள்ள மிக்கிருந்துள்ள புகை வ்யவஸ்தித ஸ்வஹாவமான ஆகாசத்தில் தேவலோகத் மறைக்கும் நிரதிசயபோக்யமான திருப்புலியூரில் தன்னோட்டை ஸ்பர்ஸத்தா ஹணம் விரிந்திருந்துள்ள திருவநந்தாழ்வானைப் படுக்கையாக வுடையவனுடைய தி நாமமல்லது சொல்லுகிறிலள். ஸம்ஸ்லேஷதசையில் படுக்கையழகை நினைத் சொல்லாநின்றாளென்று கருத்து.

ப.—அநந்தரம், விலக்ஷணஸமாசார ப்ரியனாய் பர்யங்கவிஶிஷ்டனான இ னுடைய திருநாமத்தைச் சொல்லாநின்றாளென்கிறாள்.

அன்னைமீர்கட்கு - அன்னையரான உங்களுக்கு, என் - என்னபாசுரத்தை சொல்லி - சொல்லி, சொல்லுகேன் - சொல்லுவேன்? (ஆராதகோபகரணமான), மல்லை பெரிய, செல்வம் - ஸம்பத்தையுடையராய், வடமொழி - (ஆராதககாலவக்தவ்யமா ஸம்ஸ்க்ருதபாஷையையும், மறைவாணர் - (ஆராதகப்ரதிபாதகமான) வேதநிர்வ ணத்தையுமுடையவர்களுடைய, வேள்வியுள் — (ஆராதநரூபமான) யாகாதிகர்மங்களி நெய் - ஆஜ்யாஹுதிவிசிஷ்டமான, அழல் - அக்நியினுடைய, வான் - பெரிய, புகை புகையானது, போய் - கிளர்ந்துபோய், திடம் - த்ருடமான, விசும்பில் - ஆகாசத்திலே அமரர் - தேவர்களுடைய, நாட்டை - லோகத்தை, மறைக்கும் - (திரைவளைத்த போலே) மறைக்கக்கடவதான, தண் - பரமஹரமான, திருப்புலியூர் - திருப்புலியூரிலே ("உத்ஸ்ரேயஸம் லோகாநுக்ரஹகுசலோ(ஹ்)" என்று லோகஹிதார்த்தம ஆசாரபரனாகையாலே இவர்களுடைய ஆசாரஸக்தனாய்க்கொண்டு), படம் - (ஸ்வஸ் பர்ஶத்தாலே விரிகிற) பணங்களையுடைய, அரவணையான்தன் - திருவநந்தாழ்வானாகி படுக்கையிலே கர்மத்துக்கு ஆராத்யதயா கண்வளர்ந்தருளுகிறவனுடைய, நாமம் - தி நாமம், அல்லால் - ஒழிய, இவள் மடவரல் - இந்த மடந்தையானவள், பரவாள் பரவுகிறிலள்.

இ.—எட்டாம்பாட்டில், அவன் வ்ருத்தவத்ஸதையிலே வஶீக்ருதையானாளெ கிறாள். "கதஹிஜணவஹிஸஂஹியைஶாஹ்ஜதாஜநகாதயஃ" என்று குடிப்பிறப்பாலே வ்ருத்தருசியுடையளாகையாலே, ப்ரணயித்வத்திற்காட்டில் இவள் ஆசாரத்திலே யிலே வஶீக்ருதையாவது.

[மடவரல்] - மடவந்தபடி. இவள் எனக்கு ஐவ்யையானபடியை: பற்றிற்றுவிடா படியை யென்றுமாம். [அன்னைமீர்கட்குஇத்யாதி] - என்கையிலே காட்டித்தந்த உங் ளுக்கு என்னபாசுரத்தை யிட்டுச் சொல்லுவேன்? எனக்குஐவ்யை என்னவோ? நானு கூட்டிடென்னவோ? என்னைக் கடந்தாளென்னவோ? [மல்லைச்செல்வம்] - மிக்க ஸம்பத்தை யுடையராய். [வடமொழி மறைவாணர்இத்யாதி] - ஸம்ஸ்க்ருதபாஷையும் வேதங்களு தாங்களிட்டவழக்காய், வ்யவஸ்தைம் செலுத்தவல்ல ப்ராஹ்மணர் ஸமாராயநரூபம யாகங்களிலே ஹோமம்பண்ணின நெய்யாலே ஜ்வலித்த அக்நிகளினின்றும் புறப்பட்ட மிக்க புகையானது. [திடவிசும்பிலமரர் நாட்டைமறைக்கும்] - வ்யவஸ்தித ஸ்வஹா மான ஆகாசத்தில் தேவலோகத்தை மறைக்கும், வைமாநிகர்க்கு அப்ஸரஸ்ஸுக்களை

முகம் பார்க்கவொண்ணாதபடி மறைக்கும். [தண் திருப்புலியூர்] - இப்படி ஸமாசார ஸ்ரீயையுடைய ஊர். "ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாமுபஹந்யாமிமா: ப்ரஜா:" என்றிறே இவன்தன்படி. [படவரவித்யாதி] - ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதபணனான திருவநந்தாழ்வானைப் படுக்கையாக வுடையவனுடைய திருநாமமல்லது வாய்புலற்றுகிறிலள். நான் அருகேயிருக்க, ஸம்ஶ்லேஷதஶையில் படுக்கைபழகையே வாய்புலற்றுகின்றாள். "தோழி" என்று ஸம்போதிக்கிலன்றோ இவளை யென்வஶமாக்குவது. [இவளே] - என்னையொழிய வேறொன்றை ப்ரவர்த்திக்கவறியாத இவள்.

ஈடு.—எட்டாம்பாட்டு. வெறும் ப்ரணயித்வமே போராதே, "**கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய:**" (கர்மணைவஹி ஸம்ஸித்திமாஸ்த்திதாஜநகாதய:) என்றன்றோ குடியிருப்பது? ஆனால் இதுக்குத் தக்கஆசாரமுண்டாகவேணுமே அவனுக்கேன்ன,—ஆனால், அவ்வூரிலுள்ளாருடைய ஆசாரமிருக்கிறபடியைக் கேட்கலாகாதோ வென்கிறாள்.

[மடவரல்] - மடவந்தபடியை; இவள் எனக்கு வஶ்யையானபடியை: பற்றிற்று விடாதபடியை யென்றுமாம். [அன்னைமீர்கட்கு] - என்கையிலே இவளைக்காட்டித் தந்திருக்கிற உங்களுக்கு. [என்சொல்லிச்சொல்லுகேன்] - இவள் என்வழிவாரா நின்றாளென்னவோ? இவள் எனக்கு பவ்யையென்னவோ? [மல்லை இத்யாதி] - நிரவதிகமான ஸம்பத்தையுடையராய், ஸம்ஸ்க்ருதத்துக்கும் வேதத்துக்கும் வ்யாஸபதம் செலுத்தவல்லராயிருந்துள்ள ப்ராஹ்மணருடைய யாகங்களில் நெய்யாலே ஹோமம்பண்ணின அக்நியிலுண்டான செறிந்தபுகையானது போய். [திடவிசும்பிலமரர் நாட்டை மறைக்கும்] - வ்யவஸ்த்திதஸ்வபாவமான ஆகாசத்தில் தேவலோகத்தை மறைக்கும். ஸ்வர்க்கத்திலுள்ள வைமாநிகரை அப்ஸரஸ்ஸுக்கள் முகங்கண்டுஅநுபவிக்கவொட்டாதே மறைக்கும். ஹோமத்துக்கு ஏகாந்தமாகத் திரைவளையாநின்ற தென்றுமாம். [தண்திருப்புலியூர்] - "**ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாமுபஹந்யாமிமா: ப்ரஜா:**" (ஸங்கரஸ்யசகர்த்தாஸ்யாமுபஹந்யாமிமா:ப்ரஜா:) என்றிறே அவன்படியும். [படவரவு இத்யாதி] - ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதபணனான திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவனுடைய திருநாமமல்லது வாய்புலற்றுகிறிலள். நான் அருகேயிருக்க, ஸம்ஶ்லேஷதஶையில் படுக்கையழகையேசொல்லி வாய்புலற்றாநின்றாள். [இவள்] - என்னையொழிய வேறொன்றை ப்ரவர்த்திக்க அறியாத இவள். (அ)

---

எட்டாம்பாட்டு, - மடவரல் இத்யாதி. "வடமொழிமறைவாணர்" என்றதொடங்கி, "அமரர்நாட்டைமறைக்கும்" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - வெறும் இத்யாதி.

"மடவரல்" என்றத்தைப்பற்ற - இவள் எனக்கு இத்யாதி. "நாமமல்லால்பரவாளிவள்" என்றத்தைக்கடாக்ஷித்து - இவள் என்வழி இத்யாதி. "மல்லை" என்று - பெருமையாய், அத்தால் - நிரவதிகத்வம் சொல்லுகிறது. ஸம்ஸ்க்ருதமென்றது - புராணேதிஹாஸங்களை. வாணர் - நிர்வாஹகர். வான்புகை - செறிந்தபுகை. "நாட்டை" என்றது - நாட்டிலுள்ளாரை. ஊரிலுள்ளார் ஸமாசாரம்சொன்னால் இவனாசாரம் ஸித்திக்குமோவென்ன - ஸங்கரஸ்ய இத்யாதி. "**உத்ஸீதேயுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேதஹம் । ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாமுபஹந்யாமிமா: ப்ரஜா:" இதி கீதாயாம் த்ருதீயே** (௨௪). அதாவது - அவனைக்கண்டு இவர்களும் அநுஷ்டிக்கிறார்களென்றபடி. இத்தால் ஸித்தம் - நான் அருகே இத்யாதி. "இவள்" என்றதுக்கு ஸித்தம். என்னையொழிய இத்யாதி. மல்லைச்செல்வம் என்று தொடங்கி, பரவாளிவள்; அன்னைமீர்கட்கு - இவள் எனக்கு மடவந்தபடியை - என்சொல்லிச் சொல்லுகேன் இத்யந்வய:. (அ)

## ஒன்பதாம் பாட்டு.

---

பரவாளிவள்நின்றிராப்பகல் பனிநீர்நிறக்கண்ணபிரான்
†விரவாரிசைமறைவேதியரொலி வேலையினின்றொலிப்பக்
கரவார்தடந்தொறுந்தாமரைக்கயம் தீவிகைநின்றலரும்
புரவார்கழனிகள்சூழ் திருப்புலியூர்ப் புகழன்றிமற்றே.

ஆ.—(பரவாளிவள்) - வ்ருத்தமுண்டானாலும் ததநுகுண தத்வஜ்ஞமுண்டாகவேணுமேயென்ன,—அதுவுமுண்டு. நிரதிசய போக்யமான த்வநியையுடைய ஸாமவேதிகளுடைய அத்யயநகோஷமும் ததர்த்தசிந்தைபண்ணுவார் கோஷமும் கடல்போலே கோஷியாநிற்க, முதலைமிக்க பொய்கைகள்தோறும் தாமரைகள் நிலைவிளக்கெரியுமாபோலே மலராநிற்பதுஞ்செய்து, தலைத்தரமான கழனிகளையுடைத்தாயிருக்கிற திருப்புலியூரில் பனிநீர்நிறக்கண்ணபிரானுடைய புகழன்றி மற்றொன்று பரவாளிவள் நின்றிராப்பகலென்கிறாள்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஸாமவேத ப்ரஸங்கத்ய கோஷ வேதார்த்த தத்வஜ்ஞாநத்தையுமுடையனாயிருக்கும்படியை எப்போதும் பரவாநின்றாளென்கிறாள்.

[பனிநீர் நிறக்கண்ணபிரான்]-குளிர்ந்த நீர்போலேயிருக்கிற நிறத்தையும் நிறம்போலே ஸ்ரமஹரமான ஸ்வபாவத்தையுமுடையனான க்ருஷ்ணனுடைய. [விரவாரிசையென்று தொடங்கி] - நிரதிசய போக்யமான த்வநியையுடைய ஸாமவேதிகளுடைய அத்யயனகோஷமானது கடல்போலே கோஷியாநிற்க. 'விரவார்' என்பாடமானபோது விரவியெழுகிற நாலுவேதங்களினுடைய த்வநியும் வேதார்த்தங்களை மீமாம்ஸிக்கிறவர்களுடைய த்வநியுமென்று பொருள். [கரவார் தடமென்று மேலுக்கு] பொய்கைகள்தோறும் தாமரை நிலைவிளக்கெரியுமாபோலே மலராநிற்பதுஞ்செய்து தலைத்தரமான கழனிகளையும் உடைத்தாயிருக்கிற திருப்புலியூர் புகழ் அன்றி மற்றொன்று. கயம் - பெருமை; ஆவது - திரள். கரவு - முதலை.

ப.—அநந்தரம், வேதவித்ப்ரயோஜநனான க்ருஷ்ணனுடைய திருப்புலியூர் புகழொழிய வேறொன்று இவள் சொல்லுகிறிலளென்கிறாள்.

பனி - குளிர்ந்த, நீர்நிறம் - நீர்நிறத்தையுடைய, கண்ணன் - க்ருஷ்ணனை பிரான் - மஹோபகாரகனுடைய, விரவு - விரவி, ஆர் - நிரம்பின, இசை - இசையையுடைய, மறை - ஸாமவேதம் தொடக்கமான வேதங்களாலுண்டான, வேதியர் - வைதிகருடைய, ஒலி - கோஷமானது, வேலையில் - ஸமுத்ரம்போலே, நின்று - நின்று ஒலிப்ப - முழங்காநிற்க, கரவு - கரவுகள், ஆர் - ஆர்ந்த, தடந்தொறும் - தடாகந்தோறும், தாமரை - தாமரையினுடைய, கயம் - பரப்பானது, தீவிகை - [illegible] போலே, நின்று - நின்று, அலரும் - அலராநிற்பதுமாய், புரவார் - சட்டளைப்பட்ட கழனிகள் - வயல், சூழ் - சூழ்ந்த, திருப்புலியூர்ப்புகழ் அன்றி - திருப்புலியூர் புகழ், ஒழிய, மற்று - வேறொன்றை, இவள் - இவள், நின்று - ஒருபடிப்பட, இராப்பகல் - இராப்பகல், பரவாள் - பரவுகிறிலள். ''தடவும் கயவும் நளியும் பெருமை.'

---

† 'விரைவார்' என்பதும் பாடம்.

தடமென்று - கரையாய், "தடந்தொறும் - காவார் - தாமரைக்கயம்" என்று பொய்கையாகவுமாம். காவு - முதலை. புரவு - கட்டளைச்சேர்த்தி.

இ.—ஒன்பதாம்பாட்டில், "𑌨𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌷𑍁 𑌸𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌨𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂" என்கிற இக்குலத்திலே பிறந்தவளுக்கு ஸத்ருஶமான வேதார்த்த தத்த்வஜ்ஞாநமுண்டாக வேண்டாவோவென்ன, ஸாமவேத ப்ரப்ருத்ய ஶேஷ வேதார்த்த தத்த்வஜ்ஞாநதைப் பரவாநின்றாள் என்கிறாள்.

[பரவாளிவள்நின்றிராப்பகல்]-இவள் அடைவுகெடப் பேசாநின்றாள்; இராப்பகல் பேசாநின்றாள். இதுக்கு வேறு ப்ரமாணம் தேடவேணுமோ? இவளுக்தியே யன்றோ ப்ரமாணம். [பனிநீர் நிறக்கண்ணபிரான்] - குளிர்ந்த நீர்போலேயிருக்கிற திருநிறத்தையும் அப்படியே குளிர்ந்த ஶீலத்தையுமுடையவன். [விரவாரிசைமறை]-விரவி-எங்குமொக்கப்பரம்பி, ஆர்ந்து — மிக்கிருந்துள்ள, ஸ்வரத்தையுடைத்தான வேதமென்னுதல்; "விரை" என்று ஹாக்பதையாய் வார் என்று அதில் மிகுதியாய், "இசைமறை" என்று ஸாமவேதமென்னுதல். வேதியரொலி - வேத கோஷமும் வேதார்த்த விசாரம் பண்ணுவாருடைய கோஷமும். வேலையில் நின்றொலிப்ப-ஸமுத்ர கோஷத்திற்காட்டில் நின்றுகோஷிக்க. [காவார்தடந்தோறும்]-முதலைமிக்கிருந்துள்ள தடாகந்தோறும். காவு - முதலை. தாமரைக்கயம் - தாமரைப்பெருமை தாமரைத்திரள். "தடவும் கயவும் நளியும் பெருமை" என்னக்கடவதிறே. தீவிகை நின்றலரும் - நிலைவிளக்கெரியுமாபோலே அலராநின்றன. [புரவார்கழனிகள்சூழ்] - புரவார்ந்திருக்கையாகிறது - தலைத்தரப் பெருக்காயிருக்கை. [திருப்புலியூர்ப்புகழ்]-வேத கோஷமும் வேதார்த்த விசாரயுக்தர் கோஷமும், அலர்ந்த தாமரைப்பொய்கைகளாலே அலங்க்ருதமான வயலுமான திருப்புலியூர் புகழன்றி மற்று பரவாளியள் நின்றிராப்பகல்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு ஆசாரமே போருமோ, ப்ரயோகவ்ருத்தியைப் பார்த்து அநுஷ்ட்டாநத்துக்கு வேண்டுவ தறிந்திருக்கவொண்ணாதே? "𑌨𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌷𑍁 𑌸𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌨𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂" (நிஷ்ட்டிதம்ஸர்வஶாஸ்த்ரேஷு ஸர்வவேதேஷு நிஷ்ட்டிதம்) என்றன்றோ இக்குடியிலுள்ளாருடையபடி; இதுக்குத்தக்க வேதார்த்த தத்த்வஜ்ஞாநமுண்டாகவேணுமேயென்ன. அதுக்கும் ஒருகுறையில்லையென்கிறாள்.

[பரவாளிவள்நின்றிராப்பகல்] - இவள் அடைவுகெடப் பேசாநின்றாள்; இராப்பகல் பேசாநின்றாள். இதுக்கு வேறு ப்ரமாணம் தேடவேணுமோ? இவளுக்தியேயன்றோ

---

ஒன்பதாம்பாட்டு - பரவாள் இத்யாதி. "விரவாரிசைமறைவேதியரொலி" என்றதைக் கடாக்ஷித்து அவதாரிகை - ஆசாரமே இத்யாதி. அநுஷ்ட்டாநமுண்டானபோதே தத்த்வஜ்ஞாநம் ஸித்தமன்றோ, அத்தைத் தனித்துக்கேட்கிறதென்? என்ன - ப்ரயோகவ்ருத்தியை இத்யாதி. ப்ரயோகவ்ருத்தி - ப்ரயோக விதாயக க்ரந்தம்; அநுக்ரமணி யென்றபடி. "𑌋𑌷𑌿𑌣𑌾𑌯𑌿𑌵𑌤𑌿𑌂 𑌶𑍁𑌭𑍍𑌰𑌂 𑌜𑌨𑌕𑌂 𑌸𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 । 𑌨𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌷𑍁 𑌸𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌨𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂" 𑌇𑌤𑌿 𑌸𑌾𑌮𑌗𑌾𑌨𑍇, 𑌵𑌾𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌯𑌨𑍈𑌷𑍍𑌠𑌿𑌕𑌾𑌕𑌾𑌰𑍇𑌣, 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌂 𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌵𑌶𑌿𑌷𑍍𑌠𑌃. (கரு-உ0½) 𑌨𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌃 𑌸𑌮𑌯𑌃.

"திருப்புலியூர்ப்புகழன்றிமற்று - பரவாள்" என்கையாலே வ்யதிரேகஸித்தார்த்தம் - இவள் அடைவுகெடப்பேசாநின்றாள் என்று. கலவிக் குறிசொல்லுகிறவிடத்தில், இவளுடைய உக்தியைச் சொல்லுகிறவளுடைய ஹாவம் - இதுக்கு இத்யாதி வாக்யத்வயம். இதுக்கு - ஸம்ஶ்லேஷத்துக் கென்னுதல், "வேதியரொலி" என்கையாலே தத்த்வஜ்ஞாநத்துக்கென்னுதல்.

ப்ரமாணம். [பனிநீர்நிறக்கண்ணபிரான்] - குளிர்ந்த வடிவையும், அப்படியேயிருக்கிற ஶீலத்தையுமுடையவன். [விரவாரிசைமறை] - விரவி - எங்குமொக்கப்பரம்பி, ஆர்ந்து, மிக்கிருந்துள்ள, ஸ்வரத்தையுடைத்தான வேதமென்னுதல். அன்றிக்கே, 'விரைவா' - என்று பாடமாகில், விரையென்று — ஹோக்யதையாய், வாரென்று - அதில் மிகுதியாய், இசைமறையென்று — ஸாமவேத மென்னுதல். [வேதியரொலி] - வேதகோஷமும், வேதார்த்தவிசாரம்பண்ணுமவர்களுடைய கோஷமும். [வேலையில்நின்றொலிப்ப] - ஸமுத்ரகோஷத்திற்காட்டில் நின்று கோஷிக்க. [கரவார்தடந்தோறும்] - முதலை மிக்கிருந்துள்ள பொய்கைதோறும் [தாமரை இத்யாதி] - [தாமரைக்கயம்] - கயமென்று - திரளுக்கும், பெருமைக்கும் பேர். [தீவிகை] - விளக்கு. தாமரையினுடைய திரளானது நிலைவிளக்குப்போலே அலர்ந்துநிற்கும். [பூவார்கழனிகள் சூழ்] - † (புரவு - சாம் பூஸாரமென்றபடி.) புரவார்ந்திருக்கையாவது - தலைத்தரப்பெருக்காயிருக்கை. பட்டர், "அவ்வூரில் ப்ராஹ்மணர் இறுத்து மாய்கிறார்கள், இவர் ஊருக்குச் சிறப்புச் சொல்லப் போருகிறாரிறே" என்றருளிச்செய்வர். [திருப்புலியூர்ப்புகழன்றிமற்று - பரவாளிவள்நின்றி ராப்பகல்]- அவ்வூரிலுள்ளாருடைய வேதகோஷமும், வேதார்த்தவிசாரம்பண்ணுகிற வாரமும், அவ்வூரில் ஹோக்யதையுமேயிறே இவள் அடைவுகெடச் சொல்லாநிற்பது. (௯)

---

## பத்தாம் பாட்டு.

அன்றிமற்றோருபாயமென்? இவளந்தண்துழாய்கமழ்தல்
குன்றமாமணிமாடமாளிகைக் கோலக்குழாங்கள்மல்கி
தென்திசைத்திலதம்புரை குட்டநாட்டுத்திருப்புலியூர்
நின்றமாயப்பிரான்திருவருளாம் இவள்நேர்பட்டதே.

ஆ — [அன்றி] - ஸௌந்தர்ய ஸௌஶீல்ய ப்ரணயித்வைஶ்வர்ய வ்ருத்தவத்வ ஸர்வஜ்ஞத்வாதி ஸர்வகுணவிசிஷ்டனா யிருந்தானேயாகிலும், இங்கு ப்ரவ்ருத்தமான மணத்தைத் தவிர்க்கை கூடாதல்லவென்ன, அன்றி மற்றோருபாயமென்? இவளந்தண்துழாய்கமழ்தல் என்று அவர்களுங்கூட இசைவிதாரடையாளத்தைச் சொல்லிக்கொண்டு, திருப்புலியூர்நின்ற மாயப்பிரானோடே இவள் புணர்ந்தருளினாளென்று சொல்லுகிறாள்.

---

"பனிநீர்" என்று - குளிர்ந்தகடல். பனி - குளிர்த்தி. நீர் - கடல். "விரை" என்று - பரிமளமாய், அத்தால் - ஹோக்யதையைச் சொல்லுகிறது. வார்தல் - நெடுமையாய், அத்தாலே மிகுதியைச் சொல்லுகிறது. த்விதீயார்த்தத்துக்கு, "இசைமறை" என்று - முழுச்சொல்லு "மறை - ஒலி, வேதியரொலி" என்று இரண்டிடத்திலும் கூட்டுவது. காவு - முதலை "கயவும் தடமும் களிறும் பெருமை" என்னக்கடவதிறே. புரவு - தலைநிலம். "புரவு" என்றும், "கழனி" என்றும் புநருக்தமாகையாலே, விஷயவிபாகம்பண்ணுகிறார் - புரவார்ந்து இத்யாதி. தலைத்தரப் தலையீடு. ரஸோக்தி - பட்டர் இத்யாதி. அந்வயமுகேந ஹாவம் - திருப்புலியூர் இத்யாதி. இவள் அடைவுகெடப் பேசும் திருப்புலியூர்ப் புகழாவதுஎதென்ன- அவ்வூரிலுள்ளாருடையஇத்யாதி.பனி நீர் என்று தொடங்கி, புகழன்றிமற்று - இவள் நின்றிராப்பகல் - பரவாள் இத்யந்வய:. (க

† குண்டலிதம் ப்ரக்ஷிப்தம்.

ஒ.—பத்தாம்பாட்டில், நாம் பேசுமளவோ அவனுடையபடி? அத்யாஸ்சர்யமென்று சொல்லி அவனோடே ஸம்ஶ்லேஷித்தமைக்கு இவர்களும் இசைய வேண்டும்படியான அடையாளஞ் சொல்லுகிறாள்.

[அன்றி மற்றோருபாயமென் இவளந்தண்துழாய்கமழ்தல்] - வேறுமற்று உபாயமுண்டோ, இவள் அழகிதாய் குளிர்ந்ததிருத்துழாய் நாறுகைக்கு? [குன்றமாமணிமாடமென்று தொடங்கி] - மலைபோலே மஹார்ஹமான ரத்நங்களாலே செய்த அழகிய மாடங்களினுடைய திரளாலே நெருங்கித் தெற்கில்திக்குக்குத் திலகம்போலே யிருக்கிற குட்டநாட்டுத் திருப்புலியூரிலே நின்றருளின ஆஶ்சர்யபூதனை அவனுடைய ப்ரஸாதத்துக்கு பாத்ரமானாளாகவேணும்.

ப.—அநந்தரம், ஆஶ்சர்யசேஷ்டிதயுக்தனானவனை இவள் கிட்டினமைக்கு அநந்யதா ஸித்தமான அடையாளமுண்டென்கிறாள்.

குன்றம் - குன்றம்போலே, மா - ஶ்லாக்யமாயுள்ள, மணி - மணிமயமான, மாடம் - மாடங்களினுடையவும், மாளிகை - மாளிகைகளினுடையவும், கோலம் - ரம்யமான, குழாங்கள் - திரளானவை, மல்கி - நெருங்கியிருப்பதாய், தென்திசை - தெற்குத்திக்குக்கு, திலதப்புரை - திலதம்போலும், குட்டநாட்டுத் திருப்புலியூர் - குட்டநாட்டுத்திருப்புலியூரிலே, நின்ற - நின்ற, மாயப்பிரான் - ஆஶ்சர்யபூதனுடைய, திருவருளாம் - க்ருபையேயாம், இவள் - இவள், நேர்பட்டது - கிட்டிற்று; அன்றி - (அது) அன்றி, இவள் - இவள், அம் - அழகிய, தண் - குளிர்ந்த, துழாய் - திருத்துழாய், கமழ்தல் - பரிமளத்தை யுடையளாகைக்கு, மற்று - வேறு, ஓர் - ஒரு, உபாயம் - உபாயம், என் - ஏதோ?

இ.—பத்தாம்பாட்டில், அவன்பெருமைக்கு இவள்தான் அவனுக்குத் தரமன்று; அதொழிய உங்களுக்கும் இசையவேண்டும்படியான வ்யக்தமான அடையாளங்களுமுண்டென்கிறாள்.

[அன்றி இத்யாதி] - வேறுமற்று உபாயமுண்டோ இவள் அழகிதாய்க் குளிர்ந்திருக்கிற திருத்துழாய் நாறுகைக்கு? ராஜபுத்ரனை அணையாதார்க்கு மாளிகைச்சாந்து நாறுமோ? என்னுடம்பு திருத்துழாய்நாறுகின்றதோ? ஸ்வாபதேஶத்தில், "அந்தண்துழாய் கமழ்தல்" என்கிறது அங்கீகார ஸூசகமாயிருக்கிறது. [குன்றம் இத்யாதி] - மலைபோலேயாய், மஹார்ஹமான ரத்நங்களாலே செய்த மாடமென்ன, மாளிகையென்ன, இவற்றினுடைய ரம்யமான திரள்களாலேஇடைபாழற நெருங்கி; "ஶ்ருங்கமராஸாலிஷு" என்னுமாபோலே. [தென்திசை இத்யாதி] - தெற்கில்திக்குக்குத் திலகம்போலேயிருக்கிற குட்டநாட்டுத் திருப்புலியூரிலே நின்றருளின ஆஶ்சர்யபூதன். "அவனுக்குஇவள் போராள்" என்னும்படி குணாதிகன். "இவளுக்கவன் போரான்" என்றன்றோ நீங்களிருக்கிறது; "அவனுக்குஇவள் போராள்" என்றன்றோ அவ்வூரார் வார்த்தை. [திருவருள் - நேர்பட்டது - ஆம்] - அவன் ப்ரஸாதத்துக்கு ஸத்ருஶமான பாத்ரமானாளாகவேணும்; அன்றி, மற்றோருபாயமென், இவளந்தண்துழாய் கமழ்தல்?

ஈடு.—பத்தாம்பாட்டு. நீ சொல்லுகிறவையெல்லாம் கிடக்க; இவளை அவனுக்குக் கொடுக்கவேண்டும்படி அஸாதாரண லக்ஷணம் ஏதேனு முண்டாகில் சொல்லென்னச் சொல்லுகிறாள்.

---

பத்தாம்பாட்டு - அன்றி இத்யாதி. "அன்றிமற்றோருபாயமென் இவளந்தண்துழாய் கமழ்தல்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - நீசொல்லுகிறவை இத்யாதி. அஸாதாரண லக்ஷணம் - திருத்துழாய் கமழ்கை.

[அன்றிமற்றோருபாயமேன்-இவளந்தண்துழாய்கமழ்தல்] - வேறுமற்று உபமுண்டோ, இவள் அழகிதாய்க் குளிர்ந்த திருத்துழாய் நாறுகைக்கு? ராஜபுத்ரனை அ யாதார்க்குக் கோயிற்சாந்து நாறுகைக்கு விரகுண்டோ? என்னுடம்பாதல் உங்களுட பாதல் திருத்துழாய் நாறுகின்றதோ? ஸ்வாபதேசத்தில், "அந்தண்துழாய்கமழ்தல்" எ கிற இது அங்கீகாரஸூசகமாயிருக்கிறது. [குன்றம் இத்யாதி] - மலைபோலே அவிசா மாயிருப்பதாய், பெருவிலையனான ரத்நங்களாலே செய்யப்பட்டிருந்துள்ள மாடங்களி டையவும் மாளிகைகளுடையவும் ஊர்மணீயமான குழாங்களால் மிக்கு, தெற்கில் திக் குத் திலகம்போலேயிருக்கிற குட்டநாட்டுத்திருப்புலியூரிலே நின்றருளின ஆச்சர்யபூத "அவனுக்கு இவள் போராள்" என்னும்படி குணயிகள். † "இவளுக்கு அவ போரான்" என்றன்றோ நீங்களிருக்கிறது? "அவனுக்கு இவள் போராள்" என்றன் அவ்வூரிலுள்ளார்வார்த்தை [திருவருளாமிவள் நேர்பட்டதே]- இவள் நேர்பட்டது அவ திருவருளாம். அவன் திருவருளேயாமென்றான் இதுவேயோ? இன்னம் அடையாளமு டோவென்ன?—[அன்றிமற்றோருபாயமென்னிவளந்தண்துழாய்கமழ்தல்]. (௭ )

---

## ராம் பாட்டு.

**நேர்பட்டநிறைமூவுலகுக்கும் நாயகன்தன்னடிமை**
**நேர்பட்டதொண்டர்தொண்டர்தொண்டர்தொண்டன்சடகோபன்சொ**
**நேர்பட்டதமிழ்மாலையாயிரத்துள் ‡இவைபத்தும்**
**நேர்பட்டாரவர் நேர்பட்டார்நெடுமாற்கடிமைசெய்யவே.**

*ஆ.—(நேர்பட்ட) - ஏவம்வித ஸகலத்ஸௌந்தர்யாதி குணநிஸவஜநிதட யாலே ஸகலச்சேஷத்வ காஷ்டாபந்நரான சடகோபன்சொல் நேர்பட்ட தப மாலை யாயிரத்துள் இப்பத்தும் நேர்பட்டவர்கள், நெடுமாற்கடிமைசெய்யப் பெ வாழ்வரென்கிறார்.*

*ஒ—நிகமத்தில், இப்பத்தையுங் கற்றவர்கள், இவ்வாத்மாவுக்கு நிரதிச புருஷார்த்தமான ஸர்வத்கைங்கர்யத்தைப் பண்ணப்பெறுவர் என்கிறார்.*

---

"அன்றி" என்றதுக்கு இரண்டு ஹாவம். முந்தினது, கலவியொழிய அந்தண்துழ சமழ்தலுக்கு மற்று உபாயமேதென்று; இத்தைக்காட்டுகிறார் - வேறுமற்று இத்யாதி. இரண்ட ஹாவம் - இதுவேயோ இத்யாதி. முடிவில் வாக்யத்திலே கண்டு கொள்வது. "கமழ்தல்" எ றது - கமழுகைக்கென்றபடி. திருத்துழாய்நாறினால். அது கலவிக்குறியாகவேணுமோவென்ன ராஜபுத்ரனை இத்யாதி. "இவள் அந்தண்துழாய்கமழ்தல்" என்றதுக்கு வாஸனை - என்னுட பாதல் இத்யாதி. அங்கீகாரஸூசக மென்றது- அங்கீகரித்தமைக்கு ஸூசகமென்றபடி. "மல்கி மிக்கு. இத்தால் ஹாவம் - அவனுக்கு இவள் இத்யாதி. "நேர்பட்டது" என்றது - ப்ராப்தமா தென்றபடி. கீழே, "அன்றி" என்றதுக்கு - கலவியையொழிய வேறு உபாயமேதென்றருள செய்து, இங்கே, அந்தண்துழாய் கமழ்தலொழிய வேறடையாளமுண்டோ? என்று அர்த்த தரம் - இதுவேயோ இத்யாதி. இவள் நேர்பட்டது - குன்றமாமணிமாடமென்று தொடங்கி, மா பிரான் திருவருளாம்; இவளந்தண்துழாய்கமழ்தல் - அன்றி மற்றோருபாயமென் இத்யந்வய: (௭ )

† குண்டலிதம் இருபத்துநாலாயிரம். ‡ 'இவையுமோர்பத்தும்' என்றும் பாடம்.

[நேர்பட்ட நிறைமூவுலகின்று] - இப்பாட்டுக்கு எம்பெருமான் இஜ்ஜகத்துக்கு ஸ்வாமியாக நேர்பட்டாற்போலே அடிமைக்கு நேர்படுவதுஞ்செய்து தாஸ்யபர்யவஸாநபூமியிலே நின்ற ஆழ்வாருடைய உக்தியான வாய்த்த ஆயிரந் திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி நேர்பட்டவர்கள் ஸர்வேஶ்வரனுக்கு அடிமைசெய்ய நேர்பட்டார்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக பகவத்கைங்கர்யத்தை அருளிச்செய்கிறார்.

நிறை - பரிபூர்ணமான, மூவுலகுக்கும் - த்ரிவிதசேதநாசேதநங்களுக்கும், நேர்பட்ட - வாய்த்த, நாயகன்தன் - ஸ்வாமியான ஸர்வேஶ்வரனுடைய, அடிமை - கைங்கர்யத்துக்கு, நேர்பட்ட - வாய்த்த, தொண்டர் - பக்திபாவசருடைய, தொண்டர்தொண்டர் - ஸம்பந்திஸம்பந்திகளுக்கும், தொண்டன் - ஶேஷபூதரான, சடகோபன் - ஆழ்வாருடைய, சொல் நேர்பட்ட - சொல்வாய்ப்பையுடைத்தாய், தமிழ் - த்ராமிட பாஷையாலே, மாலை - மாலையாகச் சேர்க்கப்பட்டிருக்கிற, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இவைபத்தும் - இவைபத்தையும், நேர்பட்டாரவர் - அப்யஸித்துக்கிட்டினவர்கள், நெடுமாற்கு - ஆஶ்ரிதவ்யாமுக்தனான ஸர்வேஶ்வரனுக்கு, அடிமைசெய்ய - அடிமைசெய்கைக்கு, நேர்பட்டார் - வாய்த்தவர்கள். இதுவும் - அறுசீராசிரியவிருத்தம்.

ஆ.—நிகமத்தில், இப்பத்தையுங்கற்றவர்கள் ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைப் பண்ணப் பெறுவ ரென்கிறார்.

[நேர்பட்ட நிறை மூவுலகுக்கும் நாயகன்] - குறைவற்ற மூவுலகுக்கும் நேர்பட்ட நாயகன். "த்ரைலோக்யமபி நாதேந யேந ஸ்யாந்நாதவத்தரம்" என்று ரக்ஷ்யத்தினளவன்றிக்கே யிருக்கிற ரக்ஷகத்வத் துடிப்பு. இத்தால் - நாயகன்படி சொல்லிற்று. இவர்தம்படி சொல்லுகிறது:—[அடிமைநேர்பட்ட தொண்டர் இத்யாதி]- அவன் ஶேஷித்வத்துக்கெல்லையானாற்போலே, இவர்ஶேஷத்வத்துக்கெல்லையானபடியும். [சொல் நேர்பட்டதமிழ்மாலை]-அந்த வாச்யத்துக்குத் தகுதியானஉக்திவாய்த்ததமிழ்த் தொடையாயிரத்திலும் இத்திருவாய்மொழி நேர்பட்டவர்கள். [நேர்பட்டார் நெடுமாற்கடிமை செய்யவே]-ஸர்வேஶ்வரனுக்கடிமை செய்ய நேர்பட்டார். இவர் பாசுரத்தைச் சொன்னவர்கள், இவருடைய வ்ருத்தியிலே யந்வயிக்கப் பெறுவரென்கை. ஸர்வேஶ்வர ஸ்வரூபத்தையும், ஸ்வஸ்வரூபத்தையும், ப்ரதிபாதகமான ப்ரபந்தவைலக்ஷண்யத்தையும், இத்தையப்பஸித்தாருடைய ப்ராப்யவைலக்ஷண்யத்தையும் சொல்லிற்றாயிற்று.

ஈடு.—நிகமத்தில் - இப்பத்தைக்கற்றவர், ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைப் பண்ணப்பெறுவரேன்கிறார்.

[நேர்பட்டநிறைமூவுலகுக்கும் நாயகன்தன்னடிமை] - குறைவற்ற மூவுலகுக்கும் நேர்பட்டநாயகன். "த்ரைலோக்யமபி நாதேந யேந ஸ்யாந்நாதவத்தரம்" (த்ரைலோக்யமபிநாதேந யேநஸ்யாந்நாதவத்தரம்) என்று ரக்ஷ்யவர்க்கத்தளவன்

நிகமம் - நேர்பட்ட இத்யாதி. "இப்பத்தும் நேர்பட்டாரவர் - நெடுமாற்கடிமைசெய்ய - நேர்பட்டார்" என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - இப்பத்தை இத்யாதி.

"நிறைமூவுலகுக்கும்-நேர்பட்ட-நாயகன்"—நேர்பட்ட-ஸத்ருஶமான. நேர்படுகையின் சரமாவதி-த்ரைலோக்யமபி இத்யாதி. அயோத்யாகாண்டே, (உ,கச) 'அநேந நரஶ்ரேஷ்ட யஶஸா ஸத்ருஶம்

